# ரஹீக் 

## இறுதி இறைத்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு

உலகளாவிய போட்டியில் முதல் பரிசு பெற்ற நூல்


*ஆசிரியர்:*

இஸ்லாமியப் பேரறிஞர் ஸஃபிய்யுர் ரஹ்மான்

*தமிழில்:*

மௌலவி முஃப்தி உமர் ஷரீஃப் காசிமி

بِسْمِ اللهِ الرَّحْمنِ الرَّحِيمِ

# முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு

## பதிப்புரை

தொடக்கத்திலும் இறுதியிலும் அகிலத்தாரின் இறைவன் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!

அகிலத்தாருக்கு ஓர் அருட்கொடையாக வந்த இறுதி இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், உலக முஸ்லிம்கள் அனைவருக்கும் இறையருளும் ஈடேற்றமும் உண்டாகுக!

உங்கள் கைகளில் தவழும் - இந்நூல் பற்றிய சுருக்கமான ஓர் அறிமுகத்தை தங்களுக்கு முன் சமர்ப்பிக்கின்றோம்.

ஹிஜ்ரி 1396 ஆம் ஆண்டு ரபீவுல் அவ்வல் மாதம் (1976 மார்ச்) பாகிஸ்தானில் நபி முஹம்மது (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு குறித்து உலகளாவிய மாநாடு நடைபெற்றது. அந்த மாநாட்டில், 'ராபிததுல் ஆலமில் இஸ்லாமி" (Muslim World League) என்ற பெயரில் மக்காவை தலைமையகமாகக் கொண்டு இயங்கி வரும் இஸ்லாமிய நிறுவனம் கீழ்கண்ட ஓர் அழகிய அறிவிப்பை வெளியிட்டது.

நபி (ஸல்) அவர்களின் தூய வாழ்க்கை வரலாற்றை இஸ்லாமிய அறிஞர்கள் ஆய்வு செய்து, கட்டுரைகள் எழுதி ராபிதாவிடம் சமர்பிக்க வேண்டும். அவற்றுள் முதல் தரமாக தேர்வு செய்யப்படும் முதல் ஐந்து ஆய்வுகளுக்கு மொத்தம் 1,50,000 ஸவூதி ரியால்கள் அன்பளிப்பாக வழங்கப்படும். மேலும், எழுதப்படும் ஆய்வுகள் பின்வரும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு இருக்க வேண்டும்.

1) ஆய்வுகள் முழுமையாக இருக்க வேண்டும். வரலாற்று நிகழ்வுகள், சம்பவங்கள் வரிசை கிரமமாக குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும்.

2) மிக அழகிய முறையில் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும். எங்கும் இதற்கு முன் அது பிரசுரமாகி இருக்கக் கூடாது.

3) இந்த ஆய்வுக்குச் சான்றாக, அடிப்படையாக எடுத்துக் கொள்ளப்பட்ட சிறிய பெரிய நூல்களின் பெயர்களைக் குறிப்பிட வேண்டும்.

4) ஆய்வாளர் தனது வாழ்க்கைக் குறிப்பையும், கல்வித் திறனையும், வேறு ஏதேனும் அவரது வெளியீடுகள் இருப்பின், அவற்றையும் தெளிவாகவும் விவரமாகவும் குறிப்பிட வேண்டும்.

5) அழகிய கையெழுத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டும். ‘தட்டச்சு’ செய்து அனுப்புவது மிக ஏற்றமானது.

6) அரபி அல்லது அரபியல்லாத வழக்கிலுள்ள மொழிகளில் ஆய்வுகள் இருத்தல் வேண்டும்.

7) கட்டுரைகள் சமர்ப்பிக்க வேண்டிய காலம் ஹிஜ்ரி 1396 ரபிஉல் அவ்வல் முதல் ஹிஜ்ரி 1397 முஹர்ரம் வரை. (1976 மார்ச் முதல் 1977 ஜனவரி வரை.)

8) மக்காவிலுள்ள ‘ராபிததுல் ஆலமில் இஸ்லாமி‘‘ம்ன் தலைமைச் செயலகத்துக்கு மூடப்பட்ட உறையில் ஆய்வுக் கோர்வைகள் பதிவுத் தபாலில் அனுப்பப்பட வேண்டும்.

9) இத்துறையில் நிபுணத்துவம் பெற்ற அறிஞர்களின் குழு ஒன்று கோர்வைகளை ஆய்வு செய்து தேர்வு செய்யும்.

இவ்வாறு மகிழ்ச்சிக்குரிய அறிவிப்பையும் அதன் நிபந்தனைகளையும் ராபிதா வெளியிட்டவுடன் அறிஞர் பெருமக்கள் பேராவலுடன் பெரும் முயற்சி எடுத்து ஆய்வுகளை கோர்வை செய்து ராபிதாவுக்கு அனுப்பினர்.

பல மொழிகளில் மொத்தம் 1182 ஆய்வுகள் அனுப்பப்பட்டன. அவற்றுள் 183 ஆய்வுகள் மட்டுமே நிபந்தனைக்குட்பட்டு இருந்ததால் அவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.

அவற்றை பரிசீலனை செய்ததில் ஐந்து ஆய்வுகள் முதல் தரம் வாய்ந்தவை என முடிவு செய்யப்பட்டு பரிசுக்காக தேர்வு செய்யப்பட்டன.

1) அறிஞர் ஸஃபிய்யுர் ரஹ்மான் (முபாரக்பூர், உ.பி., இந்தியா) அவர்களின் (அரபி) ஆய்வு முதல் பரிசு பெற்றது. பரிசுத் தொகையாக 50,000 ரியால்கள் வழங்கப்பட்டன.

2) கலாநிதி மாஜித் அலீ கான் (புது டெல்லி, இந்தியா) அவர்களின் (ஆங்கில) ஆய்வு இரண்டாம் பரிசு பெற்றது. பரிசுத் தொகையாக 40,000 ரியால்கள் வழங்கப்பட்டன.

3) கலாநிதி நாஸீர் அஹ்மது நாசிர் (பாகிஸ்தான்) அவர்களின் (உர்து) ஆய்வு மூன்றாம் பரிசு பெற்றது. பரிசுத் தொகையாக 30,000 ரியால்கள் வழங்கப்பட்டன.

4) பேராசியர் ஹாமித் மஹ்மூது (எகிப்து) அவர்களின் (அரபி) ஆய்வு நான்காம் பரிசு பெற்றது. பரிசுத் தொகையாக 20,000 ரியால்கள் வழங்கப்பட்டன.

5) பேராசியர் அப்துஸ்ஸலாம் ஹாஷிம் (ஸவூதி) அவர்களின் (அரபி) ஆய்வு ஐந்தாம் பரிசு பெற்றது. பரிசுத் தொகையாக 10,000 ரியால்கள் வழங்கப்பட்டன.

ஹிஜ்ரி 1398, ஷஃபான் மாதத்தில் (1978-ஜூலை) கராச்சியில் நடைபெற்ற 'ஆசிய இஸ்லாமிய மாநாட்டில்'' வெற்றி பெற்றவர்களின் பெயர்களை ராபிதா அறிவித்தது. மேலும், அதனை பல பத்திகைகளும் பிரசுத்தன.

பரிசுகளை வழங்குவதற்காக சங்கைக்குரிய இளவரசர் ஸுஊது இப்னு அப்துல் முஹ்ஸின் அவர்கள் தலைமையில் மாபெரும் விழா ஒன்று மக்காவில் ஏற்பாடு செய்யப்பட்டது. அதன்படி, வெற்றி பெற்றவர்களுக்கு ஹிஜ்ரி 1399, ரபீஉல் அவ்வல் பிறை 12 சனிக்கிழமை காலையில் பரிசுகளை வழங்கி இளவரசர் சிறப்பித்தார்.

நூலின் இப்பின்னணியை தெரிந்து கொண்டால் இது எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த நூல் என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம்.

இந்நூலுக்கு ஆசிரியர் வைத்த பெயர் 'அர்ரஹீக்குல் மக்தூம்'' என்பதாகும். 'முத்திரையிடப்பட்ட உயர்ந்த மதுபானம்'' என்பது அதன் அர்த்தம். அல்லாஹ்வின் நெருக்கத்தை அடைந்த உயர்ந்தோருக்கு இவ்வகை மது சுவர்க்கத்தில் வழங்கப்படும் என்று அல்குர்ஆனில் (83 : 25) கூறப்பட்டுள்ளது. நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு, படிப்பவருக்கு சுவையாகவும் இனிமையாகவும் இருக்கிறது என்பதால், நபியவர்களைப் பற்றிய தனது நூலுக்கு உவமை அடிப்படையில் இந்தப் பெயரை ஆசிரியர் சூட்டியுள்ளார். அதையே நாம் சுருக்கமாக இந்நூலின் தமிழாக்கத்திற்கு 'ரஹீக்'' என்று பெயரிட்டுள்ளோம்.

தாருல் ஹுதாவின் ஊழியர்களான நாங்கள் இந்நூலைத் தமிழாக்கம் செய்து வெளியிடுவதில் பெரிதும் மகிழ்ச்சியடைகிறோம். அத்துடன் வாய்ப்பளித்த அல்லாஹ்வுக்கே அனைத்து புகழ்ச்சிகளையும் நன்றிகளையும் உரித்தாக்குகிறோம்.

இம்மொழியாக்கப் பணியில் பெரிதும் உதவியும் ஒத்துழைப்பும் நல்கிய சகோதரர்களையும் இந்நூல் வெளிவர உதவிய நண்பர்கள் அனைவரையும் உங்கள் துஆக்களில் இணைத்துக் கொள்ளுங்கள்.

அல்லாஹ் இவர்களுக்கும் உலக முஸ்லிம்கள் அனைவருக்கும் என்றென்றும் நல்லருள் புரிவானாக! அல்லாஹ் நம் அனைவருக்கும் அவனது பொருத்தத்தை வழங்குவானாக!

இந்நூலில் குறைகள், தவறுகள் ஏதும் இருப்பின் அவற்றை மறுபதிப்பில் சரிசெய்து கொள்ள ஏதுவாக சுட்டிக் காட்டுமாறு வாசக அன்பர்களை அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். அதற்காக அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

தாருல் ஹுதா மேன்மேலும் பல நல்ல நூல்களை மொழியாக்கம் செய்து வெளியிட வேண்டும் என அல்லாஹ்விடம் தாங்கள் மறவாமல் இறைஞ்ச வேண்டும் என்ற அன்பான கோரிக்கையை முன் வைக்கிறோம்.

அகிலத்தாரின் ஒரே இறைவன் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது அவர்களுக்கும், அவர்களின் குடும்பத்தார், தோழர்கள், முஸ்லிம்கள் அனைவருக்கும் உண்டாகுக! ஆமீன்!!

குறிப்பு: இந்நூலின் ஆரம்பப் பகுதியில் நபி (ஸல்) பிறப்பதற்கு முந்திய வரலாற்றைப் பற்றி சற்று விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அது சில வாசகர்களுக்கு சடைவாகத் தோன்றினால், அவர்கள் நூலின் அடுத்த பகுதிக்குச் சென்று விடவும். அதில் தான் நபி (ஸல்) அவர்களின் பிறப்பிற்குப் பிந்திய வாழ்க்கை வரலாற்றைப் பற்றி மிக ஆதாரத்துடன் விவரிக்கப்பட்டுள்ளது.

## ஆசிரியரின் வாழ்க்கைக் குறிப்பு

பெயர்: ஸஃபியுர்ரஹ்மான் இப்னு அப்துல்லாஹ் இப்னு முஹம்மது அக்பர்.

உத்தர பிரதேச மாநிலம் ஆஜம் கட் மாவட்டத்திலுள்ள ‘முபாரக்பூர்’ எனும் நகரத்திலிருந்து ஒரு மைல் தொலைவிலுள்ள ‘ஹுஸைனாபாத்’ எனும் கிராமத்தில் 1942 ஆம் ஆண்டு ஆசிரியர் பிறந்தார்.

1948ஆம் ஆண்டு ‘தாருத்தஃலீம்’ (முபாரக்பூர்) என்ற இஸ்லாமிய மத்ரஸாவில் அடிப்படை மற்றும் தொடக்கக் கல்வி கற்க சேர்ந்தார்.

1954ஆம் ஆண்டு ‘இஹ்யாவுல் உலூம்’ (முபாரக்பூர்) என்ற இஸ்லாமிய மத்ரஸாவில் நடுநிலைக் கல்வி பயில சேர்ந்தார்.

1956ஆம் ஆண்டு ‘ஃபைஜ் ஆம்’ (மவ்வு, உ.பி.) என்ற புகழ்பெற்ற இஸ்லாமிய கல்லூரியில் மேற்படிப்புக்காக சேர்ந்து 1961ஆம் ஆண்டு ஆலிம் மற்றும் முஃப்தி பட்டம் பெற்றார்.

மேலும் இந்திய அரசாங்கத்தின் கல்வித் துறையால் அங்கீகக்கப்பட்ட பல இஸ்லாமிய பட்டங்களையும் ஆசிரியர் பெற்றுள்ளார். அவை:

1959ஆம் ஆண்டு “மவ்லவி”.

1960ஆம் ஆண்டு “ஆலிம்”.

1972ஆம் ஆண்டு “ஃபாஜில் அதப்”.

1978ஆம் ஆண்டு “ஃபாஜில் தீனியாத்” ஆகிய பட்டங்களாகும்.

அல்லாஹ்வின் அருளால் இஸ்லாமிய கல்விக்கூடங்களில் நடந்த தேர்வுகள், அரசாங்கத் தேர்வுகள் அனைத்திலும் ஆசிரியர் முதல் இடத்திலேயே வெற்றி பெற்றார்.

பணியாற்றிய பொறுப்புகளும் இடங்களும்

1961 ஆம் ஆண்டு பட்டம் பெற்ற பின் இலாஹாபாத் மற்றும் நாக்பூர் ஆகிய நகரங்களில் கல்விப் பணியாற்றினார்.

1963லிருந்து 1965 வரை ‘ஃபைஜ் ஆம் மத்ரஸாவில்’ ஆசிரியராக பணியாற்றினார்.

1966லிருந்து 1968 வரை ‘தாருல் ஹதீஸ்’ (மவ்வு, உ.பி.) மத்ரஸாவில் மூன்றாண்டுகள் ஆசிரியராக பணியாற்றினார்.

1969 லிருந்து 1971 வரை மத்திய பிரதேசத்தில் உள்ள ‘ஃபைஜுல் உலூம்’ என்ற இஸ்லாமியக் கல்லூரியின் தலைவராக பணியாற்றி கல்லூரியை நிர்வகித்தல், பாடம் நடத்துதல் ஆகிய பணிகளுடன் சுற்றுப்புற கிராமங்களுக்குச் சென்று இஸ்லாமிய அழைப்புப் பணி செய்வதிலும் தீவிரமாக ஈடுபட்டார்.

1972லிருந்து 1973 வரை முபாரக்பூல் உள்ள ‘தாருத்தஃலீம்’ என்ற மத்ரஸாவில் ஆசிரியராக பணியாற்றினார்.

1974ல் வாரனாஸி நகரத்திலுள்ள ‘ஜாமிஆ ஸலஃபிய்யா’ என்ற இஸ்லாமியக் கல்லூயில் ஆசிரியராக சேர்ந்தார். இந்நூல் எழுதிய பிறகு மதீனாவில் உள்ள இஸ்லாமிய பல்கலைக்கழகம் அவரை அங்கு அழைத்துக் கொண்டது.

ஆசிரியர் அவர்கள் உருது மற்றும் அரபி மொழியில் மேலும் பல நூல்கள் எழுதியுள்ளார்.

மேலும் பனாரஸிலிருந்து வெளிவரும் ‘முஹத்திஸ்’ என்ற மாத இதழின் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

அல்லாஹ் அவர்களுக்கு முழுமையான உடல் சுகத்தையும், மேன்மேலும் தங்களின் கல்வியால் சமுதாய மக்களுக்கு பயனளிக்கவும் நல்வாய்ப்பு அருள்வானாக! இம்மையிலும் மறுமையிலும் அவர்களுக்கு ஈடேற்றத்தையும் உயர் பதவிகளையும் வழங்குவானாக! ஆமீன்!!

**ஆசிரியர் முன்னுரை**

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் தனது தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு நேர்வழி மற்றும் சத்திய மார்க்கத்தை வழங்கி, உலகிலுள்ள அனைத்து மார்க்கங்களையும் வெற்றி கொள்ளும்படி செய்தான். மேலும், சாட்சியாளராகவும், நற்செய்தி கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிப்பவராகவும், அல்லாஹ்வின் பக்கம் அவனது கட்டளையைக் கொண்டு அழைக்கும் அழைப்பாளராகவும், பிரகாசிக்கும் கலங்கரை விளக்காகவும் அவரை ஆக்கினான். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் அஞ்சி அவனை அதிகமதிகம் நினைவு கூர்பவர்களுக்கு அத்தூதரிடம் அழகிய முன்மாதிரியை அமைத்தான்.

அல்லாஹ்வே! அத்தூதர் மற்றும் அவர்களது உறவினர்கள், தோழர்கள் ஆகியோரை மறுமை நாள் வரை மனத்தூய்மையுடன் பின்பற்றுவோருக்கு உனது அருளையும் ஈடேற்றத்தையும், நலம் பொருந்திய வளங்களையும், அன்பையும், பொருத்தத்தையும் என்றென்றும் வழங்குவாயாக!

மிக மகிழ்ச்சிக்குரிய செய்தி யாதெனில்: ஹிஜ்ரி 1396, ரபிஉல் அவ்வல் மாதம் பாகிஸ்தானில் 'ஸீரத்துன் நபி" (நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு) குறித்து ஒரு மாநாடு நடைபெற்றது. எழுத்தாளர்களை ஊக்குவிப்பதற்காக, அவர்களது ஆராய்ச்சியை மேம்படுத்துவதற்காக 'ராபிததுல் ஆலமில் இஸ்லாமி' என்ற அமைப்பு அம்மாநாட்டில் ஒரு அகில உலக போட்டியை அறிவித்தது. நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றை மிக அழகிய ஓர் ஆய்வு கட்டுரையாக எழுதி அந்த அமைப்பிடம் சமர்ப்பிக்க வேண்டுமென்பதுதான் அந்த அறிவிப்பு. வாக்கியங்களால் வர்ணிக்க முடியாத அளவுக்கு சிறப்புமிக்கதாக இந்த அறிவிப்பை நான் கருதுகிறேன். நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு ஓர் ஆழமான ஊற்றாகும். இதிலேதான் இஸ்லாமிய உலகின் உயிரோட்டமும், முழு மனித சமுதாயத்தின் ஈடேற்றமும் இருக்கின்றன என்பதை ஆழமாக ஆராயும்போது தெரிந்து கொள்ளலாம்.

அந்த சிறப்புமிக்க போட்டியில் கலந்து, கட்டுரையை சமர்ப்பிக்கும் வாய்ப்பு கிட்டியதை நான் எனக்குக் கிடைத்த நற்பேறாகக் கருதுகிறேன். எனினும், முன்னோர் பின்னோர் தலைவரான நபி முஹம்மது (ஸல்) அவர்களின் வாழ்க்கையை பற்றி முழுமையாக என்னால் கூறி முடிக்க இயலாது. நபி (ஸல்) அவர்களை பின்பற்றி வாழ்ந்து ஈடேற்றம் பெற விழையும் சாதாரண அடியான் நான். நபி (ஸல்) அவர்களின் சமுதாயத்தில் ஒருவனாக வாழ்ந்து, அவர்களின் சமுதாயத்தில் ஒருவனாக மரணித்து அவர்களது பரிந்துரையால் அல்லாஹ் என் பாவங்களை மன்னிக்க வேண்டும் என்பதே அடியேனின் லட்சியம்.

அடுத்து, கட்டுரை எப்படி இருக்க வேண்டும் என பல நிபந்தனைகளை ராபிதா அறிவித்திருந்தது. அது தவிர நானும் இந்த ஆய்வுக்காக எனக்கென பல நிபந்தனைகளை ஏற்படுத்திக் கொண்டேன்.

அதாவது, சோர்வு ஏற்படுத்துமளவுக்கு நீளமாக இல்லாமலும், புரியமுடியாத வகையில் சுருக்கமாக இல்லாமலும் நடுநிலையாக இருக்க வேண்டும். நிகழ்வுகள் குறித்து பல மாறுபட்ட செய்திகள் இருந்து அவற்றிடையே ஒற்றுமை ஏற்படுத்த முடியவில்லையெனில், ஆழ்ந்த ஆய்வுக்குப் பின் எனது பார்வையில் மிக ஏற்றமானதாக நான் கருதுவதை மட்டும் இக்கட்டுரையில் குறிப்பிடுவேன். நான் தெரிவு செய்ததற்கான காரணங்களை பக்கங்கள் அதிகமாகிவிடும் என்பதற்காக எழுதவில்லை.

மூத்த அறிஞர்கள் அறிவிப்புகளை ஏற்றுக்கொண்டாலும் அல்லது மறுத்தாலும், அவர்களின் முடிவை அப்படியே நான் ஒப்புக் கொள்கிறேன். அவர்கள் சரியானது அழகானது பலவீனமானது என எப்படி முடிவு செய்தாலும் அதையே நானும் ஏற்றுக் கொள்கிறேன். காரணம், இதுகுறித்து மேலாய்வு செய்வதற்கு போதுமான நேரம் என்னிடம் இல்லை.

நான் கூறும் கருத்துகள் படிப்பவர்களுக்கு புதுமையாக இருக்கலாம் என நான் அஞ்சும் இடங்களில் அல்லது பெரும்பாலோன் கருத்து நான் கூறும் உண்மையான கருத்துக்கு மாற்றமாக இருக்குமிடங்களில் மட்டும் நான் தெரிவு செய்த கருத்துக்குரிய ஆதாரங்களை சுட்டிக் காட்டியுள்ளேன். அல்லாஹ்தான் நல்வாய்ப்பு வழங்க போதுமானவன்.

அல்லாஹ்வே! இம்மையிலும் மறுமையிலும் எனக்கு நலவை முடிவு செய்! நீதான் மன்னிப்பாளன், அன்பு செலுத்துபவன், அர்ஷின் அதிபதி, கண்ணியத்திற்குரியவன்!!

ஸஃபிய்யுர் ரஹ்மான்,
முபாரக்பூர், இந்தியா.

## அரபியர்கள் நிலபரப்பு மற்றும் வமிசம், ஆட்சி மற்றும் பொருளாதாரம், சமயம் மற்றும் சமூகம்

### அரபியர்கள் வாழ்ந்த இடங்களும் அரபிய சமுதாயங்களும்

'நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு' என்பது மனித சமுதாயத்திற்காக அவர்கள் கொண்டு வந்த இறைத்தூதைக் குறிக்கும் சொல்லாகும். தான் கொண்டு வந்த இறைத்தூதை தங்களின் சொல், செயல், வழிகாட்டல், ஒழுக்க மாண்புகள் ஆகியவற்றின் மூலம் மனித குலத்திற்கு எடுத்துரைத்தார்கள். அந்த இறைத்தூதுத்துவத்தால் மனித வாழ்வின் அளவுகோல்களை முற்றிலுமாக மாற்றினார்கள் தீமைகளைக் களைந்து நன்மைகளை போதித்தார்கள் இருளைவிட்டு மக்களை அகற்றி ஒளியை நோக்கி அழைத்து வந்தார்கள். படைப்பினங்களை வணங்குவதிலிருந்து மனிதனை முழுமையாக விடுவித்து, படைப்பாளனாகிய ஒரே இறைவனை வணங்கும்படி செய்தார்கள். சுருங்கக்கூறின், இவ்வுலகில் நெறி தவறி வாழ்ந்த மனிதனின் வாழ்க்கைப் பாதையை மாற்றி செம்மையான அழகிய பாதையில் அவனை வாழச்செய்தார்கள்.

நமது இக்கருத்தை விளங்கிக் கொள்ள வேண்டுமாயின் முஹம்மது (ஸல்) அவர்கள் தூதராக அனுப்பப்படுவதற்கு முன் இருந்த நிலைமைகளையும், அவர்கள் தூதராக அனுப்பப்பட்ட பின் ஏற்பட்ட மாற்றங்களையும் முன் நிறுத்தி பார்ப்பது அவசியம்.

இதனால் நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமின் பக்கம் மக்களை அழைப்பதற்கு முன்பிருந்த அரபிய சமுதாயங்கள், அவர்களது கலாச்சாரங்கள் மேலும், அக்காலத்தில் இருந்த சிற்றரசர்கள், பேரரசர்கள், சமுதாய அமைப்புகள், அவர்களது மத நம்பிக்கைகள், சமூக பழக்க வழக்கங்கள், சடங்குகள் மற்றும் அவர்களது அரசியல், பொருளியல் ஆகியவற்றை குறித்து சில பிரிவுகளில் சுருக்கமாக ஆய்வு செய்வதும் அவசியம்.

இவற்றுள் ஒவ்வொன்றையும் பற்றி கூறுவதற்கு நாம் தனித்தனி பிரிவுகளை ஏற்படுத்தியிருக்கின்றோம். இப்போது அந்த பிரிவுகளைப் பார்ப்போம்.

### அரபியர்கள் வாழ்ந்த இடங்கள்

'அரப்' என்ற சொல்லுக்கு பாலைவனம், பொட்டல் பூமி, (மரம், செடி கொடிகள், தண்ணீர் இல்லாத) வறட்சியான நிலப்பரப்பு எனப் பல அர்த்தங்கள் உள்ளன. நீண்ட காலமாக அரபிய தீபகற்பத்துக்கும் (இன்றைய ஸவூதி) அங்கு வசிப்பவர்களுக்கும் இப்பெயர் கூறப்படுகிறது.

அரபிய தீபகற்பத்தின் மேற்கே செங்கடலும் ஸனாஃ நாடும், கிழக்கே அரபிய வளைகுடாவும் இராக்கின் சில பகுதிகளும், தெற்கே அரபிக் கடலும் (இது இந்தியப் பெருங்கடல் வரை தொடர்கிறது). வடக்கே ஷாம் (சிரியா) மற்றும் இராக்கின் சில நகரங்களும் இருக்கின்றன. இதன் பரப்பளவு 10,00,000 சதுர கிலோ மீட்டரிலிருந்து 13,00,000 சதுர கிலோ மீட்டர் வரையிலாகும்.

அரபிய தீபகற்பத்துக்கு புவியியல் ரீதியாகவும் அதன் இயற்கை அமைப்பாலும் மிகுந்த முக்கியத்துவம் உண்டு. அதன் உட்புற எல்லைகள் நாலா திசைகளிலும் மணற்பாங்கான பாலைவனத்தால் சூழப்பட்டுள்ளன.

அரபியர் அல்லாத வெளிநாட்டவர்கள் தங்களது ஆதிக்கத்தை அந்நாட்டில் செலுத்துவதற்கு இப்புவியியல் அமைப்பு பெரும் தடையாக இருந்தது. அதன் காரணமாக அந்நாட்டு மக்கள் எல்லாக் காலங்களிலும் தங்கள் செயல்பாடுகள் அனைத்திலும் சுதந்திரமானவர்களாகவே

திகழ்ந்தார்கள். அவர்களுக்கு அருகாமையில் மாபெரும் இரு வல்லரசுகள் (ரோம்-பாரசீகம்) இருந்தும் அவை இப்பகுதியில் தங்களின் ஆதிக்கத்தை செலுத்த முடியாமல் போனதற்கு இந்த இயற்கையான புவியியல் அமைப்பே காரணம்!

அரபிய தீபகற்பத்தின் எல்லைகள் பெயர் பெற்ற பல கண்டங்களுக்கு நடுவில் அமைந்திருக்கின்றன. அவை கடற்பரப்புகள், சமவெளிகள் மூலம் அந்த கண்டங்களுடன் இணைந்திருக்கின்றன. அதன் வடமேற்குப் பகுதி ஆப்பிரிக்கா கண்டத்துடனும், வடகிழக்குப் பகுதி ஐரோப்பா கண்டத்துடனும், கிழக்குப் பகுதி மத்திய ஆசிரியா, தெற்கு ஆசியா மற்றும் தூர கிழக்கு நாடுகளுடனும் இணைந்துள்ளது. அவ்வாறே, ஒவ்வொரு கண்டமும் கடல் மார்க்கமாக அரபிய தீபகற்பத்துடன் இணைகிறது. அக்கண்டங்களிலிருந்து வரும் கப்பல்கள் அரபிய தீபகற்பத்தின் துறைமுகங்களில் தங்கிச் செல்கின்றன.

இப்புவியியல் அமைப்பின் காரணமாக, தெற்கு-வடக்கு பகுதிகள் மக்கள் வந்து ஒதுங்கும் இடமாகவும், வியாபாரம், பண்பாடு, சமயம் மற்றும் கலைகளின் பரிமாற்ற மையமாகவும் திகழ்ந்தன.

**அரபிய சமுதாயங்கள்**

வரலாற்றாசிரியர்கள் அரபிய சமுதாயத்தை வமிசாவளி அடிப்படையில் மூன்றாக பிரிக்கின்றனர்.

1) அல் அரபுல் பாயிதா

இவர்கள் பண்டைக் கால அரபியர்களான ஆது, ஸமூது, தஸ்மு, ஜதீஸ், இம்லாக், உமைம், ஜுர்ஹும், ஹழூர், வபார், அபீல், ஜாஸிம், ஹழ்ர மவ்த் ஆகிய வமிசத்தினர் ஆவர். முதல் வகையைச் சேர்ந்த இவர்கள் காலப்போக்கில் அழிந்துவிட்டதால் இவர்களுடைய வரலாற்று குறிப்புகள் ஏதும் தெரியவில்லை.

2) அல் அரபுல் ஆபா

இவர்கள் எஷ்ஜுப் இப்னு யஃருப் இப்னு கஹ்தானின் சந்ததியினர் ஆவர். கஹ்தான் வமிச அரபியர் என்றும் இவர்களை அழைக்கப்படும்.

3) அல் அரபுல் முஸ்தஃபா

இவர்கள் நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததியினராவர். இவர்களை அத்னான் வமிச அரபிகள் என்றும் அழைக்கப்படும்.

மேற்கூறப்பட்ட அல் அரபுல் ஆபா என்பவர்கள் கஹ்தான் வமிசத்தில் வந்த யமன் வாசிகள். இவர்களது கோத்திரங்கள் ஸபா இப்னு யஷ்ஜுப் இப்னு யஃருப் இப்னு கஹ்தான் என்பவன் வழி வந்தவையாகும். இந்த கோத்திரங்களில் 1) ஹிம்யர் இப்னு ஸபா, 2) கஹ்லான் இப்னு ஸபா என்ற இரண்டு கோத்திரத்தினர் மட்டும் பிரபலமானவர்கள். ஹிம்யர், கஹ்லான் இருவரைத் தவிர ஸபாவுக்கு பதினொன்று அல்லது பதினான்கு பிள்ளைகள் இருந்தனர். அவர்களுக்கும் அவர்களது வழி வந்தவர்களுக்கும் ‘ஸபா வமிசத்தினர்’ என்றே கூறப்பட்டது. அவர்களுக்கென தனிப் பெயர் கொண்ட கோத்திரங்கள் ஏதும் உருவாகவில்லை.

அ) ஹிம்யர் கோத்திரமும் அதன் உட்பிரிவுகளும்

1) குழாஆ: பஹ்ராஃ, பலிய்ம், அல்கைன், கல்ப், உத்ரா, வபரா ஆகிய குடும்பத்தினர் குழாஆவிலிருந்து உருவானவர்கள்.

2) ஸகாஸிக்: இவர்கள் ஜைது இப்னு வாம்லா இப்னு ஹிம்யர் என்பவன் சந்ததியினர் ஆவர். இதில் ஹிம்யரின் பேரரான ஜைது என்பவர் 'ஸகாஸிக்' என்ற புனைப் பெயரால் அழைக்கப்பட்டார். (பின்னால் கூறப்படவுள்ள கஹ்லான் வம்சத்தில் தோன்றிய கின்தா என்ற பிரிவில் கூறப்படும் ஸகாஸிக் என்பவர் வேறு. இங்கு கூறப்பட்டுள்ள ஜைது ஸகாஸிக் என்பவர் வேறு.)

3) ஜைது அல் ஜம்ஹூர்: இதில் ஹிம்யர் அஸ்ஙர் (சின்ன ஹிம்யர்), ஸபா அஸ்ஙர் (சின்ன ஸபா), ஹழூர், தூ அஸ்பா ஆகிய குடும்பங்கள் உருவாகின.

ரோமர்கள் அக்காலத்தில் மிஸ்ர், ஷாம் ஆகிய இரு நாடுகளையும் கைப்பற்றி கஹ்லான் வமிசத்தினரின் கடல் மற்றும் தரைவழி வியாபாரங்களைத் தடுத்தனர். இதனால் கஹ்லான் வமிசத்தினரின் வணிகங்கள் பெருமளவு நசிந்தன. இதனாலும் அவர்கள் யமனிலிருந்து குடிபெயர்ந்து போயிருக்கலாம். அத்தோடு ஸபா பகுதியில் 'அல்அரீம்' என்ற வெள்ளப் பெருக்கு ஏற்பட்டது. அதனாலும் சில காலத்திற்குப்பிறகு அவர்கள் யமனிலிருந்து குடிபெயர்ந்து போயிருக்கலாம் என்று கூறப்படுகிறது. இவ்வாறு கஹ்லான் வமிசத்தினர் யமன் நாட்டை விட்டு வெளியேறியதற்கு சிலர் சில காரணங்களை கூறினாலும், வெள்ளப்பெருக்கு ஏற்படுவதற்கு முன்பிருந்தே இவர்களின் வணிகங்கள் நசிந்து போயிருந்தன. தொடர்ந்து ஸபா நாட்டில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு விவசாயங்களும், கால்நடைகளும் முழுமையாக அழிந்துவிட்டதால் ஸபா பகுதியில் இவர்களால் வாழ்க்கையைத் தொடர முடியவில்லை. இதனாலும் அவர்கள் அங்கிருந்து வெளியேறி இருக்கலாம் என சிலர் குறிப்பிடுகின்றனர்.

மேன்மைமிகு குர்ஆனில் 'ஸபா' எனும் அத்தியாயத்தில் இடம்பெற்றிருக்கும் 15-19 ஆகிய வசனங்கள் இவர்களின் கூற்றை உறுதி செய்கிறது.

மேற்கூறப்பட்ட இரு காரணங்களை தவிர மற்றொரு காரணமும் இருந்ததாக தெரிய வருகிறது. அதாவது கஹ்லான், ஹிம்யர் இரு வமிசத்தினர் இடையில் சண்டை சச்சரவுகள் தோன்றின. இதனால் கஹ்லான் வமிசத்தினர் தங்களது நாட்டைத் துறந்து அமைதியான இடத்தை நோக்கி சென்று விட்டனர். வணிகங்கள் நசிந்து விட்டது மட்டும் காரணமாக இருந்திருந்தால் ஹிம்யர் வமிசத்தினரும் ஸபாவில் இருந்து வெளியேறி இருப்பார்கள். ஆனால், அவர்கள் வெளியேறவில்லை. இதிலிருந்து இவ்விரு வம்சத்தினருக்கும் இடையே இருந்த பகைமையும் ஒரு காரணம் எனத் தெரிய வருகிறது.

நாடு துறந்த கஹ்லான் வமிசத்தினர் நான்கு வகைப்படுவர்:

1) அஜ்து கிளையினர்

இவர்கள் தங்களின் தலைவர் 'இம்ரான் இப்னு அம்ர் முஜைக்கியாஃ' என்பவன் ஆலோசனைக்கிணங்க நாடு துறந்தனர். இவர்கள் யமன் நாட்டின் பல பகுதிகளுக்கு சென்று சுற்றிப் பார்த்து, தங்களுக்கு விருப்பமான பகுதிகளில் தங்கினர். இவ்வமிசத்தில் யார் எங்கு தங்கினர் என்ற விபரங்கள் பின்வருமாறு:

இம்ரான் இப்னு அம்ர் என்பவர் தனது குடும்பத்துடன் 'உமான்' (ஓமன்) நாட்டில் சென்று தங்கினார். இவர்களை உமான் நாட்டு அஜ்து வமிசத்தினர் என்று சொல்லப்படுகின்றது.

நஸ்ர் இப்னு அஜ்து குடும்பத்தினர் 'துஹாமா' என்ற இடத்திற்குச் சென்று தங்கினர். இவர்களை ஷனூஆ அஜ்து வமிசத்தினர் எனக் கூறப்படும்.

ஸஃலபா இப்னு அம்ர் முஜைகியாஃ என்பவர் ஹி ஜாஸ் பகுதிக்குச் சென்று 'ஸஃலபியா' மற்றும் 'தூ கார்' என்ற இடங்களுக்கிடையில் தனது குடும்பத்துடன் தங்கினார். அவரது

பிள்ளைகள் பேரன்கள் பெரியவர்களாகி நன்கு வலிமை பெற்றவுடன் அங்கிருந்து புறப்பட்டு மதீனா நகர் வந்து தங்கினார். இந்த ஸஃலபாவுடைய மகன் ஹாஸாவின் பிள்ளைகள்தான் அவ்ஸ், கஸ்ரஜ் என்ற இருவரும். இவ்விருவல் இருந்தே அவ்ஸ், கஸ்ரஜ் என்ற இரு வமிசங்கள் தோன்றின.

அஜ்து வமிசத்தை சேர்ந்த ஹாஸா இப்னு அம்ர் குடும்பத்தினர் ஹி ஜாஸ் பகுதியில் 'மர்ருல் ளஹ்ரான்' என்னும் இடத்தில் தங்கினர். சிறிது காலத்திற்குப் பின் மக்கா மீது படையெடுத்து அங்கு வசித்த ஜுர்ஹும் வமிசத்தவர்களை வெளியேற்றி விட்டு மக்காவை தங்களது ஊராக ஆக்கிக் கொண்டனர். இந்த ஹாஸாவின் வமிசத்திற்கு 'குஜாஆ' என்ற பெயரும் உண்டு.

ஜஃப்னா இப்னு அம்ர் என்பவர் தனது குடும்பத்துடன் சிரியா சென்று தங்கினார். இவரது சந்ததியினர்தான் வருங்காலத்தில் சிரியாவை ஆட்சி செய்த கஸ்ஸானிய மன்னர்கள் ஆவர். சிரியா வருவதற்கு முன் ஜஃப்னா இப்னு அம்ர் ஹி ஜாஸ் பகுதியில் உள்ள 'கஸ்ஸான்' என்ற கிணற்றுக்கருகில் குடியேறி சில காலம் தங்கியிருந்தனர். இதன் காரணமாகவே பிற்காலத்தில் இவர்களுக்கு 'கஸ்ஸானியர்' என்ற பெயரும் வந்தது.

கஅப் இப்னு அம்ர், ஹாஸ் இப்னு அம்ர், அவ்ஃப் இப்னு அம்ர் போன்ற சிறிய சிறிய குடும்பத்தவர்களும் மேற்கூறப்பட்ட பெரியகோத்திரங்களுடன் இணைந்து ஹி ஜாஸ் மற்றும் சிரியாவில் குடிபெயர்ந்தனர்.

2) லக்ம் மற்றும் ஜுதாம்

இவர்கள் கிழக்கு மற்றும் வடக்கு நாடுகளில் குடிபெயர்ந்தனர். லக்ம் வமிசத்தில் வந்த நஸ்ர் இப்னு ரபீஆ என்பவன் சந்ததியினர்தான் 'ஹீரா' நாட்டை ஆண்ட அரசர்கள். அந்த அரசர்களை 'முனாதிரா' என்று அழைக்கப்பட்டது.

3) பனூ தைய்

அஜ்து வமிசத்தினர் யமனிலிருந்து குடிபெயர்ந்தவுடன் இந்த கோத்திரத்தினரும் அரபிய தீபகற்பத்தின் வடக்கு பகுதிக்குச் சென்று அஜஃ, சல்மா என்ற இரு மலைகளுக்கிடையில் குடியேறினர். பிற்காலத்தில் அந்த மலைகளுக்கு 'தைய் மலைகள்' என்ற பெயர் வந்தது.

4) கின்தா

இந்த கோத்திரத்தினர் பஹ்ரைனில் குடியேறினர். அங்கு அவர்களுக்குப் பல சிரமங்கள் ஏற்படவே மீண்டும் யமன் நாட்டில் 'ஹழ்ர மவ்த்' எனும் நகரில் குடியேறினர். அங்கும் அவர்களுக்கு சிரமங்கள் ஏற்படவே, அரபிய தீபகற்பத்தின் நஜ்து பகுதியில் குடியேறி ஒரு பெரும் அரசாங்கத்தை நிறுவினர். ஆனால், சில காலங்களுக்குள்ளாகவே அவர்களது அரசாங்கம் அழிந்து சுவடுகள் தெரியாமல் போயிற்று.

ஹிம்யர் வமிசத்தைச் சேர்ந்த 'குழாஆ' என்ற கோத்திரத்தார் யமனிலிருந்து வெளியேறி 'மஷாஃபுல் இராக்' என்ற பகுதியில் 'பாதியத்துஸ் ஸமாவா' என்னும் ஊரில் குடியேறினர். குழாஆ வமிசத்தைச் சேர்ந்த சில பிரிவினர் 'மஷாஃபுஷ் ஷாம்' என்ற பகுதியிலும் ஹி ஜாஸ் மாநிலத்தின் வடக்குப் பகுதியிலும் குடியேறினர்.

இதற்கு முன் கூறப்பட்ட அல் அரபுல் முஸ்தஃபாவின் முதன் முதலான பாட்டனார் நபி இப்றாஹீம் (அலை) ஆவார்கள். நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் இராக் நாட்டில் ஃபுராத் நதியின் மேற்கு கரையில் கூஃபாவிற்கு அருகாமையில் உள்ள 'உர்' என்ற ஊரைச் சேர்ந்தவர்கள். நபி இப்றாஹீம் (அலை) அவர்களின் குடும்பம், உர் மற்றும் அதை

சுற்றியுள்ள ஊர்களின் சமய சமூக பண்பாடுகள் குறித்து பல விரிவான தகவல்கள் அகழ்வாராய்ச்சிகள் மற்றும் தொல் பொருள் ஆராய்ச்சிகள் மூலம் கிடைத்துள்ளன.

இப்றாஹீம் (அலை) அவர்கள் தனது ஊரிலிருந்து வெளியேறி ஹாரான் அல்லது ஹர்ரான் எனும் ஊரில் குடியேறினார்கள். சில காலத்திற்குப் பின் அங்கிருந்தும் புறப்பட்டு ஃபலஸ்தீனம் நாட்டில் குடியேறினார்கள். ஃபலஸ்தீனை தனது அழைப்புப் பணிக்கு மையமாக ஆக்கிக்கொண்டு அங்கும் அதைச் சுற்றியுள்ள பல பகுதிகளிலும் வாழ்ந்த மக்களை ஒரே இறைவனின் பக்கம் அழைத்தார்கள். ஒரு முறை மனைவி சாராவுடன் அழைப்புப் பணிக்காக அருகிலுள்ள ஓர் ஊருக்குச் சென்றார்கள். அன்னை சாரா மிக அழகிய தோற்றமுடையவராக இருந்ததை அறிந்த அவ்வூரின் அநியாயக்கார அரசன், அவர்களை அழைத்து வரச்செய்து அவர்களுடன் தவறான முறையில் நடக்க முயன்றான். அன்னை சாரா அவனிடமிருந்து தன்னை பாதுகாக்குமாறு அல்லாஹ்விடம் வேண்டினார். அவன் சாராவை நெருங்க முடியாதபடி அல்லாஹ் அவனை ஆக்கிவிட்டான். அல்லாஹ்விடம் சாரா மிக மதிப்பிற்குரியவர் மேலும், நல்லொழுக்கச் சீலர் என்பதை இதன் மூலம் அறிந்த அந்த அநியாயக்காரன், சாராவின் சிறப்பை மெச்சி அல்லது அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ள சாராவுக்கு பணி செய்ய ஓர் அழகிய அடிமைப் பெண்ணை வழங்கினான். சாரா அவர்கள் அப்பெண்ணை தனது கணவர் இப்றாஹீமுக்கு வழங்கி விட்டார்கள். அப்பெண்மணிதான் அன்னை ஹாஜர் ஆவார். (ஸஹீஹுல் புகாரி)

இந்நிகழ்ச்சிக்குப் பின் இப்றாஹீம் (அலை) தங்களின் வசிப்பிடமான ஃபலஸ்தீனத்திற்குத் திரும்பினார்கள். அங்கு ஹாஜரின் மூலமாக 'இஸ்மாயீல்' என்ற மேன்மைக்குரிய ஒரு மகனை, அல்லாஹ் இப்றாஹீம் (அலை) அவர்களுக்கு வழங்கினான். பிறகு அல்லாஹ்வின் கட்டளைக்கு இணங்க இப்றாஹீம் (அலை) தங்களது மகன் இஸ்மாயீல் (அலை) மற்றும் ஹாஜரை அழைத்துக் கொண்டு மக்கா வந்தார்கள்.

அக்காலத்தில் அங்கு இறை இல்லமான 'கஅபா' கட்டடமாக இருக்கவில்லை. கஅபா இருந்த இடம் சற்று உயரமான குன்றைப்போல் இருந்தது. வெள்ளம் வரும்போது கஅபா இருந்த அந்த மேட்டுப் பகுதியின் வலது இடது இரு ஓரங்களைத் தண்ணீர் அரித்து வந்தது. கஅபத்துல்லாஹ்வின் அருகிலிருந்த ஓர் அடர்த்தியான மர நிழலில் அவ்விருவரையும் அமர வைத்து, சிறிது பேரீத்தங்கனிகள் இருந்த ஒரு பையையும், தண்ணீர் உள்ள ஒரு துருத்தியையும் அவ்விருவருக்காக வழங்கிவிட்டு, இப்றாஹீம் (அலை) ஃபலஸ்தீனம் திரும்பினார்கள். சில நாட்களில் அவ்விருவரின் உணவான பேரீத்தங்கனிகளும் தண்ணீரும் தீர்ந்துவிட்டன. அல்லாஹ் தனது அருளினால் பசியையும் தாகத்தையும் போக்கும் அற்புதமான 'ஜம்ஜம்' ஊற்றை அவ்விருவருக்காக தோன்றச் செய்தான். (ஸஹீஹுல் புகாரி)

இக்காலத்தில் இரண்டாவது ஜுர்ஹும் என்ற யமன் கோத்திரத்தினர் மக்கா வழியே வரும்போது (தண்ணீர் இருப்பதைப் பார்த்து) அங்கு வசிக்க விரும்பி அன்னை ஹாஜரிடம் அனுமதி பெற்று தங்கினர். சில வரலாற்று ஆசிரியர்கள் 'இந்த இரண்டாவது ஜுர்ஹும் வமிசத்தினர் முன்பிருந்தே மக்காவைச் சுற்றியுள்ள பள்ளத்தாக்குகளில் வசித்து வந்தனர் என்றும் மக்காவில் அன்னை ஹாஜர் குடியேறி, ஜம்ஜம் கிணறு தோன்றியவுடன் தாங்கள் வசித்து வந்த பள்ளத்தாக்குகளை விட்டு வெளியேறி மக்காவில் குடியேறினர்" என்றும் கூறுகிறார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இமாம் புகாரி (ரஹ்) தங்களது நூலில் இச்சம்பவம் பற்றி குறிப்பிட்டிருப்பதை ஆராய்ந்தால் நாம் முதலில் கூறிய கூற்றே மிகச் சரியானது என்பதை அறிந்து கொள்ளலாம். இமாம் புகாரி (ரஹ்) கூறியிருப்பதாவது:

இப்றாஹீம் (அலை) தமது மனைவியையும் பிள்ளையையும் மக்காவில் தங்க வைப்பதற்கு முன்பே மக்கா வழியாக இரண்டாவது ஜுர்ஹும் கோத்திரத்தார் போக வர இருந்தார்கள். அன்னை ஹாஜர் மக்காவில் வந்து தங்கி தண்ணீர் வசதியும் ஏற்பட்டபின், அதாவது இஸ்மாயீல் (அலை) வாலிபமடைவதற்கு முன்பு இவர்கள் குடியேறியுள்ளார்கள். இவ்வாறே ஸஹீஹுல் புகாரியில் வந்துள்ளது. இதிலிருந்து இவர்கள் மக்காவின் எப்பகுதியிலும் இதற்கு முன் குடியிருக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிய வருகிறது. அதே நேரம், தான் விட்டு வந்த மனைவி மற்றும் மகனை சந்திக்க நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் சென்று வந்தார்கள். மொத்தம் எத்தனை முறை சந்திக்கச் சென்றார்கள் என்பது உறுதியாக தெரியவில்லை. எனினும் நான்கு முறை சென்றதற்கான உறுதிமிக்கச் சான்றுகள் உள்ளன.

அந்த நான்கு முறைகள் வருமாறு:

1) இதைப் பற்றி அல்லாஹ் தன் திருமறையில் கூறியிருக்கின்றான். நபி இப்றாஹீம் (அலை), அவர்கள் தமது மகனார் இஸ்மாயீல் (அலை) அவர்களை அறுத்து அல்லாஹ்வுக்கு தியாகம் செய்வதுபோல் கனவு ஒன்று கண்டார்கள். அக்கனவை அல்லாஹ்வின் கட்டளை என்று உணர்ந்து அதை நிறைவேற்ற மக்கா வந்தார்கள். இது குறித்து பின்வரும் குர்ஆன் வசனத்தில் அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகிறான்.

ஆகவே, அவ்விருவரும் (இறைவனின் விருப்பத்திற்கு) முற்றிலும் வழிப்பட்டு, (இப்றாஹீம் தன் மகன் இஸ்மாயீலை அறுத்துப் பலியிட) முகங்குப்புறக் கிடத்தியபோது நாம் 'இப்றாஹீமே!'' என நாம் அழைத்து 'உண்மையாகவே நீங்கள் உங்களுடைய கனவை மெய்யாக்கி வைத்துவிட்டீர்கள் என்றும், நன்மை செய்பவருக்கு நாம் இவ்வாறே கூலி கொடுப்போம்'' என்றும் கூறி, 'நிச்சயமாக இது மகத்தானதொரு பெரும் சோதனையாகும்'' (என்றும் கூறினோம்). ஆகவே, மகத்தானதொரு பலியை அவருக்கு பகரமாக்கினோம். (அல்குர்ஆன் 37 : 103-107)

இஸ்ஹாக்கைவிட இஸ்மாயீல் (அலை) பதிமூன்று ஆண்டுகள் மூத்தவர் என்று தவ்றாத்'' வேதத்தில் 'தக்வீன்' என்ற அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், இச்சம்பவத்தைப் பற்றி விவரிக்கும் குர்ஆன் வசனங்களிலிருந்து இந்நிகழ்ச்சி இஸ்ஹாக் (அலை) பிறப்பதற்கு முன் நடந்திருக்க வேண்டும் என்றே தெரிகிறது. ஏனெனில், மேன்மைமிகு குர்ஆனில் நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் இஸ்மாயீல் (அலை) அவர்களை அறுத்துப் பலியிட முயன்ற நிகழ்ச்சி முழுதும் கூறப்பட்ட பிறகு அதையடுத்தே இஸ்ஹாக் (அலை) பிறப்பார் என்ற நற்செய்தி கூறப்பட்டுள்ளது.

ஆக, இதிலிருந்து இஸ்மாயீல் (அலை) அவர்களை அறுப்பதற்காக நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் ஒருமுறை மக்கா சென்றுள்ளார்கள் என்பதும், அப்போது இஸ்மாயீல் (அலை) வாலிபமடையவில்லை என்பதும் தெரிய வருகிறது.

மற்ற மூன்று பயணங்களைப் பற்றி இப்னு அப்பாஸ் (ரழி) அவர்களின் வாயிலாக இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளதின் சுருக்கமாவது:

2) இஸ்மாயீல் (அலை) அவர்கள் ஜுர்ஹும் கோத்திரத்தாரிடம் அரபி மொழியைக் கற்றார்கள். அவர்களின் ஒழுக்கம் மற்றும் நற்பண்புகளை ஜுர்ஹும் கோத்திரத்தார் பெரிதும் விரும்பி தங்கள் இனத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணை இஸ்மாயீலுக்கு மணமுடித்து வைத்தார்கள். இத்திருமணத்திற்கு பிறகே அன்னை ஹாஜர் அவர்கள் இறந்தார்கள்.

இப்றாஹீம் (அலை) அவர்கள் மீண்டும் மனைவியையும் மகனையும் சந்திப்பதற்கு மக்கா வந்தபோது மனைவி இறந்த செய்தியைத் தெரிந்து கொண்டார்கள். இஸ்மாயீல் (அலை) அப்போது மக்காவில் இல்லை. இஸ்மாயீல் (அலை) அவர்களின் மனைவியிடம் தனது மகனைப் பற்றியும் அவ்விருவரின் வாழ்க்கை, சுகநலன்கள் பற்றியும் விசாரித்தார்கள்.

அப்பெண்ணோ தங்களது இல்லற நெருக்கடியையும் வறுமையையும் பற்றி முறையிட்டார். அதைக் கேட்ட நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் 'இஸ்மாயீல் வந்தால், தனது வீட்டு வாசல் நிலையை மாற்ற வேண்டும் என்று நான் கூறியதாக, அவரிடம் நீ சொல்!" என்று சொல்லிவிட்டு சென்றார்கள். இஸ்மாயீல் (அலை) வீடு திரும்பியவுடன் அப்பெண் நடந்த நிகழ்ச்சியை விவத்தார். தனது தந்தை கூறிய கருத்தின் நோக்கத்தைப் புரிந்து கொண்டு அப்பெண்ணை இஸ்மாயீல் (அலை) மணவிலக்கு செய்துவிட்டார். அதற்குப் பிறகு ஜுர்ஹும் கோத்திரத்தாரின் தலைவர் 'முழாத் இப்னு அம்ர்' என்பவன் மகளைத் திருமணம் செய்தார்.

3) இஸ்மாயீல் (அலை) அவர்கள் இரண்டாவதாக திருமணம் செய்து கொண்டபின் நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் மக்கா வந்தார்கள். அப்போதும் இஸ்மாயீல் (அலை) வீட்டில் இல்லை. நபி இப்றாஹீம் (அலை) தனது மருமகளிடம் மகனைப் பற்றியும் குடும்ப நிலையைப் பற்றியும் விசாரித்தார்கள். அதற்கு 'அல்லாஹ்வின் அருளால் நாங்கள் நலமுடன் இருக்கிறோம்" என்று அவர் பதிலளித்தார். அதைக் கேட்ட நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் 'இஸ்மாயீல் (அலை) வந்தால் தனது வீட்டு வாசலின் நிலையை தக்க வைத்துக் கொள்ளட்டும் என்று நான் கூறியதாக, இஸ்மாயீலிடம் சொல்!" என்று சொல்லிவிட்டு ஃபலஸ்தீனம் சென்றார்கள்.

4) நான்காம் முறை நபி இப்றாஹீம் (அலை) மக்கா வந்தபோது தனது மகனை சந்தித்தார்கள். இஸ்மாயீல் (அலை) ஜம்ஜம் கிணற்றருகில் இருந்த ஒரு மரத்தின் நிழலில் அமர்ந்து தனது அம்பைக் கூர்மைபடுத்திக் கொண்டிருந்தார்கள். தந்தையைப் பார்த்ததும் எழுந்து மரியாதை செய்து தங்களது அன்பைப் பரிமாறிக் கொண்டார்கள். இப்பயணத்தில்தான் இருவரும் இணைந்து கஅபத்துல்லாஹ்வைக் கட்டி, அல்லாஹ்வின் கட்டளைக்கிணங்க மக்களை ஹஜ்ஜுக்கு அழைத்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இரண்டாவது மனைவியின் மூலம் நபி இஸ்மாயீல் (அலை) அவர்களுக்குப் பன்னிரண்டு ஆண் பிள்ளைகளை அல்லாஹ் வழங்கினான். அவர்களின் பெயர்கள் பின்வருமாறு:

1) நாபித் (நபாயூத்), 2) கைதார், 3) அத்பாஈல் 4) மிபுஷாம், 4) மிஷ்மாஃ, 6) தூமா, 7) மீஷா, 8) ஹூதத் 9) தீமா, 10) யதூர், 11) நஃபீஸ், 12) கைதுமான்.

பிற்காலத்தில் இந்த பன்னிரண்டு பிள்ளைகள் வழியாகத்தான் பன்னிரண்டு கோத்திரங்கள் உருவாகின. இவர்கள் அனைவரும் பல காலங்கள் மக்காவில் வசித்தனர். யமன், சிரியா, மிஸ்ர் ஆகிய நாடுகளுக்கு சென்று வியாபாரம் செய்து வாழ்க்கை நடத்தினர். சில காலங்கள் கழித்து இவர்களில் பலர் அரபிய தீபகற்பத்தின் மற்ற பகுதிகளிலும் அதன் வெளியிலும் குடியேறினர். நாளடைவில் நாபித், கைதார் குடும்பங்களைத் தவிர மற்றவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளே இல்லாமல் போய்விட்டது.

ஜாஸின் வடக்குப் பகுதியில் நாபித் என்பவன் பிள்ளைகள் நன்கு வளர்ச்சி பெற்று முன்னேறி 'பத்ரா' என்ற ஊரை தலைநகராகக் கொண்டு வலுமிக்க ஓர் அரசாங்கத்தை நிறுவினர். இந்நகரம் (உர்துன்) ஜோர்டானின் தெற்கே வரலாற்றுப் புகழ் வாய்ந்த பழங்கால நகரமாகும். இவர்களின் அரசாட்சிக்கு பணிந்தே அங்குள்ளோர் வாழ்ந்தனர். இவர்களை அப்போது வாழ்ந்த எவராலும் இவர்களை எதிர்க்கவோ, புறக்கணிக்கவோ முடியவில்லை. இறுதியாக ரோமர்கள் இவர்களின் அரசாங்கத்தை அழித்தனர். இந்த நாபித்தின் வமிசத்திற்கு 'நிபித்தி வமிசம்' என்ற மற்றொரு பெயரும் உண்டு. சிரியாவில் ஆட்சி செய்த கஸ்ஸான் வமிசத்து அரசர்களும் மதினாவில் வசித்த அவ்ஸ், கஸ்ரஜ் வமிசத்தினரும் இந்த நாபித் இப்னு இஸ்மாயீலின் குடும்பத்தை சேர்ந்தவர்கள் என வமிச ஆய்வாளர்களின் ஒரு கூட்டத்தினர் கூறுகின்றனர். இந்த வமிசத்தைச் சேர்ந்த பலர் அந்த ஊர்களில் இன்றும் வசிக்கின்றனர். இமாம் புகாரி (ரஹ்) தங்களது நூலில் நபி இஸ்மாயீல்

(அலை) அவர்களுடன் யமன் நாட்டு தொடர்பு (உறவு) என்று ஒரு பாடத்தை குறிப்பிட்டுள்ளார். அப்பாடத்தில் தலைப்புக்கு பொருத்தமான சில நபிமொழிகளை எழுதி, தனது கருத்துக்கு வலிமை சேர்த்துள்ளார்.

ஹதீஸ் கலை (நபிமொழி) வல்லுனர் இப்னு ஹஜரும் தனது விரிவுரையில், கஹ்தான் வமிசத்தினர் நாபித் இப்னு இஸ்மாயீலின் குடும்பத்திலிருந்து வந்தவர்கள் என்ற கருத்தையே ஏற்றமானது என குறிப்பிட்டுள்ளார்கள்.

நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் மகன் கைதான் குடும்பத்தினர் பல காலங்கள் மக்காவில் வாழ்ந்தனர். அவரது சந்ததியில் அத்னானும் அவர் மகன் மஅதும் பேரும் புகழும் பெற்றவர்கள். இவர்களிலிருந்து அத்னானிய அரபியர்கள் தோன்றினர். இவர்களையடுத்து பிற்காலத்தில் இவரது சந்ததியில் தோன்றியவர்கள், அத்னான் வரை தங்களது மூதாதைகளின் பெயர்களை சரியாக மனனமிட்டு பாதுகாத்துக் கொண்டனர். நபி (ஸல்) அவர்களின் வமிச தலைமுறையில் இந்த அத்னான் என்பவர் 21-வது தலைமுறை பாட்டனாராவார்.

சில அறிவிப்புகளில் வந்துள்ளதாவது: நபி (ஸல்) அவர்கள் தங்களின் வமிச தலைமுறைகளை குறிப்பிடும்போது அத்னான் பெயர் வந்தவுடன் நிறுத்திக் கொண்டு, 'இதற்கு மேல் வமிச தலைமுறையை கூறியவர்கள் பொய்யுரைத்து விட்டனர்" என்று கூறுவார்கள்.

இவ்விடத்தில் மற்றொரு கருத்தும் குறிப்பிடத்தக்கது. அதாவது, சிலர் மேற்கூறப்பட்ட நபிமொழி பலவீனமானது என்பதால் அத்னானுக்கு மேலும் தலைமுறை பெயர்களை கூறலாம் என்கின்றனர். எனினும், அத்னானுக்கு மேல் இவ்வறிஞர்கள் கூறும் தலைமுறையில் பல மாறுபட்ட பெயர்களை கூறுகின்றனர். அக்கருத்துகளை ஒருங்கிணைக்க முடியாத அளவு அதில் வேறுபாடுகளும் உள்ளன.

“அத்னான் மற்றும் நபி இப்றாஹீம் (அலை) அவர்களுக்கிடையில் நாற்பது தலைமுறைகள் உள்ளன” என்று பிரபலமான வரலாற்று அறிஞர் இப்னு ஸஅது (ரஹ்) கூறுகிறார். இக்கால அறிஞர்களில் பெரும் ஆய்வாளராக விளங்கும் முஹம்மது சுலைமான் என்பவரும் இக்கருத்தையே சரிகாண்கிறார். மேலும், இமாம் தபரி மற்றும் மஸ்வூதி தங்களின் பல கருத்துக்களில் இதனையும் ஒன்றாக கூறியுள்ளார்கள்.

மஅதின் மகன் நஜார் என்பவர் மூலம் பல குடும்பங்கள் தோன்றின. (மஅதுக்கு ‘நஜார்’ என்ற ஒரு மகன் மட்டும்தான் இருந்தார் என்று சிலர் கூறியுள்ளனர்.)

நஜாருக்கு நான்கு பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் மூலம் பெரியவமிசங்கள் தோன்றின. 1) இயாத், 2) அன்மார், 3) ரபீஆ, 4) முழர்.

இக்கோத்திரங்களைப் பற்றியுள்ள விவரங்களின் வரைபடத்தை அடுத்த பக்கத்தில் பார்க்கவும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் இப்றாஹீமுடைய பிள்ளைகளில் இஸ்மாயீலைத் தேர்வு செய்தான். இஸ்மாயீலுடைய பிள்ளைகளில் ‘கினானா’ குடும்பத்தைத் தேர்வு செய்தான். கினானா குடும்பத்தில் குறைஷியர்களைத் தேர்வு செய்தான். குறைஷியர்களில் ஹாஷிம் குடும்பத்தைத் தேர்வு செய்தான். (ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: படைப்பினங்களில் (மனிதன், ஜின் என்ற இரு பிரிவில்) மிகச் சிறந்த பிரிவில் என்னைப் படைத்து அதில் (முஸ்லிம், காஃபிர்களென்று) இரு பிரிவுகளில் சிறந்த பிரிவில் என்னை ஆக்கினான். பிறகு கோத்திரங்களைத் தேர்வுசெய்து அதில் சிறந்த கோத்திரத்தில் என்னைப் படைத்தான். பிறகு குடும்பங்களைத் தேர்வுசெய்து,

அதில் மிகச் சிறந்த குடும்பத்தில் என்னை ஆக்கினான். நான் அவர்களில் ஆன்மாவாலும் மிகச் சிறந்தவன். குடும்பத்தாலும் மிகச் சிறந்தவன். (ஸஹீஹ் முஸ்லிம்)

மற்றோர் அறிவிப்பில் வந்துள்ளது: அல்லாஹ் படைப்பினங்களைப் படைத்து அவற்றில் மிகச் சிறந்த பிரிவினரில் என்னை ஆக்கி வைத்தான். பிறகு அப்பிரிவை இரண்டாக ஆக்கி அவற்றில் மிகச் சிறந்த பிரிவில் என்னை ஆக்கினான். பிறகு அவர்களை கோத்திரங்களாக ஆக்கி அவற்றில் மிகச் சிறந்த கோத்திரத்தில் என்னை ஆக்கினான். பிறகு அவர்களைப் பல குடும்பங்களாக ஆக்கி அவற்றில் குடும்பத்தாலும் ஆன்மாவாலும் சிறந்தவர்களில் என்னை ஆக்கினான். (ஜாமிவுத் திர்மிதி)

அத்னான் சந்ததியினருடைய எண்ணிக்கை பல்கிப் பெருகியபோது அவர்கள் மழை வளம், பசுமை, செழிப்புமிக்க இடங்களைத்தேடி அரபு நாட்டின் பல பகுதிகளுக்குச் சென்றனர். அப்து கைஸ், பக்ரு இப்னு வாயில் மற்றும் தமீம் ஆகிய சந்ததியினர் பஹ்ரைனிலும், ஹனீஃபா இப்னு அலீ இப்னு பக்ர் குடும்பத்தினர் ‘யமாமா’ சென்று அங்குள்ள ‘ஹூஜ்ர்’ பகுதியிலும் குடியேறினர். (ஹூஜ்ர் என்பது யமாமாவின் ஒரு நகரமாகும்.) பக்ர் இப்னு வாயிலின் ஏனைய குடும்பங்கள் யமாமா, பஹ்ரைன், ஸைஃப் காளிமா, அதன் அருகாமையிலுள்ள கடற்பகுதி, இராக்கின் கிராமப்புறங்கள் ஆகிய இடங்களில் குடியேறினர்.

தங்லிப் குடும்பத்தவர்கள் ‘ஃபுராத்’ நதிக்கரையில் குடியேறினர். அவர்களில் ஒரு பிரிவினர் பக்ர் குடும்பத்தாருக்கு அருகில் வசித்தனர். பனூ தமீம் குடும்பத்தவர்கள் பஸராவிலும் அதன் கிராமப் பகுதிகளிலும் வசித்தனர்.

சுலைம் குடும்பத்தினர் மதீனாவுக்கு அருகாமையில் வசித்தனர். அவர்கள் வாதில் குராவிலிருந்து கைபர்வரை, மதீனாவின் கிழக்குப் பகுதி, அதன் இரு மலைப்பகுதிகள் மற்றும் ஹர்ரா வரை வசித்தனர்.

அஸத் குடும்பத்தினர் ‘தீமாஃ’ நகரத்தின் கிழக்குப் பகுதிலும் ‘கூஃபா’ நகரத்தின் மேற்குப் பகுதியிலும் வசித்தனர். அவர்களுக்கும் தீமாஃவுக்குமிடையே ‘தய்ம்’ கோத்திரத்தைச் சேர்ந்த புஹ்த்துர் குடும்பத்தவர்களின் குடியிருப்புகள் அமைந்திருந்தன. அவ்வூருக்கும் கூஃபாவுக்கு மிடையில் ஐந்து நாட்களுக்கு உரிய நடைதூரம் இருந்தது. திப்யான் குடும்பத்தவர்கள் தீமா முதல் ஹவ்ரான் நகரம் வரையிலும் கினானாவின் சந்ததியினர் ‘திஹாமா’ பகுதியிலும் வசித்தனர். மக்காவிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் குறைஷி குடும்பத்தவர்கள் வசித்தனர். அவர்கள் ஒற்றுமை இன்றி பலவாறாகப் பிரிந்து வாழ்ந்தனர். குஸய்ம் இப்னு கிலாப் அவர்களை ஒருங்கிணைத்து குறைஷியருக்கென தனிப்பெரும் சிறப்புகளையும் உயர்வுகளையும் பெற்றுத் தந்தார்.

### அரபு நாட்டில் ஆட்சி அதிகாரம்

நபி (ஸல்) அவர்கள் தங்களது ஏகத்துவ அழைப்பைத் தொடங்கிய காலகட்டத்தில் அரபிய தீபகற்பத்தில் ஆட்சி செய்தவர்கள் இரு வகையினராக இருந்தனர்.

1) முடிசூட்டப்பட்டவர்கள்: ஆனால் இவர்களில் பலர் தனித்து இயங்கும் சுதந்திரம் பெறவில்லை. மாறாக, ஒரு பேரரசுக்குக் கீழ் கட்டுப்பட்டு நடப்பவர்களாக இருந்தனர்.

2) குடும்பம் மற்றும் கோத்திரங்களின் தலைவர்கள்: முடிசூட்டப்பட்ட அரசர்களுக்குரிய தனித்தன்மையும் உரிமையும் இவர்களுக்கும் இருந்தன. இவர்களில் பெரும்பாலோர் முழு சுதந்திரத்துடன் செயல்பட்டனர். மற்றும் சிலர் ஏதாவது ஓர் அரசரின் பிரதிநிதியாக செயல்பட்டனர்.

முடியரசர்களின் விபரம் பின்வருமாறு: யமன் நாட்டு அரசர்கள், ஷாம் நாட்டு அரசர்கள், (இவர்களை கஸ்ஸானின் குடும்பத்தவர்கள் என வரலாற்றில் கூறப்படுகிறது) ஹீரா நாட்டு அரசர்கள். இவர்களைத்தவிர வேறு சில அரசர்களும் இருந்தனர். அவர்களுக்கு முறையாக முடிசூட்டப்படவில்லை. இந்த அரசர்கள் மற்றும் தலைவர்கள் பற்றி சுருக்கமாகக் காண்போம்.

அ) யமன் நாடு (ஏமன்)

'அல் அரபுல் ஆபா' எனும் அரபியர்கள் 'ஸபா கூட்டத்தினர்' என யமனில் புகழ் பெற்றிருந்த மிகப்பழமையானவர்கள். அவர்கள் கி.மு. 25 ஆம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்ததாக 'அவ்ர்' எனும் நகரில் நடத்திய அகழ்வாராய்ச்சியில் சான்றுகள் கிடைத்துள்ளன. கி.மு. 11 ஆம் நூற்றாண்டில் அவர்களது ஆட்சியும் ஆதிக்கமும் செழிப்படைய ஆரம்பித்தது.

அவர்களது காலத்தைப் பின்வருமாறு பிரிக்கலாம்:

1) கி.மு. 1300 லிருந்து கி.மு. 620 வரை

இக்காலகட்டத்தில் அவர்களது நாடு 'மயீனிய்யா' என அழைக்கப்பட்டது. நஜ்ரானுக்கும் ஹழர மவ்த்துக்குமிடையே உள்ள 'ஜவ்ஃப்' எனும் பகுதியில் அவர்களது ஆட்சி தோன்றி வளர்ச்சி பெற்று ஹிஜாஸின் வட பகுதியான 'மஆன்' மற்றும் 'உலா' வரை பரவியிருந்தது.

மயீனியா அரசாங்கத்தின் ஆதிக்கம் அரபிய நாடுகளின் எல்லைகளுக்கு வெளியேயும் விரிவடைந்திருந்ததாக கூறப்படுகிறது. வணிகமே அவர்களது முக்கிய வாழ்வாதாரமாகத் திகழ்ந்தது. அவர்கள்தான் மஃரப் நகரில் யமனுடைய வரலாற்றில் புகழ்பெற்ற மிகப்பெரும் அணைக்கட்டைக் கட்டினார்கள். அதனால் அவர்களது நிலங்கள் செழிப்படைந்தன. ஆயினும், அவர்கள் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தாமல் பாவங்கள் புரிந்தனர். இதைப்பற்றி அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்.

... அவர்கள் (அல்லாஹ்வை) நினைப்பதையே மறந்து (தாங்களாகவே பாவம் செய்து) அழிந்துபோகும் மக்களாகி விட்டார்கள். (அல்குர்ஆன் 25 : 18)

இக்காலக்கட்டத்தில் அவர்களது அரசர்கள் 'மக்பு ஸபஃ' எனும் புனைப்பெயரால் அழைக்கப்பட்டனர். அவர்களது தலைநகரம் ஸிர்வாஹ் ஆகும். மஃப் எனும் நகலிருந்து வட மேற்கில் 50 கிலோ மீட்டர் தொலைவிலும் ஸன்ஆவுக்குக் கிழக்கே 142 கிலோ மீட்டர் தொலைவிலும் அந்நகரத்தின் சிதிலங்கள் காணக்கிடைக்கின்றன. அந்நகரம் இன்று 'குரைபா' எனும் பெயரில் அறியப்படுகிறது. இவ்வரசர்களின் எண்ணிக்கை 22 லிருந்து 26 வரை இருந்தது.

2) கி.மு. 620லிருந்து கி.மு. 115 வரை

யமன் நாட்டு அரசாட்சி இக்காலக்கட்டத்தில் 'ஸபா' என அழைக்கப்பட்டது. இக்காலத்தில் ஆட்சி செய்தவர்கள் 'மக்ப்' என்ற தங்களது புனைப் பெயரைத் தவிர்த்து விட்டார்கள். அதன் ஆட்சியாளர்களை ஸபா மன்னர்கள் என அழைக்கப்பட்டது. 'ஸிர்வா' என்ற நகருக்கு பதிலாக 'மஃரப்' என்ற நகரை தங்களது தலைநகராக்கிக் கொண்டனர். மஃரப் நகரத்தின் சிதைந்த கட்டடங்கள் 'ஸன்ஆ' நகரின் கிழக்கே 192 கிலோ மீட்டர் தொலைவில் இன்றும் காணப்படுகின்றன.

3) கி.மு. 115லிருந்து கி.பி. 300 வரை

இக்காலக்கட்டத்தில் அந்நாடு 'முதலாம் ஹிம்யரிய்யா அரசு' என்ற பெயரில் அழைக்கப்பட்டது. ஏனெனில், ஹிம்யர் குலத்தவர் ஸபாவை வெற்றி கொண்டு தங்களது

ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தனர். முன்பு அந்நாட்டை ஆட்சி செய்தவர்கள் ‘ஸபா’ அரசர்கள் மற்றும் ‘தூரைதான்’ அரசர்களென அழைக்கப்பட்டனர். இம்மன்னர்கள் ‘மஃரப்‘‘க்கு பதிலாக ரைதான் என்பதை தங்களது தலைநகராக அமைத்துக் கொண்டனர். ரைதான் நகருக்கு ‘ளிஃபார்’ என்ற மற்றொரு பெயரும் உண்டு. அந்நகரின் சிதைவுகள் ‘யர்யம்‘‘க்கு சமீபமாக மதூர் எனும் மலையின் அருகாமையில் காணப்படுகின்றன. இக்காலத்தில்தான் ஸபா அரசுக்கு அழிவும் வீழ்ச்சியும் ஆரம்பமாயின. அவர்களின் வணிகங்களும் நசிந்தன.

அதற்குரிய காரணங்களாவன: 1) ‘நிப்த்’ இனத்தவர் ஹிஜாஸின் வடபகுதியில் தங்களது ஆதிக்கத்தை விரிவுபடுத்தினர். 2) ரோமர்கள் மிஸ்ர் (எகிப்து), ஷாம் (சிரியா) மற்றும் ஹிஜாஸின் வடபகுதியை ஒட்டியுள்ள நகரங்களில் தங்களது ஆதிக்கத்தை ஏற்படுத்தி யமன் நாட்டு அரசர்களின் வியாபாரத்திற்கான கடல்மார்க்கத்தையும் அடைத்து விட்டனர். 3) அவர்களது கோத்திரங்களுக்குள் சண்டை சச்சரவுகள் தோன்றின. ஆக, இம்மூன்று காரணங்களால் அவர்களது ஆட்சி வீழ்ச்சி கண்டது. மேலும், கஹ்தான் வமிசத்தவர்கள் யமன் நாட்டை துறந்து தூரமான நாடுகளில் குடிபெயர்ந்தனர்.

4) கி.பி. 300லிருந்து இஸ்லாம் நுழையும்வரை

இக்காலக்கட்டத்தில் அந்நாடு ‘இரண்டாம் ஹிம்யரிய்யா அரசு’ என அழைக்கப்பட்டது. அப்போது ஆட்சி செய்தவர்கள் ஸபஃ, தூரைதான், ஹழர மவ்த், யம்னுத் அரசர்கள் என அழைக்கப்பட்டனர். இக்காலத்தில் உள்நாட்டு குழப்பங்கள், குடும்பச் சண்டைகள், புரட்சிகள் தொடர்ச்சியாக நிகழ்ந்தன. அதன் காரணமாக அவர்களது அரசாட்சி முடிவுக்கு வந்தது. இக்காலத்தில் ரோமர்கள் ‘அத்ன்’ நகரைக் கைப்பற்றினர். ஹம்தான் மற்றும் ஹிம்யர் குலத்தவடையே இருந்த போட்டியைப் பயன்படுத்திக் கொண்டு ரோமர்களின் உதவியுடன் ஹபஷியர்கள் முதன் முதலாக கி.பி. 340ல் யமன் நாட்டை கைப்பற்றினர். இவர்களின் ஆட்சி கி.பி. 378 வரை நீடித்தது. அதற்குப்பின் அந்நாடு ஹபஷியர்களின் ஆதிக்கத்திலிருந்து சுதந்திரமடைந்தது. கி.பி. 450 அல்லது 451ல் மாபெரும் வெள்ளப் பிரளயம் ஏற்பட்டு அவர்களது நகரங்கள் பெருத்த சேதம் அடைந்ததால், நகரங்களைத் துறந்து பல இடங்களுக்குச் சென்று குடியேறினர். இவ்வெள்ளப் பிரளயத்தை ‘சைலுல் அரிம்’ என மேன்மைமிகு குர்ஆன் கூறுகிறது.

கி.பி. 523ம் ஆண்டில் யமன் நாட்டை ஆட்சி செய்த ‘தூ நுவாஸ்’ என்ற யூதக் கொடுங்கோலன் நஜ்ரான் வாழ் கிருஸ்துவர்கள் மீது கொடூரமான தாக்குதலைத் தொடுத்தான். அவர்களை பலவந்தமாக கிருஸ்துவ மதத்திலிருந்து மாற்றிட முனைந்தான். அவர்கள் மறுத்ததன் காரணமாக பெரும் அகழ்களைத் தோண்டி நெருப்புக் குண்டத்தை வளர்த்து, அதனுள் அவர்களை வீசி எறிந்தான். இது குறித்து அல்லாஹ் தனது அருள்மறையில் பின்வருமாறு குறிப்பிடுகிறான்:

விறகுகள் போட்டு எரிக்கும் நெருப்பு அகழ் தோண்டியவர்கள் அழிக்கப் பட்டார்கள்.... (அல்குர்ஆன் 85 : 4-7)

இச்சம்பவத்தால் கிறிஸ்துவர்கள் மிகவும் கொதிப்படைந்து பழிவாங்கத் துடித்தனர். எனவே, ரோமானிய அரசர்களின் தலைமைக்கு கீழ் ஒன்றிணைந்து யமன் நாட்டின் மீது போர் புரிய ஆயத்தமாயினர்.

ரோம் மன்னர்கள் ஹபஷியர்களைத் தூண்டிவிட்டு அவர்களுக்கென கப்பல் மற்றும் படகுகளைத் தயார்செய்து கொடுத்தார்கள். அதன் காரணமாக ‘அர்யாத்’ என்பவன் தலைமையில் ஹபஷாவிலிருந்து 70,000 வீரர்கள் யமன் வந்திறங்கி கி.பி 525ம் ஆண்டு அதனை இரண்டாவது முறையாக கைப்பற்றினர். அர்யாத் கி.பி 549 வரை ஹபஷா மன்னன் கவர்னராக இருந்தான். அர்யாத்தின் தளபதிகளில் ஒருவனான ‘அப்ரஹா இப்னு

ஸப்பாஹ் அல் அஷ்ரம்' என்பவன் அர்யாதை வஞ்சகமாகக் கொலை செய்துவிட்டு ஹபஷா மன்னன் ஒப்புதலுடன் தன்னை அரசனாக அறிவித்துக் கொண்டான். இந்த அப்ரஹாதான் இறையில்லமான கஅபாவை இடிக்க படையைத் திரட்டியவன். அவனும் அவனது யானைப் படையினரும் 'அஸ்ஹாபுல் ஃபீல்' என அறியப்படுகின்றனர். அந்நிகழ்ச்சிக்குப்பின் ஸன்ஆ திரும்பிய அவனை அல்லாஹ் அழித்தொழித்தான். அவனுக்குப் பிறகு அவனுடைய மகன் 'யக்ஸூம்' என்பவனும் அதற்குப் பிறகு இரண்டாவது மகன் 'மஸ்ரூக்' என்பவனும் யமனை ஆட்சி செய்தனர். இந்த இருவரும் தங்களது தந்தையைவிட குடிமக்களைக் கொடுமை செய்யும் மிகக் கொடிய கொடுங்கோலர்களாக இருந்தனர்.

யானை சம்பவத்திற்குப்பின் கி.பி. 575ல் யமனியர், மஅதீ கப ஸைஃப் இப்னு தூ யஜின் அல்ஹிம்யரின் தலைமையின் கீழ் பாரசீகர்களின் உதவியுடன் யமனை ஆக்கிரமித்திருந்த ஹபஷியர்களை எதிர்த்துப் போரிட்டு அவர்களை யமனிலிருந்து வெளியேற்றி, அதைத் தங்களது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தனர். அவரைத் தங்களது அரசராகவும் ஏற்றுக் கொண்டனர். 'மஅதீ கப' தனக்கு ஊழியம் செய்யவும் பயணங்களில் துணையாக இருப்பதற்காகவும் ஒரு ஹபஷிப் படையைத் தன்னுடன் வைத்திருந்தார். அவரை அவர்கள் திடீரெனத் தாக்கி வஞ்சகமாகக் கொன்று விட்டனர். அவரது மரணத்துடன் 'தூ யஜின்' குடும்ப ஆட்சி முடிவுக்கு வந்தது.

அதன்பிறகு பாரசீக மன்னர்களின் அதிகாரத்தின் கீழ் யமன் நாடு வந்தது. பாரசீக மன்னர்கள் ஒருவர் பின் ஒருவராகத் தொடர்ந்து ஆட்சி செய்தனர். அவர்களில் முதலாமவர் வஹ்ருஜ், பிறகு மிர்ஜ்பான் இப்னு வஹ்ருஜ், பிறகு அவரது மகன் தீன்ஜான், பிறகு குஸ்ரு இப்னு தீன்ஜான், பிறகு பாதான். இவரே பாரசீக மன்னர்களில் இறுதியானவர். இவர் கி.பி. 628ல் இஸ்லாமை ஏற்றார். இத்துடன் யமன் மீதான பாரசீகர்களின் ஆட்சி முடிவுக்கு வந்தது.

ஆ) ஹீரா நாடு

இராக்கையும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளையும் 'கூருஷுல் கபீர்' என்பவன் தலைமையின் கீழ் கி.மு. 557லிருந்து கி.மு. 529 வரை பாரசீகர்கள் ஆட்சி செய்தனர். அவர்களை எவராலும் வீழ்த்த முடியவில்லை. இறுதியாக, பாரசீகர்களின் அரசரான 'தாரா' என்பவரை 'இஸ்கந்தருல் மக்தூனி' என்பவர் கி.மு. 326ல் தோற்கடித்தார். மேலும் பாரசீகர்களின் ஆதிக்கத்தையும் வலிமையையும் முறியடித்து அவர்களது நகரங்களை சின்னா பின்னமாக்கினார். பிறகு தவாயிஃப் என்ற பெயருடைய அரசர்கள் அந்நாட்டை பல பகுதிகளாகப் பிரித்து கி.பி. 230 வரை ஆட்சி செய்தனர். இவர்களது ஆட்சி காலத்தில் கஹ்தான் கோத்திரத்தினர் இராக்கின் சில கிராம பகுதிகளைக் கைப்பற்றினர். அதைத் தொடர்ந்து அவர்களுக்குப் போட்டியாக அத்னான் கோத்திரத்தார்களும் ஃபுராத் நதிக்கரையின் சில பகுதிகளில் குடியேறினர்.

இவ்வாறு குடிபெயர்ந்தவர்களில் முதலாவது அரசராக இருந்தவர் கஹ்தான் வமிசத்தை சேர்ந்த 'மாலிக் இப்னு ஃபஹ்ம் அத்தனூகி' என்பவராவார். 'அன்பார்' அல்லது அதற்கு அருகிலுள்ள பகுதி அவரது ஆட்சியின் தலைமையகமாகத் திகழ்ந்தது. அவருக்குப் பிறகு அவரது சகோதரர் அம்ரு இப்னு ஃபஹ்ம் ஆட்சி செய்தார். சிலர் 'அப்ரஷ், வழ்ழாஹ்' என்று அழைக்கப்பட்ட 'ஜுதைமா இப்னு ஃபஹ்ம்' என்ற அவரது சகோதரர் ஆட்சி செய்தார் எனக் கூறுகின்றனர்.

கி.பி. 226–ஆம் ஆண்டு ஸாஸானியா அரசை உருவாக்கிய 'அர்துஷீர் இப்னு பாபக்' என்ற மன்னன் காலத்தில் இரண்டாவது முறையாக பாரசீகர்கள் இராக் நாட்டை கைப்பற்றினர். அம்மன்னர் பாரசீகர்களை ஒன்றிணைத்து நாட்டின் எல்லைப் புறங்களில் வாழ்ந்து வந்த

அரபியர்களை அடக்கி அவர்கள் மீது தனது ஆதிக்கத்தை நிலைநாட்டினார். ஹீரா நாட்டவர்களும் அன்பார் நகரத்தை சேர்ந்தவர்களும் அவருக்குக் கீழ்ப்படிந்தார்கள். ஆனால், குழாஆ கோத்திரத்தினர் தங்களது ஊர்களைத் துறந்து ஷாம் நாட்டுக்கு குடிபெயர்ந்தனர்.

அர்தஷீருடைய காலத்தில் ஹீரா மற்றும் இராக்கில் வாழ்ந்த கிராமத்தவர்கள் மற்றும் அரபிய தீபகற்பத்தில் வாழ்ந்த ரபீஆ, முழர் ஆகியோர் மீது 'ஜுதைமத்துல் வழ்ழாஹ்' என்பவர் ஆதிக்கம் செலுத்தினார். அதாவது அரபியர்கள் மீது நேரடியாக ஆட்சி செய்வதும் அவர்களின் தாக்குதல்களிலிருந்து தனது நாட்டைக் காப்பதும் அர்தஷீருக்கு மிகுந்த சிரமமாகத் தோன்றியது. ஆகவே, அரபியர்களிலேயே ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவரை அரசராக்கினால் அவர் தனக்கு உறுதுணையாகவும் உதவியாகவும் அமைவார் என எண்ணினார். மேலும், தன்னை அச்சுறுத்திக் கொண்டிருக்கும் ரோமர்களை எதிர்கொள்ள அந்த அரபிகளின் உதவியைப் பயன்படுத்திக் கொள்ள முடியுமெனவும் திட்டமிட்டார். அதுமட்டுமின்றி ரோமர்களுக்கு உதவி செய்துவரும் ஷாம் நாட்டு அரபியர்களை இராக்கின் அரபியர்களை கொண்டு தடுக்க நாடினார். ஆகவேதான் அரபியராகிய ஜுதைமாவை மேற்கூறிய பகுதிகளுக்கு அர்தஷீர் அரசராக்கினார். தனது ஆட்சியை எதிர்க்கும் அரபிய பழங்குடி மக்களை அடக்கி வைக்க ஜுதைமாவுக்கு பாரசீக ராணுவப்படை ஒன்றையும் அவர் வழங்கினார். ஜுதைமா கி.பி. 268-ஆம் ஆண்டு மரணமடைந்தார்.

ஜுதைமா மரணமான பின்பு, அதாவது மன்னர் 'கிஸ்ரா ஸாபூர் இப்னு அர்தஷீருடைய' ஆட்சிக் காலத்தில் அம்ரு இப்னு அதீ இப்னு நஸ்ர் அல்லக்மி கி.பி. 268 முதல் 288 வரை ஹீராவையும் அன்பாரையும் ஆட்சி செய்தார். லக்ம் கோத்திர அரசர்களிலும் ஹீராவைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவர்களிலும் இவரே முதன்மையானவர். இவரையடுத்து லக்ம் கோத்திர அரசர்கள் பலர் தொடர்ந்து ஹீராவை ஆண்டு வந்தனர். இறுதியாக (கி.பி. 448 முதல் 531 வரை) 'குபாத் இப்னு ஃபைரோஜ்' பாரசீக மன்னரானார். இவரது ஆட்சியின்போது 'மஜ்தக்' என்பவன் தோன்றி முறையற்ற பாலியல் உறவின் பக்கம் மக்களை அழைத்தான். மன்னர் குபாத் மற்றும் அவனது குடிமக்களில் அதிகமானவர்கள் அவனை பின்பற்றினர். பிறகு குபாத், ஹீராவின் மன்னரான முன்திர் இப்னு மாவுஸ் ஸமாவை (கி.பி. 512-554) இழிவான இவ்வழிமுறையை ஏற்குமாறு அழைத்தான். அவர் அதை முற்றிலுமாக மறுத்துவிட்டார். அதனால் அவரை நீக்கிவிட்டு அவருக்குப் பதிலாக மஜ்தக்கின் வழியை பின்பற்றிய 'ஹாஸ் இப்னு அம்ர் இப்னு ஹஜர் அல் கின்தீ' என்பவனை அரசனாக்கினான்.

குபாதுக்குப் பிறகு 'அனூஷேர்வான்' (கி.பி. 531-578) என்பவர் மன்னரானார். இவர் இந்த தவறான வழியை முற்றிலும் வெறுத்தார். மஜ்தக் மற்றும் அவனது வழியை பின்பற்றியவர்களைக் கொலை செய்தார். ஹாஸ் இப்னு அம்ரை நீக்கிவிட்டு மீண்டும் முன்திரை ஹீராவின் அரசராக்கினார். ஹாஸ் இப்னு அம்ரை கைது செய்ய முயன்றபோது அவன் 'கல்பு' கோத்திரத்தாரிடம் சென்று அடைக்கலமாகி மரணம் வரை அங்கேயே தங்கிவிட்டான். முன்திர் இப்னு மாவுஸ் ஸமாவுக்குப் பிறகும் அவரது குடும்பத்தாரிடமே ஆட்சி இருந்தது. அவரது மகன் நுஃமான் இப்னு முன்திர் கி.பி. 583 லிருந்து 605 வரை ஆட்சி செய்தார். அப்போது 'ஜைது இப்னு அதீ' என்பவன் கூறிய தவறான தகவலால் நுஃமான் மீது கோபமடைந்து அவரைத் தேடிவர கிஸ்ரா வீரர்களை அனுப்பி வைத்தார். நுஃமான் ரகசியமாக வெளியேறி ஷைபான் கோத்திரத்தின் தலைவரான ஹானி இப்னு மஸ்வூதிடம் அடைக்கலம் பெற்று அவரிடம் தனது குடும்பத்தினரையும் செல்வங்களையும் ஒப்படைத்துவிட்டு கிஸ்ராவிடம் திரும்பினார். கிஸ்ரா அவரை மரணமடையும் வரை சிறையில் அடைத்தார்.

அதன்பிறகு நுஃமானுக்குப் பதிலாக ‘இயாஸ் இப்னு கபீஸா அத்தாம்’ என்பவரை ஹீராவின் அரசராக்கினார். ஹானி இப்னு மஸ்வூதிடம் நுஃமான் கொடுத்து வைத்திருந்ததை மீட்டு வருமாறு, இயாஸுக்கு கிஸ்ரா உத்தரவிட்டார். கிஸ்ராவின் உத்தரவிற்கிணங்க இயாஸ் சிலரை ஹானியிடம் அனுப்பியபோது ஹானி, நுஃமானின் அமானிதத்தை தர முற்றிலும் மறுத்துவிட்டு கிஸ்ராவுடன் போரை பிரகடனப்படுத்தினார். அதைக் கண்ட இயாஸ் தன்னிடமிருந்த கிஸ்ராவின் படை பட்டாளங்களை அழைத்துக் கொண்டு ஹானியிடம் போர் புரிய பயணமானார். ‘தீ கார்’ என்னுமிடத்தில் இரு படைகளுக்குமிடையே மிகக் கடுமையான போர் நடந்தது. இறுதியில் ஷைபான் கோத்திரத்தினர் வெற்றிபெற்றனர். பாரசீகர்கள் படுதோல்வி அடைந்தனர். இதுவே அரபியர்கள் அரபியரல்லாதவர்கள் மீது கொண்ட முதல் வெற்றியாகும். இந்நிகழ்ச்சி நபி (ஸல்) அவர்கள் பிறந்த பிறகு நடைபெற்றது.

இப்போர் நடைபெற்ற காலம் குறித்து வரலாற்று ஆசிரியர்களுக்கிடையே மாறுபட்ட பல கருத்துகள் இருக்கின்றன.

1) நபி (ஸல்) அவர்கள் பிறந்த சிறிது காலத்திலேயே இப்போர் நடைபெற்றது ஹீராவிற்கு இயாஸ் இப்னு கபீஸா கவர்னராகப் பொறுப்பேற்ற எட்டாவது மாதத்தில் நபி (ஸல்) அவர்கள் பிறந்தார்கள் என்று சிலர் கூறுகின்றனர்.

2) நபி (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் கிடைப்பதற்குச் சிறிது காலத்திற்கு முன்னால் இப்போர் நிகழ்ந்தது என்று சிலர் கூறுகின்றனர். இதுவே ஏற்கத்தக்கது.

3) நபித்துவம் கிடைக்கப் பெற்றதற்கு சிறிது காலத்திற்கு பிறகு இப்போர் நிகழ்ந்தது என்று சிலர் கூறுகின்றனர்.

4) நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனா சென்றதற்கு பிறகு இப்போர் நிகழ்ந்தது என்றும் சிலர் கூறுகின்றனர்.

5) பத்ர் யுத்தத்திற்குப் பிறகு இப்போர் நடைபெற்றது என்றும் சிலர் கூறுகின்றனர். மற்றும் பல கருத்துக்களும் கூறப்படுகின்றன.

இயாஸுக்குப் பிறகு ‘ஆஜாதிபா இப்னு மாஹ்பியான் இப்னு மஹ்ரா பந்தாத்’ என்ற பாரசீகரை ஹீராவின் கவர்னராக கிஸ்ரா நியமித்தார். அவர் பதினேழு ஆண்டுகள் (கி.பி. 614-631) ஆட்சி செய்தார். பிறகு கி.பி. 632ல் ‘லக்ம்’ கோத்திரத்தார்களிடம் ஆட்சி திரும்பியது. அவர்களில் ‘மஃரூர்’ என்றழைக்கப்பட்ட முன்திர் இப்னு நுஃமான் என்பவர் ஆட்சி பொறுப்பேற்றார். எனினும், அவரது ஆட்சி எட்டு மாதங்களே நீடித்தது. காலித் இப்னு வலீத் (ரழி) முஸ்லிம்களின் படையுடன் சென்று அந்நாட்டை வெற்றி கொண்டார்கள்.

இ) ஷாம் நாடு (ஸிரியா)

அரபியர்கள் பல்வேறு பகுதிகளுக்கும் குடிபெயர்ந்து கொண்டிருந்த காலத்தில் குழாஆ கோத்திரத்தின் ‘பனூ ஸுலைஹ் இப்னு ஹுல்வான்’ குடும்பத்தினர் ஷாம் நாட்டின் ‘மஷாஃப்’ என்ற பகுதிகளில் குடியேறினர். ‘ழஜாம்மா’ எனப் பிரபலமடைந்த ‘ழஜ்அம் இப்னு ஸலீஹ்’ என்ற பிரிவினர் மேற்கூறப்பட்ட பனூ ஸுலைஹ் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர். பாலைவனங்களில் வழிப்பறி செய்து கொண்டிருந்த கிராமத்து அரபியர்களைத் தடுக்கவும், பாரசீகர்களை எதிர்க்கவும் ழஜாம்மாக்களை ரோமர்கள் பயன்படுத்தினர். அதற்காக அவர்களில் ஒருவருக்கு அரச பதவியும் வழங்கினர். பல ஆண்டுகள் இவர்களது குடும்ப ஆட்சி தொடர்ந்தது. இவர்களில் ‘ஜியாது இப்னு ஹபூலா’ என்பவர் புகழ்பெற்ற அரசராவார்.

ழஜாம்மாவினன் ஆட்சிக் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து அதன் இறுதிவரை நீடித்தது. அதற்கு பிறகு கஸ்ஸானியர், ழஜாம்மாவினர் மீது போர் தொடுத்து ஆட்சியைக் கைப்பற்றினர். இதைக் கண்ட ரோமர்கள் ஷாம் நாட்டு அரபியர்களுக்கு கஸ்ஸானியர்களை அரசர்களாக நியமித்தனர். இவர்களது தலைநகரமாக புஸ்ரா விளங்கியது. ஹிஜ்ரி 13ஆம் ஆண்டு யர்மூக் போர் நடைபெறும் வரை கஸ்ஸானியர்கள் ரோமர்களின் கவர்னர்களாகவே ஷாம் நாட்டில் ஆட்சி செய்தனர். அந்தக் கவர்னர்களில் இறுதியானவரான 'ஜபலா இப்னு அய்ஹம்' என்பவர் அமீருல் முஃமினீன் உமர் (ரழி) அவர்களின் காலத்தில் முஸ்லிம்களுக்கு அடிபணிந்தார். (இது குறித்த மேல் விவரங்களை தபரி, இப்னு கல்தூன், மஸ்ஊதி, இப்னு குதைபா, இப்னுல் அஸீர் ஆகிய நூல்களில் காணலாம்.)

ஈ) ஹி ஜாஸ் பகுதியில் அதிகாரம்

இஸ்மாயீல் (அலை) அவர்கள் தங்களின் வாழ்நாள் வரை மக்கா நகரின் தலைவராகவும் இறையில்லமான கஅபாவின் நிர்வாகியாகவும் இருந்தார்கள். அவர்கள் 137வது வயதில் மரணமடைந்தார்கள். (ஸிஃப்ருத் தக்வீன், தபரி)

இஸ்மாயீல் (அலை) அவர்கள் 130வது வயதில் மரணமானார்கள் என்ற ஒரு கூற்றும் கூறப்படுகிறது. (தப, யாகூபி)

இஸ்மாயீல் (அலை) அவர்களின் மரணத்திற்குப் பிறகு அவர்களுடைய பிள்ளைகளில் ஒருவர் மக்காவை நிர்வகித்தார் என்றும், சிலர் முதலாவதாக நாபித் பிறகு கைதார் என இருவரும் நிர்வகித்தனர் என்றும் கூறுகின்றனர். அவர்களுக்குப் பின் அவ்விருவரின் தாய்வழி பாட்டனாரான முழாழ் இப்னு அம்ர் ஜுர்ஹுமி தலைவரானார். இவ்வாறு இஸ்மாயீல் (அலை) அவர்களின் குடும்பத்தாரிடமிருந்து ஜுர்ஹும் கோத்திரத்துக்கு தலைமைத்துவம் மாறியது. ஆனால், இஸ்மாயீல் (அலை) அவர்கள் தங்களது தந்தையுடன் இறையாலயத்தை கட்டியவர்கள் என்ற அடிப்படையில் அவர்களின் பரம்பரையினருக்கு மக்கள் மத்தியில் மிகுந்த மதிப்பும் மரியாதையும் இருந்தது. எனினும் தலைமைத்துவம் மற்றும் அதிகாரத்தில் அவர்களுக்கு எவ்விதப் பங்கும் இருக்கவில்லை. (இப்னு ஹிஷாம்)

நாட்கள் நகர்ந்தன. காலங்கள் கடந்தன. இஸ்மாயீல் (அலை) அவர்களுடைய சந்ததிகளின் நிலைமைகளை எடுத்துக் கூறுமளவுக்கு பெரிதாக இல்லை. 'புக்த் நஸ்ர்' என்ற மன்னன் தோன்றுவதற்குச் சிறிது காலம் முன்பு ஜுர்ஹும் கோத்திரத்தினர் முற்றிலும் நலிந்துவிட்டனர். அக்காலத்தில் மக்காவில் அத்னான் வமிசத்தவன் அரசியல் ஆதிக்கம் வளரத் தொடங்கியது. புக்துநஸ்ருக்கும் அரபியர்களுக்குமிடையே 'தாத் இர்க்' என்ற இடத்தில் நடைபெற்ற போரில் அரபியப் படையின் தளபதியாக ஜுர்ஹும் கோத்திரத்தினர் இருக்கவில்லை. மாறாக, இப்படைக்கு அத்னான் தளபதியாக இருந்தார். (தப)

பிறகு புக்து நஸ்ர் கி.பி. 587ல் இரண்டாவது முறையாக போர் தொடுத்தபோது அத்னானியர்கள் யமன் நாட்டுக்குத் தப்பிச் சென்றனர். அச்சந்தர்ப்பத்தில் இஸ்ரவேலர்களின் நபியான 'யர்மியாஹ்' அவர்களின் தோழர் 'பர்கியா' என்பவர் அத்னானின் மகன் 'மஅத்''தை ஷாம் நாட்டிலுள்ள ஹர்ரான் நகருக்கு அழைத்துச் சென்றார். புக்து நஸ்ருடைய காலத்துக்குப் பின் மஅத் மக்கா திரும்பினார். அங்கு ஜுர்ஹும் கோத்திரத்தில் 'ஜவ்ஷம் இப்னு ஜுல்ஹுமா' என்பவர் மட்டுமே மீதமிருந்தார். அவரது மகளை மஅத் மணந்து கொண்டார். இருவருக்கும் நஜார் என்பவர் பிறந்தார். (தபரி, ஃபத்ஹுல் பாரி)

ஜுர்ஹும் கோத்திரத்தினரின் நிலைமை மக்காவில் மிக மோசமடைந்து, பொருளாதார நெருக்கடிக்கு ஆளாயினர். கஅபாவை தரிசிக்க வந்தவர்களை இம்சித்து கஅபாவின் செல்வங்களையும் சூறையாடினர். (தபரி)

இச்செயல் அத்னானியர்களுக்கு மிகுந்த வெறுப்பை உண்டாக்கியது. குஜாஆ கோத்திரத்தினர் மக்காவுக்கு அருகிலுள்ள 'மர்ருள் ளஹ்ரான்' என்ற இடத்தில் குடியேறியபோது ஜுர்ஹும் கோத்திரத்தினர் மீது அத்னானியர்கள் கொண்டிருந்த வெறுப்பை பயன்படுத்திக் கொண்டனர். அத்னானியர்களின் ஒரு பிரிவினரான 'பனூ பக்ரு இப்னு அப்து மனாஃப்' குடும்பத்தாரின் உதவியுடன் குஜாஆவினர் ஜுர்ஹும் கோத்திரத்தார் மீது போர் தொடுத்து, அவர்களை மக்காவிலிருந்து வெளியேற்றி, அதைத் தங்களது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தனர். கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் பாதிவரை அவர்களது ஆட்சியே மக்காவில் நீடித்தது.

ஜுர்ஹும் கூட்டத்தினர் மக்காவிலிருந்து வெளியேற்றப்பட்டபோது ஜம்ஜம் கிணற்றை அடையாளம் தெரியாத வகையில் பல பொருள்களைப் போட்டு நிரப்பி மறைத்து விட்டனர். வரலாற்றாசிரியரான இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்:

"அம்ர் இப்னு ஹாஸ் இப்னு முழாழ் ஜுர்ஹுமீ' என்பவர் கஅபாவிலிருந்த இரண்டு தங்க மான் சிலைகளையும், அஸ்வத் கல்லையும் ஜம்ஜம் கிணற்றினுள் போட்டு மூடிவிட்டார். அவரும் அவரைச் சேர்ந்த ஜுர்ஹும் கோத்திரத்தாரும் யமன் நாட்டுக்குச் சென்று குடியேறினர். மக்காவை விட்டுப் பிந்ததையும் அதன் அதிகாரம் கை நழுவிப் போனதையும் எண்ணி அவர்கள் மிகுந்த வருத்தம் அடைந்தனர்.

இது குறித்து அம்ர் இக்கவிதையை பாடினார்:

ஹஜூன், ஸஃபா இடையே நேசருமில்லை
மக்காவில் இராக்கதை பேசுபவரும் இல்லை
மாறாக, நாங்களே அங்கு வசித்து வந்தோம்
ஆனால் எங்களை காலங்களின் மாற்றங்களும்
ஆபத்து நிறைந்த விதிகளும் அழித்துவிட்டன. (இப்னு ஹிஷாம், தபரி)

நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் காலம் நபி ஈஸா (அலை) அவர்களது பிறப்புக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியதாகும். ஜுர்ஹும் கோத்திரத்தினர் ஏறக்குறைய இரண்டாயிரத்து நூறு ஆண்டுகள் மக்காவில் வசித்து அதனை ஏறக்குறைய இரண்டாயிரம் வருடங்கள் தங்களின் ஆதிக்கத்தில் வைத்திருந்தனர்.

குஜாஆவினர் மக்காவைக் கைப்பற்றிய பிறகு பக்ர் கோத்திரத்தாரை இணைத்துக் கொள்ளாமல் தனியாகவே தங்களது ஆட்சியை நிறுவிக் கொண்டனர். எனினும், பக்ர் கோத்திரத்தை சேர்ந்த முழர் குடும்பத்தாருக்கு மட்டும் மூன்று பொறுப்புகள் கிட்டின.

முதலாவது: ஹஜ்ஜுக்கு வருபவர்களை அரஃபாவிலிருந்து முஜ்தலிஃபாவுக்கு அழைத்து வருவது மற்றும் ஹஜ்ஜின் கடைசி தினமான 13வது நாளன்று மினாவிலிருந்து பயணமாவதற்கு அனுமதியளித்தல்.

இப்பொறுப்புகள் இல்யாஸ் இப்னு முழர் வமிசத்தில் அல் கவ்ஸ் இப்னு முர்ரா குடும்பத்தாருக்குக் கிட்டின. இவர்கள் 'ஸூஃபா' என அழைக்கப்பட்டனர். இவர்களது சிறப்பு என்னவெனில், ஸூஃபாவைச் சேர்ந்த ஒருவர் அகபாவில் கல் எறியாதவரை வேறு யாரும் எறியமாட்டார்கள். மக்கள் கல்லெறிந்து முடித்து மினாவிலிருந்து வெளியேறுவதாயிருந்தால் கணவாயின் இருபுறங்களையும் ஸூஃபாவினர் மூடிவிடுவார்கள். அவர்கள் முதலில் வெளியேறிச் சென்ற பிறகே மற்றவர்கள் வெளியேற அனுமதிக்கப்படுவார்கள். ஸூஃபாவினர் இறந்துவிட்ட பிறகு தமீம் கிளையைச் சேர்ந்த ஸஅது இப்னு ஜைது மனாத் குடும்பத்தினருக்கு இப்பொறுப்பு கிடைத்தது.

இரண்டாவது: துல்ஹஜ் பிறையின் 10ஆம் நாள் முஜ்தலிஃபாவிலிருந்து மினாவுக்கு மக்களை அழைத்துச் செல்லும் பொறுப்பு அத்வான் குடும்பத்தார்களிடம் இருந்தது.

மூன்றாவது: (போர் புரிய தடை செய்யப்பட்ட) புனித மாதங்களை சூழ்நிலைக்கேற்ப முன் பின்னாக மாற்றிக் கொள்ளும் அதிகாரம், ‘ஃபுகைம் இப்னு அதீ’ என்ற கினானா குடும்பத்தாரிடம் இருந்தது. (இப்னு ஹிஷாம்)

குஜாஆவினரின் ஆதிக்கம் மக்காவில் முன்னூறு ஆண்டுகள் இருந்தது. (யாகூத், ஃபத்ஹுல் பாரி)

இவர்களின் காலத்தில் அத்னான் வமிசத்தைச் சேர்ந்தவர்கள் நஜ்த், இராக், பஹ்ரைன் ஆகிய நாடுகளுக்குச் சென்று குடியேறினர். மக்காவில் குறைஷியைச் சேர்ந்த சில குடும்பத்தார்கள் மட்டும் ஆங்காங்கே பிரிந்து வாழ்ந்தனர். அவர்களுக்கு மக்கா மற்றும் புனித கஅபாவின் அதிகாரம் எதுவும் இருக்கவில்லை. இந்நிலையில் ‘குஸய் இப்னு கிலாப்’ என்பவர் குறைஷியர்களில் தோன்றினார். (இப்னு ஹிஷாம்)

**குஸய்யின் சுருக்கமான வரலாறு**

‘குஸய்யின்’ சிறு வயதிலேயே அவரது தந்தை மரணமாகிவிட்டார். அவரது தாயை உத்ரா குடும்பத்தைச் சேர்ந்த ‘ரபீஆ இப்னு ஹராம்’ என்பவர் மணமுடித்தார். அவர் தனது மனைவியையும் குஸய்யையும் ஷாம் நாட்டிலுள்ள தனது ஊருக்கு அழைத்து வந்தார். குஸய் வாலிபராகி மக்கா திரும்பினார். அந்நேரத்தில் மக்காவின் நிர்வாகியாக குஜாஆ கோத்திரத்தைச் சேர்ந்த ‘ஹுலைல் இப்னு ஹப்ஷிய்யா’ என்பவர் இருந்தார். ஹுலைலின் மகள் ‘ஹுப்பா’ என்பவரை குஸய் மணமுடித்தார். (இப்னு ஹிஷாம்)

சில நாட்களுக்குப் பிறகு ஹுலைல் காலமானார். அப்போது குஜாஆ மற்றும் குறைஷியருக்கிடையில் சண்டை மூண்டது. இதில் குஸய்யும் அவரைச் சேர்ந்தவர்களும் மக்காவின் அதிகாரத்தைக் கைப்பற்றினர்.

இச்சண்டை மூண்டதற்குரிய காரணங்களைப் பற்றி மூன்று கருத்துக்கள் கூறப்படுகின்றன.

1) குஸய் மக்காவில் நன்கு புகழ்பெற்றார். அவரது செல்வங்களும் குடும்பங்களும் பெருகின. தனது மாமனார் ஹுலைல் மரணமான பிறகு குஜாஆ மற்றும் பக்ர் கோத்திரத்தாரை விட தானே கஅபாவையும் மக்காவையும் நிர்வகிப்பதற்குத் தகுதியானவர் அதுமட்டுமின்றி, குறைஷியர்தான் இஸ்மாயீல் (அலை) அவர்களின் வழித்தோன்றல்களில் தலைமைத்துவம் மிக்கவர்கள் என எண்ணினார். ஆகவே, குஜாஆ மற்றும் பக்ர் கோத்திரத்தாரை மக்காவிலிருந்து வெளியேற்றுவதற்கு கினானா மற்றும் குறைஷி கோத்திரத்தாரிடம் குஸய்ம் பேச்சுவார்த்தை நடத்தினார். அவர்களும் அதை ஒப்புக்கொள்ளவே இவர்கள் அவர்கள் மீது போர் தொடுத்தனர்.

2) கஅபா மற்றும் மக்காவை நிர்வகிக்க வேண்டும் என குஸய்ம்க்கு ஹுலைல் தனது மரண நேரத்தில் கட்டளையிட்டார். ஆனால் அதற்கு குஜாஆவினர் ஒப்புக்கொள்ளவில்லை. எனவே இரு தரப்பினடையே போர் மூண்டது.

3) ஹுலைல் தனது மகள் ஹுப்பாவிற்கு கஅபாவை நிர்வகிக்கும் அதிகாரத்தை வழங்கினார். அவள் சார்பாக அப்பொறுப்பை நிறைவேற்றுவதற்கு குஜாஆ வமிசத்தைச் சேர்ந்த ‘அபூ குபுஷான்’ என்பவரை குஸய் நியமித்தார். அவர் ஹுப்பாவுக்கு பதிலாக கஅபாவை நிர்வகித்து வந்தார். அவர் சற்று புத்தி சுவாதீனமற்றவராக இருந்தார். ஹுலைல் மரணமடைந்த பிறகு குஸய் அபூ குபுஷானுக்கு சில ஒட்டகங்கள் அல்லது சில மதுப் பீப்பாய்கள் கொடுத்து கஅபாவின் அதிகாரத்தைக் கைப்பற்றினார். இதை குஜாஆவினர் ஒப்புக் கொள்ளவில்லை. குஸய் கஅபாவை நிர்வகிக்கக்கூடாது என தடுத்தனர். இதனால் குஸய் மக்காவிலிருந்து குஜாஆவினரை வெளியேற்றுவதற்காக குறைஷி மற்றும் கினானா கோத்திரத்தினரின் உதவியை நாடினார். அவர்களும் அதற்கிணங்கியதால் இரு தரப்பினருக்கிடையே போர் மூண்டது. (ஃபத்ஹுல் பாரி, மஸ்வூதி)

காரணங்கள் எதுவாக இருப்பினும் நிகழ்வுகள் பின்வருமாறு அமைந்தன:

ஹுலைல் மரணமடைந்த பிறகும் ஸூஃபாக்கள் தங்களின் மேற்கூறப்பட்ட பொறுப்புகளை நிறைவேற்றி வந்தனர். ஒருநாள் குறைஷி மற்றும் கினானா கோத்திரத்தினரை குஸய் தன்னுடன் அழைத்துக் கொண்டு 'ஸூஃபா''க்கள் கூடியிருந்த கணவாய்க்கு வந்து 'இந்த பொறுப்புக்கு உங்களைவிட நாங்களே அதிக உரிமையுள்ளவர்கள்" என்று கூறினார். இரு பிரிவினருக்கும் இடையில் வாய் சண்டை மூண்டு கைகலப்பு ஏற்பட்டது. இறுதியில் ஸூஃபாக்களை தோற்கடித்து குஸய் விரட்டிவிட்டார். இது குஜாஆ மற்றும் பக்ர் கோத்திரத்தாருக்கு பிடிக்காததால் குஸய்யிடமிருந்து விலகிச் சென்றார்கள். இதையறிந்த குஸய் அவர்களுக்கு எதிராகப் படையைத் திரட்டி அவர்கள் மீது போர் தொடுத்தார். இரு பிரிவினருக்குமிடையே மிகக் கடுமையான போர் மூண்டு இருதரப்பிலும் பெருத்த உயிர்ச் சேதம் ஏற்பட்டது. ஒரு வழியாக இரு தரப்பினரும் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள முன்வந்தனர். அவ்வுடன்படிக்கைக்கு பக்ர் கோத்திரத்தைச் சேர்ந்த 'யஃமுர் இப்னு அவ்ஃப்' என்பவரைத் தலைவராக்கினர்.

'மக்காவை ஆட்சி செய்யவும், கஅபாவை நிர்வகிக்கவும் குஜாஆ கோத்திரத்தாரைவிட குஸய்ம்க்கே அதிக தகுதி உண்டு குஸய்யினால் ஏற்பட்ட அனைத்து கொலைகளும் மன்னிக்கப்பட்டவை அவ்வாறே குஜாஆ மற்றும் பக்ர் கோத்திரத்தினரால் கொல்லப்பட்டவர்களுக்கு அவர்கள் நஷ்டஈடு வழங்க வேண்டும். கஅபாவின் நிர்வாகத்தை குஸய்யிடம் ஒப்படைக்க வேண்டும்" என்று யஃமூர் தீர்ப்பளித்தார். இந்தத் தீர்ப்பின் காரணமாக அவருக்கு 'ஷத்தாக் - அநீதத்தைத் தகர்த்தவர்' என்ற புனைப்பெயர் வந்தது. (இப்னு ஹிஷாம்)

ஆக, குஜாஆவினர் கஅபாவை நிர்வகித்த காலம் 300 ஆண்டுகளாகும். கி.பி. 5ஆம் நூற்றாண்டின் மத்தியில் அதாவது கி.பி. 440ல் குஸய் மக்காவையும் கஅபாவையும் தன் கட்டுப்பாட்டுக்குக் கீழ் கொண்டுவந்தார். (ஃபத்ஹுல் பாரி)

இதன் காரணமாக மக்கா நகரின் முழு தலைமைத்துவம் குஸய்ம்க்கும், அவருக்குப் பின்னர் குறைஷி கோத்திரத்தாருக்கும் கிடைத்தது. அரபிய தீர்பகற்பத்தின் பல பகுதிகளிலிருந்து அரபியர் தரிசிக்க வரும் கஅபாவின் மதத் தலைவராக குஸய் விளங்கினார்.

அதன்பிறகு பல்வேறு பகுதிகளில் வாழ்ந்து கொண்டிருந்த குறைஷி கோத்திரத்தாரை மக்காவுக்கு வரவழைத்து ஒவ்வொரு குறைஷி குடும்பத்துக்கும் இடங்களைப் பிரித்துக் கொடுத்து அவர்களது வாழ்க்கை வசதிகளைக் குஸய் மேம்படுத்திக் கொடுத்தார். அவ்வாறே ஆலு ஸஃப்வான், பனூ அத்வான், முர்ரா இப்னு அவ்ஃப் போன்றோருக்கு அவர்களிடம் இருந்த பொறுப்பை அவர்களுக்கே வழங்கினார். புனித மாதங்களை தங்களது வசதிக்கேற்ப முன்பின்னாக மாற்றியமைத்துக் கொள்ளும் வழக்கத்தை அவரும் பின்பற்றினார். ஏனெனில், இவ்வாறான சடங்குகள் அனைத்தும் மாற்றத்தகாத மார்க்க சடங்குகள் என அவர் நம்பியிருந்தார். (இப்னு ஹிஷாம்)

குறைஷியர்களுக்காக கஅபாவின் வடக்குப் பகுதியில் 'தாருந் நத்வா' எனும் ஒரு சங்கத்தை நிறுவியது குஸய் செய்த நற்செயல்களில் ஒன்றாகக் கருதப்பட்டது. அது குறைஷியர்கள் ஒன்று சேர்ந்து அவர்களின் பிரச்சனைகளை விவாதித்துத் தீர்வு காணுமிடமாகவும், அவர்களிடையே ஒருங்கிணைப்பை ஏற்படுத்தும் மன்றமாகவும் விளங்கியதால், அவர்களுக்கு மிகுந்த பயனுள்ளதாக இருந்தது. அதனுடைய வாசல் கஅபாவை நோக்கி அமைந்திருந்தது. (இப்னு ஹிஷாம், இக்பாருல் கிராம் பி அக்பால் மஸ்ஜிதில் ஹராம்)

**குஸய்யின் சாதனைகள்**

1) தாருந் நத்வாவின் தலைமை

குறைஷியர்கள் தங்களுக்கு நிகழும் முக்கியப் பிரச்சனைகள் குறித்து இங்கு தான் ஆலோசனை நடத்துவார்கள். மேலும், தங்களின் பெண் பிள்ளைகளுக்கு இதனைத் திருமண மண்டபமாக பயன்படுத்தினார்கள். இந்த தாருந் நத்வாவின் தலைவராக குஸய் விளங்கினார்.

2) கொடி

பிற சமுதாயத்துடன் போர் செய்வதாக இருந்தால் அதற்கான சிறிய அல்லது பெரியகொடி, குஸய் அல்லது அவரது பிள்ளைகளின் கரத்தில் கொடுக்கப்பட்டு தாருந் நத்வாவில் நடப்படும்.

3) வழிநடத்துதல்

மக்காவிலிருந்து வியாபாரம் அல்லது வேறு நோக்கங்களுக்காக வெளியில் செல்லும் பயணக் கூட்டங்களுக்கு குஸய் அல்லது அவரது பிள்ளைகளில் ஒருவர் தலைமை வகிப்பார்.

4) கஅபாவை நிர்வகித்தல்

கஅபாவின் வாயிலைத் திறப்பது, மூடுவது, பராமரிப்பது, வழிபாடுகள் நடத்துவது அனைத்தையும் குஸய் மேற்கொள்வார்.

5) ஹாஜிகளின் தாகம் தீர்த்தல்

தொட்டிகளில் நீரை நிரப்பி அதில் உலர்ந்த திராட்சை மற்றும் பேரீத்தம் பழங்களைப் போட்டு சுவையூட்டி அந்த மதுரமான நீரை மக்கா வருபவர்களுக்கு குஸய் குடிக்க வழங்குவார்.

6) ஹாஜிகளுக்கு விருந்தளித்தல்

குறைஷியர்களிடம் ஹஜ்ஜுடைய காலங்களில் வரி வசூலித்து அதன்மூலம் ஹாஜிகளுக்கு குஸய் விருந்தோம்பல் புரிவார். இவ்விருந்தில் வசதியற்ற ஹஜ் பயணிகள் கலந்துகொள்வார்கள். (இப்னு ஹிஷாம், யஃகூபி)

இவை அனைத்தும் குஸய்ம்க்கு அமைந்திருந்த சிறப்புகளாகும். அவரது பிள்ளைகளில் அப்துத்தார் என்பவர் மூத்தவராக இருந்தார். ஆனால், அவரை விட இளையவரான அப்து மனாஃப் மக்களிடையே மிகுந்த செல்வாக்கும் மரியாதையும் உடையவராகத் திகழ்ந்தார். இது அப்துத்தாருக்கு வெறுப்பை ஏற்படுத்தியது. இதனால் அப்துத்தாரை குஸய் அழைத்து 'மக்கள் உன்னைவிட உனது சகோதரனை எவ்வளவுதான் உயர்வாக்கினாலும் நான் உன்னையே அவர்களுக்குத் தலைவராக்குவேன்" என்று கூறி தன்னிடமுள்ள அனைத்து சிறப்புகளையும் பொறுப்புகளையும் அப்துத்தாருக்கே தரவேண்டுமென உயில் எழுதினார். குஸய்யின் எந்த முடிவுக்கும் மக்கள் மாறுசெய்ய மாட்டார்கள். அவர் வாழும்போதும், மரணத்துக்குப் பின்னும் அவரது கட்டளையைப் பின்பற்றுவதே மார்க்கம் என அனைவரும் கருதினர்.

அவரது மரணத்திற்குப் பின் அவரது பிள்ளைகள் தந்தை செய்த மரணநேர கட்டளைப்படி எவ்வித கருத்து வேறுபாடுமின்றி பொறுப்புகளை நிறைவேற்றினர். அப்து மனாஃபின் மரணத்திற்குப் பிறகு அவரது பிள்ளைகள் தங்களின் தந்தையின் சகோதரர் அப்துத்

தாருடைய பிள்ளைகளுடன் மேற்கூறப்பட்ட பொறுப்புகளை பெறுவதில் சச்சரவு செய்தனர். இதனால் குறைஷியர்கள் இரண்டாகப் பிரிந்து சண்டைக்கு ஆயத்தமாயினர். எனினும், போரைத் தவிர்த்து சமாதானம் செய்துகொள்ள அனைவரும் விரும்பி தங்களுக்குள் அந்த பொறுப்புகளைப் பிரித்துக் கொண்டனர். ஹாஜிகளுக்கு நீர் புகட்டுவது, அவர்களுக்கு விருந்தளிப்பது மற்றும் பயணம் செல்லும் குழுவினருக்கு தலைமை வகிப்பது என மூன்று பொறுப்புகள் அப்து மனாஃபின் மக்களுக்குக் கிட்டின. தாருந் நத்வாவிற்கு தலைமை வகிப்பது, கொடி பிடிப்பது மற்றும் கஅபாவை பராமரிப்பது ஆகிய பொறுப்புகள் அப்துத்தாருடைய மக்களுக்குக் கிடைத்தன.

தாருந் நத்வாவின் தலைமைத்துவம் மட்டும் இரு பிரிவினருக்கும் பொதுவாக இருந்தது என்றும் சிலர் கூறுகின்றனர்.

பிறகு அப்து மனாஃபுடைய மக்கள் சீட்டு குலுக்கிப் போட்டு தங்களுக்குக் கிடைத்த பொறுப்புகளை தங்கள் குடும்பங்களுக்குள் பகிர்ந்து கொண்டனர். அதன் அடிப்படையில் ஹாஜிகளுக்கு நீர் புகட்டுதல் மற்றும் அவர்களுக்கு விருந்தளிக்கும் பொறுப்புகள் ஹாஷிமுக்கு கிடைத்தன. வியாபாரக் குழுவினருக்குத் தலைமை வகிக்கும் பொறுப்பு அப்து ஷம்ஸூக்கு கிட்டியது. ஹாஷிம் தனது பொறுப்புகளை வாழ்நாள் முழுவதும் சிறப்பாக நிறைவேற்றினார். அவரது மரணத்திற்குப் பின் அவரது சகோதரர் முத்தலிப் இப்னு அப்து மனாஃப் பொறுப்பேற்றார். முத்தலிபின் மரணத்திற்குப் பிறகு ஹாஷிமுடைய மகன் அப்துல் முத்தலிப் பொறுப்பேற்றார். இந்த அப்துல் முத்தலிப் தான் நபி (ஸல்) அவர்களின் பாட்டனார் ஆவார். அப்துல் முத்தலிபின் மரணத்திற்குப் பிறகு அவரது பிள்ளைகள் பொறுப்புகளை நிறைவேற்றினர். இறுதியில் மக்கா, முஸ்லிம்களின் கட்டுப்பாட்டில் வந்தபோது அப்பாஸ் (ரழி) அவர்களுக்கு அப்பொறுப்புகள் கிட்டின.

சிலர், குஸய்தான் தனது பிள்ளைகளுக்கிடையில் பொறுப்புகளை பங்கிட்டுக் கொடுத்தார். அந்த அடிப்படையிலேயே அப்பொறுப்புகளை அவரது பிள்ளைகள் நிறைவேற்றி வந்தனர் என்று கூறுகின்றனர். உண்மை நிலையை அல்லாஹ்வே அறிந்தவன். (இப்னு ஹிஷாம்)

குறைஷிகள் தங்களிடையே பங்கிட்டுக் கொண்ட மேற்கூறப்பட்ட பொறுப்புகளுடன் வேறு சில பதவிகளையும் உருவாக்கி, அவற்றைத் தங்களுக்கிடையே பங்கிட்டு ஒரு சிறிய அரசாங்கத்தை நிறுவிக்கொண்டனர். அது இன்றைய ஜனநாயக அரசு, தேர்தல், பாராளுமன்றம் ஆகிய நடைமுறைகளுக்கு ஒத்திருந்தது. அவர்கள் வகித்த பதவிகள் பின்வருமாறு:

1) நற்குறி, துற்குறி (சாஸ்த்திரங்கள், சகுனங்கள்) பார்ப்பதும், அனுமதி பெறுவதும், சிலைகளுக்கு முன்னால் வைக்கப்பட்டிருக்கும் அம்புகளைக் கொண்டு குறி சொல்லும் அதிகாரமும் ஜுமஹ் குடும்பத்தாருக்கு இருந்தன.

2) சிலைகளுக்கு அளிக்கப்படும் காணிக்கைகள் மற்றும் நேர்ச்சைகளைப் பெற்று பாதுகாத்து பராமரித்தல் சண்டை, சச்சரவுகள் மிக்க வழக்குகளில் தீர்ப்பு சொல்வது ஆகிய இரு பொறுப்புகளும் ஸஹ்ம் குடும்பத்தாருக்கு இருந்தன.

3) அஸத் குடும்பத்தாருக்கு, ஆலோசனை கூறும் பொறுப்பு!

4) தைம் குடும்பத்தாருக்கு, அபராதம் மற்றும் தண்டப் பரிகாரம் வழங்கும் பொறுப்பு!

5) உமய்யா குடும்பத்தாருக்கு, சமுதாயக்கொடி ஏந்திச் செல்லும் பொறுப்பு!

6) மக்ஜூம் குடும்பத்தாருக்கு, ராணுவங்களையும் அதற்குத் தேவையான குதிரைகளையும் நிர்வகிக்கும் பொறுப்பு!

7) அதீ குடும்பத்தாருக்கு, தூது கொண்டு செல்லும் பொறுப்பு! (இப்னு ஹிஷாம்)

உ) ஏனைய அரபியர்களின் ஆட்சி அதிகாரம்

கஹ்தானியர், அத்னானியர் நாடு துறந்ததையும் அவர்கள் அரபு நாடுகளை தங்களுக்கிடையில் பிரித்துக் கொண்டதையும் முன்பு கண்டோம். இவர்களில் ஹீரா நாட்டுக்கு அருகிலிருந்தவர்கள் ஹீராவின் அரபிய மன்னருக்கு கட்டுப்பட்டு வாழ்ந்தனர். ஷாம் நாட்டில் வசித்தவர்கள் கஸ்ஸானிய அரசர்களுக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்தனர். எனினும், கட்டுப்பாடு என்பது வெறும் பெயரளவில்தான் இருந்தது. இவ்விரண்டைத் தவிர தீபகற்பத்தின் ஏனைய கிராமப் பகுதிகளில் வாழ்ந்தவர்கள் முழுச் சுதந்திரம் பெற்றவர்களாக எவருக்கும் கட்டுப்படாமல் வாழ்ந்து வந்தனர்.

இந்த இரண்டு கோத்திரத்தைச் சேர்ந்தவர்களும் தங்களுக்கெனத் தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். ஒவ்வொரு கோத்திரமும் ஒரு சிறிய அரசாங்கத்தைப் போன்று இருந்தது. குலவெறியும், தங்களது ஆதிக்கப் பகுதிகளை எதிரிகளிடமிருந்து பாதுகாப்பதும் இவர்களது அரசியல் அடிப்படை நோக்கமாக இருந்தது.

அரசர்களுக்கு இணையாக கோத்திரத் தலைவர்களுக்கு மதிப்பு இருந்தது. சண்டையிடுவதிலும், சமாதானம் செய்து கொள்வதிலும் மக்கள் தங்களது தலைவர்களின் முடிவை எவ்விதத் தயக்கமுமின்றி ஏற்று வந்தனர். தலைவர்களின் உத்தரவும் அதிகாரமும் பேரரசர்களின் உத்தரவுக்கும் அதிகாரத்துக்கும் ஒத்திருந்தது. அவர் ஏதேனும் ஒரு சமுதாயத்தினர் மீது கோபம் கொண்டால் எவ்வித கேள்வியுமின்றி ஆயிரக்கணக்கான வாள்கள் அந்த சமுதாயத்தினருக்கு எதிராக உயர்த்தப்படும். எனினும், அவர்கள் தலைமைக்காக தங்களது தந்தையுடைய சகோதரர்களின் (தந்தையின் உடன்பிறந்தார்) பிள்ளைகளிடமே போட்டியிட்டுக் கொண்டனர். இதன் விளைவாக மக்களிடையே புகழ்பெறும் நோக்கில் செலவிடுதல், விருந்தினரை உபசரித்தல், தர்ம சிந்தனையுடனும் விவேகத்துடனும் நடந்துகொள்ளுதல், எதிரிகளிடம் வீரத்தையும் வலிமையையும் வெளிப்படுத்துதல் போன்றவைக்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்து வந்தனர். அவ்வாறே அக்காலத்தில் சமூகங்களின் பிரதிநிதிகளாகத் திகழ்ந்த கவிஞர்களிடம் புகழைப் பெற்று போட்டியாளர்களிடையே தங்களது மதிப்பை உயர்த்திக்கொள்ள பெரிதும் முயன்றனர்.

தலைவர்களுக்கென சில சிறப்பு உரிமைகள் இருந்தன. அவர்கள் மிர்பாஃ, ஸஃபிய், நஷீத்தா, ஃபுழூல் என்ற பெயர்களில் மக்களது செல்வங்களை அனுபவித்து வந்தனர்.

இதுகுறித்து ஒரு கவிஞர் கூறுகிறார்:

'எமது வெற்றிப் பொருளில் கால் பங்கும், நீ விரும்பி எடுத்துக் கொண்டதும், வழியில் கிடைத்த பொருளும், பங்கிட முடியாத மிஞ்சிய பொருளும் உனக்கே சொந்தமானது. எங்களில் உனது அதிகாரமே செல்லுபடியானது."

மிர்பாஃ: இது போரில் கிடைக்கும் வெற்றிப் பொருளில் நான்கில் ஒரு பகுதி.

ஸஃபிய்: வெற்றிப் பொருளை (கனீமத்) பங்கீடு செய்வதற்கு முன், தலைவர்கள் தங்களுக்கு விருப்பமானதை எடுத்துக் கொள்வது.

நஷீத்தா: இது போருக்குச் செல்லும் வழியில் தலைவருக்குக் கிடைக்கும் பொருள்கள்.

ஃபுழூல்: இது வெற்றிப் பொருளில் பங்கீடு செய்ய இயலாத வகையில் மீதமாகும் பொருள்கள். ஒட்டகைகள், குதிரைகள் போன்று!

### அரசியல் பின்னணி

அரபிய அரசர்களைப் பற்றி அலசிய நாம் அவர்களது அரசியல் பின்னணிகளைப் பற்றியும் அலசுவது அவசியம்! அரபிய தீபகற்பத்தில் அந்நிய நாடுகளுடன் ஒட்டியிருந்த மூன்று எல்லை பகுதிகளிலும் அரசியல் நிலைமை மிகவும் தலைகீழாக இருந்தது. அம்மக்களில் சிலர் அடிமைகளாகவும், சிலர் சுதந்திரமானவர்களாகவும் இருந்தார்கள். தலைவர்களாக இருந்த அந்நியர்கள் செல்வங்கள் அனைத்திற்கும் உரிமை கொண்டாடினர். சுமைகள் அனைத்தையும் குடிமக்கள் மீது சுமத்தினர். சுருங்கக் கூறின் குடிமக்கள் தங்களது அரசாங்கத்திற்கு விவசாய நிலங்களைப் போன்றிருந்தனர். அரசாங்கத்திற்கு பணி செய்வதும் பயனளிப்பதுமே அவர்களது கடமையாக இருந்தது. அரசர்கள் தங்களது ஆசாபாசம், பாவம், அநீதம் போன்ற தீய செயல்களுக்கு மக்களைப் பயன்படுத்தினர். குடிமக்களுக்கு நாலாதிசைகளில் இருந்தும் அநீதி இழைக்கப்பட்டது. அவர்கள் தங்களது அறியாமையால் செய்வதறியாது நிலைதடுமாறி நின்றனர். எவரிடமும் முறையிடுவதற்குக் கூட வலிமையற்று தங்கள் மீது இழைக்கப்படும் அநீதங்களை சகிக்க வேண்டிய கட்டாயத்தில் இருந்தனர். அக்கால அரசாங்கம் ஒரு சர்வாதிகாரமாகவே இருந்தது. மக்களின் உரிமைகள் அனைத்தும் புறக்கணிக்கப்பட்டன் பாழாக்கப்பட்டன.

இந்தப் பகுதிகளுக்கு அருகில் வாழ்ந்த மக்களும் தடுமாற்றத்தில் இருந்தனர். அவர்கள் சில சமயம் இராக் வாசிகளுடனும், சில சமயம் ஷாம் வாசிகளுடனும் சேர்ந்து கொள்வார்கள்.

அரபிய தீபகற்பத்தின் உட்பகுதியில் வசித்துக் கொண்டிருந்த கோத்திரத்தாரும் ஒற்றுமையின்றி பிரிந்து வாழ்ந்து வந்தனர். அவர்களிடையே சமய மற்றும் இன ரீதியான மோதல்களும், சச்சரவுகளும் மிகைத்திருந்தன. அதைப் பற்றி அவர்களில் ஒரு கவிஞர் கூறுகிறார்:

'நான் கூட கஜிய்யா குலத்தவனே! கஜிய்யா வழிகெட்டால்...

நானும் வழிகெடுவேன். அவர்கள் நேர்வழி நடப்பின் நானும் நேர்வழி நடப்பேன்."

அவர்களை வழி நடத்துவதற்கோ, சிரமமான காலங்களில் ஆலோசனை கூறி உதவி செய்வதற்கோ அவர்களுக்கென ஆட்சியாளர் யாரும் இருக்கவில்லை.

அதே நேரத்தில் ஹி ஜாஸ் பகுதியின் ஆட்சியாளர்களை மக்கள் மிகுந்த கண்ணியத்துடன் நோக்கினர். அவர்களையே தங்களது சமய மற்றும் சமூக வழிகாட்டிகளாகக் கருதினர். உண்மையில் ஹி ஜாஸ் பகுதி அரசாங்கம் அக்காலத்தில் சமய மற்றும் சமூக வழிகாட்டியாக இருந்தது. அந்த ஆட்சியாளர்கள் ஏனைய அரபியர்களை சமயத்தின் பெயரால் ஆண்டு வந்தனர். இறையில்லம் கஅபாவையும், அங்கு வருபவர்களின் தேவைகளையும் அவர்களே நிர்வகித்து வந்ததால் அப்பகுதி அனைத்திலும் தங்களது ஆதிக்கத்தை செலுத்தி வந்தனர். நபி இப்றாஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தை அமல்படுத்தி வந்தனர். இன்றைய காலத்தைப் போன்று தங்களது ஆட்சியாளர்களை தாங்களாகவே தேர்ந்தெடுக்கும் வழமையை அவர்கள் கொண்டிருந்தனர். எனினும் பிரச்சனைகளை சமாளிக்க முடியாத அளவு பலவீனமானதாகவே அவர்களது அட்சி இருந்தது. ஹபஷிகள் தொடுத்த போரில் இவர்கள் பலவீனமானதிலிருந்து இதை தெரிந்து கொள்ளலாம்.

### அரபியர்களின் சமய நெறிகள்

நபி இப்றாஹீம் (அலை) அவர்களின் சந்ததியினர் மக்காவில் குடியேறி அரபிய தீபகற்பம் முழுவதிலும் பரவிய காலம்தொட்டு அரபியர்களில் பெரும்பாலோர் இப்றாஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தையே பின்பற்றி வாழ்ந்தனர். அல்லாஹ்வை மட்டுமே வணங்கி

அவனால் அங்கீகக்கப்பட்ட மார்க்கத்தை முழுமையாகக் கடைபிடித்து வந்தனர். காலங்கள் செல்லச் செல்ல அல்லாஹ்வின் வழிகாட்டல்களையும் போதனைகளையும் சிறிது சிறிதாக மறக்க ஆரம்பித்தனர். எனினும், அவர்களிடையே ஓரிறைக் கொள்கையும் மார்க்கத்தின் உயர்ந்த நெறிகளும் ஓரளவு நிலைத்திருந்தன. குஜாஆ கோத்திரத்தின் தலைவனான அம்ரு இப்னு லுஹய் சமய சம்பந்தப்பட்ட செயல்களில் மிகுந்த ஆர்வம் கொண்டவனாக இருந்தான். மக்களுக்கிடையில் நற்செயல்களை பரப்பி, தான தர்மங்கள் செய்து வந்தான். எனவே, மக்கள் பெரிதும் மதித்து அவனை ஓர் இறைநேசராகக் கருதினர்.

அவன் ஒருமுறை ஷாம் நாட்டுக்குச் சென்றான். அங்கு மக்கள் சிலைகளை வணங்கிக் கொண்டிருந்தனர். அவர்களின் இந்த சிலை வணக்க வழிபாடு அவனைப் பெரிதும் கவர்ந்தது. ஷாம் நாடு, நபிமார்கள் மற்றும் வேதங்கள் அருளப்பட்ட பகுதியாக இருந்ததால் அந்தச் சிலை வணக்கமும் உண்மையான ஒன்றாகத்தான் இருக்கும் என அவன் எண்ணினான். எனவே, அவன் மக்கா திரும்பியபோது ‘ஹுபுல்’ என்ற சிலையைக் கொண்டு வந்து கஅபாவின் நடுவில் அதை வைத்து விட்டான். அந்தச் சிலையைக் கடவுளாக ஏற்று அல்லாஹ்வுக்கு இணைவைக்குமாறு மக்காவாசிகளுக்கு அழைப்பு விடுத்தான். அவர்களும் அதை ஏற்று அல்லாஹ்வுக்கு இணை வைத்தனர். மக்காவாசிகள் இறை இல்லம் கஅபாவை நிர்வகிப்பவர்களாகவும், புனித நகரமான மக்காவில் வசிப்பவர்களாக இருப்பதாலும் அவர்களையே தங்களது முன்னோடிகளாக எடுத்துக் கொண்டு ஹி ஜாஸ் பகுதியின் ஏனைய மக்களும் சிலை வழிபாட்டில் அவர்களைப் பின்பற்றினர்.

‘ஹுபுல்’ என்பது செந்நிறக் கல்லில் மனித உருவாகச் செதுக்கப்பட்ட ஒரு சிலை! அதன் வலது கரம் உடைந்திருந்தது. அதற்கு குறைஷிகள் தங்கத்தினால் கை செய்து அணிவித்தனர். இதுதான் மக்கா இணைவைப்பாளர்களின் முதல் சிலையாகும். இதை மிகுந்த மகத்துவமிக்கதாகவும் புனிதமிக்கதாகவும் குறைஷிகள் கருதினர். (கிதாபுல் அஸ்னாம்)

ஹுபுல் மட்டுமின்றி, மனாத் என்பதும் அவர்களின் பழங்கால சிலைகளில் ஒன்றாகும். அது செங்கடலின் ஓரத்தில் அமைந்துள்ள ‘குதைத்’ என்ற நகரின் அருகாமையிலுள்ள ‘முஷல்லல்’ என்ற இடத்தில் அமைக்கப்பட்டிருந்தது. (முஷல்லல் என்பது ஒரு மலைமேடு அதன் அடிவாரத்தில் குதைத் உள்ளது - ஸஹீஹுல் புகாரி) இதை ஹுதைல் மற்றும் குஜாஆ கோத்திரத்தினர் வணங்கி வந்தனர்.

தாயிஃப் நகரத்தில் ‘லாத்’ எனும் சிலையை ஸகீஃப் கோத்திரத்தினர் வணங்கி வந்தனர். (கிதாபுல் அஸ்னாம்)

‘தாத்த இர்க்’ என்ற நகரின் ‘நக்லா ஷாமிய்யா’ என்ற பள்ளத்தாக்கில் ‘உஜ்ஜா’ என்ற சிலை இருந்தது. இதை குறைஷி, கினானா மற்றும் பல கோத்திரத்தினர் வணங்கி வந்தனர். (கிதாபுல் அஸ்னாம்)

இம்மூன்று சிலைகளும் அரபியர்களிடம் மிகப் பெரிய மதிப்புமிக்க சிலைகளாக இருந்தன. இதுமட்டுமின்றி அவர்களிடையே ஷிர்க் (இணைவைத்தல்) அதிகரிக்க அதிகரிக்க ஒவ்வொரு ஊரிலும் சிலைகளின் எண்ணிக்கையும் அதிகத்தன.

அம்ரு இப்னு லுஹய்ம்க்கு தகவல் கொடுக்கும் ஒரு ஜின் இருந்தது. அது அவனிடம் நபி நூஹ் (அலை) அவர்களின் காலத்து சிலைகளான வத், ஸுவாஃ, யகூஸ், நஸ்ர் போன்றவை ஜித்தா நகரத்தில் புதைந்திருக்கின்றன என்று கூறியது. அவன் ஜித்தா வந்து அந்த சிலைகளைத் தோண்டியெடுத்து மக்காவிற்குக் கொண்டு வந்தான். ஹஜ்ஜுடைய காலத்தில் கஅபாவை தரிசிக்க வந்திருந்த பல்வேறு கோத்திரத்தினருக்குப் பிரித்துக் கொடுத்தான்.

அவர்கள் அவற்றை தங்களது பகுதிகளுக்கு எடுத்துச் சென்று வணங்க ஆரம்பித்தனர் என்று சிலர் கூறுகின்றனர்.

'வத்' சிலையை இராக் நாட்டுக்கு அருகிலுள்ள 'தவ்மதுல் ஜந்தல்' என்ற பகுதியிலுள்ள 'ஜர்ஷ்' என்ற இடத்தில் கல்பு கோத்திரத்தினர் வணங்கி வந்தனர்.

'ஸுவாஃ' சிலையை ஹிஜாஜ் பகுதியின் மக்கா நகரருகில் 'ருஹாத்' என்ற இடத்தில் ஹுதைல் இப்னு முத்கா என்ற கோத்திரத்தினர் வணங்கி வந்தனர்.

'யகூஸ்' சிலையை ஸபா பகுதியில் 'ஜுர்ஃப்' என்ற இடத்தில் முராது வமிசத்தின் கூதைஃப் என்ற கோத்திரத்தினர் வணங்கி வந்தனர்.

'யஊக்' சிலையை யமன் நாட்டில் 'கய்வான்' என்ற ஊரில் ஹம்தான் கோத்திரத்தினர் வணங்கி வந்தனர்.

'நஸ்ர்' சிலையை தில் கிலா கோத்திரத்தைச் சேர்ந்த ஹிம்யர் குடும்பத்தினர் தங்களது ஊரில் வைத்து வணங்கி வந்தனர். (ஸஹீஹுல் புகாரி, ஃபத்ஹுல் பாரி, கிதாபுல் அஸ்னாம்)

இந்த சிலைகளுக்கென பிரமாண்டமான ஆலயங்களை அமைத்தனர். இறையில்லமான கஅபாவை கண்ணியப்படுத்தியதைப் போன்று அந்த ஆலயங்களையும் கண்ணியப்படுத்தினர். அந்த ஆலயங்களுக்கு பூசாரிகளும் பணியாளர்களும் இருந்தனர். கஅபாவிற்குக் காணிக்கை அளித்ததைப் போன்று அந்த ஆலயங்களுக்கும் காணிக்கை செலுத்தி வந்தனர். அத்துடன் அனைத்தையும் விட கஅபாவே மிக உயர்வானது என்பதையும் ஒப்புக்கொள்ளவே செய்தனர். (இப்னு ஹிஷாம்)

இன்னும் பல கோத்திரத்தாரும் இதே வழியைப் பின்பற்றி சிலைகளைக் கடவுள்களாக ஏற்று அவற்றுக்கென ஆலயங்களை உருவாக்கினார்கள். அவற்றில் 'துல் கலஸா' என்ற சிலையை தவ்ஸ், கஷ்அம் மற்றும் புஜைலா கோத்திரத்தார் யமன் நாட்டில் உள்ள 'தபாலா' என்ற ஊரில் வணங்கி வந்தனர்.

'ஃபில்ஸ்' என்ற சிலையை 'தய்' கோத்திரத்தாரும் அவர்களை ஒட்டி ஸல்மா, அஜா என்ற இரு மலைகளுக்கிடையில் வசித்து வந்தவர்களும் வணங்கி வந்தனர். இதைத் தவிர்த்து அவர்களுக்கு மேலும் பல கோயில்கள் இருந்தன. யமன் மற்றும் ஹிம்யர்வாசிகள் 'ரியாம்' என்ற கோயிலையும் ரபிஆ கோத்திரத்தினர் 'ரழா' என்ற ஒரு கோயிலையும் வைத்திருந்தனர். மேலும் பக்ர், தக்லிப் கோத்திரத்தார் தங்களுக்கென சிறு கோயில்களையும் 'ஸன்தாத்' என்ற நகரில் இயாத் வமிசத்தவர்கள் தங்களுக்கென சிறு கோயில்களையும் ஏற்படுத்தியிருந்தனர். (இப்னு ஹிஷாம்)

மேலும் தவ்ஸ் கோத்திரத்தாருக்கு 'துல் கஃப்ஃபைன்' என்ற சிலை இருந்தது. கினானாவின் மக்களான மாலிக், மலிகான் மற்றும் பக்ருக்கு 'ஸஃது' எனும் சிலையும், உத்ராவுக்கு 'ஷம்ஸ்' என்ற சிலையும் கவ்லானுக்கு 'உம்யானிஸ்' எனும் சிலையும் குலதெய்வங்களாக விளங்கின. (இப்னு யிஷாம்)

இவ்வாறு அரபிய தீபகற்பத்தின் பல பகுதிகளுக்கும் சிலை வணக்கக் கலாச்சாரம் பரவியது. முதலில் ஒவ்வொரு கோத்திரத்தாருக்கும் பிறகு ஒவ்வொரு வீட்டிற்குமென தனித்தனிச் சிலைகள் இருந்தன. சங்கைமிக்க கஅபாவையும் சிலைகளால் நிரப்பினர். நபி (ஸல்) அவர்கள் மக்காவை வெற்றி கொண்டபோது கஅபாவைச் சுற்றிலும் 360 சிலைகள் இருந்தன. நபி (ஸல்) அவர்கள் தங்களது கரத்திலிருந்த தடியால் அவைகளைக் குத்தி கீழே தள்ளினார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்களின் உத்தரவின்படி அவைகள் கஅபாவிலிருந்து வெளியேற்றப்பட்டு எரிக்கப்பட்டன. மேலும், கஅபாவின் உட்புறத்தில் சிலைகளும்

உருவப்படங்களும் இருந்தன. அவற்றில் நபி இப்றாஹீம் (அலை) மற்றும் நபி இஸ்மாயீல் (அலை) அவர்கள் தங்களது கரங்களில் அம்புகளைப் பற்றியவாறு இருப்பதுபோன்ற உருவப் படங்கள் அமைக்கப்பட்டிருந்தன. இவை அனைத்தும் புனித கஅபாவிலிருந்து நீக்கி அழிக்கப்பட்டன. (ஸஹீஹுல் புகாரி)

மக்கள் இதுபோன்ற வழிகேட்டில் நீடித்து வந்தார்கள். அதுபற்றி அபூ ரஜா உதாரீ (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: 'நாங்கள் கற்களை வணங்கி வந்தோம். நாங்கள் வணங்கும் கல்லைவிட அழகிய கல்லைக் கண்டால் கையிலிருப்பதை தூக்கி எறிந்துவிட்டு புதியதை எடுத்து வணங்குவோம். எங்களுக்கு வணங்குவதற்கான கல் கிடைக்கவில்லையெனில் மண்ணைக் குவியலாக்கி அதன்மேல் ஆட்டின் பாலைக்கறந்து அதை வலம் வருவோம்." (ஸஹீஹுல் புகாரி)

ஆக, இணை வைத்தலும், சிலை வணக்கமும் அந்த அறியாமைக் காலத்தில் மிக உயரிய நெறியாகப் பின்பற்றப்பட்டது. அத்துடன் அவர்கள் தாங்கள் நபி இப்றாஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தை முழுமையாக பின்பற்றி நடப்பதாகவும் எண்ணிக்கொண்டனர்.

அவர்களிடையே சிலைவணக்கம் மற்றும் இணைவைத்தல் உருவானதற்கான அடிப்படை என்னவெனில் அவர்கள் மலக்குகளையும், ரஸூல்மார்களையும், நபிமார்களையும், அல்லாஹ்வின் நல்லடியார்களையும், இறைநேசர்களையும் அல்லாஹ்வுக்கு மிக நெருங்கியவர்கள் அவனிடம் மிகுந்த அந்தஸ்தும் கௌரவமும் பெற்றவர்கள் எனக் கருதினர். அவர்களிடமிருந்து பல்வேறு அற்புதங்கள் வெளிப்பட்டதைக் கண்ட அம்மக்கள் தனக்கு மட்டுமே உரித்தான சில ஆற்றல்களை அல்லாஹ் அந்த சான்றோர்களுக்கும் அருளியுள்ளான் என்றும் நம்பினர். அச்சான்றோர்கள் இத்தகைய ஆற்றல்களாலும் தங்களுக்கு அல்லாஹ்விடமுள்ள கண்ணியத்தினாலும் அல்லாஹ்வுக்கும் அவனது அடியார்களுக்குமிடையே நடுவர்களாக இருக்கத் தகுதி பெற்றவர்கள் யாருக்கும் எதையும் அல்லாஹ்விடம் நேரடியாக கேட்டுப் பெறத் தகுதியில்லை இச்சான்றோர் மூலமாகவே அல்லாஹ்வை அணுக முடியும் அவர்களே அல்லாஹ்விடம் சிபாரிசு செய்வார்கள் அவர்களது அந்தஸ்தைக் கருத்திற்கொண்டு அல்லாஹ் அவர்களது சிபாரிசுகளைக் கண்டிப்பாக ஏற்றுக்கொள்வான் அவர்கள் மூலமாகவே அல்லாஹ்வை வணங்க வேண்டும் அவர்கள்தான் அல்லாஹ்விடம் அடியார்களை மிக நெருக்கமாக்கிவைக்கும் ஆற்றல் பெற்றவர்கள் என்றும் எண்ணினார்கள்.

இந்த எண்ணம் நாளடைவில் உறுதியான நம்பிக்கையாக வலுப்பெற்றது. அவர்களைத் தங்களது பாதுகாவலர்களாகக் கருதி அல்லாஹ்வுக்கும் தங்களுக்குமிடையே நடுவர்களாக்கிக் கொண்டனர். அவர்களது நேசத்தைப் பெற்றுத் தரும் வழிமுறைகளென தாங்கள் கருதிய அனைத்தையும் கொண்டு அவர்களிடம் நெருக்கத்தை ஏற்படுத்திக்கொள்ள முயற்சித்தனர். அச்சான்றோர்களுக்காக அவர்களின் உருவப்படங்களையும் சிலைகளையும் உருவாக்கினர். அவற்றுள் சில உண்மையாய் உருவப்படங்களாக இருந்தன. சில உருவப் படங்களை தங்களது கற்பனைக்கு ஏற்றவாறு வரைந்தனர். இந்த உருவப் படங்களுக்கும் சிலைகளுக்கும் அரபி மொழியில் 'அஸ்னாம்' என்று கூறப்படும்.

சிலர் சான்றோர்களுக்கென உருவப் படங்கள், சித்திரங்கள் எதையும் வரையாமல் அவர்களது அடக்கத்தலங்களையும் அவர்கள் வசித்த, ஓய்வெடுத்த, தங்கிய இடங்களையும் புனித ஸ்தலங்களாக ஏற்படுத்திக் கொண்டனர். அந்த ஸ்தலங்களுக்குக் காணிக்கைகளையும் நேர்ச்சைகளையும் சமர்ப்பித்தனர். மேலும், அவ்விடங்களில் பணிவுடனும் மரியாதையுடனும் நடந்து பல கிரியைகளைச் செய்தனர். இவ்வாறான இடங்களுக்கும் சமாதிகளுக்கும் அரபியில் 'அவ்ஸான்' என்று கூறப்படும்.

அவர்கள் அஸ்னாம் மற்றும் அவ்ஸான்களுக்குச் செய்து வந்த சடங்குகளில் பெரும்பாலானவற்றை அம்ரு இப்னு லுஹய்ம் தான் உருவாக்கித் தந்தான். அவன் உருவாக்கித் தந்த அனைத்தும் 'அழகிய அனுஷ்டானங்கள் (பித்அத் ஹஸனா)'' எனவும், அவை இப்றாஹீம் (அலை) அவர்களது மார்க்கத்திற்கு எவ்வகையிலும் முரணானதல்ல எனவும் அம்மக்கள் நம்பினர்.

அவர்கள் அவ்ஸான் மற்றும் அஸ்னாம் ஆகியவற்றை வணங்கிய முறைகளாவது:

1) அச்சிலைகளை வணங்கி வழிபாடுகள் செய்து அவற்றிடம் அபயம் தேடினர். தங்களது நெருக்கடியான காலக்கட்டத்தில் பாதுகாவலுக்காக அதனைப் பெயர் கூறி அழைத்தனர். அவை அல்லாஹ்விடம் சிபாரிசு செய்து தங்களது தேவைகளை நிறைவேற்றிக் கொடுக்கும் என்ற நம்பிக்கையில் இவ்வாறு வேண்டி வந்தனர்.

2) அவற்றை நாடி பயணித்தனர் வலம் சுற்றி வந்தனர் பணிவை காட்டி அவற்றின் முன் சிரம் பணிந்தனர்.

3) அவற்றுக்கு தங்களது நேர்ச்சைகளை நிறைவேற்றினர். அச்சிலைகளுக்கு முன் அமைக்கப்பட்ட பலி பீடங்களில் தங்களது பிராணிகளை அறுத்து பலி கொடுத்தனர். எங்கு பிராணிகளை அறுத்தாலும் அச்சிலைகளின் பெயர் கூறியே அறுத்தனர்.

அவர்களின் இந்த இருவகை உயிர்ப்பலிகளைப் பற்றி அல்லாஹ் குறிப்பிடுகிறான்:

... (பூஜை செய்வதற்காக) நியமிக்கப்பட்டவைகளில் அறுக்கப்பட்டவைகளும் உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளன. (அல்குர்ஆன் 5 : 3)

(நம்பிக்கையாளர்களே! அறுக்கும்போது) அல்லாஹ்வுடைய பெயர் கூறப்படாதவற்றை நீங்கள் புசிக்காதீர்கள். நிச்சயமாக அது பெரும் பாவமாகும். (அல்குர்ஆன் 6 : 121)

4) அவர்கள் அச்சிலைகளுக்கு செலுத்திய வணக்க வழிபாடுகளில் ஒன்று 'தங்களின் கற்பனைக்கு தகுந்தவாறு உணவு, குடிபானம் ஆகியவற்றில் சிலவற்றை அச்சிலைகளுக்காக ஒதுக்கி வைத்து விடுவார்கள். அவ்வாறே தங்களது வேளாண்மை மற்றும் கால்நடைகளில் சிலவற்றை அச்சிலைகளுக்காக ஒதுக்கி விடுவார்கள். இதில் ஒரு வேடிக்கை என்னவெனில், அல்லாஹ்வுக்காகவும் சிலவற்றை ஒதுக்குவார்கள். பிறகு பல காரணங்களைக் கூறி அவை அனைத்தையும் சிலைகளுக்கே கொடுத்து விடுவார்கள். ஆனால், சிலைகளுக்காக ஒதுக்கியவற்றில் எதையும் அல்லாஹ்வுக்கென்று எடுக்க மாட்டார்கள். இதைப் பற்றியே அல்லாஹ் பின்வரும் வசனத்தில் குறிப்பிடுகின்றான்:

விவசாயம், ஆடு, மாடு, ஒட்டகம் போன்ற அல்லாஹ் உற்பத்தி செய்பவற்றில் ஒரு பாகத்தை தங்கள் விருப்பப்படி குறிப்பிட்டு 'இது அல்லாஹ்வுக்கு என்றும் (மற்றொரு பாகத்தை) இது எங்களுடைய தெய்வங்களுக்கு'' என்றும் கூறுகின்றனர். அவர்கள் தங்கள் தெய்வங்களுக்கென குறிப்பிட்ட பாகத்தில் எதுவும் அல்லாஹ்வுக்குச் சேருவதில்லை. எனினும், அல்லாஹ்வுக்கென குறிப்பிட்டவை (நல்லவையாயிருந்தால்) அவர்களுடைய தெய்வங்களுக்கே சேர்ந்து விடுகின்றன! அவர்கள் செய்யும் இத்தீர்மானம் மிகக் கெட்டது. (அல்குர்ஆன் 6 : 136)

5) தங்களின் விவசாயங்கள் மற்றும் கால்நடைகளில் சிலவற்றை அந்த சிலைகளுக்காக நேர்ச்சை செய்தனர். இதைப் பற்றி பின்வரும் வசனத்தில் அல்லாஹ் குறிப்பிடுகின்றான்:

(அன்றி அவர்கள் தங்கள்) ஆடு, மாடு, ஒட்டகம் ஆகியவற்றிலும், விவசாயத்திலும் (சிலவற்றைக் குறிப்பிட்டு) 'இது தடுக்கப்பட்டிருக்கிறது. எங்கள் கொள்கைப்படி நாங்கள் விரும்புகிற (புரோகிதர்கள், குருமார்கள் ஆகிய) வர்களைத் தவிர (மற்றெவரும்) அதனைப்

புசிக்கக்கூடாது" என்று (தங்கள் மூடக் கொள்கையின்படி) அவர்கள் கூறுகின்றனர். தவிர, அவ்வாறே வேறு சில) ஆடு, மாடு, ஒட்டகங்களின் முதுகுகள் தடுக்கப்பட்டிருக்கின்றன. (அவற்றின் மீது ஏறுவதும், சுமையேற்றுவதும் கூடாது) என்றும், (வேறு) சில ஆடு, மாடு, ஒட்டகங்களை(க் குறிப்பிட்டு அவற்றை அறுக்கும்பொழுது) அவற்றின் மீது அல்லாஹ்வின் திருநாமத்தைக் கூறக்கூடாது என்றும் (அல்லாஹ் கட்டளை இட்டிருப்பதாக) அல்லாஹ்வின் மீது பொய்யாகக் கற்பனை செய்(து கூறு)கின்றனர். அவர்களுடைய இப்பொய்க் கூற்றுக்குத் தக்க கூலியை (அல்லாஹ்) பின்னர் அவர்களுக்குக் கொடுப்பான். (அல்குர்ஆன் 6 : 138)

6) பஹீரா, ஸாம்பா, வஸீலா, ஹாம் என்ற பெயர்களில் தங்களின் கால்நடைகளை சிலைகளுக்காக நேர்ச்சை செய்து விட்டனர்.

இவற்றைப் பற்றி ஸயீது இப்னுல் முஸய்யப் அவர்கள் கூறுகிறார்கள்:

பஹீரா: இவை சிலைகளுக்காக நேர்ச்சை செய்யப்பட்ட பிராணிகள். அதன் பாலை கறக்க மாட்டார்கள்.

ஸாம்பா: இவை சிலைகளுக்காக நேர்ச்சை செய்யப்பட்ட பிராணிகள். அதன் மேல் சுமைகளை ஏற்ற மாட்டார்கள்.

வஸீலா: தொடர்ந்து இரண்டு பெண் குட்டிகள் ஈன்ற ஒட்டகங்களைத் தங்களின் சிலைகளுக்காக நேர்ந்து விடுவார்கள். இந்த ஒட்டகங்கள் வஸீலா எனப்படும்.

ஹாம்: பத்து பெண் ஒட்டகைகளுடன் உறவுகொண்ட ஆண் ஒட்டகையை சிலைகளுக்காக நேர்ந்து விடுவார்கள். அதில் எவ்வித சுமையையும் ஏற்றமாட்டார்கள். இத்தகைய ஆண் ஒட்டகத்திற்கு ஹாம் எனப்படும். (ஸஹீஹுல் புகாரி)

மேற்கூறப்பட்ட கூற்றுக்கு சற்று மாற்றமாக இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: தொடர்ந்து பத்து பெண் குட்டிகளை ஈன்ற ஒட்டகத்தை சிலைகளுக்காக விட்டு விடுவார்கள். அதன் மீது எவ்விதச் சுமையையும் ஏற்றமாட்டார்கள். எவரும் அதை வாகனமாக்கி பயணிக்கவும் மாட்டார்கள். அதன் முடிகளை வெட்ட மாட்டார்கள். அதன் பாலை விருந்தினருக்கு மட்டுமே அளிப்பார்கள். இத்தகைய ஒட்டகத்திற்கு 'ஸாம்பா' என்று கூறப்படும். அதன் பிறகு இந்த ஸாம்பா ஒட்டகம் ஒரு பெண் குட்டியை ஈன்றால் அந்தக் குட்டியின் காதுகளை வெட்டிவிட்டு அதை அதன் தாயுடன் விட்டுவிடுவார்கள். அதன் மீதும் எவரும் பயணிக்க மாட்டார்கள். அதன் பாலை விருந்தினரைத் தவிர வேறு எவரும் அருந்தமாட்டார்கள். இந்தக் குட்டிக்கு 'பஹீரா' எனப்படும்.

வஸீலா: தொடர்ச்சியாக ஐந்து பிரசவங்களில் இரண்டிரண்டாக பத்து பெண் குட்டிகளை ஈன்ற ஆட்டுக்குச் சொல்லப்படும். அதன் பிறகு அந்த ஆடு ஈனும் குட்டி உயிருள்ளதாகப் பிறந்தால் அதனை ஆண்கள் மட்டும் புசிப்பார்கள். இறந்த நிலையில் பிறந்தால் ஆண், பெண் இருவரும் புசிப்பார்கள்.

ஹாம்: இது ஓர் ஆண் ஒட்டகையின் பெயராகும். அதன் உறவின் மூலம் இடையில் ஆண் குட்டிகளின்றி தொடர்படியாக பத்து பெண் குட்டிகள் ஈன்றிருந்தால் அந்த ஆண் ஒட்டகையின் மீது எவரும் சவாரி செய்ய மாட்டார்கள். அதன் முடிகளை வெட்ட மாட்டார்கள். அதை ஒட்டக மந்தையினுள் பெண் ஒட்டகைகளுடன் இணைவதற்காக அதை சுதந்திரமாக விட்டுவிடுவார்கள். இதைத் தவிர வேறு எதற்காகவும் அதனை பயன்படுத்தமாட்டார்கள்.

இதுபற்றி அல்லாஹ் பின்வரும் வசனத்தை இறக்கினான்:

பஹீரா. ஸாம்பா, வஸீலா, ஹாம் (போன்ற) இவையெல்லாம் அல்லாஹ் ஏற்படுத்தியவை அல்ல. எனினும், நிராகரிப்பவர்கள்தான் (இவைகள் அல்லாஹ் ஏற்படுத்தியவை என) அல்லாஹ்வின் மீது பொய்யான கற்பனை செய்(து கூறு)கின்றனர். அவர்களில் பலர் (உண்மையை) விளங்காதவர்களாகவே இருக்கின்றனர். (அல்குர்ஆன் 5 : 103)

அன்றி, அவர்கள் (வேறு சிலவற்றைக் குறிப்பிட்டு) 'இந்த ஆடு, மாடு, ஒட்டகங்களின் வயிற்றிலிருப்பவை எங்களுடைய ஆண்களுக்கு (மட்டும்) சொந்தமானவை. எங்களுடைய பெண்களுக்கு அவை தடுக்கப்பட்டு இருக்கின்றன. அவை செத்துப் பிறந்தால் அவற்றில் அவர்களுக்கும் பங்குண்டு'' (அப்போது பெண்களும் புசிக்கலாம்.) என்றும் கூறுகின்றனர். ஆகவே, அவர்களுடைய இக்கூற்றிற்குரிய தண்டனையை (அல்லாஹ்) அவர்களுக்குக் கொடுத்தே தீருவான். நிச்சயமாக அவன் மிக்க ஞானமுடையவனாகவும், (அனைவரையும்) நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 6 : 139)

இவையல்லாத வேறு பல விளக்கங்களும் இக்கால்நடைகளைப் பற்றி விவரிக்கப்படுகிறது. (இப்னு ஹிஷாம்)

இந்தக் கால்நடைகள் அனைத்தும் அவர்களின் தெய்வங்களுக்குரியது என்ற ஸயீது இப்னுல் முஸய்யப் அவர்களின் கருத்தை முன்னர் பார்த்தோம்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'நான் அம்ரு இப்னு ஆமிர் இப்னு லுஹய் அல் குஜாயியைப் பார்த்தேன். அவன் தனது குடலை நரக நெருப்பில் இழுத்துக் கொண்டிருக்கின்றான்.'' (ஸஹீஹுல் புகாரி)

ஏனெனில், நபி இப்றாஹீம் (அலை) அவர்களுடைய நேரான மார்க்கத்தை சீர்குலைத்த முதல் வழிகேடன் அவனே. அவன்தான் சிலைகளை நிறுவினான். ஸாயிபா, பஹீரா, வஸீலா, ஹாம் ஆகிய பெயர்களில் சிலைகளுக்குக் கால்நடைகளை நேர்ச்சை செய்யும் பழக்கங்களை உருவாக்கினான். (ஃபத்ஹுல் பாரி)

அரபியர்கள் செய்த இவ்வாறான செயல்கள் அனைத்துக்கும் காரணம் என்னவெனில், அச்சிலைகள் தங்களை அல்லாஹ்வின் பக்கம் நெருக்கிவைக்கும் அவனிடத்தில் தங்களை சேர்த்து வைக்கும் தங்களுக்காக அல்லாஹ்விடத்தில் சிபாரிசு செய்யும் என நம்பிக்கை கொண்டிருந்ததுதான்.

இதைப்பற்றியே அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:

எவர்கள் அல்லாஹ் அல்லாதவற்றை தங்களுக்குப் பாதுகாவலாக எடுத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்கள், 'அத்தெய்வங்கள் எங்களை அல்லாஹ்வுக்கு மிக்க சமீபமாக்கி வைக்கும் என்பதற்காகவேயன்றி நாம் இவற்றை வணங்கவில்லை'' (என்று கூறுகின்றனர்). (அல்குர்ஆன் 39 : 3)

(இணைவைப்பவர்கள்) தங்களுக்கு யாதொரு நன்மையும் தீமையும் செய்ய முடியாத அல்லாஹ் அல்லாதவற்றை வணங்குவதுடன் 'இவை அல்லாஹ் விடத்தில் எங்களுக்கு சிபாரிசு செய்பவை'' என்றும் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 10 : 18)

**மூடநம்பிக்கைகள்**

அரபியர் அம்புகள் மூலம் குறிபார்ப்பவர்களாக இருந்தனர். அந்த அம்புகள் மூன்று வகையாக இருக்கும்.

முதல் வகை: இதில் மூன்று அம்புகள் வைக்கப்பட்டிருக்கும். ஒன்றில் ‘ஆம்!’ எனவும் மற்றொன்றில் ‘வேண்டாம்’ எனவும் எழுதப்பட்டு, மூன்றாவதில் எதுவும் எழுதப்படாமல் இருக்கும். திருமணம், பயணம் போன்ற முக்கியமானவற்றில் முடிவெடுப்பதற்காக அவற்றில் ஒன்றை எடுப்பார்கள். அவற்றில் ‘ஆம்!’ என்று எழுதப்பட்ட அம்பு வந்தால் அச்செயலைச் செய்வார்கள். ‘வேண்டாம்’ என்று எழுதப்பட்ட அம்பு வந்தால் அச்செயலை அவ்வருடம் தள்ளிப்போட்டு அடுத்த வருடம் செய்வார்கள். எதுவும் எழுதப்படாத அம்பு வந்தால் முந்திய இரண்டில் ஒன்று வரும்வரை திரும்பத் திரும்ப எடுத்துக் கொண்டிருப்பார்கள்.

இரண்டாவது வகை: இந்த அம்புகளில் குற்றப் பரிகாரம் நஷ்டஈடு போன்ற விபரங்கள் எழுதப்பட்டிருக்கும்.

மூன்றாவது வகை: இந்த அம்புகளில் ‘மின்கும்’ (உங்களில் உள்ளவர்) என்று எழுதப்பட்ட ஓர் அம்பும் ‘மின்கைகும்’ (உங்களில் உள்ளவர் அல்லர்) என்று எழுதப்பட்ட ஓர் அம்பும், ‘முல்ஸக்’ (இணைக்கப்பட்டவர்) என்று எழுதப்பட்ட ஓர் அம்பும் என மூன்று அம்புகள் இருக்கும். அவர்களில் எவருக்கேனும் ஒருவரது வமிசம் பற்றி சந்தேகம் எழுந்தால் அவரை 100 திர்ஹம் 100 ஒட்டகைகளுடன் ‘ஹுபுல்’ என்ற சிலையிடம் அழைத்து வருவார்கள். தாங்கள் கொண்டு வந்த நாணயங்களையும் ஒட்டகங்களையும் அம்புகளுக்குப் பொறுப்பான பூசாரியிடம் கொடுத்து குறி கேட்பார்கள். பூசாரி அம்பை எடுப்பார். அப்போது ‘மின்கும்’ என எழுதப்பட்ட அம்பு வந்தால், அவரைத் தங்களது இனத்தைச் சேர்ந்தவராக ஒப்புக் கொள்வார்கள். ‘மின் கைகும்’ என்ற அம்பு வந்தால் அவரைத் தங்களுடன் நட்புகொண்ட கோத்திரத்தைச் சேர்ந்தவராகக் கருதுவார்கள். ‘முல்ஸக்’ என எழுதப்பட்ட அம்பு வந்தால் அவர் அதே நிலையில் நீடிப்பார். அதாவது அவருக்கு எந்த வமிசப் பரம்பரையும் கிடையாது. எந்த நட்பு கோத்திரத்தை சேர்ந்தவராகவும் அவரைக் கருத மாட்டார்கள். (இப்னு ஹிஷாம்)

இதுபோன்றே அம்புகள் மூலம் சூதாடும் ஒரு பழக்கமும் அவர்களது வழக்கத்தில் இருந்தது. அதாவது, அவர்கள் ஓர் ஒட்டகையை கடனாக வாங்கி வருவார்கள். பிறகு அதை அறுத்து 28 அல்லது 10 பங்குகளாகப் பிரிப்பார்கள். அவர்களிடம் இரண்டு அம்புகள் இருக்கும். ஒன்றில் ‘ராபிஹ்’ என்றும் இரண்டாவதில் ‘குஃப்ல்’ என்றும் அரபியில் எழுதப்பட்டிருக்கும். ஒவ்வொருவரின் பெயரையும் கூறி அம்புகளை உருவும்போது ‘ராபிஹ்’ என்ற அம்பு வந்தால் அவர் பணம் கொடுக்காமல் இறைச்சியில் அவருக்குரிய பங்கை மட்டும் எடுத்துக் கொள்வார். ‘குஃப்ல்’ என்ற அம்பு வந்தால் அவர் தோல்வியடைந்தவர் ஆவார். அவருக்கு இறைச்சியில் பங்கு எதுவும் கிடைக்காது. ஆனால், அந்த முழு ஒட்டகைக்கான விலையையும் அவரே கொடுக்க வேண்டும்.

மேலும் சோதிடன், குறிகாரன், நட்சத்திர ராசிபலன் கூறுபவன், காணாமல் போனதை கண்டுபிடித்துத் தருபவன் ஆகியோரின் பேச்சுகளிலும் ஆருடங்களிலும் அம்மக்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தனர்.

கான்: உலகில் நடக்க இருக்கும் செய்திகள் மற்றும் இரகசியங்கள் தனக்குத் தெரியும் என்று வாதிடுபவன். அவர்களில் தங்களுக்கு ஜின் செய்தி கொண்டு வருகிறது என்று கூறுபவரும் தனது அறிவாற்றலின் மூலம் மறைவானவற்றை அறிவோம் என்று கூறுபவரும் உள்ளனர்.

அர்ராஃப்: தன்னிடம் வருபவர்களின் சொல், செயல் நிலைகளை ஆராய்ந்து செய்திகளைக் கூறுபவன். எடுத்துக்காட்டாக திருடுபோன பொருள்கள் எங்கிருக்கிறது? திருடியவன் யார்? காணாமல் போன பொருள் எங்கிருக்கிறது? போன்ற விபரங்கள் அனைத்தையும் தன்னால் அறிந்து கொள்ளமுடியும் என்று கூறுபவனைப் போல!

முநஜ்ஜிம்: நட்சத்திரம் மற்றும் கோள்களின் சுழற்சியைக் கவனித்து உலகின் நிலைமைகளையும் வருங்காலத்தில் நடக்கவிருக்கும் நிகழ்வுகளையும் தன்னால் அறியமுடியும் எனக் கூறுபவன்.

இந்த முநஜ்ஜிம்களின் கூற்றை அவர்கள் நம்புவது உண்மையில் நட்சத்திரத்தை நம்புவதாகும். அவர்கள் நட்சத்திரங்களின் மீது நம்பிக்கை கொண்டிருந்ததின் காரணமாக, மழை பொழிந்தால் அம்மழை பருவ நட்சத்திரத்தின் காரணமாகவே பொழிந்தது என்று கூறுபவர்களாக இருந்தனர். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

அவர்களிடையே துற்குறி மற்றும் சகுனம் பார்க்கும் வழக்கம் நடைமுறையில் இருந்தது. அவர்களுடைய வழக்கத்தில் ஒன்று, ஏதாவதொரு காரியத்தை செய்ய நினைத்தால் ஒரு பறவையை அல்லது மானை விரட்டுவார்கள். அது வலப்புறமாகச் சென்றால் அதை நற்சகுனமாகக் கருதி தான் விரும்பியிருந்த காரியத்தை செயல்படுத்துவார்கள். இடப்புறமாகச் சென்றால் அதை அபசகுணமாகக் கருதி செயல்படுத்த மாட்டார்கள். இவ்வாறே அவர்கள் சென்று கொண்டிருக்கும் பாதையில் ஏதேனும் பிராணிகளோ, பறவைகளோ குறுக்கிட்டால் அதிலும் சகுனம் பார்ப்பார்கள்.

அவ்வாறே அவர்கள் முயலின் கெண்டைக்கால் பகுதியை தங்களது இல்லங்களில் தொங்க விடுவார்கள். (நம் நாட்டில் நரிப்பல், புலிப்பல் மயில் இறகு போன்றவற்றை பயன்படுத்துவதுபோல) சில நாள்கள், மாதங்கள், பிராணிகள், வீடுகள், பெண்கள் ஆகியவற்றிலும் அபசகுனம் பார்த்தனர். மேலும், தொற்று நோய் இருப்பதாகவும் நம்பினர். மேலும் ‘ஹாம்மா’ என்பதும் அவர்களது நம்பிக்கையாக இருந்தது. அதாவது, “ஒருவன் கொலை செய்யப்பட்டால் கொலையாளியிடம் பழி தீர்க்கப்படாதவரை அவனது ஆன்மா சாந்தியடையாமல் வீடுகளின் மேல் ஆந்தை உருவில் பறந்துகொண்டு “தாகம்! தாகம்! என் தாகத்தைத் தணியுங்கள்! என் தாகத்தைத் தணியுங்கள்” என கூச்சலிட்டுக் கொண்டிருக்கும். கொலையாளியை பழிவாங்கினால் மட்டுமே ஆன்மா சாந்தியடையும்” எனவும் நம்பிக்கை கொண்டிருந்தனர். (ஸஹீஹுல் புகாரி)

அறியாமைக்கால அரபியர்களிடம் இவ்வாறான மூட நம்பிக்கைகள் நிறைந்திருந்தபோதிலும் இப்றாஹீம் (அலை) அவர்களுடைய மார்க்கத்தின் சில நெறிமுறைகளும் அவர்களிடையே எஞ்சியிருந்தன. அந்த மார்க்கத்தை அவர்கள் முற்றிலுமாக புறக்கணித்து விடவில்லை. எடுத்துக்காட்டாக, இறையில்லமான கஅபாவை கண்ணியப்படுத்துதல், அதனை வலம் வருவது, ஹஜ், உம்ரா செய்வது, அரஃபா முஜ்தலிஃபாவில் தங்குவது, அல்லாஹ்வுக்காக அறுத்துப் பலியிடுதல் போன்ற நற்செயல்கள் அவர்களிடம் நிலைபெற்றிருந்தன. எனினும், அந்த நற்செயல்களில் பல மூட நம்பிக்கைகளையும் புகுத்தியிருந்தனர்.

அந்த மூடநம்பிக்கைகளில் சில,

1) குறைஷிகள் இவ்வாறு கூறி வந்தனர்: நாங்கள் நபி இப்றாஹீம் (அலை) அவர்களின் சந்ததிகள் புனித மக்காவின் பூர்வகுடிகள் சங்கைமிகு கஅபாவின் நிர்வாகிகள். ஆகவே “எங்களைப் போன்ற அந்தஸ்தோ உரிமைகளோ வேறு அரபியர் எவருக்கும் கிடையாது” என்றனர். அவர்கள் தங்களுக்கு ‘ஹும்ஸ்’ எனப் பெயரிட்டுக் கொண்டனர். ஹஜ் காலங்களில் நாங்கள் ஹரமின் எல்லையை விட்டு வெளியேறி ஹில் (ஹரம் அல்லாத) பகுதிகளுக்குச் செல்லக் கூடாது என்று கூறி அவர்கள் ஹஜ் காலத்தில் அரஃபாவில் தங்க மாட்டார்கள். முஜ்தலிஃபாவில் இருந்தே திரும்பி விடுவார்கள். இதனைத் தடை செய்து அல்லாஹ் பின்வரும் குர்ஆன் வசனத்தை இறக்கினான்,

பின்னர் மனிதர்கள் திரும்புகின்ற இடத்திலிருந்தே நீங்களும் திரும்பிவிடுங்கள். (அல்குர்ஆன் 2 : 199) (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம்)

2) அவர்கள் கூறினார்கள்: ஹும்ஸ் ஆகிய எங்களுக்குப் பாலாடைக் கட்டி செய்வதும் நெய் உருக்குவதும் இஹ்ராமுடைய நிலையில் தடை செய்யப்பட்டது. மேலும், இஹ்ராமில் இருக்கும் போது கம்பளிக் கூடாரங்களில் நுழைய மாட்டோம். தோலினால் ஆன கூடாரங்களைத் தவிர மற்ற கூடாரங்களில் நிழலுக்காக ஒதுங்கமாட்டோம். (இப்னு ஹிஷாம்)

3) ஹரமுக்கு வெளியிலிருந்து ஹஜ் மற்றும் உம்ராவுக்கு வருபவர்கள் தங்களது பகுதியிலிருந்து கொண்டு வந்த உணவு மற்றும் பானங்களை ஹரமுக்குள் உண்ணவோ பருகவோ கூடாது. ஹரமின் பகுதியில் கிடைப்பதையே உண்ண வேண்டும். (இப்னு ஹிஷாம்)

4) ஹரமின் வெளிப் பகுதியிலிருந்து வருபவர்கள் கஅபாவை வலம் வரும்போது ‘ஹும்ஸ்‘‘கள் கொடுக்கும் ஆடைகளை அணிந்தே வலம் வருவதை ஆரம்பிக்க வேண்டும். இதற்காக வெளியிலிருந்து வரும் ஆண்களுக்கு குறைஷி ஆண்களும், அதே போன்று பெண்களுக்குக் குறைஷிப் பெண்களும் ஆடைகளை நன்மையைக் கருதி இலவசமாகக் கொடுத்து வந்தனர். ஆடைகள் கிடைக்காத பட்சத்தில் ஆண்கள் நிர்வாணமாக வலம் வருவார்கள். பெண்கள் தங்களது அனைத்து ஆடைகளையும் களைந்துவிட்டு முன்பகுதி திறந்துள்ள ஒரு மேல் சட்டையை மட்டும் அணிந்துகொண்டு வலம் வருவார்கள். அப்போது அப்பெண்கள் இக்கவிதையைக் கூறுவார்கள்.

‘‘இன்று (உடலின்) சில பகுதிகளோ அல்லது முழுப் பகுதியோ வெளிப்படுகிறது. அவற்றில் எது வெளிப்படுகிறதோ அதைக் காண்பது எவருக்கும் முறையற்றது.’’

இச்செயலைக் கண்டித்து அல்லாஹ் பின்வரும் வசனத்தை அருளினான்:

ஆதமுடைய மக்களே! ஒவ்வொரு பள்ளிவாசல்களிலும் (ஆடைகளினால்) உங்களை அலங்கரித்துக் கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 7 : 31)

அதேநேரத்தில் யாரேனும் ஓர்ஆண் அல்லது பெண் தங்களை மேன்மையானவர்களாக கருதி இரவல் ஆடை வாங்காமல் தாங்கள் கொண்டு வந்த ஆடையிலேயே வலம் வந்துவிட்டால் அது முடிந்தவுடன் அந்த ஆடையை எறிந்து விடுவார்கள். வேறு யாரும் அதனைப் பயன்படுத்த மாட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம்)

5) அவர்கள் இஹ்ராம் அணிந்த பிறகு தங்களது வீட்டுக்கு செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டால் வீட்டு தலைவாசல் வழியாக நுழையாமல் பின்பக்கச் சுவரை உடைத்து வழி ஏற்படுத்திக் கொண்டு அதன் வழியாகவே போவார்கள், வருவார்கள். இந்த மூடத்தனமான செயலை மிகவும் உயர்ந்த நற்செயல் என அவர்கள் கருதினார்கள். இதை கண்டித்து பின்வரும் வசனத்தை அல்லாஹ் இறக்கினான்:

(நம்பிக்கையாளர்களே! இஹ்ராம் கட்டிய) நீங்கள் (உங்களுடைய) வீடுகளுக்கு அவற்றின் பின்புறமாக வந்து விடுவதனால் நல்லவர்களாக ஆகிவிடமாட்டீர்கள். எனினும், எவர் அல்லாஹ்வுக்குப் பயந்து நடக்கின்றாரோ அவரே நல்லவர். ஆதலால், நீங்கள் (உங்களுடைய) வீடுகளுக்கு அவற்றின் தலைவாசல்களின் வழியாக(வே) வாருங்கள். அல்லாஹ்வுக்குப் பயந்தும் நடந்து கொள்ளுங்கள். இதனால் நீங்கள் வெற்றியடையலாம். (அல்குர்ஆன் 2 : 189) (ஸஹீஹுல் புகாரி)

இணைவைத்தல், சிலை வணக்கம், மூட நம்பிக்கைகள், மூடப்பழக்க வழக்கங்கள் ஆகியவையே அரபிய தீபகற்பத்தில் பரவி இருந்தன. இது தவிர யூத, கிருஸ்துவ, மஜூஸி, ஸாபி போன்ற மதங்கள் அரபிய தீபகற்பத்தில் ஆங்காங்கே காணப்பட்டன.

இரண்டு கட்டங்களில் யூதர்கள் அரபிய தீபகற்பத்தில் ஊடுருவினர்.

1) ஃபலஸ்தீனத்தை ‘புக்து நஸ்ரு’ என்ற மன்னன் கி.மு. 587 ஆம் ஆண்டு கைப்பற்றி அங்கு வாழ்ந்த யூதர்களை நெருக்கடிக்குள்ளாக்கினான். யூதர்களின் நகரங்களை அழித்து அவர்களது வசிப்பிடங்களை நாசமாக்கினான். மேலும், அவர்களில் அதிகமானோரை பாபில் நகருக்கு கைதிகளாக்கிக் கொண்டு சென்றான். இதனால் அவர்களில் ஒரு பிரிவினர் ஃபலஸ்தீனத்தை துறந்து ஹிஜாஸின் வட பகுதிகளில் குடியேறினர்.

2) கி.பி. 70 ஆம் ஆண்டில் ‘டைடஸ்’ என்ற ரோமானிய மன்னன் ஃபலஸ்தீனை கைப்பற்றினான். அவன் யூதர்களையும் அவர்களது வசிப்பிடங்களையும் அழித்தொழித்தான். அதன் விளைவாக ஏராளமான யூதர்கள் ஹி ஜாஸ் பகுதியிலுள்ள மதீனா, கைபர், தீமா ஆகிய நகரங்களில் குடியேறினர். அங்கு தங்களுக்கென சிறந்த வசிப்பிடங்களையும் கோட்டைக் கொத்தளங்களையும் ஏற்படுத்திக் கொண்டனர். இந்த யூதர்களால் அரபியர்களிடையே யூத மதம் பரவ ஆரம்பித்தது. இஸ்லாமின் வருகைக்கு முன்பும் இஸ்லாமுடைய வருகையின் ஆரம்ப காலக்கட்டத்திலும் நடந்த அரசியல் சார்ந்த அனைத்து நிகழ்வுகளிலும் யூத மதத்திற்குக் குறிப்பிடத் தகுந்த முக்கியத்துவம் இருந்தது. இஸ்லாம் தோன்றியபோது இருபதுக்கும் மேற்பட்ட யூத கோத்திரங்கள் அரபிய தீபகற்பத்தில் இருந்தன. அவற்றில் பிரபலமானவை கைபர், நழீர், முஸ்தலக், குரைளா, கைனுகாஃ ஆகிய கோத்திரங்களாகும். (ஸஹீஹுல் புகாரி, வஃபாவுல் வஃபா)

‘துப்பான் அஸ்அத் அபூ கரப்’ என்பவனால் யூதமதம் யமன் நாட்டிலும் நுழைந்தது. இவன் மதீனாவின் மீது போர் தொடுத்தான். பிறகு அங்கே, யூதர்கள் மூலம் யூத மதத்தைத் தழுவினான். குரைளா குடும்பத்தைச் சார்ந்த இரு யூத அறிஞர்களை அவன் தன்னுடன் யமன் நாட்டுக்கு அழைத்துச் சென்றான். அதிலிருந்து யமனில் யூதமதம் பரவியது. அபூ கரபுக்குப் பிறகு அவனது மகன் யூஸுப் தூ நுவாஸ் யமனின் அரசனானான். அவன் நஜ்ரான் பகுதியிலிருந்த கிறிஸ்துவர்கள் மீது படையெடுத்து அவர்களை யூத மதத்திற்கு மாறும்படி நிர்ப்பந்தித்தான். அவர்கள் மறுத்துவிடவே பெரும் அகழிகளைத் தோண்டி அதை நெருப்புக் குண்டமாக ஆக்கி அதில் ஆண், பெண், குழந்தைகள் என்ற எந்த வேறுபாடும் பார்க்காமல் அனைவரையும் தூ நவாஸ் வீசி எறிந்தான். அதில் ஏறத்தாழ இருபதாயிரத்திலிருந்து நாற்பதாயிரம் கிறிஸ்துவர்கள் வரை கொல்லப்பட்டனர். இந்நிகழ்ச்சி கி.பி. 523ம் ஆண்டு அக்டோபர் மாதம் நடைபெற்றது. (இப்னு ஹிஷாம்)

இதைப் பற்றி அல்லாஹ் தனது அருள்மறையில் இவ்வாறு குறிப்பிடுகிறான்:

அகழுடையவர்கள் அழிக்கப்பட்டார்கள். (அவ்வாறே இம்மக்காவாசிகளும் அழிக்கப்படுவார்கள்.) அது, விறகுகள் போட்டெரித்த நெருப்பு (அகழ்.) அதன் முன் அவர்கள் உட்கார்ந்து கொண்டிருந்த சமயத்தில், நம்பிக்கையாளர்களை (நெருப்புக் கிடங்கில் போட்டு) நோவினை செய்வதை அவர்கள் (வேடிக்கையாகப்) பார்த்துக் கொண்டுமிருந்தார்கள். (அல்குர்ஆன் 85 : 4 - 7)

கிறிஸ்துவ மதம்: ஹபஷியர் மற்றும் சில ரோமானிய குழுக்களின் ஆக்கிரமிப்புகளால் அரபிய நாடுகளுக்குள் இம்மதம் புகுந்தது. ஹபஷிகள் யமன் நாட்டை முதன்முறையாக கி.பி. 340 ஆம் ஆண்டில் கைப்பற்றினர். அவர்களது ஆக்கிரமிப்பு நீண்ட காலம் நிலைத்திருக்கவில்லை. கி.பி. 370லிருந்து 378 வரையுள்ள காலத்தில் அவர்கள் யமனிலிருந்து விரட்டியடிக்கப்பட்டார்கள். எனினும், கிறிஸ்துவ மதத்தைப் பரப்புவதில் அவர்கள் வெறிகொண்டு அலைந்தனர். ஹபஷியர்களின் ஆக்கிரமிப்பு காலத்தில் கிறிஸ்துவ மதத்தைச் சார்ந்த ‘ஃபீம்யூன்’ எனும் ஓர் இறைநேசர் நஜ்ரான் வந்தடைந்தார். அங்கு வசிப்பவர்களை கிறிஸ்துவத்தைத் தழுவ அழைத்தார். அவன் வாய்மையையும் அவரது

நேரிய மார்க்கத்தையும் கண்ட அம்மக்கள் ஆர்வத்துடன் கிறிஸ்துவத்தில் இணைந்தனர். (இப்னு ஹிஷாம்)

நஜ்ரானில் வசித்த கிறிஸ்துவர்களை மன்னன் தூ நுவாஸ் நெருப்பு அகழியில் எரித்துக் கொன்றானல்லவா! அதற்குப் பழிவாங்கும் முகமாக ஹபஷியர்கள் இரண்டாவது முறையாக கி.பி 525ஆம் ஆண்டில் யமனைக் கைப்பற்றினர். அப்போது 'அப்ரஹா அல் அஷ்ரம்' என்பவன் யமனை ஆட்சி செய்தான். அவன் கிறிஸ்துவத்தை தீவிரமாக பரப்புவதில் மிகுந்த ஆர்வம் காட்டினான். அவன் யமனில் ஒரு கிறிஸ்துவ கோயிலைக் கட்டினான். கஅபாவை ஹஜ்ஜு செய்யச்செல்லும் அரபியர்கள் ஹஜ்ஜுக்காக கஅபா செல்வதைத் தடுத்து, தான் கட்டிய கோயிலைத் தரிசிக்க வரவேண்டும் கஅபாவை இடித்துத் தகர்த்திட வேண்டுமென விரும்பினான். ஆனால் கடுந்தண்டனையால் அல்லாஹ் அவனை அழித்துவிட்டான்.

மற்றொரு புறம், ரோம் பகுதிகளை ஒட்டியிருந்த காரணத்தால் கஸ்ஸானிய அரபியர்கள், தங்லிப், தய்ம் வமிசத்தைச் சேர்ந்த அரபியர்களும் கிறிஸ்துவ மதத்தைத் தழுவினர். இதைத்தவிர ஹீராவின் சில அரசர்களும் கிறிஸ்துவத்தைத் தழுவினர்.

மஜூஸிய்யா: (நெருப்பை வணங்கும் மதம்) இது பெரும்பாலும் பாரசீகத்தை ஒட்டியிருந்த அரபியர்களிடம் காணப்பட்டது. இராக், பஹ்ரைன், அல் அஹ்ஸா, ஹஜர் மற்றும் அரபிய வளைகுடா பகுதிகளில் வசித்து வந்த அரபியர்களும் இதைப் பின்பற்றினர். இது மட்டுமின்றி யமன் நாட்டை பாரசீகர்கள் கைப்பற்றியிருந்த காலத்தில் யமனியர் பலர் மஜூஸி மதத்தில் இணைந்தனர்.

ஸாபியிய்யா: இது நட்சத்திரங்களை வணங்கும் மதம். அதாவது, கோள்களும் நட்சத்திரங்களும் தான் இவ்வுலகை இயக்கி வருகின்றன என்று நம்பிக்கை கொள்ளும் மதமாகும். இராக் மற்றும் அதன் சுற்றுப் பகுதிகளில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியும், தொல்பொருள் ஆராய்ச்சியும் இது இப்றாஹீம் (அலை) அவர்களின் கல்தானி இனத்தவர் மதமாக இருந்தது என தெவிக்கின்றன. முற்காலத்தில் ஷாம் மற்றும் யமன் நாடுகளில் அதிகமானவர்கள் இம்மதத்தையே பின்பற்றினர். எனினும், யூத மற்றும் கிறிஸ்துவ மதங்கள் தோன்றி வலிமை பெற்றபோது ஸாபியிய்யா மதத்தின் அஸ்திவாரம் ஆட்டம் காண ஆரம்பித்து, அதன் வளர்ச்சி பெரிதும் குன்றியது. எஞ்சியிருந்த இம்மதத்தைச் சேர்ந்தவர்கள் மஜூஸிகளுடன் கலந்து வாழ்ந்தனர். அல்லது அரபிய வளைகுடா பகுதிகளிலும் இராக்கிலும் வாழ்ந்து வந்தனர். யமன் நாட்டிலுள்ள ஹீரா பகுதியின் வழியாக இம்மதத்தை பின்பற்றியவர்களின் கலாச்சாரம் அரபியர்களிடமும் பரவியது. அவ்வாறே பாரசீகர்களுடன் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்ததன் காரணமாக அவர்களின் மதக் கலாச்சாரம் குறைஷியர்களில் சிலரிடமும் காணப்பட்டது.

**சமயங்களின் நிலைமைகள்**

இஸ்லாமியப் பேரொளி பிரகாசிக்கத் தொடங்கியபோது இம்மதங்களையே அரபியர்கள் பின்பற்றிக் கொண்டிருந்தனர். அதற்கு முன்பிருந்தே கொஞ்சம் கொஞ்சமாக இம்மதங்கள் வீழ்ச்சியடைய ஆரம்பித்தன. 'நாங்களே நபி இப்றாஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தில் நிலைத்திருக்கிறோம்' என வாய்ப்பந்தல் கட்டியிருந்த முஷ்ரிக்குகள் உண்மையில் நபி இப்றாஹீம் (அலை) அவர்களுடைய மார்க்கச் சட்ட ஏவல்களையும் விலக்கல்களையும் பின்பற்றுவதிலிருந்து வெகுதூரம் விலகியிருந்தனர். அவர்கள் கற்றுத் தந்த நற்பண்புகளை முழுதும் புறக்கணித்து வாழ்ந்தனர். அவர்களிடையே குற்றங்கள் மலிந்து, சிலை வணங்கிகளிடம் இருக்கும் மூட நம்பிக்கைகளும் வழிகேடுகளும் கால ஓட்டத்தில் அவர்களின் மதச் சடங்குகளாக மாறின. இச்சடங்குகளும் மூட நம்பிக்கைகளும் அவர்களது

சமய, சமூக, அரசியல் வாழ்க்கையின் அனைத்து துறைகளிலும் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தின.

யூத மதம் முற்றிலும் முகஸ்துதியாகவும், சர்வாதிகாரமாகவும் மாறியிருந்தது. அம்மதத் துறவிகளும் அதன் தலைவர்களும் கடவுளர்களாக விளங்கினர். மார்க்க சட்டங்கள் என்ற பெயரால் வாழ்க்கையை நெருக்கடியாக்கி தங்கள் விருப்பத்திற்கேற்ப மக்களைக் கசக்கிப் பிழிந்தனர். மக்களிடையே இறை நிராகரிப்பும், சமூகச் சீர்கேடுகளும் பரவிக் கிடந்தாலும், நேரிய மார்க்கம் சிதைக்கப்பட்டு சீர்கெட்டிருந்தாலும், அதைப் பற்றிச் சிறிதும் கவலையின்றி தலைமைத்துவத்தை தக்க வைத்துக் கொள்வதிலும் செல்வங்களை சேகரிப்பதிலுமே கவனம் செலுத்தினார்கள். எத்தகைய உயர் போதனைகளைக் கற்று அதனைப் பின்பற்றி வாழ வேண்டுமென அல்லாஹ் கட்டளையிட்டிருந்தானோ அவையனைத்திற்கும் சமாதி கட்டினர்.

கிறிஸ்துவ மதம் சிலைவணங்கும் மதமாக மாறியது. அல்லாஹ்வுக்கும் மனிதர்களுக்குமிடையே புதுமையானதொரு கலப்படத்தை கிறிஸ்துவ மதம் போதித்தது. அந்த மதத்தைப் பின்பற்றிய அரபியிடம் அது எவ்வித தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. ஏனெனில், அதன் போதனைகள் வாழ்க்கை நெறிக்கு ஏற்றதாக இருக்கவில்லை. அம்மக்களுக்கு அதிலிருந்து விலகுவதும் சிரமமாக இருந்தது.

அரபியர்களின் ஏனைய மதக்கோட்பாடுகள் சிலைவணங்கிகளின் மதக்கோட்பாடுகளுக்கு ஒத்திருந்தன. அவர்களின் இதயங்கள், கொள்கைகள், மூடநம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் கூட ஒன்றுபட்டிருந்தன.

### அறியாமைக் கால அரபியச் சமுதாயம்

இதுவரை அரபிய தீபகற்பத்தில் நிலவிய அரசியல் மற்றும் மதக் கோட்பாடுகளை அறிந்தோம். இப்போது அதன் சமூக அமைப்பு, பொருளாதாரம் மற்றும் பண்பாடுகளைப் பற்றி சுருக்கமாகக் காண்போம்.

#### சமுதாய அமைப்பு

அரபியர்களில் பலதரப்பட்ட வகுப்பினர் இருந்தனர். அவர்களில் உயர்மட்ட குடும்பங்களில் ஆண்கள் தனது குடும்பப் பெண்களுடன் உயர்வான நடத்தையைக் கொண்டிருந்தார்கள். அக்குடும்பங்களில் பெண்கள் சுய அதிகாரத்துடனும் கௌரவத்துடனும் திகழ்ந்தனர். பெண்களுக்கு மிகுந்த பாதுகாப்பும் மரியாதையும் அளிக்கப்பட்டது. பெண்களின் கண்ணியத்தைப் பாதுகாக்க வாளேந்தி போர் செய்யவும் அவர்கள் துணிந்திருந்தனர்.

ஓர் ஆண் தனது கொடைத்தன்மை, வீரம், வலிமையைக் கூறி தன்னைப் புகழ்ந்துக்கொள்ள நினைக்கும்போது தனது கவிதைகளில் பெண்ணை விளித்து பேசுவது போல பேசுவார். சில சந்தர்ப்பங்களில் பெண் விரும்பினால் தங்களது குலத்தாரிடையே காணப்படும் பிளவுகளை சரிசெய்து அமைதி நிலவச் செய்திடுவாள். அவள் நினைத்தால் மக்களிடையே போர் நெருப்பை மூட்டிவிடுவாள். எனினும், எவ்விதக் கருத்து வேறுபாடுமின்றி ஆண் குடும்பத் தலைவனாக விளங்கினான். அவனே முடிவெடுக்கும் அதிகாரத்தைப் பெற்றிருந்தான். அவர்களிடையே ஆண், பெண் தொடர்பு என்பது அப்பெண்களுடைய காப்பாளர்களின் அனுமதி பெற்று திருமணத்தின் மூலமே ஏற்படுத்தப்பட்டது. தங்கள் குடும்ப ஆண்களை மீறி செயல்பட, பெண்கள் அதிகாரமற்றவர்களாக இருந்தார்கள்.

ஆனால், கீழ்மட்ட மக்களிடத்தில் ஆண், பெண் இணைந்து வாழ்வதற்கு பல்வேறு நடைமுறைகள் காணப்பட்டன. அவை அனைத்தும் வெட்கமற்ற இழிவான ஈனத்தனமான பழக்க வழக்கங்களாகவே இருந்தன. இது குறித்து அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் கூறியதாவது:

திருமணங்கள் அறியாமைக் காலத்தில் நான்கு வகைகளாக இருந்தன.

முதல் வகை: இன்று மக்களிடையே நடைமுறையிலுள்ள திருமணத்தைப் போன்றதாகும். ஒருவர் மற்றொருவரின் பொறுப்பிலுள்ள ஒரு பெண்ணையோ அல்லது அவருடைய மகளையோ பெண் பேசி 'மஹ்ர்' (விவாகக் கொடை) கொடுத்து மணந்து கொள்வார்.

இரண்டாம் வகை: ஒருவர் தம் மனைவியிடம் "நீ உன் மாதவிடாயிலிருந்து தூய்மை அடைந்தவுடன் இன்ன நபருடன் படுக்கையைப் பகிர்ந்து கொள்!" என்று கூறி அனுப்பி விடுவார். அதன்பின் அந்த மனிதர் மூலம் கர்ப்பமானது தெரியும்வரை அவர் தன் மனைவியுடன் சேராமல் விலகி இருப்பார். அந்த மனிதர் மூலம் அவள் கர்ப்பமாகி விட்டாளெனத் தெரியவந்தால் தன் விருப்பத்திற்கேற்ப கணவர் அவளுடன் சேர்ந்து கொள்வார். திடகாத்திரமிக்க குழந்தை பிறக்க வேண்டுமென்ற ஆர்வத்தினாலேயே இவ்வாறு செய்து வந்தனர். இந்தத் திருமணத்திற்கு 'நிகாஹுல் இஸ்திப்ழாவு' என்று அரபியில் பெயர் கூறப்படும்.

மூன்றாம் வகை: பத்துப் பேருக்குக் குறைவான ஒரு குழுவினர் ஒன்றுகூடி அவர்கள் அனைவரும் ஒரே பெண்ணுடன் உறவு கொள்வார்கள். அவள் கர்ப்பமாகி குழந்தை பிரசவித்த சில நாட்களுக்குப் பின் அவர்கள் அனைவரையும் தன்னிடம் வரச் சொல்வாள். அவர்கள் அனைவரும் எவ்வித மறுப்புமின்றி அவளிடம் ஒன்று கூடுவார்கள். அவர்களிடம் அவள்: "நீங்கள் செய்தது உங்களுக்குத் தெரிந்ததே! (இப்போது) எனக்குக் குழந்தை பிறந்து விட்டது" என்று கூறிவிட்டு (அவர்களில் ஒருவரை நோக்கி) "இது உன் குழந்தையே" என தான் விரும்பியவன் பெயரைக் குறிப்பிடுவாள். அக்குழந்தை அந்த நபரிடம் ஒப்படைக்கப்படும். அதை அனைவரும் ஏற்றுக்கொள்வார்கள்.

நான்காம் வகை: பலர் ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வர். தன்னிடம் வரும் யாரையும் அவள் தடுக்க மாட்டாள். இப்பெண்கள் விலை மாதர்கள் ஆவர். இவர்கள் தங்களது வீட்டு வாசலில் கொடியை நட்டு வைத்திருப்பார்கள். பலர் அங்கு வந்து போவார்கள். இதில் ஒருத்தி கர்ப்பமாகிக் குழந்தை பெற்றால் மக்கள் ஒன்று கூடி அங்க அடையாளங்களை வைத்து குழந்தையின் தந்தையை கண்டறியும் முகக்குறி நிபுணர்களை அழைத்து வருவார்கள். அந்த நிபுணர்கள் ஆராய்ந்து தந்தையை முடிவு செய்து அம்மனிதனுடன் அந்தக் குழந்தையை இணைத்து விடுவார்கள். அவனிடம் அக்குழந்தை ஒப்படைக்கப்பட்டு அவனுடைய மகன் என்று பெயர் சொல்லி அழைக்கப்படும். அதைத் தன் குழந்தையல்ல என்று அவனும் மறுக்க மாட்டான்.

அல்லாஹ் சத்திய மார்க்கத்துடன் முஹம்மது (ஸல்) அவர்களை அனுப்பியபோது இன்று மக்களின் வழக்கிலுள்ள இஸ்லாமியத் திருமணத்தைத் தவிர அறியாமைக் காலத்திருமணங்கள் அனைத்தையும் தகர்த்து விட்டான். (ஸஹீஹுல் புகாரி, ஸுனன் அபூதாவூது)

சிலசமயம் இரு வகுப்பாரிடையே போர் நடைபெறும். அதில், தோல்வி அடைந்தவர்களின் பெண்களை வெற்றிபெற்ற பிரிவினர் சிறைபிடித்து தங்களது அடிமைகளாக்கி அனுபவிப்பார்கள். இதில் பிறக்கும் குழந்தைகளின் பெயர்கள் காலம் முழுவதும் அடிமைகளான அவர்களது தாய்மார்களின் பெயர்களுடன் சேர்த்து அழைக்கப்படும் அவமானம் இருந்து வந்தது.

அறியாமைக் காலத்தில் ஆண்கள் எவ்வித வரம்புமின்றி பல பெண்களை மணந்து கொண்டனர். இஸ்லாம் அதை தடுத்து நான்கு பெண்களுக்கு மேல் மணமுடிக்கக் கூடாது என வரையறுத்தது. மேலும், இரு சகோதரிகளை ஒரே காலத்தில் மணந்து கொண்டனர். தங்களது தந்தை இறந்துவிட்டால் அல்லது விவாகரத்து செய்துவிட்டால் அவன் மனைவியை (மாற்றாந்தாயை) மணந்து கொள்ளும் பழக்கமும் அவர்களிடையே

காணப்பட்டது. இவ்விரண்டையும் இஸ்லாம் தடை செய்தது. (பார்க்க அல்குர்ஆன் 4 : 22, 23). அவ்வாறே விவாகரத்து செய்வதில் குறிப்பிட்ட முறை எதுவுமின்றி விரும்பிய நேரத்தில் தலாக் (விவாகரத்து) கூறி விரும்பிய நேரத்தில் மனைவியரை திரும்ப அழைத்துக் கொண்டனர். இதை தடை செய்து மூன்று முறைக்கு மேல் இவ்வாறு செய்யலாகாது என இஸ்லாம் வரையறுத்தது. (ஸுனன் அபூதாவூது)

சமூகத்தின் அனைத்து தரப்பினரிடமும் விபசாரம் பரவியிருந்தது. சிலர் மட்டும் இந்த இழிசெயலை வெறுத்து கௌரவத்துடன் வாழ்ந்தனர். அடிமைப் பெண்களின் நிலைமை சுதந்திர பெண்களின் நிலைமையைவிட மிக மோசமாக இருந்தது. அந்த அறியாமைக்கால மக்களில் பெரும்பாலோர் விபசாரத்தை ஒரு குற்றச் செயலாகவே கருதவில்லை.

இது குறித்து நபி (ஸல்) அவர்களின் முன்னிலையில் ஒரு மனிதர் எழுந்து ‘‘அல்லாஹ்வின் தூதரே! இன்னவன் என் மகனாவான். அறியாமைக் காலத்தில் நான் அவனது தாயுடன் விபசாரம் செய்துள்ளேன் என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் ‘‘இஸ்லாமிய மார்க்கத்தில் இவ்வாறான உரிமைக் கோரலுக்கு வாய்ப்பில்லை. அறியாமைக் கால செயல்களெல்லாம் முடிந்துபோய் விட்டன. இப்போது குழந்தை அதனுடைய தாயின் கணவனையே சாரும். விபசாரம் புரிந்தவனைக் கல்லால் எறிந்து கொல்லப்படும்’’ என்று கூறினார்கள். (ஸுனன் அபூதாவூது)

ஸஅது இப்னு அபீ வக்காஸ், அப்து இப்னு ஜம்ஆ ஆகிய இருவருக்கிடையே ஜம்ஆவின் அடிமைப் பெண்ணுக்குப் பிறந்த அப்துர் ரஹ்மான் இப்னு ஜம்ஆவின் விஷயத்தில் ஏற்பட்ட சச்சரவுகள் மிகப் பிரபலமானதாகும். (பார்க்க ஸஹீஹுல் புகாரி 2053, 2218...)

அரபியர்கள் தங்களது பிள்ளைகளுடன் கொண்டிருந்த தொடர்பு பலவகைகளில் அமைந்திருந்தது. அவர்களில் சிலர் தங்களது பிள்ளைகளை உயிருக்குயிராக நேசித்தனர். இதைப் பற்றி ஒரு கவிஞர் கூறுவதாவது:

‘‘நமது குழந்தைகள் புவியில் தவழும் நமது ஈரக்குலைகளாவர்.’’

தற்காலத்தைப் போன்றே, அக்காலத்தில் சிலர் பெண் பிள்ளைகளை அவமானமாகக் கருதியும் செலவுக்குப்பயந்தும் உயிருடன் புதைத்தனர். மேலும் சிலர், வறுமைக்கு அஞ்சி தங்களின் ஆண் குழந்தைகளையும் கொலை செய்தனர். (பார்க்க அல்குர்ஆன் (6 : 151), (16 : 58, 59), (17 : 31), (81 : 8) எனினும் இப்பழக்கம் பரவலாகக் காணப்படவில்லை. காரணம், எதிரிகளுடன் போரிடுவதற்கு அவர்களுக்கு ஆண் மக்களின் தேவை அதிகமாக இருந்தது.

அரபியர்கள் தங்களது குடும்ப உறுப்பினர்களுக்குள் மிக நெருக்கமான உறவு வைத்திருந்தனர். குலப்பெருமைக்காகவே வாழவும் குலப்பெருமைக்காகவே சாகவும் துணிந்தனர். ஒரே கோத்திரத்தை சேர்ந்தவர்கள் தங்களுக்குள் சமூகப் பித்தும் இனவெறியும் கொண்டு அலைந்தனர். இனவாதமும் இரத்த பந்தமான குடும்பப் பாரம்பரியமும் அவர்களது சமூக அமைப்பின் அஸ்திவாரமாகத் திகழ்ந்தன. அவர்களிடையே அறியப்பட்ட ‘‘உன் சகோதரன் அநியாயக்காரனாக இருந்தாலும் அநீதி இழைக்கப்பட்டவனாக இருந்தாலும் அவனுக்கு நீ உதவி செய்’’ என்ற பழமொழியின் வெளிப்படையான பொருளுக்கேற்பவே அவர்கள் நடந்து வந்தார்கள். ஆனால், இஸ்லாம் இப்பழமொழிக்கு நேரடிப் பொருள் கொள்வதை மாற்றி அநியாயக் காரனை அவனுடைய அநியாயத்திலிருந்து தடுப்பதுதான் அவனுக்குச் செய்யும் உதவி என பொருள் தந்தது. எனினும், சில நேரங்களில் தலைமைத்துவத்தை அடைவதற்காக ஒரே வமிசத்தில் தோன்றியவர்கள் கூட தங்களுக்குள் வாளெடுத்துப் போரிட்டுக் கொண்டனர். எடுத்துக்காட்டாக அவ்ஸ்-கஸ்ரஜ், அப்ஸ்-துப்யான், பக்ர்-தக்லிப் கோத்திரத்தினர் தலைமைப் பதவிக்காக தங்களுக்குள் பகைவர்களாக இருந்தனர்.

பல மாறுபட்ட கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் தங்களுக்குள் தொடர்பற்றவர்களாக பிரிந்து வாழ்ந்தனர். குடும்பச் சண்டையிலேயே தங்கள் ஆற்றல்களை இழந்தனர். சில நேரங்களில் அவர்கள் கொண்டிருந்த மத நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் அவர்களுக்கிடையில் இருந்த பகைமையின் வேகத்தை குறைத்தன. மற்றும் சில நேரங்களில் சமாதான ஒப்பந்தங்களும் நட்பு ஒப்பந்தங்களும் பல மாறுபட்ட கோத்திரத்தை சேர்ந்தவர்களுக்கிடையே நெருக்கமான உறவை ஏற்படுத்தின. புனித மாதங்கள் அவர்களுக்கு அருளாகவும் வாழ்வுக்கும் வியாபாரத்திற்கும் பேருதவியாகவும் அமைந்திருந்தன. புனித மாதங்களை அவர்கள் கண்ணியப்படுத்தி வந்ததால் அம்மாதங்களில் மட்டும் அவர்கள் முழு நிம்மதியுடனும் பாதுகாப்புடனும் இருந்தனர்.

அபூரஜா அல் உதாதி (ரழி) கூறுகிறார்: “ரஜபு மாதம் வந்துவிட்டால் நாங்கள் ஈட்டிகளின் கூர்மையை அகற்றும் மாதம் வந்துவிட்டது” என்று கூறி ஈட்டி, அம்புகளின் முனையை அகற்றிவிடுவோம். இவ்வாறே மற்ற புனித மாதங்களிலும் நடந்து கொள்வோம். (ஸஹீஹுல் புகாரி. ஃபத்ஹுல் பாரி)

சுருங்கக்கூறின் சமூக அமைப்பு தரங்கெட்டு உருக்குலைந்து இருந்தது. மூட நம்பிக்கைகள் மிகைத்திருந்தன. அறியாமை அவர்களை ஆட்டிப் படைத்தது. மனிதர்கள் கால்நடைகளாக வாழ்ந்தனர். பெண்கள் விற்பனைப் பொருளாக்கப்பட்டு ஜடமாகவே பாவிக்கப்பட்டனர். சமூகங்களுக்கிடையில் உறவுகள் துண்டிக்கப்பட்டிருந்தன. குடிமக்களைச் சுரண்டி தங்களது கருவூலங்களை நிரப்பிக்கொள்வது அல்லது எதிரிகளின் மீது தாக்குதல் நடத்துவதே ஆட்சியாளர்களின் நோக்கமாக இருந்தது.

**பொருளாதாரம்**

சமூக நிலைமைக்கேற்ப பொருளாதாரம் அமைந்திருந்தது. அரபியர்களின் வாழ்க்கை முறைகளை ஆய்வு செய்யும்போது இக்கருத்து நமக்குத் தெரியவரும். அவர்களது வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கு வியாபாரமே பெரும் துணையாக இருந்தது. அமைதியும் பாதுகாப்பும் இருந்தால்தான் வியாபாரப் பயணத்தை மேற்கொள்ள முடியும் என்பது தெரிந்ததே! ஆனால், அரபிய தீபகற்பத்தில் புனித மாதங்களைத் தவிர ஏனைய மாதங்களில் அந்த அமைதியும் பாதுகாப்பும் இருக்கவில்லை. இப்புனித மாதங்களில்தான் உக்காள், தில்மஜாஸ், மஜன்னா போன்ற அரபியர்களின் பெயர் போன வியாபாரச் சந்தைகள் நடைபெற்றன.

அரபியர்களிடம் தொழில் துறைகளைப் பற்றிய அறிவு காணப்படவில்லை. துணி நெய்தல், தோல் பதனிடுதல் போன்ற சில தொழில் யமன், ஹீரா மற்றும் ‘மஷாஃபுஷ் ஷாம்’ ஆகிய பகுதிகளில் மட்டும் காணப்பட்டன. அரபிய தீபகற்பத்தின் உட்புறத்தின் சில பகுதிகளில் விவசாயமும் கால்நடை வளர்ப்பும் நடைபெற்று வந்தன. அரபியப் பெண்கள் அனைவரும் நெசவுத் தொழில் செய்தனர். எனினும், அனைத்து செல்வங்களும் போர்களில் செலவழித்து வீணடிக்கப்பட்டன. அவர்களிடையே வறுமையும் பஞ்சமும் தலைவிரித்தாடியது. அணிவதற்கான ஆடைகள் கூட இல்லாமல் தவித்தனர்.

**பண்பாடுகள்**

அக்கால மக்களிடையே செம்மையான சிந்தனையோ பகுத்தறிவோ இல்லை என்பதால் அக்காலத்தை “அறியாமைக்காலம்” என வருணிக்கப்பட்டது. ஏற்க இயலாத செயல்பாடுகளும் இழிவான நடத்தைகளும் குடி கொண்டிருந்தன. அதே நேரத்தில் வியக்கத்தக்க சில அரிய பண்புகளும் அவர்களிடம் குடிகொண்டிருந்தன.

அவையாவன:

1) கொடைத் தன்மை மற்றும் தயாளத்தன்மை: அவர்கள் கொடைத் தன்மையில் ஒருவரையொருவர் போட்டியிட்டனர். இந்தக் கொடைத் தன்மையைக் கொண்டே தங்களது பெரும்பாலான கவிகளில் தங்களையும் பிறரையும் புகழ்ந்து கொண்டனர்.

கடுமையான குளிரும் பஞ்சமும் நிலவி வரும் காலத்தில் ஒருவரிடம் விருந்தினர் ஒருவர் வருகிறார். அம்மனிதரிடம் தனது குடும்பத்தின் தேவைக்காக இருக்கும் ஓர் ஒட்டகையைத் தவிர வேறொன்றுமில்லாத நிலையிலும் அந்த ஒட்டகையை அறுத்து விருந்தினரை உபசரிக்க அவரைத் தூண்டுமளவு அவர்களிடம் விருந்தோம்பல் குணம் மிகைத்திருந்தது.

அவ்வாறே அவர்களில் இயலாத ஒருவர் நஷ்டஈடு வழங்க வேண்டியிருந்தால் அது தங்களது சக்திக்கு மீறியதாக இருப்பினும் அந்தத் தொகையைத் தான் தருவதாக பொறுப்பேற்றுக் கொள்வார்கள். இதனால், பிறர் உயிர் பறிக்கப்படுவதிலிருந்து பாதுகாத்தார்கள். இதைத் தங்களுக்குப் பெருமையாகக் கருதினார்கள்.

அவர்களிடமிருந்த தர்ம சிந்தனையின் விளைவாக மது அருந்துவதை பெருமைக்குரியதாக கருதினர். அது ஒரு சிறப்பான செயல் என்பதற்காக அதனை அவர்கள் நேசிக்கவில்லை. மாறாக, மது அருந்துவது தர்மம் செய்வதற்கான ஒரு வழியாக இருக்கிறது. செல்வத்தை வாரி இறைப்பதை மனதிற்கு எளிதாக்குகிறது என்பதால் அதை நேசித்தனர். அதனாலேயே திராட்சைக் கொடிக்கு 'கரம்' (கொடை) என்றும் அதிலிருந்து பிழியப்பட்ட மதுவுக்கு 'பின்துல் கரம்' (கொடையின் புதல்வி) எனவும் பெயரிட்டிருந்தனர். எனவேதான், மது அருந்துவதை பெருமைப்படுத்தியும் புகழ்ந்தும் பல அரபுக்கவிதைகள் அறியாமைக் காலத்தில் இயற்றப்பட்டதை நாம் பார்க்கிறோம்.

இதுபற்றி அன்தரா இப்னு ஷத்தாத் அல் அபஸீ தனது கவிதைத் தொகுப்பில் கூறுகிறார்:

"மதிய வேளைக்குப் பின் வடிகட்டியுடன் உள்ள
மஞ்சள் நிறக் கண்ணாடி கெண்டியிலிருந்து
அடையாளமிடப்பட்ட தெளிவான கண்ணாடிக் கிண்ணத்தில் ஊற்றி
இடக்கையால் மது அருந்தினேன்.
நான் குடித்தால் என் செல்வங்கள் அனைத்தையும் வாரி இறைப்பேன்.
ஆனால் எனது கண்ணியத்தை கரைபடியாது காப்பேன்.
மது மயக்கம் தெளிந்த பின்னும் வாரி வழங்குவதில் ஒரு குறையும் வைக்கமாட்டேன்.
இத்தகைய என் பண்பாடும் பெருந்தன்மையும் உனக்குத் தெரிந்ததே!"

சூதாடுவதையும் தங்களது கொடைத்தன்மையின் வெளிப்பாடாக அவர்கள் கருதினார்கள். ஏனெனில், சூதாட்டத்தில் வெற்றி பெறுபவர், தான் செலவிட்டதை மட்டும் எடுத்துக் கொண்டு மீதத்தை ஏழை, எளியோருக்கு கொடுத்து விடுவார். இதனாலேயே மது அருந்துவதிலும் சூதாடுவதிலும் எப்பலனுமே இல்லை என்று குர்ஆன் மறுக்கவில்லை. மாறாக, அதன் பலனைவிட அதன் தீய விளைவுதான் அதிகம் என்று கூறுகிறது.

(நபியே!) மதுவைப் பற்றியும் சூதாட்டத்தைப் பற்றியும் உங்களிடம் கேட்கின்றனர். (அதற்கு) நீங்கள் கூறுங்கள்: "அவ்விரண்டிலும் பெரும் பாவங்களும் இருக்கின்றன மனிதர்களுக்குச் சில பயன்களும் இருக்கின்றன. ஆனால், அவற்றிலுள்ள பாவம் அவற்றின் பயனை விட மிகப் பெரிது." (அல்குர்ஆன் 2 : 219)

2) ஒப்பந்தங்களை நிறைவேற்றல்: அவர்கள் ஒப்பந்தங்களை நிறைவேற்றுவதிலும் வாக்குகளைக் காப்பாற்றுவதிலும் மிக உறுதியாக இருந்தனர். தங்களது பிள்ளைகள் கொலை செய்யப்பட்டாலும் தங்களது வீடுகள் தகர்க்கப்பட்டாலும் அது குறித்து சிறிதும் இலட்சியம் செய்யாமல் தங்களது ஒப்பந்தத்தை நிறைவேற்றினர். இதற்கு ஹானி இப்னு மஸ்வூத்

ஷைபானி, ஸமவ்அல் இப்னு ஆதியா போன்றவர்களின் சம்பவங்கள் சான்றாகும். (இதிலுள்ள ஹானியின் சம்பவம் 'ஹீரா நாட்டில் ஆட்சி' என்ற தலைப்பில் சென்றுள்ளது.)

அடுத்து ஸமவ்அல் இப்னு ஆதியா பற்றிய சம்பவமாவது: ஸமவ்அலிடம் இம்ரவுல் கைஸ் சில கவச ஆடைகளை அமானிதமாகக் கொடுத்திருந்தார். 'ஹாஸ்' என்ற கஸ்ஸானிய மன்னன் அதனை அபகரிக்க நாடினான். ஸமவ்அல் தீமாவிலுள்ள தனது கோட்டையில் தஞ்சம் புகுந்தான். அவருடைய பிள்ளைகளில் ஒருவர் கோட்டைக்கு வெளியில் மாட்டிக்கொண்டார். அவரை மன்னன் ஹாஸ் பணயமாகப் பிடித்துக்கொண்டு கவச ஆடைகளை கொடுக்காவிட்டால் பிள்ளையைக் கொன்று விடுவேன் என மிரட்டினான். ஸமவ்அல் கொடுக்க மறுத்து தன் கண்ணெதிரே தன் பிள்ளை கொல்லப்படுவதையும் சகித்துக்கொண்டார்.

3) சுயகௌரவம் மற்றும் அநீதத்தை சகித்துக் கொள்ளாத் தன்மை: இப்பண்புகள் அவர்களிடம் கட்டுக்கடங்கா வீரத்தையும் அதிரடி ரோஷத்தையும் வேகமாக உணர்ச்சி வசப்படுவதையும் தூண்டின. எவருடைய சொல்லாவது தனக்கு கௌரவக் குறைவை அல்லது இழிவை ஏற்படுத்துகிறது என அறிந்தால் அவர்களுக்கு எதிராகக் கிளர்ந்தெழுவார்கள். தங்களது உயிரைப் பற்றி சிறிதும் இலட்சியம் செய்யாமல் வாளாலும், அம்புகளாலும் அதற்கு பதிலடி கொடுப்பார்கள்.

4) செயலில் உறுதியுடன் இருத்தல்: அம்மக்கள் ஒரு செயல் தங்களது பெருமைக்கும் உயர்வுக்கும் காரணமாக அமையும் என நம்பினால் அதை செயல்படுத்துவதிலிருந்து அவர்களை எந்தவொரு சக்தியும் தடுத்துவிட முடியாது. தங்களது உயிரைக் கொடுத்தாவது அதனை அவர்கள் செய்து முடிப்பார்கள்.

5) நிதானித்தல், சகித்தல், அமைதி காத்தல்: இப்பண்புகளும் அவர்களிடம் அமைந்திருந்தன. எனினும், வீரமும் போர் மீதான ஆர்வமும் மிகுந்திருந்ததால் இப்பண்புகள் மிக அரிதாகவே காணப்பட்டன.

6) எளிமையை விரும்பிப் பகட்டை வெறுத்தல்: அவர்களிடம் இப்பண்பும் காணப்பட்டது. அதனால் அவர்கள் உண்மை, நேர்மை, வாய்மை போன்றவற்றை நேசித்து மோசடி, ஏமாற்றுதல் போன்ற இழிகுணங்களை வெறுத்தனர்.

உலகின் ஏனைய பகுதிகளைப் பார்க்கிலும் அரபிய தீபகற்பத்துக்குப் புவியியல் ரீதியான முக்கியத்துவம் அமைந்திருந்தது. அத்துடன் அம்மக்களிடம் இருந்த மேற்கூறிய சில அரிய பண்புகளும் இருந்தன. இதன் காரணமாகவே இறுதி இறைத்தூதை சுமப்பதற்கும் மனித குலத்தை சீர்படுத்தி நேர்வழி நோக்கி அழைத்துச் செல்வதற்கும் அரபியர்களை அல்லாஹ் தேர்ந்தெடுத்தான்.

அந்த மக்களிடம் அமைந்திருந்த இந்த பண்புகளில் சில தீமைகளை, துன்பங்களை ஏற்படுத்துவதாக அமைந்திருந்தாலும் அடிப்படையில் அவை மிக உயரிய பண்புகளாகவே இருந்தன. அதனைச் சற்று சீரமைக்கும்போது மனித குலத்துக்கு அந்த பண்புகளால் ஏராளமான நன்மைகள் இருக்கின்றன இஸ்லாம் அந்த சீர்திருத்தத்தையே செய்தது.

அவர்களிடமிருந்த மிக உயரிய பண்புகளில் "ஒப்பந்தங்களை நிறைவேற்றுதல்" என்ற நற்பண்புக்கு அடுத்ததாக "உயர்வான காரியங்களை நிறைவேற்றுவதில் உறுதியாக இருத்தல்" என்ற பண்பு மக்களுக்கு மிக நன்மை பயக்கக் கூடியதாகும். ஏனெனில், தீமைகளையும் குழப்பங்களையும் களைந்து நீதியையும் நன்மையையும் நிலை நிறுத்துவதற்கு இந்த பண்பு மிக அவசியமாக இருக்கிறது.

மேற்கூறப்பட்டவை மட்டுமின்றி இன்னும் பல அரிய பண்புகளும் உயரிய குணங்களும் அவர்களிடம் இருந்தன. அவை அனைத்தையும் இங்கு கூறுவது நமது நோக்கமல்ல.

## வமிசம், பிறப்பு, வளர்ப்பு

### நபியவர்களின் வமிசமும் குடும்பமும்

**நபியவர்களின் வமிசம்**

நபி (ஸல்) அவர்களின் வமிசத் தொடர் மூன்று வகையாகப் பிரிகின்றது.

முதலாவது: அனைத்து வரலாற்று ஆசிரியர்களும், வமிச இயல் வல்லுனர்களும் ஒருமித்த கருத்து கொண்டிருப்பது. இது நபி (ஸல்) அவர்களில் தொடங்கி அத்னானில் முடிகிறது.

இரண்டாவது: இதில் மிகுந்த கருத்து முரண்பாடுகள் உள்ளன. அவற்றை ஒன்றிணைப்பது இயலாததாகும். அது அத்னானிலிருந்து நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் வரையிலான வமிசத் தொடராகும். இதில் சிலர் மௌனம் காக்கிறார்கள். சிலர் அத்னானுக்கு மேல் வமிசத் தொடரை கூறக்கூடாது என்கிறார்கள். சிலர் வமிசத் தொடரை அதற்கு மேலும் கூறுவது கூடும் என்கிறார்கள். இவ்வாறு கூறுபவர்கள் வமிசத் தொடர் மற்றும் எண்ணிக்கையில் முரண்படுகிறார்கள். அவர்களது முரண்பாடான கருத்துகள் முப்பதையும் தாண்டியுள்ளது. எனினும் அத்னான், நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் வமிசத்தைச் சேர்ந்தவர் என்பதில் ஒருமித்த கருத்தைக் கொண்டுள்ளனர்.

மூன்றாவது: இது நபி இப்றாஹீம் (அலை) அவர்களிலிருந்து ஆதம் (அலை) அவர்கள் வரையிலானது. இதில் வேதக்காரர்களின் கருத்தையே ஏற்க வேண்டி வருகிறது. அதில் பல கருத்துகள் பொய்யானவை என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. இன்னும் சில கருத்துகள் குறித்து மௌனம் காப்பதே சிறந்ததாகும்.

நபி (ஸல்) அவர்களுடைய தூய வமிச வழியைப் பற்றி மேற்கூறப்பட்ட மூன்று பிரிவுகளையும் வரிசையாகக் காண்போம்.

முதல் பிரிவு: முஹம்மது (ஸல்) இப்னு அப்துல்லாஹ் இப்னு அப்துல் முத்தலிப் (பெயர் ஷைபா) இப்னு ஹாஷிம் (பெயர் அம்ரு) இப்னு அப்து மனாஃப் (பெயர் முகீரா) இப்னு குஸய்ம் (பெயர் ஜைது) இப்னு கிலாப் இப்னு முர்ரா இப்னு கஅப் இப்னு லுவய்ம் இப்னு காலிப் இப்னு ஃபிஹ்ர் (இவரே குறைஷி என அழைக்கப்பட்டவர். இவர் பெயராலேயே அக்கோத்திரம் அழைக்கப்படுகிறது) இப்னு மாலிக் இப்னு நழ்ர் (பெயர் கைஸ்) இப்னு கினானா இப்னு குஜைமா இப்னு முத்கா (பெயர் ஆமிர்) இப்னு இல்யாஸ் இப்னு முழர் இப்னு நிஜார் இப்னு மஅத்து இப்னு அத்னான். (இப்னு ஹிஷாம், தபரி)

இரண்டாவது பிரிவு: இது அத்னானுக்கு மேலே உள்ளவர்கள் பற்றியது. அத்னான் இப்னு உதத் இப்னு ஹமய்ஸா இப்னு ஸலாமான் இப்னு அவ்ஸ் இப்னு பவுஜ் இப்னு கிம்வால் இப்னு உபை இப்னு அவ்வாம் இப்னு நாஷித் இப்னு ஹஜா இப்னு பல்தாஸ் இப்னு யதுலாஃப் இப்னு தாபிக் இப்னு ஜாம் இப்னு நாஷ் இப்னு மாகீ இப்னு ஐழ் இப்னு அப்கர் இப்னு உபைத் இப்னு துஆ இப்னு ஹம்தான் இப்னு ஸன்பர் இப்னு யஸ்பீ இப்னு யஹ்ஜன் இப்னு யல்ஹன் இப்னு அர்அவா இப்னு ஐழ் இப்னு தைஷான் இப்னு ஐஸிர் இப்னு அஃப்னாத் இப்னு ஐஹாம் இப்னு முக்ஸிர் இப்னு நாஸ் இப்னு ஜாஹ் இப்னு ஸமீ இப்னு மஜீ இப்னு அவ்ழா இப்னு அராம் இப்னு கைதார் இப்னு இஸ்மாயீல் இப்னு இப்றாஹீம். (தபகாத் இப்னு ஸஅது)

மூன்றாம் பிரிவு: இது இப்றாஹீம் (அலை) அவர்களுக்கு மேல் அவர்களின் தந்தை தாரஹ். அவரது பெயர் ஆஜர் இப்னு நாஹூர் இப்னு ஸாரூஃ இப்னு ராவூ இப்னு ஃபாலக் இப்னு ஆபிர் இப்னு ஷாலக் இப்னு அர்ஃபக்ஷத் இப்னுஹிஸாம் இப்னு நூஹ் (அலை) இப்னு

லாமக் இப்னு மதவ்ஷலக் இப்னு அக்நூக். (இவர்கள்தாம் இத்ரீஸ் (அலை) என்றும் சொல்லப்படுகிறது.) இப்னு யர்து இப்னு மஹ்லாயீல் இப்னு கைனான் இப்னு அனூஷ் இப்னு ஷீஸ் இப்னு ஆதம். (இப்னு ஹிஷாம்)

**நபியவர்களின் குடும்பம்**

பாட்டனாரான ஹாஷிம் இப்னு அப்து மனாஃபின் பெயருடன் இணைத்து நபி (ஸல்) அவர்களின் குடும்பம் ஹாஷிமி குடும்பம் என அழைக்கப்பட்டது. ஆகவே, இங்கு ஹாஷிம் மற்றும் அவருக்குப் பின்னுள்ளோரைப் பற்றி சுருக்கமாகத் தெரிந்து கொள்வது நல்லது.

**1. ஹாஷிம்**

அப்துத் தார் மற்றும் அப்து மனாஃப் குடும்பங்கள் சிறந்த பொறுப்புகளை தங்களுக்கிடையே பகிர்ந்து கொண்டபோது ஹாஜிகளுக்கு உணவளிப்பதும், தண்ணீர் கொடுப்பதும் அப்து மனாஃபின் மகனான ஹாஷிமுக்கு கிடைத்ததை முன்பு கூறினோம். இவர் மக்களிடையே பெரும் மதிப்பு மிக்க செல்வந்தராக இருந்தார். இவர்தான் முதன் முதலாக மக்காவில் ஹாஜிகளுக்கு ஸரீத் (திக்கடி) எனும் உயர்தரமான உணவை வழங்கியவர். இவரது பெயர் அம்ரு. எனினும், ஸரீதை தயாரிப்பதற்காக ரொட்டிகளை சிறுசிறு துண்டுகளாக ஆக்கியதால் இவருக்கு 'ஹாஷிம்' என்ற பெயர் வழங்கப்பட்டது. அவ்வாறே கோடை காலத்திற்கும் குளிர் காலத்திற்கும் என இரண்டு வியாபாரப் பயணங்களைக் குறைஷியடையே அறிமுகப்படுத்தியதும் இவரே.

அதுபற்றி ஒரு கவிஞர் குறிப்பிடுகிறார்:

அம்ரு! இவர்தான் பஞ்சத்தில் அடிபட்டு மெலிந்துபோன தனது சமூகத்தினருக்கு ரொட்டிகளை ஆனத்தில் (குழம்பு) பிய்த்துப் போட்டு உண்ண வழங்கியவர். இவரே குளிர், கோடை காலங்களின் வியாபாரப் பயணங்களைத் தோற்றுவித்தவர். (இப்னு ஹிஷாம்)

ஹாஷிம் வியாபாரத்திற்காக ஷாம் சென்று கொண்டிருந்தபோது மதீனாவை வந்தடைந்தார். அங்கு நஜ்ஜார் கிளையின் 'அம்ர்' என்பவன் மகள் ஸல்மாவை மணந்து சில காலம் அங்கேயே தங்கிவிட்டு ஷாம் புறப்பட்டார். ஸல்மா தனது குடும்பத்தாரிடம் தங்கியிருந்தார். அவர் அப்துல் முத்தலிபை கர்ப்பத்தில் சுமந்து கொண்டிருந்த நிலையில் ஹாஷிம் ஃபலஸ்தீனில் 'கஸ்ஸா' (காஸா) எனுமிடத்தில் மரணமடைந்தார். ஸல்மா கி.பி. 497 ஆம் ஆண்டு அப்துல் முத்தலிபை பெற்றெடுத்தார். குழந்தையின் தலையில் நரை இருந்ததால் 'ஷைபா' (நரைத்தவர்) என அதற்கு பெயரிட்டனர். (இப்னு ஹிஷாம்)

அக்குழந்தையை ஸல்மா மதீனாவிலிருந்த தனது தந்தையின் வீட்டிலேயே வளர்த்து வந்ததால் மக்காவிலிருந்த ஹாஷிமின் குடும்பத்தினர் எவரும் அவரது மகன் (ஷைபா) அப்துல் முத்தலிபைப் பற்றித் தெரிந்திருக்கவில்லை. ஹாஷிமுக்கு அப்துல் முத்தலிபைத் தவிர அஸத், அபூஸைஃபீ, நழ்லா என்ற மூன்று ஆண் மக்களும் ஷிஃபா, காலிதா, ழயீஃபா, ருகைய்யா, ஜன்னா என்ற ஐந்து பெண் மக்களும் இருந்தனர். (இப்னு ஹிஷாம்)

**2. அப்துல் முத்தலிப்**

ஹாஷிமிடமிருந்த பொறுப்புகளான ஹாஜிகளுக்கு உணவளிப்பதும் தண்ணீர் கொடுப்பதும் அவரது மரணத்திற்குப்பின் அவரது சகோதரர் முத்தலிப் இப்னு அப்து மனாஃப் வசம் வந்தது. இவர் தனது சமூகத்தில் கண்ணியமானவராகவும் பெரும் மதிப்புமிக்கவராகவும் விளங்கினார். அவரது வள்ளல் தன்மையை மெச்சி 'ஃபைய்யாழ்' (வாரி வழங்கும் வள்ளல்) என்று குறைஷியர்கள் அவரை அழைத்தனர். ஹாஷிமின் மகன் ஷைபா 7 அல்லது 8 வயதானபோது அவரைப் பற்றி கேள்விப்பட்ட முத்தலிப், அவரைத் தேடி மதீனா வந்தார்.

ஷைபாவைக் கண்டதும் வாரியணைத்து கண்ணீர் சொரிந்தார். ஷைபாவை தனது வாகனத்தில் அமர்த்திக் கொண்டு தன்னுடன் வருமாறு அழைத்தார். அவர் தனது தாயாரின் அனுமதியின்றி வர மறுத்துவிட்டார். முத்தலிப் ஷைபாவின் தாயார் ஸல்மாவிடம் அனுமதி கேட்க அவர் மகனை அனுப்பி வைக்க மறுத்துவிட்டார். இறுதியாக முத்தலிப் ஸல்மாவிடம் ''இவரை எதற்காக அழைத்துச் செல்கிறேன்? அவரது தந்தையின் சொத்துகளுக்காகவும் அல்லாஹ்வின் இல்லம் அமைந்துள்ள புனித பூமிக்காகவும் தானே அழைத்துச் செல்கிறேன்'' என்று கூறிய பின்னரே அழைத்துச் செல்ல அனுமதியளித்தார்.

முத்தலிப் தனது ஒட்டகையில் ஷைபாவை அமர்த்தி மக்காவுக்கு அழைத்து வந்தார். இக்காட்சியைக் கண்ட மக்காவாசிகள் ஷைபாவை பார்த்து இவர் (அப்துல் முத்தலிப்) ''முத்தலிபின் அடிமை'' என்றனர். அதற்கு முத்தலிப் கோபத்துடன் ''உங்களுக்கு நாசம் உண்டாகட்டும்! இவர் எனது சகோதரர் ஹாஷிமின் மகனார்'' என்றார். மக்காவில் முதன் முதலாக மக்கள் அழைத்த அப்துல் முத்தலிப் என்ற அப்பெயலேயே ஷைபா பிரபலமானார். வாலிபமடையும் வரை முத்தலிபிடம் ஷைபா வளர்ந்தார். முத்தலிப் யமன் நாட்டில் 'ரதுமான்' என்ற ஊரில் மரணமடைந்த பின் அவரது பொறுப்பை அப்துல் முத்தலிப் ஏற்றார். மக்காவிலேயே தங்கி தங்களது முன்னோர் செய்து வந்த பணியைத் தொடர்ந்தார். தனது முன்னோரில் எவரும் பெற்றிராத மதிப்பையும் மரியாதையையும் பெற்றார். அவரை மக்கள் பெரிதும் நேசித்தனர். (இப்னு ஹிஷாம்)

முத்தலிபின் மரணத்திற்குப் பின் அப்துல் முத்தலிபிடமிருந்த கஅபாவின் உடமைகளை நவ்ஃபல் பறித்துக் கொண்டார். அப்துல் முத்தலிப், குறைஷியர்கள் சிலரிடம் சென்று இதில் தனக்கு உதவுமாறு வேண்டிக் கொண்டதற்கு அவர்கள் ''உமக்கும் உமது தந்தையின் சகோதரருக்குமிடையே உள்ள பிரச்சனையில் நாங்கள் தலையிட மாட்டோம்'' எனக் கூறி உதவ மறுத்துவிட்டனர். இதனால் அப்துல் முத்தலிப் நஜ்ஜார் கிளையினரான தனது தாய்மாமன்களுக்கு கடிதம் எழுதி உதவி தேடினார். அக்கடிதத்தில் தனது நிலைமைகளை உள்ளங்களை உருக்கும் கவிதைகளாக வடித்திருந்தார். உடனே அவரது மாமாவான அபூ ஸஅது இப்னு அதீ, எண்பது வீரர்களுடன் புறப்பட்டு மக்காவிலுள்ள 'அப்தஹ்' எனுமிடத்தில் தங்கினார். அப்துல் முத்தலிப் அவரிடம் சென்று ''நீங்கள் எனது வீட்டில் தங்குங்கள் என வேண்டிக் கொண்டபோது அவர் ''அல்லாஹ்வின் மீதாணையாக! நான் நவ்ஃபலை சந்திக்காமல் வரமாட்டேன்'' எனக் கூறிவிட்டார். அதன் பிறகு நவ்ஃபலிடம் அபூ ஸஅது வந்தார். அவர் ஹஜருல் அஸ்வத் அருகே சில குறைஷி பெரியவர்களுடன் அமர்ந்திருந்தார். அபூ ஸஅது வாளை உருவிய நிலையில் ''இந்த இல்லத்தின் இறைவன் மீதாணையாக! நீர் எனது சகோதரியின் மகனுடைய உடமைகளைத் திருப்பியளிக்க வில்லை என்றால் இந்த வாளை உமது உடலுக்குள் பாய்ச்சி விடுவேன்'' என்று கோபக்கனலுடன் கூறினார். அதற்கு நவ்ஃபல் ''சரி! கொடுத்து விடுகிறேன்'' என்று கூறி அதற்கு அங்கிருந்த குறைஷி பெரியவர்களைச் சாட்சிகளாக்கினார். அதன் பின்னரே அபூ ஸஅது அப்துல் முத்தலிபின் வீடு சென்று மூன்று நாட்கள் தங்கி, பின்னர் உம்ராவை முடித்து மதீனா திரும்பினார்.

இந்நிலையில் ஹாஷிம் கிளையாருக்கு எதிராக, தனக்கு உதவ வேண்டும் என அப்து ஷம்ஸ் இப்னு அப்து மனாஃப் கிளையாருடன் நவ்ஃபல் நட்பு ஒப்பந்தம் செய்துகொண்டார். மறு புறத்தில் அப்துல் முத்தலிபுக்கு நஜ்ஜார் கிளையினர் செய்த உதவிகளைப் பார்த்துக் கொண்டிருந்த குஜாஆவினர் கூறினர்: ''அவர் உங்களுக்கு மட்டும் வாரிசு அல்ல எங்களுக்கும் வாரிசு ஆவார். எனவே, அவருக்கு உதவ நாங்களே மிகத் தகுதியானவர்கள். (இதற்குக் காரணம் அப்துல் முத்தலிபின் பாட்டனார் அப்து மனாஃபுடைய தாய் குஜாஆ வமிசத்தைச் சேர்ந்தவராவார்) குஜாஆவினர் தாருந் நத்வாவுக்குள் சென்று அப்து ஷம்ஸ் மற்றும் நவ்ஃபலுக்கு எதிராக உங்களுக்கு உதவி செய்வோம் என ஹாஷிம் கிளையாரிடம்

நட்பு ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். இந்த நட்பு ஒப்பந்தமே பிற்காலத்தில் மக்கா வெற்றிகொள்வதற்கு காரணமாக அமைந்தது. (தபரீ)

இறை இல்லம் கஅபா சம்பந்தமாக அப்துல் முத்தலிப் இரு முக்கிய நிகழ்வுகளை சந்தித்தார்.

**ஜம்ஜம் கிணறு**

முதலாம் நிகழ்வு: அப்துல் முத்தலிபுக்குக் கனவில் ஜம்ஜம் கிணற்றின் இடம் காண்பிக்கப்பட்டு அதை தோண்டுமாறு உத்தரவிடப்பட்டது. அதை அவர் தோண்டியபோது ஜுர்ஹும் கோத்திரத்தினர் மக்காவிலிருந்து வெளியேற்றப்பட்டபோது அதனுள் போட்டு மூடியிருந்த வாள்களும் கவச சட்டைகளும் தங்கத்தாலான இரு மான் சிலைகளும் கிட்டின. அப்துல் முத்தலிப் வாள்களை உருக்கி கஅபாவின் கதவாக ஆக்கினார். இரு தங்க மான் சிலைகளையும் உருக்கி கதவின் மேல் தகடாக ஆக்கினார். பிறகு ஹஜ் பயணிகளுக்கு ஜம்ஜம் கிணற்று நீரை வழங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

ஜம்ஜம் கிணறு தோண்டப்பட்ட போது குறைஷியர்கள் அப்துல் முத்தலிபிடம் வந்து அதில் தங்களுக்கும் பங்களிக்க வேண்டுமென வாதிட்டனர். அவர் இது எனக்கு மட்டுமே உரித்தானது என்று கூறி அதை ஏற்க மறுத்துவிட்டார். அவர்கள் விடாப்பிடியாக தங்களுக்குப் பங்களித்தே தீரவேண்டுமென வலியுறுத்தினர். இறுதியாக, ஷாமில் பெரிதும் மதிக்கப்பட்ட ஸஃது ஹுதைம் என்ற கோத்திரத்தைச் சேர்ந்த குறி கூறும் பெண்ணிடம் தீர்ப்பு கேட்கும் முடிவுடன் ஷாம் தேசத்திற்கு கிளம்பினர். செல்லும் வழியில் தண்ணீர் தீர்ந்துவிடவே அப்துல் முத்தலிபுக்கு மட்டும் அல்லாஹ் மழை மூலம் தண்ணீரை வழங்கினான். குறைஷியர்கள் மீது ஒரு துளியும் மழை பொழியவில்லை. இதைக் கண்ட குறைஷியர்கள் ஜம்ஜம் கிணற்றில் அப்துல் முத்தலிபுக்கு உள்ள தனிப்பட்ட உரிமையை ஒப்புக் கொண்டு திரும்பினர். இச்சந்தர்ப்பத்தில் 'அல்லாஹ் தனக்கு பத்து ஆண் பிள்ளைகளை அளித்து அவர்கள் எனக்கு உதவும் வயதை அடைந்தால் அதில் ஒருவரை கஅபாவிற்கருகில் அல்லாஹ்விற்காக பலியிடுவதாக' அப்துல் முத்தலிப் நேர்ச்சை செய்து கொண்டார். (இப்னு ஹிஷாம்)

**யானைப் படை**

இரண்டாம் நிகழ்வு: நஜ்ஜாஷி மன்னரால் யமன் நாட்டு ஆளுநராக நியமிக்கப்பட்ட 'அப்ரஹா' புனித கஅபாவைப் போன்றதொரு ஆலயத்தைத் தானும் உருவாக்க விரும்பி 'ஸன்ஆ' நகரத்தில் பிரம்மாண்டமான கிறிஸ்துவ ஆலயம் (உாரசஉா) ஒன்றை நிர்மாணித்தான். மக்காவிற்குச் செல்லும் ஹஜ் பயணிகளைத் தனது சர்ச்சுக்குத் திருப்பிவிட முயற்சித்தான். இதுபற்றி கினானா கிளையைச் சேர்ந்த ஒரு மனிதர் கேள்விப்பட்டு இரவோடு இரவாக அந்த சர்ச்சுக்குள் புகுந்து அதனை அசுத்தப்படுத்தி விட்டார். அதைக் கண்ட அப்ரஹா கோபத்தால் கொதித்தெழுந்தான். 60,000 வீரர்கள் கொண்ட பெரும் படையுடன் பெரிய யானை ஒன்றில் அமர்ந்தவாறு கஅபாவை இடித்துத் தகர்க்க வேண்டும் என்ற எண்ணத்துடன் கிளம்பினான். அவனது படையில் 9 அல்லது 13 யானைகள் இருந்தன. அவன் யமனிலிருந்து கிளம்பி 'முகம்மஸ்' என்ற இடத்தில் தனது படையை ஒழுங்குபடுத்தி யானைகளைத் தயார் செய்து மக்காவினுள் நுழைய ஆயத்தமானான். மினா மற்றும் முஜ்தலிஃபாவுக்கிடையே உள்ள 'முஹஸ்ஸிர்' என்ற பள்ளத்தாக்கை அடைந்ததும் அவன் வாகனித்த யானை தரையில் மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டது. அதனைத் தெற்கு, வடக்கு மற்றும் கிழக்குத் திசை நோக்கி செலுத்தப்பட்டால் விரைந்து சென்றது. ஆனால், கஅபாவை நோக்கிச் செல்ல மறுத்துவிட்டது.

அந்நிலையில் அல்லாஹ் அவர்கள் மீது சிறிய பறவைகளைக் கூட்டம் கூட்டமாக அனுப்பி வைத்தான். அவை சுடப்பட்ட கற்களை அவர்கள் மீது எறிந்தன. அதன் மூலம் அவர்களை

தின்னப்பட்ட வைக்கோல்களைப் போன்று அல்லாஹ் ஆக்கிவிட்டான். இப்பறவைகள் சிறிய குருவிகளைப் போன்று இருந்தன. அவை ஒவ்வொன்றிடமும் பட்டாணியைப் போன்ற மூன்று கற்கள் இருந்தன. ஒன்று அதன் அலகிலும், இரண்டு அதன் இரு கால்களிலும் இருந்தன. அது எவர்மீது விழுந்ததோ அம்மனிதன் உறுப்புகள் துண்டிக்கப்பட்டு மரணமடைந்தான். கற்கள் வீசப்படாத சிலரும் இருந்தனர். அவர்கள் ஒருவர் மீது ஒருவர் விழ தப்பி ஓடினார்கள். வழியிலேயே ஒவ்வொருவராக வீழ்ந்து மரணமடைந்தனர். அப்ரஹாவுக்கு அல்லாஹ் ஒரு வியாதியை ஏற்படுத்தினான். அதன் காரணமாக அவனது ஒவ்வொரு விரலும் கழன்று விழ ஆரம்பித்தன. அவன் ஸன்ஆவை அடைந்தபோது ஒரு குருவி குஞ்சை போன்று சுருங்கி விட்டான். பிறகு அவனது மார்புப் பகுதியிலிருந்து இருதயம் வெளியாகி துடிதுடித்துச் செத்தான்.

அப்ரஹா கஅபாவை தகர்க்க வந்தபோது மக்காவில் வசித்த குறைஷியர்கள் அனைவரும் அப்படைகளை எதிர்க்க அஞ்சி மலை உச்சிகளிலும் கணவாய்களிலும் சென்று பதுங்கிக் கொண்டனர். அந்தப் படைகள் மீது அல்லாஹ்வின் தண்டனை இறங்கியதைக் கண்ட பின்பே அவர்கள் நிம்மதியுடன் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினர். (இப்னு ஹிஷாம்)

இந்நிகழ்ச்சி நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு 50 அல்லது 55 நாட்களுக்கு முன் முஹர்ரம் மாதத்தில் (ஈஸவி ஆண்டு 571 பிப்ரவரி மாதம் கடைசியில் அல்லது மார்ச் மாத ஆரம்பத்தில்) நடைபெற்றது. அல்லாஹ் தனது நபி மற்றும் புனித வீட்டின் மகத்துவத்தை வெளிப்படுத்துவதற்கான தொடக்கமாக இந்நிகழ்ச்சி அமைந்தது. ஏனெனில், பைத்துல் முகத்தஸ் முஸ்லிம்களின் வசம் இருந்தும் இருமுறை இணைவைப்பவர்களால் ஆக்கிரமிக்கப்பட்டது. 1) புக்து நஸ்ர் கி.மு. 587 ஆம் ஆண்டிலும் 2) ரோமானியர்கள் கி.பி. 70 ஆம் ஆண்டிலும் கைப்பற்றினர். அக்காலத்தில் கிருஸ்துவர்களே (ஈஸா (அலை) அவர்களை ஈமான் கொண்ட) முஸ்லிம்களாக இருந்தனர். ஆனால், மக்காவாசிகள் நிராகரிப்பாளர்களாக, இணைவைப்பவர்களாக இருந்தும் ஹபஷாவைச் சேர்ந்த கிருஸ்துவர்கள் முஸ்லிம்களாக இருந்தும் அவர்களால் கஅபாவைக் கைப்பற்ற முடியவில்லை.

அப்ரஹாவின் யானைப் படைகளை அல்லாஹ் அழித்த செய்தி பாரசீகம், ரோம் போன்ற உலகின் பெரும்பாலான பகுதிகளை விரைவாகச் சென்றடைந்தது. ஏனெனில், ஹபஷியர் ரோம் நாட்டுடன் வலுவான தொடர்பு வைத்திருந்தனர். அவ்வாறே பாரசீகர்களின் பார்வை ரோமர்களின் மீது எப்போதும் இருந்தது. ரோமர்களுக்கும் அவர்களுடன் நட்பு கொண்டவர்களுக்கும் ஏற்படும் நிகழ்வுகளைத் துல்லியமாகக் கண்காணித்து வந்தனர். இந்த யானைச் சம்பவம் பற்றி அறிந்தவுடன் பாரசீகர்கள் விரைந்து சென்று யமனைக் கைப்பற்றினர். அக்காலத்தில் பாரசீகமும் ரோமும் நாகரீக உலகின் முன்னோடிகளாகத் திகழ்ந்தன. யானைச் சம்பவம் உலக மக்களின் பார்வையை கஅபாவின் பக்கம் திருப்பி அதன் மாண்புகளையும், அதையே அல்லாஹ் புனித பூமியாகத் தேர்ந்தெடுத்துள்ளான் என்பதையும் உணரச் செய்தது.

புனித மண்ணில் இணைவைப்பவர்களுக்கு அல்லாஹ் உதவி செய்த இந்நிகழ்ச்சி ஒரு மறைமுகக் கருத்தைச் சுட்டிக்காட்டுகிறது. அதாவது, யாரேனும் இப்புனித மண்ணில் இருந்துகொண்டு தன்னை இறைவனின் தூதர் என வாதிட்டால் அவர் உண்மையாளராகத்தான் இருக்க முடியும். ஏனெனில், நிச்சயமாக அவர் புனித மண்ணில் பொய்யுரைக்க முடியாது. அவ்வாறு கூறினால் அவரை அல்லாஹ்வே யானைப் படையை முறியடித்தது போல அழித்துவிடுவான்.

அப்துல் முத்தலிபுக்கு பத்து ஆண் பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் 1) ஹாஸ், 2) ஜுபைர், 3) அபூ தாலிப், 4) அப்துல்லாஹ், 5) ஹம்ஜா, 6) அபூ லஹப், 7) கைதாக், 8) முகவ்விம், 9) ழிரார், 10) அப்பாஸ்.

அப்துல் முத்தலிபுக்கு ஆறு பெண் பிள்ளைகளும் இருந்தனர். அவர்கள்: 1) உம்மு ஹகீம் என்ற ‘பைழாவு‘‘, 2) பர்ரா, 3) ஆதிகா, 4) ஸஃபிய்யா, 5) அர்வா, 6) உமைமா. (தல்கீஹ், இப்னு ஹிஷாம்)

### 3. அப்துல்லாஹ்

இவர்தான் நபி (ஸல்) அவர்களின் தந்தையார். அவர்களது தாயாரின் பெயர் ஃபாத்திமா பின்த் அம்ரு இப்னு ஆம்த் இப்னு இம்ரான் இப்னு மக்ஜூம் இப்னு யகளா இப்னு முர்ரா என்பதாகும். அப்துல் முத்தலிபின் மக்களில் ‘அப்துல்லாஹ்’ மிக அழகிய தோற்றமுடையவராகவும், ஒழுக்கச் சீலராகவும், தந்தையின் பிரியத்திற்குரியவராகவும் இருந்தார். அவரே ‘தபீஹ்’ (பலியிடப்பட்டவர்) என்ற பெயரையும் பெற்றவர். அப்துல் முத்தலிப் தனது பிள்ளைகள் வாலிப வயதை அடைந்தபோது தன்னுடைய நேர்ச்சையைப் பற்றி அவர்களிடம் தெரிவித்தார். பிள்ளைகள் அனைவரும் அதை ஒப்புக் கொண்டனர். அவர்களில் எவரைப் பலியிடுவது என்பது பற்றி சீட்டுக் குலுக்கிப் பார்த்தபோது அதில் அப்துல்லாஹ்வின் பெயர் வந்தது. அவர் தனது நேசமிகு மகன் என்பதால் அப்துல் முத்தலிப் ‘‘அல்லாஹ்வே! அப்துல்லாஹ்வை அறுக்கவா? அவருக்குப் பதிலாக நூறு ஒட்டகைகளை அறுக்கவா’’? என்று கேட்டு அவ்வாறே எழுதி குலுக்கிப்போட்டு எடுத்ததில் நூறு ஒட்டகை என எழுதப்பட்ட சீட்டு வெளியானது.

சிலருடைய கூற்று என்னவெனில், அப்துல் முத்தலிப் அம்புகளில் தனது பிள்ளைகளின் பெயர்களை எழுதி ஹுபுல் சிலையின் தலைமை பூசாரியிடம் கொடுத்தார். அவர் குலுக்கி எடுத்த அம்புகளில் அப்துல்லாஹ்வின் பெயர் எழுதப்பட்டிருந்தது. உடனே அப்துல் முத்தலிப் அப்துல்லாஹ்வை பலியிட கஅபாவுக்கு அழைத்துச் சென்றார். அவரைக் குறைஷியர்கள் தடுத்தனர். குறிப்பாக மக்ஜூம் கிளையைச் சேர்ந்த அப்துல்லாஹ்வின் தாய்மாமன்களும், அப்துல்லாஹ்வின் சகோதரர் அபூதாலிபும் தடுத்தனர். அப்துல் முத்தலிப் அவர்களிடம் ‘‘நான் செய்த நேர்ச்சையை எவ்வாறு நிறைவேற்றுவது?’’ என்றார். அவர்கள் ‘‘குறி சொல்லும் பெண்ணிடம் இதுபற்றி ஆலோசனைக் கேள்’’ என்று கூறினர். அதை ஏற்று அவளிடம் சென்றபோது ‘‘அப்துல்லாஹ்வின் பெயரை ஒரு சீட்டிலும், பத்து ஒட்டகைகள் என்பதை மற்றொரு சீட்டிலும் எழுதிப் போட்டு அப்துல்லாஹ்வின் பெயர் வந்தால் அல்லாஹ் திருப்தியடையும் வரை பத்துப் பத்தாக அதிகரித்துச் செல்லுங்கள். எப்பொழுது ஒட்டகைகளின் சீட்டு வருமோ அத்தனை ஒட்டகைகளை பலியிடுங்கள்’’ எனக் கூறினாள். பத்து ஒட்டகைகளுடன் அப்துல்லாஹ்வின் பெயரை எழுதிக் குலுக்கிப் போட்டபோது அப்துல்லாஹ்வின் பெயரே வந்தது. அப்துல் முத்தலிப் பத்துப் பத்தாக ஒட்டகைகளின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டே சென்றார். நூறு ஒட்டகைகளா? அப்துல்லாஹ்வா? என எழுதிக் குலுக்கிப் போட நூறு எண்ணிக்கை சீட்டு குலுக்கலில் வந்தது. எனவே, நூறு ஒட்டகைகள் பலியிடப்பட்டன. இந்த முறையை அனைவரும் பயன்படுத்திக்கொள்ள பொது அனுமதி வழங்கப்பட்டது. அதுவரை குறைஷியரிடமும் அரபியரிடமும் ஒரு மனிதனின் கொலைக்கான நஷ்டஈடு பத்து ஒட்டகைகளாக இருந்தன. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு நூறு ஒட்டகைகளாக உயர்த்தப்பட்டன. இஸ்லாமும் அதனை அங்கீகத்தது. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ‘‘நான் பலி கொடுக்கப்பட்ட இருவரின் மகன்’’ அதாவது இஸ்மாயீல் (அலை) மற்றும் தந்தை அப்துல்லாஹ்வை குறித்து இவ்வாறு கூறினார்கள். (தபரீ, இப்னு ஹிஷாம்)

அப்துல்லாஹ்வுக்கு ‘ஆமினா’ என்ற பெண்மணியை துணைவியாக அப்துல் முத்தலிப் தேர்ந்தெடுத்தார். ஆமினா, வஹப் இப்னு அப்துமனாஃப் இப்னு ஜுஹ்ரா இப்னு கிலாப் உடைய மகளாவார். அக்காலத்தில் அவர் வமிசத்தாலும் மதிப்பாலும் குறைஷியரில் உயர்ந்த பெண்மணியாகத் திகழ்ந்தார். அவரது தந்தை ஜுஹ்ரா கிளையாரின் தலைவராக இருந்தார். அப்துல்லாஹ் மக்காவில் தனது மனைவியுடன் வாழ்ந்தார். சில காலங்களுக்குப் பிறகு

அவரை அப்துல் முத்தலிப் பேரீச்சம் பழம் வாங்கி வர மதீனாவுக்கு அனுப்பினார். எதிர்பாராவிதமாக அவர் அங்கேயே மரணமடைந்தார்.

சில வரலாற்றாசியர்கள் கூறுவது: அப்துல்லாஹ் வியாபார நோக்கில் ஷாம் சென்றார். குறைஷியரின் ஒரு வியாபாரக் குழுவினருடன் திரும்பிக் கொண்டிருந்தபோது நோய் வாய்ப்பட்டு மதீனாவில் தங்கினார். நோய் அதிகரித்து அங்கேயே மரணமடைந்தார். 'நாபிகா' என்பவன் இல்லத்தில் அவரை அடக்கம் செய்யப்பட்டது. அப்போது அவரது வயது இருபத்தைந்தாக இருந்தது. அவரின் மரணம் நபி (ஸல்) அவர்களின் பிறப்புக்கு முன்பே நிகழ்ந்துவிட்டது. இதுவே பெரும்பாலான வரலாற்றாசியர்களின் கருத்தாகும். மற்றும் சிலர் நபி (ஸல்) அவர்கள் பிறந்து, குறைந்தது இரண்டு மாதங்களுக்குப் பின் அப்துல்லாஹ் இறந்தார் என்று கூறுகிறார்கள். அவரது மரணச் செய்தியை கேள்விப்பட்ட ஆமினா கல்லும் கசிந்துருகும் ஓர் இரங்கற்பாவைப் பாடினார்.

“ஹாஷிமின் மகன் பத்ஹாவின் சுற்றுப்புறத்தில் இப்போது இல்லை.
அவர் புதைக்குழிக்குள் போர்வையிலே புகுந்துவிட்டார்.
மரணம் அவரை அழைக்க அதற்கவர் பதில் தந்தார்.
மரணம் ஹாஷிமின் மைந்தன் போன்றவரை கூட விட்டு வைக்கவில்லையே!
அவன் கட்டிலை நண்பர்கள் அந்தியில் சுமந்தனர்.
நெருக்கடியால் ஒருவர் பின் ஒருவராக மாற்றினர்.
மரணம் அவரை அழித்தது.
ஆனால் அவரது புகழை அழிக்கவில்லை.
அவர் மிகுந்த இரக்க சிந்தையுள்ள வாரிவழங்கும் வள்ளலாக திகழ்ந்தார்.” (தபகாத் இப்னு ஸஅது)

ஐந்து ஒட்டகைகள், சிறிய ஆட்டு மந்தை, மற்றும் உம்மு அய்மன் என்ற புனைப் பெயருடைய 'பரகா' என்ற நீக்ரோ அடிமைப் பெண் ஆகியவற்றையே தனது குடும்பத்தாருக்கு அப்துல்லாஹ் விட்டுச் சென்றார்.

நபி (ஸல்) அவர்களை வளர்ப்பதில் இந்த நீக்ரோ பெண்மணியும் பங்கு கொண்டார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. (ஸஹீஹ் முஸ்லிம்)

## பிறப்பு மற்றும் நபித்துவத்துக்கு முந்திய நாற்பது ஆண்டுகள்

### பிறப்பு

அகிலத்தின் அருட்கொடை, இறைத்தூதர்களின் தலைவர் மக்காவில் பனூ ஹாஷிம் பள்ளத்தாக்கில் ரபீவுல் அவ்வல் மாதம், 9ஆம் நாள் திங்கட்கிழமை (கி.பி. 571 ஏப்ரல் மாதம் 20 அல்லது 22ம் தேதி) அதிகாலையில் பிறந்தார்கள். அது யானைச் சம்பவம் நடைபெற்ற முதலாவது ஆண்டு. மேலும் 'அனூ ஷேர்வான்' என்ற கிஸ்ராவின் ஆட்சி முடிவுக்கு வந்த நாற்பதாம் ஆண்டு. இக்கருத்தையே அறிஞர் முஹம்மது ஸுலைமான் உறுதிப்படுத்துகிறார். (ரஹ்மத்துல்லில் ஆலமீன்)

(நபி (ஸல்) அவர்கள் பிறந்தபோது அவர்களது நுபுவ்வத்துக்கு முன்னோடியாக ஆமினாவின் உடலிலிருந்து ஒரு பேரொளி வெளிப்பட்டது அதன் பிரகாசத்தில் ஷாமின் கோட்டைகள் ஒளிர்ந்தன நபி (ஸல்) அவர்கள் கத்னா செய்யப்பட்ட நிலையிலேயே பிறந்தார்கள் கிஸ்ரா உடைய மாளிகையில் பதிநான்கு மாடங்கள் அதிர்ந்து வீழ்ந்தன பல்லாண்டு காலமாக மஜூஸிகள் வணங்கி வந்த பிரம்மாண்டமான நெருப்புக் குண்டம் அணைந்துவிட்டது 'ஸாவா' என்ற நீர் தடாகத்தைச் சுற்றியுள்ள கிருஸ்துவ ஆலயங்கள் இடிந்து வீழ்ந்தன என்று கூறப்படும் இத்தகைய கூற்றுகளுக்கு உறுதியான சான்றுகள் ஏதும்

இல்லை. அந்த சமுதாயத்தவரும் தங்களது வரலாற்று நிகழ்வுகளில் இதைப்பற்றி குறிப்பிடவில்லை.)

குழந்தையைப் பெற்றெடுத்ததும் ஆமினா அந்த நற்செய்தியை அப்துல் முத்தலிபுக்குத் தெரிவித்தார். அவர் மகிழ்ச்சியுடன் தனது பேரரை கஅபாவுக்கு தூக்கிச் சென்று அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தி அவருக்காக பிரார்த்தித்தார். மேலும் அக்குழந்தைக்கு ''முஹம்மது'' எனப் பெயரிட்டார். இப்பெயர் எவருக்கும் இதற்கு முன் சூட்டப்படவில்லை. அரபியர்களின் வழக்கப்படி ஏழாம் நாள் நபி (ஸல்) அவர்களுக்கு கத்னா செய்யப்பட்டது. (தல்கீஹ், இப்னு ஹிஷாம்)

ஆமினாவிற்குப் பிறகு ஒரு வாரம் கழித்து நபி (ஸல்) அவர்களுக்குப் பாலூட்டிய முதல் பெண் அபூலஹப் உடைய அடிமைப் பெண் ஸுவைபிய்யா ஆவார். (இத்ஹாஃபுல் வரா) அப்போது ஸுவைபிய்யாவுக்கு 'மஸ்ரூஹ்' எனும் ஆண் குழந்தை பிறந்திருந்தது. நபி (ஸல்) அவர்களுக்கு முன் ஹம்ஜா அவர்களுக்கும் நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு அபூ ஸலமா இப்னு அப்துல் அஸதுக்கும் அவர் பாலூட்டியுள்ளார். (ஸஹீஹுல் புகாரி)

**ஸஅது கிளையாரிடம்**

அக்காலத்தில் நகர்ப்புற அரபியர்கள் தங்களது குழந்தைகளுக்குப் பாலூட்டுவதற்காகக் கிராமப்புற செவிலியர்களைத் தேர்ந்தெடுக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். குழந்தைகளுக்கு நகரத்திலுள்ள நோய் தொற்றிவிடாமலிருக்கவும், உடல் உறுதி பெற்று நரம்புகள் வலிமை அடையவும், தூய அரபி மொழியை திறம்படக் கற்றுக் கொள்ளவும் இந்த நடைமுறையைக் கையாண்டு வந்தனர். தனது பேரருக்குரிய செவிலித் தாயை அப்துல் முத்தலிப் தேடினார். இறுதியாக ஸஅத் இப்னு பக்ர் எனும் கோத்திரத்தைச் சேர்ந்த 'ஹலீமா பின்த் அபூ துவைப் அப்துல்லாஹ் இப்னுல் ஹாரிஸ்' என்ற பெண்ணிடம் ஒப்படைத்தார். அவரது கணவர் ஹாரிஸ் இப்னு அப்துல் உஜ்ஜா என்பவராவார். இவருக்கு 'அபூ கபிஷா' என்ற புனைப்பெயரும் உண்டு.

ஹாரிஸின் பிள்ளைகளான அப்துல்லாஹ், அனீஸா, ஷைமா என்ற புனைப் பெயர் கொண்ட ஹுதாபா, ஆகியோர் நபி (ஸல்) அவர்களின் பால்குடி சகோதர சகோதரிகள் ஆவர். இதில் ஷைமா என்பவர் நபி (ஸல்) அவர்களை தூக்கி வளர்த்தவர் ஆவார். நபி (ஸல்) அவர்களின் பெரியதந்தையான ஹாரிஸின் மகன் அபூ ஸுஃப்யானும் நபி (ஸல்) அவர்களின் பால்குடி சகோதரர் ஆவார்.

நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தையான ஹம்ஜா அவர்களும் ஸஅத் குடும்பத்தாரிடம் பாலூட்டுவதற்காக ஒப்படைக்கப்பட்டிருந்தார். ஹம்ஜாவின் பால்குடி தாய் ஒரு நாள் நபி (ஸல்) அவர்களுக்கும் பாலூட்டினார். இதனால் ஹம்ஜா அவர்களும் நபி (ஸல்) அவர்களும் ஸஅத் குடும்பத்தைச் சேர்ந்த செவிலித்தாய் மற்றும் ஸுவைபிய்யா ஆகிய இருவர் மூலம் பால் குடிச்சகோதரர்களாக இருந்தார்கள். (ஜாதுல் மஆது)

பால் குடிக்காலங்களில் ஹலீமா நபி (ஸல்) அவர்களிடம் பல அதிசய நிகழ்வுகளைக் கண்டார். அதை அவரே சொல்லக் கேட்போம். ''நான் எனது கணவர் மற்றும் கைக் குழந்தையுடன் ஸஅத் கிளையைச் சேர்ந்த சில பெண்களோடு பால் குடிக்கும் குழந்தைகளைத் தேடி வெளியில் புறப்பட்டோம். அது கடுமையான பஞ்ச காலம். நான் எனது வெள்ளைக் கழுதையில் அமர்ந்து பயணித்தேன். எங்களுடன் ஒரு கிழப்பெண் ஒட்டகம் இருந்தது. அதில் ஒரு சொட்டு பால் கூட கறக்க முடியாது. எங்களது குழந்தை பசியால் அழுது கொண்டிருந்ததால் இரவு முழுவதும் எங்களால் உறங்க முடியவில்லை. எனது மார்பில் அக்குழந்தையின் பசி தீர்க்கும் அளவு பாலும் இல்லை. எங்களது ஒட்டகையிலும் பாலில்லை. எனினும், அல்லாஹ்வின் புறத்திலிருந்து என் சிரமத்திற்கான விடிவையும் அவனது அருளையும் பெரிதும் எதிர்பார்த்திருந்தேன். நான் வாகனித்த பெண்

கழுதை மிகுந்த பலவீனத்துடன் மெதுவாகவே சென்றது. இது என்னுடன் வந்த குழுவினருக்கு பெரும் சிரமத்தை அளித்தது. ஒரு வழியாக மக்காவை அடைந்து பால்குடிக் குழந்தைகளைத் தேடி அலைந்தோம். எங்களுடன் சென்ற அனைத்துப் பெண்களிடமும் அல்லாஹ்வின் தூதரை காட்டப்பட்டது. எனினும், அக்குழந்தை அனாதை என்று கூறப்பட்டதால் அனைவரும் அதனை பெற்றுக்கொள்ள மறுத்து விட்டனர்.

ஏனெனில், குழந்தையின் தந்தையிடமிருந்தே நாங்கள் ஊதியம் பெறமுடியும். இவர்கள் அநாதை என்பதால் தாய் அல்லது பாட்டனார் எங்களுக்கு என்ன உதவி செய்ய முடியும்? என எங்களுக்குள் பேசிக் கொண்டோம். எனவே, அல்லாஹ்வின் தூதரை எடுத்துச் செல்ல எங்களில் எவரும் விரும்பவில்லை. என்னைத் தவிர என்னுடன் வந்த அனைத்துப் பெண்களுக்கும் குழந்தைகள் கிடைத்தனர். அனைவரும் திரும்பிச் செல்லத் தொடங்கியபோது நான் எனது கணவரிடம் ‘‘அனைவரும் குழந்தையுடன் திரும்புகையில் நான் வெறுங்கையுடன் செல்வதில் எனக்குச் சிறிதும் சம்மதமில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அந்த அனாதைக் குழந்தையை பெற்று வருகிறேன்’’ என்று கூறியதற்கு அவர் ‘‘தாராளமாகச் செய்யலாமே! அக்குழந்தையின் மூலம் அல்லாஹ் நமக்கு (பரக்கத் செய்யலாம்) வளம் தரலாம்’’ என்றார். நான் அங்கு சென்று குழந்தையை வாங்கி வந்தேன். எனக்கு வேறு எந்தக் குழந்தையும் கிட்டவில்லை என்ற காரணத்தால் மட்டுமே நான் அக்குழந்தையை வாங்கிக் கொண்டேன்.

நான் தங்கியிருந்த இடத்திற்குத் திரும்பினேன். அக்குழந்தையை எனது மடியில் வைத்தவுடன் எனது மார்புகளில் பால் சுரந்தது. அக்குழந்தை வயிறு நிரம்ப பால் அருந்தியது. அதன் சகோதரராகிய (எனது குழந்தையும்) பாலருந்தியது. பிறகு இருவரும் உறங்கிவிட்டனர். அதற்கு முன் நாங்கள் எங்களது குழந்தையுடன் உறங்க முடிந்ததே இல்லை. எனது கணவர் எங்களது கிழ ஒட்டகையை நோக்கிச் சென்றார். அதன் மடி பாலால் நிரம்பியிருந்தது. அதை கறந்து நானும் எனது கணவரும் பசிதீரக் குடித்தோம். அன்றிரவை நிம்மதியாகக் கழித்தோம். காலையில் எனது கணவர்: ‘ஹலீமாவே அல்லாஹ்வின் மீதாணையாக! நீ மிகவும் பரக்கத் (வளம்) பொருந்திய ஒரு குழந்தையை அடைந்திருக்கிறாய்’ என்றார். அதற்கு நான் ‘அப்படித்தான் நானும் நம்புகிறேன்’ என்றேன்.

பிறகு நாங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். எனது பெண் கழுதையில் அக்குழந்தையையும் அமர்த்திக் கொண்டேன். எனது பெண் கழுதை என்னுடன் வந்த குழுவினர் அனைவரின் கழுதைகளையும் முந்திக் கொண்டு சென்றது. அப்பெண்கள் என்னை நோக்கி ‘‘அபூ துவைபின் மகளே! உனக்கு என்ன நேர்ந்தது. எங்களுடன் மெதுவாகச் செல்! நீ வரும்போது வாகனித்து வந்த கழுதைதானா இது?’’ என்றனர். ‘‘நான் அல்லாஹ்வின் மீதாணையாக! அதுதான் இது’’ என்றேன். அவர்கள் ‘‘நிச்சயமாக என்னவோ நேர்ந்துவிட்டது’’ என்றனர்.

எங்களது ஊருக்குத் திரும்பினோம். அல்லாஹ்வின் பூமியில் எங்களது பகுதியைப் போன்றதொரு வறண்ட பூமியை நான் கண்டதில்லை. ஆனால், மேய்ச்சலுக்கு செல்லும் எனது ஆடுகள் மாலையில் வீடு திரும்பும்போது கொழுத்து மடி சுரந்து திரும்பும். அதை கறந்து அருந்துவோம். எங்களைத் தவிர வேறு எவரும் தங்களது ஆடுகளில் ஒரு துளிப் பால் கூட கறக்க முடியாது. அவர்களது ஆடுகளின் மடிகள் வரண்டிருந்தன. எங்கள் சமூகத்தில் அனைவரும் தங்களது இடையர்களிடம் ‘உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள் ஹலீமாவின் இடையர் மேய்க்கும் பகுதிகளுக்குச் சென்று மேய்த்து வாருங்கள்!’ என்று சொல்வார்கள். இருப்பினும் எனது ஆடு வயிறு நிரம்பி மடி சுரந்து வரும்போது அவர்களுடைய ஆடுகள் வயிறுகள் ஒட்டிப் போய் காய்ந்த மடியுடன் திரும்பி வந்தன.

இவ்வாறு அக்குழந்தைக்கு பால்குடி மறக்கடிக்கும் வரையிலான இரண்டு வருடங்கள் வரை அல்லாஹ்விடமிருந்து பல நன்மைகளையும் வளங்களையும் அனுபவித்துக் கொண்டிருந்தோம். இரண்டு வயதில் ஏனைய குழந்தைகளைவிட மிக உறுதியாகவும்

வலிமையாகவும் அக்குழந்தை வளர்ந்திருந்தது. அவரிடமிருந்து ஏராளமாக நன்மைகளை நாங்கள் அனுபவித்துக் கொண்டிருந்ததால் அவரை எங்களுடன் தங்க வைத்துக் கொள்ள மிகுந்த ஆவல் கொண்டோம். எனினும், தவணை முடிந்து விட்டமையால் அவரது தாயாரிடம் அழைத்துச் சென்றோம். அவரது தாயாரிடம் ‘இந்த அருமைக் குழந்தை இன்னும் திடகாத்திரமாக வளரும் வரை என்னிடமே விட்டுவிடுங்கள். மக்காவில் ஏதேனும் நோய் அவரைப் பீடித்து விடுமென நான் அஞ்சுகிறேன்’ என்று கூறினேன். எனது தொடர்ச்சியான வற்புறுத்தலால் குழந்தையை என்னிடமே ஒப்படைத்து விட்டார்.” (இப்னு ஹிஷாம்)

### நெஞ்சு திறக்கப்படுதல்

இவ்வாறே நபி (ஸல்) அவர்கள் மீண்டும் ஸஅத் கிளையாரிடம் அழைத்து வரப்பட்டார்கள். சில மாதங்களுக்குப் பின் அவர்களது நெஞ்சு திறக்கப்பட்ட நிகழ்ச்சி நடைபெற்றதென இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார். (மற்ற வரலாற்றாசியர்கள் நபி (ஸல்) அவர்களின் நான்காவது வயதில் தான் அந்த நிகழ்ச்சி நடைபெற்றது என்பர்.)

அந்த நிகழ்ச்சி குறித்து அனஸ் (ரழி) கூறுவதாவது: நபி (ஸல்) அவர்கள் சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தபோது வானவர் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வருகைத் தந்து நபி (ஸல்) அவர்களை மயக்குமுறச் செய்து, நெஞ்சைத் திறந்து இதயத்தை வெளியே எடுத்தார். அதில் ஒட்டியிருந்த ஒரு துண்டை அகற்றிவிட்டு ‘இது உம்மிடமிருந்த ஷைத்தானின் பங்காகும்’ என்று கூறி, தங்கத் தட்டில் இதயத்தை வைத்து அதில் ஜம்ஜம் தண்ணீரை ஊற்றிக் கழுவினார். பிறகு அந்த இதயப் பகுதிகளை ஒன்றிணைத்து நெஞ்சினுள் திரும்பப் பதித்துவிட்டார். இதைக்கண்ட சிறுவர்கள் ஹலீமாவிடம் ஓடோடி வந்து “முஹம்மது கொலை செய்யப்பட்டார்” என்றனர். நபி (ஸல்) அவர்களை நோக்கி அனைவரும் விரைந்தனர். அவர் நிறம் மாறிக் காட்சியளித்தார்.

அனஸ் (ரழி) கூறினார்கள்: “நபி (ஸல்) அவர்களின் நெஞ்சில் தைக்கப்பட்டதற்கான அடையாளத்தை நான் கண்டேன்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

### பாசமிகு தாயாரிடம்

இந்நிகழ்ச்சியால் அதிர்ந்துபோன ஹலீமா நபி (ஸல்) அவர்களை அவரது தாயாரிடம் ஒப்படைத்து விட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் ஆறு வயது வரை தாயாரிடமே வளர்ந்தார்கள்.

ஆமினா, மதீனாவில் மரணமடைந்த தனது அன்புக் கணவன் கப்ரைக் கண்டுவர விரும்பினார். தனது குழந்தை முஹம்மது, ஊழியப் பெண் உம்மு அய்மன் மற்றும் பொறுப்பாளர் அப்துல் முத்தலிப் ஆகியோருடன் மக்காவிலிருந்து 500 கிலோ மீட்டர் தூரம் உள்ள மதீனாவிற்கு பயணம் மேற்கொண்டார். மன அமைதிக்காக ஒரு மாதம் அங்கு தங்கிவிட்டு மக்காவுக்கே மீண்டும் பயணமானார். வழியில் ஆமினா நோய் வாய்ப்பட்டார். பிறகு நோய் அதிகமாகி மக்காவுக்கும் மதீனாவுக்குமிடையே ‘அப்வா’ என்ற இடத்தில் மரணமடைந்தார். (இப்னு ஹிஷாம்)

### பரிவுமிக்க பாட்டனாரிடம்

நபி (ஸல்) அவர்களை அப்துல் முத்தலிப் மக்காவுக்கு அழைத்து வந்தார். அவர் அனாதையான தன் பேரர் மீது அன்பையும் பாசத்தையும் ஊட்டி வளர்த்தார். பிறக்கும் முன் தந்தையை இழந்த சோகம் ஒரு புறம் வருத்திக்கொண்டிருக்க, தற்போது தாயையும் இழந்து அந்த சோகம் இரட்டிப்பாகி விட்டது. தனது பிள்ளைகளை விட பேரர் மீது மிகுந்த அன்பு செலுத்தினார். அவரை தனிமையில் விட்டுவிடாமல் எல்லா நிலையிலும் தன்னுடன் வைத்து தனது பிள்ளைகள் அனைவரையும்விட அவருக்கு முன்னுமை அளித்து வந்தார்.

புனித கஅபாவின் நிழலில் அப்துல் முத்தலிபுக்கென ஓர் விரிப்பு விரிக்கப்பட்டிருக்கும். அவர் வரும்வரை அவரது பிள்ளைகள் அந்த விரிப்பைச் சுற்றி அமர்ந்திருப்பர். அவருக்கு மரியாதை செய்யும் விதமாக எவரும் அதில் அமரமாட்டார்கள். சிறுவரான நபி (ஸல்) அவர்கள் அங்கு வந்து விரிப்பில் அமர்வார்கள். அவரை அதிலிருந்து அப்துல் முத்தலிபின் பிள்ளைகள் அகற்றிவிட முயல்வார்கள். இதை அப்துல் முத்தலிப் பார்த்துவிட்டால் ''எனது அருமைப் பேரரை விட்டுவிடுங்கள்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவருக்கென ஒரு தனித் தன்மை இருக்கிறது'' என்று கூறி, தன்னுடன் விரிப்பில் அமர்த்தி அவரது முதுகை தடவிக் கொடுப்பார். அவரது செயல்களையும் அசைவுகளையும் கண்டு களிப்படைவார். (இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) அவர்களுக்கு 8 ஆண்டு இரண்டு மாதங்கள் பத்து நாள்கள் ஆனபோது பாட்டனார் அப்துல் முத்தலிப் மக்காவில் மரணமடைந்தார். தனது மரணத்திற்கு முன்பே சிறுவரை அவரது தந்தை அப்துல்லாஹ்வின் உடன்பிறந்த சகோதரர் அபூதாலிப் பராமரிக்க வேண்டுமென விரும்பினார். (இப்னு ஹிஷாம்)

### பிரியமான பெரியதந்தையிடம்

சகோதரன் மகனைப் பராமரிக்கும் பொறுப்பை அபூதாலிப் மிகச் சிறப்பான முறையில் நிறைவேற்றினார். தனது பிள்ளைகளில் ஒருவராக அவரை ஆக்கிக் கொண்டார். அவருக்கு மிகுந்த முக்கியத்துவமும் கண்ணியமும் அளித்து வந்தார். ஏறத்தாழ நாற்பது ஆண்டுகள் பாதுகாத்து அரவணைத்தார். நபி (ஸல்) அவர்களுக்காகவே பிறரின் நட்பையும் வெறுப்பையும் சம்பாதித்துக் கொண்டார். இதன் விவரங்களை உரிய இடங்களில் காண்போம்.

### மாநபிக்காக மழைபொழிதல்

ஜல்ஹுமா இப்னு உர்ஃபுதா கூறுகிறார்: கடும் பஞ்ச காலத்தில் நான் மக்கா சென்றேன். ''கணவாய்கள் வரண்டுவிட்டன. பிள்ளைக்குட்டிகள் வாடுகின்றனர். வாருங்கள்! மழை வேண்டி பிரார்த்தனை செய்யுங்கள்' என்று குறைஷியர்கள் அபூதாலிபிடம் கூறினர். அவர் வெளியேறி வந்தார். அவருடன் மேகம் மறைக்காத சூரியனின் பிரகாசமுடைய ஒரு சிறுவரும் இருந்தார். மேலும், சிறுவர்கள் பலர் அபூதாலிபைச் சுற்றிலும் இருந்தனர். அபூதாலிப் அச்சிறுவரை தூக்கி அவரின் முதுகை சேர்த்துவைத்து பிரார்த்தித்தார். அபூதாலிபின் தோள் புஜத்தை அச்சிறுவர் பற்றிக் கொண்டார். மேகமற்றுக் கிடந்த வானத்தில் அங்கும் இங்குமிருந்து மேகங்கள் ஒன்று திரண்டன. பெரும் மழையால் கணவாய்களில் வெள்ளம் கரை புரண்டோடியது. மக்கா நகரும் அதன் சுற்றுப்புறங்களும் பசுமையாக மாறின. இதை சுட்டிக்காட்டும் விதமாக அபூதாலிப் கூறினார்.

அவர் அழகரல்லவோ
அவரை முன்னிறுத்தி நாங்கள் மழை வேண்டுவோம்
அவர் அநாதைகளின் அரணல்லவோ
கைம்பெண்களின் காவலரல்லவோ. (மஜ்மவுஜ்ஜவாயித்)

### துறவி பஹீரா

நபி (ஸல்) அவர்களுக்கு 12 வயதாகும் போது அபூதாலிப் வியாபாரத்திற்காக 'ஷாம்' தேசம் சென்றார். அப்போது நபியவர்களையும் தன்னுடன் அழைத்துச் சென்றார். அவர்கள் ஷாம் நாட்டின் புஸ்ரா நகரை வந்தடைந்தனர். அங்கு 'பஹீரா' என்ற பிரபலமான துறவி ஒருவர் இருந்தார். அவரது பெயர் 'ஜர்ஜீஸ்' என்று சொல்லப்படுகிறது. அவர் எங்கும் வெளியில் செல்ல மாட்டார். எனினும், இந்த வியாபாரக் கூட்டம் புஸ்ரா சென்றதும் அவர்களை சந்திக்க வந்தார். வணிகக் கூட்டத்தைப் பிளந்துகொண்டு வந்து சிறுவரான நபி (ஸல்)

அவர்களின் கரத்தைப் பற்றிக்கொண்டு “இதோ உலகத்தாரின் தலைவர்! இதோ உலகத்தாரின் இறைவனுடைய தூதர்! இவரை அல்லாஹ் அகிலத்தாருக்கு அருட்கொடையாக அனுப்புவான்” என்று கூறினார். அவரிடம் அபூதாலிபும் குறைஷிப் பெரியவர்களும் “இது எப்படி உமக்குத் தெரியும்?” என வினவினர். அவர் “நீங்கள் கணவாய் வழியாக வந்தபோது கற்களும் மரங்களும் சிரம் பணிந்தன. அவை இறைத்தூதர்களுக்கே தவிர வேறு எவருக்கும் சிரம் பணியமாட்டா. மேலும், அவரது புஜத்துக்குக் கீழிருக்கும் ஆப்பிளைப் போன்ற இறுதித் தூதரின் முத்திரையைக் கொண்டும் நான் அவரை அறிவேன். எங்களது வேதங்களில் அது பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது” என்று கூறினார். பிறகு அவர்களுக்கு விருந்தளித்து உபசரித்தார். இச்சிறுவரை ஷாமுக்கு அழைத்துச் சென்றால் அங்குள்ள ரோமர்கள் மற்றும் யூதர்களால் இவருக்கு ஆபத்து ஏற்படலாம். எனவே, இவரை இங்கிருந்தே மக்கா திருப்பி அனுப்பி விடுங்கள் என்று பஹீரா அபூதாலிபிடம் கூறினார். அதற்கினங்க அபூதாலிப் நபி (ஸல்) அவர்களை சில வாலிபர்களுடன் மக்காவுக்கு அனுப்பி வைத்தார். (ஸுனனுத் திர்மிதி, தபரீ, முஸன்னஃப் அபீஷைபா, இப்னு ஹிஷாம், பைஹகீ)

### ஃபிஜார் போர்

நபி (ஸல்) அவர்களின் இருபதாவது வயதில் உக்காள் சந்தையில் குறைஷியரும் கினானாவும் கைஸ் அய்லான் குலத்தவருடன் சண்டையிட்டனர். அதற்கு ‘ஹர்புல் ஃபிஜார்’என்று சொல்லப்படும். அதன் காரணமாவது: கினானாவைச் சேர்ந்த ‘பர்ராழ்’என்பவன் கைஸ் அய்லானைச் சேர்ந்த மூன்று நபர்களைக் கடத்திச் சென்று கொலை செய்துவிட்டான். இந்தச் செய்தி உக்காள் சந்தையில் பரவியது. அங்கு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த இரு தரப்பினரும் சண்டையிட்டனர். குறைஷ் மற்றும் பனூ கினானாவுக்கு ‘ஹர்ப் இப்னு உமய்யா’ தலைமை தாங்கினார். போரின் ஆரம்பத்தில் கைஸ் தரப்பினருக்கு வெற்றி கிட்டியது. ஆனால், நடுப் பகலுக்குப்பின் நிலைமை கைஸுக்கு எதிராகத் திரும்பியது. இந்நிலையில் சில குறைஷியர்கள் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள விரும்பினர். எந்தத் தரப்பில் அதிக உயிர்ச் சேதம் ஏற்பட்டதோ அந்த அதிக எண்ணிக்கைக்கு மட்டும் நஷ்டஈடு தரவேண்டுமென்று ஒப்பந்தம் செய்து சமாதானமாயினர். இந்தப் போர் புனித மாதத்தில் ஏற்பட்டு அதன் கண்ணியத்தைக் குலைத்து விட்டதால் அதற்கு ‘பாவப்போர்’ எனப் பெயரிட்டனர். நபி (ஸல்) அவர்கள் இதில் கலந்துகொண்டு தந்தையின் சகோதரர்களுக்கு அம்பெடுத்துக் கொடுக்கும் பணியைச் செய்தார்கள். (இப்னு ஹிஷாம்)

### சிறப்புமிகு ஒப்பந்தம்

மேற்கூறப்பட்ட போருக்குப்பின் சங்கைமிக்க மாதமான துல் கஃதாவில் ‘ஹில்ஃபுல் ஃபுழூல்’ எனும் சிறப்புமிகு ஒப்பந்தம் ஏற்பட்டது. குறைஷி கோத்திரத்தைச் சேர்ந்த ஹாஷிம், முத்தலிப், அஸத் இப்னு அப்துல் உஜ்ஜா, ஜுஹ்ரா இப்னு கிலாப், தைம் இப்னு முர்ரா ஆகிய குடும்பத்தார் இதற்கான ஏற்பாட்டைச் செய்தனர். இவர்களில் அப்துல்லாஹ் இப்னு ஜத்ஆன் அத்தைமீ வயது முதிர்ந்தவராகவும் மதிப்புமிக்கவராகவும் இருந்ததால் அவர் வீட்டில் அனைவரும் ஒன்று கூடினர். மக்காவாசிகளாயினும் வெளியூர்வாசிகளாயினும் அவர்களில் எவருக்கேனும் அநீதி இழைக்கப் பட்டால் அவருக்கு முழுமையாக உதவி செய்து நீதி கிடைக்கச் செய்வதில் அனைவரும் இணைந்து முயற்சிக்க வேண்டும் என உடன்படிக்கை செய்து கொண்டனர். இவ்வுடன்படிக்கையில் நபி (ஸல்) அவர்களும் கலந்து கொண்டார்கள். இவ்வுடன்படிக்கையில் கலந்து கொண்டது பற்றி நபித்துவம் கிடைத்ததற்குப் பின் நபி (ஸல்) இவ்வாறு கூறினார்கள்: அப்துல்லாஹ் இப்னு ஜத்ஆன் வீட்டில் நடந்த ஒப்பந்தத்தில் நான் கலந்து கொண்டேன். எனக்கு செந்நிற ஒட்டகைகள் கிடைப்பதைவிட அந்த ஒப்பந்தத்தில் கலந்துகொண்டது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. இஸ்லாமின்

வருகைக்குப் பின்பும் எனக்கு (அதுபோன்ற) ஒப்பந்தத்திற்கு அழைப்பு விடுக்கப்பட்டால் அதை நான் ஒப்புக் கொள்வேன். (இப்னு ஹிஷாம்)

இந்த உடன்படிக்கையின் அடிப்படைத் தத்துவம் அறியாமைக் காலத்தில் இனவெறியினால் ஏற்பட்ட அநீதங்களை முடிவுக்குக் கொண்டு வருவதாகும். இவ்வுடன்படிக்கை ஏற்படக் காரணம்: ஜுபைத் கோத்திரத்தைச் சேர்ந்த ஒருவர் தனது வணிகப் பொருட்களுடன் மக்கா வந்தார். ஸஹ்மாவைச் சேர்ந்த ஆஸ் இப்னு வாயில் அவரிடமிருந்து சரக்குகளை வாங்கிக் கொண்டு அதற்கான விலையைக் கொடுக்க மறுத்துவிட்டார். பறிகொடுத்தவர் தனது நேச கோத்திரங்களாகிய அப்துத் தார், மக்ஜூம், ஸஹ்ம் ஆகியோரிடம் சென்று உதவி கேட்டபோது எவரும் அவரது கோரிக்கையை ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்ளவில்லை. உடனே அவர் அபூ குபைஸ் மலையில் ஏறிக்கொண்டு தனக்கிழைக்கப்பட்ட அநீதத்தை உரத்த குரலில் கவிதையாகக் கூறினார். அதைக் கேட்ட ஜுபைர் "இப்னு அப்துல் முத்தலிப் ஏன் இவ்வாறு இவர் கைவிடப்பட்டார்" என வினவினார்கள். அப்போதுதான் மேற்கூறப்பட்ட கோத்திரத்தார் இணைந்து இச்சிறப்புமிகு ஒப்பந்தத்தை நிறைவேற்றினர். அதன் பின் அனைவரும் ஆஸ் இப்னு வாயிலிடமிருந்து அந்த பாதிக்கப்பட்டவருக்கு அவரது உரிமையை பெற்றுத் தந்தனர். (தபகாத் இப்னு ஸஅது)

**உழைக்கும் காலம்**

நபி (ஸல்) அவர்கள் வாலிபத்தின் ஆரம்ப காலத்தில் குறிப்பிட்ட தொழில் எதையும் செய்து வரவில்லை. எனினும், ஸஅது கிளையாரின் ஆட்டு மந்தையை மேய்த்ததாக பல அறிவிப்பு களிலிருந்து தெரிய வருகிறது. அவ்வாறே மக்காவாசிகளின் ஆடுகளையும் மேய்த்து கூலியாக தானியங்களைப் பெற்று வந்தார்கள். (ஸஹீஹுல் புகாரி) வாலிபமடைந்தவுடன் ஆடு மேய்ப்பதை விட்டுவிட்டு ஸாம்ப் இப்னு அபூஸாம்ப் அல் மக்ஜூமி என்பவருடன் இணைந்து வணிகம் செய்யத் தொடங்கினார்கள். அவருக்கு நம்பிக்கைக்குரிய மிகச் சிறந்த தொழில் நண்பராக நபி (ஸல்) அவர்கள் திகழ்ந்தார்கள். மக்கா வெற்றி கொள்ளப்பட்ட நாளன்று அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். 'என் சகோதரரே!, என் தொழில் நண்பரே!" எனக் கூறி அவரை நபி (ஸல்) அவர்கள் வரவேற்றார்கள். (ஸுனன் அபூதாவூது, இப்னு மாஜா, முஸ்னது அஹ்மது)

நபி (ஸல்) அவர்கள் 25 வது வயதில் கதீஜா அவர்களின் வணிகப் பொருட்களுடன் ஷாம் சென்றார்கள்.

இதுபற்றி இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: கதீஜா பின்த் குவைலித் சிறப்பும் வளமும் மிக்க வியாபாரப் பெண்மணியாகத் திகழ்ந்தார். தனது வியாபாரத்திற்காக ஆட்களை வேலைக்கு அமர்த்தி அதில் கிடைக்கும் இலாபத்தின் ஒரு பகுதியை அவர்களுக்குத் தருவார். நபி (ஸல்) அவர்களின் வாய்மை, நம்பகத்தன்மை போன்ற நற்பண்புகளைப் பற்றி அன்னார் கேள்விப்பட்ட போது அவர்களை வரவழைத்து "எனது அடிமை மய்ஸராவுடன் வணிகப் பொருட்களை எடுத்துக் கொண்டு ஷாமில் வணிகம் செய்து வரவேண்டும். மற்ற வணிகர்களுக்குக் கொடுத்து வந்ததைவிட சிறப்பான பங்கை உங்களுக்குத் தருகிறேன்" என்ற கோரிக்கையை முன்வைத்தார். அதை நபி (ஸல்) அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

**கதீஜாவை மணம் புரிதல்**

நபி (ஸல்) அவர்கள் சிறப்பாக வணிகம் செய்து பெரும் வருவாயுடன் மக்கா திரும்பினார்கள். கதீஜா தங்களது பொருளில் இதற்குமுன் கண்டிராத பெரும் வளர்ச்சியைக் கண்டார். மேலும் மய்ஸராவும், தான் நபி (ஸல்) அவர்களிடம் கண்ட நற்பண்புகள், உயர் சிந்தனை, பேச்சில் உண்மை, நம்பகத்தன்மை ஆகியவற்றை கதீஜாவிடம் விவரித்தார். கணவரை இழந்திருந்த கதீஜாவை பல குறைஷித் தலைவர்கள் மணமுடிக்க விரும்பியபோது அதனை மறுத்து வந்த கதீஜா தனக்கு ஏற்ற கணவர் முஹம்மது (ஸல்) அவர்கள்தான் என

முடிவெடுத்தார். தனது எண்ணத்தை தோழி நஃபீஸா பின்த் முநப்பிஹ் இடத்தில் தெரிவித்தார். நஃபீஸா நபி (ஸல்) அவர்களிடம் கதீஜாவின் விருப்பத்தைக் கூற நபி (ஸல்) அவர்களும் அதை ஒப்புக் கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தனது தந்தையின் சகோதரர்களிடம் இதுபற்றிக் கூறினார்கள். அவர்கள் கதீஜாவின் தந்தையுடைய சகோதரரிடம் பேசி திருமணத்திற்கு முடிவு செய்தார்கள். ஷாமிலிருந்து திரும்பிய மூன்றாம் மாதத்தில் அவ்விருவருக்கும் திருமணம் நடைபெற்றது. அதில் ஹாஷிம் கிளையாரும் முழர் கோத்திரத்தின் தலைவர்களும் கலந்து கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் 20 மாடுகளை மஹ்ராகக் கொடுத்தார்கள். அப்போது கதீஜா (ரழி) அவர்களுக்கு வயது 40, நபி (ஸல்) அவர்களின் வயதோ 25! அவர் அறிவாலும் செல்வத்தாலும் குடும்பத்தாலும் மிகச்சிறந்த பெண்மணியாக விளங்கினார். நபி (ஸல்) அவர்களுக்கு இவரே முதல் மனைவி. இவர் மரணித்த பின்பே நபி (ஸல்) அவர்கள் வேறு பெண்ணை மணமுடித்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் பிள்ளைகளில் இப்றாஹீமைத் தவிர அனைவரும் அன்னை கதீஜாவுக்குப் பிறந்தவர்களே! முதல் குழந்தை காஸிம். இவருடன் இணைத்தே நபியவர்களுக்கு ‘அபுல் காஸிம்’ என்ற புனைப்பெயர் கூறப்படுகிறது. பிறகு ஜைனப், ருகைய்யா, உம்மு குல்ஸூம், ஃபாத்திமா, அப்துல்லாஹ் ஆகியோர் பிறந்தனர். இந்த அப்துல்லாஹ்வுக்கு தய்யிப், தார் என்ற வேறு பெயர்களும் உண்டு. ஆண் மக்கள் அனைவரும் சிறு வயதிலேயே மரணமடைந்தனர். பெண் மக்கள் அனைவரும் இஸ்லாம் வரும் வரை வாழ்ந்து, இஸ்லாமை ஏற்று ஹிஜ்ரத்தும் செய்தார்கள். ஃபாத்திமாவைத் தவிர்த்து மற்ற மூவரும் நபி (ஸல்) அவர்களின் காலத்திலேயே மரணமடைந்து விட்டனர். நபி (ஸல்) அவர்களின் மரணத்துக்குப் பின் ஆறுமாதம் கழித்து ஃபாத்திமா மரணமடைந்தார். (இப்னு ஹிஷாம், ஃபத்ஹுல் பாரி)

**கஅபாவை செப்பனிடுதல், நபி (ஸல்) அவர்கள் நடுவராகுதல்**

நபி (ஸல்) அவர்களின் 35வது வயதில் குறைஷியர்கள் கஅபாவைப் புதுப்பித்தனர். கஅபா, ஓர் ஆள் உயரத்திற்குப் பாறைகளால் கட்டப்பட்டிருந்தது. அது இஸ்மாயீல் (அலை) அவர்களின் காலத்திலிருந்தே மேல்முகடு இன்றி ஒன்பது முழம் கொண்டதாக இருந்தது. அதன் சுவரும் கட்டடங்களும் சிதிலமடைந்து இருந்தன. இந்நிலையில் கஅபாவினுள் வைக்கப்பட்டிருந்த பொக்கிஷங்களை ஒரு கூட்டம் திருடிச் சென்றது. நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதராவதற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன் மக்காவில் பெரும் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டதால் கஅபாவின் கட்டடம் மேலும் பாதிப்படைந்தது. அதன்மீது கொண்டிருந்த மரியாதையின் காரணமாக குறைஷியர்கள் அதைப் புதுப்பிக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாயினர். அதனை ஹலாலான (தூய்மையான) வருமானத்தைக் கொண்டே செப்பனிட வேண்டும் வட்டி, விபசாரம், திருட்டு போன்ற பொருட்களின் மூலமாக செப்பனிடக் கூடாது என அனைவரும் கூடி முடிவெடுத்தனர். இந்நிலையில் பழைய கட்டடத்தை எவ்வாறு இடிப்பது என அனைவரும் அஞ்சினர். வலீத் இப்னு முகீரா மக்ஜூமி கடப்பாரையை எடுத்து “அல்லாஹ்வே! நான் நன்மையை நாடியே இதைச் செய்கிறேன்” என்று கூறி ருக்னுல் யமானி, ருக்னுல் ஷாமியின் பகுதிகளை இடித்தார். அவருக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படாததைக் கண்ட குறைஷியர்கள் அச்சம் தெளிந்து, அவருடன் இணைந்து இடித்தனர்.

இறுதியாக, இப்றாஹீம் (அலை) அவர்கள் அமைத்த அஸ்திவாரம் தென்பட்டது. பிறகு கஅபாவை பல பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொரு கோத்திரத்தாரும் ஒரு பகுதியைக் கட்ட வேண்டுமென முடிவு செய்து ஒவ்வொரு கோத்திரத்தாரும் ‘பாகூம்’ என்ற ரோமானிய பொறியியல் வல்லுனரின் மேற்பார்வையில் கட்டத் தொடங்கினர். இறுதியாக, ஹஜ்ருல்

அஸ்வதின்'' இடம் வந்தபோது அதை அதற்குரிய இடத்தில் வைப்பது யார் என்பதில் பிரச்சனை எழுந்தது. அது பற்றிய சர்ச்சை நான்கு அல்லது ஐந்து நாட்களாகத் தொடர்ந்தது. சர்ச்சை கடுமையாகி போராக மாறிவிடும் அபாயம் எழுந்தது. அப்போது அபூ உமய்யா இப்னு முகீரா - மக்ஜூமி அம்மக்களிடம், ''இப்புனிதப் பள்ளிவாசலில் முதன்முதலாக நுழைபவரை நடுவராக்கி அவரது ஆலோசனையை ஒப்புக் கொள்ளுங்கள்'' என்று கூறினார். இக்கருத்தை அனைவரும் மனமார ஏற்றனர். அவர்கள் ஆவலுடன் காத்திருக்க நபி (ஸல்) அவர்களே முதலாமவராக நுழைந்தார்கள். அவர்களைக் கண்ட அம்மக்கள் ''இதோ முஹம்மது வந்துவிட்டார். இவர்தான் நம்பிக்கைக்குரியவர். இவரை நாங்கள் ஒப்புக் கொள்கிறோம்'' என்றனர். நபி (ஸல்) அவர்கள் தங்களுக்கு அருகில் வந்தவுடன் விவரத்தைக் கூறினர். நபி (ஸல்) அவர்கள் ஒரு விரிப்பை வரவழைத்து அதன் நடுவே ஹஜ்ருல் அஸ்வதை வைத்தார்கள். பிறகு சச்சரவிட்டுக் கொண்டிருந்த கோத்திரத்தாரின் தலைவர்களை அழைத்து விரிப்பின் ஓரங்களைப் பிடித்துத் தூக்குமாறு கூற, அதை அவர்கள் தூக்கினர். கஅபாவுக்கு அருகில் கொண்டு வந்தவுடன் தனது கரத்தால் ஹஜ்ருல் அஸ்வதை எடுத்து உரிய இடத்தில் வைத்தார்கள். இது அனைவரும் ஒப்புக் கொண்ட மிக அழகிய தீர்வாக அமைந்தது.

குறைஷியரிடம் ஹலாலான (தூய்மையான) செல்வம் குறைவாக இருந்ததால் வடபுறத்தில் ஆறு முழங்கள் அளவு விட்டுவிட்டு கஅபாவை கட்டி விட்டார்கள். அந்த இடத்துக்கு 'ஹதீம்' என்றும் 'ஹஜர்' என்றும் கூறப்படுகிறது. தாங்கள் விரும்பாத எவரும் கஅபாவினுள் நுழையக் கூடாது என்பதற்காக கஅபாவின் வாயிலை உயரத்தில் அமைத்தார்கள். கஅபாவை 15 முழம் வரை உயர்த்தியவுடன் ஆறு தூண்களை நிறுவி அதற்கு முகடு அமைத்தார்கள்.

இவ்வமைப்பின்படி கஅபா ஏறக்குறைய சதுரமாக அமையப் பெற்றது. அதன் உயரம் 15 மீட்டர் ஆகும். ஹஜ்ருல் அஸ்வத் உள்ள பகுதி மற்றும் அதன் எதிர்ப்புற பகுதியின் அகலம் 10 மீட்டர் ஆகும். தவாஃப் செய்யும் இடத்திலிருந்து ஹஜ்ருல் அஸ்வத் 1.5 மீட்டர் உயரத்தில் வைக்கப்பட்டிருந்தது. கஅபாவின் வாசலுள்ள பகுதியும் அதன் பின்பகுதியும் 12 மீட்டர் அகலமாகும். கஅபாவின் வாசல் தரையிலிருந்து 2 மீட்டர் உயரத்திலிருக்கிறது. கஅபாவின் அஸ்திவாரத்தைச் சுற்றி சிறிய முட்டுச்சுவர் கட்டப்பட்டது. அதன் உயரம் 25. செ.மீ. (கால் மீட்டர்) அதன் அகலம் 30 செ.மீ. இதற்கு 'ஷாதர்வான்' என்று சொல்லப்படும். இதுவும் கஅபாவைச் சேர்ந்த பகுதிதான். எனினும், குறைஷியர்கள் அதைத் தவிர்த்து உள்ளடக்கிக் கட்டி விட்டனர். (தபரீ, இப்னு ஹிஷாம்)

### நபித்துவத்திற்கு முன் - ஒரு பார்வை

நபி (ஸல்) அவர்கள் ஆரம்ப காலத்திலிருந்தே எல்லா மக்களிடமுள்ள நற்பண்புகள் அனைத்தையும் தனக்குள் ஒருங்கே அமையப் பெற்றிருந்தார்கள். நேரிய சிந்தனை, ஆழ்ந்த பார்வை, நுண்ணறிவு அனைத்தையும் தன்னகத்தே கொண்டிருந்தார்கள். நீண்ட மௌனத்தால் ஆழ்ந்து சிந்தித்து உண்மையை அறிவார்கள். தங்களது முதிர்ச்சியான அறிவாலும் தூய இயற்கை குணத்தாலும் மனித வாழ்வின் பகுதிகளையும் மக்களின் செயல்களையும் சமூகத்தின் நிலைகளையும் தெளிவாக ஆராய்ந்து, மக்களிடம் காணப்பட்ட மூடப் பழக்க வழக்கங்களை வெறுத்து ஒதுக்கினார்கள். மக்களுடன் மதி நுட்பத்துடன் பழகுவார்கள். அவர்கள் நன்மையானவற்றில் ஈடுபடும்போது தானும் கலந்து கொள்வார்கள். தீமையானவற்றில் ஈடுபட்டால் அவர்களை விட்டும் தனித்து விடுவார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மது அருந்தியதில்லை. சிலைகளுக்குப் பலியிடப்பட்டதை உண்டதில்லை. சிலைகளுக்கான விழாக்களில் கலந்து கொண்டதில்லை. சிலைகளை முற்றிலுமாக வெறுத்தார்கள். லாத், உஜ்ஜாவைக் கொண்டு சத்தியம் செய்வதைச் சகித்துக்கொள்ள மாட்டார்கள்.

இறைவனின் பாதுகாப்பு அவர்களைச் சூழ்ந்திருந்தது. உலக இன்பங்களின் மீது ஆசை தோன்றும்போதும் தவறான அறியாமைக்கால பழக்க வழக்கங்களின்மீது ஆவல் ஏற்படும்போதும் அவற்றிலிருந்து அல்லாஹ்வின் அருளால் தடுக்கப்பட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "அறியாமைக்கால செயலை செய்ய வேண்டுமென நான் இருமுறை மட்டுமே விரும்பினேன். அந்த இருமுறையும் அல்லாஹ் என்னைத் தடுத்துவிட்டான். பிறகு அல்லாஹ் தூதுத்துவத்தை எனக்கு அருளும் வரை அந்த எண்ணம் ஏற்பட்டதே இல்லை. ஓர் இரவு மக்காவின் மேற்பகுதியில் ஆடு மேய்த்துக் கொண்டிருந்த ஒரு சிறுவரிடம் என் ஆடுகளை நீ பார்த்துக் கொள். மக்காவில் வாலிபர்கள் இராக்கதை பேசுவது போன்று நானும் பேசி வருகிறேன் என்று நான் கூறினேன். அவர் ஒப்புக் கொண்டார். நான் வெளியேறி மக்காவினுள் நுழைந்து அதில் முதல் வீட்டைக் கடந்தேன். அங்கு இசை சப்தத்தைக் கேட்டு அது என்னவென்று விசாரித்தேன். அதற்கு மக்கள் இன்ன ஆணுக்கும் பெண்ணுக்கும் திருமணம் முடிந்து இன்று முதலிரவு என்று கூறினார்கள். நான் அதைக்கேட்க அமர்ந்தவுடன் நான் செவியேற்காத வகையில் அல்லாஹ் என்னைத் தடுத்து தூங்கச் செய்துவிட்டான். இறுதியில் சூரிய வெப்பம்தான் என்னை எழுப்பியது. எனது தோழரிடம் நான் சென்றபோது அவர் என்ன நடந்ததென விசாரிக்க நடந்ததைக் கூறினேன். அதற்குப் பிறகு நான் எந்தவொரு தீய செயலையும் செய்ய எண்ணியதேயில்லை." (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிப்பதாவது: கஅபாவை புதுப்பிக்கும் பணியின்போது நபி (ஸல்) அவர்களும் அப்பாஸும் கல்லை எடுத்துக் கொடுக்கும் பணியைச் செய்தார்கள். அப்போது அப்பாஸ் நபி (ஸல்) அவர்களிடம் உங்களது கீழாடையைக் கழற்றி புஜத்தில் வைத்துக் கொண்டால் கற்கள் அழுத்தாமலிருக்கும் என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் தனது ஆடையைக் கழற்றி (புஜத்தில் வைத்தவுடன்) கண்கள் மேலே சொருக மயக்கமடைந்து விட்டார்கள். பிறகு அவர்கள் தெளிவடைந்து எனது கீழாடை! எனது கீழாடை! என்று கூற, நபி (ஸல்) அவர்களுக்கு அப்பாஸ் ஆடையை உடுத்தி விட்டார்கள். அதற்குப்பின் அவர்களது மறைவிடத்தை எவரும் பார்த்ததில்லை. (ஸஹீஹுல் புகாரி)

நபி (ஸல்) அவர்கள் தங்களது கூட்டத்தாரிலேயே மிக இனிய குணம், உயர் பண்பு, சிறந்த ஒழுக்கம், மனிதாபிமானம் உடையவர்களாகவும், மேலும், மென்மையானவராகவும், நன்மை செய்யக்கூடியவராகவும், அமானிதம் பேணி வாக்குறுதியை முழுமையாக நிறைவேற்றுபவராகவும் இருந்தார்கள். இந்த உயர் பண்புகளைக் கண்ட அவர்களது சமூகத்தார்கள் அவர்களை 'அல் அமீன்' நம்பிக்கையாளர் என்று அழைத்தனர். அவர்கள் பிறர் சிரமங்களை தானே தாங்கிக் கொள்வார்கள் இல்லாதோருக்கும் எளியோருக்கும் கொடுப்பார்கள் விருந்தினரை உபசரிப்பார்கள் சிரமத்தில் தவிப்பவர்களுக்கு உதவுவார்கள். இவ்வாறுதான் அன்னை கதீஜா (ரழி), நபி (ஸல்) அவர்களைப் பற்றி வர்ணிக்கிறார்கள். (ஸஹீஹுல் புகாரி)

## இறைத்தூதராகுதல் மற்றும் அழைப்பு பணி

### மக்கா வாழ்க்கை

நபி (ஸல்) அவர்களுக்கு இறைத்தூதர் எனும் கௌரவம் அருளப்பட்டதற்குப் பிறகுள்ள வாழ்க்கையை இரண்டு வகைப்படுத்தலாம். அவை ஒன்றுக்கொன்று தன்மையால் மாறுபடுகிறது.

1. மக்காவில் வாழ்ந்த காலம். இது ஏறத்தாழ 13 ஆண்டுகள்.

2. மதீனாவில் வாழ்ந்த காலம். இது முழுமையாக 10 ஆண்டுகள்.

இவ்விரு வாழ்க்கையும் மாறுபட்ட பல நிலைகளைக் கொண்டிருக்கிறது. அவை ஒவ்வொன்றுக்கும் பல தனித்தன்மைகள் உண்டு. நபி (ஸல்) அழைப்புப் பணியில் கடந்து வந்த பாதைகளை ஆழ்ந்து கவனிக்கும்போது இதனை நாம் அறிகிறோம்.

மக்கா வாழ்க்கையை மூன்று கால கட்டங்களாகப் பிரிக்கலாம்.

1) மறைமுக அழைப்பு: இது மூன்று ஆண்டுகள் வரை நீடித்தது.

2) மக்காவாசிகளுக்கு பகிரங்க அழைப்பு: இது நான்காம் ஆண்டிலிருந்து ஹிஜ்ரத்'' வரை தொடர்ந்தது.

3) மக்காவுக்கு வெளியே அழைப்புப் பணி: இது பத்தாம் ஆண்டின் இறுதியிலிருந்து நபி (ஸல்) அவர்களின் இறுதிக்காலம் வரைத் தொடர்ந்தது.

இவற்றைச் சுருக்கமாக பார்த்துவிட்டு மதீனா வாழ்க்கை நிலைகளை பின்னர் காண்போம்.

## நபித்துவ நிழலில்

### ஹிரா குகையில்

நபி (ஸல்) அவர்களுக்கு நாற்பது வயது நெருங்கியது. அவர்களது ஆழிய சிந்தனை, தனிமையை விரும்பியது. சத்துமாவையும் தண்ணீரையும் எடுத்துக் கொண்டு மக்காவிலிருந்து இரண்டு மைல் தொலைவிலுள்ள நூர் மலையின் ஹிரா குகைக்குச் செல்வார்கள். அக்குகை நான்கு முழ நீளமும் ஒன்றே முக்கால் முழ அகலமும் கொண்டது. ரமழான் மாதத்தில் அங்கு தங்கி வணக்க வழிபாடுகளிலும், இப்புவியையும் அதைத் தாண்டிய பிரபஞ்சத்தையும் இயக்கும் அபார சக்தியைப்பற்றி சிந்திப்பதிலும் ஈடுபடுவார்கள். சமுதாயம் கொண்டிருந்த இணைவைக்கும் இழிவான கொள்கையையும், பலவீனமான அதன் கற்பனைகளையும் அவர்கள் மனம் ஏற்றுக் கொள்ளவில்லை. அதே நேரத்தில் மனதிருப்தியுடன் வாழ்க்கையைத் தொடர தெளிவான, நடுநிலையான வாழ்க்கைப் பாதையும் அவர்களுக்கு முன் இருக்கவில்லை.

தனிமையின் மீதான அவர்களது விருப்பம் அல்லாஹ்வின் ஏற்பாடு என்று சொல்லலாம். நபி (ஸல்) அவர்கள் இதற்கு முன் உலக அலுவல்களில் ஈடுபட்டு வந்தார்கள் வியாபாரம் செய்து வந்தார்கள். இப்போது அவை அனைத்தையும் விட்டு தனிமையை நாடுகிறார்கள். ஏனெனில், மாபெரும் பொறுப்பைச் சுமக்க அவர்கள் தயாராக வேண்டும் உலக வரலாற்றை மாற்றி மக்களுக்கு நேரிய பாதையைக் காட்ட ஆயத்தமாக வேண்டும். இவ்வாறு நபித்துவம் வழங்குவதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தனிமையின் மீதான விருப்பத்தை அல்லாஹ் அவர்களுக்கு ஏற்படுத்தினான். ஆக மாதத்தின் பெரும் பகுதியை நபி (ஸல்) அவர்கள் தனிமையில் கழித்து வந்தார்கள். தனிமையை விசாலமான மனஅமைதியுடன் கழித்தது மட்டுமல்லாமல் இந்த பிரபஞ்சத்தை இயக்கி வரும் மறைபொருள் பற்றி ஆழமாக சிந்தித்தார்கள். ஆம்! அல்லாஹ்வின் நாட்டப்படி அம்மறைபொருளுடன் தொடர்பு கொள்ள இதோ நேரம் நெருங்கிவிட்டது. (இது குறித்து மேல் விவரங்களை ஸஹீஹுல் புகாரி, தாரீக் இப்னு ஹிஷாம் மற்றும் வரலாற்று நூல்களில் காணலாம். முதன்முதலாக அப்துல் முத்தலிப் ஹிரா குகையில் வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டு வந்தார். ரமழானில் அங்கு சென்று தங்குவார். ஏழை எளியோருக்கு உணவளிப்பார். (இப்னு கஸீர்)

**ஜிப்ரீல் வருகை**

பரிபூரணத்தின் தொடக்கமாகிய 40 வயது நிறைவானபோது (பல நபிமார்களுக்கு நாற்பதாவது வயதில்தான் நபித்துவம் (நுபுவ்வத்) அருளப்பட்டது என்று சொல்லப்படுகிறது), நபித்துவ அடையாளங்கள் தெரிய ஆரம்பித்தன.

அவற்றில் சில: மக்காவிலிருந்த கல் ஒன்று அவர்களுக்கு ஸலாம் கூறி வந்தது உண்மையான கனவுகளைக் கண்டார்கள் அவை அதிகாலையின் விடியலைப் போன்று நிதர்சனமாக நடந்து விடும் இந்த நிலையில் ஆறு மாதங்கள் கழிந்தன நபித்துவ பணியாற்றியதோ 23 ஆண்டுகள், உண்மைக் கனவுகள் நபித்துவத்தின் 46 பங்குகளில் ஒரு பங்காகும்.

அது ஹிரா குகையில் அவர்கள் தனித்திருந்த மூன்றாம் ஆண்டு ரமழான் மாதம். அல்லாஹ் அகிலத்தாருக்கு தனது கருணையைப் பொழிய நாடினான். முஹம்மது (ஸல்) அவர்களுக்கு நபித்துவத்தை வழங்கி சிறப்பிப்பதற்காக மேன்மைமிகு குர்ஆனின் சில வசனங்களுடன் வானவர் ஜிப்ரீலை அவர்களிடம் அனுப்பி வைக்கிறான்.

தெளிவான சான்றுகளை ஆராயும்போது அது ரமழான் 21வது பிறை திங்கட்கிழமை என்ற முடிவுக்கு வரலாம். (கி.பி. 610 ஆகஸ்ட் மாதம் 10ஆம் தேதி) அந்நாளில் அவர்களது வயது பிறை கணக்குப்படி மிகச் சரியாக 40 ஆண்டுகள், 6 மாதங்கள், 12 நாள்களாகும். சூரிய கணக்குப்படி 39 ஆண்டுகள், 3 மாதங்கள் 20 நாள்களாகும்.

இறை நிராகரிப்பு, வழிகேடு போன்ற அனைத்து இருள்களையும் அழித்து வாழ்க்கைக்கு ஒளிமிக்க பாதையை அமைத்துத் தந்த நபித்துவத்தின் இந்த முக்கிய நிகழ்ச்சியைப் பற்றி அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் கூறக் கேட்போம்:

“நபி (ஸல்) அவர்களுக்கு வந்த வஹி (இறைச்செய்தி) தூக்கத்தில் தோன்றும் நல்ல கனவுகளாகவே ஆரம்பத்தில் இருந்தது. அவர்கள் எந்தக் கனவு கண்டாலும் அதிகாலையின் விடியலைப் போன்று அவை தெளிவாக அப்படியே நடக்கும். பின்னர் தனிமையை விரும்பினார்கள். ஹிரா குகையில் தனித்திருந்து பல இரவுகள் வணக்க வழிபாடுகளில் ஈடுபடுவார்கள். பிறகு தனது குடும்பத்தாரிடம் திரும்பி வருவார்கள். இதற்காக உணவையும் தம்மோடு எடுத்துச் செல்வார்கள். உணவு தீர்ந்தவுடன் கதீஜா (ரழி) அவர்களிடம் வந்து மீண்டும் உணவை எடுத்துச் செல்வார்கள். இந்த நிலையில்தான் ஹிரா குகையில் அவர்களுக்கு வஹி வந்தது. வானவர் நபியவர்களிடம் வந்து, “ஓதுவீராக!” என்றார். அதற்கவர்கள் “நான் ஓதத் தெரிந்தவனில்லையே!” என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்நிலையைப் பற்றி பின்வருமாறு விவரித்தார்கள்: பிறகு அவர் என்னைப் பிடித்து நான் சிரமப்படும் அளவுக்கு இறுகக் கட்டியணைத்தார். பிறகு என்னை விட்டுவிட்டு “ஓதுவீராக!” என்றார். (அப்போதும்) “நான் ஓதத் தெரிந்தவனில்லையே!” என்றேன். மீண்டும் என்னை இறுகக் கட்டியணைத்துவிட்டு “ஓதுவீராக!” என்றார். (அப்போதும்) “நான் ஓதத் தெரிந்தவனில்லையே!” என்றேன். அவர் என்னைப் பிடித்து மூன்றாவது முறையும் கட்டியணைத்துவிட்டு,

(நபியே! அனைத்தையும்) படைத்த உங்களது இறைவனின் பெயரால் (எனது கட்டளைகள் அடங்கிய குர்ஆனை) நீங்கள் ஓதுவீராக! அவனே மனிதனை கருவிலிருந்து படைக்கின்றான். (நபியே! பின்னும்) நீங்கள் ஓதுங்கள்! உங்களது இறைவன்தான் மகா பெரும் கொடையாளி! (அல்குர்ஆன் 96 : 1-6) என்ற வசனங்களை ஓதிக் காட்டினார்.

பிறகு அந்த வசனங்களுடன் இதயம் நடுங்க (தமது துணைவியார்) கதீஜா (ரழி) அவர்களிடம் வந்து “என்னைப் போர்த்துங்கள், என்னைப் போர்த்துங்கள்” என்றார்கள். கதீஜா (ரழி) நபி (ஸல்) அவர்களைப் போர்த்தினார்கள். (நடுக்கம் தீர்ந்ததும்) கதீஜாவிடம்

நடந்த செய்தியைத் தெரிவித்து விட்டுத் தமக்கு ஏதும் நேர்ந்துவிடுமோ எனத் தாம் அஞ்சுவதாகக் கூறினார்கள். அதற்கு கதீஜா (ரழி) "அவ்வாறு கூறாதீர்கள்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ் உங்களை ஒருபோதும் இழிவுபடுத்தமாட்டான். (ஏனெனில்) தாங்கள் உறவினர்களுடன் இணங்கி வாழ்கிறீர்கள் (சிரமப்படுவோரின்) சுமைகளை சுமந்து கொள்கிறீர்கள். வறியவர்களுக்காக உழைக்கிறீர்கள் விருந்தினர்களை உபசரிக்கிறீர்கள் உண்மையான சோதனைகளில் (சிக்குண்டோருக்கு) உதவி புரிகின்றீர்கள்" என்றார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்களைத் தமது தந்தையின் உடன் பிறந்தவரான 'நவ்ஃபல்' என்பவன் மகன் 'வரகா''விடம் அழைத்துச் சென்றார்கள்.

வரகா கிருஸ்துவராக இருந்தார். அவர் இப்ரானி (ஹிப்ரூ) மொழியை அறிந்தவர் இன்ஜீல் வேதத்தைக் கற்றவர் வயது முதிர்ந்தவர் கண்பார்வையற்றவர் அவரிடம் கதீஜா (ரழி) "என் சகோதரரே! உம் சகோதரன் மகன் கூறுவதைக் கேளுங்கள்!" என்றார். "என் சகோதரர் மகனே! நீர் எதைக் கண்டீர்!" என வரகா கேட்க, நபி (ஸல்) அவர்கள் தாம் பார்த்த செய்திகளை அவரிடம் சொன்னார்கள். அதற்கு வரகா "இவர்தாம் மூஸாவிடம் இறைவன் அனுப்பிய நாமூஸ் (ஜிப்ரீல்) ஆவார்" என்று கூறிவிட்டு, உங்களது சமூகத்தார் உங்களை உங்கள் ஊரிலிருந்து வெளியேற்றும் சமயத்தில் நான் உயிருடன் திடகாத்திரமான இளைஞனாக இருக்க வேண்டுமே என்று அங்கலாய்த்தார். நபி (ஸல்) அவர்கள் "மக்கள் என்னையா வெளியேற்றுவார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கவர் "ஆம்! நீங்கள் கொண்டு வந்திருப்பது போன்ற சத்தியத்தைக் கொண்டு வந்த எந்த மனிதரும் (மக்களால்) பகைத்துக் கொள்ளப்படாமல் இருந்ததில்லை. (நீங்கள் வெளியேற்றப்படும்) அந்நாளில் நான் உயிருடன் இருந்தால் உங்களுக்கு பலமான உதவி செய்வேன்" என்று கூறினார். இந்நிகழ்ச்சிக்குப் பின் வரகா குறுகிய காலத்தில் இறந்துவிட்டார். இத்துடன் வஹி சிறிது காலம் நின்றுவிட்டது. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

**இறைச் செய்தி தாமதம்!**

இது குறித்த பல கருத்துகள் நிலவினாலும் அந்த இடைவெளிக் காலம் சில நாட்கள் என்பதே உறுதியான கருத்தாகும். இதையே இப்னு அப்பாஸ் (ரழி) அவர்களின் வாயிலாக இப்னு ஸஅது (ரஹ்) அறிவிக்கிறார்கள். வஹியின் இடைவெளிக்காலம் மூன்று அல்லது இரண்டரை ஆண்டு என்று கூறுவது சரியானதல்ல.

அறிஞர்களின் பல்வேறு கருத்துகளை ஆய்வு செய்ததில் எனக்கு ஒன்று புலப்பட்டது. அதாவது, நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு ஆண்டும் ரமழான் மாதத்தில் மட்டுமே ஹிராவில் தனித்திருந்துவிட்டு ஷவ்வால் முதல் பிறையின் காலையில் வெளியேறி வீட்டுக்கு வருவார்கள். இவ்வாறு நபித்துவத்துக்கு முன் மூன்று ஆண்டுகள் தங்கினார்கள். அந்த மூன்றாவது ஆண்டின் ரமழானில் நபித்துவம் அருளப்பட்டது. புகாரி, முஸ்லிமுடைய ஹதீஸின்படி நபி (ஸல்) அவர்கள் ஹிராவில் தங்கி ரமழானை நிறைவு செய்துவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருக்கும்போது இரண்டாவது வஹி அருளப்பட்டது. இதில் என் கருத்து என்னவென்றால், நபித்துவம் கிடைக்கப் பெற்ற ரமழான் முடிந்த பிறகு ஷவ்வால் மாதத்தின் முதல் பிறையில்தான் இரண்டாவது வஹி இறங்கியது. அதற்குப் பிறகு நபி (ஸல்) அவர்கள் ஹிராவுக்கு செல்லவில்லை. உறுதியான சான்றுகளின்படி ரமழான் பிறை 21 திங்கள் இரவில் முதல் வஹி அருளப்பட்டது. இரண்டாவது வஹி ஷவ்வாலின் முதல் பிறை வியாழன் காலை அருளப்பட்டது. ஆகவே, இக்கருத்தின்படி வஹியின் இடைவெளிக்காலம் 10 நாட்கள் மட்டுமே! இதுவே ரமழானின் கடைசிப் பத்தில் இஃதிகாஃப் இருப்பதற்கும் ஷவ்வால் முதல் பிறை பெருநாளாக இருப்பதற்கும் காரணமாக இருக்கலாம். (அல்லாஹ்வே நன்கறிந்தவன்!)

வஹியின் இடைவெளிக் காலத்தில் நபி (ஸல்) அவர்கள் திடுக்கமும் கவலையும் நிறைந்தவர்களாகக் காணப்பட்டார்கள். இதுபற்றி ஸஹீஹுல் புகாரியில் வருவதாவது:

இரண்டாவது வஹி வருவதற்கு சிறிது காலதாமதமானது. அதனால் நபி (ஸல்) அவர்கள் கவலையடைந்தார்கள். மலை உச்சியிலிருந்து கீழே குதித்துவிட பலமுறை முனைந்தார்கள். அவ்வாறு கீழே குதித்து விடுவதற்காக ஏதேனும் மலை உச்சிக்குச் செல்லும்போதெல்லாம் அவர்களுக்கு முன்னால் ஜிப்ரீல் (அலை) தோன்றி ‘‘முஹம்மதே! நீங்கள் உண்மையாகவே அல்லாஹ்வின் தூதர்தான்’’ என்று கூறுவார்கள். இதைக் கேட்டதும் நபி (ஸல்) அவர்களின் பதற்றம் தணிந்து மனம் சாந்தி பெறும். பிறகு (மலை உச்சியிலிருந்து) திரும்பி விடுவார்கள். வஹி வருவது தாமதமாகும் போதெல்லாம் அவ்வாறே செய்யத் துணிவார்கள். அவர்கள் முன் ஜிப்ரீல் (அலை) தோன்றி முன்னர் போலவே கூறுவார்கள்.

**மீண்டும் ஜிப்ரீல்**

இப்னு ஹஜர் (ரஹ்) கூறுகிறார்: நபி (ஸல்) அவர்களுக்கு அச்சம் நீங்கி வஹியின் மீது ஆர்வம் ஏற்படுத்துவதற்காகவே வஹியின் வருகையில் தாமதம் ஏற்பட்டது. அவ்வாறே அச்சம் நீங்கி ஆர்வம் ஏற்பட்டதும் வஹியை ஆவலுடன் எதிர்பார்த்தார்கள். அல்லாஹ் இரண்டாவது முறையாக வஹியை இறக்கி அவர்களைச் சிறப்பித்தான். (ஃபத்ஹுல் பாரி)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் ஹிரா குகையில் ஒரு மாதம் தங்கியிருந்து பிறகு திரும்பினேன். நான் பள்ளத்தாக்கில் நடந்து கொண்டிருக்கும்போது என்னை அழைக்கும் குரலைக் கேட்டு வலப்பக்கம் பார்த்தேன். அங்கு எதையும் நான் காணவில்லை. இடப்பக்கம் பார்த்தேன், எதையும் நான் காணவில்லை. ஆகவே, என் தலையை உயர்த்திப் பார்த்தேன். அங்கு நான் ஒன்றைக் கண்டேன். ஹிரா குகையில் என்னிடம் வந்த வானவர் ஜிப்ரீல் (அலை) வானுக்கும் பூமிக்குமிடையே ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தார். நான் கதீஜாவிடம் சென்று ‘‘என்னைப் போர்த்துங்கள் என்னைப் போர்த்துங்கள் குளிர்ந்த நீரை என் மீது ஊற்றுங்கள்’’ என்று கூறினேன். அவர்கள் என்னைப் போர்த்தி குளிர்ந்த நீரை என்மீது ஊற்றினார்கள். அப்போது இவ்வசனங்கள் அருளப்பட்டன.

(வஹியின் அதிர்ச்சியால்) போர்வை போர்த்திக் கொண்டிருக்கும் (நபியே!) நீங்கள் எழுந்து நின்று (மனிதர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுங்கள்! உங்கள் இறைவனைப் பெருமைப்படுத்துங்கள்! உங்களது ஆடையை பரிசுத்தமாக்கி வைத்துக் கொள்ளுங்கள்! அசுத்தங்களை வெறுத்து விடுங்கள்! உங்கள் இறைவனின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக(க் கஷ்டங்களை) நீங்கள் பொறுத்திருங்கள். (அல்குர்ஆன் 74 : 1-5)

இந்த நிகழ்ச்சி தொழுகை கடமையாவதற்கு முன் நடந்தது. இதைத் தொடர்ந்து வஹி வருவது அதிகரித்தது. (ஸஹீஹுல் புகாரி)

இவ்வசனங்கள்தான் நபித்துவத்தின் தொடக்கமாகும். இவற்றில் இருவகையான சட்டங்கள் உள்ளன.

முதலாவது வகை:

‘‘நீங்கள் எழுந்து சென்று அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுங்கள்’’

என்ற வசனத்தின் மூலம் இறைத்தூதை எடுத்தியம்ப வேண்டும் ஏற்காதவர்களை எச்சரிக்கை செய்ய வேண்டுமென்று நபி (ஸல்) அவர்களுக்கு கட்டளை பிறப்பிக்கப்படுகிறது. இவ்வசனத்தின் பொருள்: வழிகேடு, அல்லாஹ் அல்லாதவற்றை வணங்குவது, அல்லாஹ்வுக்கு இணைவைப்பது ஆகிய குற்றச் செயல்களிலிருந்து இம்மக்கள் விலகவில்லையெனில் அவர்களுக்கு அல்லாஹ்வின் வேதனை உண்டென நபியே! நீங்கள் எச்சரிக்கை செய்யுங்கள்.

இரண்டாவது வகை: அல்லாஹ்வின் கட்டளைகளை முழுமையாகப் பேணிப் பின்பற்ற வேண்டும். அப்போதுதான் அல்லாஹ்வின் திருப்தி கிடைக்கும் அல்லாஹ்வை நம்பிக்கைக்

கொள்பவர்களுக்கு நீங்கள் அழகிய முன்மாதியாகத் திகழ முடியும் என்று கட்டளையிடப்படுகிறது.

‘‘உங்கள் இறைவனைப் பெருமைப்படுத்துங்கள்’’

அதாவது அல்லாஹ்வை மட்டுமே மகிமைப்படுத்துங்கள்! அதில் எவரையும் இணையாக்காதீர்கள்.

‘‘உங்களது ஆடைகளை பரிசுத்தமாக்கிக் கொள்ளுங்கள்’’

அல்லாஹ்வை மகிமைப்படுத்தி அவன் முன் நிற்பவர் அருவருப்பான தோற்றமின்றி அசுத்தமின்றி உடலையும் உடையையும் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். அல்லாஹ் ஆடையில் தூய்மையை இவ்வளவு வலியுறுத்தும்போது கெட்ட செயல், தீய சிந்தனையிலிருந்து நாம் எவ்வளவு தூய்மை பெற்றிருக்க வேண்டும் என்பதை சொல்லத் தேவையில்லை.

‘‘அசுத்தங்களை வெறுத்திடுங்கள்’’

அதாவது, அல்லாஹ்வை வணங்கி அவனுக்கு மாறுசெய்வதைத் தவிர்த்து அல்லாஹ்வின் கோபத்திலிருந்து தூரமாகிவிடுங்கள்.

‘‘நீங்கள் பிரதிபலன் தேடியவராக எவருக்கும் உதவி ஒத்தாசை புரியாதீர்கள்’’

அதாவது, பிறருக்கு உதவி செய்யும்போது அதற்குச் சமமான அல்லது அதைவிட அதிகமான பலனை எதிர்பார்க்காதீர்கள்.

‘‘உங்கள் இறைவனின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக(க் கஷ்டங்களை) நீங்கள் பொறுத்திருங்கள்’’

நபி (ஸல்) அவர்கள் தங்களது கூட்டத்தாரை அல்லாஹ்வின் பக்கம் அழைத்து அவனது தண்டனைகளைக் கூறி எச்சரிக்கை செய்கையில் அவர்களால் துன்பங்கள் நிகழலாம், அவற்றை அல்லாஹ்வுக்காக சகித்துக்கொள்ள வேண்டும் என்று இந்த இறுதி வசனத்தில் உணர்த்தப்படுகிறது.

ஆரம்பமாக அல்லாஹ்வின் அழைப்பு நபி (ஸல்) அவர்களை ஓய்வு உறக்கத்தில் இருந்து தட்டி எழுப்பி, உடலை வருத்திக்கொள்ளவும், அனல் பறக்கும் போருக்கு ஆயத்தமாகவும், எதிர்காலத்தில் சமுதாயப் புரட்சிக்கு ஈடுகொடுக்கவும், எந்நேரமும் தயாராக இருக்க வேண்டும் என ஒரு ராணுவ உத்வேகத்திற்கு நபி (ஸல்) அவர்களை தூண்டுகிறது. போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே! எழுக! அச்சமூட்டி எச்சரிக்கை செய்க! என அழைப்பது எங்ஙனம் உள்ளது என்றால்... ஓ!... தனக்காக வாழும் ஒரு சுயநலவாதிதானே சாய்வு கட்டிலில் ஓய்வு தேடுவார். தாங்கள் அப்படிப்பட்டவரல்லவே! தாங்கள் உயர்ந்த ஒரு பணிக்கு ஆயத்தமாக வேண்டியுள்ளதே! எதிர்காலத்தில் பெரும் சமுதாயச் சுமையை தாங்கள் சுமக்க நேரிடுமே! இந்தப் போர்வை சுகத்திற்காகவா புவியில் பிறந்தீர்கள்? தங்களின் உறக்கம் உசிதமானதா? மன நிம்மதியை உள்ளம் விரும்பலாமா? சுகம் தேடலாமா? கூடாது! கூடாது! கூடவே கூடாது! உங்களை மகத்தான பொறுப்பு இரு கரம் நீட்டி வரவேற்கிறது. உம்! எழுங்கள்! உங்களுடைய பாரத்தைத் தாங்கிக் கொள்ளத் தயாராகுங்கள். சிரமத்தையும் தியாகத்தையும் ஏற்றுக்கொள்ள எழுந்து வாருங்கள்! ஓய்வெடுக்க வேண்டிய காலம் ஓடிவிட்டது. இனி கண் துஞ்சாது விழித்து போராடவேண்டும். நீங்கள் அர்ப்பணிப்புக்கு ஆயத்தமாகுங்கள்! தயாராகுங்கள்!

உண்மையில் அல்லாஹ்வின் இந்த வசனம் மிக அச்சுறுத்தலானது. இது நபி (ஸல்) அவர்களை இல்லத்தில் நிம்மதியாக படுத்துறங்குவதிலிருந்து வெளியேற்றி முழு வாழ்க்கையிலும் அழைப்புப் பணியின் சிரமங்களைச் சந்திக்கத் தயார்படுத்தியது.

அல்லாஹ்வின் இக்கட்டளையை நிறைவேற்ற நபி (ஸல்) அவர்கள் எழுந்தார்கள்! அன்று எழுந்தவர்கள் இருபது வருடங்களுக்கு மேலாக ஓய்வு பெறவேயில்லை. தனக்காகவோ தமது குடும்பத்தினருக்காகவோ இல்லாமல் அல்லாஹ்வினால் ஒப்படைக்கப்பட்ட மாபெரும் பொறுப்பின் சுமையை தனது தோளில் சுமந்து இறையழைப்புப் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார்கள். அவர்கள் சுமந்தது ஏகத்துவப் போராட்டத்தின் சுமையாகும். அல்லாஹ்வினால் தனக்கு விடுக்கப்பட்ட அழைப்பை செவியேற்றதிலிருந்து 20 வருடங்களுக்கு மேலாக ஓய்வு உறக்கமின்றி மாபெரும் தியாக வாழ்க்கையை மேற்கொண்டார்கள்.

அவர்களுக்கு நம் சார்பாகவும் மனித குலத்தின் சார்பாகவும் சிறந்த நற்கூலியை அல்லாஹ் நல்குவானாக!

நபி (ஸல்) அவர்களின் நீண்ட தியாக வாழ்க்கையின் சில பகுதியைத்தான் நாம் பின்வரும் பக்கங்களில் காண இருக்கிறோம்.

**வஹ்யின் வகைகள்**

நபி (ஸல்) அவர்களின் நுபுவத்திற்குப் பிந்திய வாழ்வைப்பற்றி பேசுமுன் வஹியின் (இறைச்செய்தியின்) வகைகளைப் பற்றி காண்பது சிறந்தது. வஹியின் வகைகள் பற்றி இப்னுல் கய்'' (ரஹ்) 'ஜாதுல் மஆது' என்ற தனது நூலில் கூறுவதாவது:

1) உண்மையான கனவு. இதுதான் வஹியின் தொடக்கமாக இருந்தது.

2) வானவர், நபி (ஸல்) அவர்களின் கண்முன் தோன்றாமல் உள்ளத்தில் இறை செய்தியைப் போட்டுவிடுவது. எ.கா. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ரூஹுல் குத்ஸ் (ஜிப்ரீல்) எனது உள்ளத்தில் ஊதினார். அதாவது, தனது உணவை முழுமையாக முடித்துக் கொள்ளும்வரை எவரும் மரணிக்க மாட்டார். அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்! உணவைத் தேடுவதில் அழகிய வழியை தேர்ந்தெடுங்கள். உணவு தாமதமாகுவதால் நீங்கள் அல்லாஹ்வுக்கு மாறு செய்து அதைத் தேட வேண்டாம். ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ்விடம் உள்ளதை அவனுக்கு வழிப்படுவதன் மூலமே தவிர வேறு வகையில் அடைய முடியாது.''

3) வானவர் ஓர் ஆடவன் உருவில் தோன்றி நபி (ஸல்) அவர்களிடம் பேசுவார். அதை நபி (ஸல்) அவர்கள் மனதில் நிறுத்திக் கொள்வார்கள். இவ்வாறான சந்தர்ப்பங்களில் தான் வானவரை சில நபித்தோழர்கள் கண்டிருக்கிறார்கள்.

4) வானவர் மணியோசையைப் போன்று வருவார். இந்த வகையே நபி (ஸல்) அவர்களுக்கு சுமையாக இருக்கும். நபி (ஸல்) அவர்களை வானவர் தன்னுடன் இணைத்துக் கொள்வார். கடுங்குளிரிலும் நபி (ஸல்) அவர்களுக்கு வியர்வை பெருக்கெடுத்து ஓடும். அவர்கள் வாகனத்தில் அமர்ந்திருந்தால் வஹியின் சுமை தாங்காது அந்த வாகனம் அப்படியே தரையில் அமர்ந்துவிடும். ஒருமுறை நபி (ஸல்) அவர்களின் கால் ஜைது இப்னு ஸாபித் (ரழி) அவர்களின் கால்மீது இருந்த நிலையில் வஹி வந்தது. அதன் சுமை அவர்களது காலைத் துண்டித்து விடும் அளவுக்கு மிகக் கடினமாக இருந்தது.

5) வானவர், அல்லாஹ் படைத்த அதே உருவத்தில் நபி (ஸல்) அவர்கள் முன் தோன்றுவார். நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்வின் செய்திகளை அறிவிப்பார். இவ்வாறு இரண்டு முறை நடந்துள்ளது. இதைப்பற்றி குர்ஆனில் 'அந்நஜ்ம்' என்ற அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

6) நபி (ஸல்) அவர்களை அல்லாஹ் ஏழு வானங்களுக்கு மேல் அழைத்து பேசுவது. நபி (ஸல்) அவர்களுக்கு மிஃராஜில்" தொழுகை கடமையாக்கப்பட்டது போன்று!

7) வானவரின்றி நேரடியாக அல்லாஹ் பேசுவது. மூஸா (அலை) அவர்களிடம் அல்லாஹ் பேசியது போல! மூஸா நபிக்கு இந்த சிறப்பு கிடைத்தது பற்றி குர்ஆனில் விவரிக்கப்பட்டுள்ளது. நபி (ஸல்) அவர்களுக்கும் இந்த சிறப்பு கிடைத்தது என மிஃராஜ் தொடர்பான ஹதீஸ்களின் மூலம் தெளிவாகிறது. (ஜாதுல் மஆது)

## முதல் கால கட்டம் - அல்லாஹ்வின் பக்கம் அழைத்தல்

### இரகசிய அழைப்பு - மூன்று ஆண்டுகள்

"சூரா" முத்தஸ்ஸின் ஆரம்ப வசனங்கள் அருளப்பட்டதும் ஏகத்துவ அழைப்புக்கு நபி (ஸல்) அவர்கள் தயாரானார்கள். அக்கால மக்கள் சிலைகளை வணங்கி வந்தனர். தங்களது முன்னோர்களை சிலை வணங்கிகளாகக் கண்டார்கள் என்பதைத் தவிர சிலை வணக்கத்திற்காக வேறெந்த ஆதாரமும் அவர்களிடமில்லை. பிடிவாதமும் அகம்பாவமும் அவர்களது இயல்பாக இருந்தன. அனைத்து பிரச்சனைகளுக்கும் தீர்வு வாள் முனைதான் என்றும், அரபிய தீபகற்பத்தின் மார்க்கத் தலைமைக்கு தாங்களே மிகத் தகுதியுடையோர் என்றும் நம்பியிருந்தனர். அரபிய தீபகற்பத்தின் மார்க்கத் தலைமையிடமான மக்காவை தங்களுடைய கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர். அதை அப்படியே பாதுகாப்பது தங்களது பொறுப்பெனக் கருதினர். இப்பொழுது அவர்களது உணர்வில் ஊறிக் கிடந்த கொள்கைகளைத் தகர்க்கும் முயற்சியை திடீரென செய்தால் அது எதிர்விளைவுகளை ஏற்படுத்திவிடும். எனவே, அழைப்புப் பணியை இரகசியமாகத் தொடங்குவதுதான் விவேகமான செயலாக இருந்தது.

### முந்தியவர்கள்!

நபி (ஸல்) அவர்கள் ஆரம்பமாகக் குடும்பத்தார் மற்றும் நண்பர்களில் தனது நம்பிக்கைக்குரியவர்களுக்கு இஸ்லாமை அறிமுகப்படுத்தினார்கள். உண்மையை நேசிப்பவர், நல்லவர் என தான் எண்ணியவர்களுக்கும் ஏகத்துவ அழைப்பு விடுத்தார்கள். நபி (ஸல்) அவர்களை எந்த வகையிலும் சந்தேகிக்காத ஒரு கூட்டம் அவர்களின் அழைப்பை ஏற்றது. இஸ்லாமிய வரலாற்றில் இவர்கள் "அஸ்ஸாபிக்கூனல் அவ்வலூன்" (முந்தியவர்கள்! முதலாமவர்கள்!) என்று அறியப்படுகின்றனர். இவர்களில் முதன்மையானவர் நபி (ஸல்) அவர்களின் துணைவியரான அன்னை கதீஜா (ரழி) ஆவார். பின்னர் நபி (ஸல்) அவர்களின் அடிமை ஜைது இப்னு ஹாஸா (ரழி), நபி (ஸல்) அவர்களின் பராமரிப்பிலிருந்த சிறுவர் அலீ (ரழி), உற்ற தோழரான அபூபக்ர் (ரழி) ஆகிய அனைவரும் அழைப்புப் பணியின் முதல் நாளிலேயே இஸ்லாமைத் தழுவினார்கள். பிறகு இறை அழைப்புப் பணிக்காக அபூபக்ர் (ரழி) ஆயத்தமானார்கள். அவர்கள் அனைவரின் நேசத்திற்குரியவராக, மென்மையானவராக, நற்குணமுடையவராக, உபகாரியாக இருந்தார்கள். அவர்களது அறிவு, வணிகத் தொடர்பு, இனிய பேச்சு ஆகியவற்றை மக்கள் மிகவும் நேசித்தனர். அவர்களில் தனக்கு மிக நம்பிக்கைக்கு உயவர்களை முதலில் அழைக்கத் தொடங்கினார்கள். அவர்களது அழைப்பை ஏற்று உஸ்மான் இப்னு அஃப்பான், ஜுபைர் இப்னு அவ்வாம், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப், ஸஅது இப்னு அபீ வக்காஸ், தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரழியல்லாஹு அன்ஹும்) ஆகிய எட்டு நபர்கள் இஸ்லாமை முதன்முதலாக ஏற்றுக் கொண்டனர்.

இவர்களையடுத்து இச்சமுதாயத்தின் நம்பிக்கையாளர் (அமீன்) என்று பெயர் சூட்டப்பட்ட அபூ உபைதா ஆமிர் இப்னு ஜர்ராஹ், அபூ ஸலாமா இப்னு அப்துல் அஸத், அவரது

மனைவி உம்மு ஸலமா, அர்கம் இப்னு அபுல் அர்கம், உஸ்மான் இப்னு மள்வூன், அவரது இரு சகோதரர்கள் குதாமா, அப்துல்லாஹ், உபைதா இப்னு ஹாரிஸ், ஸயீது இப்னு ஜைது, அவரது மனைவி ஃபாத்திமா பின்த் கத்தாப் (உமர் அவர்களின் சகோதரி) கப்பாப் இப்னு அரத், ஜஃபர் இப்னு அபூதாலிப். அவரது மனைவி அஸ்மா பின்த் உமைஸ், காலித் இப்னு ஸயீது இப்னு ஆஸ், அவரது மனைவி உமைனா பின்த் கலஃப், அம்ரு இப்னு ஸயீது இப்னு ஆஸ், ஹாதிப் இப்னு ஹாரிஸ், அவரது மனைவி ஃபாத்திமா பின்த் முஜல்லில், கத்தாப் இப்னு அல் ஹாரிஸ், அவரது மனைவி ஃபுகைஹா பின்த் யஸார், மஃமர் இப்னு அல்ஹாரிஸ், முத்தலிப் இப்னு அஜ்ஹர், ரமலா பின்த் அபூ அவ்ஃப், நுஅய்ம் இப்னு அப்துல்லாஹ் (ரழி அன்ஹும்) ஆகிய இவர்கள் அனைவரும் குறைஷி கோத்திரத்திலிருந்து இஸ்லாமை ஏற்றவர்களில் முதன்மையானவர்களாவர்.

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத், மஸ்வூத் இப்னு ரபீஆ, அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ். அபூ அஹ்மத் இப்னு ஜஹ்ஷ், பிலால் இப்னு ரபாஹ் ஹபஷி, ஸுஹைப் இப்னு ஸினான், அம்மார் இப்னு யாஸிர், யாஸிர், அவரது மனைவி சுமைய்யா, ஆமிர் இப்னு ஃபுஹைரா (ரழியல்லாஹு அன்ஹும்) ஆகியோர் மற்ற கோத்திரத்திலிருந்து இஸ்லாமை ஏற்றவர்களில் முதன்மையானவர்களாவர்.

பெண்களில் மேற்கூறப்பட்டவர்களைத் தவிர மற்றும் பலர் இஸ்லாமை ஏற்றனர். அவர்கள்: உம்மு அய்மன் பரகா ஹபஷியா, அப்பாஸின் மனைவி உம்முல் ஃபழ்ல் லுபாபஹ், அஸ்மா பின்த் அபூபக்ர். (அல்லாஹ் இவர்கள் அனைவரையும் திருப்தி கொள்வானாக!) (இப்னு ஹிஷாம்)

"அஸ்ஸாபிகூனல் அவ்வலூன் - முந்தியவர்கள் முதலாமவர்கள்" என்று குர்ஆனில் அல்லாஹ் இவர்களை போற்றுகின்றான்.

இஸ்லாமை ஆரம்பமாக ஏற்றுக் கொண்ட ஆண், பெண்களின் எண்ணிக்கை 130 ஆகும். எனினும், இவர்கள் அனைவரும் நபி (ஸல்) அவர்கள் மறைமுகமாக அழைப்பு விடுத்த காலத்தில் இஸ்லாமை ஏற்றார்களா? அல்லது அவர்களில் சிலர் அதற்குப்பின் இஸ்லாமை ஏற்றார்களா? என்று உறுதியாக கூறமுடியாது.

### தொழுகை

இஸ்லாமிய மார்க்கத்தில் தொழுகையே முதலாவதாக கடமையாக்கப்பட்டது. இப்னு ஹஜர் (ரஹ்) கூறுகிறார்: மிஃராஜுக்கு முன்பே நபி (ஸல்) அவர்களும் தோழர்களும் தொழுது வந்தார்கள் என்பதில் சந்தேகம் எதுவுமில்லை. ஆனால், ஐவேளைத் தொழுகை கடமையாவதற்கு முன் ஏதேனும் தொழுகைகள் கடமையாக்கப்பட்டிருந்ததா இல்லையா என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. சிலர் "சூரிய உதயத்திற்கு முன்பும் மறைவதற்கு முன்பும் தொழுது கொள்வது கடமையாக இருந்தது" என்று கூறுகின்றனர்.

இப்னு ஹிஷாம் (ரஹ்) கூறுகிறார்: நபி (ஸல்) அவர்களும் தோழர்களும் கணவாய்களுக்குச் சென்று இரகசியமாகத் தொழுது வந்தார்கள். ஒரு முறை நபி (ஸல்) அவர்களும் அலீ (ரழி) அவர்களும் தொழும்போது அபூதாலிப் பார்த்து அதுபற்றி விசாரித்தார். அவ்விருவரும் நற்செயலையே செய்கிறார்கள் என்று தெரிந்து கொண்டதும் அதில் நிலைத்திருங்கள் என்று கூறினார்.

தொழுகை மட்டுமே முஸ்லிம்களுக்குக் கடமையாக்கப்பட்டிருந்தது. அதைத் தவிர வேறு வணக்க வழிபாடுகளோ, ஏவல் விலக்கலோ இருந்ததாகத் தெரியவில்லை. அக்கால கட்டத்தில் அவர்களுக்கு ஏகத்துவ விளக்கங்களைக் கற்றுக் கொடுத்து, நற்பண்புகளில் ஆர்வமூட்டி, அவர்களது இதயங்களைத் தூய்மைப்படுத்தும் இறைவசனங்கள் அருளப்பட்டன. மேலும், அவ்வசனங்கள் சொர்க்கத்தையும் நரகத்தையும் அவர்கள்

கண்முன் காண்பதுபோல் வர்ணித்தன. எழுச்சிமிகு உபதேசங்களால் இதயங்களைத் திறந்து ஆன்மாவுக்கு வலுவூட்டி அக்கால மக்கள் அதுவரை அறிந்திராத ஒரு புதிய நாகரீக வாழ்வுக்கு இறைமறை அவர்களை அழைத்துச் சென்றது.

இவ்வாறே மூன்று ஆண்டுகள் கடந்தன. நபி (ஸல்) அவர்கள் அழைப்பை பகிரங்கப் படுத்தாமல் தனி நபர்களுக்கே அழைப்பு விடுத்தார்கள். குறைஷிகள் மட்டும் நபி (ஸல்) அவர்களின் அழைப்புப் பணியை அறிந்திருந்தனர். மக்காவில் இஸ்லாம் குறித்த சர்ச்சை எழுந்து மக்களும் அதுபற்றி பேசத் தொடங்கினர். இதைப் பிடிக்காத சிலர் முஸ்லிம்களை இம்சித்தனர். எனினும், நபி (ஸல்) அவர்கள் அம்மக்களின் மார்க்கத்தையும் சிலைகளையும் விமர்சிக்காததால் நபி (ஸல்) அவர்களின் அழைப்பை மக்காவாசிகள் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளவில்லை.

## இரண்டாம் கால கட்டம்

### பகிரங்க அழைப்பு

சகோதரத்துவம் பேணுதல், உதவி ஒத்தாசை புரிதல் போன்ற நற்பண்புகளுடன் தூதுத்துவத்தைச் சுமந்து அதை எடுத்துரைக்கும் ஆற்றல் பெற்ற முஸ்லிம்களின் ஒரு கூட்டம் தயாரானபோது இஸ்லாமிய அழைப்பை பகிரங்கப்படுத்தி, தீமையை நன்மையால் எதிர்கொள்ள வேண்டுமென்று நபி (ஸல்) அவர்களுக்குக் கட்டளை பிறப்பிக்கப்பட்டது.

இது தொடர்பாக முதலாவதாக,

“நீங்கள் உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுங்கள்.” (அல்குர்ஆன் 26:214)

என்ற வசனம் அருளப்பட்டது. இத்திருவசனத்தின் முன்தொடல் நபி மூஸா (அலை) அவர்களுக்கு இறைத்தூது கிடைத்ததிலிருந்து இஸ்ரவேலர்களுடன் அவர்கள் ஹிஜ்ரா செய்தது வரையிலான நிகழ்வுகளும், ஃபிர்அவ்ன் மற்றும் அவனது கூட்டத்தாரிடமிருந்து இஸ்ரவேலர் களுக்குக் கிடைத்த வெற்றியும், ஃபிர்அவ்ன் தனது கூட்டத்தாருடன் மூழ்கடிக்கப்பட்ட சம்பவங்களும் விவரிக்கப்படுகிறது. மேலும், ஃபிர்அவ்னை ஏகத்துவத்தின் பக்கம் அழைத்தபோது நபி மூஸா (அலை) கடந்து சென்ற அனைத்து நிலைமைகளும் விவரமாகக் கூறப்பட்டன.

இஸ்லாமிய அழைப்பை பகிரங்கப்படுத்த வேண்டும் என்ற கட்டளையுடன் மேற்கூறப்பட்ட விவரங்களை கொண்டு வந்ததற்கான காரணம்: மக்களை அழைக்கும்போது அவர்களிடமிருந்து பொய்ப்பித்தல், அத்துமீறல், கொடுமைப்படுத்துதல் போன்றவற்றைச் சந்திக்க நேரிடும் அவற்றைத் தாங்கியே தீரவேண்டும். எனவே, தொடக்கத்திலிருந்தே தங்களது செயல்பாட்டில் தெளிவாக இருக்க வேண்டும் என்பதற்கு முன்னுதாரணமாக நபி (ஸல்) அவர்களுக்கும் நபித்தோழர்களுக்கும் முன்சென்ற நபிமார்கள் மற்றும் சமுதாயத்தவர்களின் நிகழ்ச்சிகளைச் சுட்டிக்காட்டப்பட்டது.

இம்மார்க்கத்தைப் பொய்யாக்குபவர்கள் தங்களது நிலையில் தொடர்ந்தால், அவர்களுக்கு ஏற்படும் இழிவான முடிவையும் அல்லாஹ்வின் தண்டனையையும் தெரிந்துகொள்ள வேண்டும் அழகிய முடிவு தங்களுக்குத்தான் என்பதை இறைநம்பிக்கையாளர்கள் நம்ப வேண்டும் என்பதற்காக இந்த அத்தியாயத்தில் நூஹ், இப்றாஹீம், லூத், ஹூது, ஸாலிஹ் (அலை) ஆகிய நபிமார்களின் சமுதாயத்தினர், “அஸ்ஹாபுல் அய்கா’ (தோட்டக்காரர்கள்) என இறைத்தூதர்களைப் பொய்யாக்கியவர்களின் முடிவுகள் கூறப்பட்டுள்ளன.

### நெருங்கிய உறவினர்களை நேர்வழிக்கு அழைத்தல்

இவ்வசனம் அருளப்பட்டதும் நபி (ஸல்) தங்களது நெருங்கிய உறவினர்களான ஹாஷிம் கிளையாரை அழைத்தார்கள். அவர்களுடன் முத்தலிபின் வமிசத்தில் சிலரும் சேர்ந்து மொத்தம் 45 ஆண்கள் வந்தனர். நபி (ஸல்) பேசத் தொடங்கியபோது அபூ லஹப் முந்திக்கொண்டு "இவர்கள் உமது தந்தையின் சகோதரர்களும் அவர்களுடைய பிள்ளைகளுமாவர். அதை நினைவில் கொண்டு பேசு! மதம் மாறியவர்களைப் பற்றி இங்கு பேசாதே. அறிந்துகொள்! அரபியர்களில் உன்னுடைய கூட்டத்தாருக்கு எந்தவொரு வலிமையுமில்லை. உன்னை தண்டிப்பதற்கு நானே மிகத் தகுதியானவன். நீ கூறும் இந்த ஏகத்துவத்தில் நீ உறுதியாக இருந்தால், அது அரபிகளின் துணையுடன் குறைஷி குடும்பத்தினர் உன்மீது பாய்வதற்கு ஏதுவாகிவிடும். தனது தந்தையின் சொந்தக்காரர்களுக்கு உன்னைப் போல தீங்கிழைத்த எவரையும் நான் கண்டதில்லை" என்று கூறினான். இதனால் நபி (ஸல்) அச்சபையில் பேசாமல் இருந்துவிட்டார்கள்.

இரண்டாவது முறையாகவும் ஹாஷிம் கிளையாரை அழைத்து "எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனையே புகழ்கிறேன். அவனிடமே உதவி தேடுகிறேன். அவன்மீது நம்பிக்கை வைக்கிறேன். அவனிடமே பொறுப்பு ஒப்படைக்கிறேன். வணக்கத்துக்குரியவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு எவனுமில்லை. அவனுக்கு இணை யாருமில்லை என்று சாட்சி சொல்கிறேன்" எனக் கூறித் தொடர்ந்தார்கள் "நிச்சயமாக "ராம்த்' (போருக்கு செல்லும் வீரர்கள் தங்குவதற்கு ஏற்ற இடங்களையும், நீர்நிலைகளையும் அறிந்து வருவதற்காக அனுப்பப்படும் தூதர்) பொய்யுரைக்கமாட்டார். எந்த அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குத் தகுதியானவன் வேறு யாருமில்லையோ அவன் மீது ஆணையாக! நிச்சயமாக நான் குறிப்பாக உங்களுக்கும், பொதுவாக ஏனைய மக்களுக்கும் அனுப்பப்பட்ட அல்லாஹ்வின் தூதராவேன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் உறங்குவது போன்றே மரணிப்பீர்கள். நீங்கள் விழிப்பது போன்றே எழுப்பப்படுவீர்கள். உங்களது செயல்கள் குறித்து விசாரணை செய்யப்படுவீர்கள். நிச்சயமாக அது நிரந்தர சொர்க்கமாக அல்லது நிரந்தர நரகமாக இருக்கும்" என்று உரையாற்றி முடித்தார்கள்.

அப்போது அபூ தாலிப் கூறினார்: "உனக்கு உதவி செய்வது எங்களுக்கு மிகவும் விருப்பமானதே, உனது உபதேசத்தை ஏற்பதும் எங்களுக்குப் பிரியமானதே, உனது பேச்சை மிக உறுதியாக உண்மைப்படுத்துகிறோம். இதோ! உனது பாட்டனாரின் குடும்பத்தார்! நானும் அவர்களில் ஒருவன்தான். எனினும், நீ விரும்புவதை அவர்களைவிட நான் விரைவாக ஏற்றுக் கொள்வேன். எனவே, உனக்கிடப்பட்ட கட்டளையை நீ நிறைவேற்றுவதில் நீ உறுதியாக இரு. அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உன்னைச் சூழ்ந்து நின்று பாதுகாப்பேன். எனினும், எனது மனம் அப்துல் முத்தலிபின் மார்க்கத்தை விட்டுப் பிரிய விரும்பவில்லை" என்றார்.

அப்போது அபூ லஹப் "அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது (இந்த அழைப்பு) மிக இழிவானது. இவரை மற்றவர்கள் தண்டிக்கும் முன் நீங்களே தடுத்துவிடுங்கள்" என்றான். அதற்கு அபூதாலிப் "அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாங்கள் இருக்கும்வரை அவரைப் பாதுகாப்போம்" என்று கூறிவிட்டார். (அல்காமில்)

### ஸஃபா மலை மீது...

அபூதாலிப் தனக்கு பாதுகாப்பளிப்பார் என்று நபி (ஸல்) உறுதியாக அறிந்தபின் இறை மார்க்கத்தை எடுத்துரைப்பதற்காக ஸஃபா மலை உச்சியில் ஏறி நின்று "யா ஸபாஹா! யா ஸபாஹா!!" என்று சப்தமிட்டார்கள். (பெரும் படையொன்று சூழ்ந்துகொண்டதை அல்லது ஏதேனும் பேராபத்து வந்துவிட்டதை அறிவிக்க இந்த வார்த்தை பயன்படுத்தப்படும்.)

பிறகு குறைஷி வமிசத்தின் ஒவ்வொரு பிரிவினரையும் அழைத்தார்கள்: ஃபஹ்ர் குடும்பத்தாரே! அதீ குடும்பத்தாரே! அப்து முனாஃபின் குடும்பத்தாரே! அப்துல் முத்தலிபின் குடும்பத்தாரே! என்று அழைத்தார்கள்.

அவர்களது அழைப்பைச் செவியேற்று இவ்வாறு அழைப்பவர் யார்? என வினவ சிலர் "முஹம்மது" என்று கூறினர். உடனே குறைஷியர்களில், அபூலஹப் மற்றும் பலரும் அங்கு குழுமினர். வர இயலாதவர்கள் தங்கள் சார்பாக ஒருவரை அவர் சொல்வதைக் கேட்டு வருமாறு கூறியனுப்பினார்கள்.

அனைவரும் ஒன்று கூடியபோது நபி (ஸல்) "இம்மலைக்குப் பின்னாலுள்ள கணவாயில் உங்களைத் தாக்குவதற்காக குதிரை வீரர்கள் காத்திருக்கிறார்கள் என்று நான் கூறினால் நீங்கள் நம்புவீர்களா?" என்று கேட்டார்கள்.

அதற்கு அம்மக்கள் "ஆம்! உங்களை நம்புவோம் உங்களை உண்மையாளராகவே கண்டிருக்கிறோம் பொய்யுரைத்துக் கண்டதில்லை" என்றனர்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் மிகக் கடுமையான வேதனை வருமுன் நான் உங்களை அச்சமூட்டி எச்சரிக்கிறேன். எனக்கும் உங்களுக்கும் உள்ள உதாரணம், ஒருவர் எதிரிகளைப் பார்த்து அவர்கள் தன்னை முந்திச் சென்று தனது கூட்டத்தினரைத் திடீரெனத் தாக்கிவிடக் கூடாது என்பதற்காக மலை உச்சியில் ஏறி "யா ஸபாஹா!" என்று அழைத்தவரைப் போன்றாவேன்.

பிறகு, நபி (ஸல்) அவர்கள் அம்மக்களை சத்தியத்தின் பக்கம் அழைத்து அல்லாஹ்வின் வேதனை குறித்து அச்சமூட்டி எச்சரிக்கை செய்தார்கள். ஒவ்வொரு கூட்டத்தாரின் பெயர்களைத் தனித்தனியாகவும், பொதுவாகவும் குறிப்பிட்டுக் கூறினார்கள்.

"குறைஷியரே! அல்லாஹ்விடமிருந்து உங்களது ஆன்மாக்களை விலைக்கு வாங்கிக் கொள்ளுங்கள். உங்களை நரகிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக, நான் உங்களுக்கு அல்லாஹ்வின் புறத்திலிருந்து எந்தவொரு நன்மைக்கும் தீமைக்கும் பொறுப்பாக முடியாது. அல்லாஹ்வைத் தவிர்த்து உங்களுக்கு நான் எந்த பலனும் அளிக்க முடியாது.

கஅபு இப்னு லுவய்யின் கிளையாரே! உங்களை நரகிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள். உங்களது எந்தவொரு நன்மை தீமைக்கும் நான் பொறுப்பாக முடியாது.

முர்ரா இப்னு கஅபின் கிளையாரே! உங்களை நரகிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

குஸைய்யின் கிளையாரே! உங்களை நரகிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள். உங்களது எந்தவொரு நன்மை தீமைக்கும் நான் பொறுப்பாக முடியாது.

அப்துல் முனாஃபின் கிளையாரே! உங்களை நரகிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக நான் உங்களுக்கு அல்லாஹ்வின் புறத்திலிருந்து எந்தவொரு நன்மைக்கும் தீமைக்கும் பொறுப்பாக முடியாது. அல்லாஹ்வை தவிர்த்து உங்களுக்கு நான் எந்த பலனும் அளிக்க முடியாது.

அப்து ஷம்ஸ் கிளையாரே! உங்களை நரகிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

ஹாஷிம் கிளையாரே! உங்களை நரக நெருப்பிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

அப்துல் முத்தலிபின் கிளையாரே! உங்களை நரகிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள். உங்களது எந்தவொரு நன்மைக்கும் தீமைக்கும் நான் பொறுப்பாக முடியாது. அல்லாஹ்வை தவிர்த்து உங்களுக்கு நான் எந்தப் பலனும் அளிக்க முடியாது.

அப்துல் முத்தலிபின் மகன் அப்பாஸே! அல்லாஹ்வை தவிர்த்து உங்களுக்கு நான் எந்த பலனும் அளிக்க முடியாது. அல்லாஹ்வுடைய தூதரின் மாமியான அப்துல் முத்தலிபின் மகள் ஸஃபிய்யாவே! அல்லாஹ்வை தவிர்த்து உங்களுக்கு நான் எந்த பலனும் அளிக்க முடியாது..

அல்லாஹ்வின் தூதர் முஹம்மதின் மகள் ஃபாத்திமாவே! எனது செல்வத்திலிருந்து விரும்பியதை கேட்டு பெற்றுக்கொள். உங்களை நரகிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்! நிச்சயமாக நான் உங்களது நன்மைக்கும் தீமைக்கும் பொறுப்பாக முடியாது. அல்லாஹ்வை விட்டு உங்களுக்கு நான் எந்த பலனும் அளிக்க முடியாது.

எனினும், மக்களே! உங்களுடன் இரத்த பந்தம் எனும் உறவு இருக்கிறது. உரிய முறையில் இரத்தப் பந்தத்திற்கானக் கடமைகளை நிறைவேற்றுவேன்'' என்று கூறி முடித்தார்கள்.

இந்த எச்சரிக்கை முடிந்ததும் மக்கள் எதுவும் கூறாமல் கலைந்து சென்றார்கள். ஆனால், அபூ லஹப் மட்டும் குரோதத்துடன் நபி (ஸல்) அவர்களை எதிர்கொண்டான். "நாள் முழுவதும் உனக்கு நாசமுண்டாகட்டும்! இதற்காகத்தான் எங்களைக் கூட்டினாயா?'' என்று கூறினான். அவனைக் கண்டித்து "அழியட்டும் அபூ லஹபின் இரு கரங்கள் அவனும் அழியட்டும்...'' என்ற 111வது அல்குர்ஆன் அத்தியாயம் இறங்கியது. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், ஜாமிவுத்திர்மிதி, ஃபத்ஹுல் பாரி)

இவ்வாறாக ஏகத்துவக் குரல் ஓங்கியது. நபி (ஸல்) தங்களது நெருங்கிய உறவினர்களிடம் நீங்கள் இத்தூதுத்துவத்தை (நான் அல்லாஹ்வின் தூதர் என்பதை) ஏற்றால்தான் நம்மிடையே உறவு நீடிக்கும். இதைத்தவிர அரபுகள் கொண்டிருக்கும் குடும்ப உறவுகளெல்லாம் அல்லாஹ்வின் எச்சரிக்கையின் முன்னால் ஒன்றுமில்லாமல் ஆகிவிடும் என்று கூறித் தங்களது நிலையை மிகத் தெளிவாக அறிவித்துவிட்டார்கள்.

இவ்வாறே அழைப்புப் பணியின் குரல் மக்காவின் நாலாதிசைகளிலும் எதிரொலித்தது.

"ஆகவே, உங்களுக்கு ஏவப்பட்டதை(த் தயக்கமின்றி) நீங்கள் (அவர்களுக்கு) விவரித்து அறிவித்துவிடுங்கள். மேலும், இணைவைத்து வணங்குபவர்களைப் புறக்கணித்து விடுங்கள்'' (அல்குர்ஆன் 15:94)

என்ற வசனத்தை அல்லாஹ் இறக்கி அருளினான். அதைத் தொடர்ந்து நபி (ஸல்) நிராகரிப்பவர்களின் சபைகளில் துணிந்து நின்று அல்லாஹ்வின் பக்கம் அழைக்கத் தொடங்கினார்கள். முன் சென்ற நபிமார்கள் தங்களது சமுதாயத்தினருக்குக் கூறி வந்த,

நீங்கள் அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். அவனைத் தவிர வேறு இறைவன் உங்களுக்கில்லை. (அல்குர்ஆன் 7:59)

என்ற வசனத்தை அவர்களுக்கு ஓதிக் காண்பித்தார்கள். நிராகரிப்பவர்களின் கண் முன்னே கஅபாவின் முற்றத்தில் பட்டப்பகலில் பகிரங்கமாக அல்லாஹ்வை வணங்கத் தொடங்கினார்கள்.

நபி (ஸல்) ஏகத்துவ அழைப்புக்கு மக்களிடையே ஆதரவு அதிகரித்தது. ஒருவர் பின் ஒருவராக அல்லாஹ்வின் மார்க்கத்தைத் தழுவினார்கள். அதனால் இஸ்லாமை ஏற்றவர்களுக்கும் அவர்களது குடும்பத்தில் இஸ்லாமை ஏற்காதவர்களுக்குமிடையே சண்டை சச்சரவுகள் தோன்றின. நாளுக்கு நாள் இஸ்லாமின் வளர்ச்சியைக் கண்ட குறைஷிகள் கடுங்கோபத்தில் மூழ்கினர்.

## ஹாஜிகளைத் தடுத்தல்

இக்காலகட்டத்தில் குறைஷியருக்கு மற்றொரு கவலையும் ஏற்பட்டது. அதாவது, பகிரங்க இஸ்லாமிய அழைப்புப் பணி தொடங்கிய சில நாட்களிலேயே ஹஜ்ஜின் காலம் நெருங்கி வந்தது. ஹஜ்ஜுக்கு வரும் அரபுக் கூட்டத்தினர் முஹம்மதின் அழைப்பினால் மனம் மாறிவிடலாம். எனவே, ஹாஜிகளை சந்தித்து முஹம்மதைப் பற்றி முன்கூட்டியே எச்சரிக்கை செய்ய வேண்டும் என்பதற்காக குறைஷியர்கள் வலீத் இப்னு முகீராவிடம் ஒன்று கூடினர். குறைஷிகளிடம் அவன் ‘‘இவ்விஷயத்தில் நீங்கள் அனைவரும் ஒருமித்த கருத்தைக் கூறுங்கள். இல்லையென்றால் ஒருவன் கூற்றுக்கு மற்றவன் கூற்று மறுப்பாகி ஒருவர் மற்றவரை பொய்யராக்கிக் கொள்வீர்கள்’’ என்று கூறினான். அம்மக்கள் ‘‘நீயே ஓர் ஆலோசனையைக் கூறிவிடு. நாங்கள் அதற்கேற்ப நடந்து கொள்கிறோம்’’ என்றனர். அவன் ‘‘இல்லை! நீங்கள் கூறுங்கள், அதைக் கேட்டு நான் ஒரு முடிவு செய்கிறேன்’’ என்றான்.

குறைஷியர்கள்: அவரை (முஹம்மதை) ஜோசியக்காரர் என்று கூறலாமா?

வலீத்: ‘‘இல்லை! அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர் ஜோதிடர் அல்லர். ஏனெனில் நாம் ஜோதிடர் பலரைக் கண்டிருக்கிறோம். ஆனால் இவரது பேச்சு ஜோதிடனின் உளறல்களாகவோ பேச்சுகளாகவோ இல்லை.’’

குறைஷியர்கள்: அவரைப் பைத்தியக்காரர் என்று கூறலாமா?

வலீத்: அவர் பைத்தியக்காரர் அல்லர். ஏனெனில், பைத்தியக்காரன் எப்படியிருப்பான் என்பது நமக்கு நன்றாகத் தெரியும். ஆனால் அவரிடம் பைத்தியத்தின் எந்த அடையாளமும் இல்லை.

குறைஷியர்கள்: அவரைக் கவிஞர் எனக் கூறலாமா?

வலீத்: அவர் கவிஞரல்ல. ஏனெனில், நமக்கு கவியின் அனைத்து வகைகளும் தெரியும். ஆனால் அவரது பேச்சு கவியாக இல்லை.

குறைஷியர்கள்: அவரை சூனியக்காரர் என்று கூறலாமா?

வலீத்: நாம் சூனியக்காரர்களையும் அவர்களது சூனியத்தையும் நன்கறிந்திருக்கிறோம். ஆனால் அவரது பேச்சு சூனியக்காரர்களின் ஊதுதலாகவோ முடிச்சுகளாகவோ நமக்குத் தோன்றவில்லை.

குறைஷியர்கள்: பின்னர் நாம் எதைத்தான் கூறுவது?

வலீத்: அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவரது பேச்சில் ஒரு தனித்துவமான இனிமையும் மிகுந்த கவர்ச்சியும் இருக்கிறது. அதன் தொடக்கம் பழக்குலையாகவும் அதன் இறுதி பறிக்கப்பட்ட கனியாகவும் இருக்கிறது. நீங்கள் முன்பு கூறியதில் எதைக் கூறினாலும் அது பொய்தான் என்று தெரிந்து விடும். உங்களது கூற்றில் மிக ஏற்றது அவரை சூனியக்காரர் என்று கூறுவதுதான். அவர் ஒரு சூனியத்தைக் கொண்டு வந்து அதன்மூலம் தந்தை-மகன், கணவன்-மனைவி, சகோதரர்கள், குடும்பங்கள் ஆகியோருக்கிடையில் பிரிவினையை ஏற்படுத்தி விடுகிறார் என்றே கூறுங்கள் என்று வலீத் கூறினான். அதை ஏற்று மக்கள் திருப்தியுடன் கலைந்தனர். (இப்னு ஹிஷாம்)

குறைஷியர்கள் வலீதிடம் பிரச்சனையற்ற ஒரு நல்ல ஆலோசனையைத் தங்களுக்கு கூறும்படி கேட்க அதற்கு வலீத் ‘‘அது குறித்து சிந்திக்க எனக்கு அவகாசமளியுங்கள்’’ என்று கூறி மிக நீண்ட நேரம் யோசித்தபின் மேற்கண்ட தனது கருத்தைக் கூறினான் என சில அறிவிப்புகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

வலீதின் இச்செயல் குறித்து அல்முத்தஸ்ஸிர் என்ற அத்தியாயத்தில் 11 முதல் 26 வரையிலான 16 வசனங்களை அல்லாஹ் இறக்கி வைத்து அவ்வசனங்களுக்கிடையில் அவன் யோசித்த விதங்களைப் பற்றி அல்லாஹ் மிக அழகாகக் குறிப்பிடுகிறான்.

நிச்சயமாக அவன் (இந்தக் குர்ஆனைப் பற்றி மிக மிகக்) கவனித்து (ஒரு பொய்யைக்) கற்பனை செய்தான். அவன் அழிந்துபோவான் என்னதான் கற்பனை செய்துவிட்டான்! பின்னும் அவன் அழிந்துபோவான் என்னதான் கற்பனை செய்துவிட்டான்! (ஒன்றுமில்லை.) பின்னும் (அதனைப் பற்றிக்) கவனித்தான். பின்னர் (தன் இயலாமையைப் பற்றி முகம்) கடுகடுத்தான் (முகம்) சுளித்தான். பின்னர் புறங்காட்டிச் சென்றான். (எனினும், பின்னும்) கர்வம் கொண்டான். ஆகவே "இது மயக்கக்கூடிய சூனியமேயன்றி வேறில்லை" என்றும், "இது மனிதர்களுடைய சொல்லேயன்றி வேறில்லை" என்றும் கூறினான். (அல்குர்ஆன் 74:18-25)

இந்த முடிவுக்கு சபையினர் உடன்பட்டதும் அதை நிறைவேற்றத் தயாரானார்கள். மக்கள் ஹஜ்ஜுக்கு வரும் வழிகளில் அமர்ந்து கொண்டு தங்களைக் கடந்து செல்பவர்களிடம் நபி (ஸல்) அவர்களைப் பற்றி எச்சரித்து தாங்கள் முடிவு செய்திருந்ததைக் கூறினார்கள்.

ஆனால், அதை இலட்சியம் செய்யாத நபி (ஸல்) ஹாஜிகளின் தங்குமிடங்களிலும் பிரபலமான உக்காள், மஜன்னா, துல்மஜாஸ் ஆகிய சந்தைகளிலும் மக்களைத் தேடிச் சென்று அவர்களை அல்லாஹ்வின் பக்கம் அழைத்தார்கள். நபி (ஸல்) அவர்களுக்குப் பின் அபூலஹப் நின்றுகொண்டு "இவர் சொல்வதை ஏற்காதீர்கள். நிச்சயமாக இவர் மதம் மாறியவர் பொய்யர்" என்று கூறினான்.

இவர்களின் இவ்வாறான செயல்கள் அரபியர்களிடம் மென்மேலும் இஸ்லாம் பரவக் காரணமாக அமைந்தன. ஹஜ்ஜை முடித்துச் சென்ற அரபியர்கள் நபி (ஸல்) அவர்களையும் அவர்கள் எடுத்துரைத்த இஸ்லாமையும் தங்களது நாடுகளில் எடுத்துரைத்தார்கள்.

**அழைப்புப் பணியில் இடையூறுகள்**

ஹஜ் காலம் முடிந்தது. இறையழைப்புப் பணியை அதன் ஆரம்ப நிலையிலேயே கருவறுத்திட வேண்டுமென குறைஷியர்கள் பல்வேறு வழிமுறைகளைக் கையாண்டனர். அவற்றின் சுருக்கம் பின்வருமாறு:

1) பரிகசித்தல், இழிவுபடுத்துதல், பொய்ப்பித்தல், எள்ளி நகையாடுதல்:

இதுபோன்ற இழிசெயல்களால் முஸ்லிம்களை மனதளவில் பலவீனப்படுத்த எண்ணினர். அற்பமான வசைச்சொற்களால் நபி (ஸல்) அவர்களை ஏசினர். சில வேளைகளில் பைத்தியக்காரர் என்றனர்.

(நமது நபியாகிய உங்களை நோக்கி) "வேதம் அருளப்பட்டதாகக் கூறும் நீங்கள் நிச்சயமாகப் பைத்தியக்காரர்தான்" என்று கூறுகின்றனர். (அல்குர்ஆன் 15:6)

சில வேளைகளில் நபி (ஸல்) அவர்களை "சூனியக்காரர்' என்றும் "பொய்யர்' என்றும் கூறினர்.

(அவர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கக்கூடிய ஒரு தூதர், (ஆகிய நீங்கள்) அவர்களி(ன் இனத்தி)லிருந்தே அவர்களிடம் வந்ததைப் பற்றி அவர்கள் ஆச்சயப்பட்டு, "இவர் மிகப் பொய் சொல்லும் சூனியக்காரர்தான்" என்று (உங்களைப் பற்றி) நிராகரிப்பவர்கள் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 38:4)

வஞ்சகத்தனத்தையும் சுட்டெரிக்கும் பார்வைகளையும் நபி (ஸல்) அவர்கள் மீது வீசினர்.

(நபியே!) நிராகரிப்பவர்கள் நல்லுபதேசத்தைக் கேட்கும்போதெல்லாம், அவர்கள் தங்களுடைய பார்வைகளைக் கொண்டே உங்களை வீழ்த்தி விடுபவர்களைப் போல் (கோபத்துடன் விரைக்க விரைக்கப்) பார்க்கின்றனர். அன்றி, (உங்களைப் பற்றி) நிச்சயமாக, அவர் பைத்தியக்காரர்தான் என்றும் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 68:51)

நபி (ஸல்) அவர்கள் தங்களது எளிய தோழர்களுடன் அமர்ந்திருக்கும்போது அவர்களைக் கேலி செய்வார்கள்.

(நபியே!) இவ்வாறே அவர்களில் சிலரை சிலரைக் கொண்டு நாம் சோதித்ததில் ''எங்களை விட்டு (ஏழைகளாகிய) இவர்கள் மீதா அல்லாஹ் அருள் புரிந்துவிட்டான்?'' என்று (பணக்காரர்கள்) கூற முற்பட்டனர். நன்றி செலுத்துபவர்களை அல்லாஹ் மிக அறிந்தவனல்லவா? (அல்குர்ஆன் 6:53)

அதற்கு அல்லாஹ் அந்த வசனத்தின் இறுதியிலேயே பதிலளித்தான். மேலும், இறை நம்பிக்கையாளர்களைப் பார்த்து எவ்வாறெல்லாம் பரிகசித்தார்கள் என்பதையும் விவரிக்கிறான்.

நிச்சயமாக குற்றவாளிகளோ (இன்று) நம்பிக்கைக் கொண்டவர்களைக் கண்டு (ஏளனமாகச்) சிரிக்கின்றனர். அவர்களின் சமீபமாகச் சென்றால், (பரிகாசமாகத் தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் கண் ஜாடையும் காட்டிக் கொள்கின்றனர். (அவர்களை விட்டும் விலகித்) தங்கள் குடும்பத்தாரிடம் சென்று விட்டபோதிலும், (பின்னும்) இவர்களுடைய விஷயங்களையே (பரிகாசமாகப் பேசி) மகிழ்ச்சியடைகின்றனர். (வழியில்) இவர்களைக் கண்டால் (இவர்களைச் சுட்டிக் காண்பித்து) ''நிச்சயமாக இவர்கள் வழிகெட்டுப் போனார்கள்'' என்றும் கூறுகின்றனர். (நம்பிக்கையாளர்களைப் பற்றி எதற்காக இவர்கள் இவ்வளவு கவலைப்படுகின்றனர்?) இவர்கள் அவர்கள் மீது பாதுகாப்பாளர்களாக அனுப்பப்படவில்லையே! (அல்குர்ஆன் 83:29-33)

இவ்வாறு ஒவ்வொரு நாளும் கேலி, கிண்டல், குத்திப்பேசுதல் போன்ற இடையூறுகளை அதிகரித்துக் கொண்டே சென்றனர். இது நபி (ஸல்) அவர்களின் மனதைப் பெரிதும் பாதித்தது. இது குறித்து அல்குர்ஆனில் இவ்வாறு அல்லாஹ் கூறுகிறான்:

(நபியே! உங்களைப் பற்றி) அவர்கள் (கேவலமாகக்) கூறுபவை, உங்கள் உள்ளத்தை நெருக்குகிறதென்பதை நிச்சயமாக நாம் அறிவோம். (அதை நீங்கள் ஒரு சிறிதும் பொருட்படுத்தாதீர்கள்.)

பிறகு அவர்களது மன நெருக்கடியை அகற்றும் வழியைக் கூறி அவர்களை உறுதிப்படுத்துகிறான்.

நீங்கள் உங்கள் இறைவனைத் துதி செய்து புகழ்ந்து, அவனுக்குச் சிரம் பணிந்து வணங்குங்கள். உமக்கு ''யக்கீன்' (என்னும் மரணம்) ஏற்படும் வரையில் (இவ்வாறே) உங்கள் இறைவனை வணங்கிக் கொண்டிருங்கள். (அல்குர்ஆன் 16:97)

மேலும் பரிகசிப்பவர்களின் தீங்கிலிருந்து நபி (ஸல்) அவர்களை பாதுகாப்பதாக அல்லாஹ் உறுதியளிக்கிறான்.

பரிகாசம் செய்யும் (இவர்களுடைய தீங்கைத் தடை செய்வதற்கு) நிச்சயமாக நாமே உங்களுக்குப் போதுமாயிருக்கிறோம். இவர்கள் (உங்களைப் பரிகசிப்பது மட்டுமா?) அல்லாஹ்வுக்கு மற்றொரு (பொய்த்) தெய்வத்தைக் கூட்டாக்குகிறார்கள். (இதன் பலனை) பின்னர் இவர்கள் அறிந்து கொள்வார்கள். (அல்குர்ஆன் 16:95, 96)

அதுமட்டுமின்றி அவர்களது தீய செயல்கள் அவர்களுக்கு எதிராகவே முடியும் என்பதையும் அல்லாஹ் முன்னறிவிப்புச் செய்தான்.

(நபியே!) உங்களுக்கு முன்னர் வந்த (நம்முடைய மற்ற) தூதர்களும் நிச்சயமாக (இவ்வாறே) பரிகசிக்கப்பட்டனர். முடிவில் அவர்கள் (எந்த வேதனையைப்) பரிகசித்துக் கொண்டிருந்த(னரோ அ)து அவர்களை வந்து சூழ்ந்துகொண்டது. (அல்குர்ஆன் 6:10)

2) சந்தேகங்களை கிளறுவதும் பொய்ப்பிரச்சாரத்தை முடுக்கிவிடுவதும்

ஏகத்துவ அழைப்பை மக்கள் செவியேற்று சிந்திக்க முடியாத வகையில் பல வகையான பொய்ப் பிரச்சாரங்களைக் கட்டவிழ்த்து விட்டனர். குர்ஆனைப் பற்றி இவ்வாறு கூறினர்:

இவை சிதறிய சிந்தனையால் ஏற்பட்ட வாக்கியங்கள்; நபி (ஸல்) அவர்கள் தாமே இதனைப் பொய்யாகக் கற்பனை செய்து கொண்டார். மேலும், நபி (ஸல்) அவர்கள் ஒரு கவிஞர்தான்; தன் கவிதை ஆற்றலால் அமைத்த வாக்கியங்களே இவை; இரவில் பொய்யான கனவுகளைக் கண்டு பகலில் அதை வசனமாக ஓதிக் காட்டுகிறார்; நபி (ஸல்) அவர்கள் தாமாகவே அதைப் புனைந்து கொள்கிறார்; குர்ஆனை இவருக்கு கற்றுத் தருவது ஒரு மனிதர்தான்; குர்ஆனாகிய இது பொய்யாக அவர் கற்பனை செய்துகொண்டதே தவிர வேறில்லை இதைக் கற்பனை செய்வதில் வேறு மக்களும் அவருக்கு உதவி புரிகின்றனர்; இது முன்னோர்களின் கட்டுக்கதையே; காலையிலும் மாலையிலும் இவருக்கு ஓதிக் காண்பிக்கப்படுகிறது அதனை இவர் மற்றொருவரின் உதவியைக் கொண்டு எழுதி வைக்கும்படி செய்கின்றார் இவ்வாறெல்லாம் அந்த நிராகரிப்பவர்கள் சூழ்நிலைகளுக்கேற்ப பிரச்சாரம் செய்து வந்தனர். (பார்க்க அல்குர்ஆன் வசனங்கள் 21:5, 16:103, 25:4, 5)

சில வேளைகளில் குறி சொல்பவர்களுக்கு ஜின், ஷைத்தான் இறங்கி செய்தி சொல்வது போல நபி (ஸல்) அவர்கள் மீதும் ஜின், ஷைத்தான் இறங்கி செய்தி சொல்கின்றன என்றனர். இதை மறுத்தே பின்வரும் வசனம் அருளப்பட்டது.

(நம்பிக்கையாளர்களே!) ஷைத்தான்கள் யார் மீது இறங்குகின்றனர் என்பதை நான் உங்களுக்கு அறிவிக்கவா? பொய் சொல்லும் ஒவ்வொரு பாவியின் மீதும் இறங்குகின்றனர். தாங்கள் கேள்விப்பட்டதை எல்லாம் அவர்களுக்குக் கூறுகின்றனர். அவர்களில் பெரும்பாலானவர்கள் (பெரும்) பொய்யர்களே! (அல்குர்ஆன் 26:221-223)

அதாவது மக்களே! பாவத்தில் உழலும் பொய்யான பாவியின் மீதுதான் ஷைத்தான்கள் இறங்குகிறார்கள். நான் பொய்யுரைத்தோ பாவம் செய்தோ நீங்கள் கண்டதில்லை. அப்படியிருக்க இந்தக் குர்ஆனை ஷைத்தான் எனக்குக் கற்றுக் கொடுத்தான் என்று எப்படிக் கூறுகிறீர்கள்.

சில வேளைகளில் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து “இவருக்கு ஒருவகையான பைத்தியம் பிடித்துள்ளது. நல்ல கருத்துகளை இவரே சிந்தித்து அதை அழகிய மொழிநடையில் கவிஞர்களைப் போன்று கூறுகிறார். எனவே இவர் கவிஞர்; இவரது வார்த்தைகள் கவிகளே” என்றனர். அல்லாஹ் இவர்களுக்கு மறுப்பு தெரிவித்து, கவிஞர்களிடமுள்ள மூன்று தன்மைகளைக் குறிப்பிட்டு அதில் ஒன்றுகூட நபி (ஸல்) அவர்களிடம் இல்லை என்பதைத் தெளிவுபடுத்தினான்.

கவிஞர்களை வழிகெட்டவர்கள்தாம் பின்பற்றுகின்றனர். நிச்சயமாக, அவர்கள் ஒவ்வொரு திடலிலும் தட்டழிந்து திரிகிறார்கள் என்பதை (நபியே!) நீங்கள் பார்க்கவில்லையா? நிச்சயமாக அவர்கள் செய்யாத காரியங்களை(ச் செய்ததாக)க் கூறுகிறார்கள். (அல்குர்ஆன் 26:224-226)

1) நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றியவர்கள் மார்க்கத்திலும் நற்பண்புகளிலும் சிறந்து விளங்கி, இறையச்சத்துடன் நேர்வழியையும் அடைந்தவர்களாவர். வழிகேட்டிற்கான எந்த அடையாளமும் அவர்களிடமில்லை.

2) கவிஞர்கள் சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு உளறுவதைப் போன்று நபி (ஸல்) முன்னுக்குப் பின் முரணாக உளறவில்லை. மாறாக, அவர்கள் ஒரே இறைவன்; ஒரே மார்க்கம் என்ற கொள்கையின் பக்கம் எப்போதும் அழைத்துக் கொண்டிருந்தார்கள்.

3) தாங்கள் செய்ததையே பிறரிடம் நபி (ஸல்) எடுத்துரைத்தார்கள். பிறரிடம் எடுத்துரைத்ததையே தங்களது வாழ்வில் நடைமுறைப்படுத்தினார்கள். எனவே, நபி (ஸல்) அவர்களுக்கும் கவிஞர்களுக்கும், குர்ஆனுக்கும் கவிதைக்கும் எந்த வகையிலும் தொடர்பில்லை பிறகு எவ்வாறு ஒப்பிடுகிறீர்கள்?

இவ்வாறு நபி (ஸல்) அவர்களுக்கும் குர்ஆனுக்கும் எதிராக நிராகரிப்போர் எழுப்பிய ஒவ்வொரு சந்தேகத்துக்கும் தெளிவான, ஆணித்தரமான பதில்களை அல்லாஹ் இறக்கி அருளினான். நிராகரிப்பவர்களின் பெரும்பாலான சந்தேகங்கள் ஓரிறைக் கொள்கை, தூதுத்துவம், மரணித்தவர் மறுமையில் எழுப்பப்படுவது ஆகிய மூன்றைப் பற்றியே இருந்தது. ஏகத்துவம் தொடர்பான அவர்களது அனைத்து சந்தேகங்களுக்கும் குர்ஆன் உறுதியான பதிலளித்து அவர்களது கற்பனைக் கடவுள்கள் எவ்வளவு பலவீனமானவை என்பதையும் தெளிவுபடுத்தியது. குர்ஆனின் ஆணித்தரமான விளக்கங்கள் குறைஷியரின் கோபத்தையே அதிகரிக்கச் செய்தது.

அவர்கள் நபி (ஸல்) அவர்களை உண்மையாளர்; நம்பிக்கைக்குரியவர்; இறையச்சமிக்க ஒழுக்க சீலர் என்று உறுதி கொண்டிருந்த அதே நேரத்தில், அவர் அல்லாஹ்வின் உண்மையான தூதூர்தானா? என சந்தேகித்தனர். ஏனெனில், ‘‘நபித்துவம்’ என்பது மிக உயர்ந்த ஒன்று! அதை சாதாரண மனிதர்களால் பெற முடியாது என அவர்கள் உறுதியாக நம்பியிருந்தனர். எனவே, அல்லாஹ் தனக்களித்த நபித்துவத்தைப் பற்றி அறிவித்து அல்லாஹ்வை நம்பிக்கை கொள்ளுங்களென நபி (ஸல்) அவர்கள் அழைப்பு விடுத்தபோது இணைவைப்பவர்கள் திகைத்துப்போய் பின்வாங்கினர். இவர்களின் இக்கூற்றுகள் பற்றியே அல்லாஹ் இந்த வசனங்களை இறக்கினான்.

(பின்னும்) அவர்கள் கூறுகின்றனர்: ‘‘இந்தத் தூதருக்கென்ன (நேர்ந்தது)? அவர் (நம்மைப் போலவே) உணவு உண்ணுகிறார்; கடைகளுக்கும் செல்கிறார். (அவர் இறைவனுடைய தூதராக இருந்தால்) அவருக்காக யாதொரு வானவர் இறக்கி வைக்கப்பட்டிருக்க வேண்டாமா? அவ்வாறாயின், அவர் அவருடன் இருந்து கொண்டு அச்சமூட்டி எச்சரிக்கை செய்து கொண்டிருப்பாரே! (அல்குர்ஆன் 25:7)

மேலும் ‘‘முஹம்மது மனிதராயிற்றே!

மனிதர் எவருக்கும் (வேதத்தில்) யாதொன்றையும் அல்லாஹ் அருளவேயில்லை’’ என்று அவர்கள் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 6:91)

அவர்களுக்கு மறுப்பு தெரிவித்து அல்லாஹ் (அதே வசனத்தில்) கூறுகிறான்:

(நபியே! அவர்களை நோக்கி) நீங்கள் கேளுங்கள்: ‘‘மனிதர்களுக்கு ஒளியையும் நேர்வழியையும் தரக்கூடிய (‘‘தவ்றாத்’ என்னும்) வேதத்தை நபி மூஸாவுக்கு அருளியது யார்? (அல்குர்ஆன் 6:91)

மூஸா (அலை) மனிதர்தாம் என்று அவர்கள் நன்கு விளங்கியிருந்தனர். அப்படியிருக்க முஹம்மது (ஸல்) மனிதராக இருப்பதுடன் அல்லாஹ்வின் தூதராக ஏன் இருக்கக்கூடாது?

ஒவ்வொரு கூட்டத்தாரும் தங்களுக்கு அனுப்பப்பட்ட தூதர்களின் தூதுத்துவத்தை மறுத்து இவ்வாறுதான் கூறினர்.

அதற்கவர்கள், ''நீங்கள் நம்மைப் போன்ற (சாதாரண) மனிதர்களே தவிர வேறில்லை'' என்று கூறினார்கள். (அல்குர்ஆன் 14:10)

இவர்களின் இக்கூற்றுக்குப் பதிலாக இறைத்தூதர்கள் கூறினார்கள்.

நாங்கள் உங்களைப் போன்ற மனிதர்கள்தாம். எனினும், அல்லாஹ் தன் அடியார் களில் தான் விரும்பியவர்கள் மீது அருள் புரிகிறான். (அல்குர்ஆன் 14:11)

ஆகவே, இறைத்தூதர்களும் மனிதர்கள்தான். எனவே, மனிதராக இருப்பது நபித்துவத்திற்கு எந்த வகையிலும் முரண்பாடானது அல்ல என்பதை இந்த வசனங்கள் தெளிவுபடுத்தின.

இப்றாஹீம், இஸ்மாயீல், மூஸா (அலை) ஆகிய அனைவரும் மனிதர்களாக இருந்து அல்லாஹ்வின் தூதராகவும் இருந்தார்கள் என்பதை மக்காவாசிகள் ஏற்றிருந்ததால் நபி (ஸல்) அவர்கள் மீதான இந்த வாதத்தை விரைவிலேயே கைவிட்டு விட்டு மற்றொரு சந்தேகத்தைக் கிளற ஆரம்பித்தனர். அதாவது, மிகவும் மகத்துவம் வாய்ந்த தூதுத்துவத்தைக் கொடுக்க இந்த அனாதையைத் தவிர வேறு எவரும் அல்லாஹ்வுக்கு கிடைக்கவில்லையா? மக்கா, தாயிஃப் நகரத்திலுள்ள செல்வமும் செல்வாக்கும் மிக்க பல தலைவர்கள் இருக்க அவர்களை எல்லாம் விட்டுவிட்டு ஆதரவற்றவரான இவரை அல்லாஹ் ஒருபோதும் தூதராக்க மாட்டான் என்று வாதிக்கத் தொடங்கினர். அவர்களின் இக்கூற்றை அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகிறான்.

அன்றி (தாயிஃப், மக்கா ஆகிய) இவ்விரண்டு ஊர்களிலுள்ள யாதொரு பெரியமனிதன் மீது இந்தக் குர்ஆன் இறக்கிவைக்கப்பட்டிருக்க வேண்டாமா? (அவ்வாறாயின் நாங்கள் அதனை நம்பிக்கை கொண்டிருப்போம்) என்றும் கூறுகின்றனர்.(அல்குர்ஆன் 43:31)

இவர்களின் இக்கூற்றுக்கு பதிலுரைத்து இந்த வசனங்களை அல்லாஹ் இறக்கினான்.

(நபியே!) உங்கள் இறைவனின் அருளைப் பங்கிடுபவர்கள் இவர்கள்தாமா? (அல்குர்ஆன் 43:32)

அதாவது தூதுத்துவம், வஹி (இறைச்செய்தி) இரண்டும் அல்லாஹ்வின் கருணையாகும். அதை, தான் விரும்பியவர்களுக்குக் கொடுக்கும் முழு உரிமையும் அவனுக்குரியதே! அவ்வாறின்றி இவர்கள் விரும்பிய நபர்களுக்குத்தான் கிடைக்க வேண்டுமென்று இந்த நிராகரிப்பாளர்கள் எண்ணுவது எந்த வகையில் நியாயம்? என அல்லாஹ் வினா தொடுத்து, தூதுத்துவத்தை யாருக்கு கொடுப்பது என்பதை அவனே நன்கு அறிந்தவன் என அடுத்து வரும் வசனத்தில் கூறுகிறான்:

அவர்களிடம் யாதொரு வசனம் வந்தால் ''அல்லாஹ்வுடைய தூதர்களுக்குக் கொடுக்கப்பட்டது போன்ற (நபித்துவத்)தை எங்களுக்கும் கொடுக்கப்படும் வரையில் நாங்கள் (அதனை) நம்பிக்கை கொள்ளவே மாட்டோம்'' என்று கூறுகின்றனர். நபித்துவத்தை எங்கு (எவருக்கு) அளிப்பது என்பதை அல்லாஹ்தான் நன்கறிவான். (அல்குர்ஆன் 6:124)

இதற்கும் உரிய பதில்கள் கிடைக்கவே, மற்றொரு சந்தேகத்தைக் கிளறினர். உலகில் அரசர்கள் படை, பட்டாளம் சூழ மிகக்கம்பீரமாக, செழிப்பாக வாழ்ந்து கொண்டிருக்க தன்னை அல்லாஹ்வின் தூதரென வாதிக்கும் முஹம்மதோ சில கவள உணவுக்காக வாழ்க்கையில் இப்படியெல்லாம் சிரமப்படுகிறாரே? என்றனர்.

(பின்னும்) அவர்கள் கூறுகின்றனர்: ''இந்தத் தூதருக்கென்ன (நேர்ந்தது)? அவர் (நம்மைப் போலவே) உணவு உண்ணுகிறார்; கடைகளுக்கும் செல்கிறார். (அவர் இறைவனுடைய

தூதராக இருந்தால்) அவருக்காக யாதொரு வானவர் இறக்கி வைக்கப்பட்டிருக்க வேண்டாமா? அவ்வாறாயின், அவர் அவருடன் இருந்து கொண்டு அச்சமூட்டி எச்சரிக்கை செய்து கொண்டிருப்பாரே! அல்லது அவருக்கு யாதொரு புதையல் கொடுக்கப்பட வேண்டாமா? அல்லது அவர் புசிப்பதற்கு வேண்டிய யாதொரு சோலை அவருக்கு இருக்க வேண்டாமா? (என்று கூறுகின்றனர்.) அன்றி, இவ்வக்கிரமக்காரர்கள் (நம்பிக்கையாளர்களை நோக்கி) நீங்கள் சூனியம் செய்யப்பட்ட ஒரு மனிதரையே பின்பற்றுகின்றீர்கள்'' என்றும் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 25:7, 8)

நிராகரிப்பவர்களின் மேற்கூறிய கூற்றுக்குரிய பதிலை அல்லாஹ் அதைத் தொடர்ந்துள்ள 9, 10, 11 வசனங்களில் இவ்வாறு குறிப்பிடுகிறான்.

ஆகவே, (நபியே!) உங்களைப் பற்றி (இந்த) அக்கிரமக்காரர்கள் என்னென்ன வர்ணிப்புகள் கூறுகின்றார்கள் என்பதை கவனித்துப் பாருங்கள். ஆகவே, இவர்கள் (முற்றிலும்) வழிகெட்டு விட்டார்கள்; நேரான வழியை அடைய இவர்களால் முடியாது.

(நபியே! உங்களது இறைவனாகிய) அவன் மிக்க பாக்கியமுடையவன். அவன் நாடினால் (இந்நிராகரிப்பவர்கள் கோரும்) அவற்றைச் சொந்தமாக்கி மிக்க மேலான சொர்க்கத்தை உங்களுக்குத் தரக்கூடியவன். அவற்றில் நீரருவிகள் தொடர்ந்து ஓடிக்கொண்டே இருக்கும். அதில் உங்களுக்குப் பல மாட மாளிகைகளையும் அமைத்து விடுவான்.

உண்மையில் இவர்கள் விசாரணைக் காலத்தையே பொய்யாக்குகின்றனர். எவர்கள் விசாரணைக் காலத்தைப் பொய்யாக்குகிறார்களோ அவர்களுக்கு கடுமையாக பற்றி எயும் நரகத்தையே நாம் தயார்படுத்தி வைத்திருக்கின்றோம். (அல்குர்ஆன் 25:9, 10, 11)

அதாவது, சிறியவர்-பெரியவர், பலவீனர்-வலியவர், மதிப்புடையவர்-மதிப்பற்றவர், சுதந்திரமானவர்-அடிமை, ஏழை-பணக்காரர் என்ற அனைத்துத் தரப்பினருக்கும் தூதுத்துவத்தை எடுத்துரைப்பதே முஹம்மது (ஸல்) அவர்களது பணி! எனவே அரசாங்க தூதர்களைப் போல படை பட்டாளம், பாதுகாவலர், பணியாட்கள் ஆகியோர் சூழ முஹம்மது (ஸல்) இருந்தால் மக்களில் பெரும்பான்மையாக இருக்கும் சாதாரணமான மனிதர்களும் ஏழை எளியோரும் எவ்வாறு அவரைச் சந்தித்து பயன்பெற முடியும்? எனவே அரசர்களைப் போன்று ஆடம்பரமாக வாழ்ந்தால் நபித்துவத்தின் நோக்கமே அடிபட்டுவிடும் என்றும் அல்லாஹ் தெளிவுபடுத்தினான்.

அடுத்து, மரணத்துக்குப் பின் எழுப்பப்படுவதை அவர்கள் மறுத்து வந்தார்கள். அது அறிவுக்கு எட்டாததாகவும் ஆச்சரியமானதாகவும் அவர்களுக்குத் தென்பட்டது. அவர்களின் இக்கூற்றை பற்றி இதோ அல்குர்ஆன் விவரிக்கிறது:

“நாம் இறந்து (உக்கி) எலும்பாகவும் மண்ணாகவும் போன பின்னர் மெய்யாகவே நாம் எழுப்பப்படுவோமா? (என்றும்) (அவ்வாறே) நம்முடைய மூதாதைகளுமா? (எழுப்பப்படுவார்கள்'' என்றும் பரிகாசமாகக் கூறுகின்றனர்.) (அல்குர்ஆன் 37:16, 17)

(அன்றி, “இத்தூதர் கூறுகின்றபடி) நாம் இறந்து உக்கி மண்ணாகப்போனதன் பின்னரா (உயிர்கொடுத்து மீளவைக்கப்படுவோம்?) இவ்வாறு மீளுவது வெகு(தூர) தூரம். (மீளப்போவதே இல்லை'' என்றும் கூறுகின்றனர்.) (அல்குர்ஆன் 50:3)

எனினும், எவர்கள் நிராகரிக்கின்றவர்களாக இருக்கின்றார்களோ அவர்கள் (மற்றவர்களை நோக்கி) “நீங்கள் (இறந்து மக்கி) அணுவணுவாகப் பிரிக்கப்பட்டதன் பின்னரும் நிச்சயமாக நீங்கள் புதிதாகப் படைக்கப்பட்டு விடுவீர்கள் என்று உங்களுக்கு (பயமுறுத்தி)க் கூறக்கூடியதொரு மனிதனை நாம் உங்களுக்கு அறிவிக்கவா'' என்று (பரிகாசமாகக்) கூறுகின்றனர். அன்றி, (இம்மனிதர்) “அல்லாஹ்வின் மீது பொய்யாகக் கற்பனை செய்து கொண்டாரோ அல்லது அவருக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கிறதோ'' என்று (அவரிடம்

கூறுகின்றனர்.) அவ்வாறன்று! எவர்கள் மறுமையை நம்பவில்லையோ அவர்கள்தாம் பெரும் வேதனையிலும், வெகு தூரமானதொரு வழிகேட்டிலும் இருக்கின்றனர்.(அல்குர்ஆன் 34:7, 8)

மரணத்திற்கு பிறகு எழுப்படுவதை பரிகாசம் செய்து அவர்கள் கவிதையும் பாடினர்,

“மரணமா? பிறகு எழுப்புதலா? பிறகு ஒன்று சேர்த்தலா? உம்மு அம்ரே இது என்னே கற்பனை கதை?”

உலகில் நடைபெறும் நிகழ்வுகளை அல்லாஹ் அவர்களது சிந்தனைக்கு உணர்த்தி, அவர்களது கூற்றுக்கு மறுப்புரைத்தான். அதாவது, அநீதமிழைத்தவன் அதற்குரிய தண்டனையை அனுபவிக்காமலும், அநீதத்திற்குள்ளானவன் அதற்குரிய பரிகாரத்தைப் பெறாமலும் மரணித்து விடுகிறான். அவ்வாறே, நன்மை செய்தவன் அதற்குரிய நற்பலனையும், தீமை செய்தவன் அதற்குரிய தண்டனையையும் அனுபவிக்காது மரணமடைகின்றான். மரணத்திற்குப் பிறகு ஒரு வாழ்க்கையும் அங்கு ஒவ்வொரு செயலுக்குமான தகுந்த கூலியும் என்ற நியதி இல்லாதிருந்தால், இந்த இரு வகையினரும் சமமாகி விடுவார்கள். அதுமட்டுமின்றி பாவியும் அநீதமிழைத்தவனும் நல்லவரை விடவும் அநீதமிழைக்கப்பட்டவனை விடவும் பாக்கியத்திற்குரியவர்களாக ஆகி விடுவார்கள். ஆனால், நீதமானவனான அல்லாஹ் தனது படைப்பினங்களை இத்தகைய முரண்பாட்டில் வைத்துவிடுவான் என்பது கற்பனைக்கும் அப்பாற்பட்ட ஒன்றாகும். இதை அல்லாஹ் பின்வரும் வசனங்களில் விவரிக்கிறான்.

(நமக்கு) முற்றிலும் வழிபடும் முஸ்லிம்களை (பாவம் செய்யும்) குற்றவாளிகளைப் போல் நாம் ஆக்கி விடுவோமா? உங்களுக்கு என்ன நேர்ந்தது? (இருவரும் சமமென) எவ்வாறு, தீர்ப்பளிக்கின்றீர்கள்? (அல்குர்ஆன் 68:35, 36)

நம்பிக்கை கொண்டு நற்செயல்கள் செய்தவர்களைப் பூமியில் விஷமம் செய்தவர்களைப் போல் நாம் ஆக்கிவிடுவோமா? அல்லது இறை அச்சமுடைய வர்களை (பயமற்று குற்றம் புரியும்) பாவிகளைப் போல் நாம் ஆக்கிவிடுவோமா? (அல்குர்ஆன் 38:28)

எவர்கள் பாவத்தைத் தேடிக் கொண்டார்களோ அவர்கள், நம்பிக்கை கொண்டு நற்செயல்களைச் செய்தவர்களைப் போல் தாம் ஆகிவிடுவோம் என்று எண்ணிக் கொண்டிருக்கின்றனரா? அவர்கள் உயிருடன் இருப்பதும் அவர்கள் இறந்துவிடுவதும் சமமே! அவர்கள் (இதற்கு மாறாகச்) செய்துகொண்ட முடிவு மகா கெட்டது. (அல்குர்ஆன் 45:21)

மறுமுறை எழுப்புவது அல்லாஹ்விற்கு முடியுமா? என்ற அவர்களின் சந்தேகத்திற்கு இதோ அல்லாஹ் பதில் அளிக்கின்றான்.

(மனிதர்களே!) நீங்கள் பலமான படைப்பா? அல்லது வானமா? அவன்தான் அந்த வானத்தைப் படைத்தான். (அல்குர்ஆன் 79:27)

வானங்களையும், பூமியையும் எவ்வித சிரமுமின்றி படைத்த அல்லாஹ், மரணித்தவர்களை உயிர்ப்பிக்க நிச்சயமாக ஆற்றலுடையவன்தான் என்பதை அவர்கள் கவனிக்க வேண்டாமா? நிச்சயமாக அவன் சகலவற்றிற்கும் ஆற்றலுடையவன். (அல்குர்ஆன் 46:33)

முதல்முறை (உங்களைப்) படைத்ததை நிச்சயமாக நீங்கள் நன்கறிந்து இருக்கின்றீர்கள். (இதனைக் கொண்டு) நீங்கள் நல்லறிவு பெற வேண்டாமா? (இவ்வாறுதான் மறுமையிலும் நாம் உங்களை உயிர் கொடுத்து எழுப்புவோம்.) (அல்குர்ஆன் 56:62)

அவன்தான் படைப்புகளை ஆரம்பத்தில் உற்பத்தி செய்பவன். அவனே (அவை மரணித்த பின்னரும் உயிர்கொடுத்து) அவற்றை மீள வைக்கிறவன். இது அவனுக்கு மிக்க எளிது.

வானங்களிலும் பூமியிலும் அவனுடைய (உதாரணமும் பரிசுத்தத்) தன்மை(யும்)தான் மிக்க மேலானதாகும். அவன் (அனைத்தையும்) மிகைத்தவனும் ஞானமுடையவனாகவும் இருக்கிறான். (அல்குர்ஆன் 30:27)

எழுதப்பட்ட கடிதத்தைச் சுருட்டுவதைப் போல் நாம் வானத்தைச் சுருட்டும் நாளை (நபியே!) நீங்கள் அவர்களுக்கு ஞாபகமூட்டுங்கள். முதல் தடவை நாம் அவர்களை படைத்தது போன்றே (அந்நாளில்) நாம் (அவர்களுக்கு உயிர் கொடுத்து) அவர்களை மீளவைப்போம். இது நம்மீது கடமையானதொரு வாக்குறுதியாகும். நிச்சயமாக நாம் இதனைச் செய்தே தீருவோம். (அல்குர்ஆன் 21:104)

(படைப்புகள் அனைத்தையும்) முதல்முறை படைத்ததில் நாம் களைத்து விட்டோமா (இவர்களை மறுமுறை படைப்பது நமக்குக் கஷ்டமெனக் கூறுவதற்கு?) எனினும் (மீண்டும் இவர்களைப்) புதிதாக படைக்கும் விஷயத்தில் இவர்கள் சந்தேகத்தில் இருக்கின்றனர். (அல்குர்ஆன் 50:15)

இவ்வாறு அவர்களது அனைத்து சந்தேகங்களுக்கும் அறிவார்ந்த விளக்கத்தை அல்லாஹ் அளித்தான். எனினும், அந்தக் நிராகரிப்பவர்கள் ஆணவத்தால் சிந்திக்க மறுத்து தங்களது கருத்தையே மக்களிடம் திணித்துக் கொண்டிருந்தனர்.

3) முன்னோர்களின் கட்டுக்கதைகளைக் கூறி திருமறையை செவியேற்காதவாறு மக்களைத் தடுப்பது

நிராகரிப்பவர்கள் மேற்கண்ட சந்தேகங்களுடன் நிறுத்திக் கொள்ளவில்லை. மக்கள் குர்ஆனை செவியேற்கவோ இஸ்லாமிய அழைப்புக்கு பதில் தரவோ இயலாதவாறு அவர்களிடையே புகுந்து தங்களால் இயன்றவரை தடைகளை ஏற்படுத்தினார்கள். இஸ்லாமிய அழைப்பைக் கேட்கும் மக்களிடையே நுழைந்து கூச்சல், குழப்பங்களையும், சலசலப்பையும் ஏற்படுத்தி அவர்கள் குழுமியுள்ள அந்த இடங்களிலிருந்து அவர்களை மிரண்டு ஓடவைப்பார்கள். நபி (ஸல்) அவர்கள் அழைப்பு விடுப்பதற்கு அல்லது தொழுவதற்கு அல்லது குர்ஆன் ஓதுவதற்கு தயாரானால் பாட்டுப்பாடி ஆட்டம் போடுவார்கள். இது குறித்து அடுத்து வரும் வசனம் அருளப்பட்டது:

நிராகரிப்பவர்கள் (மற்றவர்களை நோக்கி) "நீங்கள் இந்த குர்ஆனை செவிமடுக்காதீர்கள். (எவர்கள் அதனை ஓதினாலும்) நீங்கள் அச்சமயம் சப்தமிட்டு அதில் கூச்சல், குழப்பம் உண்டுபண்ணுங்கள். அதனால் நீங்கள் (முஸ்லிம்களை) வென்றுவிடலாம்" என்று கூறினார்கள். (அல்குர்ஆன் 41:26)

இத்தகைய இடையூறுகளால் நபி (ஸல்) அவர்களுக்கு மக்கள் மன்றங்களிலும் பொதுச் சபைகளிலும் இஸ்லாமிய அழைப்புப் பணி செய்வதும் குர்ஆனை ஓதிக் காண்பிப்பதும் மிகச் சிரமமாக இருந்தது. எனவே, யாரும் எதிர்பாராத வகையில் திடீரென மக்கள் முன்னிலையில் தோன்றி சொல்லவேண்டிய விஷயத்தை எடுத்துச்சொல்லி, ஓதிக்காட்ட வேண்டியதை ஓதிக்காட்டி விடுவார்கள். கடினமான இந்நிலை நபித்துவம் பெற்ற ஐந்தாம் ஆண்டு இறுதிவரை நீடித்தது.

குறைஷியர்களில் ஒருவனான "நள்ரு இப்னு ஹாரிஸ்' ஒரு முறை "ஹீரா' சென்றிருந்தபோது அங்கிருந்து பாரசீக அரசர்கள் மற்றும் ருஸ்தும், இஸ்ஃபுந்தியார் ஆகியோரின் கதைகளை கற்று வந்தான். நபி (ஸல்) அவர்கள் ஏதேனும் ஒரு சபையில் உபதேசம் செய்யவோ, அல்லாஹ்வைப் பற்றி அச்சமூட்டி எச்சரிக்கை செய்யவோ தொடங்கினால், அவர்களுக்குப் பின் "நழ்ரு' நின்று கொண்டு "குறைஷியரே! முஹம்மதை விட நான் அழகாகப் பேசுவேன்" என்று கூறி, தான் கற்று வந்த கதைகளைக் கூறி

முடித்தபின் “என்னை விட முஹம்மது அழகாகப் பேசிட முடியுமா?” என்று கேட்பான். (இப்னு ஹிஷாம்)

இப்னு அப்பாஸ் (ரழி) கூறினார்கள்: இனிமையாக பாட்டுப் பாடும் ஓர் அடிமைப் பெண்ணை நழ்ரு விலைக்கு வாங்கியிருந்தான். இஸ்லாமை ஏற்க எவரேனும் விரும்பினால் அவரிடம் தனது பாடகியை அழைத்துச் சென்று “இவருக்கு உணவளித்து, மதுவைப் புகட்டி, இனிமையாக பாட்டுப் பாடு” என்று அவளிடம் கூறுவான். பிறகு, அம்மனிதரிடம் “முஹம்மது உன்னை அழைக்கும் காரியத்தைவிட இது மிகச் சிறந்தது” என்று கூறுவான். இது குறித்து பின்வரும் வசனம் அருளப்பட்டது. (துர்ருல் மன்ஸூர்)

(இவர்களைத் தவிர) மனிதல் பலர் இருக்கின்றனர். அவர்கள் (பொய்யான கட்டுக் கதைகள் மற்றும்) வீணான விஷயங்களை விலைக்கு வாங்கி (அவற்றை மக்களுக்கு ஓதிக் காண்பித்து) அல்லாஹ்வுடைய வழியிலிருந்து ஞானமின்றி மக்களை வழிகெடுத்து, அதனைப் பரிகாசமாகவும் எடுத்துக் கொள்கின்றனர். இத்தகையவர்களுக்கு இழிவு தரும் வேதனை நிச்சயமாக உண்டு. (அல்குர்ஆன் 31:6)

**துன்புறுத்துதல்**

நபி (ஸல்) அவர்களின் பகிரங்க அழைப்பைத் தொடர்ந்து பல மாதங்கள் எதிரிகள் மேற்கொண்ட தடுப்பு முயற்சிகள் அனைத்தும் தோல்வியைத் தழுவின. தாங்கள் கையாண்ட வழிமுறைகளால் எவ்வித பயனுமில்லை என்று அவர்களின் அறிவுக்கு மெதுவாக உரைத்த பிறகு அடுத்த கட்ட நடவடிக்கையாக மாற்று வழியைக் கையாண்டனர். அதாவது, ஒவ்வொரு சமூகத்தலைவரும் எஜமானரும் தன்னுடைய ஆளுமையின் கீழுள்ளவர்கள், அடிமைகள்- இவர்களில் யாராவது இஸ்லாமைத் தழுவினால் அவர்களைத் துன்புறுத்த வேண்டும். அவர்களுக்கு இன்னல்கள் விளைவிக்க வேண்டும் என முடிவு செய்தனர்.

தலைவர்களுடன் அவர்களது எடுபிடிகளும் சேர்ந்துகொண்டு முஸ்லிம்களை வாட்டி வதைத்தனர். குறிப்பாக, சாதாரண எளிய முஸ்லிம்களுக்கு அவர்கள் தந்த நோவினைகளைக் கேட்கும்போதே உள்ளம் கசிந்துருகும். அவற்றை சொல்லி மாளாது.

செல்வமும் செல்வாக்குமுள்ள ஒருவர் இஸ்லாமைத் தழுவினால் அவரிடம் அபூஜஹ்ல் நேரே சென்று “உன் செல்வத்தையும் செல்வாக்கையும் ஒன்றுமில்லாமலாக்கி விடுவேன்” என்று மிரட்டுவான். அவர் கொஞ்சம் பலமில்லாதவராக இருந்தால் அடித்துத் துன்புறுத்துவான். (இப்னு ஹிஷாம்)

உஸ்மான் (ரழி) அவர்களது தந்தையின் சகோதரர் அப்பாவி முஸ்லிம்களை பேரீத்தங்கீற்றுப் பாயில் சுருட்டி வைத்து அதற்குக் கீழே புகை மூட்டி மூச்சு திணறடிப்பர். (ரஹ்மத்துல்லில் ஆலமீன்)

தனது மகன் முஸ்லிமாகி விட்டதை அறிந்த முஸ்அப் இப்னு உமைர் (ரழி) அவர்களின் தாயார் அவருக்கு உணவு, தண்ணீர் கொடுக்காமல் வீட்டிலிருந்து விரட்டிவிட்டார். மிக ஆடம்பரமாக வாழ்ந்து வந்த அவர் பெரும் துன்பத்தை அனுபவித்தார். பசி, பட்டினி என்ற வறண்ட வாழ்க்கையினால் அவர்களது மேனியின் தோல் சுருங்க ஆரம்பித்தது. (அஸதுல் காபா)

ஸுஹைப் இப்னு ஸினான் (ரழி) நினைவிழக்கும் வரை கடுமையாக தாக்கப்படுவார். (அஸதுல் காபா)

பிலால் (ரழி) அவர்கள் உமய்யா இப்னு கலஃப்புடைய அடிமையாக இருந்தார்கள். உமையா அவர்களது கழுத்தில் கயிற்றைக் கட்டி சிறுவர்களிடம் கொடுப்பான். சிறுவர்கள் அவரை மக்காவின் கரடு முரடான மலைப் பாதைகளில் இழுத்துச் செல்வார்கள். கயிற்றின்

அடையாளம் அவர்களது கழுத்தில் பதிந்துவிடும். அவர்கள் “அஹத்! அஹத்!“” என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். சில வேளைகளில் உமையா பிலாலை மிக இறுக்கமாகக் கட்டி தடியால் கடுமையாகத் தாக்குவான். பிறகு சூரிய வெப்பத்திலும் போடுவான். உணவளிக்காமல் பசியால் துடிக்க வைப்பான். சுட்டெரிக்கும் சூரிய வெப்பத்தில் பாலைவன மணலில் கிடத்தி அவர்களது நெஞ்சின்மீது பாறாங்கல்லைத் தூக்கி வைப்பான். அப்போது பிலாலை நோக்கி, “அல்லாஹ்வின் மீதாணையாக! நீ சாக வேண்டும். அல்லது முஹம்மதின் மார்க்கத்தை நிராகரித்து லாத், உஜ்ஜாவை வணங்க வேண்டும். அதுவரை நீ இப்படியேதான் இருப்பாய். உன்னை விடவே மாட்டேன்” என்பான். அதற்கு பிலால் (ரழி) அஹத்! அஹத்! என்று சொல்லிக் கொண்டே, “இந்த ‘அஹத்’ என்ற வார்த்தையைவிட உனக்கு ஆவேசத்தை உண்டு பண்ணும் வேறொரு வார்த்தை எனக்குத் தெரிந்தால் நான் அதையே கூறுவேன்” என்பார்கள்.

ஒரு நாள் பிலால் (ரழி) சித்திரவதைக்குள்ளாகி இருக்கும்போது அவர்களைக் கடந்து சென்ற அபூபக்ர் (ரழி) அவர்கள் ஒரு ஹபஷி அடிமையை கிரயமாகக் கொடுத்து பிலால் (ரழி) அவர்களை வாங்கி உரிமை விட்டார்கள். சிலர் “ஐந்து அல்லது ஏழு ஊகியா வெள்ளிக்குப் பகரமாக வாங்கி உரிமை விட்டார்கள்” என்று கூறுகின்றனர். (இப்னு ஹிஷாம்)

அம்மார் இப்னு யாஸிர் (ரழி), அவர்களது தகப்பனார் யாஸிர், தாயார் ஸுமய்யா ஆகிய மூவரும் மக்ஜூம் கிளையைச் சேர்ந்த அபூ ஹுதைஃபா இப்னு முகீரா என்பவனின் அடிமைகளாக இருந்தார்கள். மூவரும் இஸ்லாமைத் தழுவினர். இம்மூவரையும் அபூஜஹ்ல் தலைமையில் ஒரு கூட்டம் “அப்தஹ்’ என்ற இடத்துக்கு அழைத்துச் சென்று மதிய வேளையில் சுடு மணலில் கிடத்தி கடுமையாக சித்திரவதை செய்தனர். இதனைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் “யாஸின் குடும்பத்தாரே! பொறுமையை மேற்கொள்ளுங்கள். உங்களுக்கு சொர்க்கம் வாக்களிக்கப்பட்டுள்ளது” என ஆறுதல் கூறினார்கள். நிராகரிப்பவர்களின் வேதனையாலேயே யாஸிர் (ரழி) இறந்துவிட்டார்கள். வயது முதிர்ந்து இயலாதவராக இருந்த அம்மான் தாயாரான சுமைய்யா பின்த் கய்யாத் (ரழி) அவர்களை அபூ ஜஹ்ல் அவர்களது பெண்ணுறுப்பில் ஈட்டியால் குத்திக் கொலை செய்தான். இவரே இஸ்லாமிற்காக உயிர் நீத்த முதல் பெண்மணியாவார்.

அவர்களது மகனாரான அம்மாரை பாலைவனச் சுடுமணலில் கிடத்தி நெஞ்சின் மீது பாறாங்கல்லை வைத்தும், நினைவிழக்கும் வரை தண்ணீல் மூழ்கடித்தும் சித்திரவதை செய்தனர். “முஹம்மதை திட்ட வேண்டும் அல்லது லாத், உஜ்ஜாவைப் புகழ வேண்டும். அப்போதுதான் உன்னை இத்தண்டனையிலிருந்து விடுவிப்போம்” என்றும் கூறினர். வேதனை தாளாத அம்மார் (ரழி) அவர்கள் நிராகரிப்பவர்களின் கட்டளைக்கு இணங்கி விட்டார். அதற்குப் பின் நபி (ஸல்) அவர்களிடம் வந்து அழுது மன்னிப்புக் கோரினார். அப்போது அல்லாஹ் பின்வரும் வசனத்தை இறக்கியருளினான். (இப்னு ஹிஷாம்)

(ஆகவே,) எவரேனும் நம்பிக்கை கொண்டதன் பின்னர், அல்லாஹ்வை (நிராகரித்தால் அவனைப் பற்றிக் கவனிக்கப்படும்.) அவனுடைய உள்ளம் நம்பிக்கையை கொண்டு முற்றிலும் திருப்தியடைந்தே இருக்க, எவனுடைய நிர்ப்பந்தத்தின் மீதும் அவன் (இவ்வாறு) நிராகரித்தால் (அவன்மீது யாதொரு குற்றமுமில்லை.) எனினும், அவனுடைய உள்ளத்தில் நிராகரிப்பே நிறைந்திருந்(து இவ்வாறு செய்)தால் அவன் மீது அல்லாஹ்வுடைய கோபம்தான் ஏற்படும். அவனுக்கு கடுமையான வேதனையுமுண்டு. (அல்குர்ஆன் 16:106)

அஃப்லஹ் அபூ ஃபுகைஹா (ரழி) அவர்கள் அப்து தார் கிளையைச் சார்ந்த ஒருவருடைய அடிமையாக இருந்தார். இவரது இரு கால்களையும் சங்கிலியால் பிணைத்து, ஆடைகளைக் கழற்றிவிட்டு சுடுமணலில் குப்புறக் கிடத்தி அசையாமலிருக்க பெரும் பாறையை முதுகின் மீது வைத்து, சுய நினைவை இழக்கும்வரை அவரை அதே நிலையில் விட்டுவிடுவார்கள்.

இவ்வாறான கொடுமைகள் தொடர்ந்தன. ஒருமுறை அவரது கால்களைக் கயிற்றால் பிணைத்துச் சுடுமணலில் கிடத்தி கழுத்தை நெறித்தார்கள். அவர் சுயநினைவை இழந்தவுடன் இறந்துவிட்டாரென எண்ணி விட்டுவிட்டார்கள். அப்போது அவ்வழியாக வந்த அபூபக்ர் (ரழி) அஃப்லஹை விலைக்கு வாங்கி உரிமையிட்டார்கள். (அஸதுல் காபா)

கப்பாப் இப்னு அரத் (ரழி) அவர்கள் உம்மு அன்மார் என்ற பெண்ணின் அடிமையாகவும், கொல்லர் பணி செய்பவராகவும் இருந்தார்கள். அவர் இஸ்லாமைத் தழுவியதை அறிந்த எஜமானி பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பால் அவர்களது தலையிலும் முதுகிலும் சூடிட்டு ‘‘முஹம்மதின் மார்க்கத்தை விட்டுவிடு’’ என்று கூறுவாள். ஆனால் இவ்வாறான வேதனைகளால் அவர்களது ஈமானும்’’ மன உறுதியுமே அதிகரித்தது. உம்மு அன்மார் மட்டுமின்றி ஏனைய நிராகரிப்பவர்களும் அவரது முடியைப் பிடித்திழுப்பார்கள் கழுத்தை நெறிப்பார்கள். நெருப்புக் கங்குகளின் மீது அவரைப் படுக்க வைப்பார்கள். அந்த நெருப்பு அவரது உடலைப் பொசுக்க, அப்போது இடுப்பிலிருந்து கொழுப்பு உருகி ஓடி, நெருப்பை அணைத்து விடும்.(அஸதுல் காபா)

ரோம் நாட்டைச் சேர்ந்த அடிமையான ஜின்னீரா (ரழி) என்ற பெண்மணி இஸ்லாமை ஏற்றதற்காக பலவிதமான கொடுமைக்கு ஆளானார். அப்போது கண்ணில் ஏற்பட்ட காயத்தின் காரணமாக பார்வையை இழந்தார். ‘‘இவரது கண்ணை லாத், உஜ்ஜா பறித்துவிட்டன’’ என்று நிராகரிப்பவர்கள் கூறினர். அதற்கு ஜின்னீரா, ‘‘நிச்சயமாக இல்லை! அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது அல்லாஹ்வின் புறத்திலிருந்து ஏற்பட்டது. அவன் நாடினால் எனக்கு நிவாரணமளிப்பான்’’ என்று கூறினார். மறுநாள் அவர்களது பார்வையை அல்லாஹ் சசெய்தான். அதைக் கண்ட குறைஷியர்கள் ‘‘இது முஹம்மதின் சூனியத்தில் ஒன்று’’ எனக் கூறினர். (இப்னு ஹிஷாம்)

உம்மு உபைஸ் (ரழி) என்ற பெண்மணி அஸ்வத் இப்னு அப்து யகூஸ் என்பவனின் அடிமையாக இருந்தார். இவன் நபி (ஸல்) அவர்களின் கொடும் விரோதியாகவும் நபியவர்களை பரிகசிப்பவனாகவும் இருந்தான். அவன் உம்மு உபைஸை கொடூரமாக வேதனை செய்தான். (இஸாபா)

அம்ர் இப்னு அதீ என்பவனின் அடிமைப் பெண்ணும் இஸ்லாமை ஏற்றார். அவரை (அப்போது இஸ்லாமை ஏற்காதிருந்த) உமர் (ரழி), தான் களைப்படையும் வரை சாட்டையால் அடித்துவிட்டு ‘‘நீ மரணிக்கும்வரை உன்னை நான் விடமாட்டேன்’’ என்று கூறுவார். அதற்கு அப்பெண்மணி ‘‘அப்படியே உமது இறைவனும் உம்மைத் தண்டிப்பான்’’ என்று கூறுவார். (இப்னு ஹிஷாம்)

இஸ்லாமை ஏற்றதற்காக கொடுமை செய்யப்பட்ட அடிமைப்பெண்களில் நஹ்திய்யா (ரழி) என்பவரும் அவரது மகளும் அடங்குவர். இவ்விருவரும் அப்துத்தான் கிளையைச் சேர்ந்த ஒரு பெண்ணிடம் அடிமையாக இருந்தனர். (இப்னு ஹிஷாம்)

இஸ்லாமை ஏற்றதற்காகக் கொடுமை செய்யப்பட்ட ஆண் அடிமைகளில் ஆமிர் இப்னு புஹைரா (ரழி) என்பவரும் ஒருவர். நினைவிழந்து சித்தப் பிரமை பிடிக்குமளவு அவரை கொடுமைப்படுத்தினார்கள். (இப்னு ஹிஷாம்)

இம்மூவரையும் அபூபக்ர் (ரழி) விலைக்கு வாங்கி உரிமையிட்டார்கள். இதைக் கண்ட அவர்களது தந்தையான அபூ குஹாஃபா ‘‘நீ பலவீனமான அடிமைகளை விலைக்கு வாங்கி உரிமை விடுகிறாய். திடகாத்திரமான ஆண் அடிமைகளை வாங்கி உரிமையளித்தால் அவர்கள் உனக்கு பக்கபலமாக இருப்பார்களே!’’ என்றார்.

அதைக் கேட்ட அபூபக்ர் (ரழி) அவர்கள் “நான் அல்லாஹ்வின் திருப்தியை நாடியே செய்கிறேன்” என்றார்கள். அல்லாஹ் அவர்களைப் புகழ்ந்தும் இஸ்லாமின் எதிரிகளை இகழ்ந்தும் அடுத்துள்ள வசனங்களை இறக்கினான்.

(மக்காவாசிகளே!) கொழுந்து விட்டெயும் நெருப்பைப் பற்றி நான் உங்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்கின்றேன். மிக்க துர்பாக்கியம் உடையவனைத் தவிர, (மற்றெவனும்) அதற்குள் செல்ல மாட்டான். அவன் (நம்முடைய வசனங்களைப்) பொய்யாக்கிப் புறக்கணித்துவிடுவான். (அல்குர்ஆன் 92:14-16)

இவ்வசனத்தில் கூறப்பட்டுள்ள துர்பாக்கியமுடையவன் உமைய்யாவும் அவனுடைய வழியில் முஸ்லிம்களை கொடுமைப்படுத்தியவர்களுமாவர்.

இறையச்சமுள்ளவர்தான் அதிலிருந்து தப்பித்துக் கொள்வார். (அவர் பாவத்திலிருந்து தன்னைப்) பரிசுத்தமாக்கிக் கொள்ளும் பொருட்டுத் தன்னுடைய பொருளை(த் தானமாக)க் கொடுப்பார். அவர் பதில் செய்யக்கூடியவாறு எவருடைய நன்றியும் அவர் மீது இல்லாதிருந்தும், மிக்க மேலான தன் இறைவனின் முகத்தை விரும்பியே தானம் கொடுப்பார். (இறைவன் அவருக்கு அளிக்கும் கொடையைப் பற்றிப்) பின்னர் அவரும் திருப்தியடைவார். (அல்குர்ஆன் 92:17-21)

இவ்வசனத்தில் இறையச்சமுள்ளவர் என குறிப்பிடப்படுபவர் அபூபக்ர் (ரழி) அவர்களாவார். (இப்னு ஹிஷாம்)

அபூபக்ர் (ரழி) அவர்களும் துன்புறுத்தப்பட்டார்கள். நவ்ஃபல் இப்னு குவைலித் என்பவன் அபூபக்ர் (ரழி), தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரழி) இருவரையும் தொழக்கூடாது என்பதற்காக ஒரே கயிற்றில் இருவரையும் பிணைத்துவிட்டான். ஆனால், கட்டவிழ்ந்து அவ்விருவரும் தொழுவதைக் கண்ட நவ்ஃபல் அஞ்சி நடுங்கினான். இருவரும் ஒரே கயிற்றில் பிணைக்கப் பட்டதால் அவர்களை “கரீனைன் - இணைந்த இருவர்” என்று கூறப்படுகிறது. சிலர் இருவரையும் கட்டியது நவ்ஃபல் அல்ல, தல்ஹாவின் சகோதரன் உஸ்மான் இப்னு உபைதுல்லாஹ்தான் என்று கூறுகின்றனர்.

(மேற்கூறிய சம்பவங்கள் மக்கா முஸ்லிம்கள் பட்ட இன்னல்களுக்கு எடுத்துக் காட்டாகும்.) இஸ்லாமைத் தழுவிய எவரையும் அவர்கள் துன்புறுத்தாமல் விட்டதில்லை. எளிய முஸ்லிம்களைப் பாதுகாக்கவும் அவர்களுக்காகப் பழிவாங்கவும் எவருமில்லை என்பதால் அவர்களைக் கடுமையாகத் தண்டிப்பது நிராகரிப்பவர்களுக்கு மிக எளிதாக இருந்தது. அடிமைகளாக இருந்தவர்களை அவர்களது எஜமானர்களும் அவர்களைச் சுற்றியிருந்தவர்களும் கொடுமைப் படுத்தினர். இஸ்லாமைத் தழுவியவர் செல்வமும் செல்வாக்கும் உடையவராக இருந்தால், அவர்களுக்கு அவர்களது கூட்டத்தார் பாதுகாவலாக இருந்தனர். சில வேளைகளில் குரோதத்தின் காரணமாக அவர்களது கூட்டத்தினரே அவர்களை கொடுமை செய்தனர்.

**குறைஷிகளும் நபியவர்களும்...**

நபி (ஸல்) அவர்கள் கம்பீரமாகவும் தனித்தன்மையுடனும் திகழ்ந்தார்கள். நபி (ஸல்) அவர்களை காண்பவர் நண்பரானாலும் விரோதியானாலும் அவரது மனதில் நபி (ஸல்) அவர்கள் பற்றிய உயர்வான எண்ணமும் மதிப்பும் மரியாதையும் தோன்றுவதைத் தவிர்க்க இயலாது. இழி மக்களே நபி (ஸல்) அவர்களிடம் அற்பமாக நடந்துகொள்ளத் துணிவர். மேலும், குறைஷியரின் மிக மதிக்கத்தக்க தலைவராக கருதப்பட்ட அபூதாலிபின் பாதுகாப்பிலிருந்த நபி (ஸல்) அவர்களை இழிவுபடுத்துவது குறைஷியர்களுக்கு சிரமமாக இருந்தது. இந்நிலை குறைஷியர்களுக்கு பெரும் நெருக்கடியை ஏற்படுத்தியது. தங்களுக்கு எவ்விதத் துன்பமும் ஏற்படாமல் இப்பிரச்சனைக்குத் தீர்வு காண விரும்பினர். நபி (ஸல்)

அவர்களின் காப்பாளரான அபூதாலிபிடம் நுட்பமான முறையிலும் அச்சுறுத்தும் தொனியிலும் பேச்சுவார்த்தை நடத்தி அவரை தங்களது கோரிக்கை களுக்கு இணங்க வைக்க முடிவெடுத்தனர்.

### குறைஷியர் குழுவும் அபூதாலிபும்

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: சில குறைஷித் தலைவர்கள் அபூதாலிபிடம் சென்று "அபூதாலிபே! நிச்சயமாக உமது சகோதரர் மகன் எங்களது கடவுள்களை ஏசி, எங்களது மார்க்கத்தையும் குறை கூறுகிறார். எங்களில் உள்ள அறிஞர்களை மூடர்களாக்கி எங்களது மூதாதையர்களை வழிகெட்டவர்களாக்கி விட்டார். நீரும் அவருக்கு எதிரான எங்களது மார்க்கத்தில் இருப்பதால் இவ்வாறான செயல்களிலிருந்து அவரை நீரே தடுத்துவிடும். அல்லது எங்களிடம் ஒப்படைத்துவிடும். அவரை என்ன செய்வதென நாங்கள் முடிவெடுத்துக் கொள்கிறோம்" என்றனர். அபூதாலிப் அவர்களை சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தார். (இப்னு ஹிஷாம்)

இந்த சந்திப்புக் குறித்து அபூதாலிப் நபி (ஸல்) அவர்களிடம் ஏதும் பேசிக்கொள்ளவில்லை. வழக்கம்போல் நபி (ஸல்) அவர்கள் தங்களது அழைப்புப் பணியைச் செய்தார்கள். இதைக் கண்ட குறைஷியர்கள் கோபமுற்று மறுமுறை அபூதாலிபை சந்திக்க நாடினர். இம்முறை மிக வன்மையாகக் கண்டித்துப் பேச வேண்டுமென முடிவு செய்தனர்.

### அபூதாலிபை மிரட்டுதல்

குறைஷித் தலைவர்கள் அபூதாலிபை சந்தித்து "அபூதாலிபே! நீர் வயது முதிர்ந்தவர். எங்களது மதிப்பைப் பெற்றவர். நாங்கள் உமது சகோதரர் மகனைத் தடுத்து நிறுத்தக் கூறியும் நீர் அவரைத் தடுக்கவில்லை. அவர் எங்களது மூதாதையர்களைத் திட்டுவதையும் எங்களது அறிஞர்களை மூடர்களாக்குவதையும் எங்களது கடவுள்களைக் குறை கூறுவதையும் கண்டு நாங்கள் பொறுமை காக்க முடியாது. நீரே அவரை சரிசெய்துவிடும். இல்லையெனில் நமது இரு கூட்டத்தால் ஒரு கூட்டம் அழியும் வரை உம்முடனும் அவருடனும் நாங்கள் போர் செய்வோம்" என்றனர்.

இந்த எச்சரிக்கையும் அச்சுறுத்தலும் அபூதாலிபுக்கு நெருக்கடியை ஏற்படுத்தியது. நபி (ஸல்) அவர்களை அழைத்து வரச்செய்து நடந்ததைக் கூறி "எனது சகோதரர் மகனே! உமது கூட்டத்தார் என்னிடம் இவ்வாறெல்லாம் கூறிச் சென்றார்கள். எனவே, நீ என்மீது கருணை காட்டு! பலவீனமான என்னை தாங்கவியலா துன்பத்தில் ஆழ்த்திவிடாதே" என்றார். அபூதாலிப் மனம் தளர்ந்து தன்னைக் கைவிட்டு விட்டார் என்று கருதிய நபி (ஸல்) அவர்கள் "என் பெரியதந்தையே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனது ஏகத்துவ அழைப்புப் பணியை விடுவதற்காக அவர்கள் சூரியனை எனது வலக்கரத்திலும், சந்திரனை எனது இடக்கரத்தில் வைத்தாலும் அல்லாஹ் இந்த மார்க்கத்தை மேலோங்கச் செய்யும்வரை அல்லது நான் அழியும்வரை இதை விடமாட்டேன்" என்று கூறிவிட்டு கண் கலங்கியவர்களாக அங்கிருந்து வெளியேறினார்கள். அபூதாலிப் நபி (ஸல்) அவர்களை அழைத்து "என் சகோதரர் மகனே! நீ விரும்பியதைச் செய்துகொள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! எந்த நிலையிலும் எவரிடமும் உம்மை ஒப்படைக்க மாட்டேன்" என்று கூறி சில கவிதைகளையும் பாடினார்.

"அல்லாஹ்வின் மீது சத்தியம்! அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தாலும் உன்னை நெருங்க முடியாது.
நான் மண்ணில் தலைவைக்கும் வரை!
உனது விஷயத்தை வெளிப்படையாக சொல். உன்மீது குற்றமில்லை.
கண்குளிர்ந்து மகிழ்ச்சி கொள்!..." (இப்னு ஹிஷாம்)

**மீண்டும் குறைஷியர்கள்...**

நபி (ஸல்) தங்களது ஏகத்துவ அழைப்பை நிறுத்தாமல் தொடர்வதைக் கண்ட குறைஷியர்கள், அபூதாலிப் முஹம்மதை கைவிட மறுத்து நம்மைப் பிரியவும் விரோதித்துக் கொள்ளவும் துணிந்து விட்டார் என்பதை அறிந்து கொண்டனர். அவர்கள் வலீதின் மகன் அமாராவை அழைத்துக் கொண்டு அபூதாலிபிடம் வந்தனர். ‘‘அபூதாலிபே! இவ்வாலிபர் குறைஷியரில் சிறப்பாக வளர்க்கப்பட்ட அழகிய வாலிபர். அவரது சகல உரிமைகளும் உமக்குரியது. இவரை உமது மகனாக வைத்துக் கொண்டு, உமது மார்க்கத்திற்கும் உமது மூதாதையர்களின் மார்க்கத்திற்கும் முரண்பட்டு, உமது கூட்டத்தாரிடையே பிளவை ஏற்படுத்தி, அவர்களின் அறிஞர்களை மூடர்களாக்கிய உமது சகோதரர் மகனை எங்களிடம் ஒப்படைத்துவிடும். ஒருவருக்கு ஒருவர் என சரியாகி விடும். நாங்கள் அவரைக் கொன்று விடுகிறோம்’’ என்றனர். அவர்களிடம் அபூதாலிப் மிகுந்த கோபத்துடன் ‘‘அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களது பேரம் மிக மோசமானது. உங்கள் பிள்ளையை என்னிடம் ஒப்படைப்பீர்கள். அதை நான் ஊட்டி வளர்க்க வேண்டும்! எனது மகனை உங்களிடம் நான் ஒப்படைப்பேன். நீங்கள் அவரைக் கொலை செய்வீர்கள்! அல்லாஹ்வின் மீதாணையாக! இது ஒருபோதும் நடக்காது’’ என்று கூறினார். அதற்கு முத்இம் இப்னு அதீ (அப்து மனாஃபின் கொள்ளுப்பேரர்) ‘‘அபூதாலிபே! உமது கூட்டத்தினர் உமக்கு நீதமான தீர்வைக் கூறி நெருக்கடியிலிருந்து உம்மை விடுவிக்க முயன்றனர். ஆனால் நீர் அதில் எதையும் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லையே!’’ என்றார். அதற்கு அபூதாலிப் ‘‘அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் நீதம் காட்டவில்லை. (முத்இமே) நீ என்னைக் கைவிட்டு விட்டு எனக்கு எதிராக இக்கூட்டத்தினரைத் தூண்டிவிடுகிறாய்; அவர்களுக்கு உதவி செய்ய விரும்புகிறாய். நீ விரும்பியதைச் செய்துகொள்’’ என்று கோபமாகக் கூறினார். (இப்னு ஹிஷாம்)

அபூதாலிபின் மூலமாக நபி (ஸல்) அவர்களின் அழைப்புப் பணியை முடக்கிவிட வேண்டுமென்ற தங்களது திட்டத்தில் தோல்வியுற்ற குறைஷியர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூதாலிப் தானாக விலகிக்கொள்ளும் சூழ்நிலையை உருவாக்கத் திட்டமிட்டனர்.

**நபியவர்கள் மீது அத்துமீறல்**

நபி (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் அருளப்பட்டு அழைப்புப் பணியைத் தொடங்கும் வரை குறைஷியர்கள் அவர்களை தங்களில் மதிக்கத்தக்க நபராகவே கருதி வந்தனர். அழைப்புப் பணியைத் தொடங்கியதும் அவர்கள் சூழ்நிலையைக் கருத்திற்கொண்டு நபி (ஸல்) அவர்கள் மீது அத்துமீறாதிருந்தனர். தற்பெருமையும் ஆணவமும் கொண்டிருந்த அவர்களால் நபி (ஸல்) அவர்களின் செயல்பாடுகளை நீண்ட நாள் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. குறைஷித் தலைவர்களில் ஒருவனான அபூ லஹப் அழைப்புப் பணியின் முதல் நாளிலிருந்தே நபி (ஸல்) அவர்களிடம் கடும் பகைமையைக் காட்டி வந்தான் என்பதை ஹாஷிம் கிளையாரின் சபையிலும் ஸஃபா மலை நிகழ்ச்சியிலும் நாம் அறிந்திருக்கிறோம்.

நபித்துவத்துக்கு முன் நபி (ஸல்) அவர்கள் தங்களின் மகள்கள் ருகையா, உம்மு குல்ஸூம் (ரழி) அவர்களை அபூலஹபின் மகன்களான உத்பா, உதைபாவுக்கு மணமுடித்துக் கொடுத்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஏகத்துவப் பிரச்சாரத்தைத் தொடங்கியதும் அபூ லஹப் தனது மகன்களை நிர்ப்பந்தித்து விவாகரத்துச் செய்ய வைத்துவிட்டான். (இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) அவர்களின் இரண்டாவது மகனாரான அப்துல்லாஹ் சிறு வயதில் மரணமடைந்த போது அபூலஹப் மட்டில்லா மகிழ்ச்சியுடன் தனது தோழர்களிடம் ‘‘முஹம்மது

சந்ததியற்றவராகி விட்டார்'' என்ற சுபச் செய்தியைப் பெற்றுக் கொள்ளுங்கள் எனக் கூறினான். (தஃப்ஸீர் இப்னு கஸீர்)

ஹஜ்ஜுடைய காலங்களிலும் கடைத்தெருக்களிலும் அபூலஹப் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் சுற்றி வந்து அவர்களைப் ''பொய்யர்'' என்று கூறுவான். அது மட்டுமல்லாமல் ரத்தம் கொட்டும்வரை அவர்களது பிடரியில் பொடிக்கற்களால் அடித்துக்கொண்டே இருப்பான். (கன்ஜுல் உம்மால்)

அபூ லஹபின் மனைவியும் அபூ ஸுஃப்யானின் சகோதரியுமான உம்மு ஜமீல் நபி (ஸல்) அவர்களுக்கு நோவினை கொடுப்பதில் தனது கணவனைவிட குறைந்தவளும் அல்ல! சளைத்தவளும் அல்ல! முட்களை நபி (ஸல்) செல்லும் பாதையிலும் அவர்களது வீட்டின் வாசலிலும் வைத்து விடுவாள். மிகக் கெட்டவளான இவள் எந்நேரமும் நபி (ஸல்) அவர்களை ஏசிப் பேசிக்கொண்டிருந்தாள். பல பொய்களைப் பரப்பிக் கொண்டே இருப்பாள். நபி (ஸல்) அவர்களுக்கு எதிராகக் குழப்பம் விளைவித்துக் கொண்டும், பிரச்சினையின் நெருப்பை மூட்டிவிட்டுக் கொண்டும் இருப்பாள். இதனால்தான் அல்குர்ஆன் அவளை ''ஹம்மாலதல் ஹத்தப்'' விறகை சுமப்பவள் என்று வர்ணிக்கிறது.

தன்னைப் பற்றியும் தனது கணவனைப் பற்றியும் குர்ஆனின் வசனம் இறங்கியதை அறிந்து அவள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தாள். அப்போது நபி (ஸல்) அவர்களும் அபூபக்ரும் (ரழி) கஅபத்துல்லாஹ்விற்கு அருகில் உட்கார்ந்திருந்தார்கள். அவளது கையில் குழவிக் கல் இருந்தது. இருவருக்கும் அருகில் அவள் வந்தவுடன் அவளது பார்வையை நபி (ஸல்) அவர்களைப் பார்க்க முடியாமல் அல்லாஹ் பறித்து விட்டான்.

அபூபக்ரைப் பார்க்க முடிந்த அவளால் நபி (ஸல்) அவர்களைப் பார்க்க முடியவில்லை. ''அபூபக்ரே உமது தோழர் எங்கே? அவர் என்னை கவிதைகளில் ஏசுகிறார் என்று எனக்கு தெரிய வந்துள்ளது. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவரை நான் பார்த்தால் இக்குழவிக் கல்லால் அவரது வாயிலேயே அடிப்பேன். அறிந்து கொள்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனக்கும் நன்றாகக் கவி பாடத்தெரியும்'' என்று கூறிய பின் அடுத்து வரும் கவிதையைப் படித்தாள்.

''இழிவுக்குரியவரைத்தான் நாங்கள் ஏற்க மறுத்தோம்; அவரது கட்டளையை புறக்கணித்தோம்; அவருடைய மார்க்கத்தையும் வெறுத்தோம்.''

பிறகு அவள் திரும்பிச் சென்றுவிட்டாள். அப்போது அபூபக்ர் (ரழி) அவர்கள் ''அல்லாஹ்வின் தூதரே! அவள் உங்களைப் பார்த்ததை நீங்கள் பார்க்கவில்லையா?'' என வினவ ''அவள் என்னைப் பார்க்கவில்லை. அல்லாஹ் என்னை பார்க்க முடியாமல் அவளது பார்வையை மறைத்து விட்டான்'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

இச்சம்பவம் பற்றி ''முஸ்னத் பஜ்ஜார்' எனும் நூலின் அறிவிப்பில் வருவதாவது: அவள் அபூபக்ரிடம் வந்து ''அபூபக்ரே! உங்கள் தோழர் என்னை கவிதையில் திட்டுகிறார்'' என்றாள். அதற்கு அபூபக்ர் (ரழி) ''இந்த வீட்டின் இறைவனின் மீது சத்தியமாக! அவருக்கு கவிதை பாடத் தெரியாது'' என்று கூறினார்கள். ''ஆம்! நீங்கள் சரியாகத்தான் கூறினீர்கள்'' என்று கூறிவிட்டு சென்றுவிட்டாள்.

நபி (ஸல்) அவர்களின் தந்தையின் சகோதரனாகவும் நபி (ஸல்) அவர்களின் அண்டை வீட்டுக்காரனாகவும் இருந்த அபூலஹபும் இவ்வாறே செய்து கொண்டிருந்தான். அவனது வீடு நபி (ஸல்) அவர்களின் வீட்டுடன் இணைந்திருந்தது. அவனும் அவனைப் போன்ற நபி (ஸல்) அவர்களின் மற்ற அண்டை வீட்டார்களும் நபி (ஸல்) அவர்கள் வீட்டினுள் இருக்கும்போது நோவினை அளித்துக் கொண்டே இருப்பார்கள்.

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: நபி (ஸல்) வீட்டினுள் இருக்கும்போது நபி (ஸல்) அவர்களின் அண்டை வீட்டார்களான அபூலஹப், ஹகம் இப்னு அபுல்ஆஸ் இப்னு உமைய்யா, உக்பா இப்னு அபீமுயீத், அதீ இப்னு ஹம்ராஃ ஸகஃபீ, இப்னுல் அஸ்தா ஆகியோர் எப்போதும் நபி (ஸல்) அவர்களுக்கு மிகுந்த நோவினை அளித்து வந்தனர். இவர்களில் ஹகம் இப்னு அபுல் ஆஸைத் தவிர வேறு யாரும் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளவில்லை. தொழுது கொண்டிருக்கும் போது ஆட்டின் குடலை நபி (ஸல்) அவர்களை நோக்கி வீசுவார்கள். நபி (ஸல்) அவர்கள் வீட்டில் சமைப்பதற்காக சட்டியை வைக்கும்போது அதில் ஆட்டுக்குடலை போடுவார்கள். இதற்காகவே இவர்களிலிருந்து தன்னை மறைத்துக் கொள்வதற்காக ஒரு சுவரை ஏற்படுத்திக் கொண்டார்கள். இவர்கள் அசுத்தங்களை தூக்கி எறியும்போது அதைக் குச்சியில் வெளியே எடுத்து வந்து தனது வீட்டு வாசலில் நின்றவண்ணம் "அப்து மனாஃபின் குடும்பத்தினரே! இதுதான் அண்டை வீட்டாருடன் மேற்கொள்ளும் ஒழுக்கமா?" என்று கேட்டு, அதை ஓர் ஓரத்தில் தூக்கி வீசுவார்கள். (இப்னு ஹிஷாம்)

உக்பா இப்னு அபூமுயீத் விஷமத்தனத்தில் எல்லை மீறி நடந்து கொண்டான். இதைப் பற்றி ஒரு சம்பவத்தை இப்னு மஸ்ஊது (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் கஅபாவுக்கு அருகில் தொழுது கொண்டிருந்தார்கள். அபூஜஹ்லும் அவனது கூட்டாளிகளும் அங்கு குழுமியிருந்தனர். அவர்கள் தங்களுக்குள் "நம்மில் ஒருவர் இன்ன குடும்பத்தாரின் ஒட்டகங்கள் அறுக்குமிடத்திற்குச் சென்று அங்குள்ள குடலை எடுத்து வந்து முஹம்மது சுஜூதிற்கு" சென்ற பின் அவரது முதுகில் வைக்கவேண்டும். யார் அதனை செய்வது?" என்று கேட்டனர். அக்கூட்டத்திலே மிகவும் திமிர் கொண்டவனான உக்பா எழுந்து சென்று குடலை எடுத்து வந்து நபி (ஸல்) அவர்கள் சுஜூதிற்குச் சென்றவுடன் அவர்களது இரு புஜங்களுக்கு இடையில் முதுகின் மீது வைத்து விட்டான். இதை நான் பார்த்துக் கொண்டிருந்தேன். என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. எனக்கு தடுக்கும் சக்தி இருந்திருக்க வேண்டுமே! அவர்கள் தங்களுக்குள் மமதையாகவும், ஏளனமாகவும் ஒருவர் மீது ஒருவர் சாய்ந்து விழுந்து விழுந்து சிரித்தனர். நபி (ஸல்) அவர்கள் தலையை உயர்த்த முடியாமல் சுஜூதிலேயே இருந்தார்கள். அங்கு வந்த ஃபாத்திமா (ரழி) அதை அகற்றியபோதுதான் நபி (ஸல்) அவர்கள் தலையைத் தூக்கினார்கள்.

பிறகு, "அல்லாஹ்வே! நீ குறைஷிகளைத் தண்டிப்பாயாக!" என்று மூன்று முறை கூறினார்கள். இது குறைஷிகளுக்கு மிகவும் பாரமாகத் தெரிந்தது. மக்காவில் செய்யப்படும் பிரார்த்தனை அங்கீகரிக்கப்படும் என்று அவர்கள் நம்பியிருந்தார்கள். பிறகு, பெயர் கூறி குறிப்பிட்டு "அல்லாஹ்வே! அபூ ஜஹ்லை தண்டிப்பாயாக! உக்பா இப்னு ரபீஆவையும், ஷைபா இப்னு ரபீஆவையும், வலீத் இப்னு உக்பாவையும், உமைய்யா இப்னு கலஃபையும், உக்பா இப்னு அபூ முயீதையும் நீ தண்டிப்பாயாக!" ஏழாவது ஒருவன் பெயரையும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ஆனால் எனக்கு அது நினைவில் இல்லை. என் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது சத்தியமாக! ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்கள் பெயர் குறிப்பிட்ட நபர்கள் அனைவரும் கொல்லப்பட்டு பத்ரு கிணற்றில் தூக்கி எறியப்பட்டதை நான் பார்த்தேன். (ஸஹீஹுல் புகாரி)

உமையா இப்னு கலஃப் ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்களை பார்க்கும்போதெல்லாம் பகிரங்கமாக ஏசிக்கொண்டும், மக்களிடம் அவர்களைப்பற்றி இரகசியமாகக் குறை பேசிக்கொண்டும் இருப்பான். இவன் விஷயமாக சூரத்துல் ஹுமஜாவின் முதல் வசனம் இறங்கியது.

குறை கூறிப் புறம் பேசித் திரிபவர்களுக்கெல்லாம் கேடுதான். (அல்குர்ஆன் 104:1)

இப்னு ஹிஷாம் (ரஹ்) கூறுகிறார்: “ஹுமஜா’ என்றால் பகிரங்கமாக ஒருவரை ஏசுபவன். கண் சாடையில் குத்தலாக பேசுபவன். யிலுமஜா’ என்றால் மக்களைப்பற்றி இரகசியமாக குறைகளை பேசுபவன். (இப்னு ஹிஷாம்)

உமையாவின் சகோதரன் உபை இப்னு கலஃபும் உக்பாவும் நபி (ஸல்) அவர்களுக்கு நோவினையளிப்பதில் ஒரே அணியில் இருந்தனர். ஒருமுறை உக்பா நபி (ஸல்) அவர்களுக்கருகில் அமர்ந்து அவர்கள் ஓதும் சிலவற்றைச் செவிமடுத்தான். இது உபைம்க்குத் தெரிய வந்தபோது உக்பாவைக் கடுமையாகக் கண்டித்தான். மேலும், நபி (ஸல்) அவர்களிடம் சென்று அவர்களது முகத்தில் எச்சிலைத் துப்பி வருமாறு அனுப்ப அவனும் சென்று துப்பி வந்தான். உபை இப்னு கலஃப் ஒருமுறை மக்கிப்போன எலும்புகளை நொறுக்கி, பொடியாக்கி நபி (ஸல்) அவர்களை நோக்கி காற்றில் ஊதிவிட்டான்.(இப்னு ஹிஷாம்)

அக்னஸ் இப்னு ஷரீக் என்பவனும் நபி (ஸல்) அவர்களை நோவினை செய்தவர்களில் ஒருவனாவான். இவனைப் பற்றி குர்ஆனில் இவனிடமிருந்த ஒன்பது குணங்களுடன் கூறப்பட்டுள்ளது.

(நபியே! எடுத்ததற்கெல்லாம்) சத்தியம் செய்யும் அந்த அர்ப்பமானவனுக்கு நீங்கள் வழிப்படாதீர்கள். (அவன்) எப்பொழுதும் (புறம்பேசிக்) குற்றம் கூறி, கோள் சொல்வதையே தொழிலாகக் கொண்டுத் திரிபவன். (அவன்) எப்போதுமே நன்மையான காரியங்களைத் தடை செய்யும் வரம்பு மீறிய பெரும்பாவி. கடின சுபாவமுள்ளவன். இதற்கு மேலாக அவன் மக்களிலும் ஈனன். (அல்குர்ஆன் 68:10-13)

அபூஜஹ்ல் சில சமயம் நபி (ஸல்) அவர்களிடம் வந்து திருமறையின் வசனங்களை செவிமடுத்துச் செல்வான். ஆனால், நம்பிக்கை கொள்ளவோ, அடிபணியவோ மாட்டான். ஒழுக்கத்துடனோ, அச்சத்துடனோ நடந்து கொள்ளவும் மாட்டான். தனது சொல்லால் நபி (ஸல்) அவர்களுக்கு நோவினை அளிப்பதுடன் அல்லாஹ்வின் வழியிலிருந்து பிறரைத் தடுத்தும் வந்தான். தனது இச்செயலை புகழ்ந்து பேசுவதற்குரிய நற்காரியம் என்றெண்ணி அகந்தையுடனும் மமதையுடனும் நடந்து செல்வான். இவனைப் பற்றியே பின்வரும் திருமறை வசனங்கள் இறங்கின.

(அவனோ அல்லாஹ்வுடைய வசனங்களை) உண்மையாக்கவுமில்லை தொழவு மில்லை. ஆயினும் (அவன் அவற்றைப்) பொய்யாக்கி வைத்து(த் தொழாதும்) விலகிக்கொண்டான். பின்னர், கர்வம்கொண்டு தன் குடும்பத்துடன் (தன் வீட்டிற்குச்) சென்றுவிட்டான். (அல்குர்ஆன் 75:31-33)

நபி (ஸல்) அவர்களை கண்ணியமிகு பள்ளியில் தொழுதவர்களாகப் பார்த்த தினத்திலிருந்தே அங்கு தொழுவதிலிருந்து நபி (ஸல்) அவர்களைத் தடுத்து வந்தான். ஒருமுறை நபி (ஸல்) அவர்கள் மகாம் இப்றாஹீமிற்கு” அருகில் தொழுததைப் பார்த்த அவன் “முஹம்மதே! நான் உன்னை இதிலிருந்து தடுத்திருக்க வில்லையா?” என்று கூறிக் கடுமையாக எச்சரித்தான். அதற்கு நபி (ஸல்) அவர்களும் தக்க பதில் கூறி அவனை அதட்டினார்கள். அதற்கு அவன் “முஹம்மதே! எந்த தைரியத்தில் நீ என்னை மிரட்டுகிறாய்? அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவ்வோடையில் வசிப்போரில் நானே பெரியசபையுடையவன் (ஆதரவாளர்களைக் கொண்டவன்) என்பது உனக்குத் தெரியாதா?” என்றான். அப்போது,

ஆகவே, அவன் (தன் உதவிக்காகத்) தன் சபையோரை அழைக்கட்டும். நாமும் (அவனை நரகத்திற்கு அனுப்ப, நரகத்தின்) காவலாளிகளை அழைப்போம்.. (அல்குர்ஆன் 96:17, 18)

ஆகிய வசனங்களை அல்லாஹ் இறக்கினான்.

மற்றுமொரு அறிவிப்பில் வந்திருப்பதாவது: நபி (ஸல்) அவர்கள் அவனது கழுத்தைப் பிடித்து உலுக்கி, உனக்குக் கேடுதான்; கேடுதான்! உனக்குக் கேட்டிற்கு மேல் கேடுதான்!! (அல்குர்ஆன் 75:34, 35)

என்ற வசனத்தை கூறினார்கள்.

அதற்கு அல்லாஹ்வின் விரோதியாகிய அவன் ''முஹம்மதே! என்னையா நீ எச்சரிக்கிறாய்? நீயும் உனது இறைவனும் என்னை ஒன்றும் செய்துவிட முடியாது. மக்காவில் இரு மலைகளுக்குமிடையில் நடந்து செல்பவர்களில் நானே மிகப்பெரும் பலசாலி'' என்று கூறினான். (தஃப்ஸீர் இப்னு கஸீர்)

இவ்வாறு கண்டித்ததற்குப் பிறகும் கூட அபூஜஹ்ல் தனது மடமையிலிருந்து சுதாரித்துக் கொள்ளாமல் தனது கெட்ட செயலை தீவிரமாக்கிக் கொண்டேயிருந்தான். இதைப் பற்றி ஒரு சம்பவத்தை அபூ ஹுரைரா (ரழி) அவர்களின் வாயிலாக இமாம் முஸ்லிம் (ரஹ்) அறிவிக்கிறார்கள்:

''முஹம்மது உங்களுக்கு முன்னிலையில் தனது முகத்தை மண்ணில் வைத்து தேய்க்கிறாராமே'' என்று அபூஜஹ்ல் கேட்டான். குழுமியிருந்தவர்கள் ''ஆம்!'' என்றனர். அதற்கவன் ''லாத், உஜ்ஜாவின் மீது சத்தியமாக! நான் அவரைப் பார்த்தால் அவரது பிடரியின் மீது கால் வைத்து அழுத்தி அவரது முகத்தை மண்ணோடு மண்ணாக ஆக்கி விடுவேன்'' என்று கூறினான். சிறிது நேரத்திற்குப் பிறகு நபி (ஸல்) அவர்களிடம் வந்தான். நபி (ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருந்தார்கள். அவன் நபி (ஸல்) அவர்களின் பிடரியை மிதிக்க முயன்றபோதெல்லாம் பின்னோக்கி விழுந்து தன் கைகளால் சமாளித்துத் தன்னைக் காப்பாற்றிக் கொண்டான். மக்கள் ''அபூ ஜஹ்லே! என்ன நேர்ந்தது?'' என்று கேட்டனர். அதற்கு அவன் ''எனக்கும் அவருக்குமிடையில் நெருப்பாலான அகழியையும், மிகப்பெரியபயங்கரத்தையும், பல இறக்கைகளையும் பார்த்தேன்'' என்று கூறினான். பிறகு நபி (ஸல்) அவர்கள் ''அவன் எனக்கருகில் நெருங்கியிருந்தால் வானவர்கள் அவனுடைய ஒவ்வொரு உறுப்பையும் இறாவியிருப்பார்கள் (பிய்த்து எறிந்திருப்பார்கள்)'' என்று கூறினார்கள்.

இதற்கு முன் நாம் கூறியதெல்லாம் தங்களை அல்லாஹ்வின் சொந்தக்காரர்கள், அவனது புனித பூமியில் வசிப்பவர்கள் என்று பீற்றிக்கொள்ளும் இணைவைப்பவர்களின் கரங்களால் நபி (ஸல்) அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஏற்பட்ட அநியாயம் மற்றும் கொடுமையின் ஒரு சிறிய தகவல்தான். இத்தகைய இக்கட்டான கால கட்டத்தில் நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட சோதனையையும், வேதனையையும் முடிந்த அளவு இலகுவாக்கி அவற்றிலிருந்து முஸ்லிம்களைப் பாதுகாக்க மதி நுட்பமான ஒரு திட்டத்தைத் தீட்ட வேண்டுமென்ற முடிவுக்கு வந்தார்கள். இதற்காக இரண்டு திட்டங்களை நபி (ஸல்) அவர்கள் வகுத்தார்கள். அவ்விரு திட்டங்களால் அழைப்புப் பணியை வழி நடத்துவதிலும், இலட்சியத்தை அடைவதிலும் பற்பல பலன்கள் கிட்டின. அவையாவன:

1) அழைப்புப் பணிக்கு மையமாகவும், ஒழுக்க போதனைக்கு உறைவிடமாகவும் ''அர்கம் இப்னு அபுல் அர்கம் மக்ஜூமி' என்பவன் வீட்டை நபி (ஸல்) அவர்கள் தேர்ந்தெடுத்தார்கள்.

2) முஸ்லிம்களை ஹபஷாவிற்கு (எதியோபியா) குடிபெயருமாறு கட்டளையிட்டார்கள்.

**அர்கமின் இல்லத்தில் அழைப்புப் பணி**

இந்த வீடு ஸஃபா மலையின் கீழே, அந்த அநியாயக்காரர்களின் கண் பார்வைக்கும் அவர்களது சபைக்கும் தூரமாக இருந்தது. முஸ்லிம்கள் இரகசியமாக ஒன்றுகூட அவ்வீட்டை நபி (ஸல்) அவர்கள் தேர்ந்தெடுத்தார்கள். அவ்வீட்டில் முஸ்லிம்களுக்குக் குர்ஆனை ஓதிக் காண்பித்து அவர்களுக்கு அதன் பண்புகளையும் சட்ட ஞானங்களையும் கற்றுக் கொடுத்து வந்தார்கள். அங்கு முஸ்லிம்கள் வணக்க வழிபாடுகளை நிறைவேற்றிக் கொண்டு மார்க்க கல்வியும் கற்று வந்தார்கள். புதிதாக இஸ்லாமிற்கு வர விரும்புபவர் அவ்விடத்தில் வந்து இஸ்லாமைத் தழுவுவார். இது வரம்பு மீறிய அந்த அநியாயக்காரர்களுக்குத் தெரியாததால் முஸ்லிம்கள் ஓரளவு நிம்மதியுடனும் பாதுகாப்புடனும் அங்கு இருந்து வந்தனர்.

முஸ்லிம்களையும் நபி (ஸல்) அவர்களையும் ஒருசேர ஓரிடத்தில் இணைவைப்பவர்கள் கண்டுவிட்டால், நபி (ஸல்) அவர்கள் தங்களது தோழர்களுக்குக் கற்றுத்தரும் ஒழுக்கப் பணிகளையும், குர்ஆனையும், மார்க்கத்தையும் நிச்சயம் தங்களது சக்திக்கு மீறிய குறுக்கு வழிகளைக் கொண்டு தடுப்பார்கள். அதனால், இரு கூட்டத்தார்களுக்கிடையில் கைகலப்பு கூட நிகழ்ந்துள்ளது. நபி (ஸல்) அவர்கள் தங்களது தோழர்களுடன் மலைக் கணவாய்களுக்கிடையில் இரகசியமாகத் தொழுது வருவார்கள். ஒருமுறை அதனைப் பார்த்துவிட்ட குறைஷி நிராகரிப்பவர்கள் அவர்களை வாய்க்கு வந்தபடி ஏசிபேசி அவர்களுடன் சண்டையிட்டனர். அச்சண்டையில் ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரழி) ஒருவனை வெட்டி சாய்த்து விட்டார்கள். இதுதான் இஸ்லாமுக்காக செய்யப்பட்ட முதல் கொலை.

இவ்வாறு கைகலப்பு தொடர்ந்தால் முஸ்லிம்கள் அழிக்கப்படலாம். ஆகவே, இரகசியமாக பணிகளைத் தொடர்வதுதான் சரியான முறையாகப்பட்டது. பொதுவாக நபித்தோழர்கள் தாங்கள் இஸ்லாமை ஏற்றுக் கொண்டதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் தங்களது வணக்க வழிபாடுகளை மறைமுகமாகச் செய்து வந்தனர். ஆனால், நபி (ஸல்) அவர்கள் மட்டும் குறைஷிகளுக்கு முன்னிலையிலும் தங்களது வணக்க வழிபாடுகளையும் அழைப்புப் பணியையும் பகிரங்கமாக செய்து வந்தார்கள். எதற்கும் அவர்கள் அஞ்சிடவில்லை. ஆனால், இஸ்லாம் மற்றும் முஸ்லிம்களின் நன்மையைக் கருதியே முஸ்லிம்களை இரகசியமாக சந்தித்து வந்தார்கள்.

**ஹபஷாவில் அடைக்கலம்**

நபித்துவத்தின் நான்காம் ஆண்டு நடுவில் அல்லது இறுதியில் முஸ்லிம்கள் மீது நிராகரிப்பவர்கள் வரம்பு மீற ஆரம்பித்தனர். தொடக்கத்தில் குறைவாகத் தென்பட்ட துன்பங்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே சென்றன. ஐந்தாம் ஆண்டின் நடுவில் சோதனைகள் மலையாக உருவெடுக்கவே அதிலிருந்து விடுதலைபெற வழி என்ன என்று சிந்திக்கத் தொடங்கினார்கள். இச்சூழ்நிலையில்தான் "அல்லாஹ்வுடைய பூமி நெருக்கடியானதல்ல. எனவே (இடம்பெயரும்) ஹிஜ்ராவின் வழியை தேர்ந்தெடுங்கள்" என்று சுட்டிக் காட்டப்பட்ட அத்தியாயம் ஜுமல் உள்ள 10வது வசனம் இறங்கியது.

இம்மையில் நன்மை செய்தவர்களுக்கு (மறுமையில்) நன்மைதான் கிடைக்கும். அல்லாஹ்வுடைய பூமி மிக விசாலமானது. நிச்சயமாக, பொறுமையாளர்களுக்கு அவர்களுடைய கூலி கணக்கின்றியே (அதிகமாக) கொடுக்கப்படும். (அல்குர்ஆன் 39:10)

ஹபஷாவின் மன்னராக இருந்த "அஸ்மஹா நஜ்ஜாஷி' நீதமானவர். அவர் யாருக்கும் அநியாயம் இழைக்கமாட்டார் என்பதை நபி (ஸல்) அவர்கள் தெரிந்து வைத்திருந்தார்கள். எனவே, உயிரையும் மார்க்கத்தையும் பாதுகாத்துக் கொள்ள ஹபஷாவிற்கு ஹிஜ்ரா செய்யுமாறு முஸ்லிம்களை நபி (ஸல்) அவர்கள் பணித்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் கட்டளைப்படி நபித்தோழர்களின் ஒரு குழுவினர் முதலாவதாக ஹபஷாவிற்கு நாடு துறந்து செல்ல இருந்தார்கள். இதனை குறைஷிகள் தெரிந்து கொள்ளக்கூடாது என்பதற்காக இரவின் நடுநிசியில் புறப்பட்டு ''ஷுஅய்பா' துறைமுகத்தை அடைந்தனர். வியாபாரக் கப்பல்கள் இரண்டு அங்கு முகாமிட்டிருந்தன. எப்படியோ மோப்பம் பிடித்த குறைஷிகள், இவர்களைத் தேடி அந்த துறைமுகத்திற்கு வந்துவிட்டார்கள். அதற்குள் முஸ்லிம்கள் வியாபாரக் கப்பல்களில் ஏறி ஹபஷாவுக்கு புறப்பட்டு விட்டார்கள். இதனால் குறைஷிகள் ஏமாற்றத்துடன் திரும்பினர். நாடு துறந்து சென்ற குழுவில் பன்னிரண்டு ஆண்களும் நான்கு பெண்களும் இருந்தனர். அவர்களுக்கு தலைவராக உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) இருந்தார்கள். இப்பயணத்தில் அவர்களின் மனைவியான (நபி (ஸல்) அவர்களின் மகள்) ருகையாவும் (ரழி) உடன் இருந்தார்கள். நபி இப்றாஹீம் (அலை), நபி லூத் (அலை) ஆகிய இருவருக்குப் பின் அல்லாஹ்வின் பாதையில் ஹிஜ்ரா செய்த முதல் குடும்பம் இதுதான்'' என்று இவ்விருவரைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அல்லாஹ்வின் அருளால் முஸ்லிம்கள் ஹபஷாவில் வாழ்வை நிம்மதியாகக் கழித்தார்கள். இது நபித்துவம் பெற்ற ஐந்தாம் ஆண்டின் ரஜப் மாதத்தில் நடைபெற்றது. (ஜாதுல் மஆது)

**இணைவைப்பவர்களும் சிரம் பணிந்தனர்**

அந்த ஆண்டு ரமளான் மாதம் ஓர் இரவு நபி (ஸல்) அவர்கள் புனித பள்ளிக்குச் சென்றார்கள். அங்கு குறைஷியரும் அவர்களது தலைவர்களும் கொண்ட பெருங்கூட்டமொன்று குழுமியிருந்தது. திடீரென அவர்களுக்கு முன் நபி (ஸல்) அவர்கள் தோன்றி அத்தியாயம் அந்நஜ்மை ஓதினார்கள். நிராகரிப்பவர்கள் இதற்கு முன் குர்ஆன் வசனங்களைக் கேட்டதில்லை. அதற்குக் காரணம், ''குர்ஆனை நீங்கள் கேட்காதீர்கள்; அது ஓதப்படும்போது வீண்செயல்களில் ஈடுபடுங்கள்' என்று அவர்களில் ஒருவர் மற்றவருக்கு கூறி வந்ததுதான். நிராகரிப்பவர்களின் இந்தக் கூற்றைப் பற்றி,

நிராகரிப்பவர்கள் (மற்றவர்களை நோக்கி) நீங்கள் ''இந்தக் குர்ஆனை (உங்கள் காதாலும்) கேட்காதீர்கள். (எவர்கள் அதனை ஓதியபோதிலும் நீங்கள் அச்சமயம் சப்தமிட்டு) அதில் குழப்பம் உண்டுபண்ணினால் நீங்கள் வென்று விடுவீர்கள்'' என்றும் கூறினார்கள். (அல்குர்ஆன் 41:26)

என்ற வசனத்தில் அல்லாஹ் குறிப்பிடுகிறான்.

நபி (ஸல்) அவர்கள் இந்த அத்தியாயத்தை திடீரென ஓத, இனிமையான இறைவசனங்கள் அவர்களது காதுகளை வருடின. இதுவரை கேட்டவற்றில் இத்துணை மதுரமான, செவிக்கு இன்பத்தைத் தரும் சொற்றொடர்களை அவர்கள் இதற்கு முன் கேட்டதில்லை. அல்லாஹ்வின் அந்த வசனங்கள் அவர்களை மிகவும் கவர்ந்தன. அவர்களது உணர்வுகளை அவ்வசனங்கள் முழுமையாக ஆட்கொண்டன. நபி (ஸல்) ஓதுவதை அவர்கள் மெய்மறந்து கேட்டனர். நஜ்ம் அத்தியாயத்தின் இறுதி வசனங்கள் கேட்போரின் உள்ளத்தைக் கிடுகிடுக்கச் செய்யும் கோடை இடியாக விளங்குகிறது. இறுதியில், ''அல்லாஹ்வுக்கு தலைசாயுங்கள், அவனை வணங்குங்கள்' என்ற வசனத்தை ஓதி நபி (ஸல்) அவர்கள் சிரம் பணிந்தார்கள். ஆரம்பம் முதல் இறுதிவரை கேட்டுக் கொண்டிருந்த அனைவரும் இறை வசனங்களால் கவரப்பட்டு தங்களை கட்டுப்படுத்த முடியாமல் தாம் என்ன செய்கிறோம் என்பதையும் உணராமல் நபி (ஸல்) அவர்களுடன் சேர்ந்து சுஜூதில் வீழ்ந்தனர்.

எதார்த்தத்தில் சத்தியத்தின் ஈர்ப்பு, பெருமை கொண்ட அவர்களின் உள்ளங்களில் உள்ள பிடிவாதத்தைத் தவிடு பொடியாக்கியது. எனவேதான், தங்களை கட்டுப்படுத்த இயலாமல் அவர்களும் நபி (ஸல்) அவர்களுடன் சுஜூதில் வீழ்ந்தார்கள்.

அல்லாஹ்வுடைய வசனத்தின் மகிமை அவர்களது கடிவாளத்தை திருப்பி விட்டதை உணர்ந்த அவர்கள் மிகவும் கைசேதமடைந்தனர். அவ்வுணர்வை அழிப்பதற்கு உண்டான முழு முயற்சியை செய்தனர். இச்சம்பவத்தில் கலந்துகொள்ளாத இணைவைப்பவர்கள் நாலாபுறங்களில் இருந்தும் அச்செயலைக் கண்டித்ததுடன் பழித்தும் பேசினர். இதனால் சிரம் பணிந்த இணை வைப்பவர்கள் தங்களின் இச்செயலை நியாயப்படுத்துவதற்காக நபி (ஸல்) அவர்கள் மீது ஒரு கதையைக் கட்டிவிட்டனர். அதாவது நபி (ஸல்) அவர்கள் நமது சிலைகளை கண்ணியப்படுத்தும் விதமாக நாம் எப்போதும் கூறி வரும் ‘‘தில்க்கள் கரானிக்குல் உலா, வஇன்ன ஷஃபாஅத்த ஹுன்ன லதுர்தஜா’’ என்பதை ஓதினார்கள். அதனால்தான் நாங்கள் சுஜூது செய்தோம் என்று கதை கட்டினார்கள். (அதன் பொருளாவது: இவைகளெல்லாம் எங்களின் உயர்ந்த சிலைகள். அவைகளின் சிபாரிசு நிச்சயமாக ஆதரவு வைக்கப்படும்.) பொய் சொல்வதை தொழிலாகவும் சூழ்ச்சி செய்வதை வழக்கமாகவும் கொண்ட அக்கூட்டம் இவ்வாறு செய்தது ஓர் ஆச்சரியமான விஷயமல்ல!

### முஹாஜிர்கள் திரும்புதல்

இணைவைப்பவர்கள் சுஜூது செய்த விஷயம், ஹபஷாவில் இருந்த முஸ்லிம்களுக்குக் ‘‘குறைஷிகள் முஸ்லிமாகிவிட்டனர்’ என்று, உண்மைக்கு புறம்பான தகவலாய் சென்றடைந்தது. அதனால் அதே ஆண்டு ஷவ்வால் மாதத்தில் அந்த முஸ்லிம்கள் மக்காவிற்குத் திரும்பினர். மக்காவிற்கு சற்று முன்னதாகவே உண்மை நிலவரம் முஸ்லிம்களுக்குத் தெரிய வந்தவுடன் சிலர் ஹபஷாவிற்கே திரும்பிவிட்டனர். சிலர் எவருக்கும் தெரியாமல் மக்காவிற்குள் சென்றுவிட்டனர். மற்றும் சிலர் குறைஷிகள் சிலா் பாதுகாப்பில் மக்காவிற்குள் நுழைந்தனர்.

மெல்ல மெல்ல குறைஷிகள் இவர்களையும் மற்ற முஸ்லிம்களையும் கடுமையாக வேதனை செய்தனர். அவர்களது நெருங்கிய உறவினர்களும் கூட அவர்களுக்குக் கொடுமை செய்தனர். இந்நிலையில் மறுமுறையும் ஹபஷாவிற்கு ஹிஜ்ரா செல்லுங்கள் என தங்களது தோழர்களுக்கு ஆலோசனை கூற வேண்டிய கட்டாயம் நபி (ஸல்) அவர்களுக்கு ஏற்பட்டது.

### இரண்டாவது ஹிஜ்ரா

முஸ்லிம்கள் பெருமளவில் ஹபஷாவிற்கு ஹிஜ்ரா செல்ல ஆயத்தமானார்கள். ஆனால் இந்த இரண்டாவது ஹிஜ்ரா முந்திய ஹிஜ்ராவை விட மிக சிரமமாகவே இருந்தது. முஸ்லிம்களின் இப்பயணத்தை குறைஷிகள் அறிந்து கொண்டதால் அத்திட்டத்தை அழிக்க வேண்டுமென்பதற்காக தீவிரமான முயற்சியில் இறங்கினர். ஆனால், அல்லாஹ்வின் அருளால் பயணம் அவர்களுக்குச் சாதகமாகி, நிராகரிப்பவர்கள் தங்களது திட்டத்தை செயல்படுத்துவதற்கு முன்னதாகவே பயணத்தைத் துதப்படுத்தி ஹபஷா மன்னர் நஜ்ஜாஷியை அடைந்தனர்.

இம்முறை 83 ஆண்களும் 18 அல்லது 19 பெண்களும் ஹபஷா சென்றனர். (சிலர் அம்மார் (ரழி) இப்பயணத்தில் செல்லவில்லை. எனவே, ஆண்களில் 82 நபர்கள்தான் என்றும் கூறுகின்றனர்.) (ஜாதுல் மஆது)

### குறைஷியர்களின் சூழ்ச்சி

முஸ்லிம்கள் தங்களது உயிருக்கும் மார்க்கத்திற்கும் பாதுகாப்புள்ள இடமான ஹபஷாவில் நிம்மதியாக வசிப்பது இணைவைப்பவர்களுக்குப் பிடிக்கவில்லை. எனவே, அவர்களில் நுண்ணறிவும், வீரமுமிக்க அம்ரு இப்னு ஆஸ், அப்துல்லாஹ் இப்னு அபூரபீஆ ஆகிய இருவரைத் தேர்ந்தெடுத்து அவர்கள் நஜ்ஜாஷியையும் அவரது மத குருக்களையும் சந்தித்துப் பேசி, முஸ்லிம்களை நாடு கடத்தும்படி வேண்டுகோள் வைக்கும்போது

அவர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுப்பதற்கு மதிப்புமிக்க வெகுமதிகளுடன் ஹபஷா அனுப்பி வைத்தனர்.

முதலில் அவ்விருவரும் மத குருக்களிடம் சென்று அவர்களுக்குரிய அன்பளிப்புகளை கொடுத்து முஸ்லிம்களை வெளியேற்றுவதற்காக தகுந்த காரணங்களைக் கூறினர். அந்த மத குருக்களும் அதனை ஏற்று, முஸ்லிம்களை வெளியேற்றுவதற்கு நஜ்ஜாஷியிடம் ஆலோசனை கூறுவோம் என்று ஒப்புக் கொண்டனர். பிறகு அவ்விருவரும் நஜ்ஜாஷியிடம் வந்து அவருக்குரிய அன்பளிப்புகளைச் சமர்ப்பித்து அவரிடம் இது குறித்து பேசினர்.

“அரசே! தங்கள் நாட்டுக்கு சில அறிவற்ற வாலிபர்கள் வந்துள்ளனர். அவர்கள் தங்களது இனத்தவர்களின் மார்க்கத்தைவிட்டு வெளியேறிவிட்டனர். உங்களது மார்க்கத்தையும் ஏற்றுக் கொள்ளாமல் உங்களுக்கும் நமக்கும் தெரியாத ஒரு புதிய மார்க்கத்தை பின்பற்றுகின்றனர். இவர்களது இனத்திலுள்ளவர்கள் அதாவது இவ்வாலிபர்களின் பெற்றோர்கள், பெற்றோர்களின் சகோதரர்கள், நெருங்கிய உறவினர்கள் அனைவரும் இவர்களை அழைத்து வருவதற்காக எங்களை இங்கு அனுப்பியுள்ளனர். அவர்கள் இவர்களை நன்கு கண்காணிப்பார்கள்; பாதுகாப்பார்கள். அவர்களைப் பற்றி இவர்கள் கூறிய குறைகளை, நிந்தனைகளை அவர்களே நன்கறிந்தவர்கள். ஆகவே, நீங்கள் அவர்களை எங்களுடன் திருப்பி அனுப்பிவிடுங்கள்!” என்று கூறினர். உடனே அங்கிருந்த மத குருக்களும் “அரசே! இவ்விருவரும் உண்மைதான் கூறுகின்றனர். அவர்களை இவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள். அவர்களது இனத்தவர்களிடம் இவர்கள் அவர்களை அழைத்து செல்வார்கள்” என்றனர்.

ஆனால், பிரச்சனையைத் தீர விசாரிக்க வேண்டும் என்று முடிவு செய்து நஜ்ஜாஷி முஸ்லிம்களை அவைக்கு வரவழைத்தார். எதுவாக இருப்பினும் உண்மையே சொல்ல வேண்டும் என்ற ஒரே முடிவில் முஸ்லிம்கள் அங்கு சென்றனர். முஸ்லிம்களிடம் “உங்களது இனத்தை விட்டுப் பிரிந்து எனது மார்க்கத்தையும் மற்றவர்களின் மார்க்கத்தையும் ஏற்றுக் கொள்ளாமல் புதுமையான மார்க்கத்தை ஏற்றிருக்கிறீர்களே! அது என்ன மார்க்கம்?” என்று நஜ்ஜாஷி கேட்டார்.

முஸ்லிம்களின் பேச்சாளராக இருந்த ஜஅஃபர் இப்னு அபூதாலிப் (ரழி) பதில் கூறினார்கள்: “அரசே! நாங்கள் அறியாமைக் காலத்தில் இருந்தோம்; சிலைகளை வணங்கினோம்; இறந்த பிராணிகளைச் சாப்பிட்டோம்; மானக்கேடான காரியங்களைச் செய்தோம்; உறவுகளைத் துண்டித்து அண்டை வீட்டாருக்கு கெடுதிகள் விளைவித்து வந்தோம்; எங்களிலுள்ள எளியோரை வலியோர் விழுங்கி வந்தனர் (அழித்து வந்தனர்.) இப்படியே நாங்கள் வாழ்ந்து வரும்போதுதான் எங்களில் உள்ள ஒருவரையே அல்லாஹ் எங்களுக்குத் தூதராக அனுப்பினான். அவன் வமிசத்தையும், அவர் உண்மையாளர், நம்பகத்தன்மை மிக்கவர், மிக ஒழுக்கசீலர் என்பதையும் நாங்கள் நன்கு அறிவோம். நாங்கள் அல்லாஹ் ஒருவனையே வணங்க வேண்டும்; நாங்களும் எங்களது மூதாதையர்களும் வணங்கி வந்த கற்சிலைகள், புனித ஸ்தலங்கள் போன்றவற்றிலிருந்து நாங்கள் விலக வேண்டும்; உண்மையே உரைக்க வேண்டும்; அமானிதத்தை நிறைவேற்ற வேண்டும்; உறவினர்களோடு சேர்ந்து வாழவேண்டும்; அண்டை வீட்டாருடன் அழகிய முறையில் நடந்து கொள்ள வேண்டும்; அல்லாஹ் தடைசெய்தவற்றையும் கொலைக் குற்றங்களையும் விட்டு விலகிவிடவேண்டும் என அத்தூதர் எங்களுக்குக் கட்டளையிட்டார்.

மேலும் மானக்கேடானவைகள், பொய் பேசுதல், அனாதையின் சொத்தை அபகரித்தல், பத்தினியான பெண்கள்மீது அவதூறு போன்றவற்றிலிருந்து எங்களைத் தடுத்தார். அல்லாஹ் ஒருவனையே வணங்க வேண்டும்; அவனுக்கு இணைவைக்கக் கூடாது தொழ வேண்டும்; ஏழை வரி (ஜகாத்து) கொடுக்க வேண்டும்; நோன்பு நோற்க வேண்டும் என்றும் அத்தூதர் எங்களுக்கு கட்டளையிட்டார் (ஜஅஃபர் இன்னும் பல இஸ்லாமிய கடமைகளைப் பற்றிய

விவரங்களை கூறினார்.) நாங்கள் அவரை உண்மையாளராக நம்பினோம்; அவரை விசுவாசித்தோம்; அவர் எங்களுக்கு அறிமுகப்படுத்திய அல்லாஹ்வின் மார்க்கத்தை பின்பற்றினோம்; அல்லாஹ் ஒருவனையே வணங்க ஆரம்பித்தோம்; அவனுக்கு இணை வைப்பதை விட்டுவிட்டோம்; அவன் எங்களுக்கு விலக்கியதிலிருந்து விலகிக் கொண்டோம்; அவன் எங்களுக்கு ஆகுமாக்கியதை அப்படியே ஏற்றுக் கொண்டோம். இதனால் எங்களது இனத்தவர் எங்கள் மீது அத்துமீறினர்; எங்களை வேதனை செய்தனர். அல்லாஹ்வை வணங்குவதை விட்டுவிட்டு சிலைகளை வணங்க வேண்டும். முன்பு போலவே கெட்டவைகளைச் செய்ய வேண்டும் என்று நிர்ப்பந்தித்து எங்களை எங்களது மார்க்கத்திலிருந்து திருப்ப முயற்சித்தனர். எங்களை அடக்கி அநியாயம் செய்து நெருக்கடியை உண்டாக்கி எங்களது மார்க்கத்தைப் பின்பற்றுவதற்கும் மார்க்க(மத) சுதந்திரத்துக்கும் அவர்கள் தடையானபோது உங்களது நாட்டுக்கு நாங்கள் வந்தோம். உங்களை நாங்கள் தேர்ந்தெடுத்தோம். உங்களிடம் தங்குவதற்கு விருப்பப்பட்டோம். அரசே! எங்களுக்கு இங்கு அநீதி இழைக்கப்பட மாட்டாதென்று நம்புகிறோம்'' என இவ்வாறு ஜஅஃபர் (ரழி) கூறி முடித்தார்.

''அல்லாஹ்வின் புறத்திலிருந்து அவர் கொண்டு வந்த ஏதாவது உம்மிடம் இருக்கிறதா?'' என்று ஜஅஃபடம் நஜ்ஜாஷி வினவினார். அதற்கு ஜஅஃபர் ''ஆம்! இருக்கின்றது'' என்றார். நஜ்ஜாஷி, ''எங்கே எனக்கு அதை காட்டு'' என்றார். காஃப்-ஹா-யா-ஐன்-ஸாத் எனத் தொடங்கும் ''மர்யம்' எனும் அத்தியாயத்தின் முற்பகுதியை ஜஅஃபர் (ரழி) ஓதிக் காண்பித்தார். அல்லாஹ்வின் மீது ஆணையாக! தாடி நனையும் அளவு நஜ்ஜாஷி அழுதார். அவையில் உள்ளவர்களும் ஜஅஃபர் (ரழி) ஓதியதைக் கேட்டு தங்களின் கையிலுள்ள ஏடுகள் நனையுமளவு அழுதனர். பிறகு நஜ்ஜாஷி, இதுவும் நபி ஈஸா (அலை) கொண்டு வந்த மார்க்கமும் ஒரே மாடத்திலிருந்து வெளியானது (முஸ்லிம்களை அழைக்க வந்த இருவரையும் நோக்கி) ''நீங்கள் இருவரும் சென்று விடுங்கள்; உங்களிடம் நான் இவர்களை ஒப்படைக்கமாட்டேன்'' என்று கூறினார். அவையில் இருந்த எவரும் அவ்விருவரிடமும் பேசுவதற்குத் தயாராகவில்லை.

அவ்விருவரும் வெளியேறி வந்தவுடன் அம்ர் இப்னு ஆஸ் தமது நண்பர் அப்துல்லாஹ் இப்னு அபூரபீஆவிடம் ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவர்களை அடியோடு வேரறுப்பதற்குண்டான வேலையை நான் நாளை செய்வேன்'' என்று கூறினார். ''ஆனால் அப்படி செய்துவிடாதே! அவர்கள் நமக்கு மாறு செய்தாலும் நமது இரத்த பந்தங்களே ஆவார்கள்'' என்று அப்துல்லாஹ் கூறினார். ஆனால், அம்ரு தனது கருத்தை மாற்றிக் கொள்ளவில்லை.

மறுநாள் அம்ரு நஜ்ஜாஷியிடம் வந்து ''அரசே! இவர்கள் ஈஸாவின் விஷயத்தில் அபாண்டமான வார்த்தையை கூறுகிறார்கள்'' என்று கூறினார். ''அப்படியா! அவர்களை என்னிடம் அழைத்து வாருங்கள்'' என்றார் நஜ்ஜாஷி. இதை அறிந்தவுடன் சற்று பயமேற்பட்டாலும் உண்மையே சொல்ல வேண்டும் என்ற முடிவுடன் முஸ்லிம்கள் அவைக்கு வந்தனர். நஜ்ஜாஷி அவர்களிடம் அது பற்றி விசாரணை செய்தார்.

''எங்களது நபி (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கூறியதைத்தான் நாம் அவர் விஷயத்தில் கூறுகிறோம்: அவர் அல்லாஹ்வின் அடிமை அவனது தூதர்; அவனால் உயிர் ஊதப்பட்டவர்; கண்ணியமிக்க கன்னிப்பெண் மர்யமுக்கு அல்லாஹ்வின் சொல்லால் பிறந்தவர்'' என்று ஜஅஃபர் (ரழி) கூறினார்.

நஜ்ஜாஷி கீழேயிருந்து ஒரு குச்சியை எடுத்து ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! மர்யமின் மகன் ஈஸா (அலை) இக்குச்சியின் அளவுகூட நீ கூறியதைவிட அதிகமாக கூறியதில்லை'' என்றார். இதைக் கேட்ட அவரது மத குருமார்கள் முகம் சுழித்தனர். ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் முகம் சுழித்தாலும் இதுவே உண்மை'' என்று நஜ்ஜாஷி கூறிவிட்டார்.

பிறகு நஜ்ஜாஷி முஸ்லிம்களை நோக்கி ‘‘நீங்கள் செல்லலாம்! எனது பூமியில் நீங்கள் முழு பாதுகாப்புப் பெற்றவர்கள். உங்களை ஏசியவர் தண்டனைக்குரியவர். உங்களை ஏசியவர் தண்டனைக்குரியவர். உங்களை ஏசியவர் தண்டனைக்குரியவர். தங்கத்தின் மலையை எனக்கு கொடுத்தாலும் உங்களைத் துன்புறுத்த நான் விரும்பமாட்டேன்’’ என்று கூறினார். தனது அவையில் உள்ளவர்களிடம் அவ்விருவர்கள் கொண்டு வந்த அன்பளிப்புகளை அவர்களிடமே திரும்ப கொடுத்து விடுங்கள். எனக்கு அதில் எவ்வித தேவையும் இல்லை. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ் முன்னர் பறிபோன எனது ஆட்சியை எனக்கு மீட்டுத் தந்தபோது என்னிடமிருந்து அவன் லஞ்சம் வாங்கவில்லை. எனவே, நான் அவன் விஷயத்தில் லஞ்சம் வாங்குவேனா? எனக்கு எதிராக அல்லாஹ் கிளர்ச்சியாளர்களுக்கு உதவாதபோது அவனுக்கு எதிராக நான் பிரச்சனையாளர்களுக்கு உதவுவேனா? (எனக்கு எதிராக என் எதிரிகளுக்கு அவன் உதவி செய்யாதபோது அவனுக்கு எதிராக நான் அவனது எதிரிகளுக்கு உதவி செய்வேனா?)’’ என்று கூறினார்.

இச்சம்பவத்தை அறிவிக்கும் உம்மு ஸலமா (ரழி) கூறுவதாவது: அவ்விருவரும் அங்கிருந்து கேவலப்பட்டு வெளியேறினர். அவர்களது அன்பளிப்புகளும் திரும்ப கொடுக்கப்பட்டன. நாங்கள் சிறந்த நாட்டில் சிறந்த தோழமையில் அவரிடம் தங்கியிருந்தோம். (இப்னு ஹிஷாம்)

**நபியவர்கள் மீது கொலை முயற்சி**

ஹபஷாவிற்கு ஹிஜ்ரா செய்த முஸ்லிம்களைத் திரும்பக் கொண்டு வருவதில் தோல்வியுற்ற இணைவைப்பவர்கள் கடுங்கோபத்தாலும் குரோதத்தாலும் பொங்கி எழுந்தனர். மக்காவில் மீதமிருந்த முஸ்லிம்களின் மீது தங்களது அட்டூழியங்களைக் கட்டவிழ்த்து விட்டதுடன் நபி (ஸல்) அவர்களுக்கும் கெடுதிகள் பல செய்யத் துவங்கினர். அவர்களின் செயல்பாடுகளைக் கவனிக்கும்போது அவர்களின் எண்ணப்படி இக்குழப்பத்திற்கு வேராக இருந்த நபி (ஸல்) அவர்களை ஒழித்துக் கட்டவே அவர்கள் முயற்சி செய்தனர் என்பதை விளங்கிக் கொள்ளலாம்.

ஹிஜ்ரா செய்தவர்கள் போக மக்காவில் முஸ்லிம்கள் மிகக் குறைவாகவே எஞ்சி இருந்தார்கள். அவர்களில் சிலர் சரியான பக்க பலத்துடனும் கோத்திர பாதுகாப்புடனும் இருந்தார்கள். மற்றும் சில முஸ்லிம்கள் சிலன் அடைக்கலத்திலும் பாதுகாப்பிலும் இருந்தனர். ஆனால், எவரும் தங்களது இஸ்லாமை வெளிப்படுத்த துணிவின்றி மறைத்தும், வம்பர்களின் கண்களிலிருந்து முடிந்த அளவு மறைந்தும் ஒதுங்கியும் வாழ்ந்தனர். இவர்கள் எவ்வளவுதான் எச்சரிக்கையாக இருந்த போதிலும் நிராகரிப்பவர்களின் தொந்தரவிலிருந்து முழுமையாகத் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) எப்போதும் அந்த அக்கிரமக்காரர்களின் கண்களுக்கு முன்பாகவே தொழுது வந்தார்கள். வெளிப்படையாகவும் இரகசியமாகவும் மக்களை அல்லாஹ்வின் பக்கம் அழைத்து வந்தார்கள். இதை யாராலும் தடுக்க முடியவில்லை. எந்த ஒன்றும் நபி (ஸல்) அவர்களை இப்பணியிலிருந்து திருப்பி விடவும் முடியவில்லை. ஏனெனில், அல்லாஹ் அவர்களுக்கு,

ஆகவே, உங்களுக்கு ஏவப்பட்டதை(த் தயக்கமின்றி) நீங்கள் அவர்களுக்கு தெளிவாக அறிவித்து விடுங்கள். மேலும், இணைவைத்து வணங்குபவர்களைப் புறக்கணித்து விடுங்கள். (அல்குர்ஆன் 15:94)

என்று கட்டளையிட்டிருந்தான்.

ஆகவே, இணைவைப்பவர்கள் நாடும்போதெல்லாம் நபி (ஸல்) அவர்களுக்கு இடையூறு அளித்து வந்தனர். நபி (ஸல்) அவர்கள் மீது அவர்களுக்கு இயற்கையாக இருந்த பயமும்

அபூதாலிப் நபி (ஸல்) அவர்களுக்கு கொடுத்து வந்த பாதுகாப்பு, கண்ணியம் ஆகியவற்றால் வெளிப்படையாக நபி (ஸல்) அவர்களை இம்சிக்க அவர்களால் முடியவில்லை. மேலும், ஹாஷிம் கிளையார்கள் தங்களுக்கு எதிராக ஒன்றுகூடி விடுவார்கள் என்பதையும் அவர்கள் பயந்தனர்.

ஆனால், நபி (ஸல்) அவர்களின் அழைப்புப் பணி இணைவைப்போரின் மத தலைமைத்துவத்தையும் சிலை வணக்கக் கலாச்சாரத்தையும் தவிடுபொடியாக்கியது. இதன் காரணத்தால் அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கும் இடையூறுகள் பல செய்யத் தொடங்கினர்.

இக்காலகட்டத்தில் பல நிகழ்ச்சிகள் நடைபெற்றன என்பதை ஹதீஸ் மற்றும் வரலாற்று நூல்களிலிருந்து நாம் தெரிந்து கொள்கிறோம். அவற்றிள் ஒன்று:

1) அபூலஹபின் மகன் உதைபா நபி (ஸல்) அவர்களிடம் வந்து அத்தியாயம் அந்நஜ்மை ஓதிக் காண்பித்து ‘‘இதை நான் மறுக்கிறேன்’’ என்று கூறி நபி (ஸல்) அவர்கள் மீது பாய்ந்து அவர்களது சட்டையைக் கிழித்து அவர்களது முகத்தில் எச்சிலை துப்பினான். ஆனால், எச்சில் நபி (ஸல்) அவர்கள் மீது விழவில்லை. அந்நேரத்தில் நபி (ஸல்) அவர்கள் ‘‘அல்லாஹ்வே! உனது மிருகங்களிலிருந்து ஒரு மிருகத்தை அவன் மீது சாட்டுவாயாக!’’ என்று அல்லாஹ்விடம் வேண்டினார்கள். அவர்களின் இந்த வேண்டுதலை அல்லாஹ் அங்கீகரித்துக் கொண்டான். இச்சம்பவத்திற்கு பிறகு உதைபா குறைஷியர்கள் சிலருடன் மக்காவிலிருந்து பயணமானான். ஷாம் நாட்டின் ‘‘ஜர்க்கா’ என்ற இடத்தில் தங்கியபோது அன்றிரவு ஒரு சிங்கம் அவர்களைச் சுற்றிச்சுற்றி வந்தது. அப்போது உதைபா ‘‘எனது சகோதரனின் நாசமே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! முஹம்மது எனக்கு எதிராக வேண்டிக் கொண்டதுபோல் இந்த சிங்கம் என்னைத் தின்றே முடிக்கும். நானோ ஷாமில் இருக்கின்றேன். அவர் மக்காவில் இருந்து கொண்டே என்னைக் கொன்றுவிட்டார்’’ என்று கூச்சலிட்டான். பிறகு அவனை தங்களுக்கு நடுவில் ஆக்கிக்கொண்டு மற்றவர்கள் அவனைச் சுற்றி தூங்கினார்கள். ஆனால், இரவில் அந்த சிங்கம் அவர்களைத் தாண்டிச் சென்று உதைபாவின் கழுத்தை கடித்துக் குதறிக் கொன்றுவிட்டது. (தலாயிலுந் நுபுவ்வா)

2) நபி (ஸல்) அவர்கள் ஸஜ்தாவில் இருக்கும்போது அவர்களுடைய பிடரியின் மீது உக்பா இப்னு அபூ முஈத் மிக அழுத்தமாக மிதித்தான். இதனால் நபி (ஸல்) அவர்களின் விழிகள் பிதுங்கிற்று!

நபி (ஸல்) அவர்களை அந்த வம்பர்கள் கொல்லவேண்டுமென்று எண்ணம் கொண்டிருந்தனர் என்பதற்கு அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கும் சம்பவத்தை சான்றாக இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார். அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் (ரழி) கூறுவதாவது:

குறைஷிகள் ஹஜருல் அஸ்வதிற்கு அருகில் குழுமியிருந்தனர். நானும் அங்கு இருந்தேன். அவர்கள் நபி (ஸல்) அவர்களைப் பற்றி, ‘‘இவர் விஷயத்தில் நாம் பொறுமை காத்ததுபோன்று வேறு எதற்கும் நாம் பொறுமை காத்ததில்லை. இவர் விஷயத்தில் நாம் எல்லைமீறி சகித்து விட்டோம்’’ என்று பேசிக் கொண்டிருந்தனர். இந்நேரத்தில் நபி (ஸல்) அவர்கள் அவ்விடத்திற்கு வருகை தந்து ஹஜருல் அஸ்வதைத் தொட்டுவிட்டு தவாஃபை’’ தொடங்கினார்கள். கஅபாவைச் சுற்றி வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் குறைஷிகளுக்கு அருகில் நடந்தபோது குறைஷிகள் நபி (ஸல்) அவர்களை குத்தலாகப் பேசினார்கள். நபி (ஸல்) அவர்கள் முகத்தில் அதன் மாற்றத்தை நான் பார்த்தேன். இரண்டாவது முறையாக அவர்களுக்கு அருகில் வந்தபோது மீண்டும் அவ்வாறே குத்தலாகப் பேசினார்கள். நபி (ஸல்) அவர்கள் நின்றுவிட்டார்கள். ‘‘குறைஷிகளே! நான் சொல்வதை நீங்கள் (கொஞ்சம்) கேட்டுக் கொள்கிறீர்களா? எனது உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது

ஆணையாக! திட்டவட்டமாக நான் உங்களிடத்தில் உங்களைப் பலியிட்டு விடும் முடிவைக் கொண்டு வந்துள்ளேன். (அதிவிரைவில் உங்களது கதை முடிந்து விடும்)'' என்று கூறினார்கள். இந்த வார்த்தைகளைக் கேட்ட அவர்கள் திடுக்கிட்டனர். தங்களுக்கு மிகப்பெரியஆபத்தொன்று நிச்சயம் நிகழும் என்பதை உணர்ந்தனர். இதனால் நபி (ஸல்) அவர்களிடத்தில் கொடூரமாக நடந்தவர் கூட நபி (ஸல்) அவர்களை மிக அழகிய முறையில் சாந்தப்படுத்தினார். ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் அறிவீனர் அல்லர்! அபுல் காசிமே நீங்கள் திரும்பிச் சென்றுவிடுங்கள்'' என்று கூறி, சாமாதானப்படுத்தினர்.

மறுநாளும் அவ்வாறே ஒன்று சேர்ந்து நபி (ஸல்) அவர்களைப் பற்றி பேசிக் கொண்டிருக்கையில் அங்கு நபி (ஸல்) அவர்கள் தோன்றினார்கள். அவர்கள் அனைவரும் ஒரே பாய்ச்சலாக நபி (ஸல்) அவர்கள் மீது பாய்ந்தனர். அவர்களில் ஒருவன் நபி (ஸல்) அவர்களின் போர்வையை பிடித்து இழுத்தான். அவனிடமிருந்து நபி (ஸல்) அவர்களைக் காப்பாற்றிய அபூபக்ர் (ரழி) ''தனது இறைவன் அல்லாஹ் ஒருவன்தான் என்று கூறியதற்காகவா ஒருவரை கொலை செய்கிறீர்கள்?'' என்று கண்ணீர் மல்கக் கேட்டார்கள். பிறகு அனைவரையும் அங்கிருந்து விலக்கி விட்டார்கள். இதுதான் நான் பார்த்ததில் குறைஷிகள் நபி (ஸல்) அவர்களைத் தாக்கிய மிகக் கொடூரமான நிகழ்ச்சி என்று இந்த நிகழ்ச்சியை அறிவிக்கும் அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரழி) கூறுகிறார்கள்.

ஸஹீஹுல் புகாரியில் வருவதாவது: உர்வா இப்னு ஜுபைர் (ரழி) கூறுகிறார்:

நான் அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் (ரழி) அவர்களிடம் இணைவைப்பவர்கள் நபி (ஸல்) அவர்களுடன் அரக்கத்தனமாக நடந்து கொண்டவற்றில் மிகக் கொயூரமான ஒன்றை எனக்கு சொல்லுங்கள் என்று கேட்டேன். அதற்கவர் ''நபி (ஸல்) அவர்கள் கஅபாவில் ஹஜருல் அஸ்வதிற்கு அருகில் தொழுது கொண்டிருந்தபோது உக்பா இப்னு அபூமுஈத் அங்கு வந்து தனது மேலாடையை நபி (ஸல்) அவர்களின் கழுத்தில் போட்டு மிகக் கடினமாக இறுக்கினான். அபூபக்ர் (ரழி) விரைந்து வந்து அவனது புஜத்தைப் பிடித்துத் தள்ளி நபி (ஸல்) அவர்களை விட்டும் அவனை விலக்கிவிட்டு ''தனது இறைவன் அல்லாஹ் என்று கூறியதற்காகவா ஒருவரை கொலை செய்கிறீர்கள்?'' என்று கேட்டார்கள்.

இச்சம்பவத்தை அஸ்மா பின்த் அபூபக்ர் (ரழி) அவர்களும் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்களை உக்பா இவ்வாறு கழுத்தை நெறித்துக் கொண்டிருந்தபோது உங்கள் தோழரை காப்பாற்றுங்கள் என்று ஒருவர் அபூபக்ர் (ரழி) அவர்களிடம் வந்து கூறினார். அபூபக்ர் (ரழி) எங்களைவிட்டு வேகமாகப் புறப்பட்டார்கள். அவர்கள் தங்களது தலையில் நான்கு சடை பின்னி இருந்தார்கள். ''தனது இறைவன் அல்லாஹ் என்று கூறியதற்காகவா ஒருவரை கொலை செய்கிறீர்கள்?'' என்று கூறிக்கொண்டே சென்று, நபி (ஸல்) அவர்களை விடுவித்தார்கள். அம்மக்கள் நபி (ஸல்) அவர்களை விட்டுவிட்டு தங்களதுக் கோபத்தை அபூபக்ர் (ரழி) மீது திருப்பினர். நிராகரிப்பவர்களின் கடும் தாக்குதலுக்கு ஆளாகிய பிறகு அபூபக்ர் (ரழி) எங்களிடம் திரும்பி வந்தார். அவருடைய சடையில் நாங்கள் எங்கு தொட்டாலும் அதிலிருந்து முடிகள் கையுடனேயே வந்துவிட்டன. (முக்தஸருஸ்ஸீரா)

**ஹம்ஜா இஸ்லாமை தழுவதல்**

அநியாயங்களும் கொடுமைகளும் நிறைந்து காணப்பட்ட அக்காலச் சூழ்நிலையில் முஸ்லிம்களின் பாதையை ஒளிமயமாக்கும் ஒரு மின்னல் வெட்டியது. அதுதான் ஹம்ஜா இப்னு அப்துல் முத்தலிப் (ரழி) இஸ்லாமைத் தழுவிய நிகழ்ச்சி. ஆம்! நபித்துவத்தின் ஆறாம் ஆண்டு இறுதியில் துல்ஹஜ் மாதத்தில் அவர்கள் இஸ்லாமைத் தழுவினார்கள்.

ஹம்ஜா (ரழி) முஸ்லிமானதற்குரிய காரணம்: ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் ஸஃபா மலைக்கருகில் அமர்ந்திருந்தபோது அவ்வழியாக வந்த அபூ ஜஹ்ல் நபி (ஸல்) அவர்களை

சுடும் வார்த்தைகளால் இம்சித்தான். ஆனால், நபி (ஸல்) அவர்கள் அவனுக்கு எவ்வித பதிலும் கூறாமல் வாய்மூடி மௌனமாகவே இருந்தார்கள். பிறகு அபூஜஹ்ல் ஒரு கல்லால் நபி (ஸல்) அவர்களின் மண்டையில் அடித்து காயப்படுத்திவிட்டு கஅபாவிற்கு அருகில் அமர்ந்திருந்த குறைஷிகளின் சபையில் போய் அமர்ந்து கொண்டான். நபி (ஸல்) அவர்களின் தலையிலிருந்து இரத்தம் கசிந்தது. ஸஃபா மலையில் இருந்த தனது வீட்டில் இருந்துகொண்டு இக்காட்சியை அப்துல்லாஹ் இப்னு ஜுத்ஆனின் அடிமைப் பெண் பார்த்து, வேட்டையிலிருந்து வில்லுடன் வந்து கொண்டிருந்த ஹம்ஜாவிடம் இச்சம்பவத்தைக் கூறினார். (ஹம்ஜா (ரழி) குறைஷிகளில் மிகவும் வலிமைமிக்க வாலிபராக இருந்தார்.) ஹம்ஜா (ரழி) சினம்கொண்டு எழுந்தார்.

அபூஜஹ்லை தேடி பள்ளிக்குள் நுழைந்து "ஏ கோழையே! எனது சகோதரன் மகனையா திட்டிக் காயப்படுத்தினாய்! நானும் அவரது மார்க்கத்தில்தான் இருக்கிறேன்" என்று கூறி தனது வில்லால் அவனது தலையில் அடித்து பெரும் காயத்தை ஏற்படுத்தினார். அபூஜஹ்லின் குடும்பமான பனூ மக்ஜூமில் உள்ள ஆண்கள் கொதித்தெழுந்தனர். ஹம்ஜாவிற்கு ஆதரவாக ஹாஷிம் கிளையார்களும் கொதித்தெழுந்தனர். இதனைக் கண்ட அபூஜஹ்ல் "அபூ உமாரா (ஹம்ஜா)வை விட்டுவிடுங்கள். நான் அவரது சகோதரனின் மகனை மிகக் கொச்சையாக ஏசி விட்டேன்" (அதுதான் என்னை அவர் தாக்குவதற்குக் காரணம்) என்று கூறினான். (இப்னு ஹிஷாம்)

தனது குடும்பத்தைச் சேர்ந்த பாசத்திற்குரிய ஒருவர் இழிவாக்கப்படுவதைப் பொறுக்கமுடியாத ரோஷத்தில்தான் ஹம்ஜா (ரழி) முதலில் இஸ்லாமை ஏற்றார். பிறகு அல்லாஹ்வின் அருளால் இஸ்லாமைப் புரிந்து கொண்டு, வலிமை வாய்ந்த இஸ்லாம் எனும் வளையத்தை அவர் உறுதியாகப் பற்றிக் கொண்டார். ஹம்ஜா (ரழி) இஸ்லாமைத் தழுவிய பின் முஸ்லிம்களின் மதிப்பு உயர்ந்தது.

**உமர் இஸ்லாமைத் தழுவுதல்**

அநியாயங்கள், அடக்குமுறைகள் எனும் மேகங்கள் சூழ்ந்திருந்த அந்த நேரத்தில் முஸ்லிம்களின் வழிக்கு ஒளிகாட்ட மற்றொரு மின்னல். ஆம்! இம்மின்னல் முந்திய மின்னலை (ஹம்ஜா (ரழி) முஸ்லிமானதை) விட பன்மடங்காக ஒளி வீசியது. அதுதான் உமர் இப்னு கத்தாப் இஸ்லாமை ஏற்றுக்கொண்டது.

நபித்துவத்தின் ஆறாம் ஆண்டு துல்ஹஜ் மாதம் ஹம்ஜா (ரழி) அவர்கள் இஸ்லாமைத் தழுவி மூன்று நாட்கள் கழித்து உமர் இஸ்லாமைத் தழுவினார். நபி (ஸல்) அவர்கள் உமர் இஸ்லாமை தழுவ வேண்டுமென இறைவனிடம் வேண்டியிருந்தார்கள்.

"அல்லாஹ்வே! உமர் இப்னு கத்தாப் அல்லது அபூஜஹ்ல் இப்னு ஹிஷாம் ஆகிய இருவரில் உனக்கு விருப்பமானவரைக் கொண்டு இஸ்லாமை வலிமைப்படுத்துவாயாக!" என்று நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் வேண்டினார்கள். அவர்களில் அல்லாஹ்விற்கு மிக விருப்பமானவர் உமராக இருந்தார் என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத், அனஸ், இப்னு உமர் (ரழி) ஆகியோர் அறிவிக்கிறார்கள்.

உமர் இஸ்லாமைத் தழுவிய நிகழ்ச்சியை விவரிக்கும் அறிவிப்புகளை நாம் ஆய்வு செய்து பார்க்கும்போது உமரின் உள்ளத்தில் இஸ்லாம் படிப்படியாகத்தான் வேரூன்றியது என்பதை தெரிந்து கொள்ளலாம். அந்த அறிவிப்புகளைச் சுருக்கமாக நாம் பார்ப்பதற்கு முன் உமரிடம் இருந்த உணர்வுகளையும், உணர்ச்சிகளையும் முதலில் பார்ப்போம்.

உமர் நல்ல வலிமையும் கம்பீரமான இயல்பும் உடையவர். அவரால் முஸ்லிம்கள் பல வகையான தொந்தரவுகளை, எண்ணற்ற இன்னல்களை நீண்ட காலமாக அனுபவித்து வந்தனர். எனினும், அவரது உள்ளத்தில் பல மாறுபட்ட உணர்ச்சிகளின் போராட்டம்

ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. ஒருபுறம் தங்களது மூதாதையர்கள் கடைபிடித்து வந்த சடங்குகளைப் பின்பற்றி அவற்றுக்காக வீறுகொண்டு எழுந்தார். மற்றொருபுறம், கொள்கையில் முஸ்லிம்களுக்கு இருந்த உறுதியையும் அதற்காக சோதனைகள் அனைத்தையும் அவர்கள் தாங்கிக் கொள்வதையும் பார்த்து ஆச்சரியமடைந்தார். மேலும், ஒரு நல்ல பகுத்தறிவுவாதிக்கு வரும் சந்தேகங்கள் அவருடைய உள்ளத்திலும் அவ்வப்போது தோன்றி மறைந்தன. ஒரு வேளை இஸ்லாமிய போதனை மற்றவைகளைவிட தூய்மையானதாக, சரியானதாக இருக்கலாமோ என யோசிப்பார். அதனால்தான் அவருக்கு இஸ்லாமின்மீது கோபம் பொங்கி எழும்போதெல்லாம் உடனடியாக அடங்கியும் விட்டது.

உமர் இஸ்லாமைத் தழுவிய நிகழ்ச்சியை விவரிக்கும் அறிவிப்புகளை முறையாக இங்கு நாம் பார்ப்போம். ஓர் இரவில் தனது வீட்டுக்கு வெளியில் தூங்க வேண்டிய நிலை அவருக்கு ஏற்பட்டது. நேராக ஹரமுக்கு வந்து கஅபாவின் திரைக்குள் நுழைந்து கொண்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் அங்கு தொழுது கொண்டிருந்தார்கள். தொழுகையில் நபி (ஸல்) அவர்கள் அத்தியாயம் அல்ஹாக்கா ஓத, அதன் வசன அமைப்புகளை ரசித்து உமர் ஓதுதலைச் செவிமடுத்தார். இதைத் தொடர்ந்து உமர் கூறுகிறார்:

நபி (ஸல்) அவர்கள் ஓதுவதை கேட்டுக் கொண்டிருந்த நான் எனது எண்ணத்தில் அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவர் கவிஞராக இருப்பாரோ! என்று என் உள்ளத்தில் கூற,

இது, நிச்சயமாக (நம்மால் அறிவிக்கப்பட்டபடி) மிக்க சங்கை பொருந்திய ஒரு தூதரால் கூறப்பட்டதாகும். இது, ஒரு கவிஞனுடைய சொல்லல்ல. எனினும், (இதனை) நீங்கள் வெகு சொற்பமாகவே நம்பிக்கை கொள்கின்றீர்கள். (அல்குர்ஆன் 69:40, 41)

என்ற வசனங்களை நபி (ஸல்) அவர்கள் ஓதினார்கள்

அடுத்து இவர் ஜோசியக்காரராக இருப்பாரோ! என்று என் உள்ளத்தில் நான் கூற,

(இது) ஒரு ஜோசியக்காரனுடைய சொல்லுமல்ல. (எனினும், இதனைக் கொண்டு) வெகு சொற்பமாகவே நீங்கள் நல்லுபதேசம் அடைகின்றீர்கள். உலகத்தார்களின் இறைவனால் (இது) இறக்கப்பட்டுள்ளது. (அல்குர்ஆன் 69:42, 43)

என்ற வசனங்களை நபி (ஸல்) அவர்கள் ஓதினார்கள்.

அது சமயம் எனது உள்ளத்தில் இஸ்லாமை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது.

இது உமர் இதயத்தில் விழுந்த இஸ்லாமின் முதல் விதையாகும். எனினும், அறியாமைக் கால எண்ணங்களும் மூட பழக்க வழக்கங்களின் பிடிவாதமும், மூதாதையர்களின் மார்க்கத்தை உயர்வாக கருதி வந்ததும், அவரது உள்ளம் ஒத்துக் கொண்டிருந்த மகத்தான உண்மையை மறைத்திருந்தது. தனது உள்ளத்தில் பொதிந்து கிடந்த உணர்வைப் பொருட்படுத்தாமல் இஸ்லாமுக்கு எதிராக செயல்படுவதிலேயே தீவிரம் காட்டி வந்தார்.

நபி (ஸல்) அவர்களின் மீது அவருக்கிருந்த, அளவுமீறிய கோபத்தினால் வாளை ஏந்தி நபி (ஸல்) அவர்களின் கதையை முடித்துவிட வெளியேறினார். அப்போது நுஅய்ம் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அவர்கள் வழியில் அவரை சந்தித்து “உமரே நீ எங்கு செல்கிறாய்?” என்று கேட்க “நான் முஹம்மதை கொல்லச் செல்கிறேன்.” என்றார். அதற்கு நுஅய்ம் “நீ முஹம்மதை கொலை செய்துவிட்டு ஹாஷிம், ஜுஹ்ரஹ் இவ்விரு கிளையார்களிலிருந்து பயமின்றி தப்பித்து வாழ்வது எங்ஙனம்?” என்று அச்சுறுத்தினார். அவரை நோக்கி “நீ உனது மார்க்கத்தை விட்டுவிட்டு அவரது மார்க்கத்திற்கு சென்று விட்டதாகவே எனக்குத்

தோன்றுகிறது'' என்று உமர் கூறினார். அதற்கு நுஅய்ம் ''உமரே! ஆச்சரியமான ஒன்றை நான் உமக்கு சொல்லட்டுமா?. உனது சகோதரியும் (அவரது கணவர்) உனது மச்சானும் உனது மார்க்கத்தை விட்டுவிட்டு முஹம்மதின் மார்க்கத்துக்குச் சென்று விட்டனர்'' என்று கூறியதுதான் தாமதம். அவ்விருவரையும் தண்டிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவர்களை நோக்கி உமர் விரைந்தார்.

அப்போது அங்கு கப்பாப் (ரழி) அவர்கள் உமரின் சகோதரிக்கும் அவரது கணவருக்கும் தனது ஏட்டிலுள்ள ''தாஹா' எனத் தொடங்கும் அத்தியாயம் தாஹாவின் வசனங்களை கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். உமர் வருவதை அறிந்த கப்பாப் (ரழி) வீட்டினுள் மறைந்து கொண்டார். உமரின் சகோதரியும் அந்த ஏட்டை மறைத்து விட்டார்கள். எனினும், உமர் வீட்டிற்கு அருகே வந்தபோது கப்பாப் (ரழி) கற்றுக் கொடுத்த சப்தத்தை கேட்டு விட்டார். வீட்டினுள் நுழைந்த உமர் ''உங்களிடம் நான் செவிமடுத்த இந்த மெல்லிய சப்தம் என்ன?'' என்று கேட்டதற்கு ''நாங்கள் பேசிக் கொண்டிருந்ததை தவிர வேறு எதுவும் இல்லை'' என்று அவ்விருவரும் கூறினார்கள். அப்போது உமர் ''நீங்கள் மதம் மாறிவிட்டீர்களா?'' என்று கேட்டார். அதற்கு அவரது மச்சான் ''உமரே! சத்தியம். உன்னுடைய மார்க்கத்தை தவிர வேறொன்றில் இருந்தால் உன் கருத்து என்ன?'' என்று கேட்க, உமர் கடுஞ்சினம் கொண்டு தனது மச்சானின் மீது பாய்ந்து அவரை பலமாகத் தாக்கி மிதிக்கவும் செய்தார். அவரது சகோதரி தனது கணவரை விட்டும் உமரை விலக்கினார். உமர் கடுமையாக தன் சகோதரியின் கன்னத்தில் அறைந்து அவரது முகத்தை ரத்தக் காயப்படுத்தினார்.

கோபம் கொண்ட உமரின் சகோதரி உமது மார்க்கமல்லாத வேறொன்றில் உண்மை இருந்தாலுமா? (அதை ஏற்றுக் கொள்ளக்கூடாது.) ''அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை, முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று நான் சாட்சி கூறுகிறேன்'' என்று உரக்கக் கூறினார். தனது கோபம் பலனற்றுப் போனதைக் கண்டு உமர் நிராசை அடைந்தார். தனது சகோதரிக்கு ஏற்பட்ட ரத்தக் காயத்தைப் பார்த்து அவருக்கு கைசேதமும், வெட்கமும் ஏற்பட்டது. உங்களிடமுள்ள இப்புத்தகத்தை எனக்குக் கொடுங்கள். நான் அதை படிக்க வேண்டும் என்று அவர் கூறினார். அதற்கு அவரது சகோதரி ''நீ அசுத்தமானவர். நீர் எழுந்து குளித்து வாரும்'' என்று கூறி அதைத் தர மறுத்துவிட்டார். பிறகு குளித்து வந்தவுடன் திருமறையை கையிலேந்தி ''பிஸ்மில்லார்ரஹ்மானிர்ரஹீம்'' (அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்) என்று ஓதியவுடன் ''ஆஹா! என்ன தூய்மையான பெயர்கள்'' என்று கூறி, தொடர்ந்து ''தாஹா' என்று தொடங்கி பதினான்காவது வசனம் வரை ஓதி முடித்துவிட்டு ''இது எவ்வளவு அழகான சொற்கள்! எவ்வளவு இனிமையான வசனங்கள்! எனக்கு முஹம்மதைக் காட்டுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டார். உமரின் பேச்சைக் கேட்ட கப்பாப் (ரழி) வெளியேறி வந்து ''உமரே! நற்செய்தி பெற்றுக் கொள்ளுங்கள். வியாழன் இரவு, ''அல்லாஹ்வே! உமர் அல்லது அபூஜஹ்ல் மூலமாக இஸ்லாமுக்கு உயர்வைக் கொடு!'' என்று நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் செய்த பிரார்த்தனை உங்கள் விஷயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்று நான் உண்மையில் நம்புகிறேன்'' என்றுரைத்தார்.

நபி (ஸல்) அவர்கள் ஸஃபா மலையில் உள்ள இல்லத்தில் இருந்தார்கள். உமர் தனது வாளை அணிந்து கொண்டு நபி (ஸல்) அவர்களின் வீட்டை நோக்கி வந்தார். உமர் கதவைத் தட்டியபோது ஒருவர் கதவின் இடுக்கின் வழியாக உமரை வாள் அணிந்த நிலையில் பார்த்து நபி (ஸல்) அவர்களுக்கு அச்செய்தியைக் கூறினார். அங்கிருந்தவர்கள் எல்லாம் ஒன்று கூடிவிட்டார்கள். மக்கள் ''உமர் வந்திருக்கிறார்'' என்று கூறினார்கள். ''ஓ! உமரா! (வந்திருக்கிறார்?) அவருக்கு கதவை திறந்து விடுங்கள்! அவர் நன்மையை நாடி வந்திருந்தால் அந்த நன்மையை நாம் அவருக்குக் கொடுப்போம்! அவர் தீமையை நாடி

வந்திருந்தால் அவரது வாளாலேயே அவரை நாம் கொலை செய்து விடுவோம்!” என்று ஹம்ஜா (ரழி) கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் வீட்டின் உள்பகுதியில் வஹி (இறைச்செய்தி) வந்த நிலையில் இருந்தார்கள்.

சிறிது நேரத்துக்குப் பிறகு உமரை சந்தித்த நபி (ஸல்) அவர்கள் உமரின் சட்டையையும் வாளையும் பிடித்து அவரைக் குலுக்கி “உமரே! நீ வழிகேட்டிலிருந்து விலக மாட்டாயா? வலீதுக்கு ஏற்பட்டதைப் போன்ற கேவலத்தையும், தண்டனையும் அல்லாஹ் உனக்கு இறக்க வேண்டுமா? அல்லாஹ்வே! இதோ உமர் இப்னு கத்தாப் வந்திருக்கிறார். அல்லாஹ்வே! உமரால் இஸ்லாமிற்கு உயர்வைக்கொடு!” என்று கூறினார்கள். உமர் (ரழி) “அஷ்ஹது அல்லாஇலாஹஇல்லல்லாஹ் வ அன்னக்க ரஸூலுல்லாஹ்” என்று கூறி இஸ்லாமைத் தழுவினார். (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, அல்லாஹ்வின் தூதர் நீங்கள் என்றும் சாட்சி கூறுகிறேன் என்பதே இதன் பொருளாகும்.) இதனைப் பார்த்த வீட்டில் உள்ளவர்கள் தக்பீர் (அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெரியவன் என்று) முழங்கினர். அந்த சப்தத்தைப் பள்ளியில் உள்ளவர்களும் கேட்டார்கள்.

யாராலும் எதிர்கொள்ள முடியாத அளவுக்கு உமர் (ரழி) வலிமை மிக்கவராக இருந்தார். அவர் இஸ்லாமை ஏற்றுக்கொண்டது இணைவைப்பவர்களுக்கிடையில் பெரும் சலசலப்பை ஏற்படுத்தியதுடன், இனி தங்களுக்கு இழிவும் பலவீனமும்தான் என்பதை அவர்களுக்கு உணர வைத்தது. உமர் (ரழி) இஸ்லாமைத் தழுவியது முஸ்லிம்களுக்குக் கண்ணியத்தையும், சிறப்பையும், மகிழ்ச்சியையும் ஏற்படுத்தியது.

உமர் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: “நான் இஸ்லாமைத் தழுவியபோது மக்காவாசிகளில் நபி (ஸல்) அவர்களுக்கு மிகக் கடுமையான எதிரி யார்? என்று யோசித்தேன். அபூ ஜஹ்ல்தான் அந்த எதிரி என்று கூறிக்கொண்டு நான் அவனிடம் வந்து அவனது வீட்டுக் கதவைத் தட்டினேன். என்னைப் பார்த்த அவன் “வருக! வருக! நீங்கள் வந்ததற்குரிய காரணம் என்ன?” என்று வினவினான். “நான் அல்லாஹ்வையும் அவனது தூதர் முஹம்மது (ஸல்) அவர்களையும் நம்பிக்கை கொண்டேன். அவர் கொண்டு வந்த மார்க்கத்தை உண்மை என்று நம்புகிறேன்” என்று கூறினேன். அதற்கவன் “அல்லாஹ் உன்னை கேவலப்படுத்துவானாக! நீ கொண்டு வந்ததையும் கேவப்படுத்துவானாக!” என்று கூறி என் முகத்தில் கதவை அறைந்து சாத்தி விட்டான்.” (இப்னு ஹிஷாம்)

உமர் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: அக்காலத்தில் ஒருவர் முஸ்லிமாகிவிட்டார் என்று தெரியவந்தால் அனைவரும் அவரைப் பிடித்து அடிப்பார்கள்; சண்டை செய்வார்கள். நானும் முஸ்லிமாகி எனது தாய்மாமா “ஆஸி இப்னு ஹாஷிமிடம்’ வந்து அதைக் கூறியவுடன் அவர் என்னை ஒன்றும் செய்யாமல் வீட்டுக்குள் நுழைந்து கொண்டார். அவ்வாறே குறைஷிப் பெரியோர்களில் ஒரு முக்கியமானவரிடம் சென்று கூறினேன். அவரும் என்னை ஒன்றும் செய்யாமல் வீட்டுக்குள் நுழைந்து கொண்டார்.

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கிறார்கள்: உமர் (ரழி) இஸ்லாமைத் தழுவிய செய்தி குறைஷிகள் எவருக்கும் தெரியவில்லை. இதனால், செய்திகளை மக்களிடத்தில் மிக அதிகம் பரப்புபவர் யார்? என்று உமர் (ரழி) விசாரித்தார். அதற்கு ஜமீல் இப்னு முஅம்மர் அல் ஜூம என்று பதில் கூறப்பட்டவுடன் அவரிடம் சென்றார்கள். நானும் உடன் இருந்தேன். அப்போது எனக்கு பார்ப்பதையும், கேட்பதையும் நன்கு புரிந்து கொள்ளக்கூடிய வயதுதான். உமர் (ரழி) அவரிடம் சென்று “ஓ ஜமீல்! நான் முஸ்லிமாகி விட்டேன்” என்று கூறியவுடன், அவர் மறுபேச்சு பேசாமல் நேராகப் பள்ளிக்குச் சென்று உரத்த குரலில் “ஓ குறைஷிகளே! கத்தாபின் மகன் மதம் மாறிவிட்டான்” என்று கத்தினான். அவனுக்கு பின்னால் உமர் (ரழி) நின்றுகொண்டு “இவன் பொய் கூறுகிறான். நான் மதம் மாறவில்லை. மாறாக முஸ்லிமாகி விட்டேன்! அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டேன்! அவனது தூதரை உண்மை என்று மெய்ப்பித்தேன்” என்று கூறினார்கள். இதைக் கேட்ட மக்கள் ஒன்று கூடி

உமரின் மீது பாயத் தொடங்கினார்கள். அவர்கள் உமரிடம் சண்டையிட உமரும் அவர்களிடம் சண்டையிட்டார். சூரிய வெப்பம் அதிகரித்தபோது களைத்துவிட்ட உமர் (ரழி) கீழே உட்கார்ந்து விட்டார். மக்கள் அவரைச் சுற்றி நின்று கொண்டார்கள். உங்களுக்கு என்ன விருப்பமோ! அதை செய்து கொள்ளுங்கள். அல்லாஹ்வின் சத்தியமாக கூறுகிறேன். நாங்கள் குறைந்தது 300 நபர்களாக பெருகிவிட்டால் ஒன்று மக்கா(வின் ஆதிக்கம்) உங்களுக்கு அல்லது எங்களுக்காகி விடும்'' என்று கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

இதற்குப் பிறகு உமரை கொலை செய்யக் கருதி இணைவைப்பவர்கள் உமரின் வீட்டுக்கு படையெடுத்தனர். உமர் (ரழி) வீட்டில் பயந்த நிலையில் இருந்தபோது அபூ அம்ர் ஆஸ் இப்னு வாயில் என்பவர் வந்தார். அவர் யமன் நாட்டு போர்வையும் கை ஓரம் பட்டினால் அலங்கரிக்கப்பட்ட சட்டையும் அணிந்திருந்தார். அறியாமை காலத்தில் அவரது கிளையார்களான பனூ ஸஹ்ம் எங்களுடைய நட்புக்குரிய கிளையார்களாக இருந்தார்கள். அவர் உமரிடம் ''உனக்கு என்ன நேர்ந்தது?'' என்று வினவினார். உமர் (ரழி) ''நான் முஸ்லிமானதற்காக என்னை உமது கூட்டம் கொலை செய்ய முனைகிறார்கள்'' என்று கூறினார். அதற்கு அவர் ''அப்படி ஒருக்காலும் நடக்காது'' என்று கூறினார். அவர் இந்தச் சொல்லை கூறியதற்கு பிறகு உமர் நிம்மதியடைந்தார். இதற்கு பிறகு ஆஸ் வெளியேறி வந்து பார்த்தபோது அங்கு மக்களின் பெரும் கூட்டம் ஒன்று இருந்தது. அவர்களைக் கண்ட ஆஸ் ''எங்கே வந்தீர்கள்?'' என்று கேட்டதற்கு ''இதோ கத்தாபின் மகன் மதம் மாறிவிட்டார். அவரிடம்தான் வந்துள்ளோம்'' என்று கூறினார்கள். அதற்கு ஆஸ் ''அவரை ஒருக்காலும் நீங்கள் நெருங்க முடியாது'' என்று கூறவே அனைவரும் திரும்பிச் சென்றுவிட்டனர். (ஸஹீஹுல் புகாரி)

இதுவரை கூறிய நிகழ்ச்சிகள் இணைவைப்பவர்களைக் கவனித்துக் கூறப்பட்டது. முஸ்லிம்களை கவனித்துப் பார்க்கும்போது உமர் (ரழி) இஸ்லாமைத் தழுவியது வித்தியாசமான ஒன்றாகவே இருந்தது. இதைப்பற்றி இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்:

உமரிடம் ''உங்களுக்கு ''ஃபாரூக்' என்ற பெயர் வரக் காரணம் என்ன?'' என்று கேட்டேன். அதற்கவர் ''எனக்கு மூன்று நாட்களுக்கு முன்னதாக ஹம்ஜா (ரழி) முஸ்லிமானார். பிறகு நான் முஸ்லிமானேன்'' என்று தான் முஸ்லிமான சம்பவத்தைக் கூறினார்கள். அதன் இறுதியில் அவர்கள் கூறியதாவது: நான் முஸ்லிமானபோது ''அல்லாஹ்வின் தூதரே! நாம் இறந்தாலும் உயிர் வாழ்ந்தாலும் உண்மையில்தானே இருக்கிறோம்'' என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் ''ஆம்! எனது உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக! நீங்கள் இறந்தாலும் உயிர் வாழ்ந்தாலும் உண்மையில்தான் இருக்கிறீர்கள்'' என்று கூறினார்கள். அதற்கு நான் ''அப்போது ஏன் மறைவாக செயல்பட வேண்டும். உங்களைச் சத்திய மார்க்கத்தைக் கொண்டு அனுப்பிய இறைவனின் மீது ஆணையாக! நாம் வெளிப்படையாக சத்தியத்தைக் கூறியே ஆக வேண்டும்'' என்று கூறி முஸ்லிம்களை இரண்டு அணிகளாக ஆக்கி, ஓர் அணியில் நானும் மற்றொரு அணியில் ஹம்ஜாவும் இருந்துகொண்டு நபி (ஸல்) அவர்களை இரு அணிகளுக்கு நடுவில் ஆக்கிக் கொண்டோம். திருகையிலிருந்து மாவுத் தூள்கள் பறப்பது போன்று எங்களது அணிகளில் இருந்து புழுதிகள் பறந்தன. நாங்கள் பள்ளிக்குள் நுழைந்தவுடன் என்னையும் ஹம்ஜாவையும் பார்த்த குறைஷிகளுக்கு இதுவரை ஏற்பட்டிராத கைசேதமும் துக்கமும் ஏற்பட்டது. அன்றுதான் நபி (ஸல்) அவர்கள் எனக்கு ''அல் ஃபாரூக்''' எனப் பெயரிட்டார்கள். (தாரீக் உமர்)

உமர் (ரழி) முஸ்லிமாகும் வரை நாங்கள் கஅபாவுக்கு அருகில் தொழக்கூட முடியாதவர்களாகவே இருந்தோம்'' என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரழி) கூறுகிறார்கள். (முக்தஸருஸ்ஸீரா)

‘‘உமர் (ரழி) இஸ்லாமைத் தழுவியபோதுதான் இஸ்லாம் வெளி உலகுக்குத் தெரியவந்தது. பகிரங்கமாக இஸ்லாமிய அழைப்பு விடப்பட்டது. கஅபாவைச் சுற்றி கூட்டமாக நாங்கள் அமர்ந்தோம். மேலும், எங்களுக்கு கஅபாவை தவாஃப் செய்ய முடிந்தது. எங்களிடம் கடுமையாக நடந்து கொள்பவர்களிடம் அவர்கள் செய்யும் கொடுமைகளில் சிலவற்றுக்காவது நாங்கள் பதிலடி கொடுத்தோம்’’ என்று ஸுஹைப் இப்னு ஸினான் (ரழி) கூறுகிறார்கள்.(தாரீக் உமர்)

‘‘உமர் (ரழி) முஸ்லிமானதற்கு பிறகே நாங்கள் பலமிக்கவர்களாக ஆனோம்’’ என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரழி) கூறுகிறார்கள். (ஸஹீஹுல் புகாரி)

### நபியவர்களுக்கு முன் உத்பா

ஹம்ஜா, உமர் (ரழி) ஆகிய இரு வீரர்களும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டதற்குப் பிறகு இணைவைப்பவர்கள் முஸ்லிம்களை வேதனை செய்வதிலிருந்து சற்று பின்வாங்கினர். நபி (ஸல்) அவர்களுடனும் முஸ்லிம்களுடனும் உண்டான தங்களது நடவடிக்கைகளை மாற்றத் தொடங்கினர். அவர்களுடன் பேச்சுவார்த்தைகள் நடத்துவதை விரும்பி முஸ்லிம்களுக்கு ஆசாபாசங்களையும் ஆசைகளையும் காட்டினர். அல்லாஹ்வின் மார்க்கத்திற்கும், அழைப்புப் பணிக்கும் முன்னால் உலகமனைத்தையும் கொட்டிக் கொடுத்தாலும் அது முஃமின்களுக்கு கொசுவின் இறக்கை அளவிற்குக் கூட சமமாகாது என்பது இந்த அறிவீனர்களுக்கு எங்கே தெரியப்போகிறது. ஆகவே, இவர்கள் தங்களது முயற்சியில் படுதோல்வி கண்டனர்.

ஹம்ஜாவும் (ரழி) இஸ்லாமைத் தழுவி, நாளுக்குநாள் முஸ்லிம்களின் எண்ணிக்கை அதிகமாகிய சமயத்தில் நடந்த ஒரு சம்பவத்தை இப்போது நாம் பார்ப்போம்: ஒரு சமயம் நபி (ஸல்) அவர்கள் பள்ளியில் தனியாக அமர்ந்திருந்தார்கள். உத்பா இப்னு ரபீஆ குறைஷிகளிடம் ‘‘குறைஷிகளே! நான் முஹம்மதிடம் சென்று பேச்சுவார்த்தை நடத்தி சிலவற்றை அவருக்குக் கூறுகிறேன். அவற்றை அவர் ஏற்றுக்கொண்டால் நாம் அவருக்கு அவற்றைக் கொடுத்து விடுவோம். அவர் நம்மைவிட்டு விலகிக் கொள்ளலாம்’’ என்று கூறினான். அப்போது குறைஷிகள் ‘‘அப்படியே ஆகட்டும் அபுல் வலீதே! நீ சென்று அவரிடம் பேசிவா’’ என்றனர்.

உத்பா, நபி (ஸல்) அவர்களிடம் சென்று ‘‘எனது சகோதரனின் மகனே! நீ எங்களில் குடும்பத்தாலும் வமிசத்தாலும் கண்ணியமிக்கவர். ஆனால், நீ உன் சமுதாயத்தவரிடம் ஆபத்தான ஒரு மார்க்கத்தை கொண்டு வந்திருக்கிறாய்! அதன் மூலம் உமது சமுதாயத்தவன் ஒற்றுமையை குலைத்து விட்டாய்! அறிஞர்களை முட்டாளாக்கி விட்டாய்! அவர்களின் சிலைகளையும், மார்க்கத்தையும் குறை கூறிவிட்டாய்! முன் சென்ற உன் முன்னோரை காஃபிர் (நிராகரித்தவர்) என்று கூறிவிட்டாய்! நான் உனக்கு முன்பு சில விஷயங்களை எடுத்து வைக்கிறேன். அதை நன்கு யோசித்து ஒரு முடிவைச் சொல். அதில் ஏதாவதொன்று உனக்கு விருப்பமானதாக இருக்கலாம்’’ என நயமாக பேசினான்.

இதனைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் ‘‘அபுல் வலீதே! சொல்! நான் கேட்கிறேன்’’ என்றார்கள். அவன் ‘‘எனது சகோதரனின் மகனே! நீ கொண்டு வந்த மார்க்கத்தின் மூலம் பொருள் சேகரிப்பதை விரும்பி, நீ எங்களில் மிகப் பெரியசெல்வந்தனாக வேண்டும் என்ற ஆசை இருப்பின், நாங்கள் எங்கள் செல்வங்களைச் சேர்த்து உன்னிடம் கொடுத்து விடுகிறோம். இல்லை உனக்கு ஆட்சி வேண்டுமென்றால் உன்னை எங்கள் அரசராக ஏற்றுக் கொள்கிறோம். அல்லது உனக்கு ஏதேனும் ஜின்களின்’’ தொல்லை இருந்து அதை உன்னால் தடுக்க முடியவில்லையென்றால், உன்னை நாங்கள் குணப்படுத்துவதற்காக எங்களின் செல்வங்கள் அனைத்தையும் செலவு செய்து உனக்கு நாங்கள் வைத்தியம்

பார்க்கின்றோம். ஏனெனில், சில நேரங்களில் ஜின்களின் சேட்டை மிகைத்து வைத்தியம் பார்க்கும் அவசியம் ஏற்படலாம்'' என்று கூறினான்.

உத்பா அவனது பேச்சை முடித்த பிறகு "அபுல் வலீதே! நீ உனது பேச்சை முடித்துக் கொண்டாயா?'' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்க அவன் "ஆம்!'' என்றான். "இப்போது நான் சொல்வதைக் கேள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூற "அவ்வாறே செய்கிறேன்'' என்று அவன் பதிலளித்தான். பிறகு நபி (ஸல்) அவர்கள் "பிஸ்மில்லார்ரஹ்மானிர்ரஹீம்' என்று ஆரம்பித்து அத்தியாயம் ஃபுஸ்ஸிலத்தை ஓதிக் காட்டினார்கள். முதுகுக்குப்பின் தன்னுடைய கைகளை ஊன்றி சாய்ந்து உட்கார்ந்து கொண்டு நபி (ஸல்) அவர்கள் ஓதுவதை மிகக் கவனமாகக் கேட்டான். பிறகு ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதி ஸஜ்தா செய்து முடித்தார்கள். பின்னர் "அபுல் வலீதே! நீ செவியேற்க வேண்டியதையெல்லாம் செவியேற்று விட்டாய். நீயே இப்பொழுது முடிவு செய்துகொள்!'' என்று மொழிந்தார்கள்.

அதற்குப் பிறகு உத்பா அவனது நண்பர்களிடம் திரும்பி வந்தபோது அவர்கள் தங்களுக்குள் "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அபுல் வலீத் முகம் மாறியவனாக வந்திருக்கின்றான்'' என்று பேசிக் கொண்டனர். உத்பா வந்தவுடன் "நீ என்ன செய்தியை கொண்டு வந்திருக்கின்றாய்'' என வினவினர். "இதுவரை கேட்டிராத பேச்சையல்லவா நான் கேட்டேன்! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அது கவிதையும் அல்ல! சூனியமும் அல்ல! ஜோசியமும் அல்ல! குறைஷிகளே! நான் சொல்வதைக் கேளுங்கள். இவரை விட்டு ஒதுங்கி விடுங்கள். இவருக்கும் இவரது பணிக்குமிடையில் குறுக்கிடாதீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவடமிருந்து நான் கேட்டு வந்த பேச்சுக்கு மகத்தான ஆற்றல் இருக்கிறது. மற்ற அரபியர்கள் அவரை அழித்துவிட்டால் அதுவே நமக்குப் போதும். நமது நோக்கமும் அதுவே! மாறாக, மற்ற அரபுகளை இவர் வெற்றி கொண்டால் அவருக்குக் கிடைக்கும் ஆட்சி உங்களுடைய ஆட்சியே! அவருக்குக் கிடைக்கும் கண்ணியம் உங்களுடைய கண்ணியமே! அவர் மூலமாக கிடைக்கும் அனைத்து பாக்கியங்களுக்கும் நீங்களும் முழு உரிமை பெற்றவர்கள்'' என்று கூறினான். இதனைக் கேட்ட அவர்கள் "அபுல் வலீதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் தன்னுடைய நாவன்மையால் உன்னை வசியப்படுத்தி விட்டார்'' என்றனர். "அவரைப் பற்றி எனது கருத்து இதுதான். இனி உங்களுக்கு எப்படி தோன்றுகிறதோ அப்படி நீங்கள் நடந்து கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டான். (இப்னு ஹிஷாம்)

மற்றும் சில அறிவிப்புகளில் வருவதாவது: நபி (ஸல்) அவர்கள் 13ம் வசனத்தை ஓதியபோது "முஹம்மதே போதும்! போதும்!! என்று கூறி தனது கையை நபி (ஸல்) அவர்களின் வாயின் மீது வைத்து, இரத்த உறவின் பொருட்டால் நிறுத்திக் கொள்ளுங்கள்'' என்று கூறினான். அதற்குக் காரணம், அல்லாஹ்வின் எச்சரிக்கை உண்மையில் நிகழ்ந்துவிடும் என்று அவன் பயந்ததுதான். பிறகு எழுந்து சென்று தனது கூட்டத்தாரிடம் இதற்கு முன் கூறப்பட்டது போன்று செய்திகளை கூறினான். (இப்னு கஸீர்)

### பேரம் பேசும் தலைவர்கள்!

உத்பாவிற்கு நபி (ஸல்) அவர்கள் கொடுத்த பதிலால் குறைஷிகள் முற்றிலும் நிராசை அடைந்து விடவில்லை. ஏனெனில், உத்பாவிற்கு நபி (ஸல்) அவர்கள் சில வசனங்களை ஓதிக் காட்டினார்கள். அது கோரிக்கையை வெளிப்படையாக ஏற்றுக்கொள்வது அல்லது மறுப்பதாக ஆகமுடியாது. எனவே, மிகுந்த ஆராய்ச்சியுடனும் சிந்தனையுடனும் பிரச்சனையின் பல கோணங்களை அலசியப் பின், ஆலோசனை செய்வதற்காக சூரியன் மறைந்ததும் கஅபாவின் பின்புறம் குறைஷித் தலைவர்கள் ஒன்று கூடி நபி (ஸல்) அவர்களை அழைத்து வரச் செய்தனர். ஏதோ நன்மையை இவர்கள் நாடிவிட்டார்கள் என்ற பேராவலில் நபி (ஸல்) அவர்கள் விரைந்து வந்து அவர்களருகில் அமர்ந்தபோது உத்பா கூறியதையே குறைஷித் தலைவர்கள் கூறினர். அதாவது உத்பா மட்டும் கூறியதால் நபி

(ஸல்) அவர்கள் இதை நம்பவில்லை. நாம் அனைவரும் சேர்ந்து கூறினால் நம்மை நம்பி ஏதாவது ஒன்றை ஏற்றுக்கொள்வார் என்று அவர்கள் எண்ணினார்கள் போலும்!

நபி (ஸஸ்) அவர்கள் அந்த குறைஷிகளுக்குக் கூறிய பதிலாவது: "நீங்கள் கூறுவது எதுவும் என்னிடமில்லை. உங்களின் பொருளை அல்லது உங்களிடம் சிறப்பை அல்லது உங்கள் மீது ஆட்சி செய்வதைத் தேடி நான் இம்மார்க்கத்தை கொண்டு வரவில்லை. எனினும், அல்லாஹ் என்னை உங்களிடம் தூதராக அனுப்பி என்மீது ஒரு வேதத்தையும் இறக்கியிருக்கின்றான். உங்களுக்கு நற்செய்தி சொல்பவராகவும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவும் நான் இருக்க வேண்டும் என எனக்குக் கட்டளையிட்டிருக்கிறான். எனது இறைவனின் தூதுத்துவத்தை நான் உங்களுக்கு முன் வைத்துவிட்டேன். உங்களுக்கு நல்லுபதேசம் செய்துவிட்டேன்; நான் உங்களிடம் கொண்டு வந்த மார்க்கத்தை நீங்கள் என்னிடமிருந்து ஏற்றுக் கொண்டால் அது உங்களுக்கு ஈருலக பாக்கியமாகும். நீங்கள் அதை மறுத்தால் அல்லாஹ் எனக்கும் உங்களுக்கும் இடையில் தீர்ப்பளிக்கும் வரை அல்லாஹ்வின் கட்டளைக்காக நான் பொறுத்திருப்பேன்."

இத்திட்டம் நிறைவேறாததால் மற்றொரு திட்டத்திற்குச் சென்றனர். அதாவது "நீங்கள் உங்களது இறைவனிடம் கூறி இம்மலைகளை இடம்பெயரச் செய்ய வேண்டும்; இவ்வூர்களை செழிப்பாக்க வேண்டும்; அவற்றின் நதிகளை ஓடவைக்க வேண்டும்; இறந்துவிட்ட முன்னோர்களைக் குறிப்பாக, குஸை இப்னு கிலாஃபை உயிர்ப்பிக்க வேண்டும்; மரணித்தவர்கள் எழுந்து நீங்கள் கூறுவது உண்மை என்று கூறினால் நாங்கள் உங்கள் கூற்றை நம்பிக்கைக் கொள்வோம்" என்று கூறினார்கள். அதற்கும் நபி (ஸல்) அவர்கள் முன் கூறிய பதிலையே கூறினார்கள்.

மற்றொரு திட்டத்தையும் முன் வைத்தனர். "அதாவது நீங்கள் உங்களைக் காப்பதற்கு உங்களுடைய இறைவனிடம் ஒரு மலக்கை (வானவரை) அனுப்பும்படி கோருங்கள். நாங்கள் அவருடன் பேசித் தெரிந்துகொள்வோம். உங்களுக்காகப் பல தோட்டங்களையும், மாட மாளிகைகளையும் தங்கம், வெள்ளியினாலான கஜானாக்களையும் அருளும்படி கோருங்கள்" என்றனர். இதற்கும் நபி (ஸல்) முன் கூறிய பதிலையே கூறினார்கள்.

அடுத்து மற்றொரு திட்டத்திற்கு சென்றனர். "அதாவது எங்களுக்கு வேதனையை இறக்குங்கள்; வானத்தை உடைத்து எங்கள் மீது போடுங்கள்; நீங்கள் எச்சரிப்பவற்றை இப்போதே எங்களுக்குக் கொண்டு வாருங்கள்" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அது அல்லாஹ்வின் நாட்டம். அவன் நாடினால் அதைச் செய்வான்" என்று பதிலளித்தார்கள். அதற்கு அந்த இணைவைப்பவர்கள் "நாங்கள் உங்களுடன் உட்கார்ந்து உங்களிடம் பல கேள்விகளைக் கேட்போம்; பல கோரிக்கைகளை விடுப்போம் என்பது உங்களது இறைவனுக்குத் தெரியாதா? நீங்கள் எங்களுக்கு பதில் சொல்வதற்குத் தேவையானதை உங்களுக்கு இறைவன் கற்றுத் தரவில்லையா? நாங்கள் ஏற்றுக் கொள்ளவில்லையெனில் அவன் எங்களிடம் எப்படி நடந்து கொள்வான் என்பதை உங்களுக்குச் சொல்லவில்லையா?" என்று கேட்டனர்.

இறுதியாக, நபி (ஸல்) அவர்களைக் கடுமையாக எச்சரித்தனர். "அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாங்கள் உங்களை அழிக்கும் வரை அல்லது நீங்கள் எங்களை அழிக்கும்வரை நீங்கள் எங்களுக்கு இழைத்த அநீதத்திற்காக நாங்கள் உங்களை சும்மா விடமாட்டோம்" என்றார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்கள் அங்கிருந்து எழுந்து தனது குடும்பத்தினர்களிடம் வந்தார்கள். தான் விரும்பியபடி தமது சமூகத்தினர் இஸ்லாமை ஏற்காததால் நபி (ஸல்) அவர்கள் கவலையடைந்தார்கள்.(இப்னு ஹிஷாம்)

**அபூஜஹ்லின் கொலை முயற்சி**

கூட்டத்திலிருந்து நபி (ஸல்) அவர்கள் எழுந்து சென்றவுடன் அபூஜஹ்ல் அகந்தையுடன் ‘‘குறைஷிக் கூட்டமே! நமது மார்க்கத்தை இகழ்வது நமது முன்னோர்களை ஏசுவது நம்முடைய அறிஞர்களை முட்டாளாக்குவது நம்முடைய சிலைகளைத் திட்டுவது - இவற்றைத் தவிர வேறெதனையும் செய்ய மாட்டேன் என்று முஹம்மது கூறிவிட்டார். ஆகவே, அவர் தொழுகையில் ஸஜ்தா செய்யும்போது மிகப்பெரிய ஒரு கல்லால் அவர் தலையை நசுக்குவேன் என்று அல்லாஹ்விடம் நான் உடன்படிக்கை செய்கிறேன். அவ்வாறு செய்தபின் நீங்கள் என்னை அவரது குடும்பத்தாரிடம் ஒப்படைத்தாலும் சரி அல்லது அவர்களிடமிருந்து என்னை காப்பாற்றினாலும் சரி. அப்து மனாஃப் குடும்பத்தினர் தாங்கள் விரும்பியதைச் செய்து கொள்ளட்டும்’’ என்றான். அதற்கு அக்கூட்டத்தினர் ‘‘ஒருக்காலும் நாம் உம்மை கைவிட்டு விட மாட்டோம்; நீ விரும்பியபடியே செய்!’’ என்றனர்.

அன்று காலையில் அபூஜஹ்ல் தான் கூறியதைப் போன்று ஒரு கல்லுடன் நபி (ஸல்) அவர்களின் வருகைக்காக எதிர்பார்த்து அமர்ந்திருந்தான். வழக்கம்போல் நபி (ஸல்) அவர்கள் காலையில் வந்து தொழ நின்றார்கள். குறைஷிகள் அபூஜஹ்ல் செய்வதை வேடிக்கை பார்க்க தங்களது சபைகளில் வந்து அமர்ந்து கொண்டனர். நபி (ஸல்) அவர்கள் ஸஜ்தா செய்தபோது அபூஜஹ்ல் கல்லை சுமந்தவனாக நபியவர்களை நோக்கிச் சென்றான். நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் வந்ததும் பயந்து நிறம்மாறி திடுக்கிட்டவனாக திரும்பினான். அவனது இரு கைகளும் கல்லின்மீது ஒட்டிக் கொண்டன. வெகு சிரமத்துடன் கல்லை கையிலிருந்து வீசினான். அதைப் பார்த்த குறைஷிகள் ஒரே குரலில் ‘‘அபுல் ஹிகமே! என்ன நேர்ந்தது?’’ என்று விசாரித்தனர். அதற்கு ‘‘நான் உங்களுக்கு நேற்று கூறியதை நிறைவேற்றுவதற்கு அவருக்கு அருகில் சென்றபோது மிகப்பெரிய ஆண் வாலிப ஒட்டகம் ஒன்று எனக்குத் தென்பட்டது. அதனுடைய தலையைப் போல, அதனுடைய கோரைப் பற்களைப் போல, வேறெந்த ஒட்டகத்தையும் நான் பார்க்கவில்லை. அது என்னைக் கடிக்க வந்தது’’ என்றான்.

பிறகு நபி (ஸல்) அவர்கள் தன் தோழர்களிடம், ‘‘அப்படித் தோற்றமளித்தவர் வானவர் ஜிப்ரீல் (அலை) ஆவார். அவன் நெருங்கியிருந்தால் அவர் அவனை அழித்திருப்பார்’’ என்று கூறினார்கள்.

**சமரச முயற்சி**

குறைஷிகள் நபி (ஸல்) அவர்களுக்கு முதலில் உலக ஆசை காட்டினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் மசியாததால் அடுத்து நபியவர்களை எச்சரித்தனர், அச்சுறுத்தினர். அதற்கும் நபியவர்கள் அஞ்சாததால் குறைஷிகள் மாற்று வழியைத் தேடினர். நபி (ஸல்) அவர்கள் அசத்தியத்தில் இருக்கிறார்கள் என அவர்களால் உறுதியாகக் கூறமுடியவில்லை. அதாவது, நபி (ஸல்) அவர்களுடைய மார்க்கம் உண்மையானதா? அல்லது பொய்யானதா? என்று பெரும் சந்தேகத்தில் ஆழ்ந்திருந்தனர்.

நிச்சயமாக இதில் பெரும் சந்தேகத்தில்தான் அவர்கள் ஆழ்ந்து கிடக்கின்றனர். (அல்குர்ஆன் 42:14)

என்று அல்லாஹ் அவர்களைப்பற்றி கூறியதுபோலவே அவர்கள் இருந்தனர்.

அடுத்த கட்ட முயற்சியாக, மார்க்க விஷயங்களில் கொஞ்சம் இவர்கள் விட்டுத் தருவது, கொஞ்சம் நபி (ஸல்) அவர்கள் விட்டுக் கொடுப்பது என்று நபி (ஸல்) அவர்களுடன் பேரம் பேசிப் பார்க்கலாம் என முடிவெடுத்தனர். இதன்மூலம் நபி (ஸல்) அழைப்பது உண்மையானதாக இருந்தால் தாங்களும் அந்த உண்மையை அடைந்தவர்களாகலாம் என்று கருதினர்.

நபி (ஸல்) அவர்கள் கஅபாவை சுற்றி வலம் வந்து கொண்டிருக்கும்போது அவர்களை அஸ்வத் இப்னு அல் முத்தலிப், வலீத் இப்னு முகீரா, உமைய்யா இப்னு கலஃப், ஆஸ் இப்னு வாயில் ஆகியோர் சந்தித்தனர். இவர்கள் தங்களது கோத்திரத்தில் மிக மதிப்பு மிக்கவர்களாக விளங்கினார்கள். இவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் "முஹம்மதே! வாருங்கள்! நீங்கள் வணங்குவதை நாங்களும் வணங்குகிறோம்; நாங்கள் வணங்குவதை நீங்களும் வணங்குங்கள்; நாம் அனைவரும் இவ்விஷயத்தில் கூட்டாக இருப்போம். அதாவது, நீங்கள் வணங்குவது நாங்கள் வணங்குவதை விட நன்மையாக இருப்பின் எங்களுக்கும் அதில் ஒரு பங்கு கிடைத்துவிடும். நாங்கள் வணங்குவது நீங்கள் வணங்குவதை விட நன்மையானதாக இருப்பின் அதில் உங்களுக்கும் ஒரு பங்கு கிடைத்துவிடும்" என்று கூறினார்கள்.

இவர்களின் கூற்றுக்கு மறுப்பாக,

(நபியே! நிராகரிக்கும் மக்காவாசிகளை நோக்கி,) நீங்கள் கூறுங்கள்: நிராகரிப்பவர்களே! நீங்கள் வணங்குபவைகளை நான் வணங்க மாட்டேன். நான் வணங்குபவனை நீங்கள் வணங்கவில்லை. (அவ்வாறே) இனியும் நீங்கள் வணங்குபவைகளை நான் வணங்குபவன் அல்லன். நான் வணங்குபவனை இனி நீங்களும் வணங்குபவர்கள் அல்லர். உங்களுடைய (செயலுக்குரிய) கூலி உங்களுக்கும்; என்னுடைய (செயலுக்குரிய) கூலி எனக்கும் (கிடைக்கும்). (அல்குர்ஆன் 109:1-6)

என்ற அத்தியாயம் அல் காஃபிரூனை முழுமையாக அல்லாஹு தஆலா இறக்கி வைத்தான். (இப்னு ஹிஷாம்)

இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்கள்: குறைஷிகள் நபி (ஸல்) அவர்களிடம் "நீங்கள் எங்கள் கடவுள்களைத் தொட்டால் போதும், நாங்கள் உங்களது கடவுளை முழுமையாக வணங்குகிறோம்" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ் அத்தியாயம் அல் காஃபிரூனை இறக்கி வைத்தான். (அத்துர்ருல் மன்ஸூர்)

தஃப்ஸீர் இப்னு ஜரீல் வருவதாவது: குறைஷிகள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து "எங்களது கடவுளை நீங்கள் ஓர் ஆண்டு வணங்குங்கள். உங்களது கடவுளை நாங்கள் ஓர் ஆண்டு வணங்குகிறோம்" என்று கூறினார்கள். அப்போது,

(நபியே!) நீங்கள் கூறுங்கள்: மூடர்களே! அல்லாஹ் அல்லாதவற்றையா வணங்கும்படி என்னை நீங்கள் ஏவுகின்றீர்கள்?

என்ற அத்தியாயம் ஜுமர் 64 வது வசனத்தை அல்லாஹ் இறக்கி வைத்தான்.

இவ்வாறான அற்பத்தனமிக்க பேச்சுவார்த்தைகளைத் தீர்க்கமான முடிவைக்கொண்டு அல்லாஹ் முறியடித்தும் குறைஷிகள் முழுமையாக நிராசையாகவில்லை. மாறாக, மேலும் சற்று இறங்கி நபி (ஸல்) அவர்களிடம் குர்ஆனின் போதனைகளில் சில மாற்றங்களைச் செய்யவேண்டும் என்ற அடுத்த கோரிக்கையை முன்வைத்தனர். இதோ இவர்களின் கூற்றைப்பற்றி அல்லாஹ் கூறுவதைப் பாருங்கள்:

இவர்களுக்கு நம்முடைய தெளிவான வசனங்கள் ஓதிக் காண்பிக்கப்பட்டால் (மறுமையில்) நம்மைச் சந்திப்பதை நம்பாத இவர்கள் (உங்களை நோக்கி,) "இது அல்லாத வேறொரு குர்ஆனை நீங்கள் கொண்டுவாருங்கள். அல்லது (எங்கள் இஷ்டப்படி) இதனை மாற்றிவிடுங்கள்" என்று கூறுகின்றனர்.

அவர்களின் இக்கூற்றுக்கு என்ன பதில் சொல்லவேண்டுமோ அதை அல்லாஹ் தொடர்ந்து கூறுகிறான்:

(அதற்கு அவர்களை நோக்கி "உங்கள் விருப்பத்திற்காக) நானே (என் இஷ்டப்படி) இதனை மாற்றிவிட எனக்கு எவ்வித சக்தியுமில்லை. வஹி மூலம் எனக்கு அறிவிக்கப்படுபவற்றைத் தவிர (வேறொன்றையும்) நான் பின்பற்றுவதற்கில்லை. என்னுடைய இறைவனுக்கு நான் மாறுசெய்தால் மகத்தான நாளுடைய வேதனைக்கு (ஆளாக வேண்டியதேற்படும் என்று) நிச்சயமாக நான் பயப்படுகிறேன்" என்று (நபியே!) நீங்கள் கூறுங்கள். (அல்குர்ஆன் 10:15)

மேலும், இவ்வாறு செய்வது எவ்வளவு ஆபத்தானது என்றும் அல்லாஹ் மிகத் தெளிவாக எச்சரிக்கை செய்தான்.

நாம் உங்களுக்கு வஹி மூலம் அறிவித்ததை நீங்கள் விட்டு (விட்டு) அது அல்லாததை நம்மீது நீங்கள் பொய்யாகக் கற்பனை செய்து கூறும்படி உங்களை அவர்கள் திருப்பிவிடவே இருந்தார்கள். (அவ்வாறு நீங்கள் செய்திருந்தால்) உங்களை அவர்கள் தங்கள் நண்பராகவும் எடுத்துக் கொண்டிருப்பார்கள். உங்களை நாம் உறுதியாக்கி வைக்காவிடில் நீங்கள் ஒரு சிறிதேனும் அவர்கள் பக்கம் சாய்ந்துவிடக் கூடுமாயிருந்தது. (அவ்வாறு நீங்கள் சாய்ந்திருந்தால்) அந்நேரத்தில் நீங்கள் உயிராக இருக்கும்போதும் நீங்கள் மரணித்த பின்னரும் இரு மடங்கு (வேதனையைச்) சுவைக்கும்படி நாம் செய்திருப்போம். அதன் பின்னர், நமக்கு எதிராக உங்களுக்கு உதவி செய்பவர்கள் ஒருவரையும் நீங்கள் காணமாட்டீர்கள்.(அல்குர்ஆன் 17:73-75)

**மறு ஆலோசனை**

எல்லா பேச்சுவார்த்தைகளிலும், பேரங்களிலும், அனுசரித்தலிலும் குறைஷிகள் தோல்வியடைந்து என்னசெய்வது என்று புரியாமல் திகைத்திருந்தபோது அவர்களில் ஒரு ஷைத்தான் "நழ்ர் இப்னு அல் ஹாரிஸ்' என்பவன் ஓர் ஆலோசனையைக் கூறினான். "குறைஷியர்களே! உங்களுக்கு ஏற்பட்டுள்ள பிரச்சனைக்கு எந்த ஒரு தீர்வையும் உங்களால் கொண்டுவர முடியவில்லை. முஹம்மது உங்களில் வாலிபராக இருந்தபோது உங்களின் அன்பிற்குரியவராகவும், பேச்சில் உங்களில் உண்மையாளராகவும், அமானிதத்தை அதிகம் பேணுபவராகவும் இருந்தார். ஆனால், அவர் முதிர்ச்சி அடைந்து இம்மார்க்கத்தை அவர் கொண்டு வந்தபோது நீங்கள் அவரை "சூனியக்காரர்" என்று கூறினீர்கள். ஆனால், அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் சூனியக்காரராக இருக்க முடியாது. சூனியக்காரர்களைப் பற்றியும் அவர்களின் ஊதுதல், முடிச்சுகளைப் பற்றியும் நாம் நன்கறிவோம். பிறகு அவரை "ஜோசியர்" என்று கூறினீர்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர் ஜோசியரும் அல்லர். ஏனெனில் ஜோசியக்காரர்களையும் அவர்களது பொய்யாகப் புனையப்பட்ட புளுகுகளையும் நாம் நன்கறிவோம். அடுத்து அவரை "கவிஞர்" என்பதாகக் கூறினீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் கவிஞரும் அல்லர். ஏனெனில், கவியையும் அதன் பல வகைகளையும் நாம் பார்த்திருக்கிறோம். நீங்கள் அவரை "பைத்தியக்காரர்" என்று கூறினீர்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர் பைத்தியக்காரரும் அல்லர். பைத்தியத்தை நாம் பார்த்திருக்கிறோம். ஆனால், இவருக்கு பைத்தியத்தின் எந்தக் குழப்பமும், ஊசலாட்டமும் இல்லை. குறைஷிகளே! உங்களது நிலையை நன்கு யோசித்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக, அல்லாஹ்வின் மீது ஆணையாக! உங்களுக்கு ஏதோ மிகப்பெரியசிக்கல் ஏற்பட்டிருக்கிறது" என்று அவன் கூறி முடித்தான்.

எல்லா எதிர்ப்புகளுக்கும், சவால்களுக்கும் அசைந்து கொடுக்காமல் நபி (ஸல்) அவர்கள் உறுதியாக இருந்தார்கள். அனைத்து ஆசாபாசங்களையும் தூக்கி எறிந்தார்கள். எந்நிலையிலும் தடுமாறவில்லை. மேலும், அவர்களிடம் உண்மை, ஒழுக்கம், பேணுதல், சிறந்த நற்பண்புகள் ஆழமாகக் குடிகொண்டிருந்தன. இதைக் கண்ட இணைவைப்பவர்களுக்கு முஹம்மது உண்மையில் தூதராக இருப்பாரோ? என்ற சந்தேகம் வலுத்தது. எனவே, யூதர்களுடன் தொடர்பு கொண்டு முஹம்மதைப் பற்றி உறுதியாக தெரிந்து கொள்ளலாம் என்று முடிவு செய்தனர். நழ்ர் இப்னு ஹாரிஸ் அவர்களுக்கு

ஏற்கனவே மேற்கூறியவாறு உபதேசம் செய்திருந்தான். அவனையே மற்ற ஒருவருடன் சேர்த்து மதீனாவில் உள்ள யூதர்களிடம் அனுப்ப முடிவு செய்தனர்.

நழ்ர் இப்னு ஹாரிஸ் மதீனா சென்று அங்குள்ள யூத அறிஞர்களைச் சந்தித்து நபி (ஸல்) அவர்கள் குறித்து விவாதித்தான். அவர்கள், நீங்கள் அவரிடம்

“1) முன்னொரு காலத்தில் வாழ்ந்த குறிப்பிட்ட வாலிபர்களைப் பற்றி ஏதாவது செய்தி தெரியுமா? ஏனெனில் அவர்களைப் பற்றி ஓர் ஆச்சரியமான செய்தி இருக்கிறது. அவர்கள் என்னவானார்கள்?

2) பூமியின் கிழக்கு மேற்கு பகுதிகளையெல்லாம் சுற்றி வந்த ஒருத்தரைப் பற்றிய செய்தி தெரியுமா?

3) ரூஹ் (உயிர்) என்றால் என்ன?

இந்த மூன்று கேள்விகளைக் கேளுங்கள். அவர் இவற்றுக்கு சரியான பதில் கூறினால் அவர் அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட (நபி) தூதராவார். அவ்வாறு கூறவில்லையெனில் அவர் தானாக கதை கட்டி பேசுபவரே என அறிந்துகொள்ளலாம்” என்றனர்.

நழ்ர் மக்காவிற்கு வந்து “குறைஷிகளே! உங்களுக்கும் முஹம்மதுக்கும் இடையிலுள்ள பிரச்சனைக்குச் சரியான தீர்வைக் கொண்டு வந்திருக்கிறோம்” என்று கூறி யூதர்கள் கூறியதை அவர்களுக்கு அறிவித்தான். குறைஷிகள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று அம்மூன்று கேள்விகளையும் கேட்டனர். அவர்கள் கேட்ட சில நாட்களுக்குப் பிறகு “கஹ்ஃப்’ என்ற அத்தியாயம் அருளப்பட்டது. அதில் குகைவாசிகளாகிய அவ்வாலிபர்களின் வரலாறும், பூமியை சுற்றி வந்த துல்கர்னைன் என்பவன் சரித்திரமும் தெளிவாக விவரிக்கப்பட்டது. ரூஹைப் பற்றிய பதில் குர்ஆனில் “இஸ்ரா’ என்ற அத்தியாயத்தில் இறங்கியது. இதைத் தொடர்ந்து குறைஷிகள் நபி (ஸல்) அவர்கள் “உண்மையாளரே, சத்தியத்தில் உள்ளவரே’ என்பதையும் தெளிவாக தெரிந்து கொண்டனர். ஆனாலும் அநியாயக்காரர்கள் ஏற்க மறுத்தனர். (இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) அவர்களின் அழைப்புப் பணிக்கு இணைவைப்பவர்கள் செய்த எதிர்ப்பின் ஒரு சிறு பகுதியே இதுவரை நாம் கூறியது. பல வகைகளில் முயன்றனர். படிப்படியாக பல வழிகளை இதுவல்லாமல் மாற்றிக் கொண்டே இருந்தனர். வன்மையை அடுத்து மென்மை, மென்மையை அடுத்து வன்மை் சர்ச்சையை அடுத்து சமரசம்; சமரசத்தை அடுத்து சர்ச்சை எச்சரித்தல், பிறகு ஆசையூட்டுதல்; ஆசையூட்டுதல், பிறகு எச்சரித்தல்; ஊளையிடுதல், பிறகு அடங்குதல்; தர்க்கித்தல், பிறகு நயமாக பேசுதல்; நபி (ஸல்) அவர்களை விட்டுக் கொடுக்க வேண்டுதல்; பிறகு தாங்களே விட்டுக் கொடுத்தல்; இவ்வாறு கொஞ்சம் முன்னேறுதல்; உடனே பின்வாங்குதல் என்று என்ன செய்வதென்றே புரியாமல் நிலை தடுமாறி நின்றனர். ஆனால், நபி (ஸல்) அவர்களின் வழியில் குறுக்கிடாமல் ஒதுங்கிக் கொள்வதும் அவர்களுக்குக் கசப்பாக இருந்தது. அவர்களின் நோக்கமே இஸ்லாமிய அழைப்பை அழிப்பதும் இறைநிராகரிப்பை வளர்ப்பதும்தான். பல வழிகளில் இவர்கள் முயன்றும் பல தந்திரங்களைக் கையாண்டும் அனைத்திலும் இவர்கள் தோல்வியையே கண்டனர். இறுதியாக, வாளெடுப்பதைத் தவிர அவர்களுக்கு முன் வேறுவழி தோன்றவில்லை. ஆயினும், வாளேந்துவதால் பிரிவினை அதிகமாகலாம்; உயிர்ப்பலிகள் ஏற்படலாம் என்பதால் என்ன செய்வதென்றே தெரியாமல் பெரும் குழப்பத்தில் தத்தளித்தனர்.

**அபூதாலிபின் முன்னெச்சரிக்கை**

குறைஷிகள் நபி (ஸல்) அவர்களைக் கொன்று விடுவதற்காக தங்களிடம் ஒப்படைக்கக் கோரிய அதே சமயத்தில் உக்பா, அபூஜஹ்ல், போன்றவர்களின் செயல்கள் மூலம் அந்த

எண்ணம் அவர்களிடம் உறுதியாக இருக்கிறது என்பதை அபூதாலிப் நன்கு உணர்ந்து கொண்டார். எனவே, ஹாஷிம் மற்றும் முத்தலிப் கிளையினர்களை ஒன்று சேர்த்து அவர்களிடம் நபி (ஸல்) அவர்களைப் பாதுகாக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். அவ்விரு கிளையிலுமுள்ள முஸ்லிம்கள் மற்றும் நிராகரிப்பவர்கள் என பாகுபாடின்றி அனைவரும் அதை ஏற்றுக் கொண்டனர். இதற்காக அனைவரும் கஅபாவில் ஒன்றுகூடி ஒப்பந்தம் செய்தனர். ஆனால், அபூதாலிபின் சகோதரன் அபூலஹப் இதற்கு உடன்படாமல் அவர்களை விட்டுப் பிரிந்து மற்ற குறைஷிகளுடன் சேர்ந்து கொண்டான். (இப்னு ஹிஷாம்)

## முழுமையாக ஒதுக்கி வைத்தல்

### தீய தீர்மானம்

மேற்கொண்ட அனைத்து முயற்சிகளும் தோற்றுப்போனதால் இணைவைப்பவர்களிடையே குழப்பம் மேன்மேலும் வலுத்தது. ஹாஷிம் கிளையாரும், முத்தலிப் கிளையாரும் நிலைமை எதுவாயினும் நபி (ஸல்) அவர்களைப் பாதுகாத்தே தீருவது என்பதில் உறுதியாக இருந்ததைக் கண்ட இணைவைப்பவர்கள் அனைவரும் "முஹஸ்ஸப்' என்ற பள்ளத்தாக்கிலுள்ள கினானா கிளையாரின் இடத்தில் ஒன்றுகூடி ஆலோசித்து, பல தீர்மானங்களைப் போட்டனர்.

அவையாவன: ஹாஷிம் மற்றும் முத்தலிப் கிளையாரிடம் திருமண உறவு, கொடுக்கல் வாங்கல், அவர்களுடன் அமர்வது, அவர்களுடன் பழகுவது, அவர்களது வீட்டுக்குச் செல்வது, அவர்களிடம் பேசுவது, அவர்களுக்குக் கருணை காட்டுவது, ஹாஷிம் கிளையார்களின் சமரச பேச்சை ஏற்பது போன்ற எந்த செயலும் செய்யக் கூடாது. முஹம்மதை அவர்கள் நம்மிடம் ஒப்படைக்கும் வரை நாம் இதைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று தீர்மானம் எழுதினர். இவ்வுடன்படிக்கையை "பகீழ் இப்னு ஆமிர் இப்னு ஹாஷிம்' என்பவன் எழுதினான். நபி (ஸல்) அவர்களின் சாபத்திற்கு ஆளான இவனது கை சூம்பிவிட்டது. (ஸஹீஹுல் புகாரி)

இந்த உடன்படிக்கை எழுதப்பட்டு கஅபாவில் தொங்க விடப்பட்டது. ஹாஷிம், முத்தலிபின் கிளையால் அபூலஹபைத் தவிர ஏனைய நிராகரிப்பவர்கள் மற்றும் முஸ்லிம்கள் என அனைவரும் "அபூதாலிப் கணவாயில்' ஒதுக்கி வைக்கப்பட்டனர். இது நபித்துவத்தின் ஏழாம் ஆண்டு முஹர்ரம் மாதம் தலைப்பிறையில் நடந்தது.

### "கணவாய் அபூதாலிபில்' மூன்று ஆண்டுகள்

இக்காலக்கட்டத்தில் அவர்களிடம் இருப்பிலிருந்த உணவுகளும், தானியங்களும் முடிந்து விட்டன. இணைவைப்பவர்கள் மக்காவுக்கு வரும் உணவுகளையெல்லாம் முந்திச் சென்று வாங்கிக் கொள்வார்கள். இவர்கள் உண்ணுவதற்கு ஏதுமின்றி இலைகளையும், தோல்களையும் சாப்பிடும் இக்கட்டுக்கு ஆளாயினர். பசியினால் பெண்களும், சிறுவர்களும் அழும் குரல்கள் கணவாய்க்கு வெளியிலும் கேட்கும். மிக இரகசியமாகவே தவிர எந்த உதவியும் அவர்களுக்குக் கிடைக்காது. மதிப்புமிக்க மாதங்களில்தான் தங்களின் தேவைகளுக்குரிய சாமான்களை வாங்கிக்கொள்ள முடிந்தது. மக்காவுக்கு வரும் வியாபாரக் கூட்டங்களிடமிருந்து மக்காவிற்கு வெளியில்தான் அவர்களால் பொருட்கள் வாங்க முடிந்தது. இருந்தும் இவர்களால் வாங்க முடியாத அளவிற்கு மக்காவாசிகள் அப்பொருட்களின் விலைகளை உயர்த்தினர்.

சில சமயம் ஹகீம் இப்னுஹிஸாம் தனது மாமி (தந்தையின் சகோதரி) கதீஜாவிற்காக கோதுமை மாவை எடுத்துச் செல்வார். ஒருமுறை அபூஜஹ்ல் வழிமறித்து, அவர் எடுத்துச்

செல்வதைத் தடுத்துக் கொண்டிருந்தான், அபூபுக்த தலையிட்டு அபூஜஹ்லிடமிருந்து அவரைக் காப்பாற்றினார்.

நபி (ஸல்) அவர்களின் மீது அபூதாலிபுக்கு எப்போதும் எதிரிகளைப் பற்றிய அச்சம் இருந்தது. அதற்காக நபி (ஸல்) அவர்களைத் தனது விரிப்பில் தூங்கச் சொல்வார். அனைவரும் தூங்கியதற்குப் பின், தனது பிள்ளைகள் அல்லது சகோதரர்கள் அல்லது தனது சிறிய, பெரியதந்தையின் பிள்ளைகள் ஆகியோல் யாரையாவது ஒருவரை நபியவர்களைப் படுக்க வைத்த தனது விரிப்பில் மாற்றி உறங்க வைத்துவிட்டு, நபி (ஸல்) அவர்களை வேறு விரிப்பில் படுக்கவைத்து விடுவார்கள். மக்கள் தூங்குவதற்கு முன் கொலைகாரர் யாராவது நபி (ஸல்) அவர்களைக் கண்காணித்தால், அவர்களைத் திசை திருப்புவதற்காக இவ்வாறு செய்வார்கள்.

இந்நிலையிலும் நபி (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் ஹஜ்ஜுடைய காலங்களில் வெளியே புறப்பட்டு, மக்களைச் சந்தித்து, அவர்களை இஸ்லாமின் பக்கம் அழைப்பார்கள். இந்நேரத்தில் அபூலஹப் செய்து வந்த செயல்கள் பற்றி முன்பே நாம் கூறியிருக்கின்றோம்.

**கிழிக்கப்பட்டது தீர்மானம்!**

இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் இப்படியே உருண்டோடின. குறைஷிகள் இந்த ஒப்பந்தத்தை எழுதினாலும் அவர்களில் சிலர் இந்த ஒப்பந்தத்தை ஆரம்பத்திலிருந்து வெறுத்தே வந்தனர். இவ்வாறு வெறுத்தவர்கள்தான் இப்பத்திரத்தை கிழித்தெறிய முயற்சி எடுத்தனர். இம்முயற்சி நபித்துவத்தின் பத்தாவது ஆண்டு முஹர்ரம் மாதத்தில் நடந்தேறியது.

ஹிஷாம் இப்னு அம்ர் என்பவர்தான் இதற்குக் காரணமாக இருந்தார். அவர் இரவில் மறைமுகமாக ஹாஷிம் கிளையாருக்கு உணவு வழங்கி வந்தார். ஒரு நாள் அவர் ஸுஹைர் இப்னு அபூ உமைய்யா மக்ஜூமீ என்பவரிடம் வந்தார். இவரது தாய் அப்துல் முத்தலிபின் மகள் ஆத்திகாவாகும். ஹிஷாம், “ஜுஹைரே! நீ சாப்பிடுகிறாய், குடிக்கிறாய். உனது தாய்மாமன்கள் எவ்வாறு கஷ்டத்திலிருக்கிறார்கள் என்பது உனக்கு நன்றாகத் தெரியும். இது உனக்கு சந்தோஷமாக இருக்கிறதா?” என்று கேட்டார். அதற்கு ஜுஹைர் “நான் ஒருவன் என்ன செய்ய?” என்று கூறினார். அதற்கு ஹிஷாம் “உனக்கு உதவ ஒருவர் இருக்கிறார்” என்று கூற, “யார் அவர்?” என்று வினவினார். “அது நான்தான்” என்று கூறினார். அதற்கு ஜுஹைர் “நீ மூன்றாவது ஒருவரைத் தேடு” என்று கூறினார்.

முத்இம் இப்னு அதீ என்பவரிடம் ஹிஷாம் சென்று அப்து மனாஃபின் மக்களான ஹாஷிம், முத்தலிப் இவ்விருவரின் குடும்ப உறவுகளை (இரத்த பந்தங்களை) நினைவூட்டி “இவர்களுக்கு அநியாயம் செய்யக் குறைஷிகளுக்கு நீ உடந்தையாக இருக்கிறாயே” என பழித்துக் கூறியவுடன் “நான் ஒருவனாக இருந்து என்னால் என்ன செய்ய முடியும்?” என்று கேட்டார். அதற்கு ஹிஷாம் “உன்னுடன் இரண்டாமவரும் இருக்கிறார்” என்று கூற, அதற்கு “அவர் யார்?” என்று கேட்டார். அதற்கு ஹிஷாம் “நான்தான்” என்று கூறினார். முத்இம் “மூன்றாவது ஒருவரும் நமக்கு வேண்டும்” என்று கூற, ஹிஷாம் “ஆம்! மூன்றாமவரும் இருக்கிறார். அவர்தான் ஜுஹைர் இப்னு அபூ உமைய்யா” என்று கூறினார். உடனே முத்இம் ஷாமிடம் “நான்காம் ஒருவரையும் தேடுங்கள்” என்றார்.

ஹிஷாம், அபுல் புக்தயிடம் வந்து முத்இமிடம் பேசியது போன்றே பேசவே “இதற்கு யாராவது உதவிக்கு இருக்கிறார்களா?” என்று அவர் வினவினார். அப்போது “ஹிஷாம் ஆம்! ஜுஹைர், முத்இம், நான் ஆகியோர் உம்முடன் இருக்கிறோம்” என்றார்.

ஹிஷாம், ஸம்ஆவிடம் வந்தார். அவருக்கும் ஹாஷிம் குடும்பத்திற்கும் உள்ள உறவுகளையும், உரிமைகளையும் பற்றி அவரிடம் கூறவே “நீர் அழைக்கும் இக்காரியத்தில்

வேறு யாராவது இருக்கிறார்களா?'' என்று கேட்க, ஹிஷாம் ''ஆம்!'' என்ற கூறி அனைவரது பெயர்களையும் கூறினார்.

இவர்கள் அனைவரும் ஹஜூனுக்கு அருகில் ஒன்றுகூடினர். பிறகு, ஒப்பந்தப் பத்திரத்தை கிழிக்க வேண்டும் என்று முடிவு செய்தபோது ''இதை நானே முதலில் செய்வேன். இதைப் பற்றி நான்தான் முதலில் பேசுவேன்'' என்றார் ஜுஹைர்.

காலையில் விடிந்தவுடன் அனைவரும் தங்களது சபைக்கு வந்தனர். ஜுஹைர் ஒரு முழு ஆடையை அணிந்து வந்திருந்தார். அவர் கஅபாவை ஏழு முறை வலம் வந்துவிட்டு மக்களை நோக்கி ''மக்காவாசிகளே! நாம் சாப்பிடுகிறோம். ஆடைகளை அணிந்து கொள்கிறோம். ஹாஷிமின் குடும்பமோ அழிந்து கொண்டிருக்கிறது. அவர்களிடம் யாரும் விற்பதும் கிடையாது, வாங்குவதும் கிடையாது. இது தகுமான செயலா? அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உறவை துண்டிக்கும்படியான, அநியாயமான, இந்த ஒப்பந்தப் பத்திரம் கிழித்தெறியப்படும் வரை நான் உட்கார மாட்டேன்'' என்று கூறினார். பள்ளியின் ஓரத்தில் அமர்ந்திருந்த அபூஜஹ்ல் ''நீ பொய்யுரைக்கிறாய். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அது கிழிக்கப்படாது'' என்றான். ஸம்ஆ, ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீதான் மிகப்பெரியபொய்யன். நீ இதை எழுதியபோதே அதில் எங்களுக்கு விருப்பமில்லை'' என்று கூறினார். அபுல் புக்த ''ஆம்! ஸம்ஆ உண்மையைத்தான் கூறுகிறார். அதில் எழுதப்பட்டிருக்கும் விஷயங்களும் எங்களுக்கு விருப்பமானதில்லை. அதை நாங்கள் ஏற்றுக் கொள்ளவுமில்லை'' என்று கூறினார். முத்இம், ''ஆம்! நீங்கள் இருவரும் உண்மையைத் தான் கூறுகிறீர்கள். இதைத் தவிர யார் என்ன கூறினாலும் அவர் பொய்யரே! இந்த ஒப்பந்தப் பத்திரத்திலிருந்தும் அதில் எழுதப்பட்டுள்ளவற்றிலிருந்தும் அல்லாஹ்வுக்காக நாங்கள் விலகிக் கொள்கிறோம்'' என்று கூறினார். ஷாமும் இதுபோன்றே கூறி முடித்தார். இவ்வாறு ஒருவர் பின் ஒருவராக கூறியதும் இதைக் கேட்டுக் கொண்டிருந்த அபூஜஹ்ல் ''இது இரவிலேயே பேசி முடிவு செய்யப்பட்டது. வேறு எங்கோ இதைப் பற்றி ஓர் ஆலோசனை நடந்திருக்கிறது'' என்று கூறினான். பள்ளியின் ஓரத்தில் அபூதாலிப் அமர்ந்து இக்காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அப்பத்திரத்தில் அல்லாஹ்வின் பெயரைத் தவிர அதில் எழுதப்பட்ட அனைத்தையும் கரையான் தின்று அழித்துவிட்டது. இதை அல்லாஹ் தனது நபி (ஸல்) அவர்களுக்கு அறிவித்திருந்தான். நபி (ஸல்) அவர்களும் முன் கூட்டியே அதை அபூதாலிபிடம் கூறியிருந்தார்கள். அபூதாலிப் குறைஷிகளிடம் ''எனது சகோதரனின் மகன் இப்படியெல்லாம் கூறியிருக்கிறார். அவர் பொய்யராக இருந்தால் அவருக்கும் உங்களுக்குமிடையில் நாங்கள் வழிவிட்டு விடுகிறோம். அவர் உண்மையாளராக இருந்தால் நீங்கள் எங்களுக்கு அநியாயம் செய்வதிலிருந்தும் எங்களது உறவுகளைத் துண்டிப்பதிலிருந்தும் விலகிட வேண்டும்'' என்று கூறினார். அதற்கவர்கள், ''நிச்சயமாக நீர் ஒரு நீதமான விஷயத்தை முன் வைத்தீர்'' என்று கூறினர்.

அபூஜஹ்லுக்கும் மற்ற கூட்டத்தார்களுக்குமிடையில் பேச்சுவார்த்தை முடிந்தபோது முத்இம் கஅபாவிற்குள் அதைக் கிழிப்பதற்காகச் சென்று பார்த்தபோது ''பிஸ்மிக்கல்லாஹும்ம' என்று ஆரம்பத்தில் எழுதப்பட்டிருந்ததையும், ''அல்லாஹ்' என்று எழுதப்பட்ட இடங்களையும் தவிர மற்ற அனைத்தையும் கரையான் அத்துவிட்டிருந்தது.

பிறகு முழுவதுமாக அப்பத்திரம் கிழித்தெறியப்பட்டது. நபி (ஸல்) அவர்களும் அவர்களுடன் இருந்தவர்களும் கணவாயிலிருந்து வெளியேறி வந்தனர். இணைவைப்பவர்கள் முஹம்மது (ஸல்) அவர்களின் நபித்துவத்தின் மிகப்பெரியஅத்தாட்சியைப் பார்த்தனர். ஆனால் அவர்களது இதயமோ...

அவர்கள் எந்த அத்தாட்சியைக் கண்டபோதிலும் (அதனைப்) புறக்கணித்து, “இது சகஜமான சூனியம் தான்” என்று கூறுகின்றனர். (அல்குர்ஆன் 54:2)

என்று அல்லாஹ் கூறியதைப் போன்றே இருந்தது. அதாவது, அல்லாஹ்வின் அத்தாட்சிகளைப் புறக்கணித்து இவர்கள் நிராகரிப்பைத்தான் அதிகமாக்கிக் கொண்டனர். (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆத்)

**குறைஷிகளின் கடைசிக் குழு**

தாங்கள் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த கணவாயிலிருந்து வெளியேறிய நபி (ஸல்) முன்னர் போலவே அழைப்புப் பணியைச் செய்து கொண்டிருந்தார்கள். குறைஷிகள் உறவுகளைத் துண்டிப்பதை விட்டுவிட்டாலும், முஸ்லிம்களுக்குத் தொந்தரவு தருவது, அல்லாஹ்வின் வழியை விட்டு மக்களைத் தடுப்பது என்ற தங்களது பழைய பாட்டையிலேயே நடந்து கொண்டிருந்தனர். அபூதாலிப் எண்பது வயதை கடந்தும் தன்னால் முடிந்த அளவு நபி (ஸல்) அவர்களை பாதுகாத்து வந்தார். கடினமான சோதனைகளால் குறிப்பாக, ஒதுக்கி வைக்கப்பட்ட காலத்தில் ஏற்பட்ட இன்னல்களால் மிகவும் வலுவிழந்து தளர்ந்திருந்தார். கணவாயிலிருந்து வெளியேறிய சில மாதங்களிலேயே கடினமான நோய்வாய்பட்டார்.

இதைக் கண்ட இணைவைப்பவர்கள், அபூதாலிபின் மரணத்திற்குப் பிறகு அவரது சகோதரன் மகனான முஹம்மது (ஸல்) அவர்களுக்கு ஊறு விளைவிப்பது தங்களுக்கு அரபிகளின் மத்தியில் கெட்ட பெயரை ஏற்படுத்திவிடும் என்று பயந்து தங்களுக்கு விருப்ப மில்லையெனினும் நபி (ஸல்) அவர்களின் வார்த்தைகளில் சிலவற்றை ஒப்புக்கொண்டு அபூதாலிபின் முன்னிலையில் நபி (ஸல்) அவர்களிடம் பேச்சுவார்த்தை நடத்தலாம் என்பதற்காக ஒரு குழுவை தயார் செய்தனர். அபூதாலிபிடம் வந்த இறுதி குழு இதுதான்.

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்கள்: அபூதாலிப் நோய்வாய்ப்பட்ட போது குறைஷிகள் தங்களுக்குள் இவ்வாறு பேசிக் கொண்டனர்: “ஹம்ஜா, உமர் இஸ்லாமைத் தழுவிவிட்டனர். முஹம்மதைப் பற்றி அனைத்து குறைஷி குலத்தவருக்கும் தெரிந்துவிட்டது. நாம் அபூதாலிபிடம் செல்வோம்; தனது தம்பி மகனை அவர் கட்டுப்படுத்தட்டும்; நம்மிடமும் அவருக்காக ஏதாவது ஒப்பந்தத்தை வாங்கிக் கொள்ளட்டும். இல்லையெனில், மக்கள் நமது கட்டுப்பாட்டுக்குக் கீழ் இல்லாமல் மீறி விடுவார்கள் என நாம் அஞ்சவேண்டியுள்ளது”

மற்றொரு அறிவிப்பில் வருவதாவது: இந்தக் கிழவர் இறந்த பின் அவருக்கு (முஹம்மதுக்கு) ஏதாவது ஆகிவிட்டால் அரபுகள் “முஹம்மதுடைய பெரியதந்தை இறந்தப் பின் முஹம்மதுக்குக் கெடுதிகள் செய்கின்றனர். அவர் உயிருடன் இருக்கும்போது இவரை விட்டுவிட்டார்கள்” என்று குறை கூறுவார்களோ என நாம் அஞ்சவேண்டியுள்ளது என தங்களுக்குள் பேசிக் கொண்டனர்.

உத்பா, ஷைபா, அபூஜஹ்ல், உமைய்யா, அபூசுஃப்யான் இப்னு ஹர்ஃப் போன்ற குறைஷித் தலைவர்களில் சிலர் தங்களது கூட்டங்களில் உள்ள இருபத்தைந்து நபர்களைச் சேர்த்துக்கொண்டு அபூதாலிபிடம் பேசுவதற்காக வந்தனர். அவர்கள் “அபூதாலிபே! நீங்கள் எங்களிடம் மதிப்புமிக்கவர்; உங்களுக்கு ஏற்பட்டுள்ள (நோயின்) நிலை உங்களுக்கு நன்றாகவே தெரியும். உங்களுக்கு ஏதாவது ஆகிவிடுமோ என நாங்கள் பயப்படுகிறோம். மேலும், எங்களுக்கும், உங்களது சகோதரன் மகனுக்கும் மத்தியிலுள்ள நிலை உங்களுக்கு நன்றாகவே தெரியும். ஆதலால், அவரை இப்போது அழைத்து அவரிடமிருந்து எங்களுக்குச் சில வாக்குறுதிகளை வாங்கிக் கொடுங்கள். எங்களிடமிருந்தும் அவருக்குச் சில வாக்குறுதிகளை வாங்கிக் கொடுங்கள். எங்களை எங்களது மார்க்கத்தில் விட்டு விடட்டும். அவரை அவரது மார்க்கத்தில் விட்டு விடுகிறோம். எங்களது மார்க்கத்தை அவர் குறை கூறாமல் இருக்கட்டும்” எனக் கூறினார்கள்.

அபூதாலிப் நபி (ஸல்) அவர்களை அழைத்து வரச்செய்து “எனது சகோதரன் மகனே! இதோ இவர்கள் உனது கூட்டத்தில் சிறப்புமிக்கவர்கள். உனக்காகவே இங்கு ஒன்றுகூடி இருக்கிறார்கள். அவர்கள் உனக்கு சில வாக்குறுதிகளைத் தருவார்கள். உன்னிடம் சில வாக்குறுதிகளைக் கேட்கிறார்கள். உங்களில் யாரும் எவருக்கும் இடையூறு தரக்கூடாது” என்று அவர்கள் கூறியதை அப்படியே கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “நான் இவர்களுக்கு ஒரு சொல்லை முன்வைக்கிறேன். அதை இவர்கள் மொழிந்தால் இவர்கள் அரபியர்களை ஆட்சி செய்யலாம். அரபி அல்லாதவர்களும் இவர்களுக்குப் பணிந்து நடப்பார்கள்” என்று கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில்: அபூதாலிபை நோக்கி “நான் இவர்களை ஒரே வார்த்தையில் இணைக்க விரும்புகிறேன். அதை இவர்கள் கூறும்போது அரபிகள் இவர்களுக்குப் பணிந்து நடப்பார்கள்; அரபி அல்லாதவர்கள் இவர்களுக்கு வரி செலுத்துவார்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் வருவதாவது: “எனது தந்தையின் சகோதரரே! அவர்களுக்கு ஏற்றமான ஒன்றை நோக்கி அவர்களை நான் அழைக்க வேண்டாமா?” என்று நபி (ஸல்) கேட்க, “நீ அவர்களை எதன் பக்கம் அழைக்கிறாய்?” என்று அவர் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “அவர்கள் ஒரு வாக்கியத்தைச் சொல்ல வேண்டும் என்றுதான் அழைக்கிறேன். அந்த வாக்கியத்தால் அரபியர்கள் அவர்களுக்குப் பணிவார்கள்; அரபி அல்லாதவர்களையும் அவர்கள் ஆட்சி செய்யலாம்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) அவர்களின் அறிவிப்பில் வருவதாவது: “ஒரே ஒரு சொல்லை அவர்கள் சொல்லட்டும். அதனால் அவர்கள் அரபியர்களை ஆட்சி செய்யலாம்; அரபி அல்லாதவர்களும் அவர்களுக்குப் பணிந்து நடப்பார்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். இதை கூறி முடித்தவுடன் இவ்வளவு பயன்தரும் சொல்லை எப்படி மறுப்பது? என்ன பதில் கூறுவது? என்று தெரியாமல் அனைவரும் திகைத்து அமைதி காத்தனர். பிறகு அபூஜஹ்ல் “அது என்ன சொல்? உமது தந்தையின் மீது சத்தியமாக! நாங்கள் அதையும் கூறுகிறோம். அதுபோன்று பத்து சொற்களையும் கூறுகிறோம்” என்று கூறினான். அப்போது நபி (ஸல்) அவர்கள் “லாயிலாஹஇல்லல்லாஹ் என்று கூறி அல்லாஹ்வைத் தவிர நீங்கள் வணங்கும் அனைத்தையும் விட்டு விலகிவிட வேண்டும்” என்று கூறினார்கள். உடனே அவர்கள் தங்கள் கைகளைத் தட்டிக் கொண்டு “முஹம்மதே! என்ன? கடவுள்களை எல்லாம் ஒரே கடவுளாக ஆக்கப் பார்க்கிறாயா? உனது பேச்சு மிக ஆச்சரியமாக இருக்கின்றதே!” என்றார்கள்.

பிறகு அவர்களில் சிலர் சிலரிடம் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நிச்சயம் (வாக்குறுதிகளில்) நீங்கள் விரும்பும் எதையும் இவர் உங்களுக்குக் கொடுக்க மாட்டார்; நீங்கள் எழுந்து செல்லுங்கள். அல்லாஹ் உங்களுக்கும் அவருக்கும் மத்தியில் தீர்ப்பு அளிக்கும் வரை உங்களது மூதாதையரின் மார்க்கத்திலேயே நிலைத்திருங்கள்” என்று கூறினார்கள். அதற்குப் பின் அனைவரும் பிரிந்து சென்றுவிட்டனர்.

இவர்கள் விஷயத்தில்தான் இந்த வசனங்கள் அருளப்பட்டன:

“ஸாத் - நல்லுபதேசங்கள் நிறைந்த இந்தக் குர்ஆனின் மீது சத்தியமாக! (இது நம்மால்தான் அருளப்பட்டது. இதனை) நிராகரிப்பவர்கள் பெரும் குரோதத்திலும் விரோதத்திலும் (மூழ்கி) இருக்கின்றனர்.

இவர்களுக்கு முன்னர், (இவ்வாறு இருந்த) எத்தனையோ வகுப்பாரை நாம் அழித்திருக்கின்றோம். (வேதனை வந்த சமயத்தில்) அவர்கள் எல்லோரும் உதவி தேடிக் கூச்சலிட்டார்கள். அது (வேதனையிலிருந்து) தப்பித்துக் கொள்ளக்கூடிய நேரமாக இருக்கவில்லை.

(அவர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கக்கூடிய ஒரு தூதர் (ஆகிய நீங்கள்) அவர்களிலிருந்தே அவர்களிடம் வந்ததைப் பற்றி அவர்கள் ஆச்சயப்பட்டு, ‘‘இவர் மிகப் பொய் சொல்லும் சூனியக்காரர்தான்’’ என்று (உங்களைப் பற்றி) அந்த நிராகரிப்பவர்கள் கூறுகின்றனர்.

‘‘என்ன! இவர் (நம்) தெய்வங்கள் அனைத்தையும் (பொய்யெனக் கூறி, வணக்கத்திற்குரியவன்) ஒரே இறைவன்தான் என்று ஆக்கிவிட்டாரா? மெய்யாகவே, இது ஓர் ஆச்சரியமான விஷயம்தான்’’ (என்று கூறி,) அவர்களிலுள்ள தலைவர்கள், (மற்றவர்களை நோக்கி, ‘‘இவரை விட்டு) நீங்கள் சென்றுவிடுங்கள். உங்கள் தெய்வங்களை ஆராதனை செய்வதில் நீங்கள் உறுதியாக இருங்கள். (உங்கள் தெய்வங்களைக் கைவிடும்படி கூறும்) இவ்விஷயத்தில் ஏதோ (சுயநலந்தான்) கருதப்படுகின்றது’’ என்று கூறிக் கொண்டே சென்றுவிட்டனர்.

‘‘முன்னுள்ள வகுப்பாலும், இதனை நாம் கேள்விப்பட்டதில்லை. இது (இவரால்) புனையப்பட்டதே அன்றி வேறில்லை’’ என்றும், ‘‘நம்மைவிட்டு இவருக்கு மட்டும்தானா (வேத) உபதேசம் இறக்கப்பட்டு விட்டது’’ என்றும் (கூறினார்கள்). (அல்குர்ஆன் 38:1-8) (இப்னு ஹிஷாம், திர்மிதி, முஸ்னது அபீ யஃலா, இப்னு ஜரீர்)

## துயர ஆண்டு

### அபூதாலிப் மரணம்

அபூதாலிப் நோய் அதிகமாகி நபித்துவத்தின் பத்தாவது வருடம் ரஜப் மாதத்தில் கணவாயிலிருந்து வெளியேறி சரியாக ஆறு மாதத்திற்குப் பின் மரணம் எய்தினார். (அல்முக்தஸர்)

சிலர் ரமழான் மாதத்தில் அன்னை கதீஜாவின் மரணத்திற்கு மூன்று நாள்களுக்கு முன் மரணமானார் என்றும் கூறுகின்றனர்.

அபூதாலிபுக்கு மரணம் சமீபமானபோது நபி (ஸல்) அவரிடம் சென்றார்கள். அப்போது அங்கு அபூஜஹ்லும் இருந்தான். அபூதாலிபிடம் நபி (ஸல்) அவர்கள் ‘‘எனது தந்தையின் சகோதரரே! நீங்கள் ‘‘லாஇலாஹஇல்லல்லாஹ்’ என்று கூறுங்கள். நான் அல்லாஹ்விடம் இவ்வார்த்தையின் பொருட்டால் உங்களுக்காக வாதிடுவேன்’’ என்று கூறினார்கள். ஆனால், அங்கிருந்த அபூஜஹ்லும், அப்துல்லாஹ் இப்னு அபூ உமய்யாவும் ‘‘அபூதாலிபே! அப்துல் முத்தலிபின் மார்க்கத்தையா நீர் புறக்கணிக்கப் போகின்றீர்?’’ என்று தொடர்ந்து அவரிடம் இதையே கூறிக் கொண்டிருந்தனர். இறுதியில் அபூதாலிப் ‘‘நான் அப்துல் முத்தலிபின் மார்க்கத்தில்தான் (இருக்கிறேன்)’’ என்று கூறிவிட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் ‘‘எனக்கு தடை வராமல் இருக்கும்வரை அல்லாஹ்விடம் உங்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருவேன்’’ என்று கூறினார்கள். ஆனால்,

‘‘இணைவைத்து வணங்குபர்களுக்காக மன்னிப்புக் கோருவது நபிக்கோ நம்பிக்கையாளர்களுக்கோ தகுமானதல்ல அவர்கள் (இவர்களுக்கு) நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் சரியே! அவர்கள் நிச்சயமாக நரகவாசிகள்தான் என்று இவர்களுக்குத் தெளிவானதன் பின்னர் (எவ்வாறு அவர்களுக்கு மன்னிப்புக் கோரலாம்?) (அல்குர்ஆன் 9:113)

(நபியே!) நிச்சயமாக நீங்கள் இவர்களில் விரும்பியவர்களை நேரான வழியில் செலுத்த உங்களால் முடியாது. எனினும், தான் விரும்பியவர்களை அல்லாஹ் நேரான வழியில்

செலுத்துகின்றான். நேரான வழியில் செல்லத் தகுதியுடையவர் யார் என்பதை அவனே நன்கறிவான்!" (அல்குர்ஆன் 28:56) (ஸஹீஹுல் புகாரி)

என்ற இரு வசனங்களை அல்லாஹ் இறக்கி இணைவைப்பவர்களுக்காக பாவ மன்னிப்புக் கோருவதைத் தடை செய்துவிட்டான். (ஸஹூல் புகாரி)

நபி (ஸல்) அவர்களுக்கு அபூதாலிப் கொடுத்து வந்த பாதுகாப்பு மற்றும் உதவியைப் பற்றி நாம் சொல்லித் தெரியவேண்டிய அவசியமில்லை. காரணம், அவர் குறைஷித் தலைவர்கள் மற்றும் மூடர்களின் தாக்குதல்களிலிருந்து இஸ்லாமிய அழைப்புப் பணியைப் பாதுகாத்து, அதற்கு ஓர் அரணாக விளங்கினார். ஆனாலும் தங்களது மூதாதையரின் மார்க்கத்திலேயே அவர் நிலைத்திருந்து விட்டதால் மறுமையின் வெற்றியை அடையவில்லை.

ஒரு முறை நபி (ஸல்) அவர்களிடம் "நீங்கள் உங்களது பெரியதந்தை அபூதாலிபிற்கு என்ன பயனளிப்பீர்கள். அவர் உங்களைப் பாதுகாத்தார். உங்களுக்காகக் கோபம் கொண்டார்" என்று அப்பாஸ் (ரழி) கேட்டபோது, "அவர் நரகத்தின் குறைந்த ஆழமுள்ள பகுதியில் இருப்பார். நான் இல்லை என்றால் நரகத்தின் அடித்தளத்தில் சென்றிருப்பார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

நபி (ஸல்) கூற தான் கேட்டதாக அபூ ஸஈது அல்குத் (ரழி) அறிவிப்பதாவது: நபி (ஸல்) அவர்களிடம் அவர்களது பெரியதந்தை அபூதாலிபைப் பற்றி பேசப்பட்டபோது "மறுமையில் அவருக்கு எனது சிபாரிசு பலனளிக்கலாம். அதனால் அவரது கரண்டைக்கால் வரையுள்ள நெருப்பின் ஆழத்தில் அவர் வைக்கப்படுவார்" என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

**துணைவி கதீஜா மரணம்**

அபூதாலிபின் மரணத்திற்கு இரண்டு மாதங்களுக்குப் பின் துணைவி கதீஜா (ரழி) மரணமானார்கள். இவர்களது மரணம் நபித்துவத்தின் பத்தாம் ஆண்டு ரமழான் மாதத்தில், அவர்களின் 65வது வயதில் நிகழ்ந்தது. அப்போது நபி (ஸல்) அவர்களுக்கு வயது ஐம்பது. (தல்கீஹ்)

அபூதாலிபின் மரணத்திற்கு மூன்று நாட்களுக்குப் பின் கதீஜா (ரழி) மரணமானார்கள் என்று சிலர் கூறுகின்றனர்.

நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்வின் மிகப்பெரியஅருளாக கதீஜா (ரழி) விளங்கினார்கள். நபி (ஸல்) அவர்களுடன் கால் நூற்றாண்டுக் காலம் வாழ்ந்த நமது அன்னை கதீஜா (ரழி), நபியவர்களின் துக்க நேரத்தில் அவர்களுக்கு ஆறுதலாக, சிரமமான நேரத்தில் உறுதுணையாக இருந்து, அவர்களின் தூதுத்துவத்தை எடுத்துக் கூறுவதற்கு பலவகையில் தியாகம் செய்தார்கள். மேலும், அறப்போரின் கஷ்டங்களில் பங்கெடுத்து தனது உம்ராலும் பொருளாலும் உதவி ஒத்தாசை செய்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறுவார்கள்: "மக்கள் என்னை நிராகரித்த போது, கதீஜா என்னை நம்பினார். மக்கள் என்னை பொய்ப்பித்த போது, அவர் என்னை உண்மைப்படுத்தினார். மக்கள் என்னை ஒதுக்கிய போது, அவர் என்னைத் தனது பொருளில் சேர்த்துக் கொண்டார். அல்லாஹ் அவர் மூலமாகத்தான் எனக்குக் குழந்தைகளைக் கொடுத்தான். அவரல்லாத மற்ற மனைவிகள் மூலம் குழந்தைகள் இல்லாமல் செய்துவிட்டான்." (முஸ்னது அஹ்மது)

அபூஹுரைரா (ரழி) அறிவிப்பதாவது: (ஒருமுறை) நபி (ஸல்) அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் வந்தார். "அல்லாஹ்வின் தூதரே! இதோ, கதீஜா தம்முடன் ஒரு பாத்திரத்தில்

உணவு எடுத்துக் கொண்டு உங்களை நோக்கி வந்து கொண்டிருக்கிறார். அவர் உங்களிடம் வந்தவுடன் அவருக்கு அவருடைய இறைவனின் தரப்பிலிருந்தும் என் தரப்பிலிருந்தும் ஸலாம் கூறி சொர்க்கத்தில் கூச்சல் குழப்பமோ, களைப்போ காணமுடியாத முத்து மாளிகை ஒன்று அவருக்கு கிடைக்க இருப்பதாக நற்செய்தி சொல்லுங்கள்'' என்று சொன்னார்கள். (ஸஹீஹுல் புகாரி)

**அடுக்கடுக்கான துயரங்கள்**

சில நாட்களுக்குள் துக்கம் தரும் இவ்விரு நிகழ்ச்சிகளும் நடந்து முடிந்தன. நபி (ஸல்) அவர்களின் உள்ளம் வேதனையால் துடிதுடித்தது. தொடர்ந்து சமுதாயத்தவர்களும் துன்பங்களைத் தந்தனர். அபூதாலிபின் மரணத்திற்குப் பின் நபி (ஸல்) அவர்களுக்குத் துயரத்திற்கு மேல் துயரம் அதிகரித்தது. முற்றிலும் நிராசையாகி ‘‘தாயிஃப்’ நகர மக்களாவது அழைப்பை ஏற்றுக் கொள்வார்கள் அல்லது ஆதரவு அளிப்பார்கள் என்று தாம்ஃபை நோக்கி பயணமானார்கள். ஆனால், அங்கு அவர்களுக்கு ஆதரவளிப்பவரோ உதவி செய்பவரோ இல்லை. மாறாக, அம்மக்கள் நபி (ஸல்) அவர்களின் கூட்டத்தார் கொடுக்காத நோவினைகளை அவர்களுக்குக் கொடுத்தனர். கல் நெஞ்சம் கொண்ட அம்மக்கள் நபியவர்களை அடித்து துன்புறுத்தினர்.

மக்காவாசிகள் நபி (ஸல்) அவர்களைக் கொடுமைப்படுத்தியது போன்றே அவர்களது தோழர்களையும் கொடுமைப்படுத்தினர். நபி (ஸல்) அவர்களின் நெருக்கமான தோழரான அபூ பக்ருக்கும் இக்கொடுமைகள் நிகழ்ந்தன. இதனால் அவரும் மக்காவை விட்டு ஹபஷாவிற்கு செல்ல வேண்டுமென முடிவு செய்தார். மக்காவை விட்டு வெளியேறி ‘‘பர்குல் கிமாத்’ என்ற இடத்தை அடைந்த போது அவரை ‘‘இப்னு துகுன்னா’ என்பவர் சந்தித்து தனது பாதுகாப்பில் மீண்டும் அவரை மக்காவிற்கு அழைத்து வந்தார். (ஸஹீஹுல் புகாரி)

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: அபூதாலிபின் மரணத்திற்குப் பிறகு அவன் வாழ்நாளில் கொடுக்க முடியாத வேதனைகளைக் குறைஷிகள் நபி (ஸல்) அவர்களுக்குக் கொடுத்து வந்தனர். ஒருமுறை குறைஷி மடையர்களில் ஒருவன் நபி (ஸல்) அவர்களின் தலை மீது மண்ணை வாரி இறைத்தான். வீட்டுக்குள் நுழைந்த நபியவர்களின் தலை மீது மண் இருப்பதைக் கண்ட அவர்களின் மகளால் ஒருவர் அழுதவராக அதனை அகற்றினார்கள். ‘‘எனது அருமை மகளே! அழாதே! நிச்சயமாக அல்லாஹ் உனது தந்தையைப் பாதுகாப்பான். அபூதாலிப் மரணிக்கும் வரை நான் அதிகம் வெறுக்கும் ஒன்றை குறைஷிகள் எனக்கு செய்ததில்லை'' என்று நபி (ஸல்) கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

இவ்வாறு இந்த ஆண்டில் துயரங்கள் தொடர்ந்து கொண்டே இருந்ததால் வரலாற்றில் ‘‘ஆமுல் ஹுஸ்ன்’ துயர ஆண்டு என்று இந்த ஆண்டைக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**ஸவ்தா உடன் மறுமணம்**

நபித்துவத்தின் பத்தாம் ஆண்டு ஷவ்வால் மாதத்தில் நபி (ஸல்), ஸவ்தா (ரழி) அவர்களை திருமணம் செய்தார்கள். இவர் அழைப்புப் பணியின் ஆரம்ப காலத்திலேயே இஸ்லாமைத் தழுவியவர். முஸ்லிம்கள் இரண்டாவது முறையாக ஹபஷாவிற்கு ஹிஜ்ரா சென்றபோது இவரும் தனது கணவருடன் சென்றிருந்தார். இவர் கணவர் ஹபஷாவில் மரணித்துவிட்டார். அதற்குப் பின் இவர் மக்கா வந்தவுடன் இவருடைய இத்தா''வுடைய காலம் முடிவுறவே நபி (ஸல்) அவர்கள் இவரை பெண் பேசி திருமணம் முடித்துக் கொண்டார்கள். கதீஜா (ரழி) அவர்களின் மரணத்திற்குப் பின் இவர்களைத்தான் முதலில் திருமணம் செய்து கொண்டார்கள். இவர்கள் இறுதி காலத்தில் நபி (ஸல்) அவர்கள் தனக்கு ஒதுக்கியிருந்த நாட்களையும் ஆயிஷாவிற்குக் கொடுத்து விட்டார்கள்.

இங்குதான் சிறந்த அறிவாளியும் திகைத்து நிற்கின்றான். அறிஞர்களுக்கும் ஒரு கேள்வி தோன்றுகிறது. முஸ்லிம்களிடம் இவ்வளவு பொறுமையும், உறுதியும், நிலைகுலையாமையும் இருப்பதற்குரிய காரணங்கள் என்னவாக இருக்க முடியும்? கேட்கும்போதே உடல் சிலிர்த்து உள்ளங்களில் நடுக்கம் ஏற்படும்படியான அநியாயங்களையும், அடக்குமுறைகளையும் இவர்கள் எப்படி சகித்து கொண்டார்கள்? உள்ளத்தில் ஊசலாடும் இந்தக் கேள்வியை முன்னிட்டே இதற்குரிய காரணங்களையும் தூண்டுகோல்களையும் சுருக்கமாகக் கூறிவிட வேண்டும் என்று நாம் கருதுகிறோம்.

### 1) அல்லாஹ்வின் மீது நம்பிக்கை

இவை அனைத்திற்கும் தலையாயக் காரணம், அல்லாஹ் ஒருவனையே நம்புவதும் அவனை முறையாக அறிந்துகொள்வதும் ஆகும். உறுதிமிக்க இறைநம்பிக்கை எவன் உள்ளத்தில் ஊடுருவி விட்டதோ அவர், உலகத்தின் சோதனைகள் எவ்வளவுதான் அதிகமாக, பெரியதாக, கடுமையாக இருப்பினும் அவற்றை தனது இறைநம்பிக்கைக்கு முன் மாபெரும் வெள்ளப் பெருக்கின்மேல் வரும் ஒன்றுமில்லா நுரையாகவே பார்ப்பார். தான் உணரும் இறைநம்பிக்கையின் சுவைக்கு முன்னால் உலகத்தின் எவ்வளவு பெரியகஷ்டமானாலும் அதைப் பொருட்படுத்த மாட்டார்.

இறைநம்பிக்கை உறுதியாக உள்ளத்தில் ஊடுருவி விட்டால் அது மலைகளையும் எடை போட்டுவிடும் அளவுக்கு வலுமிக்கதாக இருக்கும். இதைத்தான் அல்லாஹ் அழகாக குறிப்பிடுகிறான்:

“அவன்தான் மேகத்திலிருந்து மழையைப் பொழிவிக்கிறான். (அது பொழிகின்ற) நீருக்குத் தக்கவாறு (சிறிய பெரிய) ஓடைகளாக ஓடுகிறது. (அவ்வோடைகளில்) வெள்ளம் நுரைகளை மேல் சுமந்து செல்கிறது. இவ்வாறே ஆபரணங்களுக் காகவோ அல்லது மற்ற சாமான்களுக்காகவோ (உலோகங்களை) நெருப்பில் வைத்து உருக்கும்பொழுதும் அதைப்போன்ற (அழுக்கு) நுரை மிதக்கிறது. சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் அல்லாஹ் இதனை உதாரணமாகக் கூறுகிறான். ஏனெனில், (அழுக்கு) நுரையோ பயனற்றதாக (இருப்பதால்) அழிந்து (மறைந்து) விடுகிறது. மனிதனுக்குப் பயனளிக்கக் கூடியவையோ பூமியில் (சேர்த்து வைக்கப்பட்டு) நிலையாக இருக்கின்றன. இவ்வாறே (நம்பிக்கை அற்றவர்களை அழுக்கு நுரைக்கும், நம்பிக்கையாளர்களை பூமியில் சேர்த்து வைக்கப்படும் பயன்தரும் பொருள்களுக்கும் ஒப்பிட்டு) அல்லாஹ் உதாரணம் கூறுகிறான். (அல்குர்ஆன் 13:17)

இந்த ஒரு காரணத்தை அடிப்படையாகக் கொண்டு நிலை குலையாமை, பொறுமை, சகிப்பு, மன அமைதி ஆகியவற்றை உறுதிப்படுத்துகின்ற மற்ற காரணங்கள் உருவாகின்றன.

### 2) உள்ளங்களை ஈர்க்கும் தலைமைத்துவம்

நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம் சமுதாயத்திற்கு மட்டுமில்லாமல், முழு மனித குலத்திற்கும் மிக உயர்ந்த வழிகாட்டும் தலைவராக இருந்தார்கள். அழகிய குணங்களும், உயர்ந்த பண்புகளும், சிறந்த பழக்க வழக்கங்களும், பெருந்தன்மையும் அவர்களின் இயற்கைக் குணமாக இருந்தது. இதனால் அவர்களின் பக்கம் உள்ளங்கள் ஈர்க்கப்பட்டன. அவர்களுக்காக பல உயிர்கள் தியாகங்கள் செய்யத் துணிந்தன. அவர்களிடம் இருந்த உயர்ந்த நற்பண்புகளைப் போன்று வேறு எவரும் பெற்றிருக்கவில்லை. சிறப்பு, உயர்வு, கண்ணியம், மதிப்பு, பெருந்தன்மை, வாய்மை, நன்னடத்தை, பணிவு ஆகியவற்றில் எதிரிகள்கூட சந்தேகிக்க முடியவில்லை எனும்போது அவர்களது அன்பர்கள், நண்பர்கள்

பற்றி என்ன கூற முடியும். நபி (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு வார்த்தையை செவிமடுத்தாலும் அதை உண்மை என்றே அவர்கள் உறுதிகொள்வர்.

குறைஷிகளில் மூவர் ஓரிடத்தில் ஒன்று கூடினர். இவர்கள் ஒவ்வொருவரும் பிறருக்குத் தெரியாமல் இரகசியமாகக் குர்ஆனை செவிமடுத்து இருந்தார்கள். ஆனால், பிறகு இவர்களது இரகசியம் வெளியாகிவிட்டது. மூவரில் ஒருவன் அவர்களில் இரண்டாமவனான அபூஜஹ்லிடம் "முஹம்மதிடம் நீ கேட்பதைப் பற்றி என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டான். அதற்கவன் "நான் என்ன கேட்டு விட்டேன். எங்களுக்கும் அப்து மனாஃப் குடும்பத்திற்கும் சிறப்பு விஷயத்தில் போட்டி வந்தபோது அவர்கள் ஏழைகளுக்கு உணவளித்தார்கள்; நாங்களும் உணவளித்தோம்; அவர்கள் வாகனமற்றவர்களுக்கு வாகனங்களை வழங்கினார்கள்; நாங்களும் வழங்கினோம்; தர்மம் செய்தார்கள்; நாங்களும் தர்மம் செய்தோம். இவ்வாறு நாங்கள் நன்மையான விஷயத்தில் பந்தய குதிரைகளைப் போன்று ஆகிவிட்டோம். அப்போது அப்து மனாஃபின் குடும்பத்தார்கள் எங்களுக்கு இறைத்தூதர் இருக்கிறார், அவருக்கு வானத்திலிருந்து வஹி (இறைச்செய்தி) வருகிறது" என்று கூறினார்கள். அதற்கு அபூஜஹ்ல் "இந்தச் சிறப்பை எப்பொழுதும் நாங்கள் அடைந்து கொள்ளவே முடியாது" என்று பொறாமையுடன் கூறி, நீங்கள் கூறும் இந்த நபியை ஒருக்காலும் நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது உண்மைப்படுத்தவும் முடியாது என்று கூறிவிட்டான். (இப்னு ஹிஷாம்)

"முஹம்மதே! நாங்கள் உம்மை பொய்ப்பிக்கவில்லை. நீ கொண்டு வந்த மார்க்கத்தைத்தான் பொய்ப்பிக்கின்றோம்" என்று அபூஜஹ்ல் எப்போதும் கூறி வந்தான். அதையே இவ்வசனம் சுட்டிக் காட்டுகிறது: (ஸுனனுத் திர்மிதி)

(நபியே! உங்களைப் பொய்யரென) அவர்கள் கூறுவது, நிச்சயமாக உங்களுக்குக் கவலையைத் தருகின்றது என்பதை உறுதியாக நாம் அறிவோம். நிச்சயமாக அவர்கள் உங்களைப் பொய்யாக்கவில்லை. ஆனால், இந்த அநியாயக்காரர்கள் அல்லாஹ்வின் வசனங்களையே (பொய்யாக்கி) நிராகரிக்கின்றனர். (அல்குர்ஆன் 6:33)

ஒரு நாள் நபி (ஸல்) அவர்களை நிராகரிப்பவர்கள் மும்முறை எல்லைமீறி குத்தலாகப் பேசினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் "குறைஷி கூட்டமே! திட்டவட்டமாக நான் உங்களிடத்தில் உங்களைப் பலியிட்டுவிடும் முடிவைக் கொண்டு வந்துள்ளேன். (இதே நிலையில் நீங்கள் நீடித்தால் அதிவிரைவில் உங்களது கதை முடிந்துவிடும்)" என்று எச்சரித்தார்கள். இவ்வார்த்தை அவர்களிடையே பெரும் பதட்டத்தை ஏற்படுத்தியது. நபி (ஸல்) அவர்களுக்கு கடும் எதிரியாக இருந்தவர் கூட அவர்களை மிக அழகிய முறையில் சமாதானப்படுத்தினார்.

ஒருமுறை அறுக்கப்பட்ட ஒட்டகத்தின் குடல்களை ஸஜ்தாவில் இருக்கும்போது நபி (ஸல்) அவர்களின் மீது அவர்கள் போட்டனர். அவர்களுக்கு எதிராக அல்லாஹ்விடம் நபியவர்கள் கையேந்திய போது எதிரிகளின் சிரிப்பு மறைந்து கவலையும், துக்கமும் அவர்களைப் பீடித்துக் கொண்டது. நிச்சயமாக தங்களுக்கு நாசம்தான் என்பதை உறுதியாக விளங்கிக் கொண்டனர்.

அபூலஹபின் மகன் உத்பாவிற்கு எதிராக நபி (ஸல்) பிரார்த்தனை செய்தார்கள். நபி (ஸல்) அவர்கள் தனக்கு எதிராக செய்த பிரார்த்தனையின் பலனை சந்தித்தே ஆக வேண்டும் என்று அவன் உறுதியாக நம்பியிருந்தான். அவன் பயணத்தில் ஓரிடத்தில் தங்கியிருந்தபோது சிங்கத்தைப் பார்த்துவிட்டு, "மக்காவில் இருந்து கொண்டே முஹம்மது என்னைக் கொலை செய்துவிட்டார்" என்று கத்தினான்.

உபை இப்னு கலஃப், நபி (ஸல்) அவர்களை கொன்று விடுவேன் என்று மிரட்டி வந்தான். நபி (ஸல்) "இன்ஷா அல்லாஹ்! நான்தான் உன்னைக் கொல்வேன்" என்று கூறினார்கள்.

உஹுத் போரில் நபி (ஸல்) அவர்கள் அவன்மீது ஈட்டியை எய்து சிறிய காயத்தை ஏற்படுத்தியபோது, “இந்த முஹம்மது மக்காவில் இருக்கும்போதே என்னைக் கொல்வேன் என்று சொல்லியிருந்தார். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் என்மீது துப்பியிருந்தாலும் அவர் என்னை கொன்றிருப்பார்” என்றான் உபை. (இதன் விவரம் பின்னால் வருகிறது). (இப்னு ஹிஷாம்)

மக்காவில் இருக்கும்போது ஸஅத் இப்னு முஆத் (ரழி) அவர்கள் உமய்யாவைப் பார்த்து “முஸ்லிம்கள் உன்னை நிச்சயம் கொலை செய்து விடுவார்கள் என்று நபி (ஸல்) கூற நான் கேட்டிருக்கிறேன்” என்று கூறினார்கள். இதைத் கேட்ட உமய்யாவுக்கு மரண பயம் ஏற்பட்டு மக்காவை விட்டு வெளியேறவே மாட்டேன் என்று தனக்குத் தானே உறுதி செய்து கொண்டான். பத்ர் போர் அன்று அபூஜஹ்ல் தன்னுடன் வந்தே ஆக வேண்டும் என்று அவனை நிர்ப்பந்தித்த போது போரிலிருந்து தப்பிப்பதற்கு வசதியாக மக்காவில் உள்ள ஒட்டகங்களில் மிகச் சிறந்ததை வாங்கி தன்னுடன் வைத்துக் கொண்டான். அவனுடைய மனைவி “ஏ! அபூஸஃப்வான். மதீனாவில் உள்ள சகோதரர் உனக்கு கூறியதை நீ மறந்துவிட்டாயா?” என்று கேட்டாள். அவன் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் அவர்களுடன் சிறிது தூரம்தான் செல்ல நாடுகிறேன்” என்று கூறினான். (ஸஹீஹுல் புகாரி)

இவ்வாறே நபி (ஸல்) அவர்களது எதிரிகளின் நிலை இருந்தது. நபி (ஸல்) அவர்களது தோழர்களின் நிலை எவ்வாறு இருந்ததெனில், நபி (ஸல்) அவர்களைத் தங்களது உயிரினும் மேலாக அவர்கள் மதித்தார்கள். பள்ளத்தை நோக்கி தண்ணீர் விரைந்து வருவதுபோல நபி (ஸல்) அவர்களை நோக்கி அவர்களது உள்ளத்தில் உண்மையான பிரியம் விரைந்து வந்தது காந்தத்தை நோக்கி இரும்பு ஈர்க்கப்படுவதுபோல உள்ளங்கள் ஈர்க்கப்பட்டன.

நபி (ஸல்) அவர்கள் மீது தோழர்கள் உள்ளத்தில் இருந்த அர்ப்பணிக்கும் ஆசை அளவிட முடியாதது நபியவர்கள் மீது அவர்கள் வைத்திருந்த அன்பும் பிரியமும் அப்படித்தான். எனவே, அவர்களுக்காகத் தங்களது கழுத்து துண்டிக்கப்படுவதையும் அவர்கள் பொருட்படுத்தியதில்லை. ஆனால், நபி (ஸல்) அவர்களின் நகத்திற்கு ஒரு சேதம் ஏற்படுவதையோ, அவர்களுக்கு ஒரு முள் தைப்பதைக் கூட அவர்களால் பொறுத்துக்கொள்ள முடியாது.

ஒருமுறை அபூபக்ர் (ரழி) கல் நெஞ்சக்காரர்களால் கடுமையாக மிதிக்கப்பட்டார்கள்; வன்மையாக அடிக்கப்பட்டார்கள். அந்நேரத்தில் அங்கு வந்த உத்பா, ஆபூபக்ரை செருப்பால் அடித்தது மட்டுமல்ல, அவர்களது முகத்தை செருப்பால் தேய்க்கவும் செய்தான். அவர்களது வயிற்றின் மீது ஏறி மிதித்தான். அவர்களது மூக்கு சிதைக்கப்பட்டதால் மூக்கு அடையாளம் தெரியாத அளவுக்கு ஆகிவிட்டது. “தைம்’ கிளையினர் அன்னாரை ஒரு துணியில் சுமந்து சென்று அவர்களது வீட்டில் வைத்தார்கள். அனைவரும் அவர் இறந்துவிட்டார் என்றே எண்ணி இருந்தார்கள்.

அன்று பகலின் இறுதியில் அவர்கள் பேசத் தொடங்கியபோது “அல்லாஹ்வின் தூதர் எப்படி இருக்கிறார்கள்” என்றுதான் கேட்டார்கள். இதைக் கேட்ட தைம் கிளையினர் அவரைக் குறை கூறிவிட்டு “அன்னாரது தாயார் உம்முல் கைடம் இவருக்கு உணவளியுங்கள்; ஏதாவது குடிக்கக் கொடுங்கள்; அவரை கவனித்துக் கொள்ளுங்கள்” என்று கூறிவிட்டு எழுந்துச் சென்றனர்.

அன்னாரது தாய் அனைவரும் சென்றபின் உணவு சாப்பிட அவரை வற்புறுத்திக் கொண்டே இருந்தார். ஆனால் அபூபக்ரோ “அல்லாஹ்வின் தூதர் என்னவானார்கள்?” என்று கேட்டுக் கொண்டே இருந்தார்கள். அன்னாரது தாய் “உனது தோழரைப் பற்றி அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஒன்றுமே எனக்குத் தெரியாது” என்று கூறினார். “நீங்கள் கத்தாபின் மகள் உம்மு ஜமீல் (உமரின் சகோதரி) இடம் சென்று நபி (ஸல்) அவர்களைப் பற்றி விசாரித்து

வாருங்கள்'' என்று அபூபக்ர் (ரழி) கூறினார்கள். தாயார் உம்மு ஜமீலிடம் வந்து ''அபூபக்ர் (ரழி) உன்னிடம் முஹம்மது இப்னு அப்துல்லாஹ்வைப் பற்றி விசாரித்து வர என்னை அனுப்பினார்'' என்று கூற, அவர் ''எனக்கு அபூபக்ரையும் தெரியாது, முஹம்மது இப்னு அப்துல்லாஹ்வையும் தெரியாது. நீங்கள் விரும்பினால் உங்களுடன் உங்கள் மகனைப் பார்க்க நான் வருகிறேன்'' என்று கூறினார். அவர் ''சரி'' எனக் கூறவே, உம்மு ஜமீல் அவருடன் அபூபக்ரைப் பார்க்கப் புறப்பட்டார்.

உம்மு ஜமீல் அபூபக்ரை மயக்கமுற்று மரணித்தவரைப் போன்று பார்த்தவுடன் கூச்சலிட்டு ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! கல் நெஞ்சம் கொண்ட இறைநிராகரிப்போரும் பாவிகளும் உங்களை இவ்வாறு செய்துவிட்டார்கள். அல்லாஹ் உங்களுக்காக அவர்களிடம் பழிவாங்க வேண்டுமென நான் ஆதரவு வைக்கிறேன்'' என்று கூறினார். அவரிடம் அபூபக்ர் (ரழி), ''அல்லாஹ்வின் தூதர் எப்படி இருக்கிறார்கள்'' என்று கேட்டதற்கு ''இதோ உமது தாய் (நமது பேச்சை) கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்'' என்று கூறவே அவரைப் பற்றி பரவாயில்லை என்று கூறியவுடன் ''நபி (ஸல்) நல்ல விதமாக பாதுகாப்புடன் இருக்கிறார்கள்'' என்று உம்மு ஜமீல் கூறினார். ''அவர்கள் எங்கிருக்கிறார்'' என்று அபூபக்ர் (ரழி) கேட்கவே ''அவர்கள் தாருல் அர்கமில் இருக்கிறார்கள்'' என்றவுடன் ''அல்லாஹ்வின் தூதரைச் சென்று பார்க்காமல் நான் உண்ணவுமாட்டேன், குடிக்கவுமாட்டேன். இது அல்லாஹ்விற்காக என்மீது கடமையாகும்'' என்று நேர்ச்சை செய்து கொண்டார்கள்.

அன்னாரது தாயாரும் உம்மு ஜமீலும் ஆள் நடமாட்டங்கள் குறைந்து மக்களின் ஆரவாரங்கள் அமைதியாகும் வரை சற்று தாமதித்து நபி (ஸல்) அவர்களிடம் அவரை அழைத்துச் சென்றார்கள். அபூபக்ர் (ரழி) நடக்க இயலாமல் அவர்கள் இருவர் மீதும் சாய்ந்து நடந்து சென்றார்கள். (அல்பிதாயா வந்நிஹாயா)

இந்த நூலின் பல இடங்களில் நபி (ஸல்) அவர்களின் மீது நபித்தோழர்கள் வைத்திருந்த அன்பை விவரிக்கும் அற்புதமான சம்பவங்களையெல்லாம் நாம் கூறுவோம். குறிப்பாக உஹுத் போரில் நடந்த நிகழ்ச்சிகள், ''குபைப்'', இன்னும் அவர் போன்ற நபித்தோழர்கள் மூலம் நடைபெற்ற நிகழ்ச்சிகளை நாம் பின்னால் பார்ப்போம்.

### 3) கடமை உணர்வு

நபித்தோழர்கள் தங்களின் மீது இறைவனால் சுமத்தப்பட்டுள்ள மாபெரும் பொறுப்பை முழுமையாக உணர்ந்திருந்தார்கள். ''எந்த நிலையிலும் இப்பொறுப்பைத் தட்டிக்கழிக்க முடியாது. இப்பொறுப்பை ஏற்றுக்கொள்ளாமல் விலகிக்கொள்ளும் போது ஏற்படக்கூடிய மிக மோசமான முடிவை விட இவ்வுலகத்தின் சிரமங்களை தாங்கிக்கொள்வதே மேல். இப்பொறுப்பை ஏற்றுக் கொள்ளவில்லையெனில் தங்களுக்கும் மனித சமுதாயத்துக்கும் ஏற்படும் நஷ்டத்தை இப்பொறுப்பினை சுமந்துகொள்ளும் போது சந்திக்கும் சிரமங்களுடன் ஒருக்காலும் ஒப்பிட முடியாது'' என்று நபித்தோழர்கள் மிகத் தெளிவாக அறிந்து வைத்திருந்தனர்.

### 4) மறுமையின் மீது நம்பிக்கை

மறுமையின் மீதுண்டான நம்பிக்கை, மேன்மேலும் கடமை உணர்வை பலப்படுத்தியது. அகிலத்தைப் படைத்து, வளர்த்து, காக்கும் இறைவனுக்கு முன்னால் நிற்க வேண்டும்; சிறிய பெரிய ஒவ்வொரு செயல்களுக்கும் அவனிடத்தில் விசாரணை உண்டு அதற்குப் பின் நிரந்தர இன்பம் அல்லது நிரந்தர வேதனை நிச்சயம் உண்டு. இவ்வாறு உறுதியான நம்பிக்கையை நபித்தோழர்கள் கொண்டிருந்தனர். தங்களின் வாழ்க்கையை அச்சத்திலும் ஆதரவிலும் கழித்தனர். அல்லாஹ்வின் அருளை ஆதரவு வைப்பதுடன், அவனது வேதனையைப் பயந்தும் வந்தனர். அடுத்து வரும் வசனம் இதையே சுட்டிக்காட்டுகிறது.

அவர்கள் தங்களுக்குச் சாத்தியமான வரையில் தானம் கொடுக்கின்றனர். அத்துடன், நிச்சயமாக அவர்கள் தங்கள் இறைவனிடம் செல்ல வேண்டும் என்பதை அவர்களது உள்ளங்கள் பயப்படுகின்றன… (அல்குர்ஆன் 23:60)

இவ்வுலகம், அதிலுள்ள இன்ப துன்பங்கள் யாவும் மறுமைக்கு முன் கொசுவின் இறக்கை அளவுக்குக் கூட சமமாகாது என்பதை நபித்தோழர்கள் நன்கு விளங்கி வைத்திருந்தனர். இதனால்தான் உலகத்தின் கஷ்டங்களும் சிரமங்களும் எவ்வளவுதான் பெரியதாக இருப்பினும் அதை அறவே பொருட்படுத்தாமல் துச்சமாக மதித்தனர்.

### 5) அல்குர்ஆன்

முஸ்லிம்கள் எந்த அடிப்படைக்கு மக்களை அழைக்கின்றார்களோ அந்த அடிப்படை, உண்மைதான் என்பதை குர்ஆன் வசனங்கள் தக்க சான்றுகளாலும், தெளிவான எடுத்துக் காட்டுகளாலும் மெய்ப்பித்துக் காட்டின. மேலும், மிக உயர்ந்த மனித சமூகமான இஸ்லாமிய சமூகம் அமைய வேண்டிய அடிப்படைகளை மேன்மைமிகு குர்ஆன் சுட்டிக்காட்டியது. இதில் நேரிடும் இன்னல்களைச் சகித்துக்கொள்ள வேண்டும். எதிர்ப்புகள் தலைதூக்கும் போது துணிவுடன் இருக்க வேண்டும்; என்பதை முன் சென்ற சமுதாயங்களை எடுத்துக்காட்டாக தந்து அவர்களை பற்றிய செய்திகளில் நல்ல படிப்பினைகளையும் ஞானங்களையும் வழங்கியது.

(நம்பிக்கையாளர்களே!) உங்களுக்கு முன் சென்றவர்களுக்கு ஏற்பட்டது போன்ற (கஷ்டமான) நிலைமை உங்களுக்கு வராமலே நீங்கள் சுவர்க்கத்தில் நுழைந்துவிடலாம் என்று நினைத்துக் கொண்டீர்களோ? (உங்களைப் போல) நம்பிக்கை கொண்ட அவர்களையும் அவர்களுடைய தூதரையும், வாட்டும் வறுமையிலும், நோயிலும் பீடித்து (அவர்கள் வருந்தித் தங்களுடைய கஷ்டங்களை நீக்கி வைக்க) “அல்லாஹ்வுடைய உதவி எப்பொழுது (வரும்? எப்பொழுது வரும்?)” என்று கேட்டதற்கு “அல்லாஹ்வுடைய உதவி நிச்சயமாக (இதோ) சமீபத்திலிருக்கிறது” என்று (நாம் ஆறுதல்) கூறும் வரையில் அவர்கள் ஆட்டி வைக்கப்பட்டார்கள். (அல்குர்ஆன் 2:214)

அலிஃப்; லாம்; மீம். மனிதர்கள் “நாங்கள் நம்பிக்கை கொண்டோம்” என்று கூறினால் (மட்டும் போதுமானது, அதனைப் பற்றி) அவர்கள் சோதிக்கப் படாமல் விட்டு விடப்படுவார்கள் என்று எண்ணிக் கொண்டிருக்கின்றனரா?

இவர்களுக்கு முன்னிருந்தவர்களை எல்லாம் நிச்சயமாக நாம் சோதித்தே இருக்கின்றோம். ஆகவே, (நம்பிக்கை கொண்டோம் என்று கூறும்) இவர்களில் உண்மை சொல்பவர்கள் எவர்கள் என்பதை நிச்சயமாக அல்லாஹ் (சோதித்து) அறிந்து கொள்வான். (அவ்வாறே இதில்) பொய் சொல்பவர்கள் எவர்கள் என்பதையும் நிச்சயமாக அவன் (சோதித்து) அறிந்து கொள்வான். (அல்குர்ஆன் 29:1,2,3)

மேலும், குர்ஆன் வசனங்கள் அல்லாஹ்வை மறுத்தவர்களின் கேள்விகளுக்கும் சந்தேகத்திற்கும் முற்றிலும் தெளிவான பதில்களைத் தந்ததுடன், இதே வழிகேட்டில் அவர்கள் நிலைத்திருந்தால் அவர்களுக்கு ஏற்படும் கெட்ட முடிவைப் பற்றியும் எச்சரித்தன. இதற்கு ஆதாரமாக அல்லாஹ் தனது நேசர்கள் மற்றும் எதிரிகள் ஆகியோருடன் நடந்துகொண்ட வரலாற்று சம்பவங்களைத் தெளிவாகக் குர்ஆன் வசனங்கள் எடுத்துக் கூறின. சில நேரங்களில் மிகவும் மிருதுவாக அவர்கள் இருந்த வழிகேட்டை உணர்த்தி விளக்கமளிக்க வேண்டிய கடமையையும் குர்ஆன் வசனங்கள் செய்தன.

குர்ஆன் முஸ்லிம்களை வேறொரு உலகத்திற்கு அழைத்துச் சென்றது. இப்பிரபஞ்சத்தில் உள்ள அல்லாஹ்வின் அற்புத படைப்புகளையும் அவன் அவற்றை அழகிய முறையில்

நிர்வகிப்பதையும் அதன் மூலம் அவனே வணங்குவதற்குத் தகுதியானவன் என்பதையும் அவனை வணங்கும்போது அவன் பொழியும் அன்பு, அருள், பொருத்தம் எவ்வளவு மகத்துவமிக்கது, எவ்வளவு பாக்கியம் பெற்றது என்பதையும் குர்ஆன் முஸ்லிம்களுக்கு விளங்கவைத்தது. இதன் மூலம் முஸ்லிம்கள் அடைந்த மன திருப்திக்கும், மன அமைதிக்கும் எதுவும் சமமாக முடியாது.

இவ்வகையான வசனங்களில் முஸ்லிம்களிடம் நேரடியாக அழைத்துப் பேசிய வசனங்களும் உள்ளன. அவற்றில் இதுவும் ஒன்றாகும்:

அவர்களது இறைவன் தன்னுடைய அன்பையும், பொருத்தத்தையும் அளித்து சொர்க்கங்களையும் தருவதாக அவர்களுக்கு நற்செய்தி கூறுகின்றான். அவர்களுக்கு அவற்றில் என்றென்றும் நிலையான இன்பம் உண்டு. (அல்குர்ஆன் 9:21)

தங்களுக்கு அநீதமிழைத்து, தங்கள் மீது வரம்பு மீறி கொடுமை புரிந்த இறைமறுப்பாளர்களான தங்களின் எதிரிகளின் நிலை, நாளை மறுமையில் எவ்வாறு இருக்கும் என்று முஸ்லிம்கள் அறிந்துகொள்ளும் பொருட்டு அவர்களுக்கு அதையும் குர்ஆன் தெளிவுபடுத்தியது.

இவர்கள் நரகத்திற்கு முகங்குப்புற இழுத்துச் செல்லும் நாளில் இவர்களை நோக்கி “(உங்களை) நரக நெருப்பு பொசுக்குவதைச் சுவைத்துப் பாருங்கள்” என்று கூறப்படும். (அல்குர்ஆன் 54:48)

அந்த நிராகரிப்பவர்கள் நாளை மறுமையில் அல்லாஹ்விடம் விசாரணை செய்யப்பட்டு கைதிகளாக விலங்கிடப்பட்ட நிலையில் முகம் குப்புற நரகில் வீசி எறியப்படுவார்கள். இதோ (ஸகர்) நரகத்தின் வேதனையை சுவைத்துக் கொள்ளுங்கள் என்று அவர்களுக்கு கூறப்படும்.

**6) வெற்றியின் நற்செய்திகள்**

கொடுமைகளையும் துன்பங்களையும் சந்தித்த அன்றும் அதற்கு முன்பும் இஸ்லாமை ஏற்றுக் கொள்வதென்பது சோதனைகளையும், மரணங்களையும் சந்திப்பது மட்டுமல்ல என்பதை முஸ்லிம்கள் அறிந்து வைத்திருந்தனர். மாறாக, இஸ்லாமிய அழைப்பின் நோக்கம் முற்றிலும் அறியாமையால் நிரம்பிய கொள்கைகளையும் அதன் அநியாயமான சடங்குகளையும் அடியோடு ஒழித்துவிடுவதே ஆகும். இதன்மூலம் பூமி அனைத்திலும் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டி உலகிலுள்ள அனைத்து அரசியல் அமைப்புகளையும் வெற்றிகண்டு முழு மனித சமுதாயத்திற்கும் அல்லாஹ்வின் பொருத்தத்தின்பால் வழிகாட்டுகிறது. மேலும், படைப்பினங்களை மனிதர்கள் வணங்குவதிலிருந்து வெளியேற்றி படைத்த அல்லாஹ்வை வணங்கும் வழிக்கு இஸ்லாம் அழைத்துச் செல்கிறது என்று அவர்கள் அறிந்து வைத்திருந்தனர்.

இதுபோன்ற நற்செய்திகளை சில நேரங்களில் மிகத் தெளிவாகவும் சில நேரங்களில் சூசகமாகவும் முஸ்லிம்களுக்கு குர்ஆன் விளக்கிக் கொண்டே இருந்தது. அக்காலக்கட்டத்தில் முஸ்லிம்கள் மிகுந்த நெருக்கடிக்கு ஆளாகி இருந்தார்கள். அவர்களது வாழ்க்கையே முற்றிலும் அழிந்துவிடும்படியான சோதனைகளும் நிகழ்ந்தன. அப்போது முன்சென்ற வசனங்கள் இறங்கின. அந்த வசனங்களின் கருத்துக்கள் முற்றிலும் மக்கா முஸ்லிம்களின் நிலைமைகளுக்கும் நிராகரிப்பவர்களின் நிலைமைகளுக்கும் மிகப் பொருத்தமாக இருந்தன. மேலும், அந்த வசனங்களில், நிராகரிப்பவர்கள் மற்றும் அநியாயக்காரர்களின் முடிவு அழிவு தான் என்றும் நல்லோர்கள்தான் இப்பூமியில் நிலைப்பார்கள் என்றும் அறிவுறுத்தப்பட்டது. ஆக, குர்ஆனில் கூறப்பட்ட சரித்திரங்களில்

“வெகு விரைவில் மக்காவாசிகள் தோல்வியுறுவார்கள். இஸ்லாமும் முஸ்லிம்களும் வெற்றி பெறுவார்கள்” என்று தெளிவான முன் அறிவிப்புகள் இருந்தன.

இறைநம்பிக்கையாளர்கள்தான் வெற்றி பெறுவார்கள் என்ற நற்செய்தி கூறும் பல வசனங்களும் இக்கால கட்டத்தில்தான் இறங்கின. அல்லாஹ் கூறுகிறான்:

“நம்முடைய தூதர்களாகிய நம் அடியார்களைப் பற்றி ஏற்கனவே நம்முடைய வாக்கு நிச்சயமாக முந்தி விட்டது. ஆதலால், நிச்சயமாக அவர்கள் உதவி செய்யப்படுவார்கள்.

நிச்சயமாக நம்முடைய படையினர்(களாகிய நம்பிக்கையாளர்கள்)தாம் வெற்றி பெறுவார்கள். ஆதலால், (நபியே!) சிறிது காலம் வரையில் (அல்லாஹ்வை நிராகரிக்கும்) இவர்களிலிருந்து நீங்கள் விலகி இருங்கள். (இவர்கள் எவ்வாறு தண்டனைக்கு உள்ளாகிறார்கள் என்பதை அறிய) அவர்களைப் பார்த்துக் கொண்டிருங்கள்.

அதிசீக்கிரத்தில் அவர்களும் அதனைக் கண்டு கொள்வார்கள். (என்னே!) நம்முடைய வேதனைக்காகவா இவர்கள் அவசரப்படுகின்றனர்? (நம்முடைய வேதனை) அவர்கள் மத்தியில் இறங்கும்போது, அச்சமூட்டி எச்சரிக்கப்பட்ட அவர்களின் விடியற்காலை மகா கெட்டதாகிவிடும்.” (அல்குர்ஆன் 37:171-177)

“வெகு விரைவில் இவர்களுடைய கூட்டம் சிதறடிக்கப்பட்டு, (இவர்கள்) புறங்காட்டிச் செல்வார்கள்.” (அல்குர்ஆன் 54:45)

“இவர்களுடைய கூட்டத்தினர் (எம்மாத்திரம்?) மற்ற கூட்டத்தினர்களைப் போலவே இவர்களும் முறியடிக்கப்படுவார்கள்.” (அல்குர்ஆன் 38:11)

ஹபஷாவிற்குச் சென்று குடியேறிய முஸ்லிம்களைப் பற்றி இந்த வசனம் இறங்கியது:

(நம்பிக்கையாளர்களே! உங்களில்) எவர்கள் (எதிரிகளால்) துன்புறுத்தப்பட்டு பின்னர் அல்லாஹ்வுக்காக(த் தங்கள் ஊரைவிட்டு)ப் புறப்பட்டார்களோ, அவர்களுக்கு நிச்சயமாக நாம் இவ்வுலகிலும் நல்ல இருப்பிடத்தையே தருவோம்; மறுமையின் கூலியோ (இதைவிட) மிகப் பெரிது. (இதனை) அவர்கள் அறிந்துகொள்ள வேண்டுமே? (அல்குர்ஆன் 16:41)

நபி யூசுஃப் (அலை) அவர்களின் வரலாற்றை விசாரித்த அந்த மக்களுக்கு பதில் கூறும்போது அதில்,

(நபியே!) நிச்சயமாக யூஸுஃப் மற்றும் அவரது சகோதரர்களுடைய சரித்திரத்தைப் பற்றி வினவுகின்ற(இ)வர்களுக்கு இதில் பல படிப்பினைகள் இருக்கின்றன. (அல்குர்ஆன் 12:7)

என்றும் அல்லாஹ் கூறினான்.

அதாவது, நபி யூசுஃப் (அலை) அவர்களின் வரலாற்றை விசாரித்த மக்காவாசிகளே அவர்களின் சகோதரர்களுக்கு ஏற்பட்ட தோல்வியைப் போன்றே நீங்களும் தோல்வியை சந்திக்க இருக்கிறீர்கள். அவர்கள் அடிபணிந்தது போன்றே நீங்களும் வெகு விரைவில் அடிபணிவீர்கள் என்று அறிவுறுத்தப்பட்டது.

இறைத்தூதர்களை நினைவுகூர்ந்து அல்லாஹ் கூறுகிறான்:

“தங்களிடம் வந்த (நம்முடைய) தூதர்களை நிராகரித்தவர்கள் அவர்களை நோக்கி, “நிச்சயமாக நீங்கள் நம்முடைய மார்க்கத்தில் திரும்பிவிட வேண்டும். இல்லையேல், நாங்கள் உங்களை எங்களுடைய ஊரிலிருந்து வெளியேற்றி விடுவோம்” என்று கூறினார்கள். அதற்கு அவர்களுடைய இறைவன் (அந்த தூதர்களை நோக்கி) “நிச்சயமாக நாம் இந்த அநியாயக்காரர்களை அழித்து விடுவோம்” என்றும், “உங்களை அவர்களுக்குப்

பின்னர் (அவர்களுடைய) பூமியில் நிச்சயமாக நாம் குடியேறச் செய்வோம்'' என்றும் வஹி மூலம் அறிவித்து "இது எவர் என் முன்னால் (விசாரணைக்காக) நிற்பதைப் பயந்தும், என் அச்சமூட்டலைப் பயந்தும் நடக்கின்றாரோ அவருக்கு ஒரு சன்மானமாகும்'' என்றும் அவர்களுடைய இறைவன் அறிவித்தான்.'' (அல்குர்ஆன் 14:13,14)

பாரசீகர்களுக்கும் ரோமர்களுக்கும் மிகக் கடுமையான போர் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த நேரத்தில் மக்காவாசிகள் இணைவைப்பவர்களாகிய பாரசீகர்களே வெற்றிபெற வேண்டும் என்று விரும்பினர். ஆனால், முஸ்லிம்கள் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்புகின்ற ரோமர்களே வெற்றிபெற வேண்டும் என்று விரும்பினர். அப்போது அப்போரில் பாரசீகர்கள்தான் வலுப்பெற்று முன்னேறியும் வந்த நேரத்தில் இன்னும் சில ஆண்டுகளில் ரோமர்கள் பாரசீகர்களை வீழ்த்தி விடுவார்கள் என்ற நற்செய்தியை அல்லாஹ் இறக்கி வைத்தான். அத்துடன் நிறுத்திக் கொள்ளாமல் மற்றொரு நற்செய்தியையும் கூறினான். அதுதான், முஸ்லிம்களுக்கு அல்லாஹ்வின் உதவி வெகு விரைவில் உண்டு என்பது!

(நமக்குச்) சமீபமான பூமியிலுள்ள "ரோம்''வாசிகள் தோல்வியடைந்தனர். அவர்கள் (இன்று) தோல்வி அடைந்துவிட்டபோதிலும் அதிசீக்கிரத்தில் வெற்றி அடைவார்கள். (அதுவும்) சில ஆண்டுகளுக்குள்ளாகவே (வெற்றி அடைவார்கள். வெற்றி தோல்வி என்ற) விஷயம் இதற்கு முன்னரும், இதற்குப் பின்னரும் அல்லாஹ்வுக்கே சொந்தமானது. (அவர்கள் வெற்றியடையும்) அந்நாளில் நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வின் உதவியைக் கண்டு மகிழ்ச்சி அடைவார்கள். அல்லாஹ், தான் விரும்பியவர்களுக்கு உதவி புரிகிறான். அவன் (அனைவரையும்) மிகைத்தவனும் கிருபையுடையவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 30:2-5)

நபி (ஸல்) அவர்களும் அவ்வப்போது இதுபோன்று நற்செய்திகளை மக்களுக்குக் கூறி வந்தார்கள். ஹஜ்ஜுடைய காலங்களில் உக்காள், மஜன்னா, தில் மஜாஸ் என்ற இடங்களில் தூதுத்துவத்தை எடுத்து கூறுவதற்காக மக்களை சந்திக்கும்போது சொர்க்கத்தின் நற்செய்தி மட்டுமல்லாது இவ்வுலக வாழ்க்கையின் வெற்றியைக் கொண்டும் நற்செய்தி கூறி வந்தார்கள். "மக்களே! "லாஇலாஹஇல்லல்லாஹ்' (வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை) என்று கூறுங்கள் வெற்றி அடைவீர்கள்! அதன் மூலம் அரபியர்களை நீங்கள் ஆட்சி செய்யலாம். அரபியல்லாதவர்களும் உங்களுக்கு பணிந்து நடப்பார்கள். நீங்கள் இறந்துவிட்டாலும் சொர்க்கத்தில் மன்னர்களாகவே இருப்பீர்கள்.'' (இப்னு ஸஅது)

உத்பா இப்னு ரபிஆ உலக ஆசாபாசங்களைக் காட்டி நபி (ஸல்) அவர்களிடம் பேரம் பேசி, அவர்களை பணிய வைக்க முயன்றபோது, நபி (ஸல்) அவர்கள் அவனுக்குக் கூறிய பதிலையும், அந்த பதிலில் இருந்து இஸ்லாம் நிச்சயம் மிகைத்தே தீரும் என்று உத்பா விளங்கிக் கொண்டதையும் இதற்கு முன் நாம் கூறியிருக்கிறோம்.

இவ்வாறே அபூதாலிபிடம் வந்த கடைசி குழுவினருக்குக் கூறிய பதிலையும் நாம் முன்பே பார்த்திருக்கின்றோம். அந்த பதிலில் "ஒரே ஒரு வார்த்தையைத்தான் நான் உங்களிடத்தில் எதிர்பார்க்கிறேன். அவ்வார்த்தையினால் அரபியர் உங்களுக்குப் பணிவார்கள்; அரபியர் அல்லாதவர்களையும் நீங்கள் ஆட்சி செய்யலாம்'' என்று மிகத் தெளிவாக அம்மக்களுக்கு எடுத்துரைத்தார்கள்.

கப்பாப் இப்னு அரத் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) கஅபாவின் நிழலில் தங்களது போர்வையைத் தலையணையாக வைத்து படுத்திருந்தபோது நான் அவர்களிடம் வந்தேன். அப்போது இணைவைப்பவர்கள் புறத்திலிருந்து பல சிரமங்களை நாங்கள் சந்தித்துக் கொண்டிருந்தோம். நான் நபி (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்விடத்தில் அநியாயக்காரர்களுக்கு எதிராக பிரார்த்திக்க மாட்டீர்களா?'' என்று கேட்டேன். நபி (ஸல்)

அவர்களின் முகம் சிவந்துவிட்டது. படுத்திருந்தவர்கள் எழுந்து அமர்ந்து “உங்களுக்கு முன்னிருந்த மக்களில் ஒருவர் (இஸ்லாமை ஏற்றுக் கொண்டதற்காக) அவன் எலும்பு, சதை, நரம்புகளை ரம்பத்தால் அறுக்கப்பட்டன. ஆனால், அத்தகைய துன்பமும் கூட அவரை மார்க்கத்திலிருந்து திருப்பவில்லை. நிச்சயமாக அல்லாஹ் இம்மார்க்கத்தை முழுமையாக்கியேத் தீருவான். அப்போது (யமன் நாட்டில் உள்ள) ஸன்ஆ நகலிருந்து ஹளரமவுத் நகரம் வரை அல்லாஹ்வின் அச்சத்தைத் தவிர வேறு எந்த வித அச்சமுமின்றி பயணம் செய்பவர் பயணிக்கலாம். ஆனால், நீங்கள் (அல்லாஹ்வின் உதவி) விரைவாக கிடைக்க வேண்டும் என்று அவசரப்படுகிறீர்கள்” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இதுபோன்ற நற்செய்திகளை மறைமுகமாகவோ, அந்நியர்களுக்குத் தெரியாமல் இரகசியமாகவோ நபி (ஸல்) அவர்கள் கூறவில்லை. மாறாக, முஸ்லிம்கள் இந்த நற்செய்தியை தெரிந்து வைத்திருந்தது போலவே, நிராகரிப்பவர்களும் தெரிந்து வைத்திருந்தனர். அஸ்வத் இப்னு முத்தலிபும் அவனது கூட்டாளிகளும் நபித்தோழர்களை எப்போது பார்த்தாலும் இடித்துரைப்பதும் கிண்டல் செய்வதுமாகவே இருந்தனர். மேலும், இதோ பாருங்கள் “கிஸ்ரா கைஸன் நாடுகளுக்கு வாரிசுகளாக ஆகப்போகும் அரசர்கள் உங்களைக் கடந்து செல்கிறார்கள்” என்று நபித்தோழர்களைக் குத்திக் காண்பித்து, விசில் அடித்து கைதட்டி கேலி செய்வார்கள்.

இவ்வுலகில் அதிவிரைவில் ஒளிமயமான சிறப்புமிக்க எதிர்காலம் உண்டு என்று கூறப்பட்ட நற்செய்திகளால் எல்லாப் புறத்திலிருந்தும் தங்களுக்கு இழைக்கப்பட்டு வந்த கொடுமைகளையும் அநியாயங்களையும் கோடை காலத்தில் வெகு விரைவில் களைந்துவிடும் மேகமூட்டமாகவே நபித்தோழர்கள் கருதினார்கள். மேலும், இந்த நற்செய்திகள் உலக வெற்றியை மட்டும் குறிப்பிடாமல் அழியாத மறுமையில் நிலையான சுவர்க்கம் முஸ்லிம்களுக்கு உண்டு என்று கூறியன. இது நபித்தோழர்களுக்கு மிகுந்த ஆறுதலையும் ஆதரவையும் கொடுத்தது.

இதுமட்டுமல்லாமல் முஸ்லிம்களின் ஆன்மாவிற்கு நபி (ஸல்) இறைநம்பிக்கை எனும் பயிற்சி மூலம் வலுவூட்டி வந்தார்கள். அவர்களைக் குர்ஆன் மற்றும் நல்லுபதேசங்களால் பரிசுத்தமாக்கினார்கள்; உலகப் பொருட்களுக்கும் அற்ப சுகங்களுக்கும் அடிமையாவதிலிருந்து விடுவித்து உளத்தூய்மை, நற்பண்பு, உயரிய குணங்கள் என மிக உயர்ந்த தரத்திற்கு தங்களது தோழர்களை மேம்படுத்தினார்கள். அகிலங்களைப் படைத்த அல்லாஹ்வின் பக்கம் அவர்களின் கவனங்களைத் திருப்பினார்கள். “வழிகேடு’ என்ற இருள் அகற்றி “இஸ்லாம்’ என்ற ஒளியில் அவர்களை நிறுத்தினார்கள். துன்பங்களையும் துயரங்களையும் பொறுத்து, சகித்து, துன்பம் இழைத்தவர்களைப் பழிவாங்காமல் உள்ளத்தை அடக்கி அழகிய முறையில் மன்னிக்கும் பண்பாட்டை நபி (ஸல்) தோழர்களுக்குக் கற்றுக் கொடுத்தார்கள். இதனால் நபித்தோழர்களிடம் மார்க்க உறுதி, ஆசாபாசங்களை விட்டு விலகி வாழ்வது, இறை திருப்திக்காக தன்னை அர்ப்பணித்துக் கொள்வது, சுவர்க்கத்தை விரும்புவது, மார்க்கக் கல்வியின் மீது பேராசை கொள்வது, மார்க்கத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொள்வது ஆகிய அனைத்தும் காணப்பட்டன. மேலும், மன ஊசலாட்டங்களுக்கு கடிவாளமிட்டு, அற்ப உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டுவிடாமல் மனக் குழப்பங்களைக் கட்டுப்படுத்தி பொறுமை, நிதானம், கண்ணியம் ஒழுக்கம் ஆகியவற்றைக் கடைப்பிடித்து சிறந்த நன்மக்களாக விளங்கினார்கள்.

## மூன்றாம் கால கட்டம்

### மக்காவிற்கு வெளியே இஸ்லாமிய அழைப்பு

**தாயிஃப் நகரில்**

நபித்துவத்தின் பத்தாவது ஆண்டு நபி (ஸல்) மக்காவிலிருந்து 60 மைல் தொலைவிலுள்ள தாம்ஃபிற்குச் சென்றார்கள். (இது கி.பி. 619 மே மாதம் இறுதி அல்லது ஜுன் மாத ஆரம்பத்தில் ஆகும்). நபி (ஸல்) அவர்கள் தங்களது அடிமை ஜைது இப்னு ஹாஸாவுடன் கால்நடையாகச் சென்றார்கள். திரும்பும்போதும் கால்நடையாகவே திரும்பினார்கள். வழியிலிருந்த ஒவ்வொரு கூட்டத்தாருக்கும் இஸ்லாமிய அழைப்பு கொடுக்கப்பட்டும், அக்கூட்டத்தால் எவரும் இஸ்லாமிய அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை.

நபி (ஸல்) அவர்கள் தாம்ஃபிற்குச் சென்றடைந்தபோது அங்கு வசித்து வந்த ஸகீஃப் கூட்டத்தாரின் தலைவர்களும் 'அம்ர் இப்னு உமைர் அஸ்ஸகபி' என்பவனின் பிள்ளைகளுமான 1) அப்து யாலில், 2) மஸ்ஊது, 3) ஹபீப் என்ற மூன்று சகோதரர்களிடம் சென்றார்கள். அவர்களிடம் இஸ்லாமைப் பரப்புவதற்கு உதவி செய்ய வேண்டும் என்று கோரினார்கள். ஆனால், அவர்களில் ஒருவன் "உன்னை அல்லாஹ் தூதராக அனுப்பியது உண்மையென்றால் நான் கஅபாவின் திரைகளைக் கிழித்து விடுவேன்" என்று கூறினான். மற்றொருவன் "அல்லாஹ்வுக்கு உன்னைத் தவிர நபியாக அனுப்ப வேறொருவர் கிடைக்கவில்லையா?" என்று கேட்டான்.

மூன்றாமவன், "அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் உன்னிடம் ஒருபோதும் பேச மாட்டேன். நீ உண்மையில் தூதராக இருந்தால் உனது பேச்சை மறுப்பது எனக்கு மிக ஆபத்தானதாகும். நீ அல்லாஹ்வின் மீது பொய் கூறுபவராக இருந்தால் உன்னிடம் பேசுவதே எனக்குத் தகுதியல்ல" என்று கூறினான். அப்போது நபி (ஸல்) "இதுதான் உங்கள் முடிவாக இருந்தால் நமது இந்த சந்திப்பை (மக்களுக்கு வெளிப்படுத்தாமல்) மறைத்துவிடுங்கள்" என்று கூறினார்கள்.

நபி (ஸல்) தாம்ஃபில் பத்து நாட்கள் தங்கி அங்குள்ள மற்ற எல்லா தலைவர்கள், பிரமுகர்களைச் சந்தித்து இஸ்லாமிய அழைப்பு விடுத்தார்கள். ஆனால், அவர்களில் எவரும் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளாததுடன் தங்களது ஊரைவிட்டு உடனடியாக வெளியேறும்படியும் கூறி, நபி (ஸல்) அவர்கள் மீது வம்பர்களை ஏவிவிட்டனர். நபி (ஸல்) அவர்கள் ஊரைவிட்டு வெளியே செல்ல முயன்றபோது அங்குள்ள வம்பர்களும் அடிமைகளும் ஒன்றுகூடி அவர்களை ஏசிப்பேசினர்.

இறுதியில் மக்களின் கூட்டம் அதிகமாகி அவர்கள் அனைவரும் இரு அணிகளாக நின்று கொண்டு, நபி (ஸல்) அவர்களின் மீது கற்களை எறிந்தனர். அதிகமான கற்களை நபி (ஸல்) அவர்களின் குதிகால் நரம்பை நோக்கி எறியவே அவர்களது பாதணிகளும் இரத்தக் கறைகளாயின. நபி (ஸல்) அவர்களுடன் இருந்த அவர்களது அடிமை ஜைது இப்னு ஹாஸா நபியவர்களைக் காப்பதற்காக தங்களையே கேடயமாக்கிக் கொண்டார்கள். இதனால் அவரது தலையில் பலத்த காயம் ஏற்பட்டது.

தாம்ஃபிலிருந்து மூன்று மைல்கள் தொலைவிலுள்ள ரபிஆவுடைய மகன்களான உத்பா, ஷைபா என்ற இருவருக்குச் சொந்தமான தோட்டம் வரை நபி (ஸல்) அவர்களை அடித்துக் கொண்டே வந்தனர். நபி (ஸல்) அந்த தோட்டத்திற்குள் சென்று அங்குள்ள திராட்சை தோட்ட பந்தலின் நிழலில் அமர்ந்தார்கள். அப்போதுதான் மிகப் பிரபலமான அந்த பிரார்த்தனையை நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் வேண்டினார்கள். இதனால் நபி (ஸல்) அவர்களின் உள்ளம் அவர்களுக்கு நேர்ந்த கொடுமைகளினால் எவ்வளவு வேதனை அடைந்திருந்தது என்பதையும் தாயிஃப் மக்கள் இஸ்லாமை ஏற்காததினால் எவ்வளவு

துக்கத்திற்கு ஆளானார்கள் என்பதையும் இந்த பிரார்த்தனையிலிருந்தே தெரிந்துகொள்ளலாம்.

இதோ நபி (ஸல்) கேட்ட பிரார்த்தனை:

“அல்லாஹ்வே! எனது ஆற்றல் குறைவையும் எனது திறமைக் குறைவையும் மனிதர்களிடம் நான் மதிப்பின்றி இருப்பதையும் உன்னிடமே முறையிடுகிறேன். கருணையாளர்களிலெல்லாம் மிகப்பெரியகருணையாளனே! நீதான் எளியோர்களைக் காப்பவன் நீதான் என்னைக் காப்பவன். நீ என்னை யாரிடம் ஒப்படைக்கிறாய்? என்னைக் கண்டு முகம் கடுகடுக்கும் அந்நியனிடமா? அல்லது என்னுடைய காயத்தை நீ உரிமையாக்கிக் கொடுத்திடும் பகைவனிடமா? உனக்கு என்மீது கோபம் இல்லையானால் (இந்த கஷ்டங்களையெல்லாம்) நான் பொருட்படுத்தவே மாட்டேன். எனினும், நீ வழங்கும் சுகத்தையே நான் எதிர்பார்க்கிறேன். அதுவே எனக்கு மிக விசாலமானது. உனது திருமுகத்தின் ஒளியினால் இருள்கள் அனைத்தும் பிரகாசம் அடைந்தன் இம்மை மறுமையின் காரியங்கள் சீர்பெற்றன. அத்தகைய உனது திருமுகத்தின் ஒளியின் பொருட்டால் உனது கோபம் என்மீது இறங்குவதிலிருந்தும் அல்லது உனது அதிருப்தி என்மீது இறங்குவதிலிருந்தும் நான் பாதுகாவல் கோருகிறேன். அல்லாஹ்வே! நீயே பொருத்தத்திற்குரியவன். நீ பொருந்திக் கொள்ளும்வரை உன் கோபத்திலிருந்து பாதுகாப்புத் தேடுகிறேன். அல்லாஹ்வே! பாவத்திலிருந்து தப்பிப்பதும், நன்மை செய்ய ஆற்றல் பெறுவதும் உனது அருள் இல்லாமல் முடியாது.”

நபி (ஸல்) அவர்களை இந்த நிலைமையில் பார்த்ததும் ரபிஆவின் மகன்களுக்கு இரக்கம் வந்தது. தங்களது கிறிஸ்துவ அடிமை அத்தாஸை அழைத்துத் “திராட்சைக் குலையை அவருக்குச் சென்று கொடு” என்று கூறினர். திராட்சைக் குலைகளை அத்தாஸ் நபி (ஸல்) அவர்களுக்கு முன் வைத்தவுடன் நபி (ஸல்) அவர்கள் ‘பிஸ்மில்லாஹ்’ என்று கூறி சாப்பிட்டார்கள்.

இதைக் கண்ட அத்தாஸ் “இந்தப் பேச்சு இவ்வூர் மக்கள் பேசும் பேச்சல்லவே் உங்களுக்கு இது எப்படித் தெரியும்?” என்று கேட்டார். அதற்கு, “உனக்கு எந்த ஊர்? உனது மார்க்கம் என்ன?” என்று அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கேட்க, அதற்கு அவர் “நீனவாவைச் சேர்ந்த கிறிஸ்துவன் நான்” என்றார். “நல்லவரான யூனுஸ் இப்னு மத்தாவின் ஊரைச் சேர்ந்தவர்தானே?” என்று நபி (ஸல்) அவரிடம் கேட்டதற்கு அவர் ஆச்சயத்துடன் “யூனுஸ் இப்னு மத்தாவைப் பற்றி உங்களுக்கு எப்படி தெரியும்” என்றார். “அவர் எனது சகோதரர் அவரும் ஓர் இறைத்தூதராக இருந்தார் நானும் இறைத்தூதர் தான்” என்று நபி (ஸல்) அவர்கள் பதில் கூறியவுடன், அத்தாஸ் நபி (ஸல்) அவர்களின் தலை, கை மற்றும் கால்களை முத்தமிட்டார்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த ரபிஆவின் மகன்களில் ஒருவர் மற்றவரிடம் “இதோ உனது அடிமையை அவர் குழப்பிவிட்டார்” என்று கூறினான். அத்தாஸ் திரும்பி வந்தவுடன் “உனக்கு என்ன கேடு நேர்ந்தது?” என்று அவ்விருவரும் இடித்துரைத்தனர். அதற்கு அத்தாஸ், “எனது எஜமானர்களே! இவரை விடச் சிறந்த எவரும் இப்பூமியில் இல்லை. இவர் எனக்கு ஒரு விஷயத்தை மிக உறுதியாகக் கூறினார். அதனை இறைத்தூதரைத் தவிர வேறெவரும் அறிந்திருக்க முடியாது” என்றார். அதற்கு அவ்விருவரும் “அத்தாஸே! உனக்கென்ன கேடு. இவர் உம்மை உமது மார்க்கத்திலிருந்து திருப்பிவிடாமல் இருக்கட்டும். உமது மார்க்கம்தான் இவன் மார்க்கத்தைவிட சிறந்தது” என்று கூறினர். (இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) அவர்கள் அந்தத் தோட்டத்திலிருந்து வெளியேறி மிகவும் கவலையுடன் உள்ளம் உடைந்தவர்களாக மக்கா நோக்கி திரும்பும் வழியில் ‘கர்னுல் மனாஜில்’ என்ற

இடத்தை அடைந்த போது அல்லாஹ் அவர்களிடம் ஜிப்ரீலையும், (மலைகளின் வானவர்) மலக்குல் ஜிபாலையும் அனுப்பினான். மலக்குல் ஜிபால் தாயிஃப்வாசிகளாகிய இம்மக்களை இரு மலைகளையும் ஒன்று சேர்த்து நசுக்கி அழித்துவிடவா''? என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்.

ஆயிஷா (ரழி) இச்சம்பவத்தின் விவரத்தைக் கூறுகின்றார்கள்: நான் நபி (ஸல்) அவர்களிடம் ''உஹுத் போரைவிடக் கடுமையான நாள் எதுவும் உங்களது வாழ்க்கையில் வந்துள்ளதா?'' என்று கேட்டேன். அதற்கு ''உனது கூட்டத்தாரின் மூலம் நான் பல துன்பங்களைச் சந்தித்துள்ளேன். அவற்றில் நான் சந்தித்த துன்பங்களில் மிகக் கடுமையானது 'யவ்முல் அகபா' என்ற தினத்தில் எனக்கு ஏற்பட்ட வேதனையே ஆகும். நான் அப்து யாலிலின் மகனிடம் என்னை அறிமுகப்படுத்தினேன். ஆனால், அவன் எனது அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை. நான் கவலையுடன் திரும்ப மக்காவை நோக்கி பயணமாகி 'கர்னுல் மனாஜில்' என்ற பெயருள்ள 'கர்னு ஸஆலிப்' என்ற இடத்தில் வந்து தங்கிய போதுதான் எனக்கு முழுமையான நினைவே திரும்பியது. நான் தலையைத் தூக்கிப் பார்த்தபோது என் தலைக்கு மேல் ஒரு மேகம் நிழலிட்டுக் கொண்டிருந்தது. அந்த மேகத்தில் ஜிப்ரீல் இருந்தார். அவர் என்னை அழைத்து 'நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் உங்களது கூட்டத்தாரிடம் பேசியதையும் அவர்கள் உங்களுக்குக் கூறிய பதிலையும் கேட்டுக் கொண்டான். இம்மக்கள் விஷயத்தில் நீங்கள் விரும்பியதை மலக்குல் ஜிபாலுக்கு ஏவ வேண்டும் என்பதற்காக அவரை உங்களிடம் அனுப்பி இருக்கின்றான்' என்று கூறினார். மலக்குல் ஜிபால் என்னை அழைத்து எனக்கு ஸலாம் கூறி ''முஹம்மதே! ஜிப்ரீல் கூறியவாறே அல்லாஹ் என்னை உங்களிடம் அனுப்பியுள்ளான். நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்? நீங்கள் விரும்பினால் இவர்களை இரண்டு மலைகளையும் கொண்டு நசுக்கி விடுகிறேன்'' என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) ''அதை ஒருக்காலும் நான் விரும்ப மாட்டேன். மாறாக, அவர்களிலிருந்து அல்லாஹ்வை மட்டும் வணங்கி அவனுக்கு இணை வைக்காதவர்களை அவன் உருவாக்குவான் என்று நான் ஆதரவு வைக்கிறேன்'' என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

இந்த பதிலின் மூலம் நபி (ஸல்) அவர்களின் தனித்தன்மை தெரியவருவதுடன், அவர்கள் எத்தகைய மகத்தான பண்புள்ளவர்கள் என்பதையும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

ஏழு வானங்களுக்கு மேலிருந்து அல்லாஹ் அருளிய இம்மறைவான உதவியைப் பார்த்து நபி (ஸல்) அவர்களின் மனம் மிகவும் நிம்மதியடைந்தது. தொடர்ந்து மக்காவை நோக்கி பயணமாகும்போது 'நக்லா' என்ற பள்ளத்தாக்கில் சில நாட்கள் தங்கினார்கள். வாதி நக்லாவில் தங்குவதற்கு வசதியான தண்ணீரும் செழிப்புமுள்ள அஸ்ஸய்லுல் கபீர், ஜைமா என்ற இரு இடங்கள் இருந்தன. இவ்விரு இடங்களில் குறிப்பாக எந்த இடத்தில் நபி (ஸல்) அவர்கள் தங்கினார்கள் என்பதற்கு சரியான ஆதாரம் நமக்குக் கிடைக்கவில்லை.

நபி (ஸல்) அவர்கள் இவ்விடத்தில் தங்கியிருக்கும்போது சில ஜின்களை அல்லாஹ் நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தான். (ஸஹீஹுல் புகாரி)

இந்த ஜின்களைப் பற்றி குர்ஆனில் இரண்டு இடங்களில் அல்லாஹ் குறிப்பிடுகின்றான். ஒன்று 'அஹ்காஃப்' எனும் அத்தியாயத்தில்:

''(நபியே!) இந்தக் குர்ஆனைக் கேட்கும் பொருட்டு, ஜின்களில் சிலரை நாம் உங்களிடம் வருமாறு செய்து, அவர்கள் வந்த சமயத்தில் (அவர்கள் தங்கள் மக்களை நோக்கி) ''நீங்கள் வாய்பொத்தி (இதனைக் கேட்டுக்கொண்டு) இருங்கள்'' என்று கூறினார்கள். (இது) ஓதி முடிவு பெறவே, தங்கள் இனத்தார்களிடம் சென்று அவர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்தனர்.

(அவர்களை நோக்கி) "எங்களுடைய இனத்தாரே! நிச்சயமாக நாங்கள் ஒரு வேதத்தைச் செவியுற்றோம். அது மூஸாவுக்குப் பின்னர் அருளப்பட்டிருக்கின்றது. அது, தனக்கு முன்னுள்ள வேதங்களையும் உண்மைப்படுத்துகின்றது. அது சத்தியத்திலும், நேரான வழியிலும் செலுத்துகின்றது. எங்களுடைய இனத்தாரே! அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவர்களுக்குப் பதில் கூறி, அவரை நம்பிக்கை கொள்ளுங்கள். உங்களுடைய பாவங்களை (அல்லாஹ்) மன்னித்தும் விடுவான். துன்புறுத்தும் வேதனையிலிருந்தும் உங்களைக் காப்பாற்றுவான்." (அல்குர்ஆன் 46:29, 30, 31)

மற்றொன்று 'ஜின்' எனும் அத்தியாயத்தில்:

"(நபியே!) நீங்கள் கூறுங்கள்: "வஹி மூலம் எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. நிச்சயமாக, ஜின்களில் சிலர் (இவ்வேதத்தைச்) செவியுற்று(த் தங்கள் இனத்தார்களிடம் சென்று அவர்களை நோக்கி) "நிச்சயமாக, நாங்கள் மிக்க ஆச்சரியமான ஒரு குர்ஆனைச் செவியுற்றோம் அது நேரான வழியை அறிவிக்கின்றது. ஆகவே, அதனை நாங்கள் நம்பிக்கை கொண்டோம். (இனி) நாங்கள் எங்கள் இறைவனுக்கு ஒருவனையும் இணையாக்க மாட்டோம்..." (அல்குர்ஆன் 72:1-15)

ஜின்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து குர்ஆனை கேட்டுச் சென்றன. இதனை இந்த வசனங்கள் மூலம் அல்லாஹ் அறிவித்தப் பிறகு தான் நபி (ஸல்) அவர்கள் அறிந்து கொண்டார்கள். அதற்கு முன்பு இது அவர்களுக்குத் தெரியாது. இதுதான் ஜின்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்த முதல் முறையாகும் என்பது நமக்குத் தெரியவருகிறது. மேலும், இந்நிகழ்ச்சிக்குப் பிறகு ஜின்கள் நபி (ஸல்) அவர்களிடம் பலமுறை வந்திருக்கிறார்கள் என்பதும் வேறு சில அறிவிப்புகளிலிருந்து தெரிய வருகிறது.

இது உண்மையில் அல்லாஹ்வின் மறைவான பொக்கிஷத்திலிருந்து அருளப்பட்ட மகத்தான உதவியாகும். தன்னைத் தவிர வேறு எவரும் அறிந்துகொள்ள முடியாத அவனுடைய படையைக் கொண்டு, அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு உதவி செய்தான். மேலும், இது தொடர்பாக இறங்கிய வசனங்களில் நபி (ஸல்) அவர்களின் அழைப்புப் பணி வெற்றியடையும் என்ற நற்செய்திகளும் இருந்தன. இப்பிரபஞ்சத்தின் எந்தவொரு சக்தியும் அவர்களின் அழைப்புப் பணி வெற்றியடைவதை தடுத்திட முடியாது என்று அவ்வசனங்கள் மிக உறுதியாக அறிவித்தன.

"எவன் அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவர்களுக்குப் பதில் கூறவில்லையோ (அவனை நிச்சயமாக அல்லாஹ் தண்டிப்பான். தண்டனையில் இருந்து தப்ப) அவன் பூமியில் எங்கு ஓடியபோதிலும் அல்லாஹ்வை தோற்கடிக்க முடியாது. அல்லாஹ்வை அன்றி, பாதுகாப்பவர் அவனுக்கு ஒருவருமில்லை. (அவனைப் புறக்கணிக்கும்) இத்தகையவர்கள் பகிரங்கமான வழிகேட்டில்தான் இருப்பர்"

"நிச்சயமாக நாம் பூமியில் அல்லாஹ்வைத் தோற்கடிக்க முடியாது என்பதையும், (பூமியிலிருந்து) ஓடி அவனை விட்டுத் தப்பித்துக்கொள்ள முடியாது என்பதையும் உறுதியாக அறிந்துகொண்டோம்." (அல்குர்ஆன் 72:12)

அல்லாஹ்வின் இந்த மாபெரும் உதவியாலும் மகத்தான நற்செய்திகளாலும் நபி (ஸல்) அவர்களின் உள்ளத்திலிருந்து கவலை நீங்கியது துக்கம் அகன்றது மக்காவிற்கு திரும்பச் சென்று இஸ்லாமைப் பரப்புவதிலும் நிரந்தரமான அல்லாஹ்வின் தூதுத்துவத்தை எடுத்துரைப்பதிலும் தனது முந்திய திட்டத்தையே புதிய உற்சாகத்துடனும், துணிவுடனும், வீரத்துடனும் செய்ய வேண்டும் என்று உறுதிகொண்டார்கள்.

அப்பொழுது ஜைது இப்னு ஹாஸா "நபியே! குறைஷிகள் உங்களை மக்காவிலிருந்து வெளியேற்றி இருக்க, நீங்கள் இப்பொழுது எப்படி அங்கு செல்ல முடியும்?" என்றார்.

அதற்கு “ஜைதே! நீங்கள் பார்க்கும் இந்த துன்பங்களுக்கு ஒரு முடிவையும் நல்ல மகிழ்ச்சி தரும் மாற்றத்தையும் நிச்சயம் அல்லாஹ் ஏற்படுத்தி இருக்கிறான். நிச்சயமாக, அல்லாஹ் அவனது மார்க்கத்திற்கு உதவி செய்வான் அவனது நபிக்கு வெற்றியைத் தருவான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

பிறகு தனது பயணத்தைத் தொடர்ந்து மக்கா அருகே வந்தவுடன் “ரா குகையில் தங்கிக் கொண்டு குஜாஆ கூட்டத்தைச் சேர்ந்த ஒருவரை அக்னஸ் இப்னு ஷுரைக்கிடம் அவர் தனக்கு அடைக்கலம் தர வேண்டும்” எனக் கூறி தூது அனுப்பினார்கள். ஆனால், “தான் மக்காவாசிகளுடன் நட்பு கொண்டவராக இருப்பதால், அவர்கள் விரும்பாதவருக்கு பாதுகாப்பு அளிக்க முடியாது” என்று அக்னஸ் கூறிவிட்டார். பிறகு சுஹைல் இப்னு அயிடம் நபி (ஸல்) அவர்கள் தூதனுப்பினார்கள். அதற்கு “தான், ஆமிர் கிளையைச் சேர்ந்தவன். எனவே, கஅப் கிளையாருக்கு எதிராக என்னால் அடைக்கலம் கொடுக்க முடியாது” என்று அவர் மறுத்துவிட்டார்

அதற்குப் பிறகு நபி (ஸல்) அவர்கள் முத்இமிடம் தூது அனுப்பினார்கள். முத்இம் “ஆம்! நான் அடைக்கலம் தருவேன்” என்று கூறி, தானும் ஆயுதங்களை அணிந்துகொண்டு தனது ஆண் பிள்ளைகள் மற்றும் கூட்டத்தாரையும் ஆயுதம் அணியச் செய்து, கஅபாவுக்கு அழைத்துச் சென்றார். அங்கு நான்கு மூலைகளிலும் அவர்களை நிற்கவைத்து, “நான் முஹம்மதிற்கு அடைக்கலம் கொடுத்து விட்டேன். அதனால்தான் உங்களை இங்கு அழைத்து வந்தேன்” என்று அவர்களுக்கு அறிவித்தார்.

பிறகு நபி (ஸல்) அவர்களை அழைத்துவர ஒருவரை அனுப்பினார். நபி (ஸல்) அவர்கள் ஜைது இப்னு ஹாஸாவுடன் மஸ்ஜிதுல் ஹராமிற்கு வந்தார்கள். முத்இம் தனது ஒட்டகத்தின் மீதேறி அமர்ந்துகொண்டு “குறைஷிகளே! நான் முஹம்மதிற்கு அடைக்கலம் கொடுத்து விட்டேன். உங்களில் எவரும் முஹம்மதை பழிக்கக் கூடாது” என்று அறிவிப்புச் செய்தார். நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ருல் அஸ்வத்தை முத்தமிட்டு, கஅபாவை வலம் வந்து, இரண்டு ரகஅத்துகள் தொழுதுவிட்டு தனது வீட்டிற்குச் சென்றார்கள். அது வரையிலும் முத்இமும் அவரது மக்களும் ஆயுதமேந்தி பாதுகாப்பிற்காக நபி (ஸல்) அவர்களைச் சுற்றி நின்று இருந்தனர்.

அபூஜஹ்ல் “நீ அடைக்கலம் (மட்டும்) அளித்துள்ளாயா? அல்லது முஸ்லிமாகி விட்டாயா?” என்று முத்இமிடம் கேட்டான். அதற்கு “இல்லை. நான் அடைக்கலம்தான் அளித்துள்ளேன்” என்று முத்இம் கூறவே, “சரி! நீ அடைக்கலம் கொடுத்தவருக்கு நாங்களும் அடைக்கலம் கொடுக்கிறோம்” என்று கூறினான். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

முத்இமின் இந்த செயலை நபி (ஸல்) நினைவு வைத்திருந்தார்கள். “பத்ர் போரில் எதிரிகள் பலர் கைதிகளாக்கப்பட்டபோது, முத்இம் உயிருடன் இருந்து, இந்த துர்நாற்றம் பிடித்தவர்களின் உரிமைக்காக என்னிடம் பேசியிருந்தால் அவருக்காக இவர்கள் அனைவரையுமே நான் விடுதலை செய்திருப்பேன்” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

### கோத்திரங்களுக்கும் தனி நபர்களுக்கும் இஸ்லாமை அறிமுகப்படுத்துதல்

நபித்துவத்தின் பத்தாம் ஆண்டு துல்காயிதா மாதத்தில் (ஜூன் இறுதி அல்லது ஜூலை தொடக்கம் கி.பி. 619ல்) நபி (ஸல்) அவர்கள் மக்காவிற்குத் திரும்பினார்கள். பல கோத்திரங்களுக்கும் தனி நபர்களுக்கும் இஸ்லாமை மீண்டும் புதிதாக அறிமுகப்படுத்தினார்கள். ஹஜ்ஜுடைய காலம் நெருங்கியபோது மக்கள் அனைவரும் பல திசைகளிலிருந்து ஹஜ்ஜு கடமையை நிறைவேற்றுவதற்காக மக்காவிற்கு வந்த

வண்ணமிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஒவ்வொரு கோத்திரத்திற்கும் சென்று அவர்களுக்கு இஸ்லாமை அறிமுகப்படுத்தி, அதன்பக்கம் அழைப்புக் கொடுத்தார்கள். நபித்துவத்தின் நான்காவது ஆண்டிலிருந்து இப்படித்தான் அம்மக்களை இஸ்லாமின் பக்கம் அழைத்து வந்தார்கள். ஆனால், இந்த பத்தாவது ஆண்டு மேலும் ஒரு கோரிக்கையையும் அவர்களுக்கு முன் வைத்தார்கள். அதாவது, நான் அல்லாஹ்வின் மார்க்கத்தை எடுத்து வைப்பதற்கு எனக்கு இடம் கொடுத்து உதவி செய்து எதிரிகளிடமிருந்து எனக்கு பாதுகாப்பு அளியுங்கள் என்று அம்மக்களிடம் கேட்டுக்கொண்டார்கள்.

**இஸ்லாம் அறிமுகப்படுத்தப்பட்ட கோத்திரத்தினர்**

இமாம் ஜுஹ்ரி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் பல கோத்திரத்தாரிடம் சென்று இஸ்லாமிய அழைப்பு விடுத்தார்கள். அவர்களின் பெயர்களாவன:

ஆமிர் இப்னு ஸஃஸஆ கிளையினர்: முஹாப்னு கஸ்ஃபஹ், ஃபஜாரா, கஸ்ஸான், முர்ரா, ஹனீஃபா, ஸுலைம், அப்ஸ், பனூ நஸ்ர், பனூ பக்கா, கிந்தா, கல்ப், ஹாரிஸ் இப்னு கஅப், உத்ரா, ஹழாமா ஆகிய கோத்திரத்தாருக்கு ஓரிறைக் கொள்கையை இதமாக எடுத்துரைத்தும் அவர்களில் எவரும் அழைப்பை ஏற்கவில்லை. (இப்னு ஸஅத்)

மேற்கண்ட அனைத்து கோத்திரத்தாரையும் ஒரே ஆண்டுக்குள் அல்லது ஒரே ஹஜ் காலத்திலேயே அழைத்திடவில்லை. நபித்துவத்தின் நான்காம் ஆண்டு மெல்ல மெல்லத் தொடங்கிய இந்த பகிரங்க அழைப்புப் பணி நபி (ஸல்) அவர்கள் மதீனா செல்லும்வரை நீடித்தது. எனவே, இன்ன கோத்திரத்தாரை இன்ன ஆண்டுதான் அழைத்தார்கள் என்று குறிப்பிட்டுக் கூறிட முடியாது. என்றாலும் பெரும்பாலான கோத்திரத்தாரை நபித்துவத்தின் பத்தாம் ஆண்டுதான் அழைத்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் அழைப்பை இந்த கோத்திரத்தார் எவ்வாறு எடுத்துக் கொண்டனர் என்பதைக் குறித்து இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுவதை சுருக்கமாகக் காண்போம்:

1) ‘கல்ப்’ கிளையினர்: நபி (ஸல்) அவர்கள் இவர்களின் உட்பிவான அப்துல்லாஹ் உடைய குடும்பத்தாரை, “அப்துல்லாஹ்வின் மக்களே! அல்லாஹ் உங்கள் தந்தைக்கு எத்துணை அழகிய பெயரை வழங்கியிருக்கின்றான்” என்றெல்லாம் நயமாக கூறி அழைத்துப் பார்த்தார்கள். எதற்கும் அவர்கள் அசையவில்லை.

2) ‘ஹனீஃபா’ கிளையினர்: இம்மக்களின் வீடு வீடாகச் சென்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு அழைத்துப் பார்த்தார்கள். ஆனால், அவர்கள் அதை ஏற்காதது மட்டுமின்றி, நபி (ஸல்) அவர்களிடம் முரட்டுத்தனமாகவும் நடந்துகொண்டனர்.

3) ‘ஆமிர் இப்னு ஸஃஸஆ’ கிளையினர்: நபி (ஸல்) அவர்கள் இவர்களிடம் சென்று தன்னை அறிமுகப்படுத்தி அல்லாஹ்வின் பக்கம் அழைத்தார்கள். அவர்களில் பைஹரா இப்னு ஃபிராஸ் என்பவர் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் இந்த குறைஷி வாலிபரை பிடித்து என்னிடம் வைத்துக் கொண்டால் இவர் மூலம் முழு அரபியர்களையும் நான் வெற்றி கொள்வேன்” என்று கூறினார். மேலும், நபி (ஸல்) அவர்களை சந்தித்து, “உங்களது மார்க்கத்தில் சேர்ந்து நாங்கள் உங்களிடம் ஒப்பந்தம் செய்து கொடுக்கிறோம். பிறகு உங்களுக்கு மாறு செய்யும் சமுதாயத்திற்கு எதிராக அல்லாஹ் உங்களுக்கு வெற்றியைத் தந்தால், உங்களுடைய மறைவுக்குப் பின் எங்களுக்கு அதிகாரம் கிடைக்குமா?” என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “அதிகாரங்கள் அனைத்தும் அல்லாஹ்விற்கே உரியன. அவன் விரும்பிய கூட்டத்திற்கு அதைக் கொடுப்பான்” என்று பதிலளித்தார்கள். அதற்கு பைஹரா “உங்கள் முன்னிலையில் அரபியர்களுக்கு எதிராக நாங்கள் போரிட்டு அவர்களின் அம்புகளுக்கு எங்கள் கழுத்துக்களை இலக்காக்கிக் கொள்ள, அல்லாஹ்

உங்களுக்கு வெற்றி கொடுத்தப்பின் நிர்வாக அதிகாரம் எங்களுக்கு இல்லாமல் மற்றவர்களுக்கா? இதெப்படி நேர்மையாகும்? அப்படிப்பட்ட உங்கள் மார்க்கம் எங்களுக்குத் தேவையில்லை'' என்று கூறிவிட்டான். அதற்குப்பின் அந்த கிளையினரும் இஸ்லாமை ஏற்க மறுத்துவிட்டனர். (இப்னு ஹிஷாம்)

ஆமிர் கிளையினர் ஹஜ்ஜை முடித்துக்கொண்டு தங்களது ஊருக்குத் திரும்பியபோது ஹஜ்ஜில் கலந்துகொள்ள இயலாத ஒரு முதியவரிடம் சென்று, "அப்துல் முத்தலிபின் கிளையிலுள்ள குறைஷி வாலிபர் ஒருவர் எங்களிடம் தன்னை 'நபி' என்று அறிமுகப்படுத்தினார். அவருக்குப் பாதுகாப்பளிக்க வேண்டும் அவருக்கு உதவி செய்ய வேண்டும் அவரை நமது ஊருக்கு அழைத்து வர வேண்டும் என்று எங்களிடம் கூறினார்'' என்றார்கள். இதைக் கேட்ட அந்த வயோதிகர் "கைவிட்டுப் போய்விட்டதே! அவரை விட்டுவிட்டீர்களே! எனது உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக! நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்த எவரும் பொய் கூறமாட்டார்கள். நிச்சயம் அவர் கூறியது உண்மைதான். உங்களது அறிவு உங்களை விட்டு எங்கே போனது?'' என்று கடிந்துரைத்து மிகுந்த கைசேதத்தை வெளிப்படுத்தினார்.

நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமை பல குலத்தாருக்கும் கோத்திரத்தாருக்கும் குழுக்களுக்கும் அறிமுகப்படுத்தியது போன்றே தனி நபர்களுக்கும் அறிமுகப்படுத்தினார்கள். அவர்களில் சிலரிடமிருந்து நபி (ஸல்) அவர்கள் நல்ல பதில்களை பெற்றார்கள். ஹஜ் முடிந்து சில காலங்களிலேயே அவர்களில் பலர் இஸ்லாமைத் தழுவினர். அவர்களில் சிலரை இங்கு பார்ப்போம்:

1) ஸுவைத் இப்னு ஸாமித்: இவர் மதீனாவாசிகளில் நுண்ணறிவு மிக்க பெரும் கவிஞராக விளங்கினார். இவர் வீரதீரம், கவியாற்றல், சிறப்பியல்பு, குடும்பப் பாரம்பரியம் ஆகிய சிறப்புகளால் இவரது சமுதாயம் இவரை 'அல்காமில்' (முழுமையானவர்) என்று அழைத்தனர். இவர் ஹஜ் அல்லது உம்ரா செய்வதற்காக மக்கா வந்தார். இஸ்லாமிய அழைப்புக்காக அவரிடம் நபி (ஸல்) அவர்கள் பேசியபோது அவர் "உங்களிடம் இருப்பதும் என்னிடம் இருப்பதும் ஒன்றாகத்தான் இருக்கும்'' என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "உங்களிடம் என்ன இருக்கிறது?'' என்று கேட்டதற்கு "நான் லுக்மான் (அலை) வழங்கிய ஞானபோதனைகளைக் கற்று வைத்துள்ளேன்'' என்றார். நபி (ஸல்) அவர்கள் "எனக்கு அதை சொல்லிக் காட்டுங்கள்'' என்று கேட்கவே, அவர் அதை சொல்லிக் காண்பித்தார். அதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள், "நிச்சயமாக இது அழகிய பேச்சுதான். எனினும், என்னிடம் இருப்பதோ இதைவிட மிகச் சிறந்தது. அதுதான் அல்லாஹ் எனக்கு அருளிய குர்ஆன். அது ஒளிமிக்கது நேர்வழி காட்டக்கூடியது'' என்று கூறி, குர்ஆனை அவருக்கு ஓதி காண்பித்து, அவரை இஸ்லாமின் பக்கம் அழைத்தார்கள். குர்ஆன் அவரது உள்ளத்தைக் கவர்ந்தது. "இது மிக அழகிய வசனங்கள் உடைய வேதமாக இருக்கிறதே'' என வருணித்து இஸ்லாமைத் தழுவினார். பிறகு மதீனா வந்த சில காலத்திலேயே புஆஸ் போருக்கு முன்பாக அவ்ஸ் மற்றும் கஸ்ரஜ் கோத்திரத்தாடையில் நடந்த சண்டையில் கொல்லப்பட்டார். அநேகமாக நபித்துவத்தின் 11 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அவர் இஸ்லாமை தழுவியிருக்கலாம்.

2) இயாஸ் இப்னு முஆத்: மதீனாவைச் சேர்ந்த இளைஞரான இவர் 'புஆஸ்' யுத்தத்திற்கு முன் நபித்துவத்தின் 11வது ஆண்டு அவ்ஸ் கிளையினர் கஸ்ரஜ் கிளையாருக்கு எதிராக மக்காவிலுள்ள குறைஷிகளிடம் நட்பு ஒப்பந்தம் செய்ய வந்தபோது இவரும் அவ்ஸ் கிளையாருடன் மக்கா வந்தார். மதீனாவில் அவ்ஸ் கஜ்ரஜுக்கிடையில் பகைமைத் தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த சமயம் அது. அவ்ஸ் கிளையினர் கஸ்ரஜ்ஜை விட எண்ணிக்கையில் குறைவாக இருந்ததால் குறைஷிகளின் நட்பை நாடி வந்தனர்.

இவர்களின் வருகையை அறிந்துகொண்ட நபி (ஸல்), இவர்களிடம் சென்று “நீங்கள் எதற்காக வந்துள்ளீர்களோ அதைவிடச் சிறந்த ஒன்றை அறிந்துகொள்ள உங்களுக்கு ஆர்வமுள்ளதா?” என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் “அது என்ன?” என்று கேட்க, நபி (ஸல்) அவர்கள் “நான் அல்லாஹ்வின் தூதராவேன். அவன் என்னை அவனது அடியார்களிடம் அனுப்பியுள்ளான். அவர்கள் அல்லாஹ்வை வணங்க வேண்டும் அவனுக்கு எதையும் இணையாக்கக் கூடாது அல்லாஹ் எனக்கு வேதத்தையும் இறக்கி வைத்திருக்கிறான்” என்று கூறி இஸ்லாமின் ஏனைய விஷயங்களையும் நினைவூட்டி, குர்ஆனையும் ஓதிக் காண்பித்தார்கள்.

அப்போது இயாஸ் “எனது கூட்டத்தாரே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் வந்திருக்கும் நோக்கத்தை விட இதுதான் மிகச் சிறந்தது” என்று கூறினார். உடனே அக்கூட்டத்தில் உள்ள அபுல் ஹைஸர் என்ற அனஸ் இப்னு ராஃபி, ஒருபிடி மண் எடுத்து இயாஸின் முகத்தில் வீசி எறிந்து, “இதோ பார்! எங்களை விட்டுவிடு. சத்தியமாக நாங்கள் வேறொரு நோக்கத்திற்கு வந்திருக்கிறோம்” என்று கூறினான். அதற்குப் பின் இயாஸ் வாய்மூடிக் கொள்ளவே நபி (ஸல்) அங்கிருந்து எழுந்து சென்று விட்டார்கள். அவ்ஸ் கிளையினர் குறைஷிகளுடன் நட்பு ஒப்பந்தம் செய்வதில் தோல்வி கண்டு மதீனா திரும்பினர். அடுத்த சில காலத்திலேயே, இயாஸ் இறந்துவிட்டார். அவர் மரணிக்கும்போது ‘லாஇலாஹஇல்லல்லாஹ், அல்லாஹு அக்பர், அல்ஹம்துலில்லாஹ்’ என்று சொல்லிக் கொண்டிருந்தார். அவர் முஸ்லிமாகவே இறந்தார் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை. (இப்னு ஹிஷாம், முஸ்னது அஹ்மது)

3) அபூதர் கிஃபா: இவர் மதீனாவின் சுற்றுப்புறத்தில் வசித்து வந்தார். ஸுவைத், இயாஸ் ஆகியோரின் மூலம் நபி (ஸல்) அவர்களின் தூதுத்துவச் செய்தி மதீனாவை அடைந்தபோது அபூதருக்கும் அந்த செய்தி எட்டியிருக்கலாம். பிறகு அதுவே இஸ்லாமில் வர ஆர்வம் ஏற்பட்டதற்குக் காரணமாக அமைந்திருக்கலாம்.

அபூ ஜம்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது: எங்களிடம் இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள், “அபூதர் அவர்கள் இஸ்லாமைத் தழுவிய விதம் குறித்து உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?” என்று கேட்டார்கள், நாங்கள் “அறிவியுங்கள்” என்றவுடன் இப்னு அப்பாஸ் அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.

அபூதர் அவர்கள் (என்னிடம்) சொன்னார்கள்: “நான் கிஃபார் குலத்தைச் சேர்ந்த ஒருவனாக இருந்தேன். அப்போது தம்மை நபி என்று சொல்லிக்கொண்டு ஒரு மனிதர் மக்காவில் திரிகிறார் என்று எங்களுக்குச் செய்தி எட்டியது. ஆகவே, நான் என் சகோதரர் அனீஸிடம் “நீ இந்த மனிதரிடம் போய் பேசி அவரைப் பற்றிய செய்தியைத் தெரிந்து வா” என்று சொன்னேன். அவ்வாறே சென்று அவரைச் சந்தித்து திரும்பி வந்தார். நான், “உன்னிடம் என்ன செய்தி இருக்கிறது?” என்று கேட்டேன். “நன்மை புரியும்படி கட்டளையிடவும் தீமையிலிருந்து (மக்களைத்) தடுக்கவும் செய்கின்ற ஒரு மனிதராக நான் அவரைக் கண்டேன்” என்றார். நான் அவரிடம் ‘அவரைப் பற்றிய முழுமையான செய்தியை எனக்கு நீ தரவில்லை’ என்று கூறினேன். பிறகு தோலினால் ஆன தண்ணீர் பையையும் கைத்தடியையும் எடுத்துக் கொண்டு மக்கா நோக்கிப் புறப்பட்டேன்.

அவரை நான் தேடி வந்திருப்பதாகக் காட்டிக் கொள்ளவில்லை. அவரைப் பற்றி விசாரிக்கவும் நான் விரும்பவில்லை. வேறு உணவு இல்லாததால் ஜம்ஜம் தண்ணீரைக் குடித்துக் கொண்டு இறையில்லத்தில் தங்கியிருந்தேன். அப்போது அலீ (ரழி) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். என்னைக் கண்டதும் “ஆள் ஊருக்குப் புதியவர் போலத் தெரிகிறதே” என்று கேட்டார்கள், நான், “ஆம்!” என்றேன். உடனே அவர்கள், “அப்படியென்றால் நம் வீட்டிற்கு வாருங்கள் போகலாம்” என்று சொன்னார்கள். நான்

அவர்களுடன் சென்றேன். ஆனால், எதைப் பற்றியும் அவர்களிடம் நான் கேட்கவுமில்லை எதையும் அவர்களுக்குத் தெரிவிக்கவுமில்லை.

காலையானதும் நபி (ஸல்) அவர்களைப் பற்றி விசாரிக்க கஅபாவிற்குச் சென்றேன். ஆனால், அங்கு ஒருவரும் அவர்களைப் பற்றி எதையும் எனக்குத் தெரிவிக்கவில்லை. அப்போது அலீ (ரழி) என்னைப் பார்த்தார்கள். "தாங்கள் தங்க வேண்டியுள்ள வீட்டை அடையாளம் தெரிந்துகொள்ளும் நேரம் இன்னும் வரவில்லையா?" என்று சாடையாகக் கேட்டார்கள். நான், "இல்லை" என்றேன். உடனே அலீ (ரழி) "என்னுடன் வாருங்கள்" என்று சொல்லிவிட்டு, "விவகாரம் என்ன? இந்த ஊருக்கு எதற்காக வந்தீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு, "நான் சொல்வதைப் பிறருக்குத் தெரியாமல் நீங்கள் மறைப்பதாயிருந்தால் உங்களுக்கு அதை தெரிவிக்கிறேன்" என்றேன். அதற்கு அவர்கள் "அவ்வாறே செய்கிறேன்" என்றார்கள்.

நான் அப்போது 'இங்கே தம்மை இறைத்தூதர் என்று கூறிக்கொண்டு ஒரு மனிதர் புறப்பட்டிருக்கிறார்' என்று எங்களுக்குச் செய்தி எட்டியது. நான் என் சகோதரரை அவரிடம் பேசி வரும்படி அனுப்பினேன். போதிய விவரத்தை என்னிடம் அவர் கொண்டு வரவில்லை. ஆகவே, நான் அவரை (நேரடியாகச்) சந்திக்க விரும்பினேன்" என்று சொன்னேன். அதற்கு அவர்கள், "நீங்கள் நேரான வழியை அடைந்துள்ளீர்கள். இது நான் அவரிடம் செல்லும் நேரம். ஆகவே, என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள். நான் நுழையும் வீட்டில் நீங்களும் நுழையுங்கள். போகும்போது உங்களுக்கு ஆபத்து ஏற்படும் என்று நான் அஞ்சுகின்ற ஒருவனைக் கண்டால், செருப்பைச் சரிசெய்பவனைப் போல் சுவரோரமாக நான் நின்று கொள்வேன். நீங்கள் என்னைக் கடந்து போய்க் கொண்டிருங்கள்" என்று சொன்னார்கள்.

இறுதியில் அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் செல்ல, நானும் அவர்களுடன் உள்ளே சென்றேன். நான் நபி (ஸல்) அவர்களிடம் "எனக்கு இஸ்லாமை எடுத்துரையுங்கள்" என்று சொல்ல அவர்கள் அதை எடுத்துரைத்தார்கள். நான் அதே இடத்தில் இஸ்லாமை ஏற்றுக் கொண்டேன். நபி (ஸல்) அவர்கள் என்னிடம் "அபூதர்ரே! (நீங்கள் இஸ்லாமை ஏற்ற) இந்த விஷயத்தை மறைத்து வையுங்கள். தங்கள் ஊருக்குத் திரும்பிச் செல்லுங்கள். நாங்கள் மேலோங்கி பெரும்பான்மையாகி விட்ட செய்தி உங்களுக்கு எட்டும்போது எங்களிடம் வாருங்கள்" என்று சொன்னார்கள். அதற்கு நான் "உங்களை சத்திய மார்க்கத்துடன் அனுப்பியவன் மீதாணையாக! நான் இதை (ஏகத்துவக் கொள்கையை) அவர்களுக்கிடையே உரக்கச் சொல்வேன்" என்று சொல்லிவிட்டு இறையில்லத்திற்கு வந்தேன்.

குறைஷிகள் அங்கே கூடி இருந்தனர். நான், "குறைஷி குலத்தாரே! 'அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவருமில்லை' என்று நான் சாட்சி கூறுகின்றேன். 'முஹம்மது அவர்கள் அவனுடைய அடியாரும் அவனுடைய தூதரும் ஆவார்' என்றும் நான் சாட்சி கூறுகிறேன்" என்றேன். உடனே "மதம் மாறிய இவனை எழுந்து சென்று கவனியுங்கள்" என்ற கட்டளை பறந்தது. அவர்கள் எழுந்து வந்தார்கள். உயிர் போவது போல் நான் கடுமையாகத் தாக்கப்பட்டேன். அப்போது அப்பாஸ் அவர்கள் என்னை அடையாளம் கண்டு என்மீது கவிழ்ந்து அடிபடாமல் பார்த்துக் கொண்டார்கள். பிறகு குறைஷிகளை நோக்கி "உங்களுக்குக் கேடு உண்டாகட்டும்! கிஃபார் குலத்தைச் சேர்ந்த மனிதரையா நீங்கள் கொல்கிறீர்கள்? நீங்கள் வியாபாரம் செய்யுமிடமும் நீங்கள் (வியாபாரத்திற்காகக்) கடந்து செல்ல வேண்டிய பாதையும் கிஃபார் குலத்தவர் வசிக்குமிடத்தையொட்டித் தானே உள்ளது! (அவர்கள் பழிவாங்க வந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?)" என்று கேட்டவுடனே அவர்கள் என்னைவிட்டு விலகி விட்டார்கள்.

மறுநாள் காலை வந்தவுடன் நான் மீண்டும் கஅபா சென்று நேற்று சொன்னதைப் போலவே சொன்னேன். அவர்கள் "மதம் மாறிய இவனை கவனியுங்கள்" என்று சொன்னார்கள்.

நேற்று என்னைத் தாக்கியது போலவே இன்றும் தாக்கினார்கள். அப்பாஸ் (ரழி) அவர்கள் என்னைக் கண்டுகொண்டு என்மீது கவிழ்ந்து (அடிபடாதவாறு பார்த்துக்) கொண்டார்கள். நேற்று அப்பாஸ் (ரழி) அவர்கள் சொன்னதைப் போலவே (இன்றும்) சொன்னார்கள்.''

(இதை அறிவித்த பிறகு) இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் ''இது அபூதர் அவர்கள் இஸ்லாமை தழுவிய ஆரம்பக் காலத்தில் நடந்த நிகழ்ச்சியாகும். அல்லாஹ் அபூதருக்கு கருணை காட்டுவானாக!'' என்று சொன்னார்கள். (ஸஹீஹுல் புகாரி)

4) துஃபைல் இப்னு அம்ர் தவ்ஸி: இவர் தவ்ஸ் கூட்டத் தலைவர். சிறந்த பண்புள்ளவராகவும், நுண்ணறிவாளராகவும், கவிஞராகவும் இருந்தார். இவருடைய கோத்திரம் யமன் நாட்டில் வசித்து வந்தது. இவர்களுக்கென தனி ஆட்சி அதிகாரம் இருந்தது. இவர் நபித்துவத்தின் 11 வது ஆண்டு மக்கா வந்தபோது மக்காவாசிகள் இவரை மிகுந்த உற்சாகம் பொங்க மகிழ்ச்சி ஆரவாரத்துடன் வரவேற்றனர். அவர்கள் ''துஃபைலே! நீங்கள் எங்கள் ஊருக்கு வந்திருக்கிறீர்கள் இதோ இந்த மனிதர் இருக்கிறாரே எங்களுக்கு மிகுந்த சிரமத்தைக் கொடுத்துவிட்டார் எங்களது ஒற்றுமையைக் குலைத்து எங்கள் காரியங்களைச் சின்னபின்னமாக்கி விட்டார் இவரது பேச்சு சூனியம் போன்றது பெற்றோர், பிள்ளைகள், சகோதரர்கள், கணவன், மனைவி ஆகியோடையே பிரிவினையை உண்டாக்கிவிட்டார் எங்களுக்கு ஏற்பட்ட இந்நிலை உமக்கோ உமது கூட்டத்தினருக்கோ ஏற்பட்டுவிடக் கூடாது என்றுதான் நாங்கள் பயப்படுகிறோம். நீங்கள் அவரிடம் எதுவும் பேசவும் வேண்டாம் எதையும் கேட்கவும் வேண்டாம்'' என்று அவருக்கு அறிவுரைக் கூறினார்கள்.

துஃபைல் கூறுகிறார்: ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! தொடர்ந்து இவ்வாறே மக்காவாசிகள் எனக்கு அறிவுரை சொல்லிக் கொண்டிருந்ததால் நபி (ஸல்) அவர்களின் எந்தப் பேச்சையும் கேட்கக் கூடாது அவரிடம் அறவே பேசவும் கூடாது என்று முடிவு செய்து கொண்டேன். நபி (ஸல்) அவர்களின் பேச்சைக் கேட்டுவிடுவோமோ என்ற பயத்தில் பள்ளிக்குச் செல்லும்போது எனது காதில் துணியை வைத்து அடைத்துக் கொள்வேன்.

நான் ஒருமுறை பள்ளிக்குச் சென்றபோது கஅபா அருகே நபி (ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அருகில் நானும் சென்று நின்று கொண்டேன். அவர்களது சில பேச்சை நான் கேட்டே ஆகவேண்டுமென்று அல்லாஹ் நாடிவிட்டான் போலும். அவர்களிடமிருந்து மிக அழகிய பேச்சைக் கேட்ட நான், எனக்குள் ''எனது தாய் என்னை இழக்கட்டும். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் திறமைமிக்க புத்திசாலியான கவிஞன். நல்லது எது? கெட்டது எது? என்று எனக்கு மிகத் தெளிவாகவே தெரியும். அப்படியிருக்க அவர் கூறுவதைக் கேட்காமல் இருக்க எது என்னைத் தடை செய்ய முடியும்? அவர் நன்மையைக் கூறினால் நான் ஏற்றுக் கொள்வேன். அவர் கெட்டதைக் கூறினால் நான் விட்டுவிடுவேன்'' என்று மனதிற்குள் சமாதானம் கூறிக் கொண்டேன்.

சிறிது நேரத்திற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் வீட்டிற்கு சென்றவுடன் நானும் அவர்களது வீட்டிற்குச் சென்றேன். நான் இந்த ஊருக்கு வந்தது, மக்கள் என்னிடம் எச்சரித்தது, காதில் துணியை வைத்து அடைத்துக் கொண்டது, பிறகு குர்ஆன் ஓதியதைக் கேட்டது என அனைத்துச் செய்திகளையும் விரிவாகக் கூறி, உங்கள் மார்க்கத்தைப் பற்றி எனக்கு எடுத்துக் கூறுங்கள். மேலும், நீங்கள் எனக்கு இஸ்லாமைப் பற்றி விளக்குங்கள் எனக் கூறினேன். அவர்கள் எனக்கு இஸ்லாமைப் பற்றி விளக்கி குர்ஆனையும் ஓதிக் காட்டினார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி (ஸல்) அவர்கள் ஓதிக்காட்டியதை விட அழகானதையோ, நீதமானதையோ நான் கேட்டதில்லை. உடனே நான் இஸ்லாமை ஏற்றுக் கொண்டேன். மேலும், ''நபியே எனக்கு எனது கூட்டம் கட்டுப்படுவார்கள். நான் அவர்களிடம் சென்று அவர்களை இஸ்லாமின் பக்கம் அழைப்பேன். எனவே, அல்லாஹ் எனக்கு ஒரு அத்தாட்சியைத் தரவேண்டும் என துஆ செய்யுங்கள்'' என்று கூறினேன். நபி

(ஸல்) அவர்கள் எனக்காக பிரார்த்தனையும் செய்தார்கள். பிறகு நான் மக்காவிலிருந்து புறப்பட்டேன்.

நான் எனது கூட்டத்தாருக்கு அருகாமையில் சென்றபோது, அல்லாஹ் எனது முகத்தில் விளக்கைப் போன்று ஒரு வெளிச்சத்தை ஏற்படுத்தினான். நான் "அல்லாஹ்வே! எனக்கு வேறு ஓர் இடத்தில் இதை ஏற்படுத்துவாயாக! மக்கள் இதைப் பார்த்து இது தண்டனையால் ஏற்பட்டது என்று கூறிவிடுவார்கள் என நான் பயப்படுகிறேன்" என்று வேண்டியவுடன் அந்த ஒளி எனது கைத்தடிக்கு மாறிவிட்டது. நான் எனது தந்தையையும், எனது மனைவியையும் இஸ்லாமின் பக்கம் அழைக்கவே அவர்கள் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார்கள். சிறிது தாமதித்த எனது கூட்டத்தாரும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார்கள்.

இவர் கந்தக் யுத்தம் (அகழ் போர்) நடந்து முடிந்தபின் தங்களது கூட்டத்தால் எழுபது அல்லது எண்பது குடும்பங்களுடன் மதீனாவிற்கு ஹிஜ்ரா செய்து வந்தார். இஸ்லாமிற்காக மாபெரும் தியாகங்களைச் செய்த அன்னார் யமாமா போரில் எதிரிகளால் கொல்லப்பட்டார். (இப்னு ஹிஷாம்)

5) ழிமாத் அஸ்தீ: இவர் யமனிலுள்ள அஜ்து ஷனாஆ கிளையைச் சேர்ந்தவர். இவர் மந்திரித்துப் பார்க்கும் பழக்கம் உள்ளவராக இருந்தார். இவர் மக்காவிற்கு வந்தபோது அங்குள்ள மூடர்கள் "முஹம்மது பைத்தியக்காரர்" என்று கூறக் கேட்கவே நான் அவரைச் சந்தித்து அவருக்கு மந்திரித்தால் அல்லாஹ் என் கையால் அவருக்கு சுகமளிக்கலாம் என்று தனக்குள் கூறிக்கொண்டு நபி (ஸல்) அவர்களை சந்தித்தார். அவர் நபி (ஸல்) அவர்களிடம் "முஹம்மதே! நான் ஷைத்தானின் சேட்டைகளிலிருந்து மந்திரிப்பவன். உனக்கு மந்திரித்துப் பார்க்கவா?" என்று கேட்கவே, நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:

"நிச்சயமாக எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! நாங்கள் அல்லாஹ்வை புகழ்கிறோம். அவனிடமே உதவி தேடுகிறோம். அவன் நேர்வழி காட்டியோரை வழி கெடுப்பவர் யாரும் இல்லை. அவன் வழிகேட்டில் விட்டுவிட்டவருக்கு நேர்வழி காட்டுபவர் யாரும் இல்லை. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை. அவனுக்கு இணையானவர் எவருமில்லை என்று நான் சாட்சி கூறுகின்றேன். நிச்சயமாக முஹம்மது அவனது அடிமையும் அவனது தூதருமாவார் என்று நான் சாட்சி கூறுகிறேன்" என்று மொழிந்தார்கள்.

இதைக் கேட்ட ழிமாத் "நீங்கள் சொன்ன வாக்கியங்களை எனக்குத் திரும்பச் சொல்லுங்கள்" என்று கூறவே, நபி (ஸல்) அவர்கள் மூன்று முறை அவருக்கு இதைக் கூறினார்கள். அதற்கு அவர் "நான் ஜோசியக்காரர்கள், சூனியக்காரர்கள், கவிஞர்கள் ஆகியோரின் பேச்சையெல்லாம் கேட்டிருக்கிறேன். ஆனால், நீங்கள் கூறிய வாக்கியங்களைப் போன்று இதற்குமுன் நான் ஒருபோதும் கேட்டதில்லை இவை எவ்வளவு கருத்தாழமுள்ள வாக்கியங்களாக இருக்கின்றன் உங்களது கையைக் கொடுங்கள் நான் இஸ்லாமை ஏற்றுக்கொண்டு உங்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்கிறேன்" என்று கூறி, நபி (ஸல்) அவர்களிடம் இஸ்லாமிய ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

### ஆறு மேன்மக்கள்

நபித்துவத்தின் பதினோறாவது ஆண்டு கி.பி. 620 ஜூலை ஹஜ்ஜுடைய காலத்தில் இஸ்லாமிய அழைப்புப் பணி சில புதிய நல்ல இளஞ்செடிகளைக் கண்டது. அந்த இளஞ்செடிகள் வெகு விரைவில் நிழல் தரும் அடர்த்தியான மரங்களாக மாறின. அதன் நிழல்களின் கீழ் முஸ்லிம்கள் அநியாயம் மற்றும் கொடுமைகளின் அனலிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொண்டனர். இவ்வாறே சிறிது சிறிதாக வரலாற்றுப் பாட்டை மாறிக்கொண்டே சென்றது.

மக்காவாசிகள் நபி (ஸல்) அவர்களை பொய்ப்பித்து வந்ததாலும் அல்லாஹ்வின் வழியிலிருந்து மக்களைத் தடுத்து வந்ததாலும் நபி (ஸல்) அவர்கள் மக்களைப் பகலில் சந்திக்காமல் இரவில் சந்தித்து வந்தார்கள்.

ஓர் இரவு அபூபக்ர், அலீ (ரழி) ஆகியோருடன் மக்களை சந்திப்பதற்காக வெளியே சென்ற நபி (ஸல்) அவர்கள் துஹல், ஷைபான் ஆகியோர் தங்கியிருக்கும் இடங்களுக்குச் சென்று அவர்களிடத்தில் இஸ்லாமைப் பற்றி பேசினார்கள். அப்போது அபூபக்ருக்கும் துஹல் கிளையைச் சேர்ந்த ஒருவருக்கும் இடையில் மிக அழகிய உரையாடலும், அற்புதமான கேள்வி பதில்களும் நடைபெற்றன. ஷைபான் கிளையினர் நல்ல ஆதரவான பதில்களை கூறியபோதும் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளவில்லை. (ஸீரத்துர் ரஸூல்)

அடுத்து நபி (ஸல்) மினாவில் 'அகபா' என்ற இடத்திற்கு சென்றபோது அங்கு சில ஆண்களின் பேச்சுக் குரல் கேட்டவுடன் அவர்களிடம் சென்று பேச விரும்பினார்கள். அவர்கள் கஸ்ரஜ் கிளையாரைச் சேர்ந்த மதீனாவில் உள்ள ஆறு இளைஞர்களாவர்.

அவர்கள்,

1) அஸ்அது இப்னு ஜுராரா (நஜ்ஜார் குடும்பம்)

2) அவ்ஃப் இப்னு ஹாரிஸ் (நஜ்ஜார் குடும்பம்)

3) ராஃபிஃ இப்னு மாலிக் (ஜுரைக் குடும்பம்)

4) குத்பா இப்னு ஆமிர் இப்னு ஹதீதா (ஸலமா குடும்பம்)

5) உக்பா இப்னு ஆமிர் இப்னு நாபி (ஹராம் இப்னு கஅப் குடும்பம்)

6) ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் இப்னு ஆப் (உபைத் இப்னு கனம் குடும்பம்)

மதீனாவாசிகளுக்கும் யூதர்களுக்கும் சண்டை மூளும்போது "கடைசி காலத்தில் ஒரு நபி வருவார். அவருடன் சேர்ந்து நாங்கள் உங்களைக் கடுமையாகக் கொலை செய்வோம்" என்று அந்த யூதர்கள் மதீனாவாசிகளைப் பார்த்துக் கூறுவார்கள். இவ்வாறு யூதர்கள் கூறுவதை பலமுறை மதீனாவாசிகள் கேட்டிருந்தனர். எனவே, இப்போது நபி (ஸல்) அவர்கள் தன்னைப் பற்றி அறிமுகப்படுத்தியபோது அவர்களை அறிந்து கொள்வது மதீனாவாசிகளுக்கு மிக எளிதாக இருந்தது. (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) அவர்கள் அந்த வாலிபர்களிடம் சென்று "நீங்கள் யார்?" என்று வினவ அவர்கள் "நாங்கள் கஸ்ரஜ் கிளையைச் சேர்ந்தவர்கள்" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "யூதர்களின் நண்பர்களா?" என்று கேட்க, அவர்கள் "ஆம்!" என்றனர். பிறகு நபி (ஸல்) அவர்கள் "என்னுடன் சற்று அமரமாட்டீர்களா? நான் உங்களிடம் பேச வேண்டும்" என்று கூற அவர்கள் "சரி! பேசலாம்" என்று கூறி, நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்தார்கள். அவர்களுக்கு இஸ்லாமின் உண்மையையும் அதன் அழைப்பையும் விரிவாக எடுத்துக் கூறி, அல்லாஹ்வின் பக்கம் நபி (ஸல்) அவர்கள் அழைத்தார்கள். அவர்களுக்குக் குர்ஆனையும் ஓதிக் காண்பித்தார்கள். அதற்கு அவர்களில் சிலர் சிலரிடம் "அல்லாஹ்வின் மீது ஆணையாக! இந்த நபியை வைத்தே யூதர்கள் உங்களைப் பயமுறுத்திக் கொண்டிருந்தனர். எனவே, அவர்களுக்கு முன்னதாக இவர் அழைப்பை ஏற்று நீங்கள் முஸ்லிமாகி விடுங்கள்" என்று கூறினார்கள்.

இஸ்லாமைத் தழுவிய இந்த வாலிபர்கள் மதீனாவின் அறிஞர்களாக விளங்கினர். பொதுவாக மதீனாவில் தொடர்ந்து நடந்து கொண்டிருந்த உள்நாட்டுப் போர்களால் மதீனாவாசிகள் மிகவும் நலிந்து போயிருந்தனர். நபி (ஸல்) அவர்களின் அழைப்பை ஏற்று மனங்கள் ஒன்றிணைந்தால் ஒருக்கால் இப்போர் முடிவுக்கு வரலாம் என்று அவர்கள்

ஆசைப்பட்டனர். பிறகு நபி (ஸல்) அவர்களிடம் ‘‘எங்களது கூட்டங்களில் இருக்கும் பகைமை மற்றும் தீமையைப் போன்று வேறு எந்தக் கூட்டத்திலும் இருக்காது. அல்லாஹ் உங்கள் மூலமாக அவர்களை ஒன்று சேர்ப்பான். நாங்கள் அவர்களிடம் சென்று உங்கள் மார்க்கத்திற்கு அவர்களை அழைப்போம். நாங்கள் ஏற்றுக் கொண்ட உங்கள் மார்க்கத்தை அவர்களுக்கு அறிமுகப்படுத்துவோம். அல்லாஹ் உங்கள் முன்னிலையில் அவர்கள் அனைவரையும் ஒன்றிணைத்து விட்டால் அவர்களிடம் உங்களைவிட கண்ணியத்திற்குரியவர் எவரும் இருக்க முடியாது’’ என்றனர்.

இவர்கள் மதீனாவுக்கு இஸ்லாமிய அழைப்பை எடுத்துச் சென்றார்கள். அங்கு மதீனாவாசிகள் ஒவ்வொருவரின் வீட்டிலும் நபி (ஸல்) அவர்கள் பற்றியே பேசப்பட்டது. (இப்னு ஹிஷாம்)

(இஸ்லாமை ஏற்றுக் கொண்ட மதீனாவாசிகளை அன்சாரிகள் (உதவியாளர்கள், ஆதரவாளர்கள்) என்று குர்ஆனிலும் நபிமொழியிலும் கூறப்படுகிறது.)

**ஆயிஷாவை மணமுடித்தல்**

நபித்துவத்தின் பதினோறாவது ஆண்டு ஷவ்வால் மாதம் நபி (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரழி) அவர்களைத் திருமணம் செய்தார்கள். அப்போது ஆயிஷா (ரழி) அவர்களின் வயது ஆறு. பிறகு மதீனாவிற்குச் சென்ற முதல் ஆண்டு, ஆயிஷா (ரழி) அவர்களின் ஒன்பதாவது வயதில் அவர்களைத் தங்களது இல்லத்திற்கு அழைத்துக் கொண்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

## மிஃராஜ்

மேற்கூறிய சூழ்நிலையில் நபி (ஸல்) அவர்களின் அழைப்புப் பணி ஒருபுறம் வெற்றி, மறுபுறம் கொடுமைகள் என்ற இரண்டிற்கும் இடையில் உள்ள பாதையை பிளந்து சென்று கொண்டிருந்தது. நம்பிக்கை நட்சத்திரங்கள் வெகு தூரத்தில் மின்னத் துவங்கின. அப்போதுதான் நபி (ஸல்) அவர்களின் வானுலகப் பயணம் நடைபெற்றது. இதையே இஸ்லாமிய வரலாற்றில் ‘‘மிஃராஜ்’’ என அறியப்படுகிறது.

மிஃராஜின் நிகழ்ச்சி எப்போது நடந்தது என்பதில் பல கருத்துகள் உள்ளன.

1) நபித்துவம் கிடைத்த ஆண்டு நடைபெற்றது. (இதை இமாம் தப்ரி ஆமோதிக்கிறார்கள்)

2) நபித்துவத்தின் ஐந்தாம் ஆண்டு நடைபெற்றது. (இதை இமாம் நவவியும் இமாம் குர்துபீயும் உறுதிப்படுத்துகிறார்கள்)

3) நபித்துவத்தின் பத்தாம் ஆண்டு ரஜப் மாதம் 27வது இரவில் நடைபெற்றது.

4) ஹிஜ்ராவிற்கு 16 மாதங்களுக்கு முன், அதாவது நபித்துவத்தின் பனிரெண்டாவது வருடம் ரமழான் மாதத்தில் நடைபெற்றது.

5) ஹிஜ்ராவிற்கு ஓர் ஆண்டு, இரண்டரை மாதங்களுக்கு முன் அதாவது நபித்துவத்தின் பதிமூன்றாம் ஆண்டு முஹர்ரம் மாதத்தில் நடைபெற்றது.

6) ஹிஜ்ராவிற்கு ஓர் ஆண்டுக்கு முன் அதாவது நபித்துவத்தின் பதிமூன்றாம் ஆண்டு ரபியுல் அவ்வல் மாதம் நடைபெற்றது.

இந்த கருத்துகளில் முதல் மூன்று கருத்துகள் சரியல்ல. ஏனெனில், அன்னை கதீஜா (ரழி) நபித்துவத்தின் பத்தாம் ஆண்டு ரமழான் மாதத்தில்தான் இறந்தார்கள். அன்னார் தொழுகை கடமையாக்கப்படுவதற்கு முன் மரணித்து விட்டார்கள். தொழுகை மிஃராஜில்தான் கடமையாக்கப்பட்டது. ஆகவே, மேற்கூறப்பட்ட முதல் மூன்று கருத்துகள் சரியானவையாக இருக்க முடியாது. அடுத்த மூன்று கருத்துகளில் எந்த கருத்து மிக ஏற்றமானது என்பதற்குரிய சரியான சான்றுகள் எனக்குக் கிடைக்கவில்லை. ஆனால், அத்தியாயம் “இஸ்ரா”வின் கருத்துகளை நன்கு ஆய்வு செய்யும்போது ‘மிஃராஜ்’ சம்பவம் மக்கா வாழ்க்கையின் மிக இறுதியில்தான் நடைபெற்றது என்பது தெரியவருகிறது.

இந்நிகழ்ச்சியின் விளக்கங்களை ஹதீஸ் (நபிமொழி) கலையின் வல்லுனர்கள் விரிவாகக் கூறியிருப்பதை இங்கு நாம் சுருக்கமாகக் குறிப்பிடுகிறோம்:

இப்னுல் கய்” (ரஹ்) கூறுகிறார்: நபி (ஸல்) அவர்கள் மிஃராஜுக்கு தனது உடலுடன் சென்றார்கள். இப்பயணம் மஸ்ஜிதுல் ஹராமில் தொடங்கி முதலில் பைத்துல் முகத்தஸ் சென்றார்கள். ஜிப்ரீல் (அலை) நபி (ஸல்) அவர்களை “புராக்” என்னும் வாகனத்தில் அழைத்துச் சென்றார்கள். ‘புராக்’ எனும் வாகனத்தை மஸ்ஜிதுல் அக்ஸாவுடைய கதவின் வளையத்தில் கட்டிவிட்டு நபிமார்கள் அனைவருக்கும் இமாமாக தொழுகை நடத்தினார்கள்.

பிறகு அதே பைத்துல் முகத்தஸிலிருந்து முதல் வானத்திற்கு ஜிப்ரீல் அழைத்துச் சென்றார்கள். நபி (ஸல்) அவர்களுக்காக ஜிப்ரீல் கதவைத் திறக்கக் கோரவே அவர்களுக்காக கதவு திறக்கப்பட்டது. அங்கு மனிதகுல தந்தை ஆதம் (அலை) அவர்களை சந்தித்தார்கள். ஆதம் (அலை) நபி (ஸல்) அவர்களுக்கு முகமன், ஸலாம் கூறி வரவேற்றார்கள். அல்லாஹ் ஆதமின் வலப்புறத்தில் நல்லோர்களின் உயிர்களை நபி (ஸல்) அவர்களுக்குக் காண்பித்தான். அவ்வாறே கெட்டவர்களின் உயிர்களை அவரது இடப்புறத்தில் காண்பித்தான். பிறகு இரண்டாவது வானத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு யஹ்யா, ஈஸா (அலை) ஆகியோரை சந்தித்தார்கள். அவ்விருவரும் நபி (ஸல்) அவர்களின் ஸலாமுக்கு பதில் கூறி அவர்களை வரவேற்றார்கள்.

அங்கிருந்து மூன்றாவது வானத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு யூஸுஃப் (அலை) அவர்களைச் சந்தித்து ஸலாம் கூறினார்கள். அவர்கள் ஸலாமுக்குப் பதில் கூறி, நபி (ஸல்) அவர்களை வரவேற்றார்கள். பிறகு நான்காவது வானத்திற்குச் சென்று இத்ரீஸ் (அலை) அவர்களை சந்தித்தார்கள். நபி (ஸல்) ஸலாம் கூற அவர்கள் பதில் கூறி நபி (ஸல்) அவர்களை வரவேற்றார்கள். பிறகு ஐந்தாவது வானத்திற்குச் சென்று ஹாரூன் (அலை) அவர்களை சந்தித்து ஸலாம் கூற அவர்களும் பதில் கூறி, நபி (ஸல்) அவர்களை வரவேற்றார்கள். பிறகு ஆறாவது வானத்திற்குச் சென்று மூஸா (அலை) அவர்களைச் சந்தித்து ஸலாம் கூற அவர்கள் பதில் கூறி வரவேற்றார்கள். மூஸா (அலை) அவர்களைக் கடந்து நபி (ஸல்) சென்றபோது மூஸா (அலை) அழ ஆரம்பித்தார்கள். “நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?” என்று கேட்டதற்கு, “எனக்குப் பிறகு அனுப்பப்பட்டவன் சமுதாயத்தில் சொர்க்கம் செல்பவர்கள் எனது உம்மத்தில் சொர்க்கம் செல்பவர்களைவிட அதிகமாக இருப்பதால் நான் அழுகிறேன்” என்று கூறினார்கள். பிறகு ஏழாவது வானத்திற்கு சென்றார்கள். அங்கு இப்றாஹீம் (அலை) அவர்களைச் சந்தித்து ஸலாம் கூற, பதில் கூறி நபி (ஸல்) அவர்களை வரவேற்றார்கள். ஏழு வானங்களில் சந்தித்த அனைத்து இறைத்தூதர்களும் முஹம்மது (ஸல்) அவர்களின் நபித்துவத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

பிறகு ‘ஸித்ரதுல் முன்தஹா’விற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அதன் பழங்கள் ஹஜர் நாட்டு பானைகளைப் போன்றும், அதன் இலைகள் யானைகளின் காதுகளைப் போன்றும்

இருந்தன. பிறகு ஸித்ரதுல் முன்தஹாவை தங்கத்தினாலான வண்ணத்துப் பூச்சிகளும், பிரகாசமும், பல நிறங்களும் சூழ்ந்துகொண்டவுடன் அது மாற்றமடைந்தது. அல்லாஹ்வின் படைப்பினங்களில் எவரும் அதன் அழகை வருணிக்க முடியாத அளவுக்கு அது இருந்தது. பிறகு அங்கிருந்து பைத்துல் மஃமூருக்கும்'' அழைத்துச் செல்லப்பட்டார்கள். அதில் ஒவ்வொரு நாளும் 70,000 மலக்குகள் நுழைகிறார்கள். ஒருமுறை நுழைந்தவர்கள் மீண்டும் அங்கு வருவதில்லை.

பிறகு சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு முத்து வளையங்கள் இருந்தன. சுவர்க்கத்தின் மண் கஸ்தூரியாக இருந்தது. பிறகு அங்கிருந்து அதற்கு மேல் அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு எழுதுகோள்களின் சப்தங்களைக் கேட்டார்கள்.

பிறகு அல்லாஹ்விடம் அழைத்து செல்லப்பட்டார்கள். (சேர்ந்த) இரு வில்களைப் போல் அல்லது அதைவிடச் சமீபமாக அல்லாஹ்வை அவர்கள் நெருங்கினார்கள். அல்லாஹ் தனது நபி (ஸல்) அவர்களுக்குப் பல விஷயங்களை அறிவித்துக் கொடுத்தான். ஐம்பது நேரத் தொழுகைகளை அவர்கள் மீது கடமையாக்கினான்.

அவர்கள் திரும்பி வரும்போது மூஸா (அலை) அவர்களை சந்தித்தார்கள். மூஸா (அலை) ''தங்கள் இறைவன் தங்களுக்கு என்ன கடமையாக்கினான்'' என்று கேட்க நபி (ஸல்) ''ஐம்பது நேரத் தொழுகைகளைக் கடமையாக்கினான்'' என்று கூறினார்கள். மூஸா (அலை) ''நீங்கள் திரும்பிச் சென்று உங்களது இறைவனிடம் இதைக் குறைக்கச் சொல்லுங்கள்'' என்று கூறவே நபி (ஸல்) ஆலோசனைக் கேட்பதைப் போன்று ஜிப்ரீலைப் பார்த்தார்கள். ஜிப்ரீல் ''நீங்கள் விரும்பினால் அப்படியே செய்யுங்கள்'' என்று கூறவே நபி (ஸல்) அதை ஏற்றுக்கொண்டு அல்லாஹ்விடம் திரும்பச் சென்றார்கள். அல்லாஹ் பத்து நேரத் தொழுகைகளைக் குறைத்தான்.

திரும்பும்போது மூஸா (அலை) அவர்களைச் சந்திக்கவே அவர்கள் மீண்டும் குறைத்து வர ஆலோசனை கூற, நபி (ஸல்), அல்லாஹ்விற்கும் மூஸாவுக்கும் இடையில் திரும்பத் திரும்ப சென்று வந்ததில் அல்லாஹ் ஐம்பதை ஐந்து நேரத் தொழுகைகளாக ஆக்கினான். மூஸா (ஸல்) மீண்டும் சென்று குறைத்து வரும்படி கூறவே, நபி (ஸல்) அவர்களோ ''நான் எனது இறைவனிடம் திரும்பச் சென்று இதற்கு மேல் குறைத்துக் கேட்பதற்கு வெட்கப்படுகிறேன். என்றாலும் நான் இதைக் கொண்டு மகிழ்ச்சி அடைகிறேன். முழுமையாக ஏற்றுக் கொள்கிறேன்'' என்று கூறிவிட்டார்கள். அதற்குப் பின் நபி (ஸல்) சற்று தூரம் சென்று விடவே, அல்லாஹ் அவர்களை அழைத்து ''நீங்கள் எனது கடமையையும் ஏற்றுக்கொண்டீர்கள். எனது அடியார்களுக்கு இலகுவாகும் ஆக்கிவிட்டீர்கள்'' என்று கூறினான். (ஜாதுல் மஆது)

மிஃராஜில் நபி (ஸல்) அல்லாஹ்வை பார்த்தார்களா? என்பதில் சில மாறுபட்ட கருத்துகள் உள்ளன என்று இப்னுல் கய்'' (ரஹ்) கூறியபிறகு. இது விஷயத்தில் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களின் கருத்துகளையும் மற்ற அறிஞர்களின் கருத்துகளையும் எடுத்துக் கூறியுள்ளார். இப்னுல் கய்'' (ரஹ்) இது விஷயத்தில் செய்திருக்கும் ஆய்வின் சுருக்கமாவது:

''நபி (ஸல்) அல்லாஹ்வை கண்கூடாக பார்க்கவில்லை. அவ்வாறு எந்த நபித்தோழரும் கூறவுமில்லை'' என்பதாகும். ஆனால், இப்னு அப்பாஸ் (ரழி) மூலம் இரு அறிவிப்புகள் வந்துள்ளன. ஒன்று நபி (ஸல்) அல்லாஹ்வைப் பார்த்தார்கள். இரண்டாவது, நபி (ஸல்) அல்லாஹ்வை உள்ளத்தால் பார்த்தார்கள். எனவே, மற்ற நபித்தோழர்களின் முடிவுக்கும் இப்னு அப்பாஸின் கருத்துக்குமிடையில் முரண்பாடு இல்லை. ஏனெனில், அல்லாஹ்வை நபி (ஸல்) பார்த்தார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரழி) கூறுவது உள்ளத்தால் பார்த்ததையே குறிப்பிடுகிறார்கள். மற்ற நபித்தோழர்கள் அல்லாஹ்வை நபி (ஸல்) பார்க்கவில்லை என்று

கூறுவது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வை கண்ணால் பார்க்கவில்லை என்பதைக் குறிப்பிடுவதாகும்.

தொடர்ந்து இப்னுல் கய்'' (ரஹ்) கூறுகிறார்: அத்தியாயம் நஜ்மில் 'இறங்கினார், பின்னர் நெருங்கினார்' என்ற வசனத்தில் கூறப்பட்டுள்ள நெருக்கம் என்பது ஜிப்ரீல் நெருங்கியதையும் அவர் இறங்கியதையும் குறிக்கிறது. இவ்வாறுதான் ஆயிஷா, இப்னு மஸ்வூத் (ரழி) ஆகியோரும் கூறுகிறார்கள். குர்ஆனின் இவ்வசனத்தின் முன் பின் தொடரும் இக்கருத்தையே உறுதிபடுத்துகிறது. 'மிஃராஜ்' தொடர்பான ஹதீஸில் வந்துள்ள 'தனா ஃபததல்லா' என்பது அல்லாஹ் நெருங்கியதைக் குறிப்பிடுகிறது. அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பற்றி 'நஜ்ம்' அத்தியாயத்தில் குறிப்பிடப்படவில்லை. மேலும், ஸித்ரத்துல் முன்தஹாவிற்கு அருகில் அவர் அவரைப் பார்த்தார் என்று 'நஜ்ம்' அத்தியாயத்தில் உள்ள வசனம் நபி (ஸல்) வானவர் ஜிப்ரயீலை அங்கு பார்த்ததையே குறிப்பிடுகின்றது. நபி (ஸல்) ஜிப்ரயீலை அவரது முழு உருவத்தில் இருமுறை பார்த்தார்கள். ஒன்று பூமியிலும், மற்றொன்று ஸித்ரத்துல் முன்தஹாவிற்கு அருகிலுமாகும். (இத்துடன் இப்னுல் கய்ம்மின் கூற்று முடிகிறது.) (ஜாதுல் மஆது. மேலும் விவரங்களுக்கு பார்க்க, புகாரி 1:50, 455, 456, 470, 471, 481, 545, 550. 2:284. முஸ்லிம் 1:91-96)

நபி (ஸல்) அவர்களின் இருதயம் இப்பயணத்திலும் பிளக்கப்பட்டது என்று சில அறிவிப்புகளில் வந்துள்ளது. மேலும், இப்பயணத்தில் நபி (ஸல்) பலவற்றைக் கண்டார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்கு பாலும், மதுவும் வழங்கப்பட்டது. நபி (ஸல்) பாலை தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். அதற்கு "நீங்கள் இயற்கை நெறிக்கு வழிகாட்டப்பட்டீர்கள். நீங்கள் மதுவை எடுத்திருந்தால் உங்களது சமுதாயத்தினர் வழிகெட்டிருப்பார்கள்'' என்று கூறப்பட்டது.

ஸித்ரத்துல் முன்தஹாவின் வேரிலிருந்து நான்கு ஆறுகள் வெளியாகுவதைப் பார்த்தார்கள். இரண்டு ஆறுகள் வெளிரங்கமானது. இரண்டு ஆறுகள் உள்ரங்கமானது, வெளிரங்கமான இரண்டு ஆறுகள் நீல் (நைல்), ஃபுராத் ஆகும். இவ்விரண்டின் பிறப்பிடம் அங்கிருந்துதான் உருவாகிறது. மற்ற உள்ளரங்கமான இரண்டு ஆறுகள் சுவர்க்கத்தில் உள்ள ஆறுகளாகும். நீல், ஃபுராத் நதிகளை நபி (ஸல்) பார்த்தது, 'இவ்விரு பகுதிகளிலும் இஸ்லாம் பரவும்' என்பதற்கு ஒரு முன்னறிவிப்பாக இருக்கலாம். (இரகசியங்களை அல்லாஹ்வே மிக அறிந்தவனாக இருக்கின்றான்.)

நரகத்தின் காவலாளியைப் பார்த்தார்கள். அவர் சிரிப்பதே இல்லை. முகமலர்ச்சியும் புன்முறுவல் என்பதும் அவரிடம் காணமுடியாத ஒன்று. அவரது பெயர் மாலிக்.

மேலும், சொர்க்கத்தையும் நரகத்தையும் பார்த்தார்கள்.

அனாதைகளின் சொத்துகளை அநியாயமாகப் பயன்படுத்திக் கொண்டவர்களைப் பார்த்தார்கள். அவர்களுடைய உதடுகள் ஒட்டகங்களின் உதடுகளைப் போன்று இருந்தது. அம்மிக் குழவிகளைப் போன்ற நெருப்புக் கங்குகளை அவர்களது வாயில் தூக்கி எறியப்படவே அது அவர்களின் பின் வழியாக வெளியேறிக் கொண்டிருந்தது.

வட்டி வாங்கி வந்தவர்களையும் பார்த்தார்கள். அவர்களது வயிறு மிகப் பெரியதாக இருந்ததால் அவர்கள் தங்களது இடங்களிலிருந்து எந்தப் பக்கமும் திரும்ப சக்தியற்றவர்களாக இருந்தனர். ஃபிர்அவ்னின் குடும்பத்தாரை நரகத்தில் கொண்டு வரப்படும்போது அவர்கள் இவர்களைக் கடந்து செல்வார்கள். அப்போது அவர்கள் இவர்களை மிதித்தவர்களாகச் செல்வார்கள்.

விபசாரம் செய்தவர்களையும் பார்த்தார்கள். அவர்களுக்கு முன் கொழுத்த நல்ல இறைச்சித் துண்டும் இருந்தது. அதற்கருகில் துர்நாற்றம் வீசும் அருவெறுப்பான மெலிந்த இறைச்சித்

துண்டும் இருந்தது. அவர்கள் இந்த துர்நாற்றம் வீசும் இறைச்சித் துண்டையே சாப்பிடுகின்றனர். நல்ல கொழுத்த இறைச்சித் துண்டை விட்டுவிடுகின்றனர்.

பிற ஆண்கள் மூலம் குழந்தை பெற்றுக் கொண்டு, அதை தங்களது கணவன் மூலம் பெற்ற குழந்தை என்று கூறும் பெண்களையும் பார்த்தார்கள். இத்தகைய பெண்கள் மார்பகங்கள் கட்டப்பட்டு அதில் அவர்கள் தொங்கிக் கொண்டிருந்தார்கள்.

நபி (ஸல்) மிஃராஜ் போகும்போதும் வரும்போதும் மக்காவாசிகளின் வியாபாரக் கூட்டத்தை வழியில் பார்த்தார்கள். அவர்களின் ஓர் ஒட்டகம் தவறி இருந்தது. அவர்களுக்கு நபி (ஸல்) அதை காண்பித்துக் கொடுத்தார்கள். அவர்கள் தூங்கிக் கொண்டிருந்தபோது அவர்களின் மூடி வைக்கப்பட்டிருந்த பாத்திரத்திலிருந்து தண்ணீரை அருந்திவிட்டு மீண்டும் அப்பாத்திரத்தை அவ்வாறே மூடி வைத்து விட்டார்கள். அன்று இரவு விண்வெளிப் பயணம் முடித்து திரும்பிய நபி (ஸல்), காலையில் மக்களுக்கு இப்பிரயாணக் கூட்டத்தைப் பற்றிக் கூறியது நபி (ஸல்) அவர்களின் விண்வெளிப் பயணம் உண்மை என்பதற்குரிய மிகப்பெரிய ஆதாரமாக அமைந்தது. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

இப்னுல் கய்'' (ரஹ்) கூறுகிறார்: காலையில் நபி (ஸல்) தங்களது கூட்டத்தாரிடம் அல்லாஹ் தனக்குக் காண்பித்த மாபெரும் அத்தாட்சிகளை அறிவித்தார்கள். இதைக் கேட்ட அம்மக்கள் முன்பைவிட அதிகமாக நபி (ஸல்) அவர்களுக்கு நோவினையும், தொந்தரவும் கொடுத்து அவர்களை 'பெரும் பொய்யர்' என்று வருணித்தனர். "உங்களது பயணம் உண்மையானதாக இருந்தால் எங்களுக்கு பைத்துல் முகத்தஸின் அடையாளங்களைக் கூறுங்கள்'' என்று கேட்டனர். அல்லாஹ் நபி (ஸல்) அவர்களின் கண்முன் பைத்துல் முகத்தஸைக் காண்பிக்கவே நபி (ஸல்) அவர்கள் அம்மக்கள் கேட்ட அடையாளங்களை அப்படியே கூறினார்கள். அதில் எதையும் அவர்களால் மறுக்க முடியவில்லை. நபி (ஸல்) அவர்கள் மிஃராஜ் போகும் வழியில் சந்தித்த வியாபாரக் கூட்டத்தையும், அது எப்போது மக்காவிற்கு வரும் என்பதையும், அவர்களது காணாமல்போன ஒட்டகத்தைப் பற்றியும் மக்காவாசிகளுக்கு அறிவித்தார்கள். நபி (ஸல்) எவ்வாறு கூறினார்களோ அனைத்தும் அவ்வாறே இருந்தன. இருப்பினும் இந்த உண்மையை ஏற்றுக் கொள்ளாத அவர்கள் நிராகரிக்கவே செய்தனர். சத்தியத்தை விட்டும் வெகுதூரம் விலகியே சென்றனர். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், ஜாதுல் மஆது)

மக்கள் இந்நிகழ்ச்சியை பொய்யென்று மறுத்துக் கூறியபோது அபூபக்ர் (ரழி) இந்நிகழ்ச்சியை உண்மையென்றும், சத்தியமென்றும் ஏற்றுக் கொண்டதால்தான் அவர்களை 'சித்தீக்' (வாய்மையாளர்) என்று அழைக்கப்பட்டது. (இப்னு ஹிஷாம்)

இந்த வானுலகப் பயணம் நடைபெற்றதற்குரிய மகத்தான காரணத்தைப் பற்றிக் கூறும்போது மிக சுருக்கமாக "நாம் நம்முடைய அத்தாட்சிகளை அவருக்குக் காண்பிப்பதற்காகவே'' என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான்:

(அல்லாஹ்) மிகப் பரிசுத்தமானவன் அவன் (முஹம்மது (ஸல்) என்னும்) தன் அடியாரை(க் கஅபாவாகிய) சிறப்புற்ற பள்ளியிலிருந்து (வெகு தூரத்தில் இருக்கும் பைத்துல் முகத்தஸிலுள்ள) மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு ஒரே இரவில் அழைத்துச் சென்றான். (அவ்வாறு அழைத்துச் சென்ற) நாம் அதனைச் சூழவுள்ளவை சிறப்புற்று ஓங்க அபிவிருத்தி அடைய செய்திருக்கிறோம். நம்முடைய அத்தாட்சிகளை அவருக்குக் காண்பிப்பதற்காகவே (அங்கு அழைத்துச் சென்றோம்.) நிச்சயமாக (உங்களது இறைவன்) செவியுறு பவனாகவும், உற்று நோக்கியவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 17:1)

இது நபிமார்கள் விஷயத்தில் அல்லாஹ்வின் நியதியாகும். பல இறைத் தூதர்களுக்கு இவ்வாறு பல அத்தாட்சிகளை அல்லாஹ் காண்பித்திருக்கிறான்.

இப்றாஹீம் உறுதியான நம்பிக்கையுடையவர்களில் ஆவதற்காக வானங்களிலும், பூமியிலுமுள்ள (நம்முடைய) ஆட்சிகளை நாம் அவருக்கு இவ்வாறு காண்பித்து வந்தோம். (அல்குர்ஆன் 6:75)

நபி மூஸா (அலை) அவர்களைப் பற்றி,

(இவ்வாறு இன்னும்) நம்முடைய பெரியஅத்தாட்சிகளை உங்களுக்கு நாம் காண்பிப்போம். (அல்குர்ஆன் 20:23)

என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.

நபி இப்றாஹீம் (அலை) அவர்களுக்கு அல்லாஹ் ஏன் அத்தாட்சிகளைக் காண்பித்தான் என்பதற்கு "அவர் நம்மை உறுதிகொண்டவர்களில் ஒருவராக ஆகவேண்டும் என்பதற்காக" என்ற காரணத்தைக் கூறுகிறான். இறைத் தூதர்களுக்கு இவ்வாறு பல அத்தாட்சிகளை அல்லாஹ் காண்பித்ததால் அவர்களது உள்ளத்திலிருந்த நம்பிக்கை மேன்மேலும் உறுதியடைந்தது. ஆகவே தான், அல்லாஹ்வின் பாதையில் பிறரால் சகித்துக்கொள்ள முடியாததை இறைத்தூதர்களால் சகித்துக்கொள்ள முடிந்தது. உலகத்தின் எவ்வளவு பெரியசக்தியாயினும் அது கொசுவின் இறக்கைக்குச் சமமாகவே அவர்களிடம் இருந்தது. சிரமங்களும் துன்பங்களும் எவ்வளவுதான் அவர்களுக்கு ஏற்பட்டாலும், அதை அவர்கள் ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்வதில்லை.

இப்பயணத்தில் மறைந்திருக்கும் ஞானங்களையும் இரகசியங்களையும் மார்க்க சட்டங்களின் இரகசியங்களை பற்றி விவரிக்கும் நூல்களில் காணலாம். எனினும், இப்பயணத்தில் பல உண்மைகளும் யதார்த்தங்களும் நிறைந்துள்ளன. அவற்றில் சிலவற்றை இங்கு சுருக்கமாகப் பார்ப்போம்:

இந்த வானுலக பயண சம்பவத்தைப் பற்றி மேற்கூறப்பட்ட அல்குர்ஆன் 17:1-ல் மட்டும்தான் அல்லாஹ் குறிப்பிடுகிறான்.

இந்த ஒரு வசனத்தைத் தொடர்ந்து வரும் வசனங்களில் யூதர்களின் கெட்ட செயல்கள் மற்றும் குற்றங்களைப் பற்றி அல்லாஹ் விரிவாகக் கூறுகிறான். அதன் இறுதியில் இந்தக் குர்ஆன்தான் மிகச் சரியான வழிகாட்டுகின்றது என்று கூறுகிறான். இவ்வசனங்களை ஓதுபவர் மிஃராஜ் சம்பவம், யூதர்களின் அநியாயங்கள், குர்ஆனைப் பற்றிய புகழ்ச்சி, இவற்றுக்கிடையில் என்ன தொடர்பிருக்கிறது என யோசிக்கலாம். ஆம்! உண்மையில் ஆழமான தொடர்பிருக்கிறது. அதன் விளக்கமாவது:

முஹம்மது (ஸல்) நபியாக அனுப்பப்படுவதற்கு முன் யூதர்கள்தான் மனித சமுதாயத்தை வழிநடத்தும் பொறுப்பை வகித்தனர். ஆனால், அவர்கள் செய்த அநியாயங்களின் காரணமாக அப்பொறுப்புக்கு தகுதியற்றவர்களாக ஆகிவிட்டனர்.

எனவே, அவர்களிடமிருந்து அந்தத் தகுதியை அல்லாஹ் தனது தூதருக்கு அதிவிரைவில் மாற்றப்போகின்றான். நபி இப்றாஹீம் (அலை) அவர்களுடைய இஸ்லாமிய அழைப்புப் பணியின் இரு மையங்களான மக்காவையும், ஃபலஸ்தீனையும் நபி (ஸல்) அவர்களுக்கு ஒருங்கே அருள இருக்கின்றான் மோசடி, குற்றம், வரம்பு மீறுதல் ஆகியவற்றையே தங்களது குலத்தொழிலாகக் கொண்ட சமூகத்திடமிருந்து ஆன்மிக வழிகாட்டலின் தலைமைத்துவத்தை பறித்து நன்மைகளையே நோக்கமாகக் கொண்ட சமுதாயத்திற்கு அல்லாஹ் அருள இருக்கின்றான் என்பதை நபி (ஸல்) அவர்களை மக்காவிலிருந்து பைத்துல் முகத்தஸிற்கு அழைத்துச் செல்லப்பட்ட இந்நிகழ்ச்சி உறுதி செய்தது.

மக்காவின் தெருக்களிலும் மலை ஓரங்களிலும் விரட்டியடிக்கப்பட்டு கண்ணியமிழந்து சுற்றி வரும் ஒருவருக்கு இந்தத் தலைமைத்துவம் எப்படிக் கிடைக்கும்? அதாவது, இஸ்லாமிய

அழைப்புப் பணியின் முதல் கட்டமான இந்த சிரமமான காலம் வெகு விரைவில் முடிந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு புதிய காலக்கட்டம் தொடரப்போகிறது என்பதையே நபி (ஸல்) அவர்களின் இந்நிகழ்ச்சி குறிப்பிடுகிறது. இதையே பின்வரும் வசனங்களும் உறுதி செய்கின்றன. அவ்வசனங்களில் அல்லாஹ் இணைவைப்பவர்களை மிகத் தெளிவாகவும் கடுமையாகவும் எச்சரிக்கை செய்கிறான்.

ஓர் ஊரை (அவ்வூரான் தீய செயலின் காரணமாக) நாம் அழித்துவிடக் கருதினால், அதில் சுகமாக வாழ்பவர்களை நாம் ஏவுகிறோம். அவர்கள் அதில் விஷமம் செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். பின்னர், அவர்கள் மீது நம்முடைய வாக்கு ஏற்பட்டு அவ்வூரை நாம் அடியோடு அழித்து விடுகிறோம்.

நூஹுக்குப் பின்னர் நாம் எத்தனையோ வகுப்பாரை (அவர்களின் அநியாயத்தின் காரணமாக) அழித்திருக்கிறோம். தன் அடியார்களின் பாவங்களை அறிந்து கொள்வதற்கு உங்களது இறைவனே போதுமானவன். (மற்றெவன் உதவியும் தேவையில்லை.) அவன் (அனைத்தையும்) நன்கறிந்தவனும் உற்று நோக்கினவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 17:16, 17)

இதுநாள்வரை நிராகரிப்போருக்கு அவகாசம் தரப்பட்டது. அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் செய்த அநீதிகளை அல்லாஹ் பொறுத்து வந்தான். ஆனால், இனியும் அவர்கள் இத்தகைய தவறுகளிலிருந்து விலகாவிட்டால் அல்லாஹ் அவர்களைக் கடுமையாகத் தண்டிப்பான் என்ற எச்சரிக்கை மேற்கூறிய வசனத்திலிருந்து தெரியவருகின்றது.

இதைத் தொடர்ந்து இஸ்லாமிய சமூகத்திற்கு அடிப்படையான கொள்கைகள், ஒழுக்கங்கள், கலாச்சாரங்கள் எப்படி அமைய வேண்டும் என்பதையும் விரிவாக விளக்குகிறான். முஸ்லிம்களுக்கு அல்லாஹ் தனி நாட்டையும் அதிகாரத்தையும் கொடுக்கும்போது அவர்களது சமுதாயம் கடைப்பிடிக்க வேண்டிய சட்ட திட்டங்களையெல்லாம் அல்லாஹ் கூறுவது போன்றே இருக்கின்றது. மேலும், வெகு விரைவில் நபி (ஸல்) அவர்களுக்கு பாதுகாப்பான இடத்தையும், உலகத்தின் அனைத்துப் பகுதிகளிலும் இஸ்லாமிய அழைப்புப் பணியை விரிவாக்குவதற்கு ஒரு மையத்தையும் அல்லாஹ் தர இருக்கிறான் என்பதை இந்த நிகழ்ச்சி சுட்டிக் காட்டுகிறது.

இந்தக் காரணங்களின் அடிப்படையில்தான் நபி (ஸல்) அவர்களின் வானுலகப் பயண நிகழ்ச்சி மக்கா வாழ்க்கையின் இறுதியில் நடைபெற்றது. இதுவே ஏற்றமான, சரியான சொல் என்று நாம் கூறுகிறோம். அகபாவில் நடைபெற்ற முதல் ஒப்பந்தத்திற்கு முன் அல்லது முதலாவது இரண்டாவது ஒப்பந்தங்களுக்கிடையில் இந்நிகழ்ச்சி நடைபெற்றது. பின்வரும் பக்கங்களில் அந்த ஒப்பந்தங்களின் விவரங்களைப் பார்ப்போம்.

## அகபாவில் முதல் ஒப்பந்தம்

மதீனாவைச் சேர்ந்த ஆறு நபர்கள் நபித்துவத்தின் பதினொறாவது ஆண்டு ஹஜ்ஜுடைய காலத்தில் நபி (ஸல்) அவர்களின் கையில் இஸ்லாமைத் தழுவி, நபி (ஸல்) அவர்களின் தூதுத்துவத்தை தங்கள் கூட்டத்தாருக்கும் தெரிவிப்போம் என்று வாக்குக் கொடுத்திருந்தனர். இந்நிகழ்ச்சியைப் பற்றி இதற்கு முன்பே நாம் கூறியிருக்கிறோம்.

இதை அடுத்து நபித்துவத்தின் பனிரெண்டாம் ஆண்டு ஹஜ் காலத்தில் (கி.பி. 621 ஜூலையில்) மதீனாவிலிருந்து நபி (ஸல்) அவர்களிடம் இஸ்லாமிய ஒப்பந்தம் (பைஆ) செய்வதற்காக 15 நபர்கள் வந்திருந்தனர். முந்தைய ஆண்டு வந்த ஆறு நபர்களில் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் இப்னு ஆபைத் தவிர மற்ற ஐந்து பேர்களும், அவர்களுடன் புதிதாக

ஏழு நபர்களும் இச்சமயம் வந்திருந்தனர். அந்த ஏழு நபர்களில் முந்திய ஐந்து பேர் கஸ்ரஜ் கிளையையும் பிந்திய இருவர் அவ்ஸ் கிளையையும் சேர்ந்தவர்கள்.

1) முஆத் இப்னு ஹாரிஸ் (ரழி) - நஜ்ஜார் குடும்பம்.

2) தக்வான் இப்னு அப்துல் கைஸ் (ரழி) - ஜுரைக் குடும்பம்.

3) உபாதா இப்னு ஸாமித் (ரழி) - கன்ம் குடும்பம்.

4) யஜீது இப்னு ஸஃலபா (ரழி) -கன்ம் குடும்ப நண்பர்களில் ஒருவர்.

5) அப்பாஸ் இப்னு உபாதா இப்னு நழ்லா (ரழி) - ஸாலிம் குடும்பம்.

6) அபுல் ஹைஸம் இப்னு தய்ம்ஹான் (ரழி) -அப்துல் அஷ்ஹல் குடும்பம்.

7) உவைம் இப்னு ஸாம்தா (ரழி) - அம்ர் இப்னு அவ்ஃப் குடும்பம்.

இவர்கள் அனைவரும் மினாவில் 'அகபா' என்ற இடத்திற்கு அருகில் நபி (ஸல்) அவர்களிடம் ஒப்பந்தம் செய்தார்கள். (இப்னு ஹிஷாம்)

நபியே! நம்பிக்கை கொண்ட பெண்கள் உங்களிடம் வந்து, ‘‘அல்லாஹ்வுக்கு யாதொன்றையும் இணைவைப்பதில்லை என்றும், திருடுவதில்லை என்றும், விபசாரம் செய்வதில்லை என்றும், தங்கள் (பெண்) சந்ததிகளைக் கொலை செய்வதில்லை'' என்றும், ‘‘தங்களுடைய கை கால்கள் அறிய (அதாவது: பொய்யெனத் தெரிந்தே) கற்பனையாக அவதூறு கூறுவது இல்லை'' என்றும், உங்களிடம் (பைஅத்து கொடுத்து) வாக்குறுதி செய்தால், அவர்களுடைய வாக்குறுதியைப் பெற்றுக் கொண்டு, நீங்கள் அவர்களுக்காக (முன்னர் அவர்கள் செய்துவிட்ட குற்றங்களுக்காக) அல்லாஹ்விடத்தில் மன்னிப்பைக் கோருங்கள். நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்பவனும் கிருபையுடையவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 60:12)

என்ற இந்த வசனத்திற்கேற்பவே நபி (ஸல்) அவர்கள் தங்களது தோழர்களிடம் இஸ்லாமிய ஒப்பந்தம் செய்தார்கள்.

உபாதத் இப்னு ஸாமித் (ரழி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் ‘‘வாருங்கள்! நீங்கள் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்கக் கூடாது திருடக்கூடாது விபசாரம் செய்யக் கூடாது உங்களின் பிள்ளைகளை கொலை செய்யக்கூடாது அவதூறு கூறக்கூடாது நன்மையில் எனக்கு மாறு செய்யக்கூடாது என்று என்னிடம் நீங்கள் இஸ்லாமிய ஒப்பந்தம் செய்து தாருங்கள். உங்களில் யார் இந்த உடன்படிக்கையை முழுமையாக நிறைவேற்றுகிறாரோ அவருக்கு அல்லாஹ் நற்கூலி வழங்குவான். யார் சில குற்றங்களை செய்து அதற்காக உலகிலேயே தண்டிக்கப் படுவாரோ அத்தண்டனையே அவர் பாவத்தைப் போக்கிவிடும். ஒருவர் குற்றம் செய்து அந்த குற்றத்தை அல்லாஹ் மறைத்துவிட்டால் அது அல்லாஹ்வின் விருப்பத்திற்குட்பட்டது. அவன் விரும்பினால் அவரைத் தண்டிக்கலாம் அல்லது மன்னிக்கலாம்.'' நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறி முடித்தபின் நாங்கள் அதை ஏற்றுக் கொண்டோமென்று நபி (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி கொடுத்தோம். (ஸஹீஹுல் புகாரி)

**மதீனாவில் அழைப்பாளர்**

மேற்கூறப்பட்ட ஒப்பந்தம் நல்லமுறையில் முடிந்தது. ஹஜ்ஜுடைய காலங்கள் கழிந்தப் பின் ஒப்பந்தம் செய்து கொடுத்தவர்களுடன் நபி (ஸல்) தனது முதல் இஸ்லாமிய அழைப்பாளரை மதீனாவிற்கு அனுப்பினார்கள். அல்லாஹ்வின் மார்க்கத்தைப் பரப்புவதற்கும் மார்க்க ஞானங்களை கற்றுக் கொடுப்பதற்காகவும் இந்த அழைப்பாளர் அனுப்பப்பட்டார்.

இப்பணிக்காக முதலாவதாக இஸ்லாமை ஏற்றுக் கொண்டவர்களில் ஒருவரான முஸ்அப் இப்னு உமைர் அல் அப்த (ரழி) என்ற வாலிபரை நபி (ஸல்) தேர்ந்தெடுத்தார்கள்.

### மகிழ்ச்சி தரும் வெற்றி

முஸ்அப் இப்னு உமைர், அஸ்அது இப்னு ஜுராரவின் வீட்டில் தங்கினார். 'அல்முக்' (குர்ஆனின் ஞானமுடையவர்) என்று முஸ்அப் முஸ்லிம்களால் கண்ணியமாக அழைக்கப்பட்டார். முஸ்அபும் அஸ்அதும் சேர்ந்து மதீனாவாசிகளிடையே மிக உற்சாகத்துடன் இஸ்லாமைப் பரப்பினார்கள்.

முஸ்அப் (ரழி) அழைப்புப் பணியில் நல்லதொரு முன்னேற்றம் கண்டார். பல சாதனைகள் படைத்தார் என்பதற்குரிய சான்றுகளில் ஒன்று: ஒரு நாள் அஸ்அத் இப்னு ஜுரார (ரழி) முஸ்அபை அழைத்துக் கொண்டு அப்துல் அஷ்ஹல், ளஃபர் ஆகிய கோத்திரத்தார்களின் இல்லங்களுக்குச் சென்றார். வழியில் ளஃபர் கோத்திரத்தாரின் தோட்டத்திற்குள் சென்று 'மரக்' என்ற கிணற்றுக்கருகில் அமர்ந்தனர். அவர்களுடன் பல முஸ்லிம்களும் அங்கு சேர்ந்து கொண்டனர். ஸஅது இப்னு முஆத் என்பவரும் உஸைத் இப்னு ஹுழைர் என்பவரும் அதுவரை இஸ்லாமை ஏற்காமல் இணைவைப்பில்தான் இருந்தனர். இவ்விருவரும் தங்களின் கூட்டத்தினருக்குத் தலைவர்களாக இருந்தனர். முஸ்அபும், அஸ்அதும் தங்களின் தோட்டங்களில் அமர்ந்திருக்கின்றனர் என்று கேள்விப்பட்டவுடன் ஸஅத், உஸைதிடம் "நீ நமது எளியோர்களை ஏமாற்றும் இந்த இருவரிடமும் சென்று, அவர்களை எச்சரிக்கை செய்! நமது வீடுகளுக்கு அவர்கள் வரக்கூடாது என்று தடுத்துவிடு! நான் அவர்களிடம் கூற முடியாததற்குக் காரணம் அஸ்அத் இப்னு ஜுரார எனது சிறிய தாயின் மகனாவார். இந்த உறவு மட்டும் இல்லாதிருந்தால் நானே இக்காரியத்தை செய்திருப்பேன்" என்று கூறினார்.

இதைக் கேட்ட உஸைத் தனது ஈட்டியை எடுத்துக் கொண்டு இருவரையும் நோக்கி விரைந்து வந்தார். இதைப் பார்த்துவிட்ட அஸ்அத் இப்னு ஜுரார தனது நண்பர் முஸ்அபிடம் "இதோ தனது கூட்டத்தின் தலைவர் வருகிறார். நீங்கள் அவரிடம் அல்லாஹ்வுக்காக உண்மையான வற்றைக் கூறிவிடுங்கள்!" என்று கூறவே அதற்கு முஸ்அப், "அவர் என்னுடன் அமர்ந்தால் நான் அவருடன் பேசுவேன்" என்று கூறினார்.

அங்கு வந்த உஸைத் அவருக்கருகில் நின்றுகொண்டு "நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள்! எங்களில் எளியோர்களை ஏமாற்றவா? உங்களுக்கு உயிரின் மீது ஆசை இருந்தால் இங்கிருந்து சென்று விடுங்கள்" என்று கோபமாகப் பேசினார். அதற்கு முஸ்அப் அவரிடம் "நீங்கள் அமர்ந்து நான் சொல்வதைக் கேளுங்கள்! உங்களுக்கு விருப்பமாக இருந்தால் ஏற்றுக் கொள்ளுங்கள்! நீங்கள் விரும்பாவிட்டால் விட்டுவிடுங்கள்!" என்று கூறவே உஸைத் "நீங்கள் சொல்வது சரிதான்!" என்று கூறித் தனது ஈட்டியை நட்டுவைத்து அதற்கருகில் உட்கார்ந்து கொண்டார்.

முஸ்அப் (ரழி) உஸைதுக்கு இஸ்லாமின் விளக்கங்களை கூறி குர்ஆனை ஓதிக் காட்டினார்கள். இதைக் கேட்டுக்கொண்டிருக்கும் போதே உஸைதின் முகத்தில் மாற்றத்தை, அதாவது, இஸ்லாமை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தை அனைவரும் கண்டனர். இதைக் கேட்டதற்குப் பிறகு உஸைத் "ஆஹா! இது எவ்வளவு அழகிய உரைநடையாக இருக்கின்றது. இம்மார்க்கத்தில் சேர விரும்பினால் நான் என்ன செய்ய வேண்டும்" என்று கேட்டார். அதற்கு அவ்விருவரும் "நீங்கள் குளித்து, தூய்மையான ஆடை அணிந்து 'லாஇலாஹஇல்லல்லாஹ்' என மொழிந்து, பிறகு இரண்டு ரக்அத் தொழ வேண்டும்" என்று கூறினார்கள். உஸைத் எழுந்துச் சென்று குளித்து, தூய்மையான ஆடை அணிந்துகொண்டு இஸ்லாமை ஏற்று, இரண்டு ரகஅத் தொழுதார். பிறகு கூறினார் "எனக்குப் பிறகு ஒருவர் இருக்கிறார். அவரும் உங்களைப் பின்பற்றி உங்களது

மார்க்கத்தை ஏற்றுக் கொண்டால் அவரது கூட்டத்தினர் அனைவரும் உங்களை ஏற்றுக் கொள்வார்கள். அவர்தான் ஸஅது இப்னு முஆத். அவரை உங்களுக்கு நான் காட்டுகிறேன்'' என்று கூறினார். பிறகு தனது ஈட்டியை எடுத்துக் கொண்டு ஸஅது இப்னு முஆதிடம் சென்றார். ஸஅது தனது கூட்டத்தாருடன் சபையில் அமர்ந்திருந்தார்.

உஸைதை பார்த்த ஸஅது ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவரது முகத்தில் ஏதோ மாற்றம் தெரிகிறது. இங்கிருந்து செல்லும்போதிருந்த அவருடைய முகம் அவர் திரும்ப வரும்போது இல்லையே'' என்று கூறினார்.

சபையில் வந்துநின்ற உஸைதிடம் ''உஸைதே! அங்கு சென்று என்ன செய்தாய்?'' என்று ஸஅத் கேட்டார். அதற்கு உஸைத், தான் இஸ்லாமைத் தழுவியதை வெளிப்படுத்தாமல் ''நான் அவ்விருவரிடமும் பேசினேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவ்விருவரிடமும் எந்தத் தவறையும் நான் காணவில்லை. இருப்பினும் நான் அவர்களை அவர்களது செயல்களிலிருந்து தடுக்கவும் செய்தேன். அதற்கு அவ்விருவரும் எனது விருப்பத்திற்கேற்ப நடந்துகொள்வதாக கூறினார்கள்'' என்றார்.

மேலும், ''ஹாஸா கூட்டத்தார் உங்களுடன் உள்ள உடன்படிக்கையை முறிக்க வேண்டும் என்பதற்காகவே உங்கள் சிறிய தாயின் மகனான அஸ்அதை கொலை செய்யச் சென்றிருக்கிறார்கள் என்ற செய்தி எனக்குக் கிடைத்தது.'' என்று ஸஅதிடம் உஸைத் கூறினார். இதைக் கேட்டவுடன் ஸஅத் சினமடைந்தவராக தனது ஈட்டியை எடுத்துக்கொண்டு அவ்விருவரிடம் வந்தார்.

அவ்விருவரும் அமைதியாக அமர்ந்திருப்பதைப் பார்த்து உஸைத் கூறிய நோக்கத்தைப் ஸஅது புரிந்துகொண்டார். இவர்களின் பேச்சை நான் கேட்க வேண்டுமென்பதற்காகத்தான் உஸைத் இவ்வாறு செய்திருக்கிறார் என்று ஸஅத் விளங்கிக் கொண்டார். அவர்களுக்கருகில் நின்றுகொண்டு அஸ்அத் இப்னு ஜுராராவைப் பார்த்து ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அபூ உமாமாவே! உனக்கும் எனக்கும் உள்ள உறவின் காரணத்தால்தான் நீ இவ்வாறு செய்வதற்கு துணிந்திருக்கிறாய்! உனக்கு எவ்வளவு துணிச்சல் இருக்கும்!! எங்களது வீட்டிற்கு வந்து எங்களுக்கு விருப்பமற்ற முறையில் நடந்து கொள்கிறாயா?'' என்று கேட்டார்.

அஸ்அத் இப்னு ஜுராரா இதற்கு முன்பு ஸஅத் இப்னு முஆதைப் பற்றி முஸ்அபிடம் கூறியிருந்தார். அதாவது முஸ்அபே! நம்மிடம் வருகிற இவர் தனது கூட்டத்தின் தலைவர். இவர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் இவரது சமூகத்தினர் அனைவரும் ஒருவர் கூட பின்வாங்காமல் இஸ்லாமை ஏற்றுக் கொள்வார்கள் என்று கூறியிருந்தார். முஸ்அப் (ரழி) அவர்கள் அமைதியாக ''ஸஅதே! அமர்ந்து நான் கூறுவதைக் கேட்க மாட்டீர்களா? உங்களுக்கு நாங்கள் கூறுவது பிடித்திருந்தால் ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களுக்கு நாங்கள் கூறுவது வெறுப்பாக இருந்தால் உங்களுக்கு விருப்பமற்றதிலிருந்து நாங்கள் விலகிக் கொள்கிறோம்'' என்று கூறினார். சரி! என்று கூறி தனது ஈட்டியை நட்டுவைத்து ஸஅத் அமர்ந்துகொண்டார். முஸ்அப் (ரழி) அவருக்கு இஸ்லாமை அறிமுகப்படுத்திக் குர்ஆனை ஓதிக் காட்டினார். அடுத்து ஸஅத் பேசத் துவங்கும் முன்பே அவரது முகத்தில் இஸ்லாம் பிரகாசிப்பதை அனைவரும் கண்டனர்.

பிறகு ஸஅது, இஸ்லாமை ஏற்றுக் கொள்வதற்கு என்ன செய்ய வேண்டுமென்று வினவினார். குளித்து, தூய்மையான ஆடை அணிந்து, 'லாஇலாஹஇல்லல்லாஹ்' எனக் கூறி இரண்டு ரக்அத் தொழ வேண்டும் என்று கூறினார்கள். உடனே அவரும் அவ்வாறே செய்தார். பிறகு தனது ஈட்டியை எடுத்துக் கொண்டு தனது சமூகத்தினர் அமர்ந்திருந்த சபைக்கு வந்தார். அவரைப் பார்த்த அவன் சமூகத்தினர் ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவரது முகத்தில் மாற்றம் ஏற்பட்டுள்ளது'' என்று பேசிக்கொண்டனர்.

ஸஅத் சபைக்கருகில் வந்து “அப்துல் அஷ்ஹல் கிளையினரே! என்னைப் பற்றி உங்களது கருத்தென்ன?” என்று கேட்டார். அதற்கவர்கள் “நீங்கள் எங்கள் தலைவர் எங்களில் சிறந்த அறிவாளீ எங்களில் மிக பாக்கியம் பெற்றவர்” என்று கூறினர். அப்போது அவர் “நீங்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நேசிக்கும் வரை நான் உங்களில் எந்த ஆண்களிடமும், பெண்களிடமும் பேசமாட்டேன்” என்று கூறினார். அன்று மாலைக்குள் அவரது கூட்டத்தினரில் உஸைம் என்பவரைத் தவிர அனைத்து ஆண்களும் பெண்களும் முஸ்லிமாகிவிட்டனர். உஸைம் உஹுத் போர் நடந்தபோதுதான் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார். தொழும் வாய்ப்பு கிடைப்பதற்கு முன்பாகவே போரில் கலந்துகொண்டு வீர மரணம் அடைந்தார். இதனால் அவரைப் பற்றி “மிகக் குறைவாக அமல் செய்தார். ஆனால், அதிகமான நன்மையை அடைந்து கொண்டார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அஸ்அத் இப்னு ஜுராராவின் வீட்டில் தங்கி முஸ்அப் (ரழி) இஸ்லாமின் அழைப்புப் பணியை செய்து கொண்டிருந்தார். மதீனாவாசிகளில் பெரும்பாலானவர்களின் இல்லங்களில் இஸ்லாம் நுழைந்திருந்தது. ஒவ்வொரு வீட்டிலும் ஆண்களும் பெண்களுமாக பலர் இஸ்லாமைத் தழுவியிருந்தனர். ஆனால், உமைய்யா இப்னு ஜைத், கத்மா, வாயில் ஆகிய குடும்பத்தினர் மட்டும் இஸ்லாமை ஏற்கவில்லை. இவர்கள் அவர்களது இனத்தைச் சேர்ந்த ‘கைஸ் இப்னு அல் அஸ்வத்’ என்ற பிரபல கவிஞன் கட்டுப்பாட்டில் இருந்ததால் அவர் அம்மக்களை இஸ்லாமை ஏற்கவிடாமல் தடுத்திருந்தார். ஆனால், அவர்களும் பிற்காலத்தில் கந்தக் யுத்தம் (அகழ் போர்) நடைபெற்ற ஹிஜ்ரி ஐந்தாம் ஆண்டு இஸ்லாமைத் தழுவினர்.

நபித்துவத்தின் பதிமூன்றாம் ஆண்டு ஹஜ்ஜுடைய காலம் தொடங்கும் முன்பே மாபெரும் சாதனை! வெற்றி!! என்ற நற்செய்தியை எடுத்துக்கொண்டு முஸ்அப் (ரழி) மக்கா திரும்பினார். நபி (ஸல்) அவர்களிடம் மதீனாவாசிகளின் செய்திகள், அவர்களின் சிறந்த பண்புகள், அவர்களுக்கு இருக்கும் ஆற்றல்கள், மன உறுதி ஆகியவற்றை விவரமாக எடுத்துக் கூறினார். (இப்னு ஹிஷாம்)

## அகபாவில் இரண்டாவது ஒப்பந்தம்

நபித்துவத்தின் 13 ஆம் ஆண்டு (கி.பி. 622 ஜூன் திங்கள்) ஹஜ்ஜுடைய காலத்தில் ஹஜ்ஜுக்காக மதீனாவாசிகளில் முஸ்லிம்களும் முஸ்லிமல்லாதவர்களும் கலந்து, எழுபதுக்கும் அதிகமானோர் மக்கா வந்தனர். மதீனாவில் இருக்கும்போது அல்லது மக்காவிற்கு வரும் வழியில் இந்த முஸ்லிம்கள் இவ்வாறு பேசிக் கொண்டனர். “மக்காவின் மலைப்பாதைகளில் சுற்றித் திரிந்து கொண்டு மக்களால் விரட்டியடிக்கப்பட்டு மக்களை அஞ்சிய நிலையில் வாழ்ந்து வர நபி (ஸல்) அவர்களை நாம் எதுவரை விட்டு வைத்திருப்பது?” மதீனாவாசிகளின் இந்த உணர்ச்சிமிக்க பேச்சிலிருந்து நபி (ஸல்) அவர்களை மதீனாவிற்கு அழைத்துச் செல்லவேண்டும் என்ற ஆசை அவர்களது உள்ளத்தில் இருப்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

இவர்கள் அனைவரும் மக்கா வந்து சேர்ந்தனர். பிறகு அதிலிருந்த முஸ்லிம்களுக்கும் நபி (ஸல்) அவர்களுக்குமிடையில் இரகசியமான முறையில் சந்திப்புகள் பல நடந்து கொண்டிருந்தன. இறுதியாக, ஹஜ்ஜுக் கடமைகளை முடித்து மினாவில் முதல் ஜம்ராவுக்கு அருகிலுள்ள அகபாவில் பிறை 12ம் நாள் நள்ளிரவில் சந்திப்போமென்று நபி (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் முடிவு செய்தனர். சிலை வழிபாட்டிற்கும் இஸ்லாமிற்கும் நடந்த போராட்டத்தில் மாபெரும் திருப்புமுனையாக அமைந்த வரலாற்று பிரசித்திமிக்க இந்த சந்திப்பைப் பற்றி அன்சாரிகளின் தலைவர்களில் ஒருவராக விளங்கிய கஅப் இப்னு மாலிக் (ரழி) விவப்பதை நாம் பார்ப்போம்:

“நாங்கள் ஹஜ் செய்ய மக்காவிற்கு வந்திருந்தோம். ஹஜ் முடிந்த இரண்டாவது தினத்தில் அகபாவில் சந்திக்கலாம் என்று நபி (ஸல்) அவர்களிடம் பேசி முடிவு செய்தோம்.

அதன்படி நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க நாங்கள் தயாரானோம். அப்போது எங்களுடன் எங்களின் தலைவர்களில் சிறப்புமிக்க ஒருவரான ‘அபூஜாபிர்’ எனப்படும் அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஹராம் என்பவரையும் உடன் அழைத்துக் கொண்டோம். எங்களுடன் வந்தவர்களில், அதுவரை இஸ்லாமை ஏற்காமல் இருந்தவர்களுக்கு நாங்கள் இதைப் பற்றி எதையும் கூறவில்லை. அபூஜாபிருக்கு நாங்கள் இஸ்லாமைப் பற்றி விளக்கம் கொடுத்தோம். “அபூஜாபிரே! நீங்கள் எங்களின் தலைவர்களில் ஒருத்தர் எங்களில் மிகவும் மதிப்புமிக்கவர்களில் நீங்களும் ஒருத்தர். நீங்கள் நாளை நரக நெருப்பில் வேதனை செய்யப்படுவதை நாங்கள் விரும்பவில்லை” என்று கூறி இஸ்லாமை ஏற்க அழைப்பு கொடுத்தோம். நாங்கள் நபி (ஸல்) அவர்களை அகபாவில் சந்திக்க இருக்கிறோம் என்பதையும் கூறினோம். அவர் எங்களின் அழைப்பை ஏற்று இஸ்லாமைத் தழுவி எங்களுடன் அகபா ஒப்பந்தத்திலும் கலந்து கொண்டார். பிறகு நியமிக்கப்பட்ட 12 தலைவர்களில் இவரும் ஒருவராவார்.

தொடர்ந்து கஅப் (ரழி) கூறுகிறார்: அன்றிரவு நாங்கள் எங்களது கூடாரங்களில் எங்களது கூட்டத்தினருடன் தங்கியிருந்துவிட்டு இரவின் மூன்றில் ஒரு பகுதி கழிந்த பின் நபி (ஸல்) அவர்களைச் சந்திப்பதற்காக இரகசியமாக வெளியாகி அகபாவிற்கு அருகிலுள்ள கணவாயில் ஒன்று சேர்ந்தோம். நாங்கள் ஆண்களில் 73 பேரும், பெண்களில் மாஜின் குடும்பத்தைச் சேர்ந்த ‘உம்மு உமாரா’ என்ற நுஸைபா பின்த் கஅப் என்பவரும், ஸலமா குடும்பத்தைச் சேர்ந்த ‘உம்மு மனீஃ’ என்ற அஸ்மா பின்த் அம்ர் என்பவரும் கலந்துகொண்டனர்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களை எதிர்பார்த்து அக்கணவாயில் கூடினோம். நபி (ஸல்) அவர்களுடன் அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபும் வந்தார்கள். அந்நேரத்தில் அவர் முஸ்லிமாக இல்லை. எனினும், தனது அண்ணன் மகனுடைய செயல்பாடு மற்றும் நடைமுறைகளை சரிவரத் தெரிந்து கொள்வதற்காகவும் அவருக்காக அன்சாரிகளிடம் உறுதிமொழி வாங்குவதற்காகவும் அங்கு வந்திருந்தார். அவரே குழுமியிருந்தவர்களில் முதலாவதாகப் பேசத் தொடங்கினார்.” (இப்னு ஹிஷாம்)

**உரையாடலின் தொடக்கமும் அப்பாஸின் விளக்கமும்**

அனைவரும் சபையில் ஒன்று கூடியபின் மார்க்க ரீதியான மற்றும் நபி (ஸல்) அவர்களை பாதுகாப்பது தொடர்பான ஒப்பந்தங்களை உறுதிப்படுத்துவதற்காக பேச்சுவார்த்தைகள் தொடங்கின. முதலில் நபி (ஸல்) அவர்களது தந்தையின் சகோதரர் அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிப் பேசினார். அவர் தனது பேச்சில் இந்த நட்பு ஒப்பந்தத்தின் விளைவாக தங்களின் தோள்களில் சுமக்க இருக்கும் பொறுப்பு எவ்வளவு ஆபத்தானது, எவ்வளவு பெரிய பின்விளைவுகளைக் கொண்டது என்பதை மிகத் தெளிவாக அன்சாரிகளுக்கு விவரித்தார். இதோ அப்பாஸ் அவர்களின் பேச்சின் சுருக்கம்:

“கஸ்ரஜ் கூட்டத்தினரே! நிச்சயமாக முஹம்மது எங்களிடம் எவ்வாறு இருக்கிறார் என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும். எங்கள் கூட்டத்தில் எங்களது (ஷிர்க்-இணைவைக்கும்) கொள்கையின் மீது இருப்பவர்களிடமிருந்து நாம் அவரை இதுநாள் வரை பாதுகாத்து வந்திருக்கிறோம். அவர் எங்களது கூட்டத்தில் கண்ணியமாக, அதே நேரத்தில் அவரது ஊரில் பாதுகாப்புடனும்தான் இருக்கின்றார். எனினும், அவர் உங்களுடன் இணைந்துவிடவும், உங்களுடன் ஒன்றிவிடவும் விரும்புகிறார். நீங்கள் அவருக்கு தரும் வாக்கைக் காப்பாற்றி எதிரிகளிடமிருந்து அவரை பாதுகாப்பவர்களாக இருந்தால் அவரை அழைத்துச் செல்லலாம். இல்லை, ‘நீங்கள் அவரை எதிரிகளிடம் ஒப்படைத்து விடுவீர்கள். இங்கிருந்து அழைத்துச் சென்றவுடன் கைவிட்டு விடுவீர்கள்’ என்றிருப்பின் இப்போதே அவரை விட்டுவிடுங்கள். ஏனெனில், அவர் தனது கூட்டத்தினருடன் தனது ஊரில் கண்ணியத்துடனும், பாதுகாப்புடனும் தான் இருக்கின்றார்.”

அப்பாஸின் இந்த உரையாடலுக்குப் பின் கஅப் “நீங்கள் கூறியதை நாங்கள் கேட்டு விட்டோம் அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் பேசுங்கள். உங்களுக்கும் உங்களது இறைவனுக்கும் நீங்கள் விரும்பியதையெல்லாம் எங்களிடமிருந்து எடுத்துக் கொள்ளுங்கள்” என்று கூறினார். (இப்னு ஹிஷாம்)

அன்சாரிகளின் உறுதியையும், வீரத்தையும், இந்த மகத்தான பொறுப்பையும், அதன் விபரீதமான பின்விளைவுகளையும் தாங்கிக் கொள்வதில் அவர்களிடம் இருந்த உறுதியையும் மனத் தூய்மையையும் இந்த பதில்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். கஅப் கூறிய பிறகு நபி (ஸல்) அவர்களின் உரையும் அதற்குப் பின் உறுதிமொழி வாங்குவதும் நடைபெற்றது.

**ஒப்பந்தத்தின் அம்சங்கள்**

ஜாபிர் (ரழி) இதைப்பற்றி மிக விரிவாக அறிவிக்கிறார்கள். “அல்லாஹ்வின் தூதரே! எந்த விஷயங்களுக்காக நாங்கள் உங்களிடம் இஸ்லாமிய ஒப்பந்தம் (பைஅத்) செய்ய வேண்டும்” என்று கேட்க அதற்கு விளக்கமாக நபி (ஸல்) கூறினார்கள்

“இன்பத்திலும் துன்பத்திலும் (கட்டளைக்கு) செவிசாய்க்க வேண்டும் கட்டுப்பட வேண்டும்

வசதியிலும் வசதியின்மையிலும் செலவு செய்ய வேண்டும்

நன்மையை ஏவ வேண்டும் தீமையைத் தடுக்க வேண்டும்

அல்லாஹ்வுக்காக நீங்கள் தியாகம் செய்யத் தயாராக வேண்டும் அல்லாஹ்வின் விஷயத்தில்

பழிப்பவர்களின் பழிப்பு உங்களைப் பாதித்து விடக்கூடாது

ஆட்சி, அதிகாரத்தைப் பெறுவதற்காக சண்டையிடக்கூடாது

நான் உங்களிடம் வந்து விட்டால் நீங்கள் எனக்கு உதவி செய்ய வேண்டும் உங்களையும் உங்களது மனைவியரையும் பிள்ளைகளையும் பாதுகாப்பதைப் போல் நீங்கள் என்னைப் பாதுகாக்க வேண்டும் இதனை நீங்கள் பைஆ (இஸ்லாமிய ஒப்பந்தம்) செய்து கொடுங்கள். அல்லாஹ் உங்களுக்குச் சொர்க்கத்தைத் தருவான்.” இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தினார்கள். (முஸ்னது அஹ்மது, பைஹகீ, முஸ்தத்ரகுல் ஹாகிம், இப்னு ஹிஷாம்)

இந்நிகழ்ச்சியை கஅப் (ரழி) அவர்களும் அறிவிக்கிறார்கள். அதில் அவர்கள் கூறுவதாவது:

“நபி (ஸல்) எங்களிடம் பேசினார்கள் குர்ஆனை ஓதிக் காண்பித்தார்கள் அல்லாஹ்வின் பக்கம் எங்களை அழைத்தார்கள் இஸ்லாமை ஏற்றுக் கொள்வதற்கு ஆர்வமூட்டினார்கள் பிறகு நீங்கள் உங்களது மனைவிகளையும் பிள்ளைகளையும் பாதுகாப்பது போன்று என்னையும் பாதுகாக்க வேண்டும் என்று நான் உங்களிடம் உறுதிமொழி கேட்கிறேன்” என்று கூறி முடித்தார்கள். அப்போது பராஆ இப்னு மஅரூர் (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் கையைப் பிடித்து “சத்திய மார்க்கத்தைக் கொண்டு உங்களை நபியாக அனுப்பிய அல்லாஹ்வின் மீது ஆணையாக! எங்களை நாங்கள் பாதுகாப்பது போன்றே உங்களையும் நிச்சயம் நாங்கள் பாதுகாப்போம்! அல்லாஹ்வின் தூதரே! எங்களிடம் வாக்குறுதியும் ஒப்பந்தமும் பெற்றுக் கொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாங்கள் போரின் மைந்தர்கள் கவச ஆடை அணிந்தவர்கள் பரம்பரைப் பரம்பரையாக போர் செய்து பழக்கப்பட்டவர்கள்” என்று வீர முழக்கமிட்டார்கள்.

இவ்வாறு பராஆ (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் பேசிக் கொண்டிருக்கும்போது அபுல் ஹைசம் இப்னு தைம்ஹான் (ரழி) அவர்கள் குறுக்கிட்டு “அல்லாஹ்வின் தூதரே! எங்களுக்கும் யூதர்களுக்குமிடையில் சில உடன்படிக்கை உறவுகள் இருக்கின்றன. நாங்கள் அதை துண்டித்து உங்களுடன் சேர்ந்து கொள்கிறோம். பிறகு ஒரு காலத்தில் அல்லாஹ் உங்களுக்கு வெற்றியைக் கொடுத்துவிட்டால் நீங்கள் எங்களை விட்டுவிட்டு உங்களது கூட்டத்தனரிடம் சென்று விடுவீர்களா?” என்று கேட்டார்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் புன்முறுவல் பூத்தவர்களாக “அவ்வாறில்லை. உங்களது உயிர் எனது உம்ராகும் உங்களது அழிவு எனது அழிவாகும் நான் உங்களைச் சேர்ந்தவன் நீங்கள் என்னைச் சேர்ந்தவர்கள் நீங்கள் போர் புரிபவர்களுடன் நானும் போர் புரிவேன் நீங்கள் சமாதான உடன்படிக்கை செய்பவர்களுடன் நானும் சமாதான உடன்படிக்கை செய்து கொள்வேன்” என்று கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

**ஒப்பந்தத்தின் பின்விளைவை உணர்த்துதல்**

மேற்கூறப்பட்ட நிபந்தனைகளுடன் பேச்சுவார்த்தைகள் முடிவுற்றது. நபித்துவத்தின் 11, 12 ஆம் ஆண்டுகளில் முதன்மையாக இஸ்லாமை ஏற்றுக் கொண்டவர்களில் இருவர், ஒருவர் பின் ஒருவராக எழுந்து தாங்கள் சுமந்து கொள்ளப்போகும் இந்தப் பொறுப்பு எவ்வளவு விபரீதமானது என்பதைத் தங்களது சமுதாயத்திற்கு மிக விளக்கமாக உணர்த்தினார்கள். ஏனெனில், மக்கள் இவ்விஷயத்தை தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவும், அவர்கள் தியாகத்திற்கு எவ்வளவு தூரம் தயாராக இருக்கிறார்கள் என்பதை அறிந்து உறுதிசெய்து கொள்வதற்காகவும் இவ்வாறு எடுத்துக் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களிடம் ஒப்பந்தம் செய்ய அனைவரும் ஒன்று சேர்ந்தபின் அப்பாஸ் இப்னு உபாதா இப்னு நழ்லா (ரழி) அவர்கள் எழுந்து “மக்களே! இவரிடம் நீங்கள் எதற்கு வாக்குக் கொடுக்கிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?” என்று கேட்டார். அதற்கு அம்மக்கள் ‘அது எங்களுக்கு நன்கு தெரியும்’ என்றவுடன், தொடர்ந்து அவர் “மக்களே! நீங்கள் இவரிடம் வெள்ளையர், கருப்பர் என அனைத்து மக்களுக்கு எதிராக போர் செய்யவும் தயார் என்று வாக்கு கொடுக்கின்றீர்கள். உங்களது செல்வங்கள் அழிந்து, உங்களில் சிறப்பிற்குரியவர்கள் கொலை செய்யப்படும் போது நீங்கள் அவரை எதிரிகளிடம் ஒப்படைத்து விடுவீர்கள் என்று கருதினால் இப்போதே இவரை இங்கேயே விட்டு விடுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அந்தத் தவறை நீங்கள் செய்வது இம்மையிலும் மறுமையிலும் மிகப்பெரிய இழிவை உங்களுக்குத் தரும். உங்களது செல்வங்கள் அழிந்தாலும்கூட உங்களது சிறப்பிற்குரியவர்கள் கொலை செய்யப் பட்டாலும் கூட எந்த நிபந்தனைகளுடன் நீங்கள் இவரை அழைத்துச் செல்ல இருக்கிறீர்களோ அந்த நிபந்தனைகளை முழுமையாக நிறைவேற்றுவீர்கள் என்ற உறுதி உங்களுக்கு இருப்பின் இவரை நீங்கள் அழைத்துச் செல்லுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது இம்மை மறுமையின் மிகப்பெரிய நற்பாக்கியமாகும்” என்று கூறினார்.

அதற்கு அம்மக்கள் “செல்வங்கள் அழிந்தாலும் சிறப்பிற்குரியவர்கள் கொலை செய்யப் பட்டாலும் நாங்கள் இவரை அரவணைத்துக் கொள்வோம் கைவிட்டுவிட மாட்டோம். இதே நிபந்தனைகளின் பேரில்தான் இவரை அழைத்துச் செல்கிறோம். நாங்கள் இந்த நிபந்தனைகளை முழுமையாக நிறைவேற்றினால் எங்களுக்கு என்ன கிடைக்கும்?” என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “சொர்க்கம் கிடைக்கும்” என்று கூறினார்கள். உடனே அந்த மக்கள் உங்களது “கையை நீட்டுங்கள்” என்று கூற நபி (ஸல்) அவர்கள் கையை நீட்டியவுடன் அனைவரும் இஸ்லாமிய ஒப்பந்தம் செய்து கொடுத்தார்கள். (இப்னு ஹிஷாம்)

ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் ‘பைஆ’ செய்ய எழுந்தபோது, முதலாவதாக எங்களில் மிகக் குறைந்த வயதுடைய அஸ்அது இப்னு ஜுராரா நபி (ஸல்) அவர்களின் கையைப் பிடித்துக்கொண்டு பின்வருமாறு கூறினார்:

“மதீனாவாசிகளே! சற்றுப் பொறுங்கள். இவர் அல்லாஹ்வின் தூதர். இவரை இவரது ஊரிலிருந்து வெளியேற்றி அழைத்துச் செல்வதால் முழு அரபு இனத்தையும் பிரிய வேண்டும் நம்மிலுள்ள மேன்மக்கள் கொலை செய்யப்படலாம் நம்மை எதிரிகளின் வாட்கள் வெட்டி வீழ்த்தலாம் இவை அனைத்தையும் தெரிந்து கொண்டுதான் நாம் பயணம் செய்து வந்திருக்கிறோம் என்பது தெரிந்த விஷயமே. ஆனால், இப்போது நான் உங்களுக்கு சொல்ல வருவது என்னவெனில், இந்த சோதனைகளை உங்களால் சகித்துக்கொள்ள முடியுமென்றால் இவரை உங்களுடன் அழைத்துச் செல்லுங்கள். அதற்குரிய கூலியை நிச்சயம் அல்லாஹ் உங்களுக்குக் கொடுப்பான். ஒருவேளை உங்களது உயிரைப் பற்றிய பயம் உங்களுக்கு இருந்தால் இப்போது இவரை இங்கேயே விட்டுவிடுங்கள். அல்லாஹ் உங்களை மன்னித்து விடலாம்.” இவ்வாறு அஸ்அத் கூறிமுடித்தவுடன் மக்கள் “அஸ்அதே! உமது கையை அகற்றிவிடு. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நபி (ஸல்) அவர்களிடம் ஒப்பந்தம் செய்வதிலிருந்து நாங்கள் பின்வாங்கவும் மாட்டோம் ஒருக்காலும் அதை முறிக்கவும் மாட்டோம்” என்று கூறினார்கள். (முஸ்னது அஹ்மது, பைஹகீ)

இவ்வாறு அஸ்அத் செய்ததற்குக் காரணம் மதீனாவாசிகள் இந்த மார்க்கத்திற்காக தியாகம் செய்ய எவ்வளவு தூரம் தயாராக இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்வதற்காகத்தான்.

இதற்குப் பிறகு நபி (ஸல்) அவர்களிடம் முதன்மையாக ஒப்பந்தம் செய்து கொடுத்தது அஸ்அது இப்னு ஜுராராதான். (இப்னு ஹிஷாம்)

ஏனெனில், இவர்தான் முஸ்அப் இப்னு உமைடம் சென்ற மாபெரும் மார்க்க அழைப்பாளராவார். இதற்குப் பிறகு மக்கள் அனைவரும் பைஆ செய்தனர்.

ஜாபிர் (ரழி) கூறுவதாவது: நாங்கள் ஒவ்வொருவராக எழுந்து நபி (ஸல்) அவர்களிடம் சென்றோம். நபி (ஸல்) எங்களிடம் வாக்குறுதிப் பெற்றபின் அதற்கு பகரமாக எங்களுக்கு சொர்க்கத்தை வாக்களித்தார்கள். (முஸ்னது அஹ்மது)

இந்த நிகழ்ச்சியில் கலந்துகொண்ட பெண்கள் இருவரும் ஒப்பந்தம் செய்தனர். அவர்கள் நபி (ஸல்) அவர்களின் கையைப் பிடிக்காமல் சொல்லால்தான் ஒப்பந்தம் செய்தனர். நபி (ஸல்) எந்த ஒரு அந்நியப் பெண்ணிடமும் கை கொடுத்ததில்லை. (ஸஹீஹ் முஸ்லிம்)

### 12 தலைவர்கள்

மேற்கூறப்பட்ட முறைப்படி ஒப்பந்தம் நிறைவு பெற்றவுடன் நபி (ஸல்) அவர்கள் அந்த மக்களிடம் 12 தலைவர்களை தங்களுக்காகத் தேர்ந்தெடுக்கும்படி கூறினார்கள். தங்களது கூட்டத்தினரை கண்காணிப்பதும், ஒப்பந்தத்தின் அம்சங்களை நிறைவேற்றத் தூண்டுவதும் அந்தத் தலைவர்களின் பணியாக இருந்தது.

மதீனாவாசிகள் கஸ்ரஜ் கோத்திரத்தைச் சேர்ந்த ஒன்பது நபர்களையும், அவ்ஸ் கோத்திரத்தைச் சேர்ந்த மூன்று நபர்களையும் தங்களின் தலைவர்களாகத் தேர்ந்தெடுத்தனர்.

கஸ்ரஜ் கிளையைச் சேர்ந்த தலைவர்கள்:

1) அஸ்அது இப்னு ஜுராரா இப்னு அதஸ்

2) ஸஅது இப்னு ரபீஃ இப்னு அம்ரு

3) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா இப்னு ஸஃலபா

4) ராஃபிஃ இப்னு மாலிக் இப்னு அஜ்லான்

5) பராஃ இப்னு மஃரூர் இப்னு ஸக்ர்

6) அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஹராம்

7) உபாதா இப்னு ஸாபித் இப்னு கய்ஸ்

8) ஸஃது இப்னு உபாதா இப்னு துலைம்

9) முன்திர் இப்னு அம்ரு இப்னு குனைஸ் (ரழியல்லாஹு அன்ஹும்).

அவ்ஸ் கிளையைச் சேர்ந்த தலைவர்கள்:

1) உஸைத் இப்னு ஹுழைர் இப்னு சிமாக்

2) ஸஅது இப்னு கைஸமா இப்னு ஹாரிஸ்

3) ஃபாஆ இப்னு அப்துல் முன்திர் இப்னு ஜுபைர் (ரழியல்லாஹு அன்ஹும்).

இந்தத் தலைவர்களிடம் அவர்கள் தலைவர்கள் என்ற அடிப்படையில் மற்ற சில உடன்படிக்கையையும் நபி (ஸல்) வாங்கினார்கள்.

அதாவது, ஈஸா இப்னு மர்யமுக்கு அவரது உற்றத் தோழர்கள் பொறுப்பாளிகளாக இருந்தது போன்று நீங்கள் உங்களது கூட்டத்தினரின் காரியங்களுக்கு பொறுப்பாளிகளாவீர்கள். நான் முழு முஸ்லிம் சமுதாயத்தினருக்கும் பொறுப்பாளி ஆவேன் என்று நபி (ஸல்) கூற இதை அவர்கள் அனைவரும் ஏற்றுக் கொண்டனர். (இப்னு ஹிஷாம்)

**ஷைத்தான் கூச்சலிடுகிறான்**

நள்ளிரவில் இரகசியமாக நடைபெற்ற உடன்படிக்கை முழுமையாக நிறைவுபெற்று, கூட்டத்தினர் அனைவரும் பிரிந்து செல்ல இருக்கும் நேரத்தில், ஷைத்தான்களில் ஒருவனுக்கு அந்த ஒப்பந்தத்தைப் பற்றி தெரிய வந்தவுடன் அதைப் பகிரங்கப்படுத்துவதற்காக கூச்சலிட்டான். கடைசி தருணத்தில்தான் அவனுக்கு உடன்படிக்கை தெரியவந்ததால் குறைஷி தலைவர்களுக்கு இந்தச் செய்தியை முன்கூட்டியே தெரிவிக்க முடியாமல் போய்விட்டது. எனவே, முஸ்லிம்கள் ஒன்று சேர்வதிலிருந்து அவர்களைத் தடுக்கும் சந்தர்ப்பம் அவர்களுக்கு ஏற்படவில்லை. உடனடியாக அந்த ஷைத்தான் அங்குள்ள ஓர் உயரமான இடத்தில் ஏறி நின்றுகொண்டு மிக பயங்கரமான சப்தத்தில் “ஓ! கூடாரத்தில் தங்கியிருப்பவர்களே! இதோ இந்த இழிவுக்குரியவரையும் அவருடன் மதம்மாறி சென்றவர்களையும் நீங்கள் பார்க்க வேண்டாமா? இவர்களெல்லாம் உங்கள் மீது போர் தொடுக்க வேண்டுமென ஒன்றுகூடி இருக்கின்றனர்” என்று கூச்சலிட்டான்.

அதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் “இவன் இந்தக் கணவாயின் ஷைத்தான்” என்று கூறி அந்த ஷைத்தானை நோக்கி “ஏய் அல்லாஹ்வின் எதிரியே! அதிவிரைவில் நான் உனது கணக்கை முடித்து விடுகிறேன்” என்று கூறிவிட்டு அங்கிருந்தவர்களிடம் அவரவர் கூடாரங்களுக்குக் கலைந்து செல்லுமாறு ஆணை பிறப்பித்தார்கள். (இப்னு ஹிஷாம்)

இந்த ஷைத்தானின் பேச்சைக் கேட்ட அப்பாஸ் இப்னு உபாதா இப்னு நள்லா “உங்களை உண்மையைக் கொண்டு அனுப்பிய இறைவனின் மீது ஆணையாக! நீங்கள் விரும்பினால் நாளை இங்கு தங்கியிருக்கும் மினாவாசிகள் அனைவர் மீதும் நாங்கள் வாளேந்தி போர் தொடுக்கிறோம்” என்று கூறினார். ஆனால் அதற்கு நபி (ஸல்) அவர்கள் “நமக்கு அவ்வாறு கட்டளை இடப்படவில்லை. இப்போது நீங்கள் உங்களது கூடாரங்களுக்குத் திரும்பிச்

செல்லுங்கள்'' என்று கூறவே அனைவரும் திரும்பிச் சென்று தங்களது கூட்டத்தினருடன் உறங்கிக் கொண்டார்கள். (இப்னு ஹிஷாம்)

### குறைஷிகளின் எதிர்ப்பு

இந்த உடன்படிக்கையின் செய்தி குறைஷிகளின் காதுகளுக்கு எட்டியவுடன் அவர்களுக்கு மத்தியில் பெரும் சலசலப்பு ஏற்பட்டது. அவர்களைத் துக்கங்களும் கவலைகளும் ஆட்கொண்டன. இதுபோன்ற உடன்படிக்கை ஏற்பட்டால் அதன் முடிவுகளும் விளைவுகளும் எப்படி இருக்கும் என்பதை குறைஷிகள் நன்கு அறிந்திருந்ததால் நிலைமை என்னவாகுமோ என்று பயந்து சஞ்சலத்திற்கு உள்ளாயினர். எனவே, அதிகாலையில் மக்காவாசிகளுடைய தலைவர்களின் ஒரு மாபெரும் குழு இவ்வுடன்படிக்கைக்குத் தங்களது கடுமையான எதிர்ப்பையும் ஆட்சேபனையையும் தெரிவிப்பதற்காக மதீனாவாசிகளிடம் வந்தனர்.

''கஸ்ரஜ் கூட்டத்தினரே! எங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவரை எங்களிடமிருந்து வெளியேற்ற விரும்புகின்றீர்களா? எங்கள் மீது போர் தொடுக்க அவருடன் நீங்கள் உடன்படிக்கை செய்கின்றீர் களா? அல்லாஹ்வின் மீது ஆணையாக! உங்களுக்கும் நமக்கும் மத்தியில் போரை நாங்கள் அறவே விரும்பவில்லை'' என்று அந்தக் குழு மதீனாவாசிகளிடம் கூறினர். (இப்னு ஹிஷாம்)

இந்த உடன்படிக்கை இரவின் இருளில் மிக இரகசியமாக நடைபெற்று இருந்ததால் மதீனாவாசிகளில் இணைவைப்பவர்களாக இருந்தவர்களுக்கு இவ்வுடன்படிக்கையைப் பற்றி எதுவும் தெரியாது. எனவே, அவர்கள் குழம்பிவிட்டனர். அப்படி ஒன்றும் நடக்கவில்லை என்று மதீனாவைச் சேர்ந்த இணைவைப்பவர்கள் மறுத்தனர். மக்காவாசிகள், அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு சலூலிடம் விசாரித்தனர். அதற்கு, ''இது முற்றிலும் பொய்யான செய்தி. நான் மதீனாவில் இருந்திருந்தால் கூட எனது கூட்டத்தினர் என்னிடம் ஆலோசனை செய்யாமல் இதுபோன்ற செயல்களில் இறங்க மாட்டார்கள். நான் இங்கு இருக்கும்போது எனக்குத் தெரியாமல் இது போன்று அவர்கள் ஒருக்காலும் செய்திருக்கவே மாட்டார்கள்'' என்று அவன் கூறினான்.

முஸ்லிம்களோ தங்களை ஒருவருக்கொருவர் பார்த்துக் கொண்டு எதுவும் பேசாமல் வாய்மூடி இருந்துவிட்டனர். குறைஷித் தலைவர்கள் மதீனா முஷ்ரிக்குகளின் பேச்சை நம்பி, தோல்வியுடன் திரும்பினர்.

### குறைஷிகள் செய்தியை உறுதி செய்தனர்

மதீனாவாசிகளைப் பற்றி கேள்விப்பட்ட செய்தி பொய்யாக இருக்குமோ என்று சற்றே உறுதியான எண்ணத்தில்தான் அவர்கள் திரும்பினர். ஆனாலும், அதைப் பற்றி துருவித் துருவி ஆராய்ந்து, விசாரித்துக் கொண்டே இருந்தனர். இறுதியில், தாங்கள் கேள்விப்பட்ட செய்தி உண்மைதான், இரவிலேயே ஒப்பந்தம் முழுமை அடைந்து விட்டது என்று அறிந்து கொண்டனர். உடனே, மதீனாவாசிகளை விரட்டிப் பிடிப்பதற்காக குறைஷிகளின் குதிரை வீரர்கள் தங்களது குதிரைகளை வெகு விரைவாக செலுத்தினர். ஆனால், அவர்களை அடைந்துகொள்ள முடியவில்லை. காரணம், நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்கிணங்க மதீனாவாசிகள் வெகு விரைவாக தங்களது நாடுகளை நோக்கி பயணமாகி விட்டனர். ஆனால், பயணக் கூட்டத்தின் கடைசியாக சென்று கொண்டிருந்த ஸஅது இப்னு உபாதாவையும், முன்திர் இப்னு அம்ரையும் குறைஷிகள் பார்த்து விட்டனர். அவர்கள் இருவரையும் பிடிக்க முயலவே முன்திர் விரைந்து சென்று தப்பித்துக் கொண்டார். ஸஅது (ரழி) குறைஷிகளின் கையில் சிக்கிக் கொண்டார். அந்தக் குறைஷிகள் அவரை அவரது வாகனத்தின் கயிற்றைக் கொண்டு கையை கழுத்துடன் கட்டி, அடித்து, தலைமுடியைப் பிடித்து இழுத்தவர்களாக மக்காவுக்கு அழைத்து வந்தனர். இதைப் பார்த்த முத்யீம் இப்னு

அதீயும், ஹாரிஸ் இப்னு ஹர்ப் இப்னு உமைய்யாவும் ஸஅதை குறைஷிகளின் பிடியிலிருந்து விடுவித்தனர். ஏனெனில், முத்'' மற்றும் ஹாரிஸின் வியாபாரக் கூட்டங்கள் மதீனாவைக் கடந்து செல்லும்போது அக்கூட்டங்களுக்கு ஸஅது (ரழி) அவர்கள்தான் பாதுகாப்பு அளித்து வந்தார்கள். இதற்கிடையில் தங்களுடன் ஸஅதைப் பார்க்காத அன்சாரிகள் அவரைக் காப்பாற்றி அழைத்து வருவதற்காக ஆலோசனை செய்து கொண்டிருந்தபொழுது ஸஅது (ரழி) குறைஷிகளின் பிடியிலிருந்து விடுபட்டு வந்துவிடவே அனைவரும் மதீனா சென்று விட்டனர். (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

இதுதான் அகபாவின் இரண்டாவது உடன்படிக்கை ஆகும். இதற்கு 'அகபாவின் மாபெரும் உடன்படிக்கை' என்றும் பெயர் கூறப்படும். இந்த உடன்படிக்கை அன்பு, ஆதரவு என்ற உணர்ச்சிகளுடனும், முஸ்லிம்கள் பலதரப்பட்டவர்களாக இருப்பினும் தங்களுக்குள் உதவி, ஒத்தாசை செய்து கொள்ள வேண்டும் அல்லாஹ்வின் வழியிலே தங்களது வீரத்தையும், உறுதியையும் வெளிப்படுத்த வேண்டும் என்ற உணர்ச்சிகளுடனும் நிறைவு பெற்றது. மதீனாவில் வாழும் ஒரு முஸ்லிம் மக்காவில் வாழும் பலவீனமான தன் சகோதர முஸ்லிம் மீது இரக்கம் காட்டுகிறார் அவருக்காக உணர்ச்சி வசப்படுகிறார் அவர் மீது அநியாயம் செய்பவர்களை வெறுக்கிறார் தனது முஸ்லிமான சகோதரர் தன்னைவிட்டு மறைந்திருந்தாலும் அல்லாஹ்விற்காக அவர் மீது அன்பின் உணர்வுகள் இவரது உள்ளத்தில் ஊற்றெடுக்கின்றன. இந்த உணர்வுகளும், உணர்ச்சிகளும் காலத்தால் நீங்கிவிடக்கூடியதல்ல. ஏனெனில், இதன் பிறப்பிடம் அல்லாஹ்வையும், அவனது தூதரையும், அவனது வேதத்தையும் நம்பிக்கை கொண்டதால் உருவானதாகும்.

இந்த இறைநம்பிக்கையை உலகத்தின் எந்த ஓர் அநியாயமான அல்லது வரம்புமீறிய சக்தியாலும் நீக்கிவிட முடியாது. இந்த இறைநம்பிக்கை எனும் புயல் வீச ஆரம்பித்தால் கொள்கையிலும், செயல்களிலும் வியக்கத்தக்க மாபெரும் ஆச்சரியங்களைப் பார்க்கலாம். இந்த ஈமானை (இறைநம்பிக்கையை) அடைந்ததின் மூலமாகத்தான் முஸ்லிம்கள் வரலாற்றுப் பக்கங்களில் தங்களது செயல்களைப் பதித்து மாறாத அடிச்சுவடுகளை விட்டுச் செல்ல முடிந்தது. அதுபோன்ற வீரச்செயல்களும், அடிச்சுவடுகளும் கடந்த காலத்திலும் இல்லை தற்காலத்திலும் இல்லை இனிவரும் காலங்களிலும் இருக்காது.

### ஹிஜ்ராவின் தொடக்கங்கள்

அல்லாஹ்வின் அருளால் இரண்டாவது உடன்படிக்கை முடிந்தது. அறியாமையும், இறைநிராகரிப்பும் சூழ்ந்த பாலைவனங்களுக்கு நடுவில் இஸ்லாம் தனக்கொரு தனி நாட்டை நிறுவுவதில் வெற்றி பெற்றது. இது இஸ்லாமிற்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) முஸ்லிம்களுக்கு அந்த நாட்டை நோக்கி ஹிஜ்ரா செய்ய அனுமதி அளித்தார்கள்.

'ஹிஜ்ரா' என்றால் தனது எல்லா உலக ஆதாயங்களையும் இழந்து சொந்த மண்ணில் உள்ள உடைமைகளை அப்படியே விட்டுவிட்டு தன்னையும் தனது மார்க்கத்தையும் காப்பாற்றிக் கொள்ள தனது சொந்த நாட்டை, சொந்த ஊரை துறந்து அந்நிய நாட்டுக்கு, அந்நிய ஊருக்கு செல்வதாகும். செல்லும் வழியில் அல்லது செல்வதற்கு முன் பல ஆபத்துகளை சந்திக்க வேண்டி வரும். உயிர் பறிபோகலாம் உடைமைகள் அபகரிக்கப்படலாம் செல்லுமிடத்தில் எத்தகைய எதிர்காலத்தை முன்னோக்க வேண்டியிருக்குமோ? அங்கு என்னென்ன கவலைகளும், துக்கங்களும், துயரங்களும் மறைந்திருக்கின்றனவோ? என்று எதுவும் அறியாத நிலையில் மேற்கொள்ளப்படும் பயணமே ஹிஜ்ராவாகும்.

இவை அனைத்தையும் தெரிந்துதான் முஸ்லிம்கள் ஹிஜ்ரா செய்யத் தொடங்கினர். முஸ்லிம்கள் ஹிஜ்ரா செய்து ஓரிடத்தில் ஒன்று கூடிவிட்டால் தங்களுக்கு ஆபத்துகள்

ஏதும் ஏற்படலாம் என்று உணர்ந்திருந்த மக்கா முஷ்ரிக்குகள் (இணைவைப்பவர்கள்) முஸ்லிம்களை ஹிஜ்ரா செய்யவிடாமல் தடுத்தனர். இதற்கு சில உதாரணங்களை இங்கு பார்ப்போம்:

1) ஹிஜ்ரா செய்த முதல் கூட்டத்தில் அபூஸலமாவும் ஒருவர். இவர் இரண்டாவது அகபாவிற்கு ஒரு வருடத்துக்கு முன் ஹிஜ்ரா செய்தார். அபூ ஸலமா (ரழி) தனது மனைவியுடனும் தனது சிறிய குழந்தையுடனும் ஹிஜ்ரா செய்ய நாடியபோது அவரது மனைவியின் உறவினர்கள் அபூஸலமாவை நோக்கி “நீ எங்களை புறக்கணித்து விட்டாய் நீ வேண்டுமானால் சென்றுவிடு எங்களுடைய பெண்ணை ஊர் ஊராக அழைத்துத் திரிய நாங்கள் அனுமதிக்க மாட்டோம்” என்று கூறி அவன் மனைவியையும் குழந்தையையும் அவரிடமிருந்து பிரித்து விட்டனர். இதைப் பார்த்த அபூஸலமாவின் குடும்பத்தினர் “நீங்கள் உங்களது பெண்ணை எங்கள் குடும்பத்தாரிடமிருந்து பிரித்து விட்டீர்கள். எனவே, எங்கள் மகனுக்குப் பிறந்த குழந்தையை நாங்கள் உங்கள் பெண்ணுடன் விடமாட்டோம்” என்று சண்டையிட்டு குழந்தையைப் பறித்துக் கொண்டனர். இதே நிலையில் அபூஸலமா மதீனாவை நோக்கிப் பயணமானார்.

தனது கணவனும் சென்றுவிட குழந்தையையும் பறிகொடுத்த உம்மு ஸலமாவின் உள்ளம் வேதனையால் வெந்தது. ஒவ்வொரு நாள் காலையிலும் ‘அப்தஹ்’ என்ற இடத்திற்கு வந்து மாலை வரை அழுதுகொண்டே இருப்பார். அழுதே ஒரு வருடத்தைக் கழித்துவிட்ட நிலையில் அவரது குடும்பத்தினரின் உள்ளத்தில் அவர் மீது இரக்கம் பிறந்தது. நீ உனது கணவனுடன் சென்று சேர்ந்து கொள் என்று அனுமதித்து, அவன் பிள்ளையையும் அபூ ஸலமாவின் குடும்பத்தாரிடமிருந்து வாங்கித் தந்தனர். ஏறக்குறைய 500 கி.மீ. தொலைவுள்ள மதீனாவை நோக்கி பயணமானார். உயர்ந்த மலைகள், அபாயம் நிறைந்த வழிகள், அல்லாஹ்வின் படைப்பினங்களில் யாரும் உடன் இல்லை. இந்நிலையில் பயணித்து ‘தன்யீம்’ வந்தடைந்த போது அவரை உஸ்மான் இப்னு தல்ஹா இப்னு அபூதல்ஹா சந்தித்தார். அவரது நிலைமை மீது இரக்கம் கொண்டு அவரை பாதுகாப்புடன் அழைத்து வந்து ‘குபா‘’வில் விட்டுவிட்டு “இதோ இந்த ஊரில்தான் உங்கள் கணவர் இருக்கிறார். அல்லாஹ் உங்களுக்கு அருள்வளம் (பரக்கத்) செய்வான்” என்று உம்முஸலமாவை வாழ்த்தி விட்டு அவர் மக்கா திரும்பினார். (இப்னு ஹிஷாம்)

2) ஸுஹைப் இப்னு ஸினான் ரூமி: நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரா சென்றபின் இவர் ஹிஜ்ரா செல்ல முனைந்தபோது குறைஷிக் காஃபிர்கள் இவரைச் சுற்றி வளைத்து “ஏ ஸுஹைபே! நீ எங்களிடம் பிச்சைக்கார பரதேசியாக வந்தாய். எந்த செல்வத்தையும் நீ கொண்டு வரவில்லை. ஆனால், எங்களிடம் வந்தவுடன் செல்வச்செழிப்பு ஏற்பட்டு கொழுத்து விட்டாய். இப்போது நீ உனது செல்வத்துடன் சென்றுவிடலாம் என்று நினைக்கிறாயா? அல்லாஹ்வின் மீது ஆணையாக! அது ஒருக்காலும் நடக்காது” என்று கூறினர். அதற்கு ஸுஹைப் (ரழி) “நான் எனது செல்வத்தை உங்களுக்குத் தந்துவிட்டால் என்னை விட்டு விடுவீர்களா?” என்று கேட்டதற்கு அவர்கள் “ஆம்!” என்றனர். “நான் எனது செல்வத்தை உங்களுக்குத் தந்துவிட்டேன்” என்று கூறி ஸுஹைப் (ரழி) மதீனாவுக்கு தப்பி வந்துவிட்டார். இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது “ஸுஹைப் லாபமடைந்தார்! ஸுஹைப் இலாபமடைந்தார்!” என்று கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

3) உமர் இப்னுல் கத்தாப், அய்யாஷ் இப்னு அபூ ரபீஆ, ஹிஷாம் இப்னு ஆஸ் இப்னு வாயில் (ரழி) இம்மூவரும் ‘ஸஃப்’ என்ற இடத்திற்கு மேலுள்ள “தனாழுப்” என்ற இடத்திற்கு வந்து காலையில் அங்கிருந்து ஹிஜ்ரா செய்வோம் என்று முடிவு செய்துகொண்டனர். ஆனால் உமர், அய்யாஷ் (ரழி) இருவர் மட்டும் அங்கு வந்தனர். ஹிஷாம் அங்கு வரவில்லை.

உமரும், அய்யாஷும் மதீனாவுக்கு வந்து குபாவில் தங்கினர். அப்போது அபூ ஜஹ்லும், அவனது சகோதரன் ஹாரிஸும் அய்யாஷைத் தேடி அங்கு வந்துவிட்டனர். இம்மூவரும் தாய்வழி சகோதரர்கள் ஆவர். இவர்களது தாயின் பெயர் 'அஸ்மா பின்த் முகர்பா.' அங்கு வந்த அபூ ஜஹ்லும், ஹாரிஸும் அய்யாஷை நோக்கி "அய்யாஷே! உன்னைப் பார்க்கும் வரை தலை வாரமாட்டேன் வெயிலிலிருந்து நிழலில் ஒதுங்கமாட்டேன் என்று உன் தாய் நேர்ச்சை (சத்தியம்) செய்துவிட்டார்" என்று கூறினர். தாயின்மீது இரக்கம் கொண்ட அய்யாஷ் வந்தவர்களுடன் திரும்பிச் செல்வதற்குத் தயாராகிவிட்டார். அப்போது உமர் (ரழி) அவரிடம் "அய்யாஷே! உங்கள் கூட்டத்தார் உங்களை இஸ்லாமிலிருந்து திருப்பி விடத்தான் முயற்சிக்கின்றனர். எனவே, நீ அவர்களிடம் எச்சரிக்கையாக நடந்துகொள்! நான் கூறுவதைக் கேள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! பொடுகு, பேன்களால் உனது தாய்க்கு தொந்தரவு ஏற்படும்போது அவர் தலைவாரிக் கொள்வார் மக்காவில் வெயில் கடுமையாகி விட்டால் கண்டிப்பாக அவர் நிழலுக்குச் சென்றுவிடுவார் எனவே, நீ இவர்களுடன் செல்ல வேண்டாம்" என உமர் (ரழி) அவருக்கு உபதேசம் செய்தார்.

இருப்பினும் அய்யாஷ் "என் தாயின் சத்தியத்தை நிறைவேற்ற நான் சென்றே ஆக வேண்டும்" என்று கூறினார். அதற்கு உமர் (ரழி) "சரி! நீ செல்ல வேண்டும் என்று முடிவு செய்துவிட்டால் எனது இந்த ஒட்டகத்தை எடுத்துக்கொள்! இது புத்திசாலியான, பணிவான ஒட்டகமாகும். அதன் முதுகிலிருந்து நீ கீழே இறங்கிவிடாதே. உனது கூட்டத்தினர் மூலம் உனக்கு ஏதாவது ஆபத்து என்று தெரிந்தால் இதன் மூலம் நீ தப்பித்துக் கொள்" என்று அவரிடம் கூறினார். அய்யாஷ் உமர் (ரழி) கொடுத்த ஒட்டகத்தில் அவ்விருவருடன் சென்று கொண்டிருந்த போது வழியில் அவரிடம் அபூஜஹ்ல் "எனது தாயின் மகனே! எனது இந்த ஒட்டகத்தில் பயணம் செய்வது எனக்குக் கடினமாக இருக்கிறது. எனவே, என்னை உனது வாகனத்தில் ஏற்றிக் கொள்" என்று கூறினான். இதைக் கேட்ட அய்யாஷ் "சரி!" என்று கூறினார். தனது ஒட்டகத்தைப் பூமியில் படுக்க வைக்கவே அதே நேரத்தில் அவ்விருவரும் இவர் மீது பாய்ந்து இவரைக் கட்டிவிட்டனர். பிறகு கட்டப்பட்ட நிலையில் மக்காவுக்கு அழைத்துச் சென்றனர். அபூஜஹ்லும், ஹாரிஸும் மக்காவாசிகளைப் பார்த்து "ஓ மக்காவாசிகளே! இதோ பாருங்கள். நாங்கள் இந்த முட்டாளிடம் நடந்துகொண்டது போன்றே நீங்களும் உங்களது முட்டாள்களுடன் நடந்து கொள்ளுங்கள்" என்று கூறினர். (இப்னு ஹிஷாம்)

ஹிஷாம், ஐய்யாஷ் (ரழி) ஆகிய இருவரும் இணைவைப்போரிடம் கைதிகளாகவே சில காலங்கள் இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் மதீனா வந்தவுடன் ஐய்யாஷையும் ஷாமையும் இணைவைப்போரிடமிருந்து காப்பாற்றி யார் இங்கு அழைத்து வர முடியும்? என்று தங்களது தோழர்களிடம் விசாரித்தார்கள். அல் வலீத் இப்னு அல் வலீத் (ரழி) என்ற நபித்தோழர் "அல்லாஹ்வின் தூதரே! உங்களுக்காக நான் அவர்களைக் காப்பாற்றி அழைத்து வருகிறேன்" என்றார். அதற்குப் பிறகு அல் வலீத் யாருக்கும் தெரியாமல் மக்காவிற்குள் புகுந்து அவ்விருவரும் கைது செய்யப் பட்டிருக்கும் இடத்தை அறிந்துகொண்டார். அவ்விருவரும் மேல் முகடற்ற ஒரு வீட்டில் அடைக்கப்பட்டிருந்தனர். ஒரு நாள் மாலை நேரம் ஆனவுடன் சுவர் ஏறிக் குதித்து அவ்விருவரின் விலங்கை உடைத்தெறிந்து விட்டு தனது ஒட்டகத்தில் அவர்களை அழைத்துக் கொண்டு நலமுடன் மதீனா வந்து சேர்ந்தார். (இப்னு ஹிஷாம்)

யாராவது ஹிஜ்ரா செய்து செல்கிறார்கள் என்று இணைவைப்போர் தெரிந்துகொண்டால் இவ்வாறுதான் அவர்களைத் தடுத்து, அவர்களுக்கு நோவினை செய்து வந்தனர். இவ்வளவு சிரமங்கள் இருந்தும் முஸ்லிம்கள் தனித்தனியாக ஒருவர் பின் ஒருவராக மதீனாவை நோக்கிச் சென்றுகொண்டே இருந்தனர். அகபாவின் இரண்டாவது உடன்படிக்கைக்குப் பின் மூன்று மாதங்களுக்குள் முஸ்லிம்கள் பலர் மக்காவைவிட்டு ஹிஜ்ரா செய்துவிட்டனர். நபி (ஸல்) அவர்களும், அவர்களது கட்டளையின்படி தங்கியிருந்த அபூபக்ரும், அலீயும்

இன்னும் நிர்பந்தத்தில் இருந்த முஸ்லிம்கள் மட்டும்தான் மக்காவில் தங்கியிருந்தனர். நபி (ஸல்) ஹிஜ்ரவிற்குண்டான முழு தயாரிப்பும் செய்திருந்தார்கள். எனினும், அல்லாஹ்வின் கட்டளையை எதிர்பார்த்திருந்தார்கள். அவ்வாறே அபூபக்ர் (ரழி) அவர்களும் பிரயாணத்திற்கு உண்டான முழு தயாரிப்பும் செய்திருந்தார்கள். (ஜாதுல் மஆது)

ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) முஸ்லிம்களிடம் ‘‘எனக்கு நீங்கள் ஹிஜ்ரா செய்ய வேண்டிய இடம் (மதீனா) கனவில் காட்டப்பட்டது’’ என்று கூறினார்கள். இதைக்கேட்ட பெரும்பாலான முஸ்லிம்கள் மதீனாவிற்கு ஹிஜ்ரா சென்றுவிட்டனர். ஹபஷாவிற்கு சென்றிருந்த முஸ்லிம்களும் மதீனாவிற்கு திரும்பி விட்டனர். அபூபக்ர் (ரழி) மதீனாவிற்கு செல்ல தயாரானபோது அவர்களிடம் நபி (ஸல்) ‘‘சற்று தாமதியுங்கள். எனக்கும் அனுமதி கிடைக்கும் என்று நான் ஆதரவு வைக்கிறேன்’’ என்று கூறினார்கள். அதற்கு அபூபக்ர் (ரழி) ‘‘எனது தந்தை உங்களுக்கு அர்ப்பணமாகட்டுமாக! நீங்கள் அதை ஆதரவு வைக்கிறீர்களா?’’ என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) ‘‘ஆம்!’’ என்று கூறியவுடன் அபூபக்ர் (ரழி) நபி (ஸல்) அவர்களுடன் சேர்ந்து செல்வதற்காகத் தன் பயணத்தைத் தள்ளி வைத்தார். பிறகு தன்னிடமிருந்த இரண்டு ஒட்டகங்களை நல்ல முறையில் தீனி கொடுத்து வளர்த்தார்கள். இந்த உரையாடலுக்குப் பிறகு நான்கு மாதங்கள் கழித்து இருவரும் மதீனா புறப்பட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

### தாருந் நத்வா

இது குறைஷிகளின் ஆலோசனை மன்றம்.

நபித்தோழர்கள் தங்களது மனைவி, மக்களுடன் மக்காவை விட்டு வெளியேறி மதீனாவில் அவ்ஸ், கஸ்ரஜ்களுடன் குடியேறியதைப் பார்த்த இணைவைப்பவர்கள் மிகப்பெரிய சங்கடத்துக்கு ஆளானார்கள். இதற்கு முன்பில்லாத அளவுக்கு எந்நேரமும் பெரும் மன உளைச்சலுக்கு ஆளானார்கள். தங்களின் சிலை வழிபாட்டையும், அரசியல் அந்தஸ்தையும் முற்றிலும் அடியோடு தகர்த்தெறியக் கூடிய பேராபத்து ஒன்று வரப்போவதை உணர்ந்தனர்.

நபி (ஸல்) பிறரைக் கவரும் ஆற்றல் உள்ளவர்கள் தலைமைத்துவத்துக்கும் நேர்வழிபடுத்தவும் முழுத் தகுதி பெற்றவர்கள் நபித்தோழர்கள் நெஞ்சுறுதி மிக்கவர்கள் நிலைத்தன்மை கொண்டவர்கள் நபியவர்களுக்காக எதையும் அர்ப்பணிக்கத் துணிந்தவர்கள் மதீனாவில் உள்ள அவ்ஸ், கஸ்ரஜ் கிளையினரோ மிகுந்த ஆற்றலும் பலமுமிக்கவர்கள் இவ்விரு சமூகத்திலும் உள்ள அறிஞர்களோ சமாதானத்தையும், சீர்திருத்தத்தையும் விரும்புபவர்கள் குரோதம் கொள்வதை எதிர்ப்பவர்கள் ஏற்கனவே பல ஆண்டுகளாக உள்நாட்டு போர்களால் மதீனா நகரம் பாதிக்கப்பட்டிருக்கும் போது தற்போது சண்டை சச்சரவுகளை அன்சாரிகள் அறவே விரும்ப மாட்டார்கள் என்று மக்காவாசிகள் நன்கு விளங்கி வைத்திருந்தனர்.

மதீனா மிக முக்கிய மைய நகரமாக விளங்குகின்றது. யமன் நாட்டிலிருந்து ஷாம் வரை நீண்டு செல்லக்கூடிய செங்கடலின் கரை வழியாக செல்லும் வியாபாரக் கூட்டங்கள் அதன் வழியாகத்தான் செல்ல வேண்டும். மக்காவாசிகள் மட்டும் ஓர் ஆண்டுக்கு மதீனா வழியாக ஷாம் தேசத்துடன் குறைந்தது இரண்டரை லட்சம் தங்க நாணயங்களுக்கு வியாபாரம் செய்து வந்தனர். இது மட்டுமல்லாமல் தாயிஃஃப் நகர மக்களும் அதைச் சுற்றியுள்ள மக்களும் மதீனா வழியாகவே வியாபாரம் செய்து வந்தனர். மதீனா பாதுகாப்புடையதாக இருந்ததால் அனைவரும் வியாபாரத்திற்காக இவ்வழியையேத் தேர்ந்தெடுத்தனர். எனவே, மதீனா இத்தகைய முக்கியத்துவம் பெற்றிருப்பதையும் அவர்கள் நன்கு அறிந்திருந்தனர்.

ஆகவே, இஸ்லாமிய அழைப்பு மதீனாவில் மையம் கொள்வதாலும் மதீனாவாசிகள் தங்களுக்கு எதிராக ஒன்று கூடுவதாலும் ஏற்படும் மாபெரும் ஆபத்தை குறைஷிகள் உணராமல் இருக்கவில்லை.

தங்களுக்கு அச்சுறுத்தலாக இருக்கும் இந்த ஆபத்து அதிகமாகுவதைக் குறைஷிகள் நன்கு உணர்ந்து கொண்டனர். இந்த ஆபத்து உருவாகுவதின் மூலக் காரணத்தை, அதாவது நபி முஹம்மது (ஸல்) அவர்களையே அழித்து விடுவதுதான் இந்த ஆபத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கான ஏற்றமான வழி என்று முடிவு செய்தனர்.

நபித்துவத்தின் பதினான்காம் ஆண்டு, ஸஃபர் மாதம் 26 வியாழன், அதாவது கி.பி. 622, செப்டம்பர் 12'' இரண்டாவது அகபா உடன்படிக்கை முடிந்து இரண்டரை மாதங்கள் கழிந்து காலையில் குறைஷிகளின் மிக முக்கியமான ஆலோசனை மன்றம் ஒன்று கூடியது.'''' இந்த சபையில் குறைஷிகளின் முக்கிய பிரமுகர்கள், தலைவர்கள் கலந்துகொண்டனர். அவர்கள் அனைவரும் ஏகத்துவ அழைப்பைப் பரப்பி வரும் நபி (ஸல்) அவர்களையும் அவ்வழைப்பின் தாக்கத்தையும் முழுமையாக அழித்து விடுவதற்கு ஆலோசனை செய்து சரியான திட்டம் தீட்ட ஒன்று கூடினர். (''ரஹ்மத்துல்லில் ஆலமீன், ''''இப்னு இஸ்ஹாக்)

இந்த ஆபத்தான ஆலோசனை மன்றத்தில் கலந்துகொண்ட குறைஷிகளின் சில முக்கிய பிரமுகர்கள் பின்வருமாறு:

1) மக்ஜூம் கிளையினரின் சார்பாக அபூஜஹ்ல்,

2,3,4) நவ்ஃபல் இப்னு அப்து மனாஃப் கிளையினரின் சார்பாக ஜுபைர் இப்னு முத்'', துஅய்மா இப்னு அதீ, ஹாரிஸ் இப்னு ஆமிர் ஆகிய மூவர்,

5,6,7) அப்து ஷம்ஸ் இப்னு அப்து முனாஃப் கிளையினரின் சார்பாக ஷைபா, உத்பா, அபூஸுஃப்யான் இப்னு ஹர்ஃப் ஆகிய மூவர்,

8) அப்துத் தார் கிளையினரின் சார்பாக நள்ர் இப்னு ஹாரிஸ்,

9,10,11) அஸ்அத் இப்னு அப்துல் உஜ்ஜா கிளையினரின் சார்பாக அபுல் பக்த இப்னு ஹிஷாம், ஜம்ஆ இப்னு அஸ்வத், ஹகீம் இப்னு ஜாம் ஆகிய மூவர்,

12,13) சஹ்ம் கிளையினரின் சார்பாக நுபைஹ் இப்னு ஹஜ்ஜாஜ், முனப்பிஹ் இப்னு ஹஜ்ஜாஜ் ஆகிய இருவர்,

14 ) ஜுமஹ் கிளையினரின் சார்பாக உமையா இப்னு கலஃப் ஆகியோர் கலந்துகொண்டனர்.

மேற்கூறிய இவர்களும் மற்றவர்களும் குறிப்பிட்ட நேரத்தில் தாருந் நத்வாவிற்கு வந்து சேர்ந்தபோது, தடிப்பமான ஓர் ஆடையை அணிந்துகொண்டு வயோதிக தோற்றத்தில் இப்லீஸ்'' அங்கு வந்தான். அவர்கள் ''வயோதிகர் யார்?'' என்று கேட்கவே, அவன் ''நான் நஜ்து பிரதேசத்தைச் சேர்ந்த வயோதிகன். நீங்கள் பேசுவதைக் கேட்டு என்னால் முடிந்த நல்ல யோசனையையும், அபிப்ராயத்தையும் கூறலாம் என்று வந்திருக்கிறேன்'' என்றான். இதனைக் கேட்ட அம்மக்கள் ''சரி! உள்ளே வாருங்கள்'' என்றவுடன் உள்ளே சென்று அமர்ந்து கொண்டான்.

**நபியவர்களைக் கொல்ல திட்டமிடுதல்**

சபை ஒன்றுகூடிய பின் பலவிதமான கருத்துகள், விவாதங்கள் நடைபெற்றன. அவர்களில் ஒருவனான அபுல் அஸ்வத் என்பவன் ''நாம் அவரை நமது ஊரைவிட்டு வெளியேற்றி விடுவோம். அவர் எங்கு சென்றால் நமக்கென்ன. நாம் நமது காரியத்தையும், நமக்கு மத்தியிலிருந்த நட்பையும் முன்பு போல் சீர்படுத்திக் கொள்வோம்'' என்று கூறினான்.

அதற்கு அந்த நஜ்தி வயோதிகன் ''இது சரியான யோசனையல்ல. அவன் அழகிய பேச்சையும், இனிமையான சொல்லையும், தனது மார்க்கத்தைக் கொண்டு மக்களின்

உள்ளங்களில் அவர் இடம்பிடித்து விடுவதையும் நீங்கள் பார்க்கவில்லையா? அவ்வாறு நீங்கள் செய்தால் அவர் வேறொரு இடம் சென்று அவர்களிடம் தங்கி அவர்களை முஸ்லிம்களாக மாற்றிவிடலாம். பிறகு அவர்களை அழைத்துக்கொண்டு உங்களது ஊருக்கு வந்து உங்களை அழித்தொழித்து விடலாம். எனவே வேறு யோசனை செய்யுங்கள்'' என்று கூறினான்.

அடுத்து அபுல் புக்த என்பவன் ''அவரை சங்கிலியால் பிணைத்து ஓர் அறையில் அடைத்து விடுவோம். இதற்கு முன் ஜுஹைர், நாஃபிகா போன்ற கவிஞர்களுக்கு நடந்தது போன்று நடக்கட்டும். அதாவது, சாகும் வரை அப்படியே அவரை விட்டுவிடுவோம்'' என்று கூறினான்.

இதைக் கேட்ட நஜ்து தேச கிழவன் ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது ஒரு யோசனையே அல்ல. நீங்கள் அவரை அடைத்து வைத்தாலும் அவருடைய தோழர்களுக்கு அவரைப் பற்றிய செய்தி தெரிந்து, உங்கள் மீது பாய்ந்து அவரை உங்களிடருந்து விடுவித்து விடுவார்கள். பிறகு உங்களையும் அவர்கள் வீழ்த்தி விடலாம். எனவே, இதுவும் ஒரு யோசனையே அல்ல. வேறு ஒரு யோசனை சொல்லுங்கள்'' என்றான்.

இவ்விரண்டு யோசனைகளையும் அம்மக்கள் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டபோது, மக்கா அயோக்கியர்களில் மிகப்பெரும் கொடியவனான ''அபூஜஹ்ல்' ஒரு யோசனையைக் கூறினான். அந்த யோசனையை அரக்க குணம் படைத்த அனைவரும் ஏற்றுக் கொண்டனர்.

''அல்லாஹ்வின் மீது ஆணையாக! என்னிடம் ஒரு யோசனை இருக்கின்றது. அது உங்களுக்குத் தோன்றியிருக்காது'' என்று அபூஜஹ்ல் கூற, ''அபுல் ஹிகமே! அது என்ன யோசனை'' என்றனர் மக்கள். அதற்கு அபூஜஹ்ல் ''நாம் ஒவ்வொரு கோத்திரத்திலிருந்தும் நல்ல வீரமிக்க, குடும்பத்தில் சிறந்த, ஒரு வாலிபரைத் தேர்வு செய்து, ஒவ்வொரு வாலிபனுக்கும் மிகக் கூர்மையான வாள் ஒன்றையும் கொடுப்போம். அவர்கள் அனைவருமாக சேர்ந்து அவரை ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து கொன்றுவிடட்டும். அவர் இறந்துவிட்டால் நாம் நிம்மதி பெருமூச்சு விடலாம். கொலை செய்தவர்கள் பல கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பதால் அவன் உறவினர்களான அப்து மனாஃப் கிளையினர் பழிக்கு யாரையும் கொல்ல முடியாது. முழு அரபு சமுதாயத்தினரையும் பகைத்துக் கொண்டு அப்து மனாஃப் கிளையினர் நம்மீது போர் தொடுக்க முடியாது. எனவே, கொலைக்குப் பகரமாக அபராதத் தொகையை நிர்பந்தமாக ஏற்றுக் கொள்வார்கள். நாமும் அவர்களுக்கு அந்த அபராதத்தைக் கொடுத்து விடலாம்'' என்று அரக்கன் அபூஜஹ்ல் கூறிமுடித்தான்.

நஜ்து தேச அயோக்கியக் கிழவன் (அவன்தான் இப்லீஸ்) இதைக் கேட்டுவிட்டு ''ஆஹா! இதல்லவா யோசனை! இதுதான் சரியான யோசனை! இதைத் தவிர வேறெதுவும் சரியான யோசனையல்ல'' என்று கூறினான். (இப்னு ஹிஷாம்)

இந்தக் கருத்தை அனைத்து பிரமுகர்களும் தலைவர்களும் ஏற்றுக் கொண்டு, வெகு விரைவில் இதை நிறைவேற்ற வேண்டும் என்ற உறுதியில் தங்களது வீடுகளுக்குத் திரும்பினர்.

## நபியவர்கள் ''ஹிஜ்ரா'' செல்லுதல்

### குறைஷிகளின் திட்டமும், அல்லாஹ்வின் ஏற்பாடும்

குறைஷிகள் தங்களின் அன்றாட வேலைகளில் சகஜமாக ஈடுபட்டு, தங்களின் செயல்பாடுகளில் எவ்வித மாற்றமும் தெரியாத விதத்தில் நடந்துகொண்டனர். பிறர் இந்த சதித் திட்டத்தின் வாடையைக் கூட நுகர முடியாத வண்ணம், அந்த குறைஷிகள் நடந்து கொண்டனர். இவர்கள் அல்லாஹ்வுக்கு சூழ்ச்சி செய்ய நாடினர். அல்லாஹ் அவர்கள்

அறியாத விதத்தில் அவர்களது சூழ்ச்சிகளை வீணாக்கி விட்டான். குறைஷிகளின் சதித்திட்டத்தை நபி (ஸல்) அவர்களிடம் அறிவிப்பதற்காக அல்லாஹ்வின் புறத்திலிருந்து வானவர் ஜிப்ரீல் இறங்கி வந்தார். "நீங்கள் 'ஹிஜ்ரா' செய்ய அல்லாஹ் அனுமதி கொடுத்து விட்டான். அதற்குரிய நேரத்தையும் நிர்ணயம் செய்துள்ளான். குறைஷிகளின் இத்திட்டத்தை முறியடிப்பதற்குரிய வழியையும் தெளிவுபடுத்தி இருக்கின்றான். எனவே, இன்று இரவு நீங்கள் வழக்கமாக தூங்கும் விரிப்பில் தூங்க வேண்டாம்" என்று வானவர் ஜிப்ரீல் கூறினார். (இப்னு ஹிஷாம்)

மக்கள் எல்லாம் தங்களது இல்லங்களில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் மதிய வேளையில் ஹிஜ்ராவின் திட்டத்தை உறுதி செய்து கொள்வதற்காக நபி (ஸல்) அவர்கள் அபூபக்ரிடம் வந்தார்கள். இதைப் பற்றி ஆயிஷா (ரழி) கூறுவதாவது:

மதிய வேளையில் நாங்கள் வீட்டில் அமர்ந்திருந்தபோது ஒருவர் அபூபக்ரிடம் "இதோ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) முகத்தை மறைத்தவராக உங்களிடம் வந்திருக்கிறார்" என்று கூறினார். அது நபி (ஸல்) எங்களிடம் வரும் வழக்கமான நேரமல்ல! "எனது தாயும் தந்தையும் நபி (ஸல்) அவர்களுக்கு அர்ப்பணமாகட்டும்! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இந்நேரத்தில் அவர்கள் வந்திருப்பதற்குக் காரணம் ஏதோ ஒரு முக்கியமான விஷயம்தான்" என்று அபூபக்ர் (ரழி) அவர்கள் கூறினார்கள்.

எங்களிடம் வந்த நபி (ஸல்) உள்ளே வர அனுமதி கேட்கவே அபூபக்ர் (ரழி) அனுமதி கொடுத்தார்கள். உள்ளே நுழைந்த நபி (ஸல்) அபூபக்ரிடம் "உங்களுடன் இருப்பவர்களை உடனே வெளியேற்றுங்கள்" என்று கூறினார்கள். அதற்கு அபூபக்ர் (ரழி) "அல்லாஹ்வின் தூதரே! நான் உங்களுக்கு அர்ப்பணமாவேனாக! இங்கு உங்கள் குடும்பத்தார்கள்தான் இருக்கிறார்கள்" என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் "எனக்கு மக்காவைவிட்டு வெளியேறுவதற்கு அனுமதி கிடைத்து விட்டது" என்றார்கள். அதற்கு அபூபக்ர் (ரழி) "அல்லாஹ்வின் தூதரே! நான் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும். நானும் உங்களுடன் வருகிறேன்" என்று கூறவே, நபி (ஸல்) "சரி!" என்றார்கள். (இப்னு ஹிஷாம்)

பின்பு ஹிஜ்ரா எவ்வாறு செய்ய வேண்டும் என்ற திட்டத்தை அபூபக்ர் (ரழி) அவர்களுடன் பேசி முடிவு செய்து கொண்டார்கள். வீட்டிற்குத் திரும்பிய நபி (ஸல்) அன்று சூரியன் மறைந்து இருட்டுவதை எதிர்பார்த்திருந்தார்கள். தான் குறைஷிகளின் தீய திட்டத்தை தெரிந்து கொள்ளாதது போன்றே, தன் அன்றாடச் செயல்களை வழக்கம் போல் செய்து கொண்டிருந்தார்கள். குறைஷிகளின் தீய திட்டத்திலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காகப் பிறர் தனது ஹிஜ்ராவின் திட்டத்தைத் தெரிந்து கொள்ளதவாறு நடந்து கொண்டார்கள்.

**சுற்றி வளைத்தல்**

குறைஷிகளின் தலைவர்கள், பகலில் தாங்கள் செய்த தீய திட்டத்தை நிறைவேற்றுவதற்காக பதினொரு மூத்த தலைவர்களைத் தேர்வு செய்தனர்.

1) அபூஜஹ்ல் இப்னு ஹிஷாம்

2) ஹகம் இப்னு அபூஆஸ்

3) உக்பா இப்னு அபூமுயீத்

4) நள்ர் இப்னு ஹாரிஸ்,

5) உமைய்யா இப்னு கலஃப்,

6) ஜம்ஆ இப்னு அஸ்வத்

7) துஜமா இப்னு அதீ

8) அபூலஹப்

9) உபை இப்னு கலஃப்,

10) நுபைஃ இப்னு ஹஜ்ஜாஜ்,

11) முனப்பிஹ் இப்னு ஹஜ்ஜாஜ் (ஜாதுல் மஆது)

பொதுவாக நபி (ஸல்) இஷா தொழுத பின் முன்னிரவில் தூங்கி இரவின் நடுநிசிக்குப் பின் எழுந்து சங்கைமிகு பள்ளிக்குச் சென்று இரவுத் தொழுகைகளைத் தொழுவார்கள். அன்றிரவு அலீ (ரழி) அவர்களைத் தனது விரிப்பில் படுத்து, தனது யமன் நாட்டு பச்சை நிறப் போர்வையை போர்த்திக் கொள்ளுமாறு கட்டளையிட்டார்கள். மேலும், எந்த ஓர் ஆபத்தும் உங்களுக்கு ஏற்படாது என்றும் அலீ (ரழி) அவர்களுக்குக் கூறினார்கள்.

நன்கு இரவாகி அமைதி நிலவி, மக்கள் உறங்கிய பின் மேற்கூறப்பட்ட கொலைகாரர்கள் இரகசியமாக நபி (ஸல்) அவர்களின் இல்லம் வந்து வீட்டு வாசலில் அவர்களை எதிர்பார்த்தவர்களாக நின்று கொண்டனர். “முஹம்மது தூங்குகிறார். அவர் எழுந்து பள்ளிக்கு செல்லும்போது அனைவரும் அவர் மீது பாய்ந்து நமது திட்டத்தை நிறைவேற்றிக் கொள்வோம்” என்று எண்ணியிருந்தனர்.

இந்த மோசமான சதித்திட்டம் நிச்சயம் வெற்றி பெரும் என்ற உறுதியான நம்பிக்கையுடன் இருந்தனர். அபூஜஹ்ல் மிகவும் கர்வமும், பெருமையும் கொண்டு சுற்றியிருந்த தனது தோழர்களிடத்தில் மிகவும் பரிகாசத்துடன் பின்வருமாறு கூறிக் கொண்டிருந்தான். “நீங்கள் முஹம்மதை பின்பற்றினால் அரபிகளுக்கும், அரபியல்லாதவர்களுக்கும் அரசர்களாக ஆகிவிடலாம் நீங்கள் மரணித்தபின் மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பப்படுவீர்கள் அப்போது உங்களுக்கு ஜோர்டான் நாட்டு தோட்டங்களைப் போல் சொர்க்கங்கள் உண்டு அப்படி நீங்கள் செய்யவில்லையென்றால் அவர் உங்களைக் கொன்று விடுவார் பின்பு நீங்கள் மரணித்த பின் மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பப்படுவீர்கள் அங்கு நெருப்பில் நீங்கள் பொசுக்கப்படுவீர்கள் என்று முஹம்மது கூறுகிறார். ஆனால், இன்று அவரது நிலையைப் பார்த்தீர்களா!”- இவ்வாறு அபூஜஹ்ல் தனது சகாக்களிடம் கிண்டலும் கேலியுமாகப் பேசினான். (இப்னு ஹிஷாம்)

நடுநிசிக்குப் பின் நபி (ஸல்) தமது வீட்டிலிருந்து வெளியேறி பள்ளிக்குச் செல்லும் நேரத்தைத் தங்களது சதித்திட்டத்தை நிறைவேற்ற தேர்வு செய்திருந்தனர். நடுநிசியை எதிர்பார்த்து விழித்திருந்தனர். அல்லாஹ் தனது காரியத்தில் அவனே மிகைத்தவன் வானங்கள் பூமியின் ஆட்சி அவனது கையில்தான் இருக்கின்றது அவன் நாடியதை செய்யும் ஆற்றல் உள்ளவன் அவனே பாதுகாப்பளிப்பவன் அவனுக்கு யாரும் பாதுகாப்பளிக்கத் தேவையில்லை. இத்தகைய வல்லமை படைத்த அல்லாஹ் தனது நபி (ஸல்) அவர்களுக்கு இந்த நிகழ்ச்சிக்குப் பின் குர்ஆனில் இறக்கிய வசனத்தில் கூறியதைப் போன்றே செய்து காட்டினான்.

(நபியே!) உங்களைச் சிறைப்படுத்தவோ அல்லது உங்களைக் கொலை செய்யவோ அல்லது உங்களை (ஊரைவிட்டு) அப்புறப்படுத்தவோ நிராகரிப்பவர்கள் சூழ்ச்சி செய்து கொண்டிருந்த (நேரத்)தை நினைத்துப் பாருங்கள். அவர்களும் சூழ்ச்சி செய்து கொண்டிருந்தனர் (அவர்களுக்கெதிராக) அல்லாஹ்வும் சூழ்ச்சி செய்து கொண்டிருந்தான். ஆனால், சூழ்ச்சி செய்பவர்களிலெல்லாம் அல்லாஹ்வே மிக மேலானவன். (அல்குர்ஆன் 8:30)

**நபியவர்கள் புறப்படுகிறார்கள்**

குறைஷிகள் தங்களது தீய திட்டத்தில் எவ்வளவுதான் சுதாரிப்புடனும், விழிப்புடனும் இருந்தாலும் கூட படுதோல்வி அடைந்தனர். நபி (ஸல்) அவர்கள் வீட்டிலிருந்து வெளியேறி கூட்டத்தைப் பிளந்து கொண்டு தரையிலிருந்து கைப்பிடி மண்ணை எடுத்து அங்கிருந்தவர்களின் தலையின் மீது தூவிவிட்டுச் சென்றார்கள். எதிரிகள் நபி (ஸல்) அவர்களை பார்க்க முடியாதவாறு அல்லாஹ் செய்துவிட்டான்.

அவர்களுக்கு முன்புறம் ஒரு சுவரும், பின்புறம் ஒரு சுவருமாக ஆக்கி நாம் அவர்களை மூடிவிட்டோம். ஆதலால், அவர்கள் (எதனையும்) பார்க்க முடியாது. (அல்குர்ஆன் 36:9)

நபி (ஸல்) இவ்வசனத்தை ஓதியவர்களாக அங்கிருந்து வெளியேறி சென்றார்கள். அங்கிருந்த ஒவ்வொருவரின் மீதும் நபி (ஸல்) மண்ணை தூவியிருந்தார்கள். பின்பு அபூபக்ர் (ரழி) அவர்களின் வீட்டுக்கு வருகை தந்து அபூபக்ர் (ரழி) அவர்களையும் அழைத்துக் கொண்டு வீட்டின் பின்பக்கம் உள்ள சிறிய கதவின் வழியாக வெளியாகி, மக்காவிலிருந்து யமன் நாட்டை நோக்கிச் செல்லும் பாதையிலுள்ள 'ஸவ்ர்' குகையை வந்தடைந்தார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

முற்றுகையிட்டிருந்தவர்கள் நடுநிசியை எதிர்பார்த்திருந்த நேரத்தில் தாங்கள் தோல்வி அடைந்து விட்டோம் என்பது அவர்களுக்குத் தெரிந்தது. வெளியிலிருந்து வந்த ஒருவர் நபி (ஸல்) அவர்களின் வீட்டு வாசலில் இவர்கள் இருப்பதைப் பார்த்தவுடன் "நீங்கள் எதை எதிர்பார்த்திருக்கின்றீர்கள்" என்று கேட்டார். அவர்கள் "நாங்கள் முஹம்மதை எதிர்பார்த்து இருக்கிறோம்" என்றனர். அவர் "நீங்கள் தோல்வியடைந்து விட்டீர்கள் நஷ்டமடைந்து விட்டீர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக! இப்போதுதானே முஹம்மது உங்களைக் கடந்து செல்கிறார். உங்களது தலையின் மீது மண் தூவப்பட்டுள்ளதே! நீங்கள் பார்க்கவில்லையா?" என்று அவர் கூற, அவர்கள் தங்கள் தலையிலுள்ள மண்ணைத் தட்டிவிட்டு "அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாங்கள் அவரைப் பார்க்கவில்லையே! எப்படி அவர் சென்றிருப்பார்!" என்று திகைத்தனர்.

இருப்பினும் கதவின் இடுக்கின் வழியாக வீட்டிற்குள் பார்த்தனர். அங்கு அலீ (ரழி) படுத்திருப்பதை நபி என்று எண்ணி, "இதோ முஹம்மதுதான் தூங்குகிறார். இது அவருடைய போர்வைதான்" என்று கூறி, அவர் வெளியேறுவதை எதிர்பார்த்தவர்களாகவே விடியும்வரை நின்றிருந்தனர். ஆனால், காலையில் விரிப்பிலிருந்து அலீ (ரழி) எழுந்து வெளியே வருவதைப் பார்த்ததும், கைசேதமடைந்து நபி (ஸல்) அவர்களைப் பற்றி விசாரிக்கவே அலீ (ரழி) "எனக்கு எதுவும் தெரியாது" என்று மறுத்துவிட்டார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**வீட்டிலிருந்து குகை வரை**

நபித்துவத்தின் 14ஆம் ஆண்டு ஸஃபர் மாதம் பிறை 27 இரவில், அதாவது கி.பி. 622 செப்டம்பர் 12 அல்லது 13ல் நபி (ஸல்) தனது வீட்டை விட்டு வெளியேறி உம்ராலும், பொருளாலும் தனக்கு மிகுந்த உதவி ஒத்தாசை செய்து வந்த, தனது தோழரான அபூபக்ர் (ரழி) வீட்டிற்கு வந்தார்கள். பின்பு, இருவரும் வீட்டின் பின்வாசல் வழியாகப் புறப்பட்டனர். விடியற்காலை உதயமாவதற்குள் மக்காவை விட்டு வெளியேறிவிடத் துரிதமாகப் பயணித்தனர்.

குறைஷிகள் தங்களை மிக மும்முரமாகத் தேட முயற்சிப்பார்கள் பொதுவாக மக்காவிலிருந்து வடக்கு நோக்கிய மதீனாவின் பாதையைத்தான் கண்காணிப்பார்கள் என்பதால் முற்றிலும் அந்த பாதைக்கு எதிர் திசையிலுள்ள மக்காவிலிருந்து யமன் நாட்டை நோக்கிய தெற்கு திசையின் பாதையில் சென்றார்கள். இவ்வாறு ஐந்து மைல் நடந்ததற்குப்

பின் அங்குள்ள 'ஸவ்ர்' மலையை சென்றடைந்தார்கள். இது ஏறுவதற்குக் கடினமான, பெரிய பாறைகளைக் கொண்ட உயரமான மலையாகும். இதனால் நபி (ஸல்) அவர்களின் பாதங்கள் காயமடைந்தன. (எதிரிகள் தங்களின் பாத அடிகளைத் தெரிந்து கொள்ளக்கூடாது என்பதற்காக குதிகால்களின் மீது நீண்ட நேரம் நடந்து வந்ததால்தான் நபி (ஸல்) அவர்களின் கால்கள் காயமடைந்தன என்றும் சிலர் கூறுகின்றனர்.) காரணம் எதுவாயினும் சரியே! மலையில் நபி (ஸல்) அவர்களால் ஏற இயலவில்லை. ஆகவே, நபி (ஸல்) அவர்களை அபூபக்ர் (ரழி) சுமந்து கொண்டு மலையின் உச்சியிலுள்ள குகைக்குச் சென்றார்கள். அக்குகைக்கு வரலாற்றில் 'ஸவ்ர் குகை' என்று கூறுகின்றனர்.

### இருவரும் குகைக்குள்

நபி (ஸல்) அவர்களும், அவர்களது தோழரும் குகையை அடைந்தபோது "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் உள்ளே நுழையக் கூடாது. நான்தான் முதலில் நுழைவேன். அதில் ஏதாவது தீங்குகள் இருப்பின் அதனால் பாதிப்பு எனக்கு ஏற்படட்டும், உங்களுக்கு ஏற்பட்டு விடக்கூடாது" என்று அபூபக்ர் (ரழி) கூறி, உள்ளே நுழைந்தார்கள். அக்குகையைச் சுத்தம் செய்து அதிலிருந்த ஓட்டைகளில் ஓர் ஓட்டையைத் தனது கீழாடையின் ஒரு பகுதியைக் கிழித்து அடைத்துவிட்டு மற்ற இரண்டு ஓட்டைகளை தனது கால்களைக் கொண்டு அடைத்துக் கொண்டார்கள். பின்பு, நபி (ஸல்) அவர்களை உள்ளே அழைக்கவே அவர்கள் உள்ளே நுழைந்து அபூபக்ரின் மடியில் தனது தலையை வைத்துத் தூங்கி விட்டார்கள். சிறிது நேரத்தில் அபூபக்ர் (ரழி) காலில் ஏதோவொன்று தீண்டிவிடவே வலியினால் வேதனையடைந்த அவர்கள், 'நபி (ஸல்) விழித்துக் கொள்வார்களே!' என்ற பயத்தில் அசையாமல் இருந்து விட்டார்கள். எனினும், வலியின் வேதனையால் அவர்களின் கண்களில் இருந்து கசிந்த நீர், நபி (ஸல்) அவர்களின் முகத்தை நனைத்தது. விழித்துப் பார்த்த நபி (ஸல்) "அபூபக்ரே! உங்களுக்கு என்ன நேர்ந்தது" என்று கேட்டார்கள். "என் தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! என்னை ஏதோ தீண்டிவிட்டது" என்று அவர்கள் கூறவே நபி (ஸல்) தங்களது உமிழ்நீரை அவ்விடத்தில் தடவ அவர்களது வலி தூரமானது. (ரஜீன், மிஷ்காத்)

இருவரும் வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று இரவுகள் குகையில் தங்கியிருந்தனர். (ஃபத்ஹுல் பாரி)

அபூபக்ர் (ரழி) மகனார் அப்துல்லாஹ்வும் அங்கு சென்று இரவு தங்குவார். இதைப் பற்றி ஆயிஷா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: அப்துல்லாஹ் புத்திசாலியான நல்ல அறிவுள்ள வாலிபராக இருந்தார். அவ்விருவருடன் தங்கிவிட்டு, இரவின் இறுதிப் பகுதியில் வெளியேறி, விடிவதற்குள் மக்கா வந்து விடுவார். அவ்விருவரைப் பற்றி ஏதாவது செய்திகளை மக்காவில் கேட்டால், அதை நினைவில் வைத்துக்கொண்டு இருள் சூழ்ந்தவுடன் இருவரிடமும் சென்று அந்தச் செய்தியை எடுத்துரைப்பார்.

அபூபக்ர் (ரழி) அவர்களின் அடிமையான ஆமிர் இப்னு ஃபுஹைரா (ரழி) அங்கு ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்து விட்டு மாலை சாய்ந்தவுடன் அவ்விருவருக்கும் ஆட்டுப் பாலைக் கறந்து தருவார். இவ்வாறு மூன்று இரவுகள் அவர் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார். (ஸஹீஹுல் புகாரி)

அதிகாலையில் அப்துல்லாஹ் இப்னு அபூபக்ர் (ரழி) 'ஸவ்ர்' குகையிலிருந்து வெளியேறி மக்காவிற்குச் செல்லும்போது ஆமிர் இப்னு ஃபுஹைரா (ரழி) தனது ஆடுகளை அப்துல்லாஹ்வின் காலடித் தடங்கள் மீது ஓட்டிச் சென்று அவற்றை அழித்துவிடுவார். (இப்னு ஹிஷாம்)

"நபி (ஸல்) தப்பித்துவிட்டார்கள்' என்ற செய்தியைக் காலையில் குறைஷிகள் உறுதியாக தெரிந்து கொண்டபோது அவர்களுக்குப் பைத்தியமே பிடித்துவிட்டது. நபி (ஸல்)

அவர்களைப் பற்றி அலீ (ரழி) அவர்களிடம் விசாரித்தபோது அவர்கள் சரியாக பதில் கூறாததால், அவர்களை கடுமையாக அடித்து கஅபாவுக்கு இழுத்து வந்து சில மணி நேரம் அங்கேயே பிடித்து வைத்திருந்தனர். (தாரீக் தபரீ)

அலீ (ரழி) அவர்களிடமிருந்து எந்த செய்தியும் கிடைக்காததால் அபூபக்ரின் வீட்டுக்கு வந்து கதவைத் தட்டினார்கள். கதவைத் திறந்து வெளியே வந்த அபூபக்ரின் மகளார் அஸ்மாவிடம் "உனது தந்தை எங்கே?" என்றனர். "அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனக்குத் தெரியாது" என்றார் அவர். இந்தப் பதிலைக் கேட்ட தீயவன் 'அபூஜஹ்ல்", அவரது கன்னத்தில் அறைந்தான். இதனால் அவள் காது தோடு அறுந்து கீழே விழுந்தது. (இப்னு ஹிஷாம்)

உடனே, அவசரமாக ஆலோசனை சபையைக் கூட்டிய குறைஷிகள் நபி (ஸல்) அவர்களையும் அபூபக்ரையும் பிடிப்பதற்கு அனைத்து வழிகளையும் கையாள வேண்டுமென முடிவு செய்தனர். மக்காவிலிருந்து வெளியேறும் அனைத்துத் திசைகளையும் ஆயுதமேந்திய வீரர்களின் கடுமையான கண்காணிப்புக்கு உள்ளாக்கினார்கள். "நபி (ஸல்) அபூபக்ர் (ரழி) இவ்விருவல் ஒவ்வொருவரின் தலைக்கும் நூறு ஒட்டகங்கள் பரிசாக அளிக்கப்படும் இவர்களை உயிருடனோ அல்லது பிணமாகவோ யார் மக்காவிற்கு கொண்டு வருகிறார்களோ அவர் யாராக இருப்பினும் சரிஅவருக்கு இந்தப் பரிசுஉண்டு" என்று பொது அறிவிப்பு செய்தனர். (ஸஹீஹுல் புகாரி)

அப்போது கால்நடை வீரர்கள், குதிரை வீரர்கள், காலடி நிபுணர்கள் நபி (ஸல்) அவர்களையும் அபூபக்ரையும் சல்லடை போட்டு மலைகள், பாலைவனங்கள், காடுகள், பள்ளத்தாக்குகள் என அனைத்து இடங்களிலும் வலை வீசி தேடினர். ஆனால், அகிலங்களின் இறைவனான அல்லாஹ்வின் பாதுகாப்பில் உள்ளவர்களை அவர்களால் எப்படி கண்டுகொள்ள முடியும்?

எதிரிகள் நபி (ஸல்) அவர்களைத் தேடி அலைந்து அவர்கள் தங்கியிருந்த குகைவாசலை வந்தடைந்தனர். இதைப் பற்றி அபூபக்ர் (ரழி) கூறுகிறார்கள்: நான் நபி (ஸல்) அவர்களுடன் குகையில் தங்கியிருந்தபோது எனது தலையை உயர்த்திப் பார்த்தேன். அப்போது எதிரிகளின் பாதங்கள் தெரிந்தன. நான் அல்லாஹ்வின் தூதரே! அவர்களில் யாராவது தங்களது பார்வையைத் தாழ்த்தினால் நம்மை பார்த்துவிடுவார்களே" என்று கூறினேன். நபி (ஸல்) "அபூபக்ரே! சும்மா இருங்கள். நம் இருவருடன் அல்லாஹ் மூன்றாமவனாக இருக்கின்றான்." என்றும் (மற்றொரு அறிவிப்பில்) "அபூபக்ரே! அல்லாஹ் மூன்றாமவனாக இருக்கும் இருவரைப் பற்றி உமது எண்ணமென்ன! (அப்படியிருக்க நாம் ஏன் பயப்படவேண்டும்?)" என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கிய அல்லாஹ் மாபெரும் அற்புதமாகும் இது. சில எட்டுகளே நபி (ஸல்) அவர்களுக்கும் எதிரிகளுக்கும் இருந்தன. எனினும், தேடி வந்தவர்களால் நபி (ஸல்) அவர்களையும், அவர்களுடைய தோழரையும் பார்க்க முடியாமல் திரும்பி விட்டனர்.

**மதீனாவின் வழியினிலே**

குறைஷிகளின் வேகம் அடங்கியது அவர்களின் தேடும் வேட்டை தணிந்தது நபி (ஸல்) அவர்களைக் கைது செய்ய வேண்டுமென்ற அவர்களது கோபத் தீ அணைந்தது தொடர்ந்து மூன்று நாட்கள் அலைந்து திரிந்து தேடியும் எவ்விதப் பலனுமில்லாமல் போனது. இதை உணர்ந்த பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தனது தோழருடன் குகையிலிருந்து வெளியேறி மதீனா செல்ல ஆயத்தமானார்கள்.

மதீனா வரை தங்களுக்கு வழிகாட்டியாக அப்துல்லாஹ் இப்னு உரைக்கித் லைஸி என்பவரை நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரழி) அவர்களும் கூலிக்குப் பேசியிருந்தார்கள். இவர் முஸ்லிமாக இல்லாமல் குறைஷிகளின் மதத்தை பின்பற்றியவராக இருந்தும், இவர்மீது நம்பிக்கை கொண்டு தங்களது இரண்டு ஒட்டகங்களையும் அவரிடம் ஒப்படைத்தார்கள். மேலும், மூன்று இரவுகள் கழித்து 'ஸவ்ர்' மலையின் குகைக்கு வருமாறு அவரிடம் நேரம் குறித்திருந்தார்கள்.

ஹிஜ் முதல் ஆண்டு செப்டம்பர் 16 கி.பி. 622, ரபீவுல் அவ்வல் முதல் பிறை திங்கள் இரவு அப்துல்லாஹ் இப்னு உரைக்கித் இரண்டு ஒட்டகங்களுடன் அவர்களிடம் வந்து சேர்ந்தார். இதற்கு முன் நபி (ஸல்) அபூபக்ரிடம் அவரது வீட்டில் ஆலோசனை செய்து கொண்டிருந்த போது "அல்லாஹ்வின் தூதரே! எனது தந்தை உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! இதோ எனது இரண்டு ஒட்டகங்களில் சிறந்ததை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்" என்று அபூபக்ர் (ரழி) கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) "அதற்குரிய கிரயத்திற்கு பகரமாக நான் அதை வாங்கிக் கொள்கிறேன்" என்று கூறியிருந்தார்கள். அபூபக்ரின் மகளார் அஸ்மா (ரழி) இருவருக்கும் பயண உணவை ஒரு துணியில் மடித்து எடுத்து வந்தார்கள். ஆனால், அதைத் தொங்க விடுவதற்குக் கயிறு எடுத்துவர மறந்து விட்டார்கள்.

அவ்விருவரும் பயணமானபோது உணவு மூட்டையை தொங்கவிட கயிறு இல்லாததால் தங்களது இடுப்பிலுள்ள கயிற்றை அவிழ்த்து அதை இரண்டாகக் கிழித்து ஒன்றின் மூலம் உணவு மூட்டையை வாகனத்தில் கட்டிவிட்டு, மற்றொன்றை தனது இடுப்பில் கட்டிக் கொண்டார்கள். எனவேதான் அஸ்மாவிற்கு "தாத்துன் நித்தாகைன்" -இரட்டைக் கச்சுடையாள்- என்று பெயர் வந்தது. (ஸஹீஹுல் புகாரி)

அல்லாஹ்வின் தூதரும் அபூபக்ரும் அவர்களுடன் ஆமிர் இப்னு புஹைராவும் பயணமானார்கள். வழிகாட்டியான அப்துல்லாஹ் இப்னு உரைக்கித் கடற்கரை வழியாக அவர்களை அழைத்துச் சென்றார். யாரும் நபி (ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்து விடக்கூடாது என்பதற்காக முற்றிலும் மாறுபட்ட வழியில் அழைத்துச் சென்றார். முதலில் தெற்கு நோக்கி யமன் நாட்டை நோக்கி செல்லும் பாதையில் சென்று, பின்பு கடற்கரையை நோக்கி மேற்கு வழியாக சென்று, பின்பு அங்கிருந்து செங்கடலின் கரையை நோக்கி வடக்குப் பக்கமாக அழைத்துச் சென்றார்.

நபி (ஸல்) வழியில் எந்தெந்த இடங்களைக் கடந்து சென்றார்கள் என்பது பற்றி இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுவதைப் பார்ப்போம்:

இப்னு உரைகித், நபி (ஸல்) அவர்களையும் அபூபக்ரையும் மக்காவின் தெற்குத் திசையில் அழைத்துச் சென்று கடற்கரை வந்தவுடன், 'உஸ்ஃபான்' என்ற ஊரின் எல்லை வழியாக சென்று 'அமஜ்' என்ற ஊரின் எல்லையை அடைந்தார். பின்பு அங்கிருந்து குறுக்கு வழியில் 'குதைத்' என்ற ஊருக்கு வந்து, பின்பு 'கர்ரார்'', அங்கிருந்து 'ஸனியத்துல் மர்ரா'', அங்கிருந்து 'லிக்ஃப்'', அங்கிருந்து 'லிக்ஃப்' எனும் காட்டு வழியாக அழைத்துச் சென்றார். பின்பு 'மிஜாஜ்' காட்டு வழியாக 'மிஜாஹ்' வந்து, பின்பு 'துல்குழுவைன்'', பின்பு 'தீ கஷ்ர்'', 'ஜதாஜித்'', 'அஜ்ரத்' வழியாக வந்து அங்கிருந்து 'திஃன்' காட்டு வழியாக 'அபாபீத்' சென்றடைந்து பின்பு அங்கிருந்து 'ஃபாஜா' சென்றடைந்து ஃபாஜாவிலிருந்து 'அர்ஜ்' என்ற இடத்தில் தங்கி பின்பு 'ரகூபா' என்ற ஊரின் வலது புறம் உள்ள 'ஸனியத்துல் ஆம்ர்' என்ற ஊரின் வழியாக சென்று 'ஃம்' என்ற பள்ளத்தாக்கில் இறங்கி குபாவுக்கு அழைத்துச் சென்றார். (இப்னு ஹிஷாம்)

வழியில் நடந்த சம்பவங்களில் சிலவற்றை நாம் பார்ப்போம்:

1) அபூபக்ர் (ரழி) கூறுகிறார்கள்: அன்று இரவும் அடுத்த நாளும் நாங்கள் சென்று கொண்டிருந்தபோது மதிய நேரத்தை அடைந்தவுடன் வெயிலின் காரணமாக, பாதை ஆள் நடமாட்டமின்றி இருந்தது. மிகப் பெரிய உயரமான பாறை ஒன்று தென்படவே அதன் அருகில் சென்றோம். நல்ல நிழல் இருந்தது. நபி (ஸல்) தூங்குவதற்காக அங்கு இடத்தைச் சரிசெய்து விரிப்பை விரித்தேன். பின்பு "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் தூங்குங்கள். நான் உங்களைச் சுற்றி பார்த்துக் கொள்கிறேன்" என்று கூறினேன். நபி (ஸல்) தூங்கிக் கொண்டார்கள்.

நான் அவர்களை சுற்றி பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது ஒரு ஆட்டிடையர் தன்னுடைய ஆட்டு மந்தையை மேய்த்துக் கொண்டு நிழல் தேடி அப்பாறையை நோக்கி வந்தார். நான் அவரிடம் "நீ யாரின் அடிமை?" என்று கேட்டவுடன் அவர் "மக்காவைச் சேர்ந்த அல்லது மதீனாவைச் சேர்ந்த ஒருவரின் பெயரைக் கூறி அவருடைய அடிமை" என்று கூறினார். நான் அவரிடம் "உனது ஆட்டு மந்தையில் பால் கிடைக்குமா?" என்றேன். அவர் "கிடைக்கும்" என்றார். "கறந்து தரமுடியுமா?" என்றேன். அவர் "முடியும்" என்றார். பின்பு ஓர் ஆட்டைப் பிடித்து வரவே, நான் அவரிடம் "மண், முடி அசுத்தத்திலிருந்து மடியை சுத்தம் செய்துகொள்" என்று கூறினேன். அவர் தடிப்பமான பாத்திரத்தில் கொஞ்சம் பால் கறந்து கொடுத்தார். நான் நபி (ஸல்) தண்ணீர் குடிப்பதற்காகவும், ஒளு செய்வதற்காகவும் எடுத்து வந்த சிறிய பாத்திரத்தில் இருந்து கொஞ்சம் தண்ணீரைப் பாலில் கலந்து, பால் குளிர்ந்தவுடன் நபி (ஸல்) அவர்களுக்குக் குடிக்கக் கொடுக்கலாம் என்றிருந்தேன். ஆனால், அவர்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களை எழுப்ப மனமில்லாததால் அவர்கள் விழிக்கும் வரை நான் எதிர்பார்த்துக் காத்திருந்தேன்.

அவர்கள் விழித்தவுடன் "அல்லாஹ்வின் தூதரே! இந்த பாலைக் குடியுங்கள்" என்றேன். நான் திருப்தியடையும் வரை நபி (ஸல்) பாலைக் குடித்தார்கள். பின்பு நபி (ஸல்) "என்ன! பயணிக்க இன்னும் நேரம் வரவில்லையா?" என்று கேட்கவே "ஆம்! நேரம் வந்துவிட்டது" என்று கூறினேன். பின்பு நாங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். (ஸஹீஹுல் புகாரி)

2) அபூபக்ர் (ரழி) பொதுவாக நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் செல்லும் வழக்கம் உள்ளவர்களாக இருந்தார்கள். அவர்கள் வயோதிக தோற்றமுடையவர்களாக இருந்தார்கள். நபி (ஸல்) வாலிப தோற்றமுடையவர்களாகவும் மக்களுக்கு அறிமுகமற்றவர்களாகவும் இருந்தார்கள். அப்போது இடையில் யாராவது அபூபக்ர் (ரழி) அவர்களைப் பார்த்து "உனக்கு முன் செல்பவர் யார்?" என்று கேட்டால் "எனக்கு வழி காட்டுபவர்" என்று கூறுவார்கள். கேட்டவர் பயணப் பாதையை காட்டக் கூடியவர் என்று விளங்கிக் கொள்வார். அபூபக்ர் (ரழி) அவர்களோ "நன்மைக்கு வழி காட்டுபவர்" என்ற பொருளை மனதில் எண்ணிக் கொள்வார்கள். (ஸஹீஹுல் புகாரி)

3) இரண்டாவது அல்லது மூன்றாவது நாளில் குஜாம் கிளையைச் சேர்ந்த 'உம்மு மஅபத்' என்ற பெண்ணின் இரண்டு கூடாரங்களைக் கண்டார்கள். அந்தக் கூடாரங்கள் மக்காவிலிருந்து 130 கி.மீ. தூரத்தில் உள்ள 'குதைத்' என்ற ஊரின் எல்லையில் 'முஷல்லல்' என்ற இடத்தில் இருந்தது. இந்த 'உம்மு மஅபத்' வீரமும், துணிவுமிக்கவர் ஆவார். இவர் எப்போதும் தனது கூடாரத்தின் வெளியில் அமர்ந்துகொண்டு தன்னைக் கடந்து செல்பவர்களுக்கு உணவும், நீரும் வழங்கி வருவார். அவரைப் பார்த்த நபி (ஸல்) அவர்களும் அபூபக்ரும் "உன்னிடம் எதுவும் சாப்பிட இருக்கிறதா?" என்று கேட்டார்கள். அவர் "அல்லாஹ்வின் மீது ஆணையாக! என்னிடம் ஏதாவது இருப்பின் நான் உங்களுக்கு விருந்தளிப்பதில் குறைவு செய்ய மாட்டேன். ஆட்டு மடியிலும் பால் இல்லையே! இந்த ஆண்டு மிகப் பஞ்சமாக இருக்கின்றது" என்று கூறினார்.

நபி (ஸல்) அவர்களின் பார்வை கூடாரத்தின் ஓரத்தில் நின்று கொண்டிருந்த ஓர் ஆட்டின் மீது பட்டது. “உம்மு மஅபதே! இது என்ன ஆடு?” என்று கேட்டார்கள். அவர் “இது ஆட்டு மந்தையுடன் சேர்ந்து மேய்ந்துவர முடியாத அளவுக்கு பலவீனமான ஆடு” என்றார். “அது பால் தருமா?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “அது மிக மெலிந்ததாயிற்றே!” என்று அப்பெண் கூறினார். “நான் அந்த ஆட்டில் பால் கறந்துகொள்ள எனக்கு அனுமதியளிக்கிறாயா?” என்று நபி (ஸல்) கேட்க, “எனது தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டுமாக! அதில் பால் இருக்கிறது என்று நீங்கள் கருதினால் தாராளமாக கறந்து கொள்ளுங்கள்” என்றார் அப்பெண்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) ‘பிஸ்மில்லாஹ்’ (அல்லாஹ்வின் பெயரால் என்று) கூறி அல்லாஹ்விடம் பிரார்தித்தார்கள். அல்லாஹ்வின் அருளால் ஆட்டின் மடி பாலால் நிரம்பி சொட்டியது. ஒரு நடுத்தரமான பாத்திரத்தை எடுத்துவரக் கூறி அதில் பால் கறந்தார்கள். பாத்திரம் நிரம்பவே முதலில் அப்பெண்மணிக்கு குடிக்கக் கொடுத்தார்கள். அவர் குடித்து தாகம் தீரவே பின்பு தனது தோழர்களுக்குக் கொடுத்தார்கள். அவர்களுக்குப் பின்பு நபி (ஸல்) குடித்தார்கள். பின்பு மற்றொரு முறை அந்த பாத்திரம் நிரம்பப் பால் கறந்து அப்பெண்மணியிடம் கொடுத்து விட்டு அங்கிருந்து புறப்பட்டார்கள்.

சிறிது நேரத்தில் அப்பெண்ணின் கணவர் அபூ மஅபத், மெலிந்த நடக்க இயலாத பலவீனமான ஆடுகளை ஓட்டிக்கொண்டு அங்கு வந்தார். அங்கு பால் கறக்கப்பட்டிருப்பதைப் பார்த்தவுடன் ஆச்சரியமடைந்து “இந்தப் பால் உனக்கு எங்கிருந்து கிடைத்தது? வீட்டில் பால் சுரக்கும் ஆடு இல்லை மற்ற ஆடுகளும் தூரமாக இருந்தன் எப்படி உனக்கு பால் கிடைக்க முடியும்?” என்று கேட்டார். அதற்கு அப்பெண் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஒரு நல்ல பாக்கியம் பெற்ற மனிதர் இங்கு வந்தார். அவர் இப்படி இப்படியெல்லாம் பேசினார். அவன் நிலை இப்படி இப்படி இருந்தது” என்று வருணித்தார். அதற்கு அவர் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! குறைஷிகள் தேடும் மனிதராகத்தான் அவர் இருக்க வேண்டும் என்று கூறி அவரைப் பற்றி முழுமையாக எனக்கு விவரித்துக் கூறு” என்றார்.

அப்பெண், நபி (ஸல்) அவர்களின் அழகிய பண்புகளை கேட்பவர் கண்முன் காண்பது போன்று வருணித்துக் கூறினார். (இன்ஷா அல்லாஹ்! இந்த நூலின் இறுதியில் அந்த வருணனையை நாம் காண்போம்.) அப்போது அபூ மஅபத் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவர் குறைஷிகள் தேடும் மனிதர்தான். குறைஷிகள் இவரைப் பற்றி ஏராளம் கூறியிருக்கின்றனர். நான் அவருடன் தோழமை கொள்ள வேண்டுமென்று திட்டமாக நினைத்திருந்தேன். அதற்கு வாய்ப்பு கிடைத்தால் நிச்சயம் நான் அதைச் செய்வேன்” என்றார்.

இந்நேரத்தில், மக்காவில் உள்ளவர்களோ உயர்ந்த சப்தம் ஒன்றைச் செவிமடுத்தார்கள். ஆனால், அந்த சப்தம் கொடுப்பவரை அவர்கள் பார்க்க முடியவில்லை. அந்த சப்தமாவது:

“அர்ஷின் அதிபதியான அல்லாஹ் நற்கூலி வழங்கட்டும்! உம்மு மஅபதின் கூடாரத்தில் தங்கிச் சென்ற இரு தோழர்களுக்கு. அவர்கள் நலமுடனே தங்கி நலமுடனே போனார்கள். முஹம்மதுக்கு தோழராகும் பாக்கியம் பெற்றவர் வெற்றியடைந்தார். குஸை வம்சமே! என்ன கைசேதம்! தலைமையையும் சிறப்பையும் உங்களை விட்டுவிட்டு அல்லாஹ் அவருக்கு வழங்கி விட்டான். கஅபு குடும்பத்துக்கு வாழ்த்துக்கள் பல! அவருடைய திருமதியின் இல்லம் அருமையானது! அது இறைவிசுவாசிகளுக்கு தங்குமிடமானது! உங்கள் சகோதரியிடம் ஆடு, பாத்திரம் பற்றி வினவுங்கள்! நீங்கள் ஆட்டிடம் கேட்டால் அதுவும் சான்று பகரும்!”

அஸ்மா பின்த் அபூபக்ர் (ரழி) கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் எங்கு சென்றார்கள் என்று எங்களுக்குத் தெரியாமல் இருந்தது. அப்போது மக்காவின் கீழ் பகுதியிலிருந்து ஒரு ஜின் இக்கவிதைகளைப் பாடியது. மக்கள் சப்தம் வரும் திசையை நோக்கி சப்தத்தைக் கேட்டுக் கொண்டே சென்றார்கள். ஆனால் பாடுவது யார்? என்று தெரியவில்லை. பின்பு அந்த சப்தம் மக்காவின் மேல்புறத்தின் வழியாக மறைந்துவிட்டது. அந்த ஜின்னின் சப்தத்தைக் கேட்டபோது நபி (ஸல்) மதீனாவை நோக்கி சென்றிருக்கலாம் என்று நாங்கள் தெரிந்து கொண்டோம். (ஜாதுல் மஆது, முஸ்தத்ரகுல் ஹாகிம்)

4) வழியில் சுராக்கா இப்னு மாலிக் நபி (ஸல்) அவர்களையும் அபூபக்ரையும் கைது செய்ய வேண்டும் என்று பின்தொடர்ந்தார். இதைப் பற்றி சுராக்கா கூறுவதை நாம் கேட்போம்: நான் எனது கூட்டத்தினராகிய முத்லஜின் அவையில் உட்கார்ந்திருந்தேன். அப்போது எங்கள் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் எங்களிடம் விரைந்து வந்து "கடற்கரையில் சில மனிதர்களைப் பார்த்தேன். அவர்கள் முஹம்மதும் அவரது தோழர்களுமாகத்தான் இருக்க வேண்டும்" என்று கூறினார். அது உண்மையில் அவர்கள்தான் என்பதை நான் விளங்கிக் கொண்டேன். இருந்தும் அதை வெளிக்காட்டாமல் "நீ பார்த்தது அவர்களல்ல! நாங்கள் பார்த்துக் கொண்டிருக்க, எங்கள் கண்முன் சென்ற இரண்டு நபர்களைத்தான் நீயும் பார்த்திருக்கிறாய்! நீ கூறுவது போன்று அவர்கள் முஹம்மதும் அவரது தோழர்களும் அல்லர்" என்று கூறி மழுப்பினேன். பிறருக்கு சந்தேகம் வராமலிருக்க சபையில் சிறிது நேரம் அமர்ந்திருப்பது போல் இருந்துவிட்டு எனது வீட்டுக்கு வந்தேன்.

எனது அடிமைப் பெண்ணிடம் எனது குதிரையைத் தூரத்தில் உள்ள ஒரு மேட்டுக்குக் கொண்டு வந்து என்னை எதிர்பார்த்திருக்கும்படி கூறினேன். பின்பு எனது ஈட்டியை எடுத்துக் கொண்டு வீட்டின் கொல்லைப் புறமாக வெளியேறி அந்த ஈட்டியை பூமியில் தேய்த்தவனாக எனது குதிரையில் ஏறினேன். நபி (ஸல்) அவர்களுக்கு நெருக்கத்தில் வந்தவுடன் எனது குதிரை தடுமாறவே நான் குதிரையிலிருந்து கீழே விழுந்துவிட்டேன். பின்பு எழுந்து, எனது அம்புக் கூட்டிலிருந்து நான் அவர்களுக்குத் தீங்கு செய்யட்டுமா? வேண்டாமா? என்று குறிபார்க்கும் எண்ணத்தில் ஓர் அம்பை எடுத்தபோது "வேண்டாம்" என்ற அம்பு வந்தது. அதில் எனக்கு திருப்தி ஏற்படாததால் மீண்டும் குதிரையில் ஏறி அவர்களை நெருங்க ஆரம்பித்தேன். நபி (ஸல்) ஓதும் சப்தத்தை கேட்கும் அளவிற்கு நான் அவர்களை நெருங்கி விட்டேன். நபி (ஸல்) திரும்பி பார்க்காமல் சென்றார்கள். ஆனால், அபூபக்ரோ அதிகம் அதிகம் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றார்கள். அப்போது எனது குதிரையின் முன்னங்கால்கள் முழங்கால் வரை பூமியில் புதைந்து கொண்டன. நான் குதிரையிலிருந்து கீழே விழுந்தேன்.

பின்பு எழுந்து, எனது குதிரையை விரட்டவே, அது மிகச் சிரமத்துடன் கால்களை வெளியே எடுத்தது. அது நேராக நின்றவுடன் வானத்திலிருந்து புகை போன்று வந்த ஒரு புழுதி அதன் முன்னங்கால்களில் காயத்தை ஏற்படுத்தியது. நான் என்ன செய்யலாம் என்று குறிபார்க்க அம்பை எடுத்தபோது எனக்குப் பிடிக்காத அம்பே இப்போதும் வந்தது. நான் அவர்களை எனக்கு பாதுகாப்புத் தரக்கோரி கூவி அழைத்தேன். எனது சப்தத்தைக் கேட்டு அவர்கள் நின்று விட்டார்கள். நான் குதிரையில் ஏறி அவர்களிடம் வந்தேன். நான் அவர்களை நெருங்குவதற்கு தடை ஏற்படுவதிலிருந்தே நிச்சயமாக நபி (ஸல்) அவர்களின் மார்க்கம் மிகைத்தே தீரும் என்று உறுதிகொண்டேன்.

நபி (ஸல்) அவர்களிடம் "உங்களது கூட்டத்தினர் உங்களைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்குச் சன்மானம் உண்டு என அறிவிப்புச் செய்திருக்கிறார்கள். எனவே, மக்கள் உங்களை பிடித்துக் கொடுக்க வேண்டும் என்ற வெறியில் உள்ளனர்" என்று கூறினேன். நான் அவர்களிடம் என்னிடம் இருந்த பிரயாண உணவையும், சாமான்களையும் அவர்கள் எடுத்துக் கொள்வதற்காக அவர்கள் முன் வைத்தேன். ஆனால், அவர்கள் அதிலிருந்து எதையும் எடுத்துக் கொள்ளவில்லை. மேற்கொண்டு என்னிடம் எதுவும்

விசாரிக்கவும் இல்லை. இருப்பினும் “எங்களின் செய்திகளை மறைத்துவிடு” என்று மட்டும் கூறினார்கள். நான் நபி (ஸல்) அவர்களிடம் எனக்காக பாதுகாப்புப் பத்திரம் ஒன்று கொடுக்குமாறு கூறினேன். நபி (ஸல்) ஆமிர் இப்னு புஹைறாவிடம் கூறவே அவர் எனக்கு சிறிய துண்டுத் தோலில் எழுதிக் கொடுத்தார். பின்பு நபி (ஸல்) சென்று விட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அபூபக்ர் (ரழி) அறிவிக்கின்றார்கள்: நாங்கள் பயணம் செய்து கொண்டிருந்தபோது எதிரிகள் எங்களை வலைவீசித் தேடினர். ஆனால், சுராக்கா இப்னு மாலிக் இப்னு ஜுஃஷுமைத் தவிர வேறு எவராலும் எங்களைக் கண்டுகொள்ள முடியவில்லை. சுராக்கா எங்களுக்கு அருகாமையில் வந்தவுடன் “அல்லாஹ்வின் தூதரே! இதோ நம்மை தேடி வந்து விட்டார்கள்” என்று நான் கூறினேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,

“நீங்கள் கவலைப்படாதீர்கள்! நிச்சயமாக அல்லாஹ் நம்முடன் இருக்கின்றான்” (அத்தவ்பா 9:40)

என்று கூறினார்கள்.

சுராக்கா எங்களை விட்டு திரும்பியபோது, மக்கள் எங்களைத் தேடிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். அவர்களிடம் உங்களுக்காக நான் இங்கு எல்லா இடங்களிலும் தேடிவிட்டேன். நீங்கள் இங்கு தேடவேண்டிய அவசியமில்லை என்று கூறி மக்களைத் திசை திருப்பினார். காலையில் நபி (ஸல்) அவர்களை ஒழிக்க வேண்டும் என்று முயற்சி செய்து கொண்டிருந்தவர் மாலையில் நபி (ஸல்) அவர்களின் பாதுகாவலராக மாறினார். (ஜாதுல் மஆது)

5) பயண வழியில் நபி (ஸல்) புரைதா இப்னு ஹுஸைப் அஸ்லமியை சந்தித்தார்கள். அவருடன் அவருடைய கிளையினரில் எண்பது குடும்பங்களையும் சந்தித்தார்கள். அவருக்கு இஸ்லாமை எடுத்துக் கூறவே அவரும் அவரது கூட்டத்தாரும் இஸ்லாமைத் தழுவினர். பின்பு நபி (ஸல்) இஷா தொழுகையைத் தொழ வைக்க, அவர்கள் அனைவரும் இஷா தொழுதார்கள். புரைதா (ரழி) தங்களது கூட்டத்தினடமே தங்கியிருந்து விட்டு உஹுத் போர் நடந்த பின்பு நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்.

புரைதாவின் மகன் அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்: நபி (ஸல்) அவர்களின் வழக்கம் நல்ல பெயர்களைக் கொண்டு மகிழ்ச்சியடைவார்கள். ஆனால், சகுனம் பார்க்க மாட்டார்கள். நபி (ஸல்) மதீனாவை நோக்கி ஹிஜ்ரா சென்று கொண்டிருக்கும்போது எனது தந்தை புரைதா தங்களது குடும்பத்தினர் பனூ சஹ்முடன் எழுபது வாகனங்களில் வந்து கொண்டிருந்தார். அவரை சந்தித்த நபி (ஸல்) அவர்கள் “நீர் எந்தக் கிளையைச் சேர்ந்தவர்?” என்று கேட்க, அவர் “அஸ்லம் கிளையைச் சேர்ந்தவர்” என்று கூறினார். இதைக் கேட்ட நபி (ஸல்) அபூபக்ரிடம் “நாம் பாதுகாப்பு பெற்றுவிட்டோம்” என்றார்கள். (ஏனெனில் ‘அஸ்லம்’ என்றால் ‘மிகுந்த பாதுகாப்புப் பெற்றவர்’ என்பது பொருள்) பின்பு நபி (ஸல்), அவரிடம் “நீர் எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்?” என்று கேட்டார்கள். அவர் “சஹ்ம் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்” என்றார். நபி (ஸல்)அபூபக்ரிடம் “உமது அம்பு வெளியாகிவிட்டது” (எதிரிகளிடமிருந்து நாம் தப்பித்துக் கொண்டோம்) என்று கூறினார்கள்.

6) நபி (ஸல்) வழியில் அஸ்லம் கிளையைச் சேர்ந்த அபூஅவ்ஸ் தமீம் இப்னு ஹஜரை அல்லது அபூ தமீம் அவ்ஸ் இப்னு ஹஜரைச் சந்தித்தார்கள். அவர் ‘அர்ஜ்’ என்ற இடத்தில் ஜுஹ்ஃபா, ஹர்ஷா என்ற இரண்டு மலைகளுக்கிடையில் தனது கொழுத்த ஒட்டகங்களை அழைத்துச் சென்று கொண்டிருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்களும் அபூபக்ரும் ஒரே ஒட்டகத்தில் இருந்தார்கள். காரணம், நபி (ஸல்) அவர்களுடன் இருந்த அபூபக்ர் (ரழி) அவர்களைத் தவிர மற்ற இருவரும் அவர்களுடைய ஒட்டகங்களுடன் வர தாமதமாகி விட்டதால் இவர்கள் இருவரும் ஒரே ஒட்டகத்தில் வந்தார்கள். அப்போது

அபூஅவ்ஸ் தனது ஒட்டகங்களில் நல்ல ஆண் ஒட்டகை ஒன்றை அபூபக்ருக்கு வழங்கி, அதில் பயணிக்க வைத்தார்கள். பின்பு தனது அடிமை மஸ்வூதையும் அவர்களுடன் வழிகாட்டுவதற்காக அனுப்பி வைத்தனர். மேலும், தனது அடிமையிடம் ‘‘யாரும் செல்லாத தனி வழியில் இவர்களை அழைத்துச் செல். இவர்களை விட்டு எங்கும் நீ பிரிந்து சென்றுவிட வேண்டாம்’’ என்று கூறினார். (அஸதுல் காபா)

அந்த அடிமை நபி (ஸல்) அவர்களையும், அபூபக்ர் (ரழி) அவர்களையும் பத்திரமாக அழைத்து வந்து மதீனாவில் சேர்த்தார். பின்பு நபி (ஸல்) அந்த மஸ்வூதிடம் ‘‘உமது எஜமானரிடம் தனது ஒட்டகங்களின் கழுத்துகளில் இரண்டு வளையங்களைக் கொண்டு அடையாளமிடச் சொல்!’’ என்று கூறி அவரை அவரது எஜமானரிடம் அனுப்பி வைத்தார்கள். உஹுத் போர் நடந்தபோது மக்காவிலிருந்து இணைவைப்பவர்கள் வரும் செய்தியை ‘அவ்ஸ்’ தனது அடிமை மஸ்வூதை அர்ஜிலிருந்து கால் நடையாகவே அனுப்பி நபி (ஸல்) அவர்களுக்கு அறிவித்து வரச் செய்தார். உஹுத் போர் நடந்து நபி (ஸல்) மதீனாவிற்குத் திரும்பியவுடன் இவர் இஸ்லாமை ஏற்று அர்ஜிலேயே வசித்து வந்தார். (அஸதுல் காபா)

7) ‘பத்தன் ஃம்’ என்ற இடத்தில் ஷாம் நாட்டிற்கு வியாபாரத்திற்காக சென்று விட்டு திரும்பிக் கொண்டிருந்த ஜுபைர் (ரழி) அவர்களையும், அவர்களுடன் இருந்த மற்ற முஸ்லிம் வியாபாரிகளையும் சந்தித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களுக்கும் அபூபக்ருக்கும் வெண்மையான ஆடைகளை ஜுபைர் அணிவித்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

**‘குபா’வில்**

நபித்துவத்தின் 14 வது ஆண்டு, அதாவது ஹிஜ்ராவின் முதல் ஆண்டு ரபீவுல் அவ்வல் பிறை 8 திங்கள் பகல் கி.பி. 622 செப்டம்பர் 23ல் நபி (ஸல்) குபா வந்திறங்கினார்கள். (ரஹ்மத்துல்லில் ஆலமீன்)

உர்வா இப்னு ஜுபைர் (ரழி) கூறுகிறார்: நபி (ஸல்) மக்காவிலிருந்து வெளியேறிவிட்ட செய்தியை மதீனாவில் வாழும் முஸ்லிம்கள் கேட்டவுடன் ஒவ்வொரு நாள் காலையிலும் மதீனாவிற்கு வெளியில் உள்ள ‘ஹர்ரா“’’ என்ற இடத்திற்கு வந்து காத்திருப்பார்கள். மதிய வெயில் கடுமையானவுடன் மீண்டும் மதீனாவிற்கு வந்து விடுவார்கள். ஒருநாள் மிக நீண்ட நேரம் எதிர்பார்த்திருந்து விட்டு மதீனாவுக்குத் திரும்பினார்கள். அது சமயம், யூதர்களில் ஒருவன் ஏதோ ஒன்றைப் பார்ப்பதற்காக தனது கோட்டை மீது ஏறினான். நபி (ஸல்) அவர்களையும் நபித் தோழர்களையும் வெண்மையான ஆடை அணிந்து வருவதைப் பார்த்தவுடன் ‘‘ஓ அரபுகளே! நீங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்த பாக்கியம் இதோ வருகிறது!’’ என்று உயர்ந்த சப்தத்தில் கூறினான். இதைக் கேட்டவுடன் முஸ்லிம்கள் தங்களின் ஆயுதங்களைப் பாய்ந்து எடுத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களை வரவேற்க ‘ஹர்ரா’ நோக்கி ஓடினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இப்னுல் கய்’’ (ரஹ்) கூறுகிறார்: மக்கள் பரபரப்புடன் அங்குமிங்கும் ஓடுவதாலும், வரவேற்கும் உற்சாகத்தில் குரலை உயர்த்திப் பேசுவதாலும், ஏதோ ஒன்று வேகமாக விழுந்தது போன்ற பலத்த சப்தம் கேட்டது. அம்ர் இப்னு அவ்ஃப் குடும்பம் வசிக்கும் பகுதியிலிருந்து தக்பீர் முழக்கம் (அல்லாஹ் மிகப் பெரியவன் என்ற சப்தம்) விண்ணைப் பிளந்தது. நபி (ஸல்) அவர்களுடைய வருகையின் மகிழ்ச்சியால் முஸ்லிம்கள் தக்பீர் முழங்கினர். நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க விரைந்தனர். வாழ்த்துக் கூறி சூழ்ந்து நின்று ‘‘வருக! வருக!’’ என வரவேற்றனர். நபி (ஸல்) அமைதி தவழ வந்து கொண்டிருந்தார்கள். அந்நேரத்தில்,

நிச்சயமாக அல்லாஹ் அவரைப் பாதுகாப்பவனாக இருக்கின்றான். அன்றி, ஜிப்ரயீலும், நம்பிக்கையாளர்களிலுள்ள நல்லடியார்களும், இவர்களுடன் (மற்ற) வானவர்களும் (அவருக்கு) உதவியாக இருப்பார்கள். (அல்குர்ஆன் 66:4)

என்ற வசனம் இறங்கியது.

உர்வா இப்னு ஜுபைர் கூறுகிறார்: நபி (ஸல்) அவர்களை வரவேற்றபோது அவர்கள் மக்களுடன் வலது புறமாக சென்று அம்ர் இப்னு அவ்ஃப் கிளையாருடன் தங்கினார்கள். அது ரபீவுல் அவ்வல் மாதத்தின் முதல் திங்கட்கிழமையாகும். நபி (ஸல்) அமைதியாக அமர்ந்து கொள்ளவே அபூபக்ர் (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் நின்று கொண்டார்கள். அன்சாரிகளில் நபி (ஸல்) அவர்களைப் பார்த்திராதவர்கள் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து ஸலாம் கூறுவதற்காக வந்தபோது அபூபக்ரை நபியென நினைத்து அவருக்கு ஸலாம் கூறிக் கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் மீது வெயில் படவே அபூபக்ர் தன்னுடைய போர்வையால் நபி (ஸல்) அவர்களுக்கு நிழல் தந்தார்கள். அப்போதுதான் நபி (ஸல்) யார்? என்பதை மக்கள் விளங்கிக் கொண்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

மதீனாவில் எங்கு பார்த்தாலும் நபி (ஸல்) அவர்களை வரவேற்க மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. அதுபோன்ற ஒரு நாளை வரலாற்றில் மதீனா கண்டதில்லை. நபி (ஸல்) குபாவில் குல்ஸூம் இப்னு ஹத்ம்' என்பவன் வீட்டில் தங்கியிருந்தார்கள். சிலர் ஸஅது இப்னு கைஸமா வீட்டில் தங்கியிருந்தார்கள் என்றும் கூறுகின்றனர். ஆனால், முந்திய கூற்றே வலுவானதாகும்.

அலீ இப்னு அபூதாலிப் (ரழி) மக்காவில் மூன்று நாள் தங்கியிருந்தார்கள். நபி (ஸல்) தன்னிடம் கொடுத்துவிட்டு சென்ற அமானிதங்களை'' உரியவர்களிடம் ஒப்படைத்து விட்டு கால்நடையாகவே மதீனா புறப்பட்டார்கள். பின்பு, குபா வந்தடைந்து நபி (ஸல்) தங்கியிருந்த குல்ஸூம் இப்னு ஹத்ம் வீட்டில் தங்கினார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

நபி (ஸல்) குபாவில் திங்கள், செவ்வாய், புதன், வியாழன் ஆகிய நான்கு நாட்கள் தங்கியிருந்தார்கள். (இப்னு ஹிஷாம்)

அப்போது குபாவில் ஒரு பள்ளியை நிர்மாணித்து அதில் தொழ வைத்தார்கள். ஐந்தாவது நாள், அதாவது வெள்ளிக்கிழமை அன்று அல்லாஹ்வின் உத்தரவு வரவே அங்கிருந்து புறப்பட்டார்கள். நபி (ஸல்) அவர்களின் வாகனத்தில் அவர்களுக்குப் பின்னால் அபூபக்ர் (ரழி) அமர்ந்திருந்தார்கள்.

நபி (ஸல்) தான் வரும் செய்தியை தனது தாய்மாமன்மார்களுக்கு, அதாவது, நஜ்ஜார் கிளையினருக்கு சொல்லி அனுப்பினார்கள். அவர்கள் நபி (ஸல்) அவர்களை வரவேற்பதற்காக வாட்களை அணிந்து வந்தனர். அவர்கள் சூழ்ந்து செல்ல, நபி (ஸல்) மதீனா நோக்கி பயணமானார்கள். (ஸஹீஹுல் புகாரி)

குபாவில் கட்டப்பட்ட பள்ளிதான் நபித்துவத்திற்கு பிறகு இறையச்சத்துடன் கட்டப்பட்ட முதல் பள்ளியாகும். நபி (ஸல்) பயணித்துக் கொண்டிருக்கும்போது ஸாலிம் இப்னு அவ்ஃப் கிளையினர் வசிக்கும் இடம் வந்தபோது ஜுமுஆ'' தொழுகைக்கான நேரமும் ஆகிவிட்டதால் 'பத்னுல் வாதி' என்ற இடத்தில் அனைவரையும் ஒன்று சேர்த்து நபி (ஸல்) ஜுமுஆ தொழுகை நடத்தினார்கள். (அந்த இடத்தில் இன்று பள்ளிவாசல் கட்டப்பட்டுள்ளது) மொத்தம் நூறு நபர்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**மதீனாவில்**

ஜுமுஆ தொழுகைக்குப் பின்பு நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டு, மதீனாவிற்குள் நுழைந்தார்கள். இதற்கு முன் 'எஸ்ப்' என்று பெயர் கூறப்பட்டு வந்த அந்த நகரம் அன்றிலிருந்து 'மதீனத்துர் ரஸூல்' - இறைத்தூதரின் பட்டணம்- என்று அழைக்கப்பட்டது. இதையே சுருக்கமாக இன்று 'அல்-மதீனா' என்று கூறப்படுகிறது. நபி (ஸல்) மதீனாவிற்குள் நுழைந்த அந்நாள் அம்மக்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியும், ஆனந்தமும் நிறைந்த நாளாக இருந்தது. மதீனாவின் தெருக்களிலும், வீடுகளிலும் இறைப்புகழும், இறைத்துதியும் முழங்கப்பட்டன. அன்சாரிகளின் சிறுமிகள் மிக ஆனந்தத்துடன் சில கவிகளைப் பாடி குதூகலமடைந்தனர்.

"நமக்கு முழு நிலா தோன்றியது. ஸனியாத்தில் விதா என்னும் மலைப்பாங்கான இடத்திலிருந்து, அல்லாஹ்வுக்காக அழைப்பவர் அழைக்கும்போதெல்லாம் நாம் நன்றி செலுத்துவது கடமையாயிற்று. எங்களுக்கு அனுப்பப்பட்டவரே! பின்பற்றத் தகுந்த மார்க்கத்தைத்தான் கொணர்ந்தீரே! "

அன்சாரிகள் மிகுந்த செல்வ செழிப்புடையவர்களாக இல்லையென்றாலும் நபி (ஸல்) அவர்களின் மீது அவர்கள் வைத்திருந்த பிரியத்தினால் ஒவ்வொருவரும் நபி (ஸல்) தங்கள் வீட்டில்தான் தங்கவேண்டுமென ஆசைபட்டனர். ஒவ்வொருவரும் நபி (ஸல்) தங்கள் வீட்டைக் கடந்து செல்லும்போது நபியவர்களின் வாகனக் கயிற்றை பிடித்துக்கொண்டு "அல்லாஹ்வின் தூதரே! பாதுகாப்பும், ஆயுதமும், படைபலமும், வீரர்களும் நிறைந்த எங்களிடம் வந்துவிடுங்கள்" என்று கூறினார்கள். ஆனால், நபி (ஸல்) தன்னை அழைத்தவர்களிடம் "வாகனத்திற்கு வழிவிடுங்கள். அது பணிக்கப்பட்டுள்ளது" என்று கூறிக்கொண்டே வந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் வாகனம் தொடர்ந்து சென்றுகொண்டே இருந்தது. இறுதியில், தற்போது நபி (ஸல்) அவர்களின் பள்ளிவாசல் அமையப் பெற்றிருக்கும் இடத்தில் மண்டியிட்டுக் கொண்டது. ஆனால், நபி (ஸல்) அதிலிருந்து இறங்கவில்லை. பின்பு சிறிது நேரத்தில் அந்த ஒட்டகம் எழுந்து சிறிது தூரம் சென்று திரும்பிப் பார்த்தது பின்பு முதலில் மண்டியிட்ட அதே இடத்தில் மீண்டும் வந்து மண்டியிட்டு அமர்ந்தது.

தங்கள் ஒட்டகத்திலிருந்து நபி (ஸல்) இறங்கினார்கள். மேலும், அந்த இடம் நபி (ஸல்) அவர்களின் தாய்மாமன்களாகிய நஜ்ஜார் கிளையினருக்கு சொந்தமானதாகும். நபி (ஸல்) அவர்களின் விருப்பத்திற்கேற்ப அல்லாஹ் அவர்களின் தாய்மாமன்களின் வீட்டிலேயே தங்குவதற்கு அருள் புரிந்தான். நஜ்ஜார் கிளையினரில் ஒவ்வொருவரும் நபி (ஸல்) அவர்களிடம் 'நீங்கள் எங்களது வீட்டில் தங்க வேண்டும்' என்று அழைத்துக் கொண்டிருக்கையில் அபூ அய்யூப் அன்சாரி (ரழி) அவர்கள் மட்டும் நபி (ஸல்) அவர்களின் பயணச் சாமான்களை தங்களது வீட்டிற்குள் எடுத்துச் சென்று விட்டார்கள். இதைப் பார்த்த நபி (ஸல்) "மனிதன் அவனது சாமான்களுடன்தானே இருக்க முடியும்" என்று மற்றவர்களிடம் கூறினார்கள். அஸ்அத் இப்னு ஜுராரா நபி (ஸல்) அவர்களின் ஒட்டகத்தின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டார்கள். அவன் விருப்பப்படி நபி (ஸல்) அவர்களின் வாகனம் அவரிடம் இருக்க அனுமதிக்கப்பட்டது. (இப்னு ஹிஷாம்)

அனஸ் (ரழி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) "நமது உறவினர்களின் வீடுகளில் எது நெருக்கமாக இருக்கிறது" என்று கேட்டார்கள். அதற்கு அபூ அய்யூப் "அல்லாஹ்வின் தூதரே! இதோ எனது வீடு. இதுதான் எனது வீட்டு வாயில்" என்று கூறினார்கள். நபி (ஸல்) "சரி! எழுந்து சென்று படுக்கும் இடத்தை சரிசெய்யுங்கள்" என்று கூறினார்கள். "ரஸூலுல்லாஹ்வே! எல்லாம் தயார், அல்லாஹ்வின் பரக்கத்துடன் -அருள் வளத்துடன்-

நீங்கள் இருவரும் எழுந்து வாருங்கள்'' என்று அபூ அய்யூப் (ரழி) கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

சில நாட்களுக்குப் பின் நபி (ஸல்) அவர்களின் மனைவி ஸவ்தா (ரழி) அவர்களும் இரு மகள்கள் ஃபாத்திமா, உம்மு குல்தூம் மற்றும் உஸாமா இப்னு ஜைது, உம்மு அய்மன் ஆகியோர் மதீனா வந்தார்கள். இவர்களுடன் அபூபக்ரின் மகனார் அப்துல்லாஹ், அபூபக்ரின் குடும்பத்தாரையும் அழைத்து வந்தார்கள். இவர்களில் ஆயிஷாவும் இருந்தார். நபி (ஸல்) அவர்களின் இன்னொரு மகள் ஜைனபுடைய கணவர் அபுல்ஆஸ் ஹிஜ்ரா செல்ல சந்தர்ப்பமளிக்காததால் ஜைனப் (ரழி) மதீனா வர இயலவில்லை. இவர்கள் பத்ர் போருக்குப் பின் மதீனா வந்தார்கள். (ஜாதுல் மஆது)

ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: "நாங்கள் மதீனா வந்தடைந்தோம். அப்போது மதீனா அல்லாஹ்வின் பூமியிலேயே நோய் மிகுந்ததாக இருந்தது. மதீனாவிற்கு அருகிலுள்ள 'புத்ஹான்' என்ற ஓடையில் கலங்கிய நீர் ஓடிக்கொண்டிருந்தது.

மேலும், ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்தபோது அபூபக்ர், பிலால் (ரழி) ஆகியோருக்குக் காய்ச்சல் ஏற்பட்டது. நான் அவர்களிடம் சென்று தந்தையே தாங்கள் எப்படி இருக்கின்றீர்கள்? பிலாலே தாங்கள் எப்படி இருக்கின்றீர்கள்? என்று கேட்டேன்.

பொதுவாக அபூபக்ர் (ரழி) அவர்களுக்கு காய்ச்சல் ஏற்பட்டால்,

"ஒவ்வொரு மனிதனும் தன் குடும்பத்தாருடன் கலந்திருக்க...
மரணமோ அவனது செருப்பு வாரைவிட மிகச் சமீபத்தில் இருக்கிறது"

என்ற கவிதையைக் கூறுவார்கள்.

பிலால் (ரழி) அவர்களுக்கு காய்ச்சலின் சூடு சற்று குறைந்தால் வேதனையுடன் குரலை உயர்த்தி,

"இத்கிர், ஜலீல் எனும் புற்கள் என்னைச் சூழ்ந்திருக்க,
அது போன்றதொரு பள்ளத்தாக்கில் ஓர் இராப்பொழுதையேனும் நான் கழிப்பேனா?
ம்மஜின்னா' எனும் (சுனையின்) நீரை நான் அருந்துவேனா?
ஷாமா, தஃபீல் எனும் இரு மலைகள் எனக்குத் தென்படுமா?"

என்ற கவிதையைக் கூறுவார்கள்.

தொடர்ந்து ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: நான் நபி (ஸல்) அவர்களிடம் இச்செய்தியைக் கூறினேன். நபி (ஸல்) அவர்கள் "இறைவா! ஷைபா இப்னு ரபீஆ, உத்பா இப்னு ரபீஆ, உமையா இப்னு கலஃப் ஆகியோர் எங்கள் நாட்டிலிருந்து எங்களை (அப்புறப்படுத்தி) இந்த நோய்ப் பிரதேசத்திற்கு விரட்டியது போல், அவர்களை நீ உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்தி விடுவாயாக!" என்று பிரார்த்தனை செய்தார்கள். மேலும், "இறைவா! நாங்கள் மக்காவை நேசித்தது போல் அல்லது அதைவிட அதிகமாக மதீனாவை எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்கு! இறைவா! எங்களுடைய (அளவைகளான) ஸாவு, முத்து ஆகியவற்றில் (எங்கள் உணவில்) எங்களுக்கு நீ அருள் வளம் செய்! இவ்வூரை எங்களுக்கு ஆரோக்கியமானதாக ஆக்கு! இங்குள்ள காய்ச்சலை 'ஜுஹ்ஃபா' எனும் பகுதிக்கு மாற்றிவிடு!" என்று பிரார்த்தனை செய்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அல்லாஹ்! நபி (ஸல்) அவர்களின் இந்த துஆவை ஏற்றுக் கொண்டான். ஒரு நாள் கனவில் தலைவிரிக் கோலமான கருப்பு நிறப்பெண் மதீனாவிலிருந்து வெளியேறி ஜுஹ்ஃபா சென்றடைந்ததைப் பார்த்தார்கள். இது மதீனாவிலிருந்து அந்த நோய் ஜுஹ்ஃபாவை

நோக்கி வெளியேறிவிட்டது என்பதற்கான அறிவிப்பாக இருந்தது. அல்லாஹ்வின் அருளால் மதீனாவின் தட்பவெப்ப நிலையினால் சிரமப்பட்டுக் கொண்டிருந்த நபித்தோழர்கள் முற்றிலும் சுகமடைந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் நபித்துவத்திற்குப் பின் உள்ள வாழ்க்கையின் ஒரு பகுதி, அதாவது மக்கா வாழ்க்கை இத்துடன் முடிவடைந்தது. இதைத் தொடர்ந்து நபி (ஸல்) அவர்களின் மதீனா வாழ்க்கையை சுருக்கமாகப் பார்ப்போம். அதற்கு அல்லாஹ் அருள்புரிவானாக!

---

## மதீனா வாழ்க்கையில் அழைப்பு மற்றும் போரின் கட்டங்கள்

மதீனா வாழ்க்கையை மூன்று கால கட்டங்களாக பிரிக்கலாம்:

1) இஸ்லாமிய சமூகத்திற்கு அடித்தளம் அமைத்தல், இஸ்லாமிய அழைப்புப் பணியை உறுதிபடுத்துதல்.

இக்கால கட்டத்தில் மதீனாவிற்குள் பெரும் குழப்பங்களும் பிரச்சனைகளும் ஏற்பட்டன. மதீனாவிற்கு வெளியிலிருந்து முஸ்லிம்களை அழிப்பதற்காகவும் அழைப்புப் பணியை வேரறுப்பதற்காகவும் எதிரிகள் பெரும் போர்களை நடத்தினர். ஆனால், இக்காலகட்டம் ஹிஜ்ரி 6ஆம் ஆண்டு துல்கஅதாவில் நடந்த ஹுதைபிய்யா உடன்படிக்கையுடன் முடிவடைந்தது. அதற்குப் பிறகு அல்லாஹ் முஸ்லிம்களுக்கு வெற்றியையும், ஆதிக்கத்தையும் அருளினான்.

2) மிகப்பெரிய எதியுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ளுதல், அரசர்களை இஸ்லாமின் பக்கம் அழைத்தல், சதித்திட்டங்களை முறியடித்தல்.

இக்காலகட்டம் ஹிஜ்ரி 8 ஆம் ஆண்டு ரமழான் மாதம் புனித மக்கா வெற்றியுடன் முடிவுற்றது.

3) குழுக்களை வரவேற்றல், அல்லாஹ்வின் மார்க்கத்தில் மக்கள் கூட்டம் கூட்டமாக நுழைதல்.

இக்காலகட்டம் மக்கா வெற்றியிலிருந்து 11 ஆம் ஆண்டு ரபீவுல் அவ்வல் மாதத்தில் நபி (ஸல்) அவர்கள் மரணிக்கும் வரை தொடர்ந்தது.

### ஹிஜ்ரா சமயத்தில் மதீனாவில் வசித்தவர்களும், அவர்களின் நிலைமைகளும்

முஸ்லிம்கள் மக்காவிலிருந்து மதீனாவிற்கு ஹிஜ்ரா செய்தார்கள். இந்த ஹிஜ்ராவிற்குக் காரணம் மக்காவில் அவர்களுக்கு இழைக்கப்பட்ட இன்னல்களிருந்து தப்பித்துத் தங்களை விடுவித்துக் கொள்வது மட்டுமல்ல மாறாக, பாதுகாப்பான ஓர் ஊரில் புதிதொரு சமுதாயத்தை நிறுவுவதும் ஹிஜ்ராவின் நோக்கமாக இருந்தது. ஆகவே, ஹிஜ்ரா செய்ய ஆற்றல் பெற்ற ஒவ்வொரு முஸ்லிமும் ஹிஜ்ரா செய்து அந்தப் புதிய சமுதாயத்தைக் கட்டமைப்பதில் பங்கு கொள்ள வேண்டும், அந்த ஊரைப் பாதுகாப்பதற்கும் அதன்

தகுதியை உயர்த்துவதற்கும் முழு அளவில் முயற்சி செய்யவேண்டும் என்பது கட்டாயமாக இருந்தது.

அந்த சமூகத்தை நிறுவுவதிலும் அதை அமைப்பதிலும் நபி (ஸல்) அவர்களே முன்னோடியாகவும், தலைவராகவும், வழிகாட்டியாகவும் இருந்தார்கள். அனைத்து பொறுப்புகளுக்குரிய அதிகாரங்கள் முழுவதும் நபி (ஸல்) அவர்களிடமே இருந்தன. இதில் மற்ற எவருக்கும் எவ்வித மனக் கசப்பும் இருக்கவில்லை.

மதீனாவில் நபி (ஸல்) அவர்கள் சந்தித்த மக்கள் மூன்று வகையினராக இருந்தனர். இவர்கள் ஒவ்வொருவரின் நிலைமையும் பிறரின் நிலைமையிலிருந்து முற்றிலும் மாறுபட்டு இருந்தது. ஒரு வகையினரிடம் நபி (ஸல்) அவர்கள் மேற்கொள்ள வேண்டிய செயல்பாடுகள் மற்றொரு வகையினரிடம் மேற்கொள்ள வேண்டிய செயல்பாடுகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டு இருந்தன.

அம்மூன்று வகையினர்:

1) முஸ்லிம்கள் அதாவது, சிறப்பிற்குரிய நபித்தோழர்கள்.

2) மதீனாவின் பூர்வீக குடிகளில் உள்ள முஷ்ரிக்குகள். அதாவது, அந்நேரம்வரை இஸ்லாமை ஏற்றுக் கொள்ளாமல் இருந்த மதீனாவாசிகள்.

3) யூதர்கள்.

மக்காவில் நபித்தோழர்களுக்கு இருந்த நிலைமையும், இப்போது மதீனாவில் அவர்களுக்கு இருக்கும் நிலைமையும் முற்றிலும் மாறுபட்டவைகளாக இருந்தன. மக்காவில் முஸ்லிம்கள் இஸ்லாமின் மூலம் ஒருங்கிணைந்து ஒரே நோக்கமுடையவர்களாக இருந்தும் அவர்களால் ஒரு முழுமையான இஸ்லாமிய சமூகத்தைக் கட்டமைக்க முடியாத நிலையில் இருந்தார்கள். ஏனெனில், முஸ்லிம்கள் பல குடும்பங்களில் பிரிந்திருந்தனர். அடக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு கேவலப் படுத்தப்பட்டு பலவீனமானவர்களாக இருந்தார்கள். அவர்களுக்கு எவ்வித அதிகாரமும் இருக்கவில்லை. முஸ்லிம்களின் எதிரிகளோ, மக்காவில் முழு அதிகாரம் செலுத்தி வந்தனர். ஆகவேதான் மக்காவில் அருளப்பட்ட குர்ஆன் அத்தியாயங்களில் இஸ்லாமிய அடிப்படை விளக்கங்களும், ஒவ்வொரு தனி நபரும் மேற்கொள்ள வேண்டியக் கட்டளைகளும் குறிப்பாக கூறப்பட்டிருந்தன. மேலும் நன்மை, உபகாரம், நற்பண்புகள் ஆகியவற்றைக் கடைப்பிடிப்பதற்கு அதிகம் ஆர்வம் ஊட்டப்பட்டன. கெட்ட குணங்கள், இழி செயல்கள் பற்றி எச்சரிக்கப்பட்டன.

ஆனால், மதீனாவில் முஸ்லிம்கள் வசமே முழு உரிமையும், ஆதிக்கமும் இருந்தன. மாற்றார் யாரும் அவர்களை ஆதிக்கம் செலுத்த முடியாத அளவுக்கு வலுவாக, பெரும்பான்மையாக இருந்தனர். ஆகவே, இப்போது முஸ்லிம்கள் தங்கள் சமூகத்துக்குத் தேவையான சட்டங்களையும் அடிப்படைகளையும் கற்றுக்கொள்ள வேண்டிய நேரம் வந்துவிட்டது. பொருளாதாரம், வாழ்வியல், அரசியல், போர், சமாதானம், ஆகுமானவை, ஆகாதவை, வணக்க வழிபாடுகள் என்று சமூகத்துக்கு தேவையான அனைத்து அம்சங்களும் விரிவாக விளக்கப்பட வேண்டிய தக்க நேரம் இதுவாகவே இருந்தது.

ஆம்! பத்து ஆண்டுகளாக பல துன்பங்களையும் வேதனைகளையும் எதற்காக முஸ்லிம்கள் அனுபவித்து வந்தார்களோ, அந்த அழைப்புப் பணிக்கு வழிகாட்டியாக, ஏனைய மனித சமுதாயத்திலிருந்தும் அறியாமைக்கால சமூகத்திலிருந்தும் முற்றிலும் மாறுபட்ட ஒரு சிறந்த சமுதாயத்தை முஸ்லிம்கள் அமைக்க வேண்டிய காலம் இப்போது வந்துவிட்டது.

இதுபோன்ற சமுதாயத்தை அமைப்பது ஒரே நாளில் அல்லது ஒரே மாதத்தில் அல்லது ஒரே ஆண்டில் சாத்தியமல்ல மாறாக, சட்டம் அமைத்தல், ஒழுங்குபடுத்துதல், பயிற்சியளித்தல்,

கல்வி புகட்டுதல், சட்டங்களை செயல்படுத்துதல் என அனைத்தும் முழுமை பெறுவதற்கு ஒரு நீண்ட காலம் தேவைப்பட்டது. அல்லாஹ் இம்மார்க்கத்தை அமைப்பதற்கு முழுப் பொறுப்பாளியாக இருந்தான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அல்லாஹ்வின் புறத்திலிருந்து அவனது சட்டங்களைச் செயல்படுத்தினார்கள், அதன் பக்கம் வழிகாட்டினார்கள். முஸ்லிம்களைச் சீர்ப்படுத்தித் தூய்மைபடுத்தினார்கள்.

கல்வி அறிவில்லாத (அரபு) மக்களில் அவர்களில் உள்ள ஒருவரை அவன் (தன்னுடைய) தூதராக அனுப்பி வைத்தான். அவர்கள் இதற்கு முன்னர் பகிரங்கமான வழிகேட்டிலிருந்த போதிலும், அத்தூதர் அவர்களுக்கு அல்லாஹ்வுடைய வசனங்களை ஓதிக்காண்பித்து, அவர்களைப் பரிசுத்தமாக்கி வைத்து, அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக் கொடுக்கின்றார். (அல்குர்ஆன் 62:2)

நபித்தோழர்கள் தங்களது உள்ளங்களால் நபி (ஸல்) அவர்களின் கட்டளைகளை ஏற்றுக் கொண்டார்கள். குர்ஆனின் வசனங்கள் மூலம் தங்களுக்கு இடப்படும் சட்டங்களை முழுமையாக பின்பற்றியதுடன் அதன்மூலம் மனமகிழ்ச்சி அடைந்தார்கள்.

உண்மையான நம்பிக்கையாளர்கள் யாரென்றால், அல்லாஹ்வை (அவர்கள் முன்) நினைவு கூறப்பட்டால் அவர்களுடைய உள்ளங்கள் பயந்து நடுங்கிவிடும் அல்லாஹ்வுடைய வசனங்கள் அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கப்பட்டால் அவர்களுடைய நம்பிக்கை (மேன்மேலும்) அதிகக்கும். அவர்கள் தங்கள் இறைவனையே முற்றிலும் நம்பியிருப்பார்கள். (அல்குர்ஆன் 8:2)

இங்கு இதுபோன்ற விஷயங்களை ஆராய்வது நமது நோக்கல்ல. எனவே, நாம் இங்கு தேவையான அளவிற்கு மட்டும் கூறுகிறோம்.

இஸ்லாமியச் சமுதாயத்தை உருவாக்குவதுதான் இஸ்லாமிய அழைப்புப் பணி மற்றும் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் தூதுத்துவத்தின் அடிப்படை நோக்கமும் குறிக்கோளுமாகும். இதுதான் முஸ்லிம்களுக்காக நபி (ஸல்) அவர்கள் செய்த மிக மகத்தான பணியாகும். இது அவசரமாக செய்து முடிக்க வேண்டிய தற்காலிக பணியல்ல மாறாக, இது அடிப்படை பிரச்சனையாகும். இதை முடிப்பதற்குப் பல காலங்கள் தேவைப்படும். ஆனால், அங்கு உடனடியாக தீர்க்கப்பட வேண்டிய பல அவசர பிரச்சனைகளும் இருந்தன.

அதில் மிக முக்கியமானது அப்போதைய முஸ்லிம்களின் நிலைமை. அவர்கள் இரு வகையினராக இருந்தனர்.

ஒரு சாரார் தங்களது சொந்த பூமியில் சொந்த வீட்டில் சொத்து, சுகங்களுடன் இருந்தனர். இவர்களுக்கு ஒரு சராசரி மனிதனுக்குரிய கவலையைத் தவிர வேறு கவலை இருக்கவில்லை. இவர்கள்தான் மதீனாவாசிகளான அன்சாரிகள்! இந்த மதீனாவாசிகளுக்கிடையில் கடுமையான பகைமையும், சண்டையும் இருந்து வந்தது.

மற்றொரு சாரார் முஹாஜிர்கள் (நாடு துறந்தவர்கள்). அவர்களுக்குச் சொந்த நாடும் இல்லை சொந்த வீடும் இல்லை வாழ்வதற்குண்டான எந்த வாழ்வாதாரமும் அவர்களுக்கில்லை தங்களது உயிரைக் காப்பாற்றிக் கொண்டு மக்காவிலிருந்து மதீனாவிற்குத் தப்பி வந்தவர்கள். இவர்கள் எண்ணிக்கையில் குறைவாக இருக்கவில்லை. மாறாக, ஒவ்வொரு நாளும் இவர்களது எண்ணிக்கை கூடிக்கொண்டே இருந்தது. அல்லாஹ்வையும், ரஸூலையும் நம்பிக்கைக் கொண்ட ஒவ்வொரு வருக்கும் மக்காவை விட்டு மதீனாவில் குடியேற அனுமதிக்கப்பட்டிருந்ததால் ஒவ்வொரு நாளும் முஹாஜிர்களின் எண்ணிக்கை கூடிக்கொண்டே சென்றது. மதீனாவில் செல்வ வளங்களும் அதிகம் இல்லாததால் மதீனாவின் பொருளாதாரம் மிகுந்த பாதிப்படைந்தது.

இந்த சிரமமான நெருக்கடியான நேரத்தில் இஸ்லாமிற்கு விரோதமான சில சக்திகள் முஸ்லிம்களுக்குப் பொருளாதாரத் தடையை ஏற்படுத்தின. இதனால் மதீனாவிற்கு இறக்குமதியாகும் பொருட்களும் வருவாய்களும் குறைந்தன. நெருக்கடி மிகுந்த சிரமமான சூழ்நிலைகள் உருவாயின.

இரண்டாவது வகையினர், மதீனாவின் பூர்வீகக் குடிமக்களில் உள்ள முஷ்ரிக்குகள்! (இணைவைப்பவர்கள்). இவர்களிடம் முஸ்லிம்களை ஆதிக்கம் செலுத்துவதற்கான எந்த அதிகாரமும் இருக்கவில்லை. அவர்களது உள்ளங்களில் இஸ்லாமைப் பற்றி பல சந்தேகங்கள் இருந்தன. தங்களது மூதாதையர்களின் மதத்தை விட்டுவிடுவது தங்களுக்கு உகந்ததா? என்று யோசித்துக் கொண்டிருந்தனர். ஆனால், இஸ்லாமிற்கும் முஸ்லிம்களுக்கும் எதிராக எந்தவிதமான விரோதத்தையும், குரோதத்தையும், சூழ்ச்சியையும் தங்களது உள்ளங்களில் மறைத்திருக்கவில்லை. சில காலங்கள்தான் இவ்வாறு கழிந்திருக்கும். அதற்குள் இவர்களும் இஸ்லாமைத் தழுவி தங்களது வழிபாடுகளை அல்லாஹ் ஒருவனுக்கே ஆக்கிக் கொண்டார்கள்.

இவர்களில் சிலர் மட்டும் நபி (ஸல்) அவர்களுக்கும், முஸ்லிம்களுக்கும் எதிராக விரோதம் கொண்டிருந்தனர். ஆனால், அவர்களால் முஸ்லிம்களை எதிர்க்கும் அளவிற்கு சக்தி இருக்கவில்லை. சூழ்நிலைகளைக் கருதி முஸ்லிம்கள் மீது தங்களுக்கு அன்பு இருப்பதாக காட்டிக் கொண்டனர். இவர்களில் மிக முக்கியமானவன் அப்துல்லாஹ் இப்னு உபை என்பவனாவான். “புஆஸ்’ என்ற யுத்தம் நடந்ததற்குப் பின் அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரண்டு கிளையினரும் சேர்ந்து தங்களுக்கு ஒரு தலைவரை நியமித்துக் கொள்ள ஆலோசனை செய்தனர். அதன்படி அப்துல்லாஹ் இப்னு உபைய்யை தங்களது தலைவராக ஆக்கலாம் என்று முடிவு செய்திருந்த சமயத்தில், நபி (ஸல்) மதீனாவிற்கு வந்துவிட்டதால் மதீனாவாசிகள் இவனைக் கைவிட்டு நபி (ஸல்) அவர்களின் பக்கம் திரும்பிவிட்டனர்.

எனவே, நபி (ஸல்) அவர்கள்தான் தனது தலைமைத்துவத்தை பறித்துக் கொண்டார் என்று அவர்களின் மீது மிகவும் கோபமாக இருந்தான். இருந்தாலும் சூழ்நிலைகளைக் கருதியும் எஞ்சியிருக்கும் கண்ணியத்தையும் இழந்துவிடுவோம் என்ற பயத்திலும் பத்ர் போருக்குப் பின்பு, தான் இஸ்லாமை ஏற்றுக் கொண்டதாக அறிமுகப்படுத்தினான்.

ஆனால், உள்ளத்தில் நிராகரிப்பையே மறைத்து வைத்திருந்தான். நபி (ஸல்) அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் எதிராக சூழ்ச்சி செய்வதற்குக் கிடைக்கும் சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொண்டு, அவர்களுக்குத் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தான். இவன் தலைவனானால் தங்களுக்குப் பதவிகள் கிடைக்கலாம் என்று நப்பாசை கொண்டிருந்த இவனது தோழர்களும் இவனின் தீய திட்டங்கள் நிறைவேற இவனுக்கு உறுதுணையாக நின்றனர். சில நேரங்களில் சில வாலிபர்களையும், சில அப்பாவி முஸ்லிம்களையும் தங்களது தீய திட்டத்தை நிறைவேற்றுவதற்காக யாரும் அறிந்து கொள்ளாத வகையில் பயன்படுத்திக் கொண்டனர்.

மூன்றாம் வகையினர் யூதர்கள். உண்மையில் இவர்கள் இதற்கு முன் நாம் கூறியவாறு அஷ்வர் மற்றும் ரோமர்கள் காலத்தில் தங்கள் மீது இழைக்கப்பட்ட கொடுமைகளால் ஹிஜாஸில் குடியேறினர். இவர்கள் இப்ரானி இனத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால், அரபு பிரதேசத்திற்கு வந்ததால் தங்களது உடை, மொழி, கலாச்சாரத்தை மாற்றிக் கொண்டார்கள். தங்களது பெயர்களையும், தங்களது குலத்தின் பெயர்களையும் அரபியப் பெயர்களைப் போன்று மாற்றிக் கொண்டனர். தங்களுக்கும் அரபியர்களுக்கும் இடையில் திருமண உறவுகளையும் ஏற்படுத்திக் கொண்டனர். ஆனால், தங்களது இனவெறியை மட்டும் தக்க வைத்துக் கொண்டனர். முழுமையாக அரபியர்களுடன் ஒன்றிவிடவில்லை. தாங்கள் இஸ்ரவேலர்கள், யூதர்கள் என்று பெருமை பேசிக் கொண்டிருந்தனர். இதனால் அரபியர்களை மிகக் கேவலமாகக் கருதினர். அரபியர்களின் சொத்துகள் தங்களுக்கு

ஆகுமானது என்றும், தாங்கள் நாடியபடி அவற்றை அனுபவித்துக் கொள்ளலாம் என்றும் கருதினர்.

(நபியே!) வேதத்தையுடையவர்களில் சிலர் இருக்கின்றனர். அவர்களிடம் நீங்கள் ஒரு (பொற்) குவியலையே நம்பி ஒப்படைத்தபோதிலும் (எந்தவித குறைவுமின்றி அதை) உங்களிடம் திரும்ப செலுத்தி விடுவார்கள். அவர்களில் வேறு சிலரும் இருக்கின்றனர். அவர்களிடம் நீங்கள் ஓர் அற்ப நாணயத்தையே நம்பி ஒப்படைத்தாலும் அதற்காக நீங்கள் (வம்பு செய்து) அவர்கள் (தலை) மேல் நிற்காத வரை அதனைத் திரும்பக் கொடுக்க மாட்டார்கள். இதன் காரணம்: (தங்களையல்லாத) ''பாமரர் விஷயத்தில் (நாம் என்ன கொடுமை செய்த போதிலும் அதற்காக) நம்மை குற்றம் பிடிக்க வழியில்லை'' என்று அவர்கள் (பகிரங்கமாகக்) கூறுவதுதான். ஆனால் அவர்கள் அறிந்துகொண்டே (தங்களைக் குற்றம் பிடிக்கமாட்டான் என்று) அல்லாஹ்வின் மீது பொய் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 3:75)

யூதர்கள் தங்களது மார்க்கத்தைப் பரப்ப வேண்டும் என்பதில் தீவிரம் காட்டவில்லை. மாறாக, ஜோசியம் பார்ப்பது, சூனியம் செய்வது, மந்திரிப்பது, பஞ்சாங்கம் பார்ப்பது போன்றவற்றையே தங்களது குலத்தொழிலாகவும் மதச் சடங்காகவும் செய்தனர். இந்தச் செயல்களின் மூலம் தாங்களே கல்விமான்கள், ஆன்மீகத் தலைவர்கள், சிறப்பிற்குரியவர்கள் என்று கருதினர்.

பொருளீட்டும் வழிகளில் மிகுந்த திறமை பெற்றவர்களாக இருந்தனர். இவர்கள் தானியங்கள், பேரீத்தங்கனி, மது வகைகள், துணிமணிகள் என அனைத்து வியாபாரங்களையும் தங்களது ஆதிக்கத்தில் வைத்திருந்தனர். ஆடைகளையும், வித்துக்களையும், மது வகைகளையும் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து, மதீனாவிலிருந்து பேரீத்தம் பழங்களை ஏற்றுமதி செய்தனர். மேலும் பல தொழில்களும், வியாபாரங்களும் அவர்கள் கைவசம் இருந்தன.

பொதுவாக அரபியர்கள் மூலம் பெரும் இலாபங்களை அடைந்தனர். வட்டி அவர்களின் குலத் தொழிலாக இருந்தது. கவிஞர்கள் தங்களைப் புகழ வேண்டும் என்பதற்காகவும், மக்களிடம் பெயர் பெற வேண்டும் என்பதற்காகவும் பெரும் கடன்களை வாரி வழங்கினர். இதற்குப் பகரமாக அரபுத் தலைவர்களின் தோட்டங்களையும், விவசாய நிலங்களையும் அடைமானமாக வைத்துக் கொண்டனர். பின்பு, அரபுத் தலைவர்களால் அந்தக் கடன்களை அடைக்க முடியாமல் போனபோது அவர்களே அந்தத் தோட்டங்களுக்கும், நிலங்களுக்கும் உரிமையாளர்களாகி விட்டனர்.

யூதர்கள் சதித் திட்டம் தீட்டுவதிலும், அரபுகளின் ஒற்றுமையை குலைப்பதிலும், குழப்பங்களை உண்டு பண்ணுவதிலும் தீவிரம் காட்டினர். தங்களைச் சுற்றியுள்ள அரபு கோத்திரங்களுக் கிடையில் அவர்களால் புரிந்துகொள்ள முடியாத வகையில் சூழ்ச்சிகளைச் செய்து, சண்டைகளையும் போர்களையும் தூண்டி விட்டனர். இவர்களின் இந்தச் சதியால் அரபியர்களுக்கு மத்தியில் எப்போதும் போர் நடந்துகொண்டே இருந்தது. சில சமயம் போர் அணையும் நிலை ஏற்பட்டால் அந்த யூதர்களின் விரல்கள் மீண்டும் புதிதாகப் போரின் நெருப்பை தூண்டுவதற்கு அசையத் தொடங்கும். போர் சூடுபிடித்துக் கொண்டால் ஓர் ஓரத்தில் உட்கார்ந்துக் கொண்டு அந்த அப்பாவி அரபியர்களுக்கு ஏற்படும் அழிவையும், நாசத்தையும் பார்த்து மகிழ்ச்சி அடைவார்கள். போருக்குத் தேவையான பொருளாதார வசதி குறைந்து அரபியர்கள் போரை நிறுத்திவிடக்கூடாது என்பதற்காக அவர்களுக்கு பெரிய அளவில் கடன் கொடுப்பார்கள். இதுபோன்ற சூழ்ச்சிகளால் யூதர்கள் இரண்டு விதமான பயன்களை அடைந்தனர்.

1) யூதர்கள் தங்களின் தனித்தன்மையைப் பாதுகாத்துக் கொண்டனர்.

2) வட்டியைப் பரவலாக்கி தங்களின் பொருளாதாரத்தை வளப்படுத்தினர்.

மதீனாவில் யூதர்களின் மூன்று கோத்திரத்தினர் இருந்தனர்.

1) கைனுகாஃ கோத்திரத்தினர்: இவர்கள் கஸ்ரஜ் கிளையினரின் நண்பர்கள். இவர்களது வீடுகள் மதீனாவிற்குள் இருந்தன.

2) நளீர் கோத்திரத்தினர்: இவர்களும் கஸ்ரஜ்களுக்கு நண்பர்களாக இருந்தனர். இவர்களது வீடுகள் மதீனாவின் சுற்றுப்புறங்களில் இருந்தன.

3) குறைளா கோத்திரத்தினர்: இவர்கள் அவ்ஸ் கிளையினரின் நண்பர்கள். இவர்களது வீடுகள் மதீனாவின் சுற்றுப்புறங்களில் இருந்தன.

இந்த யூதர்கள்தான் அவ்ஸ், கஸ்ரஜ் கிளையினருக்கிடையில் போரை மூட்டிக் கொண்டிருந்தனர். "புஆஸ்' யுத்தத்தில் இந்த யூதர்களும் கலந்து கொண்டனர். அதாவது ஒவ்வொரு யூதக் கோத்திரத்தினரும் அவ்ஸ், கஸ்ரஜ்களில் தங்களது நண்பர்களுக்கு உதவ போரில் கலந்து கொண்டனர்.

நபி (ஸல்) அவர்கள் தங்களது இனத்தில் அனுப்பப்படவில்லை என்பதால் யூதர்கள் இஸ்லாமின் மீது கடும் கோபம் கொண்டிருந்தனர். இவர்களது இனவெறி இவர்களது அறிவையும், சிந்தனையையும் மழுங்கச் செய்தது. எனவே, அரபியர்களில் இறைத்தூதர் அனுப்பப்பட்டதை அவர்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. ஆனால், இஸ்லாமிய அழைப்புப்பணி இனவெறிகளுக்கும், அற்ப உணர்வுகளுக்கும் அப்பாற்பட்டதாகும். இஸ்லாமிய அழைப்புப்பணி என்பது ஒரு சீர்திருத்தமும், தூய்மையும், ஒழுக்கமும் நிறைந்த பணியாகும். இப்பணி பல இனத்தவர்களின் உள்ளங்களுக்குள் ஒற்றுமையை ஏற்படுத்துகிறது. விரோதம் மற்றும் கோபத்தின் நெருப்பை அணைக்கிறது. எல்லா நிலைகளிலும், எல்லா செயல்களிலும் நம்பகத் தன்மையை கடைப்பிடிக்க வேண்டும் ஹலாலான" தூய்மையானதையே உண்ண வேண்டும் என்று வலியுறுத்துகிறது. எனவே, யூதர்கள் சிந்திக்கத் தொடங்கினர்.

அரபியர்கள் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் அவர்களுக்கு மத்தியில் ஒற்றுமை ஏற்பட்டு விடும். தங்களது சதித்திட்டங்களிலிருந்து தப்பித்துக் கொள்வார்கள். தங்களது வியாபாரங்கள் நலிந்துவிடும். தங்களின் பொருளாதாரத்தின் மூலதனமாகிய வட்டித் தொழிலை இழந்து விடுவோம் என்று யோசித்தனர். மேலும், இந்த அரபியர்களிடையே விழிப்புணர்வு ஏற்பட்டு விட்டால் வட்டியின் மூலம் அவர்களிடமிருந்து நாம் அபகரித்த சொத்துகளையும், தோட்டங்களையும், நிலங்களையும் மீட்டுக் கொள்வார்கள் என்று அஞ்சினர்.

இதைப் பற்றி ஒரு சம்பவத்தை உம்முல் முஃமினீன் ஸஃபியா (ரழி) அறிவிக்கிறார்கள்:

ஸஃபியா (ரழி) கூறுகிறார்கள்: நான் எனது தந்தைக்கும் தந்தையின் சகோதரருக்கும் பிரியமான பிள்ளையாக இருந்தேன். அவர்களின் மற்ற பிள்ளைகளுடன் நான் இருந்தால் அவர்கள் என்னையே தூக்கிக் கொஞ்சுவார்கள். நபி (ஸல்) மதீனாவிற்கு வந்து குபாவில் அம்ர் இப்னு அவ்ஃப் கிளையாரின் வீட்டில் தங்கினார்கள். அப்போது அதிகாலையிலேயே எனது தந்தை ஹை இப்னு அக்தபும், தந்தையின் சகோதரர் அபூ யாஸிர் இப்னு அக்தபும் நபி (ஸல்) அவர்களிடம் சென்று சூரியன் மறையும் வரை பேசிக் கொண்டிருந்தனர்.

அவர்கள் வீட்டிற்குத் திரும்பும்பொழுது முகம் வாடியவர்களாக, களைத்தவர்களாக, சோர்ந்தவர்களாக வந்தார்கள். எப்போதும் போல் உற்சாகத்துடன் நான் அவர்களிடம் ஓடி வந்தேன். ஆனால், அவர்களுக்கு ஏற்பட்டிருந்த கவலையினால் அவர்களில் எவரும் என்னை திரும்பிப் பார்க்கவில்லை.

சிறிய தந்தை:"இவர் அவர்தானா?" (அதாவது நாம் இப்போது சந்தித்தவர் நமக்கு தவ்றாத்தில் இறுதித்தூதர் என்று அறிவிக்கப்பட்டவர்தானா?)

எனது தந்தை:"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஆம்!"

சிறிய தந்தை:"அவரை உமக்கு நன்றாகத் தெரியுமா? உன்னால் அவர்தான் என்று உறுதியாகக் கூறமுடியுமா?"

எனது தந்தை:"ஆம்!"

சிறிய தந்தை:"அவரைப் பற்றி உனது உள்ளத்தில் என்ன இருக்கிறது?"

எனது தந்தை:"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் உயிரோடு இருக்கும் காலம்வரை அவரிடம் பகைமைக் கொள்வேன்." இவ்வாறு ஸஃபிய்யா (ரழி) யஹூதியாக இருந்தத் தனது தந்தையின் மன நிலையைப் பற்றி விவரிக்கிறார்கள். (இப்னு ஹிஷாம்)

இதற்கு அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரழி) இஸ்லாமைத் தழுவியபோது நடந்த நிகழ்ச்சியும் சான்றாக உள்ளது. அப்துல்லாஹ் இப்னு ஸலாம் பெரிய யூதப் பாதிரியாராக இருந்தார். நபி (ஸல்) மதீனாவில் நஜ்ஜார் கிளையினரிடம் வந்து தங்கியிருக்கிறார்கள் என்ற செய்தியை அறிந்தவுடன், நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து அவர்களிடம் பல கேள்விகளைக் கேட்டார். அந்தக் கேள்விகளின் பதிலை ஒரு நபியைத் தவிர வேறு யாரும் அறிய முடியாது. நபி (ஸல்) அவர்கள் அதற்குரிய பதில்களைச் சரியாகக் கூறியதைக் கேட்ட அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரழி) அதே இடத்தில், அதே சமயத்தில் நபி (ஸல்) அவர்களை ஏற்று இஸ்லாமைத் தழுவினார். பின்பு அவர் நபி (ஸல்) அவர்களிடம் "யூதர்கள், முன்னுக்குப்பின் முரணாக பேசக்கூடியவர்கள். நான் இஸ்லாமைத் தழுவியது அவர்களுக்குத் தெரிந்தால் என்னைப் பற்றி அவதூறு கூறுவார்கள். எனவே, நான் மறைந்து கொள்கிறேன், என்னைப் பற்றி அவர்களிடம் நீங்கள் விசாரியுங்கள்" என்றார்.

நபி (ஸல்) யூதர்களை வரவழைத்தார்கள். அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரழி) அறைக்குள் மறைந்து கொண்டார். யூதர்கள் வந்தவுடன் நபி (ஸல்) அவர்கள் "அப்துல்லாஹ் இப்னு ஸலாம் எத்தகைய மனிதர்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "எங்களில் மிக அறிந்த மார்க்க மேதை. மேலும், எங்களில் மிக அறிந்த மார்க்க மேதையின் மகனாவார். அவர் எங்களில் மிகச் சிறந்தவர் எங்களில் மிகச் சிறந்தவன் மகனாவார். (அவர் எங்களின் தலைவர், எங்களின் தலைவன் மகனாவார். அவர் எங்களில் மிக மேலானவர் மிக மேலானவன் மகனாவார். அவர் எங்களில் மிக உயர்ந்தவர் மிக உயர்ந்தவன் மகனாவார்)" என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) "அப்துல்லாஹ் இப்னு ஸலாம் முஸ்லிமாகிவிட்டால் நீங்கள் அவரைப் பற்றி என்ன சொல்வீர்கள்" என்றார்கள். அதற்கு யூதர்கள் "அல்லாஹ் அதிலிருந்து அவரைப் பாதுகாக்க வேண்டும்" என்று இரண்டு அல்லது மூன்று முறைக் கூறினார்கள். அப்போது அறையிலிருந்து வெளியேறி "அல்லாஹ்வைத் தவிர இறைவன் இல்லை முஹம்மது அல்லாஹ்வின் தூதர் என நான் சாட்சி கூறுகிறேன்' என்று அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரழி) கூறினார். இதனைக் கேட்ட யூதர்கள் "இவன் எங்களில் மிகக் கெட்டவன், மேலும், கெட்டவனின் மகன்" என்றனர். மற்றொரு அறிவிப்பில் வருவதாவது: அறையில் இருந்து வெளியேறிய அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரழி) யூதர்களைப் பார்த்து "ஓ! யூத சமூகமே! வணக்கத்திற்குரிய ஏக இறைவனின் மீது சத்தியமாக! நிச்சயமாக அவர் அல்லாஹ்வின் தூதர் என்று உங்களுக்கு நன்கு தெரியும். அவர் உண்மையான மார்க்கத்தையே உங்களிடம் கொண்டு வந்திருக்கிறார் என்பதும் உங்களுக்குத் தெரியும்" என்று கூறினார். அதற்கு அந்த யூதர்கள் "இல்லை நீ பொய் கூறுகிறாய்" என்று கூறினர். (ஸஹீஹுல் புகாரி) இது நபி (ஸல்) மதீனாவில் நுழைந்த முதல் நாளிலேயே யூதர்களிடம் பார்த்த முதல் அனுபவமாகும். இதுதான் நபி (ஸல்)

அவர்கள் மதீனாவிற்கு வந்த நேரத்தில் அவர்கள் சந்தித்த உள்நாட்டு விவகாரங்களும், நிலைமைகளும் ஆகும்.

முஸ்லிம்களின் வெளி விவகார பிரச்சனைகளாவன: மதீனாவைச் சுற்றி குறைஷிகளின் மதத்தை பின்பற்றுபவர்கள்தான் இருந்தனர். குறைஷிகள்தான் இஸ்லாமுக்கும், முஸ்லிம்களுக்கும் மிகப்பெரிய எதிரிகளாக இருந்தனர். முஸ்லிம்கள் மக்கா குறைஷிகளின் ஆதிக்கத்திற்குக் கீழ் இருந்தபோது ஏறக்குறைய பத்து ஆண்டுகள் முஸ்லிம்களை மிகக் கடுமையாக துன்புறுத்தியும் அச்சுறுத்தியும் வந்தனர். மிகுந்த நெருக்கடியையும், தடைகளையும் ஏற்படுத்தினர். மனரீதியான போராட்டத்தை அவர்கள் மீது திணித்தனர். பல பழிகளையும் பொய் பிரச்சாரங்களையும் முஸ்லிம்களுக்கு எதிராகச் செய்தனர். முஸ்லிம்கள் மதீனாவிற்கு வந்தவுடன் அவர்களின் சொத்துகளையும், வீடுகளையும், நிலங்களையும் பறிமுதல் செய்தனர். ஹிஜ்ரா சென்றுவிட்ட முஸ்லிம்களின் குடும்பத்தினரை மதீனாவிற்குச் செல்லவிடாமல் தடுத்தனர். மற்றும் பலரை வேதனை செய்தனர். இதனால் இஸ்லாமிய அழைப்புப் பணியை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிடலாம் என்று திட்டமிட்டனர். அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்குத் தேவையான அனைத்து முயற்சியையும் குறைவின்றி செய்தனர். ஆனால், முஸ்லிம்கள் தங்களைவிட்டு தப்பித்து 500 கி.மீ. தொலைவிலுள்ள ஒரு வளமிக்க பகுதிக்குச் சென்றுவிட்டனர் என்றவுடன் அதை சகித்துக்கொள்ள முடியாத குறைஷிகள், முஸ்லிம்களுக்கு எதிராக தங்களின் அரசியல் மற்றும் இராணுவ திட்டங்களைத் தீட்டினர்.

அதன் ஒரு கட்டமாக, குறைஷிகள் தாங்கள் புனிதமிக்க எல்லையில் குடியிருப்பவர்கள் கஅபாவின் அண்டை வீட்டார்கள் கஅபாவின் நிர்வாகிகள் என்பதால் அரபியர்களுக்கு மத்தியில் தங்களுக்கு இருந்த உலக ரீதியான, மேலும், மார்க்க ரீதியான தலைமைத்துவத்தைப் பயன்படுத்தி முழு அரபுலகில் உள்ள அனைத்து அரபியர்களையும் மதீனாவாசிகளுக்கு எதிராகத் தூண்டி விட்டனர். இதனால் மதீனா ஆபத்துகளால் சூழப்பட்டது. அவர்கள் ஏற்படுத்திய பொருளாதார தடைகளால் மதீனாவின் வருமானங்களும், இறக்குமதிகளும் குறைந்தன. ஒவ்வொரு நாளும் மதீனாவில் குடியேறும் முஹாஜிர்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே சென்றது. இந்நிலையில் இணைவைக்கும் மக்காவாசிகளுடன் அவர்களைப் பின்பற்றுபவர்களும் சேர்ந்து கொண்டு இப்புதிய ஊரில் குடியேறியுள்ள முஸ்லிம்கள் மீது தாக்குதல் தொடுக்கும் அபாயமும் உருவானது.

மக்காவின் வம்பர்கள் முஸ்லிம்களின் சொத்துகளை பறிமுதல் செய்தவாறே முஸ்லிம்களும் அவர்களின் சொத்துகளை பறிமுதல் செய்வது அந்த நிராகரிப்பவர்கள் முஸ்லிம்களின் மீது பல வேதனைகளைக் கட்டவிழ்த்து விட்டவாறே முஸ்லிம்களும் அந்த நிராகரிப்பவர்களின் மீது வேதனைகளை கட்டவிழ்த்து விடுவது நிராகரிப்பவர்கள் முஸ்லிம்களின் வாழ்க்கையில் பல தடைகளை ஏற்படுத்தியவாறே அவர்களின் வாழ்க்கையிலும் பல தடைகளை ஏற்படுத்துவது, சுருங்கக்கூறின் எக்காலத்திலும் இஸ்லாமையோ முஸ்லிம்களையோ நிராகரிப்பவர்கள் அழிக்க முடியாத அளவுக்கு அவர்களுக்குத் தக்க பதிலடி கொடுப்பது முஸ்லிம்களின் மீது கடமையாக இருந்தது.

மதீனா வந்ததற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் சந்தித்த வெளிவிவகார பிரச்சனைகள் இவைதான். இந்த அனைத்துப் பிரச்னைகளையும் முழுமையாக வெற்றி கொள்ள இவற்றை மிக நுட்பமான முறையில் கையாள்வது நபி (ஸல்) அவர்களுக்கு மிக அவசியமாக இருந்தது.

அல்லாஹ்வின் அருளாலும், உதவியாலும் நபி (ஸல்) அவர்கள் எல்லாவற்றிற்கும் அழகிய முறையில் தீர்வு கண்டார்கள். ஒவ்வொரு கூட்டத்தினருக்கும் அவரவர்களுக்குத் தகுதியானதையே செய்தார்கள். அது அன்பு காட்டுவதோ தண்டிப்பதோ எதுவாயினும்

சரியே. மேலும், மனிதர்களின் உள்ளங்களைத் தூய்மைப்படுத்தி அல்லாஹ்வின் வேதத்தையும், ஞானங்களையும் கற்றுக் கொடுப்பதற்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்தார்கள். கண்டிப்புக் காட்டுவதை விட அன்புகாட்டி கருணையுடன் மார்க்கத்தை கற்றுக்கொடுத்து உள்ளங்களை தூய்மைபடுத்துவதற்கே மிகுந்த முக்கியத்துவம் அளித்து வந்தார்கள். இதனால் சில ஆண்டுகளுக்குள்ளாக அனைத்து அதிகாரங்களும் இஸ்லாமுக்கும், முஸ்லிம்களுக்கும் கிட்டின. இதன் விவரங்களை பின்வரும் பக்கங்களில் மிகத் தெளிவாகக் காணலாம்.

## முதல் கட்டம் - புதிய சமூகம் அமைத்தல்

நபி (ஸல்) மதீனாவில் நஜ்ஜார் கிளையினரின் இல்லத்திற்கு ஹிஜ்ரி 1ல் ரபிய்யுல் அவ்வல் பிறை 12, வெள்ளிக்கிழமை, கி.பி. 622 செப்டம்பர் 27ல் வந்தார்கள். முதலாவதாக அபூ அய்யூப் அன்சாரியின் வீட்டுக்கருகிலுள்ள இடத்தில் இறங்கி "இன்ஷா அல்லாஹ்! இங்குதான் தங்குமிடம் அமையும்" என்று கூறிவிட்டு, பின்பு அபூ அய்யூப் அன்சாரியின் வீட்டுக்குச் சென்றார்கள்.

### அல்மஸ்ஜித் அந்நபவி

இதற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் மதீனாவில் எடுத்துக் கொண்ட முதல் முயற்சி பள்ளி வாசல் ஒன்றை அமைப்பதாகும். இந்த பள்ளி வாசலைத்தான் 'அல்மஸ்ஜித் அந்நபவி' (நபியவர்கள் கட்டிய பள்ளிவாசல்) என்று சிறப்பாக சொல்லப்படும். தங்களது ஒட்டகம் முதன் முதலாக மண்டியிட்ட இடத்தையே நபி (ஸல்) அவர்கள் பள்ளி கட்டுவதற்காகத் தேர்வு செய்தார்கள். அந்த நிலம் இரண்டு அனாதைகளுக்குச் சொந்தமாக இருந்தது. அவர்களிடமிருந்து நபி (ஸல்) அவர்கள் அதை விலைக்கு வாங்கி கட்டிடப் பணியைத் தொடங்கி, அப்பணியில் தாங்களும் பங்கெடுக்கும் முகமாக கல், மண் சுமந்தார்கள். வேலையை உற்சாகப்படுத்தும் வகையில்,

"இறைவா! மறுமை வாழ்வைத் தவிர வேறு வாழ்வு இல்லை.

அன்சாரிகள், முஹாஜிர்களுக்கு நீ மன்னிப்பளி!

இந்த சுமை கைபருடைய சுமையல்ல!

எங்கள் இறைவன் மீது ஆணையாக! இது நன்மை பயக்கக் கூடியது தூய்மையானது."

என்று கவியாக படிப்பார்கள்.

நபி (ஸல்) அவர்கள் பணியின்போது ஆர்வமூட்டும் சொற்களைக் கூறி வந்தது தோழர்களுக்கு வேலையில் மிகுந்த உற்சாகத்தை அளித்தது. தோழர்களும் உற்சாகம் மிகுந்து,

நபி பணி செய்ய, நாம் அமர்ந்தால்

அது வழிகெட்ட செயலல்லவோ!

என்று கவிபாடிக் கொண்டிருந்தார்கள்.

அந்த இடத்தில் இணைவைப்போரின் கப்ருகள் (அடக்கஸ்தலங்கள்) சில இருந்தன. மற்றும் பல இடிந்த கட்டடங்களும், சில பேரீத்த மரங்களும், 'கர்கத்' என்ற மரங்களும் இருந்தன. நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்கிணங்க கப்ருகள் தோண்டி எடுக்கப்பட்டு, மற்றொரு இடத்தில் புதைக்கப்பட்டன. இடிபாடுகள் அகற்றப்பட்டு தரை சமமாக்கப்பட்டது. மரங்கள்

அனைத்தும் வெட்டி அப்புறப்படுத்தப்பட்டன. அந்த மரங்கள் கிப்லா'' திசையில் வரிசையாக நட்டு வைக்கப்பட்டன. அப்போது கிப்லா பைத்துல் முகத்தஸை'' நோக்கியிருந்தது. பள்ளியுடைய வாயிலின் இரு ஓரங்களும் கற்களால் ஆக்கப்பட்டன. அதனுடைய சுவர்கள் கல்லாலும், மண்ணாலும் கட்டப்பட்டன. பேரீத்த மரத்தின் கீற்றுகளால் முகடுகள் அமைக்கப்பட்டன. தூண்கள் பேரீத்த மரங்களால் செய்யப்பட்டன. தரையில் மணலை விரிப்பாக ஆக்கப்பட்டது. பள்ளிக்கு மூன்று வாயில்கள் அமைக்கப்பட்டன. பள்ளியின் நீளம் கிப்லாவிலிருந்து கடைசி வரை நூறு முழங்கள் ஆகும். பள்ளியின் இரண்டு புறங்களும் அதே அளவு அல்லது அதைவிட சற்று குறைவாக இருந்தன. பள்ளியின் அஸ்திவாரம் மூன்று முழத்தில் போடப்பட்டது.

பள்ளியின் ஒரு பக்கத்தில் கல்லாலும், மண்ணாலும் சில அறைகள் கட்டப்பட்டன. பேரீத்த மரங்களாலும், அதன் மட்டைகளாலும் அந்த அறைகளின் முகடுகள் அமைக்கப்பட்டன. இவை நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்களுக்கென கட்டப்பட்ட அறைகள். இந்த அறைகள் கட்டி முடிக்கப்பட்டபின் நபி (ஸல்) அவர்கள் அபூ அய்யூப் அன்சாரி (ரழி) அவர்களின் வீட்டிலிருந்து அந்த அறைகளுக்கு மாறிவிட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அந்த பள்ளிவாசல் தொழுகையை நிறைவேற்றுதற்கு உண்டான இடம் மட்டுமல்ல மாறாக, முஸ்லிம்கள் மார்க்கக் கல்வியையும், அதன் போதனைகளையும் கற்றுத் தேர்வதற்குரிய ஒரு பல்கலைக்கழகமாகவும் பள்ளிவாசல் விளங்கியது. சண்டையிட்டு பிளவு பட்டு விரோதம் கொண்டுள்ள பல கோத்திரத்தினர் தங்களது விரோதத்தையும், பகைமையையும் மறந்து அன்புடனும், நேசத்துடனும் ஒன்று சேர்ந்து பழக, தோழமை கொள்ள, நட்புக் கொள்வதற்கேற்ற சங்கமாகவும் அது விளங்கியது. முஸ்லிம்களின் அனைத்துக் காரியங்களையும் நிர்வகிப்பதற்குரிய, செயல்திட்டங்களை அமுல்படுத்துவதற்குரிய மையமாகவும் அது விளங்கியது. ஆலோசனை சபைகளை நடத்துவதற்குரிய மன்றமாகவும் அது விளங்கியது.

அது மட்டுமல்ல வீடு, சொத்து, குடும்பம், பிள்ளைகள் என்று யாரும் இல்லாத ஏழை நபித்தோழர்களில் பலருக்கு தங்கும் விடுதியாகவும் அப்பள்ளி இருந்தது.

ஹிஜ்ராவின் அந்த தொடக்க காலங்களில்தான் இன்று உலகெங்கும் ரீங்காரமிடும் உயர்ந்த, கண்ணியமிக்க அந்த ராகம் 'அதான்' (பாங்கு) மார்க்கமாக்கப்பட்டது. இந்த ஒலி உலகத்தின் மூலை, முடுக்குகளை உலுக்கியது. ஒவ்வொரு நாளும் ஐந்து முறை ''லாயிலாஹஇல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் - அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அல்லாஹ்வே உயர்ந்தவன், முஹம்மது ரஸூலுல்லாஹ்வின் மார்க்கத்தைத் தவிர வேறு எந்த மார்க்கமும் இவ்வுலகத்தில் உயர்ந்தது இல்லை'' என்பதை பறைசாற்றுகிறது. இந்த அழைப்பு முறையை சிறந்த நபித்தோழர்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு ஜைது இப்னு அப்து ரப்பி (ரழி) என்பவர் கனவில் பார்த்து நபி (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கவே அதை நபி (ஸல்) அவர்களும் ஏற்றுக் கொண்டார்கள். இதே கனவைத்தான் உமர் இப்னு கத்தாஃப் (ரழி) அவர்களும் கண்டார்கள். இதன் முழுச் சத்திரம் ஹதீஸ் நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. (ஸுனனுத் திர்மிதி)

**சகோதரத்துவ ஒப்பந்தம்**

ஒற்றுமை மற்றும் அன்பை பகிர்ந்துகொள்ளும் மையமாக விளங்கிய பள்ளியை கட்டி முடிக்கும் பணியுடன், வரலாற்றில் மிகவும் பிரசித்திபெற்ற ஆச்சரியமிக்க மற்றொரு பணியையும் நபி (ஸல்) அவர்கள் மேற்கொண்டார்கள். அதுதான் நாடு துறந்த முஸ்லிம்களையும், மதீனாவில் உள்ள அன்சாரிகளையும் சகோதரர்களாக ஆக்கும் பணி.

இதைப்பற்றி இப்னுல் கய்'' (ரஹ்) கூறுகிறார்: நபி (ஸல்) அவர்கள் அனஸ் இப்னு மாலிக்கின் இல்லத்தில் முஹாஜிர்களுக்கும், அன்சாரிகளுக்கும் இடையில்

சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள். அப்படிச் சகோதரர்களாக ஆக்கப்பட்டவர்கள் மொத்தம் தொண்ணூறு நபர்கள். அதில் பாதி முஹாஜிர்களும், பாதி அன்சாரிகளும் இருந்தனர். இவர்களில் ஒருவர் மற்றவருடன் நட்புகொள்ள வேண்டும் அன்பு காட்ட வேண்டும் ஒருவர் மரணித்துவிட்டால் அவன் இரத்த உறவினர்களைவிட இவரே அவன் சொத்துகளுக்கு வாரிசாவார். ஆனால், பத்ர் போர் நடைபெற்றதற்குப் பின்பு

இனி அல்லாஹ்வுடைய வேதக் கட்டளைப்படி உங்கள் உறவினர்களில் உள்ளவர்களே ஒருவர் மற்றவருக்கு ஏற்றமானவர்கள். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் 8:75)

என்ற வசனம் இறங்கியபின் உடன்பிறவா சகோதர சொத்துரிமை சட்டம் ரத்து செய்யப்பட்டு சகோதரத்துவ உடன்படிக்கை மட்டும் நிரந்தரமாக்கப்பட்டது.

சிலர், “நபி (ஸல்) இரண்டாவது முறையாக முஹாஜிர்களுக்கு மத்தியில் மட்டும் சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள். அதாவது, ஒரு முஹாஜிரை மற்றொரு முஹாஜிருக்கு சகோதரராக ஆக்கினார்கள் என்று கூறுகின்றனர். ஆனால், முதலில் கூறப்பட்ட கருத்துதான் ஏற்றமானதாகும். ஏனெனில், முன்னரே முஹாஜிர்களுக்கிடையில் இஸ்லாமிய சகோதரத்துவம் இருந்தது. குலக் கோத்திர ஒற்றுமையிலும், மக்காவை சேர்ந்தவர்கள் என்பதிலும் சகோதரர்களாக இருந்ததால் அவர்களுக்கு மத்தியில் புதிய ஒரு சகோதரத்துவ உடன்படிக்கையை ஏற்படுத்த வேண்டுமென்ற அவசியம் இல்லை. ஆனால், அன்சாரிகளுடனான முஹாஜிர்களின் நிலைமை அப்படியல்ல. அன்சாரிகளுக்கும், முஹாஜிர்களுக்குமிடையில் இஸ்லாமிய சகோதரத்துவத்துடன் தனிப்பட்ட நெருக்கத்தை ஏற்படுத்த வேண்டுமென்பதற்காக ஒரு சகோதரத்துவ உடன்படிக்கை அவசியமாயிருந்தது.” (ஜாதுல் மஆது)

நபி (ஸல்) அறிமுகப்படுத்திய சகோதரத்துவத்தின் அடிப்படை நோக்கம் என்னவெனில் அறியாமைக் கால இனவெறியை ஒழிக்க வேண்டும் நிறம், குலம், இனம் ஆகிய பாகுபாடுகள் அனைத்தும் குழி தோண்டிப் புதைக்கப்பட வேண்டும் இஸ்லாமை அடிப்படையாக வைத்தே நட்போ பகையோ ஏற்பட வேண்டும்.

இந்த சகோதரத்துவத்தில் விட்டுக்கொடுத்தல், அன்பு, ஒருவருக்கொருவர் ஆறுதலளித்தல், பிறருக்கு நன்மை புரிதல் என்ற உணர்வுகள் பின்னிப் பிணைந்திருந்தன.

அனஸ் (ரழி) அவர்கள் கூறியதாவது: “அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) அவர்கள் நாடு துறந்து எங்களிடம் வந்தபோது அவர்களையும் ஸஅது இப்னு ரபீஆ (ரழி) அவர்களையும் நபி (ஸல்) அவர்கள் சகோதரர்களாக ஆக்கினார்கள்.” அப்போது அப்துர் ரஹ்மானிடம் ஸஅது இப்னு ரபீஆ கூறினார்:

அன்ஸாரிகளில் நான் வசதி வாய்ப்புள்ள பணக்காரன். என் செல்வங்களை இரண்டு பங்குகளாக்கி (தங்களுக்கு ஒரு பங்கை வழங்கி) விடுகிறேன். எனக்கு இரண்டு மனைவிகள் இருக்கின்றனர். இருவரில் யாரைப் பிடிக்குமோ (உமக்குப் பிடித்த) அப்பெண்ணை நான் மணவிலக்கு (தலாக்கு) தந்துவிடுகிறேன். அவர் ‘இத்தா’ காலத்தை முடித்துவிட்டால் நீங்கள் அப்பெண்ணை மணமுடித்துக் கொள்ளுங்கள். அதற்கு “அல்லாஹ் உங்களுக்கு நலமும் வளமும் வழங்கட்டும்! அது தங்கள் குடும்பத்திலும் பொருளிலும் ஏற்படட்டும்!! எனக்குத் தங்களது கடைத் தெரு எங்கே இருக்கின்றதென்று காட்டுங்கள். அது போதும்” என்று அப்துர் ரஹ்மான் (ரழி) கூறினார்கள். கைனுகாவினன் கடைத் தெரு அவருக்குக் காட்டப்படவே, அப்துர் ரஹ்மான் (ரழி) கடைத்தெருவுக்குச் சென்று வியாபாரம் செய்து கொஞ்சம் பாலாடைக் கட்டி மற்றும் வெண்ணையை இலாபமாகப் பெற்று வீடு திரும்பினார். மறுநாளும் அவ்வாறே தொடர்ந்து வியாபாரத்திற்குச் சென்று அல்லாஹ்வின் அருளை அதிகமதிகம் சம்பாதித்தார். பின்பு ஒரு நாள் அவர் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தபோது

அவர்மீது வாசனைப் பொருளின் அடையாளம் பட்டிருந்தது. அவரிடம் நபி (ஸல்) “என்ன மகிழ்ச்சியான செய்தி?” என விசாரித்தார்கள். அவர் “நான் நேற்று ஒரு அன்சாரிப் பெண்ணை திருமணம் செய்தேன்” என்றார். “எவ்வளவு மணக் கொடை (மஹர்) அளித்தீர்கள்” என்று நபி (ஸல்) கேட்க, “(கால் தீனார் பெறுமானமுள்ள) சிறு துண்டு தங்கம்” என அப்துர் ரஹ்மான் (ரழி) பதில் கூறினார். (ஸஹீஹுல் புகாரி)

நபி (ஸல்) அவர்களிடம் அன்ஸாரிகள் நமக்கும் நமது சகோதரர்(களான முஹாஜிர்)களுக்கும் (பலன் தரும்) பேரீத்த மரங்களை பங்கு பிரித்துக் கொடுங்கள் என்றனர். நபி (ஸல்) முடியாது என மறுத்து விட்டார்கள். அப்படியென்றால் எங்களுடன் அவர்கள் பாடுபடட்டும். வரும் பலாபலன்களில் நாம் அவர்களைக் கூட்டாகிக் கொள்வோம் என்று அன்ஸாரிகள் கோரினர். அதனை முஹாஜிர்கள் ஒத்துக்கொண்டனர். (ஸஹீஹுல் புகாரி)

இந்நிகழ்ச்சிகள் முஹாஜிர்கள் மீது அன்சாரிகள் கொண்டிருந்த ஆழமான பிரியத்தையும், மனத்தூய்மையையும், தியாகத்தையும், விட்டுக்கொடுத்தலையும் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. முஹாஜிர்கள் தங்களது அன்சாரித் தோழர்கள் செய்த உபகாரத்தை எந்த அளவிற்கு மதித்தார்கள் என்பதையும், அந்த உபகாரத்திலிருந்து தங்களின் அவசியமான தேவைக்கு மட்டும் எடுத்து பயனடைந்தார்கள் என்பதையும் அவர்களிடமிருந்து அதை முழுமையாக அபகரித்துக் கொள்ளவில்லை என்பதையும், தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

முஸ்லிம்கள் சந்தித்த பல பிரச்சனைகளுக்கு நபி (ஸல்) அறிமுகப்படுத்திய இந்த சகோதரத்துவ உடன்படிக்கை மிக அறிவுப்பூர்வமான தீர்வாகவும், நுட்பமான அரசியல் நடவடிக்கையாகவும், இருந்தது.

**இஸ்லாமிய நட்பு ஒப்பந்தம்**

இறைநம்பிக்கையாளர்களுக்கு மத்தியில் இந்த சகோதரத்துவ உடன்படிக்கையை நபி (ஸல்) உறுதியாக அமைத்தது போன்றே அவர்களுக்கு மத்தியில் அறியாமைக்கால மனக் கசப்புகளையும், குரோதங்களையும் அகற்றும் இஸ்லாமிய நட்பு ஒப்பந்தங்களையும் ஏற்படுத்தினார்கள். அந்த ஒப்பந்தங்களின் மூலம் இனவெறி உணர்வுகளை அழித்தார்கள். ஒருங்கிணைந்த இஸ்லாமிய ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் நிறுவினார்கள்.

**நட்பு ஒப்பந்தத்தின் அம்சங்கள்**

நபியாகிய முஹம்மது (ஸல்) சார்பாகக் குறைஷி இனத்தைச் சேர்ந்த மற்றும் மதீனாவைச் சேர்ந்த இன்னும் இவர்களைப் பின்பற்றி இவர்களுடன் சேர்ந்து, இவர்களுக்குத் துணையாகப் போர் புரியும் அனைத்து முஸ்லிம்கள், இறை நம்பிக்கையாளர்களுக்கு மத்தியில் எழுதிக் கொள்ளும் ஒப்பந்தம்:

1) முஸ்லிம்கள் அனைவரும் ஒரே சமுதாயத்தவர்.

2) குறைஷிகளில் ஹிஜ்ரா செய்தவர்கள் (முஹாஜிர்கள்) தங்களுக்குள் ‘தியத்’ தை கொடுத்துக் கொள்ள வேண்டும். அவர்களில் கைது செய்யப்பட்டவருக்கு அவர்கள் அழகிய முறையில் ‘ஃபித்யா“” கொடுத்து உதவி ஒத்தாசை செய்ய வேண்டும். அனைத்து இறைநம்பிக்கையாளர்களுக்கு மத்தியிலும் நீதமாக நடந்துகொள்ள வேண்டும். அன்சாரிகளில் உள்ள ஒவ்வொரு கிளையாரும் தங்களின் பழைய நிலைமைக்கேற்ப தங்களுக்குள் ‘தியத்’ கொடுத்துக் கொள்ள வேண்டும். அவர்களில் உள்ள ஒவ்வொரு வகுப்பினரும் தங்களின் கைதிகளை அழகிய முறையில் ‘ஃபித்யா’ கொடுத்து விடுவித்துக் கொள்ள வேண்டும். அனைத்து முஸ்லிம்களுக்கு மத்தியில் நீதமாக நடந்துகொள்ள வேண்டும்.

3) பொதுவாக இறைநம்பிக்கையாளர்கள் தங்களுக்கு மத்தியில் சிரமத்தில் இருப்பவர்களுக்கு ‘ஃபித்யா’ அல்லது ‘தியத்’ விஷயத்தில் அழகிய முறையில் கொடுத்து உதவ வேண்டும்.

4) தங்களில் கிளர்ச்சி செய்பவர்கள், முஃமின்களுக்கு மத்தியில் அநியாயம் செய்பவர்கள், பாவமான காரியம் செய்பவர்கள், வரம்பு மீறுபவர்கள், விஷமத்தனம் செய்பவர்கள் இவர்களை இறையச்சம் உள்ள முஃமின்கள் (இறைநம்பிக்கையாளர்கள்) ஒன்றுகூடி எதிர்க்க வேண்டும்.

5) மேற்கூறப்பட்டவர்களில் (பொதுவாக முஸ்லிம்களில்) வழிதவறிய ஒருவர் தங்களைச் சார்ந்த ஒருவரின் பிள்ளையாக இருப்பினும் சரியே! அவருக்கு எதிராக முஸ்லிம்கள் அனைவரும் ஒன்றிணைய வேண்டும்.

6) ஓர் இறைநம்பிக்கையாளர் ஒரு காஃபிருக்காக மற்றொரு இறைநம்பிக்கையாளரை கொலை செய்யக்கூடாது. அதாவது வாரிசில்லாத காஃபிர் கொலையுண்டதற்காக அந்த காஃபிருடைய முஸ்லிமான நண்பர், கொலையாளியான முஸ்லிமைக் கொல்லக் கூடாது.

7) ஓர் இறைநம்பிக்கையாளருக்கு எதிராக ஒரு காஃபிருக்கு உதவி செய்யக் கூடாது.

8) அல்லாஹ்வின் பொறுப்பு சமமான ஒன்றே. முஃமின்களில் தாழ்ந்த நிலையில் உள்ள ஒருவர் பிறருக்கு கார்மானம் (பாதுகாப்பு) கொடுக்கலாம். தங்களில் ஒருவர் கொடுக்கும் கார்மானத்தை மற்ற அனைத்து இறைநம்பிக்கையாளர்களும் நிறைவேற்ற வேண்டும். அதில் பங்கம் இழைக்கக்கூடாது.

9) யூதர்களில் யார் நம்மை பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கு உதவி செய்யப்படும். அவர்களுடன் அழகிய முறையில் நடந்து கொள்ளப்படும். அவர் மீது எவ்வித அநியாயமும் இழைக்கப்படமாட்டாது. அவருக்கு எதிராக பிறருக்கு உதவி செய்யக்கூடாது.

10) சமாதான உடன்படிக்கை செய்துகொள்வது முஃமின்கள் அனைவரின் உரிமையாகும். அல்லாஹ்வின் பாதையில் போர் செய்யும்போது, நீதமின்றி ஓர் இறைநம்பிக்கையாளரை விட்டுவிட்டு அன்னியருடன் சமாதான உடன்படிக்கை செய்து கொள்ளக்கூடாது.

11) இறைநம்பிக்கையாளர்களில் யாரொருவர் அல்லாஹ்வின் பாதையில் போர் செய்யும்போது தவறுதலாக தங்களில் ஒருவரைக் கொன்று விடுவாரோ அவருக்கு அனைத்து இறை நம்பிக்கையாளர்களும் பாதுகாப்புக் கொடுக்க வேண்டும்.

12) நமக்கு இணக்கமான எவரும் குறைஷிகளின் உயிர், பொருளுக்குக் கார்மானம் (பாதுகாப்பு) கொடுக்க முடியாது. மேலும், ஓர் இறைநம்பிக்கையாளருக்கு எதிராக ஒரு இணைவைப்பவரை பாதுகாக்க முடியாது.

13) ஒரு முஃமின் மற்றொரு முஃமினை குற்றமின்றி கொலை செய்து விட்டதற்கு தக்க ஆதாரமிருப்பின் அவரையும் பழிக்குப்பழி கொலை செய்யப்படும். ஆனால். கொலை செய்யப்பட்டவன் உறவினர் மன்னித்துவிட்டால் அவரை விடுவிக்கப்படும்.

14) இறைநம்பிக்கையாளர்கள் அனைவரும் கொலை செய்தவனுக்கு எதிராக ஒன்றுசேர வேண்டும். கொலை செய்தவனுக்கு எவ்வகையிலும் உதவி செய்யக் கூடாது.

15) இறைநம்பிக்கையாளர் ஒரு விஷமக்காரனுக்கு, கலகம் செய்பவனுக்கு உதவி செய்யக் கூடாது, அவனுக்கு அடைக்கலம் கொடுக்கக் கூடாது எவர் ஒருவர் ஒரு விஷமக்காரனுக்கு உதவி செய்கிறாரோ அல்லது அடைக்கலம் கொடுக்கிறாரோ அவருக்கு மறுமையில் அல்லாஹ்வின் சாபமும், கோபமும் உண்டு. அவருடைய கடமையான, உபரியான எந்த வணக்கமும் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

16) உங்களுக்கு ஏதாவது ஒரு விஷயத்தில் கருத்து வேறுபாடு ஏற்பட்டால் அதை அல்லாஹ்விடமும் அவனது தூதரிடமும் இறுதித் தீர்ப்புக்காக விட்டுவிட வேண்டும். (இப்னு ஹிஷாம்)

### ஆன்மீகப் புரட்சிகள்

இதுபோன்ற நுட்பமிக்க சட்டங்களால் நபி (ஸல்) புதிய சமூகத்தின் அஸ்திவாரங்களை உறுதியுடன் நிறுவினார்கள். அந்த சமூகத்தின் வெளித்தோற்றம் அது கொண்டிருந்த ஆன்மீக சிறப்புகளின் பிரதிபலிப்பாக இருந்தது. இந்த உயர்வான ஆன்மீக சிறப்புகளை அந்த மேன்மக்கள் நபி (ஸல்) அவர்களின் தோழமையால் பெற்றிருந்தனர். மேலும், நபி (ஸல்) அவர்களும் அவ்வப்போது அவர்களுக்கு மார்க்கச் சட்டங்களையும், சமூக உயர்வுக்கு வழிகாட்டும் நல்லொழுக்கங்களையும் போதித்து வந்தார்கள். அவர்களின் உள்ளங்களை ஒவ்வொரு அசுத்தத்திலிருந்தும் தூய்மைப்படுத்தியதுடன் உயர் பண்புகளைக் கடைபிடிக்கவும் அவர்களுக்கு ஆர்வமூட்டினார்கள். அன்பு, சகோதரத்துவம், கண்ணியம், இறைவணக்கம், கீழ்ப்படிதல் போன்ற நல்லொழுக்கப் பயிற்சியும் அளித்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் சில ஒழுக்கப் பயிற்சிகளையும், போதனைகளையும் பின்வரும் வரிகளில் நாம் பார்ப்போம்:

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் “இஸ்லாமில் சிறந்த அமல் எது?” என்று கேட்டதற்கு நபி (ஸல்) அவர்கள் “உணவளிப்பது, தெரிந்தவருக்கும் தெரியாதவருக்கும் ஸலாம் சொல்வது” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்தவுடன் நான் அவர்களைச் சந்திக்கச் சென்றேன். அவர்களது முகத்தை நன்கு உற்று நோக்கியபோது அது பொய்யன் முகம் அல்ல என்பதை மிகத் தெளிவாக அறிந்து கொண்டேன். நபி (ஸல்) அவர்களின் பேச்சில் முதலாவதாக பின்வரும் உபதேசங்களே இடம் பெற்றன. “மக்களே! ஸலாம் சொல்லும் பழக்கத்தை உங்களுக்குள் பரவலாக்குங்கள் உணவளியுங்கள் உறவினர்களுடன் சேர்ந்து வாழுங்கள் இரவில் மக்கள் உறங்கும்போது நீங்கள் எழுந்து தொழுங்கள் நீங்கள் நிம்மதியாக சுவனம் செல்வீர்கள்.” (ஸுனனுத் திர்மிதி, இப்னு மாஜா)

மேலும் கூறினார்கள்: யாருடைய தீங்குகளால் ஒருவன் அண்டை வீட்டார் நிம்மதியற்று போவாரோ அவர் சுவனம் செல்லமாட்டார். (ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) கூறினார்கள்: எவன் நாவு, கையின் தீங்கிலிருந்து முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றார்களோ அவரே முஸ்லிமாவார். (ஸஹீஹுல் புகாரி)

நபி (ஸல்) கூறினார்கள்: தனக்கு விரும்புவதை தனது சகோதரனுக்கும் விரும்பும் வரை நீங்கள் இறைநம்பிக்கையாளராக மாட்டீர்கள்.

நபி (ஸல்) கூறினார்கள் “அனைத்து முஃமின்களும் ஒரே மனிதரைப் போலாவர். அவன் கண்ணுக்கு வலி என்றால் அவன் உறுப்புகள் அனைத்தும் வருந்துகின்றன. அவருக்கு தலைவலி ஏற்பட்டால் அனைத்து உறுப்புகளும் அதனால் வேதனை அடைகின்றன.” (ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) கூறினார்கள்: “ஒரு முஃமின் (இறைநம்பிக்கையாளர்) மற்றொரு முஃமினுக்கு ஒரு கட்டடத்தைப் போன்றாவார். கட்டடத்தின் ஒரு பகுதி மற்ற பகுதிக்கு வலு சேர்க்கிறது.” (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்: ‘‘பகைமை கொள்ளாதீர்கள் பொறாமை கொள்ளாதீர்கள் புறக்கணிக்காதீர்கள் சகோதரர்களாக, அல்லாஹ்வின் அடிமைகளாக வாழுங்கள் ஒரு முஸ்லிம் தனது சகோதரரை மூன்று நாட்களுக்கு மேல் வெறுத்து ஒதுக்கிட வேண்டாம்.’’ (ஸஹீஹுல் புகாரி)

மேலும் கூறினார்கள்: ‘‘ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்கு சகோதரராவார். அவருக்கு அநியாயம் செய்யக் கூடாது அவரை எதிரியிடம் ஒப்படைக்கக் கூடாது யாரொருவர் தனது சகோதரன் தேவையை நிறைவேற்ற ஈடுபடுகிறாரோ அல்லாஹ் அவன் தேவையை நிறைவேற்றுகிறான்! யார் ஒருவர் ஒரு முஸ்லிமின் கஷ்டத்தை அகற்றுகிறாரோ அவருக்கு அல்லாஹ் மறுமையின் கஷ்டங்களிலிருந்து ஒரு கஷ்டத்தை அகற்றுகிறான். யார் ஒருவர் முஸ்லிமின் குறையை மறைப்பாரோ அல்லாஹ் அவருடையக் குறையை மறுமையில் மறைத்துவிடுவான்.’’ (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: ‘‘பூமியிலுள்ளவர்களின் மீது கருணை காட்டுங்கள். வானத்தில் உள்ளவன் உங்கள் மீது கருணை காட்டுவான்.’’ (ஸுனன் அபூதாவூது, ஸுனனுத் திர்மிதி)

மேலும் கூறினார்கள்: ‘‘தனது அருகிலுள்ள அண்டைவீட்டார் பசியோடு இருக்க வயிறு நிரம்ப சாப்பிடுபவர் முஃமினாக இருக்க மாட்டார்.’’ (பைஹகி)

மேலும் கூறினார்கள்: ‘‘இறைநம்பிக்கையாளரை ஏசுவது பெரும் பாவமாகும். அவரிடம் சண்டை செய்வது இறைநிராகரிப்பாகும்.’’ (ஸஹீஹுல் புகாரி)

மேலும், ‘‘பாதையில் இடையூறு தருவதை அகற்றுவது தர்மம் என்றும், அதை இறை நம்பிக்கையின் ஒரு பகுதி’’ என்றும் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: ‘‘தர்மம் பாவங்களை அழித்துவிடுகிறது, தண்ணீர் நெருப்பை அழிப்பது போல!‘‘(முஸ்னது அஹ்மது, ஸுனனுத் திர்மிதி, இப்னு மாஜா)

மேலும் கூறினார்கள்: ‘‘எந்த ஒரு முஸ்லிம் ஆடையின்றி இருக்கும் மற்றொரு முஸ்லிமுக்கு ஆடை அணிவிப்பாரோ அல்லாஹ் அவருக்கு சொர்க்கத்தின் பச்சை பட்டாடைகளிலிருந்து ஓர் ஆடையை அணிவிப்பான். எந்த ஒரு முஸ்லிம் பசியுடன் இருக்கும் மற்றொரு முஸ்லிமுக்கு உணவளிப்பாரோ அவருக்கு அல்லாஹ் மறுமையில் சொர்க்கத்தின் கனிகளிலிருந்து உணவளிப்பான். எந்த ஒரு முஸ்லிம் தாகத்துடன் இருக்கும் மற்றொரு முஸ்லிமுக்கு நீர் புகட்டுவாரோ அல்லாஹ் அவருக்கு மறுமையில் ‘‘முத்திரையிடப்பட்ட சுவன மது’’வைக் குடிக்கக் கொடுப்பான்.’’ (ஸுனனுத் திர்மிதி)

மேலும் கூறினார்கள்: ‘‘ஒரு பேரீத்தம் பழத்தின் ஒரு பகுதியை தர்மம் செய்தாயினும் நரகத்தைவிட்டு உங்களை பாதுகாத்துக் கொள்ளுங்கள். அதுவும் உங்களுக்கு கிடைக்கவில்லை என்றால் நல்ல வார்த்தைகளை பேசுவதின் மூலமாவது நரகத்திலிருந்து உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்.’’ (ஸஹீஹுல் புகாரி)

பிறரிடம் கையேந்துவதிலிருந்தும், யாசகம் கேட்பதிலிருந்தும் தன்னைப் பேணிக் கொள்ள வேண்டுமென்று ஒவ்வொருவருக்கும் ஆர்வமூட்டியதுடன் பொறுமையின் சிறப்புகள், போதுமென்ற மனப்பான்மையின் சிறப்புகள் பற்றி தங்களின் தோழர்களுக்கு அறிவுரைக் கூறினார்கள். நிர்பந்தமின்றி யாசகம் கேட்பவர் நாளை மறுமையில் எழுப்பப்படும்போது முகம் சிதைந்தவராக இருப்பார் என்றும் எச்சரித்தார்கள். (ஸுனன் அபூதாவூது, ஸுனனுத் திர்மிதி, ஸுனன் நஸாம், இப்னு மாஜா)

மேலும், அல்லாஹ்வை வணங்கி வழிப்படுவதில் கிடைக்கும் நன்மைகளையும், உயர்வுகளையும், சிறப்புகளையும் தங்களின் தோழர்களுக்கு விரிவாக விளக்கிக் கூறினார்கள். தங்களின் தோழர்களை அல்லாஹ்வின் புறத்திலிருந்து இறங்கும் குர்ஆனுடன்

எப்போதும் தொடர்புடையவர்களாக ஆக்கினார்கள். எந்நேரமும் தங்களின் தோழர்களுக்கு அழைப்புப் பணியின் கடமைகளையும், தூதுத்துவத்தை எடுத்து வைக்கும்போது ஏற்படும் சிரமங்களையும் தெளிவாக உணர்த்துவதற்காக அல்லாஹ்வின் அருள்மறையை அவர்களுக்கு ஓதிக் காண்பிப்பர்கள். தோழர்களும் அனுதினமும் குர்ஆன் ஓதும்படிச் செய்தார்கள். மேலும், குர்ஆனை விளங்க வேண்டும் அதை புரிந்துகொள்ள வேண்டும் அதை ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்று தங்களது தோழர்களுக்கு வலியுறுத்தினார்கள்.

இவ்வாறே தங்கள் தோழர்களின் சிந்தனையைச் சீர்படுத்தி, அவர்களின் ஆற்றல்களை விழித்தெழச் செய்து அவர்களின் ஆன்மீக நிலையை உயர்த்தி, உயர்ந்த பண்புகளை அவர்களிடம் வளரச் செய்தார்கள். இதன்மூலமே இறைத்தூதர்களுக்கு அடுத்தபடியாக மனித வரலாற்றில் ஒரு முழுமைத்துவம் அடைந்த சமுதாயமாக நபித்தோழர்கள் விளங்கினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரழி) கூறுகிறார்கள்: யார் ஒருவர் பிறரின் வழிமுறையை பின்பற்ற நாடுகிறாரோ அவர் இறந்துவிட்டவர்களின் (நபித்தோழர்களின்) வழிமுறையை பின்பற்றட்டும். ஏனெனில், உயிருடன் இருப்பவர் மீது குழப்பங்கள் ஏற்படுவதை அச்சமற்று இருக்க முடியாது. இறந்துவிட்டவர்களில் நீங்கள் பின்பற்ற வேண்டியவர்கள் யாரெனில் முஹம்மது (ஸல்) அவர்களின் தோழர்களாவர். அவர்களே இந்த சமுதாயத்தில் சிறந்தவர்கள் மிக்க நல்லுள்ளம் கொண்டவர்கள் மிக ஆழமான கல்வியறிவு பெற்றவர்கள் பகட்டை விரும்பாதவர்கள். அல்லாஹ் தனது நபியவர்களின் தோழமைக்காகவும், தனது மார்க்கத்தை நிலைநிறுத்துவதற்காகவும் அவர்களைத் தேர்வு செய்தான். அவர்களது சிறப்பை அறிந்து கொள்ளுங்கள். அவர்களது வழியில் அவர்களை நீங்களும் பின்தொடருங்கள். அவர்களது நற்பண்புகளிலும், வாழ்க்கையிலும் உங்களுக்கு முடிந்ததை உறுதியாக பிடித்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக அவர்கள்தான் முற்றிலும் சரியான நேர்வழியில் இருந்தார்கள். (ரஜீன்–மிஷ்காத்)

மேலும், மகத்தான வழிகாட்டியான அல்லாஹ்வின் தூதர் முஹம்மது (ஸல்) அவர்களும் உள்ளரங்கமான, வெளிரங்கமான அனைத்து சிறப்புகளையும் பண்புகளையும் சிறந்த நல்லொழுக்கங்களையும் பெற்றுத் திகழ்ந்தார்கள். அனைத்து உள்ளங்களும் அவர்களை நேசித்தன அவர்களுக்காக அர்ப்பணமாயின் அவர்கள் எந்த ஒரு வார்த்தையைப் பேசினாலும் அதற்கு அவர்களின் தோழர்கள் முழுமையாகப் பணிந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் வழிகாட்டுதல், நற்போதனைகள் அனைத்தையும் முழுமையாக ஏற்று நடந்தார்கள்.

இதன் மூலமாகவே வரலாறு காணாத, மிகச் சிறந்த, நேர்த்திமிக்க புதிய சமூகத்தை நபி (ஸல்) மதீனாவில் அமைக்க முடிந்தது. மேலும், பல காலங்களாக வழிகேட்டிலும், அறியாமை என்ற இருள்களிலும் சிக்கித் தவித்து, தீர்வு தெரியாமல் திகைத்திருந்த சமூகத்தின் அனைத்து விஷயங்களுக்கும் நபி (ஸல்) அவர்கள் தீர்வு கண்டார்கள்.

இதுபோன்ற மிக உயர்ந்த உளப்பூர்வமான, உள்ளரங்கமான பயிற்சிகளின் மூலம் இந்த சமூகத்தின் அனைத்து அடிப்படை அம்சங்களும் முழுமை பெற்றன. மேலும், இந்த சமூகம் காலத்தின் சவால்களைச் சந்தித்து சாதனை கண்டது மட்டுமல்லாமல் வரலாற்றையே மாற்றி அமைத்தது.

## யூதர்களுடன் ஒப்பந்தம்

நபி (ஸல்) மதீனாவில் அரசியல் அமைப்பு, சட்ட ஒழுங்கு ஆகிய அனைத்திலும் முதன் முதலாக முஸ்லிம்களுக்கு மத்தியில் நிலைத் தன்மையையும் ஒருமைப்பாட்டையும் நிறுவினார்கள். அதன் மூலம் மதீனாவில் புதிய இஸ்லாமிய சமுதாயத்திற்கும், சமூகத்திற்குமான அடித்தளத்தை மிக ஆழமாக உறுதிப்படுத்தினார்கள்.

இரண்டாம் கட்டமாக, முஸ்லிம் அல்லாதவர்களுடன் தங்களது சமூகத் தொடர்புகளை முறைப்படுத்தத் துவங்கினார்கள். அதற்குக் காரணம், முழு மனித சமுதாயமும் நிம்மதி, பாதுகாப்பு, நற்பயன்கள், நல்லுறவுகள் கிடைக்கப்பெற வேண்டும். ஒரே ஒருமைப்பாட்டுக்குக் கீழ் நாட்டு மக்களை கொண்டுவர வேண்டும் என்பதுதான். ஆகவே சுயநோக்கங்களும், இனவெறியும் நிரம்பி இருந்த அக்காலத்தில் எங்கும் காணப்படாத மன்னித்தல், பெருந்தன்மையுடன் நடத்தல், விட்டுக் கொடுத்தல் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட சட்டங்களை நபி (ஸல்) அமைத்தார்கள்.

மதீனாவிற்கு அருகில் யூதர்கள்தான் முஸ்லிமல்லாதவர்களாக இருந்தார்கள். இவர்கள் முஸ்லிம்களின் மீது உள்ளத்தில் பகைமையை மறைத்து வைத்திருந்தாலும் வெளிப்படையாக முஸ்லிம்களை எதிர்க்கவுமில்லை அவர்களிடத்தில் சண்டை, சச்சரவு செய்யவுமில்லை. எனவே நபி (ஸல்) யூதர்களுடன் நன்மையான நல்ல உடன்படிக்கையை ஏற்படுத்திக் கொண்டார்கள். அவர்களுக்கு அவர்களது செல்வத்திலும், மதத்திலும் முழு சுதந்திரம் அளித்தார்கள். அவர்களை மதீனாவை விட்டு விரட்ட வேண்டுமென்றோ அல்லது அவர்களுடைய சொத்துகளை பறிமுதல் செய்ய வேண்டுமென்றோ அவர்கள் நாடவுமில்லை அதைச் செய்யவுமில்லை.

நபி (ஸல்) யூதர்களுடன் செய்து கொண்ட உடன்படிக்கையின் அம்சங்களை இப்போது நாம் பார்ப்போம்:

1) அவ்ஃப் கிளையினரைச் சேர்ந்த யூதர்கள், முஃமின்களுடன் இணைந்த ஒரே சமுதாயத்தினராக கருதப்படுவர். இந்த யூதர்களுக்கு அவர்களது மார்க்கத்தில் முழு உரிமை உண்டு. முஸ்லிம்களுக்கும் அவர்களுடன் நட்பு கொண்டவர்களுக்கும் அவர்களின் மார்க்கத்தில் முழு சுதந்திரம் உண்டு. இவ்வாறே அவ்ஃப் கிளையினரை சாராத மற்ற யூதர்களுக்கும் அவர்களது மார்க்கத்தில் முழு சுதந்திரம் உண்டு.

2) யூதர்கள் தங்களின் செலவுகளுக்குத் தாங்களே பொறுப்பாளிகளாவர். அவ்வாறே முஸ்லிம்களும் தங்களின் செலவுகளுக்கு தாங்களே பொறுப்பாளிகளாவர்.

3) இந்த உடன்படிக்கை உடையவர்களிடம் யார் போர் தொடுத்தாலும் அவருக்கு எதிராக முஸ்லிம்களும், யூதர்களும் தங்களுக்குள் ஒருவர் மற்றவருக்கு உதவி செய்துகொள்ள வேண்டும்.

4) யூதர்களுக்கும், முஸ்லிம்களுக்கும் இடையிலுள்ள தொடர்பு - நலம் நாடுதல், ஒருவருக்கொருவர் நல்லுபதேசம் செய்தல், உபகாரம் புரிதல் - என்ற அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும். குற்றம் புரிவதில் துணை போவது கூடாது.

5) தனது நண்பன் குற்றத்திற்காக மற்றவர் குற்றவாளியாக மாட்டார்.

6) அநீதி இழைக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்.

7) பிறருக்கு எதிரானப் போரில் முஸ்லிம்களுடன் யூதர்கள் கலந்துகொள்ளும் போது யூதர்களும் போர் செலவுகளில் பங்கெடுக்க வேண்டும்.

8) இவ்வுடன்படிக்கையில் கலந்து கொள்பவர்கள் மதீனாவில் குழப்பம் விளைவிப்பதோ, விஷமத்தனம் செய்வதோ, இரத்தம் ஓட்டுவதோ முற்றிலும் தடுக்கப்பட்டதாகும்.

9) இந்த உடன்படிக்கையில் கலந்து கொண்டவர்களுக்கு மத்தியில் ஆபத்தான சண்டை, சச்சரவுகள் அல்லது ஏதும் பிரச்னைகள் நிகழ்ந்தால் அதற்குரிய முடிவை அல்லாஹ்வும் அவனது தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுமே கூறுவார்கள்.

10) குறைஷிகளுக்கும், குறைஷிகளுக்கு உதவி செய்பவர்களுக்கும் பாதுகாப்பு கொடுக்கக் கூடாது.

11) யாராவது மதீனாவின் மீது முற்றுகையிட்டால் அவர்களுக்கெதிராக அனைவரும் போர் புரிய வேண்டும். தங்களுக்குள் உதவி செய்து கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் தாங்கள் இருக்கும் பகுதியைப் பாதுகாக்க வேண்டும்.

12) இந்த உடன்படிக்கை, அநியாயக்காரனையும், குற்றவாளியையும் தண்டனையிலிருந்து பாதுகாக்காது.

இந்த உடன்படிக்கையும், ஒப்பந்தமும் உறுதிபெற்றதால் மதீனாவும், மதீனாவைச் சுற்றியுள்ள பகுதிகளும் ஒற்றுமை மிக்க நாடாக மாறி அதற்குத் தலைநகரம் மதீனாவாக விளங்கியது. அந்த நாட்டின் தலைவராக (இவ்வாறு நாம் கூறுவது சரியாக இருப்பின்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இருந்தார்கள். அந்நாட்டில் முழுமையான அதிகாரமும் பேச்சுரிமையும் முஸ்லிம்களுக்கே இருந்தன.

அமைதியும், பாதுகாப்புமுடைய சூழலை விரிவுபடுத்துவதற்காகத் தேவைக்கேற்ப மற்ற சமூகத்தவர்களுடனும் நபி (ஸல்) இதற்குப்பின் உடன்படிக்கை செய்து கொண்டார்கள். அதன் சில விவரங்களை அடுத்துவரும் பக்கங்களில் காண்போம்.

## ஆயுதமேந்தித் தாக்குதல்

### குறைஷியர்களின் அச்சுறுத்துதலும் இப்னு உபையுடன் தொடர்பும்

மக்காவில் முஸ்லிம்களுக்கு நிராகரிப்பாளர்கள் அளவிலா துன்பங்களைக் கொடுத்து வந்தார்கள். முஸ்லிம்கள் மக்காவிலிருந்து மதீனாவிற்குச் செல்ல நாடிய போது அவர்களைப் பல விதத்திலும் தடுத்தார்கள். முஸ்லிம்களுக்குச் சொல்லிலடங்கா கொடுமைகளை அளித்தனர். உண்மையில் அவர்களுடைய குற்றங்களுக்காக அவர்களிடம் போர் செய்வதும், அவர்களுடைய சொத்துகளைச் சூறையாடுவதும் தகும் என்று இதற்கு முன்னுள்ள பக்கங்களில் கூறியிருக்கிறோம். முஸ்லிம்கள் மதீனாவிற்கு வந்த பிறகும் அந்த நிராகரிப்போர் முஸ்லிம்கள் மீது அத்துமீறுவதை நிறுத்திக் கொள்ளவில்லை. தங்களது அடாவடி அழிச்சாட்டியங்களை முடித்துக் கொள்ளவில்லை. முஸ்லிம்கள் தங்களிடமிருந்து தப்பித்து மதீனாவில் நிம்மதியான, பாதுகாப்பான இருப்பிடத்தை அமைத்துக் கொண்டார்களே என்ற கோபத்தால் கொதித்தெழுந்தார்கள். எப்படியாவது முஸ்லிம்களை மதீனாவிலிருந்து வெளியேற்றி விட வேண்டும் என்று தீர்மானமாக இருந்தார்கள். இதற்காக அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு சலூலுக்குக் கடிதம் எழுதினார்கள். அவன் அந்நேரத்தில் இணைவைப்பவனாக இருந்தான். அவனுடன் மக்காவாசிகள் தொடர்பு கொண்டதன் காரணம் என்னவெனில், நபி (ஸல்) மதீனா வருவதற்கு முன் அவன்தான் மதீனாவாசிகளின் தலைவனாக இருந்தான். மதீனாவாசிகள் அவனையே தங்களது அரசனாக ஏற்றுக் கொள்ளவும் தயாராக இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வராமல் இருந்திருந்தால் அவனே அவர்களின் அரசனாகியிருப்பான். இதனால் அவனுக்கு நபி (ஸல்) அவர்கள் மீதுள்ள கோபத்தை அறிந்த மக்காவாசிகள், அப்துல்லாஹ் இப்னு உபைக்கும் அவனுடன் இருந்த இணைவைப்போருக்கும் கடிதம் எழுதினர். அதில் அவர்கள் கூறியதாவது:

“நீங்கள் எங்கள் ஊரைச் சார்ந்தவருக்கு அடைக்கலம் கொடுத்துள்ளீர்கள். இது அல்லாஹ்வின் மீது சத்தியம்! நிச்சயமாக நீங்கள் அவரிடம் போர் செய்ய வேண்டும் அல்லது அவரை வெளியாக்கி விட வேண்டும். அல்லது நாங்கள் (மக்காவாசிகள்) அனைவரும் ஒன்று சேர்ந்து உங்கள் மீது போர் தொடுத்து உங்களின் போர் வீரர்களைக்

கொன்று குவித்து, உங்கள் பெண்களின் கற்புகளைச் சூறையாடுவோம்''- இவ்வாறு அக்கடிதத்தில் கூறியிருந்தனர். (ஸுனன் அபூதாவூது)

ஏற்கனவே, நபி (ஸல்) தனது ஆட்சியைப் பறித்துக் கொண்டார் என்று அப்துல்லாஹ் இப்னு உபை எண்ணி வந்ததால், நபியவர்களின் மீது கடுமையான வகையில் பகைமை கொண்டிருந்தான். எனவே, மக்கா முஷ்ரிக்குகள் கூறிய வார்த்தையை உடனடியாகச் செயல்படுத்தினான். இது சம்பந்தமாக அப்துர் ரஹ்மான் இப்னு கஅப் (ரழி) கூறுகிறார்கள்:

குறைஷிகளின் செய்தி அப்துல்லாஹ் இப்னு உபைம்க்கும், அவனுடன் இருந்த சிலை வணங்கிகளுக்கும் கிடைத்த போது அவர்கள் அனைவரும் நபி (ஸல்) அவர்களிடம் போர் செய்வதற்கு ஆயத்தமானார்கள். அவர்கள் ஆயத்தமாகும் இந்தச் செய்தி நபி (ஸல்) அவர்களுக்குக் கிடைத்தவுடன் அவர்களை சந்திக்கப் போனார்கள். அப்போது அவர்களிடம், ''குறைஷிகள் உங்களை எச்சரித்ததால் நீங்கள் மிக பயந்துவிட்டீர்களோ! அவர்கள் உங்களுக்கு செய்யும் சூழ்ச்சியை விட நீங்கள் உங்களுக்குச் செய்யும் சூழ்ச்சிதான் மிக மோசமானது. என்ன! அவர்களின் சொல்லுக்கிணங்க உங்களது பிள்ளைகளிடமும், சகோதரர்களிடமும் நீங்கள் போர் புரிய எண்ணுகிறீர்களா?'' என்று சிந்தனையைத் தூண்டும் விதத்தில் நபி (ஸல்) கேட்டதும், கூடி இருந்தவர்கள் மறுப்பின்றி பிரிந்து சென்றனர். (ஸஹீஹுல் புகாரி)

அந்நேரத்தில் தனது தோழர்களிடம் ஏற்பட்ட மாற்றத்தைப் பார்த்து போர் செய்வதிலிருந்து இப்னு உபை விலகிக் கொண்டாலும், சமயமேற்படும் போதெல்லாம் குறைஷிகளுடன் சேர்ந்து கொள்வான். அத்துடன் தனது உதவிக்காக யூதர்களையும் சேர்த்துக் கொள்வான். ஆனால், அல்லாஹ்வின் அருளால் அவர்களது வஞ்சகத் தீ மூழும்போதெல்லாம் நபி (ஸல்) அவர்களின் ஞானமிக்க நடவடிக்கை அதை அணைத்துக் கொண்டே இருந்தது.

### அபூஜஹ்லின் அச்சுறுத்தல்

இந்நிகழ்ச்சிக்குப் பின்பு ஸஅது இப்னு முஆத் (ரழி) உம்ரா செய்வதற்காக மக்கா சென்று உமய்யா இப்னு கலஃபிடம் தங்கினார்கள். உமய்யாவிடம் ''நான் கஅபாவை வலம் வருவதற்காக மக்கள் யாருமில்லாத நேரமாகப் பார்த்து அழைத்துச் செல்'' என்று கூறினார்கள். உமய்யா மதிய நேரத்திற்குச் சற்று முன் அவர்களை அழைத்துக் கொண்டு கஅபாவிற்குச் சென்றான்.

அந்த இருவரையும் வழியில் அபூஜஹ்ல் சந்தித்தான். அவன் உமய்யாவிடம் ''அபூ ஸஃப்வானே!'' உன்னுடன் இருப்பவர் யார்?'' என்று கேட்டான். அதற்கு உமய்யா ''இவர் ஸஅது'' என்றான். அப்போது அபூஜஹ்ல் ஸஅதிடம் ''நீ மக்காவில் நிம்மதியாக தவாஃப் செய்ய வந்துவிட்டாயா? மதீனாவாசிகளாகிய நீங்கள் மதம் மாறியவர்களுக்கு அடைக்கலம் கொடுத்திருக்கின்றீர்கள். அது மட்டுமல்லாமல் அவர்களுக்கு உதவியும் ஒத்துழைப்பும் செய்வோம் என்றும் கூறுகின்றீர்களா? அறிந்து கொள்! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீ அபூ ஸஃப்வானுடன் வந்திருக்கவில்லை என்றால் உனது குடும்பத்திற்கு நீ பாதுகாப்புடன் திரும்ப முடியாது'' என்று கூறினான். இதைக் கேட்ட ஸஅது, அவனது சப்தத்தை விட தனது சப்தத்தை உயர்த்தி ''நீ அறிந்துகொள்! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீ தவாஃப் செய்வதிலிருந்து என்னைத் தடுத்தால், இதை விட உமக்கு மிகக் கடினமாக இருக்கும் ஒன்றை நான் தடுத்து நிறுத்துவேன். நீ வியாபாரத்திற்காக மதீனாவின் வழியை பயன்படுத்த விடமாட்டேன்'' என்று எச்சரித்தார். (ஸஹீஹுல் புகாரி)

### குறைஷிகளின் மிரட்டல்

உண்மையில், குறைஷிகள் இதைவிட மிகப் பெரிய தீமை ஒன்றைச் செய்ய வேண்டுமென்ற உறுதியில் இருந்தனர். அதாவது, அனைத்து முஸ்லிம்களையும் குறிப்பாக நபி (ஸல்)

அவர்களையும் ஒழித்துக்கட்ட வேண்டுமென்று தீவிரமாக ஆலோசித்தனர். இது வெறும் கற்பனையோ அல்லது யூகமோ அல்ல! குறைஷிகளின் இந்த வஞ்சக சூழ்ச்சியினால் நபி (ஸல்) அவர்கள் இரவில் தூக்கமில்லாமல் இருந்தார்கள் அல்லது தங்களின் தோழர்களின் பாதுகாப்பில் இரவைக் கழித்தார்கள்.

இதைப் பற்றி ஆயிஷா (ரழி) கூறுவதாவது: நபி (ஸல்) மதீனாவுக்கு வந்த காலத்தில் ஓரிரவு விழித்திருந்தார்கள். அப்போது "எனது தோழர்களில் நல்லவர் ஒருவர் இன்று இரவு என்னை பாதுகாக்க வேண்டுமே" என்றார்கள். அங்கு ஆயுதத்தின் சப்தத்தை நாங்கள் கேட்டோம். நபி (ஸல்) அவர்கள் "அது யார்?" என்று கேட்கவே, வந்தவர் "நான்தான் ஸஅது இப்னு அபீவக்காஸ்" என்றார். நபி (ஸல்) அவர்கள் அவரிடம் "நீர் ஏன் வந்தீர்?" என்று வினவினார்கள். அதற்கவர் "நபி (ஸல்) அவர்களுக்கு ஏதும் ஆபத்து நிகழ்ந்து விடுமோ என்ற அச்சத்தால் அவர்களைப் பாதுகாக்க வந்திருக்கிறேன்" என்றார். அதன் பிறகு, நபி (ஸல்) அவர்கள் ஸஅதுக்காக துஆ (பிரார்த்தனைச்) செய்து விட்டு தூங்கினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

தோழர்கள் நபி (ஸல்) அவர்களைப் இவ்வாறு பாதுகாத்தது சில இரவுகளில் மட்டுமல்ல மாறாக, மதீனா வந்ததிலிருந்து தொடர்ந்து நபித்தோழர்களில் யாராவது ஒருவர் இரவில் கண் விழித்து நபி (ஸல்) அவர்களைப் பாதுகாத்தார்.

இதைப் பற்றி ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்கள்: இரவில் நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் யாராவது ஒருவர் நபி (ஸல்) அவர்களைப் பாதுகாப்பார்.

(நம்முடைய) தூதரே! உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு இறக்கப்பட்டதை (எந்த குறைவுமின்றி மக்களுக்கு) அறிவித்து விடுங்கள். நீங்கள் அவ்வாறு செய்யா விட்டால் அவனுடையத் தூதை நீங்கள் நிறைவேற்றியவராக மாட்டீர்கள். (இதில் எவருக்கும் அஞ்சாதீர்கள்!) மனிதர்(களின் தீங்கு)களில் இருந்து அல்லாஹ் உங்களைக் காப்பாற்றுவான். நிச்சயமாக அல்லாஹ் நிராகரிக்கும் மக்களை நேரான வழியில் செலுத்த மாட்டான். (அல்குர்ஆன் 5:67)

என்ற வசனத்தை அல்லாஹ் இறக்கியவுடன் நபி (ஸல்) தாங்கள் தங்கியிருந்த கூடாரத்திலிருந்து தலையை வெளியே நீட்டி "மக்களே! என்னிடமிருந்து திரும்பிச் செல்லுங்கள்! அல்லாஹ் என்னை நிச்சயமாகப் பாதுகாத்து விட்டான்" என்று கூறினார்கள். (ஸுனனுத் திர்மிதி)

ஆபத்து நபி (ஸல்) அவர்களின் உயிருக்கு மட்டுமல்ல அனைத்து முஸ்லிம்களுக்கும் இருந்தது. இதைப் பற்றி உபை இப்னு கஅப் (ரழி) கூறுகிறார்கள்:

நபி (ஸல்) அவர்களும் முஹாஜிர் தோழர்களும் மதீனாவில் அன்சாரிகளின் ஆதரவைப் பெற்றுக் கொண்டதைச் சகித்துக்கொள்ள முடியாமல் குறைஷிகளும், மற்ற அரபுகளும் ஒன்று சேர்ந்து அவர்களை எதிர்த்தனர். இதன் காரணமாக நபித்தோழர்கள் இரவு தூங்கும் போதும் காலையில் விழிக்கும் போதும் தற்காப்புக்காக ஆயுதங்களைத் தங்களுடன் வைத்திருந்தனர்.

### போர் புரிய அனுமதி

முஸ்லிம்கள் மதீனாவில் கடுமையான ஆபத்துகளைச் சந்திக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. மேலும், குறைஷிகள் தங்களின் வழிகேட்டிலிருந்து விலகிக் கொள்ளாமல் வம்புத்தனத்தையும், அழிச்சாட்டியத்தையும் தொடர்ந்து கொண்டே சென்றனர். இதன் காரணமாக அல்லாஹ் முஸ்லிம்களுக்கு நிராகரிப்பவர்களை எதிர்த்துப் போர் புரியலாம் என்று அனுமதி வழங்கினான். ஆனால், போரைக் கடமையாக்கவில்லை. நிராகரிப்பவர்கள் சண்டையிட்டால், அவர்களை எதிர்த்து போர் புரிய மட்டும் அனுமதிக்கப்பட்டது.

(நிராகரிப்பவர்களால்) அநியாயத்தில் சிக்கி, போருக்கு நிர்பந்திக்கப்பட்ட (நம்பிக்கை கொண்ட)வர்களுக்கு அவர்களை எதிர்த்து போர் புரிய அனுமதி அளிக்கப்பட்டு விட்டது. நிச்சயமாக அல்லாஹ் இவர்களுக்கு உதவி செய்ய பேராற்றலுடையவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் 22:39)

மேலும், இவ்வாறு அறப்போர் செய்வது அனுமதிக்கப்பட்டதற்குரிய காரணத்தையும் அடுத்துள்ள வசனங்களில் அல்லாஹ் விவரித்தான். அதாவது, அசத்தியத்தை அழித்து அல்லாஹ்வின் கட்டளைகளை நிலை நிறுத்துவதற்காகத்தான் போர் செய்வது அனுமதிக்கப்பட்டது.

அவர்கள் எத்தகையவரென்றால், நாம் அவர்களுக்குப் பூமியில் ஆட்சியைக் கொடுத்தால் தொழுகையைக் கடைப்பிடித்துத் தொழுவார்கள் ஜகாத்தும் கொடுப்பார்கள் நன்மையானவற்றை ஏவி, பாவமானவற்றைத் தடை செய்வார்கள். எல்லா காரியங்களின் முடிவும் அல்லாஹ்விடமே இருக்கிறது. (அல்குர்ஆன் 22:41)

இந்த அனுமதி குறைஷிகளிடம் போர் செய்வதற்கு மட்டும் வழங்கப்பட்டது. ஆனால், அதற்குப் பின்பு தேவைக்கேற்ப போருக்கான சட்டம் மாற்றப்பட்டு, பொதுவாக போர் செய்வது கட்டாயமாக்கப்பட்டது. குறைஷிகளுடனும் இனணவைக்கும் மற்றவர்களுடனும் போர் செய்வதற்கான கட்டளை பிறப்பிக்கப்பட்டது. இக்கட்டளைக்குப் பிறகு ஏற்பட்ட போர்களில் நடந்த சம்பவங்களைக் கூறுவதற்கு முன் இப்போர்கள் ஏன் கடமையாக்கப்பட்டன என்பதற்கான காரணங்களை இங்கு சுருக்கமாகப் பார்ப்போம்.

1) முதல் காரணம்: இணைவைக்கும் குறைஷிகளை எதிரிகளாகக் கருதியது. ஏனெனில், அவர்கள்தான் முஸ்லிம்களிடம் முதன் முதலாக பகைமையைத் தொடங்கினர். எனவே, முஸ்லிம்கள் குறைஷிகளை எதிர்த்து போர் செய்வது மட்டுமில்லாமல் குறைஷிகளின் சொத்துகளையும் பறிமுதல் செய்ய வேண்டும் என்று எண்ணுவது நியதியே! ஆனால், குறைஷிகளைத் தவிர மற்ற அரபிகள் முஸ்லிம்களுக்கு இடையூறு செய்யாததால் அவர்களை எதிரிகளாகக் கருத வேண்டியதில்லை. எனவே, அவர்களிடம் போர் செய்ய வேண்டிய அவசியமுமில்லை.

2) இரண்டாவது காரணம்: இணைவைக்கும் அரபிகளில் யார் குறைஷிகளுடன் இணைந்து முஸ்லிம்களுக்கு எதிராக செயல்படுகிறார்களோ அவர்களிடமும், வேறு யாராவது முஸ்லிம்களைப் பகைத்தால் அவர்களிடமும் போர் செய்ய வேண்டும்.

3) மூன்றாவது காரணம்: உடன்படிக்கை செய்து கொண்ட யூதர்களில் எவர் உடன்படிக்கைக்கு மோசடி செய்கிறாரோ அல்லது முஸ்லிம்களின் எதிரிகளாகிய இணை வைப்பாளருக்கு ஆதரவு தருகிறாரோ, அத்தகைய யூதர்களின் உடன்படிக்கையை முறித்துக் கொள்வதுடன் அவர்களிடமும் போர் செய்ய வேண்டும்.

4) நான்காவது காரணம்: வேதம் கொடுக்கப்பட்டவர்களில் யார் முஸ்லிம்களைப் பகைப்பார்களோ, முஸ்லிம்களிடம் சண்டையிடுவார்களோ அவர்களிடம் போர் செய்ய வேண்டும். அவர்கள் இழிவுபட்டு வரி செலுத்தும் வரை இந்தப் போர் நீடிக்கும். “வேதம் கொடுக்கப்பட்டவர்” என்றால் யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களைப் போன்று.

5) ஐந்தாவது காரணம்: முஷ்ரிக்கு (இணைவைப்பவர்) அல்லது யூதர் அல்லது கிறிஸ்தவர் அல்லது எவராக இருப்பினும் அவர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டு இஸ்லாமிய சட்ட திட்டங்களுக்கு முரண்படாமல் இருக்கும் வரை அவருடைய உயிர், பொருள், மானம் அனைத்தும் காக்கப்படும். அவருடைய கேள்வி கணக்கு அல்லாஹ்வைச் சார்ந்ததாகும். அதாவது, உள்ளரங்கமான அல்லது மறைமுகமான அவரது செயல்களைப் பற்றி அல்லாஹ் விசாரணை செய்து கொள்வான். அதைக் கண்காணிக்க வேண்டியது நமது கடமையல்ல!

(இஸ்லாமிய சட்டங்களுக்கு முரண்படுவது என்றால், எடுத்துக்காட்டாக -கொலை செய்வது, கொள்ளை அடிப்பது, கிளர்ச்சி செய்வது- போன்ற செயல்களில் ஈடுபடுவது. அப்படி ஈடுபட்டால், அதற்குரிய தண்டனை உலகிலேயே அவருக்குக் கிடைக்கும்.)

போருக்கான அனுமதி அல்லாஹ்வின் புறத்திலிருந்து கிடைத்தவுடன் குறைஷிகளின் வியாபார வழித்தடமான மக்காவிலிருந்து ஷாம் செல்லும் முக்கிய வழியைத் தங்களது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர வேண்டுமென்று நபி (ஸல்) விருப்பப்பட்டார்கள். இதற்காக இரண்டு திட்டங்களை வகுத்தார்கள்.

முதலாவது திட்டம்:-

மக்காவாசிகளின் முக்கிய வியாபார வழித்தடத்திற்கு அருகில் வசிக்கும் கோத்திரத்தாருடனும், இந்த வியாபார வழித்தடத்திற்கும் மதீனாவிற்குமிடையில் வசிக்கும் கோத்திரத்தாருடனும் நபி (ஸல்) உடன்படிக்கை செய்து கொள்வது.

அதாவது, அந்தக் கோத்திரத்தார் முஸ்லிம்களுடன் நட்புறவோடு நடந்து கொள்ள வேண்டும். அப்படி நட்புறவோடு நடந்து கொள்ளவில்லை என்றாலும் முஸ்லிம்களுடன் பகைமை காட்டக் கூடாது. இவ்வகையில் போர் சம்பந்தமான ராணுவ நடவடிக்கைகளை எடுப்பதற்கு முன் ஜுஹைனா கிளையினருடனும் ஓர் உடன்படிக்கையை நபி (ஸல்) அவர்கள் செய்து கொண்டார்கள். இந்த ஜுஹைனா கிளையினரின் வீடுகள் மதீனாவைச் சுற்றி மூன்று இடங்களில் இருந்தன. போரின் நடவடிக்கைகளைத் தொடங்கிய பின் இன்னும் பல கோத்திரத்தாருடனும் உடன்படிக்கைகளைச் செய்து கொண்டார்கள். இதனுடைய விவரங்கள் பின்னால் வர உள்ளன.

இரண்டாவது திட்டம்:-

மக்காவாசிகளின் இந்த வியாபாரப் பாதையை நோக்கி ஒன்றுக்குப் பின் ஒன்றாக பல படைப் பிரிவுகளை அனுப்பி வைப்பது.

(நபி (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட போருக்கு அரபியில் ‘கஸ்வா’ என்றும் அவர்கள் கலந்து கொள்ளாமல் தோழர்கள் மட்டும் சென்று வந்த போர்களுக்கு ‘ஸய்யா’ என்றும் கூறப்படும். நாம் இந்த தமிழாக்கத்தில் கஸ்வாவை ‘போர்’ என்றும் ஸய்யாவை ‘படைப் பிரிவு’ என்றும் குறிப்பிடுகிறோம்.)

**இக்காலத்தில் நபியவர்கள் நிகழ்த்திய போர்களும் அனுப்பிய படைப் பிரிவுகளும்**

போர் செய்வதற்கு அனுமதி வழங்கப்பட்ட பின், மேற்கூறப்பட்ட இரண்டு திட்டங்களையும் அமல்படுத்துவதற்காக ராணுவ நடவடிக்கைகளை நபி (ஸல்) தொடங்கினார்கள். அதாவது, இந்த நடவடிக்கைகள் ஒரு கண்காணிப்பு ரோந்துப் பணிகளைப் போன்று அமைந்திருந்தன. இதனுடைய அடிப்படை நோக்கங்கள் என்னவெனில்:

மதீனாவைச் சுற்றியுள்ள அனைத்து தரை மார்க்கங்களையும், பொது வழிகளையும் நன்கு அறிந்து கொள்ளுதல் பழக்கப்படுத்திக் கொள்ளுதல் அவ்வாறே மக்காவை நோக்கி செல்லும் அனைத்து வழிகளையும் அறிந்து கொள்ளுதல்.

இந்த வழிகளில் குடியிருக்கும் அனைத்துக் கோத்திரத்தாருடனும் சமாதான ஒப்பந்தம் செய்துகொள்ளுதல்.

முஸ்லிம்கள் இப்போது பலமடைந்து விட்டார்கள் வலுபெற்றுவிட்டார்கள் பழைய இயலாமையிலிருந்து விடுதலையடைந்து விட்டார்கள் என்று மதீனாவில் உள்ள இணை வைப்பவர்களுக்கும், யூதர்களுக்கும் அதைச் சுற்றியுள்ள கிராம அரபிகளுக்கும் உணர்த்துதல்.

அத்துமீறி நடந்து கொண்டிருந்த குறைஷிகளுக்கு அவர்களின் முடிவு என்னவாகும் என்பதை எச்சரிக்கை செய்தல். ஏனெனில், இந்த எச்சரிக்கையின் விளைவாக தொடர்ந்து தீவிரமாக செயல்படுத்தி வரும் தங்களது அழிச்சாட்டியங்களை விட்டு அவர்கள் விலகிக் கொள்ளலாம். தங்களதுப் பொருளாதார வழிகளும் பொருளாதாரங்களும் வெகு விரைவில் மிகப் பயங்கரமாக பாதிக்கப்படும் என்ற அச்சம் அவர்களுக்கு ஏற்படலாம். மேலும், முஸ்லிம்கள் அவர்களது நாட்டுக்குள் இருக்கும் போது அவர்களுடன் போர் செய்யும் எண்ணத்தை கைவிடலாம். பிறரை அல்லாஹ்வின் மார்க்கத்திலிருந்து தடுக்காமல் இருக்கலாம். மேலும், மக்காவிலுள்ள அப்பாவி முஸ்லிம்களை வேதனை செய்வதிலிருந்து விலகிக் கொள்ளலாம். எல்லாவற்றிற்கும் மேலாக, அரேபிய தீபகற்பத்தில் அல்லாஹ்வின் மார்க்கத்தைச் சுதந்திரமாக எடுத்து வைக்கும் வாய்ப்பை முஸ்லிம்கள் பெறுவார்கள்.

படைப் பிரிவுகளின் விவரங்களைச் சுருக்கமாகக் காண்போம்:"

1) 'ஸய்ஃபுல் பஹ்ர்'

ஹிஜ்ரி 1, ரமழான் (கி.பி. 623 மார்ச்) மாதம் ஒரு படைப் பிரிவை நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். 30 முஹாஜிர்கள் இந்தப் பிரிவில் இடம்பெற்றனர். அவர்களுக்கு ஹம்ஜா (ரழி) அவர்களைத் தலைவராக ஆக்கினார்கள். ஷாமிலிருந்து மக்காவை நோக்கி வந்து கொண்டிருந்த குறைஷிகளின் வியாபாரக் குழுவை வழி மறிப்பதற்காக இவர்கள் சென்றார்கள். இந்த வியாபாரக் கூட்டத்தில் முந்நூறு நபர்களும் அவர்களுக்குத் தலைமையேற்று அபூஜஹ்லும் வந்து கொண்டிருந்தான். 'ஈஸ்' என்ற நகரத்தின் ஓரத்தில் உள்ள 'ஸய்ஃபுல் பஹ்ர்' எனும் இடத்தை இரு கூட்டத்தினரும் அடைந்த போது சண்டையிடுவதற்காக அணிவகுத்தனர். ஆனால், இரு கூட்டதினருக்கும் நண்பராக இருந்த மஜ்தி இப்னு அம்ர் அல்ஜுஹனி என்பவர் சமரசப் பேச்சுவார்த்தை நடத்தி போரைத் தவிர்க்கச் செய்தார்.

இப்போல் நபி (ஸல்) ஹம்ஜாவுக்கு வெள்ளை நிறக் கொடியைக் கொடுத்தார்கள். இதுதான் நபி (ஸல்) அவர்கள் நிறுவிய முதல் கொடியாகும். இக்கொடியை அபூ மர்ஸத் கன்னாஸ் இப்னு ஹுஸைன் அல்கனவி (ரழி) ஏந்தியிருந்தார்கள்.

2) 'ராபிக்'

ஹிஜ்ரி 1, ஷவ்வால் (கி.பி. 623 ஏப்ரல்) மாதம் நபி (ஸல்) அவர்கள் 'ராபிக்' என்ற இடத்தை நோக்கி ஒரு படைப் பிரிவை அனுப்பினார்கள். இதற்குத் தலைவராக உபைதா இப்னுல் ஹாரிஸ் இப்னுல் முத்தலிப் (ரழி) இருந்தார். இப்படையில் 60 முஹாஜிர்கள் கலந்து கொண்டார்கள். இவர்கள் 'பத்தன் ராபிக்' என்ற இடத்தில் அபூஸுஃப்யானைச் சந்தித்தார்கள். இரு கூட்டத்தார்களும் ஒருவரை நோக்கி ஒருவர் அம்பெய்து கொண்டனர். மற்றபடி, உக்கிரமான சண்டை ஏதும் நடைபெறவில்லை.

காஃபிர்களின் படையிலிருந்த அல்மிக்தாத் இப்னு அம்ர் அல்பஹ்ரானி, உத்பான் இப்னு கஸ்வான் அல்மாஜினி ஆகிய இருவர் முஸ்லிம்களுடன் இணைந்து கொண்டனர். இவர்கள் முஸ்லிமாகத்தான் இருந்தனர். என்றாலும், ஹிஜ்ராவிற்காக மக்காவிலிருந்து வெளியேற முடியாத காரணத்தால், காஃபிர்களுடன் சேர்ந்திருந்தனர். எப்பொழுதாவது சந்தர்ப்பம் கிடைத்தால் தப்பித்து முஸ்லிம்களிடம் சேர்ந்து கொள்ளலாம் என்ற எண்ணத்தில் இந்த வியாபாரக் கூட்டத்துடன் வந்திருந்தனர்.

இந்தப் படையின் கொடி வெள்ளை நிறமாக இருந்தது. இதை மிஸ்தஹ் இப்னு உஸாஸா இப்னு அல்முத்தலிப் இப்னு அப்து மனாஃப் ஏந்தியிருந்தார்கள்.

3. ‘கர்ரார்’

ஹிஜ்ரி 1, துல்கஅதா (கி.பி. 623 மே) மாதம் ‘கர்ரார்’ என்ற இடத்திற்கு ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரழி) தலைமையில் படைப் பிரிவு ஒன்றை நபி (ஸல்) அனுப்பினார்கள். குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை இடைமறிப்பதற்காகப் புறப்பட்ட இவர்களிடம் ‘கர்ரார்’ என்ற இடத்தை தாண்டிச் செல்லக் கூடாது என நபி (ஸல்) அவர்கள் வலியுறுத்தினார்கள். இந்தப் படை கால்நடையாகவே சென்றது. பகலில் பதுங்குவதும் இரவில் நடப்பதுமாக வியாழன் காலை கர்ராரை அடைந்தது. ஆனால், அந்த வியாபாரக் கூட்டமோ இவர்கள் சென்றடைவதற்கு ஒரு நாள் முன்னதாகவே அந்த இடத்தைக் கடந்து சென்று விட்டிருந்ததால், இவர்கள் சண்டையின்றித் திரும்பினர்.

இந்தப் படையின் கொடி வெள்ளை நிறமாக இருந்தது. இதை மிக்தாத் இப்னு அம்ர் (ரழி) ஏந்தியிருந்தார்கள்.

4) ‘அப்வா’ (அ) ‘வத்தான்’

ஹிஜ் 2, ஸஃபர் (கி.பி. 623 ஆகஸ்டு) மாதம் நபி (ஸல்) அவர்கள் 70 முஹாஜிர்களுடன் குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை இடை மறிப்பதற்காக ‘அல்அப்வா’ அல்லது ‘வத்தான்’ என்ற இடத்தை நோக்கிச் சென்றார்கள். ஆனால், சண்டை ஏதும் நடைபெறவில்லை. இந்தப் போருக்குச் செல்வதற்கு முன் நபி (ஸல்) அவர்கள் ஸஅது இப்னு உபாதாவை மதீனாவில் தனக்குக் கலீஃபாவாக (பிரதிநிதியாக) ஆக்கினார்கள். இந்த போரின் போது ‘ழம்ரா’ கிளையினரின் தலைவரான அம்ர் இப்னு மக்ஷி என்பவருடன் நட்பு உடன்படிக்கை செய்தார்கள். அந்த உடன்படிக்கையில் எழுதப்பட்டதாவது:

“இது அல்லாஹ்வின் தூதராகிய முஹம்மது ‘ழம்ரா’ கிளையினருடன் செய்யும் ஒப்பந்தம். ழம்ரா கிளையினர் தங்களது உயிர், பொருள் அனைத்திலும் பாதுகாப்புப் பெற்றவர்களே! அவர்களிடம் சண்டை செய்பவர்களை நாங்களும் எதிர்ப்போம். சண்டை செய்பவர்களுக்கு எதிராக அவர்களுக்கு உதவி செய்வோம். இவர்கள் இஸ்லாமிய மார்க்கத்திற்கு எதிராக போரில் ஈடுபடக் கூடாது. அவ்வாறே நபி (ஸல்) உதவிக்காக அழைத்தால் அவர்களும் உதவ வரவேண்டும். கடல் வற்றினாலும் இந்த உடன்படிக்கை நிலைத்திருக்கும்.”

இதுதான் நபி (ஸல்) அவர்கள் கலந்து கொண்ட முதல் போராகும். நபி (ஸல்) அவர்கள் இந்தப் பயணத்தில் பதினைந்து நாட்கள் மதீனாவிற்கு வெளியில் இருந்தார்கள். இந்தப் போரிலும் வெள்ளைக் கொடியே பயன்படுத்தப்பட்டது. அதை ஹம்ஜா இப்னு அப்துல் முத்தலிப் (ரழி) ஏந்தியிருந்தார்.

5) ‘பூவாத்“

ஹிஜ் 2, ரபீவுல் அவ்வல் (கி.பி. 623 செப்டம்பர்) மாதம் நபி (ஸல்) தங்களது 200 தோழர்களுடன் குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை வழிமறிப்பதற்காகச் சென்றார்கள். இந்த வியாபாரக் கூட்டத்தில் உமய்யா இப்னு கலஃபும் நூறு குறைஷிகளும் இருந்தனர். இவர்களுடன் 2500 ஒட்டகங்கள் இருந்தன. நபி (ஸல்) அவர்கள் ‘ரழ்வா’ என்ற மலைக்கருகில் உள்ள ‘பூவாத்’ என்ற இடம் வரை சென்றார்கள். ஆனால், வியாபாரக் கூட்டம் அந்த இடத்தை முன்கூட்டியே கடந்து விட்டதால் சண்டை ஏதும் நடைபெறவில்லை.

இந்தப் போருக்கு நபி (ஸல்) செல்லும் போது மதீனாவில் ஸஅது இப்னு முஆதை பிரதிநிதியாக நியமித்தார்கள். இப்போரிலும் வெள்ளை நிறக் கொடியே பயன்படுத்தப்பட்டது. அதை ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரழி) ஏந்தியிருந்தார்கள்.

6) ‘ஸஃப்வான்‘‘

ஹிஜ் 2, ரபீவுல் அவ்வல் (கி.பி. 623 செப்டம்பர்) மாதம் ‘குருஸ் இப்னு ஜாபிர் அல்ஃபஹ்’ என்பவன் சில முஷ்ரிக் வீரர்களுடன் மதீனாவின் மேய்ச்சல் நிலங்கள் மீது தாக்குதல் நடத்தி அங்கிருந்த கால்நடைகளில் சிலவற்றைக் கொள்ளையடித்துச் சென்றான். இதை அறிந்த நபி (ஸல்) அவர்கள் தங்களின் எழுபது தோழர்களை அழைத்துக் கொண்டு அவனை விரட்டிப் பிடிப்பதற்காக விரைந்தார்கள். பத்ருக்கு அருகிலுள்ள ‘ஸஃப்வான்’ என்ற இடம் வரை சென்றும் குருஸையும் அவனது ஆட்களையும் பிடிக்க முடியாததால் சண்டையின்றி திரும்பினார்கள். இந்தப் போருக்கு ‘முதல் பத்ர் போர்’ என்றும் பெயர் கூறப்படுகிறது.

இந்தப் போருக்கு நபி (ஸல்) செல்லும் போது மதீனாவில் தனது பிரதிநிதியாக ஜைது இப்னு ஹாஸாவை நியமித்தார்கள். இப்போரிலும் வெள்ளை நிறக் கொடியே பயன்படுத்தப்பட்டது. அதை அலீ இப்னு அபூதாலிப் (ரழி) ஏந்தியிருந்தார்.

7) ‘துல் உஷைரா‘‘

ஹிஜ் 2, ஜுமாதா அல்ஊலா அல்லது ஜுமாதா அல் ஆகிரா (கி.பி. 623 நவம்பர் அல்லது டிசம்பர்) மாதம் நபி (ஸல்) அவர்கள் தமது 150 அல்லது 200 முஹாஜிர் தோழர்களுடன் இந்தப் போருக்காக புறப்பட்டர்கள். இப்போரில் கலந்து கொள்ளும்படி எவரையும் நிர்பந்திக்கவில்லை. இந்த 150 (அல்லது) 200 தோழர்களும் 30 ஒட்டகங்களில் ஒருவர் மாறி ஒருவராக பயணித்தனர். மக்காவிலிருந்து வியாபாரச் சாமான்களுடன் ஷாம் நோக்கி சென்று கொண்டிருந்த குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தினரை வழிமறிப்பதே நபி (ஸல்) அவர்களின் நோக்கமாக இருந்தது. ஆனால், நபி (ஸல்) அவர்கள் ‘துல் உஷைரா’ என்ற இடத்தை அடைவதற்குப் பல நாட்களுக்கு முன்னதாகவே அக்கூட்டம் அந்த இடத்தைக் கடந்து விட்டது தெரியவந்தது. இதே வியாபாரக் கூட்டம் ஷாமிலிருந்து திரும்ப வரும்போது அதை வழிமறிப்பதற்காகச் செல்லும் போதுதான் பிரபலமான இரண்டாவது பத்ர் போர் (பத்ர் அல் குப்ரா) நடைபெற்றது.

நபி (ஸல்) ஜுமாதா அல்ஊலா கடைசியில் இப்போருக்காக வெளியேறி ஜுமாதா அல்ஆகிரா தொடக்கத்தில் மதீனாவிற்குத் திரும்பி வந்தார்கள்.

முஸ்லிம்கள் மீது அத்துமீறக் கூடாது என முத்லிஜ், ழம்ரா மற்றும் அவர்களுடைய நட்பு கிளையினருடன் இப்பயணத்தில் நபி (ஸல்) ஒப்பந்தம் செய்தார்கள்.

இப்போருக்கு நபி (ஸல்) சென்ற போது மதீனாவில் அபூஸலமா இப்னு அப்துல் அஸத் அல்மக்ஜூமி (ரழி) என்பவரைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். இப்போரிலும் வெள்ளை நிறக் கொடியே பயன்படுத்தப்பட்டது. இதை ஹம்ஜா இப்னு அப்துல் முத்தலிப் (ரழி) ஏந்தியிருந்தார்கள்.

8) ‘நக்லா‘‘

ஹிஜ் 2, ரஜப் (கி.பி. 624 ஜனவ) மாதம் நபி (ஸல்) 12 முஹாஜிர்களுடன் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் அல்அஸதி (ரழி) அவர்களை ‘நக்லா’ என்ற இடத்திற்கு அனுப்பி வைத்தார்கள். இருவருக்கு ஓர் ஒட்டகம் வீதமாக இவர்கள் ஒருவர் மாறி ஒருவர் பயணம் செய்தனர்.

நபி (ஸல்) ஒரு கடிதத்தை எழுதி இரண்டு நாட்கள் கழிந்த பின்தான் கடிதத்தைப் படித்துப் பார்க்க வேண்டும் என்று கூறி, அதை அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷிடம் கொடுத்தார்கள். அப்துல்லாஹ் (ரழி) அப்படையை அழைத்துக் கொண்டு மதீனாவிலிருந்து புறப்பட்டு இரண்டு நாட்கள் கழித்து, கடிதத்தைப் படித்துப் பார்த்தார்கள்.

அக்கடிதத்தில் “நீர் எனது இந்தக் கடிதத்தைப் படித்த பிறகு, மக்கா மற்றும் தாம்ஃபிற்கு மத்தியிலுள்ள ‘நக்லா’ என்ற இடத்தை அடையும் வரை தொடர்ந்து செல்லுங்கள். அந்த இடத்தை அடைந்து விட்டால் அங்குத் தங்கி குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை எதிர்பார்த்திருங்கள், அவர்களின் வருகையை அறிந்து எனக்கு செய்தி அனுப்புங்கள்” என்று எழுதப்பட்டிருந்தது. இதைப் படித்த அப்துல்லாஹ் (ரழி) “செவிமடுத்தோம் வழிப்பட்டோம்!” என்று கூறியவராக, இச்செய்தியை தங்கள் தோழர்களுக்கு அறிவித்தார்கள்.

“நான் உங்களை நிர்பந்திக்கவில்லை. யார் வீரமரணம் அடைய விரும்புகிறாரோ அவர் என்னுடன் வரலாம். யார் மரணிப்பதை வெறுக்கிறாரோ அவர் திரும்பிவிடலாம். ஆனால், நான் போர் செய்யத் தயாராக இருக்கிறேன்” என்று அப்துல்லாஹ் (ரழி) தங்கள் தோழர்களிடம் கூறினார். அவர்களது தோழர்கள் “போருக்கு நாங்களும் தயாராக இருக்கிறோம்” என்று கூறினார்கள். இவ்வாறு இவர்கள் தங்களதுப் பயணத்தைத் தொடர்ந்து கொண்டிருந்த போது வழியில் ஸஅது இப்னு அபீவக்காஸும், உத்பா இப்னு கஸ்வானும் தாங்கள் வாகனித்த ஒட்டகத்தைத் தவற விட்டதால், அதைத் தேடுவதில் ஈடுபட்டு படையிலிருந்து பின்னடைந்து விட்டனர்.

அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரழி) படையுடன் ‘நக்லா’ என்ற அந்த இடத்தை வந்தடைந்தார்கள். அங்குக் குறைஷிகளில் அம்ர் இப்னு ஹழ்ரமீ, உஸ்மான் இப்னு அப்துல்லாஹ் இப்னு முகீரா, நவ்ஃபல் இப்னு அப்துல்லாஹ் இப்னு முகீரா மற்றும் முகீரா கிளையினரின் அடிமையான ஹகம் இப்னு கைஸான் ஆகியோருடன் வியாபாரக் குழு ஒன்று உலர்ந்த திராட்சை, பதனிடப்பட்ட தோல் மற்றும் வியாபாரப் பொருட்களுடன் சென்று கொண்டிருந்தது. அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் தங்களது தோழர்களுடன் ஆலோசனை செய்தார்கள். “நாம் சங்கைமிக்க மாதமாகிய ரஜப் மாதத்தின் கடைசித் தேதியில் இருக்கிறோம். இப்போது அவர்களுடன் நாம் சண்டையிட்டால் சங்கைமிக்க மாதத்தின் கண்ணியத்தைப் பாழ்படுத்தியவர்களாகி விடுவோம். ஆனால், போர் செய்யாமல் இன்றிரவு விட்டுவிட்டால் இவர்கள் ஹரம் பகுதிக்குள் நுழைந்து விடுவார்கள்” - இவ்வாறு விவாதம் நடைபெற்ற பின்பு, அவர்களிடம் சண்டையிடலாம் என்று முடிவானது. அதன் பிறகு முஸ்லிம்களில் ஒருவர் அம்ர் இப்னு ஹழ்ரமியை அம்பெய்துக் கொன்றார்.

அடுத்து, முஸ்லிம்கள் உஸ்மான் மற்றும் ஹகம் ஆகிய இருவரையும் கைது செய்தனர். ஆனால் நவ்ஃபல் தப்பித்துவிட்டார். பின்பு இரண்டு கைதிகள், வியாபாரப் பொருட்கள் அனைத்தையும் எடுத்துக்கொண்டு மதீனா வந்தனர். இந்த கனீமாவில்” அல்லாஹ்விற்கும் அவனது தூதருக்கும் ஐந்தில் ஒரு பங்கை ஒதுக்கினார்கள். இதுதான் இஸ்லாமில் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் ஒதுக்கப்பட்ட முதல் கனீமா பங்காகும். இப்போரில்தான் முதன் முதலில் ஒரு எதிரி கொலை செய்யப்பட்டான். மேலும், இப்போரில்தான் முதன் முதலாக எதிரிகள் கைது செய்யப்பட்டனர்.

நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களின் இந்த நடவடிக்கையைக் கடுமையாக வெறுத்தார்கள். மேலும், “சங்கைமிக்க மாதத்தில் போர் செய்ய நான் உங்களுக்குக் கட்டளையிடவில்லையே!” என்று கண்டித்து விட்டு கைதிகள் மற்றும் வியாபாரப் பொருட்கள் விஷயத்தில் மௌனம் காத்தார்கள்.

இந்நிகழ்ச்சியை முஸ்லிம்கள் மீது பழிசுமத்த நல்லதொரு சந்தர்ப்பமாக இணைவைப்போர் பயன்படுத்தினர். முஸ்லிம்கள் மீது பலவாறு பழி சுமத்தினாலும் அந்த அனைத்துப் பழிகளையும் பொய்யான கூற்றுகளையும் முற்றிலும் தகர்த்தெறியும்படி ஒரு வசனத்தை அல்லாஹ் குர்ஆனில் இறக்கினான். அந்த வசனத்தில் முஸ்லிம்கள் செய்ததை விட இணைவைப்போரின் செயல் மிகப்பெரிய மன்னிக்க முடியாத குற்றம் என்று தெளிவுபடுத்தினான்.

(நபியே! துல்கஅதா, துல்ஹஜ், முஹர்ரம், ரஜப் ஆகிய இச்)சிறப்புற்ற மாதங்களில் போர் செய்வதைப் பற்றி உங்களிடம் அ(ந்நிராகரிப்ப)வர்கள் கேட்கின்றனர். (அதற்கு) நீங்கள் கூறுங்கள்: “அவற்றில் போர் புரிவது பெரும் பாவம்(தான்.) ஆனால், (மனிதர்கள்) அல்லாஹ்வுடைய மார்க்கத்(தில் சேருவ)தை (நீங்கள்) தடுப்பதும், அல்லாஹ்வை (நீங்கள்) நிராகரிப்பதும், (ஹஜ்ஜுக்கு வருபவர்களை) மஸ்ஜிதுல் ஹராமுக்கு வரவிடாது தடுப்பதும், அதில் வசிப்போரி(ல் நம்பிக்கை கொண்டோ)ரை அதிலிருந்து வெளியேற்றுவதும் அல்லாஹ்விடத்தில், (அதை விட) மிகப் பெரும் பாவங்களாக இருக்கின்றன. தவிர (நம்பிக்கையாளர்களுக்கு நீங்கள் செய்துவரும்) விஷமம் கொலையை விட மிகக் கொடியது. (அல்குர்ஆன் 2:217)

அதாவது, முஸ்லிம்கள் விஷயத்தில் இணைவைப்போர் ஏற்படுத்திய இந்தக் குழப்பங்களும் கூச்சல்களும் அடிப்படையற்றவை. ஏனெனில், முஸ்லிம்கள் விஷயத்தில் இவ்வாறு கூறுவதற்கு அந்த இணைவைப்போருக்குத் தகுதியே கிடையாது. இஸ்லாமை எதிர்ப்பதற்கும் முஸ்லிம்கள் மீது அநியாயமிழைப்பதற்கும் இந்த இணைவைப்போர் எவ்விதத்திலும் தயக்கம் காட்டவில்லை. முஸ்லிம்கள் சங்கைமிக்க மக்காவில் தங்கியிருந்த போது அவர்களது பொருட்கள் அபகரிக்கப் பட்டன. நபி (ஸல்) அவர்களைக் கொலை செய்ய வெறியுடன் அலைந்தனர். இன்னும் புனிதமிக்க எத்தனையோ கடமைகளையும் உரிமைகளையும் பாழாக்கிய இவர்களுக்கு புனிதத்தைப் பற்றி பேசுவதற்கு என்ன அருகதை இருக்கிறது? புனிதங்களையே மதிக்காத இவர்களுக்கு இப்பொழுது மட்டும் புனிதத்தைப் பற்றி பேசுவதற்கு தகுதி எங்கிருந்து வந்தது? எனவே, முஸ்லிம்கள் இந்தப் புனிதத்தைப் பாழாக்கியது எந்த வகையிலும் அசிங்கமோ குற்றமோ இல்லை. ஆகவே, இணைவைப்பவர்கள் பரப்பிய இந்த வதந்திகள் முற்றிலும் கேவலமான ஒன்றே!

இவ்வசனம் இறக்கப்பட்டதற்குப் பின்பு நபி (ஸல்) அவர்கள் இரண்டு கைதிகளையும் விடுவித்தார்கள். மேலும், கொலை செய்யப்பட்டோன் குடும்பத்தினருக்கு நஷ்டஈடும் வழங்கினர்கள். (ஜாதுல் மஆது)

மேற்கூறப்பட்ட (கஸ்வா, ஸய்யா) போர்கள் அனைத்தும் பத்ர் போருக்கு முன் நிகழ்ந்தவையாகும். இறுதியில் கூறப்பட்ட போரைத் தவிர வேறெதிலும் பொருட்கள் சூறையாடப்படவுமில்லை உயிர்கள் கொலை செய்யப்படவுமில்லை. ஆனால், குருஸ் இப்னு ஜாபிர் அல்ஃபஹ்ரீ தலைமையின் கீழ் இணைவைப்பவர்கள் முஸ்லிம்களின் பொருட்களை கொள்ளையடித்த பின்பே முஸ்லிம்கள் பதில் நடவடிக்கை எடுத்தனர்.

அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரழி) அவர்கள் படையின் மூலம் நிகழ்ந்த சம்பவத்தைப் பார்த்த மக்கா முஷ்ரிக்குகள் பயந்து நடுங்கினர். மிகப்பெரிய ஆபத்து தங்களுக்கு முன் உருவாகி விட்டதை உணர்ந்தனர். முஸ்லிம்கள் மதீனாவில் அடைக்கலம் புகுந்துவிட்டால் எத்தகைய ஆபத்து நிகழும் என்று பயந்தனரோ அந்த ஆபத்தில் இப்போது சிக்கிக் கொண்டனர். மதீனாவாசிகள் மிகுந்த விழிப்புடனும் கண்காணிப்புடனும் இருக்கிறார்கள் தங்களின் வணிகப் பயணங்கள் ஒவ்வொன்றையும் முழுமையாகக் கண்காணிக்கின்றனர் முஸ்லிம்கள் 300 மைல்கள் கூட படையெடுத்து வந்து தங்களைக் கொலை செய்யவோ, சிறைபிடிக்கவோ, தங்களின் செல்வங்களை அள்ளிக்கொண்டு நிம்மதியாக திரும்பவோ முழு ஆற்றல் பெற்றுவிட்டனர் என்பதை இப்போது இந்த இணைவைப்பவர்கள் நன்கு விளங்கிக் கொண்டனர்.

மேலும், தங்களின் ஷாம் தேசத்தை நோக்கிய வியாபார வழித்தடம் மிகுந்த ஆபத்திற்குள்ளாகி இருப்பதையும் நன்கு உணர்ந்து கொண்டனர். இருந்தும் தங்களின் வழிகேட்டிலிருந்து விலகி ஜுஹைனா மற்றும் ழம்ரா கிளையினர் செய்ததைப் போன்று சமாதான வழியைக் கையாள் வதற்குப் பதிலாக மீண்டும் முன்பை விட அதிகமாக பகைமை கொள்ளலானார்கள். இதற்கு முன்னர் முஸ்லிம்களை அவர்களது நாட்டுக்குள் வைத்தே

அழித்து விடுவோம் என்று எச்சரிக்கை செய்து கொண்டிருந்ததை இப்போது நிறைவேற்றியே ஆகவேண்டும் என்று உறுதி பூண்டனர். மடத்தனமான இந்த எண்ணம்தான் இவர்களை பத்ர் போருக்கு அழைத்து வந்தது.

அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரழி) அவர்களின் இந்த சம்பவத்திற்குப் பின்பு ஹிஜ்ரி 2, ஷஅபான் மாதத்தில் அல்லாஹ் முஸ்லிம்களுக்குப் போர் புரிவதை கடமையாக்கினான். இவ்விஷயத்தில் பல தெளிவான வசனங்களை இறக்கினான்.

உங்களை எதிர்த்துப் போர் புரிய முற்பட்டோரை அல்லாஹ்வுடைய பாதையில் நீங்களும் எதிர்த்துப் போர் புரியுங்கள். ஆனால், நீங்கள் (எல்லை) அத்துமீற வேண்டாம். ஏனென்றால், நிச்சயமாக அல்லாஹ் அத்துமீறுபவர்களை நேசிப்பதில்லை.

ஆகவே (உங்களை எதிர்த்துப் போர் புரிய முற்பட்ட) அவர்களை கண்ட இடமெல்லாம் வெட்டுங்கள். உங்களை (உங்கள் ஊரிலிருந்து) அவர்கள் வெளியேற்றியவாறே நீங்களும் அவர்களை வெளியேற்றி விடுங்கள். (அவர்கள் செய்யும்) கலகம் கொலையை விட மிகக் கொடியது. ஆனால் (அவர்களில்) எவரேனும் அபயம் தேடி மஸ்ஜிதுல் ஹராமில் இருந்தால், அங்கு அவர்கள் உங்களை எதிர்த்து போர் புரிய முற்படும் வரையில் நீங்கள் அவர்களை வெட்டாதீர்கள். (அவ்விடத்திலும்) அவர்கள் உங்களை எதிர்த்துப் போர் புரிந்தால் நீங்களும் அவர்களை வெட்டுங்கள். அந்த நிராகரிப்பவர்களுக்கு (உரிய) கூலி இதுவே!

(இதன்) பின்னும் அவர்கள் (உங்களை எதிர்த்துப் போர் புரியாது) விலகிக் கொண்டால் (நீங்கள் அவர்களை வெட்டாதீர்கள்.) நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்பவனாகவும், நிகரற்ற அன்புடையவனாகவும் இருக்கின்றான்.

அன்றி, (இஸ்லாமிற்கு எதிராகச் செய்யப்படும்) கலகம் (முற்றிலும்) நீங்கி, அல்லாஹ்வுடைய மார்க்கம் உறுதியாக நிலைபெறும் வரையில் அவர்களை எதிர்த்துப் போர் புரியுங்கள். ஆனால், அவர்கள் (கலகம் செய்யாது) விலகிக் கொண்டால் (அவர்களுக்கு மன்னிப்பு உண்டு), அநியாயம் செய்பவர்களைத் தவிர (மற்றவர்கள் மீது) அறவே அத்து மீறக்கூடாது. (அல்குர்ஆன் 2:190-193)

மேற்கூறப்பட்ட வசனங்களைத் தொடர்ந்து மேலும் பல வசனங்களை இறக்கினான். அவ்வசனங்களில் போர் முறைகளைக் கற்றுக் கொடுத்து, போருக்கு ஆர்வமூட்டி அதன் சட்டங்களை விவரித்தான்.

(நம்பிக்கையாளர்களே! உங்களை எதிர்த்துப் போர் புரியும்) நிராகரிப்பவர்களை நீங்கள் சந்திப்பீர்களாயின், (தயக்கமின்றி) அவர்களுடைய கழுத்துகளை வெட்டுங்கள். அவர்களை முறியடித்துவிட்டால், (மிஞ்சியவர்களைச் சிறை) பிடித்துக் கட்டுங்கள் அதன் பின்னர், அவர்களுக்குப் பதிலாக யாதொரு ஈடு பெற்றேனும் அல்லது (ஈடின்றி அவர்கள் மீது) கருணையாகவேனும் விட்டுவிடுங்கள்.

இவ்வாறு, (எதிரிகள்) தம் ஆயுதத்தைக் கீழே வைக்கும் வரையில் (போர் செய்யுங்கள்.) இது அல்லாஹ்(வின் கட்டளை. அவன்) நாடியிருந்தால், (அவர்கள் உங்களுடன் போர் புரிய வருவதற்கு முன்னதாகவே) அவர்களைப் பழி வாங்கியிருப்பான். ஆயினும், (போரின் மூலம்) உங்களில் சிலரை, சிலரைக் கொண்டு சோதிக்கின்றான்.

ஆகவே, அல்லாஹ்வுடைய பாதையில் எவர்கள் வெட்டப்பட்டு (இறந்து) விடுகின்றார்களோ, அவர்களுடைய நன்மைகளை அவன் வீணாக்கி விட மாட்டான். (தக்க கூலியையே கொடுப்பான்.) அவர்களை நேரான பாதையில் செலுத்தி அவர்களுடைய நிலைமையையும் சீர்படுத்தி விடுவான்.

அன்றி, அவன் அவர்களுக்கு அறிவித்திருந்த சுவனபதியிலும் அவர்களைப் புகுத்துவான்.

நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி புரிந்தால், அவனும் உங்களுக்கு உதவி புரிந்து உங்களுடைய பாதங்களை உறுதியாக்கிவிடுவான். (அல்குர்ஆன் 47:4-7)

பின்பு, போர் கடமையாக்கப்பட்டதை கேள்விப்பட்டு உள்ளம் நடுங்கியவர்களை மிக வன்மையாக பழித்து குர்ஆன் வசனங்களை இறக்கினான்:

நம்பிக்கை கொண்டவர்களிலும் சிலர், (போரைப் பற்றி) யாதொரு (தனி அத்தியாயம் இறக்கப்பட வேண்டாமா? என்று கூறுகின்றனர். அவ்வாறே (தெளிவான) ஒரு திட்டமான அத்தியாயம் இறக்கப்பட்டு, போர் செய்யுமாறு அதில் கூறப்பட்டிருந்தால், எவர்களுடைய உள்ளங்களில் நோய் இருக்கின்றதோ அவர்கள், மரண அவஸ்தையில் சிக்கி மயங்கிக் கிடப்பவர் பார்ப்பதைப் போல் (நபியே!) உங்களை அவர்கள் நோக்குவார்கள். ஆகவே, அவர்களுக்குக் கேடுதான். (அல்குர்ஆன் 47:20)

போர் கடமையாக்கப்பட்டதும், அதற்கு ஆர்வமூட்டப்பட்டதும், அதற்குரிய தயாரிப்புகளைச் செய்ய வேண்டுமென்று கட்டளையிடப்பட்டதும் அக்காலச் சூழ்நிலையின் தேவையாகவும் கட்டாயமாகவும் இருந்தது. சூழ்நிலைகளை நன்கு அலசிப்பார்க்கும் ஆற்றலுள்ள தலைவர் யாராக இருப்பினும் அக்கால அவசியத்தைக் கருதி திடீர் நிகழ்வுகளை எதிர்கொள்ள தயாராக இருக்க வேண்டுமென தனது படைகளுக்கு நிச்சயம் கட்டளையிட்டிருப்பார். விஷயம் இவ்வாறிருக்க அனைத்தையும் அறிந்தவனும் மிகைத்தவனுமான அல்லாஹ் இக்கட்டளைகளை முஸ்லிம்களுக்கு பிறப்பிக்காமல் இருப்பானா? அக்கால சூழ்நிலையோ முற்றிலும் சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் மத்தியில் கடும் மோதல்களை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷுடைய படையின் நிகழ்ச்சி இணைவைப்போரின் ரோஷத்திற்கும் இன பெருமைக்கும் மிகப் பெரிய அடியாக இருந்தது. இந்நிகழ்ச்சி இவர்களுக்கு மிகுந்த நோவினை அளித்தது மட்டுமல்லாமல் நெருப்புக் கங்குகளில் புரள்பவர்களாக இவர்களை ஆக்கி விட்டது.

போர் சம்பந்தமான இறைவசனங்களின் கருத்துக்களை ஆழ்ந்து சிந்திக்கும் போது பெரிய போர் சமீபத்தில் நடக்கப்போகிறது, அதன் முடிவில் அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் முஸ்லிம்களுக்கே கிடைக்கும் என்பதை நன்கு தெரிந்து கொள்ளலாம். பாருங்கள்! எவ்வாறு முஸ்லிம்களுக்கு அல்லாஹ் கட்டளையிடுகிறான். "மக்கா இணைவைப்பாளர்கள் உங்களை உங்கள் ஊரிலிருந்து வெளியேற்றியது போன்று நீங்களும் அவர்களை வெளியேற்றி விடுங்கள்" என்று அல்லாஹ் முஸ்லிம்களுக்குக் கட்டளை பிறப்பித்தான். (பார்க்க மேற்கூறப்பட்டுள்ள அல்குர்ஆன் 2:191).

மேலும், வெற்றி பெற்ற ராணுவத்தினர் கைதிகளிடம் எந்த முறையில் நடந்துகொள்ள வேண்டுமென்ற சட்டங்களை மேற்கூறப்பட்ட வசனங்களில் அல்லாஹ் எவ்வாறு விவரித்திருக்கின்றான் என்பதைப் பாருங்கள். ஆக, இவை அனைத்தும் முஸ்லிம்களுக்குத்தான் இறுதியில் வெற்றி கிடைக்கும் என்பதைத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றன. இருப்பினும் முஸ்லிம்களின் ஒவ்வொரு வீரரும் அல்லாஹ்வின் பாதையில் தனது வீரத்தை வெளிப்படுத்திக் காட்டவேண்டும் என்பதற்காக இந்த நற்செய்திகளை அல்லாஹ் (உடனே வெளிப்படுத்தாமல்) சற்று மறைத்தே வைத்தான்.

இந்த நாட்களில்தான் ஹிஜ்ரி 2, ஷஅபான் மாதம் (கி.பி. 624 பிப்ரவயில்) அல்லாஹ் ‘பைதுல் முகத்தஸின்’ திசையிலிருந்து கஅபாவின் பக்கம் கிப்லாவை மாற்றிக் கொள்ளுங்கள் என கட்டளையிட்டான். இதன் விளைவு, பிளவுகளை உண்டாக்க வேண்டுமென்பதற்காக முஸ்லிம்களின் அணியிற்குள் புகுந்து கொண்ட நயவஞ்சகர்களும் நம்பிக்கையில் பலவீன மானவர்களும் முஸ்லிம்களை விட்டு விலகி, தங்களது பழைய

கொள்கைக்கே திரும்பிச் சென்றனர். மோசடிக்காரர்கள் மற்றும் துரோகம் செய்பவர்களை விட்டும் முஸ்லிம்களின் அணி தூய்மை அடைந்தது.

கிப்லா மாற்றப்பட்டதால் ஏற்பட்ட பெரிய பலன் இதுவே ஆகும். மேலும், கிப்லா மாற்றப்பட்டதில் ஒரு நுட்பமான அறிவிப்பும் இருக்கலாம். அதாவது, முஸ்லிம்கள் தங்களது வாழ்க்கையில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்க இருக்கிறார்கள். இந்தத் தொடக்கம், முஸ்லிம்கள் தங்களின் கிப்லாவைக் கைப்பற்றுவது கொண்டு முடிவுபெறும் சத்தியத்திலிருக்கும் ஒரு சமுதாயத்தின் கிப்லா எதிரிகளின் கட்டுப்பாட்டில் இருந்தாலும், அந்த சமுதாயம் அந்த கிப்லாவை எதிரிகளின் கட்டுப்பாட்டிலிருந்து ஒரு நாள் விடுவித்தே தீரும் என்பதை உணர்த்தும் ஒரு நுட்பமான சுட்டிக்காட்டலும் கிப்லா மாற்றப்பட்டதில் இருக்கலாம்.

இதுபோன்ற கட்டளைகளினாலும், சங்கைமிகு குர்ஆன் வசனங்களின் சுட்டிக் காட்டுதலினாலும். அல்லாஹ்வின் பாதையில் போர் புரிய வேண்டும் அல்லாஹ்வின் மார்க்கத்தை உயர்த்துவதற்காக தீர்வான ஒரு போரை சந்திக்க வேண்டும் என்ற ஆசையும் உற்சாகமும் அக்கால முஸ்லிம்களிடம் மேலோங்கியிருந்தது.

## பெரிய பத்ர் போர்

### போருக்குரிய காரணம்

“உஷைரா’ என்ற போரைப் பற்றி நாம் முன்பு குறிப்பிட்டபோது மக்காவிலிருந்து ஷாமிற்கு சென்று கொண்டிருந்த வியாபாரக் கூட்டம் ஒன்று நபி (ஸல்) அவர்களிடமிருந்து தப்பித்து விட்டது என்று கூறியிருந்தோம். இந்த வியாபாரக் கூட்டம் ஷாமிலிருந்து மக்காவிற்கு திரும்பும் நாள் நெருங்கிய போது இதன் செய்தியை அறிந்து வருவதற்காக தல்ஹா இப்னு உபைதுல்லாஹ், ஸஈது இப்னு ஜைது (ரழி) ஆகிய இருவரை நபி (ஸல்) மதீனாவின் வடக்குத் திசையின் பக்கம் அனுப்பினார்கள். இவ்விருவரும் ‘ஹவ்ரா’ என்ற இடத்தை அடைந்து அங்கு தங்கியிருந்தனர். அபூ ஸுஃப்யான் வியாபாரக் கூட்டத்துடன் அவ்விடத்தை அடைந்த போது அவ்விருவரும் மதீனாவிற்குத் திரும்பி, செய்தியை நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள்.

இந்த வியாபாரக் கூட்டம் மிகப்பெரிய அளவில் குறைஷித் தலைவர்களுக்குரிய செல்வங்களுடன் சென்று கொண்டிருந்தது. இவர்களிடம் 50,000 தங்க நாணயங்களுக்குக் குறையாத அளவு வியாபாரப் பொருட்கள் 1,000 ஒட்டகங்களில் வந்து கொண்டிருந்தன. ஆனால், இவ்வளவு பெரிய வியாபாரக் கூட்டத்தைப் பாதுகாப்பதற்கு 40 வீரர்கள் மட்டுமே இருந்தனர்.

மக்காவாசிகளுக்கு பொருளாதார ரீதியாக மிகப்பெரிய சேதத்தை உண்டு பண்ணுவதற்கு இது முஸ்லிம்களுக்கு கிடைத்த பெரும் வாய்ப்பாகும். இந்த சேதத்தை ஏற்படுத்திவிட்டால் காலங்காலமாக காஃபிர்களின் உள்ளங்கள் துடிதுடித்துக் கொண்டேயிருக்கும். இப்போது நபி (ஸல்) முஸ்லிம்களுக்கு அறிவிப்புச் செய்தார்கள். “இதோ... குறைஷிகளின் வியாபாரக் கூட்டம் அவர்களது பொருட்களுடன் வருகிறது. அக்கூட்டத்தை நோக்கி நீங்கள் புறப்படுங்கள். அல்லாஹ் அந்தப் பொருட்களை உங்களுக்கு அளிக்கக் கூடும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

இப்போரில் கலந்துகொள்ள வேண்டுமென நபி (ஸல்) எவரையும் வலியுறுத்தவில்லை. காரணம் வியாபாரக் கூட்டத்திற்குப் பதிலாக மக்காவின் படையினருடன் பத்ர் மைதானத்தில் பெரிய அளவில் மூர்க்கமான சண்டையும் மோதலும் நிகழுமென்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அதாவது, செல்வங்களுக்குப் பதில் சண்டை நிகழுமென்று அப்பொழுது நபி (ஸல்) அவர்களுக்குத் தெரியாததால் இப்பயணத்தில் கலந்து கொள்வது

அவரவரின் விருப்பம் என்று நபி (ஸல்) விட்டு விட்டார்கள். இதற்கு முன்பு தாங்கள் கண்ட சிறிய பெரிய ராணுவப் பயணங்களில் நிகழ்ந்ததைப் போன்றுதான் இந்தப் பயணத்திலும் நிகழும் என்றெண்ணி அதிகமான நபித்தோழர்கள் இப்பயணத்தில் கலந்துகொள்ளாமல் மதீனாவிலேயே தங்கிவிட்டனர். அதை நபி (ஸல்) அவர்களும் குற்றமாகக் கருதவில்லை.

**இஸ்லாமியப் படையும் அதற்கு தளபதிகள் நியமிக்கப்படுவதும்**

நபி (ஸல்) மதீனாவிலிருந்து வெளியேற ஆயத்தமானார்கள். அவர்களுடன் 310ற்கும் மேற்பட்டவர்கள் (313 அல்லது 314 அல்லது 317) வீரர்கள் வெளியேறினார்கள். அதாவது 82 அல்லது 83 அல்லது 84 முஹாஜிர்களும், அவ்ஸ் கிளையைச் சேர்ந்த 61 அன்ஸாரிகளும், கஸ்ரஜ் கிளையைச் சேர்ந்த 170 அன்ஸாரிகளும் இருந்தனர். மதீனாவிலிருந்து வெளியேறும் போது எவ்வித ஆரவாரமும் இல்லாமல் குறைவான தயாரிப்புடன்தான் முஸ்லிம்கள் சென்றார்கள். முஸ்லிம்களிடம் ஒன்று அல்லது இரண்டு குதிரைகளே இருந்தன. ஜுபைர் இப்னு அவ்வாம் (ரழி) அவர்களிடம் ஒரு குதிரையும் மிக்தாது இப்னு அஸ்வத் (ரழி) அவர்களிடம் ஒரு குதிரையும் இருந்தது. மேலும், 70 ஒட்டகங்கள் மட்டும் இருந்தன. அதில் ஓர் ஒட்டகத்திற்கு இருவர் அல்லது மூவராக மாறிமாறி பயணம் செய்தனர். நபி (ஸல்) மற்றும் அலீ, மர்ஸத் இப்னு அபூ மர்ஸத் கனவி (ரழி) ஆகிய மூவரும் ஒரே ஒட்டகத்தில் மாறிமாறி பயணம் செய்தனர்.

இம்முறை மதீனாவிற்கும் அங்கு தொழுகை நடத்துவதற்கும் பிரதிநிதியாக அப்துல்லாஹ் இப்னு உம்மு மக்தூம் (ரழி) அவர்களை நபி (ஸல்) நியமித்தார்கள். நபி (ஸல்) மதீனாவிலிருந்து வெளியேறி 'ரவ்ஹா' என்ற இடத்தை அடைந்த போது அபூலுபாபா இப்னு அப்துல் முன்திர் (ரழி) அவர்களைப் பிரதிநிதியாக நியமித்து மதீனா அனுப்பி வைத்தார்கள்.

இப்போருக்கான பொதுவான தலைமைத்துவத்தின் வெள்ளைக் கொடியை 'முஸ்அப் இப்னு உமைர் அல்குறைஷி அல்அப்த' (ரழி) அவர்களிடம் வழங்கினார்கள்.

படையை இரண்டு பிரிவாக ஆக்கினார்கள்.

1) முஹாஜிர்களின் படை: இதற்குரிய கொடியை அலீ இப்னு அபூ தாலிப் (ரழி) அவர்களிடம் கொடுத்தார்கள். இக்கொடிக்கு 'உகாப்' என்று சொல்லப்பட்டது.

2) அன்ஸாரிகளின் படை: இதற்குரிய கொடியை ஸஅது இப்னு முஆத் (ரழி) அவர்களிடம் கொடுத்தார்கள். இந்த இரு படைகளின் கொடி கருப்பு நிறமுடையதாக இருந்தது.

படையின் வலப் பக்கப் பிரிவிற்கு ஸுபைர் இப்னு அவ்வாம் (ரழி) அவர்களைத் தலைவராக்கினார்கள். இடப் பக்கப் பிரிவிற்கு மிக்தாது இப்னு அம்ர் (ரழி) அவர்களைத் தலைவராக்கினார்கள். நாம் முன்பு கூறியது போன்று இவ்விருவர்தான் குதிரை வீரர்களாக இருந்தார்கள். போரின் கடைசி பிரிவிற்கு கைஸ் இப்னு அபூ ஸஃஸஆ (ரழி) அவர்களைத் தலைவராக்கினார்கள். மற்றபடி பொது தளபதியாகவும், படையை வழி நடத்துபவராவும் நபி (ஸல்) அவர்களே விளங்கினார்கள்.

**இஸ்லாமியப் படை பத்ரை நோக்கி**

நபி (ஸல்) அவர்கள் சரியான தயாரிப்பு இல்லாத இப்படையுடன் மதீனாவின் வலப் பக்கத்திலிருந்து வெளியேறி மக்காவை நோக்கிச் செல்லும் பிரதான பாதையில் சென்றார்கள். 'ரவ்ஹா' என்ற கிணற்றை அடைந்து, அங்கு தங்கிவிட்டு மக்காவின் பிரதான பாதையை தனது இடப்பக்கத்தில் விட்டுவிட்டு வலப்பக்கமாக 'நாஸியா' என்ற இடம் வழியாக வெளியேறி பத்ரை நோக்கி சென்றார்கள். 'நாஸியா' என்ற இடத்தின் ஓரமாக

பயணித்து அங்குள்ள பள்ளத்தாக்கைக் கடந்தார்கள். அந்தப் பள்ளத்தாக்கிற்கு பெயர் ‘ருஹ்கான்’ எனப்படும். அது நாஸியா மற்றும் ‘ஸஃப்ரா’ என்ற இடத்திற்கு மத்தியிலுள்ள பள்ளத்தாக்காகும்.

பின்பு ஸஃப்ராவின் குறுகலான வழியாகச் சென்று ஸஃப்ராவை அடைந்தார்கள். ஸஃப்ரா என்ற இடத்தில் தங்கி, பஸ்பஸ் இப்னு அம்ர் அல் ஜுஹனி, அதி இப்னு அபூஸக்பா அல் ஜுஹ்னி (ரழி) ஆகிய இருவரையும் பத்ர் பள்ளத்தாக்கிற்கு அனுப்பி குறைஷிகளுடைய வியாபாரக் கூட்டத்தின் செய்தியைத் துப்பறிந்து வருமாறு அனுப்பினார்கள்.

**மக்காவில் எச்சரிப்பவர்**

வியாபாரக் கூட்டத்திற்குப் பொறுப்பாக இருந்த அபூஸுஃப்யான் மிகுந்த எச்சரிக்கையுடனும் பாதுகாப்புடனும் இருந்தார். மக்காவின் பாதை இப்போது ஆபத்துகள் நிறைந்தது என்பதையும் அறிந்திருந்தார். எனவே, செய்திகளைச் சேகரித்தவராகத் தனக்கு எதிர்வரும் வாகனிகளிடம் நிலைமைகளை விசாரித்துக் கொண்டே பயணித்தார். அப்போது முஹம்மது (ஸல்) தங்களது தோழர்களை அழைத்துக் கொண்டு இந்த வியாபாரக் கூட்டத்தை கைப்பற்ற புறப்பட்டு விட்டார்கள் என்ற செய்தி அபூஸுஃப்யானுக்குக் கிடைத்தது. அபூஸுஃப்யான் உடனடியாக ழம்ழம் இப்னு அம்ர் அல்கிஃபா என்பவருக்கு கூலி கொடுத்து, மக்காவிற்குச் சென்று தங்களின் வியாபாரக் கூட்டத்தை காப்பாற்றிக் கொள்ள விரைந்து வருமாறு குறைஷிகளுக்கு அறிவிப்புச் செய்ய அனுப்பி வைத்தார். ழம்ழம் மக்காவிற்கு விரைந்து ‘பத்னுல் வாதி’ என்ற இடத்தில் ஒட்டகத்தின் மீது நின்றவராக கூக்குரலிட்டார். மேலும், ஒட்டகத்தின் மூக்கை அறுத்து அதன் மேலுள்ள கஜாவா பெட்டியையும் மாற்றி அமைத்து தனது சட்டையையும் கிழித்துக் கொண்டார். பின்பு “குறைஷிகளே! வியாபாரக் கூட்டம்! வியாபாரக் கூட்டம்! அபூ ஸுஃப்யானுடன் வந்து கொண்டிருக்கும் செல்வங்களை முஹம்மது தன் தோழர்களுடன் வழிமறிக்கக் கிளம்பிவிட்டார். அது உங்களுக்குக் கிடைக்குமென்று நான் கருதவில்லை. உதவி! உதவி! காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்!” என்று உரக்கக் கத்தினார்.

**மக்காவாசிகள் போருக்குத் தயார்**

இதைக் கேட்ட மக்காவாசிகள் அங்குமிங்கும் ஓடலானார்கள். “என்ன! முஹம்மதும் அவரது தோழர்களும் எங்களது வியாபாரக் கூட்டம், இப்னுல் ஹழ்ரமியின் வியாபாரக் கூட்டத்தைப் போன்று ஆகிவிடுமென்று எண்ணுகிறார்களா? ஒருக்காலும் அவ்வாறு ஆகாது. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர் எதிர்பார்க்காதது நடக்கப் போகிறது. அதை அவர் நன்கு அறிந்து கொள்வார்” என்று பேசிக் கொண்டனர். மக்காவில் உள்ள அனைவரும் வெளியேறத் தயாரானார்கள். அப்படி தன்னால் முடியவில்லையானாலும் தனக்குப் பதிலாக மற்றொருவரை அனுப்பி வைத்தார்கள். மக்காவிலுள்ள பிரசித்திபெற்ற பிரமுகர்கள் அனைவரும் இப்போரில் கலந்து கொண்டனர். ஆனால், அதில் கலந்து கொள்ள முடியாத அபூலஹப் மட்டும் தனக்குக் கடன் தரவேண்டிய ஒருவரை தனக்குப் பகரமாக அனுப்பினான். மேலும், குறைஷிகள் தங்களைச் சுற்றியுள்ள அரபியர்கள் அனைவரையும் ஒன்று சேர்த்தனர். ‘அதீ’ கிளையினரைத் தவிர அனைத்துக் கூட்டத்தினரும் அதில் கலந்து கொண்டனர். ‘அதீ’ கிளையினரிலிருந்து ஒருவர்கூட கலந்து கொள்ளவில்லை.

**மக்கா நகர படையின் அளவு**

மக்கா படை புறப்படும் போது அதில் 1300 வீரர்கள் இருந்தனர். இவர்களிடம் 100 குதிரைகளும் 600 கவச ஆடைகளும் இன்னும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாத அளவிற்கு அதிகமான ஒட்டகங்களும் இருந்தன. இந்தப் படையின் பொதுத் தலைவனாக அபூ ஜஹ்ல் இப்னு ஹிஷாம் இருந்தான். இப்படைக்கு செலவு செய்வதற்குரிய பொறுப்பைக்

குறைஷிகளின் ஒன்பது முக்கியஸ்தர்கள் ஏற்றுக் கொண்டனர். ஒரு நாள் ஒன்பது ஒட்டகம் மற்றொரு நாள் பத்து ஒட்டகம் என அறுத்து உணவளித்தனர்.

**பக்ர் கிளையினரை அஞ்சுதல்**

மக்காவின் படை புறப்படுவதற்கு ஒன்றுகூடிய போது பக்ர் கிளையினரைப் பற்றிய நினைவு அவர்களுக்கு வந்தது. குறைஷிகளுக்கும் இவர்களுக்குமிடையில் நீண்ட காலமாகப் பகைமை இருந்தது. இவர்கள் பின்புறமாகத் தங்களை தாக்கிவிட்டால் இரு நெருப்புக்கிடையில் சிக்கிக் கொள்வோமே என்று பயந்து பின்வாங்கினர். ஆனால், அந்நேரத்தில் பக்ர் கிளையினரின் முக்கிய பிரிவான கினானாவின் தலைவர் சுராகா இப்னு மாலிக் இப்னு ஜுஃஷுமின் உருவத்தில் ஷைத்தான் தோற்றமளித்து “கினானா கிளையினர் உங்களுக்குப் பின்புறமாக தாக்குவதிலிருந்து நான் பாதுகாப்பளிக்கிறேன். நீங்கள் துணிந்து செல்லலாம்” என்று கூறினான்.

**மக்காவின் படை புறப்படுகிறது**

இப்படை தங்களது இல்லங்களிலிருந்து புறப்பட்ட நிலையை அல்லாஹ் இவ்வாறு விவரிக்கின்றான்:

“பெருமைக்காகவும் மனிதர்களுக்குக் காண்பிப்பதற்காகவும் தங்கள் வீடுகளிலிருந்து (முஸ்லிம்களை எதிர்க்க ‘பத்ர்’ போருக்குப்) புறப்பட்டனர். மேலும் மக்களை அல்லாஹ்வுடைய பாதையில் செல்வதைத் தடை செய்கின்றனர்...” (அல்குர்ஆன் 8:47)

அல்லாஹ்வுடனும் அவனுடைய தூதருடனும் போர் செய்வதற்காக, தங்களது முழு தயாரிப்புடனும் ஆயுதங்களுடனும் புறப்பட்டனர். மேலும், முஸ்லிம்கள் தங்களது வியாபாரக் கூட்டத்தைத் தாக்குவதற்குத் துணிவு கொண்டதைப் பார்த்து மிகுந்த கோபத்துடனும் வெறியுடனும் புறப்பட்டனர்.

மிக விரைவாக பத்ரை நோக்கி மக்காவின் வடப்புற வழியாக பயணித்தனர். ‘உஸ்வான்’ பள்ளத்தாக்கு, பிறகு குதைத், பிறகு ஜுஹ்ஃபாவை அடைந்தனர். அது சமயம் அபூ ஸுஃப்யானிடமிருந்து புதிய தகவல் ஒன்று வந்தது. அதாவது, “நீங்கள் உங்களது வியாபாரக் கூட்டத்தையும், உங்களது செல்வங்களையும், ஆட்களையும் பாதுகாப்பதற்காகத்தான் மக்காவிலிருந்து புறப்பட்டீர்கள். அல்லாஹ் அவை அனைத்தையும் பாதுகாத்து விட்டான். ஆகவே, நீங்கள் திரும்பி விடுங்கள்” என்று அபூஸுஃப்யான் எழுதியிருந்தார்.

**வியாபாரக் கூட்டம் தப்பித்தது**

அபூ ஸுஃப்யானின் நிலைமைப் பற்றி சிறிது பார்ப்போம்:

அபூ ஸுஃப்யான் மக்காவை நோக்கிய பிரதான பாதையில் சென்று கொண்டிருந்தாலும் மிகவும் சுதாரிப்புடன் நிலைமைகளை நன்கு அலசி ஆராய்ந்து கொண்டு தன்னுடைய வியாபாரக் கூட்டத்தை வழிநடத்திச் சென்றார். பத்ருக்கு அருகில் மஜ்தீ இப்னு அம்ரை சந்தித்தார். அவரிடம் “மதீனாவின் படைகளை நீங்கள் பார்த்தீர்களா?” என்று விசாரித்தார். அதற்கவர் “நான் இங்கு புதிதாக யாரையும் பார்க்கவில்லை. எனினும், இரு வாகனிகள் இந்த நீர் தடாகத்திற்கு அருகில் தங்களது ஒட்டகங்களைப் படுக்க வைத்தனர். பின்பு, தங்களது தோல் பையில் தண்ணீரை நிரப்பிக் கொண்டனர். சிறிது நேரம் கழித்து அங்கிருந்து புறப்பட்டுச் சென்றனர்” என்று கூறினார்.

இதைக் கேட்டவுடன், அபூ ஸுஃப்யான் அவர்கள் ஒட்டகங்களைப் படுக்க வைத்திருந்த இடத்திற்கு விரைந்தார். அந்த ஒட்டகங்களின் சாணங்களைக் கிளறி அதில் பேரீத்தங்கொட்டைகள் இருப்பதைப் பார்த்தவுடன் அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது

யஸ்ப் (மதீனா) வாசிகளின் ஒட்டக உணவாகும் என்று கூறி தனது வியாபாரக் கூட்டத்திடம் விரைந்து வந்து அதன் பயண திசையை மேற்கே, கடற்கரை பகுதியை நோக்கி மாற்றினார். பத்ர் வழியாக மக்கா நோக்கி செல்லும் பிரதான பாதையை இடது பக்கத்தில் விட்டுவிட்டார். தனது இந்த தந்திரத்தின் மூலம் மதீனாவின் படையிடம் சிக்காமல் தப்பித்துக் கொண்டார். இதற்குப் பின்பே நாம் முன்பு கூறிய கடிதத்தை மக்காவின் படையினருக்கு எழுதியனுப்பினார்.

**திரும்பிட நினைத்த மக்கா படையில் பிளவு**

அபூஸுஃப்யான் எழுதிய கடிதம் குறைஷிகளுக்கு கிடைத்த போது அவர்கள் அனைவரும் திரும்பிவிடலாம் என்றே எண்ணினர். ஆனால், குறைஷிகளின் அட்டூழியக்காரன் அபூஜஹ்ல் கர்வத்துடன் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாங்கள் திரும்பமாட்டோம் நாங்கள் பத்ருக்குச் செல்வோம் அங்கு மூன்று நாட்கள் தங்குவோம் ஒட்டகங்களை அறுத்து சமைத்து சாப்பிடுவோம் மது அருந்துவோம் அடிமைப் பெண்கள் இசைப்பாடுவர் எங்களைப் பற்றியும் எங்களது பயணத்தைப் பற்றியும், எங்கள் கூட்டத்தைப் பற்றியும் அரபிகள் கேள்விப்படுவார்கள். அதனால் எங்களை எப்பொழுதும் பயந்தே வாழ்வார்கள்” என்று கூறினான்.

அபூஜஹ்லுக்கு எதிராக அக்னஸ் இப்னு ஷரீக் திரும்பியே ஆக வேண்டுமென்று ஆலோசனைக் கூறினார். ஆனால், அவரது பேச்சைப் பலர் செவிமடுக்கவில்லை. ஆனால், இவருக்கு நண்பர்களாக இருந்த ஜுஹ்ரா கிளையினர் மட்டும் இவரது பேச்சுக்குக் கட்டுப்பட்டனர். இந்தப் போரில் ஜுஹ்ராவினருக்கு அக்னஸ்தான் தலைவராக இருந்தார். எனவே, ஜுஹ்ரா கிளையினரில் எவரும் போரில் கலந்து கொள்ளாமல் அக்னஸுடன் திரும்பி விட்டனர். இவர்கள் ஏறக்குறைய 300 நபர்கள் இருந்தனர். பத்ர் போர் நடந்து முடிந்தபின் குறைஷிகளுக்கு ஏற்பட்ட தோல்வியையும் நஷ்டத்தையும் பார்த்த ஜுஹ்ரா கிளையினர் அக்னஸின் ஆலோசனையை பெரிதும் மெச்சினர். அதற்குப் பின் அக்னஸ் ஜுஹ்ராவனரிடம் மிகுந்த மதிப்பிற்குரியவராகவும் கண்ணியத்திற்குரியவராகவும் என்றென்றும் இருந்தார்.

ஹாஷிம் கிளையினரும் திரும்பிட நாடவே நாங்கள் திரும்பும் வரை நீங்கள் திரும்பக் கூடாதென அபூஜஹ்ல் அவர்களைப் பலவந்தமாக அழைத்துச் சென்றான்.

இவ்வாறு ஜுஹ்ரா கிளையினர் 300 பேர் போரிடாமல் திரும்பிவிடவே, மீதமுள்ள 1000 பேர் கொண்ட படை பத்ரை நோக்கிக் கிளம்பியது. இவர்கள் தொடர்ந்து சென்று பத்ர் பள்ளத்தாக்கில் ‘அல் உத்வதுல் குஸ்வா’ என்ற மேட்டுப் பகுதிக்குப் பின்னால் தங்கினார்கள்.

**இக்கட்டான நிலையில் இஸ்லாமிய ராணுவம்**

மதீனா படையின் ஒற்றர்கள், நபி (ஸல்) ‘தஃப்ரான்’ பள்ளத்தாக்கில் இருக்கும் போது அபூஸுஃப்யானின் வியாபாரக் கூட்டம் மற்றும் மக்கா படை ஆகியவற்றின் நிலைமைகளைப் பற்றிய செய்திகளைக் கொண்டு வந்தனர். ஒற்றர்கள் கூறிய செய்திகளை நன்கு ஆராய்ந்த பின் கண்டிப்பாக அபாயகரமான போரைச் சந்திக்காமல் இருக்க வாய்ப்பில்லை. மேலும், முழுமையான வீரத்துடனும் துணிவுடனும் நிராகரிப்பாளர்களை எதிர்த்தே ஆகவேண்டும் என்ற முடிவுக்கு நபி (ஸல்) வந்தார்கள். மக்கா படைகளை எதிர்க்காமல் விட்டுவிட்டால் அந்தப் பகுதியில் அவர்கள் தங்களின் ராணுவ மற்றும் அரசியல் செல்வாக்கை நிலைநிறுத்தி விடுவார்கள். இதனால் முஸ்லிம்களுக்கு அந்தப் பகுதி மக்களிடம் கேவலமும் அவமானமும் ஏற்படலாம். இஸ்லாமிய அழைப்புப் பணி

தனது வலிமையை இழந்து விடலாம். இஸ்லாமின் மீது வெறுப்பும் பகைமையும் கொண்ட ஒவ்வொருவரும் முஸ்லிம்களுக்குத் தீங்கு செய்ய துணிவு கொள்ளலாம். இவற்றை கருத்தில் கொண்டு நபி (ஸல்) மக்கா படையினரை எதிர்த்தே ஆகவேண்டுமென்ற உறுதியான முடிவுக்கு வந்தார்கள்.

முஸ்லிம்கள் சண்டையிடாமல் தங்களின் ஊருக்குத் திரும்பி விடுவதால் மக்கா எதிரிகள் மதீனாவரை படையெடுத்து வரமாட்டார்கள் என்பதற்கு எவ்விதமான உத்திரவாதமுமில்லை. ஆகவே, ஒருவேளை முஸ்லிம்கள் மதீனா திரும்பியிருந்தால் அவர்களுக்கு மிகப்பெரிய அவப்பெயரும் மற்றவர்களிடம் அவர்களைப் பற்றிய அச்சமற்றத் தன்மையும், துணிவும் பிறந்திருக்கும்.

**ஆலோசனை சபை**

திடீரென ஏற்பட்ட அபாயகரமான சூழ்நிலையைக் கருதி நபி (ஸல்) ராணுவத்தின் உயர்மட்ட ஆலோசனை சபையைக் கூட்டினார்கள். அதில், தற்போதுள்ள நிலைமையைச் சுட்டிக்காட்டி தங்களது படையினருடனும் அதன் தளபதிகளுடனும் கருத்துகளைப் பறிமாறிக் கொண்டார்கள். அப்போது சிலருடைய உள்ளங்கள் அச்சத்தால் நடுங்கின. இரத்தம் சிந்தும்படியானப் போரை பயந்தனர். இவர்களைப் பற்றிதான் அல்லாஹ் திருமறையில் இவ்வாறு கூறுகிறான்:

(நபியே!) உங்களது இறைவன் உங்கள் இல்லத்திலிருந்து சத்தியத்தைக் கொண்டு உங்களை வெளியேற்றிய சமயத்தில் நம்பிக்கையாளர்களில் ஒரு கூட்டத்தினர் (உங்களுடன் வர) விரும்பாதவாறே, (போர் செய்வது அவசியம் என) அவர்களுக்குத் தெளிவாகத் தெரிந்த பின்னரும் இந்த உண்மையான விஷயத்தில் அவர்கள் உங்களுடன் தர்க்கிக்கின்றனர். தங்கள் கண்ணால் காணும் மரணத்தின் பக்கமே அவர்கள் ஓட்டிச் செல்லப்படுகின்றனர் போலும்! (அல்குர்ஆன் 8:5, 6)

ஆனால், படையின் தளபதிகளோ மிகத்துணிவுடன் இருந்தார்கள். அபூபக்ர் (ரழி) எழுந்து பேசினார்கள் அழகாகப் பேசி முடித்தார்கள். பின்பு உமர் (ரழி) எழுந்து அவர்களும் அழகாகப் பேசினார்கள். பின்பு மிக்தாத் இப்னு அம்ர் (ரழி) எழுந்து பேசினார்கள். "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் உங்களுக்குக் காட்டிய வழியில் செல்லுங்கள். நாங்கள் உங்களுடன் இருக்கிறோம். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! சங்கைமிகு குர்ஆனில்,

"மூஸாவே! அவர்கள் அதில் இருக்கும் வரையில் ஒருக்காலும் நாங்கள் அதில் செல்லவே மாட்டோம். நீங்களும், உங்களுடைய இறைவனும் (அங்கு) சென்று (அவர்களுடன்) போர் புரியுங்கள். நிச்சயமாக நாங்கள் இங்கேயே உட்கார்ந்து (கவனித்துக்) கொண்டிருப்போம்." (அல்குர்ஆன் 5:24)

என்று இஸ்ரவேலர் நபி மூஸா (அலை) அவர்களிடம் கூறியதைப் போல் நாங்கள் உங்களிடம் கூறமாட்டோம். மாறாக, நீங்களும் உங்களது இறைவனும் போர் புரியுங்கள். நாங்களும் உங்கள் இருவருடன் சேர்ந்து போர் புரிவோம். சத்தியத்தைக் கொண்டு உங்களை அனுப்பியவன் மீதாணையாக! நீங்கள் எங்களை அழைத்துக் கொண்டு 'பர்குல் ஃகிமாது"" என்ற இடம் வரை சென்றாலும் நாங்களும் உங்களுடன் மிகத்துணிவுடன் வருவோம்." இவ்வாறு மிக்தாத் (ரழி) கூறிமுடித்தார்.

அவரின் வீர உரையைக் கேட்டு நபி (ஸல்) அவர்கள் அவரைப் பாராட்டி புகழ்ந்து அவருக்காகப் பிரார்த்தனை புரிந்தார்கள்.

இந்த மூன்று தளபதிகளும் முஹாஜிர்களில் உள்ளவர்கள். முஹாஜிர்கள் படையில் மிகக் குறைவானவர்களாக இருந்ததால், நபி (ஸல்) அன்சாரி தளபதிகளின் கருத்துகளை அறிய விரும்பினார்கள். ஏனெனில், இவர்கள்தான் அதிகமாக இருந்தனர். மேலும், போரினால்

ஏற்படக்கூடிய விளைவுகளும் அன்சாரிகளையே அதிகம் பாதிக்கக் கூடியதாக இருக்கும். நபி (ஸல்) அகபாவில் செய்து கொண்ட உடன்படிக்கையில் அன்சாரிகள் மதீனாவிற்கு வெளியில் சென்று போர் புரிய வேண்டுமென்ற நிபந்தனை இல்லாமலிருந்தது. ஆகவே தான் நபி (ஸல்) அன்சாரிகளின் கருத்துகளைக் கேட்க விரும்பினார்கள். மூன்று தளபதிகளின் பேச்சைக் கேட்டதற்குப் பின்பு அன்சாரிகளை மனதில் கொண்டு ''மக்களே! எனக்கு ஆலோசனை கூறுங்கள்'' என்று பொதுவாகக் கூறினார்கள். நபி (ஸல்) அவர்களின் நோக்கத்தை விளங்கிக் கொண்ட அன்சாரிகளின் தளபதியாக இருந்த ஸஅது இப்னு முஆது (ரழி), நபி (ஸல்) அவர்களிடம் ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதரே! எங்களிடம் கேட்பது போல் தெரிகிறதே'' என்றார். அதற்கு நபி (ஸல்) ''ஆம்!'' என்றார்கள். ஸஅது இப்னு முஆது (ரழி) அவர்கள் எழுந்து பின்வருமாறு பதிலளித்தார்:

''நாங்கள் உங்களை விசுவாசித்தோம் உங்களை உண்மையானவர்கள் என நம்பினோம் நீங்கள் கொண்டு வந்ததுதான் சத்தியமென்று சாட்சி கூறினோம் இதை ஏற்று உங்களின் கட்டளைகளைச் செவிமடுத்தோம், அதற்குக் கட்டுப்படுவோம் என்று உடன்படிக்கையும் ஒப்பந்தமும் செய்து கொடுத்தோம் எனவே, நீங்கள் விரும்பிய வழியில் செல்லுங்கள் உங்களை சத்தியத்தைக் கொண்டு அனுப்பிய இறைவன் மீதாணையாக! நீங்கள் எங்களை அழைத்துக் கொண்டு கடலுக்குள் மூழ்கினால் நாங்களும் மூழ்குவோம் எங்களிலிருந்து ஒருவரும் பின் தங்கிவிட மாட்டார் நாளை எங்களுடன் எதிரிகளை நீங்கள் சந்திப்பதை நாங்கள் வெறுக்கவில்லை நிச்சயமாக போரில் நாங்கள் உறுதியுடன் இருப்போம் எதிரிகளைச் சந்திப்பதில் உண்மை யாளர்களாக இருப்போம் உங்களுக்குக் கண் குளிர்ச்சி தருபவற்றை அல்லாஹ் எங்களால் வழங்கலாம் அல்லாஹ்வுடைய அருளுடன் எங்களை அழைத்துச் செல்லுங்கள்.''

மற்றுமொரு அறிவிப்பில் வந்துள்ளது: ''அல்லாஹ்வின் தூதரே! தங்களின் இல்லங்களில் இருந்து கொண்டு உங்களுக்கு உதவி செய்வது மட்டுமே கடமை என அன்சாரிகள் நினைப்பார்கள் என்று நீங்கள் அஞ்சுகிறீர்களா? அன்சாரிகளின் சார்பாக நான் பேசுகிறேன் அவர்களின் சார்பாக நான் பதிலளிக்கிறேன் நீங்கள் விரும்பிய இடத்திற்குப் பயணித்துச் செல்லுங்கள் நீங்கள் விரும்பியவருடன் உறவு வைத்துக் கொள்ளுங்கள் நீங்கள் விரும்பியவன் உறவை வெட்டிவிடுங்கள் நீங்கள் விரும்பியதை எங்களிடமிருந்து எடுத்துக் கொள்ளுங்கள் நீங்கள் விரும்பியதை எங்களுக்குக் கொடுங்கள் நீங்கள் எங்களிடமிருந்து எடுத்துக் கொண்டது நீங்கள் எங்களுக்காக விட்டுவிட்டதை விட மேலானதாகும் நீங்கள் எங்களுக்கு எவ்விஷயத்திலும் எதைக் கட்டளையிடுகிறீர்களோ அது விஷயத்தில் எங்களின் செயல்கள் உங்களின் கட்டளைக் கிணங்கத்தான் இருக்கும் அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் எங்களை 'கிம்தான்' பகுதியில் உள்ள 'பர்க்' என்ற இடம் வரை அழைத்துச் சென்றாலும் நாங்கள் உங்களுடன் வருவோம் அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் எங்களைக் கடலுக்குள் அழைத்துச் சென்று மூழ்கினால் நாங்களும் மூழ்குவோம்'' என்று ஸஅது இப்னு முஆது, நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள்.

ஸஅதின் பேச்சையும் அவன் உற்சாகத்தையும் கண்ட நபி (ஸல்) அவர்கள் மிகுந்த ஆனந்தமடைந்தார்கள். பின்பு ''நற்செய்தி அடைந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் இரண்டு கூட்டங்களில் ஒன்றை எனக்கு வாக்களித்துள்ளான். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அக்கூட்டத்தினர் வெட்டுண்டு விழும் இடங்களை நான் இப்போது பார்ப்பதைப் போன்று இருக்கின்றது'' என்று கூறினார்கள்.

### இஸ்லாமியப் படை பயணத்தைத் தொடர்கிறது

பின்பு நபி (ஸல்) 'ஃதபிரான்' என்ற இடத்திலிருந்து புறப்பட்டு, அஸாஃபிர் வழியாகச் சென்று, 'தப்பா' என்ற இடத்தை அடைந்து, பின்பு அங்கிருந்து மலை போன்ற மிகப் பெரிய மணற் குன்றான ஹன்னானை வலப்பக்கம் விட்டுவிட்டு பத்ருக்குச் சமீபமாக வந்திறங்கினார்கள்.

### கண்காணிக்கும் பணியில் நபியவர்கள்

அங்கிருந்து நபி (ஸல்) தனது குகைத் தோழர் அபூபக்ருடன் மக்கா படைகளைக் கண்காணிக்கப் புறப்பட்டார்கள். அவ்விருவரும் மக்கா படையினர் எங்கு கூடாரமிட்டுள்ளார்கள் என்பதை தெரிந்து கொள்ள சுற்றிக் கொண்டிருக்கும் போது ஒரு வயது முதிர்ந்தவரைப் பார்த்தார்கள். அவரிடம் "குறைஷிகளைப் பற்றியும் முஹம்மது மற்றும் அவரது தோழர்களைப் பற்றியும் உமக்குத் தெரியுமா?" என்று விசாரித்தார்கள். அவர் தங்களை யார் என விளங்கிக் கொள்ளக் கூடாது என்பதற்காக அவர்கள் இரு படைகளைப் பற்றியும் விசாரித்தார்கள். ஆனால், அந்த வயது முதிர்ந்தவரோ "நீங்கள் எந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை சொல்லாத வரை நான் உங்களுக்கு எந்த செய்தியையும் கூறமாட்டேன்" என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "நாங்கள் கேட்டதை நீர் கூறினால் நாங்கள் யார் என்பதை உமக்குக் கூறுவோம்" என்றார்கள். அதற்கு அந்த வயோதிகர் "அவ்வாறுதானே!" என்று கேட்க அதற்கு நபி (ஸல்) "ஆம்!" என்றார்கள்.

அதற்குப் பின் அந்த வயோதிகர் "முஹம்மதும் அவன் தோழர்களும் இன்ன நாளில் மதீனாவிலிருந்து வெளியேறினார்கள் என்று எனக்கு செய்தி கிடைத்தது. எனக்கு இந்த செய்தியைக் கூறியவர் உண்மையைக் கூறியிருந்தால் அவர்கள் இன்று இந்த இடத்தில் இருப்பார்கள்" என்று மதீனாவின் படை இருந்த இடத்தை சரியாகக் கூறினார். மேலும், "குறைஷிகள் இந்த நாளில் மக்காவிலிருந்து கிளம்பினார்கள் என்று எனக்கு செய்தி கிடைத்தது. எனக்கு இச்செய்தியைக் கூறியவர் உண்மையைக் கூறியிருந்தால் அவர்கள் இன்று இன்ன இடத்தில் இருப்பார்கள்" என்று மக்கா படை தங்கியிருந்த இடத்தைச் சரியாகக் கூறினார்.

"பின்பு நீங்கள் யார்?" என்று அவர் கேட்க, நபி (ஸல்) "நாங்கள் (மாஃ) தண்ணீலிருந்து வந்திருக்கிறோம்" என்று கூறி, அங்கிருந்து உடனே சென்றுவிட்டார்கள். இதைக் கேட்ட அந்த வயோதிகர் "என்ன! தண்ணீலிருந்து வந்தவர்களா? எந்தத் தண்ணீலிருந்து...? இராக் நாட்டு தண்ணீலிருந்தா...?" என்று புரியாமல் புலம்பிக் கொண்டிருந்தார்.

### மக்கா படையின் முக்கிய விஷயங்களை அறிதல்

அன்றைய மாலை எதிரிகளைப் பற்றி மேலும் பல புதிய தகவல்களை அறிந்து வருவதற்காக முஹாஜிர்களில் உள்ள மூன்று முக்கிய தளபதிகளை நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். அவர்கள் அலீ இப்னு அபூ தாலிப், ஸுபைர் இப்னு அவ்வாம், ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரழி) ஆவார்கள். இவர்கள் பத்ரின் தண்ணீர் உள்ள இடத்திற்குச் சென்றபோது அங்கு இருவர் மக்கா படைகளுக்காக தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்தனர். அவர்களைக் கைது செய்து நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தார்கள். அப்போது நபி (ஸல்) தொழுது கொண்டிருந்தார்கள். அவ்விருவரிடமும் இஸ்லாமிய படையினர் விசாரிக்கவே அவர்கள், "நாங்கள் குறைஷிகளுக்கு தண்ணீர் எடுத்துச் செல்ல வந்திருக்கிறோம்" என்றனர். இவர்கள் அபூஸுஃப்யானின் கூட்டத்தினராக இருக்கலாம் என்றெண்ணி இவர்களின் பதிலை ஏற்றுக் கொள்ளாமல் கடுமையாக அடித்தனர். அடிக்குப் பயந்த அவ்விருவரும் "ஆம்! நாங்கள் அபூஸுஃப்யானின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்தான்" என்றனர். உடனே அவ்விருவரையும் அடிக்காமல் விட்டுவிட்டனர்.

நபி (ஸல்) தொழுது முடித்தவுடன் தங்களது படையினரை கண்டிக்கும் விதமாக "அவ்விருவரும் உங்களிடம் உண்மை கூறியபோது அடித்தீர்கள். ஆனால் பொய் கூறியபோது அவர்களை விட்டு விட்டீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவ்விருவரும் உண்மையைத்தான் கூறினார்கள். அவர்கள் குறைஷிகளுக்காக வந்தவர்களே!" என்று கூறினார்கள்.

பின்பு அவ்விருவரையும் அழைத்து "குறைஷிகளைப் பற்றி நீங்கள் எனக்கு சொல்லுங்கள்" என்று நபி (ஸல்) கேட்கவே, "நீங்கள் பார்க்கும் அந்தப் பெரிய மேட்டிற்குப் பின் குறைஷிகள் இருக்கிறார்கள்" என்றனர். "அவர்கள் எத்தனை நபர்?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். "மிக அதிகமாக இருக்கின்றனர்" என்று அவர்கள் கூறினார்கள். "அவர்களிடம் எப்படிப்பட்ட தயாரிப்புகள் உள்ளன" என்று நபி (ஸல்) கேட்கவே, அவர்கள் "தெரியாது" என்று கூறினர். நபி (ஸல்) "அவர்கள் ஒவ்வொரு நாளும் எத்தனை ஒட்டகங்கள் அறுக்கிறார்கள்?" என்று கேட்க, அதற்கு அவர்கள் "ஒரு நாள் ஒன்பது. மறுநாள் பத்து ஒட்டகங்கள் அறுக்கிறார்கள்" என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) "அவர்கள் தொள்ளாயிரத்திலிருந்து ஆயிரம் நபர்கள் வரை இருக்கலாம்" என்றார்கள். பின்பு அவர்களிடம் "குறைஷி பிரமுகர்களில் யார் யார் வந்திருக்கிறார்கள்?" என்று நபி (ஸல்) கேட்க "உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, அபுல் பக்த இப்னு ஹிஷாம், ஹக்கீம் இப்னு ஜாம், நவ்ஃபல் இப்னு குவைலித், ஹாரிஸ் இப்னு ஆமிர், துஅய்மா இப்னு அதி, நழ்ர் இப்னு ஹாரிஸ், ஜம்ஆ இப்னு அஸ்வத், அபூ ஜஹ்ல் இப்னு ஹிஷாம், உமய்யா இப்னு கலஃப் ஆகியோரும் மற்றும் பலரும் வந்திருக்கிறார்கள்" என அவ்விருவரும் கூறினர்.

நபி (ஸல்) மக்களை நோக்கி "இதோ! மக்கா தனது ஈரக் குலைகளை உங்களுக்கு முன் கொண்டு வந்திருக்கிறது" என்றார்கள்.

### மழை பொழிதல்

அல்லாஹ் அன்றிரவு மழையை இறக்கினான். அந்த மழை இணைவைப்பவர்களுக்கு அடைமழையாக இருந்தது. அது அவர்களை முன்னேறவிடாமல் தடுத்தது. ஆனால், முஸ்லிம்களுக்கோ அது மென்மையான தூறலாக இருந்தது. அம்மழையினால் அல்லாஹ் முஸ்லிம்களைச் சுத்தப்படுத்தினான். ஷைத்தானின் அசுத்தத்தை அவர்களை விட்டும் அகற்றினான். அங்கிருந்த மணற்பாங்கான பூமியை முஸ்லிம்கள் தங்குவதற்கு வசதியாக இறுக்க மாக்கிக் கொடுத்தான். மேலும், அவர்களது உள்ளங்களையும் பாதங்களையும் உறுதியாக்கினான்.

### முக்கிய ராணுவத் தளத்தை நோக்கி இஸ்லாமியப் படை

இணைவைப்பவர்கள் வருவதற்குள் பத்ர் மைதானத்திற்கருகில் உள்ள நீர்நிலைகளுக்கு நாம் சென்றுவிட வேண்டும் என்பதற்காக நபி (ஸல்) தனது படையை அழைத்துக் கொண்டு விரைந்தார்கள். ஏனெனில், அப்போதுதான் அந்த நீர்நிலைகளை எதிரிகள் கைப்பற்ற விடாமல் தடுக்க முடியும். அல்லாஹ்வின் அருளால் இஷா நேரத்தில் பத்ரின் நீர்நிலைகளில் ஒரு நீர்நிலைக்கு அருகில் நபி (ஸல்) வந்திறங்கினார்கள். அப்போது போர் தந்திரங்களை நன்கறிந்த (ராணுவ நிபுணர்) அல் ஹுபாப் இப்னு முன்திர் (ரழி) எழுந்து "அல்லாஹ்வின் தூதரே! இந்த இடத்தில் நீங்கள் தங்கியதைப் பற்றி எனக்குக் கூறுங்கள். நாம் இவ்விடத்தை விட்டு முந்தவோ அல்லது பிந்தவோ கூடாது என அல்லாஹ் முடிவு செய்த இடமா இது? அல்லது இது உங்கள் சார்பான யோசனையும், போர் தந்திரமுமா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) "இல்லை. இது ஒரு யோசனையும் போர் தந்திரமும்தான்" என்றார்கள்.

அதற்கவர் “அல்லாஹ்வின் தூதரே! இது தங்குவதற்குரிய இடமல்ல. நீங்கள் மக்களை அழைத்துக் கொண்டு புறப்படுங்கள். நாம் குறைஷிகளுக்கு மிக அருகில் உள்ள நீர்நிலைக்கு சென்று தங்குவோம். பின்பு மற்ற அனைத்து நீர்நிலைகளையும் நாம் அழித்து விடுவோம். மேலும், ஒரு நீர் தடாகத்தை ஏற்படுத்தி அதை தண்ணீரால் நிரப்பி விடுவோம். நாளை போர் நடக்கும் போது நாம் குடிப்பதற்குத் தண்ணீர் இருக்கும். அவர்கள் குடிப்பதற்குத் தண்ணீர் இருக்காது” என்றார். நபி (ஸல்) அந்த யோசனையை ஏற்றுக்கொண்டு, “நிச்சயம் நீர் நல்ல யோசனை கூறினீர்” என்றார்கள்.

உடனே நபி (ஸல்) தங்களது படையை அழைத்துக் கொண்டு எதிரிகளுக்கு சமீபமாக உள்ள நீர்நிலைகளுக்கு அருகில் வந்திறங்கினார்கள். அந்நேரம் இரவின் பெரும் பகுதி கழிந்திருந்தது. பின்பு, தங்களுக்குச் சிறிய சிறிய நீர்த் தடாகங்கள் சிலவற்றை அங்குக் கட்டிக் கொண்டு மற்ற அனைத்து கிணறுகளையும் அழித்துவிட்டார்கள்.

**படையை வழி நடத்துவதற்கான இடம்**

முஸ்லிம்கள் அந்த கிணற்றுக்கருகில் தங்கிய போது, ஸஅது இப்னு முஆது (ரழி) “படையை வழிநடத்துவதற்காக நாங்கள் தங்களுக்கென பாதுகாப்பான ஒரு தனி இருப்பிடத்தை ஏற்படுத்துகிறோம். அப்போதுதான் அங்கிருந்து அவசர நடவடிக்கைகள் எடுக்க முடியும் வெற்றிக்குப் பதிலாக தோல்வி ஏற்பட்டாலும் அதற்குரிய சரியான திட்டத்தை நீங்கள் தீட்ட முடியும்” என்று நபி (ஸல்) அவர்களிடம் ஆலோசனைக் கூறினார்கள்.

இதோ அவரது ஆலோசனை! அவர் கூறக் கேட்போம்:

“அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் உங்களுக்காக உயரமான ஒரு பரணி வீட்டை கட்டுகிறோம் அதில் நீங்கள் தங்கிக் கொள்ளுங்கள் உங்களுக்குத் தேவையான வாகனங்களையும் அதற்கருகில் ஏற்பாடு செய்கிறோம் பின்பு நாளை எதிரிகளை நாங்கள் சந்திக்கும்போது அல்லாஹ் நம்மை மிகைக்க வைத்தால், நமக்கு வெற்றி அளித்தால், அது நாம் விரும்பியவாறே நடந்ததாக இருக்கட்டும். இல்லை! அதற்கு மாற்றமாக ஏதாவது நடந்தால் நீங்கள் இந்த வாகனத்தில் அமர்ந்து எங்களுக்குப் பின்னுள்ள எங்களது கூட்டத்தனரிடம் சேர்ந்து கொள்ளலாம். அல்லாஹ்வின் தூதரே! இன்னும் பலர் இங்கு வரவில்லை எங்களை விட அவர்கள் உங்களை அதிகம் நேசிக்கக் கூடியவர்கள் நீங்கள் போரைச் சந்திப்பீர்கள் என்று அவர்களுக்குத் தெரிந்திருந்தால் உங்களை விட்டு ஒருக்காலும் அவர்கள் பின்தங்கியிருக்க மாட்டார்கள். அவர்களிடம் நீங்கள் சென்றால் அவர்கள் மூலம் அல்லாஹ் உங்களைப் பாதுகாப்பான். அவர்கள் உங்களிடம் உண்மையுடன் நடந்து, உங்களுக்கு ஆதரவாக போரும் புரிவார்கள்.” இவ்வாறு ஸஅது (ரழி) தங்களின் சிறந்த ஆலோசனையை நபி (ஸல்) அவர்கள் முன் வைத்தார்.

ஸஅது (ரழி) அவர்களின் இந்த யோசனையை நபி (ஸல்) அவர்கள் கேட்டு, அவரைப் புகழ்ந்து அவருக்காக பிரார்த்தனையும் செய்தார்கள். முஸ்லிம்கள் போர் மைதானத்திற்கு வடக்கிழக்கில் இருந்த உயரமான ஒரு திட்டின் மீது பரணி வீட்டை, அதில் இருந்து கொண்டு போர் மைதானத்தைப் பார்க்கும்படியாக அமைத்தார்கள்.

மேலும், நபி (ஸல்) அவர்களை சுற்றி பாதுகாப்பிற்காக ஸஅது இப்னு முஆத் (ரழி) தலைமையில் சில அன்சாரி வாலிபர்களின் குழு ஒன்று தேர்வு செய்யப்பட்டது.

**படையை ஒழுங்குபடுத்துதல் - இரவைக் கழித்தல்**

பின்பு நபி (ஸல்) தனது படையை ஒழுங்குபடுத்தினார்கள். போர் நடக்கக்கூடிய மைதானத்தில் நடந்து சென்று “இன்ஷா அல்லாஹ்! நாளை இன்னார் கொல்லப்படும் இடம் இது... இன்ஷா அல்லாஹ்! நாளை இன்னார் கொல்லப்படும் இடம் இது... என்று தங்களது

விரலால் சுட்டிக் காட்டினார்கள். பின்பு நபி (ஸல்) அங்குள்ள ஒரு மரத்தருகில் தொழுதவர்களாக இரவைக் கழித்தார்கள். முஸ்லிம்களும் மிகுந்த நம்பிக்கையுடனும் மன அமைதியுடனும் காலையில் தங்கள் இறைவனின் நற்செய்திகளைக் கண்கூடாகப் பார்த்துக் கொள்ளலாம் என்ற ஆதரவுடன் இரவைக் கழித்தார்கள். (ஸஹீஹ் முஸ்லிம், ஸுனனுத் திர்மிதி)

(நம்பிக்கையாளர்களே! உங்கள் மனம்) சாந்தியடைந்தவர்களாக, சிறியதொரு நித்திரை உங்களைப் சூழ்ந்து கொள்ளும்படி (இறைவன்) செய்ததை நினைத்துப் பாருங்கள்! அன்றி (அதுசமயம்) உங்கள் தேகத்தை நீங்கள் சுத்தப்படுத்திக் கொள்வதற்காகவும், உங்களை விட்டு ஷைத்தானுடைய அசுத்தத்தைப் போக்கி விடுவதற்காகவும், உங்கள் உள்ளங்களைப் பலப்படுத்தி, உங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவதற்காகவும் (அவனே) வானத்திலிருந்து மழையைப் பொழியச் செய்தான். (அல்குர்ஆன் 8:11)

அது ஹிஜ்ரி 2, ரமழான் மாதம் பிறை 17 வெள்ளிக்கிழமை இரவாக இருந்தது. இதே மாதம் பிறை 8 அல்லது 12ல் இந்தப் படை மதீனாவிலிருந்து பத்ரை நோக்கி புறப்பட்டது.

**போர்க்களத்தில் மக்கா படையில் பிளவு ஏற்படுதல்**

குறைஷிகள் பத்ர் பள்ளத்தாக்கின் மேற்பகுதியில் தங்களது கூடாரங்களை அமைத்து இரவைக் கழித்தனர். காலை விடிந்தவுடன் தங்களது படைகளுடன் பத்ர் பள்ளத்தாக்கருகில் உள்ள மணல் முகட்டுக்கருகில் வந்தனர். அவர்களில் சிலர் நபி (ஸல்) ஏற்படுத்தியிருந்த நீர் தடாகத்தில் நீர் அருந்த வந்தனர். அப்போது நபி (ஸல்) தோழர்களிடம் "அவர்களை விட்டு விடுங்கள்" என்றார்கள். அவர்களில் யாரெல்லாம் நீர் அருந்தினார்களோ அவர்கள் அனைவரும் போரில் கொல்லப்பட்டனர். ஆனால், ஹக்கீம் இப்னு ஸாமைத் தவிர. இவர் போரில் கொல்லப்பட வில்லை. பிறகு இவர் இஸ்லாமை ஏற்று சிறந்த முஸ்லிமாக விளங்கினார். அவர் சத்தியம் செய்ய அவசியம் ஏற்பட்டால் "பத்ர் போரில் என்னைக் காப்பாற்றியவன் மீது சத்தியமாக!" என்று கூறுவார். அதாவது தன்னுடன் நீர் அருந்திய அனைவரும் கொல்லப்பட்டு விட, தான் மட்டும் அல்லாஹ்வின் அருளால் தப்பித்ததை நினைத்து இவ்வாறு கூறுவார்.

குறைஷிகள் சூழ்நிலைகளைப் பார்த்து சற்று நிம்மதியடைந்த பிறகு உமைர் இப்னு வஹ்பு ஜுமயை முஸ்லிம்களின் பலத்தை அறிந்து வர அனுப்பினர். உமைர் தனது குதிரையில் முஸ்லிம் ராணுவத்தை நோட்டமிட்டு குறைஷிகளிடம் திரும்பி, "அவர்கள் ஏறக்குறைய முன்னூறு நபர்கள் இருக்கலாம் இருப்பினும் எனக்கு அவகாசம் கொடுங்கள் நான் வேறு எங்காவது படை மறைந்திருக்கிறதா அல்லது அவர்களுக்கு உதவிக்காக வேறு படை ஏதும் வருகிறதா எனப் பார்த்து வருகிறேன்" என்றார்.

பத்ர் பள்ளத்தாக்கில் மிக நீண்ட தூரம் வரை நோட்டமிட்டும் எதையும் பார்க்காததால், குறைஷிகளிடம் திரும்பி "நான் எதையும் பார்க்கவில்லை. ஆனால், குறைஷிக் கூட்டமே! மரணங்களைச் சுமந்து வரும் சோதனைகள் என் கண் முன் தெரிகின்றன. மதீனாவின் ஒட்டகங்கள் வெறும் மரணத்தைத்தான் சுமந்து வந்திருக்கின்றன. வந்திருக்கும் கூட்டத்திற்கு வாளைத் தவிர வேறெந்த பாதுகாப்பும் இல்லை. அவர்களில் ஒருவர் கொலை செய்யப்படுவதற்கு முன் உங்களில் ஒருவரைக் கொலை செய்யாமல் அவர் இறக்க மாட்டார். உங்களில் அவ்வளவு பெரிய எண்ணிக்கைகளை அவர்கள் கொன்றால், அதற்குப் பிறகு நீங்கள் வாழ்ந்துதான் என்ன பயனிருக்கிறது? எனவே, நன்கு யோசித்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்.

போர் செய்தே ஆகவேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கும் அபூ ஜஹ்லுக்கு எதிராகக் கிளர்ச்சி ஏற்பட்டது. அதுதான் சண்டை செய்யாமல் திரும்ப வேண்டும் என்பது! ஹக்கீம் இப்னுஹிஸாம் இதற்காக மக்களிடையே முயற்சித்தார். அவர் உத்பா இப்னு ரபீஆவை

சந்தித்து “உத்பாவே! நீர் குறைஷிகளில் பெரியவரும் தலைவருமாவீர். உங்களின் சொல்லுக்குக் குறைஷியர் கட்டுப்படுவர், காலங்காலமாக உமக்கு நற்புகழை தரும் ஒரு விஷயத்தை நான் சொல்லட்டுமா?'' என்றார். அதற்கு உத்பா “நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள் ஹக்கீமே!'' என்றார். ஹக்கீம் “நீர் மக்களை அழைத்துக் கொண்டு திரும்பி விடும். (ஸய்யா நக்லாவில் கொல்லப்பட்ட) உமது நண்பர் அம்ர் இப்னு ஹழ்ரமியின் விஷயத்திற்கு நீர் பொறுப்பெடுத்துக் கொள்!'' என்று கூறினார். இதற்கு “நான் அவ்வாறே செய்கிறேன். எனக்கு நீ ஜாமினாக இரு. அம்ர் என்னுடைய நண்பர்தான். எனவே அவருடைய கொலை குற்றப்பரிகாரத்தையும், அவருக்கு ஏற்பட்ட பொருள் சேதத்தையும் நான் கொடுத்து விடுகிறேன்'' என்று உத்பா கூறினார்.

பின்பு, “நீர் அபூஜஹ்லிடம் சென்று, இது விஷயமாக பேசி வாரும். ஏனெனில், நிச்சயமாக அவனைத் தவிர வேறெவரும் மக்களுக்கு மத்தியில் பிளவு உண்டாக்க மாட்டார்'' என உத்பா ஹக்கீமிடம் கூறினார்.

பின்பு உத்பா மக்களுக்கு மத்தியில் பிரசங்கம் செய்தார். இதோ... அவரது பிரசங்கம்:

“குறைஷிக் கூட்டத்தினரே! நிச்சயமாக நீங்கள் முஹம்மதிடமும் அவரது தோழர்களிடமும் சண்டையிட்டு என்ன செய்யப் போகிறீர்கள்? அதனால் உங்களுக்கு என்ன லாபம்? நீங்கள் அவர்களுக்கு ஏதாவது தீங்கு செய்தால், நாளை உங்களுக்குள் எவ்வளவு பெரிய வெறுப்பு ஏற்படும்? நம்மில் யாரொருவர் அவர்களில் ஒருவரைக் கொலை செய்கிறாரோ அவர் தனது ஒன்றுவிட்ட சகோதரராகவோ, தாய்மாமன்களின் பிள்ளைகளாகவோ, நெருக்கமான உறவினர் களில் ஒருவராகவோ தான் இருப்பார். எனவே, முஹம்மதை மற்ற அரபியர்களுக்கு மத்தியில் விட்டு விட்டு நீங்கள் திரும்பிச் சென்று விடுங்கள். அவர்கள் முஹம்மதைக் கொலை செய்தால், நீங்கள் நாடியது நடந்து விடும். இல்லை, அதற்கு மாற்றமாக நடந்தால் நீங்கள் விரும்பாதது நடந்ததாக இருக்கட்டும்.''

ஹக்கீம் இப்னுஹிஸாம் அபூஜஹ்லிடம் வந்தார். தன் கவச ஆடையை அவன் சரிசெய்து கொண்டிருந்தான். அவர் “ஓ அபுல்கமே!'' உத்பா என்னை உன்னிடம் இன்னின்ன விஷயங்களைக் கூறி அனுப்பினார்'' என்றார். அதைக் கேட்ட அபூஜஹ்ல் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! முஹம்மதையும் அவருடைய தோழர்களையும் பார்த்து உத்பா பயந்ததால், நெஞ்சு ‘திக்...திக்’ என்று அடிக்கிறதுபோலும். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ் எங்களுக்கும் முஹம்மதுக்கும் மத்தியில் தீர்ப்பளிக்கும் வரை நாங்கள் இவ்விடத்தை விட்டு திரும்ப மாட்டோம். உண்மையில் உத்பா கூறியது அவரது அசல் நோக்கமல்ல. மாறாக, தனது மகன் அபூ ஹுதைஃபாவை முஹம்மதுக்கும் அவரது தோழர்களுக்கும் மத்தியில் பார்த்து விட்டதால் நீங்கள் அவரைக் கொலை செய்து விடுவீர்களோ? என்று பயந்துதான் இவ்விதம் கூறியிருப்பான்'' என்றான்.

“பயத்தில் நெஞ்சு திக்திக்கென்று அடிக்கிறது. (அதாவது தொடை நடுங்கி)’ என்ற அபூஜஹ்லின் கூற்று, உத்பாவுக்கு எட்டியபோது “பயத்தால் காற்றை வெளியிடும் அவனுக்கு நெஞ்சு அடிக்கிறதா? இல்லை எனக்கா? என்பதை அதிவிரைவில் அறிந்து கொள்ளத்தான் போகிறான் என்று உத்பா கூறினான்.'' உடனே அபூஜஹ்ல் எங்கே இந்த எதிர்ப்பு பெரிதாகிவிடுமோ எனப் பயந்து, அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷின் படையினரால் கொல்லப்பட்ட அம்ர் இப்னு ஹழ்ரமியின் சகோதரர் ஆமீர் இப்னு ஹழ்ரமியை அழைத்து வரச் செய்தான். ஆமீரிடம் “இதோ உனது நண்பன் உத்பா மக்களை அழைத்துக் கொண்டு திரும்ப விரும்புகிறார். நானோ உனது கண்ணில் பழிவாங்கும் உணர்வைப் பார்க்கிறேன். எனவே, எழுந்து உமது ஒப்பந்தத்தையும், உமது சகோதரனுக்காக பழிவாங்குவதையும் வலியுறுத்து!'' என்றான். தன் பின்பக்க ஆடையை ஆமீர் அவிழ்த்துவிட்டு “அம்ருக்கு ஏற்பட்ட கைசேதமே! அம்ருக்கு ஏற்பட்ட கைசேதமே!'' என ஆமிர் கூச்சலிட்டான். இவனது கூக்குரலைக் கேட்ட கூட்டத்தினர் ஆவேசம் கொண்டு கொதித்தெழுந்தனர்.

இதனால் சண்டையிட வேண்டுமென்ற தங்களது தீய எண்ணத்தில் குறைஷிகள் உறுதியாக நின்றனர்.

இவ்வாறு, உத்பா மக்களுக்கு கூறிய நல்ல ஆலோசனையை அபூஜஹ்ல் கெடுத்து விட்டான். ஆம்! அவ்வாறுதான் மடமை ஞானத்தை மிகைத்தது. ஹக்கீமின் இந்த எதிர்ப்பு எவ்வித பலனுமின்றி மறைந்தது.

இரு படைகளும் நேருக்கு நேர்...

குறைஷிகள் மைதானத்திற்கு வந்தனர். குறைஷிப் படையும் இஸ்லாமியப் படையும் ஒன்று மற்றொன்றை நேருக்கு நேர் பார்த்துக் கொண்ட போது, நபி (ஸல்) ''அல்லாஹ்வே! இதோ குறைஷிகள் கர்வத்துடனும் மமதையுடனும் உன்னிடம் போர் செய்பவர்களாக உன்னுடைய தூதரைப் பொய்ப்பிப்பவர்களாக வந்திருக்கின்றனர். அல்லாஹ்வே! நீ எனக்கு வாக்களித்த உனது உதவியைத் தருவாயாக! இக்காலைப் பொழுதில் அவர்களை அழிப்பாயாக!'' என்று பிரார்த்தனை செய்தார்கள்.

சிவப்பு நிற ஒட்டகையின் மீது உத்பா உலாவிக் கொண்டிருந்தார். அவரைப் பார்த்த நபி (ஸல்) ''இந்தக் கூட்டத்திலேயே நலத்தை விரும்பும் ஒருவர் இவராகத்தான் இருக்க முடியும். இவருக்கு இக்கூட்டம் கட்டுப்பட்டால் அவர்கள் சரியான வழியை அடையக்கூடும்'' என்று கூறினார்கள்.

நபி (ஸல்) முஸ்லிம்களின் அணிகளைச் சரிசெய்து கொண்டிருந்த போது ஓர் அற்புதமான நிகழ்ச்சி நடைபெற்றது. அதாவது நபி (ஸல்) அவர்களின் கையில் ஓர் அம்பு இருந்தது. அதன்மூலம் அணிவகுப்பைச் சரிசெய்து கொண்டிருந்தார்கள். ஸவாது இப்னு கஸிய்யா (ரழி) அணியில் சற்று முன்னால் நிற்கவே நபி (ஸல்) அவரது வயிற்றில் அந்த அம்பால் லேசாக ஒரு குத்து குத்தி ''ஸவாதே! சரியாக நிற்பீராக'' என்றார்கள். உடனே ஸவாது (ரழி), ''அல்லாஹ்வின் தூதரே! எனக்கு வலியை உண்டாக்கி விட்டீர்கள். நான் உங்களிடம் பழிவாங்க வேண்டும்'' என்றார். நபி (ஸல்) தனது வயிற்றை திறந்து காட்டி ''பழி தீர்த்துக் கொள் ஸவாதே!'' என்றார்கள். ஸவாது நபி (ஸல்) அவர்களைக் கட்டியணைத்து வயிற்றில் முத்தமிட்டார். நபி (ஸல்), ''ஸவாதே! ஏன் இப்படி செய்தீர்'' என்று கேட்டதற்கு ''அல்லாஹ்வின் தூதரே! இதோ... என்ன நிலை ஏற்பட்டிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். இறுதியாக எனது மேனி உங்களுடைய மேனியை தொட்டு விட வேண்டும் என்று பிரியப்பட்டேன்'' என்றார் ஸவாது. அவன் நலத்திற்காக நபி (ஸல்) பிரார்தித்தார்கள்.

அணிகளைச் சரிசெய்த பின் தமது படையினருக்குச் சில கட்டளைகளை நபி (ஸல்) பிறப்பித்தார்கள். அதில் கூறியதாவது: ''எனது இறுதிக் கட்டளை வரும் வரை நீங்கள் போரைத் தொடங்காதீர்கள் அவர்கள் உங்களை நெருங்கும் போது அவர்களை நோக்கி அம்பெறியுங்கள் அதே சமயம், அம்புகள் (அனைத்தையும் எறிந்து விடாமல்) கொஞ்சம் மீதமாக வைத்துக் கொள்ளுங்கள் அவர்கள் உங்களைச் சூழ்ந்து கொள்ளும் வரை நீங்கள் வாட்களை உருவாதீர்கள்! (ஸுனன் அபூதாவூது)

அதன் பிறகு நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரழி) அவர்களும் பரணி வீட்டிற்கு சென்றார்கள். ஸஅது இப்னு முஆது (ரழி) தனது பாதுகாப்புப் படையுடன் அவ்வீட்டைச் சுற்றிப் பாதுகாப்பு பணியில் ஈடுபட்டார்கள்.

இனி எதிரிகளைப் பற்றி சிறிது பார்ப்போம்: அபூஜஹ்லும் அன்று அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தான். ''அல்லாஹ்வே! எங்களில் உறவுகளை அதிகம் துண்டிப்பவர் நாங்கள் அறியாததை எங்களுக்கு மார்க்கமாகக் கொண்டு வந்தவர் அவரை இன்று அழித்து விடு! அல்லாஹ்வே! எங்களில் உனக்கு யார் மிகவும் விருப்பமானவராகவும் உனது திருப்திக்கு உரியவராகவும் இருக்கிறாரோ அவருக்கு உதவி செய்!''

இது குறித்தே அல்லாஹ் இந்த வனத்தை இறக்கினான்:

(நிராகரிப்பவர்களே!) நீங்கள் வெற்றியின் மூலம் (முடிவான) தீர்ப்பைத் தேடிக் கொண்டிருந்தீர்கள். நிச்சயமாக அந்த வெற்றி உங்கள் முன் வந்து விட்டது. (எனினும் அது உங்களுக்கல்ல நம்பிக்கையாளர்களுக்கே! அவர்கள்தான் உங்களை வெற்றி கொள்வார்கள். ஆகவே, விஷமம் செய்வதிலிருந்து) இனியேனும் நீங்கள் விலகிக் கொண்டால் அது உங்களுக்கே நன்று. இனியும் நீங்கள் (விஷமம் செய்ய) முன்வரும் பட்சத்தில் நாமும் முன்வருவோம். உங்களுடைய கூட்டம் எவ்வளவு பெரிதாக இருந்தபோதிலும் (அது) உங்களுக்கு எந்த பலனையுமளிக்காது. ஏனென்றால், நிச்சயமாக அல்லாஹ் நம்பிக்கையாளர்களுடன் இருக்கின்றான். (அல்குர்ஆன் 8:19)

### நேரம் நெருங்கியது - சண்டையின் முதல் தீ

அஸ்வத் இப்னு அப்துல் அஸது மக்ஜூமி என்பவன் போரின் தீ கங்குகளை முதலில் மூட்டினான் இவன் மிகுந்த கெட்ட குணமுடையவன். “நான் முஸ்லிம்களின் தடாகத்தில் நீர் அருந்துவேன் இல்லையேல் அதை உடைத்தெறிவேன் அல்லது அங்கேயே நான் செத்து மடிவேன் என அல்லாஹ்விடம் உடன்படிக்கை செய்கிறேன்” என்று கூறியவனாக படையிலிருந்து வெளியேறினான். அவன் தடாகத்தை நெருங்க, ஹம்ஜா (ரழி) அவனை வாளால் எதிர்கொண்டு அவனது பாதத்தைக் கெண்டைக்கால் வரை வெட்டி வீழ்த்தினார்கள். அவன் காலிலிருந்து ரத்தம் சீறிப் பாய்ந்தது. தடாகத்திற்கு அருகிலிருந்த அவன் தவழ்ந்து வந்து தடாகத்திற்குள் விழுந்தான். அவன் தனது சத்தியத்தை நிறைவேற்றிவிட வேண்டுமென்று எண்ணியதால் தடாகத்திற்குள் விழுவதில் இந்த அளவு பிடிவாதம் காட்டினான். அவன் தடாகத்திற்குள் இருக்கும்போதே ஹம்ஜா (ரழி) அவர்கள் அவன் மீது மற்றொரு முறை பாய்ந்து அவனை வெட்டிச் சாய்த்தார்கள்.

### ஒண்டிக்கு ஒண்டி

இந்த முதல் கொலை, போரின் நெருப்பை மூட்டியது. குறைஷிகளின் மிக தேர்ச்சி பெற்ற குதிரை வீரர்களில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த மூவர் படைக்கு முன்னால் வந்தனர். அவர்கள் உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, வலீது இப்னு உத்பாவாகும். இவர்களை எதிர்க்க மூன்று அன்சாரி வாலிபர்களான அவ்ஃப் இப்னு ஹாரிஸ், முஅவ்வித் இப்னு ஹாரிஸ், அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) ஆகியோர் களத்தில் குதித்தனர். இம்மூவடரிமும் அந்த எதிரிகள் “நீங்கள் யார்?” என்றனர். அதற்கு அவர்கள் “நாங்கள் மதீனாவாசிகள்” என்றனர். அதற்கு அந்த எதிரிகள், “சங்கைக்குரிய நீங்கள் எங்களுக்கு நிகரானவர்கள்தான். ஆனால் உங்களிடம் எங்களுக்கு எந்தத் தேவையும் இல்லை. நாங்கள் நாடி வந்திருப்பதெல்லாம் எங்கள் தந்தையுடைய சகோதரர்களின் மக்களைத்தான் என்றனர். பின்பு அவர்களில் ஒருவன் “முஹம்மதே! எங்களது இனத்தில் எங்களுக்கு நிகரானவரை எங்களிடம் அனுப்பும்!” என்று கத்தினான். நபி (ஸல்) அவர்கள். “உபைதா இப்னு ஹாரிஸே! எழுந்து செல்லுங்கள்! ஹம்ஜாவே! எழுந்து செல்லுங்கள்! அலீயே! எழுந்து செல்லுங்கள்!” என்றார்கள்.

இம்மூவரும் அந்த எதிரிகளுக்கருகில் செல்ல, அவர்கள் “நீங்கள் யார்?” என்றனர். இவர்கள் தங்களைப் பற்றி சொன்னதும் “சங்கைமிக்க நீங்கள் எங்களுக்குப் பொருத்தமானவர்களே” என்றனர். இம்மூவரில் வயதில் மூத்தவரான உபைதா (ரழி) எதிரி உத்பாவுடனும், ஹம்ஜா (ரழி) எதிரி ஷைபாவுடனும், அலீ (ரழி) எதிரி வலீதுடனும் மோதினர். (இப்னு ஹிஷாம்)

ஆனால், ஹம்ஜாவும் அலீயும் தங்களது எதிரிகளுக்கு அவகாசம் கொடுக்காமல் அடுத்த வினாடியே அவ்விருவரையும் கொன்றுவிட்டனர். ஆனால், உபைதாவும் உத்பாவும் சண்டை செய்து கொண்டதில் இருவருக்கும் பலத்த காயமேற்பட்டது. உபைதா (ரழி) அவர்களின்

கால் வெட்டுண்டு விழுந்தது. இதைக் கண்ட ஹம்ஜா (ரழி) அவர்களும் அலீ (ரழி) அவர்களும் உத்பா மீது பாய்ந்து அவனை வெட்டிக் கொன்றார்கள். அதற்குப் பிறகு உபைதாவை சுமந்து கொண்டு படைக்குத் திரும்பினர். உபைதா (ரழி) இதனால் நோய்வாய்ப்பட்டு இப்போருக்குப் பின் 4 அல்லது 5 நாட்கள் கழித்து மதீனாவிற்கு செல்லும் வழியில் 'ஸஃப்ரா' என்ற இடத்தில் இறந்தார்கள்.

(இறைநம்பிக்கையாளர்கள், இறைமறுப்பாளர்கள் ஆகிய) இவ்விரு வகுப்பாரும் தங்கள் இறைவனைப் பற்றி தர்க்கித்தனர். ஆகவே, அவர்களில் எவர் (உண்மையான இறைவனை) நிராகரிக்கிறார்களோ அவர்களுக்கு நெருப்பினால் ஆன ஆடை தயார் செய்யப்பட்டிருக்கிறது. (அக்கினியைப் போல்) கொதித்துக் கொண்டு இருக்கும் தண்ணீர் அவர்களுடைய தலைகளின் மீது ஊற்றப்படும். (அல்குர்ஆன் 22:19)

இந்த வசனம் தங்கள் விஷயத்தில்தான் இறங்கியது என்று அலீ (ரழி) சத்தியமிட்டு கூறுகிறார்கள்.

**எதிரிகளின் பாய்ச்சல்**

போரின் ஆரம்பமே எதிரிகளைப் பொருத்தவரை கெட்டதாக அமைந்தது. தங்களின் தளபதிகளிலும் குதிரை வீரர்களிலும் மிகச் சிறந்த மூவரை அவர்கள் இழந்தனர். இதனால் ஆத்திரமடைந்து, முஸ்லிம்களின் மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தனர். ஆனால், முஸ்லிம்களோ தங்களது இறைவனிடம் உதவியும் பாதுகாப்பும் கோரி, பணிவுடன் தங்களது எண்ணங்களை தூய்மைப்படுத்திக் கொண்டே, எதிரிகளின் தொடர் தாக்குதல்களை சமாளித்தனர். முஸ்லிம்கள் தங்கள் இடங்களிலேயே உறுதியாக நின்று எதிரிகளின் தாக்குதலுக்கு பதிலடிக் கொடுத்தனர். 'அஹத்! அஹத்!' (அல்லாஹ் ஒருவனே! அல்லாஹ் ஒருவனே!!) என்று கூறிக்கொண்டே இணைவைப்பவர்களுக்குக் கடுமையான சேதங்களை ஏற்படுத்தினர்.

**நபியவர்கள் அல்லாஹ்விடம் மன்றாடுகிறார்கள்**

முஸ்லிம்களின் அணிகளைச் சரிசெய்து திரும்பிய பின் நபி (ஸல்) தனது இறைவன் தனக்கு வாக்களித்ததை அவனிடம் வேண்டினார்கள்.

அவர்கள் கேட்டதாவது: "அல்லாஹ்வே! நீ எனக்களித்த வாக்கை நிறைவேற்றுவாயாக! அல்லாஹ்வே! நீ எனக்களித்த உனது வாக்கையும் ஒப்பந்தத்தையும் உன்னிடம் கேட்கிறேன்."

மோதல்களும் தாக்குதல்களும் கடுமையாகச் சூடுபிடித்து உச்சக்கட்டத்தை அடைந்த போது "அல்லாஹ்வே! இக்கூட்டத்தை இன்று நீ அழித்து விட்டால் உன்னை வணங்குவதற்கு இப்பூமியில் யாருமே இருக்க மாட்டார்கள். அல்லாஹ்வே! நீ இக்கூட்டத்தை அழிக்க நாடினால் இன்றைய தினத்திற்குப் பின் உன்னை யாரும் வணங்க மாட்டார்கள்" என்று அல்லாஹ்விடம் கையேந்தினார்கள். கரங்களை உயர்த்தியதால் அவர்களின் புஜத்திலிருந்து போர்வை நழுவி விழுந்தது. அந்தளவு அல்லாஹ்விடம் மன்றாடிக் கேட்டார்கள். நபி (ஸல்) அவர்களின் போர்வையை அபூபக்ர் (ரழி) சரிசெய்து, "அல்லாஹ்வின் தூதரே! போதும், நீங்கள் உங்கள் இறைவனிடம் அதிகம் வேண்டிவிட்டீர்கள்" என்றார்கள்.

நபியவர்களின் பிரார்த்தனையை அல்லாஹ் அங்கீகரித்து, வானவர்களுக்குக் கட்டளைப் பிறப்பித்தான்.

(நபியே!) உங்களது இறைவன் வானவர்களை நோக்கி "நிச்சயமாக நான் உங்களுடன் இருக்கிறேன். ஆகவே, நீங்கள் நம்பிக்கையாளர்களை உறுதிப் படுத்துங்கள் (என்று கட்டளையிட்டு) நிராகரிப்பவர்களுடைய உள்ளங்களில் நாம் திகிலை உண்டு பண்ணுவோம்

(என்று கூறி, நம்பிக்கையாளர்களை நோக்கி) நீங்கள் அவர்களுடைய பிடரிகளின் மேல் வெட்டுங்கள். அவர்களைக் கணுக் கணுவாகத் துண்டித்து விடுங்கள்'' என்று அறிவித்ததை நினைத்துப் பாருங்கள். (அல்குர்ஆன் 8:12)

மேலும் தனது தூதருக்கு அறிவித்தான்:

(உங்களைப்) பாதுகாக்குமாறு நீங்கள் உங்கள் இறைவனிடம் வேண்டிய போது ''அணியணியாக உங்களைப் பின்பற்றி வரக்கூடிய ஆயிரம் வானவர்களைக் கொண்டு நிச்சயமாக நான் உங்களுக்கு உதவி செய்வேன்'' என்று அவன் உங்களுக்குப் பதிலளித்தான். (அல்குர்ஆன் 8:9)

அதாவது, அந்த வானவர்கள் உங்களுக்குப் பின்னிருந்து உங்களுக்கு உதவிபுரிவார்கள் என்றோ அல்லது வானவர்கள் ஒரே தடவையில் வராமல் சிலருக்குப் பின் சிலராக வருவார்கள் என்றோ கருத்து கொள்ளலாம்.

**வானவர்கள் வருகிறார்கள்**

நபி (ஸல்) சற்று தலையைத் தாழ்த்தி, பின்பு உயர்த்தி ''அபூபக்ரே! நற்செய்தி அடைந்து கொள்ளுங்கள். இதோ... ஜிப்ரீல் புழுதிகளுடன் காட்சியளிக்கிறார்'' அல்லது ''அபூபக்ரே! நற்செய்தி அடைந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வின் உதவி உங்களுக்கு வந்துவிட்டது. இதோ.. ஜிப்ரீல் குதிரையின் கடிவாளத்தை இழுத்து வருகிறார். அவர் உடம்பில் புழுதி படிந்திருக்கிறது'' என்று கூறினார்கள்.

கவச ஆடை அணிந்து நபி (ஸல்) தங்களது கூடாரத்திலிருந்து வெளியேறி,

அதிசீக்கிரத்தில் இக்கூட்டம் தோற்கடிக்கப்படுவார்கள், (பிறகு) புறங்காட்டி ஓடுவார்கள். (அல்குர்ஆன் 54:45)

என்ற வசனத்தைக் கூறியவர்களாக பொடிக்கற்கள் நிறைந்த மண்ணை ''முகங்கள் மாறட்டும்'' என்று கூறி எதிரிகளின் முகத்தை நோக்கி எறிந்தார்கள். அது எதிரிகளின் கண், தொண்டை, வாய் என்று அனைத்தையும் சென்றடைந்தது.

இது குறித்தே,

நீங்கள் எறியும்போது உண்மையில் அதை நீங்கள் எறியவில்லை. எனினும், அதை நிச்சயமாக அல்லாஹ்தான் எறிந்தான். (அல்குர்ஆன் 9:17)

என்ற வசனம் இறங்கியது.

**எதிர் பாய்ச்சல்**

இந்நேரத்தில்தான், நபி (ஸல்) முஸ்லிம்களுக்கு தனது இறுதிக் கட்டளையை அறிவித்தார்கள். ''எதிரிகள் மீது பாயுங்கள்'' என்று கூறி, போர் புரிய முஸ்லிம்களுக்கு ஆர்வமூட்டினார்கள். மேலும் கூறினார்கள், ''முஹம்மதின் உயிர் எவன் கைவசமுள்ளதோ அவன் மீது ஆணையாக! இன்றைய தினத்தில் போர் புரிந்து சகிப்புடனும், நன்மையை நாடியும், புறமுதுகு காட்டாமல் எதிரிகளை எதிர்த்தவராக யார் கொலை செய்யப்படுகிறாரோ அவரை அல்லாஹ் சொர்க்கத்தில் நுழைவிப்பான். வானங்களையும் பூமிகளையும் அகலமாகக் கொண்ட சொர்க்கத்தின் பக்கம் விரைந்தோடுங்கள்'' என்று கூறி போருக்கு ஆர்வமூட்டினார்கள். உமைர் இப்னு அல்ஹுமாம் (ரழி) ''ஆஹா! ஆஹா!'' என்றார்கள். நபி (ஸல்) ''நீ ஏன் ஆஹா! ஆஹா!'' என்று கூறுகிறாய்? என்று கேட்க, அவர் ''நான் தவறான எண்ணத்தில் கூறவில்லை! அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் சொர்க்கவாசிகளில் ஒருவனாக ஆக வேண்டுமென்ற ஆசையில் அவ்வாறு கூறினேன்''

என்றார். நபி (ஸல்) அவர்கள் "ஆம்! நிச்சயமாக நீர் சொர்க்கவாசிகளில் ஒருவர்தான்" என்றார்கள். அவர் தன்னிடமிருந்த சில பேரீத்தம் பழங்களை எடுத்து சாப்பிடத் தொடங்கினார். பின்பு, "இந்தப் பேரீத்தம் பழங்களை சாப்பிடும் வரை நான் உயிர் வாழ்வதை நீண்ட ஒரு காலமாகக் கருதுகிறேன்" என்று கூறியவராக அந்தப் பேரீத்தம் பழங்களை எறிந்து விட்டு எதிரிகளுடன் போர் புரிந்து வீரமரணம் எய்தினார். (ஸஹீஹ் முஸ்லிம்)

இவ்வாறுதான் அவ்ஃப் இப்னு ஹாரிஸ் (ரழி), நபி (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் தன் அடியானைப் பார்த்து எப்போது சிரிக்கிறான்?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) "எந்தவித தற்காப்பு ஆடையும் அணியாமல் எதிரிகளுக்குள் தனது கையை அடியாரின் செலுத்துவதைப் பார்த்து அல்லாஹ் சிரிக்கின்றான்" என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடன், தான் அணிந்திருந்த கவச ஆடையைக் கழற்றி எறிந்து விட்டு எதிரிகளிடம் போர் புரிந்து வீரமரணம் எய்தினார்.

எதிர்த்துத் தாக்க வேண்டுமென நபி (ஸல்) கட்டளைப் பிறப்பித்தவுடன் எதிரிகளின் மீது முஸ்லிம்கள் பாய்ந்தனர் அணிகளைப் பிளந்தனர் தலைகளைக் கொய்தனர். அல்லாஹ்வின் பாதையில் போர் புரிய வேண்டும் என்ற தீராத தாகத்தில் இருந்த அவர்கள், எதிரிகளை நிலை தடுமாறச் செய்தனர். இதனால் எதிரிகளின் தாக்கும் வேகமும் குறைந்தது வீரமும் சோர்வுற்றது. எதிரிகளால் முஸ்லிம்களின் வேகத்திற்கு ஈடுகொடுக்க முடியவில்லை.

அதுமட்டுமல்ல! அன்று நபி (ஸல்) கவச ஆடை அணிந்து, யாரும் நெருங்க முடியாத அளவு எதிரிகளுக்கருகில் நெருங்கி நின்று,

அதிசீக்கிரத்தில் இந்த கூட்டம் சிதறடிக்கப்படும். மேலும் (இவர்கள்) புறங்காட்டி ஓடுவார்கள். (அல்குர்ஆன் 54:45)

என்று உறுதியுடன் மிகத் தெளிவாக சொல்லிக் கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் இக்காட்சியைப் பார்த்த முஸ்லிம்களுக்கு உற்சாகமும் ஆவேசமும் பன்மடங்கு பெருகின. (ஸஹீஹுல் புகாரி)

ஆகவே, முஸ்லிம்கள் மிகத் துணிவுடன் சண்டையிட்டார்கள். வானவர்களும் அவர்களுக்கு உதவி செய்தார்கள்.

அபூஜஹ்லின் மகன் இக்மா கூறுகிறார்: அன்றைய தினத்தில் ஒருவன் தலை துண்டிக்கப்பட்டு கீழே விழும் ஆனால், அவரை வெட்டியவர் யாரென்று தெரியாது. (இப்னு ஸஅது)

இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகின்றார்கள்: ஒரு முஸ்லிம் எதிரியைத் தாக்க பின்தொடர்ந்து செல்லும் போது மேலிருந்து ஒரு சாட்டையின் ஒலியையும் 'ஹைஸூமே! முன்னேறு' என்று கூறும் ஒரு குதிரை வீரன் அதட்டலையும் கேட்டார். அதன் பிறகு அந்த முஸ்லிம், எதிரியை பார்க்கும் போது அந்த எதிரி மூக்கு அறுக்கப்பட்டு, முகம் பிளக்கப்பட்டு மல்லாந்துக் கிடந்தான். அவனது உயிர் முற்றிலும் பிரிந்திருந்தது. அந்த அன்சாரி நபி (ஸல்) அவர்களிடம் இச்செய்தியைக் கூறினார். "ஆம்! நீர் உண்மைதான் கூறுகிறீர். அது மூன்றாவது வானத்திலிருந்து அல்லாஹ் இறக்கிய உதவியாகும்" என்று நபி (ஸல்) விளக்கமளித்தார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

அபூதாவூது அல் மாஸினி (ரழி) கூறுகிறார்கள்: நான் ஒரு எதிரியை வெட்டுவதற்காக அவனை பின்தொடர்ந்த போது எனது வாள் அவன் மீது படுவதற்கு முன்னதாகவே அவனது தலை கீழே விழுந்தது. எனவே, வேறு யாரோ அவனை வெட்டினார்கள் என்று நான் அறிந்து கொண்டேன்.

அன்சாரிகளில் ஒருவர் அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபை கைது செய்து நபி (ஸல்) அவர்களிடம் அழைத்து வந்தார். அப்பாஸ் "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவர் என்னை கைது செய்யவில்லை. என்னை கைது செய்தது சிறந்த குதிரையின் மீது அமர்ந்து வந்த மிக அழகிய முகமுடைய ஒருவர்தான். ஆனால், இப்போது அவரை நான் இந்தக் கூட்டத்தில் பார்க்கவில்லையே?" என்று கூறினார். அதற்கு அன்சாரி "அல்லாஹ்வின் தூதரே! நான்தான் அவரைக் கைது செய்தேன்" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) "நீங்கள் அமைதியாக இருங்கள்! அல்லாஹ்தான் சங்கைமிக்க ஒரு வானவரின் மூலம் உங்களுக்கு உதவி செய்தான்" என்று கூறினார்கள்.

அலீ (ரழி) கூறினார்கள்: பத்ர் போரில் என்னையும் அபூபக்ர் (ரழி) அவர்களையும் பார்த்து நபி (ஸல்) "உங்கள் இருவரில் ஒருவருடன் ஜிப்ரீலும், மற்றொருவருடன் மீக்காயிலும் இருக்கிறார். பெரிய வானவரான இஸ்ராஃபீலும் போரில் கலந்திருக்கிறார்" என்று கூறினார்கள். (முஸ்னது அஹ்மது, பஜ்ஜார், முஸ்தத்ரகுல் ஹாகிம்)

### நழுவுகிறான் இப்லீஸ்

சுராகா இப்னு மாலிகின் உருவத்தில் போருக்கு வந்திருந்த இப்லீஸ் இணைவைப்பவர்களை வானவர்கள் வெட்டுவதைப் பார்த்தவுடன் போர் களத்திலிருந்து நழுவினான். அவனை உண்மையிலேயே சுராகா என்று எண்ணியிருந்த ஹாரிஸ் இப்னு ஹிஷாம் அவனை தப்ப விடாமல் இருக்க பிடித்துக் கொண்டார். ஹாரிஸின் நெஞ்சில் அடித்து அவரைக் கீழே தள்ளி விட்டு இப்லீஸ் ஓடினான். மற்றவர்கள் "சுராகாவே! எங்கே ஓடுகிறீர்? எங்களை விட்டுப் பிரியாமல் கடைசி வரை எங்களுடன் துணையாக இருப்பேன் என்று கூறியிருந்தீரே?" என்றனர். அதற்கு ஷைத்தான்,

"நிச்சயமாக நான் உங்களைவிட்டு விலகிக் கொண்டேன். நீங்கள் பார்க்க முடியாத ஒன்றை நான் பார்க்கின்றேன் நிச்சயமாக நான் அல்லாஹ்வுக்குப் பயப்படுகின்றேன் வேதனை செய்வதில் அல்லாஹ் மிகக் கடுமையானவன்" (அல்குர்ஆன்:48)

என்று கூறிக் கொண்டே, வெருண்டோடி கடலில் குதித்தான்.

### பெரும் தோல்வி

எதிரிகளின் அணியில் சலசலப்பும், தோல்வியின் அடையாளங்களும் வெளிப்பட்டன. முஸ்லிம்களின் கடுமையானத் தாக்குதலுக்கு முன் இணைவைப்போரின் அணி சின்னா பின்னமாகியது போர் முடிவை நெருங்கியது. எதிரிகள் நாலா பக்கங்களிலும் விரைந்தோடித் தப்பிக்க முயன்றனர். முஸ்லிம்கள் அவர்களைப் பின்தொடர்ந்து பணிந்தவரை கைது செய்து பணியாதவரை வெட்டி வீழ்த்தினர். இவ்வாறு இணைவைக்கும் எதிரிகள் போரில் பெரும் தோல்வியடைந்தனர்.

### அபூஜஹ்லின் வீம்பு

வம்பன் அபூஜஹ்ல் தனது அணியில் சலசலப்பைப் பார்த்தவுடன் அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் படையை உற்சாகப்படுத்த முயன்றான். பெருமையுடனும் திமிருடனும் அவன் தனது படையைப் பார்த்து "சுராகா உங்களை விட்டுப் பிரிந்து சென்றதால் நீங்கள் தோற்றுவிட வேண்டாம். ஏனெனில், அவன் முஹம்மதுக்கு இவ்வாறுதான் (படையை விட்டுப் பிரிந்து செல்வதாக) வாக்குக் கொடுத்திருந்தான். உத்பா, ஷைபா, வலீத் கொல்லப்பட்டதால் நீங்கள் பயந்துவிட வேண்டாம். அவர்கள் அவசரப்பட்டு விட்டார்கள். லாத், உஜ்ஜாவின் மீது சத்தியமாக! இந்த முஸ்லிம்களை கயிற்றில் பிணைத்துக் கட்டாதவரை நாம் திரும்ப மாட்டோம். நீங்கள் முஸ்லிம்களில் எவரையும் கொன்றுவிட வேண்டாம். மாறாக, அவர்களைப் பிடித்து கைதிகளாக்கிக் கொண்டு வாருங்கள். அவர்கள் செய்த தீய செயலை அவர்களுக்குப் புரிய வைப்போம்."

இப்படி திமிராகப் பேசிய அபூஜஹ்லுக்குத் தனது அகம்பாவத்தின் எதார்த்தம் புரியத் தொடங்கியது. அவனைச் சுற்றி இணைவைப்போரின் பெரிய கூட்டமொன்று, தங்களது வாட்களாலும் ஈட்டிகளாலும் பாதுகாப்பு அரணை அமைத்திருந்தார்கள். இருந்தாலும் முஸ்லிம்களின் புயலுக்கு முன் அவை இருந்த இடம் தெரியாமல் ஆயின. அப்போது அபூஜஹ்ல் குதிரையின் மீது சுற்றிக் கொண்டிருப்பதைப் முஸ்லிம்கள் பார்த்தார்கள். இரு அன்சாரி சிறுவர்களின் கையினால் மரணம் அவனது இரத்தத்தைக் குடிக்க எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

**கொல்லப்பட்டான் அபூஜஹ்ல்**

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) கூறுகிறார்கள்: நான் பத்ர் போர் அன்று அணியில் நின்று கொண்டு, திரும்பிப் பார்த்த போது என் வலப்பக்கமும் இடப்பக்கமும் குறைந்த வயதுடைய இரு வாலிபர்களே இருந்தனர். அவர்கள் இருப்பது எனக்கு ஒரு பாதுகாப்பாக இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. இந்நிலையில் இருவரில் ஒருவர் மற்றவருக்குத் தெரியாமல் ''என் சிறிய தந்தையே! எனக்கு அபூஜஹ்லை காட்டுங்கள்'' என்றார். ''நீ அவனை என்ன செய்வாய்?'' என்று நான் கேட்டேன். அதற்கவர் ''அவன் நபியை ஏசுவதாக நான் கேள்விப்பட்டேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் இன்று அவனைப் பார்த்தால் நான் அல்லது அவன் மரணிக்கும் வரை அவனை விட்டும் பிரியமாட்டேன்'' என்றார். இப்பேச்சு எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியது. இதற்கிடையில் மற்றவரும் இவ்வாறே, என்னைச் சீண்டி முந்தியவர் கூறியதைப் போன்றே கூறினார். அது சமயம் அபூஜஹ்ல் மக்களுக்கு மத்தியில் உலாவுவதைப் பார்த்தேன். அவ்விரு வாலிபர்களிடம் "நீங்கள் கேட்டவன் இதோ இவன் தான்!" என்றேன்.. இருவரும் அவனை நோக்கிப் பாய்ந்தனர். சிறிது நேரத்தில் அவன் கதையை முடித்து நபி (ஸல்) அவர்களிடம் திரும்பினர். "உங்கள் இருவரில் யார் அவனைக் கொன்றது?'' என்று நபி (ஸல்) கேட்க ஒவ்வொருவரும் ''நானே கொன்றேன்'' என்றார். ''உங்கள் வாட்களை துடைத்து விட்டீர்களா?'' என்று நபி (ஸல்) கேட்க இல்லை! எனக் கூறி தங்கள் வாட்களை காண்பிக்கவே "நீங்கள் இருவருமே அவனைக் கொன்றீர்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். பிறகு அபூஜஹ்லின் உடைமைகளை அவர்களில் ஒருவரான முஆத் இப்னு அம்ரு இப்னு ஜமூஹ்விற்கு வழங்கினார்கள். அபூஜஹ்லைக் கொன்ற இரண்டாமவர் முஅவ்வித் இப்னு அஃப்ரா (ரழி) ஆவார். அவர் இப்போரில் வீரமரணம் எய்தினார். (ஸஹீஹுல் புகாரி)

முஆது இப்னு அம்ர் இப்னு அல் ஜமூஹ் (ரழி) கூறுகிறார்கள்: ''அபூஜஹ்ல் அடர்ந்த மரங்களுக்கு நடுவிலுள்ள ஒரு மரத்தைப் போல் அவனை சென்றடைய முடியாத அளவிற்கு பாதுகாப்பில் இருக்கிறான். அவனிடம் யாரும் செல்ல முடியாது'' என்று மக்கள் கூறுவதை நான் கேட்டேன். எனவே, நானே அவனைக் கொலை செய்ய வேண்டுமென்று முடிவு செய்தேன். நான் அவனைப் பார்த்துவிட்டபோது ஓடிச்சென்று அவனது கரண்டைக் கால்களைத் துண்டித்தேன். திருகையிலிருந்து அரைபடாத கொட்டை நசுங்கினால் பறக்குமே,,, அது போன்று அவனது கால்கள் பறந்து விழுந்தன. இதைப் பார்த்த அவனது மகன் இக்மா எனது தோள் மீது பாய்ந்து வெட்டினார். அதனால் எனது கை வெட்டப்பட்டு உடம்பில் தோலுடன் தொங்கிக் கொண்டிருந்தது. அன்றைய தினம் முழுக்க அதை என் முதுகுக்குப் பின்னால் போட்டுக் கொண்டு போர் செய்தேன். அது எனக்கு மிகவும் நோவினை அளித்த போது அதை என் பாதத்தின் கீழ் வைத்து பிய்த்துத் தூக்கி எறிந்து விட்டேன். பின்பு காயப்பட்டுக் கிடந்த அபூஜஹ்லுக்கு அருகில் சென்ற முஅவ்வித் இப்னு அஃப்ரா (ரழி) அவனை வெட்டிச் சாய்த்தார். ஆனால், அபூஜஹ்ல் குற்றுயிராகக் கிடந்தான். இப்போரில் முஅவ்வித் (ரழி) இறுதியில் வீரமரணம் எய்தினார்கள்.

போர் முடிந்த போது நபி (ஸல்) ''அபூஜஹ்லுக்கு என்னவானது என யார் பார்த்து வருவீர்கள்?'' என்று கேட்டார்கள். அப்போது அவனைத் தேடிப் பார்ப்பதற்குத் தோழர்கள்

பல திசைகளிலும் பிரிந்து சென்றார்கள். அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அபூஜஹ்லைப் பார்த்து விட்டார்கள். அவன் தனது இறுதி மூச்சை வாங்கிக் கொண்டிருந்தான். இப்னு மஸ்ஊது (ரழி) தனது காலை அவனது கழுத்தின் மீது வைத்து அவன் தலையைத் தனியாக அறுத்தெடுப்பதற்காக அவன் தாடியைப் பிடித்து ''அல்லாஹ்வின் எதிரியே! அல்லாஹ் உன்னைக் கேவலப்படுத்தி விட்டானா?'' என்று கேட்டார்கள். அதற்கவன் ''என்னை அல்லாஹ் எப்படி கேவலப்படுத்துவான்? நீங்கள் கொன்றிருக்கும் மனிதர்களில் என்னை விட உயர்ந்தவர் யார் இருக்க முடியும்? அல்லது நீங்கள் கொன்றிருக்கும் மனிதர்களில் என்னை விட மேலானவர் யார் இருக்க முடியும்?'' என்று கேட்டுவிட்டு, ''கேவலம்! சாதாரண விவசாயிகளைத் தவிர்த்து வேறு யாராவது (என் இனத்தவர்) என்னை கொன்றிருக்க வேண்டுமே என்று கூறி, சரி இன்றைய தினத்தில் வெற்றி யாருக்கு என்று சொல்?'' என்றான். அதற்கு இப்னு மஸ்ஊது (ரழி) ''அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும்தான் கிடைத்தது'' என்று கூறினார்கள். பின்பு அவனது கழுத்தின் மீது காலை வைத்திருந்த இப்னு மஸ்ஊதிடம் ''ஏ... ஆடு மேய்த்த பொடியனே!'' நீ மிகுந்த சிரமமான ஓர் இடத்தின் மேல் நிற்கிறாய் என்பதைத் தெரிந்துகொள்'' என்று கூறினான்.

இதற்குப் பிறகு இப்னு மஸ்ஊது (ரழி) அவர்கள் அபூஜஹ்லின் தலையைத் தனியாக வெட்டியெடுத்து நபி (ஸல்) அவர்களிடம் சென்று ''அல்லாஹ்வின் தூதரே! இதோ அல்லாஹ்வின் எதிரி அபூஜஹ்லின் தலை!'' என்று கூறினார்கள். நபி (ஸல்) ''அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை'' என்று மூன்று முறை கூறிவிட்டு ''அல்லாஹ் மிகப் பெரியவன்! எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் தனது வாக்கை உண்மைப்படுத்தினான். தனது அடியாருக்கு உதவி செய்தான். எதிரி படைகள் அனைத்தையும் தோற்கடித்தான்'' என்று கூறி, என்னை அழைத்துச் சென்று அவனை எனக்குக் காட்டு என்றார்கள். அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரழி) கூறுகிறார்கள்: நாங்கள் அவன் இருந்த இடத்திற்குச் சென்றோம். அவனைக் கண்ட நபி (ஸல்) ''இவன்தான் இந்த சமுதாயத்தின் ஃபிர்அவ்ன்'''' என்றார்கள்.

### இறைநம்பிக்கை நிகழ்த்திய அதிசயங்கள்

உமைர் இப்னு ஹுமாம் (ரழி) மற்றும் அவ்ஃப் இப்னு ஹாரிஸ் (ரழி) ஆகிய இருவரின் அற்புதமான முன் உதாரணங்களை இதற்கு முன் கூறினோம். அதுமட்டுமல்லாமல், மேலும் பல அதிசயமான நிகழ்ச்சிகள் இப்போரில் நடந்தன. கொள்கையில் அவர்களுக்கிருந்த உறுதியையும் நிலைத்தன்மையையும் அந்நிகழ்ச்சிகள் நமக்கு சுட்டிக் காட்டுகின்றன.

இப்போரில் தந்தை பிள்ளைக்கு எதிராகவும், பிள்ளை தந்தைக்கு எதிராகவும், சகோதரர்கள் சகோதரர்களுக்கு எதிராகவும் போரிட்டனர். இவர்களுக்கு மத்தியில் கொள்கையில் ஏற்பட்ட மாற்றங்களுக்கு வாட்கள் தீர்ப்பளித்தன. மக்காவில் அடக்குமுறைக்கு ஆளாக்கப்பட்டவர்கள் தம்மைக் கொடுமைப்படுத்தியவர்களைக் கொன்று தங்களுடைய சினத்தை ஆற்றிக் கொண்டனர்.

1) இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) தங்களது தோழர்களிடம் ''ஹாஷிம் கிளையைச் சேர்ந்த சிலரையும் மற்றும் சிலரையும் நான் அறிவேன். அவர்கள் நிர்பந்தமாக போருக்கு அழைத்து வரப்பட்டுள்ளனர். நம்மிடம் சண்டை செய்ய வேண்டுமென்று அவர்களுக்கு எவ்வித விருப்பமும் இல்லை. எனவே, ஹாஷிம் கிளையைச் சேர்ந்த எவரையும் நீங்கள் கொன்றுவிட வேண்டாம். மேலும், அபுல் பக்த இப்னு ஷாமையும் கொன்றுவிட வேண்டாம். அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபையும் கொன்றுவிட வேண்டாம். அவர் நிர்ப்பந்தமாகத்தான் அழைத்து வரப்பட்டிருக்கிறார்'' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களின் இவ்வார்த்தையைக் கேள்விப்பட்ட உத்பாவின் மகன் அபூஹுதைஃபா ''என்ன! எங்களது பெற்றோர், பிள்ளைகள், சகோதரர்கள், உறவினர்கள்

அனைவரையும் கொன்றுவிட்டு அப்பாஸை மட்டும் விட்டுவிட வேண்டுமா? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அவரைச் சந்தித்தால் வாளால் அவருக்கும் கடிவாளமிடுவேன்'' என்றார். இவ்வார்த்தையை நபி (ஸல்) கேள்விப்பட்டபோது உமரிடம் ''அபூஹப்ஸே! அல்லாஹ்வின் தூதருடைய சிறிய தந்தையின் முகத்தை வாளால் வெட்டுவது நியாயமாகுமா?'' என்று வருத்தப்பட்டார்கள். உமர் (ரழி) ''அல்லாஹ்வின் தூதரே! என்னை அனுமதியுங்கள். அபூ ஹுதைஃபாவின் கழுத்தை வாளால் வெட்டி வீசிகிறேன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர் நயவஞ்சகராகி விட்டார்'' என்றார்கள்.

தான் கூறிய சொல்லை நினைத்து அபூஹுதைஃபா எப்போதும் கவலைப்படுவார். ''இந்த வார்த்தையைக் கூறிய அன்றிலிருந்து நான் நிம்மதியாக இல்லை. இந்த வார்த்தையின் விளைவை எண்ணி பயந்துகொண்டே இருக்கிறேன், அல்லாஹ்வே இறைவன் என்று நான் சாட்சியம் கூறுவதுதான் அந்தக் குற்றம் மன்னிக்கப்படுவதற்கு காரணமாக ஆகலாம்'' என்று அபூஹுதைஃபா (ரழி) ஆதரவு வைப்பார்.

அபூஹுதைஃபா (ரழி) அபூபக்ர் (ரழி) அவர்களின் ஆட்சியின் போது யமாமாவில் நடந்த போரில் வீரமரணம் எய்தினார்.

2) மேலும் நபி (ஸல்), அபுல் பக்தயைக் கொலை செய்யக் கூடாதென்று தடுத்திருந்தார்கள். ஏனெனில், அவர் மக்காவில் நபி (ஸல்) அவர்களுக்கு பாதுகாப்பளித்தவர் அவர் நபி (ஸல்) அவர்களுக்கு நோவினை அளித்ததில்லை நபி (ஸல்) வெறுக்கும்படியான எந்தவொரு காரியத்தையும் அவர் செய்ததில்லை. மேலும் ஹாஷிம், முத்தலிப் கிளையினரை ஒதுக்கி வைக்க வேண்டுமென்று எழுதப்பட்ட ஒப்பந்தப் பத்திரத்தை கிழிப்பதற்கு இவரும் ஒரு காரணமாக இருந்தார்.

இவ்வாறிருந்தும் அபுல் பக்த போரில் கொல்லப்பட்டார். அதற்குக் காரணம், முஜத்தர் இப்னு ஜியாது (ரழி) என்ற நபித்தோழர் அபுல் பக்தயையும் அவன் நண்பரையும் போரில் சந்தித்தார். இவ்விருவரும் ஒன்றாக சேர்ந்து முஸ்லிம்களுடன் போர் செய்து கொண்டிருந்தனர். அப்போது முஜத்தர் ''அபுல் பக்தயே! உன்னைக் கொல்லக் கூடாதென அல்லாஹ்வின் தூதர் தடுத்திருக்கிறார்கள், எனவே, நீங்கள் விலகிவிடுங்கள்'' என்றார். அதற்கு ''எனது தோழரையும் கொல்லக் கூடாதென்று அவர் கூறியிருக்கிறாரா?'' என்றார். அதற்கு முஜத்தர் ''இல்லை. உன் நண்பரைக் கொல்லாமல் நாங்கள் விடமாட்டோம்'' என்றார். ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாங்கள் ஒன்றாகவே சாவோம்'' என்று அபுல் பக்த கூறினார். பின்பு முஜத்தருடன் அவர் சண்டையிடவே முஜத்தர் அவரைக் கொல்ல வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளானார்.

3) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) கூறுகிறார்கள்: நானும் உமையா இப்னு கலஃபும் மக்காவில் இஸ்லாம் வருவதற்கு முன்பே நண்பர்களாக இருதோம். பத்ர் போர் அன்று போரில் எனக்குக் கிடைத்த கவச ஆடைகளுடன் உமையாவுக்கு அருகே சென்று கொண்டிருந்தேன். அப்போது உமையா தனது மகன் அலீ இப்னு உமையாவின் கையை பிடித்தவனாக சரணடைவதற்காக நின்று கொண்டிருந்தான். என்னைப் பார்த்த உமையா ''என்னை நீ கைதியாக்கிக் கொள்ள வேண்டாமா? உன்னிடமுள்ள இந்த கவச ஆடைகளைவிட நான் சிறந்தவனல்லவா? இன்றைய தினத்தைப் போல் ஒரு நாளை நான் பார்த்ததில்லை. உங்களுக்கு பால் கொடுக்கும் ஒட்டகங்கள் வேண்டாமா? என்னை யாராவது சிறைப் பிடித்தால் நிறைய பால் கொடுக்கும் ஒட்டகங்களை பிணையாக நான் தருவேன்'' என்று கூறினான். இந்த வார்த்தையைக் கேட்டவுடன் உருக்குச் சட்டைகளைக் கீழே போட்டுவிட்டு அவ்விருவரையும் இரு கைகளில் பிடித்துக் கொண்டேன். அப்போது உமையா, ''தீக்கோழியின் இறகை தன் நெஞ்சில் சொருகியிருக்கும் அந்த மனிதர் யார்?'' என்று கேட்டான். ''அவர்தான் ஹம்ஜா'' என்றேன். அதைக் கேட்ட உமய்யா ''அவர்தான் எங்களுக்கு இப்போரில் நிறைய அழிவுகளை ஏற்படுத்தியவர்'' என்றான்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) தொடர்ந்து கூறுகிறார்கள்: நான் உமையாவையும் அவனது மகனையும் இழுத்துச் சென்ற போது உமையா என்னுடன் இருப்பதை பிலால் (ரழி) பார்த்து விட்டார். (இந்த உமையாதான் மக்காவில் பிலால் (ரழி) அவர்களுக்கு அதிகம் வேதனை தந்தவன்.) அவனைப் பார்த்த பிலால் (ரழி) ''இதோ... இறைநிராகரிப்பாளர்களின் தலைவன் உமையா! இவன் இன்று தப்பித்தால் என்னால் இனி தப்பிக்க முடியாது'' என்று சப்தமிட்டார். அதற்கு நான் ''பிலாலே சும்மா இரும். இவன் இப்போது எனது கைதி'' என்று கூறினேன். மீண்டும் பிலால் (ரழி) ''இவன் தப்பித்தால் நான் தப்பிக்க முடியாது'' என்று அலறினார். அதற்கு நான் ''ஓ கருப்பியின் மகனே! நான் சொல்வது உனக்குக் கேட்கவில்லையா?'' என்றேன். அதற்கு மீண்டும் பிலால் (ரழி) ''இவன் தப்பித்தால் நான் இனி தப்பிக்கவே முடியாது'' என்று கூறிவிட்டு, மிக உயர்ந்த சப்தத்தில் ''அல்லாஹ்வின் உதவியாளர்களே! இதோ இறைநிராகரிப்பாளர்களின் தலைவன் உமையா இப்னு கலஃப்! இவன் தப்பித்தால் என்னால் தப்பிக்க முடியாது'' என்று கூறினார். முஸ்லிம்கள் இதைக் கேட்டவுடன் வளையத்தைப் போன்று எங்களைச் சூழ்ந்துகொண்டனர். நான் உமையாவைக் காப்பாற்ற முயன்றேன். அப்போது ஒருவர் உமையாவின் மகனை பின்புறத்திலிருந்து வெட்டவே அவன் தரையில் விழுந்தான். இதைப் பார்த்த உமையா உரத்த குரலில் கத்தினான். அதுபோன்ற சப்தத்தை நான் கேட்டதே இல்லை. உடனே நான் ''உமையாவே உன்னை நீயே காப்பாற்றிக்கொள்! இன்று என்னால் உன்னைக் காப்பாற்ற முடியாது. உனக்கு எந்தப் பாதுகாப்பும் கொடுக்க முடியாது. உனக்கு எந்தப் பலனையும் என்னால் செய்ய முடியாது'' என்றேன். அதற்குப் பின் முஸ்லிம்கள் அவ்விருவரையும் தங்கள் வாட்களால் வெட்டி அவர்கள் கதையை முடித்தனர். இதற்குப் பின் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) ''அல்லாஹ் பிலாலின் மீது கருணை காட்டட்டும்! போரில் எனக்குக் கிடைத்த கவச ஆடைகளும் போயின் அவர் எனது கைதிகளையும் கொன்றார்'' என்று கூறுவார்கள். (ஸஹீஹுல் புகாரி)

4) இப்போரில் உமர் இப்னு கத்தாப் (ரழி) தனது நெருங்கிய உறவினர் என்றும் பார்க்காமல் தனது தாய்மாமன் 'ஆஸ் இப்னு ஹிஷாம் இப்னு முகீரா''வைக் கொன்றார்கள். போர் முடிந்து மதீனாவிற்குத் திரும்பிக் கொண்டிருக்கும் வழியில் கைதிகளில் ஒருவராக இருந்த அப்பாஸிடம் ''அப்பாஸே! நீங்கள் இஸ்லாமை ஏற்றுக்கொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனது தந்தை கத்தாப் முஸ்லிமாகுதைவிட நீங்கள் முஸ்லிமாவதுதான் எனக்கு விருப்பமானது. அதற்குக் காரணம் நீங்கள் முஸ்லிமாவது நபி (ஸல்) அவர்களுக்கு மகிழ்ச்சியான செய்தியாகும்'' என்று கூறினார்கள்.

5) அபூபக்ர் (ரழி), இணைவைப்போருடன் வந்திருந்த தமது மகன் அப்துர்ரஹ்மானைக் கூவி அழைத்தார்கள். ''ஏ... கெட்டவனே! எனது செல்வங்கள் எங்கே?'' என்றார்கள். அதற்கு அப்துர் ரஹ்மான்,

ஆயுதமும் வேகமாக ஓடும் குதிரையும்...
வழிகெட்ட வயோதிகர்களைக் கொல்லும் வாளும்...
இவற்றைத் தவிர வேறொன்றும் என்னிடம் இல்லை என பதிலளித்தார்.

6) நபி (ஸல்) தங்களது கூடாரத்திலிருந்து நிலைமைகளைக் கவனித்தார்கள். முஸ்லிம்கள் எதிரிகளைக் கைது செய்வதில் ஈடுபட்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு வாசலில் வாளேந்தி காவல் புரிந்த ஸஅது இப்னு முஆது (ரழி) முஸ்லிம்களின் இச்செயலைப் பார்த்து வெறுப்படைந்தார். ஸஅதின் முகத்தில் வெறுப்பைக் கண்ட நபி (ஸல்) ''ஸஅதே! இம்மக்கள் செய்வதை நீர் வெறுக்கிறீர் போலும்'' என்றார்கள். அதற்கு ஸஅது (ரழி) ''ஆம்! அல்லாஹ்வின் தூதரே! இது அல்லாஹ் இணைவைப்பவர்களுக்குக் கொடுத்த முதல் சேதமாகும். எனவே, அவர்களிலுள்ள ஆண்களை உயிரோடு விடுவதைவிட அதிகமாக அவர்களைக் கொன்று குவிப்பதே எனக்கு மிக விருப்பமானது'' என்றார்.

7) இப்போரில் உக்காஷா இப்னு மிஹ்ஸன் அல்அஸதி (ரழி) அவர்களின் வாள் ஒடிந்து விடவே, அவருக்கு நபி (ஸல்) மரக்கிளை ஒன்றைக் கொடுத்து “உக்காஷாவே! இதன் மூலம் நீர் போரிடுவீராக” என்றார்கள். உக்காஷா நபி (ஸல்) அவர்களிடமிருந்து தனது கையில் வாளை வாங்கியவுடன் அந்த மரக்கிளை உறுதிமிக்க நீண்ட ஒரு வாளாக மாறியது. அல்லாஹ் முஸ்லிம்களுக்கு வெற்றி கொடுக்கும் வரை அவ்வாளால் உக்காஷா போரிட்டார். அவ்வாளுக்கு ‘அல்அவ்ன்’ (உதவி) என்று பெயர் கூறப்பட்டது. இந்த வாளை மற்றும் பல போர்களில் உக்காஷா (ரழி) பயன்படுத்தினார்கள். இறுதியாக அபூபக்ர் (ரழி) அவர்களுடைய ஆட்சிக் காலத்தில் முஸைலமாவுடன் நடந்த போரில் உக்காஷா வீரமரணம் எய்தினார்கள்.

8) போர் முடிந்ததற்குப் பின்பு முஸ்அப் இப்னு உமைர் (ரழி) தனது சகோதரர் அபூஅஜீஸ் இப்னு உமைரைப் பார்த்தார்கள். இவர் முஸ்லிம்களுக்கு எதிராகப் போர்க்களத்தில் கலந்திருந்தார். மதீனாவாசிகளில் ஒருவர் அவரது இரு கைகளையும் கட்டிக் கொண்டிருந்தார். அதைப் பார்த்த முஸ்அப் அவரிடம் “நீங்கள் அவரை நன்றாகப் பிடித்துக்கொள்ளுங்கள். இவரது தாய் மிகுந்த செல்வமுடையவர். உங்களிடமிருந்து இவரை அதிக கிரயம் கொடுத்து விடுவிப்பார்” என்றார்கள். இதைக் கேட்ட அவரது சகோதரர் “எனது சகோதரனே! இதுதான் நீ எனக்காக செய்யும் பரிந்துரையா?” என்றார். அதற்கு முஸ்அப் “இவர்தான் எனது சகோதரர் நீ அல்ல!” என்றார்கள்.

9) இணைவைப்பவர்களின் பிணங்கள் கிணற்றில் போடப்பட்டன. உத்பா இப்னு ரபீஆவின் பிணத்தைக் கிணற்றில் போடுவதற்காக இழுத்து வரும்போது, அதைப் பார்த்த அவனது மகனார் அபூஹுதைஃபா (ரழி) மிகுந்த கவலையடைந்தார். அதனால் அவரது முகமே மாறியது. அதை கவனித்த நபி (ஸல்), “உமது தகப்பனுக்காக நீ கவலைக் கொள்கிறாயா?” என்று கேட்டார்கள். அதற்கவர் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அப்படி இல்லை. அல்லாஹ்வின் தூதரே! எனது தகப்பனின் விஷயத்திலும் அவர் கொலை செய்யப்பட்டதிலும் எனக்கு எந்தக் கவலையும் இல்லை. ஆனால், எனது தந்தை நல்ல அறிவும், புத்தியும், சிறப்பும் உடையவர். அவருக்கு இஸ்லாமின் நேர்வழி கிடைத்துவிடும் என்று ஆதரவு வைத்திருந்தேன். ஆனால், அப்படி கிடைக்கவில்லை. எனது இந்த ஆதரவுக்குப் பின் அவர் நிராகரிப்பில் மரணித்ததை நினைத்தே நான் கவலை அடைந்தேன்” என்றார். நபி (ஸல்) அபூ ஹுதைஃபவை உயர்வாக பேசி, அவருக்காக பிரார்த்தனையும் செய்தார்கள்.

### இருதரப்பிலும் கொல்லப்பட்டவர்கள்

இப்போர் இறைநிராகரிப்பாளர்களுக்கு பெரிய தோல்வியாகவும் இறைநம்பிக்கையாளர்களுக்கு பெரிய வெற்றியாகவும் முடிந்தது. இப்போரில் முஸ்லிம்களில் முஹாஜிர்கள் (மக்காவாசிகள்) ஆறு நபர்களும், அன்சாரிகள் (மதீனாவாசிகள்) எட்டு நபர்களுமாக மொத்தம் பதினான்கு நபர்கள் வீரமரணம் எய்தினர்.

இணைவைப்பவர்களுக்கு மிகப்பெரிய சேதங்கள் ஏற்பட்டன. அவர்களில் எழுபது நபர்கள் கொல்லப்பட்டனர். எழுபது நபர்கள் சிறைபிடிக்கப்பட்டனர். கொல்லப்பட்டவர்களில் பெரும் பாலானவர்கள் மூத்த தலைவர்களாகவும் தளபதிகளாவும் இருந்தனர்.

போர் முடிந்து புறப்படும் முன் எதிரிகளில் கொல்லப்பட்டவர்களுக்கு அருகில் நின்று “நீங்கள் உங்களது இறைத்தூதருக்கு மிகக் கெட்ட உறவினராக இருந்தீர்கள். நீங்கள் என்னைப் பொய்ப்பித்தீர்கள் மற்றவர்கள் என்னை மெய்ப்படுத்தினார்கள். நீங்கள் எனக்கு துரோகம் செய்தீர்கள் மற்றவர்கள் எனக்கு உதவி செய்தார்கள். நீங்கள் என்னை ஊரைவிட்டு வெளியேற்றினீர்கள் மற்றவர்கள் எனக்கு அடைக்கலம் கொடுத்தார்கள்” என்று

நபி (ஸல்) கூறினார்கள். பின்பு நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்கிணங்க அவர்கள் அனைவரும் பத்ரின் கிணறுகளில் ஒரு கிணற்றில் போடப்பட்டனர்.

அபூதல்ஹா (ரழி) கூறுகிறார்கள்: பத்ர் போரன்று நபி (ஸல்) 24 குறைஷித் தலைவர்களின் சடலங்களை நாற்றம் பிடித்த கிணற்றில் வீசி எறியும்படி கட்டளையிட்டார்கள். நபி (ஸல்) போரில் வெற்றி பெற்றால் அந்த இடத்தில் மூன்று நாட்கள் தங்குவார்கள். அவ்வாறே பத்ர் போர் முடிந்தப் பின் அவ்விடத்தில் மூன்று நாட்கள் தங்கினார்கள். மூன்றாவது நாள் தனது வாகனத்தை தயார் செய்யக் கூறினார்கள். தனது தோழர்களுடன் எதிரிகளின் சடலங்கள் போடப்பட்ட கிணற்றுக்கு அருகில் நின்று அவர்களை அவர்களது தகப்பனாருடைய பெயருடன் அழைத்து “இன்னாரின் மகன் இன்னாரே! இன்னாரின் மகன் இன்னாரே! முன்பே அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கட்டுப்பட்டிருந்தால் இப்போது நீங்கள் மகிழ்ச்சியாக இருந்திருக்கலாமே! நிச்சயமாக எங்களது இறைவன் எங்களுக்கு வாக்களித்ததை நாங்கள் உண்மையாக பெற்றோம். உங்களது இறைவன் உங்களுக்கு வாக்களித்ததை உண்மையாக நீங்கள் பெற்றீர்களா?” என்றார்கள். அப்போது உமர் (ரழி) “அல்லாஹ்வின் தூதரே! உயிரற்ற சடலங்களிடம் என்ன பேசுகிறீர்கள்!” என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) “முஹம்மதின் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ! அவன் மீது ஆணையாக! நான் கூறுவதை அவர்களைவிட நீங்கள் அதிகம் கேட்கும் திறன் உள்ளவர்களாக இல்லை” என்றார்கள்.

மற்றொரு அறிவிப்பில்: “அவர்களைவிட நீங்கள் கேட்கும் திறன் அதிகமுடையவர்களாக இல்லை. ஆனால் அவர்களால் பதில் தர முடியாது” என வந்துள்ளது. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

**தோல்வியை மக்கா அறிகிறது**

பத்ர் மைதானத்திலிருந்து இணைவைப்பவர்கள் விரண்டோடினர் பள்ளத்தாக்குகளிலும் மலைக்கணவாய்களிலும் சிதறினர் மக்காவின் பாதையைப் பயத்துடனே முன்னோக்கினர் வெட்கத்தால் மக்காவிற்குள் நுழைவதற்கே யோசித்தனர்.

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: குறைஷிகளுக்கு ஏற்பட்ட நிலையை முதன் முதலில் மக்காவாசிகளுக்குச் சொல்லியவர் ஹைசுமான் இப்னு அப்துல்லாஹ் குஜாம் என்பவர்தான். இவரிடம் மக்காவாசிகள் “என்ன செய்தியுடன் வந்திருக்கிறாய்?” என்றனர். அதற்கவர் “உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, அபுல்கம் இப்னு ஹிஷாம், உமையா இப்னு கலஃப் இன்னும் பல குறைஷித் தலைவர்களும் கொல்லப்பட்டனர்” என்று பல குறைஷித் தலைவர்களின் பெயர்களை வரிசையாக குறிப்பிட்டார். கஅபாவில் ஹஜருல் அஸ்வதுக்கு அருகில் அமர்ந்திருந்த ஸஃப்வான் இப்னு உமையா “அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவனுக்கு புத்தி சரியில்லை. இவனைச் சோதித்துப் பார்ப்போம், இவனிடம் நான் இப்போது எங்கே இருக்கிறேன் என்று கேளுங்கள்! சரியாகக் கூறுகிறானா என பார்ப்போம்” என்றார். அதேபோல் மக்கள் “ஸஃப்வான் இப்னு உமைய்யா எங்கே இருக்கிறார்” என்று ஹைசுமானிடம் வினவினர். அதற்கவர் “இதோ! ஸஃப்வான் ஹஜருல் அஸ்வதிற்கு அருகில் அமர்ந்திருக்கிறார். அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவரது தந்தையும், இவரது சகோதரரும் கொல்லப்படுவதை நான் பார்த்தேன்” என்றார்.

நபி (ஸல்) அவர்களின் அடிமை அபூராபிஃ (ரழி) கூறுகிறார்கள்: நான் ஆரம்பத்தில் அப்பாஸ் (ரழி) அவர்களின் அடிமையாக இருந்தேன். அப்பாஸ் (ரழி) அவர்கள் வீட்டில் அனைவரும் இஸ்லாமை ஏற்றிருந்தனர். அதாவது அப்பாஸ் (ரழி), உம்முல் ஃபழ்ல் (ரழி) மற்றும் நான் ஆக அனைவரும் இஸ்லாமை ஏற்றிருந்தோம். ஆனால், அப்பாஸ் (ரழி) தான் முஸ்லிமானதை மறைத்திருந்தார். அபூலஹப் பத்ரில் கலந்துகொள்ளாமல் மக்காவில் தங்கியிருந்தான். பத்ருடைய செய்தியினால் அல்லாஹ் அவனது அகம்பாவத்தை அழித்து

அவனை அவமானப்படுத்தினான். அச்செய்தியினால் எங்கள் உள்ளத்தில் துணிவும் வலிமையும் பிறந்தது. ஆனால், நானோ ஒரு பலவீனமானவன். ஜம்ஜம் கிணற்றுக்கு அருகிலுள்ள அறையில் அமர்ந்து அம்புகள் செய்வது எனது தொழிலாக இருந்தது. ஒரு நாள் நான் அம்புகள் செய்வதில் ஈடுபட்டிருந்தேன். உம்முல் ஃபழ்லு எனக்கருகில் அமர்ந்திருந்தார். பத்ரிலிருந்து வந்த செய்தியால் நாங்கள் மகிழ்ச்சி அடைந்திருந்தோம். அதுசமயம் அபூலஹப் தனது கால்களை மிக மோசமாக பூமியில் தேய்த்தவனாக வந்து எங்களது அறையின் ஓரத்தில் அமர்ந்தான். அவனது முதுகு எனது முதுகைப் பார்த்தவாறு இருந்தது.

அப்போது “இதோ! அபூஸுஃப்யான் இப்னு ஹாரிஸ் இப்னு அப்துல் முத்தலிப் வருகிறார்” என்று மக்கள் கூறினர். அபூலஹப் அபூஸுஃப்யானிடம் “எனக்கருகில் வா! உன்னிடம் உண்மையான செய்திகள் இருக்கலாம்” என்று கூறினான். அபூஸுஃப்யான் இப்னு ஹாரிஸ் அபூலஹபுக்கு அருகில் வந்து அமர்ந்தார். மக்கள் அவரை சுற்றி நின்றுகொண்டனர். அபூஸுஃப்யானிடம் அபூலஹப் “எனது சகோதரன் மகனே! மக்களின் செய்தி என்னவானது?” என்றான். அதற்கு அபூஸுஃப்யான் “முஸ்லிம்களை நாங்கள் சந்தித்த போது அவர்களுக்கு எங்களது புஜங்களைத் தந்தோம். முஸ்லிம்கள் நாடியவாறு எங்களைக் கொன்றனர் நாடியவாறு சிறைபிடித்தனர். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நமது மக்கள் இந்தளவு பலம் இழந்ததற்கு நான் அவர்களைக் குறை கூறவில்லை. வானத்திற்கும், பூமிக்கும் மத்தியில் சிறந்த குதிரைகளின் மீது வீற்றிருந்த வெள்ளை நிறத்தில் பலரை நாங்கள் பார்த்தோம். அவர்கள் எதையும் விட்டு வைக்கவில்லை. எங்களால் அவர்களை எதிர்க்கவும் முடியவில்லை” என்று கூறினார்.

அபூராஃபிஃ (ரழி) தொடர்ந்து கூறுகிறார்: நான் அறையின் ஓரத்தை விலக்கி, “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் வானவர்கள்” என்றேன். இதைக் கேட்ட அபூலஹப், தன் கையை உயர்த்தி எனது கன்னத்தில் கடுமையாக அறைந்தான். நானும் அவன் மீது பாய்ந்தேன், அவனை எதிர்த்தேன். அவன் என்னை தூக்கி பூமியில் வீசினான். பின்பு என் மீது அமர்ந்து என்னை அடித்தான். என்னால் ஒன்றும் செய்ய முடியாத வகையில் நான் வலுவிழந்தவனாக இருந்தேன். எனது நிலையைப் பார்த்த உம்முல் ஃபழ்ல் கூடாரத்தின் ஒரு தடியை உருவி பயங்கரமாக அவனது தலையில் அடித்தார். தலையில் பலத்த காயம் ஏற்பட்டது. “ஏண்டா! இவரது எஜமானன் இல்லாததால் இவரை ஆதரவற்றவர் என்று நீ கருதிவிட்டாயா?” என்று கேட்டார். அதற்குப் பிறகு அங்கிருந்து கேவலப்பட்டு அபூலஹப் எழுந்து சென்றான். இந்நிகழ்ச்சிக்குப் பின் ஏழு நாட்கள் கழித்து அல்லாஹ் அவனது உடலில் அம்மையைப் போன்ற ஒரு நோயை ஏற்படுத்தினான். அந்நோய் அவனைக் கொன்றது. அதாவது, இந்நோயை அரபியர்கள் மிக துர்க்குறியாக கருதியதால் அவனது பிள்ளைகள் யாரும் அவனுக்கருகில் நெருங்கவில்லை. அவன் செத்த பிறகும் அவனைப் புதைப்பதற்கு எந்த முயற்சியும் செய்யவில்லை. மக்கள் தங்களை பழிப்பார்கள் என்று பயந்தவுடன் ஒரு பெரும் குழியைத் தோண்டி, ஒரு குச்சியால் அவனை அக்குழியில் தள்ளினர். பின்பு தூரத்தில் இருந்து கற்களை எறிந்து அக்குழியை மூடினர்.

இவ்வாறுதான் பத்ர் மைதானத்தில் ஏற்பட்ட மாபெரும் தோல்வியின் செய்திகளை மக்கா பெற்றது. இச்செய்தி அவர்களுக்கு மிகுந்த பாதிப்பை ஏற்படுத்தியது. முஸ்லிம்கள் ஆனந்தமடையக் கூடாது என்பதற்காக கொல்லப்பட்டவர்கள் மீது ஒப்பாரி வைப்பதையும் மக்காவாசிகள் தடை செய்தனர்.

நகைச்சுவை செய்தி ஒன்றைப் பார்ப்போம்: அஸ்வத் இப்னு முத்தலிபின் மூன்று ஆண் பிள்ளைகளும் பத்ர் போரில் கொல்லப்பட்டனர். எனவே, அவர்களுக்காக அழ வேண்டுமென்று அவர் அதிகம் ஆர்வம் கொண்டிருந்தார். அவருக்கு கண் தெரியாது. ஒரு நாள் ஒப்பாரி வைக்கும் ஒரு பெண்ணின் சப்தத்தைக் கேட்ட அவர் தனது அடிமையை

அனுப்பி “என்ன! ஒப்பாரியிடுவதற்கு அனுமதி கிடைத்து விட்டதா? போரில் கொல்லப்பட்டவர்களுக்காக குறைஷிகள் அழுகிறார்களா? என்று பார்த்து வாரும். நான் எனது மகன் அபூ ஹகீமாவிற்காக அழவேண்டும். அவனது மரணத்தால் எனது உள்ளம் எரிந்துவிட்டது” என்று கூறினார். அவரது அடிமை அவரிடம் திரும்பி வந்து “அது தனது ஒட்டகத்தை தொலைத்துவிட்ட ஒரு பெண்ணின் அழுகை” என்றார். இதனைக் கேட்ட அஸ்வத் தன்னை அடக்கிக் கொள்ள முடியாமல் இக்கவிதைகளைப் படித்தார்.

அவள் ஒட்டகம் காணவில்லை என அழுகிறாளா?
அதற்காக கண்விழித்து தூக்கத்தைத் துறந்து விட்டாளா?
ஒட்டகத்திற்காக அழாதே! விதிகள் ஏமாற்றிய பத்ர் போருக்காக அழு!
ஆம்! பத்ரின் மீது அழு! ஹுஸைஸ், மஃக்ஜூம் கூட்டத்தினர் மீது அழு!
அழ வேண்டுமானால் அக்கீல் மீது அழு!
சிங்கங்களின் சிங்கம் ஹாரிஸின் மீது அழு!
ஆம்! இவர்களுக்காக நீ அழத்தான் வேண்டும்!
அனைவரையும் நீ பெயர் குறிப்பிடத் தேவையில்லை.
அபூ ஹகீமுக்கு நிகர் எவருமில்லையே!
என்ன கேடு? அவர்களுக்குப் பிறகு சிலர் தலைவராகி விட்டனர்!
பத்ர் என்றொரு தினம் இல்லையென்றால்...
அவர்கள் ஒருக்காலும் தலைவர்களாக ஆகியிருக்க முடியாது!!

### வெற்றியை மதீனா அறிகிறது

முஸ்லிம்களுக்கு முழு வெற்றி கிடைத்தது. இந்த நற்செய்தி மதீனாவாசிகளுக்கு விரைவாக கிடைக்க வேண்டும் என்பதற்காக அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) அவர்களை மதீனாவின் மேட்டுப்பகுதியில் வசிப்பவர்களுக்கும், ஜைத் இப்னு ஹாஸா (ரழி) அவர்களை மதீனாவின் கீழ்ப்பகுதியில் வசிப்பவர்களுக்கும் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள்.

யூதர்களும், நயவஞ்சகர்களும் மதீனாவில் பல பொய்யான வதந்திகளைப் பரப்பினர். “நபி (ஸல்) கொல்லப்பட்டார்கள்” என்று பொய் பிரச்சாரம் செய்தனர். நயவஞ்சகர்களில் ஒருவன் நபி (ஸல்) அவர்களின் ஒட்டகமான ‘கஸ்வா“வில் ஜைது இப்னு ஹாஸா வருவதைப் பார்த்து “நிச்சயமாக முஹம்மது கொல்லப்பட்டார். அதற்கு ஆதாரம், இதோ... முஹம்மதின் ஒட்டகம். நாங்கள் இதை நன்கு அறிவோம். பயத்தால் என்ன கூறுவது என்றே ஜைதுக்கு தெரியவில்லை. இவர் போரில் தோற்று வருகிறார்” என்று உளறினான்.

இரண்டு தூதர்களும் மதீனாவிற்கு வந்தவுடன் முஸ்லிம்கள் அவர்களைச் சூழ்ந்து அவர்கள் கூறும் செய்திகளைக் கேட்டனர். முஸ்லிம்கள் வெற்றி அடைந்தார்கள் என்ற செய்தி அவர்களுக்கு உறுதியானவுடன் மகிழ்ச்சி மிகுதியால் தக்பீர் (அல்லாஹு அக்பர்) முழங்கினர். மதீனாவில் இருந்த முஸ்லிம் தலைவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு இம்மகத்தான வெற்றிக்காக வாழ்த்துக் கூற பத்ரின் பாதையை நோக்கி விரைந்தனர்.

உஸாமா இப்னு ஜைது (ரழி) கூறுகிறார்: நபி (ஸல்) தங்களது மகள் ருகையாவை கவனித்துக் கொள்வதற்காக அவரது கணவராகிய உஸ்மான் (ரழி) அவர்களுடன் என்னையும் விட்டுச் சென்றிருந்தார்கள். ருகையா (ரழி) இறந்துவிடவே அவர்களை அடக்கம் செய்து மண்ணைச் சமப்படுத்துகையில் “பத்ர் போரில் முஸ்லிம்கள் வெற்றி பெற்றார்கள்” என்ற செய்தி எங்களுக்குக் கிடைத்தது.

### இஸ்லாமியப் படை மதீனா புறப்படுகிறது

நபி (ஸல்) போர் முடிந்த பிறகு பத்ர் மைதானத்தில் மூன்று நாட்கள் தங்கினார்கள். அங்கிருந்து புறப்படுவதற்கு முன்பு போரில் கிடைத்த பொருட்கள் விஷயத்தில் கருத்து

வேற்றுமைகள் எழுந்தன. கருத்து வேற்றுமை பலமாகவே, அனைவரும் தங்களிடம் இருக்கும் அனைத்தையும் ஒப்படைக்க வேண்டுமென நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். அதற்கிணங்க அனைவரும் தங்கள் வசம் இருந்த அனைத்தையும் நபியவர்களிடம் ஒப்படைத்தனர். பின்பு இப்பிரச்சனைக்குத் தீர்வை அல்லாஹ் குர்ஆனில் கூறினான்.

இந்நிகழ்ச்சி பற்றி விரிவாக உபாதா இப்னு ஸாமித் (ரழி) கூறுவதைக் கேட்போம். அவர்கள் கூறுவதாவது:

“நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் பத்ர் போருக்குச் சென்றோம். போரில் அல்லாஹ் எதிரிகளைத் தோற்கடித்து முஸ்லிம்களுக்கு வெற்றியளித்தான். முஸ்லிம்களில் ஒரு சாரார் எதிரிகளை விரட்டி அடிப்பதிலும் அவர்களுடன் எதிர்த்துப் போரிட்டு அவர்களைக் கொல்வதிலும் மும்முரமாக இருந்தனர். இன்னொரு சாரார் எதிரிகளின் பொருட்களை ஒன்று திரட்டினர். மற்றுறொரு சாரார் நபி (ஸல்) அவர்களை எதிரிகள் தாக்காமல் இருக்க அவர்களைச் சுற்றி பாதுகாத்தனர்.

இரவில் போர் முடிந்து மக்கள் ஒன்று சேர்ந்த போது பொருட்களை சேகரித்தவர்கள் “நாங்கள்தான் பொருட்களை ஒன்று சேர்த்தோம். எனவே, அதில் வேறு யாருக்கும் எவ்வித பங்கும் கிடையாது” என்றனர்.

எதிரிகளை விரட்டியவர்கள், “எங்களைப் பார்க்கிலும் அதிகமாக உங்களுக்கு அதில் உரிமை இல்லை, நாங்கள்தான் எதிரிகளை துரத்தினோம், தோற்கடித்தோம். எனவே, எங்களுக்கே அது உரிமையானது. எங்களைவிட நீங்கள் அதற்கு உரிமையுடையவர்களாக இருக்க முடியாது” என்றனர்.

நபியவர்களை பாதுகாக்கும் பணியில் இருந்தவர்கள், “நபி (ஸல்) அவர்களை எதிரிகள் தாக்கிடுவர் என்ற பயத்தால் நாங்கள் அவர்களை பாதுகாப்பதில் இருந்தோம். எனவேதான் உங்களுடன் எங்களால் செயல்படமுடியவில்லை. ஆகவே எங்களுக்கும் அதில் பங்கு வேண்டும்” என்றனர்.

இந்த சர்ச்சைக்குரிய தீர்வை அல்லாஹ் குர்ஆனில் கூறினான்:

(நபியே!) ‘அன்ஃபால்’ (என்னும் போரில் கிடைத்த பொருட்களைப்) பற்றி அவர்கள் உங்களிடம் கேட்கின்றனர். (அதற்கு) நீங்கள் கூறுங்கள்: ‘அன்ஃபால்’ அல்லாஹ்வுக்கும், (அல்லாஹ்வுடைய) தூதருக்கும் சொந்தமானது. ஆகவே, நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து (அதில் எதையும் மறைத்துக் கொள்ளாது) உங்களுக்கிடையில் ஒழுங்காக நடந்து கொள்ளுங்கள். உண்மையாகவே நீங்கள் உண்மை நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கீழ்படிந்து நடங்கள். (அல்குர்ஆன் 8:1)

நபி (ஸல்), இந்த வசனத்திற்கேற்ப முஸ்லிம்கள் அனைவருக்கும் பொருட்களை பங்கு வைத்தார்கள். (முஸ்னது அஹ்மது, முஸ்தத்ரகுல் ஹாகிம்)

பொருட்களை பத்ர் மைதானத்திலேயே பங்கு வைக்கவில்லை. மாறாக, அனைத்து பொருட்களையும் ஒன்றுசேர்த்து அதற்கு அப்துல்லாஹ் இப்னு கஅபை பொறுப்பாக நியமித்தார்கள். பிறகு பொருட்களுடன் அனைவரையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்கள். செல்லும் வழியில் ‘மழீக்’ மற்றும் ‘நாஜியா’ என்ற இடங்களுக்கு மத்தியிலுள்ள மணல் மேட்டுக்கருகில் தங்கினார்கள். அங்குதான் போரில் கிடைத்த பொருட்களைப் பங்கிட்டார்கள். ஐந்தில் ஒரு பகுதியை அல்லாஹ்விற்காக ஒதுக்கினார்கள். மீதமிருந்த அனைத்தையும் போரில் கலந்த அனைத்து வீரர்களுக்கும் சட்டப்படி பங்கு வைத்தார்கள்.

பிறகு புறப்பட்டு ‘ஸஃப்ரா’ என்ற இடத்தை அடைந்தார்கள். அங்கு நழ்ர் இப்னு ஹாஸைக் கொன்றுவிடுமாறு அலீ இப்னு அபூதாலிப் (ரழி) அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். காரணம், இவன் பத்ர் போரில் எதிரிகளின் கொடியை ஏந்தியவன். இவன் குறைஷி குற்றவாளிகளில் ஒரு பெரும் குற்றவாளி! இஸ்லாமுக்கு எதிராகப் பெரும் சூழ்ச்சிகள் செய்தவன். நபி (ஸல்) அவர்களுக்கு கடும் நோவினை செய்தவன்.

பிறகு ‘இர்க்குல் ளுபியா’ என்ற இடத்தை அடைந்த போது உக்பா இப்னு அபூ முயீத்தையும் கொன்றுவிட ஆஸிம் இப்னு ஸாபித் அல் அன்சாரி (ரழி) அவர்களுக்கு கட்டளையிட்டார்கள். சிலர் அலீ (ரழி) என்றும் கூறுகின்றனர். நபி (ஸல்) அவர்களுக்கு உக்பா செய்த தீங்கைப் பற்றி நாம் முன்பே கூறியிருக்கின்றோம். இவன்தான் நபி (ஸல்) தொழுகையில் இருந்த சமயம் அவர்களின் முதுகில் ஒட்டகத்தின் குடலைப் போட்டவன். நபி (ஸல்) அவர்களைக் கொலை செய்வதற்காக அவர்களின் கழுத்தைப் போர்வையால் இறுக்கியவன். அது சமயம் அபூபக்ர் (ரழி) அவர்கள் குறுக்கிட்டு நபி (ஸல்) அவர்களைப் பாதுகாத்தார்கள். அவனைக் கொல்ல வேண்டும் என்று நபி (ஸல்) கட்டளையிட்ட பின்பு அவன் நபியவர்களிடம் “முஹம்மதே! எனது பிள்ளைகள் என்ன ஆவார்கள்?” என்று கேட்டான். அதற்கு நபி (ஸல்) “அவர்களுக்கு நெருப்புதான்” என்றார்கள்.(ஸுனன் அபூதாவூது)

இவ்விருவரும் இதற்குமுன் செய்த குற்றங்கள் மிக மோசமானவை மறக்க முடியாதவை. அதுமட்டுமல்ல இவர்கள் தங்களின் குற்றங்களுக்காக வருந்தவுமில்லை. இவர்களை விடுதலை செய்தால் மீண்டும் இஸ்லாமிற்குக் கெடுதிகள் பல செய்வர். எனவே, இவர்களைக் கொல்வது அவசியமான ஒன்றே! கைதிகளில் இவ்விருவரைத் தவிர வேறு எவரையும் நபி (ஸல்) கொலை செய்யவில்லை.

**வாழ்த்த வந்தவர்கள்**

இரண்டு தூதர்களின் மூலமாக வெற்றியின் நற்செய்தியை அறிந்தவுடன் முஸ்லிம்களும் அவர்களது தலைவர்களும் நபி (ஸல்) அவர்களுக்கு வாழ்த்து சொல்வதற்காக மதீனாவிலிருந்து புறப்பட்டனர். இவர்களின் சந்திப்பு ‘ரவ்ஹா’ என்ற இடத்தில் நபி (ஸல்) அவர்களுடன் நிகழ்ந்தது. அப்போது அவர்களிடம் மதீனாவைச் சேர்ந்த ஸலமா இப்னு ஸலாமா (ரழி) “நீங்கள் எங்களுக்கு எதற்கு வாழ்த்து சொல்கிறீர்கள்.? கட்டப்பட்ட ஒட்டகத்தைப் போன்றிருந்த சொட்டைத் தலை கிழவர்களைத்தான் நாங்கள் போரில் எதிர்கொண்டோம். எனவே, எளிதில் அவர்களது கழுத்துகளை அறுத்தோம்” என்று கூறினார். நபி (ஸல்) புன்முறுவல் பூத்து “எனது சகோதரன் மகனே! நீ யாரை அப்படி கூறுகிறாயோ அவர்கள்தான் (குறைஷிகளின்) தலைவர்கள்” என்றார்கள்.

மதீனாவின் தலைவர்களில் ஒருவரான உஸைத் இப்னு ஹுழைர் (ரழி) வாழ்த்து கூறும்போது: “அல்லாஹ்வின் தூதரே! உங்களுக்கு வெற்றியளித்து உங்கள் கண்ணை குளிரச் செய்த அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்! நீங்கள் எதிரிகளுடன் போர் புரிய நேரிடும் என்று நினைத்து பத்ருக்கு வருவதிலிருந்து நான் பின்வாங்கவில்லை. மாறாக, வியாபாரக் கூட்டத்தைத்தான் நீங்கள் சந்திக்கச் செல்கிறீர்கள் என்று எண்ணினேன். ஆகையால்தான் உங்களுடன் புறப்படவில்லை. நீங்கள் எதிரிகளை சந்திக்க நேரிடும் என்று எனக்குத் தெரிந்திருந்தால் நான் ஒருக்காலும் பின்வாங்கியிருக்க மாட்டேன்” என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) “நீர் உண்மை கூறுகிறீர்” என்றார்கள்.

இவ்வாறு பல தலைவர்களின் வாழ்த்துகளைக் கேட்டு, பதிலளித்தப் பிறகு நபி (ஸல்) மதீனாவிற்குள் நுழைந்தார்கள். பெரும் வெற்றி பெற்று வரும் அவர்களை மதீனாவிலிருந்த எதிரிகளும், மதீனாவை சுற்றியிருந்த எதிரிகளும் அஞ்சினர். இஸ்லாமின் வெற்றியைக் கண்டு அதை உண்மை மார்க்கம் என அறிந்த பலர் மனமுவந்து இஸ்லாமைத் தழுவினர்.

மற்றொருபுறம் சில விஷமிகள் வேறு வழியின்றி தாங்களும் இஸ்லாமைத் தழுவுகிறோம் என்றனர். ஆனால் மனதுக்குள் இஸ்லாமையும் முஸ்லிம்களையும் வெறுத்தனர். அத்தகையோர்தான் அப்துல்லாஹ் இப்னு உபையும் அவனது நண்பர்களும் ஆவர். இந்த நயவஞ்சகர்கள் இஸ்லாமிற்குச் செய்த துரோகங்களை இந்நூலில் அவசியமான இடங்களில் நாம் கூறுவோம்.

நபி (ஸல்) மதீனாவிற்கு வந்த ஒரு நாள் கழித்து கைதிகள் மதீனாவிற்கு அழைத்து வரப்பட்டனர். அவர்களைத் தங்களது தோழர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து, அவர்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டுமென உபதேசித்தார்கள். நபி (ஸல்) அவர்களின் இந்த உபதேசத்தை செயல்படுத்தும் விதமாக, கைதிகளுக்கு ரொட்டிகளை உண்ணக் கொடுத்து, நபித்தோழர்கள் பேரீத்தம் பழங்களைப் புசித்தார்கள்.

**கைதிகளின் விவகாரம்**

நபி (ஸல்) தங்களது தோழர்களுடன் கைதிகளைப் பற்றி ஆலோசித்தார்கள். அப்போது அபூபக்ர் (ரழி) “அல்லாஹ்வின் தூதரே! இவர்கள் நமது தந்தை வழி உறவினர்கள். நமது சகோதரர்கள் மற்றும் நெருக்கமான குடும்பத்தார்கள். எனவே, (இவர்களை கொலை செய்யாமல்) இவர்களிடம் (ஃபித்யா) ஈட்டுத்தொகை பெற்றுக் கொண்டு இவர்களை விடுதலை செய்வோம். நாம் வாங்கும் ஈட்டுத்தொகை இறைநிராகரிப்பாளர்களை எதிர்ப்பதற்கு நமக்கு உதவியாக இருக்கும். அதிவிரைவில் அல்லாஹ் இவர்களுக்கு நேர்வழி காட்டக் கூடும். அப்போது இவர்களும் நமக்கு உதவியாளர்களாக மாறுவர்” என்று கூறினார்கள்.

பின்பு நபி (ஸல்) உமர் (ரழி) அவர்களிடம் “கத்தாபின் மகனே! நீங்கள் என்ன யோசனை கூறுகிறீர்கள்?” எனக் கேட்டார்கள். “அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபூபக்ர் (ரழி) அவர்கள் கூறிய ஆலோசனையை நான் விரும்பவில்லை. மாறாக, இவர்களைக் கொலை செய்வதே எனது யோசனை. எனது இன்ன உறவினரை என்னிடம் கொடுங்கள். அவர் கழுத்தை நான் வெட்டுகிறேன். அக்கீல் இப்னு அபூதாலிபை அலீ (ரழி) அவர்களிடம் கொடுங்கள். அலீ (ரழி) அவர் கழுத்தை வெட்டட்டும். ஹம்ஜா (ரழி) அவர்களிடம் அவரது இன்ன சகோதரரை கொடுங்கள். ஹம்ஜா (ரழி) அவரது கழுத்தை வெட்டட்டும். இதன்மூலம் இணைவைப்பவர்கள் மீது எங்களது உள்ளத்தில் எந்தப் பிரியமும் இல்லை என்று அல்லாஹ் தெரிந்து கொள்வான். அது மட்டுமா! இப்போது கைது செய்யப்பட்டிருப்பவர்கள் குறைஷிகளின் தலைவர்களும் அவர்களை வழி நடத்தும் கொடுங்கோலர்களும் ஆவார்கள்” என்று உமர் (ரழி) கூறினார்கள்.

அபூபக்ர் (ரழி) கூறியதையே நபி (ஸல்) ஏற்று கைதிகளிடம் ஈட்டுத்தொகைப் பெற்று உரிமையிட்டார்கள். ஈட்டுத் தொகை ஆயிரம் வெள்ளி நாணயங்களிருந்து நான்காயிரம் வெள்ளி நாணயங்கள் வரை நிர்ணயிக்கப்பட்டது. மக்காவாசிகள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள். மதீனாவாசிகளுக்கு எழுத, படிக்கத் தெரியாது. எனவே, ஈட்டுத் தொகை கொடுக்க இயலாத மக்கா கைதிகள் மதீனாவை சேர்ந்த பத்து சிறுவர்களுக்கு எழுத, படிக்கக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று பணிக்கப்பட்டனர். அவ்வாறு சிறுவர்களுக்கு நன்கு எழுத, படிக்கக் கற்றுக் கொடுத்தவுடன் அவர்கள் விடுதலை செய்யப்பட்டனர்.

உமர் (ரழி) கூறுகிறார்கள்: அபூபக்ர் (ரழி) கூறியதையே நபி (ஸல்) விரும்பினார்கள். நான் கூறியதை விரும்பவில்லை. எனவே கைதிகளிடம் ஈட்டுத்தொகைப் பெற்று உரிமையிட்டார்கள். அதற்கு அடுத்த நாள் நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரழி) அவர்களும் அழுதவர்களாக இருந்தார்கள். நான் “அல்லாஹ்வின் தூதரே! நீங்களும் உங்களது தோழரும் ஏன் அழுகிறீர்கள்? அழுகைக்குரிய செய்தி எதுவும் இருப்பின், முடிந்தால் நானும் அழுகிறேன். முடியவில்லையென்றால் நீங்கள் அழுவதற்காக நானும் அழ முயல்கிறேன்” என்றேன்.

அதற்கு நபி (ஸல்) “ஈட்டுத்தொகை வாங்கியதின் காரணமாக உமது தோழர்களுக்கு ஏற்பட்டதை எண்ணி நான் அழுகிறேன். அருகில் உள்ள ஒரு மரத்தை சுட்டிக் காண்பித்து இம்மரத்தை விட நெருக்கமாக அவர்களுக்குரிய வேதனை எனக்குக் காண்பிக்கப்பட்டது” என்றார்கள்.

இது தொடர்பாகவே அல்லாஹ் இந்த வசனத்தை இறக்கினான்:

(இஸ்லாமையும் முஸ்லிம்களையும் அழித்தொழிக்க வந்த) எதிரிகளைக் கொன்று குவிக்கும் வரை அவர்களை கைதியாக்குவது இறைத்தூதருக்கு ஆகுமானதல்ல. நீங்கள் இவ்வுலகப் பொருளை விரும்புகிறீர்கள். அல்லாஹ்வோ (உங்களுக்கு) மறுமை வாழ்வை விரும்புகிறான். அல்லாஹ் மிகைத்தவனும் ஞானமுடைய வனாகவும் இருக்கின்றான். அல்லாஹ்விடம் (பத்ர் போரில் கலந்த முஸ்லிம்களுக்கு மன்னிப்பு உண்டு என்ற) விதி ஏற்கனவே உறுதி செய்யப்படாமலிருப்பின் நீங்கள் (பத்ர் போரில் கைதிகளிடமிருந்து ஈட்டுத் தொகையை) வாங்கியதில் மகத்தானதொரு வேதனை உங்களைப் பிடித்திருக்கும். (அல்குர்ஆன் 8:67, 68)

பல கைதிகளை நபி (ஸல்) ஈட்டுத் தொகை இல்லாமலே உரிமையிட்டார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் முத்தலிப் இப்னு ஹன்தப், ஸைஃபி இப்னு அபூ ஃபாஆ, அபூ இஜ்ஜா ஜுமஹ ஆவர். இந்த அபூ இஜ்ஜா உஹதுப் போரிலும் முஸ்லிம்களுக்கு எதிராக சண்டையிட்டான். போரின் இறுதியில் கைதியாகப் பிடிக்கப்பட்டு கொலை செய்யப்பட்டான். இதன் விவரம் இன்ஷா அல்லாஹ் பின்னர் வர இருக்கிறது.

நபி (ஸல்) அவர்களுடைய மருமகன் அபுல் ஆஸும் கைதிகளில் இருந்தார். அவரை விடுவிப்பதற்காக நபியவர்களின் மகளார் ஜைனப் (ரழி) தனது தாய் கதீஜா (ரழி) தனக்களித்த மாலையை ஈட்டுத் தொகையாக அனுப்பினார்கள். ஜைனப் (ரழி) அவர்களின் மாலையைப் பார்த்த நபி (ஸல்) அவர்களது உள்ளம் இரங்கியது. தங்களது தோழர்களிடம் அபுல் ஆஸை ஈட்டுத் தொகையின்றி விடுதலையிட அனுமதி கேட்டார்கள். தோழர்களும் அனுமதி தர “மகள் ஜைனப் (ரழி) அவர்களை மதீனாவிற்கு வர அனுமதிக்க வேண்டும்” என்ற நிபந்தனையுடன் அவரை விடுதலை செய்தார்கள். அவர் மக்கா சென்ற பிறகு ஜைனப் (ரழி) அவர்களை மதீனா அனுப்பினார். ஜைனப் (ரழி) அவர்களை அழைத்து வர ஜைது இப்னு ஹாஸாவையும் மற்றும் ஒரு அன்சாரி தோழரையும் நபி (ஸல்) அனுப்பினார்கள். அவர்களிடம் நீங்கள் “பத்தன் யஃஜஜ் என்ற இடத்தில் தங்கியிருங்கள். ஜைனப் அந்த இடத்தை அடைந்தவுடன் அங்கிருந்து அவரை அழைத்து வாருங்கள்” என்று கூறினார்கள். அந்த இருவரும் அவ்வாறே சென்று ஜைனப் (ரழி) அவர்களை அழைத்து வந்தார்கள். ஜைனப் (ரழி) அவர்கள் மக்காவிலிருந்து மதீனா சென்ற வரலாறு மிக துயரமான நிகழ்ச்சியாகும். இப்பயணத்தில் அவர்களுக்கு ஏற்பட்ட இன்னல் கேட்போரின் உள்ளங்களை உருக்கிவிடும்.

கைதிகளில் சுஹைல் இப்னு அம்ர் என்பவரும் இருந்தார். இவர் இலக்கிய நயத்துடன் பேசும் புகழ் பெற்ற பேச்சாளர். சில சமயங்களில் இஸ்லாமிற்கெதிராக பிரச்சாரம் செய்வார். எனவே, “அல்லாஹ்வின் தூதரே! இவனது இரண்டு முன்பற்களைக் கழற்றி விடுங்கள். இவன் அதிகம் பேசுகிறான். இனிமேல் உங்களுக்கு எதிராக இவன் எந்தப் பிரசங்கமும் செய்யக் கூடாது” என்று நபி (ஸல்) அவர்களிடம் உமர் (ரழி) அவர்கள் கூறினார்கள். உறுப்புகளைச் சிதைப்பது இஸ்லாமிய மார்க்கத்தில் கூடாது என்பதற்காகவும், மறுமையில் அல்லாஹ்வின் தண்டனையை பயந்தும் நபி (ஸல்) உமரின் இக்கோரிக்கையை நிராகரித்தார்கள்.

இப்போருக்குப் பின், உம்ரா செய்வதற்காகச் சென்ற ஸஅது இப்னு நுஃமான் (ரழி) அவர்களை அபூ ஸுஃப்யான் மக்காவில் சிறைபிடித்துக் கொண்டார். அபூ ஸுஃப்யானின் மகன் அம்ர் இப்னு அபூஸுஃப்யான் பத்ர் போரில் கைது செய்யப்பட்டு முஸ்லிம்கள் வசம்

இருந்தார். ஸஅதை விடுவிப்பதற்காக அம்ரை அபூ ஸுஃப்யானிடம் சில முஸ்லிம்களுடன் நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். அபூஸுஃப்யானும் தனது மகன் அம்ர் கிடைத்தவுடன் ஸஅதை விடுதலை செய்தார்.

**இப்போர் குறித்து குர்ஆன்...**

இப்போரை விவரித்து குர்ஆனில் 'அல் அன்ஃபால்' என்ற அத்தியாயம் இறக்கப்பட்டது. நாம் கூறுவது சரியானால் "இந்த அத்தியாயம் இப்போரைப் பற்றிய இறைவிமர்சனம்" என்று கூறலாம். வெற்றி பெற்ற பிறகு அரசர்களும் தளபதிகளும் போரைப் பற்றி கூறும் விமர்சனங்களிலிருந்து இந்த இறைவிமர்சனம் முற்றிலும் மாறுபட்டதாக அமைந்துள்ளது.

முதலாவதாக, முஸ்லிம்களுக்கு அவர்களிடம் இருந்த சில ஒழுக்கக் குறைவுகளை அல்லாஹ் சுட்டிக் காட்டுகிறான். அதற்குக் காரணம், முஸ்லிம்கள் தங்கள் ஆன்மாக்களை உயர் பண்புகளால் முழுமைபெற செய்ய வேண்டும் குறைகளிலிருந்து தூய்மைப்படுத்த வேண்டும் மிக உயர்ந்த நிலைக்கு இட்டுச் செல்ல வேண்டும் என்பதே!

இரண்டாவதாக, முஸ்லிம்கள் தங்களது வீரம் மற்றும் துணிவைப் பார்த்து தற்பெருமைக்கு ஆளாகிவிடக் கூடாது. மாறாக, அல்லாஹ்வின் மீதே நம்பிக்கை வைக்க வேண்டும் தனக்கும் தனது தூதருக்கும் கட்டுப்பட வேண்டும் என்பதற்காகவேதான் முஸ்லிம்களுக்கு மறைவிலிருந்து செய்த உதவியை அல்லாஹ் சுட்டிக் காட்டுகிறான்.

மூன்றாவதாக, இந்த ஆபத்தானப் போரை நபி (ஸல்) அவர்கள் எந்த இலட்சியங்களையும், நோக்கங்களையும் முன்னிட்டு சந்தித்தார்களோ அவற்றை விரிவாக அல்லாஹ் கூறுகிறான். அதன் பிறகு போர்களில் வெற்றி பெறக் காரணமாக அமையும் தன்மைகளையும், குணங்களையும் முஸ்லிம்களுக்குக் குறிப்பிடுகிறான்.

நான்காவதாக, இணைவைப்பவர்கள், நயவஞ்சகர்கள், யூதர்கள், போரில் கைது செய்யப் பட்டவர்கள் ஆகியோருக்கு அல்லாஹ் அறிவுரை கூறுகிறான். சத்தியத்திற்குப் பணிந்து அதை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதே அந்த அறிவுரை.

ஐந்தவதாக, போரில் கிடைக்கும் வெற்றிப் பொருட்கள் தொடர்பான சட்டங்களை முஸ்லிம்களுக்கு விவரிக்கின்றான்.

ஆறாவதாக, போரிடுவது அல்லது சமாதானம் செய்து கொள்வது ஆகிய இவ்விரண்டின் அடிப்படைகள் மற்றும் சட்டங்களை முஸ்லிம்களுக்கு விவரிக்கின்றான். அத்தகைய ஒரு காலக் கட்டத்தை அப்போது இஸ்லாமிய அழைப்புப்பணி அடைந்துவிட்டது என்பதே அதற்குக் காரணம். அதன் மூலமே முஸ்லிம்கள் புரியும் போருக்கும் அறியாமைக்கால மக்கள் செய்த போருக்கும் வேறுபாடு ஏற்படும் முஸ்லிம்கள் பிறரைப் பார்க்கிலும் தனித்தன்மை பெற்று, குணத்திலும் பண்பிலும் மேலோங்கி விளங்குவார்கள். மேலும், உலக மக்கள் இஸ்லாமை ஒரு தத்துவ சிந்தனையாக (சித்தாந்தமாக) மட்டும் பார்க்காமல், தான் அழைக்கும் அடிப்படைகளை கொண்டு தன்னைச் சார்ந்தோரைப் பண்பட செய்யும் ஒரு வாழ்க்கை நெறியாக இஸ்லாமைப் பார்ப்பார்கள்.

ஏழாவதாக, இஸ்லாமிய நாட்டுக்குரிய அடிப்படை சட்டங்களை அல்லாஹ் நிர்ணயிக்கின்றான். அதாவது, இஸ்லாமிய அரசாங்கத்திற்குள் வாழும் முஸ்லிம்களுக்கும் அதற்கு வெளியில் வாழும் முஸ்லிம்களுக்குமிடையில் சட்ட வித்தியாசங்கள் உள்ளன என்பதே அது.

ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டு, ரமழான் மாதத்தில் நோன்பு கடமையாக்கப்பட்டது. 'ஜகாத்துல் ஃபித்ர்' எனப்படும் நோன்புப் பெருநாள் கொடையும் அந்த ஆண்டுதான் கடமையாக்கப்பட்டது, இதர பொருட்களுக்குரிய 'ஜகாத்' எனப்படும் மார்க்க வரிகளின்

அளவுகளும் இந்த ஆண்டுதான் விவரிக்கப்பட்டன. இது பூமியில் பயணித்து, பொருள் ஈட்ட முடியாமல் சிரமத்தில் வாடி வதங்கிய பெரும்பாலான ஏழை முஹாஜிர்களின் (மதீனாவில் வாழும் மக்கா முஸ்லிம்களின்) பொருளாதாரச் சுமையை எளிதாக்கியது.

பத்ர் போரில் கிடைத்த மாபெரும் வெற்றிக்குப் பின் ஹிஜ்ரி 2, ஷவ்வால் மாதத்தில் கொண்டாடிய நோன்புப் பெருநாளே முஸ்லிம்களுக்கு தங்கள் வாழ்நாளில் கிடைத்த பெருநாட்களில் முந்தியதும் மிகச் சிறந்ததுமாகும். அல்லாஹ் முஸ்லிம்களுக்கு வெற்றி எனும் கிரீடத்தை அணிவித்த பின்பு, அவர்களுக்கு அவன் வழங்கிய இந்தப் பெருநாள் எவ்வளவு அதிசயத்தக்கது! தங்களது இல்லங்களிலிருந்து வெளியேறி ‘‘அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்), லாயிலாஹஇல்லல்லாஹ் (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை), அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே)’’ என்று சப்தமிட்டுக் கூறியவர்களாக வந்து, நபி (ஸல்) அவர்களுக்குப் பின் தொழுத அந்த தொழுகையின் காட்சிதான் எவ்வளவு அற்புதமானது! அல்லாஹ்வின் உதவியையும் அளவிலா அருளையும் பெற்ற முஸ்லிம்களின் உள்ளங்கள் அல்லாஹ்வின் மீது அன்பு கொண்டன. அவனது நேசத்தையும் பொருத்தத்தையும் பெற்றுக் கொள்ள துடியாய்த் துடித்தன.

இதைத்தான் முஸ்லிம்களுக்கு அல்லாஹ் இந்த வசனத்தில் நினைவூட்டுகிறான்:

நீங்கள் பூமியில் (மக்காவில்) வலுவிழந்த வெகு குறைந்த தொகையினராக இருந்து, உங்களை எந்த மனிதரும் (எந்நேரத்திலும் பலவந்தமாக) திடீரென தாக்கி விடுவார்களோ என்று நீங்கள் அஞ்சி (நடுங்கி)க் கொண்டிருந்த சமயத்தில் அவன் உங்களுக்கு (மதீனாவில்) இடமளித்துத் தன் உதவியைக் கொண்டு உங்களைப் பலப்படுத்தினான். மேலும், நல்ல உணவுகளை உங்களுக்கு அளித்ததையும் நினைத்துப் பாருங்கள். (இதற்கு) நீங்கள் நன்றி செலுத்துவீர்களாக! (அல்குர்ஆன் 8:26)

## பத்ர் மற்றும் உஹுத் போர்களுக்கு மத்தியில் நிகழ்ந்த ராணுவ நடவடிக்கைகள்

சற்று முன் நாம் கூறிய பத்ர் போரில்தான் முதன் முதலாக முஸ்லிம்களும் இணை வைப்பவர்களும் ஆயுதமேந்தி கடும் சண்டையிட்டுக் கொண்டனர். இப்போர் முஸ்லிம்களுக்கு உறுதியான வெற்றியைக் கொடுத்தது. இதை அனைத்து அரபுலகமும் அறிந்தனர். இப்போரினால் கடுமையாக பாதிக்கப்பட்டவர்களில் முதன்மையானவர்கள் இதில் நேரடியாக சேதமடைந்த மக்காவாசிகள். அதாவது, இணைவைப்பவர்கள். அதற்கு அடுத்தபடியாக பாதிக்கப்பட்டவர்கள் யூதர்கள். இவர்கள் முஸ்லிம்களின் வெற்றியையும் அவர்கள் மிகைத்து விடுவதையும் தங்களது மார்க்கத்திற்கும், பொருளாதாரத்திற்கும் மிகப் பெரிய அடியாகவும் வீழ்ச்சியாகவும் கருதினர். ஆக, பத்ர் போரில் முஸ்லிம்களுக்கு வெற்றி கிடைத்ததிலிருந்து இணைவைப்பவர்களும், யூதர்களும் முஸ்லிம்கள் மீது கோபத்தாலும் ஆத்திரத்தாலும் கொந்தளித்தனர்.

(நபியே!) யூதர்களும், இணைவைத்து வணங்குபவர்களும் நம்பிக்கையாளர்களுக்கு மனிதர்கள் அனைவரிலும் கொடிய எதிரிகளாக இருப்பதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள்! (அல்குர்ஆன் 5:82)

இந்த இருசாராருக்கும் மதீனாவிற்குள் சில இரகசிய நண்பர்கள் இருந்தனர். அவர்கள் தங்களுக்கு இஸ்லாமைத் தவிர வேறு எங்கும் கண்ணியம் கிடைக்காது என்று உறுதியாக தெரிந்த பிறகு, தங்களைப் பெயரளவில் ‘முஸ்லிம்கள்’ என்று அறிமுகப்படுத்தினர். உண்மையில் யூதர்களையும், இணைவைப்பவர்களையும் விட அவர்கள் முஸ்லிம்கள் மீது குரோதத்தால் குறைந்தவர்கள் அல்லர். அவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபையும் அவனது நண்பர்களும் ஆவர்.

மேற்கூறப்பட்ட மூன்று பிரிவினரைத் தவிர அங்கு நான்காவது ஒரு பிரிவினரும் இருந்தனர். அவர்கள் மதீனாவைச் சுற்றி வாழ்ந்த கிராம அரபிகள். இவர்களுக்கு குஃப்ர் (இறைநிராகரிப்பு), ஈமான் (இறைநம்பிக்கை) என்பதெல்லாம் ஒரு முக்கியமான பிரச்சனையல்ல. இவர்கள் மக்களின் செல்வங்களைச் சூறையாடுவதையும், கொள்ளையடிப்பதையும் தொழிலாகக் கொண்டவர்கள். இவர்கள் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட வெற்றியால் கவலைக்குள்ளாகினர். மதீனாவில் முஸ்லிம்களின் வலிமையான அரசாங்கம் அமைந்துவிட்டால் தங்களால் கொள்ளைத் தொழிலைத் தொடர முடியாது என்று பயந்தனர். இதனால் முஸ்லிம்கள் மீது குரோதம் கொண்டனர் அவர்களுக்கு எதிரிகளாக மாறினர்.

பத்ரில் ஏற்பட்ட வெற்றி முஸ்லிம்களின் கண்ணியத்திற்கும், வலிமைக்கும் காரணமாக அமைந்தது போன்றே, பல வகைகளில் முஸ்லிம்களை மற்றவர்கள் பகைத்துக் கொள்வதற்கும் காரணமாக அமைந்தது. ஆகவே, ஒவ்வொரு கூட்டத்தினரும் தமது நோக்கத்தை நிறைவேற்று வதற்குத் தேவையான வழிகளைக் கையாள ஆரம்பித்தனர்.

மதீனாவிலும், மதீனாவைச் சுற்றிலும் மக்களில் சிலர் இஸ்லாமை வெளிப்படுத்தினாலும் உள்ளுக்குள் முஸ்லிம்களுக்கு எதிராக இரகசிய ஆலோசனைகளையும், சதித்திட்டங்களையும் தீட்டினர். ஆனால், யூதர்களில் ஒரு கூட்டமோ முஸ்லிம்களுக்கு எதிராக தங்கள் குரோதத்தையும், பகைமையையும் வெளிப்படையாகவே காட்டினர். மற்றொரு பக்கம் மக்காவாசிகளோ, தங்களுக்கு ஏற்பட்ட இழப்புக்கு பழிவாங்கியே தீருவோம் முஸ்லிம்கள் மீது படையெடுத்து அவர்களை அழித்தே தீருவோம் என்று எச்சரித்தது மட்டுமல்லாமல், அதற்கான முழு தயாரிப்பையும் பகிரங்கமாகச் செய்தனர்.

அவர்களின் செயல்பாடுகள் இப்படித்தான் இருந்தது.

ஒளி பொருந்திய ஒரு நாள் வந்தே தீரும்! அதன் பிறகு ஒப்பாரியிடும் பெண்களின் அழுகையை நான் நீண்ட நாட்கள் கேட்பேன்!

ஆம்! அப்படித்தான். மக்காவாசிகள் மதீனாவின் மீது மிக மூர்க்கமான போர் ஒன்றை தொடுத்தனர். இதை வரலாற்றில் “உஹுத் போர்” என்று அழைக்கப்படுகிறது. இப்போரில் முஸ்லிம்களுக்கு மிகப்பெரிய இழப்பு ஏற்பட்டதால் அவர்கள்மீது மக்களுக்கு இருந்த பயம் குறைந்தது.

இந்த ஆபத்துகளைப் முறியடிப்பதில் முஸ்லிம்கள் மிக முக்கிய பங்காற்றினார்கள். நபி (ஸல்) இந்த ஆபத்துகளைப் பற்றி எந்தளவு விழிப்புணர்வுடன் இருந்தார்கள் என்பதையும், அவற்றை முறியடிப்பதற்கு எந்தளவு முறையான திட்டங்களைத் தீட்டினார்கள் என்பதையும், அது விஷயத்தில் அவர்களின் வழி நடத்தும் மகத்தான திறமை எவ்வாறு இருந்தது என்பதையும் அவர்கள் மேற்கொண்ட செயல்திட்டங்கள் மூலமாக நன்றாகத் தெரிய வருகிறது.

பின்வரும் வரிகளில் அந்த செயல்திட்டங்களைப் பற்றிய விவரங்களைப் பார்ப்போம்.

**ஸுலைம் குலத்தவருடன் போர்**

பத்ர் போருக்குப்பின் நபி (ஸல்) அவர்களுக்கு கிடைத்த முதல் செய்தி “ஸுலைம் மற்றும் கத்ஃபான் கிளையினர் மதீனாவின் மீது போர் தொடுக்க தங்களது படைகளைத் திரட்டுகின்றனர்” என்பதாகும். உடனே நபி (ஸல்) 200 வீரர்களுடன் அவர்களது பகுதிக்குள் திடீரெனப் புகுந்து ‘குதுர்’ என்ற இடம் வரை சென்றார்கள். ஆனால், ஸுலைம் கிளையினர் தப்பிவிட்டனர். 500 ஒட்டகங்கள் அவர்கள் ஊரில் இருந்தன. அவற்றை முஸ்லிம்கள் கைப்பற்றினர். அதிலிருந்து ஐந்தில் ஒன்றை ஒதுக்கிவிட்டு எஞ்சிய 400

ஒட்டகங்களை, ஒவ்வொரு வீரருக்கும் இரண்டு ஒட்டகங்கள் வீதம் நபி (ஸல்) வழங்கினார்கள். மேலும் 'யஸார்' என்ற ஓர் அடிமையும் கிடைத்தார். அவரை உரிமையிட்டார்கள். அவர்களது ஊரில் மூன்று நாட்கள் தங்கிய பின்னர் நபி (ஸல்) மதீனா திரும்பினார்கள்.

பத்ரிலிருந்து திரும்பி, ஏழு நாட்கள் கழித்து ஹிஜ்ரி 2, ஷவ்வால் மாதத்தில் இந்தப் போர் ஏற்பட்டது. ஆனால், சிலர் முஹர்ரம் மாதத்தின் நடுவில் ஏற்பட்டதென்று கூறுகின்றனர். இப்போருக்குச் செல்லும் போது நபி (ஸல்) அவர்கள் மதீனாவில் ஸிபாஉ இப்னு உர்ஃபுதா என்ற தோழரை தனது பிரதிநிதியாக ஆக்கினார்கள். சிலர் அப்துல்லாஹ் இப்னு உம்மு மக்தூமைப் பிரதிநிதியாக ஆக்கினார்கள் என்றும் கூறுகின்றனர். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**நபியவர்களைக் கொல்ல திட்டம்**

பத்ர் போரில் தோற்றதால் நபி (ஸல்) அவர்களுக்கு எதிராக மக்காவாசிகள் கோபத்தால் கொதித்தனர். தங்களின் வீழ்ச்சிக்கும் இழிவுக்கும் அடிப்படைக் காரணமாக இருக்கும் அந்த முஹம்மதைக் கொன்று விடுவதுதான் அனைத்திற்கும் சரியான தீர்வு என முடிவு செய்தனர். இதற்காக மக்கா நகர வீரர்களில் இருவர் ஒன்றுகூடி ஆலோசனை செய்தனர்.

உமைர் இப்னு வஹப் அல் ஜுமஹ மற்றும் ஸஃப்வான் இப்னு உமைய்யா ஆகிய இருவரும் கஅபாவிற்கருகில் அமர்ந்தனர். இது பத்ர் போர் முடிந்து, சில நாட்கள் கழித்து நடந்ததாகும். இந்த உமைர், குறைஷி ஷைத்தான்களில் மிகப் பெரிய ஷைத்தானாவான். நபி (ஸல்) அவர்களையும் நபித்தோழர்களையும் மக்காவில் அதிகம் நோவினை செய்தவர்களில் இவனும் குறிப்பிடத்தக்கவன். இவனது மகன் வஹப் இப்னு உமைரை முஸ்லிம்கள் பத்ர் போரில் சிறைப்பிடித்தனர். பத்ரில் கொலை செய்யப்பட்டவர்களையும், முஸ்லிம்களால் தங்களுக்கு ஏற்பட்ட சோதனைகளையும் ஸஃப்வானுக்கு உமைர் நினைவூட்டினான். அதற்கு ஸஃப்வான் ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர்களுக்குப் பின் வாழ்ந்து ஒரு பலனும் இல்லை'' என்றான்.

அதற்கு, ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீ உண்மையே கூறினாய். அறிந்துகொள்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! என்னால் நிறைவேற்ற முடியாத அளவுக்கு கடன் சுமையும் எனக்குப் பின் சீரழிந்து விடுவார்கள் என்று நான் பயப்படும் குடும்பமும் எனக்கு இல்லையெனில் நேரில் சென்று முஹம்மதை நானே கொல்வேன். எனது மகன் அவர்களிடம் கைதியாக இருப்பதால் நான் அவர்களிடம் செல்வதற்கு அது ஒரு காரணமாகவும் இருக்கிறது'' என்றான் உமைர்.

ஸஃப்வான் இதை நல்ல சந்தர்ப்பமாகக் கருதி, ''உனது கடனை நான் நிறைவேற்றுகிறேன். உனது குடும்பத்தை எனது குடும்பத்துடன் நான் சேர்த்துக் கொள்கிறேன். அவர்கள் வாழும் காலமெல்லாம் நான் அவர்களுக்கு உதவி செய்வேன். என்னிடம் இருக்கும் எதையும் அவர்களுக்கு நான் கொடுக்காமல் இருக்க மாட்டேன்'' என நயமாகப் பேசி, உமைரை இத்தீய செயலுக்குத் தூண்டினான்.

சரி! ''நமது பேச்சை மறைத்துவிடு. யாரிடமும் சொல்லாதே'' என்று உமைர் கூற, ''அப்படியே செய்கிறேன்'' என்றான் ஸஃப்வான்.

உமைர் தனது வாளைக் கூர்மைப்படுத்தி அதில் நன்கு விஷம் ஏற்றினான். அந்த வாளுடன் மதீனா புறப்பட்டான். கொலை வெறியுடன் அதிவிரைவில் மதீனா சென்றடைந்தான். நபி (ஸல்) அவர்களின் பள்ளிக்கு அருகில் தனது ஒட்டகத்தைப் படுக்க வைத்தான். அப்போது உமர் (ரழி) பள்ளிக்குள் முஸ்லிம்களுடன் பத்ர் போரில் அல்லாஹ் தங்களுக்கு செய்த உதவியைப் பற்றிய பேச்சில் ஈடுபட்டிருந்தார்கள். சரியாக உமர் (ரழி)

அவர்களின் பார்வை உமைர் மீது பட்டது. “இதோ நாய்! அல்லாஹ்வின் எதிரி! தனது வாளைத் தொங்கவிட்டவனாக வந்துள்ளான். இவன் ஒரு கெட்ட நோக்கத்திற்காகத்தான் வருகிறான்” என்று சப்தமிட்டவராக நபி (ஸல்) அவர்களிடம் சென்று “அல்லாஹ்வின் தூதரே! இதோ அல்லாஹ்வின் எதிரி உமைர், தனது வாளை அணிந்தவனாக இங்கு வருகிறான்” என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) “என்னிடம் அவரை அழைத்து வாருங்கள்” என்றார்கள். உமர் (ரழி) அன்சாரிகளில் சிலரிடம் “நீங்கள் சென்று நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் அமருங்கள். இந்த கெட்டவனின் தீங்கிலிருந்து நபி (ஸல்) அவர்களைக் காத்துக் கொள்ளுங்கள். ஏனென்றால் இவனை நம்ப முடியாது” என்று கூறியபின் உமைன் வாளுறையை அவரது பிடரியுடன் இழுத்துப் பிடித்தவராக நபி (ஸல்) அவர்களிடம் அழைத்து வந்தார்கள். இக்காட்சியைப் பார்த்த நபி (ஸல்) “உமரே! அவரை விட்டு விடுங்கள்” என்று கூறி, “உமைரே! இங்கு வாரும்” என்றார்கள். அப்போது உமைர் “உங்களின் காலைப் பொழுது பாக்கியமாகட்டும்” என்று முகமன் கூறினார். அதற்கு நபி (ஸல்) “உமைரே! உமது இந்த முகமனை விட சிறந்த முகமனாகிய சுவனவாசிகளின் ‘ஸலாம்’ என்ற முகமனைக் கொண்டு அல்லாஹ் எங்களை சங்கைப்படுத்தி இருக்கிறான்” என்றார்கள்.

பின்பு “உமைரே! நீர் எதற்காக இங்கு வந்தீர்” என்று கேட்டார்கள். அதற்கு, “உங்களிடம் இருக்கும் இந்த கைதிக்காக வந்திருக்கிறேன். அவருடன் நல்லமுறையில் நடந்து கொள்ளுங்கள்” என்றார் உமைர்.

அதற்கு நபி (ஸல்) “உமது கழுத்தில் ஏன் வாள் தொங்குகிறது” என்று கேட்டார்கள். அவர் “இந்த வாள் நாசமாகட்டும். இது எங்களுக்கு என்ன பலனை அளித்தது” என்று கூறினார்.

நபி (ஸல்), “என்னிடம் உண்மையை சொல். நீர் வந்ததன் நோக்கம் என்ன?” என்று கேட்டார்கள். அதற்கவர் “நான் அந்த நோக்கத்தில்தான் வந்தேன்” என்றார்.

அதற்கு நபி (ஸல்) “இல்லை. நீயும் ஸஃப்வானும் கஅபாவிற்கு அருகில் அமர்ந்து பத்ரில் கொல்லப்பட்ட குறைஷிகளைப் பற்றி பேசினீர்கள். பின்பு நீ “தன் மீது கடனும் தனது குடும்பத்தார்களின் பொறுப்பும் இல்லையெனில், தான் முஹம்மதை கொலை செய்து வருவேன் என்று கூறினீர்! நீ என்னைக் கொல்ல வேண்டுமென்பதற்காக உனது கடன் மற்றும் உனது குடும்ப பொறுப்பை ஸஃப்வான் ஏற்றுக்கொண்டான். ஆனால், இப்போது உனக்கும் உனது அந்த நோக்கத்திற்குமிடையில் அல்லாஹ் தடையாக இருக்கிறான்” என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட உமைர் “நீங்கள் நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் என்று நான் சாட்சி கூறுகிறேன். வானத்தின் செய்திகளையும், உங்களுக்கு இறங்கும் இறைஅறிவிப்பையும் நீங்கள் எங்களுக்கு கூறியபோது உங்களை நாங்கள் பொய்யர் என்று கூறினோம். ஆனால் உங்களை கொலை செய்ய வேண்டும் என முடிவு செய்த போது என்னையும் ஸஃப்வானையும் தவிர வேறு யாரும் அங்கு இருக்கவில்லை. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ்தான் இந்த செய்தியை உங்களுக்கு அறிவித்தான் என்று நான் நன்கறிகிறேன். எனக்கு இஸ்லாமின் பக்கம் நேர்வழி காட்டிய அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்! அவனே இங்கு என்னை அனுப்பினான்” என்று கூறி, இஸ்லாமின் ஏகத்துவத்தை மனமாற மொழிந்தார்கள். அதற்குப் பின், நபி (ஸல்) அவர்கள் “உங்களின் சகோதரருக்கு மார்க்கச் சட்டங்களையும் குர்ஆனையும் கற்றுக் கொடுங்கள். அவரது கைதியை விடுதலைச் செய்யுங்கள்” என்று கூறினார்கள்.

“பத்ரினால் ஏற்பட்ட பாதிப்பை நீங்கள் மறக்கும்படியான ஒரு நற்செய்தி வெகு விரைவில் உங்களுக்குக் கிடைக்கும்” என்று ஸஃப்வான் மக்காவாசிகளிடம் கூறுவான். மேலும் மதீனாவிலிருந்து வரும் வழிப்போக்கர்களிடமும் உமைரைப் பற்றி விசாரிப்பான். இறுதியாக

ஒருவர் உமைர் முஸ்லிமாகிவிட்டார் என்ற செய்தியை ஸஃப்வானுக்கு அறிவிக்க, அவன் அதிர்ச்சியால் உறைந்தான். “அவருடன் பேச மாட்டேன், அவருக்கு ஒருபோதும் எந்த உதவியும் செய்ய மாட்டேன்” என்று சத்தியம் செய்தான்.

உமைர் மதீனாவில் இஸ்லாமியக் கல்வியைக் கற்று, மக்கா திரும்பி அங்கு மக்களை இஸ்லாமின் பக்கம் அழைத்தார். அவரது கரத்தில் பலர் இஸ்லாமைத் தழுவினர். (இப்னு ஹிஷாம்)

**கைனுகா கிளையினருடன் போர்**

யூதர்களுடன் நபி (ஸல்) செய்த ஒப்பந்தங்களைப் பற்றி இதற்கு முன் நாம் கூறியிருக்கிறோம். அந்த ஒப்பந்தங்களை நிறைவேற்றுவதில் நபி (ஸல்) அவர்கள் மிகுந்த ஆர்வம் காட்டினார்கள். முஸ்லிம்களில் எவரும் அந்த ஒப்பந்தத்தின் ஒரு எழுத்திற்குக் கூட மாறு செய்யாமல் நடந்தனர். ஆனால் மோசடி, ஒப்பந்தத்தை முறித்தல் மற்றும் துரோகம் செய்தல் ஆகியவற்றுக்கு வரலாற்றில் பெயர்போன யூதர்களோ தங்களின் இயல்புக்குத் தக்கவாறே நடந்தனர். குறுகிய காலத்திலேயே முஸ்லிம்களுக்கு எதிரான சூழ்ச்சியை ஆரம்பித்ததுடன் அவர்களுக்குள் பழைய பகைமையையும் சலசலப்பையும் கிளப்பினர். மேலும், முஸ்லிம்களுக்கு மத்தியில் பிளவுகளை ஏற்படுத்த முயன்றனர். இதற்கு சில உதாரணங்களைப் பார்ப்போம்:

**யூதர்களின் சூழ்ச்சிக்கு உதாரணம்**

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: “ஷாஸ் இப்னு கைஸ்’ என்ற வயது முதிர்ந்த யூதன் ஒருவன் இருந்தான். அவன் முஸ்லிம்கள் மீது கடினமான பொறாமையும் குரோதமும் கொண்டிருந்தான். அன்சாரிகளில் அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரு கிளையினரும் ஒற்றுமையாக ஒன்றுகூடி ஓரிடத்தில் பேசியதைப் பார்த்தான்.. இவ்வளவு ஒற்றுமையாகவும் அன்பாகவும் இஸ்லாமின் அடிப்படையில் இவர்கள் ஒன்றுகூடி இருந்ததை அவனால் பொறுக்க முடியவில்லை. “இவ்வூரில் கைலா கூட்டத்தினர் அதாவது அவ்ஸ் மற்றும் கஸ்ரஜ் கிளையினர் ஒற்றுமையாகி விட்டனர். இவர்கள் ஒற்றுமையுடன் இருந்தால் நம்மால் இங்கு தங்க முடியாது” என்று கூறி தன்னுடன் இருந்த யூத வாலிபனிடம் “நீ சென்று அவர்களுடன் உட்கார்ந்து கொள். பிறகு புஆஸ் போரைப் பற்றியும் அதற்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சியையும் அவர்களுக்கு நினைவூட்டு, போர் சமயத்தில் அவர்கள் தங்களுக்குள் கூறிய கவிதைகளை அவர்களுக்குப் பாடிக்காட்டு” என்று கூறினான்.

ஷாஸ் கூறியவாறே அவனும் செய்தான். நல்ல பலன் கிடைத்தது. இரு கூட்டத்தினரும் தத்தம் பெருமையைப் பற்றி பேச ஆரம்பித்தனர். இரு கூட்டத்திலிருந்தும் இருவர் மண்டியிட்டு வாய்ச் சண்டை போட, அதில் ஒருவர் நீங்கள் நாடினால் அந்தப் போரை இப்போதும் நாம் அப்படியே தொடங்கலாம் என்றார். மற்றவன் கூட்டத்தினர் “வாருங்கள்! மதீனாவிற்கு வெளியில் ஹர்ராவில் சென்று நாம் சண்டையிடுவோம். ஆயுதங்களை எடுத்துக் கொள்ளுங்கள்” என்று கூறியவாறு ஹர்ராவை நோக்கிக் கிளம்பினர். இரு கூட்டத்தினரும் கோபத்தால் பொங்கி எழுந்தனர். அவர்களுக்குள் கடுமையான சண்டை நடக்க நெருங்கி விட்டது.

இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்குக் கிடைத்தவுடன் தங்களுடன் இருந்த முஹாஜிர் தோழர்களை அழைத்துக் கொண்டு அன்சாரிகளிடம் விரைந்தார்கள். அவர்களை நோக்கி முஸ்லிம்களே! அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள்! நான் உங்களுக்கு மத்தியில் இருக்கும்போதே அறியாமைக் கால வாதங்களை நீங்கள் செய்து கொள்கிறீர்களா? அல்லாஹ் உங்களுக்கு இஸ்லாமின் பக்கம் நேர்வழி காட்டினான் அதன் மூலம் உங்களைக் கண்ணியப்படுத்தினான் உங்களை விட்டு அறியாமைக்கால விஷயங்களை அகற்றி இருக்கின்றான் இறைநிராகரிப்பிலிருந்து உங்களைப் பாதுகாத்து

இருக்கின்றான் உள்ளங்களுக்கு மத்தியில் அன்பை ஏற்படுத்தி இருக்கின்றான். இதற்கு பின்புமா நீங்கள் சண்டை செய்து கொள்கிறீர்கள்?'' என்று அறிவுரை கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் உருக்கமான உரையைக் கேட்ட அம்மக்கள் தங்களின் இச்செயலை ஷைத்தானின் ஊசலாட்டமே எனவும் தங்கள் எதிரியின் சூழ்ச்சியுமே எனவும் புரிந்து கொண்டு அழுதனர். அவ்ஸ், கஸ்ரஜ் கிளையினர் ஒருவர் மற்றவரைக் கட்டித் தழுவினார். பின்பு நபி (ஸல்) அவர்களுடன் தங்கள் இல்லங்களுக்குத் திரும்பிச் சென்றனர். அல்லாஹ்வின் எதிரி 'ஷாஸ் இப்னு கைஸ்'' உடைய சூழ்ச்சியிலிருந்து முஸ்லிம்களை அல்லாஹ் இவ்வாறு பாதுகாத்தான். (இப்னு ஹிஷாம்)

யூதர்கள் முஸ்லிம்களுக்கு மத்தியில் செய்த குழப்பங்களுக்கும் சூழ்ச்சிகளுக்கும் இது ஓர் உதாரணமாகும். இவ்வாறு இஸ்லாமிய அழைப்புப் பணிக்கும் தடைகளை ஏற்படுத்த பல வழிகளைக் கையாண்டனர். பல பொய் பிரச்சாரங்களைச் செய்தனர். காலையில் இஸ்லாமை ஏற்று, அன்று மாலையில் நிராகரித்து விடுவார்கள். இதனால் புதிய, பலவீனமான முஸ்லிம்களுடைய உள்ளங்களில் இஸ்லாமைப் பற்றிய சந்தேகங்களை ஏற்படுத்தினர். மேலும், தங்களுடன் வியாபாரத் தொடர்பு வைத்திருக்கும் முஸ்லிம்களுக்கு நெருக்கடி தந்தனர். முஸ்லிம்கள் தங்களுக்குக் கடன் கொடுக்க வேண்டியிருந்தால் காலையிலும் மாலையிலும் சென்று அந்த கடனைக் கேட்டுத் துன்புறுத்துவர். முஸ்லிம்களுக்கு இவர்கள் ஏதும் கொடுக்க வேண்டியிருந்தால் அதைக் கொடுக்காமல் மறுப்பார்கள். தங்களிடமுள்ள முஸ்லிம்களின் சொத்துகளை அநியாயமாகத் தின்று வந்தனர். முஸ்லிம்களுக்குக் கொடுக்க வேண்டிய கடன்களைக் கொடுக்காமல் "நீ உமது மூதாதையரின் மார்க்கத்தில் இருந்த போதுதான் இந்த கடன் எங்கள் மீது இருந்தது. நீ மதம் மாறியதால் இப்போது நாங்கள் அதனைக் கொடுக்க வேண்டியதில்லை'' என்று கூறுவார்கள்.

நாம் மேற்கூறிய நிகழ்வுகள் பத்ர் போருக்கு முன் நடந்தவைகள். இந்த யூதர்கள் நபி (ஸல்) அவர்களுடன் உடன்படிக்கை செய்திருந்தும் அதை மதிக்காமல் நடந்தனர். இவர்கள் நேர்வழி பெறுவார்கள் என்பதற்காகவும், நாட்டில் அமைதி நிலவ வேண்டும் என்பதற்காகவும் இவர்களின் அக்கிரமங்களை நபி (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் சகித்து வந்தார்கள்.

**கைனுகாவினர் ஒப்பந்தத்தை முறிக்கின்றனர்**

பத்ர் மைதானத்தில் முஸ்லிம்களுக்கு அல்லாஹ் மாபெரும் உதவி செய்தான். அதனால் முஸ்லிம்களைப் பற்றிய மதிப்பு, மரியாதை மற்றும் பயம், உள்ளூர்வாசிகள் - வெளியூர்வாசிகள் என அனைவரின் உள்ளத்திலும் ஏற்பட்டன. இது யூதர்களுக்கு வெறுப்பை ஊட்டியது. அவர்களது கோபத்தைக் கிளறியது இதனால் வெளிப்படையாகவே முஸ்லிம்களை எதிர்த்தனர் அவர்களுக்குத் தீங்கு செய்தனர்.

யூதர்களில் 'கஅப் இப்னு அஷ்ரஃப்' என்பவன் முஸ்லிம்களுக்கு பெரிய எதிரியாக விளங்கினான். அவ்வாறே யூதர்களில் இருந்த மூன்று பிரிவினர்களில் கைனுகா கிளையினரே மிகக் கெட்டவர்களாக இருந்தனர். இவர்கள் மதீனாவினுள் வசித்தனர். சாயமிடுதல், இரும்பு பட்டறை, பாத்திரங்கள் செய்வது என்று பல தொழில்கள் இவர்கள் வசம் இருந்தன. இதுபோன்ற தொழில்களில் இவர்கள் இருந்ததால் இவர்களிடம் பெருமளவில் போர் சாதனங்கள் இருந்தன. மதீனாவிலிருந்த யூதர்களில் இவர்களே வீரமுடையவர்களாக விளங்கினர். யூதர்களில் முதன் முதலாக நபி (ஸல்) அவர்களுடன் செய்த உடன்படிக்கையை முறித்தவர்கள் இவர்களே.

அல்லாஹ் முஸ்லிம்களுக்கு பத்ரில் கொடுத்த வெற்றிக்குப் பிறகு இவர்களது அத்துமீறல் கடுமையானது அராஜகம் அதிகரித்தது இவர்கள் மதீனாவில் குழப்பங்களை ஏற்படுத்தினர்

முஸ்லிம்களைப் பரிகாசம் செய்தனர் தங்களது கடைவீதிகளுக்கு வரும் முஸ்லிம்களுக்கு, குறிப்பாகப் பெண்களுக்கு இடையூறு அளித்தனர்.

இவர்களை ஓர் இடத்தில் ஒன்றிணைத்து நபி (ஸல்) அறிவுரை வழங்கினார்கள். நேர்வழிக்கும் நன்னெறிக்கும் அழைத்தார்கள். அத்துமீறல், பகைமை கொள்ளல், தீங்கு விளைவித்தல் ஆகியவற்றின் பின்விளைவைப் பற்றி எச்சரித்தார்கள். ஆனால், நபி (ஸல்) எச்சரித்தும் தங்களின் வழிகேட்டிலிருந்து விலகாமல் அதிலேயே நிலைத்திருந்தனர்.

இதுபற்றி இப்னு அப்பாஸ் (ரழி) கூறுவதை கேட்போம்: நபி (ஸல்) பத்ர் போரில் குறைஷிகளைத் தோற்கடித்து மதீனா திரும்பிய பிறகு, கைனுகாவினன் கடைவீதியில் அங்குள்ள யூதர்களை ஒன்று சேர்த்தார்கள். அவர்களிடம் ''யூதர்களே! குறைஷிகளுக்கு ஏற்பட்ட நிலை உங்களுக்கு ஏற்படுவதற்கு முன் நீங்கள் இஸ்லாமை ஏற்றுக்கொள்ளுங்கள்'' என்றார்கள். அதற்கு அவர்கள், ''முஹம்மதே! போர் செய்யத் தெரியாத அனுபவமற்ற குறைஷிகளில் சிலரை போரில் கொன்று விட்டதால் நீர் மயங்கிவிட வேண்டாம்! நீர் எங்களிடம் போர் தொடுத்தால் நாங்கள் வலிமைமிக்க மனிதர்கள் என்பதையும், எங்களைப் போன்றவர்களை நீர் இதுவரை சந்தித்ததில்லை என்பதையும் அறிந்து கொள்வீர்!!'' என்று பதிலளித்தனர். அப்போது அல்லாஹ் பின்வரும் வசனத்தை இறக்கினான். அதை நபி (ஸல்) அவர்கள் அம்மக்களுக்கு ஓதிக் காண்பித்தார்கள்.

எவர்கள் இவ்வேதத்தை நிராகரிக்கின்றார்களோ அவர்களுக்கு (நபியே!) நீங்கள் கூறுங்கள்: ''அதிசீக்கிரத்தில் நீங்கள் வெற்றி கொள்ளப்படுவீர்கள். அன்றி (மறுமையில்) நரகத்தில் சேர்க்கப்படுவீர்கள். அது மிகக்கெட்ட தங்குமிடம். (பத்ர் போர்க்களத்தில்) சந்தித்த இரு சேனைகளில் நிச்சயமாக உங்களுக்கொரு அத்தாட்சி இருந்தது. (ஒன்று) அல்லாஹ்வின் பாதையில் போர்புரியும் கூட்டம், மற்றொரு கூட்டத்தினர் நிராகரிப்பவர்கள். (நிராகரிப்பவர்கள் ஆகிய) இவர்கள் அல்லாஹ்வின் பாதையில் போர் புரிபவர்களைத் தங்களைவிட இரு மடங்காக(த் தங்கள்) கண்ணால் கண்டனர். அல்லாஹ், தான் விரும்பியவர்களைத் தன் உதவியைக் கொண்டு (இவ்வாறு) பலப்படுத்துகின்றான். (படிப்பினை பெறும்) பார்வையுடையவர்களுக்கு நிச்சயமாக இதில் ஒரு (நல்ல) படிப்பினை இருக்கின்றது.''(அல்குர்ஆன் 3:12 , 13) (ஸுனன் அபூதாவூது)

கைனுகாவினன் இந்த பதில் பகிரங்கமாகப் போருக்கு விடுத்த அழைப்பாகவே இருந்தது. இருப்பினும் நபி (ஸல்) தங்களது கோபத்தை அடக்கினார்கள். முஸ்லிம்களும் சகிப்புடன் நடந்தார்கள். இறுதி நிலை எப்படி முடிகிறது என்பதே அனைவரின் எதிர்பார்ப்பாக இருந்தது.

கைனுகாவினன் துணிவு அதிகரித்தது. அவர்கள் பல வழிகளில் மதீனாவில் குழப்பம் விளைவித்து, தங்களுக்குத் தாங்களே அழிவைத் தேடினர்.

இதுபற்றி இப்னு ஹிஷாம் (ரஹ்) அறிவிக்கிறார்: ஒரு அரபிப் பெண் தனக்கு சொந்தமான, ஒட்டகத்தின் மேல் விற்க்கப்படும் தோல் ஒன்றை விற்பதற்காக கைனுகாவினன் கடைத் தெருவிற்கு வந்தார். விற்ற பிறகு அதன் கிரயத்தை எதிர்பார்த்து அங்கிருந்த பொற் கொல்லன் ஒருவன் கடைக்கருகில் அமர்ந்தான். அங்கிருந்த யூதர்கள் அப்பெண் தனது முகத்திலிருந்து பர்தாவை அகற்ற வேண்டும் என்றனர். ஆனால், அதை அவள் மறுத்துவிட்டாள். அந்த பொற் கொல்லன் அப்பெண்ணின் ஆடையை அவரது முதுகுப்புறத்தில் அவருக்குத் தெரியாமல் கட்டினான்.

சிறிது நேரத்திற்குப் பின்பு அவர் அங்கிருந்து எழுந்தபோது அவரது ஆடை அகன்று அவரது மறைவிடம் தெரியவே குழுமியிருந்த யூதர்கள் சப்தமிட்டுச் சிரித்தனர். இதனால் அவர் வெட்கித் தலைக் குனிந்து கூச்சலிட்டார். இதை அறிந்த முஸ்லிம்களில் ஒருவர் பொற் கொல்லன் மீது பாய்ந்து அவனைக் கொன்றுவிட்டார். பொற் கொல்லன் யூதனாக

இருந்ததால் யூதர்கள் அனைவரும் இந்த முஸ்லிமின் மீது பாய்ந்து அவரைக் கொன்று விட்டார்கள். அப்போது அந்த முஸ்லிமின் உறவினர்கள் மற்ற முஸ்லிம்களிடம் யூதர்களுக்கு எதிராகத் தங்களுக்கு உதவி செய்யுங்கள் என்றனர். இதிலிருந்தே முஸ்லிம்களுக்கும் கைனுகாவினருக்குமிடையில் சண்டை மூண்டது. (இப்னு ஹிஷாம்)

**முற்றுகையிடுதல் - சரணடைதல் - நாடுகடத்தல்**

இனியும் பொறுமைகாப்பது உசிதமல்ல என்பதால் நபி (ஸல்) அவர்கள் கைனுகாவினர் மீது போர் தொடுக்க முடிவு செய்தார்கள். மதீனாவில் அபூ லுபாபா இப்னு அப்துல் முன்திர் (ரழி) அவர்களைத் தனது பிரதிநிதியாக நியமித்து விட்டு கைனுகாவனரிடம் புறப்பட்டார்கள். முஸ்லிம்களுக்குரிய கொடியை ஹம்ஜா (ரழி) அவர்களிடம் வழங்கினார்கள். கைனுகா கூட்டத்தார் நபி (ஸல்) அவர்களை பார்த்தவுடன் கோட்டைகளுக்குள் சென்று தங்களைப் பாதுகாத்துக் கொண்டனர். அவர்களை நபி (ஸல்) முற்றுகையிட்டார்கள். இந்த முற்றுகை ஹிஜ்ரி 2, ஷவ்வால் 15 சனிக்கிழமை தொடங்கி 15 இரவுகள் (துல்கஅதா முதல் பிறை வரை) தொடர்ந்தது. அல்லாஹ் அந்த யூதர்களின் உள்ளத்தில் பயத்தை ஏற்படுத்தினான். அவர்கள் அனைவரும் தங்கள் விஷயத்திலும் தங்களின் சொத்து, பெண்கள், பிள்ளைகள் விஷயத்திலும் நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்கு இணங்குவதாய் கூறி, கோட்டைகளை விட்டு வெளியே வந்தனர். நபி (ஸல்) அம்மக்களின் கரங்களைக் கட்ட உத்தரவிட்டார்கள்.

இந்நேரத்தில் அப்துல்லாஹ் இப்னு உபை தனது நயவஞ்சகத் தன்மைக்கேற்ப செயல்பட்டான். நபி (ஸல்) அவர்களிடம் யூதர்களை மன்னிக்க வேண்டுமென்று வற்புறுத்தினான். “முஹம்மதே! என்னுடன் நட்பு உடன்படிக்கை செய்து கொண்ட இவர்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள்” என்று கூறினான். (பனூ கைனுகா, கஸ்ரஜ் இனத்தவன் நண்பர்களாக இருந்தார்கள்.) இப்னு உபை தனது இக்கூற்றை பலமுறை திரும்பக் கூறியும் நபி (ஸல்) அதைப் புறக்கணித்தார்கள். அவன் நபி (ஸல்) அவர்களின் சட்டைப் பைக்குள் கையை நுழைத்துக் கொண்டு, அவர்களை வற்புறுத்தினான். நபி (ஸல்) அவர்கள் அவனிடம் “என்னை விட்டுவிடு” என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களின் முகத்தில் ஏற்பட்ட கோபத்தின் மாறுதலை நபித் தோழர்கள் உணர்ந்தார்கள். மீண்டும் “உனக்கென்ன நேர்ந்தது! என்னை விட்டுவிடு” என்று நபி (ஸல்) கூறினார்கள். ஆனால், அந்நயவஞ்சகன் தனது பிடிவாதத்தைத் தொடர்ந்தவனாக “இவர்களில் கவச ஆடை அணியாத நானூறு நபர்கள், கவச ஆடை அணிந்த முந்நூறு நபர்கள் இவர்களெல்லாம் என்னைப் பாதுகாத்தவர்கள். இந்த அனைவரையும் ஒரே பொழுதில் நீர் வெட்டி சாய்த்து விடுவீரோ! எனது நண்பர்கள் விஷயத்தில் நீர் அழகிய முறையில் நடந்து கொள்ளாதவரை நான் உம்மை விடமாட்டேன். பின்னால் பிரச்சனைகள் ஏற்படுவது பற்றி இப்போதே நான் அஞ்சுகிறேன்” என்று கூறினான்.

இப்னு உபை தன்னை முஸ்லிம் என்று கூறி ஒரு மாதம்தான் ஆகியிருந்தும் அவனிடம் நபி (ஸல்) மிக அழகிய முறையில் நடந்து, அவன் கேட்டக் கோரிக்கைக்கிணங்க யூதர்கள் அனைவரையும் விடுதலை செய்து மதீனாவிலிருந்து வெளியேறும்படி உத்தரவிட்டார்கள். அனைத்து யூதர்களும் ஷாமுக்குச் சென்றனர். அங்கு சென்ற சிறிது காலத்திலேயே அவர்களில் அதிகமானவர்கள் இறந்துவிட்டனர். அவர்கள் விட்டுச் சென்ற பொருட்களை ஒன்று சேர்க்கும் பொறுப்பை முஹம்மது இப்னு மஸ்லாமாவிடம் வழங்கினார்கள். அவர்களுடைய பொருட்களில் இருந்து மூன்று வில்களையும், இரண்டு கவச ஆடைகளையும், மூன்று வாட்களையும், மூன்று ஈட்டிகளையும் தனக்கென எடுத்த பிறகு, ஐந்தில் ஒன்றை அல்லாஹ்விற்காக ஒதுக்கினார்கள். மற்ற அனைத்தையும் முஸ்லிம்களுக்குப் பங்கிட்டார்கள். (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

**‘ஸவீக்’ போர்**

இது ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டு, பத்ர் போர் முடிந்து இரண்டு மாதங்கள் கழித்து நடந்த ஒரு நிகழ்ச்சியாகும். பத்ர் போர் முடிந்த பிறகு அதில் தனது இனத்தவருக்கு ஏற்பட்ட இழப்பை ஈடுகட்டவும் முஸ்லிம்களை பழிவாங்கவும் “முஹம்மதிடம் போர் செய்யும் வரை நான் என் மனைவியுடன் சேரமாட்டேன்” என்று அபூ ஸுஃப்யான் நேர்ச்சை செய்தார். ஆகவே, முஸ்லிம்களைத் தாக்க அவர் திட்டம் ஒன்று தீட்டினார். அதாவது, அதில் செலவும் சிரமமும் குறைவாக இருக்க வேண்டும். ஆனால், முஸ்லிம்களுக்குப் பாதிப்பு அதிகமாக ஏற்பட வேண்டும். இதனால் தனது சமுதாயத்தின் இழந்த மதிப்பை மீட்க முடியும் அதன் ஆற்றலை வெளிப்படுத்த முடியும் என்று அவர் நினைத்தார்.

தனது இந்த நேர்ச்சையை நிறைவேற்றுவதற்காக இருநூறு வீரர்களுடன் புறப்பட்டு மதீனாவிலிருந்து 12 மைல்கள் தொலைவில் இருக்கும் ‘சைப்’ என்ற மலைக்கருகிலுள்ள கணவாயில் வந்து இறங்கினார். எனினும், மதீனாவின் மீது பகலில் பகிரங்கமாக போர் தொடுக்க அவருக்குத் துணிவு வரவில்லை. கொள்ளையர்களைப் போன்று மதீனாவின் மீது இரவில் தாக்குதல் நடத்த திட்டம் ஒன்று தீட்டினார். இரவானவுடன் மதீனாவுக்குள் புகுந்து ஹை இப்னு அக்தபை சந்திக்க வந்தார். ஹை இப்னு அக்தப் பயத்தால் கதவைத் திறக்கவில்லை. எனவே, அங்கிருந்து திரும்பி நழீர் இன யூதர்களின் தலைவன் ஸல்லாம் இப்னு மிஷ்கமிடம் வந்தார். அவனிடம் நழீர் இன யூதர்களின் செல்வங்கள் இருந்தன. அவனிடம் அனுமதி பெற்று உள்ளே நுழைந்தார். அவன் அபூ ஸுஃப்யானை வரவேற்று நன்கு விருந்தோம்பல் செய்து மது புகட்டினான். மேலும், மதீனாவிலுள்ள முஸ்லிம்களின் செய்திகளையும் இரகசியமாகக் கூறினான். இரவின் இறுதியில் அங்கிருந்து வெளியேறிய அபூ ஸுஃப்யான் தனது படையின் ஒரு பிரிவை மதீனாவில் ‘அல் உரைழ்’ என்ற பகுதியில் கொள்ளையடிக்க அனுப்பினார். அந்தப் படையினர் அங்குள்ள பேரீத்தம் மரங்களை வெட்டி வீழ்த்தி எரித்தனர். அன்சாரிகளில் ஒருவரையும், அவரது ஒப்பந்தக்காரர் ஒருவரையும் கொன்றனர். அவ்விருவரும் தங்கள் விவசாய நிலத்தில் வேலை செய்து கொண்டிருந்தனர். இதற்குப் பின் அபூ ஸுஃப்யானும் அவரது படையும் மக்கா நோக்கி ஓட்டம் பிடித்தனர்.

இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்குக் கிடைக்கவே, மதீனாவில் அபூலுபாபா இப்னு அப்துல் முன்திரைப் பிரதிநிதியாக நியமித்து, தங்களது சில தோழர்களுடன் அபூ ஸுஃப்யானையும் அவரது படையையும் விரட்டிப் பிடிப்பதற்குப் புறப்பட்டார்கள். ஆனால், அவர்கள் அதிவிரைவில் அங்கிருந்து தப்பிவிட்டனர்.

அவ்வாறு செல்லும்போது தங்களது பயணத்தை விரைவாக தொடரத் தடையாக இருந்த சத்து மாவு மற்றும் ஏனைய உணவுப் பொருட்களை வழியில் விட்டுவிட்டனர். நபி (ஸல்) தங்களது தோழர்களுடன் ‘கர்கரத்துல் குதுர்’ என்ற இடம் வரை சென்றும் அவர்களைப் பிடிக்க முடியாததால் மதீனா திரும்பினார்கள். வழியில் எதிரிகள் விட்டுச் சென்ற உணவுப் பொருள் மற்றும் சத்து மாவை தங்களுடன் எடுத்துக் கொண்டனர். அதில் சத்து மாவு அதிகம் இருந்ததால் அதை குறிக்கும் ‘ஸவீக்’ என்ற சொல்லை வைத்தே இந்த தாக்குதலுக்கு ‘ஸவீக்’ என்ற பெயர் வந்தது. (ஜாதுல் மஆது)

**தீ அம்ர் போர்**

இது ஹிஜ்ரி 3 ஆம் ஆண்டு முஹர்ரம் மாதத்தில் நடைபெற்றது. உஹுத் போருக்கு முன் நபி (ஸல்) அவர்கள் மேற்கொண்ட இராணுவத் தாக்குதல்களில் இதுவே பெரியதாகும்.

இப்போருக்கான காரணம் என்னவெனில், ஸஅலபா, முஹாரிப் ஆகிய கிளையினர் மதீனாவின் சுற்றுப்புறங்கள் மீது தாக்குதல் நடத்த திட்டம் போடுகின்றனர் என்று நபி (ஸல்) அவர்களுக்குச் செய்தி கிடைத்தது. அவர்களை எதிர்கொள்வதற்காக நபி (ஸல்)

முஸ்லிம்களைத் தயார்படுத்தி 450 வீரர்களுடன் புறப்பட்டார்கள். புறப்படும் முன் மதீனாவில் உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) அவர்களைப் பிரதிநிதியாக நியமித்தார்கள்.

வழியில் ஸஅலபா கிளையைச் சேர்ந்த 'ஜுபார்' என்பவர் முஸ்லிம்கள் வசம் சிக்கினார். அவரை நபி (ஸல்) அவர்களிடம் அழைத்து வர, நபி (ஸல்) அவருக்கு இஸ்லாமை அறிமுகப் படுத்தினார்கள். அவரும் இஸ்லாமைத் தழுவினார். அவர் மார்க்கத்தைக் கற்றுக் கொள்வதற்காக நபி (ஸல்) தனது தோழர் பிலாலுடன் அவரை இணைத்து விட்டார்கள். அவர் எதிரிகளின் பகுதியைக் காண்பித்துக் கொடுக்க வழிகாட்டியாக முஸ்லிம்களுடன் வந்தார்.

மதீனாவின் படை வருவதைக் கேள்விப்பட்ட எதிரிகள் மலைகளின் உச்சியில் ஏறி பதுங்கிக் கொண்டனர். நபி (ஸல்) தங்களது தோழர்களுடன் ஓரிடத்தில் ஒன்று கூடினார்கள். அதுதான் 'தீ அம்ர்' என்று சொல்லப்படும் தண்ணீர் நிறைந்த இடம். அவ்விடத்தில் ஏறக்குறைய ஸஃபர் மாதம் முழுமையாகத் தங்கியிருந்தார்கள். கிராம அரபிகளுக்கு முஸ்லிம்களின் ஆற்றலை உணரச் செய்து, அவர்களது உள்ளத்தில் முஸ்லிம்களைப் பற்றிய அச்சமேற்படச் செய்தார்கள். பின்பு அங்கிருந்து நபி (ஸல்) மதீனாவிற்குக் கிளம்பினார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**கயவன் கஅபை கொல்லுதல்**

'கஅப் இப்னு அஷ்ரஃப்''- இவன் இஸ்லாமிய மார்க்கத்தின் மீதும், முஸ்லிம்கள் மீதும் கடும் குரோதம் கொண்டவன். நபியவர்களுக்கு எப்போதும் நோவினை தருபவன். இவன் முஸ்லிம்களுடன் போர் தொடுக்க வேண்டும் என்று வெளிப்படையாகக் கூறி வந்தான். இவன் யூதர்களில் நப்ஹான் பிரிவைச் சேர்ந்த 'தை' இனத்தைச் சேர்ந்தவன். இவனது தாய் யூதர்களில் நழீர் இனத்தைச் சேர்ந்தவள். இவன் பெரிய செல்வந்தனாக இருந்ததுடன் நல்ல அழகுடையவனாகவும் இருந்தான். இவன் அரபியில் நல்ல கவிபாடும் திறமையுடையவன். இவனது கோட்டை மதீனாவின் தென் கிழக்கில் நளீர் இன யூதர்களின் வீடுகளுக்குப் பின்னால் இருந்தது.

''முஸ்லிம்கள் பத்ரில் வெற்றி பெற்றனர், அங்குக் குறைஷிகளின் தலைவர்கள் கொல்லப் பட்டனர்'' என்ற செய்தி இவனுக்குக் கிடைத்தபோது ''என்ன இது உண்மையான செய்தியா? இவர்கள் அரபியர்களில் மிகச் சிறப்புமிக்கவர்கள் ஆயிற்றே மக்களின் அரசர்களாயிற்றே அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முஹம்மது இவர்களைக் கொன்றிருந்தால் பூமியின் மேல் வசிப்பதைவிட பூமிக்குக் கீழ் சென்று விடுவதே மேல்'' என்று புலம்பினான்.

முஸ்லிம்கள் போரில் வெற்றி பெற்று விட்டனர் என்று அல்லாஹ்வின் எதிரியாகிய இவன் அறிந்தவுடன், நபியவர்களையும் முஸ்லிம்களையும் இகழவும், முஸ்லிம்களின் எதிரிகளைப் புகழவும் செய்தான். மேலும், முஸ்லிம்களுக்கு எதிராக அவர்களைத் தூண்டினான். இத்துடன் நிறுத்திக்கொள்ளாமல் மதீனாவிலிருந்து மக்கா சென்றான். அங்கு முத்தலிப் இப்னு அபூ வதாஆ என்பவனிடம் தங்கினான். பிறகு குறைஷிகளில் கொலை செய்யப்பட்டவர்களுக்காக இரங்கல் பாட்டுப் பாடி, அழுது பிரலாபித்து இணைவைப்பவர்களின் உணர்வுகளைத் தூண்டினான். நபியவர்களின் மீது குரோதத்தை மூட்டினான். மேலும், நபியவர்களிடம் போர் புரிய அவர்களைத் தூண்டினான். ஒருநாள் அபூ ஸுஃப்யானும் மற்றவர்களும் அவனிடம் ''உமக்கு எங்களது மார்க்கம் விருப்பமானதா? அல்லது முஹம்மது மற்றும் அவன் தோழர்களின் மார்க்கம் விருப்பமானதா? எங்கள் இரு சாராரில் யார் நேர்வழி பெற்றவர்கள்?'' என்று கேட்டனர். ''அதற்கவன் நீங்கள்தான் நேர்வழி பெற்றவர்கள். நீங்களே சிறந்தவர்கள்'' என்று பதிலளித்தான். இது குறித்து பின்வரும் இறைவசனம் இறங்கியது:

(நபியே!) வேதத்தில் சில பகுதி கொடுக்கப்பட்டவர்களை நீங்கள் பார்க்க வில்லையா? அவர்கள், சிலைகளையும் ஷைத்தான்களையும் நம்பிக்கை கொள்கின்றனர். மேலும் நிராகரிப்பவர்களைச் சுட்டிக் காண்பித்து "இவர்கள் தாம் இறைநம்பிக்கையாளர்களை விட மிக நேரான பாதையில் இருக்கின்றனர்" என்று கூறுகின்றனர். (அல்குர்ஆன் 4:51)

இதே நிலையில் மதீனா திரும்பினான் கஅப். அங்கு நபித்தோழர்களின் பெண்களை தனது கவியில் இகழ்ந்தும் பழித்தும் பாடி அவர்களுக்குப் பெரும் நோவினை செய்தான்.

இவ்வாறு இவனது தொந்தரவு நாளுக்கு நாள் அதிகரிக்கவே, "கஅப் இப்னு அஷ்ரஃபின் கதையை முடிப்பது யார்? நிச்சயமாக அவன் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் துன்பம் தருகிறான்" என்று நபி (ஸல்) கேட்டார்கள். இப்பொறுப்பை நிறைவேற்ற முஹம்மது இப்னு மஸ்லமா, அப்பாத் இப்னு பிஷ்ர், அபூ நாம்லா என்ற ஸில்கான் இப்னு ஸலாமா (இவர் கஅபின் பால்குடி சகோதரர் ஆவார்), ஹாரிஸ் இப்னு அவ்ஸ், அபூ அப்ஸ் இப்னு ஜப்ர் (ரழி) ஆகியோர் தயாரானார்கள். இந்தக் குழுவிற்குத் தலைவராக முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) நியமிக்கப்பட்டார்.

நபிமொழி நூற்களில் இந்நிகழ்ச்சி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கத்தை நாம் இங்கு பார்ப்போம்:

நபி (ஸல்) "கஅப் இப்னு அஷ்ரஃபின் கதையை யார் முடிப்பது? நிச்சயமாக அவன் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் துன்பம் தருகிறான்" என்றார்கள். முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) எழுந்து "அல்லாஹ்வின் தூதரே! உங்களுக்கு விருப்பமாக இருப்பின் நான் அவனைக் கொலை செய்கிறேன்" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) "ஆம்!" என்றார்கள். அப்போது அவர் நபி (ஸல்) அவர்களிடம் "தங்களைப் பற்றி சில (மட்டமான) வார்த்தைகளை அவனிடம் கூற, நீங்கள் எனக்கு அனுமதி தரவேண்டும்" என்றார். நபி (ஸல்) "சரி" என்று கூறினார்கள்.

இதற்குப் பின் முஹம்மது இப்னு மஸ்லமா கஅபிடம் வந்தார். இதோ... அவர்களின் உரையாடல்:

முஹம்மது இப்னு மஸ்லமா: "இந்த மனிதர் (முஹம்மது) எங்களிடம் தர்மத்தைக் கேட்டு சிரமத்தில் ஆழ்த்துகிறார்."

கஅப்: "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவர் விஷயத்தில் நீங்கள் அதிவிரைவில் சடைவடைந்து விடுவீர்கள்."

முஹம்மது இப்னு மஸ்லமா: "நாங்கள் இப்போது அவரைப் பின்பற்றியிருக்கிறோம். அவரது முடிவு என்னதான் ஆகிறது என்று பார்க்கும்வரை அவரை விட்டு விலகுவதை நாங்கள் விரும்பவில்லை. அது சரி! நீ எங்களுக்கு ஒன்று அல்லது இரண்டு மரக்கால் தானியங்களை கடனாகக் கொடுத்துதவு."

கஅப்: "சரி! தருகிறேன். ஆனால், அதற்குப் பதிலாக என்னிடம் அடைமானம் ஏதும் வையுங்கள்."

முஹம்மது இப்னு மஸ்லமா: "நீ எதைக் கேட்கிறாய்?"

கஅப்: "உங்கள் பெண்களில் சிலரை என்னிடம் அடைமானம் வையுங்கள்."

முஹம்மது இப்னு மஸ்லமா: "நீ அரபியர்களில் மிக அழகானவனாயிற்றே. உன்னிடம் எப்படி எங்கள் பெண்களை அடைமானம் வைக்க முடியும்?"

கஅப்: "சரி! உங்களது பிள்ளைகளை அடைமானம் வையுங்கள்."

முஹம்மது இப்னு மஸ்லமா: “எப்படி எங்கள் பிள்ளைகளை அடைமானம் வைப்பது? பிற்காலத்தில் அவர்களை யாராவது ஏசும்போது, இதோ இவன் ஒரு மரக்கால் இரண்டு மரக்காலுக்காக அடைமானம் வைக்கப்பட்டவன் என்று இழிவாகப் பேசுவார்களே! எனவே, நாங்கள் உம்மிடம் எங்களது ஆயுதங்களை அடைமானமாக வைக்கிறோம்.”

கஅப்: “சரி”

முஹம்மது இப்னு மஸ்லமா: “நாளை வருகிறேன்.”

கஅப் அங்கிருந்து புறப்பட்ட பின், நபித்தோழர் அபூ நாம்லாவும் கஅபைச் சந்தித்தார். அவரும் முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) செய்ததைப் போன்றே செய்தார். கஅபிடம் பல கவிகளைப் பற்றி பேசிவிட்டு “கஅபே! நான் ஒரு தேவைக்காக உன்னிடம் வந்திருக்கிறேன். அதை நீ பிறரிடம் கூறக்கூடாது” என்றார். கஅப், “அவ்வாறே நான் செய்கிறேன்” என்றான். அதற்கு அபூ நாம்லா, “கஅபே! இந்த மனிதர் (முஹம்மது) எங்களிடம் வந்தது எங்களுக்கு ஒரு சோதனையாக ஆகிவிட்டது. அரபியர்கள் எங்களைப் பகைத்துக் கொண்டனர் ஒன்று சேர்ந்து எதிர்க்கின்றனர் எங்களின் வியாபார வழிகளை அடைத்துவிட்டனர் இதனால் எங்களது பிள்ளை குட்டிகள் வறுமையில் வாடுகின்றனர் நாங்களும் பெரிய சிரமத்திற்குள்ளாகி விட்டோம்” என்று கூறி, மற்ற விஷயங்களை முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) பேசியவாறே பேசினார். பேச்சுக் கிடையில் என்னுடன் எனக்கு வேண்டிய சில நண்பர்களும் இருக்கின்றனர். நான் அவர்களை நாளை உன்னிடம் அழைத்து வர நாடுறேன். அவர்களிடம் நீ வியாபாரம் செய்யலாம். அவர்களுக்கும் உன்னால் முடிந்த நன்மைகளையும் செய்” என்று பேசிவிட்டு, அங்கிருந்து புறப்பட்டார்.

ஆக, முஹம்மது இப்னு மஸ்லமாவும் அபூ நாம்ளாவும் கஅபுடன் எதை நோக்கமாக வைத்து பேசினார்களோ அதில் வெற்றி கண்டனர். இவ்வாறு நாளுக்கு நாள் சந்திக்க இவர்களின் பழக்கம் நல்ல பலமடைந்தது. எனவே, இந்த இருவரும் தங்களுடன் ஆயுதங்களை எடுத்து வருவதை கஅப் தடை செய்யவிலை.

ஹிஜ்ரி 3, ரபீஉல் அவ்வல், பிறை 14 சந்திர இரவில் இந்த சிறிய குழு நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் அக்குழுவுடன் ‘பகீஉல் கர்கத்’ வரை வந்து “அல்லாஹ்வின் பெயர் கூறி செல்லுங்கள்! அல்லாஹ்வே! இவர்களுக்கு நீ உதவி செய்வாயாக!” என்று கூறி வழியனுப்பி வைத்தார்கள். பிறகு தங்களின் இல்லம் திரும்பி தொழுகையிலும் அல்லாஹ்விடம் பிரார்த்தனை புரிவதிலும் ஈடுபட்டார்கள்.

இவர்கள் கஅப் இப்னு அஷ்ரஃபின் கோட்டைக்கு வந்தனர். அபூ நாம்லா (ரழி) அவனைக் கூவி அழைக்கவே அவன் அவர்களிடம் செல்ல எழுந்தான். அவனது மனைவி அவனிடம் “இந்நேரத்தில் நீ எங்கு செல்கிறாய்? இந்த சப்தத்தில் இரத்தம் சொட்டுவதை நான் கேட்கிறேன்” என்று கூறினாள். (அதாவது அவளின் உள் மனது நடக்கப்போகும் அபாயத்தை உணர்ந்துவிட்டது போலும்.)

அதற்கு கஅப், “வந்திருப்பவரோ எனது சகோதரர் முஹம்மது இப்னு மஸ்லமாவும், எனது பால்குடி சகோதரர் அபூ நாம்லாவும்தான். வேறு யாருமில்லை. சங்கைமிக்கவர் ஈட்டி எறிய அழைக்கப்பட்டாலும் கூட அதையும் ஏற்று அங்கு செல்வார்” என்ற பழமொழியைக் கூறி, மனைவியைச் சமாதானப்படுத்தினான். பிறகு அவர்களை சந்திக்க இறங்கினான். அவன் நன்கு நறுமணம் பூசி இருந்தான். அவனது தலை நறுமணத்தால் கமழ்ந்து கொண்டு இருந்தது.

இது இப்படியிருக்க, அபூ நாம்லா தனது தோழர்களுக்கு எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என சொல்லி வைத்திருந்தார். அதாவது, “கஅப் நமக்கு அருகில் வந்தால் அவனது தலை முடியை பிடித்து நான் நுகருவேன். அவனது தலையை நன்கு நான்

பிடித்துக் கொண்டதை நீங்கள் பார்த்தவுடன் அவன் மீது பாய்ந்து அவனை வெட்டுங்கள்.'' இது அவர்களின் திட்டமாக இருந்தது.

கஅப் கீழே இறங்கி அவர்களிடம் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தான். அப்போது அபூ நாம்லா ''கஅபே! 'ஷிஅபுல் அஜூஸ்' வரைச் சென்று, மீதி இரவு அங்கு பேசிக்கொண்டு இருப்போமே'' என்றார். ''நீங்கள் விரும்பினால் அவ்வாறே செய்யலாம்'' என்று அவனும் கூறினான். அனைவரும் அங்கிருந்து வெளியேறி நடந்து சென்றனர். வழியில் அபூ நாம்லா, ''இன்றைய நறுமணத்தைப் போல் நான் எங்கும் நுகர்ந்ததே இல்லை'' என்றார். கஅப் இந்த புகழ்ச்சியில் மயங்கியவனாக ''என்னிடத்தில் அரபுப் பெண்களில் மிக நறுமணமுள்ள பெண் ஒருத்தி இருக்கிறாள். அவளுக்காகத்தான் இந்த நறுமணம்'' என்றான். அபூ நாம்லா, ''நான் உனது தலையை நுகர்ந்துகொள்ள அனுமதி தருகிறாயா?'' என்றார். அவன் ''அதிலென்ன! நுகரலாமே!'' என்றவுடன் தனது கையை அவனது தலைக்குள் நுழைத்து தானும் நுகர்ந்து கொண்டு தனது தோழர்களையும் நுகர வைத்தார்.

பின்பு சிறிது நேரம் சென்றவுடன் ''நான் மீண்டும் நுகரலாமா?'' என்றார். அவன் ''சரி!'' என்றவுடன் முன்பு போலவே இப்போதும் செய்தார்.

பின்பு சிறிது நேரம் சென்றவுடன் ''மீண்டும் நுகரட்டுமா?'' என்றார். அதற்கு அவன் சரி! என்றவுடன், தனது கையை அவனது தலைக்குள் நுழைத்து இறுக்க பிடித்துக் கொண்டு ''இதோ... அல்லாஹ்வின் எதிரி மீது பாயுங்கள்'' என்றார். அங்கிருந்த நபித்தோழர்கள் அவன் மீது வாட்களை வீசினர். ஆனால் அவன் சாகவில்லை. இதைப் பார்த்த முஹம்மது இப்னு மஸ்லமா தனது கூர்மையான கத்தியை எடுத்து அவனது தொப்புளுக்குக் கீழ் சொருகி, அவனது மர்மஸ்தானம் வரை கிழித்தார். அல்லாஹ்வின் எதிரி பெரும் சப்தமிட்டவனாக செத்து மடிந்தான். அவர்கள் அவனது தலையைக் கொய்து எடுத்துக் கொண்டனர். அவன் கத்திய கதறலில் அங்குள்ள கோட்டைகள் அனைத்திலும் விளக்குகள் எரிக்கப்பட்டன.

இக்குழுவினர் திரும்பினர். தோழர்களில் ஒருவன் வாளால் ஹாரிஸ் இப்னு அவ்ஸ் உடைய காலில் காயம் ஏற்பட்டு இரத்தம் சிந்திக் கொண்டிருந்ததால் அவர் சற்று பின்தங்கி விட்டார். இக்குழுவினர் 'ஹர்ரத்துல் உரைஸ்' என்ற இடம் வந்த போது தங்களுடன் ஹாரிஸ் வராததைப் பார்த்தவுடன் அங்கு சிறிது நேரம் எதிர்பார்த்திருந்தனர். சிறிது நேரத்தில் அவர்களைத் தேடி, ஹாரிஸும் அங்கு வந்து சேர்ந்தார். அவரைத் தூக்கிக் கொண்டு அவர்கள் அங்கிருந்து புறப்பட்டு 'பகீஉல் கர்கத்' வந்தடைந்து அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று முழங்கினர். அவர்களின் சப்தத்தைக் கேட்ட நபி (ஸல்), தோழர்கள் அவனைக் கொலை செய்து விட்டார்கள் என்பதை அறிந்து அவர்களும் அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று முழங்கினார்கள். பின்பு அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தவுடன் ''இம்முகங்கள் வெற்றியடைந்தன'' என்று கூறினார்கள். அதற்கு அந்தத் தோழர்கள் ''அல்லாஹ்வின் தூதரே! தங்களது முகமும் வெற்றியடைந்தது'' என்று கூறி, அந்த ஷைத்தானின் தலையை நபி (ஸல்) அவர்களுக்கு முன் போட்டார்கள். அல்லாஹ்வின் எதிரி கஅபின் கதை முடிக்கப்பட்டதை நினைத்து நபி (ஸல்) அல்லாஹ்வைப் புகழ்ந்து நன்றி செலுத்தினார்கள். ஹாரிஸின் கால் காயத்தைப் பற்றி அறியவே அதில் தங்களது உமிழ் நீரைத் தடவினார்கள். அவர் முழுமையாக சுகமடைந்தார். அதற்குப் பிறகு அவருக்கு வலி என்பதே இல்லை. (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம்)

தங்களின் தலைவன் கொல்லப்பட்டதை அறிந்த யூதர்களின் உள்ளங்களில் பயம் குடியேறியது. சுமூகமான நடவடிக்கை பலன் தராதபோது பலத்தைப் பயன்படுத்துவதற்கும் நபி (ஸல்) தயங்க மாட்டார்கள் என்று அறிந்தனர். எனவே, தங்களது தலைவர் கொல்லப் பட்டதற்காக கூச்சல், குழப்பம் ஏதுமின்றி அமைதியைக் கடைப்பிடித்தனர். முஸ்லிம்களுக்கு

பணிந்து அவர்களுடன் செய்த ஒப்பந்தங்களை நிறைவேற்றி வாழ்ந்தனர். ஆக, சீறிக்கொண்டிருந்த விஷப் பாம்புகள் பொந்துகளுக்குள் விரைந்து சென்று பதுங்கிக் கொண்டன.

இவ்வாறு சில காலம் உள்ளூர் குழப்பங்களை விட்டு நிம்மதி பெற்றதை அடுத்து மதீனாவுக்கு வெளியிலிருந்து வரும் ஆபத்துகளை எதிர்கொள்ள நபி (ஸல்) தயாரானார்கள்.

கைனுகா இன யூதர்கள் மீது எடுத்த நடவடிக்கைகள், ஸவீக், தீஅம்ர் தாக்குதல்கள் மற்றும் கஅப் இப்னு அஷ்ரஃபின் கதைக்கு முற்றுப்புள்ளி வைத்தல் ஆகியவற்றின் மூலம் முஸ்லிம்கள் நிம்மதி பெருமூச்சு விட்டனர். அவ்வப்போது ஏற்பட்டு வந்த உள்நாட்டு பிரச்சனைகளிலிருந்தும், சிரமங்களிலிருந்தும் விடுதலை அடைந்தனர்.

**'பஹ்ரான்' போர்**

இந்நிகழ்ச்சி ஒரு போர் ஒத்திகையாக இருந்தது. அதாவது, குறைஷிகளை எச்சரிப்பதற்காக ஹிஜ்ரி 3, ரபீவுல் ஆகிர் மாதம் முந்நூறு வீரர்களுடன் மக்காவிற்கு அருகில் உள்ள 'ஃபுர்வு' என்ற இடத்திற்கு பக்கத்தில் இருக்கும் 'பஹ்ரான்' என்ற இடத்திற்கு வந்து "ரபீவுல் ஆகிர், ஜுமாதா அல்ஊலா" ஆகிய இருமாதங்கள் நபி (ஸல்) தங்கினார்கள். ஆனால், அங்கு சண்டை ஏதும் நிகழவில்லை. (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**ஜைதுப்னு ஹாஸாம் படைப் பிரிவு**

பின்னால் வரும் உஹுத் போருக்குமுன் முஸ்லிம்கள் மேற்கொண்ட ராணுவ நடவடிக்கைகளில் இதுவே மிக வெற்றி பெற்றதாக அமைந்தது. இது ஹிஜ்ரி 3 ஜுமாதல் ஆகிராவில் நடைபெற்றது.

இதன் விவரமாவது: குறைஷிகள் பத்ர் போரினால் அளவிலா கவலையிலும் துக்கத்திலும் இருந்தனர். இந்நிலைமையில் அவர்கள் ஷாமுக்குச் செல்லும் வியாபாரப் பயணத்தின் கோடை காலம் நெருங்கியது. இப்பயணத்தை எப்படி பாதுகாப்புடன் மேற்கொள்வது என்ற மற்றொரு கவலையும் அவர்களுக்கு ஏற்பட்டது.

குறைஷிகள் இந்த ஆண்டு ஷாமுக்குச் செல்லும் வியாபாரக் குழுவின் தலைமைத்துவத்திற்கு ஸஃப்வான் இப்னு உமையாவைத் தேர்ந்தெடுத்தனர். முஹம்மதும், அவரது தோழர்களும் நமது வியாபார மார்க்கங்களை மிகுந்த சிரமத்திற்குள்ளாக்கி விட்டனர். அவருடைய தோழர்களை என்ன செய்வதென்றே தெரியவில்லை. அவரது தோழர்கள் எப்போதும் கடற்கரைப் பகுதியை கண்காணித்து வருகிறார்கள். கடற்கரைப் பகுதியில் உள்ளவர்கள் முஹம்மதுடன் உடன்படிக்கை செய்து கொண்டதுடன், அவர்களில் பெரும்பாலானவர்கள் அவருடைய மார்க்கத்தையும் ஏற்று இருக்கின்றனர். எனவே, நாம் எந்த வழியில் செல்வதென்றே புரியவில்லை. வியாபாரத்திற்குச் செல்லாமல் மக்காவிலேயே தங்கிக் கொண்டால் நமது முதலீடும் அழிந்து விடும். நமது வியாபாரம் கோடை காலத்தில் ஷாம் தேசத்தையும் குளிர் காலத்தில் ஹபஷாவையுமே சார்ந்துள்ளது என்று தங்களுக்குள் பேசிக் கொண்டனர்.

இவ்வாறு கருத்துப் பரிமாற்றம் நடந்து கொண்டிருந்த போது அஸ்வத் இப்னு அப்துல் முத்தலிப், "இம்முறை கடற்கரை வழியாக செல்லும் பாதையைத் தவிர்த்து விட்டு இராக் வழியை எடுத்துக்கொள்!" என்று ஸஃப்வானிடம் கூறினார். இப்பாதை மிக நீளமானது மதீனாவின் கிழக்குப் பக்கமாக வெகு தொலைவில் உள்ளது. இப்பாதை நஜ்து மாநிலத்தைக் கடந்து ஷாம் செல்கிறது. குறைஷிகள் இந்தப் பாதையை முற்றிலும் அறியாதவர்களாக இருந்தனர். எனவே, பக்ருப்னு வாயில் கிளையைச் சார்ந்த 'ஃபுராத் இப்னு ஹையா"னை வழிகாட்டியாகவும் பயண அமைப்பாள ராகவும் ஆக்கிக் கொள்ள ஸஃப்வானுக்கு அஸ்வத் இப்னு அப்துல் முத்தலிப் ஆலோசனைக் கூறினார்.

இவ்வாறு, ஸஃப்வான் இப்னு உமையாவுடைய தலைமையில் குறைஷிகளின் வியாபாரக் கூட்டம் மக்காவிலிருந்து புதிய பாதையில் புறப்பட்டது. எனினும், இக்கூட்டத்தின் செய்தியும் அதன் பயணத் திட்டமும் வெகு விரைவில் மதீனாவிற்கு எட்டியது.

அது எப்படியெனில்: ஏற்கனவே மக்காவில் இருந்த 'ஸலீத் இப்னு நுஃமான்' என்ற முஸ்லிம் நுஅய்ம் இப்னு மஸ்வூதுடன் மது அருந்தினார். (இச்சம்பவம் மது ஹராமாக்கப்படுவதற்கு முன் நடந்ததாகும்.) நுஅய்ம் அப்போது முஸ்லிமாக இருக்கவில்லை. நுஅய்முக்கு நன்கு போதை ஏறியவுடன் இந்த வியாபாரக் கூட்டத்தைப் பற்றியும் அது எவ்வழியாக செல்கிறது என்பதையும் தன்னை அறியாமல் போதையில் உளற, உடனே வலீத் சபையிலிருந்து நழுவி மதீனா விரைந்தார். நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து முழு விவரத்தையும் கூறினார்.

நபி (ஸல்) அவர்கள் உடனடியாக நடவடிக்கையில் இறங்கினார்கள். 100 பேர் கொண்ட வாகனப் படையை ஜைது இப்னு ஹாஸாவின் தலைமையின் கீழ் குறைஷிகளைத் தாக்க அனுப்பி வைத்தார்கள். ஜைது (ரழி) தங்களது வீரர்களுடன் விரைந்து சென்று, நஜ்து மாநிலத்தில் 'கர்தா' என்ற இடத்தின் நீர் தேக்கத்திற்கு அருகில் அந்த வியாபாரக் கூட்டம் தங்கியிருந்த போது திடீரென அதன் மீது தாக்குதல் நடத்தி வியாபாரப் பொருட்களை கைப்பற்றினார்கள். ஸஃப்வானும் அக்கூட்டத்தைப் பாதுகாப்பதற்காக வந்திருந்த வீரர்களும் எவ்வித எதிர்ப்பும் காட்டாமல் உயிர் பிழைத்தால் போதும் என்று தப்பித்து ஓடினர்.

முஸ்லிம்கள் இக்கூட்டத்திற்கு வழிகாட்டியாக வந்த ஃபுர்ராத் இப்னு ஹய்யானைக் கைது செய்தனர். சிலர், "இவரையன்றி மேலும் இருவரையும் முஸ்லிம்கள் கைது செய்தனர்" என்றும் கூறுகின்றனர். முஸ்லிம் வீரர்கள் இந்த வியாபாரக் கூட்டத்திடமிருந்த பாத்திரங்கள் மற்றும் வெள்ளிகளை வெற்றிப் பொருளாக எடுத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் திரும்பினார்கள். இவர்கள் கொண்டு வந்த பொருட்களின் மதிப்பு ஒரு லட்சம் திர்ஹம் ஆகும். நபி (ஸல்) ஐந்தில் ஒரு பங்கை ஒதுக்கிவிட்டு மற்ற அனைத்தையும் அதில் கலந்துகொண்ட வீரர்களுக்குப் பங்கு வைத்துக் கொடுத்தார்கள். நபி (ஸல்) அவர்கள் முன்னிலையில் ஃபுராத் இஸ்லாமைத் தழுவினார்.

பத்ர் போரினால் நீங்கா துயரத்தில் சிக்கியிருக்கும் குறைஷிகளுக்கு இச்சம்பவம் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியது. எஞ்சியிருந்த நிம்மதியையும் பறித்தது. தங்களுக்கு ஏற்பட்ட பாதிப்பை நினைத்து மட்டிலா கவலைக்குள்ளாயினர். அவர்களின் உள்ளங்கள் குமுறின.

இப்போது குறைஷிகளுக்கு முன் இரு வழிகள்தான் இருந்தன. ஒன்று, தங்களது அடாவடித் தனத்தை நிறுத்திவிட்டு முஸ்லிம்களுடன் சமாதான உடன்படிக்கை செய்வது. இரண்டாவது மிகப்பெரிய அளவில் போர் தொடுத்து முஸ்லிம்களை வேரறுத்து, தங்களது பழைய மதிப்பையும் மரியாதையையும் தக்கவைத்துக் கொள்வது. இந்த இரு வழிகளில் குறைஷிகள் இரண்டாவது வழியையே விரும்பினர். ஆகவே, முஸ்லிம்களிடம் பழி வாங்க வேண்டும் முழு தயாரிப்புடன் சென்று அவர்களைத் தாக்க வேண்டும் என அவர்கள் பிடிவாதம் பிடித்தனர். இந்த பிடிவாதம் நாளுக்கு நாள் அதிகரிக்கவும் செய்தது. இதுவும் இதற்கு முன் கூறப்பட்ட நிகழ்ச்சிகளும் உஹுத் போர் ஏற்படுவதற்கு வலுவான காரணங்களாக அமைந்தன.

## உஹுத் போர்

### குறைஷிகள் பழிவாங்கத் தயாராகுதல்

பத்ர் போரில் தோல்வியைத் தழுவியது ஒருபுறம் தங்களின் மாபெரும் தலைவர்கள் கொல்லப்பட்டது மறுபுறம் என கோபத்தில் கொதித்துப் போயிருந்த குறைஷிகள் பழிதீர்க்கும் வெறியோடு காத்திருந்தனர். எங்கே நாம் படும் இன்னல்களும் துன்பங்களும் முஸ்லிம்களுக்கு தெரிந்து விடுமோ என்ற அவமானத்தில், கொல்லப்பட்டவர்களுக்காக ஒப்பாரி வைத்து அழுவதோ, அப்போரில் முஸ்லிம்களால் கைது செய்யப்பட்டவர்களை உடனடியாக விடுவிக்க முயற்சிப்பதோ கூடாது என தடையும் விதித்து இருந்தனர்.

கோபம் தணியும் அளவிற்கு, பழிவாங்கும் வெறியின் தாகத்தைத் தீர்த்துகொள்ள, பெரிய அளவில் ஒரு போரை முஸ்லிம்களுக்கு எதிராக நடத்த வேண்டும் என்று குறைஷிகள் அனைவரும் ஆலோசனை செய்து அதற்கான முயற்சியில் இறங்கினர்.

இப்போரைச் சந்திப்பதற்கு மிகுந்த உற்சாகத்துடனும், ஆவேசத்துடனும் இருந்த குறைஷித் தலைவர்களில் இக்மா இப்னு அபூஜஹ்ல், ஸஃப்வான் இப்னு உமைய்யா, அபூ ஸுஃப்யான் இப்னு ஹர்ப், அப்துல்லாஹ் இப்னு அபூரபீஆ ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

இதற்காக அவர்கள் எடுத்த முதல் நடவடிக்கை: அபூ ஸுஃப்யான் பத்திரமாக பாதுகாத்து அழைத்து வந்த வியாபார கூட்டத்தில் இருந்த பொருட்களை அப்படியே வைத்துக் கொண்டனர். இந்த வியாபார கூட்டம்தான் பத்ர் போருக்கான காரணமாக இருந்தது. எனவே, அந்த செல்வங்களுக்குரியவர்களிடம் சென்று “குறைஷிகளே! நிச்சயமாக முஹம்மது உங்களுக்கு அநியாயம் செய்திருக்கிறார். உங்களில் சிறந்தவர்களைக் கொன்றிருக்கிறார். எனவே, அவரிடம் சண்டை செய்வதற்காக எங்களுக்கு இந்தப் பொருட்களை கொடுத்துதவுங்கள். அதன் மூலம் நாம் அவர்களிடத்தில் பழி தீர்த்துக் கொள்ளலாம்'' என்று கூறினர். அதற்கு அதன் உரிமையாளர்களும் இணங்கி அதிலுள்ள பொருட்கள் அனைத்தையும் விற்றனர். அந்த வியாபார பொருட்களில் 1,000 ஒட்டகங்களும், 50,000 தங்க நாணயங்களுக்குரிய பொருட்களும் இருந்தன. இது குறித்து அல்லாஹ் இந்த வசனத்தை அருளினான்:

நிச்சயமாக, நிராகரிப்பவர்கள் தங்கள் பொருட்களை (மக்கள்) அல்லாஹ்வுடைய வழியில் செல்வதைத் தடை செய்ய செலவு செய்கின்றனர். அவர்கள் மேன்மேலும் இவ்வாறே செலவு செய்யும்படி நேர்ந்து, முடிவில் அது அவர்களுக்கே துக்கமாக ஏற்பட்டுவிடும்! பின்னர் அவர்கள் வெற்றி கொள்ளப்படுவார்கள். (இத்தகைய) நிராகரிப்பவர்கள் (மறுமையில்) நரகத்தின் பக்கமே ஓட்டிச் செல்லப்படுவார்கள். (அல்குர்ஆன் 8:36)

இதற்குப் பின் மக்காவைச் சுற்றியுள்ள பலதரப்பட்ட வமிசத்தைச் சேர்ந்த வாலிபர்கள், கினானா மற்றும் திஹாமாவாசிகள் ஆகியோரிடம், ‘முஸ்லிம்களுடன் நடக்க இருக்கும் போரில் கலந்து கொள்ள விரும்புகிறவர்கள் எங்களுடன் இணைந்து கொள்ளலாம்'' என்று அறிவித்தனர். மக்களைப் போருக்குத் தூண்ட மேலும் பல வழிகளைக் கையாண்டனர். ‘அபூ இஸ்ஸா’ என்ற கவிஞனை ஸஃப்வான் இப்னு உமைய்யா இதற்காகத் தயார் செய்தான். இக்கவிஞன் பத்ர் போரில் முஸ்லிம்களால் கைது செய்யப்பட்டவன். நபி (ஸல்) இவனை ஈட்டுத் தொகையின்றி விடுதலை செய்து, இஸ்லாமிற்கெதிரான எந்த நடவடிக்கைகளிலும் ஈடுபடக் கூடாது என்று அவனிடம் வாக்குறுதி வாங்கினார்கள். ஆனால், ஸஃப்வானின் ஆசை வார்த்தைகளுக்கு அபூஇஸ்ஸா வசப்பட்டான். “நீ போரிலிருந்து உயிருடன் திரும்பினால் உனக்கு பெரும் செல்வத்தைக் கொடுப்பேன். இல்லை நீ கொல்லப்பட்டால், உனது பெண் பிள்ளைகளை நான் என் பொறுப்பில் எடுத்துக் கொள்கிறேன் என்று ஸஃப்வான் வாக்குறுதி கொடுத்தான். அபூ இஸ்ஸா உணர்வுகளைத் தட்டி எழுப்பும் தனது கவியால் குறைஷியரை முஸ்லிம்களுக்கு எதிராகத் தூண்டினான்.

இதுபோல் மக்களைப் போருக்கு ஆர்வமூட்ட முஸாஃபிஃ இப்னு அப்து மனாஃப் என்ற மற்றொரு கவிஞனையும் நியமித்தார்கள்.

அபூ ஸுஃப்யானால் சென்றமுறை (ஸவீக் போரில்) தனது மனதிலுள்ள பழிவாங்கும் ஆசையை சரிவர நிறைவேற்ற முடியவில்லை. அத்துடன் பொருட்களில் பெரும்பாலானவற்றையும் அவர் இழந்தார். ஆகவே, முஸ்லிம்கள் மீது மிகுந்த எரிச்சலுடன் இருந்தார்.

ஜைது இப்னு ஹாஸாவுடைய தாக்குதலால் ஏற்பட்ட நஷ்டம் குறைஷிகளது பொருளா தாரத்தின் முதுகெலும்பை உடைத்து அளவிட முடியாத கவலையை அவர்களுக்கு அளித்தது. ஏற்கனவே பத்ரில் தங்கள் தலைவர்களை இழந்து துக்கக் கடலில் மூழ்கியிருந்த இவர்களுக்கு இது எரியும் நெருப்பில் எண்ணெயை ஊற்றியது போல் இருந்தது. எனவே, முஸ்லிம்களுக்கும் தங்களுக்கும் மத்தியில் தீர்வாக அமையும் ஒரு போரைச் சந்திப்பதற்காக குறைஷிகள் முழு வேகத்துடன் செயல்பட்டனர்.

**குறைஷிப் படையும் அதன் தளபதிகளும்**

ஓர் ஆண்டுக்குள் மக்காவாசிகள் தங்களது முழு தயாரிப்பையும் செய்து முடித்தனர். குறைஷிகள், அவர்களின் நட்புடைய ஏனைய குலத்தவர்கள் மற்றும் பல கோத்திரத்தைச் சேர்ந்த வாலிபர்கள் என 3000 கூட்டுப் படையினர் போருக்காக கைகோர்த்தனர். பெண்களும் படை பட்டாளங்களுடன் இணைந்து வந்தால், போர் வீரர்கள் பெண்களின் மானமும் கண்ணியமும் பங்கப்பட்டுவிடாமல் இருப்பதற்காக, ரோஷத்துடன் உயிருக்குத் துணிந்து போரிடுவார்கள் எனக் கருதி படைத்தளபதி தங்களுடன் 15 பெண்களையும் சேர்த்துக் கொண்டார். இப்படையில் 3000 ஒட்டகங்கள், 200 குதிரைகள் மற்றும் 700 கவச ஆடைகள் இருந்தன. (ஜாதுல் மஆது)

இப்படையின் பொது தளபதியாக அபூ ஸுஃப்யான் இப்னு ஹர்ஃப் இருந்தார். குதிரைப் படை வீரர்களுக்கு காலித் இப்னு வலீதும், அவருக்குத் துணையாக இக்மா இப்னு அபூ ஜஹ்லும் பொறுப்பேற்றனர். அப்துத் தார் கிளையினரிடம் போர் கொடி கொடுக்கப்பட்டது.

**மக்காவின் படை புறப்படுகிறது**

இவ்வாறு முழு தயாரிப்புடன் மக்கா படை மதீனாவை நோக்கிப் புறப்பட்டது. பழைய பகைமையும், உள்ளத்தில் இருந்த குரோதமும், இதுவரை கண்ட தோல்வியும் அவர்களது உள்ளங்களில் மேலும் கோப நெருப்பை மூட்டியவாறே இருந்தது. வெகு விரைவில் நடக்க இருக்கும் பெரும் சண்டையை நினைத்து ஆறுதல் அடைந்தவர்களாக பயணத்தைத் தொடர்ந்தனர்.

**முஸ்லிம்கள் எதிரிகளை உளவு பார்த்தல்**

அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிப் (ரழி) குறைஷிகளின் செயல்களையும் அதன் ராணுவத் தயாரிப்புகளையும் கண்காணித்து வந்தார். மக்காவிலிருந்து படை புறப்பட்டுச் சென்றவுடன் அவசர அவசரமாகப் படையின் முழு விவரங்களை ஒரு கடிதத்தில் குறிப்பிட்டு அதை நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தார்.

அப்பாஸின் தூதர் ஏறக்குறைய 500 கிலோ மீட்டர் உள்ள தூரத்தை மூன்றே நாட்களுக்குள் அதிவிரைவில் கடந்து நபி (ஸல்) அவர்களிடம் அக்கடிதத்தை ஒப்படைத்தார். அன்று நபி (ஸல்) அவர்கள் 'குபா' பள்ளிவாசலில் தங்கியிருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்கு அக்கடிதத்தை உபை இப்னு கஅப் (ரழி) படித்துக் காண்பித்தார். நபி (ஸல்) அவர்கள் அவரிடம் அச்செய்தியை வெளியில் கூறாமல் மறைத்து விடுங்கள்

என்று கட்டளையிட்டு மதீனா விரைந்தார்கள். அங்கு அன்சாரி மற்றும் முஹாஜிர் தோழர்களிலுள்ள தளபதிகளுடன் அவசர ஆலோசனை நடத்தினார்கள்.

### அவசர நிலை

மதீனாவில் முஸ்லிம்கள் எந்நேரமும் ஆயுதமேந்தியவர்களாக இருந்தனர். எதிரிகளின் தாக்குதலைச் சமாளிக்க எந்நேரமும் தயாராக இருந்தனர். ஆயுதங்களைத் தொழுகையிலும் தங்களுடன் வைத்திருந்தனர்.

அன்சாரிகளின் ஒரு குழு நபி (ஸல்) அவர்களின் பாதுகாப்புக்காகத் தயாரானார்கள். அவர்களில் ஸஅது இப்னு முஆது, உஸைது இப்னு ஹுழைர், ஸஅது இப்னு உபாதா (ரழி) ஆகியோர் இருந்தனர். இவர்கள் நபி (ஸல்) அவர்களின் வீட்டு வாசலில் ஆயுதம் ஏந்தி காவலில் ஈடுபட்டனர். மேலும், திடீர் தாக்குதலைத் தடுக்க மதீனாவின் நுழைவாயில்கள் மற்றும் சந்து பொந்துகள் அனைத்திலும் சிறுசிறு படைகளாக பாதுகாப்பில் ஈடுபட்டனர்.

தங்கள் மீது தாக்குதல் நடத்த எதிரிகள் எந்தெந்த வழிகளிலெல்லாம் வர இயலுமோ அந்த அனைத்து வழிகளிலும் எதிரிகளின் நடமாட்டங்களை கண்காணிப்பதற்காக ரோந்துப் பணியிலும் முஸ்லிம்கள் ஈடுபட்டனர்.

### எதிரிகள் மதீனா எல்லையில்

மக்கா படை வழக்கமான மேற்குப் பாதையில் தனது பயணத்தைத் தொடர்ந்தது. அப்படை ‘அப்வா’ என்ற இடத்தை அடைந்ததும் அபூஸுஃப்யானின் மனைவி ஹிந்த் பின்த் உத்பா நபி (ஸல்) அவர்களின் தாயாருடையக் கப்ரைத் தோண்டி அவரது உடலை வெளியே எடுக்க வேண்டும் என்று விரும்பினாள். ஆனால், படையின் தளபதிகள் இக்கோரிக்கையை நிராகரித்ததுடன் இவ்வாறு செய்தால் ஆபத்தான முடிவுகள் ஏற்படும் என்றும் எச்சரித்தனர்.

குறைஷிப் படை தனது பயணத்தைத் தொடர்ந்தது. மதீனாவிற்குச் சமீபமாக உள்ள ‘அல்அகீக்’ என்ற பள்ளத்தாக்கைக் கடந்து, அங்கிருந்து வலப்புறமாகச் சென்று, உஹுத் மலைக்கருகில் உள்ள ‘அய்னைன்’ என்ற இடத்தில் தங்கியது. இந்த இடம் உஹுத் மலைக்கருகில் மதீனாவின் வடப் பகுதியில் இருக்கும் பள்ளத்தாக்கின் மேற்புறத்தில் உள்ள ‘பத்னு ஸப்கா’ என்ற பகுதியில் உள்ளது. ஆக, மக்காவின் படை இவ்விடத்தில் ஹிஜ்ரி 3, ஷவ்வால் மாதம் பிறை 6, வெள்ளிக்கிழமை அன்று வந்திறங்கி தங்களது ராணுவ முகாம்களை அமைத்துக் கொண்டது.

### தற்காப்புத் திட்டத்தை ஆலோசித்தல்

இஸ்லாமியப் படையின் ஒற்றர்கள், குறைஷி ராணுவத்தினரின் நிலைகளை அவ்வப்போது நபியவர்களுக்கு அனுப்பியவாறு இருந்தனர். இறுதியாக, எதிரிகள் எங்கு முகாம் அமைத்துள்ளனர் என்பது வரையுள்ள செய்திகள் ஒவ்வொன்றையும் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வந்து சேர்த்தனர். அப்போது மேல்மட்ட ராணுவ ஆலோசனை சபையை நபி (ஸல்) அவர்கள் ஒன்று கூட்டி, என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்பதற்கான ஆலோசனைகளைப் பரிமாறிக் கொண்டதுடன், தான் கண்ட ஒரு கனவையும் அவர்களுக்குக் கூறினார்கள்: “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் நல்ல கனவு ஒன்றைக் கண்டேன். சில மாடுகள் அறுக்கப்படுகின்றன. எனது வாளின் நுனியில் ஓர் ஓட்டை ஏற்படுவதைப் பார்த்தேன். உறுதிமிக்க பாதுகாப்புடைய கவச ஆடையில் எனது கையை நான் நுழைத்துக் கொள்வதாகவும் பார்த்தேன்” என்று கூறி, “மாடுகள் அறுக்கப்படுவதின் பொருள் தங்களது தோழர்களில் சிலர் கொல்லப்படுவார்கள். வாளில் ஏற்பட்ட ஓட்டையின் கருத்து தனது குடும்பத்தில் ஒருவர் கொல்லப்படுவார். உருக்குச் சட்டை என்பது மதீனாவாகும்” என்று விளக்கம் கூறினார்கள்.

பின்பு நபி (ஸல்) அவர்கள் தங்களது அபிப்ராயத்தைத் தோழர்களிடத்தில் கூறினார்கள். அதாவது: ‘‘மதீனாவை விட்டு நாம் வெளியேறாமல், மதீனாவுக்குள் இருந்து கொண்டே நம்மை பாதுகாத்துக் கொள்வோம். குறைஷிகள் தங்களின் ராணுவ முகாம்களிலேயே தங்கியிருந்தால் எவ்விதப் பலனையும் அடையமாட்டார்கள். அவர்கள் தங்குவது அவர்களுக்கே தீங்காக அமையும். அவர்கள் மதீனாவுக்குள் நுழைய முயன்றால் முஸ்லிம்கள் தெரு முனைகளிலிருந்து அவர்களை எதிர்க்க வேண்டும். பெண்கள் வீட்டுக்கு மேலிருந்து தாக்க வேண்டும்.’’

நபி (ஸல்) அவர்கள் கூறிய இது உண்மையில் சரியான அபிப்ராயமாகவும் இருந்தது.

நயவஞ்சகர்களின் தலைவனான இப்னு உபை நபி (ஸல்) அவர்களின் இக்கருத்தையே ஆமோதித்தான். அவன் கஸ்ரஜ் வமிசத்தவர்களின் முக்கிய பிரமுகர்களில் ஒருவன் என்ற அடிப்படையில் இச்சபையில் கலந்திருந்தான். ராணுவ ரீதியாக நபி (ஸல்) அவர்களின் கருத்துதான் மிகச் சரியானது என்பதற்காக இப்னு உபை இக்கருத்துடன் ஒத்துப் போகவில்லை. மாறாக, அப்போதுதான் எவருக்கும் தெரியாமல் போரிலிருந்து நழுவிவிட இயலும் என்பதற்காகவே இந்த ஆலோசனையை அவன் ஆமோதித்தான்.

முஸ்லிம்கள் முன்னிலையில் முதல் முறையாக அவனும், அவனது தோழர்களும் இழிவடைய வேண்டும் அவர்களது நிராகரிப்பையும், நயவஞ்சகத்தனத்தையும் மறைத்திருந்த திரை அவர்களை விட்டு அகன்றிட வேண்டும் இது நாள் வரை தங்களது சட்டை பைக்குள் ஊடுருவி இருந்த விஷப் பாம்புகளை முஸ்லிம்கள் தங்களுக்கு சிரமமான இந்நேரத்தில் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அல்லாஹ் முடிவை மாற்றி அமைத்தான்.

பத்ரில் கலக்காத நபித்தோழர்களிலும் மற்ற நபித்தோழர்களிலும் சிறப்புமிக்க ஒரு குழுவினர் ‘மதீனாவை விட்டு வெளியேறி போர் புரிவதற்கு’ நபி (ஸல்) அவர்களிடம் ஆலோசனைக் கூறி, அதை வலியுறுத்தவும் செய்தனர். அவர்களில் சிலர் இப்படியும் கூறினர்: ‘‘அல்லாஹ்வின் தூதரே! இந்நாளுக்காக அல்லாஹ்விடம் நாங்கள் பிரார்த்தனை செய்து வந்ததுடன், இப்படி ஒரு நாளை சந்திக்க மிகுந்த ஆவல் கொண்டிருந்தோம். அல்லாஹ் அந்நாளை எங்களுக்கு அருளி இருக்கிறான். புறப்படுவதற்கான நேரம் நெருங்கிவிட்டது. எதிரியை நோக்கிப் புறப்படுங்கள். நாம் அவர்களைப் பார்த்து பயந்து கோழையாகி விட்டதால்தான் மதீனாவை விட்டு வெளியேறவில்லை என்று அவர்கள் எண்ணிவிடக் கூடாது!’’

இவ்வாறு வீரமாக பேசிய நபித்தோழர்களில் நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தை ஹம்ஜா இப்னு அப்துல் முத்தலிபும் ஒருவர். இவர் பத்ர் போரில் கலந்துகொண்டு போற்றத்தக்க அளவில் பங்காற்றினார். இவர் நபி (ஸல்) அவர்களிடம் ‘‘உங்கள் மீது வேதத்தை இறக்கிய அல்லாஹ்வின் மீது சத்தியமாக! மதீனாவுக்கு வெளியில் அந்த எதிரிகளை எனது வாளால் வெட்டி வீழ்த்தாத வரை எந்த உணவும் சாப்பிட மாட்டேன்’’ என்று சத்தியம் செய்தார். (ஸீரத்துல் ஹல்பிய்யா)

உணர்ச்சிமிக்க இந்த வீரர்களுக்காக நபி (ஸல்) அவர்கள் தங்களது எண்ணத்தை விட்டுக் கொடுத்தார்கள். மதீனாவை விட்டு வெளியேறி எதிரிகளைத் திறந்த மைதானத்தில் சந்திக்கலாம் என்ற முடிவு உறுதியானது.

படையை திரட்டுதல் - போர்க்களம் புறப்படுதல்

அன்று வெள்ளிக்கிழமை. ஜுமுஆ தொழுகையில் நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களுக்கு நல்லுபதேசம் செய்து உறுதியாகவும் நிலையாகவும் இருக்கும்படி கட்டளையிட்டார்கள். உங்களது பொறுமைக்கு அல்லாஹ்வின் நல்லுதவி நிச்சயம் கிடைக்கும் என்று அறிவித்தார்கள். எதிரியைச் சந்திக்க தயாராகும்படி முஸ்லிம்களைப் பணித்தார்கள். நபி (ஸல்) அவர்களின் உரையைக் கேட்டு முஸ்லிம்கள் மிகவும் மகிழ்ந்தனர். அன்று நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்ளுக்கு அஸர் தொழுகையையும் தொழ வைத்தார்கள். மதீனாவில் உள்ளவர்களும் மதீனாவின் மேட்டுப் பகுதியில் உள்ளவர்களும் பெருமளவில் குழுமியிருந்தனர். தொழ வைத்ததற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் தங்கள் இல்லத்திற்குச் சென்றார்கள். அவர்களுடன் அபூபக்ர், உமர் (ரழி) ஆகியோர் சென்று நபி (ஸல்) அவர்களுக்குத் தலைப்பாகை அணிவித்து மற்ற ஆடைகளையும் அணிவித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் முழுமையான ஆயுதங்களுடனும் இரண்டு கவச ஆடைகளுடனும் வாளைக் கழுத்தில் தொங்கவிட்டவர்களாக முஸ்லிம்களுக்கு முன் தோன்றினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் வருகையை எதிர்பார்த்திருந்த மக்களிடம் ஸஅது இப்னு முஆத் (ரழி) அவர்களும், உஸைத் இப்னு ஹுழைர் (ரழி) அவர்களும் “மதீனாவிலிருந்து வெளியேறிதான் போர் செய்ய வேண்டும் என்று நபி (ஸல்) அவர்களை நீங்கள் நிர்பந்தித்து விட்டீர்கள். எனவே, உங்களது அபிப்ராயத்தை விட்டுவிட்டு அதிகாரத்தை நபி (ஸல்) அவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள்” என்று கூறினார்கள். இதனால் அந்த மக்கள் தங்களின் செயல்களுக்காக வருந்தினர். பின்பு நபி (ஸல்) அவர்களிடம் “அல்லாஹ்வின் தூதரே! உங்களுக்கு மாறு செய்வது எங்களுக்கு உசிதமல்ல. நீங்கள் விரும்பியதையே, அதாவது மதீனாவில் தங்குவதுதான் உங்களுக்கு விருப்பமானது என்றால் அதையே நீங்கள் செய்யுங்கள்” என்று மக்கள் கூறினார்கள். ஆனால் நபி (ஸல்), “ஓர் இறைத்தூதர் தனது கவச ஆடையை அணிந்தால், அதன் பிறகு அல்லாஹ் அவருக்கும் அவருடைய எதிரிகளுக்கும் மத்தியில் தீர்ப்பளிக்கும் வரை அதைக் கழற்றுவது அவருக்கு ஆகுமானதல்ல” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, முஸ்னது அஹ்மது, ஸுனன் நஸாம்)

நபி (ஸல்) தனது படையை மூன்று பிரிவாக அமைத்தார்கள்:

1) முஹாஜிர்களின் பிரிவு: இப்பிரிவுக்குரிய கொடியை முஸ்அப் இப்னு உமைர் அல் அப்தரீயிடம் கொடுத்தார்கள். (முஹாஜிர்கள் - மக்காவிலிருந்து மதீனாவில் குடியேறிய முஸ்லிம்கள்)

2) அன்சாரிகளில் அவ்ஸ் கூட்டத்தினரின் பிரிவு: இப்பிரிவுக்குரிய கொடியை உஸைத் இப்னு ஹுளைடம் கொடுத்தார்கள். (அன்ஸாரிகள் - இஸ்லாமை ஏற்ற மதீனாவாசிகள்.)

3) அன்சாரிகளில் கஸ்ரஜ் கூட்டத்தினரின் பிரிவு: இப்பிரிவுக்குரிய கொடியை ஹுபாப் இப்னு முன்திடம் கொடுத்தார்கள்.

படையில் 1,000 வீரர்கள் இருந்தார்கள். அவர்களில் 100 நபர்கள் கவச ஆடை அணிந்திருந்தனர். அவர்களில் குதிரை வீரர் எவரும் இருக்கவில்லை. (ஃபத்ஹுல் பாரி)

நபி (ஸல்) அவர்கள் மதீனாவில் தொழுகை நடத்துவதற்கு அப்துல்லாஹ் இப்னு உம்மு மக்தூம் (ரழி) அவர்களை நியமித்தார்கள். பின்பு நபி (ஸல்) அவர்களின் ஆணைக்கிணங்க இஸ்லாமியப் படை மதீனாவின் வடக்கு நோக்கிப் புறப்பட்டது. ஸஅது இப்னு உபாதா, ஸஅது இப்னு முஆத் ஆகியோர் கவச ஆடை அணிந்து, நபி (ஸல்) அவர்களுக்கு முன் நடந்து சென்றார்கள்.

நபி (ஸல்) அவர்களின் ராணுவம் ‘ஸன்யத்துல் வதா’ என்ற இடத்தைக் கடந்தபோது, தனது படையிலிருந்து சற்று விலகி வந்து கொண்டிருக்கும் நன்கு ஆயுதம் தத்த ஒரு படையை நபியவர்கள் பார்த்தார்கள். நபியவர்கள் “நம்முடன் வரும் இந்தப் படை யாருடையது?” என்று வினவினார்கள். அதற்கு கஸ்ரஜ் இனத்தவர்களின் நண்பர்களான யூதர்கள் “இணைவைப்பவர்களுக்கு எதிரான போரில் கலந்துகொள்ள ஆர்வத்துடன் நம்முடன் வந்துள்ளார்கள்” என்று கூறப்பட்டது. “அவர்கள் இஸ்லாமைத் தழுவியிருக்கிறார்களா?” என்று நபி (ஸல்) கேட்க, தோழர்கள் “இல்லை” என்றனர். ஆனால், இணைவைப்போருக்கு எதிரான போரில் நிராகரிப்போரை தங்களின் உதவிக்கு அழைத்துச் செல்ல நபி (ஸல்) மறுத்துவிட்டார்கள்.

### படையைப் பார்வையிடுதல்

“ஷைகான்” என்ற இடத்தை அடைந்தவுடன் நபி (ஸல்) தனது படையை நிறுத்தி பார்வையிட்டார்கள். அதில் வயது குறைந்தவர்களாகவும் போர் செய்வதற்கு வலிமையற்றவர் களாகவும் இருந்தவர்களை மதீனாவிற்குத் திருப்பி அனுப்பினார்கள். அவ்வாறு திருப்பி அனுப்பப்பட்டவர்களில் அப்துல்லாஹ் இப்னு உமர், உஸாமா இப்னு ஜைது, உஸைது இப்னு ளுஹைர், ஜைது இப்னு ஸாபித், ஜைது இப்னு அர்கம், அராபா இப்னு அவ்ஸ், அம்ர் இப்னு ஹஸ்ம், அபூ ஸயீத் அல்குத், ஜைது இப்னு ஹாஸா அல்அன்சாரி, ஸஅத் இப்னு ஹப்பா ஆவர். மேலும், இவர்களில் பரா இப்னு ஆஜிபும் இருந்தார் என்று சிலர் கூறுகின்றனர். ஆனால், ஸஹீஹ் புகாரியில் வரும் இவர்களின் ஹதீஸை நாம் கவனிக்கும் போது இவர் போரில் கலந்தார் என தெரியவருகிறது.

ராஃபி இப்னு கதீஜ், ஸமுரா இப்னு ஜுன்துப் (ரழி) ஆகிய இருவரின் வயது குறைவாக இருந்தும் நபி (ஸல்) அவர்கள் அவ்விருவரையும் போரில் கலந்து கொள்ள அனுமதித்தார்கள். அதற்குக் காரணம் ராஃபி இப்னு கதீஜ் (ரழி) அம்பெறிவதில் மிகத் தேர்ச்சி பெற்றவராக இருந்தார். அதனால் அவரைப் போரில் கலந்து கொள்ள அனுமதித்தார்கள். அப்போது ஸமுரா (ரழி) “ராஃபியை விட நான் பலமிக்கவன். நான் அவரைச் சண்டையிட்டு வீழ்த்துமளவுக்கு ஆற்றலுள்ளவன்” என்றார். நபியவர்கள் அவ்விருவரையும் தனக்கெதிரில் மல்யுத்தம் செய்யப் பணித்தார்கள். அவ்விருவரும் சண்டையிட்ட போது ஸமுரா, ராஃபியை வீழ்த்தினார். இதனால் நபியவர்கள் சமுராவும் போரில் கலந்து கொள்ள அனுமதித்தார்கள்.

### உஹுதுக்கும் மதீனாவுக்குமிடையில்

மாலை நேரமாகவே நபி (ஸல்) அவர்கள் ஷைகானில் மஃரிப் தொழுதார்கள். பின்பு இஷாவும் தொழுது அங்கேயே இரவை கழித்திட ஏற்பாடு செய்தார்கள். தனது ராணுவத்தைப் பாதுகாப்பதற்காக ராணுவ முகாமைச் சுற்றிலும் ஐம்பது வீரர்களை நியமித்தார்கள். அவர்களுக்குத் தலைவராக கஅப் இப்னு அஷ்ரஃபைக் கொலைச் செய்ய சென்ற குழுவுக்கு தளபதியாக இருந்த முஹம்மது இப்னு மஸ்லமாவை நியமித்தார்கள். தக்வான் இப்னு அப்து கைஸ் (ரழி) நபி (ஸல்) அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பில் இருந்தார்கள்.

### முரண்டுபிடிக்கிறான் இப்னு உபை

ஃபஜ்ர் (அதிகாலை) தொழுகையின் நேரம் வருவதற்கு முன்பே அங்கிருந்து தனது படையை அழைத்துக் கொண்டு புறப்பட்டார்கள். ‘அஷ்ஷவ்த்’ என்ற இடத்தை அடைந்து அங்கு ஃபஜ்ர் தொழுகை நடத்தினார்கள். ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்ளும் அளவு எதிரிகளுக்கு நெருக்கமாக இஸ்லாமியப் படை இருந்தது. அந்நேரத்தில் நயவஞ்சகனான இப்னு உபை படையில் மூன்றில் ஒரு பகுதியினரான 300 வீரர்களை அழைத்துக் கொண்டு போர் செய்யாமல் திரும்ப முரண்டு பிடித்தான். “நாங்கள் எதற்காக எங்கள் உயிர்களை

மாய்த்துக் கொள்வோம்? நபியவர்களோ தனது கருத்தை விட்டுவிட்டு மற்றவன் கருத்தை ஏற்று இங்கு வந்திருக்கிறார்'' என்று காரணம் கூறி தனது வீரர்களுடன் படையிலிருந்து திரும்பினான்.

நபி (ஸல்) அவர்கள் தனது கருத்தை விட்டுவிட்டு பிறர் கருத்தை ஏற்றுக் கொண்டார்கள் என்பது இவன் விலகிச் சென்றதற்கான உண்மை காரணமல்ல. ஏனெனில், அவனது நோக்கம் இதுவாகவே இருந்திருந்தால் இந்த இடம் வரை நபியவர்களின் படையுடன் அவன் வந்திருக்க மாட்டான். இதையே காரணமாகக் கூறி முஸ்லிம்களுடன் புறப்படாமல் மதீனாவிலேயே தங்கியிருப்பான்.

மாறாக, இந்தச் சங்கடமான நேரத்தில் அவன் இவ்வாறு செய்ததற்கான முக்கிய நோக்கமாவது: எதிரிகள் பார்க்குமளவுக்கு அருகில் வந்துவிட்ட முஸ்லிம் படைகளுக்கு மத்தியில் குழப்பத்தையும் சலசலப்பையும் ஏற்படுத்த வேண்டும் அதனால் நபி (ஸல்) அவர்களை விட்டு மற்ற பல முஸ்லிம்களும் விலகிக் கொள்வார்கள் நபியவர்களுடன் மீதம் இருப்பவர்களின் வீரம் குறைந்து விடும் அப்போது எதிரிகள் இக்காட்சியைப் பார்த்து துணிவு கொண்டு நபியவர்களின் மீது தாக்குதல் தொடுத்து, வெகு விரைவில் நபியவர்களையும் அவர்களது உற்ற உண்மை தோழர்களையும் அழித்து விடுவார்கள் இதற்குப் பின்பு தலைமைத்துவம் அவனுக்கும் அவனது நண்பர்களுக்கும் திரும்ப கிடைத்து விடும் என்பதே அந்த நயவஞ்சகனின் நோக்கமாக இருந்தது.

உண்மையில் அந்த நயவஞ்சகன் தனது இலட்சியத்தை நிறைவேற்றுவதில் வெற்றி கண்டான். இந்நிலையில் அவ்ஸ் குலத்தவல் 'ஹாஸா' என்ற குடும்பத்தினரும் கஸ்ரஜ் கூட்டத்தினல் 'ஸலமா' என்ற குடும்பத்தினரும் கோழைகளாகி போரிலிருந்து திரும்பிடலாம் என்று உறுதியாக எண்ணினர். ஆனால், அல்லாஹ் அவ்விரு குடும்பத்தினரையும் பாதுகாத்து அவர்களுக்கு மத்தியில் ஏற்பட்ட சலசலப்பை அகற்றி அவர்களின் உள்ளங்களில் துணிவையும் வீரத்தையும் ஏற்படுத்தினான். இதை அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகிறான்:

(அந்த போரில்) உங்களில் இரு பிரிவினர் தைரியமிழந்து (ம்உஹுத்' போர்க் களத்தை விட்டுச் சென்று) விட(லாமா என்று) இருந்த சமயத்தை நினைத்துப் பாருங்கள்! (ஆனால், அல்லாஹ் அவர்களை அதிலிருந்து காத்துக் கொண்டான். ஏனெனில்,) அல்லாஹ்வே அவர்களுக்கு பாதுகாவலனாக இருக்கின்றான். (ஆகவே!) நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வின் மீதே நம்பிக்கை வைப்பார்களாக! (அல்குர்ஆன் 3:122)

போரைப் புறக்கணித்து, புறமுதுகிட்டு போகும் நயவஞ்சகர்களை அப்துல்லாஹ் இப்னு ஹராம் (ரழி) பின்தொடர்ந்து சென்று அவர்களிடம் ''இந்த இக்கட்டான சூழலில் உங்களின் கடமை என்ன? அதனை உணராமல் போகின்றீர்களே! வாருங்கள் போர்முனைக்கு! இறைவழியில் போரிடுங்கள்! அல்லது எதிரிகளிடமிருந்து எங்களைக் காக்கும் அரணாக நில்லுங்கள்'' என்று எவ்வளவோ எடுத்துக் கூறி புரிய வைக்க முயன்றார். ஆனால், அவர்கள் ''உண்மையில் நீங்கள் போருக்குத்தான் வந்திருக்கிறீர்கள் என்று எங்களுக்கு உறுதியாக தெரிந்திருந்தால் நாங்கள் உங்களை விட்டு திரும்பியிருக்க மாட்டோம்'' (அதாவது நீங்கள் போருக்கு வரவில்லை. மாறாக, தங்களைத் தாங்களே அழித்துக்கொள்ள வந்திருக்கிறீர்கள்) என்று கூறினர். இதைக் கேட்ட அப்துல்லாஹ் இப்னு ஹராம் (ரழி), ''அல்லாஹ்வின் எதிரிகளே! அல்லாஹ் உங்களை அவனது கருணையிலிருந்து தூரமாக்கட்டும்! உங்களை விட்டும் அல்லாஹ் தனது நபியை முற்றிலும் தேவையற்றவராக ஆக்கி விடுவான்'' என்று கூறி அவர்களை விட்டு திரும்பிவிட்டார்கள்.

இந்த நயவஞ்சகர்கள் குறித்துதான் அல்லாஹ் கூறுகிறான்:

(நம்பிக்கையாளர்களே! அந்நயவஞ்சகர்களை நோக்கி நம்முடன் சேர்ந்து) அல்லாஹ்வின் பாதையில் போர் புரிய வாருங்கள் அல்லது அ(ந்த நிராகரிப்ப) வர்களை (எங்களை விட்டும்) தடுத்துக் கொள்ளுங்கள் என்று கூறப்பட்டதற்கு "(இதனை) நாங்கள் போர் என்று கருதியிருந்தால் நிச்சயமாக உங்களைத் தொடர்ந்(தே வந்)திருப்போம்" என்று அவர்கள் கூறினார்கள். அன்றைய தினம் அவர்கள் நம்பிக்கையை விட நிராகரிப்புக்கே மிகவும் நெருங்கியிருந்தார்கள். தங்கள் மனதில் இல்லாதவற்றையே அவர்கள் தங்கள் வாயால் கூறினார்கள். அவர்கள் (தங்கள் மனதில்) மறைத்துக் கொண்டிருப்பதை அல்லாஹ் நன்கறிவான். (அல்குர்ஆன் 3:167)

**மீதமுள்ள இஸ்லாமியப் படை உஹுதை நோக்கி...**

அப்துல்லாஹ் இப்னு உபை இஸ்லாமியப் படையிலிருந்து அத்துமீறி விலகிச் சென்றபின், மீதமுள்ள 700 வீரர்களை அழைத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்கள் எதிரியை நோக்கிப் புறப்பட்டார்கள். எதிரிகளின் படை நபியவர்கள் சென்றடைய வேண்டிய உஹுதுக்கு மத்தியில் தடையாக இருந்தது. எனவே, நபியவர்கள் "எதிரிகளுக்கு அருகில் செல்லாமல் வேறு சுருக்கமான வழியில் யார் நம்மை உஹுத் வரையிலும் அழைத்துச் செல்வார்கள்?" என்று கேட்டார்கள்.

அப்போது அபூ கைஸமா (ரழி) "அல்லாஹ்வின் தூதரே! நான் இருக்கிறேன்" என்று கூறி, ஹாஸா கிளையினருக்கு சொந்தமான விவசாய நிலங்கள் வழியாகவும் அவர்களின் களத்து மேடுகளின் வழியாகவும் அழைத்துச் சென்றார். இப்போது எதிரிகளின் படை மேற்குத் திசையில் இருந்தது.

வழியில் மிர்பா இப்னு கைழிக்கு சொந்தமான தோட்டத்தின் வழியாக முஸ்லிம்களின் படை செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது. இவன் குருடனாகவும் நயவஞ்சகனாகவும் இருந்தான். முஸ்லிம்களின் படை தனது தோட்டத்தைக் கடந்து செல்கிறார்கள் என்று தெரிந்தவுடன் மண்ணை வாரி முஸ்லிம்களின் முகத்தில் எறிந்தான். மேலும், "நீ அல்லாஹ்வின் தூதராக இருந்தால் எனது தோட்டத்தில் நுழைய உனக்கு அனுமதியளிக்க மாட்டேன்" என்று கத்தினான். இதனால் கோபமடைந்த முஸ்லிம்கள் அவனைக் கொல்ல விரைந்தனர். நபி (ஸல்) அவர்களை அதிலிருந்து தடுத்து, "இவன் குருடன் இவனது உள்ளமும் குருடு இவனது பார்வையும் குருடு" என்று கூறினார்கள்.

நபி (ஸல்) இறுதியாக 'உத்வத்துல் வாதி"யில் உஹுத் மலைக்கு அருகிலுள்ள கணவாயில் தனது படையுடன் இறங்கினார்கள். பிறகு மதீனாவை முன்னோக்கியவாறு தங்களது கூடாரங்களை அமைத்தார்கள். படையின் பிற்பகுதி உஹுத் மலையை நோக்கி இருந்தது. இந்த அமைப்பின்படி முஸ்லிம்களின் படைக்கும் மதீனா நகரத்துக்கும் மத்தியில் எதிரிகளின் படை தங்கியிருந்தது.

**தற்காப்புத் திட்டம்**

நபி (ஸல்) தங்களது படையைக் கட்டமைத்தார்கள். பல அணிகளாக அவர்களை நியமித்த பின்பு திறமையாக அம்பெய்வதில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்த 50 வீரர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குத் தலைவராக பத்ர் போரில் கலந்து கொண்ட அவ்ஸ் கிளையைச் சேர்ந்த அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் இப்னு நுஃமான் அல் அன்ஸாயை (ரழி) நியமித்தார்கள். பின்பு அவர்களை 'கனாத்' என்ற பள்ளத்தாக்கின் வடக்குப் பக்கம் அமைந்துள்ள மலையில் நிலையாக தங்கி, முஸ்லிம்களை பாதுகாக்க வேண்டுமென்று பணித்தார்கள். இம்மலை முஸ்லிம்களின் ராணுவ முகாம்களிலிருந்து தென் கிழக்கில் சுமார் 150 மீட்டர் தொலைவில் இருந்தது.

நபி (ஸல்) இந்த அம்பு எறியும் வீரர்களுக்குக் கூறிய அறிவுரைகளிலிருந்து இப்படையினரை அங்கு நியமித்ததின் காரணத்தைத் தெரிந்து கொள்ளலாம். நபியவர்கள் தளபதிக்குக் கூறிய உபதேசம் வருமாறு: “எதிரிகளின் குதிரைப் படை எங்களை நெருங்கவிடாமல் அம்பெய்து அவர்களை நீர் தடுக்க வேண்டும். எதிரிகள் எங்களுக்குப் பின்புறத்திலிருந்து வந்துவிடக் கூடாது. போர் நமக்கு சாதகமாக அல்லது பாதகமாக அமைந்தாலும் நீர் உனது இடத்தில் நிலையாக இருக்க வேண்டும். உமது வழியாக எதிரிகள் எங்களை தாக்கிவிடக் கூடாது.” (இப்னு ஹிஷாம்)

இவ்வாறு தளபதிக்கு உபதேசம் செய்த பிறகு, மற்ற வீரர்களுக்கு நபி (ஸல்) பின்வருமாறு அறிவுரை கூறினார்கள்: “நீங்கள் எங்களின் முதுகுப் பக்கங்களை (பிற்பகுதியை) பாதுகாத்து கொள்ளுங்கள், நாங்கள் போரில் கொல்லப்படுவதைப் பார்த்தாலும் நீங்கள் எங்களுக்கு உதவ வராதீர்கள் நாங்கள் வெற்றி பெற்று பொருட்களைச் சேகரிப்பதைப் பார்த்தாலும் அதிலும் நீங்கள் எங்களுடன் இணைந்து விடாதீர்கள்.” (முஸ்னது அஹ்மது, முஃஜமுத் தப்ரானி)

இதே அறிவுரை ஸஹீஹுல் புகாரியில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது: “எங்களைப் பறவைகள் கொத்தித் தின்பதைப் நீங்கள் பார்த்தாலும், நான் உங்களுக்கு கூறியனுப்பும் வரை உங்களது இடத்தை விட்டு நீங்கள் அகன்றிட வேண்டாம். நாங்கள் எதிரிகளைத் தோற்கடித்து அவர்களின் சடலங்களை மிதித்து செல்வதைப் பார்த்தாலும் நான் கூறியனுப்பும் வரை நீங்கள் அகன்றிட வேண்டாம்.”

நபியவர்கள் இவ்வாறு கடுமையான ராணுவச் சட்டங்களைக் கூறி இந்த சிறிய குழுவை மலையில் நிறுத்தியதின் மூலம், முஸ்லிம்களின் பின்புறமாக எதிரிகள் ஊடுருவி அவர்களைச் சுற்றி வளைத்து தாக்குதல் நடத்த வாய்ப்புள்ள ஒரு முக்கிய வழியை அடைத்து விட்டார்கள்.

படையின் வலப்பக்கத்தில் முன்திர் இப்னு அம்ர் (ரழி) அவர்களையும், இடப்பக்கத்தில் ஜுபைர் இப்னு அவ்வாம் (ரழி) அவர்களையும், ஜுபைருக்கு உதவியாக மிக்தாத் இப்னு அஸ்வத் (ரழி) அவர்களையும் நியமித்தார்கள். காலித் இப்னு வலீதின் தலைமையிலுள்ள எதிரிகளின் குதிரைப் படைகளை எதிர்க்கும் பொறுப்பை இடப்பக்கத்தில் நிறுத்தியிருந்த ஜுபைர் இப்னு அவ்வாம் (ரழி) அவர்களிடம் கொடுத்தார்கள். மேலும், முஸ்லிம்களுடைய அணிகளின் முன் பகுதியில் வீரத்திலும் துணிவிலும் பிரபல்யமான, மேலும் ஒருவரே ஆயிரம் நபருக்கு சமமானவர் என்று புகழ்பெற்ற சிறந்த வீரர்களின் ஒரு குழுவை தேர்வு செய்து நிறுத்தினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் இத்திட்டமும் ராணுவ அமைப்பும் மிக்க நுட்பமானதாகவும் ஞானமிக்கதாகவும் இருந்தது. இதன் மூலம் நபியவர்களின் போர் நிபுணத்துவத்தின் தனிச்சிறப்பு தெளிவாகிறது. மேலும், ஒரு தளபதி அவர் எவ்வளவுதான் திறமைசாலியாக இருந்தாலும் நபியவர்கள் வகுத்த இத்திட்டத்தை விட சிறந்ததை நுணுக்கமானதை அவரால் ஏற்படுத்திட இயலாது. எதிரிகளின் போர்க்களம் வந்த பின்புதான் நபியவர்கள் தனது படையுடன் வந்தார்கள். இருப்பினும், மிகச் சிறந்த இடத்தை அங்கு தேர்வு செய்தார்கள். படையின் பின் பக்கத்தையும் வலப்பக்கத்தையும் உயரமான மலைகளைக் கொண்டு பாதுகாத்துக் கொண்டார்கள். போர் கடுமையாக மூழும்போது இஸ்லாமியப் படையை எதிரிகள் வந்து தாக்குவதற்குக் காரணமாக இருக்கும் ஒரே வழியையும் அடைத்து விட்டதால் படையின் பின்பக்கத்தையும் இடப்பக்கத்தையும் நபியவர்கள் பாதுகாத்தார்கள். முஸ்லிம்களுக்கு தோல்வி ஏற்பட்டால் பின்வாங்கும் போது விரட்டி வரும் எதிரிகளின் கைகளில் சிக்காமல் இருப்பதற்காக தங்களது படைக்கு உயரமான இடத்தை நபியவர்கள் தேர்வு செய்தார்கள்.

மேலும், எதிரிகள் தங்களை நோக்கி முன்னேறி தங்களையும் தங்களது ராணுவ முகாம்களையும் கைப்பற்றிட நினைக்கும் போது அவர்களுக்கு பெரும் சேதத்தை ஏற்படுத்த இது வசதியாக இருக்கும். எதிரிகளை மைதானத்தின் மிகத் தாழ்ந்த பகுதியில் நபியவர்கள் ஒதுக்கி விட்டதில் மிகப் பெரிய நன்மை இருந்தது. அதாவது, ஒருக்கால் எதிரிகளுக்கு வெற்றி ஏற்பட்டால் எதிரிகள் வெற்றியின் பலனை முழுமையாக அடைந்துகொள்ள முடியாது. வெற்றி முஸ்லிம்களுக்கு ஏற்பட்டால் முஸ்லிம்கள் எதிரிகளை விரட்டிப் பிடிக்கும் போது முஸ்லிம்களின் கையிலிருந்து அவர்களால் தப்பித்துக் கொள்ளவும் முடியாது. இஸ்லாமியப் படையின் எண்ணிக்கை குறைவாக இருந்ததால் தங்களது தோழர்களில் வீரத்தால் புகழ் பெற்றவர்களை தேர்வு செய்து படையின் முன் நிறுத்தி அந்தக் குறையை நிறைவு செய்தார்கள்.

ஆக, ஹிஜ்ரி 3 ஷவ்வால் மாதம், பிறை 7 சனிக்கிழமை காலையில் நபி (ஸல்) அவர்கள் தங்களது படையை இவ்வாறு அமைத்து போருக்கு ஆயத்தமானார்கள்.

### நபியவர்கள் படையினருக்கு வீரமூட்டுகிறார்கள்

தான் கட்டளையிடும் வரை போரை ஆரம்பிக்கக் கூடாது என்று வீரர்களுக்குத் தடை விதித்தார்கள். நபியவர்கள் இரண்டு கவச ஆடை அணிந்திருந்தார்கள். தங்களது தோழர்களுக்குப் போர் புரிவதற்கு ஆர்வமூட்டியதுடன், எதிரிகளைச் சந்திக்கும் போது சகிப்புடன் இருந்து வீரத்தை வெளிப்படுத்தத் தூண்டினார்கள். தங்களின் தோழர்களுக்கு வீரத்தை ஊட்டும் வகையில் ஒரு கூர்மையான வாளை உருவி தங்களது தோழர்களிடம் “இவ்வாளை என்னிடம் வாங்கி அதற்குரிய கடமையை நிறைவேற்றுபவர் யார்?” என்று கேட்டார்கள். அப்போது நபியவர்களிடமிருந்து அதை வாங்குவதற்கு பலர் முன் வந்தனர். அவர்களில் அலீ இப்னு அபூதாலிப், ஜுபைர் இப்னு அவ்வாம், உமர் இப்னு கத்தாப் (ரழி) ஆகியோரும் அடங்குவர்.

இறுதியாக, அபூ துஜானா என்று அழைக்கப்படும் சிமாக் இப்னு கரஷா (ரழி) அவர்கள் எழுந்து “அல்லாஹ்வின் தூதரே! அதற்குரிய கடமை என்ன?” என்று கேட்டார்கள். அதற்கு நபியவர்கள் “இந்த வாள் வளையும் வரை இதன் மூலம் எதிரிகளின் முகங்களை நீ வெட்ட வேண்டும்” என்றார்கள். “இறைத்தூதரே! இதன் கடமையை நான் நிறைவேற்றுவேன்” என்று அபூ துஜானா (ரழி) கூறினார்கள். நபியவர்கள் அவருக்கு அந்த வாளைக் கொடுத்தார்கள். அபூ துஜானா (ரழி) மாபெரும் போர் வீரராக இருந்தார். போர் சமயத்தில் மிகுந்த பெருமையுடன் நடந்து செல்வார். அவரிடம் ஒரு சிவப்பு நிற தலைப்பாகை இருந்தது. அத்தலைப்பாகையை அவர் அணிந்து கொண்டால் மரணிக்கும் வரை போர் புரிவார் என்று மக்கள் அவரைப் பற்றி தெரிந்து கொள்வார்கள். நபியவர்களின் கரத்திலிருந்து வாளை அபூ துஜானா (ரழி) வாங்கியவுடன், தான் வைத்திருந்த சிவப்பு தலைப்பாகையைக் கட்டிக் கொண்டு இரு அணிகளுக்கிடையில் பெருமையுடன் நடந்தார். இதைப் பார்த்த நபியவர்கள் “இவ்வாறு நடப்பதை அல்லாஹ் வெறுக்கிறான். ஆனால், இதுபோன்ற இடங்களிலேயே தவிர!” என்று கூறினார்கள்.

### மக்கா படையின் அமைப்பு

இணைவைப்பவர்கள் தங்களது படையைப் பல அணிகளாக அமைத்தனர். படையினரின் உள்ளத்தில் இடம் பிடித்திருந்த அபூ ஸுஃப்யான் ஸக்ர் இப்னு ஹர்ப் போரின் பொதுத் தளபதியாக இருந்தார். படையின் வலப்பக்கத்திற்குக் காலித் இப்னு வலீத் தலைமையேற்றார். இடப்பக்கத்திற்கு இக்மா இப்னு அபூஜஹ்ல் தலைமையேற்றார். காலாட்படை வீரர்களுக்கு ஸஃப்வான் இப்னு உமய்யாவும் அம்பெறியும் வீரர்களுக்கு அப்துல்லாஹ் இப்னு அபூ ரபீஆவும் தலைமை வகித்தனர்.

‘‘அப்து தார்’ என்ற குடும்பத்தினர் இப்படையின் கொடியை வைத்திருந்தனர். குஸை இப்னு கிலாபிடமிருந்து அப்து மனாஃப் குடும்பத்தினர் பதவிகளையும் தகுதிகளையும் பங்கு வைத்துக் கொண்டபோது அப்து தார் குடும்பத்தினருக்கு போரில் கொடி பிடிக்கும் பதவி கிடைத்தது. இதன் விவரத்தை இந்நூலின் தொடக்கத்தில் நாம் கூறியிருக்கின்றோம். இப்பதவியில் அவர்களிடம் வேறு யாரும் போட்டி போட்டு அதை பறித்துக் கொள்ள முடியாது. இவ்வாறு தலைமுறை தலைமுறையாக இந்தச் சடங்குகளை அவர்கள் பின்பற்றி வந்தனர். எனினும், படையின் பொதுத் தளபதியான அபூ ஸுஃப்யான் பத்ர் போரில் கொடியை ஏந்தியிருந்த நழ்ர் இப்னு ஹாரிஸ் கைது செய்யப்பட்டதால் குறைஷிகளுக்கு ஏற்பட்ட தோல்வியை நினைவூட்டினார். மேலும், இவர்களின் கோபத்தையும் வெறியையும் கிளறுவதற்காக பின்வருமாறு உரை நிகழ்த்தினார்:

‘‘அப்து தார் குடும்பத்தினரே! பத்ர் போரில் எங்களின் கொடிக்கு நீங்கள்தான் பொறுப்பு வகித்தீர்கள். போரில் எங்களுக்கு என்ன சேதம் ஏற்பட்டது என்பது உங்களுக்குத் தெரியும். படைக்கு ஏற்படக்கூடிய நிலைக்கு அவற்றின் கொடிகளே காரணமாக இருக்கிறது. கொடி வீழ்ந்துவிட்டால் படையினரின் பாதங்களும் ஆட்டம் கண்டுவிடுகின்றன. படைகள் தோல்வியைத் தழுவி விடுகின்றன. நீங்கள் எங்களது கொடியைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள். அப்படி முடியவில்லை என்றால் எங்களிடம் அந்தக் கொடியைக் கொடுத்து விடுங்கள். நாங்கள் அதை பாதுகாத்துக் கொள்கிறோம்.’’

அபூ ஸுஃப்யான் தனது இந்த சிற்றுரையின் மூலம் தனது நோக்கத்தில் வெற்றி கொண்டார். அபூ ஸுஃப்யானின் உரையைக் கேட்ட அப்து தார் குடும்பத்தினர் கடும் சினம்கொண்டு அவரை எச்சரித்தனர். ‘‘எங்களது கொடியை நாங்கள் உமக்குக் கொடுக்க வேண்டுமா? நாளை நாங்கள் போர் புரியும் போது எவ்வாறு நடந்து கொள்கிறோம் என்று நீ பார்க்கத்தான் போகிறாய்’’ என்று கர்ஜித்தனர்.

இவர்கள் சூளுரைத்தது போன்றே போரில் கொடியைக் காப்பதில் பெரும் தியாகம் செய்தனர். இந்தக் குடும்பம் முழுவதுமே கொடியைக் காப்பதிலே தங்களது உயிரை மாய்த்துக் கொண்டனர்.

### குறைஷிகள் நடத்திய அரசியல் பேரங்கள்

போர் தொடங்குவதற்கு முன்பு முஸ்லிம்களின் அணியில் பிணக்கையும் பிரிவினையையும் ஏற்படுத்த குறைஷிகள் முயன்றனர். மதீனா முஸ்லிம்களிடம் அபூ ஸுஃப்யான் தூதனுப்பினார். ‘‘நீங்கள் எங்கள் ஒன்றுவிட்ட சகோதரரை விட்டு விலகிக் கொள்ளுங்கள் நீங்கள் எங்களுக்கு இடையில் குறுக்கிடாதீர்கள் நாங்கள் உங்களை விட்டு விடுகிறோம் உங்களிடம் போர் செய்ய வேண்டும் என்று எங்களுக்கு எந்தத் தேவையுமில்லை நாங்கள் உங்களிடம் போர் செய்ய வரவில்லை எங்களது நோக்கம் எங்களது ஒன்றுவிட்ட சகோதரன்தான்.’’ இவ்வாறு அபூ ஸுஃப்யான் தூதரிடம் கூறி அனுப்பினார்.

மலைகளைவிட உறுதியும் வலுவும் நிறைந்த இறைநம்பிக்கையின் ஆற்றலுக்கு முன் இந்த முயற்சி என்ன பலனளிக்கும்? அபூ ஸுஃப்யானின் இந்தப் பேரத்திற்கு மிகக் கடுமையாக பதிலளித்ததுடன், அவருக்கு வெறுப்பூட்டும் வார்த்தைகளையும் மதீனா முஸ்லிம்கள் கூறினர்.

நேரம் நெருங்கியது. இரு கூட்டத்தினரும் ஒருவரை ஒருவர் நெருங்கினர். இந்நேரத்திலும் மேற்கூறப்பட்ட அதே நோக்கத்திற்காக குறைஷிகள் மீண்டும் ஒருமுறை முயற்சி செய்தனர். அதாவது, ‘அபூ ஆமிர்’ என்று அழைக்கப்படும் ஒருவன் இருந்தான். இவனது இயற்பெயர் ‘அப்து அம்ர் இப்னு ஸைஃபி‘‘. இவனை மக்கள் ‘ராப்’ துறவி என்று புகழ்ந்தனர். ஆனால், நபி (ஸல்) அவர்களோ இவனை ‘அல் ஃபாஸிக்’ (பெரும்பாவி) என்று இகழ்ந்தார்கள். இவன் அறியாமைக் காலத்தில் மதீனாவில் அவ்ஸ் கிளையினரின் தலைவனாக இருந்தவன்.

இஸ்லாமிய மார்க்கம் வந்தவுடன் அதை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. நபியவர்களுடன் வெளிப்படையாக பகைமைக் கொண்டான்.

இவன் மதீனாவில் இருந்து வெளியேறி மக்காவிற்குச் சென்றான். அங்கு நபியவர்களுக்கு எதிராக போர் புரிய குறைஷிகளைத் தூண்டினான். இப்போரில் முதல் அணிகளில் பலதரப்பட்ட வமிசத்தைச் சேர்ந்த வாலிபர்களும் மக்கா நகர அடிமைகளும் இருந்தனர். இவனும் அவர்களுடன் இணைந்து கொண்டு அணியின் முதல் வரிசைக்கு வந்தான். மதீனாவாசிகள் தன்னைப் பார்த்தால் தனக்குத்தான் கட்டுப்படுவார்கள். நபியவர்களை விட்டு விலகிக் கொள்வார்கள் என்று குறைஷிகளுக்கு வாக்களித்தான். பிறகு முஸ்லிம்களை முன்னோக்கி அவர்களில் தனது கூட்டத்தினரைக் கூவி அழைத்து, "அவ்ஸ் கிளையினரே! நான்தான் அபூ ஆமிர்!" என்று தன்னைத்தானே அறிமுகப்படுத்தினான். அதற்கு முஸ்லிம்கள் "பாவியே! அல்லாஹ் உனக்கு அருள்புரிய மாட்டான் உன்னிடம் பேசுவதை நாங்கள் விரும்பவில்லை!" என்று பதில் கூறினார்கள். அதற்கவன் "எனது கூட்டத்தினருக்கு நான் வந்த பின்பு ஏதோ தீங்கு நிகழ்ந்துவிட்டது" என்று கூறி தொடர்ந்து பேசுவதை நிறுத்திக் கொண்டான். (இவன் போரில் கடுமையாக முஸ்லிம்களிடம் சண்டையிட்டான். அவர்களைக் கல்லால் எறிந்து தாக்கினான்.)

இறைநம்பிக்கையாளர்களின் அணிகளில் பிரிவினையை ஏற்படுத்த குறைஷிகள் மேற்கொண்ட இரண்டாவது முயற்சியும் தோல்வியைத் தழுவியது. எதிரிகளிடம் போர் வீரர்களும் அதிகம் இருந்தனர். போர் சாதனங்களும் அதிகமாக இருந்தன. எனினும், முஸ்லிம்களைப் பற்றிய பயமும் அச்சமும் அவர்களின் உள்ளங்களில் நிறைந்திருந்த காரணத்தினால்தான் இவ்வாறு குறுக்கு வழியை அவர்கள் கையாண்டனர். ஆனால், அதுவும் அவர்களுக்குப் பலனைத் தரவில்லை.

### குறைஷிப் பெண்கள் வெறியூட்டுகின்றனர்

குறைஷிப் பெண்களும் போரில் தங்களால் முடிந்த பங்காற்றினர். இப்பெண்களுக்கு ஹிந்த் பின்த் உத்பா (அபூ ஸுஃப்யானின் மனைவி) தலைமையேற்று வழி நடத்தினார். தமது படை வீரர்களிடையே சென்று மேளங்களை அடித்து பாட்டுப் பாடி உணர்வுகளைத் தூண்டினர். அம்பெறியும் வீரர்கள், ஈட்டியால் தாக்கும் வீரர்கள், வாள் வீசும் வீரர்கள், கொடியேந்தியிருந்த வீரர்கள் என படையினர் அனைவரையும் கவர்ந்து அவர்களை ஆவேசப்படுத்தினர்.

கொடியேந்தியிருந்த வீரர்களைப் பார்த்து பின்வருமாறு கவிபாடினர்.

"அப்துத்தார் வமிசத்தினரே பாருங்கள்!
படையின் பிற்பகுதி பாதுகாவலர்களே பாருங்கள்!
வாளை வீசி நன்றாகப் போரிடுங்கள்!"

அடுத்து, தங்களது சமூகத்தினரைப் பார்த்து பின்வருமாறு கவிபாடி அவர்கள் போரில் ஆர்வத்துடனும் வெறியுடனும் ஈடுபடத் தூண்டினர்.

"நீங்கள் எதிரிகளைப் பிளந்து சென்று வெற்றி கண்டால்
பட்டுக் கம்பளம் விரித்து ஆரத் தழுவி உங்களை வரவேற்போம்.
போரில் புறமுதுகிட்டால் அன்பிலார் பிரிவதைப் போல்
காதலின்றி உங்களைப் பிரிந்து விடுவோம்."

### போரின் முதல் தீ பிழம்பு

இரு படைகளும் சமீபமாயின. சண்டையிட நேரம் நெருங்கியது. இணைவைப்பவர்களின் கொடியை ஏந்தியிருந்த தல்ஹா இப்னு அபூதல்ஹா போரின் முதல் தீப்பிழம்பை

மூட்டினான். தன்னுடன் நேருக்குநேர் மோத முஸ்லிம்களை அழைத்தவனாக படைக்கு முன் வந்தான். இவன் குறைஷிகளில் மிகப்பெரிய வீரனாக இருந்தான். முஸ்லிம்கள் இவனை ‘கபிஷுல் கதீபா’ (படையின் முரட்டுக் கடா) என்று அழைத்தனர். இவன் வீரம் மிகைத்தவன் என்பதால் முஸ்லிம்கள் இவனுக்கு முன் வரத்தயங்கினர். ஆனால், நபித்தோழர் ஜுபைர் (ரழி) சிங்கம் பாய்வது போல் ஒரே பாய்ச்சலாக இவன் மீது பாய்ந்து ஒட்டகத்தின் மீது அவனுடன் ஏறிக் கொண்டார்கள். அவனுடன் சண்டை செய்து அவனைப் பூமியில் தள்ளி வாளால் வெட்டிக் கொன்றார்கள்.

ஜுபைரின் வீரதீரத் தாக்குதலைப் பார்த்த நபியவர்கள் தக்பீர் முழங்க முஸ்லிம்கள் அனைவரும் தக்பீர் முழங்கினர். நபி (ஸல்) அவர்கள் ஜுபைரைப் புகழ்ந்து “ஒவ்வொரு நபிக்கும் ஒரு விசேஷமான தோழர் இருப்பார். எனது விசேஷத் தோழர் ஜுபைராவார்” என்று கூறினார்கள். (ஸீரத்துல் ஹல்பிய்யா)

**கொடியை சுற்றிக் கடும் போர்**

இதைத் தொடர்ந்து போரின் தீ இரு தரப்பிலும் கடுமையாக மூண்டு போர்க்களத்தின் பல பகுதிகளிலும் போர் வெடித்தது. குறிப்பாக, போரின் கடுமை இணைவைப்போரின் கொடியைச் சுற்றியே இருந்தது. கொடியைச் சுமந்திருந்த தல்ஹா இப்னு அபூதல்ஹா கொலை செய்யப்பட்ட பின் அவனது சகோதரன் உஸ்மான் இப்னு அபூ தல்ஹா அக்கொடியைப் பிடித்து போர் செய்ய முன்வந்தான். பெருமையுடன் பின்வருமாறு ஒரு கவிதையைப் பாடினான்:

“கொடி பிடித்தோன் கடமையாவது ஈட்டி குருதியால் நிறம் மாற வேண்டும் அல்லது அது உடைய வேண்டும்.”

அவனுக்கு எவ்வித அவகாசமும் கொடுக்காமல் ஹம்ஸா இப்னு அப்துல் முத்தலிப் (ரழி) அவன் மீது பாய்ந்து, அவனது புஜத்தில் கடுமையாக வெட்டினார்கள். அந்த வெட்டு அவனது கையை அவனது உடலிலிருந்து தனியாக்கியதுடன், அவனது தொப்புள் வரை சென்றடைந்து அவனது குடல்கள் வெளியேறின. பின்பு மற்றொரு சகோதரன் அபூ ஸஅது இப்னு அபூ தல்ஹா கொடியைச் சுமந்தான். அவனை நோக்கி ஸஅது இப்னு அபூ வக்காஸ் (ரழி) அம்பெறிந்தார்கள். அந்த அம்பு அவனது தாடையின் கீழாகக் குத்திக் கிழித்து வெளியேறியது. இதனால் அவனது நாவு வெளியேறியது. அடுத்த வினாடியே அவனும் செத்து விழுந்தான்.

பின்பு முஸாஃபிஉ இப்னு தல்ஹா இப்னு அபூதல்ஹா என்பவன் கொடியைத் தாங்கினான். அவனை ஆஸிம் இப்னு ஸாமித் இப்னு அபுல் அஃப்லஹ் (ரழி) அம்பெறிந்துக் கொன்றார். அதற்குப் பின் அவனது சகோதரன் கிலாஃப் இப்னு தல்ஹா இப்னு அபூதல்ஹா கொடியை ஏந்தினான். இவன் மீது ஜுபைர் இப்னு அவ்வாம் (ரழி) பாய்ந்து அவனை வெட்டி வீழ்த்தினார்கள். அதற்குப் பின் இவ்விருவர்களின் சகோதரன் ஜுலாஸ் இப்னு தல்ஹா இப்னு அபூதல்ஹா கொடியை ஏந்தினான். இவனை தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரழி) ஈட்டியால் குத்திக் கொன்றார்கள்.

இவ்வாறு அபூதல்ஹா எனப்படும் அப்துல்லாஹ் இப்னு உஸ்மான் இப்னு அப்து தான் குடும்பத்திலிருந்து ஆறு நபர்கள் கொடிக்காகக் கொல்லப்பட்டனர். பின்பு, கொடியை அப்து தான் கிளையினரிடமிருந்து அர்தா இப்னு ஷுரஹ்பீல் சுமந்தான். இவனை அலீ இப்னு அபூதாலிப் (ரழி) கொன்றார்கள். பின்பு, அக்கொடியை ஷுரைஹ் இப்னு காள் அதை சுமந்து கொள்ள அவனைக் குஸ்மான் வெட்டி வீழ்த்தினார். இந்த குஸ்மான் உண்மையில் நயவஞ்சகராக இருந்தார். அவர் மார்க்கத்திற்காகப் போர் செய்ய வரவில்லை. மாறாக, தனது இனத்திற்கு உதவ வேண்டும் என்ற வெறியில்தான் வந்திருந்தார். பின்பு கொடியை அம்ர் இப்னு அப்து மனாஃப் அல் அப்த சுமந்து கொள்ளவே அவரையும் குஸ்மான் வெட்டி

வீழ்த்தினார். பின்பு, கொடியை ஷுரஹ்பீல் இப்னு ஹாஷிம் அல் அப்தயின் மகன் ஒருவன் சுமந்து கொள்ள அவனையும் குஸ்மான் வெட்டி வீழ்த்தினார்.

இவ்வாறு கொடியை சுமந்த அப்து தார் குடும்பத்தினர் பத்து நபர்களும் அழிக்கப்பட்டனர். இதற்குப் பின்பு அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களில் கொடியைத் தாங்கிக் கொள்ள எவரும் இல்லாததால் அவர்களின் ஹபஷி அடிமை ஸுஆப் என்பவன் முன்வந்து கொடியைத் தாங்கிப் பிடித்து தனது எஜமானர்களை விட வீரத்துடன் போரிட்டான். போரில் அவனது இரு கரங்களும் துண்டிக்கப்படவே கொடியின் மீது மண்டியிட்டு அமர்ந்து கீழே விழுந்து விடாமல் பாதுகாக்க, அதைத் தனது நெஞ்சோடும் கழுத்தோடும் அணைத்துக் கொண்டான். இறுதியில், அவன் கொல்லப்பட்டபோது “அல்லாஹ்வே! நான் முடிந்தவரை முயற்சி செய்தேன். என்மீது இனி குற்றமில்லை அல்லவா!” என்று கூறியவனாகவே செத்தான்.

இவ்வடிமை ஸுஆப் கொல்லப்பட்டதற்குப் பின் எதிரிகளின் கொடி பூமியில் சாய்ந்தது. அதைச் சுமப்பதற்கு யாரும் இல்லாததால் இறுதி வரை அது கீழேயே கிடந்தது.

**மற்ற பகுதிகளில் சண்டை**

இணைவைப்பவர்களின் கொடியைச் சுற்றி போர் கடினமாக நடந்ததைப் போன்று போர்க் களத்தின் மற்ற பகுதிகளிலும் உக்கிரமான போர் நடந்தது. முஸ்லிம்கள் எதிரிகளின் படையை ,இறைநம்பிக்கை எனும் பலத்துடன் மிகத் துணிச்சலாக எதிர்கொண்டு அவர்களைத் திக்குமுக்காட வைத்தனர். தங்களுக்கு மத்தியில் ‘அம்த் அம்த்’ என்ற இரகசிய அடையாள வார்த்தையை கூறிக்கொண்டே எதிரிகளின் படையைப் பிளந்துச் சென்றனர்.

சிவப்புத் தலைப்பாகை அணிந்து, நபி (ஸல்) அவர்களின் வாளை ஏந்தி, அதன் கடமையை நிறைவேற்ற வேண்டுமென உறுதி கொண்டிருந்த அபூ துஜானா (ரழி) எதிரிகளின் படைக்குள் புகுந்து தனக்கு எதிரே வந்த ஒவ்வொரு எதிரியையும் வெட்டி வீழ்த்தினார்.

இதைப் பற்றி ஜுபைர் இப்னு அவ்வாம் (ரழி) பின்வருமாறு கூறுகிறார்கள்:

நபியவர்களிடம் வாளை நான் கேட்டபோது அதை எனக்கு அளிக்காமல் அபூ துஜானாவுக்கு கொடுத்ததைப் பற்றி எனக்குக் கவலையாக இருந்தது. நான் நபியவர்களின் மாமி ஸஃபிய்யாவின் மகன் குறைஷிக் குலத்தைச் சேர்ந்தவன். அவரை விட முந்தி அந்த வாளை நபியவர்களிடம் நான்தான் கேட்டேன். ஆனால் என்னை விட்டுவிட்டு நபியவர்கள் அவருக்கு அந்த வாளை கொடுத்தார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அப்படி என்னதான் அபூதுஜானா செய்துவிடப் போகிறார் என்று பார்ப்போம்?! என்று எனக்குள் கூறிக்கொண்டு அவரைத் தொடர்ந்து கவனித்தேன். அவர் சிவப்பு தலைப்பாகையை எடுத்து அணிந்தார். இதைப் பார்த்த மதீனாவாசிகள் “அபூ துஜானா மரணத்தின் தலைப்பாகையை எடுத்துவிட்டார்” என்று கூறினார்கள்.

அதை அணிந்துகொண்ட அபூதுஜானா பின்வருமாறு கவிதையைப் பாடி, போரில் குதிக்கலானார்:

“பேரீச்சந்தோட்டத்திலே நண்பர் என்னிடம் ஒப்பந்தம் செய்தார். அல்லாஹ் மற்றும் தூதருடைய வாளால் நான் போரிடுவேன். ஒருபோதும் படையின் பிற்பகுதியில் நில்லேன்.”

அவர் சண்டையிட்ட எவரையும் கொல்லாமல் விடவில்லை. போர்க்களத்தில் இணை வைப்பவர்களில் ஒருவன் எங்களில் காயமடைந்தவர்களைத் தேடிச் சென்று அவர்களைத் தொல்லை செய்து கொண்டிருந்தான். அபூ துஜானா (ரழி) அவனுக்கு அருகில் சென்ற போது

“அல்லாஹ்வே! அவ்விருவரையும் சந்திக்க வை” என்று நான் பிரார்த்தித்தேன். அவ்வாறே அபூ துஜானாவும் அந்த எதிரியும் சந்தித்து சண்டையிட்டனர். எதிரி அபூ துஜானாவை வெட்ட வந்த போது அபூ துஜானா (ரழி) தனது கேடயத்தால் அதைத் தடுத்தார். அவனது வாள் அபூ துஜானாவுடைய கேடயத்துக்குள் சிக்கிக் கொண்டது. உடனே அபூ துஜானா (ரழி) தனது வாளால் அவனை வெட்டி வீழ்த்தினார். (இப்னு ஹிஷாம்)

பின்பு அபூதுஜானா (ரழி) எதிரிகளின் அணியைக் கிழித்துக் கொண்டு செல்லுகையில் குறைஷிப் பெண்களின் தளபதி ஹிந்து“க்கருகில் செல்ல நேர்ந்தது. ஆனால், அவருக்கு அவர் யார் என்று தெரியாது. இதைப் பற்றி அபூ துஜானாவே கூறுகிறார்:

போருக்கு மக்களை பயங்கரமாகத் தூண்டிக் கொண்டிருக்கும் ஒருவரை நான் பார்த்தேன். நான் அவரை முன்னோக்கிச் சென்று அவர் மீது என் வாளை வீச எண்ணிய போது அவர் என் பக்கம் திரும்பினார். அவரைப் பெண் என்று அறிந்து கொண்ட நான் ஒரு பெண்ணைக் கொலை செய்து நபியவர்கள் கொடுத்த வாளின் கண்ணியத்தைக் குறைத்து விடக்கூடாது என்பதற்காக அவளைக் கொல்லாமல் விட்டுவிட்டேன்.

அந்தப் பெண் ஹிந்த் பின்த் உத்பாவாகும். இதைப் பற்றி ஜுபைர் இப்னு அவ்வாம் (ரழி) கூறுகிறார்கள்: அபூதுஜானா ஹிந்துடைய தலையின் நடுப் பகுதிக்கு வாளை கொண்டு சென்று விட்டு திருப்பிவிட்டார். இதைக் கண்ட நான் “அபூதுஜானா ஏன் இவ்வாறு செய்தார்? அல்லாஹ்வும் அவனது தூதரும்தான் நன்கறிந்தவர்கள் என்று எனக்குள் கூறிக் கொண்டேன்.” (இப்னு ஹிஷாம்)

ஹம்ஜா இப்னு அப்துல் முத்தலிப் (ரழி) சிங்கம் பாய்ந்து தாக்குவதைப் போரில் எதிரிகளைப் பாய்ந்து தாக்கியவராக எதிரிப்படையின் நடுப்பகுதிக்குள் சென்றுவிட்டார். அவருக்கு முன் எதிர்த்து நின்ற வீரமற்ற எதிரிகள் புயல் காற்றில் இலைகள் பறப்பது போன்று அவரைப் பார்த்து விரண்டனர். இணைவைப்பாளர்களின் கொடியை சுமந்திருந்தவர்களை அழிப்பதில் ஹம்ஜா (ரழி) எடுத்துக் கொண்ட பங்கைப் பற்றி இதற்கு முன்பே நாம் கூறியிருக்கின்றோம். இறுதியாக, முன்னணி வீரர்களில் இருந்த இவர் கொல்லப்பட்டார். போர் மைதானத்தில் இவருடன் நேருக்கு நேர் போரிட்டு கொல்ல சக்தியற்ற எதிரிகள் கோழைத்தனமானத் தாக்குதல் நடத்தி இவரை வஞ்சகமாகக் கொன்றனர்.

**அல்லாஹ்வின் சிங்கம் வீர மரணம்**

அல்லாஹ்வின் சிங்கம் ஹம்ஜா (ரழி) அவர்களைக் கொன்ற வஹ்ஷி இப்னு ஹர்ப் அது குறித்து கூறுகிறார்: நான் ஜுபைர் இப்னு முத்ம்மின் அடிமையாக இருந்தேன். அவனது தந்தையின் சகோதரன் துஅய்மா இப்னு அதீ பத்ர் போரில் கொல்லப்பட்டான். குறைஷிகள் உஹுத் போருக்குப் புறப்பட ஆயத்தமான போது ஜுபைர் என்னிடம் “முஹம்மதுடைய சிறிய தந்தை ஹம்ஜாவை நீ கொன்றுவிட்டால் உன்னை நான் உரிமையிட்டு விடுகிறேன்” என்று கூறினான். நான் மக்களுடன் சேர்ந்து புறப்பட்டேன். ஹபஷிகள் திறமையாக ஈட்டி எறிவது போரில் நானும் ஈட்டி எறிவதில் திறமையானவன். நான் எறியும் ஈட்டி மிகக் குறைவாகவே இலக்கைத் தவறும். போர் மூண்டபோது நான் ஹம்ஜாவைத் தேடி அலைந்தேன். வீரர்களுக்கு மத்தியில் அவரைச் சாம்பல் நிற ஒட்டகத்தைப் போன்று பார்த்தேன். அவர் படை வீரர்களைப் பிளந்து கொண்டிருந்தார். அவருக்கு முன் நிற்பதற்கு எவருக்கும் துணிவு வரவில்லை. நான் அவரைக் கொல்ல நாடி அதற்காக ஆயத்தமானேன். அவர் எனக்கருகில் வரும் வரை ஒரு மரம் அல்லது ஒரு பாறைக்குப் பின் மறைந்து கொள்ள நாடினேன். ஆனால், திடீரென ஸிபா இப்னு அப்துல் உஜ்ஜா ஹம்ஜாவுக்கு முன் வந்தான். அவனைப் பார்த்த ஹம்ஜா (ரழி) அவனுக்குக் கோபமூட்டுவதற்காக “ஓ ஆணுறுப்பின் தோலை வெட்டுபவளின் மகனே! என்னருகில் வா!” என்றழைத்தார்கள்.

(அவனது தாய் கத்னா செய்யும் தொழில் செய்து வந்தாள்.) அவன் அருகில் வந்தவுடன் ஹம்ஜா (ரழி) அவனது தலையை உடம்பிலிருந்து தனியாக்கினார்.

தொடர்ந்து வஹ்ஷி கூறுகிறார்: நான் நல்ல தருணம் பார்த்து எனது சிறிய ஈட்டியால் அவரை நோக்கி எறிந்தேன். அது அவரது தொப்புளுக்கு அருகில் குத்திக் குடலைக் கிழித்து அவரது மர்மஸ்தானத்தின் பக்கமாக வெளியாகியது. அவர் என்னை நோக்கி வர முயற்சி செய்தார். ஆனால் அவரால் வர முடியவில்லை. நான் அவரை அதே நிலையில் விட்டுவிட அவர் இறந்துவிட்டார். பின்பு சிறிது நேரம் கழித்து அவரிடம் வந்து எனது ஈட்டியை எடுத்துக் கொண்டு கூடாரத்தில் வந்து அமர்ந்து கொண்டேன். இவரைத் தவிர மற்றவர்களை கொல்ல வேண்டும் என்ற அவசியம் எனக்கில்லை. இவரை நான் கொன்றது எனக்கு விடுதலை கிடைக்க வேண்டும் என்பதற்காகத்தான். அது போல் போர் முடிந்து மக்கா திரும்பியதும் எனக்கு விடுதலை கிடைத்தது. (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம்)

**நிலைமையைக் கட்டுப்படுத்துவது**

அல்லாஹ் மற்றும் அவனது தூதரின் சிங்கம் என்று பெயர் பெற்ற மாவீரர் ஹம்ஜா (ரழி) கொலை செய்யப்பட்டதால் முஸ்லிம்களுக்குப் பெருத்த சேதம் ஏற்பட்டிருந்தாலும் முஸ்லிம்கள் நிலைமைகளைத் தங்களது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்தனர்.

அன்றைய தினம் அபூபக்ர், உமர், அலீ, ஜுபைர் இப்னு அவ்வாம், தல்ஹா இப்னு உபைதுல்லாஹ், அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ், ஸஅதுப்னு முஆத், ஸஅது இப்னு உபாதா, ஸஅது இப்னு ரபீஃ, அனஸ் இப்னு நள்ர் (ரழி) இன்னும் இவர்களைப் போன்ற நபித் தோழர்களில் பலர் போரில் காட்டிய வீரம் இணைவைப்பவர்களின் உறுதியைக் குலைத்து அவர்களது தோள் வலிமையைத் தளர்வடையச் செய்தது.

**மனைவியைப் பிரிந்து போர்க்களம் நோக்கி...**

அன்றைய தினத்தில் ஆபத்துகளைச் சற்றும் பொருட்படுத்தாமல் களத்தில் துணிச்சலுடன் போர் புரிந்த வீரர்களில் ‘அல்கஸீல்’ என்று அழைக்கப்படும் ஹன்ளலா (ரழி) அவர்களும் ஒருவர். இவர் முஸ்லிமல்லாதவர்களால் ‘துறவி’ என்றும் நபி (ஸல்) அவர்களால் ‘பாவி’ என்றும் அழைக்கப் பட்ட அபூ ஆமின் மகனாவார். ஹன்ளலா (ரழி) அன்றுதான் திருமணம் முடித்திருந்தார்கள். தனது மனைவியுடன் தனித்திருந்த இவர்கள், போர்க்களத்தில் இருந்து பலத்த சப்தத்தைக் கேட்டவுடன் அதே நிலையில் போர்க்களத்தை நோக்கி ஓடோடி வந்து இணைவைப்பாளர்களின் அணிக்குள் புகுந்து எதிரிகளைத் தாக்கிய வண்ணம் முன்னேறி சென்றார்கள். இணை வைப்பாளர்களின் தளபதியான ‘அபூ ஸுஃப்யான்’ என்ற ஸக்ர் இப்னு ஹர்பை நெருங்கி அவருடன் கடுமையான போர் புரிந்து அவரைக் கீழே வீழ்த்திக் கொல்வதற்கு நெருங்கிவிட்டார். அல்லாஹ் அவருக்கு வீர மரணத்தை முடிவு செய்யாமல் இருந்திருந்தால் இவர் அபூ ஸுஃப்யானை கொன்றிருப்பார். ஆனால், ஷத்தாத் இப்னு அஸ்வத் என்பவன் முதுகுப் புறத்திலிருந்து ஹன்ளலா (ரழி) அவர்களைத் தாக்கியதால் அவர்கள் வீர மரணமடைந்தார்கள்.

**போரில் அம்பெறியும் வீரர்களின் பங்கு**

நபி (ஸல்) அவர்கள் மலையின் மீது நிறுத்திய வீரர்கள் இஸ்லாமியப் படைக்குச் சாதகமான சூழ்நிலையை ஏற்படுத்துவதில் பெரும் பங்கு வகித்தனர். காலித் இப்னு வலீதின் தலைமையின் கீழ், பாவி அபூ ஆமின் உதவியுடன் எதிரிகள் மூன்று முறை இஸ்லாமியப் படையின் இடது பாகத்தை முறியடிக்க முயன்றனர். முஸ்லிம்களின் பின்புறமாகத் தாக்குதல் தொடுத்து அணியில் சேதங்களையும் குழப்பங்களையும் உண்டுபண்ணி, அதைத் தொடர்ந்து பெரும் தோல்வியை முஸ்லிம்களுக்கு ஏற்படுத்திவிடலாம் என்று மூன்று முறை இம்மலைப் பகுதியின்மீது எதிரிகள் தாக்குதல் நடத்தினர். ஆனால், மலை மீதிருந்து அம்பெறியும்

வீரர்கள் இவர்களின் மீது அம்பு மழை பொழிந்து இவர்களின் மூன்று தாக்குதல்களையும் முறியடித்தனர். (ஃபத்ஹுல் பாரி)

### இணைவைப்பவர்களுக்குத் தோல்வி

இவ்வாறுதான் போர் எனும் திருகை சுழன்றது. சிறியதாக இருந்த இஸ்லாமியப் படை நிலைமை அனைத்தையும் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தது. இதனால் இணைவைப்பவர்களின் நம்பிக்கை தளர்ந்தது. அவர்களின் படை வலது, இடது, முன், பின் என நாலா பாகங்களிலும் சிதறி ஓடின. அந்நிலைமை எவ்வாறு இருந்ததென்றால், மூவாயிரம் இணைவைப்பவர்கள் சில நூறு முஸ்லிம்களுடன் அல்ல முப்பதினாயிரம் முஸ்லிம்களுடன் போர் புரிகிறார்கள் என்பதைப் போல் இருந்தது. முஸ்லிம்கள் தமது வீரதீரங்களை, திறமைகளை மிகச் சிறந்த முறையில் வெளிப்படுத்தினர்.

முஸ்லிம்களின் தாக்குதலை தடுக்க இணைவைப்பவர்கள் முழு முயற்சி செய்தும் அது முடியாமல் போனதால், தங்களின் தோல்வியையும் இயலாமையையும் உணர்ந்தனர் துணிவை இழந்தனர். கொடி ஏந்தியிருந்த ‘சூஆப்’ என்பவர் இறுதியாகக் கொல்லப்பட்ட பிறகு அவர்களின் கொடியை எடுத்து நிமிர்த்தி அதைச் சுற்றிலும் தொடர்ந்து போர் புரிவதற்கு யாரும் துணியவில்லை. இதனால் பழிவாங்க வேண்டும் தங்களது கண்ணியத்தையும் மதிப்பையும் நிலைநாட்ட வேண்டும் என்று தங்களுக்குள் பேசி வந்ததையெல்லாம் மறந்துவிட்டு, உயிர் பிழைத்தால் போதுமென்று தலைதெறிக்க தப்பித்து ஓட்டம் பிடித்தனர்.

“இவ்வாறு அல்லாஹ் முஸ்லிம்களுக்கு வெற்றியை அருளினான். தனது வாக்கை அவர்களுக்கு உண்மைப்படுத்தினான். முஸ்லிம்கள் தங்களது வாட்களால் எதிரிகளை வெட்டி வீழ்த்தினர். போர்க்களத்தை விட்டு தப்பி ஓடிய எதிரிகளை வெருண்டோட வைத்தனர். உண்மையில் இணைவைப்பவர்கள் பெரும் தோல்வி கண்டார்கள்.

அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரழி) தனது தந்தை கூறியதாக அறிவிக்கிறார்கள்: “அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஹிந்த் பின்த் உத்பா மற்றும் அவளின் தோழிகள் தங்களின் ஆடைகளை உயர்த்திக் கொண்டு ஓடினர். நான் அவர்களின் கெண்டைக் கால்களைப் பார்த்தேன். அவர்களை நாங்கள் பிடிக்க நாடியிருந்தால் பிடித்திருப்போம். காரணம், அதற்கு எந்தத் தடையும் எங்களுக்கு இருக்கவில்லை.” (இப்னு ஹிஷாம்)

ஸஹீஹுல் புகாரியில் இடம் பெற்றுள்ள பரா இப்னு ஆஸிஃப் (ரழி) அறிவிப்பில் வருவதாவது: “நாங்கள் எதிரிகளை எதிர்த்து போரிட்ட போது பெண்களைப் பார்த்தோம். அவர்கள் தோல்வியுற்று விரண்டோடினர். தங்களது கெண்டைக் கால்களில் அணிந்திருந்த சலங்கைகள் தெரியும் அளவுக்கு ஆடைகளை உயர்த்திக் கொண்டு மலைகளின் மேல் ஓடினர். முஸ்லிம்கள் இணைவைப்பவர்களைப் பின்தொடர்ந்துச் சென்று, அவர்களை வெட்டி வீழ்த்தி, அவர்களின் பொருட்களையும் கைப்பற்றினர்.

### அம்பெறி வீரர்களின் மாபெரும் தவறு

சிறியதாக இருந்த இஸ்லாமியப் படை வரலாற்றில் மற்றொரு முறை மக்காவாசிகளுக்கு எதிராய் மாபெரும் வெற்றி முத்திரையைப் பதித்தனர். இவ்வெற்றி பத்ரில் அவர்களுக்குக் கிடைத்த வெற்றியை விட சற்றும் குறைவானது அல்ல. இந்நேரத்தில் மலை மீது நிறுத்தப்பட்டிருந்த அம்பெறியும் வீரர்களின் பிரிவில் பெரும்பாலோர் மாபெரும் தவறு ஒன்றைச் செய்தனர். இத்தவறினால் நிலைமை முற்றிலும் தலைகீழாக மாறியது. முஸ்லிம்களுக்கு மிகப்பெரிய சேதமும் நஷ்டமும் ஏற்பட்டது. நபியவர்களை எதிரிகள் கொன்றுவிட இது ஒரு வாய்ப்பாக இருந்தது. அம்பெறியும் வீரர்களின் இந்தத் தவறினால் ஏற்பட்ட பின்விளைவு, முஸ்லிம்களின் வீரத்தைப் பற்றிய தவறான எண்ணத்தை

ஏற்படுத்தியது. பத்ர் போரின் வெற்றிக்குப் பின் நிராகரிப்பாளர்களுக்கு முஸ்லிம்களின் மீதிருந்த அச்சத்தையும் அம்பெறியும் வீரர்களின் இந்தத் தவறு போக்கிவிட்டது.

வெற்றி அல்லது தோல்வி எது ஏற்பட்டாலும் அம்மலையைவிட்டு நகரக் கூடாது என்று இந்த அம்பெறியும் வீரர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் இட்ட கட்டளையின் வாசகங்களை நாம் முன்பு கூறியிருந்தோம். இவ்வளவு ஆணித்தரமாக நபியவர்கள் கட்டளையிட்டிருந்தும் வெற்றி கிடைத்து எதிரிகளின் பொருட்களை முஸ்லிம்கள் ஒன்று திரட்டுவதைப் பார்த்த அத்தோழர்களில் சிலருக்கு உலக ஆசை ஏற்பட்டது. அவர்கள் தங்களுக்குள் "இதோ வெற்றிப் பொருள்! இதோ வெற்றிப் பொருள்! உங்களது தோழர்கள் வெற்றி பெற்று விட்டார்கள். இதற்குப் பின்பும் நீங்கள் எதை எதிர்பார்க்கிறீர்கள்?" என்று கூறினர்.

அச்சமயம் அவர்களின் தளபதி அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரழி) நபி (ஸல்) அவர்களிட்ட கட்டளையை அவர்களுக்கு நினைவூட்டினார். மேலும் "அல்லாஹ்வின் தூதர் உங்களுக்கு கூறியதை நீங்கள் மறந்துவிட்டீர்களா?" என்று தோழர்களை எச்சரித்தார். என்றாலும் அந்தக் கூட்டத்தின் பெரும்பாலானோர் இந்த எச்சரிக்கைக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. அவர்கள் "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாமும் மக்களுடன் வெற்றிப் பொருளைச் சேகரிப்போம்"என்று கூறி அப்பிரிவின் நாற்பது அல்லது நாற்பதுக்கும் மேற்பட்டவர்கள் மலையிலிருந்து இறங்கி படையுடன் சேர்ந்து பொருளை சேகரித்தார்கள். இதனால் முஸ்லிம் படையினரின் பின்பகுதி பாதுகாப்பற்றதாக ஆகிவிட்டது. அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரழி) அவர்களும் அவன் தோழர்களில் ஒன்பது அல்லது அதைவிடக் குறைவானவர்கள் மட்டுமே தங்களுக்கு அனுமதி அல்லது மரணம் வரும் வரை அவ்விடத்திலேயே நிலையாக இருந்துவிட வேண்டுமென்று அங்கேயே தங்கிவிட்டனர்.

### காலித் முஸ்லிம்களைச் சுற்றி வளைக்கிறார்

இந்தச் சூழ்நிலையைக் காலித் இப்னு வலீத் நன்றாக பயன்படுத்திக் கொண்டார். முஸ்லிம்களை பின்புறம் தாக்குவதற்காக அம்பெறியும் வீரர்கள் இருந்த மலையை நோக்கி அதிவேகமாகச் சென்றார். அங்கிருந்த அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரழி) அவர்களையும் அவரது தோழர்களையும் அதிவிரைவிலேயே கொன்று விட்டு முஸ்லிம்களின் படையின் பின்புறமாகச் சென்று தாக்கினார். காலிதின் குதிரை வீரர்கள் இதை உணர்த்தும் பொருட்டு பெரும் சப்தமிட்டவுடன், தோல்வியுற்று புறமுதுகுக் காட்டி ஓடிக்கொண்டிருந்த இணைவைப்பவர்கள் தங்களுக்கு ஒரு புதிய முன்னேற்றம் கிடைத்து விட்டதை அறிந்து முஸ்லிம்களை நோக்கித் திரும்பினர். 'அம்ரா பின்த் அல்கமா' என்ற பெண் மண்ணில் வீசப்பட்டிருந்த இணைவைப்பவர்களின் கொடியை உயர்த்திப் பிடித்தாள். இணைவைப்பவர்கள் தங்களது கொடியைச் சுழற்றியவர்களாக சிலர் சிலரைக் கூவி அழைத்தனர். பிறகு ஒன்று சேர்ந்து முஸ்லிம்கள் மீது பாய்ந்தனர். இதனால் முஸ்லிம்கள் முன்னும் பின்னும் தாக்கப்பட்டனர்.

### நபியவர்களின் நிலை

நபி (ஸல்) அவர்கள் ஒன்பது நபர்கள் கொண்ட தங்கள் தோழர்களின் ஒரு சிறிய கூட்டத்தில் இருந்தார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்) முஸ்லிம்களின் வீரத்தையும், அவர்கள் இணைவைப்பவர்களை விரட்டுவதையும் படையின் பின்பகுதியிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த நபியவர்கள் திடீரென காலிதின் குதிரை வீரர்களால் சூழப்பட்டார்கள். இப்போது நபியவர்களுக்கு முன் இரு வழிகள்தான் இருந்தன. ஒன்று, உடனடியாக தங்களையும் தங்களுடைய ஒன்பது தோழர்களையும் பாதுகாத்துக் கொண்டு ஒரு ஆபத்தில்லாத இடத்தில் ஒதுங்கி விடுவது. மேலும், எதிரிகளால் சுற்றி வளைக்கப் பட்ட தங்களது படையை 'அதற்கு விதிக்கப்பட்ட விதியை அது சந்திக்கட்டும்' என்று விட்டு விடுவது. இரண்டாவது, தனக்கேற்படும் ஆபத்தைப் பொருட்படுத்தாமல் தனது தோழர்களைத்

தன்னை நோக்கி வருமாறு கூவி அழைப்பது. அவ்வாறு ஒன்று சேரும் அந்த தோழர்களைக் கொண்டே எதிரிகளால் சூழப்பட்ட தனது படையைக் காப்பாற்றி உஹுத் மலைக் குன்றுகளின் உச்சிக்கு அழைத்து செல்ல முயற்சி செய்வது.

இந்நேரத்தில் நபி (ஸல்) அவர்களின் நிகரற்ற வீரம் வெளிப்பட்டது. தனது சப்தத்தை உயர்த்தி தனது தோழர்களை "அல்லாஹ்வின் அடியார்களே! என் பக்கம் வாருங்கள்" என்று அழைத்தார்கள். தனது குரல் ஒலியை முஸ்லிம்களை விட எதிரிகள்தான் முதலில் கேட்பார்கள். அவ்வாறு கேட்டால், தான் இக்கட்டான நிலைமைக்கு ஆளாகுவோம் என்றிருந்தும் அதைப் பொருட் படுத்தாமல் தன் தோழர்களைக் கூவி அழைத்தார்கள்.

ஆம்! அவ்வாறே எதிரிகள் நபி (ஸல்) அவர்களின் இருப்பிடத்தை அறிந்து கொண்டு, முஸ்லிம்கள் நபியவர்களிடம் வந்து சேர்வதற்கு முன்பாக அவர்கள் வந்து சேர்ந்தனர்.

### முஸ்லிம்கள் சிதறுதல்

எதிரிகள் முஸ்லிம்களை சுற்றி வளைத்துக் கொண்டபோது முஸ்லிம்களின் ஒரு சாரார் நிலை தடுமாறினர். அதாவது, இவர்கள் தங்களை மட்டும் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்று போர் மைதானத்திலிருந்து ஓடினார்கள். இவர்களில் ஒரு சாரார் ஓடிய ஓட்டத்தில் மதீனாவிற்குள் நுழைந்தனர். மற்றும் சிலர் மலை உச்சிகளுக்கு மேலே ஏறிக்கொண்டனர்.

மற்றும் ஒரு சாரார் போர்க் களத்தில் இணைவைப்பவர்களோடு ஒன்றோடு ஒன்று கலந்து விட்டனர். யார் எந்தப் படையை சேர்ந்தவர் என்று பிரித்து அறிய முடியவில்லை. இதனால் முஸ்லிம்கள் தங்களுக்குள் சிலர் சிலரை தவறுதலாக தாக்க நேர்ந்தது.

இந்நிலையைப் பற்றி ஆயிஷா (ரழி) அறிவிக்கும் ஒரு சம்பவம் ஸஹீஹுல் புகாரியில் இடம் பெற்றுள்ளதாவது:

உஹுத் போர் முடிவுறும் தறுவாயில் இணைவைப்பவர்ளுக்குக் கடும் தோல்வி ஏற்பட்டது. அப்போது இப்லீஸ் முஸ்லிம்களைத் தடுமாற வைப்பதற்காக அவர்களைச் சப்தமிட்டு அழைத்து "அல்லாஹ்வின் அடியார்களே! உங்களுக்குப் பின்னால் வருபவர்களை பாருங்கள்" என்று கூறினான். இவனது சப்தத்தைக் கேட்ட முஸ்லிம் படையின் முன்பகுதியில் இருந்தவர்கள் தங்களில் ஒருவர்தான் அழைக்கிறார் தங்களுக்கு பின்பகுதியில் எதிரிகள் வந்துவிட்டதாகக் கருதி விரைவாக திரும்பி தங்களுக்கு பின்பகுதியில் இருந்த முஸ்லிம்களுடன் சண்டையிட்டனர். இவ்வாறு முஸ்லிம்களுக்குள்ளாகவே தாக்குதல் நிகழ்ந்துவிட்டது. அந்நேரத்தில் ஹுதைஃபா (ரழி) அவர்களின் தந்தையை முஸ்லிம்கள் எதிரி என்று நினைத்து அவரைக் கொல்ல பின்தொடர்ந்தனர். அதைப் பார்த்த ஹுதைஃபா (ரழி) "அவர் எனது தந்தை! அவர் எனது தந்தை! அவரை விட்டுவிடுங்கள்" என்று கத்தினார். ஆனால், அவரது சப்தம் எவர் காதிலும் விழவில்லை. எனவே, அவரை விரட்டிச் சென்று கொன்றே விட்டனர். ஆனால், ஹுதைஃபா (ரழி) தங்களது தோழர்களைக் கோபிப்பதற்குப் பதிலாக "அல்லாஹ் உங்களை மன்னிக்கட்டும்" என்று கூறினார்.

மேற்கூறப்பட்ட சம்பவத்தை அன்னை ஆயிஷாவிடமிருந்து அறிவிக்கும் 'உர்வா' கூறுகிறார்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஹுதைஃபா மிக நல்லவராக இருந்தார். அதே நிலையில் அல்லாஹ்விடம் சேர்ந்துவிட்டார். (ஸஹீஹுல் புகாரி)

இவ்வாறு அவர்கள் கூறியதற்குக் காரணம், இவன் தந்தை முஸ்லிமாக இருந்தும் தவறுதலாக படுகொலை செய்யப்பட்டார், அதற்குப் பிணையத் தொகையாக நூறு ஒட்டகங்களைத் தருவதற்கு நபி (ஸல்) அவர்கள் முன்வந்தார்கள். ஆனால், ஹுதைஃபா (ரழி) அவர்கள் பெருந்தன்மையாக அதை முஸ்லிம்களுக்கே தானம் செய்து விட்டார்கள். இச்செயல் நபியவர்களின் உள்ளத்தில் ஹுதைஃபா (ரழி) அவர்களைப் பற்றிய சிறந்த

நல்லெண்ணத்தை ஏற்படுத்தியது. ஹுதைஃபா (ரழி) அவர்கள் பிற்காலத்திலும் இதே பெருந்தன்மையுடனே திகழ்ந்தார்கள். இதையே உர்வா மேற்கூறியவாறு சுட்டிக் காட்டினார்கள்.

இந்தக் கூட்டத்தின் அணிகளுக்கிடையில் பெரும் குழப்பமும் தடுமாற்றமும் நிலவியது. அதிகமானவர்கள் என்ன செய்வது, எங்கே செல்வது என்று தெரியாமல் குழப்பத்திற்குள்ளாகினர். இந்நிலையில் இருக்கும்பொழுது "முஹம்மது கொல்லப்பட்டு விட்டார்" என்று ஒருவன் ஓலமிடுவதைக் கேட்ட அவர்கள், மிச்சமீதமிருந்த தன்னம்பிக்கையையும் இழந்தார்கள் அவர்களது மனபலமும் குன்றியது சிலர் போரை நிறுத்திக்கொண்டு சோர்வுற்று ஆயுதங்களைக் கீழே போட்டானர் மற்றும் சிலர் நயவஞ்கர்களின் தலைவன் அப்துல்லாஹ் இப்னு உபையிடம் சேர்ந்து கொள்ளலாம். அவர் நமக்காக அபூ ஸுஃப்யானிடம் பாதுகாப்பு வாங்கித் தருவார் என்று எண்ணினர். தங்களது கையிலுள்ள ஆயுதங்களைப் போட்டுவிட்டு நிராயுதபாணியாய் இருந்த இத்தகைய கூட்டத்தை அனஸ் இப்னு நள்ர் (ரழி) பார்த்தபோது, அவர்களிடம் "நீங்கள் என்ன எதிர்பார்க்கின்றீர்கள்" என்று கேட்டார். அதற்கு அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே கொல்லப்பட்டு விட்டார்கள்" என பதிலளித்தனர். அதற்கு அனஸ் (ரழி) "நபி (ஸல்) அவர்களுக்குப் பின் வாழ்ந்து நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? நபியவர்கள் எக்காரியத்திற்காக உயிர் நீத்தார்களோ அதற்காக நீங்களும் உங்கள் உயிரைத் தியாகம் செய்யுங்கள்!" என்று கூறியபின் அல்லாஹ்விடம் பின்வருமாறு முறையிட்டார்கள்:

"அல்லாஹ்வே! (முஸ்லிம்களாகிய) இவர்கள் செய்த காரியத்திலிருந்து உன்னிடம் நான் மன்னிப்பு கேட்கிறேன். இணைவைப்பவர்களாகிய அவர்கள் செய்த காரியத்திலிருந்து விலகி உன்னளவில் மீளுகிறேன்." இவ்வாறு முறையிட்டப் பின் எதிரிகளை நோக்கி முன்னேறினார். அப்போது அவரை ஸஅது இப்னு முஆத் (ரழி) சந்தித்து "அபூ உமரே! எங்கே செல்கிறீர்?" என வினவினார். அதற்கு அனஸ் (ரழி) "ஹா... சொர்க்கத்தின் நறுமணம் எவ்வளவு அருமையானது. உஹுதுக்கருகில் அதை நான் நுகர்கிறேன்" என்று கூறி எதிரிகளிடம் போர் செய்து உயிர் நீத்தார். இறுதியில் அவரை எவராலும் அடையாளம் காணமுடியாத அளவிற்கு உடல் சிதைக்கப் பட்டிருந்தது. போர் முடிந்ததற்குப் பின் அவரது நுனிவிரலைப் பார்த்துதான் அவரது சகோதரி அவரை அடையாளம் காட்டினார். அப்போது அவரது உடலில் ஈட்டி, அம்பு, வாள் ஆகிய வற்றால் எண்பதுக்கும் மேற்பட்ட காயங்கள் இருந்தன. (ஸஹீஹுல் புகாரி, ஜாதுல் மஆது)

ஸாபித் இப்னு தஹ்தாஹ் என்ற நபித்தோழர் தனது கூட்டத்தை அழைத்து "அன்சாரி சமூகமே! முஹம்மது (ஸல்) திட்டமாக கொல்லப்பட்டு விட்டாலும் நிச்சயமாக அல்லாஹ் உயிருடன் இருக்கின்றான் அவன் மரணிக்க மாட்டான் உங்களது மார்க்கத்திற்காக நீங்கள் போர் புரியுங்கள் நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு வெற்றியை வழங்குவான் உங்களுக்கு உதவி செய்வான்" என்று கூற அன்சாரிகளின் ஒரு கூட்டம் அவருடன் புறப்பட்டார்கள். அவர்கள் காலிதின் குதிரைப் படை வீரர்களைத் தாக்கினர். ஆனால், காலித் இவரையும் இவரது தோழர்களையும் கொன்றுவிட்டார். (அஸ்ஸீரத்துல் ஹல்பிய்யா)

ஒரு முஹாஜிர், அன்சாரி ஒருவருக்கு அருகில் சென்றார். அந்த அன்சாரி வெட்டப்பட்டு இரத்தத்தில் உழன்று கொண்டிருந்தார். அப்போது அந்த முஹாஜிர், அன்சாரியிடம் "முஹம்மது (ஸல்) கொல்லப்பட்டு விட்டார்கள் என்பது உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார். அதற்கு அந்த அன்சாரி முஹம்மது (ஸல்) கொல்லப்பட்டுவிட்டாலும் அவர்கள் மார்க்கத்தை எடுத்து வைத்து விட்டார்கள். நீங்கள் உங்களது மார்க்கத்திற்காகப் போரிடுங்கள்" என்று கூறினார். (ஜாதுல் மஆது)

இதுபோன்ற வீர உரைகளாலும் உணர்ச்சிமிக்க வார்த்தைகளாலும் முஸ்லிம்களுக்கு ஆன்மீக பலம் திரும்பியது. நிலை தடுமாறி நின்ற அவர்கள் சகஜநிலைக்குத் திரும்பினர்.

பணிவது அல்லது அப்துல்லாஹ் இப்னு உபையுடன் சேர்ந்துகொள்வது என்ற குழம்பிய சிந்தனையிலிருந்து விடுபட்டு தங்களது ஆயுதங்களைக் கையிலெடுத்துக் கொண்டு எதிரிகளுடன் சண்டையிட ஆரம்பித்தார்கள். கூட்டத்தைப் பிளந்து கொண்டு நபியவர்களை நோக்கி முன்னேறினர். நபியவர்கள் கொல்லப்பட்டார்கள் என்ற செய்தி வெறும் பொய்யென அவர்களுக்குத் தெரிந்து விட்டது. இதனால் அவர்களின் பலம் மேலும் கூடியது. எனவே, எதிரிகளின் கூட்டத்துடன் கடுமையாகப் போரிட்டுக் கொண்டே முன்னேறி நபியவர்களுக்கருகில் ஒன்று கூடினர்.

இதே நேரத்தில் மூன்றாவது ஒரு பிரிவினரும் இருந்தனர். அவர்களது கவலை நபியவர்களைப் பற்றியே இருந்தது. இவர்களில் அபூபக்ர், உமர், அலீ (ரழி) முதலிடம் வகித்தனர். நபியவர்களுக்கு ஆபத்து ஏற்படலாம் என்று தெரிந்தவுடன் முன்னேற்பாடாக நபியவர்களைச் சுற்றி இவர்கள் பாதுகாப்பில் ஈடுபட்டனர்.

**நபியவர்களைச் சுற்றி கடும் சண்டை**

முஸ்லிம்களில் இதற்கு முன் கூறப்பட்ட பிரிவினர்கள் எதிரிகளால் சூழப்பட்டு கடுமையான தாக்குதலைச் சமாளித்துக் கொண்டிருந்த அதே வேளையில் இங்கே நபி (ஸல்) அவர்களைச் சூழ்ந்திருந்த முஸ்லிம்களையும் குறைஷிகள் தாக்கினர். அப்போது நபி (ஸல்) அவர்களுடன் ஒன்பது நபர்கள் மட்டுமே இருந்தனர். இப்போதுதான் நாம் முன்னால் கண்டவாறு நபியவர்கள் "முஸ்லிம்களே என்னிடம் வாருங்கள். நான் அல்லாஹ்வின் தூதர்" என்று அழைத்தார்கள். அப்போது நபியவர்களின் சப்தத்தைக் கேட்ட அக்கம் பக்கத்திலிருந்த மற்ற எதிரிகளும் நபியவர்கள் இருந்த திசை நோக்கிப் பாய்ந்தனர். அதனால் நபியவர்களுடன் இருந்த ஒன்பது நபித்தோழர்களுக்கும் தாக்க வந்த எதிரிகளுக்குமிடையில் கடுமையான சண்டை நடந்தது. அச்சண்டையில் அந்தத் தோழர்கள் நபியவர்கள் மீது வைத்திருந்த அன்பும் அவர்களுக்காக தங்களையே அர்ப்பணிக்கும் தியாக உணர்வும் நன்கு வெளிப்பட்டது.

அனஸ் இப்னு மாலிக் (ரழி) இது தொடர்பாக அறிவிக்கும் ஒரு செய்தி ஸஹீஹ் முஸ்லிமில் இடம்பெற்றுள்ளது. அனஸ் இப்னு மாலிக் (ரழி) கூறுகிறார்கள்: உஹுத் போரன்று நபி (ஸல்) அவர்கள் ஏழு அன்சாரி தோழர்களுடனும் இரண்டு குறைஷித் தோழர்களுடனும் தனித்து விட்டார்கள். இணைவைப்பவர்கள் நபியவர்களைச் சூழ்ந்து கொண்ட போது "இவர்களை நம்மிடமிருந்து யார் விரட்டுவாரோ அவருக்குச் சொர்க்கம் உண்டு. (அல்லது) அவர் சொர்க்கத்தில் என்னுடன் இருப்பார்" என்று நபியவர்கள் கூறினார்கள். இதைக் கேட்ட அன்சாரி ஒருவர் அந்த எதிரிகளை நோக்கிப் பாய்ந்து சண்டையிட்டு வீரமரணம் எய்தினார். மீண்டும் இணைவைப்பவர்கள் நபியவர்களைத் தாக்க சூழ்ந்த போது முன்பு கூறியது போலவே கூறினார்கள். மீண்டும் அன்சாரிகளில் ஒருவர் முன்சென்று போரிட்டு வீரமரணம் எய்தினார். இவ்வாறே ஏழு அன்சாரித் தோழர்கள் கொல்லப்பட்டனர். அப்போது நபியவர்கள் தனது இரு குறைஷித் தோழர்களிடம் "நமது தோழர்களுக்கு நாம் நீதம் செலுத்தவில்லை" என்று கூறினார்கள். (முஹாஜிர்கள் அன்றி அன்சாரிகள் கொல்லப்பட்டதைப் பற்றி நபி (ஸல்) இவ்வாறு கூறினார்கள்.) (ஸஹீஹ் முஸ்லிம்)

**நபியவர்களின் வாழ்க்கையில் மிக இக்கட்டான நேரம்**

மேற்கூறப்பட்ட ஏழு அன்சாரித் தோழர்களில் இறுதியாக எதிரிகளிடம் சண்டையிட்டவர் உமாரா இப்னு யஜீத் (ரழி) என்பவராவார். இவர் சண்டையில் படுகாயமடைந்து கீழே விழுந்தார். அப்போது இரு குறைஷித் தோழர்கள் (தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் மற்றும் ஸஅது இப்னு அபீ வக்காஸ்) மட்டும்தான் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தனர். அல்லாஹ்வின் அருளால் சிறிது நேரத்தில் அங்கு வந்து சேர்ந்த சில முஸ்லிம்கள்

உமாராவை எதிரிகளிடமிருந்துக் காப்பற்றினர். கீழே விழுந்த அன்சாரித் தோழர் நபியவர்களின் பாதத்தை தன் தலைக்குத் தலையனையாக்கிக் கொண்டார். சற்று நேரத்தில் அவர் உயிர் பிரிந்த போது அவரது கன்னம் நபியவர்களின் பாதத்தின் மீது இருந்தது. (இப்னு ஹிஷாம்)

மேற்கூறப்பட்ட அந்த தருணம் நபியவர்களின் வாழ்க்கையிலேயே அவர்களுக்கு ஏற்பட்ட மிகச் சிரமமான நேரமாக இருந்தது. ஆனால், எதிரிகளைப் பொறுத்தவரையில் நபி (ஸல்) அவர்களை கொலை செய்வதற்கு அவர்களுக்குக் கிடைத்த நல்ல வாய்ப்பாக இருந்தது. அதை பயன்படுத்திக் கொள்வதற்கு அவர்கள் தாமதிக்கவில்லை. உடனடியாக நபியவர்களை நோக்கி தங்களது தாக்குதலைத் தொடுத்தனர். நபியவர்களின் கதையை முடிக்க வேண்டும் என்று வெறி கொண்டனர். உத்பா இப்னு அபீ வக்காஸ் என்பவன் நபியவர்களை நோக்கிக் கல்லெறிந்தான். இதனால் நபியவர்கள் கீழே விழுந்து விட்டார்கள். நபியவர்களின் வலது கீழ் முன் பல் சேதமடைந்து கீழ் உதடும் காயமடைந்தது. நபியவர்களை நோக்கி ஓடிவந்த அப்துல்லாஹ் இப்னு ஷிஹாப் ஜுஹ்ரீ என்பவன் நபியவர்களின் முகத்தைக் காயப்படுத்தினான். அப்துல்லாஹ் இப்னு கமிஆ நபியவர்களின் புஜத்தின் மீது வாளால் ஓங்கி வெட்டினான். நபியவர்கள் இரண்டு கவச ஆடைகள் அணிந்திருந்ததால் அந்த வெட்டு நபி (ஸல்) அவர்களின் உடலில் படவில்லை. ஆனால், தாக்கிய வேகத்தின் வலி ஒரு மாதம் வரை நீடித்திருந்தது. பின்பு நபியவர்களின் முகத்தை நோக்கி வாளை வீசினான். அதனால், நபியவர்கள் அணிந்திருந்த இரும்பு கவசத்தின் இரண்டு ஆணிகள் முகத்தில் குத்தின. அவன் “இதை வாங்கிக்கொள். நான்தான் இப்னு கமிஆ” என்று கூறினான். அப்போது நபியவர்கள் தனது முகத்தில் இருந்து இரத்தத்தை துடைத்தவர்களாக ‘அக்மஅகல்லாஹு’ (அல்லாஹ் உன்னை இழிவுபடுத்துவானாக) என்று கூறினார்கள். (ஃபத்ஹுல் பாரி)

அல்லாஹ் நபி (ஸல்) அவர்களின் இந்தப் பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டான். இப்போருக்குப் பின் ஒரு நாள் தனது ஆட்டு மந்தையைத் தேடி இப்னு கமிஆ புறப்பட்டான். அவனது ஆட்டு மந்தை மலை உச்சியின் மீது இருப்பது தெரியவே அவன் அங்கு சென்ற போது, கொம்புள்ள ஒரு முரட்டு ஆடு அவனை இடைவிடாமல் தாக்கி மலை உச்சியிலிருந்து கீழே தள்ளியது. (ஃபத்ஹுல் பாரி)

உஹுத் போரின் இந்த இக்கட்டான தருணத்தில் நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ்வுடைய தூதரின் முகத்தைக் காயப்படுத்திய கூட்டத்தினர் மீது அல்லாஹ்வின் கோபம் கடினமாகட்டும்” என்று பிரார்த்தித்தார்கள். சிறிது நேரம் கழித்து “அல்லாஹ்வே! எனது கூட்டத்தினரை மன்னித்து விடு. நிச்சயமாக அவர்கள் அறியாதவர்கள்” என்று வேண்டினார்கள். (ஃபத்ஹுல் பாரி, முஃஜமுத் தப்ரானி)

காழி இயாழ் அவர்களின் ‘ஷிஃபா’ என்ற நூலில் இவ்வாறு வந்துள்ளது: “அல்லாஹ்வே! எனது கூட்டத்தினரை நேர்வழியில் நடத்து! நிச்சயமாக அவர்கள் அறியாதவர்கள்” என பிரார்தித்ததாக வந்துள்ளது.

“உஹுத் போரில் நபி (ஸல்) அவர்களின் முன் பல் உடைக்கப்பட்டது. நபியவர்களின் தலையிலும் பலமான காயம் ஏற்பட்டது. அப்போது நபியவர்கள் தன் மீது வழிந்தோடிய இரத்தத்தை அகற்றியவர்களாக “அல்லாஹ்வின் தூதராகிய நான் அல்லாஹ்வின் பக்கம் மக்களை அழைக்க, அவர்களோ எனது முகத்தையும் முன் பல்லையும் உடைத்து விட எவ்வாறு அவர்கள் வெற்றிபெற முடியும்?” என்று கூறினார்கள். அல்லாஹ் இது தொடர்பாகவே இந்த வசனத்தை இறக்கினான்.

(நபியே!) இவ்விஷயத்தில் உங்களுக்கு எந்த அதிகாரமுமில்லை. (அல்லாஹ்) அவர்களை (இஸ்லாமைத் தழுவும்படிச் செய்து) மன்னித்து விடலாம். அல்லது அவர்கள்

அநியாயக்காரர்களாக இருப்பதனால் அவர்களை வேதனையும் செய்யலாம். (அல்குர்ஆன் 3:128) (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

இணைவைப்பவர்கள் நபி (ஸல்) அவர்களைக் கொன்று தீர்த்துவிட வேண்டும் என்ற ஒரே குறிக்கோளில் இருந்தனர். ஆனால், அவர்களை எதிர்த்து ஸஅது இப்னு அபீ வக்காஸ், தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரழி) ஆகிய இருவரும் மிக வீரத்துடனும் துணிவுடனும் போரிட்டனர். எனவே, எதிரிகள் தங்களது நோக்கத்தை அடைய முடியவில்லை.. மேலும், இவ்விரு தோழர்களும் அம்பெய்வதில் மிக தேர்ச்சி பெற்றவர்களாக இருந்ததால் நபியவர்களைத் தாக்க வந்த எதிரிகளின் கூட்டத்தை நபியவர்களுக்கு அருகே நெருங்கவிடாமல் தடுத்தனர்.

ஸஅது இப்னு அபீ வக்காஸுக்கு நபி (ஸல்) தங்களின் அம்புக் கூட்டைக் கொடுத்து "ஸஅதே! நீ அம்பெறிவாயாக! எனது தாயும் தந்தையும் உனக்கு அர்ப்பணமாகட்டும்!" என்று கூறினார்கள். நபியவர்கள் ஸஅதை தவிர வேறு எவருக்கும் இவ்வார்த்தையைக் கூறியதில்லை என்பதிலிருந்து எந்த அளவுக்கு நபி (ஸல்) அவர்களை ஸஅது (ரழி) பாதுகாத்தார்கள் என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். (ஸஹீஹுல் புகாரி)

தல்ஹா இப்னு உபைதுல்லாஹ்வின் வீரத்தைப் பற்றி ஜாபிர் (ரழி) அறிவிப்பதை இமாம் நஸயீ (ரஹ்) பதிவு செய்துள்ளார்கள். அஃதாவது: உஹுத் போரில் எதிரிகள் நபி (ஸல்) அவர்களைச் சூழ்ந்து கொண்டனர். நபியவர்களுடன் சில அன்சாரி தோழர்களும் இருந்தனர். அப்போது நபியவர்கள் "யார் இந்த எதிரிகளை எதிர்த்துப் போரிடுவார்?" என்று கேட்டார்கள். தல்ஹா (ரழி) "நான்" என்று முந்திக் கொண்டு பதில் கூறினார்கள். ஆனால், உடன் இருந்த அன்சாரிகளும் அதற்குத் தயாராகவே நபி (ஸல்) அன்சாரிகளுக்கு அனுமதியளித்தார்கள் ஒவ்வொரு அன்சாரியாக எதிரிகளுடன் சண்டையிட்டு வீர மரணம் எய்தினார்கள். அதற்குப் பின் தல்ஹா (ரழி) எதிரிகளுடன் சண்டையிட்டார்கள். அவர்களது சண்டை 11 நபர்களின் சண்டைக்குச் சமமாக இருந்தது. அவரது கையில் பல வெட்டுகள் விழுந்தன. சில விரல்கள் துண்டிக்கப்பட்டன. அப்போது 'ஹஸ்"!! (வேதனையில் கூறும் வார்த்தை) என்றார்கள். அதற்கு நபியவர்கள் "நீ 'பிஸ்மில்லாஹ்' என்று சொல்லியிருந்தால் மக்கள் பார்க்கும் அளவுக்கு வானவர்கள் உன்னை உயர்த்திருப்பார்கள்" என்றார்கள். இறுதியாக அல்லாஹ் எதிரிகளை விட்டும் நபியவர்களை பாதுகாத்தான். (ஃபத்ஹுல் பாரி)

"39 அல்லது 35 காயங்கள் தல்ஹா (ரழி) அவர்களுக்கு இப்போரில் ஏற்பட்டன. அவர்களது ஆட்காட்டி விரலும் அதை அடுத்துள்ள பெரிய விரலும் வெட்டப்பட்டன." (ஃபத்ஹுல் பாரி)

கைஸ் இப்னு அபூ ஹாஸிம் கூறியதாக ஸஹீஹுல் புகாரியில் வந்துள்ளது: "உஹுத் போர்க் களத்தில் நபி (ஸல்) அவர்களை நோக்கி சீறி வந்த அம்புகளை எந்தக் கையால் தல்ஹா (ரழி) தடுத்துக் காத்தாரோ அந்தக் கை உஹுத் போருக்குப் பின் செயலிழந்து போனதை நான் பார்த்தேன்."

நபி (ஸல்) அவர்கள் தல்ஹாவைப் பற்றி இவ்வாறு கூறினார்கள்: "யார் பூமிக்கு மேல் நடமாடும் ஷஹீதை (உயிர் நீத்த தியாகியை) பார்க்க விரும்புகிறார்களோ அவர் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ்வைப் பார்க்கட்டும்." (ஸுனனுத் திர்மிதி, இப்னு மாஜா)

ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: உஹுதுப் போரைப் பற்றி அபூபக்ருக்கு முன் பேசப்பட்டால் அன்றைய தினம் முழுவதும் (அதாவது அன்றைய தினத்தில் நபி (ஸல்) அவர்களைப் பாதுகாத்த நன்மையெல்லாம்) தல்ஹாவையே சாரும் என்று கூறுவார்கள். (ஃபத்ஹுல் பாரி)

மேலும், தல்ஹாவைப் பற்றி அபூபக்ர் (ரழி) இவ்வாறு ஒரு கவிதை கூறுவார்கள்:

“தல்ஹா இப்னு உபைதுல்லாஹ்வே!
உனக்காக பல சொர்க்கங்கள் உண்டு.
இன்னும் பல கண்ணழகிகளும் உண்டு.”

இந்த சிரமமான நெருக்கடியான நிலையில், அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்குத் தனது மறைமுகமான உதவியை இறக்கினான்.

இதைப் பற்றி ஸஅது (ரழி) அறிவிக்கும் ஒரு செய்தி ஸஹீஹுல் புகாரி மற்றும் ஸஹீஹ் முஸ்லிமில் இடம் பெற்றுள்ளது. ஸஅது (ரழி) கூறுகிறார்கள்: உஹுத் போரில் நான் நபியவர்களைப் பார்த்தேன். அவர்களைப் பாதுகாப்பதற்காக அவர்களைச் சுற்றி இருவர் கடுமையாக சண்டை செய்து கொண்டிருந்தனர் அவர்கள் வெண்மையான ஆடை அணிந்திருந்தனர் இந்நாளுக்கு முன்போ, பின்போ அவர்களை நான் பார்த்ததில்லை அவர்கள் ஜிப்ரீல், மீக்காயில் ஆவார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

### நபியவர்கள் அருகே தோழர்கள் திரளுதல்

மேற்கூறப்பட்ட நிகழ்ச்சிகளெல்லாம் கண் சிமிட்டும் சில நிமிடங்களில் மின்னல் வேகத்தில் நடந்து முடிந்தன. நபி (ஸல்) அவர்களுக்கு மிக நெருக்கமான பல தோழர்கள் போரில் முதல் அணியில் நின்று எதிரிகளுடன் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். திடீரென போரின் நிலை இவ்வாறு மாறும் என அவர்கள் எதிர்பார்க்கவில்லை அல்லது நபியவர்களின் சப்தத்தை அவர்கள் உடனடியாகக் கேட்டிருந்தால் நபியவர்களுக்கு எந்தத் தீங்கும் ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காக விரைந்துச் சென்று நபியவர்களைப் பாதுகாத்திருப்பார்கள். ஆனால், இவர்கள் நபியவர்களிடம் வருவதற்கு முன்னதாகவே நபியவர்களுக்கு அத்தனை காயங்களும் ஏற்பட்டு விட்டன் ஆறு அன்சாரிகள் கொல்லப்பட்டு விட்டனர். ஏழாவதாக ஓர் அன்சாரி தோழர் காயமடைந்து, குற்றுயிராக பூமியில் விழுந்து கிடந்தார் அவரும் சிறிது நேரத்தில் மரணித்தார். ஸஅது, தல்ஹா (ரழி) ஆகிய இருவர் மட்டும் எதிரிகளை நபி (ஸல்) அவர்களை நெருங்கவிடாமல் எதிர்த்து சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்.

படையின் முன்அணியில் இருந்து சண்டை செய்து கொண்டிருந்த சிறப்புமிக்க நபித்தோழர்கள் நிலைமையறிந்து நபியவர்களிடம் விரைந்து வந்து, அவர்களைச் சுற்றி வலையாகப் பின்னி நின்று, எதிரிகளிடமிருந்து பாதுகாப்பதற்காக கடும் போர் புரிந்தனர். இவ்வாறு திரும்பிய தோழர்களில் முதலாமவர் நபியவர்களின் குகைத் தோழரான அபூபக்ர் (ரழி) ஆவார்கள்.

இதோ... அந்த தோழரின் அருமை மகளார் நமது அன்னை ஆயிஷா (ரழி) தனது தந்தை அபூபக்ர் ஸித்தீக் (ரழி) கூறியதாக அறிவிக்கிறார்கள்:

“உஹுத் போரன்று மக்கள் நபி (ஸல்) அவர்களை விட்டும் பல திசைகளில் சிதறிவிட்டார்கள். பின்பு நான்தான் முதலில் நபியவர்களிடம் திரும்பி வந்தேன். அப்போது அவர்களுக்கு முன் ஒருவர் அவர்களைப் பாதுகாத்தவராக எதிரிகளிடம் சண்டை செய்து கொண்டிருந்ததைப் பார்த்தேன். நான் என் மனதிற்குள் “நீ தல்ஹாதானே! எனது தந்தையும் தாயும் உனக்கு அர்ப்பணமாகட்டும். நீ தல்ஹாதானே! எனது தந்தையும் தாயும் உனக்கு அர்ப்பணமாகட்டும். எனக்குத்தான் வாய்ப்பு தவறிவிட்டது. எனது இனத்தை சேர்ந்த உனக்காவது நபியவர்களைப் பாதுகாக்கும் வாய்ப்புக் கிடைத்ததில் எனக்கு மிக்க மகிழ்ச்சி என்று கூறிக்கொண்டேன். அதற்குள் அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் (ரழி) பறவையைப் போன்று விரைந்து வந்து என்னை அடைந்தார். நாங்கள் இருவரும் நபியவர்களை நோக்கி விரைந்தோம். அங்கு நாங்கள் சென்றடையும் போது தல்ஹா (ரழி) நபியவர்களுக்கு முன் மயங்கி விழுகிறார்.

நபி (ஸல்) அவர்கள் “உங்களது சகோதரரைக் காப்பாற்றுங்கள்! அவர் தனக்கு சொர்க்கத்தை சொந்தமாக்கிக் கொண்டார்” என்று கூறினார்கள். நபியவர்களின் முகம் தாக்கப்பட்டிருந்ததால் அவர்களது முகக்கவசத்தின் இரண்டு ஆணிகள் கண்ணுக்குக் கீழ் பகுதியில் புகுந்து விட்டன. நான் அதை எடுக்க விரும்பினேன். அப்போது அபூ உபைதா (ரழி) “அபூபக்ரே! அல்லாஹ்வுக்காக கேட்கிறேன். அதை நான்தான் செய்வேன்” என்று கூறினார். பின்பு அபூ உபைதா (ரழி) நபியவர்களுக்கு வலி ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காக தனது வாயால் அதை மிக மென்மையாக எடுக்க முயற்சித்தார். பிறகு, அதை நபியவர்களின் முகத்திலிருந்து பல்லால் கடித்து எடுத்தார். அதனால் அவரது முன் பல் விழுந்து விட்டது. இரண்டாவது ஆணியை அகற்ற நான் விரும்பினேன். அப்போதும் அபூ உபைதா (ரழி) “அல்லாஹ்வுக்காக கேட்கிறேன். நான்தான் அதையும் எடுப்பேன்” என்று கூறி, முன்பு செய்தது போன்றே மிக மெதுவாக எடுத்தபோது அபூ உபைதாவின் இன்னொரு பல்லும் விழுந்துவிட்டது. மீண்டும் நபியவர்கள் “உங்களது சகோதரரைக் காப்பாற்றுங்கள். அவர் தனக்கு சொர்க்கத்தை சொந்தமாக்கிக் கொண்டார்” என்று கூறினார்கள். நாங்கள் தல்ஹா (ரழி) அவர்களைத் தூக்கிச் சென்று சிகிச்சை அளித்தோம். அவருக்கு பத்து வாள் வெட்டுகள் விழுந்திருந்தன. சிகிச்சை அளித்த சிறிது நேரத்தில் மீண்டும் தல்ஹா (ரழி) நபியவர்களிடம் வந்துவிட்டார்கள்.” (ஜாதுல் மஆது, இப்னு ப்பான்)

இந்த சிரமமான வினாடிகளில் முஸ்லிம் மாவீரர்களின் ஒரு கூட்டம் நபி (ஸல்) அவர்களைச் சுற்றி குழுமியது. அவர்களில் அபூ துஜானா, முஸ்அப் இப்னு உமைர், அலீ இப்னு அபூதாலிப், ஸஹ்ல் இப்னு ஹுனைஃப், அபூ ஸயீத் குத்யின் தகப்பனாரான மாலிக் இப்னு சினான், உம்மு அமாரா பின்த் கஅப் அல் மாஜினியா என்ற பெண்மணி, கதாதா இப்னு நுஃமான், உமர் இப்னுல் கத்தாப், ஹாத்திப் இப்னு அபூபல்தஆ, அபூ தல்ஹா (ரழியல்லாஹு அன்ஹும்) ஆகியோர் அதில் அடங்குவர். (முஸ்னது அபீ யஃலா)

### எதிரிகளின் தாக்குதல் வேகமாகுதல்

நபி (ஸல்) அவர்களைத் தாக்க விரைந்த எதிரிகளின் எண்ணிக்கை ஒவ்வொரு நேரமும் அதிகரித்தவாறே இருந்தது. அவ்வாறே படையின் மற்ற பகுதிகளிலும் முஸ்லிம்கள் மீதும் எதிரிகளின் தாக்குதல் கடுமையானது. ‘அபூ ஆமிர்’ என்ற எதிரி, போர் மைதானத்தின் பல இடங்களில் தோண்டி வைத்திருந்த பள்ளங்கள் ஒன்றில் நபி (ஸல்) அவர்கள் விழுந்து விட்டார்கள். அதில் அவர்களது மூட்டுக்கால் காயமடைந்தது. பிறகு அலீ (ரழி) அவர்களின் உதவியால் நபியவர்கள் பள்ளத்திலிருந்து மேலே எழுந்தார்கள்.

இப்போரில் கலந்த முஹாஜிர்களில் ஒருவர் போரின் நிலைமை குறித்து விவரிக்கிறார்: “நான் உஹுத் போரில் கலந்து கொண்டேன். நபி (ஸல்) அவர்களை நோக்கி அம்புகள் ஒவ்வொரு திசையிலிருந்தும் எறியப்பட்டன. ஆனால், அவை நபியவர்களைத் தாக்கிவிடாமல் அல்லாஹ் பாதுகாத்தான். எதிரிகளில் ஒருவனான இப்னு ஷிஹாப் ஜுஹ் என்பவன் “எனக்கு முஹம்மதைக் காட்டுங்கள். அவர் உயிருடன் தப்பித்தால் நான் தப்பிக்க முடியாது” என்று கத்திக் கொண்டிருந்தான். அப்போது நபியவர்கள் அவனுக்கு அருகில்தான் இருந்தார்கள். எனினும், அவனால் அவர்களைப் பார்க்க முடியவில்லை. சிறிது நேரத்திற்குப் பின் நபியவர்கள் வேறு பக்கம் சென்றுவிட்ட போது, “உனக்கு அருகில்தானே முஹம்மது இருந்தார். அவரை நீ கொன்று இருக்கலாமே” என்று எதிரிப் படையின் தளபதிகளில் ஒருவரான ஸஃப்வான் இப்னு ஷிஹாப் இடம் கூறினார். அதற்கு “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அவரைப் பார்க்கவில்லையே! அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து நான் சொல்கிறேன். அவர் நம்மிடமிருந்து காப்பாற்றப்பட்டு விட்டார். நாங்கள் நான்கு நபர்கள் அவரைக் கொல்ல வேண்டும் என்ற உறுதியுடன் அவரைத் தேடி அலைந்தோம். ஆனால், எங்களால் அவரருகில் செல்ல முடியவில்லை” என்று இப்னு ஷிஹாப் கூறினான். (ஜாதுல் மஆது)

## செயற்கரிய வீரதீரச் செயல்கள்

முஸ்லிம்கள் இந்நாளில் வரலாறு காணாத அற்புதமான வீரதீரச் செயல்களையும் தியாகங்களையும் புரிந்தார்கள். அவற்றில் சிலவற்றை இங்கு பார்ப்போம்:

நபி (ஸல்) அவர்களுக்கு முன் அபூ தல்ஹா (ரழி) தன்னையே தடுப்பாக ஆக்கி நெஞ்சை நிமிர்த்தி எதிரிகளின் தாக்குதல்களிலிருந்து நபியவர்களைப் பாதுகாத்தார்கள்.

இதைப் பற்றி அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: உஹுத் போர் அன்று அபூ தல்ஹா (ரழி) நபியவர்களுக்கு முன்பாக நின்று தனது கேடயத்தால் நபியவர்களைப் பாதுகாத்துக் கொண்டு இருந்தார்கள். அபூ தல்ஹா (ரழி) மிக வேகமாக அம்பெறியும் திறமை பெற்றவர்கள். அன்றைய தினத்தில் மட்டும் அவரது கரத்தில் இரண்டு அல்லது மூன்று வில்கள் உடைந்தன. ஒருவர் அபூ தல்ஹாவுக்கு அருகில் அம்புக்கூட்டுடன் சென்ற போது "அதை அபூ தல்ஹாவுக்குக் கொடு!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும். நபியவர்கள் எதிரிகளின் நிலையை அறிந்து கொள்ள அவ்வப்போது தங்களது தலையை உயர்த்திப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அபூ தல்ஹா (ரழி) "எனது தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! நீங்கள் எட்டிப் பார்க்காதீர்கள் எதிரிகளின் அம்பு உங்களைத் தாக்கிவிடலாம் உங்களது நெஞ்சுக்கு முன் எனது நெஞ்சு இருக்கட்டும்" என்று கூறுவார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: அபூதல்ஹா (ரழி) ஒரு கேடயத்தால் நபி (ஸல்) அவர்களைப் பாதுகாத்துக் கொண்டிருந்தார். அவர் திறமையாக அம்பெறிபவராக இருந்தார். அவர் அம்பெறியும் போது அந்த அம்பு எங்கே விழுகிறது என்று நபியவர்கள் தலையை உயர்த்திப் பார்ப்பார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அபூ துஜானா பலமிக்க இரும்பு கவச ஆடை அணிந்திருந்தார். நபி (ஸல்) அவர்களை நோக்கி வரும் அம்புகளைத் தன் முதுகை கேடயமாக்கி தடுத்துக் கொள்வார்.

நபி (ஸல்) அவர்களின் பல்லை உடைத்து விட்டு குதிரைமேல் வேகமாகச் சென்றுக் கொண்டிருந்தான் உத்பா இப்னு அபீ வக்காஸ். இவனை ஹாத்திப் இப்னு அபீ பல்தஆ (ரழி) பின்தொடர்ந்துச் சென்று அவனது தலையை வெட்டி வீசினார். பிறகு அவனது குதிரையையும் வாளையும் எடுத்து வந்தார். இவன் நபியவர்களின் பாதுகாவலரான ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரழி) அவர்களின் சகோதரனாவான். இவனைத் தீர்த்து கட்ட ஸஅது (ரழி) ஆர்வமாக இருந்தார். ஆனால், அந்த வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கவில்லை. ஹாத்திப் (ரழி) அந்த வாய்ப்பைத் தட்டிச் சென்றார்.

அம்பெறிவதில் திறமை பெற்ற வீரர்களில் ஒருவரான ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் (ரழி) மரணம் வரை போர் புரிவேன் என்று நபி (ஸல்) அவர்களிடம் இப்போருக்கிடையில் வாக்குப் பிரமாணம் செய்தார் இவர் இப்போரில் எதிரிகளை விரட்டி அடிப்பதில் பெரும் பங்காற்றினார்.

அன்றைய தினம் நபி (ஸல்) அவர்களும் அம்பெறிந்தார்கள். இது குறித்து கதாதா இப்னு நுஃமான் (ரழி) அறிவிக்கின்றார்கள்: வில்லின் நரம்பு அறுபடும் வரை நபி (ஸல்) அவர்கள் அம்பெறிந்தார்கள். அறுந்துவிட்ட அந்த வில்லை கதாதா இப்னு நுஃமான் (ரழி) தன்னிடம் வைத்திருந்தார்கள்.

கதாதாவின் கண்ணில் ஏற்பட்ட காயத்தால் அது பிதுங்கிவிட்டது. நபி (ஸல்) அவர்கள் அதை தனது கையால் அவரது கண்குழியில் வைத்து பிரார்த்தித்தார்கள். அது மிக அழகியதாகவும் கூர்ந்த பார்வை உடையதாகவும் அமைந்து விட்டது.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) மிக மும்முரமாகப் போர் செய்தார். அவரது வாயில் பலத்த காயம் ஏற்பட்டு பல் உடைந்தது. இருபதுக்கும் அதிகமான காயங்கள் அவருக்கு ஏற்பட்டன. அவற்றில் சில காலில் ஏற்பட்டதால் அவரால் சில காலம் வரை நடக்க முடியவில்லை.

முஸ்லிம்களிடம் சண்டை செய்து கொண்டிருந்த இப்னு கமிஆவிடம் நபித்தோழியரான உம்மு அமாரா (ரழி) மோதினார். அவன் இவரது புஜத்தில் வெட்டியதால் இவருக்கு பெரும் காயம் ஏற்பட்டது. இவரும் அவனைப் பலமுறை வாளால் தாக்கினார்கள். ஆனால், அவன் மீது இரண்டு கவச ஆடைகள் இருந்ததால் அவன் தப்பித்துக் கொண்டான். இப்போரில் உம்மு அமாராவுக்கு 12 பலத்த காயங்கள் ஏற்பட்டன.

முஸ்அப் இப்னு உமைரும் போரில் தனது முழு ஆற்றலையும் வெளிப்படுத்தி எதிரிகளுடன் சளைக்காமல் சண்டையிட்டார். தனது கையில் கொடியை ஏந்திக் கொண்டு நபி (ஸல்) அவர்களைத் தாக்கச் சென்று கொண்டிருந்த இப்னு கமிஆ மற்றும் அவனது நண்பர்களை எதிர்த்து சண்டையிட்டார். அவர்கள் முஸ்அபின் வலக்கரத்தை வெட்டிவிடவே கொடியை தனது இடக்கரத்தால் பற்றிக் கொண்டார். பின்பு, இடது கையையும் வெட்டிவிடவே மண்டியிட்டு தனது கழுத்தாலும் நெஞ்சாலும் அதை அணைத்துக் கொண்டார். முஸ்அப் தோற்றத்தில் நபியவர்களைப் போன்று இருந்தார். எனவே, எதிரி இப்னு கமிஆ முஸ்அபைக் கொன்றுவிட்டு, தான் நபியவர்களைக் கொன்றதாக எண்ணி, இணைவைப்பவர்களிடம் சென்று “நிச்சயமாக முஹம்மது கொல்லப்பட்டார்” என்று கூச்சலிட்டான். (இப்னு ஹிஷாம்)

**நபியவர்கள் கொல்லப்பட்ட வதந்தி - அதன் விளைவு!**

இவன் கூச்சலிட்ட சில நிமிடங்களிலேயே நபி (ஸல்) அவர்கள் கொல்லப்பட்டார்கள் என்ற செய்தி இணைவைப்பவர்கள் மற்றும் முஸ்லிம்களுக்கு மத்தியில் பரவியது. இந்நேரத்தில் எதிரிகளால் சூழப்பட்ட பெரும்பாலான முஸ்லிம்களின் உறுதி குலைந்தது. அவர்களுக்கு மத்தியில் பெரும் குழப்பமும் சலசலப்பும் ஏற்பட்டது. எனினும், இந்த வதந்தியால் எதிரிகளின் தாக்குதல் சற்றே தணிந்தது. அதற்குக் காரணம், நபியவர்களைக் கொல்ல வேண்டும் என்ற தங்களது நோக்கத்தில் வெற்றி பெற்று விட்டோம் என்று அவர்கள் எண்ணினர். ஆகவே, தாக்குதலைக் குறைத்துக் கொண்டு போரில் கொல்லப்பட்ட முஸ்லிம்களின் உடல்களைச் சிதைப்பதில் ஈடுபட்டனர்.

**நபியவர்கள் போரை தொடர்கிறார்கள்**

முஸ்அப் கொல்லப்பட்டவுடன் நபி (ஸல்) அவர்கள் கொடியை அலீ இப்னு அபூதாலிபிடம் வழங்கினார்கள். நபியவர்களிடமிருந்து கொடியை வாங்கிய அலீ (ரழி) கடுமையாக எதிரிகளை தாக்கி கதிகலங்க வைத்தார்கள். அங்கிருந்த மற்ற நபித்தோழர்களும் எதிரிகளை எதிர்த்து சண்டையிடுவதிலும், முஸ்லிம்களைப் பாதுகாப்பதிலும் தீவிரமாயினர்.

எதிரிகளால் சூழப்பட்டிருந்த முஸ்லிம்களைக் காப்பாற்றுவதற்காக தன்னுடன் இருந்த சிறு படையை அழைத்துக் கொண்டு எதிரிகளின் படையை நபி (ஸல்) அவர்கள் பிளந்தார்கள். அப்போது நபியவர்களை முஸ்லிம்களில் கஅப் இப்னு மாலிக் (ரழி) முதன் முதலாக பார்த்து விட்டு மிக உயர்ந்த சப்தத்தில் “முஸ்லிம்களே! நற்செய்தி பெற்றுக் கொள்ளுங்கள். இதோ... அல்லாஹ்வின் தூதர் வந்து விட்டார்கள்” என்று உரக்கக் கூறினார். தன்னை எதிரிகள் தெரிந்து கொள்ளக் கூடாது என்பதற்காக கஅபிடம் அமைதியாக இரு! என்று நபியவர்கள் சைகை செய்தார்கள். எனினும், முஸ்லிம்களின் காதுகளுக்குக் கஅபின் குரல் எட்டிவிடவே நபியவர்களை நோக்கி முப்பது தோழர்கள் ஒன்று கூடினர்.

இவ்வாறு தோழர்களின் பெரும் கூட்டம் ஒன்று சேர்ந்த பின், தாக்கிக் கொண்டிருக்கும் எதிரிகளை விளக்கியவர்களாக தங்களது படையை மலை கணவாய்களுக்கு நபி (ஸல்) அவர்கள் அழைத்துச் சென்றார்கள். நபியவர்களின் இத்திட்டத்தைத் தடுக்க எதிரிகள் பல வழிகளிலும் போராடினர். இருந்தும் இஸ்லாமியச் சிங்கங்களின் வீரத்திற்கு முன் அவர்கள் அனைவரும் தோல்வியையே கண்டனர்.

இணைவைப்பவர்களின் குதிரை வீரர்களில் ஒருவனான உஸ்மான் இப்னு அப்துல்லாஹ் இப்னு முகீரா என்பவன் நபி (ஸல்) அவர்களை நோக்கி ‘‘இவர் தப்பித்தால் நான் தப்பிக்க முடியாது’’ என்று கூறிக்கொண்டே விரைந்து வந்தான். நபியவர்கள் அவனை எதிர்ப்பதற்குத் ஆயத்தமானார்கள். ஆனால் வழியிலிருந்த பள்ளத்தில் அவனது குதிரை தடுமாறி விழுந்தது. ஹாரிஸ் இப்னு சிம்மா (ரழி) அவனை எதிர்கொண்டு அவனது காலில் வெட்டினார்கள். அதனால் அவனால் எழுந்திருக்க முடியவில்லை. பின்பு அவன் மீது பாய்ந்து அவனது கதையை முடித்துவிட்டு, அவனது ஆயுதத்தை எடுத்துக்கொண்டு நபியவர்களிடம் வந்தார்கள்.

இக்காட்சியைப் பார்த்த மக்காவின் குதிரை வீரர்களில் மற்றொருவனான அப்துல்லாஹ் இப்னு ஜாபிர் என்பவன் ஹாரிஸ் இப்னு சிம்மாவிடம் சண்டையிட்டான். அவரது புஜத்தை வெட்டிக் காயப்படுத்தினான். அவரை அவன் கொல்வதற்கு முன் முஸ்லிம்கள் அவரைப் பாதுகாத்துக் கொண்டார்கள். ஹாரிஸ் தாக்கப்பட்டதை பார்த்து கொதித்தெழுந்த அஞ்சா நெஞ்சன், வீராதி வீரர் அபூ துஜானா (ரழி) எதிரி அப்துல்லாஹ் இப்னு ஜாபின் தலையைக் கண் சிமிட்டும் நொடியில் வெட்டி வீசினார்.

போர் இவ்வளவு கடுமையாகவும் உக்கிரமாகவும் நடந்து கொண்டிருந்த வேளையில் அல்லாஹுத் தஆலா முஸ்லிம்களுக்கு நிம்மதியளிக்கும் பொருட்டு சிறு தூக்கத்தை இறக்கினான். இதைப் பற்றி திருமறையிலும் கூறப்பட்டுள்ளது. இதோ... அபூதல்ஹா (ரழி) அது பற்றி கூறுகிறார்:

‘‘உஹுத் போரில் சிறு தூக்கம் பீடித்தவர்களில் நானும் ஒருவனாக இருந்தேன். எனது கையிலிருந்து பலமுறை வாள் வீழ்ந்தது நான் அதை எடுக்கிறேன் அது கீழே விழுகிறது நான் அதை எடுக்கிறேன் அது கீழே விழுகிறது.’’ (ஸஹீஹுல் புகாரி)

இவ்வாறு அல்லாஹ் பெரிய துன்பமான சமயத்திலும் முஸ்லிம்களுக்கு மன நிம்மதியை வழங்கினான்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு வழியாக எதிரிகளுடன் போராடி தன்னுடன் இருந்த முஸ்லிம்களை மலைக் கணவாய்க்கு அருகில் திட்டமிட்டவாறு ஒதுக்கிக் கொண்டார்கள். மேலும், மற்ற இஸ்லாமியப் படைகளும் இந்தப் பாதுகாப்பான இடத்திற்கு வந்து சேர வழி ஏற்படுத்திக் கொடுத்தார்கள். இவ்வாறு நபி (ஸல்) அவர்களின் போர்த் திறமைக்கு முன் காலிதின் போர்த் திறமை தோற்றது.

**சண்டாளன் ‘உபை’ கொல்லப்படுதல்**

நபி (ஸல்) அவர்கள் மலைக் கணவாயில் தங்களையும் தோழர்களையும் பாதுகாத்துக் கொண்ட போது உபை இப்னு கலஃப் ‘‘முஹம்மது எங்கே! அவர் தப்பித்துக் கொண்டால் நான் தப்பிக்க முடியாது’’ என்று அலறியவனாக நபியவர்களைத் தேடி அலைந்தான். அப்பொழுது அவன் நபியவர்களைப் பார்த்துவிட கொலை வெறியுடன் அவர்களை நோக்கி விரைந்தான். தோழர்கள் ‘‘அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருவர் சென்று அவனைத் தாக்கட்டுமா?’’ என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) ‘‘அவனை விட்டு விடுங்கள். அவன் என்னருகில் வரட்டும்’’ என்றார்கள். அவன் நபியவர்களுக்கு அருகில் நெருங்கிய போது ஹாரிஸ் இப்னு சிம்மாவிடமிருந்து ஒரு சிறிய ஈட்டியை வாங்கி நபியவர்கள் தனது

உடலைச் சிலிர்த்தார்கள். எப்படி ஒட்டகம் சிலிர்க்கும் போது அதனுடைய முதுகிலிருந்து முடி பறக்குமோ, அதுபோன்று மக்கள் நபி (ஸல்) அவர்களை விட்டு பறந்தார்கள். பிறகு நபி (ஸல்) அவர்கள் அவனை முன்னோக்கி அவன் அணிந்திருந்த கவச ஆடைக்கும் தலைக் கவசத்திற்குமிடையே தெரிந்த அவனது கழுத்தைக் குறி பார்த்து ஈட்டியை எறிந்தார்கள். அந்த ஈட்டி அவனது கழுத்தை உராய்ந்து சென்று சிறிய காயத்தை ஏற்படுத்தியது. ஆனால், அதனால் ஏற்பட்ட வலியோ மிகக் கடுமையாக இருந்தது, அவன் ஒட்டகத்தில் அமர முடியாமல் பலமுறை கீழே விழுந்து எழுந்தான். அந்த சிறிய காயத்துடன் குறைஷிகளிடம் திரும்பி "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முஹம்மது என்னைக் கொன்று விட்டார்" என்று சப்தமிட்டான். அதற்கு குறைஷிகள் "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீ பயந்துவிட்டாய். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உனக்கு ஏதோ கோளாறு ஏற்பட்டுவிட்டது. இல்லையென்றால் இந்த சிறிய காயத்திற்குப்போய் இப்படி கூச்சல் போடுவாயா? என்று கூறி நகைத்தார்கள். அதற்கு அவன் "முஹம்மது மக்காவில் இருக்கும்போதே நான் உன்னைக் கொல்வேன்! என்று கூறியிருந்தார். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்மீது அவர் துப்பியிருந்தாலும் நான் செத்திருப்பேன்" என்று கூறினான். மாடு அலறுவது போன்று அவன் அலறினான். "எனது உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக! எனக்கு இருக்கும் வேதனையை இந்த "தில்மஜாஸிலுள்ள' அனைவருக்கும் பிரித்துக் கொடுத்தால் அவர்கள் அனைவரும் இறந்துவிடுவார்கள்" என்றான். மக்கா செல்லும் வழியில் 'ஸஃப்' என்ற இடத்தில் இவன் இறந்தான். (இப்னு ஹிஷாம்)

### நபியவர்களுக்கு தல்ஹா தோள் கொடுக்கிறார்

நபி (ஸல்) அவர்கள் மலையை நோக்கி ஒதுங்க முயன்ற போது வழியில் ஒரு பாறை குறுக்கிட்டது. அதன் மீது ஏறிதான் செல்ல வேண்டும் ஆனால், அவர்களால் ஏற முடியவில்லை. காரணம், அவர்களின் உடல் கனமாக இருந்தது இரண்டு கவச ஆடைகள் அணிந்திருந்தார்கள் அத்துடன் பலத்த காயங்களும் ஏற்பட்டிருந்தன. எனவே, தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரழி) பாறைக்குக் கீழ் உட்கார்ந்து கொள்ள, நபியவர்கள் அவர் உதவியால் மேலே ஏறினார்கள். பிறகு, "தல்ஹா (சொர்க்கத்தை) தனக்கு கடமையாக்கிக் கொண்டார்" என்று நபி (ஸல்) அவருக்கு நற்செய்தி கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

### இணைவைப்பவர்களின் இறுதி தாக்குதல்

நபி (ஸல்) அவர்கள் கணவாயின் மையப்பகுதியில் நன்கு நிலை கொண்டபோது இணை வைப்பவர்கள் மீண்டும் தாக்கினர். இது முஸ்லிம்களுக்கு சேதம் ஏற்படுத்த வேண்டுமென்று அவர்கள் செய்த இறுதித் தாக்குதலாகும்.

நபியவர்கள் மலைக் கணவாயில் இருந்த போது குறைஷிகளின் ஒரு கூட்டம் மலையின் மீது ஏறி வந்து தாக்க முயற்சி செய்தது. அவர்களுக்கு அபூ ஸுஃப்யானும் காலித் இப்னு வலீதும் தலைமை தாங்கினர். அப்போது நபியவர்கள் அல்லாஹ்விடம் "அல்லாஹ்வே! அவர்கள் எங்களுக்கு மேல் உயரே ஏறிவிடக் கூடாது" என்று பிரார்த்தித்தார்கள். அப்போது உமர் இப்னு கத்தாபும் (ரழி) அவருடன் முஹாஜிர்களின் ஒரு சிறு கூட்டமும் சென்று அவர்களிடம் சண்டையிட்டு கீழே இறக்கியது. (இப்னு ஹிஷாம்)

ஸஅது (ரழி) கூறுகிறார்கள்: "(மற்றொருமுறை) எதிரிகள் மலைக்கு மேல் ஏறிக் கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் என்னிடம் "அவர்களை நீ விரட்டு!" என்றார்கள். அதற்கு "நான் எப்படி தனியாக அவர்களை விரட்ட முடியும்?" என்றேன். நபியவர்கள் "அவர்களை நீ விரட்டு!" என்று மூன்று முறை கூறவே, எனது அம்புக் கூட்டிலிருந்து ஓர் அம்பை எடுத்து அக்கூட்டத்தில் முந்தி வந்து கொண்டிருந்தவனைக் குறிபார்த்து எய்தேன் அவன் செத்து மடிந்தான். நான் சென்று அந்த அம்பை எடுத்துக் கொண்டேன். பின்பு

இன்னொருவரின் அருகில் வரவே அதே அம்பைக் கொண்டு எய்தேன் அவனும் செத்து மடிந்தான். நான் சென்று அம்பை எடுத்துக் கொண்டேன். அடுத்து ஒருவன் வர, அவனையும் அதே அம்பால் கொன்றேன். மூவர் இறந்தவுடன் மற்றவர்கள் ஏற அஞ்சி இறங்கி விட்டனர். அப்போது நான் “இந்த அம்பு அல்லாஹ்வின் அருள் பெற்றது” என்று கூறி அதை என் அம்புக் கூட்டில் பாதுகாத்துக் கொண்டேன்.”

இப்படி பல எதிரிகளின் உயிர்களை குடித்த அம்பை ஸஅது (ரழி) தங்களிடம் மரணம் வரை பாதுகாத்தார்கள். அவர்கள் மரணித்த பின்பு அவர்களது பிள்ளைகள் அதை பாதுகாத்து வைத்திருந்தனர். (ஜாதுல் மஆது)

### போரில் உயிர் நீத்த தியாகிகளைச் சிதைத்தல்

நபி (ஸல்) அவர்களைத் தாக்க வேண்டுமென பல முறை எதிரிகள் முயன்றனர். ஆனால், முஸ்லிம்கள் நபியவர்களுக்கு அரணாக விளங்கியதால் எதிரிகளால் ஒன்றும் செய்ய முடிய வில்லை. இருப்பினும் நபியவர்கள் தங்களின் தாக்குதலில் இறந்திருக்கலாம் என்றும் சற்றே உறுதியாக எண்ணினர். அதனால் போரை நிறுத்திக் கொண்டு மக்காவிற்குப் புறப்பட தங்களுடைய முகாம்களுக்குத் திரும்பினர். அவ்வாறு திரும்பும் போது சில ஆண்களும் பெண்களும் போரில் கொல்லப்பட்ட முஸ்லிம்களின் காது, மூக்கு, மர்ம உறுப்புகள் போன்றவற்றை அறுத்தனர் வயிறுகளைக் கிழித்தனர் ஹிந்த் பின்த் உத்பா என்பவள் ஹம்ஜா (ரழி) அவர்களின் ஈரலை அறுத்து மென்று முழுங்க முயற்சித்தாள். அவளால் முடியாமல் போகவே அதைத் துப்பிவிட்டாள். பின்பு, தியாகிகளின் காதுகளையும் மூக்குகளையும் அறுத்து தனக்குக் கால் கொலுசாகவும், கழுத்து மாலையாகவும் அணிந்து கொண்டாள். (இப்னு ஹிஷாம்)

### இறுதி வரை சண்டையிட முஸ்லிம்கள் துணிதல்

இந்தக் கடைசி நேரத்தில் இரண்டு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அதன் மூலம் முஸ்லிம்களின் துணிவையும், அல்லாஹ்வின் பாதையில் மரணத்தை சந்திக்க வேண்டும் என்ற அவர்களுக்கு இருந்த அலாதியான ஆர்வத்தையும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

1) கஅப் இப்னு மாலிக் (ரழி) கூறுகிறார்கள்: “உஹுத் போரில் நானும் கலந்து கொண்டேன். அப்போது கொல்லப்பட்டுக் கிடந்த முஸ்லிம்களை எதிரிகள் சிதைப்பதைப் பார்த்து திகைத்து நின்றுவிட்டேன். அங்கே ஒருவன் உறுதியான உருக்குச் சட்டை அணிந்தவனாக கொல்லப்பட்ட முஸ்லிம்களைப் பார்த்து “அறுக்கப்பட்ட ஆடுகளைப் போன்று வீழ்ந்து கிடக்கிறார்கள்” என்று கூறியவனாக முஸ்லிம்களைக் கடந்து சென்று கொண்டிருந்தான். அப்போது கவச ஆடை அணிந்த முஸ்லிம் ஒருவர் அவன் தனக்கருகில் வருவதை எதிர்பார்த்தார். நான் அந்த முஸ்லிமுக்கு பின்புறமாய் நின்றவனாக எனது பார்வையால் அந்த முஸ்லிமையும் எதிரியையும் கவனித்தேன். எதிரி நல்ல ஆயுதமுள்ளவனாகவும் வலிமை மிக்கவனாகவும் தெரிந்தான். அவ்விருவரும் சந்திப்பார்களா? என்று நான் எதிர்பார்த்தேன். அதே போரில் இருவரும் சந்தித்து சண்டையிட்டனர். முஸ்லிம் அந்த எதிரியை ஒரு வெட்டுதான் வெட்டினார். அந்த வெட்டு அவனது பிரித்தட்டு வழியாக சென்று, அவனை இரண்டாக பிளந்தது. பின்பு அவர் தனது முகத் திரையை விலக்கி என்னைப் பார்த்து “கஅபே! என்ன பார்க்கிறாய். நான்தான் அபூ துஜானா!” என்று கூறினார்.(அல்பிதாயா)

2) பல முஸ்லிம் பெண்மணிகளும் போர் முடியும் தருவாயில் மைதானத்துக்கு வந்து போரில் தங்களால் முடிந்த பங்காற்றினார்கள்.

அனஸ் (ரழி) இதைப் பற்றி கூறுகிறார்கள்: நபியவர்களின் மனைவியான ஆயிஷா பின்த் அபூபக்ர் (ரழி) அவர்களையும் உம்மு சுலைம் (ரழி) அவர்களையும் பார்த்தேன். அவர்கள் தங்களது கெண்டைக் கால்கள் தெரியுமளவு ஆடையை உயர்த்தியவர்களாகத் தோல் துருத்திகளில் தண்ணீர் நிரப்பி, அதை முதுகில் சுமந்து வந்து முஸ்லிம்களுக்குப் புகட்டினார்கள். தண்ணீர் தீர்ந்துவிடவே மீண்டும் நிரப்பி வந்து புகட்டினார்கள். இவ்வாறு இறுதி வரை சிரமம் பாராது பல முறை நிரப்பி வந்து காயமடைந்த முஸ்லிம்களுக்கும் மற்ற வீரர்களுக்கும் தாகம் தீர்த்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

மேலும் உமர் (ரழி) கூறுகிறார்கள்: உஹுத் போரில் உம்மு ஸலீத் என்ற அன்சாரிப் பெண்ணும் தோல் துருத்தியில் தண்ணீர் நிரப்பி வந்து எங்களது தாகம் தீர்த்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

உம்மு அய்மன் (ரழி) என்ற பெண்மணியும் போர் மைதானத்திற்கு வந்தார்கள். முஸ்லிம்களில் சிலர் தோற்று மதீனாவுக்கு ஓடுவதைப் பார்த்த அவர், அவர்களின் முகத்தில் மண்ணை வாரி இறைத்தார். மேலும், அவர்களில் சிலரைப் பார்த்து “இந்தா! ஆடை நெய்யும் ராட்டையை வாங்கிக் கொள். வாளை என்னிடம் கொடு!” என்று ரோஷமூட்டினார். பின்பு, போர்க்களம் வந்து காயமடைந்தவர்களுக்குத் தண்ணீர் புகட்டினார். அது சமயம் ‘ப்பான் இப்னு அரக்கா’ எனும் அரக்கன் ஒருவன் அப்பெண்மணியை நோக்கி அம்பெறிந்தான். அவர்கள் கீழே விழுவே ஆடை விலகியது. அந்த மூடன் இதைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தான். இக்காட்சி நபி (ஸல்) அவர்களை சிரமத்திற்குள்ளாக்கியது. எனவே, கூர்மையற்ற ஓர் அம்பை ஸஅது இப்னு அபீவக்காஸிடம் கொடுத்து “ஸஅதே! இந்த அம்பை அவனை நோக்கி எறி!” என்றார்கள். ஸஅது (ரழி) அவர்கள் அந்த அம்பை அவனை நோக்கி எறிய, அது அவனது கழுத்தைத் தாக்கியது. அவன் மல்லாந்து விழ, அவனது ஆடையும் அகன்றது. அதைப் பார்த்து நபியவர்கள் கடைவாய் பல் தெரியுமளவுக்கு சித்துவிட்டு, “அப்பெண்மணிக்காக ஸஅது பழி தீர்த்து விட்டார். அல்லாஹ் ஸஅதின் பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டான்” என்று கூறினார்கள். (அஸ்ஸீரத்துல் ஹல்பிய்யா)

**மலைக் கணவாயில்**

நபி (ஸல்) அவர்கள் கணவாயில் நல்ல அமைப்பான இடத்தை அடைந்த போது அலீ இப்னு அபூதாலிப் (ரழி) தங்களது கேடயத்தை எடுத்துச் சென்று அதில் தண்ணீர் நிரப்பி வந்தார்கள். அத்தண்ணீர் பெரிய குழியுடைய பாறையில் நிரம்பியிருந்த தண்ணீர் என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலர் “அது ஒரு கிணற்றிலிருந்து எடுத்து வந்த நீர்” என்கின்றனர். எது எப்படியோ அந்த தண்ணீலிருந்து நபியவர்களுக்கு விருப்பமற்ற வாடை வீசவே, நபியவர்கள் அதை குடிக்க வில்லை. தனது முகத்திலிருந்த இரத்தக் கறையைக் மட்டும் கழுவிக் கொண்டார்கள். “அல்லாஹ்வின் கோபம் அவனது நபியின் முகத்தை காயப்படுத்தியவன் மீது கடினமாகட்டும்” என்று கூறியவர்களாக தனது தலையின் மீதும் கொஞ்சம் தண்ணீரை ஊற்றிக் கொண்டார்கள். (இப்னு ஹிஷாம்)

இந்நிகழ்ச்சி குறித்து நபித்தோழர் ‘ஸஹ்ல்’ (ரழி) நமக்குக் கூடுதல் விவரம் அளிக்கிறார்: “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி (ஸல்) அவர்களின் காயத்தை யார் கழுவியது யார் தண்ணீர் ஊற்றியது எதைக் கொண்டு அவர்களுக்கு மருந்திடப்பட்டது என்பதெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். அதாவது, நபியவர்களின் மகளார் ஃபாத்திமா (ரழி) கழுவினார்கள். அலீ (ரழி) அவர்கள் கேடயத்திலிருந்து தண்ணீரை ஊற்றினார்கள். தண்ணீர் ஊற்றுவதால் இரத்தம் நிற்காமல் அதிகமாகிறது என்பதைப் பார்த்தவுடன் ஃபாத்திமா (ரழி) பாயின் ஒரு பகுதியை கிழித்து அதை எரித்து அந்த சாம்பலை அக்காயத்தில் வைத்தார்கள். உடனே, இரத்தம் நின்றுவிட்டது. (ஸஹீஹுல் புகாரி)

அதற்குள்ளாக முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) மதுரமான நீர் எடுத்து வந்தார். நபி (ஸல்) அவர்கள் அதைப் பருகி, அவருக்காக நல்ல பிரார்த்தனையும் செய்தார்கள். (ஸீரத்துல் ஹல்பிய்யா)

இவ்வாறு காலை பொழுதில் தொடங்கிய போர் முதலில் வெற்றி பிறகு சேதம் என்று ஒரு வழியாக மதிய வேளையில் முடிவுக்கு வந்தது. இப்போரில் நபியவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஏற்பட்ட காயமும் களைப்பும் தெரிந்ததே. எனவே, நபியவர்கள் லுஹர் (மதிய) நேரத் தொழுகையை உட்கார்ந்து தொழ, தோழர்களும் அவ்வாறே தொழுதார்கள். (இப்னு ஹிஷாம்)

**அபூ ஸுஃப்யானின் மகிழ்ச்சி**

எதிரிகள் மக்காவிற்கு திரும்ப முழுமையாக ஆயத்தமாயினர். அதற்குள் முஸ்லிம்களின் உண்மை நிலைமையை அறிவதற்காக அபூ ஸுஃப்யான் மலையின் மீது ஏறி “உங்களில் முஹம்மது இருக்கிறாரா?” என்று கூவினார். முஸ்லிம்களில் எவரும் அவருக்கு பதிலளிக்க வில்லை. பின்பு உங்களில் “அபூ குஹாஃபாவின் மகன் (அபூபக்ர்) இருக்கிறாரா?” என்று கூவினார். அப்போதும் முஸ்லிம்கள் பதிலளிக்கவில்லை. பின்பு அவர் “உமர் இப்னு கத்தாப் இருக்கிறாரா?” என்று கூவினார். அதற்கும் முஸ்லிம்கள் பதிலளிக்கவில்லை. காரணம், நபி (ஸல்) பதிலளிக்க வேண்டாமென்று முஸ்லிம்களைத் தடுத்திருந்தார்கள். “இஸ்லாமின் வலிமை இம்மூவரால்தான்” என்று அபூ ஸுஃப்யானுக்கும் அவரது கூட்டத்தாருக்கும் தெரிந்திருந்த காரணத்தால்தான், அவர் இம்மூவரைப் பற்றியும் விசாரித்தார். முஸ்லிம்களிடமிருந்து எந்த பதிலும் வராததால் “என் மக்களே! அறிந்து கொள்ளுங்கள். இவர்களையே நீங்கள் கொன்று விட்டீர்கள் அது போதும்!” என்று அபூஸுஃப்யான் கூறினார். இதைக் கேட்ட உமர் (ரழி) தன்னை அடக்க முடியாமல் “ஏய்! அல்லாஹ்வின் எதிரியே! நீ யாரையெல்லாம் கூறினாயோ அவர்கள் உயிரோடுதான் இருக்கிறார்கள். அல்லாஹ் என்றும் உனக்குக் கவலையைத்தான் தருவான். எனவே, நீ மகிழத் தேவையில்லை” என்று பதிலளித்தார்கள். சிறிது அமைதிக்குப் பிறகு அபூ ஸுஃப்யான் மீண்டும் பேசினார். “உங்களில் கொல்லப்பட்டோன் உடல்கள் சிதைக்கப்பட்டுள்ளன. அப்படி செய்ய வேண்டுமென நான் கட்டளையிடவில்லை. ஆனாலும், அது எனக்கு எந்த வருத்தமும் அளிக்கவில்லை” என்றார். பின்பு “ஹுபுல் எனும் சிலையே! உயர்வு உனக்குத்தான்” என்று கூறினார்.

அதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் “இப்போது நீங்கள் அவருக்கு பதிலளிக்க மாட்டீர்களா?” என்று கேட்க, “நாங்கள் என்ன பதிலளிக்க வேண்டும்?” என்று முஸ்லிம்கள் கேட்டார்கள். அதற்கு “அல்லாஹ்தான் உயர்ந்தவன் அவனே கண்ணியமிக்கவன் என்று பதிலளியுங்கள்” என்று நபியவர்கள் கூறினார்கள் அவர்களும் அவ்வாறே பதிலளித்தார்கள்.

பின்பு “எங்களுக்கு உஜ்ஜா இருக்கிறது. உங்களுக்கு உஜ்ஜா இல்லையே!” என்றார் அபூ ஸுஃப்யான்.

நபி (ஸல்) அவர்கள் “அவருக்கு நீங்கள் பதிலளிக்க மாட்டீர்களா?” என்று கேட்க “நாங்கள் என்ன பதிலளிப்பது?” என்று நபித்தோழர்கள் கேட்டனர், “அல்லாஹ் எங்களுக்கு எஜமானாக இருக்கிறான். உங்களுக்கு எஜமானன் இல்லையே!” என பதிலளியுங்கள் என்றார்கள். நபித்தோழர்களும் அவ்வாறே கூறினார்கள்.

அதன் பிறகு, “எவ்வளவு மகிழ்ச்சியான செய்தி. இந்நாள் பத்ர் போருக்குப் பகரமாக ஆகிவிட்டது. போர் இப்படித்தான் கிணற்று வாளியைப் போன்றது” என்றார் அபூஸுஃப்யான். அதற்கு உமர் (ரழி) “ஒருக்காலும் சமமாக முடியாது. எங்களில் கொல்லப்பட்டவர் சுவனத்தில் இருக்கிறார். உங்களில் கொல்லப்பட்டவர் நரகத்தில்

இருக்கிறார்’’ என்று பதிலடி தந்தார்கள். பின்பு அபூஸுஃப்யான் “உமரே! என்னிடம் வா’’ என்று அழைத்தார். நபி (ஸல்) அவர்கள் “உமரே! நீ அவரிடம் சென்று அவர் என்ன கூறுகிறார் என்று கேட்டு வாருங்கள்’’ என்றார்கள். உமர் (ரழி) அபூஸுஃப்யானிடம் வந்தவுடன் “உமரே! அல்லாஹ்வுக்காக நான் உன்னிடம் கேட்கிறேன். உண்மையில் நாங்கள் முஹம்மதைக் கொன்று விட்டோமா? இல்லையா?’’ என்று கேட்டார். அதற்கு உமர் (ரழி) “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்களை நீங்கள் கொல்ல வில்லை, அவர்கள் உமது பேச்சை இப்போதும் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள்’’ என்றார்கள். அதற்கு “இப்னு கமிஆவை விடவும் நல்லவராகவும் உண்மை சொல்பவராகவும் நான் உன்னை கருதுகிறேன்’’ என்று அபூ ஸுஃப்யான் கூறினார். (இந்த இப்னு கமிஆ என்பவனே நபி (ஸல்) அவர்களை தான் கொன்றுவிட்டதாக ஊளையிட்டவன்.) (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

### பத்ரில் சந்திக்க அழைத்தல்

மேற்கூறிய உரையாடலுக்குப் பிறகு உமர் (ரழி) திரும்பிவிட்டார்கள். அபூ ஸுஃப்யானும் அவரது படையும் மைதானத்தை விட்டு புறப்படும் போது “அடுத்த ஆண்டு பத்ர் மைதானத்தில் ஷஅபான் மாதம் நாம் உங்களைச் சந்திப்போம்’’ என்று முஸ்லிம்களுக்கு அறிக்கை விடுத்தார். நபி (ஸல்) அவர்கள் தனது தோழர்களில் ஒருவருக்கு “ஆம்! அவ்வாறே ஆகட்டும் என்று சொல்’’ என்றார்கள். இவ்வாறு முடிவு செய்யப்பட்டப் பிறகு அபூ ஸுஃப்யான் படையுடன் மக்கா நோக்கிப் பயணமானார். (இப்னு ஹிஷாம்)

### எதிரிகளின் நிலை அறிதல்

பின்பு நபி (ஸல்) அவர்கள் அலீ இப்னு அபீதாலிப் (ரழி) அவர்களை அனுப்பி “நீ இவர்களைப் பின்தொடர்ந்து செல் அவர்கள் என்ன செய்கிறார்கள்? அவர்களது நோக்கம் என்ன? என்று பார்த்து வர அவர்கள் ஒட்டகத்தில் வாகனித்து குதிரைகளை இழுத்துச் சென்றால் அவர்கள் மக்காவிற்கு செல்கிறார்கள் என்று பொருள் அவர்கள் குதிரையில் வாகனித்து ஒட்டகத்தை இழுத்துச் சென்றால் அவர்கள் மதீனாவை நோக்கிச் செல்கிறார்கள் என்று பொருள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் மதீனா சென்றால் நான் அங்கு சென்று அவர்களுடன் போர் செய்வேன்’’ என்றார்கள்.

அலீ (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: “நான் அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைப் பார்க்க அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன். அவர்கள் ஒட்டகத்தில் வாகனித்துக் குதிரைகளை இழுத்துச் சென்றார்கள். அவர்களது பயணம் மக்கா நோக்கியே இருந்தது.’’ (இப்னு ஹிஷாம்)

### தியாகிகளை கண்டெடுத்தல்

எதிரிகள் சென்றதற்குப் பின் கொல்லப்பட்டவர்களையும் காயமடைந்தவர்களையும் தேடுவதில் முஸ்லிம்கள் ஈடுபட்டனர். இதைப் பற்றி ஜைது இப்னு ஸாபித் (ரழி) இவ்வாறு கூறுகிறார்:

போர் முடிந்த பின் ஸஅது இப்னு ரபீஆவைத் தேடுவதற்காக நபி (ஸல்) அவர்கள் என்னை அனுப்பினார்கள். “நீ அவரைப் பார்த்து விட்டால் அவருக்கு எனது ஸலாம் கூறி, உனது நிலை என்னவென்று அல்லாஹ்வின் தூதர் விசாரிக்கிறார்கள்’’ என்று சொல்லுமாறு என்னைப் பணித்தார்கள். கொல்லப்பட்டவர்களிடையே அவர்களைத் தேடி அலைந்தேன். நான் அவரைப் பார்த்த போது அவர் இறுதி மூச்சுகளை எண்ணிக் கொண்டிருந்தார். அவருடைய உடலில் அம்பு, ஈட்டி, வாள் ஆகிய ஆயுதங்களால் ஏற்பட்ட எழுபது காயங்கள் இருந்தன. நான் அவரிடம் “ஸஅதே! அல்லாஹ்வின் தூதர் உனக்கு ஸலாம் கூறுகிறார்கள். மேலும், உமது நிலையை விசாரித்து வர என்னை அனுப்பினார்கள்’’ எனக்

கூறினேன். அதற்கு “அல்லாஹ்வின் தூதர் மீதும் ஸலாம் உண்டாகட்டுமாக; அல்லாஹ்வின் தூதரே! நான் சுவனத்தின் நறுமணத்தை உணர்கிறேன் என நீர் நபியவர்களிடம் சொல் மேலும், உங்களில் ஒருவர் உயிருடன் இருக்கும் நிலையில் நபியவர்களின் உயிருக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டால் உங்களுக்கு மன்னிப்பு என்பதே கிடையாது என்று என் நண்பர்களாகிய அன்சாரிகளிடம் நீ சொல்” என்று தனது இறுதி வார்த்தைகளை கூறிய பின் உயிர் நீத்தார். (ஜாதுல் மஆது)

காயமடைந்தவர்களில் உஸைம் என்றழைக்கப்படும் அம்ர் இப்னு ஸாபித் (ரழி) என்பவரும் ஒருவர். அவர் உயிர் பிரியும் நிலையில் இருந்தார். இதற்கு முன்பு அவருக்கு முஸ்லிம்கள் பலமுறை இஸ்லாமை எடுத்துக் கூறியும், அவர் அதை ஏற்றுக் கொள்ளாமல் மறுத்து வந்தார். இவரை இந்நிலையில் பார்த்த முஸ்லிம்கள் இந்த உஸைம் ஏன் இங்கு வந்தார்! நாம் போருக்கு வரும்போது அவருக்கு நமது மார்க்கம் பிடிக்காமல் இருந்ததே! என்று கூறியவர்களாக அவரிடம் “உமது இனத்தை பாதுகாக்க வேண்டும் என்ற ஆர்வத்தால் வந்தீரா? அல்லது இஸ்லாமை ஏற்று அதற்காக போர் புரிய வேண்டும் என்ற ஆர்வத்தில் வந்தீரா?” என விசாரித்தனர். அதற்கவர் “இல்லை! இஸ்லாம் மீதுள்ள பிரியத்தினால்தான் போரில் கலந்து கொண்டேன். நான் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிக்கை கொண்டேன். அல்லாஹ்வின் தூதரோடு சேர்ந்து எதிரிகளிடம் போர் புரிந்தேன். இப்போது எனது நிலை என்னவென நீங்கள் பார்க்கிறீர்கள்” என்று தனது பேச்சை முடிக்க மரணம் அவரை ஆரத் தழுவியது.

இவரது நிலையை நபி (ஸல்) அவர்களிடம் முஸ்லிம்கள் கூறியதற்கு நபியவர்கள் அவர் சுவனவாசிகளில் ஒருவர் என்றார்கள்.

அபூஹுரைரா (ரழி) கூறுகிறார்: உஸைம் அல்லாஹ்விற்காக ஒரு நேரத் தொழுகை கூட தொழவில்லை (இருந்தும் நபியவர்களின் நாவினால் சுவனவாசி என்ற நற்செய்தி பெற்றார்.) (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

காயமடைந்தவர்களில் ‘குஜ்மான்’ என்பவரும் ஒருவர். அவர் மிகப்பெரும் வீரராய் போரில் சண்டையிட்டார். இவர் மட்டும் தனியாக ஏழு அல்லது எட்டு எதிரிகளைக் கொன்றார். இவருக்கு ஆழமான காயம் ஏற்படவே, பூமியில் விழுந்து கிடந்தார். இவரை முஸ்லிம்கள் ளஃபர் கிளையினரின் வீட்டுக்குத் தூக்கிச் சென்றனர். அவருக்கு முஸ்லிம்கள் நற்செய்தி கூறினர். அதற்கு அவர் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் இன வெறிக்காகத்தான் போரிட்டேன். இனவெறி மட்டும் இருக்கவில்லையெனில் நான் போரில் கலந்திருக்க மாட்டேன்” என்றார். பின்பு காயத்தின் வேதனை கடுமையாகவே அவர் தற்கொலை செய்து கொண்டார். இவரைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் “இவர் நரகவாசிகளில் ஒருவர்” என்றார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

அல்லாஹுவின் ஏகத்துவக் கலிமாவை உயர்த்த வேண்டும் என்ற நோக்கமில்லாமல் இனவெறி அல்லது தேசப்பற்றுக்காக போர் புரிபவர்களின் முடிவு இதுதான். இவர்கள் இஸ்லாமியக் கொடியின் கீழ் போரிட்டாலும் அல்லது அதற்கும் மேலாக நபியவர்களின் படையிலிருந்தாலும் இவர்கள் செல்லுமிடம் நரகம்தான்.

மேற்க்கூறப்பட்ட நிகழ்ச்சிக்கு மாற்றமாக மற்றொரு நிகழ்ச்சியும் நடந்தது. அதாவது ஸஅலபா கிளையைச் சேர்ந்த யூதர்களில் ஒருவரும் போரில் கொல்லப்பட்டார். அவரது பெயர் முகைரீக். அவர் தனது இனத்தவரிடம் “யூதர்களே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! முஹம்மதுக்கு உதவி செய்வது உங்கள் மீது கட்டாயக் கடமை என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும்தானே?” எனக் கூறினார். அதற்கவர்கள் “இன்றைய தினம் சனிக்கிழமை அல்லவா நாம் எப்படி போருக்கு செல்ல முடியும்?” என்று எதிர்கேள்வி கேட்டனர். “உங்களுக்கு சனிக்கிழமை என்பதே இல்லாமலாகட்டும்!” என்று கோபமாக கூறி தனது

வாளையும் ஆயுதத்தையும் எடுத்துக்கொண்டு “நான் போரில் கொல்லப்பட்டு விட்டால் எனது செல்வங்கள் அனைத்தும் முஹம்மது அவர்களைச் சாரும் அதை அவர்கள் விரும்பியபடி செய்து கொள்ளலாம்” என்று கூறி, போரில் கலந்து வீரமரணமடைந்தார். இவரை பற்றிய செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு தெரியவர “முகைரீக் யூதர்களில் மிகச் சிறந்தவர்” என்று அவரை பற்றி கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

**தியாகிகளின் உடல்களை நல்லடக்கம் செய்தல்**

போரில் உயிர்நீத்த தியாகிகளை முன்னோக்கி நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “நான் உங்களுக்கு சாட்சியாக இருப்பேன். அல்லாஹ்வின் பாதையில் காயமடைந்தவரை மறுமையில் அல்லாஹ் எழுப்பும் போது அவரது காயத்திலிருந்து இரத்தம் வடியும்; அதன் நிறம் இரத்தத்தின் நிறமாகத்தான் இருக்கும்; ஆனால் அதன் மணமோ கஸ்தூரி போன்று இருக்கும்.” (இப்னு ஹிஷாம்)

நபித்தோழர்களில் சிலர் தங்கள் குடும்பத்தில் கொல்லப்பட்டவர்களை மதீனாவிற்கு எடுத்து சென்றிருந்தனர். நபியவர்கள், அவர்களை மீண்டும் உஹுதுக்கு தூக்கி வரும்படி கூறி “அவர்களை குளிப்பாட்டக் கூடாது; அவர்கள் உடலிலுள்ள போருக்குரிய ஆயுதங்களைக் கழற்றிய பின், அவர்கள் கொல்லப்பட்ட இடங்களிலேயே அவர்களை அடக்க வேண்டும்” என்று கட்டளையிட்டார்கள். ஒரு கப்ரில் இரண்டு அல்லது மூன்று உடல்களை நபியவர்கள் அடக்கம் செய்தார்கள். மேலும், ஒரே ஆடையில் இருவரைப் போர்த்தினார்கள். யார் அதிகமாகக் குர்ஆனை மனனம் செய்தவர் என்று விசாரித்து அவரைப் கப்ரில் பக்கவாட்டுக் குழியில் முதலாவதாக வைத்தார்கள். அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஹராம், அம்ர் இப்னு ஜமூஹ் (ரழி) ஆகிய இருவரும் ஒருவரை ஒருவர் நேசித்து வந்ததால் இருவரையும் ஒரே கப்ரில் அடக்கம் செய்தார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஜாதுல் மஆது)

முஸ்லிம்கள் ஹன்ளலாவைத் தேடிய போது அவரது உடல் ஒரு மூலையில் தண்ணீர் சொட்டிய நிலையில் இருந்தது. அதை அறிந்த நபி(ஸல்) அவர்கள் “வானவர்கள் அவரை குளிப்பாட்டுகிறார்கள்” என்று தங்களது தோழர்களிடம் கூறினார்கள். பின்பு “அவரது குடும்பத்தாரிடம் சென்று விவரம் அறிந்து வாருங்கள்” என்று கூறி அனுப்பினார்கள். தோழர்கள் அவரது மனைவியிடம் விசாரிக்க “ஹன்ளலா (ரழி) முழுக்குடைய நிலையில் (குளிக்க வேண்டிய நிலையில்) போரில் கலந்து கொண்டதாக” மனைவி கூறினார். இதன் காரணமாகத்தான் ஹன்ளலாவிற்கு ‘கஸீலுல் மலாயிக்கா‘ (மலக்குகள் குளிப்பாட்டியவர்) என்ற பெயர் வந்தது. (ஜாதூல் மஆது)

தனது சிறய தந்தையும், பால்குடி சகோதரருமாகிய ஹம்ஜாவின் நிலையைப் பார்த்தவுடன் நபி(ஸல்) அவர்கள் மிகுந்த கவலை அடைந்தார்கள். நபியவர்கள் மாமி ஸஃபிய்யாவின் மகன் ஜுபைரிடம் “அவரைத் தடுத்து திரும்ப செல்லுமாறு கூறுங்கள்” என்றார்கள். சகோதரருக்கு ஏற்பட்ட நிலைமையை அவர் பார்க்க வேண்டாம் என்பதற்காக நபியவர்கள் இவ்வாறு செய்தார்கள். ஆனால், அவர் “நான் ஏன் பார்க்கக் கூடாது? எனது சகோதரர் சிதைக்கப் பட்டுள்ளார் என்ற செய்தி எனக்கு தெரியும். இன்ஷா அல்லாஹ்! இதற்கான நன்மையை நான் அல்லாஹவிடம் எதிர்பார்த்திருக்கிறேன்” என்று கூறவே, அவருக்கு அனுமதி வழங்கப்பட்டது. பிறகு ஸஃபிய்யா (ரழி) தனது சகோதரரை பார்த்து “இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன்” (நாங்கள் அல்லாஹ்விற்காக உள்ளவர்கள். அவனிடமே மீளுபவர்கள்) என்று கூறி, அவரின் நன்மைக்காகவும் பாவமன்னிப்புக்காகவும் அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள். இதற்குப் பின் ஹம்ஜா (ரழி) அவர்களை அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷு (ரழி) அவர்களுடன் நல்லடக்கம் செய்ய நபியவர்கள் ஏற்பாடு செய்தார்கள்.

இப்னு மஸ்வூத் (ரழி) கூறுகிறார்: “ஹம்ஜா (ரழி) அவர்களுக்காக நபி (ஸல்) அழுததைப் போன்று வேறு யாருக்கும் அவர்கள் அழுது நாங்கள் பார்க்கவில்லை. ஹம்ஜா (ரழி) அவர்களைக் கிப்லாவின் திசையில் வைத்து அவரது ஜனஸாவுக்கு முன் நபியவர்கள் நின்றார்கள். அப்போது தனது சிறிய தந்தைக்கு ஏற்பட்டதை எண்ணி நபியவர்கள் அதிகமாக அழுதார்கள்” (முக்தஸர் ஸீரத்துர்ரஸூல்)

போரில் உயிர்நீத்த தியாகிகளின் காட்சி முஸ்லிம்களது உள்ளங்களை கசக்கி பிழிந்தது; கண்களை குளமாக்கியது; தியாகிகளின் உடல்களை மறைப்பதற்குப் போதுமான துணிகள் கிடைக்கவில்லை. ஹம்ஜா (ரழி) அவர்களைப் போர்துவதற்கு கருப்பு, வெள்ளை நிறக் கோடுகள் உள்ள ஒரு போர்வையைத் தவிர வேறெதுவும் இருக்கவில்லை. அப்போர்வையில் அவரது தலையை மறைத்தால் பாதங்கள் தெரிந்தன; பாதங்களை மறைத்தால் தலை தெரிந்தது. பிறகு தலை மறைக்கப்பட்டு, கால்கள் “இத்கிர்” என்ற செடியால் மூடப்பட்டன. (முஸ்னது அஹ்மது, மிஷ்காத்)

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) கூறுகிறார்கள்: “முஸ்அப் (ரழி) கொல்லப்பட்டார். அவர் என்னை விட மிகக் சிறந்தவர். அவர் உடலை ஒரு சிறிய போர்வையால்தான் போர்த்தப்பட்டது. அவரது தலைப் பக்கம் துணியை இழுத்தால் கால்கள் தெரிந்தன. கால்களின் பக்கம் துணியை இழுத்தால் தலை தெரிந்தது. இந்நிலையைப் பார்த்த நபி (ஸல்) அவர்கள் “அப்போர்வையால் அவரது தலையை மறைத்து, அவரது காலுக்கு “இத்கிர்” என்ற செடியைப் போர்த்தி விடுங்கள்” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

**நபியவர்களின் பிரார்த்தனை**

உஹுத் மைதானத்திலிருந்து எதிரிகள் சென்றுவிட்ட போது எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் “நீங்கள் வரிசையாக நில்லுங்கள்; கண்ணியத்திற்கும் மகிமைக்கும் உரித்தான எனது இறைவனை நான் புகழ வேண்டும்” என்று கூறினார்கள். நாங்கள் நபியவர்களுக்குப் பின் பல அணிகளாக நின்று கொண்டோம்.

அதற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள்:

“அல்லாஹ்வே! புகழெல்லாம் உனக்கே உரித்தானது. நீ விரித்ததை மடக்குபவர் யாரும் இல்லை. நீ மடக்கியதை விரிப்பவர் யாரும் இல்லை. நீ வழிகேட்டில் விட்டவருக்கு நேர்வழி காட்டுபவர் யாரும் இல்லை. நீ நேர்வழி காட்டியவரை வழிகெடுப்பவர் யாரும் இல்லை. நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாரும் இல்லை. நீ கொடுத்ததைக் தடுப்பவர் யாரும் இல்லை. நீ நெருக்கமாக்கி வைத்ததை தூரமாக்கி வைப்பவர் யாருமில்லை. அல்லாஹ்வே! உனது வளங்கள், உனது கருணை, உனது கிருபை, உனது இரணம் ஆகியவற்றை நீ எங்களுக்கு விசாலமாக வழங்குவாயாக!

அல்லாஹ்வே! நீங்காத, அகன்று போகாத, நிரந்தரமான அருட்கொடையை உன்னிடம் கேட்கிறேன். அல்லாஹவே! சிரமமான நேரத்தில் உதவியையும், பயத்தின் நேரத்தில் பாதுகாப்பையும் உன்னிடம் கேட்கிறேன். அல்லாஹ்வே! நீ எங்களுக்கு கொடுத்தவற்றின் தீங்கிலிருந்தும், நீ எங்களுக்கு கொடுக்காதவற்றின் தீங்கிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன். அல்லாஹ்வே! எங்களுக்கு ஈமானை (இறைநம்பிக்கையை) பிரியமாக்கி வை. அதை எங்களது உள்ளங்களில் அலங்கரித்து வை. இறை நிராகரிப்பு, உனது கட்டளைக்கு மாறுசெய்வது, எனக்குக் கட்டுப்படாமல் விலகிப்போவது ஆகியவற்றை எங்களுக்கு வெறுப்பாக்கி விடு. எங்களைப் பகுத்தறிவாளர்களில் ஆக்கிவிடு. அல்லாஹ்வே! எங்களை முஸ்லிம்களாக மரணிக்க வை! முஸ்லிமகளாக எங்களை வாழச் செய்! நஷ்டமடையாதவர்களாக, சோதனைக்குள்ளாகாதவர்களாக எங்களை நல்லோர்களுடன்

சேர்த்து வை! அல்லாஹ்வே! உனது தூதர்களைப் பொய்யாக்கி, உனது வழியிலிருந்து தடுக்கும் நிராகரிப்பாளர்களை நீ அழித்துவிடு! அவர்கள் மீது உனது தண்டனையையும் வேதனையையும் இறக்குவாயாக! அல்லாஹ்வே! வேதம் கொடுக்கப்பட்டவர்களில் இருக்கும் நிராகரிப்பாளர்களை நீ அழித்துவிடு! உண்மையான இறைவனே!'' (அல்அதபுல் முஃப்ரத், முஸ்னத் அஹ்மது)

### மதீனா திரும்புதல் அன்பு மற்றும் தியாகத்தின் அற்புதங்கள்

தியாகிகளை அடக்கம் செய்து, அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனிடம் பிரார்த்தனை புரிந்த பின், நபி (ஸல்) அவர்கள் மதீனா திரும்பினார்கள். போர் நடந்து கொண்டிருந்த போது இறைநம்பிக்கை கொண்ட ஆண்கள் புறத்தில் நிகழ்ந்ததைப் போன்று, திரும்பும் வழியில் இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் புறத்திலும் பல அற்புத நிகழ்ச்சிகள் நடந்தன.

ஹம்னா பின்த் ஜஹ்ஷ் எனும் பெண்மணி நபி(ஸல்) அவர்களை வழியில் சந்தித்தார். அவரிடம் அவருடைய சகோதரர் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் மரணமான செய்தி கூறப்பட்டது. அவர் ''இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன்'' என்று கூறி, அவருக்காக பாவ மன்னிப்புத் தேடினார். பின்பு அன்னாரின் தாய்மாமன் ஹம்ஜா (ரழி) இறந்த செய்தியும் கூறப்பட்டது. அதற்கும் அவர் ''இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன்'' என்று கூறி பாவ மன்னிப்புத் தேடினார். பின்பு அவரது கணவர் முஸ்அப் இப்னு உமைர் (ரழி) இறந்த செய்தி கூறப்படவே, அவர் தேம்பி அழலானார். அப்போது நபி (ஸல்) அவர்கள் ''ஒரு பெண்ணின் கணவன் அவளிடம் நீங்காத இடத்தைப் பெற்றிருக்கிறான்'' என்று கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

தீனார் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணை முஸ்லிம்கள் வழியில் சந்தித்தார்கள். அந்தப் பெண்ணின் கணவரும், சகோதரரும், தந்தையும் போரில் கொல்லப்பட்டிருந்தார்கள். இவர்களின் மரணச் செய்தியை முஸ்லிம்கள் அவருக்குக் கூறினார்கள். ஆனால், அப்பெண்மணி ''அல்லாஹ்வின் தூதர் எப்படி இருக்கிறார்கள்?'' என்று கேட்டார். முஸ்லிம்கள் ''இன்னாரின் தாயே! நீர் விரும்பியதைப் போன்று நபியவர்கள் நல்ல முறையில் இருக்கிறார்கள். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!'' என்று கூறினார்கள். அதற்கு அந்தப் பெண் ''எனக்கு அவர்களைக் காட்டுங்கள். நான் அவர்களைப் பார்க்கவேண்டும்'' என்றார். நபியவர்களைக் கண்குளிர பார்த்தப் பிறகு ''உங்களைப் பார்த்தப் பின்னால் எல்லா துன்பங்களும் எங்களுக்கு இலகுவானதே!'' என்று அப்பெண்மணி கூறினார்.

வழியில் நடந்த மற்றொரு நிகழ்ச்சி: நபி (ஸல்) அவர்களை ஸஅது இப்னு முஆதின் தாயார் சந்தித்தார்கள். ஷஅது நபியவர்களுடைய குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தவாராக நடந்து வந்து கொண்டிருந்தார். ''அல்லாஹ்வின் தூதரே! இதோ... எனது தாய் வருகிறார்'' என்றார். நபியவர்கள் ''நல்லபடியாக வரட்டும்'' கூறி அவருக்காக நின்றார்களா. அவர் அருகே வந்தவுடன் அவரது மகன் அம்ர் இப்னு முஆத் (ரழி) இறந்ததற்கு ஆறுதல் கூறினார்கள். அதற்கு அப்பெண்மணி ''நபியே! உங்களை நல்ல நிலையில் பார்த்தவுடன் மற்ற அனைத்து சோதனைகளையும் நான் சிறியதாகவே கருதுகிறேன்'' என்று கூறினார். பின்பு நபியவர்கள் உஹுத் போரில் கொல்லப்பட்டவர்களுக்காக பிரார்த்னை செய்துவிட்டு ''ஸஅதின் தாயே! நீர் நற்செய்தி பெற்றுக்கொள்! உஹுதில் கொல்லப்பட்டவர்களின் குடும்பத்தார்களுக்கு நற்செய்தி சொல்! அவர்கள் அனைவரும் சொர்க்கத்தில் தோழர்களாக உலவுகின்றனர். அவர்கள் குடும்பத்தார்களுக்காகவும் அவர்களின் பரிந்துரை ஏற்றுக்கொள்ளப்படும்'' என்றார்கள். இதை கேட்ட ஸஅதின் தாயார் ''அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் பொருந்திக்கொண்டோம். மகிழ்ச்சி அடைந்தோம். இதற்குப் பின் யார் அவர்களுக்காக அழுவார்கள்! என்று கூறி, மேலும் ''அல்லாஹ்வின் தூதரே! எஞ்சியிருக்கும் அவர்களது உறவினர்களுக்காக நீங்கள் பிரார்த்னை புரியுங்கள்'' என்றார். நபியவர்கள் ''அல்லாஹ்வே! இவர்களின் மனக் கவலையைப் போக்குவாயாக! இவர்களது

சோதனைகளை நிவர்த்தி செய்வாயாக! எஞ்சி உள்ளவர்களுக்கு அழகிய பகரத்தைத் தருவாயாக!'' என்று பிரார்த்தித்தார்கள். (அஸ்ஸீரத்துல் ஹல்பிய்யா)

ஹிஜ்ரி 3 ஷவ்வால் மாதம், பிறை 7 சனிக்கிழமை மாலை நபி(ஸல்) அவர்கள் மதீனா வந்தடைந்தார்கள்.

பிறகு குடும்பத்தாரைச் சந்தித்து தனது வாளை மகள் பாத்திமாவிடம் கொடுத்து ''இதிலிருந்து இரத்தத்தைக் கழுவி வை! அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது எனக்கு இன்று உண்மையாக உழைத்தது'' என்றார்கள். பின்பு அலியும் தனது வாளை பாத்திமாவிடம் கொடுத்து ''இதனை கழுவி இதிலிருந்து இரத்தத்தை அகற்றிவிடு. அல்லாஹ்வின் மீது ஆனையாக! இன்றைய தினம் இது எனக்கு உண்மையாக தொண்டாற்றி விட்டது'' என்றார்கள். ''நீ போரில் உண்மையாக தொண்டாற்றியதைப் போலவே உன்னுடன் ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் மற்றும் அபூ துஜானாவும் உண்மையாக தொண்டாற்றினார்கள்'' என்றார்கள். (இப்னு ஹிஷாம்)

முஸ்லிம்களில் எழுபது நபர்கள் கொல்லப்பட்டார்கள் என்று பெரும்பாலான அறிவிப்புகள் கூறுகின்றன. அதன் விவரமாவது:

முஹாஜிர்களில் 4 நபர்கள்; யூதர்களில் 1 நபர்; கஸ்ரஜ் இனத்தவர்களில் 41 நபர்கள்; அவ்ஸ் இனத்தவர்களில் 24 நபர்கள். (மொத்தம் 70 நபர்கள்)

இணைவைப்பவர்களில் கொல்லப்பட்டவர்களின் எண்ணிக்கையை இப்னு இஸ்ஹாக் (ரஹ்) இருபத்து இரண்டு என்று கூறுகிறார். ஆனால், போர் சம்பந்தபட்ட அறிவிப்புகள் அனைத்தையும் நன்கு ஆராய்ந்து பார்க்கும்போது முப்பத்து ஏழு பேர்கள் கொல்லப்பட்டார்கள் என்று தெரிகிறது, உண்மையை அல்லாஹ்வே அறிவான் (இப்னு ஹிஷாம், ஃபத்ஹுல் பாரி)

**மதீனாவில் அவசர நிலை**

ஹிஜ்ரி 3 ஷவ்வால் 8, ஞாயிறு இரவு உஹுதிலிருந்து திரும்பிய பின் களைப்பும் அசதியும் எவ்வளவுதான் அதிகமாக இருந்தும் முஸ்லிம்கள் பாதுகாப்புடனே அன்றிரவை கழித்தனர். அதாவது, மதீனாவின் தெருக்களிலும், அதன் வாயில்களிலும் வீரர்கள் பாதுகாப்புக்காக நின்றிருந்தனர். நபி(ஸல்) அவர்களின் பாதுகாப்பிலும் ஒரு பிரிவினர் ஈடுபட்டிருந்தனர். எத்திசையிலிருந்தும் எதிரிகள் மூலம் ஆபத்து நிகழலாம் என்று அவர்கள் சந்தேகப்பட்டதால் இவ்வாறு விழிப்புணர்வுடன் இருந்தனர்.

**''ஹம்ராவுல்'' அஸத் போர்**

நபி(ஸல்) அவர்கள் நிலைமையை யோசித்தவாறே அன்றிரவைக் கழித்தார்கள். போரில் தங்களுக்கு வெற்றி கிடைக்கவில்லை என குறைஷிகள் சிந்திக்கத் தொடங்கினால், அதற்காக கைசேதம் அடைந்து மதீனாவின் மீது இரண்டாவது முறை போர் தொடுக்க திரும்பி வரலாம் என்று நபியவர்கள் யோசித்தார்கள். எனவே, எதிரிகளைப் பின்தொடர்ந்து சென்று மதீனாவின் எல்லைகளை விட்டே விரட்டியடிக்க வேண்டுமென்று முடிவு செய்தார்கள்.

இது குறித்து வரலாற்று ஆசிரியர்கள் கூறுவதின் சுருக்கமாவது:

உஹுத் போர் முடிந்து அடுத்த நாள் காலை, அதாவது ஹிஜ்ரி 3, ஷவ்வால் 8 ஞாயிற்றுக் கிழமை காலை, நபி(ஸல்) அவர்கள் எதிரிகளைச் சந்திப்பதற்கு முஸ்லிம்கள் ஆயத்தமாக இருக்க வேண்டுமெனக் கூறினார்கள். மேலும், உஹுத் போரில் கலந்தவர்கள்தான் தங்களுடன் வர வேண்டும் என்ற நிபந்தனையும் விதித்தார்கள். அப்துல்லாஹ் இப்னு உபை நானும் வருகிறேன் என்றான். நபியவர்கள் வேண்டாம் என்று மறுத்து விட்டார்கள். முஸ்லிம்கள் அனைவரும் தங்களுக்கு ஏற்பட்டிருந்த காயம், களைப்பு எதையும் பொருட்படுத்தாமல் நபியவர்களின் அழைப்புக்கு ‘‘அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் உங்களுக்குக் கட்டுப்பட்டோம். உங்களது கட்டளையை ஏற்றுக் கொண்டோம்’’ என்று பதிலளித்தார்கள்.

அப்போது ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) எனும் தோழர் ‘‘அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் கலந்து கொள்ளும் அனைத்து போரிலும் நானும் கலந்து கொள்ள வேண்டும் என்று நிச்சயமாக விரும்புகிறேன். ஆனால், எனது தந்தை உஹுத் போருக்கு செல்லும் போது எனது சகோதரிகளின் பாதுகாப்புக்காக என்னை விட்டுச் சென்றார்கள். அதனால்தான் நான் தங்கினேன். எனவே, எனக்கு இப்போது உங்களுடன் போரில் கலந்து கொள்ள அனுமதி அளியுங்கள்’’ என்று கூறவே நபியவர்கள் அனுமதி வழங்கினார்கள்.

நபி(ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் மதீனாவிலிருந்து 8 மைல்கள் தூரமுள்ள ‘‘ஹம்ராவுல் அஸத்’’ என்ற இடத்திற்கு வந்து முகாமிட்டார்கள். அங்கு குஜாஆ வமிசத்தைச் சேர்ந்த ‘‘மஅபத் இப்னு அபூமஅபத்’’ என்பவர் நபியவர்களிடம் வந்து இஸ்லாமைத் தழுவினார். (சிலர் அவர் இணைவைப்பவராகத்தான் இருந்தார். இருப்பினும் குஜாஆ மற்றும் ஹாஷிம் ஆகிய இரு கிளையினருக்கும் இருந்த நட்பின் காரணமாக நபியவர்களிடம் வந்தார் என்று கூறுகின்றனர். ஆக) அவர் நபியவர்களிடம் ‘‘அல்லாஹ்வின் மீது ஆணையாக! உமது தோழர்களுக்கு ஏற்பட்ட நிலை எங்களுக்கு மிகவும் வருத்தத்தை ஏற்படுத்தியது. அல்லாஹ் உங்களுக்க சுகம் அளிக்க வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். நான் ஏதாவது உங்களுக்கு செய்ய வேண்டுமா? என்று கேட்டார். அதற்கு நபியவர்கள் ‘‘நீ அபூ ஸுஃப்யானிடம் சென்று அவரை எங்களை விட்டும் திருப்பிவிடு’’ என்றார்கள்.

எதிரிகள் மதீனாவிற்குக் திரும்ப வரவேண்டுமென யோசிப்பார்கள் என்று நபி(ஸல்) அவர்கள் பயந்தது உண்மையாகவே நடந்தது. எதிரிகள் மதீனாவிற்கு 36 மைல்கள் தொலைவிலுள்ள ‘‘ரவ்ஹா’’ என்ற இடத்தை அடைந்த போது தங்களுக்குள் ஒருவர் மற்றவரை பழித்துக் கொண்டனர். சிலர் சிலரைப் பார்த்து ‘‘நீங்கள் என்ன செய்தீர்கள்; ஒன்றுமே செய்யவில்லை; அவர்களில் சில வீரர்களைத்தான் கொன்றுள்ளீர்கள்; அவர்களின் தலைவர்கள் மீதமிருக்கிறார்கள்; அவர்கள் உங்களுடன் போர் செய்ய மக்களை அழைத்து வரலாம்; திரும்புங்கள்; நாம் அவர்களிடம் சென்று அவர்களது ஆற்றல் அனைத்தையும் அடியோடு அழித்து வருவோம்’’ என்றனர்.

இணைவைப்பவர்கள் மற்றும் முஸ்லிம்கள் ஆகிய இரு தரப்பாரின் வலிமையையும் ஆற்றலையும் சரியாக ஒப்பிட்டு பார்க்காதவர்கள்தான் அவ்வாறு ஆலோசனை சொல்லி இருப்பார்கள். ஆகவேதான், உண்மை நிலையை புரிந்த அவர்களின் மிக முக்கிய தலைவர்களில் ஒருவனான ஸஃப்வான் இப்னு உமைய்யா இந்த கருத்தை ஏற்றுக் கொள்ள மறுத்த ‘‘எனது கூட்டத்தினரே! அவ்வாறு நீங்கள் செய்யாதீர்கள். உஹுத் போரில் கலந்து கொள்ளாமல் தங்கிவிட்ட முஸ்லிம்களெல்லாம் ஒன்று சேர்ந்து உங்களைத் தாக்கக்கூடும் என நான் பயப்படுகிறேன்; நீங்கள் திரும்பிச் சென்று விடுங்கள். வெற்றி உங்களுக்குத்தான் கிடைத்துள்ளது. நீங்கள் மீண்டும் மதீனா சென்றால் அவர்கள் வெற்றி பெற்று நீங்கள் தோற்றுவிடுவீர்களோ என் நான் அஞ்சுகிறேன்’’ என்றான். இவனது ஆலோசனையை பெரும்பாலானோர் ஏற்றுக் கொள்ளவில்லை.

மதீனாவிற்கு மீண்டும் செல்ல வேண்டும் என முடிவெடுத்து அபூ ஸுஃப்யான் தனது படையோடு கிளம்புவதற்கு ஆயத்தமாகும் போது அபூ ஸுஃப்யானிடம் மஅபத் இப்னு மஅபத் வந்தார். அபூ ஸுஃப்யானுக்கு அவர் முஸ்லிமானது தெரியாது. அவர் “மஅபதே! ஏதாவது செய்தி இருக்கிறதா?” என்றார். அதற்கு மஅபத் ஒரு பெரிய கற்பனையான போரை அபூ ஸுஃப்யானின் கண்முன் கொண்டு வந்து நிறுத்தினார். அதாவது “அபூ ஸுஃப்யானே! முஹம்மது தனது தோழர்கள் அனைவரையும் அழைத்துக் கொண்டு மதீனாவை விட்டு புறப்பட்டு விட்டார். நான் இதுவரை பார்திராத ஒரு ராணுவத்துடன் அவர் உன்னைத் தேடி வருகிறார். அவர்கள் உன் மீது நெருப்பாய் பற்றி எரிகிறார்கள். அன்றைய உஹுத் போரில் கலந்து கொள்ளாதவர்களெல்லாம் அவருடன் சேர்ந்து இப்போது புறப்பட்டுள்ளனர். தாங்கள் நழுவவிட்ட ஒரு சந்தர்ப்பத்தை எண்ணி மிகுந்த வருத்தத்துடன் வருகின்றனர். உங்களுக்கு எதிராக அவர்களிடம் இருக்கும் கோபத்தைப் போன்று நான் பார்த்ததே இல்லை” என்று கூறினார்.

இதைக் கேட்ட அபூ ஸுஃப்யான் “உனக்கு நாசம் உண்டாகட்டும். நீ என்ன சொல்கிறாய்?” என்று அதிர்ந்தார். அதற்க்கு அவர் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீ இங்கிருந்து அவர்களை நோக்கி பயணித்தால் வெகு விரைவில் அவர்களுடைய குதிரைகளைக் காண்பாய்” என்றார். (அல்லது இந்தக் காட்டுக்குப் பின்புறத்திலிருந்து முஸ்லிம்களுடைய படையின் முதல் படை வருவதை நீ பார்க்கப் போகிறாய் என்றார்). அதற்கு அபூ ஸுஃப்யான் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர்களை வேரோடு அழிக்க வேண்டுமென்று நாங்கள் எங்களின் முழு ஆற்றலையும் ஒன்று சேர்த்திருக்கிறோம்” என்றார். அதற்க “அவ்வாறு நீ செய்யாதே! நான் உனக்கு உனது நன்மையை நாடி இதைக் கூறுகிறேன். நீ திரும்புவதுதான் உனக்கு நல்லது” என்றார் மஅபத்.

மஅபத் தந்த தகவலால் எதிரிகளின் நம்பிக்கையும் வீரமும் தளர்ந்து, பயமும் திடுக்கமும் அவர்களை ஆட்கொண்டது. மக்காவிற்குத் திரும்புவதுதான் தங்களுக்கு ஏற்றமானது என்று கருதினர். இருப்பினும் முஸ்லிம் படைகள் தங்களை விரட்டி வருவதை நிருத்திக் கொள்ள வேண்டுமென்பதற்காக இஸ்லாமிய படைக்கு எதிராக ஒரு பொய் பிரச்சாரப் போரை அபூ ஸுஃப்யான் தூண்டிவிட்டார். அதாவது, மதீனா சென்று கொண்டிருந்த அப்துல் கைஸ் கிளையினர் இவர்களை வழியில் பார்த்த போது அவர்களிடம் “நான் கூறும் செய்தியை என் சார்பாக முஹம்மதுக்கு எட்ட வைப்பீர்களானால் நீங்கள் மக்கா வரும் போது “உக்காள்” கடைத் தெருவில் உங்களின் ஒட்டகம் சுமை தாங்கமளவிற்கு நான் காய்ந்த திராட்சையை தருவேன்” என்று அபூ ஸுஃப்யான் கூற அவர்கள் “சரி” என்றனர். “முஹம்மதையும் அவரது தோழர்களையும் வேரோடு அழிக்க நாங்கள் முழு ஆற்றலையும் ஒன்று திரட்டி வருகிறோம் என்ற செய்தியை முஹம்மதுக்கு சொல்லிவிடுங்கள்” என்று அபூ ஸுஃப்யான் கூறினார்.

அந்த வியாபாரக் கூட்டம் நபி(ஸல்) அவர்களிடமும் நபித்தோழர்களிடமும் வந்து அபூ ஸுஃப்யான் தாங்களிடம் கூறி அனுப்பிய செய்தியைக் கூறினர். அப்போது நபியவர்களும் நபித்தோழர்களும் ஹம்ராவுல் அஸத் என்ற இடத்தில் தங்கியிருந்தனர். இதைப் பற்றித்தான் அல்லாஹ் பின்வரும் வசனத்தில் கூறுகிறான்.

மக்களில் சிலர் அவர்களிடம்; “திடமாக மக்களில் (பலர் உங்களுடன் போரிடுவதற்காகத்) திரண்டு விட்டார்கள், எனவே அப்படையைப்பற்றி அஞ்சிக் கொள்ளுங்கள்” என்று கூறி (அச்சுறுத்தி)னர்; ஆனால் (இது) அவர்களின் ஈமானைப் பெருக்கி வலுப்படச் செய்தது: “அல்லாஹ்வே எங்களுக்குப் போதுமானவன். அவனே எங்களுக்குச் சிறந்த பாதுகாவலன்” என்று அவர்கள் கூறினார்கள். இதனால் அவர்கள் அல்லாஹ்விடமிருந்து நிஃமத்தையும் (அருட்கொடையையும்,) மேன்மையையும் பெற்றுத் திரும்பினார்கள்; எத்தகைய தீங்கும் அவர்களைத் தீண்டவில்லை; (ஏனெனில்) அவர்கள் அல்லாஹ்வின் விருப்பத்தைப் பின்பற்றினார்கள் - அல்லாஹ் மகத்தான கொடையுடையவனாக இருக்கிறான். அல்குர்அன் 3:173-174

ஆனால், இவர்களுடைய பேச்சை நபியவர்களும் முஸ்லிம்களும் பொருட்படுத்தவில்லை. எதிரிகளை எதிர்பார்த்து (ஹிஜ்ரி 3) ஷவ்வால் பிறை 9, 10, 11 திங்கள், செவ்வாய், புதன் ஆகிய மூன்று நாட்கள் நபி (ஸல்) அவர்கள் தங்களது தோழர்களுடன் ஹம்ராவுல் அஸதில் தங்கியிருந்தார்கள். ஞாயிற்றுக்கிழமை பிறை 8ல் ஹம்ராவுல் அஸதிற்கு வந்து சேர்ந்தார்கள் என்பதை நாம் முன்பே கூறியிருக்கின்றோம். அப்போது அபூ இஜ்ஜா அல் ஜுமஹி என்பவனை நபியவர்கள் கைது செய்தார்கள். ஏற்கனவே பத்ர் போரில் கைது செய்யப்பட்டிருந்த இவனை நபியவர்கள் அவன் ஏழை, அவனுக்கு பெண் பிள்ளைகள் அதிகம் இருக்கின்றனர் என்ற காரணத்தால் அவன் மீது கருணை காட்டி அவனை உரிமையிட்டு தனக்கு எதிராக செயல்படக்கூடாது என்று அவனிடம் ஒப்பந்தம் வாங்கினார்கள். ஆனால், அவன் அந்த ஒப்பந்தத்தை மீறி உஹுத் போரிலும் கலந்து கொண்டதால் நபியவர்கள் அவனை கைது செய்தார்கள். அவன் நபியவர்களிடம் “முஹம்மதே! என்னை மன்னித்துவிடும். என்மீது உபகாரம் செய். எனது பெண் பிள்ளைகளுக்காக என்னை நீ விட்டுவிடு. நான் இப்போது செய்ததைப் போன்று இனி எப்போதும் செய்ய மாட்டேன் என்று உங்களுக்க வாக்குறுதி தருகிறேன்” என்றான். ஆனால், நபியவர்கள் “இதற்குப் பின் நீ மக்காவிற்கு சென்று முஹம்மதை இருமுறை நான் ஏமாற்றிவிட்டேன் என்று கூறும் நிலைமை (எனக்கு) ஏற்படக்கூடாது. ஏனெனில் இறைநம்பிக்கையாளன் ஒரு புற்றில் இருமுறை தீண்டப்பட மாட்டான். (அதாவது ஒரு தவறை மறுமுறை செய்யமாட்டார்) என்று கூறிவிட்டு ஜுபைர் அல்லது ஆஸிம் இப்னு ஸாபித்திடம் அவனது தலையை துண்டிக்கக் கூறினார்கள்.

இவ்வாறே எதிரிகளின் ஒற்றர்களில் ஒருவனான முஆவியா இப்னு முகீரா இப்னு அபுல் ஆஸையும் கொன்றுவிட நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். (இவன் பிற்காலத்தில் வந்த முஸ்லிம் மன்னர் அப்துல் மலிக் இப்னு மர்வானின் தாய்வழி பாட்டனாவான்.)

இதன் விவரமாவது: இணைவைப்பவர்கள் உஹுத் போர் முடிந்து மக்காவிற்கு திரும்புகையில் இவன் தனது ஒன்றுவிட்ட சகோதரர் உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) அவர்களைப் பார்க்க மதீனாவிற்கு வந்தான். உஸ்மான் (ரழி) நபியவர்களிடம் இவனுக்கு பாதுகாப்புக் கொடுக்கும்படி கேட்டார்கள். நபியவர்கள் அவனுக்கு பாதுகாப்புக் கொடுத்துவிட்டு மூன்று நாட்கள் மட்டும் தங்கவேண்டும், அதற்கு மேல் இங்கு தங்கியிருந்தால் கொன்றுவிடுவோம் என்று எச்சரிக்கை விடுத்தார்கள். இஸ்லாமியப் படை மீண்டும் (அல்லது இரண்டாம் முறை) மதினாவில் இருந்து வெளியேறியதற்குப் பின் இவன் மூன்று நாட்களுக்கு மேலாகவும் மதீனாவில் தங்கியிருந்து குறைஷிகளுக்காக உளவு வேலை பார்த்துக் கொண்டிருந்தான். இஸ்லாமியப் படை மதீனாவிற்குத் திரும்ப வருகிறது என்று தெரிந்தவுடன் அவன் மதீனாவிலிருந்து தப்பித்து ஓடினான். அவனைக் கொலை செய்து வரும்படி நபி(ஸல்) ஜைது இப்னு ஹாரிஸா, அம்மார் இப்னு யாசிர் (ரழி) ஆகிய இருவரையும் அனுப்பினார்கள். அவ்விருவரும் அவனைக் கொன்று வந்தார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

ஹம்ராவுல் அஸத் என்ற இந்த போர் ஒரு தனி போரல்ல. மாறாக, உஹுத் போரின் ஒரு தொடர்ந்தான். உஹுத் போரின் ஒரு முடிவுரை என்றும் இதை நாம் சொல்லலாம்.

இதுவரை உஹுத்ப் போரின் அனைத்து விவரங்களையும் நிலைமைகளையம் நிகழ்வுகளையும் தேவையான அளவு அலசினோம். இந்த போரின் முடிவு முஸ்லிம்களுக்கு வெற்றியா தோல்வியா என்பதைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் பலர் மிக நீண்ட ஆராய்ச்சி செய்திருக்கின்றார்கள். போரின் இரண்டாவது கட்டத்தில் எதிரிகளின் தாக்குதலே ஓங்கியிருந்தது. முஸ்லிம்களுக்கு உயிர் சேதம் அதிகம். முஸ்லிம்களில் ஒரு பிரிவினர் முற்றிலும் தோற்றுவிட்டனர். போரின் அனைத்து நிலைகளும் மக்காவினருக்கே சாதகமாக அமைந்தன. இருப்பினும் இதை எல்லாம் வைத்து போரில் வெற்றி அவர்களுக்கு கிடைத்து விட்டது என்று நாம் கூறமுடியாது.

அதற்கான காரணங்கள்: எதிரிகள் முஸ்லிம்களின் ராணுவ முகாம்களை இறுதிவரை கைப்பற்ற முடியவில்லை. முஸ்லிம்களில் பெரும்பாலானவர்கள் போரிலிருந்து பின்வாங்கவில்லை. கடினமான சோதனையும் எதிரிகளின் ஆதிக்கமும் ஏற்பட்டிருந்தும் கூட புறமுதுகுக்

காட்டாமல் தங்களது தலைமையின் கீழ் ஒன்று சேர்ந்து வீரத்துடன் எதிர்த்தனர். முஸ்லிம்களை எதிரிகள் விரட்டியடிக்கும் அளவுக்கு நிலைமை மோசமாகவில்லை. முஸ்லிம்களிலிருந்து எவரும் எதிரிகளிடம் கைதியாகவில்லை. எதிரிகள் முஸ்லிம்களின் உடைமைகளில் எவற்றையும் கைப்பற்ற இயலவில்லை. போர்க் களத்திலிருந்து எதிரிகளே முதலில் வெளியேறினர். முஸ்லிம்கள் அங்கேயே இருந்தனர். போரில் வெற்றி பெற்றவர்கள் ஒன்றிரண்டு நாட்கள் அந்த மைதானத்திலேயே அக்கால வழக்கப்படி தங்கியிருப்பது போன்று எதிரிகள் மைதானத்தில் தங்கியிருக்கவில்லை. மதீனாவில் நுழைந்து அங்குள்ள செல்வங்களையும் பிள்ளை குட்டிகளையும் சூறையாட அவர்களுக்குத் துணிவு பிறக்கவில்லை. போர்களத்திலிருந்து மதீனா மிக அருகாமையில் எவ்வித பாதுகாப்புமில்லாமல் காலியாக இருந்தும் கூட அவர்களுக்கு அங்கு செல்ல துணிவு பிறக்கவில்லை.

இதன் மூலம் நமக்கு உறுதியாக தெரிய வருவது என்னவெனில், முஸ்லிம்களுக்குப் பெரிய நஷ்டம் ஏற்படுத்தும் அளவுக்குண்டான ஒரு சந்தர்ப்பம்தான் அவர்களுக்குக் கிடைத்தது. எனினும், முஸ்லிம்களைச் சுற்றி வளைத்து, முற்றிலும் அழித்து, ஒழிக்க வேண்டும் என்ற தங்களது நோக்கத்தில் தோல்வியைத்தான் கண்டார்கள். முஸ்லிம்களுக்காக ஏற்பட்ட இதுபோன்ற நஷ்டங்கள் பெரும்பாலான சமயங்களில் போரில் வெற்றி பெறும் படையினருக்கும் ஏற்பட்டிருக்கிறது. ஆனால், முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட இந்த நஷ்டத்தைக் கவனித்து எதிரிகளுக்கு இப்போரில் வெற்றி கிடைத்தது என்று சொல்ல முடியாது.

மேலும், அபூ ஸுஃப்யான் போர்க்களத்தை விட்டு விரைவாக திரும்பி செல்வதிலேயே குறியாக இருப்பது, போர் தொடர்ந்தால் தங்களுக்கு தோல்வியும் இழிவும் ஏற்படும் என்று அவர் பயந்து விட்டார் என்பதையே நமக்க உறுதி செய்கிறது. அடுத்ததாக ஹம்ராவுல் அஸத் போர் விஷயத்தில் அபூ ஸுஃப்யானின் நிலைமையைப் பாக்கும் போது இது மேலும் உறுதியாகிறது.

ஆகவே, இந்த போரைப் பொறுத்த வரை இருசாராரில் ஒவ்வொருவருக்கும் ஒரளவு வெற்றியும் தோல்வியும் ஏற்பட்டது; இவ்வாறே இரு படையினரும் மைதானத்திலிருந்து புறமுது காட்டி ஓடவில்லை; தங்களது முகாம்களை எதிரிகள் ஆக்கிரமித்துக் கொள்வதற்குச் சந்தர்ப்பம் அளிக்காமல் போரிலிருந்து தாங்களாகவே ஒதுங்கிக் கொண்டனர்.

இதைத்தான் அல்லாஹ் பின்வருமாறு சுட்டிக் காட்டுகிறான்.

மேலும், (பகைக்) கூட்டத்தைத் தேடிச் செல்வதில் ஊக்கம் குன்றாதீர்கள்; நீங்கள் (போரில்) துன்பப்படுவீர்களானால், நிச்சயமாக அவர்களும் உங்களைப் போன்றே துன்பப்படுகிறார்கள் - அல்லாஹ்விடமிருந்து அவர்கள் எதிர்பார்க்காத (நற்கூலியும் வெற்றியும்) நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். அல்லாஹ் மிக அறிந்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான். அல்குர்ஆன் 4:104

இந்த வசனத்தில் இரு படையினரில் ஒவ்வொருவரையும் மற்றவருக்கு ஒப்பாகவே கூறுகிறான். அதாவது, அவர்களால் உங்களுக்கு எப்படி வேதனை ஏற்பட்டதோ அவ்வாறே உங்களால் அவர்களுக்கும் வேதனை ஏற்பட்டது. இதிலிருந்து இருவரின் நிலைமைகளும் ஒன்றுக்கொன்று ஒப்பாகவே இருந்தன. வெற்றியின்றியே இரு சாராரும் மைதானத்திலிருந்து திரும்பினர் என்று நாம் விளங்கிக் கொள்ளலாம்.

### இப்போர் குறித்து குர்ஆன் பேசுகிறது

இப்போர் தொடர்பான முக்கியக் கட்டங்கள் ஒவ்வொன்றையும் குர்ஆன் மிகத் தெளிவாக விவரிக்கிறது. முஸ்லிம்களுக்கு பெரும் நஷ்டம் ஏற்பட்டதற்கான காரணங்களையும் குர்ஆன் மிகத் தெளிவாக கூறுகிறது. முஸ்லிம்களின் ஒரு சாராரிடம் இருந்த

பலவீனங்களையும் குர்ஆன் வெளிப்படுத்தியது. இதுபோன்ற இக்கட்டான நிலைமைகளில் முஸ்லிம்களின் கடமைகள், இந்த சமுதாயம் உருவாக்கப்பட்டதன் உயர்ந்த அடிப்படை நோக்கங்கள், படைக்கப்பட்ட சமுதாயங்களில் இதுவே மிகச் சிறந்த சமுதாயம் என்பதால் மற்ற சமுதாயத்தை விட இந்த சமுதாயத்திடம் இருக்க வேண்டிய உயர்ந்த பண்புகள், சில முஸ்லிம்களிடம் இருந்த பலவீனங்கள் மற்றும் குறைபாடுகளையும் குர்ஆன் கோடிட்டது.

(1) இதுபோன்ற கடுஞ்சோதனையின் போது முஸ்லிம்கள் மேற்கொண்டிருக்க வேண்டிய கடமைகள், (2) இச்சமுதாயம் உருவான உயர்ந்த அடிப்படை நோக்கங்கள், (3) மற்ற சமுதாயத்தை விட மிகச் சிறந்த சமுதாயமாக விளங்குபவர்களிடம் இருக்க வேண்டிய சீரிய பண்புகள் ஆகிய இம்மூன்றையும் முன்வைத்து பார்க்கும்போது முஸ்லிம்களிடம் அந்த குறைபாடுகளும் பலவீனங்களும் இருந்திக்கக் கூடாது என்று குர்ஆன் உணர்த்துகிறது.

இவ்வாறே நயவஞ்சகர்களின் நிலைமையைப் பற்றி குர்ஆன் விவரிக்கிறது. அல்லாஹ்வின் மீதும், அவனது தூதரின் மீதும், நயவஞ்சகர்கள் உள்ளத்தில் கொண்டிருந்த வஞ்சகத்தை வெளிப்படுத்தி அவர்களை இழிவடையச் செய்தது. யூதர்களும், நயவஞ்சகர்களும் பரப்பி வந்த சந்தேகங்களையும், உறுதி குறைந்த முஸ்லிம்களின் உள்ளத்திலிருந்த சந்தேகங்களையும் குர்ஆன் அகற்றியது. மேலும், இந்த போரினால் ஏற்படவிருக்கும் நல்ல முடிவுகளையும் அதிலுள்ள நுட்பங்களையும் குர்ஆன் சுட்டிக் காட்டுகிறது. இப்போரைப் பற்றி அத்தியாயம் ஆல இம்ரானில் அறுபது வசனங்கள் அருளப்பட்டன. அதில் போரின் தொடக்கதிலிருந்து இறுதி வரை நடந்த அனைத்தும் விவரிக்கப்பட்டது. அதன் தொடக்கம் இவ்வாறு ஆரம்பிக்கிறது.

(நபியே!) நினைவு கூர்வீராக:) நீர் விடியற்காலையில் உம் குடும்பத்தாரை விட்டுச் சென்று முஃமின்களைப் போருக்காக (உஹது களத்தில் அவரவர்) இடத்தில் நிறுத்தினீர்; அல்லாஹ் எல்லாவற்றையும் செவியுறுவோனாகவும் நன்கறிபவனாகவும் இருக்கின்றான். அல்குர்ஆன் 3:121

அதன் இறுதி இப்போரின் விளைவுகள் பற்றியும் அதன் நுட்பங்கள் பற்றியும் மிகச் சரியான விமர்சனங்களுடன் முடிகிறது.

"குஃப்ரில் அவர்கள் வேகமாகச் சென்று கொண்டிருப்பது உம்மைக்கவலை கொள்ளச் செய்ய வேண்டாம்; நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வுக்கு ஒரு சிறு தீங்கும் செய்துவிட முடியாது; அல்லாஹ் அவர்களுக்கு மறுமையில் நற்பாக்கியம் எதுவும் ஆக்காமல் இருக்கவே நாடுகிறான்; அவர்களுக்குப் பெரும் வேதனையும் உண்டு. அல்குர்ஆன் 3:176

**இப்போரின் அழகிய முடிவுகளும் நுட்பங்களும்**

அறிஞர் இப்னு ஹஜர் (ரஹ்) இது குறித்து பின்வருமாறு கூறுகிறார்: உஹுத் போரிலும் அதில் முஸ்லிம்களுக்கு நிகழ்ந்தவற்றிலும் பல படிப்பினைகளும் இறை நுட்பங்களும் உள்ளன. அவற்றில் சிலவற்றைக் கீழே பார்ப்போம்:

1) பாவத்தினால் உண்டாகும் கெட்ட முடிவுகள் மற்றும் தடுக்கப்பட்டதை செய்வதனால் ஏற்படும் தீய விளைவுகள் குறித்து முஸ்லிம்களுக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளது. இதை, அம்பெறியும் வீரர்கள் அவ்விடத்திலிருந்து விலகக் கூடாது என்று நபி(ஸல்) கூறியதற்கு மாற்றம் செய்ததால் ஏற்பட்ட விளைவுகளைப் பார்த்து விளங்கிக் கொள்ளலாம்.

2) தூதர்கள் சோதிக்கப்படுவார்கள். ஆனால், இறுதியில் வெற்றி அவர்களுக்குத்தான் கிடைக்கும். இதில் அடங்கியிருக்கும் நுட்பமாவது: இறைதூதர்களுக்கு எப்போதும் வெற்றியே கிடைத்துக் கொண்டிருந்தால் அல்லாஹ்வை நம்பிக்கை கொள்ளாதவர்களும் தங்களை அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டவர்கள் என்று பெயரளவில் சொல்லிக்

கொள்வர். அதனால் உண்மையானவர் யார்? பொய்யர் யார்? என பிரித்து அறிய முடியாது. எப்போதும் இறைத் தூதர்களுக்கு தோல்வியே ஏற்பட்டு வந்தால் அவர்களைத் தூதர்களாக அனுப்பிய நோக்கமும் நிறைவேறாது. எனவே, பொய்யர்களிலிருந்து உண்மையானவர்களைப் பிரித்து விடுவதற்காக வெற்றி தோல்வி இரண்டையும் சேர்த்து வழங்குவதே சரியானது. அதாவது, நயவங்சகர்களின் நயவஞ்சகத்தனம் முஸ்லிம்களுக்கத் தெரியாமல் இருந்தது. இப்போரில் சொல்லிலும் செயலிலும் தங்களின் நயவஞ்சகத் தன்மையை அந்நயவஞ்சகர்கள் வெளிப்படுத்திய போது அவர்கள் முகத்திரை அகன்று, அவர்கள் யார்? எனத் தெளிவாகிவிட்டது. மேலும், முஸ்லிம்கள் தங்களின் இல்லங்களுக்குள் இருக்கும் எதிரிகளைத் தெரிந்துகொண்டு, அவர்களிடமிருந்து விலகி, அவர்களின் தீமையை எதிர்கொள்ள ஆயத்தமானார்கள்.

3) சில சமயங்களில் அல்லாஹ் உதவியைத் தாமதப்படுத்தி வழங்குவதால் உள்ளத்தின் பெருமை அகற்றப்பட்டு அதில் பணிவு ஏற்படுத்தப்படுகிறது. ஆகவேதான் சோதனையின்போது முஸ்லிம்கள் சகித்துக் கொண்டு உறுதியாக இருந்தனர். நயவஞ்சகர்களோ பயந்து, அஞ்சி, நடுநடுங்கி நிலைகுலைந்து விட்டனர்.

4) அல்லாஹ் சொர்க்கத்தில் இறைநம்பிக்கையாளர்களுக்காக பல உயர் நிலைகளையும் அந்தஸ்துகளையும் ஏற்படுத்தியிருக்கின்றான். அதை அவர்கள் வணக்க வழிபாடுகளால் அடைய முடியாதபோது பல சோதனைகளையும் சிரமங்களையும் அவர்களுக்கு கொடுப்பதன் மூலம் அவர்கள் அந்த உயர் பதவிகளை அடைந்து கொள்கிறார்கள்.

5) இஸ்லாமிய போரில் உயிர் தியாகம் செய்வது என்பது இறைநேசர்களின் மிக உயர்ந்த பதவியாகும் அதை அல்லாஹ் தனது நபி(ஸல்) அவர்களின் தோழர்களுக்கு வழங்கினான்.

6) அல்லாஹ் தனது எதிரிகளை அழிக்க நாடினால் அதற்காக அவர்களிடம் காரணங்களை ஏற்படுத்துகிறான். அதாவது, அவர்களின் ஓரிறை நிராகரிப்பு, அல்லாஹ்வின் நேசர்களை நோவினை செய்வது போன்றவற்றைக் காரணமாக்கி அவர்களை அழித்து விடுகிறான். மேலும், இறைநம்பிக்கையாளர்களின் பாவங்களை அவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைக்குப் பகரமாக ஆக்கி மன்னித்து விடுகிறான். (ஃபதஹுல் பாரி)

அறிஞர் இப்னுல் கய்யிமும் தனது ஜாதுல் மஆது என்ற நூலில் இத்தலைப்பின் கீழ் போதுமான விவரங்களைத் தந்துள்ளார். ஆர்வமுள்ளவர்கள் அங்கு பார்க்கலாம்.

### உஹுத் போருக்கு பின் அனுப்பட்ட படை பிரிவுகளும் குழுக்களும்.

உஹுத் போரில் ஏற்பட்ட துக்ககரமான நிகழ்ச்சி இறைநம்பிக்கையாளர்களைப் பற்றி பிற மக்களிடம் இருந்த நற்பெயருக்கு பெரும் பங்கமாக அமைந்தது. முஸ்லிம்களைப் பற்றி பிறர் உள்ளத்தில் இருந்த அச்சம் அகன்று விட்டது. உள்நாட்டு வெளிநாட்டு பிரச்சனைகள் முஸ்லிம்களுக்கு அதிகரித்தன. அனைத்து திசைகளிலிருந்தும் ஆபத்துகள் மதீனாவைச் சூழ்ந்தன. யூதர்களும், நயவஞ்சகர்களும் கிராமத்து அரபிகளும் தங்களின் பகைமையை வெளிப்படையாகக் காட்டினர். இவர்களில் ஒவ்வொரு வகுப்பினரும் முஸ்லிம்களுக்குத் தீங்கிழைக்க நாடினர். மேலும், முஸ்லிம்களை முழுவதுமாக அழித்து விட வேண்டும் என்றும் ஆசைப்பட்டனர்.

உஹுத் போர் முடிந்து இரண்டு மாதங்கள்தான் ஆகியிருக்கும். அதற்குள் அஸத் கோத்திரத்தினர் மதீனாவின் மீது கொள்ளையிட திட்டம் தீட்டினர். இதற்குப் பின் அழல், காரா என்ற இரு வமிசத்தினர் ஹிஜ்ரி 4, ஸஃபர் மாதம் ஒரு சதித்திட்டம் தீட்டி 10 நபித்தோழர்களைக் கொன்றனர். மேலும், இம்மாதத்தில் ஆமிர் இப்னு துபைல் என்பவன் சில கிளையினரை தூண்டிவிட்டு 70 முஸ்லிம்களைக் கொல்ல வைத்தான். இச்சம்பவம் வரலாற்றில் பிஃரு மஊனா என்ற அறியப்படுகிறது. மேலும், இக்கால கட்டத்தில் நழிர்

வமிச யூதர்கள் வெளிப்படையாக தங்களின் எதிர்ப்பைக் காட்டினர். இறுதியாக, ஹிஜ்ரி 4, ரபீஉல் அவ்வல் மாதம் நபி (ஸல்) அவர்களை கொன்று விடுவதற்கு சூழ்ச்சி செய்தனர். இதே ஆண்டு ஜமாத்துல் அவ்வல் மாதத்தில் கத்ஃபான் கோத்திரத்தார் மதீனாவின் மீது தாக்குதல் நடத்தத் துணிவு கொண்டனர். முஸ்லிம்கள் மீது பிறருக்கு முன்பிருந்த பயம் உஹுத் போரினால் அகன்றுவிட்டதால் ஒரு காலம் வரை முஸ்லிம்கள் மாற்றார்கள் மூலம் பல ஆபத்துகளுக்கும் அச்சுறத்தல்களுக்கும் இலக்காயினர்.

இருப்பினும் நபி முஹம்மது (ஸல்) அவர்களின் ஞானமிக்க நுட்பமான நடவடிக்கை இந்நிலைமையை மாற்றியது. முஸ்லிம்களுக்கு அவர்கள் இழந்த மதிப்பை மீட்டு தந்தது. உயர்வையும் கண்ணியத்தையும் அவர்களுக்கு புதிதாக அளித்தது. இந்த அடிப்படையில் நபியவர்கள் எடுத்த முதல் முயற்சி அபூஸுஃப்யானின் படையை விரட்டியடிக்க அவர்கள் எடுத்த நடவடிக்கையாகும். இதன் காரணமாக முஸ்லிம்கள் மதிப்பு சற்று பாதுகாக்கப்பட்டது. அவர்களுக்கு இருந்த உயர்வில் ஓரளவு தக்கவைக்கப்பட்டது. இதைத் தொடர்ந்து மேலும் பல தாக்குதல்களை நபி (ஸல்) அவர்கள் மேற்கொண்டார்கள். இத்தாக்குதல்கள் முஸ்லிம்களுக்கு இழந்த கண்ணியத்தையும் மதிப்பையும் மீட்டு கொடுத்தது மட்டுமல்லாமல் அதைவிட அதிகமாகவே இப்போது மதிப்பையும் மரியாதையையும் ஏற்படுத்தியது. அடுத்து வரும் பக்கங்களில் முஸ்லிம்களுக்கும், முஸ்லிமல்லாதவர்களுக்கும் இடையில் நடந்த சில சம்பவங்களை நாம் பார்போம்.

### அபூ ஸலமா படைப் பிரிவு (ஹிஜ்ரி 4, முஹர்ரம்)

உஹுதில் ஏற்பட்ட பின்னடைவுக்குப் பின் முஸ்லிம்களுக்கு எதிராக கிளம்பிய முதல் கூட்டம் அஸத் இப்னு குஜைமா வமிசமாகும். தல்ஹா இப்னு குவைலித், ஸலமா இப்னு குவைலித் ஆகிய இருவரும் தங்கள் கூட்டத்தினரையும் தங்களுக்குக் கட்டுப்பட்டவர்களையும் அழைத்துக் கொண்டு அஸத் இப்னு குஜைமாவினரிடம் வந்தனர். அவர்களை முஸ்லிம்களின் மீது போர் புரிய தூண்டினர். இந்தச் செய்தி நபி(ஸல்0 அவர்களுக்குக் கிடைத்தவுடன் 150 வீரர்கள் கொண்ட படைப் பிரிவை ஏற்பாடு செய்து அஸது கிளையினரை எதிர்க்க அனுப்பினார்கள். இப்படையில் முஹாஜிர்களும் அன்சாரிகளும் பங்கேற்றனர். அப்படைப் பிரிவிற்கு அபூ ஸலமாவைத் தளபதியாக்கி அவரிடம் கொடியைக் கொடுத்தார்கள். அஸத் கிளையினர் தாக்குதல் நடத்த தயாராகும் முன் அவர்கள் தங்களுடைய வீடுகளில் இருக்கும் போதே அவர்கள் மீது அபூஸலமா (ரழி) தனது படையினரை அழைத்துக் கொண்டு திடீரெனத் தாக்கினார்கள். இதைச் சற்றும் எதிர்பாராத அவர்கள் திக்குமுக்காடி தப்பித்துக் கொள்ள பல பக்கங்களிலும் சிதறி ஓடி ஒளிந்தனர். முஸ்லிம்கள் அஸதினரின் ஒட்டகங்களையும் ஆடுகளையும் பிடித்துக் கொண்டு மதீனா வந்தனர். அஸதினர் எதிர்க்காததால் சண்டை ஏதும் நடைபெறவில்லை.

ஏற்கனவே அபூ ஸலமாவிற்கு உஹுத் போரில் ஏற்பட்ட காயம் பெரிதாகி விடவே போரிலிருந்து மதீனா வந்தடைந்த சில நாட்களிலேயே அவர்கள் உயிர் பிரிந்தது. (ஜாதுல் மஆது)

### அப்துல்லாஹ் இப்னு உனைஸை அனுப்புதல்

ஹிஜ்ரி 4, முஹர்ரம் மாதம் பிறை 5ல் காலித் இப்னு சுஃப்யான் என்பவன் முஸ்லிம்களிடம் போர் செய்ய கூட்டம் சேர்ப்பதாக நபியவர்களுக்குச் செய்தி எட்டியது. இதனை அறிந்த நபியவர்கள், அவனைக் கொன்று வர அப்துல்லாஹ் இப்னு உனைஸ் (ரழி) அவர்களை அனுப்பினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உனைஸ் (ரழி) அவனைக் கொன்றுவர 18 இரவுகள் எடுத்துக் கொண்டார்கள். அவர்கள் முஹர்ரம் மாதம் முடிய 7 நாட்கள் இருக்கும் போது சனிக்கிழமை மதீனாவிற்குத் திரும்பினார்கள். அவர்கள் காலித் இப்னு சுஃப்யானைக்

கொன்று அவனது தலையைக் கொய்து வந்தார்கள். அத்தலையை நபி(ஸல்) அவர்களுக்க முன் வைக்க, நபியவர்கள் மகிழ்ச்சியடைந்து ஒரு கைத்தடியை அவருக்கு வழங்கி “இது மறுமையில் எனக்கும் உனக்கும் மத்தியிலுள்ள அடையாளம்” என்றார்கள். நபியவர்களின் கைத்தடியைத் தனது வாழ்நாள் முழுவதும் பாதுகாத்து வைத்திருந்த அப்துல்லாஹ் (ரழி) அதை தனது கஃபனுடன் (மரணித்தவரை போர்த்தும் உடை) சேர்த்து தனது அடக்கஸ்தலத்தில் வைக்கப்பட வேண்டுமென வஸிய்யா (மரண சாஸனம்) செய்தார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

## ரஜீஃ குழு

ஹிஜ்ரி 4, ஸஃபர் மாதம் அழல் மற்றும் காரா வமிசத்தை சேர்ந்த ஒரு கூட்டம் நபி (ஸல்) அவர்களை சந்தித்து தங்களில் பலர் இஸ்லாத்தைத் தழுவ விரும்புகின்றனர். அவர்களுக்கு இஸ்லாமையும் குர்ஆனையும் கற்றுத் தர தங்களுடன் சிலரை அனுப்புமாறு கோரினர். அவர்களின் கோரிக்கையை ஏற்று 6 நபர்களை நபியவர்கள் அனுப்பினார்கள். அவர்களுக்கு மர்ஸத் இப்னு அபூமர்ஸத் கனவி (ரழி) அவர்களைத் தலைவராக்கினார்கள். இது இப்னு இஸ்ஹாக்கின் கூற்றாகும்.

“அனுப்பப்பட்டவர்கள் 10 நபர்கள்; அவர்களுக்குத் தலைவாரக ஆஸிம் இப்னு ஸாபித் (ரழி) இருந்தார்கள்” என்பது இமாம் புகாரியின் கூற்றாகும்.

இவர்களை அழைத்துக் கொண்டு ரஜீஃவு என்ற இடத்தை அம்மக்கள் அடைந்தனர். இவ்விடம் ராபிக் மற்றும் ஜித்தாவிற்கு மத்தியில் ஹிஜாஸு பகுதிக்கு அருகில் ஹுதைல் வமிசத்தை சொந்தமான நீர் நிலையாகும். இங்கு வந்தவுடன் லஹ்யான் கிளையினரை இவர்கள் முஸ்லிம்களுக்கு எதிராகத் தூண்டினர். லஹ்யான் கிளையைச் சோந்த 100 அம்பெறியும் வீரர்கள் காலடி காவடி அடையாளங்களை வைத்து இவர்கள் இருக்குமிடம் வந்தடைந்தனர். தங்களுக்கு மோசடி நடந்துவிட்டது என்று தெரிந்து கொண்ட நபித்தோழர்கள் ஃபத்ஃபத் என்ற மலைக்குன்றின் மீது ஏறிக்கொண்டனர். அங்கு வந்த எதிரிகள் “நாங்கள் உங்களைக் கொலை செய்யோம் என்ற உறுதிமொழி தருகிறோம், இறங்கி வாருங்கள்” எனக் கூறினர். ஆனால், ஆஸிம் இறங்கி வர மறுத்துவிட்டு, தங்களது தோழர்களுடன் சேர்ந்து எதிரிகளை எதிர்த்தனர். ஆனால், எதிரிகள் நபித்தோழர்களில் 7 நபர்களைக் கொன்றுவிட்டனர். மீதம் குபைப், ஜைது இப்னு தஸின்னா (ரழி) இன்னும் ஒருவர் ஆகிய மூவர் மட்டும் இருந்தனர். அவர்களிடம் இந்த எதிரிகள் கொல்ல மாட்டோம் என் மீண்டும் வாக்களித்தனர். அம்மூவரும் அவர்களிடம் இறங்கிவரவே தங்களின் வாக்குக்கு மாறுசெய்து வில்லின் நரம்புகளால் அவர்களைக் கட்டினர்.

அந்த மூன்றாவது நபித்தோழர் “இது இவர்களின் முதல் மோசடி” எனக் கூறி அவர்களுடன் செல்வதற்கு மறுத்தார். அவர்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் அவர் வர மறுக்கவே அவரைக் கொன்றுவிட்டனர். அதற்கு பின் குபைப், ஜைது (ரழி) இருவரையும் மக்காவிற்கு அழைத்து வந்து அங்கு அவர்களை விற்றனர். இவ்விருவரும் பத்ர் போரில் மக்காவின் தலைவர்களில் சிலரை கொன்றிருந்தனர். குபைபை வாங்கியவர்கள் சில காலம் வரை அவர்களைச் சிறை வைத்திருந்தனர். பின்பு அவரை கொன்றுவிட முடிவு செய்து மக்காவின் புனித எல்லைக்கு வெளியில் அழைத்து சென்றனர். அங்கு அவரைக் கழு மரத்தில் ஏற்றி கொன்றுவிடலாம் என முடிவு செய்தனர். அப்போது குபைப் (ரழி) “நான் இரண்டு ரக்அத் தொழுதுகொள்ள என்னை விடுங்கள்” என்று கேட்க அவர்களும் அனுமதித்தனர். தொழுது முடித்தபின் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனக்கு நடுக்கம், பயம் ஏற்பட்டுவிட்டது என்று நீங்கள் கூறமாட்டீர்கள் என்றிருப்பின் நான் மேலும் தொழுதிருப்பேன் என்று கூறிய பிறகு, அல்லாஹ்வே! இவர்களை எண்ணிக்கொள்! இவர்களை தனித்தனியாக பிரித்து கொன்றுவிடு! இவர்களில் எவரையும் மீதம் விடாதே!” என்று கூறி பின்வரும் கவிதையை படித்தார்.

“எதிரி ரானுவத்தினர் என்னை சூழ்ந்தனர்;
தங்கள் இனத்தவரை எனக்கெதிராக ஒன்றிணைத்தனர்;
ஒவ்வொரு சாதியையும் வருமாறு அழைத்தனர்;
தங்களின் பெண்கள், பிள்ளைகள் என அனைவரையும் இணைத்தனர்;
ஒரு நீண்ட உறுதிமிக்க கழுமரத்திற்கருகில் நான் நிறுத்தப்பட்டேன்;
எனது கஷ்டம், தனிமை, அந்நியம்
மேலும் நான் இறக்குமிடத்தில் சூழ்ந்துள்ள ராணுவம்
இவையனைத்தையும் அல்லாஹ்விடமே முறையிடுகிறேன்;
இறைவனை நான் நிராகரிக்கவேண்டுமென பெரிதும் விரும்பினர்;
(எங்ஙனம் அதனைச் செய்வேன்)
மரணம் எனக்கு அதைவிட மிக எளிது;
என் கண்கள் அழுகின்றன; நீர் ஓட இடமில்லை;
எனக்கிழைத்த துன்பத்தைத் தாங்க
அர்ஷின் அதிபதி எனக்கு பொறுமையளித்தான்;
அணு அணுவாக அவர்கள் என்னை கொல்கின்றனர்;
எனக்கு மோசமான உணவு வழங்கப்பட்டது;
நான் முஸ்லிமாகக் கொலையுறுவதால்
மரணம் ஒரு பொருட்டல்லவே!
எந்த பகுதியில் கொலையுண்டாலும்
அல்லாஹ்வின் பாதையில் என் மரணம் துயில் கொள்ளுமே!
அது, அல்லாஹ் நாடினால், துண்டு துண்டான
சதைகளின் நாள, நரம்புகளிலெல்லாம் அருள்வளம் பொழிவான்”

இந்த கவிதைகளைச் செவிமடுத்தப் பின் அபூஸுஃப்யான் குபைபிடம் “உன்னை உனது குடும்பத்தாரிடம் விட்டுவிடுகிறோம். ஆனால், முஹம்மதை நாங்கள் கொன்று விடுகிறோம். இது உனக்கு விருப்பமா? என்று கேட்டார். அதற்கு “நான் எனது குடும்பத்தில் இருக்க, முஹம்மது (ஸல்) அவர்களுக்கு நோவினை அளிக்கும் விதமாக அவருக்கு முள் குத்துவதை கூட நான் விரும்பமாட்டேன்” என குபைப் பதிலளித்தார். இதற்குப் பின் அவரை கழு மரத்தில் ஏற்றிக் கொன்றனர். அவர்களின் உடலை காவல் காக்க அங்கு சிலரை நியமித்தனர். ஒரு நாள் இரவில் அம்ர் இப்னு உமையா ழம்ரி என்பவர் அவரை கழு மரத்திலிருந்து இறக்கி நல்லடக்கம் செய்தார். பத்ர் போரில் குபைப் ஹாரிஸை கொன்றதால் அதற்குப் பதிலாக அவனின் மகன் உக்பா என்பவன் குபைப் அவர்களை கொன்றான்.

கொல்லப்படும் தருணத்தில் இரண்டு ரக்அத் தொழும் பழக்கத்தை முதலில் குபைப் தான் ஏற்படுத்தினார். மக்காவில் பழங்களே இல்லாமல் இருந்த காலத்தில் கைதியாக இருந்த குபைப் திராட்சைக் குலைகளைச் சாப்பிடுவதையும் மக்கள் பார்த்திருக்கின்றனர். (ஸஹீஹுல் புகாரி)

ஜைது இப்னு தஸின்னாவை ஸஃப்வான் இப்னு உமைய்யா விலைக்க வாங்கி தனது தந்தை உமைய்யா பத்ரில் கொல்லப்பட்டதற்கு பதிலாக அவரைக் கொன்றான்.

முன்னால் கொல்லப்பட்ட ஆஸிமுடைய உடலின் ஒரு சில பகுதியையாவது எடுத்து வர குறைஷிகள் சிலரை அனுப்பினர். ஆஸிம் குறைஷிகளின் மிக மதிக்கத்தக்க ஒருவரை பத்ரில் கொன்றிந்தார். ஆஸிமை பாதுகாப்பதற்கு அல்லாஹ் தேனியைப் போன்ற சில வண்டுகளை அனுப்பி, வந்தவர்களை விரண்டோடச் செய்தான். “தான் எந்த இணைவைப்பவனையும் தொடமாட்டேன்; எந்த இணைவைப்பவனும் என்னை தொட்டுவிடக் கூடாது” என்று ஆஸிம் அல்லாஹ்விடம் வேண்டி இருந்தார். அவரின் இந்த

வேண்டுதலையும் உறுதியையும் அல்லாஹ் நிறைவேற்றினான். இச்செய்தியைக் கேள்விப்பட்ட உமர் (ரழி) "அல்லாஹ் முஃமினான (அல்லாஹ்வை நம்பிக்கை கொண்ட) அடியானை உயிருடன் இருக்கும் போது பாதுகாத்தது போன்று அவரின் மரணத்திற்குப் பின்னும் பாதுகாக்கிறான்" என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**பிஃரு மஊனா**

ரஜீஃ என்ற இடத்தில் நடைபெற்ற மேற்கூறப்பட்ட துக்கமான நிகழ்ச்சிக்குப் பின் அதைவிட படுபயங்கரமான, ஒரு துக்கமான சம்பவம் நடந்தது. இதையே வரலாற்றில் பிஃர் மஊனா அசம்பாவிதம் என குறிப்பிடப்படுகிறது. அதன் சுருக்கமாவது:

ஈட்டிகளுடன் விளையாடுபவன் என்றழைக்கப்படும் அபூபரா என்ற ஆமிர் இப்னு மாலிக் என்பவன் மதீனாவில் நபி(ஸல்) அவர்களைச் சந்தித்தான். நபியவர்கள் அவனுக்கு இஸ்லாமிய அழைப்பு கொடுத்தார்கள். அவன் அதை ஏற்கவுமில்லை, அதை மறுக்கவுமில்லை. அவன் நபியவர்களிடம் "அல்லாஹ்வின் தூதரே! நஜ்து மக்களை இஸ்லாமின் பக்கம் அழைக்க என்னுடன் உங்களது தோழர்களை அனுப்புங்கள், அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என நான் எண்ணுகிறேன்" என்றான். அதற்கு நபியவர்கள் "நஜ்துவாசிகள் எனது தோழர்களுக்கு ஆபத்து ஏதும் விளைவிக்கலாம் என நான் அஞ்சுகிறேன்" என்றார்கள். அதற்க அபூபரா "நான் அவர்களை பாதுகாப்பேன்" என்றான். எனவே, நபியவர்கள் நாற்பது தோழர்களை அனுப்பினார்கள். இது இப்னு இஸ்ஹாக் (ரஹ்) உடைய கூற்று. ஆனால் எழுபது நபர்கள் என ஸஹீஹுல் புகாரியில் வந்துள்ள எண்ணிக்கையே சரியானதாகும். இவர்களுக்கு ஸாயிதா குடும்பத்தைச் சேர்ந்த முன்திர் இப்னு அம்ர் என்பவரை நபியவர்கள் தலைவராக்கினார்கள். பிற்காலத்தில் இவர் "முஃனிக் லியமூத்" மரணமாக விரைந்தவர் என்று இவர் அழைக்கப்பட்டார். அதற்குக் காரணம், அவர் இந்நிகழ்ச்சியில் வீரமரணம் அடைய முதலாவதாக விரைந்தார். அனுப்பப்பட்ட தோழர்கள் அனைவரும் முஸ்லிம்களில் மிகச் சிறந்தவர்களாகவும், குர்ஆனைக் கற்றுத் தேர்ந்தவர்களாவும் இருந்தனர். இவர்கள் பகலில் விறகு பொறுக்கி அதை விற்று திண்ணைத் தோழர்களுக்கு உணவு வாங்கி வருவர். இரவில் குர்ஆன் ஓதுவதும், தொழுவதுமாக தங்களது வாழ்வைக் கழித்து வந்தனர்.

இவர்கள் அவனுடன் புறப்பட்டு பிஃரு மஊனா என்ற இடத்தை அடைந்தனர். இந்த இடம் ஆமிர் கிளையினருக்குச் சொந்தமான நிலத்திற்கும் ஸுலைம் கிளையினருக்கு சொந்தமான விவசாயக் களத்திற்கும் மத்தியிலுள்ள நீர் நிலையாகும். அங்கு அனைவரும் தங்கிக்கொண்டு ஹிராம் இப்னு மில்ஹான் என்ற தோழரை நபி (ஸல்) அவர்களின் கடிதத்தைக் கொடுத்து ஆமிர் இப்னு துஃபைல் என்பவனிடம் அனுப்பினர். இந்த அல்லாஹ்வின் எதிரி அக்கடிதத்தை படிக்கவில்லை. அவன் சாடைக்காட்ட, ஒருவன் சிறு ஈட்டியால் ஹிராமைப் பின்புறத்திலிருந்து குத்தினான். தான் குத்தப்பட்டதையும், தனது உடம்பில் இரத்தம் வருவதையும் பார்த்த ஹிராம் "அல்லாஹு அக்பர். அல்லாஹ் மிகப் பெரியவன், கஅபாவின் இறைவின் மீது சத்தியம்! நான் வெற்றி பெற்றுவிட்டேன்" என்று கூறினார்.

அல்லாஹ்வின் எதிரியான அவன் எஞ்சிய மற்ற நபித்தோழர்களைக் கொல்வதற்கு ஆமிர் கிளையினரை அழைத்தான். ஆனால், அபூபரா இவர்களுக்கப் பாதுகாப்பு அளித்திருப்பதால் ஆமிர் கிளையினர் அதற்கு மறுத்து விட்டனர். பின்பு ஸுலைம் கிளையினரை அழைத்தான். ஸுலைமினரில் உஸைய்யா, ரிஃல், தக்வான் என்ற மூன்று வகுப்பினர் அவனது அழைப்பை ஏற்று அவனுடன் கிளம்பினர். இவர்கள் அனைவரும் நபித்தோழர்களைச் சுற்றி வளைத்து நபித்தோழர்களுடன் சண்டையிட்டனர். இதில் தோழர்கள் அனைவரும் கொல்லப்பட்டனர். ஆனால், கஅபு இப்னு ஜைது இப்னு நஜ்ஜார்

என்ற தோழர் மட்டும் படுகாயங்களுடன் பூமியில் சாய்ந்தார். இவர் இறந்துவிட்டதாக எதிரிகள் எண்ணினர். எதிரிகள் சென்ற பிறகு அவ்விடத்தில் இருந்து தப்பித்து மதீனா வந்தார். இவர் பின்னால் நடந்த அகழ் போரிலும் கலந்தார். அதில் எதிரிகளால் கொல்லப்பட்டார்.

தோழர்களில் அம்ர் இப்னு உமைய்யா ளம்ரி, முன்திர் இப்னு உக்பா இப்னு ஆமிர் ஆகிய இருவரும் முஸ்லிம்களின் வாகனங்களை மேய்த்து வருவதற்க்காகச் சென்றிருந்தனர். அங்கிருந்து முஸ்லிம்கள் தங்கியிருந்த இடத்திற்கு மேல் பிணந்தின்னி பறவைகள் வட்டமிடுவதை பார்த்து முஸ்லிம்களுக்கு ஏதோ ஆபத்து நிகழ்ந்து விட்டதை உணர்ந்தனர். உடனே அவ்விருவரும் அங்கு விரைந்தனர். எதிரிகள் தங்கள் தோழர்களை வஞ்சித்ததைப் பார்த்து பொங்கி எழுந்தனர். தாங்கள் இருவர் மட்டுமே இருக்கிறோம் என்பதையும் பொருட்படுத்தாமல் துணிச்சலுடன் எதிரிகளை எதிர்த்தனர். நீண்ட நேர சண்டைக்குப் பின் முன்திர் எதிரிகளால் கொல்லப்பட்டார். அம்ர் இப்னு உமையா கைதியாக்கப்பட்டார். அம்ர் முழர் குடும்பத்தைச் சார்ந்தவர் என்று தெரியவந்ததும் அவரின் முன்னந்தலையை சிரைத்துவிட்டு எதிரிகளின் தலைவனான ஆமிர் தனது தாய் செய்திருந்த நேர்ச்சைக்காக அவரை உரிமையிட்டு விட்டான். அம்ர் இப்னு உமைய்யா ழம்ரி (ரழி) முஸ்லிம்களில் மிகச் சிறந்தவர்களான இந்த எழுபது தோழர்கள் கொல்லப்பட்ட, மிகக் கவலையூட்டும் செய்தியை நபி (ஸல்) அவர்களிடம் கூறுவதற்காக மதீனா நோக்கி விரைந்தார். இந்நிகழ்ச்சி உஹுத் போரில் ஏற்பட்ட வேதனையை மீண்டும் முஸ்லிம்களுக்கு நினைவூட்டியது. ஆனால் போரில் சண்டையிட்டு இறந்தனர். இவர்கள் வஞ்சகமாகத் தாக்கப்பட்டு மரணமடைந்தனர்.

அம்ர் இப்னு உமையா (ரழி) மதீனா திரும்பும் வழியில் கனாத் என்ற பள்ளத்தாக்கில் உள்ள கர்கரா என்ற இடத்தில் ஒரு மர நிழலில் தங்கினார். அப்போது கிலாப் கோத்திரத்தை சேர்ந்த இருவரும் அதே இடத்தில் வந்து தங்கினர். அம்ர் அவ்விருவரையும் எதிரிகளைச் சேர்ந்தவர்கள் என்றெண்ணி அவ்விருவரும் நன்கு கண் அயர்ந்துவிட்ட பின் தனது தோழர்களுக்காக பழிவாங்கும் நோக்கத்தில் அவ்விருவரையும் கொன்று விட்டார். ஆனால், கொன்று முடித்தபின் அவ்விருவரிடமும் நபி(ஸல்) அவர்களின் ஒப்பந்தக் கடிதம் இருப்பதை பார்த்தார். அது அவருக்கு முன்னதாக தெரியாது. மதீனா வந்தடைந்ததும் தனது செயலை நபியவர்களிடம் கூறி வருந்தினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள் “நீ கொலை செய்த இருவருக்காக நான் நிச்சயம் தியத் (கொலைக் குற்றத்திற்குரிய பரிகாரத் தொகை) கொடுக்க வேண்டியது கடமையாகிவிட்டது எனக் கூறி, முஸ்லிம்கள் மற்றும் முஸ்லிம்களின் ஒப்பந்தகாரர்களான யூதர்களிடம் இந்த தியத்தை வசூல் செய்து கொடுத்தார்கள். (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

சில நாட்களுக்குள் நடந்த ரஜீஃ, பிஃரு மஊன் ஆகிய இவ்விரு நிகழ்ச்சிகள் நபி(ஸல்) அவர்களுக்குப் பெரும் கவலை அளித்தன. நபியவர்கள் மிகுந்த சஞ்சலத்திலும் துக்கத்திலும் ஆழ்ந்தார்கள். தங்களின் தோழர்களுக்கு மோசடி செய்த கூட்டத்தினருக்கு எதிராக நபியவர்கள் பிரார்தித்தார்கள். (இப்னு ஸஆது)

அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: தங்களின் தோழர்களை பிஃரு மஊனா வில் கொன்றவர்களை நபி(ஸல்) அவர்கள் முப்பது நாட்கள் சபித்தார்கள். ஃபஜ்ரு தொழுகையில் ரிஃலு, தக்வான், லஹ்யான், உஸய்யா ஆகிய கோத்திரத்தினருக்கு எதிராக நபியவர்கள் பிரார்த்தனை (குனூத் நாஜிலா) செய்தார்கள். மோசடி செய்த ஒவ்வொரு வகுப்பாரின் பெயரை கூறி வரும்போது “உஸய்யா வமிசத்தினர் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறு செய்தனர்” என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு குர்ஆன் வசனம் ஒன்றை இறக்கினான். ஆனால், அதை அல்லாஹ் பிற்காலத்தில் குர்ஆனிலிருந்து எடுத்துவிட்டான். “நாங்கள் எங்களது இறைவனை சந்தித்தோம், அவன் எங்களை பொருந்திக் கொண்டான். நாங்களும் அவனை பொருந்திக் கொண்டோம் என்ற செய்தியை

எங்களது கூட்டத்தினருக்கு எடுத்து சொல்லிவிடுங்கள்'' என்பதே அவ்வசனம். அதற்குப் பின் நபி(ஸல்) அவர்கள் தங்களது இந்த பிரார்த்தனையை நிறுத்திக் கொண்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

### நழீர் இனத்தவருடன் போர் (ஹிஜ்ரி 4 ரபீஉல் அவ்வல், கி.பி. 625 ஆகஸ்டு)

இஸ்லாம் மற்றும் முஸ்லிம்களின் வளர்ச்சியைப் பார்த்து யூதர்கள் உள்ளுக்குள் எரிந்தனர். முஸ்லிம்களை எதிர்க்க ஆற்றலும் துணிவும் இல்லாததால் சூழ்ச்சி செய்வதிலும், சதித்திட்டம் தீட்டுவதிலும் ஈடுபட்டு வந்தனர். தங்களின் பகைமை மற்றும் குரோதத்தையும் அவ்வப்போது வெளிப்படுத்தினர். போர் புரியாமல் வேறு பலவகை தந்திரங்களைக் கொண்டு முஸ்லிம்களுக்கு தொந்தரவு கொடுத்தனர். தங்களுக்கும் முஸ்லிம்களுக்கும் மத்தியில் உடன்படிக்கை மற்றும் ஒப்பந்தங்கள் இருந்தும் அதையெல்லாம் சிறிதும் மதிக்காமல் நடந்தனர். கைனுகா குடும்பத்தைச் சேர்ந்த யூதர்களுக்கு நேர்ந்த கதியையும், கஅபு இப்னு அஷ்ரஃபுக்கு நேர்ந்த கதியையும் பார்த்ததும் இவர்கள் தங்களின் அட்டூழியங்களை அடக்கிக்கொண்டு விஷமத்தனங்களை நிறுத்திக் கொண்டனர்.

ஆனால், உஹுத் போருக்குப்பின் இவர்களுக்குத் துணிவு பிறந்தது. பகைமை மற்றும் மோசடியையும் வெளிப்படையாக செய்யத் துவங்கினர். மக்காவிலுள்ள இணைவைப்பவர்களுடனும், மதீனாவிலுள்ள நயவஞ்சகர்களுடனும் தங்களின் தொடர்பை வலுப்படுத்திக் கொண்டு முஸ்லிம்களுக்கு எதிரான செயல்களில் குதித்தனர். (ஸுனன் அபூதாவூது)

நபி (ஸல்) இந்த யூதர்கள் குறித்து மிகுந்த பொறுமையைக் கடைப்பிடித்தார்கள். ஆயினும், ரஜீஃ, பிஃரு மஊனா ஆகிய நிகழ்ச்சிகளுக்குப் பின் இவர்களுக்கு புது துணிவு பிறந்தது. அதனால் நபியவர்களைக் கொன்றுவிட திட்டம் தீட்டினர்.

நபி (ஸல்) அவர்கள் தங்களின் தோழர்கள் சிலரை அழைத்துக் கொண்டு இவர்களிடம் வந்தார்கள். "அம்ர் இப்னு உமையா ழம்ரி என்ற தனது தோழரால் தவறுதலாக கொல்லப்பட்ட கிலாப் குலத்தவர்களின் குடும்பத்தவர்களுக்கு கொடுக்க வேண்டும். அதற்காக தங்களால் ஆன உதவிகளைச் செய்யும்படி'' நபியவர்கள் கோரினார்கள். யூதர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் மத்தியில் இதற்குமுன் செய்யப்பட்ட உடன்படிக்கையின்படி நஷ்டஈடு கொடுக்கும் விஷயத்தில் முஸ்லிம்களுக்கு யூதர்கள் உதவி செய்ய வேண்டும் என்பதும் ஒன்று. காலங்காலமாக சூழ்ச்சிக்கு பெயர் போன வஞ்சக யூதர்கள் நபியவர்களிடம் "இங்கு அமருங்கள்! நீங்கள் வந்த தேவையை நாங்கள் நிறைவேற்றித் தருகிறோம்'' என்றனர். இவர்கள், கொடுத்த வாக்கை காப்பாற்றுவார்கள் என்று எதிர்பார்த்து நபியவர்கள் அவர்களின் வீட்டுச் சுவரில் சாய்ந்து உட்கார்ந்தார்கள். நபி (ஸல்) அவர்களுடன் அபூபக்ர், உமர், அலீ (ரழி) மற்றும் சில தோழர்களும் இருந்தனர்.

யூதர்கள் தங்களுக்குள் தனிமையில் சந்தித்தனர். அவர்கள் மீது விதிக்கப்பட்ட கேட்டை ஷைத்தான் அவர்களுக்காக அலங்கரித்து அதை செய்யத் தூண்டினான். எனவே, அவர்கள் நபியவர்களை கொன்றுவிட சதித்திட்டம் தீட்டினர். திருகைக் கல்லை எடுத்து வீட்டுக் கூரைக்கு மேல் ஏறி முஹம்மதின் தலை மீது போட்டு தலையை நசுக்கி கொன்றுவிடலாம் என ஒருவன் ஆலோசனைக் கூறினான். அதை அனைவரும் ஆமோதித்தனர். இதைச் செய்ய வழிகேடன் அம்ர் இப்னு ஜஹாஷ் என்ற விஷமி ஆயத்தமானான். ஆனால் ஸலாம் இப்னு மிஷ்கம் என்பவர் "அவ்வாறு செய்ய வேண்டாம்'' என்று அவர்களைத் தடுத்தார். மேலும் "அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் தீட்டும் திட்டம் அவருக்கு அறிவிக்கப்பட்டு விடும். அது நமக்கும் அவருக்குமிடையில் உள்ள உடன்படிக்கையை முறிப்பதாகி விடும்'' என்று எச்சரித்தார். எனினும், தங்களது சதிதிட்டத்தை நிறைவேற்றுவதில் அவர்கள் உறுதியாக இருந்தனர்.

அவர்களின் இந்தச் சதித்திட்டத்தை அகிலங்களின் இறைவனான அல்லாஹ்வின் புறத்திலிருந்து நபி (ஸல்) அவர்களுக்கு ஜிப்ரீல்(அலை) அறிவித்தார். உடனடியாக அங்கிருந்து எழுந்து நபியவர்களும் அவர்களது தோழர்களும் மதீனா வந்தடைந்தனர். “நபியே! நீங்கள் எழுந்தது எதற்காக என்பதை நாங்கள் அறிந்து கொள்ளவில்லையே” என வினவினார்கள். நபியவர்கள் யூதர்கள் செய்த சதியைத் தோழர்களுக்கு அறிவித்தார்கள்.

இச்சம்பவத்திற்குப் பின் நபி(ஸல்) அவர்கள் தனது தோழர் முஹம்மது இப்னு மஸ்லமாவை நழீர் இனத்தவரிடம் அனுப்பி, “மதீனாவிலிருந்து வெளியேறிவிடுங்கள்; எங்களுடன் மதீனாவில் நீங்கள் தங்கக் கூடாது; இனி மதீனாவில் வசிக்கக் கூடாது; பத்து நாட்கள் மட்டும் நான் உங்களுக்கு அவகாசம் தருகிறேன்; அதற்கு மேலும் யாராவது மதீனாவில் தங்கியிருந்தால் அவரது கழுத்தை வெட்டி விடுவேன்” என்று கூறும்படி சொன்னார்கள்.

நபி (ஸல்) அவர்களின் இக்கட்டளையை யூதர்கள் ஏற்றே ஆகவேண்டி இருந்தது. மதீனாவை விட்டுச் செல்ல தேவையான தயாரிப்புகளைச் செய்து கொண்டிருந்தனர். இந்நிலையில் நயவஞ்சகர்ளின் தலைவன் இப்னு உபை யூதர்களிடம் தூது அனுப்பி, “நீங்கள் உங்களது இல்லங்களில் இருந்து கொண்டு உங்களைப் பாதுகாத்து கொள்ளுங்கள். உங்களது இல்லங்களிலிருந்து வெளியேறவேண்டாம். என்னுடன் இரண்டாயிரம் வீரர்கள் தயாராக உள்ளனர். முஹம்மது உங்கள் மீது போர் தொடுத்தால் அந்த வீரர்கள் உங்களுடன் சேர்ந்து கொண்டு உங்கள் உயிரைக் காக்க தங்களின் உயிரையும் தியாகம் செய்யத் தயாராக உள்ளனர். மேலும், குரைளா மற்றும், கத்ஃபான் கோத்திரத்தில் உள்ள உங்களது நண்பர்களும் உங்கள் உதவிக்கு வருவார்கள்” என்று கூறினான்.

இப்னு உபையின் மேற்கூறப்பட்ட கூற்றை விவதித்து, இந்த குர்ஆன் வசனம் இறங்கியது.

(நபியே!) நயவஞ்சகம் செய்வோரை நீர் கவனிக்கவில்லையா? அவர்கள், வேதத்தை உடையோரிலுள்ள நிராகரித்துக் கொண்டிருப்போரான தம் சகோதரர்களிடம் “நீங்கள் வெளியேற்றப்பட்டால், உங்களுடன் நாங்களும் நிச்சயமாக வெளியேறுவோம்; அன்றியும், (உங்களுக்கெதிராக) நாங்கள் எவருக்கும், எப்பொழுதும் நாம் வழிப்பட மாட்டோம்; மேலும், உங்களுக்கெதிராக போர் செய்யப்பெற்றால், நிச்சயமாக நாங்கள் உங்களுக்கு உதவி செய்வோம்” என்று கூறுகின்றனர்; ஆனால் நிச்சயமாக அவர்கள் பொய்யர்கள் என்று அல்லாஹ் சாட்சியங் கூறுகிறான். அல்குர்ஆன் 59:11

மதீனாவை விட்டு வெளியேறிவிடலாம் என்றிருந்த யூதர்களுக்கு இதனால் துணிவு பிறந்தது. எதிர்த்து போரிடுவோம் என்று முடிவு செய்தனர். நயவஞ்சகர்களின் தலைவன் கூறியதைக் கேட்டு நப்பாசை கொண்ட யூதர்களின் தலைவன் ஹை இப்னு அக்தப் நபி (ஸல்) அவர்களிடம் ஆளனுப்பி “நாங்கள் எங்களின் இல்லங்களிலிருந்து வெளியேற மாட்டோம். உனக்கு என்ன தோன்றுகிறதோ அதைச் செய்துகொள்!” என்று கூறினான்.

உண்மையில் இந்நிலைமை முஸ்லிம்களைப் பொறுத்தவரை மிகச் சிக்கலானதாகவே இருந்தது. முஸ்லிம்களின் மிகச் சிரமமான இக்காலகட்டத்தில் எதிரிகளிடம் மோதுவதும், சண்டை செய்வதும் ஆபத்தான முடிவை உண்டாக்கலாம்; மற்ற அரபுகள் ஒருபக்கம் தங்களைத் தாக்குகிறார்கள். மேலும், தங்களின் அழைப்புப் பணிக்காக அனுப்பப்படும் குழுக்களையும் சதி செய்து கொன்று விடுகிறார்கள் என்பதை முஸ்லிம்கள் உணர்ந்திருந்தனர். இதுமட்டுமின்றி நழீர் கோத்திரத்தைச் சேர்ந்த யூதர்கள் ஓரளவுக்கு தேவையான வலிமையுடன் விளங்கியதால் அவர்கள் சரணடைவது அடிபணிவது சற்று கடினமான விஷயம்தான். அவர்களுடன் போரிடுவது பல இன்னல்களை சந்திக்கக் காரணமாகலாம். ஆயினும், இதற்கெல்லாம் முஸ்லிம்கள் தளர்ந்து விடவில்லை. பிஃரு மஊனாவின் நிகழ்ச்சியும் அதற்கு முன் நடந்த நிகழ்ச்சியும் முஸ்லிம்களின் உணர்ச்சிகளை அதிகம் தூண்டின. தங்களின் தனி நபர்களுக்கும் குழுக்களுக்கும் ஏற்படும் மோசடி மற்றும்

வஞ்சகச் செயல்களை முடிவுக்குக் கொணடு வந்து அதை செய்பவர்களுக்கும், செய்யத் தூண்டுபவர்களுக்கும் நல்ல பாடம் புகட்ட வேண்டும்; நபி (ஸல்) அவர்களையே கொல்லத் துணிந்த நழீர் இனத்தவரிடம் போர் செய்தே தீர வேண்டும் என்று முடிவு செய்தனர். அதனால் எத்தகைய விளைவுகள் ஏற்பட்டாலும் அதைச் சமாளிக்கத் துணிந்தனர்.

நபி (ஸல்) அவர்களுக்கு ஹை இப்னு அக்தப் கூறிய பதில் கிடைத்தவுடன் தக்பீர் (அல்லாஹ் அக்பர் என்று) முழங்கினார்கள். தோழர்களும் தக்பீர் முழங்கினர். பின்பு நழீர் இனத்தவரிடம் சண்டையிட ஆயத்தமானார்கள். மதீனாவில் இப்னு உம்மு மக்தூம் (ரழி) அவர்களைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். அலீ (ரழி) படையின் கொடியை ஏந்தியிருக்க நபியவர்கள் படையுடன் புறப்பட்டுச் சென்று யூதர்களை முற்றுகையிட்டார்கள். நழீர் இனத்தவர் தங்களின் கோட்டைகளுக்குள் புகுந்து கொண்டனர். முஸ்லிம்களை நோக்கி அம்புகளையும், கற்களையும் வீசி எறிந்து தாக்கினர். இதற்கு, அவர்களது தோட்டங்களும் பேரீத்த மரங்களும் அவர்களுக்கு சாதகமாக இருந்தன. எனவே, அவர்களின் தோட்டங்களையும் பேரீத்த மரங்களையும் வெட்டி எரித்து விடும்படி நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். இதைப் பற்றியே ஹஸ்ஸான் கூறுகிறார்.

புவைராவில் தீ பரவி கொழுந்துவிட்டு எரிவது
பனூ லுஅய் கூட்டத் தலைவர்களுக்கு மிக எளிதாகிவிட்டது.

இவர்களின் பேரீத்த தோட்டத்தின் பெயர்தான் புவைரா என்பது. அல்லாஹ் இதுகுறித்தே இந்த வசனத்தை இறக்கினான்.

நீங்கள் (அவர்களுடைய) பேரீத்த மரங்களை வெட்டியதோ, அல்லது அவற்றின் வேர்களின் மீது அவை நிற்கும்படியாக விட்டு விட்டதோ அல்லாஹ்வின் அனுமதியாலும், அந்த ஃபாஸிக்குகளை(ப் பாவிகளை) அவன் இழிவு படுத்துவதற்காகவுமே தான். அல்குர்ஆன் 59:5

குரைளா யூதர்கள் உதவிக்கு முன் வரவில்லை. அவ்வாறே இவர்களின் நண்பர்கள் கத்ஃபான் கிளையைச் சேர்ந்தவர்களும் மற்றும் அப்துல்லாஹ் இப்ன உபைய்யும் உதவிக்கு வராமல் விலகிக் கொண்டனர். எனவேதான் இவர்களின் இந்த நடத்தையை அல்லாஹ் உவமானத்துடன் கூறுகிறான்.

(இன்னும் இவர்கள் நிலை) ஷைத்தானுடைய உதாரணத்தைப் போன்றிருக்கிறது; (அவன்) மனிதனை நோக்கி: "நீ (இறைவனை) நிராகரித்து விடு" என்று கூறுகிறான். அவ்வாறு மனிதன் நிராகரித்ததும் "நான் உன்னை விட்டும் ஒதுங்கிக் கொண்டேன்; (ஏனெனில்) நான் அகிலங்களுக்கெல்லாம் இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சுகிறேன்" என்றான். அல்குர்ஆன் 59:16

முற்றுகை 6 அல்லது 15 இரவுகள் நீடித்தது. அல்லாஹ் யூதர்களின் உள்ளத்தில் பயத்தையும் நடுக்கத்தையும் போட்டான். "ஆயுதங்களைக் கீழே போட்டு நாங்கள் பணிந்து விடுகிறோம்; நாங்கள் மதீனாவை விட்டு வெளியேறி விடுகிறோம்" என்று நபியவர்களிடம் தூதனுப்பினார்கள்.

அதற்க நபி(ஸல்) அவர்கள் "உங்களையும் உங்கள் பிள்ளை குட்டிகளையும் அழைத்துக் கொண்டு இங்கிருந்து சென்று விடுங்கள்; ஒட்டகங்கள் சுமக்கும் அளவுள்ள சாமான்களையும் உங்களுடன் நீங்கள் எடுத்துச் செல்லலாம்; ஆயுதங்களை எடுத்துச் செல்லக் கூடாது" என்று கூறினார்கள்.

இந்த நிபந்தனைக்கு அவர்கள் அடிபணிந்தனர். தங்களுக்குப் பிறகு தங்கள் வீடுகளை எவரும் பயன்படுத்தக் கூடாது என்பதற்காக அவற்றை அழித்தனர். வீட்டு கதவுகளையும் ஜன்னல்களையும் பெயர்த்து தங்களுடன் எடுத்து கொண்டனர். அவர்களில் சிலரோ

ஆணிகளையும், முகட்டில் இருந்த பலகைகளையும், முளைக் கம்புகளையும் கூட தங்களுடன் எடுத்துக் கொண்டனர். பின்பு பெண்கள், சிறுவர்கள் அனைவரையும் அழைத்துக் கொண்டு 600 ஒட்டகைகளில் புறப்பட்டனர். ஹை இப்னு அக்தப், ஸல்லாம் இப்னு அபூஹுகைக் போன்ற தலைவர்களும் மற்றும் பெரும்பாலான யூதர்களும் கைபர் சென்று தங்கினர். மற்றவர்கள் ஷாம் நாட்டிற்குச் சென்றனர். அவர்களில் இருவர் மட்டும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டதால் தங்களது சொத்து செல்வங்களுடன் மதீனாவில் தங்க அனுமதிக்கப்பட்டனர்.

நபி (ஸல்) அவர்கள் இம்மக்களின் ஆயுதங்கள், வீடுகள், நிலங்கள், செல்வங்கள் என அனைத்தையும் கைப்பற்றினார்கள். மொத்தம் 50 கவச ஆடைகளும், 50 தலைக் கவசங்களும், 340 வாட்களும் இருந்தன.

இந்த யூதர்களின் செல்வங்கள், சொத்துகள், வீடுகள், நிலங்கள் அனைத்தையும் அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு மட்டும் அருளினான். அவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப அதை செய்து கொள்ள முழு அனுமதியளித்தான். அதை ஐந்து பங்காக ஆக்க வேண்டும் என்று நபியவர்களுக்கு கட்டளையிடவில்லை. ஏனெனில், இது சண்டையின்றி கிடைத்த பொருளாகும். இப்பொருட்களை முந்திய முஹாஜிர்களுக்கு (மக்காவிலிருந்து மதீனாவில் குடியேறியவர்களுக்கு) மட்டும் நபியவர்கள் பங்கு வைத்தார்கள். ஆனால், அன்சாரிகளில் ஏழையாக இருந்த அபூ துஜானா, ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் (ரழி) இருவருக்கும் அதில் பங்கு கொடுத்தார்கள். அதிலிருந்துதான் நபி (ஸல்) அவர்கள் தமது குடும்பத்தினருக்கு ஓராண்டுக்குத் தேவையானவற்றைக் கொடுத்து வந்தார்கள். மீதமிருந்ததை அல்லாஹ்வின் பாதையில் போருக்குப் பயன்படுத்தினார்கள்.

இப்போர் குறித்த விவரங்களை முழுவதுமாக ஹஷ்ர் என்ற அத்தியாயத்தில் அல்லாஹ் இறக்கினான். இந்த அத்தியாயத்தில் “யூதர்கள் எவ்வாறு விரட்டியடிக்கப்பட்டனர்; நயவஞ்சகர்களின் கொள்கையும் பழக்கமும் எவ்வாறனது? போரின்றி கிடைக்கும் செல்வத்தின் சட்டம் என்ன?” போன்ற விவரங்கள் கூறப்பட்டன. மேலும் முஹாஜிர்கள், அன்சாரிகள் குறித்து இந்த அத்தியாயத்தில் புகழ்ந்து கூறியிருக்கிறான். போர் நலன்களை கருத்தில் கொண்டு எதிரிகளுக்குச் சொந்தமான மரங்களை வெட்டுவதும், கொளுத்துவதும் சரியானதே; இது விஷமத்தனமாக ஆகாது என்ற அல்லாஹ் இந்த அத்தியாயத்தில் கூறியுள்ளான். அத்துடன் முஸ்லிம்கள் எப்போதும் இறையச்சத்தைக் கடைப்பிடித்து, மறுமைக்கான நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டு இறுதியாக தனது புகழ்ச்சியைக் கூறி உயர்வுமிக்க தனது பெயர்களை விவரித்து அத்தியாயத்தை நிறைவு செய்கிறான்.

இந்த அத்தியாயத்தில் நழீர் இன யூதர்களை குறித்து முழுவதுமாக கூறப்பட்டிருப்பதால் இந்த அத்தியாயத்தை நழீர் என்றும் கூறலாம் என இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்கள். (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) மற்றும் பெரும்பான்மையான வரலாற்று ஆசிரியர்கள் இப்போர் குறித்து கூறியதை நாம் இதுவரை பார்த்தோம்.

அபூதாவது, அப்துர் ரஜாக் (ரஹ்) மற்றும் பல அறிஞர்கள் இச்சம்பவத்திற்கு வேறு பல காரணங்களைக் கூறுகின்றனர். அஃதாவது: பத்ர் போருக்குப் பின் குறைஷிகள் நழீர் இன யூதர்களுக்கு கடிதம் எழுதினர். அதில் “நீங்கள் மதீனாவில் நல்ல பாதுகாப்புடன் வாழ்கிறீர்கள். உங்களிடம் கோட்டைகளும் அரண்களும் உள்ளன. எனவே, அங்கு இருக்கும் எங்களுடைய ஊர்வாசிகளிடம் நீங்கள் போர் செய்யுங்கள். அவ்வாறு செய்யாவிட்டால் நாங்கள் உங்களுக்கு பல வகையில் தொல்லைகள் தருவோம். உங்களின்

பெண்களை எங்களை விட்டும் நீங்கள் காப்பாற்றிக் கொள்ள முடியாது.'' இவ்வாறு அக்கடிதத்தில் குறைஷிகள் குறிப்பிட்டனா.

இக்கடிதத்தைப் பார்த்தவுடன் நழீா் கிளையினா் நபி (ஸல்) அவா்களுடன் செய்த உடன்படிக்கைக்குத் துரோகம் செய்ய முடிவெடுத்தனா். அவா்கள் நபியவா்களிடம் தூது அனுப்பி, ''நீங்கள் உங்களுடைய 30 தோழா்களுடன் எங்களிடம் வாருங்கள். நாங்கள் எங்களுடைய 30 அறிஞா்களை அழைத்துக் கொண்டு வருகிறோம். குறிப்பிட்ட ஓா் இடத்தில் நாம் சந்திப்போம். நீங்கள் கூறுவதை எங்களது பாதிரிகள் கேட்பாா்கள். அவா்கள் நீங்கள் கூறுவதை உண்மை என்று ஆமோதித்து உங்களை நம்பிக்கை கொண்டால் நாங்கள் அனைவரும் உங்களை நம்பிக்கை கொள்வோம்'' என்று கூறினா்.

நபி (ஸல்) அவா்கள் 30 தோழா்களை அழைத்துக் கொண்டு புறப்பட்டாா்கள். யூதா்களும் தங்களது 30 பாதிரிகளுடன் வந்தனா். இரு குழுக்களும் ஒரு திறந்த வெளி மைதானத்திற்கு வந்தவுடன் யூதா்கள் தங்களுக்குள், ''இப்போது எப்படி இவரை (முஹம்மதை) நாம் கொல்ல முடியும். இவரைச் சுற்றி 30 தோழா்கள் உள்ளனா். அந்த தோழா்கள் இவருக்காக தங்களது உயிரையும் அா்ப்பணிக்கத் துணிந்தவா்களாயிற்றே! எனவே, நாம் இப்போது நமது திட்டத்தை நிறைவேற்றுவது சரியன்று'' என்று யோசித்தனா். ஒரு வழியாக வேறு முடிவெடுத்து திரும்ப நபி (ஸல்) அவா்களிடம் வந்து ''நாம் இப்போது 60 நபா்களாக இருக்கும் போது நீங்கள் கூறுவதை எங்களால் சரியாக புரிந்து கொள்ள முடியாது. நாங்கள் கூறுவதையும் உங்களால் சரியாக புரிந்து கொள்ள முடியாது. எனவே, மூன்று தோழா்களை மட்டும் அழைத்துக் கொண்டு வாருங்கள். நாங்களும் மூன்று அறிஞா்களை மட்டும் அழைத்து வருகிறோம். அந்த அறிஞா்கள் நீங்கள் கூறுபவற்றை கேட்பாா்கள். அவா்கள் உங்கள் மீது நம்பிக்கை கொண்டால் நாங்களும் உங்கள் மீது நம்பிக்கை கொள்வோம். உங்களை உண்மையாளா் என்று ஏற்றுக் கொள்வோம்'' என்றனா்.

இதற்கும் நபி (ஸல்) அவா்கள் இணங்கி மூன்று தோழா்களை மட்டும் அழைத்துக் கொண்டு சந்திக்கப் புறப்பட்டாா்கள். யூதா்கள் தங்களுடன் வீச்சரிவாளை எடுத்துக் கொண்டு நபியவா்களைத் திடீரென பாய்ந்து கொன்றுவிட வேண்டும் என்ற முடிவில் வந்தனா். ஆனால், நழீா் கோத்திரத்தில் உள்ள ஒரு பெண் முஸ்லிமான தன் உறவினா் ஒருவருக்கு சதித்திட்டத்தைப் பற்றி அறிவித்தாா். அவா் நபியவா்கள் அங்கு செல்வதற்கு முன் அவா்களைச் சந்தித்து செய்தியைக் கூறினாா். இதைக் கேட்டவுடன் நபியவா்கள் போகாமல் பாதி வழியிலேயே திரும்பிவிட்டாா்கள்.

அதற்கடுத்த நாள் நபி (ஸல்) அவா்கள் படையுடன் யூதா்களை முற்றுகையிட்டாா்கள். அப்போது அவா்களிடம் ''நீங்கள் எனக்கு ஒப்பந்தம் செய்து கொடுக்காத வரை உங்களுக்கு என்னிடம் எவ்வித பாதுகாப்பும் நிச்சயம் இல்லை'' என்று கூறினாா்கள். ஆனால், நழீா் யூதா்கள் அதற்கு ஒத்துவரவில்லை. ஆகவே, நபியவா்களும் முஸ்லிம்களும் அன்றைய தினம் அவா்களுடன் போா் புரிந்தனா். பின்பு இரண்டாம் நாள் அவா்களுடன் போா் செய்யாமல் அவா்களை அவா்களின் நிலைமையிலேயே விட்டு அவா்களுக்கருகில் உள்ள குரைளா யூதா்களிடம் நபி (ஸல்) படையுடன் சென்று அவா்களிடம் ''நீஙகள் எனக்கு ஓா் ஒப்பந்தத்தைச் செய்து கொடுத்தால் நான் உங்களுடன் போா் செய்ய மாட்டேன்'' என்றாா்கள். குரைளா யூதா்களும் அதற்கு இணங்கி நபியவா்களிடம் ஒப்பந்தம் செய்தனா்.

பின்பு நபி (ஸல்) மீண்டும் நழீா் இனத்தவரிடம் சென்று அவா்களுடன் சண்டையிட்டாா்கள். அவா்கள் தாக்குப்பிடிக்க முடியாமல் இறுதியாக நபியவா்களிடம் சரணடைந்ததனா். அதாவது ''மதீனாவைவிட்டு வெளியேற வேண்டும் ஆயுதங்களைத் தவிர மற்ற பொருட்களை ஒட்டகம் சுமக்கும் அளவிற்கு எடுத்துச் செல்லலாம்'' என்ற நிபந்தனைக்கும் கட்டுப்பட்டு போரை முடித்துக் கொண்டனா். பின்பு தங்களின் வீடுகளை நாசப்படுத்தினா். அதை இடித்துத் தள்ளி அதிலிருந்த மரப்பலகைகளையும் எடுத்துக் கொண்டனா். இதுதான்

முதன்முறையாக யூதர்களை நாடுகடத்திய சம்பவமாகும். இவர்களை மதீனாவிலிருந்து ஷாம் தேசத்திற்கு நாடு கடத்தப்பட்டது. (முஸன்னஃப் அப்துர் ரஜ்ஜாக், ஸுனன் அபூதாவது)

**“நஜ்து“ போர் (ஹிஜ் 4, ரபீவுல் ஆகிர் (அ) ஜுமாதா அல்ஊலா)**

சண்டையும், உயிர்ப் பலியுமின்றி நழீர் போரில் முஸ்லிம்களுக்குக் கிடைத்த வெற்றி முஸ்லிம்களின் வலிமையை மீண்டும் மதீனாவில் நிலைநாட்டியது. நயவஞ்சகர்கள் தங்களது சூழ்ச்சிகளை வெளிப்படுத்துவதைக் கைவிட்டனர். அதனால் முஸ்லிம்களுக்கு உள்நாட்டுக் குழப்பம் குறைந்தது. ஆகவே, இப்போது மதீனாவிற்கு வெளியில் விஷமம் செய்து வந்த கிராம அரபிகளின் அக்கிரமத்தை அடக்க நபி (ஸல்) அவர்கள் நடவடிக்கை எடுத்தார்கள். இந்த கிராம அரபிகள்தான் உஹுத் போருக்குப் பின் முஸ்லிம்களுக்கு பெரும் இன்னல்கள் விளைவித்து வந்தனர். அழைப்புப் பணிக்காக அனுப்பப்படும் குழுக்களை வஞ்சகமாகக் கொன்று குவித்தனர். இவ்வாறு செய்து வந்த இவர்களுக்கு, அடுத்தபடியாக மதீனாவில் தாக்குதல் நடத்தும் அளவுக்குத் துணிவும் பிறந்தது.

முஸ்லிம் குழுக்களுக்கு மோசடி செய்து வந்த அந்தக் கிராம அரபிகளைத் தண்டிப்பதற்கு முன் கத்ஃபான் கோத்திரத்தைச் சேர்ந்த ‘பனூ ஸஅலபா’ என்ற பிரிவினரும், ‘பனூ முஹாரிப்’ என்ற பிரிவினரும் மதீனாவின் மீது படையெடுக்க ஒன்று சேருகின்றனர் எனும் செய்தி நபி (ஸல்) அவர்களுக்குக் கிடைத்தது. இந்த செய்தி கிடைத்ததும் உடனடியாக நபியவர்கள் படையை திரட்டிக்கொண்டு நஜ்து பகுதியிலுள்ள கிராமங்களுக்குச் சென்றார்கள். அங்குள்ள அனைத்து இடங்களையும், கிராமங்களையும் படையுடன் சுற்றி வந்தார்கள்.

முஸ்லிம்களின் வருகையை அறிந்த அந்த ஊர்வாசிகள், தங்களின் இல்லங்களிலிருந்து வெளியேறி மலை உச்சிக்குச் சென்று தப்பித்துக் கொண்டனர். இவ்வாறு அழிச்சாட்டியம் செய்யும் இந்தக் கூட்டங்களையெல்லாம் முஸ்லிம்கள் பதிலுக்கு மிரட்டி அவர்களது உள்ளங்களில் தங்களைப் பற்றிய அச்சத்தை ஏற்படுத்திவிட்டு பாதுகாப்புடன் மதீனா திரும்பினர்.

மேற்கண்ட சம்பவங்கள் தொடர்பாக நடந்த குறிப்பிட்ட ஒரு போரைப் பற்றி வரலாற்று ஆசிரியர்கள் கூறியிருப்பதின் விவரமாவது: ஹிஜ்ரி 4, ரபீஉல் ஆகிர் அல்லது ஜுமாதா அல்ஊலா மாதம் ஒரு போர் நடைபெற்றது. அதற்கு ‘தாதுர் காஃ’ என்று கூறப்படும். இந்தப் போர் காலத்தின் சூழ்நிலைக்கேற்ப அவசியமான ஒன்றாக இருந்தது. ஏனெனில், உஹுதிலிருந்து திரும்பச் செல்லும் போது அபூஸுஃப்யான் அடுத்த வருடம் (ஹிஜ்ரி 4ல்) பத்ரு மைதானத்தில் சந்திப்போம் என்று கூறி சென்றிருந்தார். அந்த நாளும் மிக நெருக்கமாக இருந்தது. இந்நேரத்தில் மதீனாவை முற்றிலுமாக காலி செய்துவிட்டு செல்வதும் உசிதமானதல்ல. ஏனெனில், கிராம வாசிகளின் அட்டகாசம் அத்துமீறி இருந்தது. இவர்களின் கொடுக்கை நறுக்காமல், இவர்களின் விஷமத்தனத்திற்கு முடிவு கட்டாமல் மதீனாவை காலியாக விட்டுச் செல்வது நல்லதல்ல. இவர்கள் மதீனா காலியாகி விட்டதை தங்களுக்கு வாய்ப்பாகக் கருதி மதீனாவின் மீது கொள்ளையிட அல்லது தாக்குதல் நடத்த வரலாம். எனவே, அபூஸுஃப்யானின் படையைப் பத்ரில் சந்திக்க செல்லும் முன் இவர்களுக்குச் சரியான பாடம் புகட்டி இவர்களை அடக்க வேண்டும் என நபியவர்கள் முடிவெடுத்தார்கள். அதற்குப் பின் கிராமவாசிகளை அவர்களது கிராமங்களுக்குச் சென்று அச்சுறுத்திவிட்டு நபி (ஸல்) அவர்கள் மதீனா திரும்பினார்கள். இப்பயணத்தில் சண்டை ஏதும் நடைபெறவில்லை. ஆக, இந்தப் போருக்கு வரலாற்று ஆசிரியர்கள் ‘தாதுர் காஃ’ என்று கூறுகின்றனர்.

ஆனால், இக்கூற்று சரியல்ல! இப்போருக்கு ‘தாதுர் காஃ’ என்று சொல்வது தவறாகும். ஏனெனில் ‘தாதுர் காஃ’ போரில் அபூஹுரைராவும் அபூமூஸாவும் (ரழி) கலந்து

கொண்டனர். அபூஹுரைரா (ரழி) கைபர் போருக்கு சில நாட்கள் முன்புதான் முஸ்லிமானார்கள். அவ்வாறே அபூமூஸாவும் நபி (ஸல்) அவர்களை கைபர் போரில்தான் சந்தித்தார்கள்.

கைபர் போருக்கு பின்புதான் 'தாதுர் காஃ' நடைபெற்றது என்பது இதிலிருந்து தெரிய வருகிறது. கைபர் போர் ஹிஜ்ரி 7ஆம் ஆண்டில் நடைபெற்றது. எனவே, ஹிஜ்ரி 4ல் நடைபெற்ற யுத்தத்தை 'தாதுர் காஃ' என்று சொல்வது தவறாகும். இதற்கு மேலும் ஓர் ஆதாரத்தைப் பார்ப்போம்.

நபி (ஸல்) அவர்கள் தாதுர் காஃ போரில்தான் 'ஸலாத்துல் கவ்ஃப்' (அச்சம் ஏற்படும்போது தொழுதல்) முறைப்படி தொழுகை நடத்தினார்கள். இத்தொழுகை அஸ்ஃபான் போரில்தான் முதன் முதலில் அனுமதிக்கப்பட்டது. அஸ்ஃபான் போர் அகழ்ப் போருக்குப் பின் நடைப்பெற்றது. அகழ்ப் போர் ஹிஜ்ரி 5ன் இறுதியில் நடைபெற்றது. இதிலிருந்து ஹிஜ்ரி 4ல் நடந்த போரை தாதுர் காஃ என்று குறிப்பிடுவது தவறாகும். தாதுர் காஃ போர் வேறு, ஹிஜ்ரி 4ல் நடைபெற்ற போர் வேறு.

**இரண்டாம் பத்ர் போர் (ஹிஜ்ரி 4, ஷஃபான் மாதம், கி.பி. 626, ஜனவரி)**

இவ்வாறு முஸ்லிம்கள் கிராமவாசிகளின் கொடுக்கை வெட்டி, அவர்களது விஷமத்தை ஒழித்து விட்டார்கள். இதற்குப் பின் பெரிய எதிரியான அபூ ஸுஃப்யானையும் குறைஷிகளையும் சந்திக்கத் தயாராகினர். ஏனெனில், உஹுத் போரில் குறிப்பிடப்பட்ட காலம் நெருங்கி விட்டது. அதன்படி மீண்டும் ஒருமுறை போர் செய்து, சத்தியவான்கள் யார்? யாருக்கு அல்லாஹ்வின் உதவி? என்பதை நிரூபிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

நபி (ஸல்) அவர்கள் மதீனாவில் அப்துல்லாஹ் இப்னு ரவாஹாவைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். பிறகு 1500 தோழர்கள் மற்றும் 10 குதிரைகளுடன் பத்ரை நோக்கி புறப்பட்டார்கள். படையின் கொடி அலீ (ரழி) அவர்களிடம் இருந்தது. பத்ரில் சென்று குறைஷிகளின் வருகையை எதிர்பார்த்து தங்கியிருந்தார்கள்.

அபூஸுஃப்யான் 2000 மக்காவாசிகளை அழைத்துக் கொண்டு கிளம்பினார். இவர்களிடம் 50 குதிரைகள் இருந்தன. அபூஸுஃப்யான் மக்காவிலிருந்து ஒரு நாள் பயண தூரமுள்ள 'மர்ருள் ளஹ்ரான்' என்ற பகுதியிலுள்ள 'மஜன்னா' என்ற கிணற்றருகில் தங்கினார்.

அபூஸுஃப்யான் மக்காவிலிருந்து புறப்படும் போதே போரின் முடிவு எப்படி அமையும் என்று ஆழ்ந்து சிந்தித்தவராகவே பயணித்துக் கொண்டிருந்தார். இவரது உள்ளத்தில் அச்சம் குடிகொண்டது. இறுதியாக 'மர்ருள் ளஹ்ரான்' வந்தவுடன் அவரது உறுதி முற்றிலும் நிலைகுலைந்து விட்டது. அவர் திரும்பிவிட முடிவு செய்தவராக தனது தோழர்களிடம் "குறைஷியர்களே நல்ல பசுமையான செழிப்பான காலத்தில் நாம் போர் செய்யலாம். இது மிக பஞ்சமான ஆண்டு. எனவே இவ்வாண்டு நமக்கு ஏற்றமாகாது. நான் திரும்பிவிட நாடுகிறேன். நீங்களும் திரும்பி விடுங்கள்" என்று கூறினார்.

பொதுவாக, படையினர் அனைவரும் பயத்தால் உள்ளுக்குள் நடுங்கி கொண்டுதான் இருந்தனர். எனவேதான், அபூஸுஃப்யான் இந்த யோசனையைக் கூறியவுடன் பிடிவாதம் பிடிக்காமல், ஆட்சேபனை ஏதும் செய்யாமல் அனைவரும் திரும்பி விட்டனர்.

முஸ்லிம்கள் பத்ர் மைதானத்தில் 8 நாட்கள் தங்கி வியாபாரம் செய்தனர். ஒரு திர்ஹத்திற்கு இரண்டு திர்ஹம் அவர்களுக்கு இலாபமாக கிடைத்தது. அதற்குப் பின் எதிரிகள் மைதானத்திற்கு வராததால் சண்டையின்றி திரும்பி விட்டனர். மீண்டும் முஸ்லிம்கள் மீது மக்களுக்கு பயமும் மரியாதையும் ஏற்பட்டது. நிலைமைகள் அனைத்தையும் முஸ்லிம்கள் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விட்டனர்.

இப்போருக்கு, ‘‘இரண்டாம் பத்ரு, சிறிய பத்ரு, மற்றொரு பத்ரு, வாக்களித்துச் சென்ற பத்ரு’’ என பல பெயர்கள் வரலாற்றில் கூறப்படுகின்றன. (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**தூமத்துல் ஜன்தல் போர் (ஹிஜ் 5, ரபீஉல் அவ்வல் 25)**

நபி (ஸல்) அவர்கள் இரண்டாம் பத்ரில் இருந்து திரும்பிய பிறகு, மதீனாவிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களிலும் அமைதி மற்றும் பாதுகாப்பு மிக்க சூழ்நிலை நிலவியது. முஸ்லிம்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். ஆகவே, இப்போது அரபு நாடு முழுவதும் முஸ்லிம்களின் கட்டுப்பாட்டுக்குள் வருவதற்காகவும், முஸ்லிம்களை நேசிப்பவர்களும் எதிர்ப்பவர்களும் முஸ்லிம்களின் பலத்தை அறிந்து கொள்வதற்காகவும் எல்லாப் பகுதிகளுக்கும் சென்று வர நபியவர்கள் இந்த அவகாசத்தைப் பயன்படுத்தினார்கள்.

இரண்டாம் பத்ர் போரிலிருந்து திரும்பிய பிறகு மதீனாவில் 6 மாதங்கள் நபி (ஸல்) அவர்கள் தங்கியிருந்தார்கள். இந்நிலையில் ஷாம் நாட்டிற்கருகில் உள்ள ‘தூமத்துல் ஜன்தல்’ என்ற இடத்தைச் சுற்றி வாழும் கோத்திரத்தினர் வழிப்பறி, கொள்ளையடிப்பது போன்ற செயல்களில் ஈடுபடுகிறார்கள் மேலும், மதீனாவின் மீது திடீர் தாக்குதல் நடத்த பெரும் கூட்டம் ஒன்றையும் தயார் செய்து வருகிறார்கள் என்ற செய்தி நபியவர்களுக்கு எட்டியது. எனவே, நபியவர்கள் மதீனாவில் ‘ஸிபா இப்னு உர்ஃபுத்தா கிஃபா’ என்ற தோழரைப் பிரதிநிதியாக நியமித்து விட்டு 1000 முஸ்லிம்களுடன் ஹிஜ்ரி 5, ரபீஉல் அவ்வல், பிறை 25ல் தூமத்துல் ஜன்தல் நோக்கி கிளம்பினார்கள். உத்ரா கிளையைச் சேர்ந்த ‘மத்கூர்’ என்ற நபரைத் தனக்கு வழிகாட்டியாக நபியவர்கள் அழைத்துச் சென்றார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இரவில் பயணிப்பதும் பகலில் பதுங்குவதுமாக பயணத்தைத் தொடர்ந்தார்கள். எதிரிகள் கொள்ளையிடும் செயலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது அவர்களைத் தாக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நபியவர்கள் பயணத்தை இவ்வாறு தொடர்ந்தார்கள். நபியவர்கள் அங்கு சென்ற போது அம்மக்கள் அங்கு இல்லை, வெளியில் சென்றிருந்தார்கள். நபியவர்கள் அவர்களின் கால்நடைகளைக் கைப்பற்றினார்கள். அங்கிருந்த சிலர் தப்பித்து விட்டனர் மற்ற சிலர் எதிர்த்து மடிந்தனர்.

இதற்குப் பின் ‘தூமத்துல் ஜன்தல்’ என்ற இடத்திற்கு சென்ற போது அங்குள்ள அனைவரும் தங்கள் இல்லங்களைக் காலி செய்து விட்டு தப்பித்து ஓடிவிட்டனர். நபியவர்கள் அங்கு பல நாட்கள் தங்கியிருந்து, சுற்றியுள்ள இடங்களுக்குப் படைகளை அனுப்பித் தேடியும் எவரும் காணக் கிடைக்கவில்லை. ஆகவே, மதீனாவிற்குத் திரும்ப ஆயத்தமானார்கள். நபி (ஸல்) அவர்கள் இப்போருக்குச் சென்றிருந்த சமயத்தில் அங்குள்ள ‘உயய்னா இப்னு ஸ்னு’ என்பவருடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். ‘தூமா’ என்பது ‘மஷாஃபுஷ் ஷாம்’ என்ற இடத்திலுள்ள புகழ்பெற்ற இடமாகும். இங்கிருந்து ‘திமஷ்க்’ நகரம் ஐந்து இரவுகள் பயணித்துச் செல்லும் தூரத்தில் உள்ளது. இந்நகரம் மதீனாவிலிருந்து 15 இரவுகள் பயணித்துச் செல்லும் தூரத்தில் உள்ளது.

இதுபோன்ற மதிநுட்பமான, தீர்க்கமான நடவடிக்கைகளினால் அமைதி மற்றும் பாதுகாப்பை அனைத்து பகுதிகளிலும் நிறுவி, நிலைமையைத் தங்களது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதில் நபி (ஸல்) அவர்கள் வெற்றி கண்டார்கள். மேலும், இதன் மூலம் முஸ்லிம்களுக்குச் சாதகமான நல்ல சூழ்நிலையை உருவாக்கினார்கள். பல பக்கங்களிலிருந்து முஸ்லிம்களுக்கு வந்து கொண்டிருந்த உள்நாட்டு மற்றும் வெளிநாட்டுச் சிரமங்களை அகற்றினார்கள். நயவஞ்சகர்களும் அடங்கி அமைதியாகி விட்டார்கள். யூதர்களில் ஒரு முக்கிய பிரிவினரான ‘நழீர்’ என்ற கோத்திரத்தினரை மதீனாவிலிருந்து முற்றிலும் நாடு கடத்தப்பட்டதை பார்த்து பயந்துபோன மற்றொரு கோத்திரத்தினர், தாங்கள் நபியவர்களுடன் செய்து கொண்ட ஒப்பந்தங்களையும் உடன்படிக்கைகளையும் ஒழுங்காக

நிறைவேற்றினர். கிராம அரபிகளும் தங்களது அட்டூழியங்களையும் வம்புத்தனங்களையும் அடக்கிக் கொண்டு முஸ்லிம்களுக்குப் பணிந்து நடந்தனர். மக்காவிலிருந்த குறைஷிகளும் முஸ்லிம்களைத் தாக்கும் திட்டத்தைக் கைவிட்டு ஒதுங்கிக் கொண்டனர். இதுபோன்ற சாதகமான நல்ல சூழ்நிலை ஏற்பட்டதால் இஸ்லாமிய அழைப்புப் பணியைச் செம்மையாக நிறைவேற்றுவதற்குரிய நல்ல வாய்ப்பை முஸ்லிம்கள் பெற்றனர்.

## அல்அஹ்ஜாப் போர்

அஹ்ஜாப் என்று அறியப்படும் இப்போர் ஹிஜ்ரி 5, ஷவ்வால் மாதத்தில் நடைபெற்றது.

ஓராண்டு காலமாக நபியவர்கள் எடுத்த ராணுவ நடவடிக்கைகளால் மதீனாவிலும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் அமைதி, பாதுகாப்பு மற்றும் நிம்மதியான சூழ்நிலை முழுமையாக நிலவியது. இந்த நடவடிக்கைகளில் பெரிதும் இழிவையும் கேவலத்தையும் அடைந்தவர்கள் யூதர்களே! அதற்குக் காரணம், அவர்கள் செய்த மோசடி, துரோகம், சதித்திட்டம் மற்றும் சூழ்ச்சிகள்தான். இவ்வாறு கேவலப்பட்டும் அவர்கள் படிப்பினை பெறவில்லை. தங்களது விஷமத்தனங்களை விட்டும் முற்றிலும் விலகிக் கொள்ளவுமில்லை. கைபருக்குக் கடத்தப்பட்ட அந்த நழீர் இன யூதர்கள் முஸ்லிம்களுக்கும் இணைவைப்பவர்களுக்கும் நடைபெறும் போர்களில் முஸ்லிம்களின் நிலை என்னவாகும் என்று எதிர்பார்த்திருந்தனர். ஆனால், வெற்றி முஸ்லிம்களுக்குக் கிட்டி முஸ்லிம்களின் ஆதிக்கம் நிலை பெற்றிடவே, அதைத் தாங்க இயலாமல் அந்த யூதர்கள் எரிச்சலைடைந்தனர் நெருப்பாய் எரிந்தனர்.

அப்போது, முஸ்லிம்களுக்கு எதிராகப் புதிய திட்டம் ஒன்று தீட்டினர். முஸ்லிம்களை முற்றிலும் அழிக்கும் ஒரு போரைத் தூண்டிவிட ஏற்பாடு செய்தனர். தங்களால் முஸ்லிம்களை நேரடியாக தாக்க ஆற்றல் இல்லை என்பதை உணர்ந்த அவர்கள் இதற்காக ஒரு சூழ்ச்சி செய்தனர்.

அதாவது, நழீர் கோத்திரத்தின் தலைவர்கள் மற்றும் சிறப்புமிக்கவர்களில் 20 யூதர்கள் மக்கா குறைஷிகளிடம் வந்தனர். அவர்களை நபியவர்களுக்கு எதிராக போர் புரிய தூண்டி, அதற்கு உதவியும் செய்வதாக வாக்களித்தனர். பத்ர் மைதானத்திற்கு அடுத்த ஆண்டு வருகிறோம் என்று உஹுத் போர்க்களத்தில் சொல்லிச் சென்று, அதை நிறைவேற்றாமல் வாக்கை மீறிவிட்ட அந்த குறைஷிகள் தற்போது தங்களது பெருமையைத் தக்கவைத்துக் கொள்ள விரும்பி யூதர்களின் தூண்டுகோலுக்கு இரையானார்கள்.

பின்பு இக்குழுவினர் அங்கிருந்து கத்ஃபான் கிளையினரிடம் சென்றனர். அவர்களிடமும் குறைஷிகளிடம் கூறியதுபோல் கூறியதும், உடனே அவர்களும் போருக்கு ஆயத்தமாயினர். மேலும், இக்குழு பல அரபு கோத்திரத்தினரை நபி (ஸல்) அவர்களுக்கு எதிராக போர் புரிய தூண்டிவிட்டனர். பல சமுதாயத்தவர் இதை ஏற்று போருக்கு ஆயத்தமானார்கள். இறுதியாக இந்த யூத அரசியல் தலைவர்கள், நபியவர்களுக்கு எதிராக அனைத்து அரபுகளையும் ஒன்று திரட்டுவதில் வெற்றி கண்டனர்.

இந்த முயற்சிக்குப் பின், மேற்கிலிருந்து குறைஷிகளும், திஹாமாவைச் சேர்ந்த கினானா மற்றும் அவர்களின் நட்புக் கிளையினர் என மொத்தம் 4000 நபர்கள் அபூஸுஃப்யானின் தலைமையில் புறப்பட்டனர். 'மர்ருள் ளஹ்ரான்' என்ற இடத்திற்கு இப்படை வந்தடைந்த போது அங்குள்ள ஸுலைம் கோத்திரத்தினர் இவர்களுடன் சேர்ந்து கொண்டனர். பின்பு மதீனாவிற்குக் கிழக்கில் கத்ஃபான், ஃபஜாரா கிளையினர் உயைனா இப்னு ஸ்னு தலைமையில் புறப்பட்டனர். மேலும், ஹாரிஸ் இப்னு அவ்ஃப் என்பவனின் தலைமையின் கீழ் முர்ரா கிளையினரும் மிஸ்அர் இப்னு ருஹைலாவின் தலைமையின் கீழ் அஷ்ஜஃ கிளையினரும், இதைத் தவிர அஸத் மற்றும் பல கோத்திரத்தினரும் ஒன்றுசேர்ந்து புறப்பட்டனர்.

இந்தப் படையினர் அனைவரும் தங்களுக்குள் செய்து கொண்ட ஒப்பந்தத்திற்கிணங்க குறிப்பிட்ட தவணையில் அனைவரும் மதீனா சென்று ஒன்றுகூடினர். இவர்கள் 10,000 வீரர்கள் இருந்தனர். இந்த எண்ணிக்கை மதீனாவிலுள்ள பெண்கள், சிறுவர்கள், வாலிபர்கள், வயோதிகர்கள் என அனைவரின் எண்ணிக்கையை விட அதிகமாக இருந்தது.

எதிரிகளின் இந்த ராணுவங்கள் அனைத்தும் திடீரென மதீனாவைத் தாக்கினால் நிச்சயம் முஸ்லிம்களில் ஒருவர்கூட மிஞ்சாமல் அழிந்துவிடுவார்கள் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. ஆனால், மதீனா நகரத்தின் தலைமைத்துவமோ முற்றிலும் விழித்த நிலையிலேயே இருந்தது. மதீனாவின் செய்தி சேகரிப்பாளர்கள் பல இடங்களில் தங்கி மிகுந்த கண்காணிப்புடன் செயல்பட்டு, அங்குள்ள செய்திகளை மதீனாவுக்கு அனுப்பியபடி இருந்தார்கள். எனவே, எதிரிகளின் இவ்வளவு பெரிய படை புறப்பட்டதும் முஸ்லிம் ஒற்றர்கள் இப்படையைப் பற்றிய விவரங்களைத் தங்களின் தலைமைக்கு அனுப்பி வைத்தனர்.

இச்செய்திகள் கிடைத்தவுடன் நபி (ஸல்) அவர்கள் உடனடியாக ஓர் உயர்மட்ட ஆலோசனைக் குழுவைக் கூட்டினார்கள். மதீனாவையும் முஸ்லிம்களையும் எப்படி தற்காத்துக் கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி ஆலோசனை நடத்தினார்கள். ஆலோசனைக் குழு உறுப்பினர்களுக்கு மத்தியிலும் தளபதிகளுக்கு மத்தியிலும் ஏற்பட்ட பல கருத்துப் பரிமாற்றங்களுக்குப் பின் சங்கைக்குரிய நபித்தோழராகிய ஸல்மான் ஃபார்ஸி (ரழி) முன் வைத்த கருத்து முடிவாக ஏற்கப்பட்டது.

“அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் பாரசீக நாட்டில் இருந்த போது எங்களை எதிரிகள் தாக்க வருவதாக இருந்தால் எங்களைச் சுற்றி அகழ் தோண்டிக் கொள்வோம். அவ்வாறே இங்கும் செய்யலாம்” என ஸல்மான் ஃபார்ஸி (ரழி) கூறினார்கள். இதற்கு முன் இது அரபியர்களுக்குத் தெரியாத ஒரு புதிய திட்டமாக இருந்தது.

இத்திட்டத்தை கேட்டவுடன் இதை அங்கீகரித்து, அதை நிறைவேற்ற நபி (ஸல்) அவர்கள் ஆர்வம் காட்டினார்கள். “ஒவ்வொரு 10 நபர்கள் கொண்ட குழு 40 முழம் அகழ் தோண்ட வேண்டும்” என்று நபியவர்கள் பணித்தார்கள். முஸ்லிம்கள் மிகுந்த உற்சாகத்துடன் அகழ் தோண்டுவதில் ஈடுபட்டார்கள். நபியவர்கள் முஸ்லிம்களுக்கு ஆர்வமூட்டி வந்தார்கள்.

ஸஹ்லு இப்னு ஸஅது (ரழி) கூறுகிறார்: நாங்கள் நபியவர்களுடன் அகழியில் இருந்தோம். பலர் குழி தோண்டுவதில் ஈடுபட்டிருந்தார்கள். நாங்கள் மண்ணைத் தோளில் சுமந்து சென்று வெளியில் போட்டுக் கொண்டிருந்தோம். அப்போது நபியவர்கள் கூறினார்கள்:

“அல்லாஹ்வே! மறுமை வாழ்வைத் தவிர வேறு வாழ்வு இல்லை!

முஹாஜிர்கள் அன்சாரிகளை மன்னித்து அருள்வாயாக!” (ஸஹீஹுல் புகாரி)

அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: ஒரு நாள் காலை நபி (ஸல்) அவர்கள் அகழ் தோன்றும் இடத்திற்கு வந்தார்கள். அப்போது முஹாஜிர்களும் அன்சாரிகளும் கடினமான குளிரில் அகழ் தோண்டிக் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் இக்காரியத்தைச் செய்வதற்கு அவர்களுக்குச் சொந்தமான அடிமைகள் இருக்கவில்லை. தங்களின் தோழர்களுக்கு ஏற்பட்ட சிரமத்தையும் பசியையும் பார்த்து நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

“அல்லாஹ்வே! நிச்சயமாக வாழ்க்கை என்பது மறு உலக வாழ்க்கையே!
அன்சாரிகளையும் முஹாஜிர்களையும் நீ மன்னித்தருள்வாயாக!”
இதற்கு நபித்தோழர்கள் பதில் கூறும் விதமாக கூறினார்கள்:
“நாங்கள் வாழும் காலமெல்லாம் அறப்போர்
புரிவோமென்று முஹம்மது (ஸல்) அவர்களிடம்
வாக்குப் பிரமாணம் செய்து கொடுத்தவர்கள்.” (ஸஹீஹுல் புகாரி)

பரா இப்னு ஆஜிப் (ரழி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் அகழியிலிருந்து மண்ணை சுமந்து சென்று வெளியில் போட்டுக் கொண்டிருந்தார்கள். புழுதி அவர்களது வயிற்றை மறைத்திருந்தது. அவர்கள் அப்துல்லாஹ் இப்னு ரவாஹாவின் கவி ஒன்றை அதிகம் சொல்லிக் கொண்டே மண்ணை அள்ளி போட்டுக் கொண்டிருந்தார்கள்.

அல்லாஹ்வே! நீ இல்லையென்றால்
நாங்கள் நேர்வழி பெற்றிருக்கமாட்டோம்,
தர்மம் செய்திருக்க மாட்டோம்,
தொழுதும் இருக்க மாட்டோம்.
எங்கள் மீது நீ அருள் பொழிவாயாக!
எதிரிகளை நாங்கள் சந்திக்கும்போது
பாதங்களை நிலைபெறச் செய்வாயாக!
இவர்கள் (குறைஷிகள்) எங்கள் மீது
அக்கிரமம் புரிந்துள்ளார்கள். இவர்கள்
எங்களைச் சோதனையில் ஆழ்த்த விரும்பினால்
அதற்கு நாங்கள் இடம்தர மாட்டோம். (ஸஹீஹுல் புகாரி)

இக்கவிதைகளைக் கூறிவிட்டு கடைசி வரியை மட்டும் சப்தத்துடன் மீண்டும் ஒரு முறை கூறுவார்கள்.

கடுமையான பசி பட்டினிக்கு ஆளாகி இருந்தும் முஸ்லிம்கள் சுறுசுறுப்பாக அகழ் தோண்டுவதில் ஈடுபட்டிருந்தனர்.

இதைப் பற்றி அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: அகழ் தோண்டிக் கொண்டிருந்தவர்கள் தங்கள் இரு கை நிரம்ப தொலி கோதுமையை எடுத்து வருவார்கள். அது பழைய எண்ணெயைக் கொண்டு சமைக்கப்பட்டு, தோழர்களுக்கு முன் வைக்கப்படும். அதனை எளிதில் உண்ண முடியாமல் தொண்டையில் சிக்கிக் கொள்ளும். அதிலிருந்து மனதிற்கு ஒவ்வாத வாடையும் வீசும். (ஸஹீஹுல் புகாரி)

அபூ தல்ஹா (ரழி) கூறுகிறார்கள்: எங்களின் பசியைப் பற்றி நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டோம். எங்களது வயிற்றில் ஒரு கல்லைக் கட்டி இருந்ததைக் காட்டினோம். நபி (ஸல்) அவர்களோ தங்களது வயிற்றில் இரண்டு கற்கள் கட்டி இருந்ததைக் காட்டினார்கள். (ஸுனனுத் திர்மிதி, மிஷ்காத்)

மேலும், நபித்துவத்தின் பல அத்தாட்சிகளும் அகழ் தோண்டிக் கொண்டிருக்கும் போது ஏற்பட்டன. நபி (ஸல்) அவர்கள் கடுமையான பசியில் இருப்பதைப் பார்த்த ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ஒரு சிறிய ஆட்டை அறுத்தார்கள். அவன் மனைவி ஒரு படி தொலி கோதுமையை அரைத்து ரொட்டி சுட்டார்கள். பின்பு ஜாபிர் நபியவர்களைச் சந்தித்து தங்களின் சில தோழர்களுடன் உணவருந்த வருமாறு கூறினார்கள். ஆனால், நபியவர்கள் ஆயிரத்திற்கு மேற்பட்ட தோழர்களுடன் ஜாபின் வீட்டுக்கு வருகை தந்தார்கள். அனைவரும் உணவருந்திச் சென்றனர். ஆனால், சமைக்கப்பட்ட சட்டியில் இருந்த ஆணமும் குறையவில்லை, சுட்ட ரொட்டியும் குறையவில்லை. (ஸஹீஹுல் புகாரி)

நுஃமான் இப்னு பஷீன் சகோதரி சிறிதளவு பேரீத்தம் பழத்தைத் தனது தந்தைக்காகவும் தாய்மாமாவுக்காகவும் எடுத்து வந்தார். அவர் நபி (ஸல்) அவர்களைக் கடந்து சென்றபோது, நபியவர்கள் அவரைத் தன்னருகில் அழைத்து அவரிடம் இருந்த பேரீத்தம் பழத்தை வாங்கி ஒரு துணிக்குமேல் பரத்தினார்கள். பின்பு அகழ் தோண்டிக் கொண்டிருந்தவர்களை அழைத்து சாப்பிடுங்கள் என்றார்கள். அவர்கள் சாப்பிட்டுக் கொண்டேயிருந்தார்கள். பேரீத்தம் பழம் குறையாமல் அதிகரித்துக் கொண்டே இருந்தது. அனைவரும் சாப்பிட்டு சென்று விட்ட பின்பும் அது குறைவின்றி இருந்தது. (இப்னு ஹிஷாம்)

மேற்கூறப்பட்ட இரண்டு சம்பவங்களைவிட ஜாபிர் (ரழி) அறிவிக்கும் மகத்தான ஒரு சம்பவத்தை இமாம் புகாரி (ரஹ்) பதிவு செய்துள்ளார்கள். “நாங்கள் அகழ் தோண்டிக் கொண்டிருந்த போது கடுமையான, இறுக்கமான ஒரு பாறை குறுக்கிட்டது. அப்போது மக்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து “நபியே! ஒரு பாறை அகழில் குறுக்கிட்டுள்ளது” என்றார்கள். நபியவர்கள் “நான் இறங்குகிறேன்” என்று கூறி பாறை இருக்கும் இடத்திற்கு வந்தார்கள். பசியின் காரணமாக அவர்களுடைய வயிற்றில் கல்லைக் கட்டியிருந்தார்கள். நாங்கள் மூன்று நாட்களாக எதுவும் சாப்பிடாமல் இருந்தோம். நபியவர்கள் கடப்பாறையால் வேகமாக அதை அடிக்கவே அது தூள் தூளாகியது. (ஸஹீஹுல் புகாரி)

பரா இப்னு ஆஜிப் (ரழி) கூறுகிறார்கள்: அகழ் தோண்டும்போது ஒரு பகுதியில் எந்த கடப்பாறையாலும் உடைக்க முடியாத ஒரு பாறை குறுக்கிட்டது. அதைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் நாங்கள் முறையிட்டோம். நபியவர்கள் கடப்பாறையால் ‘பிஸ்மில்லாஹ்’ என்று கூறி ஓர் அடி அடித்துவிட்டு “அல்லாஹ் மிகப்பெரியவன்! ஷாம் தேசப் பொக்கிஷங்கள் எனக்கு அருளப்பட்டன. நான் இப்போது அங்குள்ள செந்நிறக் கோட்டைகளைப் பார்க்கிறேன்” என்றார்கள். பின்பு இரண்டாவது முறையாக அப்பாறையை அடித்தார்கள். “அல்லாஹ் மிகப் பெரியவன்! பாரசீகத்தின் பொக்கிஷங்கள் எனக்குக் கொடுக்கப்பட்டன. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அங்குள்ள மதாயின் நகரத்தின் வெள்ளை மாளிகையை இப்போது பார்க்கின்றேன்” என்றார்கள். பின்பு மூன்றாவது முறையாக ‘பிஸ்மில்லாஹ்’ என்று கூறி அடித்தார்கள். மீதமுண்டான கல்லும் உடைக்கப்பட்டது. அப்போது நபியவர்கள் “அல்லாஹ் மிகப் பெரியவன்! எனக்கு யமன் தேசத்து பொக்கிஷங்கள் கொடுக்கப்பட்டன. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எனது இந்த இடத்திலிருந்து ஸன்ஆ நகரத்தின் தலைவாயில்களைப் பார்க்கின்றேன்” என்றார்கள். (ஸுனன் நஸாம், முஸ்னது அஹ்மது)

இதுபோன்ற சம்பவம் ஸல்மான் ஃபார்ஸி (ரழி) அவர்கள் மூலமாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. (இப்னு ஹிஷாம்)

மதீனாவைச் சுற்றி மலைகளும், பேரீத்த மரத்தோட்டங்களும், விவசாய அறுவடைகளை உலர வைக்கத் தேவையான களங்களும் சூழ்ந்திருந்தன. ஆனால், மதீனாவின் வடக்குப் பகுதி மட்டும் போக்குவரத்திற்குரிய வழியாக இருந்தது. எனவே, இதுபோன்ற பெரும் படை வருவதற்கு வடக்குப் பகுதி மட்டும் வழியாக அமைய முடியும் என்பதால் அகழை வடக்குப் பகுதியில் தோண்டுமாறு கூறியிருந்தார்கள். (இப்னு ஹிஷாம்)

முஸ்லிம்கள் தொடர்ந்து அகழ் தோண்டுவதில் மும்முரமாக ஈடுபட்டனர். பகலெல்லாம் அகழ் தோண்டி மாலையில் வீடு திரும்புவார்கள். முடிவு செய்யப்பட்ட திட்டத்திற்கேற்ப அகழ் தோண்டும் பணி எதிரிகளின் படை வருவதற்கு முன்பதாகவே முடிவடைந்தது. குறைஷிகள் 4000 நபர்களுடன் ‘ஜுர்ஃப்’ மற்றும் ‘ஜகாபா“விற்கு மத்தியிலுள்ள ‘ரூமா’ என்ற இடத்தில் ஓடைகள் ஒன்று சேரும் பகுதியில் தங்கினர். கத்ஃபான் மற்றும் நஜ்து பகுதியைச் சேர்ந்தவர்கள் மொத்தம் 6000 நபர்கள் உஹுதிற்கு அருகிலுள்ள ‘தனப் நக்மா’ என்ற இடத்தில் தங்கினர்.

நம்பிக்கையாளர்கள் (எதிரியின்) ராணுவத்தைக் கண்டபோது “(இதுதான்) அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நமக்கு வாக்களித்தது. அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உண்மையையே கூறினார்கள்” என்று சொன்னார்கள். தவிர (இவை அனைத்தும்) அவர்களுடைய நம்பிக்கையையும் வழிபாட்டையும் அன்றி வேறொன்றையும் அவர்களுக்கு அதிகப்படுத்தி விடவில்லை. (அல்குர்ஆன் 33:22)

நயவஞ்சகர்களும் பலவீனமான உள்ளம் உள்ளவர்களும் இந்த படையைப் பார்த்து அஞ்சி நடுங்கினர். இவர்களைப் பற்றி அல்லாஹ் கூறுகின்றான்:

“அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நமக்குச் சதி செய்வதற்காகவே (வெற்றி நமக்கே கிடைக்குமென்று) வாக்களித்தார்கள்” என்று எவர்களுடைய உள்ளங்களில் நோயிருந்ததோ அவர்களும் மற்ற நயவஞ்சகர்களும் கூற முற்பட்டதையும் நினைத்துப் பாருங்கள். (அல்குர்ஆன் 33:12)

நபி (ஸல்) அவர்கள் பெண்களையும் சிறுவர்களையும் மதீனாவிலிருந்த கோட்டையில் பாதுகாப்பாக வைத்து அப்துல்லாஹ் இப்னு உம்மு மக்தூம் (ரழி) அவர்களைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். அதன் பிறகு மூவாயிரம் முஸ்லிம்களுடன் எதிரிகளைச் சந்திக்கப் புறப்பட்டார்கள். அங்கு ‘ஸல்உ’ என்ற மலையைத் தங்களது முதுகுப்புறமாகவும், எதிரிகளுக்கும் முஸ்லிம்களுக்கும் மத்தியில் அகழைத் தடையாகவும் ஆக்கிக் கொண்டார்கள். முஸ்லிம்களுக்கிடையில் அடையாள வார்த்தையாக ‘ஹாமீம், லா யுன்ஸரூன்’ என்ற வசனம் நிர்ணயிக்கப்பட்டது.

எதிரிகள் முஸ்லிம்களைத் தாக்கவும், மதீனாவில் நுழையவும் நாடிய போது அதற்குத் தடையாக அகழ் இருப்பதைப் பார்த்தனர். வேறு வழியின்றி முஸ்லிம்களை முற்றுகையிடுவோம் என்ற முடிவில் அனைவரும் அகழைச் சூழ்ந்து கொண்டனர். இப்படிப்பட்ட ஒரு திட்டத்தை அவர்கள் எதிர்பாராததால் அதற்கான எவ்வித தயாரிப்பும் செய்திருக்கவில்லை. அகழியைப் பார்த்த அவர்கள் “இது மாபெரும் ஒரு சூழ்ச்சி அரபியரல்லாத ஒருவர்தான் இதைக் கூறியிருக்க வேண்டும்” என்று தங்களுக்குள் புலம்பினார்கள்.

இணைவைப்பவர்கள் மிகக் கோபத்துடன் அகழைச் சுற்றி வந்தார்கள். எங்காவது ஒரு சிறு வழி கிடைத்தால் அதன் மூலம் சென்று விடலாம் என்று முயன்றனர். ஆனால், முஸ்லிம்கள் அகழின் பக்கம் எதிரிகளை நெருங்கவிடாமல் அம்பால் தாக்கினர். அகழை நெருங்குவதோ அல்லது அகழில் இறங்குவதோ அல்லது அகழை மண்ணால் மூடி பாதை அமைப்பதோ எதிரிகளால் முடியாத அளவிற்கு முஸ்லிம்கள் அம்பு மழை பொழிந்தனர்.

குறைஷி குதிரை வீரர்களில் சிலர் முற்றுகையின் முடிவை எதிர்ப்பார்த்து அகழைச் சுற்றி நின்று கொண்டிருப்பதை வெறுத்து அகழியில் குதிப்பதற்குப் புறப்பட்டனர். அம்ர் இப்னு அப்து உத், இக்மா இப்னு அபூஜஹ்ல், ழிரார் இப்னு கத்தாப் போன்றோர் அகழின் ஒரு குறுகிய இடத்தைத் தேடி அதில் இறங்கினர். பின்பு அகழிக்கும் ‘ஸல்உ’ மலைக்கும் மத்தியிலுள்ள சதுப்பான இடத்தில் அவர்களது குதிரைகள் சிக்கித் தடுமாறின. இதைப் பார்த்த அலீ இப்னு அபூதாலிப் (ரழி) முஸ்லிம்கள் சிலரை அழைத்துச் சென்று எதிரிகள் திரும்ப ஓட முடியாதவாறு அவர்கள் வந்த வழியை அடைத்து விட்டார்கள். இப்போது எதிரிகளும் முஸ்லிம்களும் நேருக்கு நேர் சந்தித்தனர். அம்ர், “தன்னிடம் நேருக்கு நேர் யார் மோதுவது?” என்று கேட்க, அலீ (ரழி) “நான்” என்றார்கள். அம்ருக்கு முன் நின்ற அலீ (ரழி), அவன் கோபமடையும்படி சில வார்த்தையைக் கூறவே அவன் கொதித்தெழுந்தான். தனது குதிரையின் காலை வெட்டி அதன் முகத்தில் வாளால் அறைந்து விட்டு அலீயை நோக்கி சீறினான். இருவரும் தங்களின் வாளை சுழற்ற சில நொடிகளில் அலீ (ரழி) அவர்களின் வாள் அம்ரின் தலையைச் சீவியது. ஆயிரம் வீரர்களுக்குச் சமமானவன் என்று பெயர் பெற்ற அம்ரை பிண்டமாகப் பார்த்த மற்றவர்கள் பயந்து அகழைத் தாண்டி ஓட்டம் பிடித்தனர். மாபெரும் வீரராக விளங்கிய இக்மா கூட பயத்தால் தனது ஈட்டியையும் போட்டுவிட்டு ஓடினார்.

எதிரிகள் அங்கு முற்றுகையிட்டிருந்த சில நாட்களில் பலமுறை அகழியில் இறங்குவதற்கும், அதன் மீது பாதை அமைப்பதற்கும் மிகத் தீவிரமாக முயன்றனர். ஆனால், முஸ்லிம்களின் அம்பு மழைக்கு எதிராக அவர்களின் அனைத்து முயற்சிகளும் தோல்வியடைந்தன. இதுபோன்ற தற்காப்பில் தீவிரமாக ஈடுபட்டிருந்ததால் நபி (ஸல்) அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சில நேரத் தொழுகைகள் தவறின.

ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்கள்: அகழ் போரின் போது நபி (ஸல்) அவர்களை உமர் (ரழி) சந்தித்து குறைஷிகளை ஏசினார். பிறகு ‘‘அல்லாஹ்வின் தூதரே! சூரியன் மறையப் போகிறது. ஆனால், இன்னும் நான் அஸ்ர் தொழுகவில்லை’’ என்றார். அதற்கு நபியவர்கள் ‘‘அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நானும் அஸ்ரைத் தொழவில்லை’’ என்றார்கள். பின்பு நாங்கள் அனைவரும் நபி (ஸல்) அவர்களுடன் ‘புத்ஹான்’ என்ற இடத்திற்குச் சென்று உழுச் செய்து சூரியன் மறைந்த பின் அஸ்ரை முதலில் தொழுது பிறகு மக்ரிப் தொழுகையைத் தொழுதோம். (ஸஹீஹுல் புகாரி)

தொழுகைகள் தவறியதற்குக் காரணமாயிருந்த இணைவைப்பவர்களுக்கு எதிராக நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தார்கள். இது குறித்து அலீ (ரழி) கூறுகிறார்கள்:

‘‘யா அல்லாஹ்! இவர்களின் இல்லங்களையும், புதைக்குழிகளையும் நெருப்பால் நிரப்புவாயாக! எங்களை சூரியன் மறையும் வரை அஸர் தொழவிடாமல் இவர்கள் தடுத்தனர்’’ என்று நபி (ஸல்) அவர்கள் வேண்டினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

முஸ்னது அஹ்மது மற்றும் முஸ்னது ஷாபிஈ ஆகிய நூற்களில் ளுஹர், அஸ்ர், மஃரிப், இஷா ஆகிய தொழுகைகளைத் தொழவிடாமல் தடுத்தனர் என்றும் வந்துள்ளது. ஸஹீஹுல் புகாரியில் அஸ்ர் தொழுகை மட்டும் என்று கூறப்பட்டுள்ளதை இதற்கு முன்பு பார்த்தோம். இதற்கு விளக்கத்தை இமாம் நவவி (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்:

‘‘அகழ்ப்போர் பல நாட்களாக நடந்தது. அதில் சில நாட்களில் அஸ்ர் மட்டும் தொழாமல் இருந்திருக்கலாம். சில நாட்களில் மற்றும் பல தொழுகைகளையும் தொழ முடியாமல் ஆகியிருக்கலாம்.’’ (ஷரஹ் முஸ்லிம்)

இதிலிருந்து நமக்குத் தெரியவருவது என்னவெனில்: எதிரிகள் அகழைக் கடக்க முயற்சி செய்ததும், முஸ்லிம்கள் அதை எதிர்த்ததும் பல நாட்களாக நீடித்தது. ஆனால் இரு படைகளுக்கும் இடையில் அகழ் தடையாக இருந்ததால் நேரடியான சண்டையோ, பலத்த சேதமோ யாருக்கும் ஏற்படவில்லை. இரு தரப்பிலிருந்தும் அம்பெறிந்தே தாக்குதல் நடந்தது.

இவ்வாறு இருதரப்பினரும் அம்பெய்து கொண்டதில் விரல்விட்டு எண்ணும் அளவுக்கு இரு தரப்பிலும் ஒரு சிலர் கொல்லப்பட்டனர். அதாவது, முஸ்லிம்களில் ஆறு பேரும் இணை வைப்பவர்களில் பத்து பேரும் கொல்லப்பட்டனர். இதில் ஒரு சிலர் வாளாலும் கொல்லப்பட்டனர்.

ஸஅது இப்னு முஆத் (ரழி) அவர்களை ஓர் அம்பு தாக்கியதில் அவர்களது குடங்கையிலுள்ள நரம்பு துண்டிக்கப்பட்டது. ஹப்பான் இப்னு அக்கா என்பவன்தான் இந்த அம்பை எறிந்தான். இந்தக் காரியம் ஸஅது (ரழி) அவர்களை அதிகம் வருத்தவே அவர்கள் அல்லாஹ்விடம் ‘‘அல்லாஹ்வே! உனது தூதரைப் பொய்யாக்கி, அவர்களை வெளியாக்கிய கூட்டத்தினரைத் தவிர வேறு எவரிடமும் உனக்காக நான் போர் புரிவது எனக்கு விருப்பமாக இல்லை என்பதை நீ நன்கு அறிவாய். அல்லாஹ்வே! எங்களுக்கும் அவர்களுக்குமிடையில் போரை நீ இத்துடன் முடித்துவிட்டாய் என்றே நான் கருதுகிறேன். அல்லாஹ்வே! குறைஷிகளிடம் போர் புரிய வேண்டிய நிலை மீண்டும் ஏற்படும் என்றிருந்தால், உனக்காக நான் அவர்களிடம் போர் புரிவதற்கு என்னை உயிருடன் வாழ வை! நீ போரை முடித்துவிட்டாய் என்றிருப்பின் இக்காயத்திலேயே எனக்கு மரணத்தை ஏற்படுத்தி விடு’’ என்று வேண்டினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

‘‘பனூ குரைளா யூதர்கள் குறித்து என் கண்ணுக்கு குளிர்ச்சி தரும் வரை என் உயிரை கைப்பற்றிவிடாதே’’ என்றும் வேண்டினார்கள் என ‘தாரீக் இப்னு ஷாமி‘‘ல் கூறப்பட்டிள்ளது.

முஸ்லிம்கள் இப்போரில் கடினமான சூழ்நிலைகளை எதிர்கொண்டிருந்த சமயத்தில் பொந்துகளிலிருந்த விஷப் பாம்புகள் (யூதர்கள்) தங்களின் விஷத்தைக் கக்குவதற்குத் துடித்தன. நழீர் வமிச யூதர்களின் மிகப் பெரிய விஷமி ஹை இப்னு அக்தப், குரைளா இன யூதர்களின் இல்லங்களுக்குச் சென்றான். முதலில் கஅப் இப்னு அஸதிடம் வந்தான். இவன்தான் குரைளா இன யூதர்களின் தலைவன். ஹை இவனது வீட்டுக் கதவை தட்டினான். ஆனால், கஅப் கதவை பூட்டிக்கொண்டு திறக்க மறுத்துவிட்டான். ஹய் அதிகம் வற்புறுத்தவே கஅப் கதவைத் திறந்தான். அப்போது ஹை, கஅபிடம், ‘‘கஅபே! நான் உன்னிடம் உனக்கு நிரந்தரமாக கண்ணியம் தரும் ஒன்றையும், கடல் அலை போன்ற பெரிய படையையும் கொண்டு வந்திருக்கிறேன். அதாவது, குறைஷிகளை அவர்களது தலைவர்கள், தளபதிகளுடன் அழைத்து வந்து ரூமாவில் உள்ள ‘மஜ்மஉல் அஸ்யாலில்’ தங்க வைத்துள்ளேன். அவ்வாறே கத்பான் கிளையினர்களை அவர்களது தலைவர்கள், தளபதிகளுடன் அழைத்து வந்து உஹுதுக்கு அருகில் உள்ள ‘தனப் நக்மா‘‘வில் தங்க வைத்துள்ளேன். இவர்களெல்லாம் முஹம்மதையும் அவரைப் பின்பற்றியவர்களையும் பூண்டோடு அழிக்காத வரை இங்கிருந்து திரும்ப மாட்டோம் என என்னிடம் ஒப்பந்தமும், உடன்படிக்கையும் செய்துள்ளனர்’’ என்றான்.

இதைக் கேட்ட கஅப்: ‘‘அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீ காலமெல்லாம் இழிவு தரும் செயல்களையே என்னிடம் செய்யச் சொல்கிறாய். அதுமட்டுமல்ல, நீ என்னிடம் கூறிய காரியம் எப்படியெனில் வெறும் இடிஇடித்து, மின்னல் வெட்டி மழை தராத ஒரு மேகத்தைப் போன்றதுதான். ஹய்யே! உனக்கு நாசம் உண்டாகட்டும்! என்னை எனது நிலையில் விட்டுவிடு. நான் முஹம்மதிடம் உண்மை, வாக்கை நிறைவேற்றும் தன்மை இவற்றைத் தவிர வேறு எதையும் பார்க்கவில்லை’’ என்றான்.

ஆனால் ஹய், கஅபைத் தொடர்ந்து மூளைச் சலவை செய்தான். இறுதியாக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து ஓர் உடன்படிக்கையையும் செய்தான். அதாவது ‘‘முஹம்மதை அழிக்காமல் குறைஷிகள் மற்றும் கத்ஃபானியர்கள் தோல்வியுற்று திரும்பிவிட்டாலும் நான் உன்னை விட்டும் பிரிய மாட்டேன். உன்னுடன் உனது கோட்டைக்குள் நானும் இருப்பேன். முஹம்மதாலும் அவருடைய படையாலும் உனக்கு ஏற்படும் கதி எனக்கும் ஏற்படட்டும். நான் உன்னை விட்டு ஒருக்காலும் பிரியமாட்டேன்.’’ இந்த வாக்குறுதியை ஹை கூறியவுடன் கஅப் முஸ்லிம்களுக்கும் தனக்குமிடையிலுள்ள உடன்படிக்கையை முறித்துக் கொண்டான். அதை அடுத்து முஸ்லிம்களுக்கு எதிராகச் சண்டை செய்வதற்காக அவன் இணைவைப்பவர்களுடன் சேர்ந்து கொண்டான். (இப்னு ஹிஷாம்)

இதைத் தொடர்ந்து, உடனடியாக குரைளா இன யூதர்கள் முஸ்லிம்களுடன் போர் நடவடிக்கையில் ஈடுபட்டனர். இதைப் பற்றிய ஒரு நிகழ்ச்சியை இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்:

ஹஸ்ஸான் இப்னு ஸாபிதுக்கு சொந்தமான ‘ஃபாஉ’ என்ற கோட்டையில் நபியவர்களின் மாமியான ஸஃபிய்யா பின்த் அப்துல் முத்தலிபும் மற்ற முஸ்லிம் பெண்களும் சிறுவர்களும் பாதுகாக்கப்பட்டிருந்தனர். அங்கு அவர்களுக்குத் துணையாக ஹஸ்ஸான் இப்னு ஸாபித் (ரழி) இருந்தார்.

ஸஃபிய்யா (ரழி) கூறுகிறார்: அப்போது ஒரு யூதன் அக்கோட்டையைச் சுற்றி சுற்றி வந்தான். பனூ குரைளா யூதர்கள் நபியவர்களுடன் செய்து கொண்ட உடன்படிக்கையை முறித்துவிட்டு போருக்குத் ஆயத்தமாகி விட்டனர் என்பது எங்களுக்குத் தெரியவந்து, அவர்கள் எங்களைத் தாக்க நாடினால்கூட எங்களைப் பாதுகாப்பதற்கு ஹஸ்ஸானைத் தவிர யாரும் இல்லை. ஏனெனில், நபி (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் தங்களது எதிரிகளுடன் மிகத் தீவிரமாக போரில் ஈடுபட்டிருந்தனர். எங்களைத் தாக்குவதற்கு யாராவது வந்தாலும் அவர்களால் எதிரிகளை விட்டுவிட்டு எங்களைக் காப்பாற்றுவதற்காக மதீனாவிற்குள் வர

இயலாது. எனவே, நான் ஹஸ்ஸானிடம் ‘‘ஹஸ்ஸானே! இந்த யூதன் கோட்டையைச் சுற்றி வருவதை நீ பார்க்கிறாய். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாம் பாதுகாப்பின்றி இருப்பதை நமக்குப் பின்னால் இருக்கும் மற்ற யூதர்களுக்கு இவன் கூறிவிடுவானோ என நான் அஞ்சுகிறேன். நபியவர்களும் நபித் தோழர்களும் நமது நிலையை அறிந்து கொள்ள முடியாமல் இருக்கிறார்கள். எனவே, நீ இறங்கி சென்று அவனைக் கொன்றுவா!’’ எனக் கூறினேன்.

அதற்கு ஹஸ்ஸான் ‘‘அல்லாஹ்வின் மீது ஆணையாக! அது என்னால் முடியாது என்பது உனக்கு நன்றாகவே தெரியும்’’ எனக் கூறிவிட்டார். உடனே நான் எனது இடுப்புத் துணியை இறுக்கிக் கட்டிக் கொண்டு ஒரு தடியைக் கையில் எடுத்தேன். பின்பு கோட்டையிலிருந்து வெளியேறிச் சென்று அந்த யூதனை நான் வைத்திருந்த கைத்தடியால் அடித்துக் கொன்றேன். பின்பு கோட்டைக்குள் வந்து ‘‘ஹஸ்ஸானே! இறங்கிச் சென்று அவனது உடைமைகளை எடுத்து வா! அவன் ஆண் என்பதால்தான் அவனது உடைமைகளை என்னால் எடுக்க முடியவில்லை’’ என்றேன். அது எனக்குத் தேவையில்லையென ஹஸ்ஸான் கூறிவிட்டார். (இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) அவர்களின் மாமி ஸஃபிய்யா (ரழி) அவர்கள் செய்த இந்த வீரச்செயலினால் பெண்களும், சிறுவர்களும் பாதுகாக்கப்பட்டார்கள். அதாவது, கோட்டைகளை வேவு பார்ப்பதற்காக சென்ற யூதன் திரும்ப வரவில்லை என்பதை அறிந்த மற்ற யூதர்கள் மதீனாவில் உள்ள கோட்டைகள் அனைத்தும் மிகுந்த பாதுகாப்புடன் உள்ளன என்று எண்ணினர். ஆகையால் மற்றொரு முறை இதுபோன்று துணிவு கொள்ள அவர்கள் முன்வரவில்லை. இருப்பினும் யூதர்கள் போரில் ஈடுபட்டுள்ள இணைவைப்பவர்களுக்கு உணவுகள் அனுப்பி வைத்தனர். இது யூதர்கள் முஸ்லிம்களிடம் செய்துகொண்ட ஒப்பந்தத்திற்கு எதிராக இணைவைப்பவர்களுடன் இணைந்து கொண்டனர் என்பதற்கு ஆதாரமாக இருந்தது. இவ்வாறு அனுப்பப்பட்ட உணவுகளில் இருபது ஒட்டகங்களை முஸ்லிம்கள் பறிமுதல் செய்தனர்.

யூதர்கள் இணைவைப்பவர்களுடன் இணைந்துவிட்ட செய்தி நபி (ஸல்) அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் கிடைத்தது. இதனால் அவர்கள் மீது ராணுவ நடவடிக்கை எடுப்பதற்காக இச்செய்தியை உறுதி செய்து கொள்ள நபியவர்கள் தீவிரம் காட்டினார்கள். ஸஅது இப்னு முஆத், ஸஅது இப்னு உபாதா, அப்துல்லாஹ் இப்னு ரவாஹா, கவ்வாத் இப்னு ஜுபைர் (ரழி) ஆகியோரை உண்மை நிலையை அறிந்து வர நபியவர்கள் அனுப்பினார்கள். நபி (ஸல்) தங்கள் தோழர்களிடம், ‘‘நீங்கள் அவர்களிடம் செல்லுங்கள். அவர்களைப் பற்றி நமக்குக் கிடைத்த செய்தி உண்மைதானா? என்று பாருங்கள். நாம் கேள்விப்பட்டது உண்மையாக இருப்பின் என்னிடம் நான் அறிந்து கொள்ளும் விதமாக சைகை மட்டும் செய்யுங்கள். மக்களிடம் அந்தச் செய்தியை பரப்பி விடாதீர்கள். அவர்கள் வாக்குறுதி மாறாமல் இருந்தால் அதை மக்கள் அனைவருக்கும் தெரியும் படி சொல்லுங்கள்’’ என்றார்கள்.

இதற்குப் பின் நபித்தோழர்கள் யூதர்களிடம் வந்தனர். யூதர்கள் இவர்களுக்கு மிகக் கெட்ட பதிலைக் கூறியதுடன் நபி (ஸல்) அவர்களை வசைபாடினர். ‘‘அல்லாஹ்வின் தூதர் என்றால் யார் அவர்? எங்களுக்கும் முஹம்மதுக்கும் எவ்வித உடன்படிக்கையும் ஒப்பந்தமும் இல்லை’’ என்றனர். இந்தப் பதிலைக் கேட்டு நபியவர்களிடம் திரும்பிய தோழர்கள் ‘அழல், காரா’ என்றனர். (அதாவது ‘ரஜீஃ’ என்னும் இடத்தில் நபித்தோழர்களை அழல், காரா கிளையினர் வஞ்சகமாகக் கொன்றது போல் யூதர்களும் நம்முடன் வஞ்சகம் செய்கின்றனர் என்று பொருள்.)

நபி (ஸல்) அவர்களைத் தவிர இந்த உண்மை பிறமக்களுக்குத் தெரியாமல் இருக்க நபித்தோழர்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் பலன் இல்லை. யூதர்களின் மோசடி

உண்மைதான் என்பதை மக்களும் அறிந்து கொண்டனர். இதனால் தங்களுக்கு முன் பெரும் ஆபத்து வந்து விட்டதை மக்கள் உணர்ந்து கொண்டனர்.

முஸ்லிம்களுக்கு இது மிக இக்கட்டான நிலையாக இருந்தது. குறைளா யூதர்கள் பின்புறத்திலிருந்து தாக்குதல் நடத்தினால் அதைத் தடுக்கவும் முடியாது. எதிர் திசையிலோ மிகப் பெரிய படை. அதை விட்டு எங்கும் செல்லவும் முடியாது. துரோகம் இழைத்த யூதர்களுக்கு அருகில்தான் முஸ்லிம்களின் பெண்களும் சிறுவர்களும் எவ்வித உரிய பாதுகாப்புமின்றி இருந்தனர். இவர்களது நிலை அல்லாஹ் குர்ஆனில் கூறியது போன்றே இருந்தது.

உங்களுக்கு மேற்புறமிருந்தும் கீழ்ப்புறமிருந்தும் (உங்களைச் சூழ்ந்துகொண்டு) அவர்கள் வந்த சமயத்தில் உங்களுடைய திறந்த கண்கள் திறந்தவாறே இருந்து உங்களுடைய உள்ளங்கள் உங்கள் தொண்டைக் குழிகளை அடைத்து (நீங்கள் திக்குமுக்காடி) அல்லாஹ்வைப் பற்றி நீங்கள் (தவறாகப்) பலவாறு எண்ணிய சமயத்தையும் நீங்கள் நினைத்துப் பாருங்கள். அந்நேரத்தில் நம்பிக்கையாளர்கள் பெரும் சோதனைக்குள்ளாகி மிக்க பலமாக அசைக்கப்பட்டனர். (அல்குர்ஆன் 33:10,11)

முஸ்லிம்களுடன் இருந்த சில நயவஞ்சகர்களின் வஞ்சகத்தனம் அப்போது வெளிப்பட்டது. “நாங்கள் கிஸ்ரா, கைஸருடைய கஜானாக்களை அடைவோம் என்று முஹம்மது எங்களுக்கு வாக்குக் கொடுக்கிறார். ஆனால், இன்று எங்களால் சுயதேவையை நிறைவேற்றுவதற்குக் கூட செல்ல முடியவில்லை. அந்த அளவு பயத்தில் இருக்கிறோம்” என்று சிலர் கூறினர். “எங்களின் வீடு பாதுகாப்பின்றி இருக்கின்றது. எனவே, நாங்கள் போரிலிருந்து திரும்பி விடுகிறோம். எங்களது வீடுகள் மதீனாவிற்கு வெளியில் இருக்கின்றன” என்று சிலர் கூறினர். ஸலமா கிளையினர் கூட போரிலிருந்து திரும்பிட எண்ணினர். இவர்களைப் பற்றியே பின்வரும் குர்ஆன் வசனம் இறக்கப்பட்டது.

நயவஞ்சகர்களும் உள்ளங்களில் நோய் உள்ளவர்களும் “அல்லாஹ்வும் அவனது தூதரும் எங்களுக்கு ஏமாற்றத்தைத் தவிர வேறொன்றையும் வாக்களிக்கவில்லை.” என்று கூறுகின்றனர். அவர்களில் ஒரு கூட்டத்தினர் (மதீனாவாசிகளை நோக்கி) “யஸ்ப் வாசிகளே! (எதிரிகள் முன்) உங்களால் நிற்க முடியாது. ஆதலால், நீங்கள் திரும்பிச் சென்று விடுங்கள்” என்று கூறியதையும், அவர்களில் மற்றொரு பிரிவினர் அவர்களுடைய வீடுகள் அபாயகரமான நிலைமையில் இல்லாமல் இருந்தும் “நிச்சயமாக எங்களுடைய வீடுகள் அபாயகரமான நிலைமையில் இருக்கின்றன” என்று கூறி (போர்க்களத்திலிருந்து சென்றுவிட நமது) நபியிடம் அனுமதி கோரியதையும் நினைத்துப் பாருங்கள். இவர்கள் (போரிலிருந்து) தப்பி ஓடிவிடுவதைத் தவிர (வேறொன்றையும்) விரும்பவில்லை. (அல்குர்ஆன் 33:13)

குறைளா யூதர்கள் தங்களுக்கு மோசடி செய்து விட்டனர் என்ற செய்தி கிடைத்ததும் நபி (ஸல்) அவர்கள் தங்களது முகத்தை போர்வையால் மூடிக்கொண்டு நீண்ட நேரம் சாய்ந்து படுத்து சிந்தனையில் ஆழ்ந்தார்கள். இங்கு முஸ்லிம்கள் கடும் சோதனைக்கும், துன்பத்திற்கும் ஆளாகினர். பிறகு நபியவர்கள் எழுந்து “அல்லாஹ் மிகப் பெரியவன். முஸ்லிம்களே! அல்லாஹ் வுடைய வெற்றியும் உதவியும் உங்களுக்குண்டென நற்செய்தி பெற்றுக் கொள்ளுங்கள்” என்றார்கள். இதற்குப் பின் நிலைமையைச் சமாளிப்பதற்கு நபியவர்கள் திட்டங்களைத் தீட்டினார்கள். அதில் முதல் கட்டமாக மதீனாவிலுள்ள பெண்களும் சிறுவர்களும் தாக்கப்படாமல் இருப்பதற்காக அங்கு பாதுகாப்புப் பணியில் ஈடுபட உடனடியாக சில வீரர்களை அனுப்பினார்கள்.

இது மட்டுமல்லாமல், எதிர்த்தரப்பு படையில் இருக்கும் குறைஷி அல்லாத கூட்டத்தனரிடம் ஒப்பந்தம் செய்து கொண்டால் அவர்களைப் போர்முனையிலிருந்து திருப்பி விடலாம். பிறகு முஸ்லிம்களின் பரம எதிரியான குறைஷிகளைப் போர்க்களத்தில் ஒரு கை

பார்த்துவிடலாம் என்று எண்ணி, இது குறித்து அன்சாரிகளின் தலைவர்களான ஸஅது இப்னு முஆத், ஸஅது இப்னு உபாதா (ரழி) ஆகிய இருவரிடமும் நபி (ஸல்) அவர்கள் ஆலோசனை நடத்தினார்கள். “எதிரிப் படையிலுள்ள கத்ஃபான் குலத் தலைவர்களான உயைனா இப்னு ஹிஸ்ன், ஹாரிஸ் இப்னு அவ்ஃப் ஆகியோருக்கு தூதனுப்பி மதீனாவின் விளைச்சல்களில் மூன்றில் ஒரு பகுதியை உங்களுக்குத் தருகிறோம், நீங்கள் எங்களுடன் சண்டையிடுவதிலிருந்து விலகிக் கொள்ள வேண்டுமென கேட்போமா? என்று நபி (ஸல்) ஆலோசனை கேட்டார்கள். அதற்கு அவ்விருவரும் “நபியே! நீங்கள் கூறும் இந்த ஆலோசனை அல்லாஹ்வின் கட்டளையாக இருந்தால் நாங்கள் அதற்குக் கட்டுப்படுகிறோம். அதே சமயம் இது எங்களின் நலனுக்காக நீங்கள் செய்வதாக இருந்தால் நிச்சயம் நாங்கள் அதனை விரும்பவில்லை. காரணம், மதீனாவில் விளையும் பழங்களை நாங்கள் விற்றாலோ அல்லது விருந்தளித்தாலோ மட்டுமே கத்ஃபான் குலத்தினர் உண்ண முடியும். இதைத் தவிர வேறு வழியில் மதீனாவின் பழங்களை அவர்கள் நினைத்துக்கூட பார்க்க முடியாது. நாங்கள் இஸ்லாமை ஏற்பதற்கு முன்பே இந்நிலையென்றால், இன்று அல்லாஹ் எங்களை இஸ்லாமின் மூலம் கண்ணியப்படுத்தி எங்களுக்கு நேர்வழியையும் தந்துவிட்டான். இப்போது பணிந்து நாங்கள் எங்களது செல்வங்களை அவர்களுக்குக் கொடுப்பதா? அல்லாஹ்வின் மீது சத்தியமாக! வாளைத் தவிர வேறு எதையும் நாங்கள் அவர்களுக்குக் கொடுக்க மாட்டோம். (அதாவது பணிய மாட்டோம்) இறுதிவரை போரிடுவோம்” என்று அவ்விருவரும் கூறினார்கள். இவ்விருவரின் கருத்தையும் ஏற்றுக் கொண்ட நபியவர்கள் “அரபிகள் எல்லாம் ஒன்றுசேர்ந்து உங்களைத் தாக்குகிறார்களே என்ற நிலை கருதி உங்களின் நன்மைக்காக இந்த ஆலோசனையை முன் வைத்தேன்” என்று விளக்கினார்கள்.

அன்சாரிகளின் இந்த உறுதி, நிலை குலையாமை, துணிவு, மற்ற எல்லாத் தோழர்களின் பொறுமை, தியாகம் - இவை அனைத்தும் அல்லாஹ்விற்கு பிடித்துவிட்டது. அல்லாஹுத் தஆலா தன் புறத்திலிருந்து உதவியை இறக்கினான். எதிரிகளைத் தோற்கடித்து அவர்களது ராணுவங்களை புறமுதுகு காட்டி ஓடச் செய்தான். இதற்காக அல்லாஹ் செய்த ஏற்பாட்டில் இந்நிகழ்ச்சியும் ஒன்றாகும். கத்ஃபான் கோத்திரத்தில் நுஅய்ம் இப்னு மஸ்வூத் இப்னு ஆமிர் என்பவர் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து “அல்லாஹ்வின் தூதரே! நான் முஸ்லிமாகி விட்டேன். ஆனால், நான் முஸ்லிமானது எனது கூட்டத்தினருக்குத் தெரியாது. எனவே, நீங்கள் முஸ்லிம்களுக்குச் சாதகமாக ஏதாவது செய்யச் சொன்னால், நான் அதன்படி செய்கிறேன்” என்றார். அதற்கு நபியவர்கள் “நீ தனியாக என்ன செய்து விட முடியும்? உன்னால் முடிந்தால் எங்களை விட்டும் எதிரிகளைத் திசை திருப்பும் தந்திரம் எதையாவது செய். ஏனெனில், போர் என்பதே ஒரு சூழ்ச்சிதான்” என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் இக்கூற்றுக்கிணங்க அவர் குரைளாவனரிடம் சென்றார். இவர் குரைளாவினன் நண்பராக இருந்ததால், அவர்களிடம் சென்று “நான் உங்களை எந்தளவு விரும்புகிறேன் என்பதையும் எனக்கும் உங்களுக்குமிடையிலுள்ள வலுவான தொடர்பையும் நீங்கள் நன்கு அறிவீர்கள்தானே?” என்றார். அதற்கவர்கள் “ஆம்! என்றனர். இந்த ஊர் உங்களுடைய ஊராகும். இதில்தான் உங்களுடைய சொத்துகளும், பிள்ளைகளும், பெண்களும் இருக்கின்றனர். நீங்கள் இந்த ஊரைவிட்டு வேறு எங்கும் தப்பித்துச் செல்ல முடியாது. ஆனால், குறைஷிகள் உங்களைப் போன்றல்ல. அவர்களும் கத்ஃபான்களும் முஹம்மதிடம் போர் செய்வதற்காக இங்கு வந்திருக்கின்றனர். நீங்களும் முஹம்மதுக்கு எதிராக அவர்களுக்கு உதவி செய்கிறீர்கள். ஆனால், அவர்களது ஊர் இதுவல்ல. அவர்களது செல்வங்களும் பிள்ளைகளும் இங்கு இல்லை. அவர்களுக்கு நல்ல வாய்ப்பு கிடைத்தால் அதைப் பயன்படுத்திக் கொள்வார்கள். அப்படி வாய்ப்பு கிட்டவில்லை என்றாலோ அல்லது போரில் தோல்வியுற்றாலோ அவர்கள் தங்களது ஊர்களுக்குத் திரும்பச் சென்று தப்பித்துக் கொள்வார்கள். நீங்கள் முஹம்மதிடம் வசமாக மாட்டிக் கொள்வீர்கள். அவரோ உங்களிடம் பழிதீர்த்துக் கொள்வார். நீங்கள் என்ன செய்ய முடியும்” என்று கேட்டார். அதற்கு யூதர்கள் “நுஅய்மே! நாங்கள் என்ன செய்ய வேண்டும்

என்று நீ கூறுகிறாய்'' எனக் கேட்டனர். அதற்கவர் “நீங்கள் அவர்களிடம் அவர்களின் சில நபர்களை உங்களிடம் அடைமானமாக வைத்துக்கொள்ள கேளுங்கள். அவர்கள் சிலரை ஒப்படைக்காத வரை நீங்கள் அவர்களுக்கு ஆதரவாக போர் புரியாதீர்கள்'' என்று கூறினார். அதற்கு யூதர்கள் “நீ எங்களுக்குச் சரியான ஆலோசனை கூறிவிட்டாய்'' என்று கூறினர்.

இதற்குப் பின் நேரடியாக நுஅய்ம் குறைஷிகளைச் சந்தித்தார். அவர்களிடம் “உங்களை நான் நேசிப்பதையும் உங்களுக்கு நான் நல்லதையே செய்வேன் என்பதையும் நீங்கள் நன்கு அறிவீர்கள் தானே'' என்று கேட்டார். அதற்கு அவர்கள் “ஆம்!” அப்படித்தான் என்றனர். அப்போது குறைஷிகளிடம் நுஅய்ம், “யூதர்கள் முஹம்மதுக்கும் அவரது தோழர்களுக்கும் செய்து கொடுத்த உடன்படிக்கையை முறித்தது பற்றி மிகவும் கைதேசமடைந்துள்ளனர். அதனால் உங்களிடமிருந்து உங்களின் சில நபர்களை அடைமானமாக உங்களிடமிருந்து வாங்கி, அவர்களை முஹம்மதிடம் கொடுத்துத் தாங்கள் செய்த குற்றத்திற்கு பரிகாரம் தேடிக்கொள்ள எண்ணுகின்றனர். ஆகையால், அவர்கள் உங்களிடம் உங்களின் ஆட்களை அடைமானமாகக் கேட்டால் நீங்கள் ஏற்றுக் கொள்ளாதீர்கள்'' என்று கூறினார். அவ்வாறே கத்ஃபானியரைச் சந்தித்து குறைஷிகளிடம் கூறியது போன்று கூறினார்.

ஹிஜ் 5, ஷவ்வால் மாதம் சனிக்கிழமை இரவு குறைஷிகள் யூதர்களிடம் ஒரு செய்தி அனுப்பினர். அதாவது “நாங்கள் இப்போது அந்நிய ஊருக்கு வந்திருக்கிறோம். எங்களின் குதிரைகளும், ஒட்டகங்களும் அழிந்துவிட்டன. நீங்களும் எங்களுடன் புறப்படுங்கள். நாம் அனைவரும் சேர்ந்து முஹம்மதிடம் போர் புரிவோம்'' என்பதுதான் அந்தச் செய்தியின் சுருக்கம்.

குறைஷிகளின் இக்கோரிக்கையை யூதர்கள் நிராகரித்ததுடன் “இன்று சனிக்கிழமை. இந்நாளில் நாங்கள் செய்த குற்றத்திற்காக எங்களுக்கு ஏற்பட்ட தண்டனை என்னவென்று உங்களுக்குத் தெரியும். எனவே, நீங்கள் உங்களின் ஆட்களை அடைமானமாக எங்களிடம் தரும் வரை நாங்கள் உங்களுக்கு ஆதரவாக சண்டையிட மாட்டோம்'' என்று கூறினர். இச்செய்தியைத் தூதுக்குழு குறைஷிகளிடம் கூறியவுடன் “நுஅய்ம் உங்களுக்கு உண்மைதான் கூறியிருக்கிறார்'' என்று குறைஷிகளும் கத்ஃபான்களும் கூறினர்.

இதற்குப் பின் இவர்கள் மீண்டும் யூதர்களிடம் தங்களின் குழுவை அனுப்பி “நாங்கள் உங்களிடம் எங்கள் ஆட்களில் எவரையும் அனுப்ப மாட்டோம். நீங்கள் எங்களிடம் வாருங்கள். நாம் சேர்ந்து முஹம்மதிடம் போர் புரிவோம்'' என்றனர். இதைக் கேட்ட யூதர்கள், “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நுஅய்ம் நம்மிடம் உண்மையைத்தான் கூறினார்'' என்று தங்களுக்குள் கூறி விட்டு வந்த குறைஷித் தூதர்களைத் திருப்பி அனுப்பி விட்டனர். இதன்மூலம் இரு தரப்பினருக்குமிடையில் பிரிவினை ஏற்பட்டது. யூதர்கள் குறைஷிகளுக்கு உதவுவதைக் கைவிட்டனர். இதனால் குறைஷிகளின் உறுதி குலைந்தது. முடிவு என்னவாகுமோ என அவர்கள் பயந்தனர்.

முஸ்லிம்கள் அல்லாஹ்விடம்,

“அல்லாஹ்வே! எங்களுடைய அவயங்களை மறைத்திடு எங்களின் பயங்களை போக்கி அபயம் அளி'' என்று வேண்டினர்.

அடுத்து நபி (ஸல்) அவர்களும்,

வேதத்தை இறக்கியவனே! விரைவாக கணக்கு தீர்ப்பவனே! இப்படையினரைத் தோற்கடிப்பாயாக! இவர்களை ஆட்டம் காணச் செய்வாயாக! என அல்லாஹ்விடம் வேண்டினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அல்லாஹ் தனது தூதரின் வேண்டுதலையும் முஸ்லிம்களின் இறைஞ்சுதலையும் ஏற்றுக் கொண்டான். எதிரிகளின் அணிகளில் பிரிவினை ஏற்பட்டு அவர்கள் தங்களுக்குள் உதவி செய்வதைக் கைவிட்டனர். அத்துடன் அல்லாஹ் அவர்களை விரட்ட பலத்த காற்றை அனுப்பினான். அக்காற்று அவர்களின் கூடாரங்களைக் கழற்றி வீசியது. அவர்களின் பாத்திரங்களை தலைகீழாகப் புரட்டியது. கூடாரத்தின் கயிறுகளை அறுத்தது. எதிரிகள் நிலை தடுமாறினர். அல்லாஹ் வானவர்களின் படையை இறக்கினான். அவர்கள் எதிரிகளின் உள்ளங்களில் பயத்தையும் நடுக்கத்தையும் ஏற்படுத்தி, அவர்களை நிலை குலைய வைத்தனர்.

நபி (ஸல்) அவர்கள் இந்தக் கடுமையான குளிர் நிறைந்த இரவில் தோழர் ஹுதைஃபாவை எதிரிகளின் செய்திகளைத் தெரிந்து வர அனுப்பினார்கள். எதிரிகள் மக்கா திரும்ப ஆயத்தமாகி இருந்தனர். இச்செய்தியை நபியவர்களிடம் ஹுதைஃபா (ரழி) கூறினார். அல்லாஹ்வின் உதவியால் எதிரிகள் காலை விடிவதற்குள் தங்களின் இடங்களைக் காலி செய்து கொண்டு ஓடி விட்டனர். அவர்கள் இப்போரின் மூலம் தாங்கள் விரும்பிய எந்த நோக்கத்தையும் அடைய முடியவில்லை. அல்லாஹ் நபியவர்களைப் பாதுகாத்தான். அவனது வாக்கை உண்மைப் படுத்தினான். தனது இஸ்லாமியப் படைக்குக் கண்ணியத்தையும் வெற்றியையும் வழங்கினான். தனது அடியாருக்கு உதவி செய்தான். எதிரி ராணுவங்களை அவனே தோற்கடித்தான். நபியவர்கள் தங்களது படையுடன் மதீனா திரும்பினார்கள்.

இந்த அகழ் யுத்தம் ஹிஜ்ரி 5, ஷவ்வால் மாதம் நடைபெற்றது. இதுவே மிகச் சரியான கூற்றாகும். எதிரிகள் நபி (ஸல்) அவர்களையும் முஸ்லிம்களையும் முற்றுகையிட்ட காலம் ஏறக்குறைய ஒரு மாதமாகும். பல மூலநூல்களின் கருத்துகளை ஒருங்கிணைத்துப் பார்க்கும் போது இப்போர் ஷவ்வால் மாதம் தொடங்கி துல்கஅதா மாதத்தில் முடிவுற்றது எனத் தெரிய வருகிறது. அறிஞர் இப்னு ஸஅது, “நபியவர்கள் அகழ் போர் முடிந்து துல்கஅதா பிறை 23 புதன்கிழமை மதீனா திரும்பினார்கள்” என்று கூறுகிறார்:

இந்த அகழ்ப்போரில் பெரும் நஷ்டங்கள் ஏதும் ஏற்படவில்லை. இதில் கடுமையான மோதலும், சேதங்களும் ஏற்படவில்லை. இருப்பினும் இது இஸ்லாமிய வரலாற்றில் மிக முக்கியமான போராக விளங்குகிறது. இப்போரின் இறுதியில் இணைவைப்பவர்கள் நிராசையாகி, தாக்குப்பிடிக்க முடியாமல் திரும்பி விட்டனர். இணைவைப்பவர்கள் எவ்வளவு பெரிய பலமுள்ள ராணுவங்களை ஒன்று திரட்டி மதீனாவில் வளர்ந்து வரும் இந்த சிறிய இஸ்லாமிய ராணுவத்தை அழித்துவிட முயன்றாலும் அது ஒருக்காலும் முடியாது என்பது இப்போரிலிருுந்து நன்கு தெரியவந்தது. இம்முறை இப்போருக்கு அரபிகள் ஒன்றுதிரட்டி வந்த படைகளைப் போல் இனி ஒருக்காலும் அவர்களால் ஒன்று திரட்டிவர முடியாது. ஆகவேதான் எதிரிகளை அல்லாஹ் வெளியேற்றிய பின் “இனிமேல் நாமே அவர்கள் மீது போர் தொடுப்போம். அவர்கள் நம்மீது போர் தொடுக்க முடியாது. நாமே அவர்களிடம் செல்வோம்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

### பனூ குறைளா போர்

பனூ குறைளா என்று அறியப்படும் இப்போர் ஹிஜ்ரி 5, துல்கஅதா மாதத்தில் நடைபெற்றது.

அகழ்ப்போர் முடிந்து நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்குத் திரும்பினார்கள். அன்று அவர்கள் தனது மனைவி உம்மு ஸலமாவின் வீட்டில் மதிய வேளையில் குளித்துக் கொண்டிருந்த போது வானவர் ஜிப்ரீல் (அலை) நபியவர்களை சந்தித்து “என்ன நீங்கள் உங்களது ஆயுதத்தைக் கீழே வைத்து விட்டீர்களா? நிச்சயமாக வானவர்கள் தங்களின் ஆயுதங்களை இன்னும் கீழே வைக்கவில்லை. நான் இப்போதுதான் எதிரிகளை விரட்டிவிட்டு வருகிறேன். நீங்கள் உங்கள் தோழர்களுடன் குறைளாவினர்களை நோக்கிப் புறப்படுங்கள். உங்களுக்கு முன் நான் சென்று அவர்களுடைய கோட்டைகளை

அசைக்கிறேன். அவர்களின் உள்ளங்களில் பயத்தை ஏற்படுத்துகிறேன்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து வானவர்களின் ஒரு கூட்டத்துடன் புறப்பட்டார்.

நபி (ஸல்) அவர்கள் ஒருவரை அனுப்பி மக்களுக்கு மத்தியில் அறிவிக்கக் கூறினார்கள்:

''யார் கட்டளையைக் கேட்டு கீழ்ப்படிந்து நடக்கிறாரோ அவர் அஸ்ர் தொழுகையை குரைளாவனரிடம் சென்றுதான் தொழ வேண்டும்'' (அதாவது உடனடியாக இங்கிருந்து குரைளாவினரை நோக்கி புறப்பட வேண்டும்) என்று கூறினார்கள். மதீனாவில் அப்துல்லாஹ் இப்னு உம்மு மக்தூமை பொறுப்பாளராக நியமித்துவிட்டு நபியவர்கள் புறப்பட்டார்கள். போர்க் கொடியை அலீயிடம் வழங்கி அவரை அவசரமாக முன்கூட்டி அனுப்பி வைத்தார்கள். அலீ (ரழி) படையுடன் குரைழாவினன் கோட்டையைச் சென்றடைந்தார்கள். அங்கிருந்த யூதர்கள், அலீ (ரழி) காதில் படும்படியாக நபி (ஸல்) அவர்களைக் கடுமையாக ஏசினர்.

நபி (ஸல்) அவர்கள் முஹாஜிர்கள் மற்றும் அன்சாரிகளின் சில குறிப்பிட்ட நபர்களுடன் மதீனாவிலிருந்து புறப்பட்டு குரைளாவினன் ஒரு கிணற்றுக்கு அருகில் வந்து இறங்கினார்கள். அக்கிணற்றுக்கு 'அன்னா கிணறு' என்று கூறப்படும்.

மீதமுள்ள முஸ்லிம்கள் உடனடியாக குரைளாவினரை நோக்கிப் புறப்பட்டார்கள். வழியில் அஸ்ர் தொழுகையின் நேரம் வந்தவுடன்: ''அஸ்ர் தொழுகையை நேரம் தவறுவதற்குள் வழியிலேயே தொழுது விடுவதா அல்லது நேரம் தவறினாலும் குரைளா சென்று தொழுவதா'' என அவர்களுக்கு மத்தியில் இரு கருத்துகள் நிலவின. மதீனாவிலேயே அஸ்ர் தொழுது விட்டு புறப்படலாமென யாரும் தாமதித்துவிடக் கூடாது என்ற கருத்தில்தான் நபி (ஸல்) அவர்கள் குரைளா சென்று அஸ்ர் தொழ வேண்டுமென கூறினார்கள். தொழுகை நேரத்தைத் தவறவிடுவது நபியவர்களின் நோக்கமல்ல என்று கூறிவிட்டு சிலர் வழியிலேயே அஸ்ர் தொழுகையை நிறைவேற்றினர். இவர்களைத் தவிர மற்றவர்கள் நபியவர்கள் கூறியபடி குரைளா சென்று அஸ்ர் தொழுகையை நிறைவேற்றினர். அப்போது மக்ரிப் நேரமாக இருந்தது. இன்னும் தாமதமாக வந்து சேர்ந்த சிலர் இஷா நேரத்தில் அஸ்ர் தொழுதனர்.

நபி (ஸல்) அவர்கள் இரு கூட்டத்தார்களின் செயல்களைப் பற்றி ஏதும் கடிந்துகொள்ள வில்லை. இவ்வாறு இஸ்லாமியப் படை ஒன்றன்பின் ஒன்றாக மதீனாவிலிருந்து புறப்பட்டு நபியவர்கள் தங்கியிருந்த இடத்தை வந்தடைந்தது. இஸ்லாமியப் படையில் மொத்தம் மூவாயிரம் வீரர்களும், முப்பது குதிரைகளும் இருந்தன. குரைளாவினன் கோட்டைகளைச் சுற்றி வளைத்து முற்றுகையிட்டனர். முஸ்லிம்களின் முற்றுகை கடுமையாக இருந்ததைக் கண்ட குரைளாவினன் தலைவன் கஅப் இப்னு அஸது தனது மக்களிடம் மூன்று கருத்துகளை முன் வைத்தான்.

1) அனைவரும் முஸ்லிமாகி முஹம்மதுடைய மார்க்கத்தில் சேர்வது. அப்படி சேர்ந்தால் நாம் நமது உயிர், பொருள், பிள்ளைகள், பெண்கள் அனைவரையும் பாதுகாத்துக் கொள்ளலாம். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முஹம்மது அல்லாஹ்வின் புறத்திலிருந்து அனுப்பப்பட்ட தூதர் என்பதும், அவரைப் பற்றி தவ்றாத்தில் கூறப்பட்டிருக்கிறது என்பதும் உங்களுக்கு தெள்ளத் தெளிவாக தெரியும்.

2) நமது பிள்ளைகளையும் பெண்களையும் நாமே நமது கரத்தால் கொன்றுவிடவேண்டும். பிறகு வாளை உருவி முஹம்மதுடன் போர் புரிவோம் நாம் அவர்களை வெற்றி கொள்வோம் அல்லது நாம் அனைவரும் மரணமாகும் வரை அவருடன் போர் புரிவோம்.

3) சனிக்கிழமை வருவதை எதிர்பார்ப்போம். அன்று நாம் போர் புரியமாட்டோம் என்று முஸ்லிம்கள் எண்ணிக் கொண்டிருப்பார்கள். அந்நேரத்தில் அவர்களைத் திடீரெனத் தாக்குவோம்.

இவ்வாறு மூன்று கருத்துகளை கஅப் முன்வைத்தும் அதில் எந்த ஒன்றையும் யூதர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. இதனால் கஅப் கடும் கோபமடைந்து, “உங்களில் ஒருவர் கூட வாழ்நாளில் ஒரு நாளும் உறுதியுடன் வாழந்ததில்லை” என்று கடுகடுத்தார். குறைளாவினர் இவ்வாறு தங்களது தலைவர் கஅபுடைய எந்த ஆலோசனையையும் ஏற்றுக் கொள்ளவில்லை. இறுதியாக நபியவர்கள் கூறும் தீர்ப்பையே ஏற்றுக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாயினர்.

இருப்பினும் சரணடைவதற்கு முன்னால் நபி (ஸல்) அவர்கள் தங்களுக்கு என்ன தீர்ப்பளிப்பார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள தங்களுக்கு நண்பர்களாக இருந்த சில முஸ்லிம்களுடன் தொடர்பு கொண்டு அறிய விரும்பினர். ஆகவே, நபியவர்களிடம் தூதனுப்பி அபூலுபாபாவை தங்களிடம் அனுப்பும்படி கேட்டுக் கொண்டனர். அபூலுபாபா யூதர்களின் நட்புரீதியான ஒப்பந்தக்காரராக இருந்தார். இவருடைய பொருட்களும், பிள்ளைகளும் யூதர்களின் பகுதியில் இருந்தன. அபூலுபாபா யூதர்களைச் சந்தித்தவுடன் அவரிடம் பெண்களும், சிறுவர்களும் எழுந்து வந்து அழுதனர். இதைப் பார்த்து அவரது உள்ளம் இளகிவிட்டது. அவர்கள் “அபூலுபாபாவே! நாங்கள் நபியவர்களின் தீர்ப்பை ஏற்றுக் கொண்டால் நபியவர்கள் எங்களுக்கு என்ன தீர்ப்பளிப்பார்கள்?” என்றனர். அப்போது அபூலுபாபா “தனது கழுத்தைச் சீவுவது போல் செய்து காட்டி, அந்தத் தீர்ப்பு கொலை!” என்று சூசகமாகக் கூறினார்.

நபி (ஸல்) அவர்களின் இந்த இரகசிய முடிவை வெளிப்படுத்தி தவறு செய்து விட்டோம் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மோசடி செய்து விட்டோம் என்று அபூலுபாபா உணர்ந்தார் வருந்தினார். எனவே, நபியவர்களைச் சந்திக்கச் செல்லாமல் மஸ்ஜிதுந் நபவிக்குச் சென்று தன்னை ஒரு தூணுடன் கயிற்றால் பிணைத்துக் கொண்டார். நபியவர்கள்தான் தன்னை அவிழ்த்துவிட வேண்டும், இனி ஒருக்காலும் குறைளாவினன் பூமிக்கு செல்லவே மாட்டேன் என்று சத்தியம் செய்து கொண்டார். நபியவர்கள் அபூலுபாபாவின் வருகையை எதிர்பார்த்திருந்தார்கள். இவன் செய்தி நபியவர்களுக்கு கிடைத்தவுடன் “அபூலுபாபா என்னிடம் நேரடியாக வந்து விஷயத்தை கூறியிருந்தால் நான் அவருக்காக அல்லாஹ்விடம் மன்னிப்பு கேட்டிருப்பேன். ஆனால், எப்போது அவர் அவருடைய விருப்பப்படி நடந்து கொண்டாரோ அல்லாஹ் அவரது பிழை பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் வரை நான் அவரை அவிழ்த்துவிட முடியாது” என்றார்கள்.

அபூலுபாபா தெளிவாகக் கூறிய பின்பும் வேறு வழியின்றி நபி (ஸல்) அவர்களின் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு யூதர்கள் வந்தனர். யூதர்கள் பெருமளவு உணவுகளையும் தேவையான பொருட்களையும் சேகரித்து வைத்திருந்தனர். கிணறுகளும் பலமிக்க கோட்டைகளும் அவர்களிடம் இருந்தன. ஆனால், முஸ்லிம்களோ யூதர்களின் கோட்டைக்கு வெளியே திறந்த வெளியில் கடுங்குளிரால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தனர். உணவுப் பற்றாக்குறையால் கடுமையானப் பசிக்கு ஆளாகி, துன்பத்தில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தனர். போரில் தொடர்ந்து ஈடுபட்டிருந்ததால் அதிகமான களைப்புற்றிருந்தனர். ஆக, இந்த சூழ்நிலையில் முஸ்லிம்களின் மீது முற்றுகையை நீடித்தாலும் அதைத் தாங்கும் சக்தி யூதர்களிடம் இருந்தும் அவர்கள் அதற்குத் துணியவில்லை. அவர்களுடைய உள்ளத்தில் அல்லாஹ் பயத்தை ஏற்படுத்தினான். அவர்கள் நிலைகுலைந்தனர். அலீ இப்னு அபூதாலிப், ஜுபைர் இப்னு அவ்வாம் (ரழி) இருவரும் முஸ்லிம்களுக்கு முன் நின்று வீரமூட்டினர். அலீ (ரழி) முஸ்லிம்களைப் பார்த்து “அல்லாஹ்வை நம்பிக்கை கொண்ட படைகளே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஹம்ஜாவுக்கு ஏற்பட்டதை நானும்

அனுபவிப்பேன் அல்லது அவர்களது கோட்டையை வெற்றி கொள்வேன்'' என்று சபதமிட்டார்கள்.

முஸ்லிம்களின் உணர்வுகளையும் வீரத்தையும் ஆவேசத்தையும் யூதர்கள் புரிந்துகொண்டனர். இனியும் காலதாமதம் செய்வது உசிதமல்ல என்பதை உணர்ந்தனர். ஆகையால் நபி (ஸல்) அவர்களின் தீர்ப்பை ஏற்றுக் கொள்வதற்கு தீவிரம் காட்டினர். தங்களது கோட்டைகளிலிருந்து வெளியேறி நபியவர்களுக்கு முன் சரணடைந்தனர். நபியவர்கள் ஆண்களைக் கைது செய்யுமாறு கட்டளையிட்டார்கள். முஹம்மது இப்னு மஸ்லமாவின் தலைமையின் கீழ் ஆண்கள் அனைவரும் விலங்கிடப்பட்டனர். பெண்களும் சிறுவர்களும் ஆண்களிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டு ஓரமான இடத்தில் அமர்த்தி வைக்கப்பட்டனர். அப்போது அவ்ஸ் கூட்டத்தினர் நபியவர்களை சந்தித்து ''அல்லாஹ்வின் தூதரே! கைனுகா இன யூதர்கள் விஷயத்தில் நீங்கள் எப்படி நடந்து கொண்டீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும். அவர்கள் எங்கள் சகோதரர்களாகிய கஸ்ரஜ் இனத்தவன் நண்பர்களாவர். இந்த குரைளா இன யூதர்கள் (அவ்ஸ்களாகிய) எங்களிடம் உடன்படிக்கை செய்து கொண்டவர்கள். நீங்கள் இவர்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டுமென நாங்கள் விரும்புகிறோம்'' என்றார்கள். அதற்கு நபியவர்கள் ''உங்கள் இனத்தைச் சேர்ந்த ஒருவர் இவர்கள் விஷயத்தில் தீர்ப்பளித்தால் அதை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா?'' எனக் கேட்டார்கள். அதற்கு அவர்கள் ''நாங்கள் அதை ஏற்றுக் கொள்கிறோம்'' என்றனர். நபியவர்கள் ''இவர்கள் குறித்து தீர்ப்பளிக்கும் உரிமையை ஸஅது இப்னு முஆதிடம் ஒப்படைக்கிறேன்'' என்றவுடன் அவ்ஸ் கூட்டத்தினர் அதை முழுமையாக ஏற்றுக் கொண்டனர்.

நபி (ஸல்) அவர்கள் ஸஅது இப்னு முஆத் (ரழி) அவர்களை அழைத்து வர ஆளனுப்பினார்கள். ஸஅது இப்னு முஆது (ரழி) அகழ்ப்போல் காலில் அம்பு தைத்துவிட்டதின் காரணமாக நபியவர்களுடன் வர முடியாமல் மதீனாவில் தங்கிவிட்டார்கள். அவர்கள் ஒரு கழுதையில் நபியவர்களிடம் அழைத்து வரப்பட்டார்கள். அவர் வந்து கொண்டிருக்கும் போதே அங்கிருந்தவர்கள் அவரைச் சுற்றி ''ஸஅதே! உம்மிடம் ஒப்பந்தம் செய்திருந்த இந்த யூதர்கள் விஷயத்தில் அழகிய தீர்ப்பைக் கூறுவாயாக! அவர்களுக்கு உதவி புரிவாயாக! நீ அவர்களுக்கு ஏற்ற தீர்ப்பு வழங்க வேண்டும் என்பதற்காகத்தான் நபியவர்கள் உன்னை தீர்ப்பளிக்கும்படி அழைத்திருக்கிறார்கள்'' என்று கூறினார்கள். ஆனால், ஸஅது (ரழி) அவர்களின் எந்த பேச்சுக்கும் பதிலளிக்கவில்லை. குழுமியிருந்த மக்கள் ஸஅதை மிக அதிகமாகத் தொந்தரவு செய்தவுடன் ஸஅது (ரழி) ''இப்போதுதான் அல்லாஹ்வின் விஷயத்தில் பழிப்பவர்களின் பழிப்பை பொருட் படுத்தாமல் இருக்க இந்த ஸஅதுக்கு நேரம் வந்துள்ளது'' என்றார். ஸஅத் (ரழி) அவர்களின் இந்த துணிவுமிக்க சொல்லால் குழுமியிருந்த மக்கள் யூதர்களின் விஷயத்தில் ஸஅது (ரழி) அவர்களின் முடிவு என்னவாக இருக்கும் என்பதைப் புரிந்துகொண்டனர். அதாவது, யூதர்களை கொல்ல வேண்டும் என்ற உறுதியில் ஸஅது (ரழி) இருக்கிறார் என்பது அவரது பேச்சிலிருந்து தெரிய வந்தது. இதனால் ஸஅது (ரழி) தங்களது தீர்ப்பை வெளிப்படையாக கூறுவதற்கு முன்பாகவே யூதர்கள் கொல்லப்படப் போகிறார்கள் என்ற செய்தியை மக்கள் மதீனாவாசிகளுக்குத் தெரிவித்தனர்.

ஸஅது (ரழி), நபி (ஸல்) அவர்கள் இருக்கும் இடத்தை அடைந்த போது நபியவர்கள் தங்களது தோழர்களிடம் ''உங்களது தலைவரை எழுந்து சென்று அழைத்து வாருங்கள்'' என்று கூறினார்கள். நபித்தோழர்கள் ஸஅதைக் கழுதையிலிருந்து இறக்கி அழைத்து வந்தவுடன் ''ஸஅதே! இந்த யூதர்கள் உமது தீர்ப்பை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கின்றனர்'' என்றார்கள். அப்போது ஸஅது (ரழி) ''எனது தீர்ப்பு அவர்கள் (யூதர்கள்) மீது செல்லுபடி ஆகுமா?'' என்று கேட்டார்கள். அதற்கு மற்றவர்கள் ''ஆம்! செல்லுபடியாகும்'' என்றனர். பிறகு ஸஅது (ரழி) ''முஸ்லிம்களின் மீது எனது தீர்ப்பு

செல்லுபடியாகுமா?'' என்று கேட்டார்கள். மக்கள் ''ஆம்!'' என்றனர். அப்போது ''இங்குள்ள மற்றவர் மீதும் - அதாவது தனது முகத்தால் நபியவர்களை சுட்டிக்காட்டி - எனது தீர்ப்பு செல்லுபடியாகுமா?'' என்று கேட்டார்கள். அப்போது நபியவர்கள் ''ஆம்! நானும் உங்களுடைய தீர்ப்பை ஏற்றுக் கொள்வேன்'' என்றார்கள். இதற்குப் பின் ஸஅது (ரழி) அந்த யூதர்கள் விஷயத்தில் தீர்ப்பு கூறினார்கள்:

''ஆண்களைக் கொன்றுவிட வேண்டும். சிறுவர்களையும் பெண்களையும் கைதிகளாக்க வேண்டும். இவர்களின் சொத்துகளையும் பொருட்களையும் பங்கு வைத்துவிட வேண்டும். இதுதான் எனது தீர்ப்பு'' என ஸஅது (ரழி) கூறினார். இத்தீர்ப்பைக் கேட்ட நபியவர்கள் ''ஏழு வானங்களுக்கு மேலிருக்கும் அல்லாஹ்வின் தீர்ப்பை நீங்கள் இவர்கள் விஷயத்தில் வழங்கி விட்டீர்கள்'' என்று கூறினார்கள்.

உண்மையில் ஸஅது (ரழி) கூறிய தீர்ப்பு மிக நீதமானதே! முற்றிலும் நேர்மையானதே! ஏனெனில், குரைளா இன யூதர்கள் தங்களது உடன்படிக்கையை முறித்தது மட்டுமல்லாமல் முஸ்லிம்களை அழிக்க வேண்டுமென்பதற்காக 1500 வாட்களையும், 2000 ஈட்டிகளையும், 300 கவச ஆடைகளையும், 500 இரும்புக் கேடயங்களையும், ஒரு தோலினாலான கேடயத்தையும் சேகரித்து வைத்திருந்தனர். இவற்றை முஸ்லிம்கள் அவர்களுடைய இல்லங்களை வெற்றி கொண்ட பின் கைப்பற்றினர்.

இத்தீர்ப்புக்குப் பின் நபி (ஸல்) அவர்கள் நஜ்ஜார் கிளையைச் சேர்ந்த பின்துல் ஹாரிஸ் என்ற பெண்ணின் வீட்டில் யூதர்களை அடைத்து வைக்க கட்டளையிட்டார்கள். அதற்குப் பின் அவர்களுக்காக மதீனாவின் கடைத் தெருவில் பெரும் அகழ் தோண்டப்பட்டது. பின்பு ஒவ்வொருவராக அழைத்து வரப்பட்டு அக்குழியில் வைத்து தலை வெட்டப்பட்டது. பிறகு அதிலேயே புதைக்கப்பட்டனர். இவ்வாறு ஒவ்வொருவராக அழைத்துச் செல்லப்படும்போது அடைபட்டிருந்த சிலர் தங்களது தலைவன் கஅபிடம் ''தலைவரே! எங்களை அழைத்துச் சென்று இவர்கள் என்ன செய்கின்றார்கள்!'' என்றனர். அதற்கு கஅப் ''என்ன! உங்களுக்கு எந்நேரத்திலும் எதுவும் விளங்காதா? அழைப்பவர் வந்து அழைத்துக் கொண்டே இருக்கின்றார். அழைத்துச் செல்லப்பட்டவர் திரும்பி வருவதில்லை. இப்போது கூட புரியவில்லையா? அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அது கொலைதான் என்பது உங்களுக்கு விளங்கவில்லையா?'' என்றார். அவர்கள் 600லிருந்து 700 பேர் வரை இருந்தனர். அனைவரும் கொல்லப்பட்டு புதைக்கப்பட்டனர்.

இவ்வாறு மோசடி மற்றும் வஞ்சக குணமுள்ள விஷப் பாம்புகள் முற்றிலும் அழித்தொழிக்கப்பட்டன. இவர்கள் முஸ்லிம்களுடனான ஒப்பந்தங்களை முறித்தது மட்டுமல்லாமல் முஸ்லிம்களை அழிப்பதற்காக குவிந்த ராணுவங்களுக்கும் உதவியும் செய்தனர். அந்நேரம் முஸ்லிம்களுக்கு மிகச் சிரமமான நேரமாக இருந்தது. ஆகவே, யூதர்கள் இந்த செயல்பாடுகளின் காரணமாக மாபெரும் குற்றவாளிகளாவர். எனவே, அவர்களை முற்றிலும் கொன்று விடுவதுதான் சரியான தீர்ப்பாக இருந்தது.

இந்த குரைளா யூதர்களுடன் நளீர் யூதர்களைச் சேர்ந்த கொடிய ஷைத்தான் ஹய் இப்னு அக்தப் என்பவனும் கொலை செய்யப்பட்டான். இவன் நமது அன்னை ஸஃபிய்யா (ரழி) அவர்களின் தந்தையாவான். இவன்தான் இப்போரின் போது முஸ்லிம்களுடனான ஒப்பந்தத்தை முறித்துக் கொள்ளும்படி கஅப் இப்னு அஸ்அதைத் தூண்டினான். இதன் விவரத்தை முன்பே நாம் கூறியிருக்கிறோம். குறைஷி மற்றும் கத்ஃபான் இனத்தவர்கள் போரிலிருந்து திரும்பிச் சென்ற பின் ஹய் இப்னு அக்தப், தான் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவதற்காக குரைளா யூதர்களின் கோட்டைக்குள் புகுந்து கொண்டான். மற்றவர்களுடன் இவனும் கைது செய்யப்பட்டு, கைகள் கழுத்துடன் சேர்த்து கட்டப்பட்ட நிலையில் அழைத்து வரப்பட்டான். தன்னை கொன்றதற்குப் பின் தனது ஆடைகளை முஸ்லிம்கள் எடுத்துக் கொள்ளக் கூடாது என்பதற்காக அனைத்து பக்கங்களிலும்

விரல்களின் நுனி அளவிற்கு கிழித்து ஒட்டையிட்டுக் கொண்டான். நபியவர்களுக்கு அருகில் இவனை அழைத்து வந்த போது அவன் நபியவர்களைப் பார்த்து "உன்னைப் பகைத்துப் கொண்டதற்காக நான் என்னை இகழவில்லை. இருப்பினும் அல்லாஹ்வுடன் மோதியவன் தோற்றுவிடுவான் என்பது எனக்குத் தெரியும்" என்று கூறிவிட்டு "மக்களே! அல்லாஹ்வின் கட்டளையைப் பற்றி நான் கவலைப்படவில்லை. இதுபோன்ற சோதனைகளையும் போர்களையும் அல்லாஹ் இஸ்ரவேலர்கள் (யூதர்கள்) மீது விதித்து விட்டான்" என்று கூறினான். பிறகு அவனது தலை வெட்டப்பட்டது.

கல்லாத் இப்னு சுவைத் (ரழி) என்ற நபித்தோழரை ஒரு யூதப் பெண் மாவாட்டும் திருகையால் கொன்று விட்டாள். எனவே, அப்பெண்ணையும் பழிக்குப் பழி கொல்லப்பட்டது.

முடி முளைத்த அனைவரையும் கொன்று, முடி முளைக்காதவர்களை விட்டு விடும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். முடி முளைக்காதவர்களில் 'அத்தியா' என்ற ஒரு சிறுவர் இருந்தார். பிற்காலத்தில் அவர் இஸ்லாமை ஏற்று நபியவர்களின் தோழராக மாறினார். (முடி முளைத்தவர்கள் என்பது (மேஜர்) பருவமடைந்தவர்களையும் முடி முளைக்காதவர் என்பது (மைனர்) பருவமடையாதவர்களையும் குறிக்கும்).

ஸாபித் இப்னு கைஸ் (ரழி) என்ற நபித்தோழர் ஜுபைர் இப்னு பாத்தா என்ற யூதரையும் அவரது குடும்பத்தார்கள் மற்றும் பொருட்களையும் தனக்கு தந்துவிடுமாறு நபியவர்களிடம் கோரினார். நபியவர்களும் அவர் கேட்டவாறே கொடுத்து விட்டார்கள். நபித்தோழர் ஸாபித்துக்கு இதற்கு முன் இந்த யூதர் உதவி புரிந்திருந்தார். ஸாபித் அவரிடம் "உன்னையும் உமது பொருளையும், உமது குடும்பத்தார்களையும் நபியவர்கள் எனக்கு அன்பளிப்பாக கொடுத்து விட்டார்கள். நான் அவற்றைத் திரும்ப உனக்கே கொடுத்து விடுகிறேன்" என்றார். ஆனால், அந்த ஜுபைர் இப்னு பாத்தா என்ற யூதன் "ஸாபித்தே நான் உனக்கு செய்த உதவியின் பொருட்டால் கேட்கிறேன். என்னைக் கொன்று என்னுடைய சகோதரர்களுடன் சேர்த்துவிடு" என்றான். ஸாபித் அவனது கழுத்தைச் சீவி அவனது நண்பர்களுடனேயே சேர்த்து விட்டு, அவனது மகன் அப்துர் ரஹ்மான் இப்னு ஜுபைரை உயிரோடு விட்டுவிட்டார். இவர் பிறகு இஸ்லாமை ஏற்று நபியவர்களின் தோழராகி விட்டார்.

உம்முல் முன்திர் ஸல்மா பின்த் கைஸ் (ரழி) என்ற ஸஹாபிப் பெண்மணி 'ஃபாஆ இப்னு ஸம்வால்' என்ற யூதரைத் தனக்கு அன்பளிப்பாகக் கொடுக்கும்படி நபியவர்களிடம் கேட்டார். நபியவர்கள் கொடுத்துவிடவே அப்பெண்மணி அவரை உயிரோடு விட்டுவிட்டார். அந்த யூதர் இஸ்லாமை ஏற்று நபியவர்களின் தோழராகி விட்டார்.

அன்றிரவு கோட்டையிலிருந்து கீழே இறங்குவதற்கு முன் சிலர் இஸ்லாமை ஏற்றனர். எனவே, அவர்களைக் கைது செய்யவில்லை. அவர்களது பொருட்களும் குடும்பங்களும் பாதுகாக்கப்பட்டன.

அம்ர் இப்னு ஸஅதி என்ற ஒரு யூதர் இருந்தார். நபியவர்களுக்குத் தனது இனத்தவர் செய்த மோசடியில் அவர் கூட்டு சேரவில்லை. அன்றிரவு அவர் கோட்டையில் இருந்து வெளியேறியதை பாதுகாப்புப் படையின் தளபதியாக இருந்த முஹம்மது இப்னு மஸ்லமா பார்த்தார். அவரைப் பற்றி முஹம்மது இப்னு மஸ்லமாவிற்கு தெரிய வரவே அவர் தப்பித்துச் செல்வதற்கு வழிவிட்டார். ஆனால் அவர் எங்கு சென்றார்? என்ன ஆனார்? என்ற விவரம் வரலாற்றில் அறியப்படவில்லை.

குரைளாவினன் பொருட்களில் ஐந்தில் ஒன்றை நபி (ஸல்) அவர்கள் ஒதுக்கிவிட்டு மீதத்தை தங்களின் தோழர்களுக்குப் பங்கிட்டார்கள். அதாவது, குதிரை வீரர்களுக்கு மூன்று பங்கும் (ஒரு பங்கு அவருக்கும் மற்ற இரு பங்கு குதிரைக்கும்) காலாட்படையைச்

சேர்ந்தவர்களுக்கு ஒரு பங்கும் என நபியவர்கள் பங்கு வைத்தார்கள். ஸஅது இப்னு ஜைது (ரழி) என்ற அன்சாரி தோழன் தலைமையில் கைதிகளை விற்று வர ஒரு குழுவை நபியவர்கள் நஜ்துக்கு அனுப்பினார்கள். அவர்கள் அங்கு சென்று கைதிகளை விற்று குதிரைகளையும் ஆயுதங்களையும் வாங்கி வந்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கைதியாக இருந்த பெண்களில் தனக்கென ரைஹானா பின்த் அம்ர் இப்னு குனாஃபா என்பவரை எடுத்துக் கொண்டார்கள். இவர் நபியவர்களின் வாழ்நாள் வரை அவர்களுடன் இருந்தார் என இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார். (இப்னு ஹிஷாம்)

ஆனால், வேறு சிலர் கூறுவதாவது: நபி (ஸல்) இவரை விடுதலை செய்து, பின்பு ஹிஜ்ரி 6ல் திருமணம் செய்து கொண்டார்கள். நபியவர்கள் இறுதி ஹஜ்ஜிலிருந்து திரும்பி வரும்போது இவர் இறந்துவிட்டார். நபியவர்கள் இவரை பகீஃ மண்ணறையில் அடக்கம் செய்தார்கள். (தல்கீஹ்)

குரைளாவின் பிரச்சனை முடிந்தவுடன் ஸஅது இப்னு முஆத் (ரழி) தன் விஷயத்தில் செய்த வேண்டுதலை அல்லாஹ் அங்கீகத்தான். ஸஅதின் வேண்டுதல் என்ன என்று இதற்கு முன் நாம் கூறியிருக்கிறோம். நபி (ஸல்) அவர்கள் இவருக்கென பள்ளிவாசலில் ஒரு கூடாரத்தை அமைத்திருந்தார்கள். நபியவர்கள் அவரை அங்கு தங்க வைத்து அடிக்கடி நலம் விசாரித்து வந்தார்கள். சில நாட்களில் அவரது காயம் வீங்கி உடைந்தது. அதிலிருந்து வழிந்த இரத்தம் கிஃபார் கிளையினருக்காக பள்ளியில் கட்டப்பட்டிருந்த கூடாரத்தில் பரவியது. அதைப் பார்த்து அக்கூடாரத்தில் இருந்தவர்கள் ‘‘இது என்ன! உங்கள் கூடாரத்திலிருந்து வருகிறதே!’’ என்று கேட்டனர். அங்கு சென்று பார்க்கையில் ஸஅது (ரழி) அவர்களின் காயம் உடைந்து இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. இறுதியில் அவர்கள் அக்காயத்தினாலேயே இறந்து விட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ஸஅது இப்னு முஆத் (ரழி) அவர்களின் மரணத்திற்கு அல்லாஹ்வின் அர்ஷே’’ குலுங்கியது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

ஸஅது இப்னு முஆதின் ஜனாஸாவை (பிரேதத்தைச்) சுமந்து சென்றபோது அது மிக இலேசாக இருந்தது. நயவஞ்சகர்கள் ‘‘என்ன இவரது ஜனாஸா இவ்வளவு இலேசாக உள்ளதே?’’ என்றனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள் ‘‘நிச்சயமாக வானவர்கள் அதைச் சுமந்து செல்கிறார்கள்’’ என்றார்கள். (ஸுனனுத் திர்மிதி)

குரைளாவினரை முற்றுகையிட்டிருந்த போது கல்லாத் இப்னு ஸுவைத் (ரழி) என்ற நபித்தோழர் யூதப் பெண் ஒருத்தியால் கொல்லப்பட்டார். மேலும், உக்காஷாவின் சகோதரர் அபூ ஸினான் இப்னு மிஹ்ஸன் (ரழி) என்பவரும் முற்றுகையின் காலத்தில் இறந்தார்கள்.

அபூ லுபாபா ஆறு இரவுகள் தூணிலேயே தன்னைக் கட்டிக் கொண்டிருந்தார். ஒவ்வொரு தொழுகையின் நேரத்திலும் அவரது மனைவி அவரை அவிழ்த்து விடுவார். அவர் தொழுது முடித்தவுடன் மீண்டும் தன்னைத் தூணில் கட்டிக் கொள்வார். நபி (ஸல்) அவர்கள் ஓர் இரவு உம்மு ஸலமாவின் வீட்டில் இருந்த போது அதிகாலை ஸஹர் நேரத்தில் அபூலுபாபாவின் பாவமன்னிப்பு தொடர்பான வசனம் இறங்கியது.

உம்மு ஸலமா (ரழி) தனது அறையின் வாசலில் நின்றவராக ‘‘அபூ லுபாபாவே! நீங்கள் நற்செய்தி பெற்றுக் கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களை மன்னித்து விட்டான்’’ என்று கூறினார். இச்செய்தியைக் கேட்ட மக்கள் அவரை அவிழ்த்து விடுவதற்காக அவரை நோக்கி விரைந்தனர். ஆனால், நபி (ஸல்) அவர்களைத் தவிர தன்னை வேறு யாரும் அவிழ்க்கக் கூடாது என்று மறுத்துவிட்டதால் நபியவர்கள் சுபுஹு தொழுகைக்கு வந்த போது அவரை அவிழ்த்து விட்டார்கள்.

இந்தப் போர் ஹிஜ்ரி 5, துல்கஅதா மாதத்தில் நடைபெற்றது. முற்றுகை மொத்தம் இருபத்தைந்து இரவுகள் நீடித்தது.(ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

அல்லாஹுத் தஆலா அகழ் போர் தொடர்பாகவும், குறைளா போர் தொடர்பாகவும் 'அஹ்ஸாப்' எனும் அத்தியாத்தில் பல வசனங்களை இறக்கினான். அவ்வசனங்களில் இச்சம்பவங்கள் தொடர்பான சில முக்கிய நிகழ்வுகளை அல்லாஹ் குறிப்பிட்டு கூறியிருக்கிறான். மேலும், இறைநம்பிக்கையாளர்கள் மற்றும் நயவஞ்சகர்களின் நிலைமைகளையும், முஸ்லிம்களை எதிர்க்க வந்த இராணுவங்கள் தோற்றுப்போனதையும், மோசடி செய்யும் யூதர்களின் நிலைமை என்னவானது என்பதையும் அதில் தெளிவாக அல்லாஹ் குறிப்பிட்டிருக்கின்றான்.

**அடுத்தகட்ட ராணுவ நடவடிக்கை**

ஸல்லாம் இப்னு அபுல்ஹுகைக்... (ஹிஜ் 5, துல்கஅதா)

இவனது புனைப் பெயர் 'அபூராஃபி' எனப்படும். யூத இனத்தைச் சேர்ந்த இவன் மிகப் பெரிய கொடியவனாக இருந்தான். முஸ்லிம்களுக்கு எதிராக அகழ் போரில் படைகளை ஒன்று திரட்டியவர்களில் இவனும் ஒருவன். இவன் போரின் போது முஸ்லிம்களின் எதிரிகளுக்குப் பெருமளவில் பொருளுதவி செய்தான். (ஃபத்ஹுல் பாரி)

இவன் நபி (ஸல்) அவர்களுக்குக் கடும் நோவினை தந்து வந்தான். குறைளா யூதர்களின் பிரச்சனையை முடித்த பின் அவனைக் கொலை செய்துவிட கஸ்ரஜ் கிளையினர் நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கோரினர். இதற்கு முன் இவனைப் போன்ற கொடியவன் கஅபு இப்னு அஷ்ரஃபை அவ்ஸ் கிளையினர் கொன்றதால் அதுபோன்ற ஒரு சிறப்பைத் தாங்களும் அடைய வேண்டும் என கஸ்ரஜ் கிளையினர் விரும்பினர். எனவே, நபியவர்களிடம் அதற்கு அனுமதி கோருவதில் தீவிரம் காட்டினர்.

நபி (ஸல்) அவர்கள் அவனைக் கொல்வதற்கு அனுமதி வழங்கினார்கள். ஆனால், அவனைத் தவிர அங்குள்ள சிறுவர்களை அல்லது பெண்களை கொல்லக் கூடாது என தடை விதித்தார்கள். நபியவர்களிடம் அனுமதி பெற்று ஐந்து நபர்கள் கொண்ட ஒரு குழு இதற்காக புறப்பட்டுச் சென்றது. இவர்கள் அனைவரும் கஸ்ரஜ் கிளையினரில் ஸலமா குடும்பத்தைச் சேர்ந்தவர்களாவர். இவர்களின் தளபதியாக அப்துல்லாஹ் இப்னு அதீக் (ரழி) இருந்தார். இக்குழு அபூராஃபியின் கோட்டை இருந்த கைபர் நகரத்தை நோக்கி புறப்பட்டது. இவர்கள் கோட்டையை அடையும் போது சூரியன் மறைந்து இருட்டிவிட்டது. மக்கள் தங்களின் கால்நடைகளை அழைத்துக் கொண்டு வீடு திரும்பி விட்டனர்.

அப்போது அப்துல்லாஹ் இப்னு அதீக் தனது தோழர்களிடம் "நீங்கள் இங்கு இருங்கள். நான் சென்று வாயில் காவலரிடம் நளினமாகப் பேசிப் பார்க்கிறேன். முடிந்தால் நான் கோட்டைக்குள் நுழைந்து விடுகிறேன் என்று கூறி புறப்பட்டார். கோட்டை கதவுக்கருகில் சென்ற போது தன்னை ஆடையால் மறைத்துக் கொண்டு சிறுநீர் கழிப்பது போல் அமர்ந்து கொண்டார். கோட்டைக்குள் செல்ல வேண்டிய மக்கள் சென்று விட்டனர். அப்போது வாயில் காவலரிடம் "அல்லாஹ்வின் அடியானே! உள்ளே செல்வதாக இருந்தால் இப்போதே சென்றுவிடு. நான் கதவை மூடப் போகிறேன்" என்றான்.

அப்துல்லாஹ் இப்னு அதீக் (ரழி) கூறுகிறார்கள்: நான் கோட்டைக்குள் சென்று ஒரு மறைவிடத்தில் மறைந்து கொண்டேன். அனைவரும் கோட்டைக்குள் நுழைந்து விட்டனர் என்று தெரிந்தவுடன் வாயில் காவலாளி கதவை மூடினான். பின்பு சாவிகளை ஓர் ஆணியில் தொங்க விட்டான். நான் அந்த சாவிகளை எடுத்து வைத்துக் கொண்டேன். அபூ ராஃபி, சில நண்பர்களுடன் அவனது அறையில் இராக்கதைகள் பேசிக் கொண்டிருந்தான். பேசிக் கொண்டிருந்தவர்கள் சென்றபின் நான் அவனது அறையை நோக்கி மேலே

ஏறினேன். ஒவ்வொரு கதவாக திறந்து உள்ளே சென்றவுடன் அக்கதவை உள் பக்கமாக தாழிட்டுக் கொண்டேன். அதாவது இங்கு உள்ளவர்களுக்கு நான் இருப்பது தெரிந்து, என்னை நோக்கி பிடிப்பதற்கு வந்தாலும் அவர்கள் என்னை பிடிப்பதற்குள் நான் அவனைக் கொன்று விடலாம் என்பதற்காக இவ்வாறு செய்தேன். இறுதியாக அவன் இருந்த இடம் வரை சென்று விட்டேன். ஒரு இருட்டறையில் தனது குடும்பத்தார்களுடன் இருந்தான். ஆயினும், அறையில் எப்பகுதியில் இருக்கிறான் என்று எனக்கு உறுதியாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

நான் “அபூ ராஃபி! என்று சப்தமிட்டு அழைத்தேன். அவன் “யாரது?” என்று வியந்து கேட்டான். உடனே நான் சப்தம் வந்த திசையை நோக்கிப் பயந்தவனாகவே எனது வாளை வீசினேன். ஆனால், எனது முயற்சி பலனளிக்கவில்லை. அவன் கூச்சலிடவே நான் உடனடியாக அறையிலிருந்து வெளியேறி ஒளிந்து கொண்டேன். சிறிது நேரம் கழித்து திரும்ப அறைக்குள் சென்று “அபூ ராஃபியே! சற்று நேரத்திற்கு முன் இங்கு என்ன சப்தம்?” என்றேன். அதற்கவன் “உனது தாய்க்கு நாசம் உண்டாகட்டும். சற்று நேரத்திற்கு முன் ஒருவன் என்னைக் கொல்ல வந்தான்” என்றான். உடனே நான் மற்றொரு முறை அவனை வாளால் வெட்டிக் காயப்படுத்தினேன். ஆனால், அவனைக் கொல்ல முடியவில்லை. பின்பு வாளால் அவனது வயிற்றில் குத்தினேன். அதன் நுனி முதுகுப்புறமாக வெளிவந்தது. அதனால் நான் அவனை இம்முறை நிச்சயமாக கொன்றுவிட்டேன் என்று தெரிந்து கொண்டேன். பின்பு ஒவ்வொரு கதவாக திறந்து கொண்டு ஓர் ஏணியின் வழியாக கீழே இறங்கும் போது ஏணிப்படிகள் முடிந்துவிட்டன என்று எண்ணிக் காலை வைக்கும்போது தவறி கீழே விழுந்துவிட்டேன். அதில் எனது கெண்டைக் கால் உடைந்து விட்டது. தலைப்பாகையால் என் காலைக் கட்டிக் கொண்டு நடந்து வந்து வாசலருகில் உட்கார்ந்து கொண்டேன்.

அவனைக் கொன்று விட்டேன் என்று உறுதியாகத் தெரியும்வரை வெளியில் செல்லாமல் இன்றிரவை இங்கேயே கழிப்பது என்று முடிவு செய்தேன். காலையில் மரணச் செய்தி அறிவிப்பவன் “ஜாஸ் மாநிலத்தின் மாபெரும் வியாபாரப் பிரமுகர் அபூ ராஃபி கொல்லப்பட்டு விட்டார்” என்று அறிவித்தான். இதை நான் எனது தோழர்களிடம் வந்து கூறினேன். “வெற்றி கிடைத்து விட்டது, அல்லாஹ் அபூ ராஃபியைக் கொன்று விட்டான்” என்று கூறினேன். இதற்குப் பின் நான் நபியவர்களிடம் சென்று முழு விவரத்தையும் கூறினேன். அப்போது நபியவர்கள் உனது காலை நீட்டுவாயாக! என்று கூறினார்கள். நான் எனது காலை நீட்டியவுடன் நபியவர்கள் அதன் மீது தடவினார்கள். அது முற்றிலும் குணமடைந்து விட்டது. (ஸஹீஹுல் புகாரி)

இதுவரை நாம் கூறிய இந்நிகழ்ச்சி இமாம் புகாரி (ரஹ்) அறிவித்ததாகும். இப்னு இஸ்ஹாக் (ரஹ்) இதற்கு சற்று மாற்றமாக அறிவிக்கிறார்: அதாவது, அனைத்து நபித்தோழர்களும் கோட்டைக்குள் சென்று அபூ ராஃபியைக் கொல்வதில் பங்கெடுத்தனர். அப்துல்லாஹ் இப்னு உனைஸ் (ரழி) என்ற தோழர்தான் அவனை வாளால் வெட்டினார். அப்துல்லாஹ் இப்னு அதீக்கின் கெண்டைக்கால் உடைந்து விட்டதால் மற்ற தோழர்கள் அவரைச் சுமந்து கொண்டு கோட்டைக்குள் தண்ணீர் வருவதற்காக இருந்த வழியின் உள் பகுதிக்குள் நுழைந்து கொண்டனர். கோட்டையில் இருந்த யூதர்கள் நெருப்பை மூட்டி விரைந்து சென்று பல இடங்களில் தேடியும் அவர்களால் நபித்தோழர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. பின்பு யூதர்கள் அனைவரும் தங்கள் தலைவன் நிலையை அறிய திரும்பினர். அதற்குப் பின் நபித்தோழர் அப்துல்லாஹ் இப்னு அதீக்கை சுமந்து கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்து சேர்ந்தனர். (இப்னு ஹிஷாம்)

இச்சம்பவம் ஹிஜ்ரி 5 துல்கஅதா அல்லது துல்ஹஜ் மாதத்தில் நடைபெற்றது. (ரஹ்மதுல் லில் ஆலமீன்)

மேற்கூறப்பட்ட அகழ் மற்றும் குரைளா போர்களிலிருந்து ஓய்வு பெற்றபோது அமைதிக்கும், சமாதானத்திற்கும் பணியாமல் இருந்த கிராம அரபிகளையும் மற்ற அரபுக் குலத்தவர்களையும் கண்டித்து பாடம் கற்பிக்கும் விதமாக பல தாக்குதல்களை நபி (ஸல்) அவர்கள் கையாண்டார்கள். அவற்றின் விவரம் வருமாறு:

**முஹம்மது இப்னு மஸ்லமா படைப் பிரிவு (ஹிஜ் 6, முஹர்ரம் 10)**

இது அகழ் மற்றும் குரைளா போர்களுக்குப் பின் அனுப்பப்பட்ட முதல் படை. இப்படையில் முப்பது வீரர்கள் இருந்தனர்.

நஜ்து மாநிலத்திலுள்ள 'பகராத்' என்ற பகுதியில் 'ழய்யா' என்ற ஊர் வழியாக 'கர்தா' என்ற இடத்தை நோக்கி இப்படை புறப்பட்டது. ழய்யாவுக்கும் மதீனாவுக்கும் இடையில் உள்ள பயண தூரம் ஏழு இரவுகளாகும். இப்படையின் நோக்கம் அங்கு வசித்து வந்த பக்ர் இப்னு கிளாப் கிளையினரைத் தாக்குவதாகும். முஸ்லிம்களின் தாக்குதலுக்கு ஈடு கொடுக்க முடியாமல் எதிரிகள் அனைவரும் அங்கிருந்து ஓடிவிட்டனர். முஸ்லிம்கள் அங்குள்ள கால்நடைகளை ஓட்டிக் கொண்டு முஹர்ரம் பிறை இறுதியில் மதீனா வந்து சேர்ந்தனர்.

தன்னை இறைத்தூதர் என்று வாதிட்ட பொய்யன் முஸைலமா, சுமாமா இப்னு உஸால் என்பவரை நபியவர்களைக் கொல்வதற்காக யமன் நாட்டிலிருந்து அனுப்பினான். இவர் ஹனீஃபா என்ற கிளையினரின் தலைவர் ஆவார். இவரை இப்படையினர் வழியில் கைது செய்து தங்களுடன் அழைத்து வந்தனர். (ஸீரத்துல் ஹல்பியா)

இவரை மதீனாவின் பள்ளியிலுள்ள ஒரு தூணில் முஸ்லிம்கள் கட்டிவிட்டனர். அவரை நபி (ஸல்) அவர்கள் சந்தித்து "சுமாமா நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் "முஹம்மதே! என்னிடத்தில் நன்மை இருக்கிறது. நீர் என்னைக் கொலை செய்ய நாடினால் அத்தண்டனைக்குத் தகுதியான ஒருவரைத்தான் கொலை செய்தவராவீர்! நீர் எனக்கு உதவி செய்து என்னை விட்டுவிட்டால் உங்களுக்கு நான் நன்றி உள்ளவனாக இருப்பேன். உங்களுக்கு பொருள் வேண்டும் என்றால் என்னிடம் கேள். நீர் விரும்பிய அளவு நான் உங்களுக்குத் தருகிறேன்" என்று கூறினார். நபியவர்கள் அவரை ஒன்றும் செய்யாமல் சென்று விட்டார்கள்.

மற்றொரு முறை நபி (ஸல்) அவர்கள் அவருக்கருகில் சென்ற போது அவரிடம் முன்னர் கேட்டது போல் கேட்கவே அவரும் முன்பு சொன்ன பதிலையே கூறினார். நபியவர்கள் அவரை அப்படியே விட்டுச் சென்று விட்டார்கள். மூன்றாவது முறை நபியவர்கள் அவர் அருகில் சென்று அதேபோன்று கேட்க அவரும் தனது பழைய பதிலையே திரும்பக் கூறினார். அப்போது நபியவர்கள் சுமாமாவை அவிழ்த்து விடுங்கள் என்று தனது தோழர்களுக்குக் கூறவே, தோழர்கள் அவரை அவிழ்த்து விட்டார்கள். அவர் பள்ளிக்கு அருகிலிருந்த பேரீச்சம் பழ தோட்டத்திற்குச் சென்று குளித்துவிட்டு நபியவர்கள் முன்னிலையில் இஸ்லாமை ஏற்றார்.

பின்பு "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முன்போ இப்பூமியில் உங்களது முகத்தைவிட வெறுப்பான ஒரு முகம் எனக்கு இருந்ததில்லை. ஆனால், இன்று உங்களது முகமே முகங்களில் எல்லாம் எனக்கு மிக விருப்பமானதாகி விட்டது. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இப்பூமியில் உங்களது மார்க்கத்தை விட வெறுப்பான மார்க்கம் எனக்கு வேறு ஒன்றும் இருக்கவில்லை. ஆனால், இப்போது உங்களது மார்க்கம் மார்க்கங்களில் எல்லாம் எனக்கு மிக விருப்பமானதாக மாறிவிட்டது. உங்களின் படை என்னை கைது செய்த போது நான் உம்ராவிற்காக சென்று கொண்டிருந்தேன். நான் இப்போது என்ன செய்ய? என்று அவர் கேட்க, நபியவர்கள் அவருக்கு நற்செய்தி கூறி, அவர் நாடி வந்த உம்ராவை முடித்து வருமாறு கூறினார்கள்.

அவர் அங்கிருந்து புறப்பட்டு மக்கா வந்தவுடன் அவரைப் பார்த்த குறைஷிகள் ‘‘ஸுமாமா நீர் என்ன மதம் மாறிவிட்டீரா?’’ என்று கேட்டனர். அதற்கவர் ‘‘இல்லை, அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் முஹம்மதுடன் இஸ்லாமை ஏற்றுக் கொண்டேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக!’’ கூறுகிறேன். நபி (ஸல்) அவர்கள் அனுமதியளிக்காத வரை யமாமாவிலிருந்து உங்களுக்கு எந்த கோதுமை தானியங்களும் வராது. (யமாமாவிலிருந்துதான் மக்காவிற்கு கோதுமை வந்து கொண்டிருக்கிறது.) உம்ராவை முடித்துக் கொண்டு ஸுமாமா தனது ஊருக்குச் சென்றவுடன் அங்கிருந்து மக்காவிற்கு தானியங்கள் வருவதைத் தடுத்துவிட்டார். இதனால் குறைஷிகள் பெரும் கஷ்டத்திற்குள்ளாகி நபியவர்களுக்குக் கடிதம் எழுதினர். அதில் தங்களின் இரத்த பந்தத்தைக் கூறி, ஸுமாமா தங்களுக்கு வரும் தானியங்களைத் தடுக்காமல் இருக்க நபியவர்கள் அவருக்கு கடிதம் எழுதுமாறு கேட்டுக் கொண்டனர். அவர்களின் கோரிக்கையை நபியவர்கள் நிறைவேற்றினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஜாதுல் மஆது)

**லஹ்யான் போர் (ஹிஜ் 6, ரபீவுல் அவ்வல்)**

லஹ்யான் கிளையினர்தான் ‘ரஜிஃ’ என்ற இடத்தில் பத்து நபித்தோழர்களை வஞ்சகமாகக் கொலை செய்தனர். இவர்களது இல்லங்களும் இருப்பிடங்களும் மக்காவிற்கு மிக அருகில்தான் இருந்தன. மக்காவிலோ இஸ்லாமிற்கு எதிரியாக இருக்கும் குறைஷி மற்றும் அரபு குலத்தவர்கள் இருந்ததால் நபி (ஸல்) அவர்கள் மக்கா எல்லை வரை சென்று லஹ்யான் இனத்தவர் மீது தாக்குதல் நடத்துவதை ஏற்றமாகக் கருதவில்லை.

அகழ்போல் குறைஷி மற்றும் அரபு இனத்தவன் இராணுவங்கள் வலுவிழந்து சிதறி சென்று விட்டதால் நிலைமை ஓரளவு முஸ்லிம்களுக்குச் சாதகமாக இருந்தது. எனவே, ரஜீஃயில் கொல்லப்பட்ட தங்களது தோழர்களுக்காக லஹ்யானியரிடம் பழிதீர்க்க நாடி ஹிஜ்ரி 6, ரபீஉல் அவ்வல் அல்லது ஜமாதுல் அவ்வல் மாதத்தில் இருநூறு தோழர்களை அழைத்துக் கொண்டு மதீனாவிலிருந்து புறப்பட்டார்கள். மதீனாவில் அப்துல்லாஹ் இப்னு உம்மு மக்தூம் (ரழி) அவர்களைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். ஷாம் நாட்டை நோக்கிப் பயணிப்பதாகக் கூறி வெகு விரைவாகப் பயணத்தை மேற்கொண்டு அமஜ், உஸ்ஃபான் என்ற இடங்களுக்கு மத்தியிலுள்ள ‘குரான்’ என்ற பள்ளத்தாக்கைச் சென்றடைந்தார்கள். அங்குதான் நபித்தோழர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள். அவ்விடத்தில் நபி (ஸல்) அவர்கள் தங்களது தோழர்களுக்காக அல்லாஹ்வின் கருணை வேண்டி பிரார்த்தித்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் வருகையைக் கேள்விப்பட்ட லஹ்யானியர் அங்கிருந்து தப்பித்துச் சென்று மலை உச்சியில் ஏறி பதுங்கிக் கொண்டனர். எவரும் முஸ்லிம்களின் கையில் அகப்படவில்லை. நபியவர்கள் அங்கு இரண்டு நாட்கள் தங்கியிருந்து சிறு சிறு குழுக்களை அனுப்பி தேடும்படி பணித்தார்கள். ஆனால், எவரையும் பிடிக்க முடியவில்லை. நபியவர்கள் அங்கிருந்து ‘உஸ்ஃபான்’ என்ற இடம் வரை சென்றார்கள். அங்கிருந்து ‘குராவுல் கமீம்’ என்ற இடத்திற்கு பத்து குதிரை வீரர்களை அனுப்பினார்கள். தான் வந்திருக்கும் செய்தி குறைஷிகளுக்கு தெரிய வேண்டும் என்பதற்காக நபியவர்கள் இவ்வாறு செய்தார்கள். பின்பு அங்கிருந்து தனது தோழர்களை அழைத்துக் கொண்டு மதீனாவிற்குத் திரும்பினார்கள். இவ்வாறு நபியவர்கள் பதினான்கு நாட்கள் தங்களது படையுடன் சுற்றிவிட்டு திரும்பினார்கள்.

**குழுக்களையும் படைப்பிரிவுகளையும் தொடர்ந்து அனுப்புதல்**

மேற்கூறப்பட்ட நிகழ்ச்சிக்குப் பின் நபி (ஸல்) அவர்கள் ஒன்றன்பின் ஒன்றாக பல குழுக்களையும் படைப்பிரிவுகளையும் அனுப்பினார்கள். அதன் சுருக்கம் வருமாறு:

1) உக்காஷா இப்னு மிஹ்ஸன் (ரழி) அவர்களின் தலைமையின் கீழ் நாற்பது தோழர்களை ‘கம்ர்’ என்ற இடத்துக்கு ஹிஜ்ரி 6, ரபீஉல் அவ்வல் அல்லது ரபீஉல் ஆகில் நபியவர்கள் அனுப்பினார்கள். ‘கம்ர்’ என்பது அஸத் கிளையினருக்கு சொந்தமான கிணற்றுக்குரிய

பெயராகும். அங்குதான் அவர்கள் வசித்து வந்தனர். முஸ்லிம்களின் வருகையை அறிந்த அக்கூட்டத்தினர் அங்கிருந்து தப்பி ஓடிவிட்டனர். அவர்களின் இருநூறு ஒட்டகங்களை ஓட்டிக் கொண்டு முஸ்லிம்கள் மதீனா திரும்பினர்.

2) முஹம்மதிப்னு மஸ்லமா (ரழி) அவர்களைப் பத்து தோழர்களுடன் ஸஅலபா கிளையினர் வசிக்கும் 'துல்கஸ்ஸா' என்ற இடத்திற்கு ஹிஜ்ரி 6, ரபிஉல் அவ்வல் அல்லது ரபிஉல் ஆகில் நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். முஸ்லிம்களின் வருகையை அறிந்த ஸஅலபாவினர் இரகசியமாக மறைந்து கொண்டனர். நபித்தோழர்கள் ஓர் இரவில் தூங்கிக் கொண்டிருக்கும் போது திடீரெனத் தாக்குதல் நடத்தி முஹம்மதிப்னு மஸ்லமாவைத் தவிர மற்ற அனைவரையும் கொன்று விட்டனர். இவர் மட்டும் காயத்துடன் தப்பித்து மதீனா வந்து சேர்ந்தார்.

3) இந்நிகழ்ச்சிக்குப் பின் அபூ உபைதா இப்னுல் ஜர்ராஹ் (ரழி) அவர்களை நாற்பது தோழர்களுடன் நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரி 6, ரபிஉல் ஆகில் துல்கஸ்ஸாவிற்கு அனுப்பி வைத்தார்கள். இவர்கள் இரவெல்லாம் நடந்து சென்று காலையில் ஸஅலபாவினர் மீது படையெடுத்தனர். ஆனால், அவர்கள் அனைவரும் தப்பித்து மலைகளுக்கு ஓடிவிட்டனர். அவர்களிலிருந்து ஒருவரை மட்டும் முஸ்லிம்களால் பிடிக்க முடிந்தது. பிறகு அவர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார். முஸ்லிம்கள் எதிரிகளின் கால்நடைகளை ஓட்டிக் கொண்டு மதீனா திரும்பினர்.

4) ஹிஜ்ரி 6, ரபிஉல் ஆகிர் மாதத்தில் ஜைதுப்னு ஹாஸா (ரழி) அவர்களை 'ஜமூம்' என்ற இடத்திற்கு நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். ஜமூம் என்பது 'மர்ருல் ளஹ்ரான்' என்ற இடத்திலுள்ள சுலைம் கிளையினருக்கு சொந்தமான கிணறாகும். ஜைத் அவர்கள் பனூ சுலைம் கிளையினரை நோக்கிச் சென்று கொண்டிருந்த போது முஸைனா கிளையைச் சேர்ந்த ஒரு பெண்ணைக் கைது செய்தார்கள். அவரது பெயர் ஹலீமாவாகும். அப்பெண் சுலைமினருக்கு சொந்தமான இடங்களைக் காண்பித்துக் கொடுத்தார். அங்கு சென்று முஸ்லிம்கள் அதிகமான கால்நடைகளையும், கைதிகளையும் பிடித்து வந்தனர். மதீனா திரும்பியவுடன் விஷயம் அறிந்து நபி (ஸல்) அவர்கள் அப்பெண்ணை உரிமையிட்டு திருமணமும் முடித்து வைத்தார்கள்.

5) ஹிஜ்ரி 6, ஜுமாதா அல்ஊலா மாதத்தில் 'ஈஸ்' என்ற இடத்திற்கு ஜைத் அவர்களை 170 வீரர்களுடன் அனுப்பி வைத்தார்கள். அங்கு குறைஷிகளின் வியாபாரக் கூட்டம் நபி (ஸல்) அவர்களின் மருமகனார் அபுல் ஆஸின் தலைமையின் கீழ் தங்கியிருந்தது. அங்கு சென்று முஸ்லிம்கள் அனைத்தையும் கைப்பற்றினர். ஆனால், அபுல் ஆஸ் தப்பிச் சென்று மதீனாவில் நபியவர்களின் மகளார் ஜைனபிடம் அடைக்கலம் தேடினார். மேலும், தனது பொருட்களைத் திருப்பித் தருமாறு நபியவர்களிடம் கோரும்படி ஜைனபிடம் கேட்டுக் கொண்டார். அவரும் தனது கணவன் கோரிக்கையை நபியவர்களிடம் சொல்லவே, நபியவர்கள் பொருள்களை திரும்பத் தருமாறு மக்களிடம் கேட்டார்கள். ஆனால், எவரையும் அதற்காக நிர்பந்தப் படுத்தவில்லை.

நபியவர்களின் விருப்பத்திற்கிணங்க சிறிய பெரிய அனைத்து பொருட்களையும் நபித் தோழர்கள் திரும்பக் கொடுத்து விட்டனர். அபுல் ஆஸ் அவற்றை எடுத்துக் கொண்டு மக்கா சென்று உரியவர்களிடம் அப்பொருட்களை ஒப்படைத்துவிட்டு இஸ்லாமை ஏற்று மதீனா திரும்பினார். நபி (ஸல்) அவர்கள் மூன்று வருடம் கழித்துத் திரும்பிய தமது மருமகன் அபுல் ஆஸிற்குத் தனது மகள் ஜைனபை முதல் திருமண ஒப்பந்தத்தைக் கொண்டே சேர்த்து வைத்தார்கள். இவ்வாறுதான் ஆதாரப்பூர்வமான அறிவிப்புகளில் வந்துள்ளது. (ஸுனன் அபூதாவூது)

ஏனெனில், முஸ்லிமான பெண்களை இறைநிராகரிப்பாளர்களுக்குத் திருமணம் முடித்துக் கொடுக்கக் கூடாது என்ற அல்லாஹ்வுடைய கட்டளை அப்போது வரைக்கும் இறங்கவில்லை. ஆனால், சிலர் "மறுபடியும் புதிய திருமணம் செய்துதான் நபியவர்கள் சேர்த்து வைத்தார்கள்" என்று கூறுகின்றனர். இது தவறாகும். அவ்வாறே ஆறு வருடங்கள் கழித்து இருவரையும் சேர்த்து வைத்தார்கள் என்று கூறுவதும் சரியாகாது. ஏனெனில், அதற்குரிய ஆதாரம் வலுவில்லாதது. (துஹ்ஃபத்துல் அஹ்வதி)

6) மீண்டும் ஜைத் அவர்களைப் பதினைந்து தோழர்களுடன் நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரி 6, ஜுமாதா அல்ஆகிர் மாதத்தில் ஸஃலபாவினர் வசிக்கும் 'தஃப்' அல்லது 'தக்' என்ற இடத்திற்கு அனுப்பி வைத்தார்கள். நபியவர்கள்தான் தங்களின் படையைத் திரட்டிக் கொண்டு வந்திருக்கின்றார்கள் என்று நினைத்து அனைவரும் அங்கிருந்து ஓடிவிட்டனர். ஜைத் அவர்கள் இருபது ஒட்டகங்களை பிடித்துக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டு மதீனா வந்தார்கள்.

7) பன்னிரெண்டு நபர்களுடன் 'வாதில் குரா' என்ற இடத்திற்கு ஹிஜ்ரி 6, ரஜப் மாதத்தில் அங்கு எதிரிகளின் நிலைமை எவ்வாறு இருக்கின்றது என்பதை அறிந்து வருவதற்காக நபியவர்கள் ஜைதை அனுப்பி வைத்தார்கள். ஆனால், அங்கிருந்தோர் நபித்தோழர்களைத் தாக்கி ஒன்பது தோழர்களைக் கொன்று விட்டனர். மூவர் மட்டும் தப்பித்து மதீனா திரும்பினர். அதில் ஜைது இப்னு ஹாஸாவும் ஒருவர். (ரஹ்மதுல் லில் ஆலமீன், ஜாதுல் மஆது)

8) 'ஸயத்துல் கபத்' எனப்படும் இப்படை ஹிஜ்ரி 8, ரஜப் மாதத்தில் அனுப்பப்பட்டது என்று கூறப்படுகிறது. இச்சம்பவத்தின் தொடரை நாம் பார்க்கும் போது இது ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு சற்று முன் நடைபெற்றது என்று தெரிய வருகிறது. இச்சம்பவம் தொடர்பாக இதில் கலந்து கொண்ட ஜாபிர் (ரழி) அறிவிப்பதாவது: "300 வாகன வீரர்களை அபூ உபைதாவின் தலைமையில் நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். நாங்கள் குறைஷிகளுடைய வியாபாரக் கூட்டத்தை எதிர்பார்த்து பதுங்கி இருந்தோம். எங்களுக்குக் கடுமையான பசி ஏற்பட்டதால் காய்ந்த இலைகளைத் தின்றோம். எனவே, இப்படைக்கு 'ஜய்ஷுல் கபத்' -இலை படை- என்று பெயர் வந்தது. எங்களில் ஒருவர் மூன்று ஒட்டகங்களை ஒரே நாளில் அறுப்பார். மற்றொரு நாள் மீண்டும் மூன்று ஒட்டகங்களை அறுப்பார். பின்பு தளபதி அபூ உபைதா (ரழி) அதனைத் தடை செய்துவிட்டார். அதற்குப் பின் கடலிலிருந்து 'அம்பர்' என்ற மிகப்பெரிய மீன் ஒன்று எங்களுக்குக் கிடைத்தது. அதை நாங்கள் பதினைந்து நாட்கள் சாப்பிட்டோம். அதனுடைய கொழுப்பை எண்ணையாக பயன்படுத்தி தடவிக் கொண்டோம். அதன் மூலம் எங்களுடைய உடல்கள் நல்ல ஆரோக்கியமடைந்தன.

அபூ உபைதா (ரழி) அதனுடைய விலா எலும்பில் ஓர் எலும்பை எடுத்தார். பின்பு அதை நிறுத்தி, படையில் மிக உயரமாக உள்ள ஒருவரை மிக உயரமான ஒட்டகத்தில் உட்கார வைத்து அதற்குக் கீழ் செல்லும்படி கூறினார்கள். அந்த எலும்பு அவ்வளவு பெரியதாக இருந்தது. அதனுடைய இறைச்சியிலிருந்து பெருமளவு நாங்கள் சேகரித்து வைத்துக் கொண்டோம். மதீனா திரும்பியவுடன் நபி (ஸல்) அவர்களிடம் இச்செய்தியைக் கூறிய போது இது அல்லாஹ் உங்களுக்கு அளித்த உணவாகும். உங்களிடம் ஏதாவது அதில் மீதமிருந்தால் எனக்கும் உண்ணக் கொடுங்கள் என்றார்கள். நாங்கள் அதிலிருந்து நபி (ஸல்) அவர்களுக்குக் கொடுத்தோம். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

இது ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு முன் நடந்திருக்க வேண்டும் என்று நாம் கூறியதற்குக் காரணம், முஸ்லிம்கள் ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின் எந்தவொரு வியாபாரக் கூட்டத்தையும் கைப்பற்றுவதற்காக செல்லவில்லை.

## பனூ முஸ்தலக் (அ) அல்முரைஸீ போர்

இப்போர் ஒரு விரிவாகக் கூறப்படும் அளவிற்கு இல்லையென்றாலும் இதனால் பல குழப்பங்களும் பிரச்சனைகளும் இஸ்லாமியச் சமுதாயத்தில் ஏற்பட்டன. இக்குழப்பத்தின் இறுதியில் நயவஞ்சகர்களுக்குக் கேவலம் ஏற்பட்டது. இஸ்லாமியச் சமூகத்திற்குப் பல மார்க்கச் சட்டங்கள் அருளப்பட்டன. அதன் மூலம் முஸ்லிம் சமுதாயத்திற்குக் கண்ணியமும் உயர்வும் கிடைத்தது. முதலில் நாம் இப்போரைப் பற்றி கூறியதற்குப் பின்பு அப்பிரச்னைக்குரிய நிகழ்ச்சியைப் பற்றி கூறுவோம்.

இப்போர் ஹிஜ்ரி 5, ஷஅபான் மாதத்தில் நடைபெற்றதென்று பெரும்பாலான வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். இப்னு இஸ்ஹாக் (ரஹ்) ஹிஜ்ரி 6ல் நடைபெற்றது என்று கூறுகின்றார்.

இப்போருக்கான காரணமாவது: முஸ்தலக் எனும் கிளையினரின் தலைவரான ஹாரிஸ் இப்னு அபூ ழிரார் தனது கூட்டத்தினரையும் மற்றும் பல அரபிகளையும் அழைத்துக் கொண்டு நபியவர்களிடம் போர் புரிவதற்காக வருகிறார் என்ற செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. இதை உறுதியாகத் தெரிந்து வர, புரைதா இப்னு ஹுஸைப் அஸ்லமி (ரழி) என்பவரை நபியவர்கள் அனுப்பி வைத்தார்கள். அவர் ஹாரிஸ் இப்னு அபூ ழிராரை வழியில் சந்தித்து விபரமறிந்து நபியவர்களிடம் திரும்பி செய்தியைக் கூறினார்.

செய்தி உண்மைதான் என்பதை உறுதியாகத் தெரிந்து கொண்டவுடன் நபியவர்கள் தோழர்களைப் புறப்படுவதற்கு ஆயத்தமாக்கினார்கள். ஷஅபான் பிறை 2ல் மதீனாவிலிருந்து நபியவர்கள் கிளம்பினார்கள். இதுவரை எப்போதும் கலந்துகொள்ளாத நயவஞ்சகர்களின் ஒரு கூட்டம் நபியவர்களுடன் புறப்பட்டது. நபி (ஸல்) இப்போருக்குச் செல்லும் போது மதீனாவில் ஜைதுப்னு ஹாஸாவைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். சிலர் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டது அபூதர் என்றும் கூறுகின்றனர். மற்றும் சிலர் நுமைலா இப்னு அப்துல்லாஹ் என்றும் கூறுகின்றனர்.

ஹாரிஸ் இப்னு அபூ ழிரார் இஸ்லாமியப் படையின் செய்தியை அறிந்து வருவதற்காக ஓர் ஒற்றனை அனுப்பினான். முஸ்லிம்கள் அவனைக் கைது செய்து கொன்று விட்டனர். ஹாரிஸ் இப்னு ழிராருக்கும் அவனுடன் இருந்தவர்களுக்கும் “நபி (ஸல்) அவர்கள் தங்களின் ஒற்றர்களைக் கொன்று விட்டார்கள். மேலும், தங்களை நோக்கி விரைந்து வருகிறார்கள்” என்ற செய்தி கிடைத்தவுடன் அவர்களுக்குக் கடுமையான அச்சம் ஏற்பட்டது. இதனால் பல அரபுக் கிளையினர் அவர்களின் படையிலிருந்து விலகிச் சென்று விட்டனர்.

நபி (ஸல்) அவர்கள் ‘முரைஸீ’ என்ற இடத்தை வந்தடைந்தார்கள். இங்குதான் எதிரிகள் தங்கியிருந்தனர். இது கடற்கரைக்கு அருகில் ‘குதைத்’ என்ற ஊர் ஓரத்தில் உள்ள கிணறாகும். அங்கு நபியவர்கள் தங்களது தோழர்களை வரிசையாக நிற்கவைத்து முஹாஜிர்களுக்குரிய கொடியை அபூபக்ர் (ரழி) அவர்களிடமும், அன்சாரிகளுக்குரிய கொடியை ஸஅது இப்னு உபாதா (ரழி) அவர்களிடமும் கொடுத்தார்கள். பின்பு இரு படையினரும் சிறிது நேரம் அம்பெறிந்து சண்டை செய்து கொண்டனர். அதற்குப் பின் நபியவர்கள் கட்டளையிடவே தோழர்கள் அனைவரும் ஒரே பாய்ச்சலாக எதிரிகள் மீது பாய்ந்தனர். அல்லாஹ்வின் அருளால் முஸ்லிம்களுக்கு வெற்றியும் இணைவைப்பவர்களுக்குத் தோல்வியும் கிடைத்தது. போருக்கு வந்திருந்த எதிரிகளின் பெண்களையும், பிள்ளைகளையும், ஆடுகள் மற்றும் ஏனைய கால்நடைகளையும் முஸ்லிம்கள் கைப்பற்றினார்கள். இப்போல் எதிரிகளால் முஸ்லிம்களில் எவரும் கொலை செய்யப்படவில்லை. ஆனால், அன்சாரி ஒருவர் ஒரு முஸ்லிமை எதிரிப் படையில் உள்ளவர் என்று எண்ணி தவறாகக் கொலை செய்து விட்டார்.

இப்போரைப் பற்றி இவ்வாறுதான் பல வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். ஆனால், அறிஞர் இப்னுல் கய்'' (ரஹ்) இதற்கு மாற்றமாகக் கூறுகிறார். அவர் கூறுவதாவது: இப்படையெடுப்பில் சண்டை ஏதும் நடைபெறவில்லை. மாறாக, நபி (ஸல்) அவர்கள் முஸ்தலக் கிளையினர் மீது தாக்குதல் நடத்த வந்தார்கள். முஸ்தலக் கிளையினர் கொள்ளையிடுவதற்காக தங்கள் ஊரை விட்டு வெளியில் சென்றிருந்தனர். நபியவர்கள் அவர்களின் குடும்பங்களையும் பொருட்களையும் கைப்பற்றிக் கொண்டு திரும்பினார்கள். இவ்வாறுதான் ஸஹீஹுல் புகாரியிலும் வந்துள்ளது.

கைது செய்யப்பட்டவர்களில் இக்கூட்டத்தின் தலைவர் ஹாரிஸின் மகள் ஜுவைரியாவும் இருந்தார். இவரை ஸாபித் இப்னு கைஸ் (ரழி) தனது பங்கில் பெற்றார். இவரை உரிமை விடுவதற்காக இவரிடம் ஓர் ஈட்டுத் தொகை பேசி ஸாபித் (ரழி) ஒப்பந்தம் செய்து கொண்டார். நபி (ஸல்) அவர்கள் ஜுவைரியாவின் சார்பாக அத்தொகையைக் கொடுத்து விட்டார்கள். பின்பு ஜுவைரியாவைப் பெண் பேசி திருமணம் செய்து கொண்டார்கள். நபியவர்களின் திருமணத்தின் காரணமாக முஸ்தலக் கிளையைச் சேர்ந்த நூறு குடும்பத்தினரை முஸ்லிம்கள் உரிமையிட்டனர். ஏனெனில், இப்போது இந்த கைதிகளெல்லாம் நபியவர்களின் மாமனார் குடும்பத்தைச் சேர்ந்தவர் களாயிற்றே! அவர்களை எப்படி நாம் அடிமைகளாக வைத்திருப்பது என்று நபித்தோழர்கள் காரணம் கூறினார்கள். (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

இப்போரில் ஏற்பட்ட ஏனைய சம்பவங்களின் தலையாய காரணமாக இருந்தவன் நயவஞ்ச கர்களின் தலைவன் அப்துல்லாஹ் இப்னு உபையும் அவனது கூட்டாளிகளுமே. ஆகவே, இஸ்லாமியச் சமுதாயத்தில் இந்நயவஞ்சகர்களின் செயல்பாடுகள் பற்றி முதலில் சற்று தெரிந்து கொள்வது அவசியமாகும்.

**நயவஞ்சகர்களின் நடவடிக்கைகள்**

அப்துல்லாஹ் இப்னு உபை இஸ்லாமின் மீதும் முஸ்லிம்கள் மீதும், குறிப்பாக நபி (ஸல்) அவர்களின் மீதும் எல்லையற்ற எரிச்சல் கொண்டிருந்தான். அதற்குக் காரணம் அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரு கிளையினரும் இவனைத் தலைவனாக்கி மணிமகுடம் சூட்டுவதற்குத் தயாராக இருந்த சமயத்தில் நபி (ஸல்) வருகை தர, அவர்கள் அனைவரும் இவனைப் புறக்கணித்து விட்டு நபி (ஸல்) அவர்களின் பக்கம் திரும்பிவிட்டனர். இதனால் நபியவர்கள்தான் தனது ஆட்சியை பறித்துக் கொண்டார்கள் என்று இவன் மனம் புழுங்கிக் கொண்டிருந்தான்.

நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்ததிலிருந்து இவன் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளும் முன்பும், ஏற்றுக் கொண்ட பின்பும் இந்த பகைமையையும் கசப்பையும் வெளிப்படையாகவே காட்டிக் கொண்டிருந்தான். ஒருமுறை நபி (ஸல்) அவர்கள் ஸஅது இப்னு உபாதா (ரழி) அவர்களை நலம் விசாரிப்பதற்காக கழுதையின் மீது சென்று கொண்டிருந்தார்கள். அப்போது வழியில் ஒரு சபையில் அப்துல்லாஹ் இப்னு உபை அமர்ந்திருந்தான். அவனைக் கடந்து செல்லும்போது ''முஹம்மதே! எங்களின் மீது புழுதியைக் கிளப்பாதீர்'' என்று கூறினான். நபி (ஸல்) அவர்கள் அச்சபையில் நின்று குர்ஆன் ஓதிக் காண்பித்தார்கள். அதற்கு அவன் ''நீ உனது வீட்டில் உட்கார்ந்து கொள்! எங்களது சபையில் வந்து எங்களைத் தொந்தரவு செய்யாதே'' என்று நபி (ஸல்) அவர்களைப் பார்த்து கூறினான். இது அவன் இஸ்லாமை ஏற்றுக் கொள்வதற்கு முன்பு நடந்த நிகழ்ச்சியாகும். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், இப்னு ஹிஷாம்)

பத்ர் போருக்குப் பின் இவன் இஸ்லாமை ஏற்றுக் கொண்டான். ஆனால், வாயளவில் தான் ஏற்றுக்கொண்டான் மனப்பூர்மாக அல்ல. ஆகவே, இவன் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும், முஸ்லிம்களுக்கும் எதிரியாகவே இருந்து வந்தான். இஸ்லாமியச் சமுதாயத்தை

பிரிப்பதற்கும், இஸ்லாமை பலவீனப்படுத்துவதற்கும் எப்போதும் சிந்தனை செய்து வந்தான். இஸ்லாமின் எதிரிகளுடன் தோழமை கொண்டிருந்தான். கைனுகா யூதர்களின் விஷயத்தில் இவன் குறுக்கிட்டது போன்றே உஹூத் போரில் இவன் செய்த மோசடி, முஸ்லிம்களைப் பிரிப்பதற்காக செய்த சூழ்ச்சி, முஸ்லிம்களின் அணிகளுக்கு மத்தியில் அவன் ஏற்படுத்திய குழப்பங்கள், சலசலப்புகள் பற்றி இதற்கு முன்பு நாம் கூறியிருக்கின்றோம்.

இவன் இஸ்லாமை வெளிப்படையாக ஏற்றுக் கொண்டபின் முஸ்லிம்களை மிக அதிகமாக ஏமாற்றி, அவர்களுக்கு வஞ்சகம் செய்து வந்தான். நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை ஜும்ஆ பேருரைக்காக மிம்பரில் ஏறி அமர்ந்தவுடன் இவன் எழுந்து “இவர்தான் அல்லாஹ்வின் தூதர்! இதோ... இவர் உங்களுக்கு மத்தியில் இருக்கிறார் இவர் மூலம் அல்லாஹ் உங்களுக்கு கண்ணியத்தையும் மதிப்பையும் வழங்கியிருக்கின்றான் இவருக்கு நீங்கள் உதவி செய்யுங்கள் இவருக்கு நீங்கள் ஆதரவு தாருங்கள் இவர் பேச்சை செவி தாழ்த்தி கேளுங்கள் இவருக்கு கீழ்ப்படியுங்கள்” என்று கூறிவிட்டு அமர்ந்து கொள்வான். அதற்குப் பின் நபி (ஸல்) எழுந்து பிரசங்கம் செய்வார்கள்.

இந்த நயவஞ்சகனின் வெட்கங்கெட்ட தன்மைக்கு இதை உதாரணமாகக் கூறலாம்: இவன் உஹூத் போரில் செய்த மோசடிகள் அனைவருக்கும் தெரிந்ததே. நபி (ஸல்) அவர்கள் உஹூத் போரிலிருந்து மதீனாவிற்குத் திரும்பியப் பின் ஒரு நாள் வெள்ளிக்கிழமையன்று பிரசங்கத்திற்காக எழுந்தார்கள். அப்போது அவன், தான் வழக்கமாக சொல்லி வந்ததைச் சொல்வதற்காக எழுந்தான். ஆனால், முஸ்லிம்கள் அவனது ஆடையைப் பிடித்திழுத்து “அல்லாஹ்வின் எதிரியே! உட்காரடா... உனக்கு இதைக் கூறுவதற்கு எந்த தகுதியுமில்லை. நீ செய்ய வேண்டிய அழிச்சாட்டியங்களை எல்லாம் செய்து விட்டாய்” என்று கூறினார்கள். அதற்கவன் “நான் என்ன கெட்டதையா கூறினேன்! அவரது காரியத்தில் அவரைப் பலப்படுத்தவே நான் எழுந்தேன்” என்று கூறியவனாக மக்களின் பிடரிகளை தாண்டிக் கொண்டு பள்ளியைவிட்டு வெளியேறினான். பள்ளியின் வாயிலில் அன்சாரி ஒருவர் அவனைப் பார்த்து “உனக்கு நாசம் உண்டாகட்டும்! நீ நபியவர்களிடம் திரும்பிச் செல். அவர்கள் உனக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு தேடுவார்கள்” என்றார். அதற்கவன் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் எனக்காக பாவ மன்னிப்புத் தேட வேண்டும் என்று எனக்கு எவ்வித ஆசையுமில்லை” என்றான். (இப்னு ஹிஷாம்)

மேலும், நளீர் இன யூதர்களுடன் அவன் தொடர்பு வைத்துக் கொண்டு முஸ்லிம்களுக்கு எதிராக எப்போதும் சதித்திட்டம் தீட்டி வந்தான். இவன் நளீர் இன யூதர்களுக்கு கூறியதைப் பற்றி அல்லாஹ் இவ்வாறு விவரிக்கிறான்:

(நபியே! இந்த) நயவஞ்சகர்களை நீங்கள் கவனிக்கவில்லையா? அவர்கள், வேதத்தை உடையவர்களிலுள்ள நிராகரிக்கும் தங்கள் சகோதரர்களை நோக்கி “நீங்கள் (உங்கள் இல்லத்தை விட்டு) வெளியேற்றப்பட்டால் நாங்களும் உங்களுடன் வெளியேறி விடுவோம். உங்கள் விஷயத்தில் (உங்களுக்கு எதிராக) நாங்கள் ஒருவருக்கும், ஒரு காலத்திலும் வழிப்பட மாட்டோம். (எவரும்) உங்களை எதிர்த்து போர் புரிந்தால், நிச்சயமாக நாம் உங்களுக்கு உதவி புரிவோம்” என்றும் கூறுகின்றனர். ஆனால், நிச்சயமாக அவர்கள் பொய்யர்கள் என்று அல்லாஹ் சாட்சியம் கூறுகின்றான். (அல்குர்ஆன் 59:11)

மேலும், இவனும் இவனது தோழர்களும் அகழ் போரில் இறைநம்பிக்கையாளர்களின் உள்ளத்தில் பல குழப்பங்களையும், திடுக்கங்களையும், சஞ்சலங்களையும் ஏற்படுத்தினர். இதைப் பற்றி அத்தியாயம் அஹ்ஸாபில் 12லிருந்து 20 வரையிலுள்ள வசனங்களில் அல்லாஹ் தெளிவாக கூறுகின்றான்.

இஸ்லாமின் எதிரிகளான யூதர்கள், நயவஞ்சகர்கள், இணைவைப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் இஸ்லாமின் வெற்றிக்கு என்ன காரணமென்பது நன்கு தெரிந்திருந்தது.

அதாவது, இஸ்லாமின் வெற்றி பொருளாதாரப் பெருக்கத்தினாலோ, ஆயுதங்கள், படைகள் மற்றும் போர் சாதனங்கள் ஆகியவை அதிகமாக இருந்ததினாலோ அல்ல. மாறாக, இஸ்லாமியச் சமுதாயத்திடமும் மற்றும் இஸ்லாமில் இணைந்த ஒவ்வொருவரிடமும் இருக்கும் உயர்ந்த பண்புகளும், நற்குணங்களும், முன்மாதிரியான தன்மைகளும்தான் இஸ்லாமின் வெற்றிக்குக் காரணமாக இருக்கின்றன என்பது அவர்களுக்கு நன்றாகவே தெரியும். அத்துடன் இந்த அனைத்து தன்மைகளுக்கும் காரணமாகவும் ஊற்றாகவும் விளங்கக்கூடியவர் நபி (ஸல்) அவர்கள்தான் என்பதும் இவர்களுக்குத் தெரியும். அதுபோன்றே இந்த மார்க்கத்தை ஆயுதங்களாலும் ஆற்றலாலும் அழிக்க முடியாது என்பதை அவர்கள் நன்கு தெரிந்து கொண்டதால் நேரடிப் போருக்குத் துணிவின்றி மறைமுகச் சூழ்ச்சிப் போருக்கு வித்திட்டனர். இம்மார்க்கத்தின் பண்பாடு மற்றும் கலாச்சார ரீதியாக இம்மார்க்கத்திற்கு எதிராகப் பொய் பிரச்சாரங்களை பரப்ப வேண்டும் இந்த பொய் பிரச்சாரத்திற்கு முதல் இலக்காக நபி (ஸல்) அவர்களை ஆக்க வேண்டும் என்று முடிவு செய்தனர். முஸ்லிம்களின் அணியில் நயவஞ்சகர்களும் கலந்திருந்ததுடன் அந்த நயவஞ்சகர்கள் மதீனாவாசிகளாகவும் இருந்ததால் முஸ்லிம்களுடன் தொடர்பு கொண்டு அவர்களது உணர்வுகளைத் தூண்டிவிட்டு விளையாடுவது எதிரிகளுக்குச் சாத்தியமாக இருந்தது. எனவே, இந்தப் பொய் பிரச்சாரத்தைப் பரப்புவதற்குரிய பொறுப்பை நயவஞ்சகர்களே ஏற்றுக் கொண்டனர். இதில் இவர்களின் தலைவனாக இருந்த இப்னு உபை முக்கியப் பங்கு வகித்தான்.

இவர்களது இந்தத் திட்டம் ஒரு விஷயத்தில் மிகத் தெளிவாக வெளிப்பட்டது. அதாவது, நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகன் ஜைதுப்னு ஹாஸா (ரழி) தன் மனைவி ஜைனப் பின்த் ஜஹ்ஷ் (ரழி) அவர்களைத் தலாக் விட்டதற்குப் பின் அவரை நபி (ஸல்) திருமணம் செய்து கொண்டார்கள். அரபுகள் தங்களின் கலாச்சாரப்படி வளர்ப்பு மகனைப் பெற்ற மகனைப் போல் கருதினர். மகனின் மனைவியைத் தலாக்கிற்குப் பின் தந்தை மணம் முடிப்பது எவ்வாறு குற்றமான செயலாக கருதப்பட்டு வந்ததோ அதேபோல் வளர்ப்பு மகனின் மனைவியையும் வளர்ப்புத் தந்தை திருமணம் முடிப்பதை குற்றமாகவே கருதினர். ஆகவே, நபி (ஸல்) ஜைனபை திருமணம் முடித்துக் கொண்டதும் நயவஞ்சகர்கள் நபியவர்களுக்கெதிராக சர்ச்சையைக் கிளப்புவதற்கு இரண்டு வழிகளைக் கையாண்டனர்.

முதலாவது: நபி (ஸல்) அவர்களின் இத்திருமணம் ஐந்தாவது திருமணமாக இருந்தது. குர்ஆன் நான்கு பெண்களை மட்டும் திருமணம் முடித்துக் கொள்ளலாம் என்று அனுமதித்திருக்க நபி (ஸல்) எப்படி ஐந்தாவது திருமணம் செய்தார்கள்?

இரண்டாவது: ஜைனப் (ரழி) நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகனின் மனைவியாக இருந்தார். எனவே அரபுகளின் கலாச்சாரப்படி ஜைனபைத் திருமணம் முடித்தது மாபெரும் குற்றமாகும்.

இது விஷயத்தில் பெரும் பொய்க் கதைகளையும் கற்பனைகளையும் நயவஞ்சகர்கள் புனைந்தனர். அதாவது, முஹம்மது ஒருமுறை திடீரென ஜைனபைப் பார்த்து விட்டார். அப்போது ஜைனபின் அழகில் மயங்கி ஜைனபின் மீது காதல் கொண்டார். இதை அறிந்த அவரது வளர்ப்பு மகன் முஹம்மதுக்காகத் தனது மனைவியை விட்டுக் கொடுத்து விட்டார் என்று கூறினர். இந்தக் கட்டுக் கதையை அவர்கள் எந்தளவு பரப்பினார்கள் என்றால், இன்று வரை அதன் தாக்கம் ஹதீஸ் மற்றும் தஃப்ஸீர் நூற்களில் காணக் கிடைக்கிறது. இந்த பொய்ப் பிரச்சாரம் இறை நம்பிக்கையில் குறையுள்ளவர்களைப் பெரிதும் பாதித்தது. ஆகவே, உள்ளங்களில் ஏற்பட்ட சந்தேக நோய்களைக் குணப்படுத்தும் விதமாக பல தெளிவான வசனங்களை அல்லாஹ் குர்ஆனில் இறக்கி வைத்தான். இது பொய்ப் பிரச்சாரம் என்று அல்லாஹ் அத்தியாயம் அஹ்ஜாபின் தொடக்கத்திலேயே இவ்வாறு கூறுகின்றான்:

நபியே! நீங்கள் அல்லாஹ்வுக்கே பயப்படுங்கள். நிராகரிப்பவர்களுக்கும், நயவஞ்சகர்களுக்கும் (பயந்து அவர்களுக்கு) வழிப்படாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும்) அறிந்தவனும் ஞானமுடையவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 33:1)

இதுவரை நாம் கூறியது முஸ்தலக் போருக்கு முன்னர் நயவஞ்சகர்கள் புரிந்த தில்லு முல்லுகளின் சுருக்கமான ஒரு கண்ணோட்டமாகும். இவை அனைத்தையும் நபி (ஸல்) அவர்கள் மிகப் பொறுமையுடனும், நளினத்துடனும், நுட்பத்துடனும் எதிர்கொண்டு சகித்து வந்தார்கள். மற்ற முஸ்லிம்கள் அந்நயவஞ்சகர்களின் தீங்கிலிருந்து தங்களைத் தற்காத்து வந்தனர் அல்லது அவர்களின் தீங்குகளைச் சகித்து வந்தனர். ஏனெனில், இந்நயவஞ்சகர்கள் ஒவ்வோர் ஆண்டும் பலமுறை இழிவுக்குள்ளாகிறார்கள் அவர்களது உள்ளத்தின் இரகசியங்களைக் குர்ஆனில் வெளிப் படுத்தப்பட்டு கேவலத்திற்கு உள்ளாகிறார்கள் என்பதை முஸ்லிம்கள் தெரிந்து வைத்திருந்தனர்.

ஒவ்வோர் ஆண்டிலும் ஒரு முறையோ அல்லது இரு முறைகளோ அவர்கள் கஷ்டத்திற்குள்ளாகி சோதிக்கப்படுகின்றனர் என்பதை அவர்கள் காண வில்லையா? இவ்வாறிருந்தும் அவர்கள் பாவத்தை விடுவதுமில்லை நல்லுணர்ச்சி பெறுவதுமில்லை. (அல்குர்ஆன் 9:126)

முஸ்தலக் போரில் நயவஞ்சகர்கள்...

முஸ்தலக் போரில் நயவஞ்சகர்களும் முஸ்லிம்களுடன் கிளம்பி இருந்ததால் அல்லாஹ் திருமறையிலே சுட்டிக்காட்டும்...

அவர்கள் உங்களுடன் வந்திருந்தால் ஒழுங்கீனத்தைத் தவிர (வேறு எதனையும்) உங்களுக்கு அதிகரிக்கச் செய்திருக்க மாட்டார்கள். விஷமத்தைக் கருதி உங்கள் மத்தியில் அலங்கோலத்தையும் உண்டுபண்ணி இருப்பார்கள். அவர்களுடைய ஒற்றர்களும் உங்களுடன் இருக்கின்றனர். ஆனால், அல்லாஹ் இத்தகைய அநியாயக்காரர்களை நன்கறிந்தவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் 9:47)

இக்கூற்றுக்கு ஒப்பாகவே அவர்கள் நடந்து கொண்டனர். தீங்கு செய்வதையே குறிக்கோளாகக் கொண்ட இவர்கள் முஸ்லிம்களின் அணியில் பெரும் பிணக்கையும் நபி (ஸல்) அவர்களுக்கு எதிராக மிக இழிவான பழியையும் உருவாக்கினர். அதன் சில விவரங்களை இங்கு பார்ப்போம்.

1) நயவஞ்சகர்களின் கூற்று:

நாம் மதீனாவிற்குத் திரும்பினால் இழிவானவர்களைக் கண்ணியமானவர்கள் மதீனாவிலிருந்து வெளியேற்ற வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் போர் முடித்துத் திரும்பும் போது ‘உரைஸிஃ’ என்ற இடத்தில் தங்கியிருந்தார்கள். அப்போது தண்ணீர் நிரப்பிக் கொள்ளும் ஓர் இடத்தில் முஹாஜிர்களில் ஜஹ்ஜாஹ் அல் கிஃபா என்பவரும், அன்சாரிகளில் கினான் இப்னு வபர் அல் ஜுஹ்னி என்பவரும் சண்டை செய்து கொண்டனர். அப்போது ஜுஹ்னி “அன்சாரிகளின் கூட்டமே! உதவிக்கு வாருங்கள்” என்றார். ஜஹ்ஜாஹ் “முஹாஜிர்களின் கூட்டமே! உதவிக்கு வாருங்கள்” என்றார். இக்கூச்சலைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள், “நான் உங்களுக்கு மத்தியில் இருக்கும்போது இவ்வாறு அறியாமைக்கால வார்த்தைகளையா பயன்படுத்துகிறீர்கள்? இதை விட்டு விடுங்கள். அது மிக அசுத்தமானது!” என்று எச்சரித்தார்கள்.

இந்தச் செய்தி அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு ஸலூலுக்கு எட்டியது. இதனால் அவன் கோபமடைந்தான். அவனுடன் அவனது இனத்தவரில் சிலர் இருந்தனர். அவர்களில் மிகச்

சிறிய வயதுடைய ஜைதுப்னு அர்கம் என்பவரும் இருந்தார். அப்போது அப்துல்லாஹ் இப்னு உபை “இப்படியா அவர்கள் செய்தார்கள்! நமக்கு வெறுப்பூட்டி விட்டார்கள். நமது ஊருக்கு வந்த வந்தேறிகள் நம்மையே மிகைத்து விட்டார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நமக்கும் அவர்களுக்குமுள்ள உதாரணம்: ‘உனது நாயை நல்ல கொழுக்க வளர்ப்பாயாக! அது இறுதியில் உன்னையே தின்றுவிடும்’ (வளர்த்த கடா மார்பில் பாய்ந்தது) என்பதுதான். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாம் மதீனாவிற்குத் திரும்பினால் கண்ணியமானவர்கள் இழிவானவர்களை அங்கிருந்து வெளியேற்றியே ஆக வேண்டும்” என்று கூறினான். மேலும், தனக்கு முன் இருந்தவர்களை (அன்சாரிகளை) நோக்கி, “பார்த்தீர்களா! இது நீங்கள் உங்களுக்கே தேடிக் கொண்டது. அவர்களை உங்கள் ஊரில் தங்க வைத்து உங்களது பொருட்களை பங்கு வைத்துக் கொடுத்தீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் அவர்களுக்குக் கொடுப்பதை நிறுத்திக் கொண்டால் அவர்கள் உங்களை விட்டுவிட்டு வேறு ஊருக்குச் சென்று விடுவார்கள்” என்று கூறினான்.

ஜைது இப்னு அர்கம் தனது தந்தையின் சகோதரரிடம் இச்செய்தியைக் கூற, அவர் நபி (ஸல்) அவர்களிடம் கூறினார். அங்கு உமரும் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தார்கள். இதைக் கேட்ட உமர் (ரழி) அவர்கள் “நபியே! அப்பாத் இப்னு பிஷ்ருக்குக் கட்டளையிடுங்கள். அவர் அவனைக் கொன்று விடட்டும்” என்றார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “உமரே! அப்படி எவ்வாறு செய்ய முடியும்? முஹம்மது தமது தோழர்களைக் கொல்கிறார் என்று மக்கள் பேசுவார்கள். எனவே, அவ்வாறு செய்யக் கூடாது. நீர் அனைவரையும் இங்கிருந்து புறப்படுவதற்கு அறிவிப்புச் செய்!” என்று கூறினார்கள்.

பொதுவாக நபி (ஸல்) அவர்கள் அந்த நேரத்தில் பயணிக்க மாட்டார்கள். மக்கள் நபி(ஸல்) அவர்களின் கட்டளைக்கிணங்க பயணத்தைத் தொடங்கினர். அப்போது உஸைது இப்னு ஹுழைர் (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களை சந்தித்து வாழ்த்துக் கூறி, “நபியே! நீங்கள் வழக்கத்துக்கு மாற்றமான நேரத்தில் பயணிக்கிறீர்களே!” என்று கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் “இப்னு உபை கூறிய செய்தி உமக்கு தெரியாதா?” என்று கேட்டார்கள். அதற்கு உஸைது (ரழி), “அவன் என்ன கூறினான்?” என்று கேட்டார். “அவன் மதீனாவிற்குத் திரும்பினால் அதிலுள்ள கண்ணியவான்கள் இழிவானவர்களை வெளியேற்ற வேண்டும் என்று கூறினான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உஸைது (ரழி) “அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் விரும்பினால் அவனை மதீனாவிலிருந்து வெளியேற்றலாம். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவன் இழிவானவன். நீங்கள்தான் கண்ணியமானவர்கள்” என்று கூறிவிட்டு “அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் அவனுடன் சற்று மிருதுவாக நடந்து கொள்ளுங்கள். அவனது கூட்டத்தினர் அவனைத் தங்களது தலைவராக்க நினைத்த போது அல்லாஹ் உங்களை எங்களிடம் கொண்டு வந்தான். எனவே, நீங்கள்தான் அவனது பதவியைப் பறித்துக் கொண்டீர்கள் என்று அவன் எண்ணுகிறான்” என்று ஆறுதல் கூறினார்கள்.

அதற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் மக்களை அழைத்துக் கொண்டு மாலைவரை பயணித்தார்கள். பயணத்தில் எங்கும் ஓய்வெடுக்காமல் அன்று இரவிலிருந்து மறுநாள் முற்பகல் வரை தொடர்ந்து பயணம் செய்தார்கள். அதற்குப் பின் மக்களுக்கு ஓய்வெடுக்க அனுமதி கொடுத்தார்கள். கடுமையான களைப்பின் காரணமாக மக்கள் இறங்கியவுடன் அயர்ந்து தூங்கி விட்டார்கள். இவ்வாறு நபி (ஸல்) செய்ததற்குக் காரணம், மக்கள் வேறு எந்த பேச்சிலும் ஈடுபடக் கூடாது என்பதற்காக இருக்கலாம்.

நபி (ஸல்) அவர்களிடம் ஜைதுப்னு அர்கம் இச்செய்தியைக் கூறிவிட்டார் என்ற விவரம் அப்துல்லாஹ் இப்னு உபைக்கு தெரியவந்தது. உடனே அவன் நபியவர்களைச் சந்தித்து தான் அப்படி எதுவும் பேசவில்லை என்று சத்தியம் செய்து கூறினான். நபி (ஸல்) அவர்களுடன் இருந்த சில அன்சாரிகள், “அல்லாஹ்வின் தூதரே! ஜைது சிறுவர். அவர்

சரியாக விளங்கி இருக்கமாட்டார். இப்னு உபை கூறிய சொல்லை அச்சிறுவர் சரியாக நினைவில் வைக்கத் தெரியாது. எனவே, இப்னு உபை கூறுவதை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றனர்.

இது தொடர்பாக ஜைது இப்னு அர்கம் அவர்களே கூறுகிறார்கள்: ''மக்கள் என்னை பொய்யர் என்று கூறியதால் எனக்கு இதுவரை ஏற்பட்டிராத பெரும் கவலை ஏற்பட்டு நான் எனது வீட்டிலேயே உட்கார்ந்து கொண்டேன். அந்நிலையில் எனது கூற்றை உண்மைப்படுத்தி குர்ஆனில் அத்தியாயம் 63ல் ஒன்று முதல் எட்டு வரை உள்ள வசனங்களை அல்லாஹ் இறக்கினான்.

ஜைது இப்னு அர்கம் (ரழி) கூறுகிறார்கள்: ''இந்த வசனங்களை நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் இறக்கி வைத்தவுடன் அவர்கள் என்னை அழைத்து இவற்றைக் ஓதிக்காண்பித்து அல்லாஹ் உன்னை உண்மைப்படுத்தி விட்டான்'' என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

நயவஞ்சகனான அப்துல்லாஹ் இப்னு உபைக்கு ஒரு மகன் இருந்தார். அவரது பெயரும் அப்துல்லாஹ்தான். இவர் சிறப்புமிக்க நபித்தோழர்களில் ஒருவராக விளங்கினார். இவர் தனது தந்தையின் செயல்களைப் பற்றி தெரிந்தவுடன் அவனிடமிருந்து விலகிக் கொண்டார். முஸ்லிம்கள் மதீனாவுக்குத் திரும்பிய போது மதீனாவின் நுழைவாயிலில் தனது வாளை உருவியவராக இவர் நின்று கொண்டார். அவரது தந்தை இப்னு உபை அங்கு வந்த போது தனது தந்தை என்று கூட பார்க்காமல் ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நபி (ஸல்) உன்னை அனுமதிக்காத வரை நீ இங்கிருந்து செல்ல முடியாது. நிச்சயமாக நபியவர்கள்தான் கண்ணியமிக்கவர், நீதான் இழிவானவன்'' என்று கூறி அவனைத் தடுத்து விட்டார். நபி (ஸல்) அங்கு வந்து அவனுக்கு மதீனாவிற்குள் செல்ல அனுமதி அளிக்கவே அப்துல்லாஹ் (ரழி) அவனுக்கு வழிவிட்டார்கள். மேலும், அவர் இந்நிகழ்ச்சியைக் கேள்விப்பட்ட போதே ''அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் அவனைக் கொல்ல வேண்டும் என்று விரும்பினால் அதைச் செய்ய எனக்குக் கட்டளையிடுங்கள்! நான் அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவனது தலையை உங்களிடம் கொண்டு வருகிறேன்.'' என்று நபி (ஸல்) அவர்களிடம் கூறியிருந்தார். (இப்னு ஹிஷாம்)

2) அவதூறு சம்பவம்:

இப்போரில்தான் இட்டுக்கட்டப்பட்ட அச்சம்பவம் நடைபெற்றது. அதன் சுருக்கமாவது:

நபி (ஸல்), பயணத்தில் மனைவிமார்களில் யாரை உடன் அழைத்துச் செல்வது என சீட்டுக் குலுக்கிப் போடுவது வழக்கம். அவ்வாறே இப்பயணத்தில் ஆயிஷா (ரழி) அவர்களின் பெயர் வரவே, அவரைத் தன்னுடன் அழைத்துச் சென்றார்கள். போர் முடிந்து திரும்பிக் கொண்டிருந்த போது படைகளுடன் ஓர் இடத்தில் தங்கினார்கள். அங்கு ஆயிஷா (ரழி) தங்களது சுய தேவைக்காக வெளியே சென்று விட்டுத் திரும்பி வந்தார்கள். அவர்கள் பயணத்தில் வரும் போது தனது சகோதரி ஒருவரிடமிருந்து கழுத்து மாலை ஒன்றை இரவல் வாங்கி வந்திருந்தார். அவர்கள் சென்ற இடத்தில் அந்த மாலை விழுந்து விட்டது. அது அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்கள் தங்களின் கூடாரத்திற்கு வந்த பிறகு அது தவறியது தெரிய வரவே, அதைத் தேடிச் சென்றார்கள். அவர்கள் சென்றதை யாரும் பார்க்கவில்லை. நிலைமை இவ்வாறு இருக்க நபியவர்கள் தங்கள் தோழர்களுக்குப் பயணத்தைத் தொடர கட்டளையிட்டார்கள்.

ஆயிஷா (ரழி) அமர்ந்து வந்த தொட்டியை ஒட்டகத்தின் மீது ஏற்றுவதற்காக வந்தவர்கள் ஆயிஷா (ரழி) அதில் இருக்கிறார் என்றெண்ணி அதை ஒட்டகத்தின் மீது ஏற்றிவிட்டார்கள். ஏற்றி வைத்தவர்கள் இரண்டுக்கும் மேற்பட்டவர்களாக இருந்ததால் தொட்டி எடை குறைந்திருந்ததை அறிந்து கொள்ள முடியவில்லை. மேலும், ஆயிஷா (ரழி)

வாலிபப் பெண்ணாக இருந்ததால் உடல் பருமன் இல்லாமல் மெலிந்தவராக இருந்தார். ஒருவர் அல்லது இருவர் கஜாவா பெட்டியைத் தூக்கியிருந்தால் ஆயிஷா (ரழி) அதில் இல்லாததை உணர்ந்திருக்க முடியும்.

இதற்குப் பின் அனைவருமே அங்கிருந்து பயணித்து விட்டனர்.

மாலையைத் தேடிச் சென்ற ஆயிஷா (ரழி) அதைக் கண்டுபிடித்து எடுத்துக் கொண்டு தனது இருப்பிடம் திரும்பிய போது அங்கு ஒருவரும் இருக்கவில்லை. தன்னைக் காணவில்லை என்று தெரிந்தவுடன் தேடி வருவார்கள் என்று எண்ணி ஆயிஷா (ரழி) அங்கேயே தங்கி விட்டார்கள். அல்லாஹ் தனது காரியத்தில் மிகைத்தவன். அர்ஷுக்கு மேலிருந்து கொண்டு தான் நாடியபடி அனைத்தையும் நிர்வகிக்கின்றான். ஆயிஷா (ரழி) கண்ணயர்ந்து தூங்கி விட்டார்கள். அப்போது அங்கு வந்த ஸஃப்வான் இப்னு முஅத்தல் (ரழி) “இன்னாலில்லா வ இன்னா இலை ராஜிவூன். அல்லாஹ்வின் தூதரின் மனைவியாயிற்றே!” என்று உரக்கக் கூறினார். இதைக் கேட்ட ஆயிஷா (ரழி) விழித்தெழுந்தார்கள். ஸஃப்வான் (ரழி) படையின் பிற்பகுதியில் தங்கியிருந்தார் அவர் அதிகம் தூங்குபவராக இருந்தார். ஆயிஷா (ரழி) அவர்களை “ஜாப்ம் (பர்தா) உடைய சட்டம் வருவதற்கு முன் பார்த்திருந்ததால் இப்போது பார்த்தவுடன் அறிந்து கொண்டார். தனது ஒட்டகத்தை இழுத்து வந்து அவர்களுக்கருகில் உட்கார வைத்தவுடன் அதன்மீது ஆயிஷா (ரழி) ஏறிக் கொண்டார்கள். அன்னை ஆயிஷாவிடம் வேறு எவ்வித பேச்சும் ஸஃப்வான் (ரழி) பேசவில்லை. ஆயிஷா (ரழி) ‘இன்னாலில்லா வ இன்னா இலை ராஜிஊன்’ என்பதைத் தவிர ஸஃப்வானிடமிருந்து வேறு எந்த சொல்லையும் கேட்கவில்லை.

ஸஃப்வான் (ரழி) அவர்கள் ஒட்டகத்தை இழுத்தவராக நபி (ஸல்) அவர்களின் சமூகம் வந்து சேர்ந்தார். அப்போது முஸ்லிம்களின் படை மதிய நேரத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார்கள். இக்காட்சியைப் பார்த்த மக்கள் ஒவ்வொருவரும் தங்களின் பாணியில் தங்களின் பண்பிற்கேற்ப பேசினார்கள். அப்போதுதான் அல்லாஹ்வின் எதிரியான தீயவன் இப்னு உபை தனது குரோதத்தையும், நயவஞ்சகத்தையும் வெளிப்படுத்தினான். ஓர் அவதூறான கதையைப் புனைந்து, அதை மக்களுக்கு மத்தியில் இரகசியமாகவும், பகிரங்கமாகவும் பரப்பினான். அவனது நண்பர்களும் அவனுடன் இக்காரியத்தில் ஈடுபட்டனர்.

முஸ்லிம்கள் மதீனா திரும்பியதற்குப் பின் கதையை புனைவதில் பாவிகள் மிகத் தீவிரமாக ஈடுபட்டனர். நபியவர்களோ எந்த பதிலும் கூறாமல் அமைதியாக இருந்தார்கள். பின்பு அல்லாஹ்விடமிருந்து அறிவிப்பு வருவது தாமதமாகிவிடவே, ஆயிஷாவைப் பிரிந்து விடும் விஷயத்தில் தங்களது தோழர்களிடம் ஆலோசனை செய்தார்கள். ஆயிஷா (ரழி) பிரிந்து விட்டு வேறொருவரை மணந்து கொள்ள அலீ (ரழி) மறைமுகமாக ஆலோசனை சொன்னார்கள். உஸாமா இப்னு ஜைதும் (ரழி) மற்ற தோழர்களும் “எதிரிகளின் பேச்சைப் பொருட்படுத்த வேண்டாம். ஆயிஷாவைப் பிரிந்து விடாதீர்கள்” என்று ஆலோசனைக் கூறினார்கள்.

நபி (ஸல்) மிம்பரின் மீது ஏறி அப்துல்லாஹ் இப்னு உபையிடம் தங்களது மன வருத்தத்தைத் தெரிவித்தார்கள். இது அவ்ஸ் கிளையினரின் தலைவர் உஸைது இப்னு ஹுளைருக்குக் கோபத்தை மூட்டியது. அவர் அப்துல்லாஹ் இப்னு உபையைக் கொல்ல வேண்டும் என்ற தனது கருத்தைத் தெரிவித்தார்கள். ஆனால், இப்னு உபையின் கிளையைச் சேர்ந்த கஸ்ரஜினன் தலைவர் ஸஅது இப்னு உபாதாவிற்கு தனது இனத்தவரை இவ்வாறு கூறியது வெறுப்பை மூட்டியது. இதனால் இரு கிளையினருக்கிடையே கடும் வாக்குவாதம் ஏற்பட்டது. நபி (ஸல்) அவ்விரு கிளையினரையும் சமாதானப்படுத்தினார்கள்.

போரிலிருந்து திரும்பியவுடன் ஒரு மாத காலமாக ஆயிஷா (ரழி) உடல் நலம் குன்றியிருந்தார். தன்னைப் பற்றி பேசப்பட்டு வந்த பொய்யான கதையை ஆயிஷா (ரழி) அறிந்திருக்கவில்லை. உடல்நலக் குறைவு ஏற்பட்டால் எந்தளவு நபியவர்கள் பரிவு காட்டு வார்களோ அந்தப் பரிவை நபி (ஸல்) அவர்களிடம் இப்போது அன்னை ஆயிஷா (ரழி) பார்க்கவில்லை.

சற்று உடல் நலம் தேறியது. ஓர் இரவு 'உம்மு மிஸ்தஹ்' என்ற தோழியுடன் சுயதேவையை நிறைவேற்றுவதற்காக இரவில் வெளியில் சென்றார்கள். அன்னை ஆயிஷா (ரழி) அவர்களைப் பற்றி மதீனாவில் உலா வரும் வதந்திகளில் உம்மு மிஸ்தஹுடைய மகனும் பங்கு பெற்றுள்ளார். இந்தக் கவலையும் சிந்தனையும் உம்மு மிஸ்தஹை அதிகம் பாதிப்படைய வைத்தது. ஆயிஷா (ரழி) அவர்களுடன் சென்று கொண்டிருக்கும் போது தனது மகனுக்கு அவதூறு விஷயத்தில் தொடர்புள்ளது என்று எவ்வாறு அவர்களிடம் கூறுவது? இதே குழப்பத்தில் மனம் உழன்று கொண்டிருக்கும் போது உம்மு மிஸ்தஹ் (ரழி) தன்னுடைய ஆடையால் தடுக்கிக் கீழே விழுந்தார், அப்போது தன்னை அறியாமலேயே அவர்கள் தனது மகனைத் திட்டினார்கள். "நீ கீழே விழுந்ததற்கு உன் மகனை ஏன் திட்டுகிறாய்?" என்று ஆயிஷா (ரழி) வினவிய போது, உம்மு மிஸ்தஹ் (ரழி) ஆயிஷா (ரழி) அவர்களைப் பற்றி மக்களிடையே பரப்பப்பட்ட அவதூறுகளைக் கூறினார்.

உம்மு மிஸ்தஹ் (ரழி) செய்தியைக் கூறிய உடனேயே, ஆயிஷா (ரழி) வீட்டிற்குத் திரும்பினார்கள். தனது பெற்றோர்களிடம் சென்று செய்தியை உறுதியாக தெரிந்துவர நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார்கள். நபி (ஸல்) அனுமதி பெற்று, பெற்றோர்களைச் சந்தித்து உண்மை நிலவரத்தைத் தெரிந்து கொண்டவுடன் ஆயிஷா (ரழி) வேதனை பொறுக்க முடியாமல் அழுதார்கள். இரண்டு இரவும் ஒரு பகலும் தூங்காமல் அழுது கொண்டேயிருந்தார்கள். அவர்களது இந்த அழுகை அன்னாரின் ஈரலைப் பிளந்துவிடுமளவுக்கு இருந்தது.

அப்போதுதான் நபி (ஸல்) அங்கு வந்து இறைவனைப் புகழ்ந்து துதித்துவிட்டு "ஆயிஷாவே! உன்னைப் பற்றி எனக்கு இவ்வாறெல்லாம் செய்தி கிடைத்தது. நீ குற்றமற்றவளாக இருந்தால் அல்லாஹ் உன்னை அப்பழியிலிருந்து நிரபராதியாக ஆக்குவான் உண்மையில் நீ பாவம் செய்திருந்தால் அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேள் அவனிடம் பாவமீட்சி பெற்றுக்கொள். ஏனெனில், நிச்சயமாக அடியாரின் தனது பாவத்தை ஒப்புக்கொண்டு அல்லாஹ்விடம் பாவமீட்சிக் கோரினால் நிச்சயமாக அல்லாஹ் அவனது பாவங்களை மன்னித்து விடுவான்" என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் இந்த வார்த்தையைக் கேட்ட ஆயிஷா (ரழி) அவர்கள் தனது அழுகையை நிறுத்தி, பெற்றோர் ஒவ்வொருவரிடமும் நபி (ஸல்) அவர்களுக்குப் பதில் அளிக்குமாறு கூறினார்கள். ஆனால், அவர்களுக்கு என்ன பதிலளிப்பது என்று தெரியவில்லை. அப்போது ஆயிஷா (ரழி) "நான் நிலைமை என்னவென்று நன்கு தெரிந்து கொண்டேன். இந்தச் செய்தியை நீங்கள் பலமுறை கேள்விப்பட்டதால் அது உங்களின் உள்ளங்களில் ஆழப் பதிந்து விட்டது. அது உண்மை என்று நீங்கள் நம்பியும் விட்டீர்கள்! அல்லாஹ்வுக்குத் தெரியும் நான் குற்றமற்றவள் என்று! நான் உங்களுக்கு என்னைப் பற்றி குற்றமற்றவள் என்று கூறினால் நீங்கள் அது விஷயத்தில் என்னை நம்ப மாட்டீர்கள்! நான் குற்றமற்றவள் என்பதை அல்லாஹ் நன்கறிவான். ஆனால், நான் இவ்விஷயத்தை ஒப்புக் கொண்டால் மட்டும் நீங்கள் என்னை நம்பிவிடுவீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எனக்கும் உங்களுக்கும் யூஸுஃப் நபியின் தந்தை யஅகூப் (அலை) கூறிய,

ஆகவே, (அத்துக்கத்தைச்) சகித்துக் கொள்வதுதான் நன்று. நீங்கள் கூறியவற்றில் அல்லாஹ்விடம் உதவி தேடுகிறேன்". (அல்குர்ஆன் 12:18)

என்ற வார்த்தையைத் தவிர வேறு வார்த்தையைக் கூற எனக்குத் தெரியவில்லை.

பின்பு தன் முகத்தைத் திருப்பி சாய்ந்து படுத்துக் கொண்டார்கள். அதே நேரத்தில் நபி (ஸல்) அவர்களுக்கு இறைச் செய்தி அருளப்பட்டது. அது முடிந்தவுடன் நபி (ஸல்) சிரித்தவர்களாக “ஆயிஷாவே! அல்லாஹ் உன்னை நிரபராதி ஆக்கிவிட்டான்” என்று கூறினார்கள். அப்போது ஆயிஷா (ரழி) அவர்களின் தாயார் “ஆயிஷாவே! நபியிடம் எழுந்து செல்” என்று கூறினார்கள். அதற்கு “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் அவர்களிடம் எழுந்து செல்ல மாட்டேன். மேலும் நான் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் புகழவுமாட்டேன்” என்று கூறினார்கள்.

ஆயிஷா (ரழி), தான் நிரபராதி என்பதாலும், தன்னை நபி (ஸல்) நேசிக்கிறார்கள் என்பது உறுதியாகத் தெரிந்திருந்ததாலும் இவ்வாறு கூறினார்கள்.

இந்தப் பொய்யான சம்பவம் தொடர்பாக அல்லாஹ் குர்ஆனின் 24 ஆம் அத்தியாயத்தில் 11லிருந்து 20 வரை உள்ள வசனங்களை இறக்கினான்.

இந்த சம்பவத்தை இட்டுகட்டியவர்களில் - மிஸ்தஹ், ஹஸ்ஸான், ஹம்னா பின்த் ஜஹ்ஷ் ஆகியோருக்கு 80 கசையடிகள் கொடுக்கப்பட்டன. ஆனால், இவர்களுக்கெல்லாம் தலைவனாக இருந்த அப்துல்லாஹ் இப்னு உபையை அடிக்கவில்லை. இவன்தான் இதற்கு மூல காரணமாவான். இவனைத் தண்டிக்காமல் விட்டதற்குக் காரணம் என்னவெனில், உலகத்தில் யார் மீது தண்டனைகள் நிறைவேற்றப்பட்டு விடுகிறதோ அவர்கள் மறுமையில் தண்டிக்கப்பட மாட்டார்கள். ஆனால், மறுமையில் மகத்தான தண்டனை இவனுக்கு உண்டென அல்லாஹ் குர்ஆனில் இவனைப் பற்றி எச்சரிக்கை செய்து விட்டான். எனவே, இவ்வுலகில் இவனுக்கு தண்டனை நிறைவேற்றப்படவில்லை அல்லது எந்த நலனைக் கருதி நபி (ஸல்) இவனை முன்பு கொலை செய்யாமல் விட்டுவிட்டார்களோ அதே நலனைக் கருதி இந்த தண்டனையையும் நிறைவேற்றாமல் விட்டிருக்கலாம். (ஸஹீஹுல் புகாரி, ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

ஒரு மாதத்திற்குப் பின் இந்தப் பிரச்சனையால் உண்டான சந்தேகம் மற்றும் குழப்பங்கள் மதீனாவை விட்டு முற்றிலுமாக அகன்றன. நயவஞ்சகர்களின் தலைவன் இப்னு உபை பெரும் கேவலமடைந்தான். இந்த இழிவுக்குப் பின் சமூகத்தில் அவன் தலையை நிமிர்த்த முடியவில்லை.

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: இச்சம்பவத்திற்குப் பின் இப்னு உபை ஏதாவது பேசினால் அவனது கூட்டத்தினரே அவனைக் கண்டித்து அடக்கி விடுவார்கள். இதைப் பார்த்த நபியவர்கள் உமர் (ரழி) அவர்களிடம் “உமரே நீர் என்ன கருதுகிறீர்? நீர் என்னிடம் அவனைக் கொலை செய்ய வேண்டும் என்று கூறிய அன்றே நான் இவனைக் கொலை செய்திருந்தால் அவனது கூட்டத்தினர் என் மீது மிகுந்த கோபம் அடைந்திருப்பார்கள். ஆனால், இன்று அவனது கூட்டத்தனரிடம் அவனைக் கொலை செய்து விடுங்கள் என்று நான் கூறினால் அவர்கள் அவனைக் கொலை செய்து விடுவார்கள்” என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களின் இவ்வார்த்தையைக் கேட்ட உமர் (ரழி) “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதருடைய செயல் எனது செயலைவிட நேர்த்திமிக்கது என்பதை இப்போது நான் உறுதியாக தெரிந்து கொண்டேன்” என்றார்கள். (இப்னு ஹிஷாம்)

### குழுக்களும் படைப்பிரிவுகளும்

சற்று முன் கூறப்பட்ட முரைஸீ போருக்குப் பின் அனுப்பப்பட்ட குழுக்கள் மற்றும் படைப் பிரிவுகளைப் பற்றி இங்கு நாம் கூறயிருக்கிறோம்:

1) ‘அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்’ படைப் பிரிவு: ஹிஜ்ரி 6, ஷஅபான் மாதத்தில் ‘தவ்மதுல் ஜன்தல்’ எனும் பகுதியில் இருக்கும் கல்பு கிளையினரின் ஊர்களுக்கு அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) அவர்களுடன் ஒரு படைப்பிரிவை நபி (ஸல்) அனுப்பினார்கள். அனுப்பும் போது அவரை நபி (ஸல்) தனக்கு முன் அமர வைத்து, தனது கரத்தால் அவருக்குத் தலைப்பாகை கட்டிவிட்டார்கள். மேலும், போரில் மிக அழகிய முறைகளைக் கையாள வேண்டும் என்று உபதேசம் செய்ததுடன் “அவர்கள் உமக்கு கீழ்ப்படிந்து விட்டால் அவர்களுடைய தலைவன் மகளை நீர் திருமணம் செய்துகொள்!” என்றும் கூறினார்கள்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) அங்கு சென்று மூன்று நாட்கள் தங்கி அந்தக் கூட்டத்தினருக்கு இஸ்லாமிய அழைப்பு விடுத்தார்கள். அவர்களின் அழைப்பை ஏற்று அக்கூட்டத்தினர் அனைவரும் இஸ்லாமைத் தழுவினர். அதன் பின் ‘துமாழிர் பின்த் அஸ்பக்’ என்ற பெண்ணை அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) திருமணம் செய்து கொண்டார்கள். இப்பெண்மணி பிரபல்யமான நபித்தோழர் அபூஸலமாவின் தாயாராவார். இப்பெண்மணியின் தந்தைதான் கல்பு இனத்தவன் தலைவராக இருந்தார்.

2) ‘அலீ இப்னு அபூதாலிப்’ படைப் பிரிவு: ஹிஜ்ரி 6, ஷஅபான் மாதத்தில் ‘ஃபதக்’ எனும் ஊரில் உள்ள ஸஅது இப்னு பக்ரு கிளையினரிடம் அலீ இப்னு அபூதாலிப் (ரழி) அவர்களை 200 வீரர்களுடன் நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். இக்கிளையினரில் ஒரு பிரிவினர் கைபரிலுள்ள யூதர்களுக்கு உதவி செய்ய விரும்புகின்றனர் என்ற செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியதால் அவர்கள் இப்படையை அனுப்பினார்கள். அலீ (ரழி) இரவில் பயணம் செய்வதும், பகலில் பதுங்கிக் கொள்வதுமாக தனது பயணத்தைத் தொடர்ந்தார்கள். வழியில் ஒரு நாள் அலீ (ரழி) அக்கூட்டத்தைச் சேர்ந்த ஒற்றன் ஒருவனைப் பிடித்தார்கள். “யூதப் பகுதியான கைபரில் விளையும் பேரீத்தம் பழங்களில் ஒரு பெரும் பங்கை யூதர்கள் ஸஅது இப்னு பக்ர் கிளையினருக்கு வழங்கினால், அக்கிளையினர் யூதர்களுக்கு உதவிடுவார்கள்” என்பதைத் தெரிவிப்பதற்காகத் தன்னை அனுப்பினர் என்பதை, பிடிப்பட்ட ஒற்றன் ஒப்புக் கொண்டது மட்டுமின்றி, அக்கிளையினர் குழுமியிருந்த இடத்தையும் காட்டிக் கொடுத்தான். அவர்கள் மீது அலீ (ரழி) போர் தொடுத்து 500 ஒட்டகைகளையும், 2000 ஆடுகளையும் கைப்பற்றினார். அக்கிளையினர் அங்கிருந்து தப்பித்து ‘ளுவுன்’ என்ற இடத்திற்கு ஓடிவிட்டனர். வபர் இப்னு உலைம் என்பவன் இக்கிளையினருக்குத் தலைமை தாங்கி வந்திருந்தான்.

3) ‘அபூபக்ர் (அ) ஜைது’ படைப் பிரிவு: ஹிஜ்ரி 6, ரமழான் மாதத்தில் ‘வாதில் குரா’ என்ற இடத்திற்கு அபூபக்ர் (ரழி) அல்லது ஜைது இப்னு ஹாஸா (ரழி) அவர்களின் தலைமையின் கீழ் ஒரு படைப் பிரிவை நபி (ஸல்) அனுப்பினார்கள். அங்கு வசிக்கும் ஃபஜாரா கிளையினரின் ஒரு பிரிவினர் நபியவர்களைக் கொலை செய்ய வஞ்சகமாகத் திட்டமிடுகிறார்கள் என்ற செய்தி கிடைத்ததை முன்னிட்டு இப்படையை அனுப்பப்பட்டது.

ஸலமா இப்னு அக்வஉ (ரழி) கூறுகிறார்: நானும் இப்படையில் சென்றிருந்தேன். நாங்கள் ஸுப்ஹு தொழுகையை முடித்த பின் அவர்களைத் தாக்கினோம். பிறகு அவர்களின் கிணற்றுக்கு அருகில் நாங்கள் ஒன்று சேர்ந்தோம். இந்தத் தாக்குதலில் எதிரிகளில் பலர் கொல்லப்பட்டனர். சிலர் தங்கள் பிள்ளைகளுடன் மலையை நோக்கி ஓடுவதைப் பார்த்தேன். அவர்கள் தப்பித்து மலையில் ஏறிவிடக் கூடாது என்பதற்காக வேகமாக ஓர் அம்பை எடுத்து அவர்களுக்கும் மலைக்கும் நடுவில் எறிந்தேன் அம்பைப் பார்த்த அவர்கள் நின்று விட்டனர். அக்கூட்டத்தில் பெண் ஒருத்தி இருந்தாள் அவளது பெயர் உம்மு கிர்ஃபா் அவள் தோல் ஆடை அணிந்திருந்தாள் அவளுக்கு மிக அழகிய மகள் ஒருத்தி இருந்தாள். நான் அவர்கள் அனைவரையும் அழைத்துக் கொண்டு அபூபக்ர் (ரழி) அவர்களிடம் வந்தேன். அபூபக்ர் (ரழி) எனக்கு அவளின் மகளைப் பரிசாக அளித்தார்கள். ஆனால், நான் அவளைத் தொடவில்லை. பிறகு நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்ற

பின் நபியவர்கள் அவளை என்னிடமிருந்து பெற்று மக்காவிற்கு அனுப்பினார்கள். அவளை குறைஷிகளிடம் கொடுத்து, அங்கு கைதிகளாக இருந்த முஸ்லிம்களை விடுதலை செய்தார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

உம்மு கிர்ஃபா என்ற இப்பெண் ஒரு பெரும் தீயவளாக இருந்தாள். இவள் நபி (ஸல்) அவர்களைக் கொலை செய்வதற்காக தனது குடும்பத்திலிருந்து முப்பது குதிரை வீரர்களைத் தயார் செய்திருந்தாள். அந்த முப்பது நபர்களும் கொல்லப்பட்டனர். அவளும் உரிய தண்டனையைப் பெற்றாள்.

4) ‘குர்ஸ்’ படைப் பிரிவு: உகல் மற்றும் உரைனாவைச் சேர்ந்த ஒரு கூட்டம் மதீனாவுக்கு வந்து தங்களை முஸ்லிம்கள் என்று வெளிப்படுத்திக் கொண்டனர். மதீனாவில் தங்கிய அவர்களுக்கு அங்குள்ள தட்பவெப்ப நிலை ஒத்துக் கொள்ளாததின் காரணமாக நோயுற்றார்கள். நபி (ஸல்) இக்கூட்டத்தினரை முஸ்லிம்களின் ஒட்டகங்கள் மேயும் இடங்களுக்குச் சென்று அங்கு தங்கி அதன் பாலையும், சிறுநீரையும் குடிக்கும்படி கூறினார்கள். அவ்வாறு செய்து அவர்கள் உடல் சுகமடைந்தனர். பிறகு அந்தக் கூட்டத்தினர் நபி (ஸல்) அவர்களின் இடையரைக் கொலை செய்துவிட்டு அங்குள்ள ஒட்டகங்களையும் ஓட்டிச் சென்றதுடன் இஸ்லாமிய மார்க்கத்தையும் புறக்கணித்தனர். இவர்களைத் தேடிப் பிடித்துவர நபி (ஸல்) 20 தோழர்களை குர்ஸ் இப்னு ஜாபிர் ஃபஹ்ரி (ரழி) அவர்களின் தலைமையின் கீழ் அனுப்பினார்கள்.

இந்த நிகழ்ச்சி ஹிஜ்ரி 6, ஷவ்வால் மாதத்தில் நடந்தது. அப்போது நபி (ஸல்) அந்த உரைனாவினர் மீது சாபமிட்டார்கள். “அல்லாஹ்வே! அவர்களின் பாதையை அவர்களுக்கு மறைத்துவிடு, தண்ணீர் துருத்தியின் வாயை விட அவர்களுக்குப் பாதையை மிக நெருக்கடியாக ஆக்கிவிடு!” என்று பிரார்த்தித்தார்கள். பாதையை அல்லாஹ் அவர்களுக்கு மறைத்து விட்டான். எனவே, அவர்கள் அனைவரையும் முஸ்லிம்கள் இலகுவாகப் பிடித்தனர். அவர்களின் கைகள், கால்கள் வெட்டப்பட்டு, கண்களுக்குச் சூடு வைக்கப்பட்டது. அவர்கள் எவ்வாறு ஒட்டக இடையர்களைக் கொலை செய்தார்களோ அவ்வாறே அவர்களின் செயல்களுக்கு ஏற்றவாறு இத்தண்டனை வழங்கப்பட்டது. அதன் பின் அவர்களை மதீனாவின் வெளியில் விவசாயக் களத்தில் இதே நிலையில் விடப்பட்டது. அனைவரும் செத்து மடிந்தனர். (ஜாதுல் மஆது)

இந்நிகழ்ச்சி ஸஹீஹுல் புகாரியில் விவரமாக அறிவிக்கப்பட்டுள்ளது.

மேற்கூறப்பட்ட சம்பவங்களுடன் வரலாற்று ஆசிரியர்கள் மற்றொரு படைப் பிரிவின் நிகழ்ச்சியையும் குறிப்பிடுகின்றனர். அதாவது: அபூஸுஃப்யான் தன்னை கொலை செய்ய ஒரு கிராம அரபியை அனுப்பியிருக்கிறார் என்ற செய்தி அறிந்தவுடன் நபியவர்கள் அம்ரு இப்னு உமைய்யா ழம் மற்றும் ஸலமா இப்னு அபூஸலமா ஆகிய இருத்தோழர்களையும் அபூ ஸுஃப்யானைக் கொலை செய்ய அனுப்பினார்கள். ஆனால், இந்த நோக்கத்தில் எவரும் வெற்றியடையவில்லை. இந்நிகழ்ச்சி ஹிஜ்ரி 6, ஷவ்வால் மாதம் நடந்தது.

மேற்கூறப்பட்ட அனைத்து சிறிய பெரிய சம்பவங்கள், அகழ் மற்றும் குறைளா போர்களுக்குப் பின் நடைபெற்றவையாகும். இவற்றுள் எதிலும் கடுமையானச் சண்டை ஏதும் ஏற்படவில்லை. சில சம்பவங்களில் சிறிய மோதல்கள் மட்டும் ஏற்பட்டன. சுற்று வட்டார நிலைமைகளை அறிந்து வருவது அல்லது அடங்காமல் இருந்த கிராம அரபிகளையும் எதிரிகளையும் அச்சுறுத்தி, சட்ட ஒழுங்கை நிலைநிறுத்துவது ஆகியவையே அனுப்பப்பட்ட படைப் பிரிவுகளின் நோக்கமாக இருந்தது.

நிலைமைகளை நன்கு ஆராய்ந்து பார்க்கும் பொழுது நமக்குத் தெரியவருவது என்னவெனில், அகழ் போருக்குப் பின்பு முஸ்லிம்களின் நிலைமை முன்னேற்றம் கண்டது.

இஸ்லாமுடைய எதிரிகளின் நிலைமைகளும் அவர்களின் ஆற்றல்களும் சரியத் தொடங்கின. இதனால் இஸ்லாமிய அழைப்புப் பணியை அழிக்க வேண்டும், அதன் பலத்தைக் குறைக்க வேண்டும் என்ற கொஞ்ச நஞ்ச ஆசையும் இறைமறுப்பாளர்களுக்கு எஞ்சியிருக்கவில்லை. ஆகவே, இஸ்லாமின் ஆற்றலை ஏற்று அதற்குப் பணிந்து, அரபு தீபகற்பத்தில் இஸ்லாம் நிலைபெறுவதை ஏற்றுக் கொள்வது தவிர அவர்களுக்கு வேறு வழியில்லாமல் போய்விட்டது. இஸ்லாமின் இந்த முன்னேற்றத்தை 'ஹுதைபிய்யா உடன்படிக்கை' மூலம் நாம் மிகத் தெளிவாக விளங்கிக் கொள்ளலாம்.

## ஹுதைபிய்யா (ஹிஜ்ரி 6, துல்கஅதா)

### உம்ரா

அரபு தீபகற்பத்தில் நிலைமைகள் பெருமளவு முஸ்லிம்களுக்குச் சாதகமாக மாறின. சிறிது சிறிதாக மாபெரும் வெற்றிக்கான முன் அறிவிப்புகளும், இஸ்லாமிய அழைப்புப் பணி முழுமையாக வெற்றியடைவதற்கான அடையாளங்களும் தோன்றின. மக்காவிலுள்ள கண்ணியமிக்க பள்ளி வாசலில் (அல் மஸ்ஜிதுல் ஹராமில்) கடந்த ஆறு ஆண்டுகளாக இறைவணக்கத்தை நிறைவேற்ற முடியாமல் இணைவைப்பவர்களால் முஸ்லிம்கள் தடுக்கப்பட்டு வந்தனர் என்பது தெரிந்ததே. இப்போது அப்பள்ளியில் வணக்க வழிபாடுகள் நிறைவேற்றுவதற்குரிய உரிமை முஸ்லிம்களுக்கு உண்டு என்பதை இணைவைப்பவர்கள ஏற்றுக் கொள்ள வைப்பதற்குரிய முன்னேற்பாடுகள் தொடங்கின.

நபி (ஸல்) அவர்கள் ஒரு கனவு கண்டார்கள். அதாவது, "நபியவர்களும் அவர்களது தோழர்களும் புனித பள்ளிக்குள் நுழைகிறார்கள். கஅபாவின் சாவியை நபி (ஸல்) பெறுகிறார்கள். அனைவரும் கஅபாவை வலம் வந்த பின் தங்களது உம்ராவை நிறைவு செய்கிறார்கள். சிலர் மொட்டை அடித்துக் கொள்கின்றனர். சிலர் முடியைக் குறைத்துக் கொள்கின்றனர்." தான் கண்ட இந்தக் கனவை நபி (ஸல்) தங்களது தோழர்களிடம் கூறியபோது அனைவரும் பெரும் மகிழ்ச்சி அடைந்தனர். இதே ஆண்டு அனைவரும் மக்காவிற்குச் செல்வோம் என எண்ணினர். இதற்குப் பின் நபி (ஸல்) தங்களது தோழர்களிடம் தான் உம்ராவிற்குச் செல்ல இருப்பதாகவும், நீங்களும் அதற்குத் தயாராக வேண்டுமென்றும் கூறினார்கள்.

### முஸ்லிம்களே புறப்படுங்கள்

நபி (ஸல்) மதீனாவில் உள்ள முஸ்லிம்களையும், சுற்று வட்டார முஸ்லிம் கிராமவாசிகளையும் தன்னுடன் புறப்படுமாறு கூறினார்கள். ஆனால், பெரும்பாலான கிராமவாசிகள் புறப்படுவதில் தயக்கம் காட்டினார்கள். நபி (ஸல்) தங்களது ஆடைகளைக் கழுவி சுத்தம் செய்து கொண்டதுடன் பயணத்திற்காகக் 'கஸ்வா' என்ற தங்களது ஒட்டகத்தையும் தயார் செய்து கொண்டார்கள். மதீனாவில் இப்னு உம்மு மக்தூம் அல்லது நுமைலா லைஸி (ரழி) என்பவரைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். ஹிஜ்ரி 6, துல்கஅதா மாதத்தின் தொடக்கத்தில் திங்கட்கிழமை நபி (ஸல்) மதீனாவிலிருந்து புறப்பட்டார்கள். நபியவர்களுடன் அவர்களின் மனைவி உம்மு ஸலமாவும் 1400 அல்லது 1500 தோழர்களும் புறப்பட்டனர். ஒரு பயணிக்கு அவசியமான ஆயுதத்தைத் தவிர வேறு எந்த ஆயுதங்களையும் நபியவர்கள் தங்களுடன் எடுத்துக் கொள்ளவில்லை. மேலும், எடுத்துக் கொண்ட ஆயுதங்களையும் வெளியில் தெரியாமல் அவைகளின் உறைக்குள் மறைத்து வைத்திருந்தார்கள்.

### மக்காவை நோக்கி

நபி (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் மக்காவை நோக்கிப் புறப்பட்டார்கள். வழியில் 'துல் ஹுலைஃபா' என்ற இடத்தில் தாங்கள் அழைத்து வந்த குர்பானி பிராணிகளுக்கு

மாலையிட்டு அடையாளமிட்டார்கள். தாங்களும் உம்ராவிற்காக ஆடை அணிந்து கொண்டார்கள். எவரும் தங்களிடம் போர் செய்யக் கூடாது தானும் போருக்காகப் புறப்படவில்லை என்பதை மக்களுக்கு அறிவித்து அவர்களை அச்சமற்றவர்களாக ஆக்கினார்கள்.

மக்கா குறைஷிகளின் நிலையை அறிந்து, தன்னிடம் தெரிவிப்பதற்காக குஜாஆ கிளையைச் சேர்ந்த ஒற்றர் ஒருவரை நபி (ஸல்) நியமித்து, தனக்கு முன் அவரை அனுப்பி வைத்தார்கள். நபி (ஸல்) 'உஸ்ஃபான்' என்ற இடத்தில் இருக்கும் போது அங்கு நபியவர்களின் ஒற்றர் வந்து "கஅப் இப்னு லுவை என்பவன் உங்களை எதிர்ப்பதற்காகவும், அல்லாஹ்வின் இல்லத்தை விட்டும் உங்களைத் தடுப்பதற்காகவும் கினானா குடும்பத்தைச் சேர்ந்த வீரர்களை ஒன்று சேர்த்து வைத்திருக்கிறான்" என்ற அதிர்ச்சி தரும் தகவலைக் கூறினார். அதைக் கேட்ட நபியவர்கள் தங்களது தோழர்களிடம் ஆலோசனை செய்தார்கள்.

"ஒன்று, நம்மை எதிர்ப்பதற்கும் தடுப்பதற்கும் குறைஷிகளுக்கு உதவியாக இருக்கும் கினானாவினன் குடும்பத்தார்களை நாம் சிறை பிடிப்போம். அதனால் அவர்கள் போருக்கு வராமல் பின்வாங்கி, குடும்பத்தை இழந்த துக்கத்தில் மூழ்கலாம். அல்லது அவர்கள் தப்பித்து வேறு எங்காவது சென்றாலும் நம்மை எதிர்க்க வந்தவர்களை அல்லாஹ் முறியடித்ததாக ஆகிவிடும். இரண்டாவது, நாம் அல்லாஹ்வின் வீட்டை நோக்கிப் புறப்படுவோம். யார் நம்மை தடுக்க வருகிறார்களோ அவர்களிடத்தில் நாம் சண்டையிடுவோம்."

"இவ்விரண்டில் உங்களது கருத்து என்ன?" என்று நபி (ஸல்) தங்களது தோழர்களிடம் கேட்டார்கள். அப்போது அபூபக்ர் (ரழி) "அல்லாஹ்வும் அவனது தூதரும் மிக அறிந்தவர்கள். நாம் உம்ரா செய்வதற்காக வந்திருக்கிறோம். எவரிடத்திலும் போர் செய்வதற்காக வரவில்லை. அல்லாஹ்வின் இல்லத்திலிருந்து எவராவது நம்மைத் தடுத்தால் நாம் அவர்களிடத்தில் சண்டையிடுவோம்" என்று கூறினார்கள். அதற்குப் பின் நபி (ஸல்) புறப்படுங்கள் என்று கட்டளையிட, முஸ்லிம்கள் மக்கா நோக்கிப் புறப்பட்டார்கள்.

**தடுக்க முயற்சித்தல்**

நபி (ஸல்) அவர்களின் வருகையைக் கேள்விப்பட்ட குறைஷிகள் அவசர ஆலோசனை சபையைக் கூட்டி, எப்படியாவது முஸ்லிம்களை கஅபத்துல்லாஹ்விற்கு வரவிடாமல் தடுக்க வேண்டும் என்று முடிவெடுத்தனர். கினானா கிளையினரை புறக்கணித்து விட்டு நபியவர்கள் மக்காவை நோக்கி வந்து கொண்டிருந்த போது, கஅப் கிளையைச் சேர்ந்த ஒருவர் "குறைஷிகள் 'தூ துவா' என்ற இடத்தில் வந்து தங்கியிருக்கின்றனர். மேலும், காலித் இப்னு வலீத் 200 குதிரை வீரர்களுடன் 'குராவு கமீம்' என்ற இடத்தில் மக்காவை நோக்கி செல்லும் முக்கிய வழியில் போர் புரிவதற்காகத் தயாராக இருக்கிறார்" என்று அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் எதையும் பொருட்படுத்தாமல் தங்களது பயணத்தைத் தொடர்ந்தார்கள். முஸ்லிம்களைத் தடுக்க வேண்டுமென்று காலித் பெரும் முயற்சி செய்தார். தனது குதிரைப் படையை முஸ்லிம்கள் பார்க்கும் தூரத்தில் கொண்டு வந்து நிறுத்தினார். அப்போது முஸ்லிம்கள் ளுஹர் தொழுகையைத் தொழுதார்கள். இதைப் பார்த்துக் கொண்டிருந்த காலித், "தொழுகையில் ருகூவு ஸுஜூதில் இருக்கும்போது நம்மை இவர்கள் கவனிக்கவில்லை அந்த நேரத்தில் நாம் தாக்கியிருந்தால் இவர்களுக்கு பெரும் சேதத்தை விளைவித்திருக்கலாம். எனவே, இவர்கள் அஸர் தொழும் போது இவர்கள் மீது தாக்குதல் நடத்தலாம் என்றெண்ணி காத்திருந்தார். ஆனால், அஸ்ர் தொழுகைக்கு முன் 'ஸலாத்துல் கவ்ஃப்' அச்சமுள்ள நேரத்தில் எவ்வாறு தொழ வேண்டும் என்ற சட்டத்தை அல்லாஹ்

இறக்கி விட்டான். முஸ்லிம்கள் அந்த அடிப்படையில் தொழுது கொள்ளவே காலிதின் நோக்கம் நிறைவேறாமல் போனது.

**மாற்று நடவடிக்கை**

தங்களுடைய வழியில் காலித் படையுடன் நிற்பதைப் பார்த்த நபி (ஸல்) அவர்கள் தன்யீம் வழியாக மக்கா செல்லும் முக்கிய நேரான பாதையை விட்டுவிட்டு வேறு வழியைத் தேர்ந்தெடுத்தார்கள். மலைகளுக்கிடையில் கற்களும், பாறைகளும் நிறைந்த கரடு முரடான பாதை வழியே, அதாவது வலப்பக்கம் 'ஹம்ஸ்' என்ற ஊரின் புறவழியான 'ஸனிய்யத்துல் முரார்' வழியாக ஹுதைபிய்யா செல்லும் வழியில் பயணத்தைத் தொடங்கினார்கள். இவ்வழி கீழ்ப்புறமாக மக்கா செல்லும் வழியாகும். தான் நின்று கொண்டிருந்த வழியை புறக்கணித்து விட்டு இஸ்லாமியப் படை வேறு வழியில் செல்கிறார்கள் என்று தெரிந்தவுடன், தூரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்த காலித் குறைஷிகளை எச்சரிப்பதற்காக மக்காவிற்கு விரைந்தார்.

நபி (ஸல்) அவர்கள் தங்களது பயணத்தைத் தொடர்ந்து 'ஸனிய்யத்துல் முரார்' என்ற இடத்தை அடைந்தவுடன் அவர்களது வாகனம் அங்கு மண்டியிட்டு உட்கார்ந்து விட்டது. மக்கள் அதை மிரட்டியும் அது எழுந்திருக்காமல் பிடிவாதம் பிடித்தது. அப்போது நபி (ஸல்) "எனது ஒட்டகம் 'கஸ்வா' முரண்டு பிடிப்பதில்லை! அது அத்தகைய குணமுடையதுமல்ல! என்றாலும் யானைப் படைகளைத் தடுத்த அல்லாஹ் இதையும் தடுத்து விட்டான் எனது உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக! அல்லாஹ் மேன்மைபடுத்தியவற்றைக் கண்ணியப்படுத்தும் வகையில் எந்த ஒரு திட்டத்தை குறைஷிகள் என்னிடம் கேட்டாலும் நான் அவர்களுக்கு அத்திட்டத்தை நிறைவேற்றிக் கொடுப்பேன்" என்று கூறிவிட்டு தனது ஒட்டகத்தை அதட்டவே அது குதித்தெழுந்தது. நபியவர்கள் தனது பாதையைத் திருப்பி ஹுதைபிய்யாவின் இறுதியிலுள்ள 'ஸமது' என்ற கிணற்றுக்கு அருகில் தங்கினார்கள். அங்கு மக்களின் தேவையை விட குறைவாகவே தண்ணீர் இருந்தது. ஆனால், மக்கள் அங்கு வந்து இறங்கியவுடனேயே தண்ணீரை எல்லாம் இறைத்து காலி செய்து விட்டார்கள். தங்களின் தாகத்தை நபியவர்களிடம் முறையிட்டனர். நபியவர்கள் தங்களது அம்பு கூட்டிலிருந்து ஓர் அம்பை எடுத்து அந்தக் கிணற்றில் வைக்கும்படி கூறினார்கள். அவ்வாறே வைக்கப்பட்டவுடன் மக்களின் தாகம் தீரும் அளவுக்கு அந்தக் கிணற்றில் தண்ணீர் ஊறிக் கொண்டிருந்தது.

**நடுவர் வருகிறார்**

நபியவர்கள் அங்கு தங்கி சற்று ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் போது குஜாஆ கிளையைச் சேர்ந்த சிலருடன் 'புதைல் இப்னு வர்கா அல் குஜாயீ' என்ற முக்கியப் பிரமுகர் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தார். திஹாமா மாநிலத்தைச் சேர்ந்த மக்களில் குஜாஆ கிளையினர்தான் நபி (ஸல்) அவர்களின் இரகசியத்திற்கு உரித்தான மக்களாகவும், நன்மையை நாடுபவர்களாகவும் இருந்தனர். "கஅப் இப்னு லுவை ஹுதைபிய்யாவின் கிணறுகள் உள்ள ஓர் இடத்தில் வாலிப ஒட்டகங்களுடன் தங்கியிருக்கிறார். அவரும் அவரைச் சார்ந்தவர்களும் உங்களுடன் போர் புரிய வேண்டும் நீங்கள் கஅபாவிற்குச் செல்வதைத் தடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் வந்திருக்கின்றனர். நான் அவர்களை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு உங்களிடம் வந்திருக்கிறேன்" என்று புதைல் கூறினார்.

நபியவர்கள் அவரிடம்: "நாங்கள் எவரிடமும் சண்டை செய்வதற்காக இங்கு வரவில்லை. நாங்கள் உம்ரா செய்வதற்காகத்தான் வந்திருக்கிறோம். நிச்சயமாகக் குறைஷிகளுக்குப் போரின் காரணமாக கடுமையான சேதமும் நஷ்டமும் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் விரும்பினால் ஒரு குறிப்பிட்ட காலம் வரை நான் அவர்களுக்குப் போர் நிறுத்த உடன்படிக்கை செய்து தருவேன். அவர்கள் எனக்கும் மற்ற மக்களுக்குமிடையில்

குறுக்கிடக் கூடாது. (அதாவது, நான் மக்களுக்கு இஸ்லாமை எடுத்துக் கூறுவதற்கு அவர்கள் தடையாக இருக்கக் கூடாது). விரும்பினால் மற்ற மக்களைப் போல அவர்களும் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளலாம். இல்லையெனில் சிறிது காலம் அவகாசம் எடுத்துக் கொள்ளலாம். இவற்றை ஏற்றுக் கொள்ளாமல், 'போர்தான் புரிவோம்!' என்று பிடிவாதம் பிடித்தால், எனது உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது சத்தியமாக! இம்மார்க்கத்திற்காக எனது கழுத்து துண்டாகும் வரை அல்லது அல்லாஹ் இம்மார்க்கத்தை நிலை நிறுத்தும் வரை நான் அவர்களிடம் போர் புரிவேன்'' என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் இப்பதிலைக் கேட்ட புதைல் "நீங்கள் கூறியதை நான் குறைஷிகள் முன் வைக்கிறேன்'' என்று கூறி குறைஷிகளை சந்தித்தார். "குறைஷிகளே! நான் அந்த மனிதரிடம் இருந்து உங்களிடம் வந்திருக்கிறேன். அவர் கூறும் விஷயத்தையும் கேட்டு வந்திருக்கிறேன். நீங்கள் விரும்பினால் நான் அதை உங்களுக்கு மத்தியில் சமர்ப்பிக்கிறேன்'' என்றார். ஆனால், அவர்களில் சில அறிவீனர்கள், "அவர் சார்பாக நீ எங்களுக்கு எதையும் சொல்ல வேண்டாம். அது எங்களுக்குத் தேவையுமில்லை'' என்று பேசினார்கள். ஆனால், சில அறிவாளிகள் "நீர் கேட்டு வந்ததை எங்களிடம் சொல்'' என்றனர். நபியவர்களிடம் கேட்டு வந்ததை அவர் கூறவே, குறைஷிகள் 'மிக்ரஸ் இப்னு ஹப்ஸ்' என்பவனை நபியவர்களிடம் பேசிவர அனுப்பினர். அவன் வருவதைப் பார்த்த நபியவர்கள், "அவன் ஒரு மோசடிக்காரன்'' என்று கூறினார்கள். அவன் நபியவர்களிடம் பேசிய போது புதைலுக்குக் கூறிய விஷயத்தையே அவனிடமும் கூறினார்கள். அவன் குறைஷிகளிடம் திரும்பி, தான் கேட்டு வந்த செய்தியைக் கூறினான்.

**குறைஷிகளின் தூதர்கள்**

கினானா கிளையைச் சேர்ந்த ஹுலைஸ் இப்னு அல்கமா என்பவர் "நான் அவரைச் சந்தித்து வருகிறேன். அதற்கு அனுமதி தாருங்கள்'' என்று குறைஷிகளிடம் கூறினார். அவர்கள் அனுமதி தரவே அவர் புறப்பட்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அவரைப் பார்த்து நபியவர்கள் "இவர் இன்னவர், இவர் அல்லாஹ்வுக்காக நேர்ச்சை செய்யப்பட்ட மற்றும் ஹஜ், உம்ராவுக்காக அழைத்து வரப்பட்ட கால்நடைகளைக் கண்ணியப்படுத்தும் கூட்டத்தைச் சேர்ந்தவர். அவருக்கு முன் குர்பானி பிராணிகளை நிறுத்துங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். உடனே முஸ்லிம்கள் குர்பானி பிராணிகளை வரிசையாக நிறுத்தி தல்பியா'' கூறியவர்களாக அவரை வரவேற்றனர். இதைப் பார்த்த அவர் "சுப்ஹானல்லாஹ்! இவர்களை அல்லாஹ்வின் வீட்டிலிருந்து தடுப்பது முறையல்ல'' என்று கூறிவிட்டு தனது தோழர்களிடம் திரும்பி "நான் மாலையிடப்பட்டு அடையாள மிடப்பட்ட குர்பானிக்கான ஒட்டகங்களைப் பார்த்தேன். அவர்களைத் தடுப்பது எனக்கு சரியான தாகத் தெரியவில்லை'' என்று கூறினார். இதற்குப் பின் அவருக்கும் குறைஷிகளுக்குமிடையில் சில வாக்குவாதங்கள் ஏற்பட்டன.

அங்கு வீற்றிருக்த உர்வா இப்னு மஸ்வூத் ஸகஃபி என்பவர், "இவர் உங்களுக்கு நல்ல கருத்தைக் கூறினார். அதை ஏற்றுக் கொள்ளுங்கள். எனக்கு அனுமதி தாருங்கள். நானும் அவரிடம் சென்று பேசி வருகிறேன்'' என்று கூறி, அங்கிருந்து புறப்பட்டு நபி (ஸல்) அவர்களிடம் சென்று பேசினார். அப்போது நபி (ஸல்) புதைலுக்கு கூறியதையே அவருக்கும் கூறினார்கள். அப்போது "முஹம்மதே! போர்தொடுத்து உனது இனத்தாரை வேரோடு அழிக்க வேண்டுமென்று நீ விரும்புகின்றாயா? உனது குடும்பத்தாருடன் போர் புரிவது நல்ல பழக்கமாகுமா? அரபிகளில் எவராவது தனது இனத்தாரை உனக்கு முன்பு வேரோடு வெட்டிச் சாய்த்தார் என்று நீ கேள்விப்பட்டதுண்டா? நீ விரும்பியபடி உனக்கு போரில் வெற்றி கிடைக்காமல் அதற்கு மாற்றமாக நீ தோல்வியடைந்தால், உன்னுடன் இருக்கும் இந்த வீணர்களான அற்பர்கள் உன்னை விட்டுவிட்டு ஓடி விடுவார்கள் என்றுதான் நான் எண்ணுகிறேன்'' என்று உர்வா கூறினார்.

உர்வாவின் பேச்சு அபூபக்ர் (ரழி) அவர்களுக்குச் சினமூட்டியது. “நீ லாத்தின் மர்மஸ்தானத்தைச் சப்பு! நாங்களா இவரை விட்டுவிட்டு ஓடி விடுவோம்?” என்று கர்ஜித்தார்கள். அதற்கு உர்வா “இவர் யார்?” என்றார். “அபூபக்ர்” என கூடியிருந்தோர் கூறினர். அதற்கு உர்வா “எனது உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக! நீ எனக்கு ஓர் உதவி செய்திருக்கிறாய். நான் அதற்கு எந்தப் பகரமும் செய்யவில்லை. அப்படி மட்டும் இல்லையென்றால் நான் உனக்கு நல்ல பதில் கூறியிருப்பேன்” என்றார். மேலும், நபியவர்களிடம் உர்வா பேசும் போது ஒவ்வொரு பேச்சுக்கும் நபியவர்களின் தாடியைப் பிடித்துப் பிடித்து பேசினார். நபி (ஸல்) அவர்களின் அருகில் முகீரா இப்னு ஷுஃபா (ரழி) நின்றிருந்தார்கள். அவரது கையில் உறையிடப்பட்ட வாள் ஒன்று இருந்தது. நபியவர்களின் தாடியை உர்வா பிடிக்கும் போதெல்லாம் அந்த உறையிடப்பட்ட வாளைக் கொண்டு உர்வாவின் கையில் அடித்து “நபியவர்களின் தாடியை விட்டு உனது கையை அகற்றிக் கொள்” என்று கூறினார்.

உர்வா தனது தலையை உயர்த்தி “இவர் யார்” என்றார். மக்கள் “முகீரா இப்னு ஷுஃபா” என்றனர். “ஓ வாக்குத் தவறியவனே! நீ செய்த மோசடிக் குற்றத்திற்கு நான்தானே பரிகாரம் செய்தேன்” என்று முகீராவை உர்வா பழித்தார். இவ்வாறு உர்வா கூறக் காரணம்: முகீரா இஸ்லாமை ஏற்பதற்கு முன் ஒரு கூட்டத்தினருடன் நட்பு வைத்திருந்தார். சமயம் பார்த்து அவர்களைக் கொன்று பொருட்களைக் கொள்ளையடித்து விட்டார். அதற்கு சிறிது காலத்திற்குப் பின்பு நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து இஸ்லாமை ஏற்றுக் கொண்டார். நபியவர்கள் “நீர் முஸ்லிமாவதை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால், நீ கொள்ளை அடித்த பொருட்களுக்கு நான் பொறுப்பல்ல” என்று கூறிவிட்டார்கள். இக்குற்றத்திற்குரிய பரிகாரத்தை உர்வாதான் நிறைவேற்றினார் ஏனெனில் முகீராவுடைய தந்தை, உர்வாவின் சகோதரராவார்.

பேச்சுவார்த்தைகளுக்கு இடையில் நபித்தோழர்களையும் அவர்கள் நபியவர்களுக்குச் செய்யும் கண்ணியத்தையும் நன்கு கவனித்து உர்வா பிரமிப்படைந்தார். அங்கிருந்து தனது நண்பர்களிடம் வந்த பின் இது குறித்து அவர் தனது இனத்தவர்களிடம் விமர்சித்தார். “எனது கூட்டத்தினரே! நான் பல அரசர்களிடம் சென்றிருக்கின்றேன். கைஸர், கிஸ்ரா, நஜ்ஜாஷி என பல மன்னர்களை பார்த்திருக்கின்றேன். ஆனால், முஹம்மதின் தோழர்கள் முஹம்மதைக் கண்ணியப்படுத்துவது போன்று எந்த ஓர் அரசனின் தோழர்களும் தங்கள் அரசரைக் கண்ணியப் படுத்துவதை நான் பார்த்ததில்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் ஏதாவது ஒரு கட்டளையிட்டால் அதை உடனடியாக அவர்கள் செய்கிறார்கள். அவர் ‘உழு’ செய்யும் தண்ணீரைப் பிடிப்பதற்குக் கூட போட்டியிட்டுக் கொள்கின்றனர். அவர் பேசினால் அனைவரும் அமைதியாகி விடுகின்றனர். அவர் மீதுள்ள கண்ணியத்தால் அவரை அவர்கள் நேருக்கு நேர் கூர்ந்து பார்ப்பதில்லை. ஆக, நான் உங்களுக்கு முன் நேரான ஒரு திட்டத்தை சமர்ப்பித்து விட்டேன். அதை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்” என்று கூறி உர்வா தனது பேச்சை முடித்தார்.

### அல்லாஹ்வின் ஏற்பாடு

போர் வெறிபிடித்த குறைஷி வாலிபர்கள் தங்களின் தலைவர்கள் சமாதான உடன்படிக்கையில் ஆர்வமாக இருப்பதை விரும்பவில்லை. உடனே, அதைத் தடுக்க வேண்டுமென ஆலோசித்தனர். அதன்படி இரவில் முஸ்லிம்களின் கூடாரத்திற்குள் புகுந்து போரைத் தூண்டும் சதி செயல்களைச் செய்ய முடிவெடுத்தனர். இம்முடிவை நிறைவேற்றுவதற்கு எழுபது அல்லது எண்பது நபர்கள் புறப்பட்டு ‘தன்யீம்’ மலை வழியாக முஸ்லிம்களின் கூடாரத்தை நோக்கி முன்னேறினர். ஆனால், நபியவர்கள் நியமித்த பாதுகாப்புப் படையின் தளபதியான முஹம்மது இப்னு மஸ்லமா, வந்த எதிரிகள் அனைவரையும் சுற்றி வளைத்து கைது செய்தார். எனினும், நபி (ஸல்) அவர்கள்

சமாதானத்தில் ஆர்வம் கொண்டு அனைவரையும் மன்னித்து விடுதலை செய்து விட்டார்கள். இது குறித்து பின்வரும் வசனத்தை அல்லாஹ் இறக்கினான்:

மக்காவின் சமீபமாக அவர்கள் மீது உங்களுக்கு வெற்றியைக் கொடுத்ததன் பின்னர், அவர்களுடைய கைகளை உங்களை விட்டும், உங்களுடைய கைகளையும் அவர்களை விட்டும் அவனே தடுத்தான். அல்லாஹ் நீங்கள் செய்பவைகளை உற்று நோக்கியவனாகவே இருக்கின்றான். (அல்குர்ஆன் 48:24)

### குறைஷிகளை சந்திக்க முஸ்லிம் தூதர்...

இந்நேரத்தில் நபி (ஸல்) தனது நிலையையும், தனது நோக்கத்தையும் உறுதியாகத் தெளிவுபடுத்திக் கூறவும், குறைஷிகளிடம் ஒரு தூதரை அனுப்ப விரும்பியும் உமரை அழைத்தார்கள். ஆனால், “அல்லாஹ்வின் தூதரே! எனக்கு துன்பம் ஏற்பட்டால் எனக்காக கோபப்படும் அதீ இப்னு கஅப் கிளையைச் சேர்ந்த எவரும் அங்கில்லை. எனவே, உஸ்மான் இப்னு அஃப்ஃபானை அனுப்புங்கள். நீங்கள் விரும்பும் விஷயத்தை அவர் சரியான முறையில் குறைஷிகளிடம் எடுத்து வைப்பார்” என்றார் உமர் (ரழி). நபியவர்கள் உஸ்மானை அழைத்து “நீர் குறைஷிகளிடம் சென்று, நாம் போருக்காக வரவில்லை உம்ராவிற்காகத்தான் வந்திருக்கிறோம் என்று எடுத்துச் சொல்லுங்கள்! பிறகு அவர்களை இஸ்லாமின் பக்கம் அழையுங்கள். மேலும், மக்காவிலிருக்கும் முஸ்லிம்களை சந்தித்து வெற்றி நமக்குத்தான் என்ற நற்செய்தியைக் கூறுங்கள்! அல்லாஹ் அவனது மார்க்கத்தை மக்காவில் ஓங்கச் செய்வான். ஆகவே, யாரும் இறை நம்பிக்கையை மறைத்து வாழ வேண்டிய அவசியமேற்படாது என்றும் அவர்களுக்கு சொல்லுங்கள்!” என்றார்கள்.

உஸ்மான் (ரழி) அங்கிருந்து புறப்பட்டு ‘பல்தஹ்’ என்ற இடத்தை அடைந்த போது, அங்கிருந்த குறைஷிகள் “உஸ்மானே! நீர் எங்கு செல்கின்றீர்!” என்றனர். அதற்கு உஸ்மான் (ரழி) சில விஷயங்களைக் கூறி அதை சொல்வதற்காகத்தான் நபியவர்கள் என்னை அனுப்பினார்கள் என்றார். அதற்கு குறைஷிகள், “நீர் கூறியதை நாங்கள் கேட்டு விட்டோம். நீர் உமது நோக்கத்தை நிறைவேற்ற செல்லலாம்” என்றனர். அவையில் இருந்த அபான் இப்னு ஸயீத் இப்னு அல்ஆஸ் என்பவர் எழுந்து உஸ்மான் (ரழி) அவர்களை வரவேற்றார். மேலும், தனது குதிரைக்குக் கடிவாளமிட்டு, அதில் தனக்குப் பின்னால் உஸ்மானை அமரச் செய்து, அவருக்கு அடைக்கலமும் கொடுத்து மக்காவிற்குள் அழைத்து வந்தார். மக்கா வந்தவுடன் நபி (ஸல்) கூறி அனுப்பிய செய்தியைக் குறைஷித் தலைவர்களிடம் உஸ்மான் (ரழி) விவரித்தார். உஸ்மான் பேசி முடித்தவுடன் குறைஷிகள் “நீங்கள் கஅபாவை வலம் வந்து கொள்ளுங்கள்” என்றனர். ஆனால், “நபி (ஸல்) கஅபாவை வலம் வரும் வரை நான் வரமாட்டேன்” என்று உஸ்மான் மறுத்துவிட்டார்.

### கொலை செய்தி பரவுதல், உடன்படிக்கை வாங்குதல்

உஸ்மானைக் குறைஷிகள் மக்காவில் தடுத்து வைத்துக் கொண்டனர். இச்சூழ்நிலையில் என்ன செய்யலாம் என்று ஆலோசித்து ஒரு தீர்க்கமான முடிவெடுத்த பின் உஸ்மானை அனுப்பலாம் என்ற எண்ணத்தில் குறைஷிகள் தடுத்து வைத்திருக்கலாம். ஆனால், உஸ்மான் (ரழி) கொலை செய்யப்பட்டு விட்டார் என்று மக்காவிற்கு வெளியில் செய்தி பரவியது. அவ்வாறே முஸ்லிம்களுக்கு மத்தியிலும் பரவியது. இந்தச் செய்தி கிடைத்தவுடன் “குறைஷிகளிடம் போர் புரியாமல் நாம் இவ்விடத்தை விட்டு நகரமாட்டோம்” என்று நபியவர்கள் கூறினார்கள். மேலும், தங்களது தோழர்களைப் போருக்காக உடன்படிக்கை செய்து தர அழைத்தார்கள். உத்தமத் தோழர்கள் உயிர் கொடுக்கவும் காத்திருந்தனர். “போரிலிருந்து பின்வாங்க மாட்டோம்” என்று மிக உற்சாகத்துடன் உடன்படிக்கை செய்யலானார்கள். தோழர்களின் ஒரு கூட்டம் “மரணம் வரை போர் புரிவோம்” என்று நபியவர்களிடம் ஒப்பந்தம் செய்தனர்.

அஸத் குடும்பத்தைச் சேர்ந்த அபூஸினான் என்பவர்தான் நபி (ஸல்) அவர்களிடம் முதன் முதலில் உடன்படிக்கை செய்தார். ‘‘மரணிக்கும் வரை போர் புரிவேன்’’ என்று மூன்று முறை ஸலமா இப்னு அக்வா ஒப்பந்தம் செய்தார். அதாவது, மக்கள் ஒப்பந்தம் செய்ய ஆரம்பித்த போதும், பின்பு நடுவிலும், பின்பு இறுதியிலும் ஒப்பந்தம் செய்தார். அந்த அளவு அறப்போர் புரியவும், அதில் உயிர் நீக்கவும் பேராவல் கொண்டிருந்தார்.

நபி (ஸல்) அவர்கள் தங்களின் ஒரு கையால் மற்றொரு கையைப் பிடித்துக் காட்டி ‘‘இந்த கை உஸ்மான் சார்பாக’’ என்றார்கள். அதாவது, உஸ்மான் உயிருடன் இருந்தால் அவரும் இதில் கலந்து கொள்வார் என்பதை அறிவிக்கும் விதமாக நபியவர்கள் இவ்வாறு செய்தார்கள்.

நிலைமை இவ்வாறிருக்க, முஸ்லிம்கள் தங்கள் மீது பயங்கரமான முறையில் போர் தொடுக்க ஆயத்தமாகி விட்டனர் என்ற செய்தி குறைஷிகளுக்குத் தெரிய வரவே, இனியும் உஸ்மானை தடுத்து வைத்திருப்பது உசிதமல்ல தாமதப்படுத்தாமல் உடனடியாக அவரை முஸ்லிம்களிடம் அனுப்பிட வேண்டும் நமது முடிவைப் பிறகு தூதுவர் மூலம் சொல்லி அனுப்பிக் கொள்ளலாம் என்று ஆலோசனை செய்து உஸ்மானை அனுப்பி விட்டனர். உடன்படிக்கை செய்யும் நிகழ்ச்சி வெற்றிகரமாக முடிந்தது. உஸ்மானும் எவ்வித ஆபத்துமின்றி அங்கு வந்து சேர்ந்தார். உஸ்மான் அவர்களும் நபி (ஸல்) அவர்களிடம் ஒப்பந்தம் செய்து கொடுத்தார்கள். ஜத்துப்னு கைஸ் என்ற நயவஞ்சகனைத் தவிர வேறு எவரும் இவ்வுடன்படிக்கையிலிருந்து பின்வாங்கவில்லை.

நபியவர்கள் ஒரு மரத்திற்குக் கீழ் இவ்வுடன்படிக்கையை வாங்கினார்கள். அப்போது உமர் (ரழி) நபியின் கையைத் தாங்கிப் பிடித்திருந்தார்கள். மஅகில் இப்னு யஸார் மரத்தின் ஒரு கிளையைச் சாய்த்து நபியவர்களுக்கு நிழல் தருமாறு பிடித்திருந்தார்கள். இவ்வுடன்படிக்கையைத் தான் ‘பைஅத்துர் ழ்வான்’ (அங்கீகரிக்கப்பட்ட இறை பொருத்தத்திற்குரிய உடன்படிக்கை) என்று இஸ்லாமிய வரலாற்றில் கூறப்படுகிறது. இது குறித்தே அல்லாஹ் இந்த வசனத்தை இறக்கினான்.

அந்த மரத்தினடியில் உங்களிடம் கைகொடுத்து உடன்படிக்கை செய்த நம்பிக்கை யாளர்களைப் பற்றி நிச்சயமாக அல்லாஹ் திருப்தியடைந்தான். அவர்களின் உள்ளங்களிலிருந்த (உண்மையான தியாகத்)தை நன்கறிந்து, சாந்தியையும், ஆறுதலையும் அவர்கள் மீது சொரிந்தான். உடனடியான ஒரு வெற்றியையும் (கைபர் என்னும் இடத்தில்) அவர்களுக்கு வெகுமதியாகக் கொடுத்தான். (அல்குர்ஆன் 48:18)

**சமாதான ஒப்பந்தம்**

நிலைமை மோசமாவதை அறிந்து கொண்ட குறைஷிகள், சமாதான ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொள்வதற்காக சுஹைல் இப்னு அம்ர் என்பவரை நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தனர். மேலும், அந்த ஒப்பந்தத்தில் கீழ்காணும் முக்கிய அம்சத்தை இடம்பெறச் செய்தனர். அதாவது, உம்ரா செய்ய மக்காவிற்குள் வராமல் முஸ்லிம்கள் கண்டிப்பாக திரும்பிவிட வேண்டும். காரணம், முஹம்மது மக்காவுக்குள் எங்களை பலவந்தப்படுத்தி நுழைந்து விட்டார் என்று அரபிகள் நாளை ஏளனமாகப் பேசிவிடக் கூடாது.

குறைஷிகளின் இறுதி தூதராக சுஹைல், நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தார். சுஹைலைப் பார்த்ததும் நபியவர்கள் (சுஹைல் என்பதின் பொருள் இலகுவானது. ஆகவே) ‘‘உங்களது காரியம் உங்களுக்கு இலகுவாகி விட்டது. குறைஷிகள் இவரை அனுப்பியதிலிருந்து அவர்கள் சமாதானத்தை நாடிவிட்டனர் என தெரிந்து கொள்ளலாம்’’ என்று முஸ்லிம்களிடம் கூறினார்கள். நபி (ஸல்) அவர்களிடம் சுஹைல் நீண்ட நேரம் பேசினார். பின்பு இருவரும் சமாதானத்திற்கான அம்சங்களை முடிவு செய்தனர்.

அந்த அம்சங்களாவன:

1) நபியவர்கள் இந்த ஆண்டு திரும்பிச் செல்ல வேண்டும். மக்காவிற்குள் நுழையக் கூடாது. அடுத்த வருடம் முஸ்லிம்கள் உம்ராவிற்கு வந்து மக்காவில் மூன்று நாட்கள் தங்கிக் கொள்ளலாம். சாதாரணமாக ஒரு பயணி தன்னுடன் வைத்திருக்கும் ஆயுதங்களை எடுத்து வரலாம். ஆனால், அவற்றை உறைக்குள் வைத்துக் கொள்ள வேண்டும். முஸ்லிம்களுக்கு எவ்வகையிலும் எந்தவித தொந்தரவும் கொடுக்கப்பட மாட்டாது.

2) பத்து ஆண்டுகளுக்கு இரு தரப்பிலும் போர் நடவடிக்கை எதுவும் எடுக்கக் கூடாது. அக்காலங்களில் அனைவரும் அச்சமற்று இருப்பார்கள். யாரும் எவருக்கும் எவ்வித தீங்கும் செய்யக் கூடாது.

3) யாரொருவர் முஹம்மதுடைய ஒப்பந்தத்திலும் உடன்படிக்கையிலும் சேர்ந்து கொள்ள விரும்புகிறாரோ அவர் அதில் சேர்ந்து கொள்ளலாம். குறைஷிகளின் ஒப்பந்தத்திலும் உடன் படிக்கையிலும் சேர்ந்து கொள்ள விரும்புகிறவர் அதில் சேர்ந்து கொள்ளலாம். எந்த ஒரு கிளையினரும் இந்த இரு வகுப்பால் ஒருவருடன் சேர்ந்து கொள்கிறாரோ அவர் அந்த வகுப்பாரையே சேர்ந்தவராவார். அதற்குப் பின் அந்தக் கிளையினருடன் யாராவது அத்துமீறி நடந்து கொண்டால் அது அந்த வகுப்பினர் அனைவர் மீதும் அத்துமீறியதாகும்.

4) குறைஷிகளில் யாராவது தனது பாதுகாவலரான நெருங்கிய உறவினன் அனுமதியின்றி, தப்பித்து முஹம்மதிடம் வந்து சேர்ந்தால் முஹம்மது அவரை குறைஷிகளிடம் திருப்பி அனுப்பி விடவேண்டும். ஆனால், முஹம்மதிடம் உள்ளவர்களில் யாராவது தப்பித்து குறைஷிகளிடம் வந்துவிட்டால் அவரை முஹம்மதிடம் திருப்பி அனுப்பப்பட மாட்டாது.

இவற்றை எழுதுவதற்காக நபியவர்கள் அலீயை அழைத்து வாசகங்களைக் கூற அலீ (ரழி) எழுத ஆரம்பித்தார்கள். முதலாவதாக ''பிஸ்மில்லார்ரஹ்மானிர்ரஹீம் -அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்-'' என்று கூறினார்கள். அதைக் கேட்ட சுஹைல் ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ரஹ்மான் என்றால் யார்? என்று எங்களுக்குத் தெரியாது. எனவே, பிஸ்மிக்கல்லாஹும்ம -அல்லாஹ்வே உனது பெயரால்-'' என்று எழுதும்படி கூறினார். அதை ஏற்று நபியவர்கள் அலீயிடம் அவ்வாறே எழுதச் சொன்னார்கள். பின்பு ''இது அல்லாஹ்வின் தூதர் முஹம்மது செய்யும் சமாதான உடன்படிக்கையாகும்'' என்று எழுதும்படி அலீயிடம் கூற அவர்களும் அவ்வாறே எழுதினார்கள். ஆனால், சுஹைல் அந்த வாசகத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. ''நீர் அல்லாஹ்வின் தூதர் என்று எங்களுக்குத் தெரிந்திருந்தால் நாம் உம்மை அவனது வீட்டிலிருந்து தடுத்திருக்க மாட்டோம். உம்மிடம் போர் செய்திருக்க மாட்டோம். எனவே, முஹம்மதிப்னு அப்துல்லாஹ் என்று எழுதுங்கள்'' என்று கூறினார்.

அதற்கு நபியவர்கள், ''நீங்கள் என்னை பொய்யன் என்று கூறினாலும் சரியே! நான் உண்மையில் அல்லாஹ்வின் தூதர்தான் என்று கூறிவிட்டு அலீயிடம் 'ரஸூலுல்லாஹ்' என்ற சொல்லை அழித்துவிட்டு முஹம்மது இப்னு அப்துல்லாஹ் என்று எழுதும்படி கூறினார்கள். ஆனால், அலீ (ரழி) அவர்கள் இந்தச் சொல்லை அழிப்பதற்கு மறுத்துவிடவே நபி (ஸல்) அவர்களே தங்களது கையால் அதை அழித்தார்கள். பின்பு ஒப்பந்தப் பத்திரம் முழுமையாக எழுதி முடிக்கப்பட்டது. சமாதான உடன்படிக்கை முடிந்தவுடன் குஜாஆ கிளையினர் நபி (ஸல்) அவர்களின் ஒப்பந்தத்தில் சேர்ந்து கொண்டனர். அவர்கள் அப்துல் முத்தலிபின் காலத்திலிருந்தே ஹாஷிம் கிளையினரின் ஒப்பந்தத் தோழர்களாகவே விளங்கினர். இதை நாம் இந்நூலின் ஆரம்பத்திலும் கூறியிருக்கிறோம். பக்ர் கிளையினர் குறைஷிகளின் உடன்படிக்கையில் சேர்ந்து கொண்டனர்.

### அபூஜந்தல் மீது கொடுமை

இவ்வாறு ஒப்பந்தம் எழுதிக் கொண்டிருக்கும் போது சுஹைல் இப்னு அயின் மகன் அபூ ஜந்தல் (ரழி) மக்காவின் கீழ்புறமாக வெளியேறி கையில் விலங்குகளுடன் முஸ்லிம்களுக்கு மத்தியில் வந்து விழுந்தார். அவரைப் பார்த்த சுஹைல் “இது நான் உம்மிடம் நிறைவேற்றக் கோரும் முதல் விஷயமாகும். இவனை நீ திருப்பி அனுப்பிவிட வேண்டும்” என்று கூறினார். நபியவர்கள் “நாம் இன்னும் இப்பத்திரத்தை எழுதி முடிக்கவில்லையே” என்று கூறினார்கள். அதற்கு சுஹைல், “நீர் அப்படி செய்யவில்லை என்றால் அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் எவ்விஷயத்திலும் உம்மிடம் உடன்படிக்கை செய்து கொள்ள மாட்டேன்” என்று பிடிவாதம் பிடித்தான். அதற்கு நபியவர்கள், “இக்கோரிக்கையை நீ எனக்கு நிறைவேற்றிக் கொடு” என்று கூறினார்கள். ஆனால், அவன் “நான் ஒருக்காலும் நிறைவேற்றித் தரமாட்டேன்” என்று முரண்டு பிடித்தான். நபியவர்கள் “இல்லை நீ எனக்கு நிறைவேற்றியே ஆகவேண்டும்” என்று கூறினார்கள். ஆனால், அவன் “அது என்னால் முடியாது” என்று முற்றிலுமாக மறுத்து விட்டான். பிறகு அபூ ஜந்தலின் முகத்தில் அறைந்து அவரது கழுத்தைப் பிடித்து இணைவைப்பவர்களிடம் திரும்ப ஒப்படைக்க சுஹைல் இழுத்துச் சென்றான்.

முஸ்லிம்களை விட்டு பிரியும் போது அபூஜந்தல் மிக உரத்தக் குரலில் “முஸ்லிம்களே! நான் இணைவைப்பவர்களிடமா திரும்ப கொண்டு போகப்படுகிறேன்? எனது மார்க்கத்தில் என்னை அவர்கள் சோதிக்கின்றனரே!” என்று கதறினார். “அபூ ஜந்தலே! சகித்துக் கொள். நன்மையை நாடிக்கொள். உனக்கும் உன்னுடன் இருக்கும் ஒடுக்கப்பட்டவர்களுக்கும் விடுதலையையும் மகிழ்ச்சியையும் நிச்சயமாக அல்லாஹ் தருவான். நாங்கள் இக்கூட்டத்தினருடன் சமாதான உடன்படிக்கை செய்திருக்கிறோம். அதை நிறைவேற்றுவது எங்கள் மீது கடமை. அவர்களும் அல்லாஹ்வின் பெயர் கூறி இந்த உடன்படிக்கையைச் செய்திருக்கிறார்கள். எனவே, நாங்கள் மோசடி செய்ய முடியாது” என்று நபியவர்கள் கூறினார்கள்.

உமர் (ரழி) அபூ ஜந்தலுக்கு அருகில் சென்று “அபூ ஜந்தலே! இவர்கள் இணைவைப்பவர்கள்! இவர்களின் உயிர் நாயின் உயிருக்கு சமமானது” என்று கூறியவராக தனது வாளின் கைப்பிடியை அபூ ஜந்தலுக்கு அருகில் கொண்டு சென்றார்கள்.

உமர் (ரழி) கூறுகிறார்கள்: அவர் எனது வாளை எடுத்து தனது தந்தையைக் கொன்று விடுவார் என நான் ஆதரவு வைத்தேன். ஆனால், அவர் தந்தையின் மீதுள்ள பாசத்தால் கொல்லாமல் விட்டுவிட்டார். இதே நிலையில் ஒப்பந்தப் பத்திரமும் எழுதி முடிக்கப்பட்டது.

### உம்ராவை முடித்துக் கொள்வது

நபி (ஸல்) அவர்கள் ஒப்பந்தப் பத்திரத்தை முடித்தவுடன் தங்களது தோழர்களிடம் எழுந்து சென்று “குர்பானி பிராணியை அறுத்து பலியிடுங்கள்” என்றார்கள். ஆனால், அவர்களில் ஒருவர் கூட அதற்கு முன் வரவில்லை. நபி (ஸல்) மூன்று முறை கூறியும் எவரும் எழுந்து செல்லவில்லை. ஆகவே, நபி (ஸல்) தனது மனைவி உம்மு ஸலமாவிடம் சென்று மக்கள் நடந்து கொண்டதைக் கூறினார்கள். உம்மு ஸலமா (ரழி) “அல்லாஹ்வின் தூதரே! மக்கள் குர்பானியை நிறைவேற்ற வேண்டும் என்று நீங்கள் ஆசைப்படுகிறீர்களா? நீங்கள் சென்று யாரிடமும் பேசாமல் உங்களது ஒட்டகத்தை அறுத்து விட்டு, தலைமுடி இறக்குபவரை அழைத்து உங்களது தலைக்கு மொட்டை அடித்துக் கொள்ளுங்கள்” என்றார்கள். நபியவர்கள் தனது மனைவி கூறியவாறே எழுந்து சென்று யாரிடமும் பேசாமல் தனது ஒட்டகத்தை அறுத்து விட்டு, தலைமுடி இறக்குபவரை அழைத்து மொட்டை அடித்துக் கொண்டார்கள்.

இதைப் பார்த்த மக்கள் எழுந்து தங்களது குர்பானி பிராணிகளை அறுத்துவிட்டு ஒருவர் மற்றவருக்கு மொட்டையிட ஆரம்பித்தார்கள். ஏழு பேர்களுக்கு ஓர் ஒட்டகம், ஏழு பேர்களுக்கு ஒரு மாடு என்பதாக அறுத்தார்கள். நபியவர்கள் அபூ ஜஹ்லுக்கு சொந்தமாக இருந்த ஓர் ஆண் ஒட்டகத்தை அறுத்தார்கள். அதன் மூக்கில் வெள்ளியினாலான ஒரு வளையம் இருந்தது. இணைவைப்பவர்களுக்குக் கோபமூட்டுவதற்காக நபி (ஸல்) இவ்வாறு செய்தார்கள். பின்பு நபி (ஸல்) அவர்கள் மொட்டையடித்துக் கொண்டவர்களுக்கு மூன்று முறை பாவமன்னிப்புடைய பிரார்த்தனை செய்தார்கள். தலை முடியை குறைத்துக் கொண்டவர்களுக்கு ஒருமுறை பிரார்த்தித்தார்கள். நோயின் காரணமாக தலைமுடியை முன்கூட்டியே சிரைத்துக் கொண்டவர்கள் அதற்குப் பரிகாரமாக நோன்பு வைத்துக் கொள்ளலாம் அல்லது தர்மம் அல்லது குர்பானி கொடுத்துக் கொள்ளலாம் என்ற சட்டம் கூறப்பட்ட இறைவசனம் இந்த பிரயாணத்தின் போது கஅப் இப்னு உஜ்ரா (ரழி) என்ற நபித்தோழன் விஷயத்தில் இறக்கப்பட்டது.

**பெண்களைத் திரும்ப அனுப்ப மறுத்தல்**

முஸ்லிமான சில பெண்கள் ஹிஜ்ரா செய்து முஸ்லிம்களுடன் சேர்ந்து கொண்டனர். அவர்களின் உறவினர்கள் ஹுதைபிய்யா உடன்படிக்கையின்படி அவர்களைத் தங்களிடம் திரும்ப அனுப்புமாறு கேட்டுக் கொண்டனர். ‘‘ஒப்பந்தத்தில் ஆண் என்ற சொல்லையே பயன்படுத்தப்பட்டிருக்கிறது. எனவே, பெண்கள் இதில் கட்டுப்படமாட்டார்கள்’’ என்று காரணம் காட்டி நபியவர்கள் இக்கோரிக்கையை ஏற்க மறுத்து விட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இது விஷயமாகத்தான் அல்லாஹ் இந்த வசனத்தை இறக்கினான்:

நம்பிக்கையாளர்களே! (நிராகரிப்பவர்களில் உள்ள) பெண்கள் நம்பிக்கை கொண்டு (தம் கணவர்களை வெறுத்து) வெளியேறி உங்களிடம் வந்தால், அவர்களைச் சோதித்துப் பாருங்கள். அவர்களுடைய உண்மை நம்பிக்கையை அல்லாஹ்தான் நன்கறிவான். எனினும், (நீங்கள் சோதித்ததில்) அவர்கள் நம்பிக்கையாளர்கள்தாம் என்று உங்களுக்குத் தெரிந்தால், அந்தப் பெண்களை (அவர்களின் கணவர்களாகிய) நிராகரிப்பவர்களிடம் திரும்ப அனுப்பி விடாதீர்கள். (ஏனென்றால் முஸ்லிமான) இப்பெண்கள் அவர்களுக்கு (மனைவிகளாக இருப்பதும்) ஆகுமானதல்ல அவர்கள் இவர்களுக்கு (கணவர்களாக இருப்பதும்) ஆகுமானதல்ல. (எனினும், இப்பெண்களுக்காக அவர்கள்) செலவு செய்திருந்த பொருளை அவர்களுக்குக் கொடுத்து விடுங்கள். நீங்கள் அந்தப் பெண்களுக்கு மஹரைக் கொடுத்து, அவர்களைத் திருமணம் செய்து கொள்வது உங்கள் மீது குற்றமாகாது. தவிர, (உங்களுடைய பெண்களில் எவரும் நம்பிக்கை கொள்ளாதிருந்தால்) நம்பிக்கை கொள்ளாத அந்தப் பெண்களின் திருமண உறவை (நீக்காமல்) நீங்கள் பிடித்துக் கொண்டிருக்க வேண்டாம். (அவர்களை நீக்கி, அவர்களுக்காக) நீங்கள் செலவு செய்ததை (அப்பெண்கள் சென்றிருக்கும் நிராகரிப்பவர்களிடம்) கேளுங்கள். (அவ்வாறே நம்பிக்கை கொண்டு உங்களிடம் வந்துவிட்ட அவர்களுடைய மனைவிகளுக்குத்) தாங்கள் செலவு செய்ததை அவர்கள் (உங்களிடம் கேட்கலாம்.) இது அல்லாஹ் வினுடைய கட்டளை. உங்களுக்கிடையில் (நீதமாகவே) தீர்ப்பளிக்கின்றான். அல்லாஹ் (அனைத்தையும்) நன்கறிந்தவனும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 60:10)

மேலும்,

நபியே! நம்பிக்கை கொண்ட பெண்கள் உம்மிடம் வந்து, ‘‘அல்லாஹ்வுக்கு எதனையும் இணைவைப்பதில்லை என்றும், திருடுவதில்லை என்றும், விபசாரம் செய்வதில்லை என்றும், தங்கள் (பெண்) சந்ததிகளைக் கொலை செய்வதில்லை என்றும், தங்களுடைய கை கால்கள் அறிய (அதாவது: பொய்யெனத் தெரிந்தே) கற்பனையாக அவதூறு கூறுவதில்லை’’ என்றும்,

உம்மிடம் (பைஅத்து கொடுத்து) வாக்குறுதி செய்தால், அவர்களுடைய வாக்குறுதியைப் பெற்றுக் கொண்டு, நீங்கள் அவர்களுக்காக (முன்னர் அவர்கள் செய்துவிட்ட குற்றங்களுக்காக) அல்லாஹ்விடத்தில் மன்னிப்பைக் கோருங்கள். நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்பவனும் கிருபையுடையவனுமாயிருக்கின்றான். (அல்குர்ஆன் 60:12)

என்ற வசனத்தின் மூலம் ஹிஜ்ரா செய்து வந்த பெண்களை நபி (ஸல்) அவர்கள் சோதித்தார்கள். "யார் திருமறையில் கூறப்பட்ட நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டார்களோ அவர்களிடம் நான் உங்களது ஹிஜ்ராவை ஏற்றுக் கொண்டேன்" என்று கூறுவார்கள். அவர்களைத் திரும்ப அனுப்ப மாட்டார்கள்.

இந்த வசனத்தில் இறக்கப்பட்ட சட்டத்தின்படி முஸ்லிம்கள் மக்காவிலிருந்த தங்களது இணைவைக்கும் மனைவிகளை விவாகரத்து செய்தனர். அன்றைய தினத்தில் உமர் (ரழி) இணைவைக்கும் தனது இரு மனைவிகளை விவாகரத்து செய்தார்கள். அவ்விருவல் ஒருவரை முஆவியாவும் இன்னொருவரை ஸஃப்வானும் மணம் முடித்துக் கொண்டனர். (அதுவரை முஆவியாவும் ஸஃப்வானும் இஸ்லாமைத் தழுவவில்லை.)

**ஒப்பந்த அம்சங்களின் விளைவுகள்**

இதுவரை ஹுதைபிய்யா சமாதான உடன்படிக்கையை நாம் பார்த்தோம். எவர் ஒருவர் இந்த அம்சங்களையும் அதன் பின்விளைவுகளையும் நன்கு ஆழமாக சிந்தித்துப் பார்ப்பாரோ அவர் இந்த உடன்படிக்கை முஸ்லிம்களுக்கு மகத்தான வெற்றிதான் என்பதை தெளிவாகப் புரிந்து கொள்வார். அதாவது, குறைஷிகள் முஸ்லிம்களின் எந்த கோரிக்கையையும் ஏற்றுக் கொள்ளாமல் அவர்களை எப்படியாவது வேரோடு அழித்து விட வேண்டுமென்பதிலேயே குறிக்கோளாக இருந்தனர். என்றாவது ஒரு நாள் அந்நோக்கம் நிறைவேறும் என்று எதிர் பார்த்திருந்தனர். முடிந்தளவு தங்களது முழு ஆற்றலையும் பயன்படுத்தி இஸ்லாமிய அழைப்புப் பணி மக்களை சென்றடையாமல் தடுத்தனர். அரபு தீபகற்பத்தில் அனைத்து அரபுகளின் உலக விஷயங்களுக்கும், மதக் காரியங்களுக்கும் தலைமைபீடமாக இருந்தனர்.

இறுதியாக, இவர்கள் சமாதான ஒப்பந்தத்திற்குப் பணிந்து வந்ததே முஸ்லிம்களின் ஆற்றலை அவர்கள் ஏற்றுக் கொண்டதற்கும், இனி முஸ்லிம்களை எதிர்க்க குறைஷிகளிடம் ஆற்றல் இல்லை என்பதற்கும் தெளிவான ஆதாரமாகிவிட்டது. ஒப்பந்தத்தின் மூன்றாவது அம்சத்தின் மூலம் குறைஷிகள் தங்களது உலக ரீதியான மற்றும் மத ரீதியான தலைமைத்துவத்தை மறந்து விட்டனர். இனி தங்களைப் பாதுகாத்துக் கொள்வதே அவர்களுக்கு பெரும் சுமையாகி விட்டது என்பதையும் நன்றாக விளங்கிக் கொள்ளலாம். ஏனைய மக்கள் மற்றும் அரபு தீபகற்பத்தில் உள்ளவர்கள் அனைவரும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டாலும் அதைப் பற்றி குறைஷிகள் இனி கவலைப்பட மாட்டார்கள். அதற்கு ஒரு முக்கியத்துவமும் கொடுக்க மாட்டார்கள். அது விஷயத்தில் எத்தகைய தலையீடும் செய்யமாட்டார்கள் என்ற அளவுக்கு நிலைமை மாறிவிட்டது. இது குறைஷிகளைக் கவனித்துப் பார்க்கும் போது மிகப்பெரிய தோல்வியும், முஸ்லிம்களைக் கவனித்துப் பார்க்கும்போது மிகப் பெரும் வெற்றியாகவும் அமைந்தது என்பதில் என்ன சந்தேகம் இருக்க முடியும்!

முஸ்லிம்களுக்கும் அவர்களின் எதிரிகளுக்குமிடையே நடந்த போர்களின் நோக்கங்களும் குறிக்கோள்களும் முஸ்லிம்களைப் பொறுத்தவரை பொருட்களைச் சூறையாடுவதோ, உயிர்களை அழிப்பதோ, மக்களைக் கொன்று குவிப்பதோ அல்லது இஸ்லாமை ஏற்றுக் கொள்ளும்படி எதிரியை நிர்ப்பந்திப்பதோ அல்ல. மாறாக, இப்போர்களின் மூலம் முஸ்லிம்களின் ஒரே குறிக்கோள் என்னவெனில், மார்க்கம் மற்றும் கொள்கை விஷயத்தில் மக்களுக்கு முழு சுதந்திரம் கிடைக்க வேண்டும் என்பதுதான்.

(நபியே!) உங்கள் இறைவனால் அருளப்பட்ட இ(ந்த வேதமான)து முற்றிலும் உண்மையானது. விரும்பியவர் (இதை) நம்பிக்கை கொள்ளலாம் விரும்பியவர் நிராகரித்து விடலாம். (அதனால் நமக்கொன்றும் நஷ்டமில்லை.) (அல்குர்ஆன் 18:29)

தாங்கள் நாடும் நோக்கத்திற்கும் மக்களுக்கும் மத்தியில் எந்த சக்தியும் குறுக்கிடக் கூடாது என்பதுவே ஆகும். ஆம்! முழுமையாக அந்நோக்கம் இந்த எளிமையான சமாதான ஒப்பந்தத்தின் மூலம் கிடைத்தது. ஒருவேளை மாபெரும் போர் நடந்து அதில் முஸ்லிம்களுக்கு மகத்தான வெற்றி கிடைத்தாலும் கூட இந்த நோக்கம் இந்தளவு நிறைவேறுமா என்பது சந்தேகமே. அல்லாஹ்வின் அருளால் இச்சுதந்திரத்தால் முஸ்லிம்களுக்கு அழைப்புப் பணியில் பெரும் முன்னேற்றமும் வெற்றியும் கிடைத்தது. இந்த ஒப்பந்தத்திற்கு முன் முஸ்லிம்களின் எண்ணிக்கை சுமார் மூவாயிரமாக இருந்தது. ஆனால், இந்த ஒப்பந்தத்திற்குப் பிறகு இரண்டு ஆண்டுகள் கழித்து மக்கா வெற்றி கொள்ளப்பட்ட போது, முஸ்லிம்களின் எண்ணிக்கை சுமார் பத்தாயிரமாக ஆகியது.

இந்த ஒப்பந்தத்தின் இரண்டாவது அம்சம் (பத்து ஆண்டுகளுக்குப் போரை நிறுத்திக் கொள்வது) முஸ்லிம்களுக்கு கிடைத்த மாபெரும் வெற்றியின் இரண்டாவது பகுதியாகும். அதாவது, முஸ்லிம்கள் குறைஷிகளுடன் ஒருபோதும் தாங்களாக போரைத் தொடங்கியதில்லை. மாறாக, எப்போதும் குறைஷிகள்தான் முதலில் போரைத் தொடங்கினர். அல்லாஹ் தனது திருமறையில்:

தங்களுடைய சத்திய உடன்படிக்கைகளை முறித்து (நம்முடைய) தூதரை (ஊரை விட்டு) வெளியேற்றவும் விரும்பி முயற்சித்த மக்களுடன் நீங்கள் போர் புரிய வேண்டாமா? அவர்கள்தான் (இத்தகைய விஷமத்தை) உங்களிடம் முதலில் ஆரம்பித்தனர். (அல்குர்ஆன் 9:13)

என்று குறிப்பிடுகின்றான்.

முஸ்லிம்கள் எடுத்த இராணுவ நடவடிக்கைகளின் நோக்கம் என்னவெனில், குறைஷிகள் தங்களது வம்புத்தனத்தை விட்டும், அல்லாஹ்வின் பாதையிலிருந்து மக்களைத் தடுப்பதை விட்டும் விலகிக் கொள்ள வேண்டும் அனைவருடனும் சமாதானமாக நடந்து கொள்ள வேண்டும் ஒவ்வொருவரும் தங்களது வழியில் செயல்பட அனுமதிக்க வேண்டும் ஒருவர் மற்றவர் விஷயத்தில் குறுக்கிடக் கூடாது என்பதுதான்.

பத்து ஆண்டுகள் போர் நிறுத்தம் என சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டதால் குறைஷிகளின் வம்புத்தனம், அகம்பாவம், அல்லாஹ்வின் பாதையிலிருந்து மக்களைத் தடுத்தல் ஆகிய அனைத்திற்கும் ஒரு முடிவு கட்டப்பட்டது. மேலும், போரை இதுநாள் வரை முதலாவதாக ஆரம்பித்து வந்தவர்கள் இப்போது தோற்று விட்டனர் கோழையாகி விட்டனர் வலுவிழந்து விட்டனர் பின்வாங்கி விட்டனர் என்பதற்கு ஒப்பந்தத்தின் இவ்வம்சம் தெளிவான ஆதாரமாகி விட்டது.

ஒப்பந்தத்தின் முதல் அம்சம் (வரும் ஆண்டு மக்காவிற்கு வந்து மூன்று நாட்கள் தங்கலாம், இந்த ஆண்டு திரும்பி செல்ல வேண்டும்) இந்த அம்சம் இதுநாள் வரை முஸ்லிம்களைக் குறைஷிகள் சங்கைமிக்க அல்லாஹ்வின் பள்ளியிலிருந்து தடுத்து வந்ததற்கு ஒரு முடிவாக அமைந்தது. ஆகவே, இதுவும் குறைஷிகளுக்கு ஏற்பட்ட தோல்வியே ஆகும். இந்த அம்சத்தில் குறைஷிகளுக்கு சாதகமான, ஆறுதலான எதுவும் இருக்கவில்லை. ஆம்! அந்த ஆண்டு மட்டும் முஸ்லிம்களை மக்காவிற்கு வரவிடாமல் தடுக்க முடிந்ததைத் தவிர வேறெந்த சாதகமும் அவர்களுக்கு இருக்கவில்லை.

இவ்வாறு மூன்று அம்சங்களைக் குறைஷிகள் முஸ்லிம்களுக்குச் சாதகமாகக் கொடுத்தனர். இதற்கு மாற்றமாக நான்காவது அம்சத்தில் இடம்பெற்ற, அதாவது மக்காவிலிருந்து யாராவது

தப்பித்து மதீனா வந்தால் அவர்களைத் திரும்ப மக்காவிற்கு அனுப்பி விடவேண்டும். ஆனால், மதீனாவிலிருந்து யாராவது தப்பித்து மக்கா வந்தால் அவர்களைத் திருப்பி அனுப்ப மாட்டோம் என்ற ஒரே ஒரு அம்சத்தைத்தான் அவர்கள் தங்களுக்கு சாதகமாக பெற்றுக் கொண்டனர். ஆனால், இதுவும் அவர்களுக்கு உண்மையில் சாதகமானதோ, பயன் தருவதோ கிடையாது. இது ஒரு அற்பமான விஷயம். ஏனெனில், எந்த ஓர் உண்மை முஸ்லிமும் அல்லாஹ்வை விட்டோ, அவனது தூதரை விட்டோ, மதீனாவை விட்டோ விலகிச் செல்ல மாட்டார். அப்படி சென்றாலும் அதில் முஸ்லிம்களுக்கு எந்த ஒரு நஷ்டமும் இடையூறும் இல்லை.

இஸ்லாமை விட்டு உள்ளரங்கமாகவோ, வெளிரங்கமாகவோ வெளியேறியவன் மட்டுமே முஸ்லிம்களை விட்டும் விலகிச் சென்று நிராகரிப்பாளர்களுடன் சேர்ந்து கொள்வான். அப்படி ஒருவன் மார்க்கத்திலிருந்து வெளியேறி விட்டால் முஸ்லிம்களுக்கு அவனிடம் எந்தத் தேவையும் இல்லை. அவன் இஸ்லாமிய சமூகத்தை விட்டு பிரிந்து சென்று விடுவது, அதிலிருப்பதை விட மிகச் சிறந்ததே. இதைத்தான் நபியவர்கள் ‘‘யாரொருவர் நம்மிடமிருந்து விலகி அவர்களிடம் சென்று விடுவாரோ அல்லாஹ் அவரைத் தூரமாக்கி விடுவானாக’’ என்ற சொல்லின் மூலம் சுட்டிக் காட்டியுள்ளார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

மக்காவில் இஸ்லாமை ஏற்றுக் கொண்ட ஒருவரால் மதீனாவிற்கு வர இயலாது என்றாலும் அல்லாஹ்வின் பூமி விசாலமானது என்பதால் அவர் வேறு எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். மதீனாவாசிகள் இஸ்லாமைப் பற்றி தெரியாமல் இருந்த போதே முஸ்லிம்கள் ஹபஷா சென்று தங்கவில்லையா? இதைத்தான் நபியவர்கள் ‘‘யார் அவர்களிலிருந்து நம்மிடம் வருகிறாரோ, அதாவது இஸ்லாமை ஏற்றுக் கொள்கிறாரோ அவருக்கு அல்லாஹ் வெகு விரைவில் நல்ல சூழ்நிலையையும் கஷ்டத்திலிருந்து விடுதலையும் தருவான்’’ என்ற சொல்லின் மூலம் சுட்டிக் காட்டியுள்ளார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

இதுபோன்ற தற்காப்பு உடன்படிக்கையைக் குறைஷிகள் ஏற்படுத்திக் கொண்டது (மக்காவில் இருந்து மதீனாவிற்கு வந்தவரை திருப்பி அனுப்பிவிட வேண்டும். மதீனாவிலிருந்து மக்காவிற்கு வந்தவர் திரும்பி அனுப்பப்பட மாட்டார் என்பது) வெளிப்படையாக பார்க்கும் போது குறைஷிகளுக்கு இது கண்ணியமானதாகத் தெரிந்தாலும், உண்மையில் குறைஷிகள் எவ்வளவு நடுக்கத்திலும், சோர்விலும் தங்களது சிலை வணக்கத்திற்கு ஏற்பட்ட கதியைப் பார்த்து அச்சத்திலும் இருக்கின்றனர் என்பதற்கு இது தெளிவான ஆதாரமாகும்.

தங்களின் மதக் கட்டமைப்பு அழியும் அபாயத்தில் இருக்கிறது என்பதை அவர்கள் உணர்ந்து கொண்டனர். ஆகவேதான், இதுபோன்ற ஒரு தற்காப்பு அம்சத்தை தங்கள் உடன்படிக்கையில் இடம்பெறச் செய்தனர். முஸ்லிம்களிடமிருந்து குறைஷிகளிடம் சேர்ந்து கொண்டவரை திருப்பி கேட்க மாட்டோம் என்று நபி (ஸல்) அவர்கள் பெருந்தன்மையாக கூறியது தனது மார்க்கத்தின் மீதும், அதை பின்பற்றியவர்கள் மீதும் தான் வைத்திருந்த முழுமையான நம்பிக்கைக்கு ஆதாரமாகும். எனவே, இதுபோன்ற நிபந்தனைகளைக் கண்டு நபி (ஸல்) அவர்கள் சிறிதளவும் அஞ்சவில்லை.

**முஸ்லிம்களின் துக்கமும், உமரின் தர்க்கமும்**

மேற்கூறப்பட்ட இவைதான் இந்த சமாதான ஒப்பந்தத்தின் அம்சங்களாகும். எனினும், வெளிப்படையான இரு காரணங்களால் அனைத்து முஸ்லிம்களையும் துக்கமும், கவலையும் கடுமையாக ஆட்கொண்டது. நபியவர்கள் ‘‘அல்லாஹ்வின் இல்லத்திற்குச் செல்வோம். அங்கு சென்று தவாஃப் செய்வோம்’’ என்று கூறினார்கள். ஆனால், அங்கு சென்று தவாஃப் செய்யாமலேயே எப்படி நம்மைத் திருப்பி அழைத்துச் செல்லலாம் என்பது முதல் காரணம்.

இரண்டாவது காரணம்: இவர்கள் (முஹம்மது) அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள். மேலும் சத்தியத்தில் இருக்கிறார்கள். அல்லாஹ் தனது மார்க்கத்தை உயர்வாக்குவான் என்று

வாக்கும் அளித்துள்ளான். அப்படியிருக்க ஏன் குறைஷிகளின் நிர்ப்பந்தத்திற்குப் பணிய வேண்டும்? ஏன் சமாதானத்தில் தாழ்மையான நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்?

இந்த இரண்டு வெளிப்படையான காரணங்கள் பல சந்தேகங்களையும், பல எண்ணங்களையும், பல குழப்பங்களையும் கிளப்பின. இதனால் முஸ்லிம்களின் உணர்வுகள் காயமடைந்தன. சமாதான ஒப்பந்தத்தின் அம்சங்களைச் சிந்திக்க விடாமல் கவலையும் துக்கமும்தான் முஸ்லிம்களை ஆட்கொண்டிருந்தது. ஏனைய மக்களைக் காட்டிலும் உமர் இப்னுல் கத்தாப் (ரழி) அவர்கள்தான் அதிகக் கவலை கொண்டவராக இருந்திருக்க வேண்டும். ஏனெனில், ஒப்பந்தம் முடிந்தவுடன் அவர் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து பேசினார்கள். இதோ... அவர்களது உரையாடல்:

உமர் (ரழி): அல்லாஹ்வின் தூதரே! நாம் சத்தியத்திலும் அவர்கள் அசத்தியத்திலும் இருப்பது உண்மைதானே?

நபி (ஸல்): ஆம்! (நாம் சத்தியத்தில் இருக்கிறோம். அவர்கள் அசத்தியத்தில் இருக்கின்றார்கள்.)

உமர் (ரழி): நம்மில் கொல்லப்பட்டவர்கள் சுவனத்திலும், அவர்களில் கொல்லப்பட்டவர்கள் நரகத்திலும் இருப்பார்கள். சரிதானே?

நபி (ஸல்): ஆம்! (நம்மில் கொல்லப்பட்டவர்கள் சுவனத்தில் இருக்கின்றனர், அவர்களில் கொல்லப்பட்டவர்கள் நரகத்தில் இருக்கின்றனர்).

உமர் (ரழி): அப்படியிருக்க நாம் ஏன் நமது மார்க்க விஷயத்தில் விட்டுக்கொடுத்து தாழ்வை ஏற்றுக் கொள்ள வேண்டும். அல்லாஹ் நமக்கும் அவர்களுக்கும் நடுவில் தீர்ப்பளிக்காமல் இருக்கும் இந்நிலையில் நாம் திரும்பிச் செல்வது எவ்வாறு நியாயமாகும்?

நபி (ஸல்): கத்தாபின் மகனே! நான் அல்லாஹ்வின் தூதர். என்னால் அவனுக்கு மாறு செய்ய முடியாது. அவன் எனக்கு உதவி செய்வான், ஒருக்காலும் அவன் என்னைக் கைவிட மாட்டான்.

உமர் (ரழி): அல்லாஹ்வின் இல்லத்திற்கு வருவோம் அதைத் தவாஃப் செய்வோம் என்று நீங்கள் எங்களுக்குக் கூறவில்லையா?

நபி (ஸல்): ஆம்! நான் கூறினேன். ஆனால் இந்த ஆண்டே வருவோம் என்று கூறினேனா?

உமர் (ரழி): இல்லை! அவ்வாறு கூறவில்லை.

நபி (ஸல்): நிச்சயமாக நீ கஅபாவிற்குச் சென்று அதை தவாஃப் செய்வாய்.

பின்பு உமர் (ரழி) கோபத்துடன் அபூபக்ர் (ரழி) அவர்களிடம் வந்து நபி (ஸல்) அவர்களிடம் கேட்ட கேள்விகளைக் கேட்க, அபூபக்ர் (ரழி) அவர்களும் நபியவர்கள் கூறியவாறே உமருக்குப் பதில் கூறினார்கள். மேலும் “உமரே! நீ மரணிக்கும் வரை நபி (ஸல்) அவர்களைப் பற்றிப் பிடித்துக்கொள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் உண்மையில்தான் இருக்கிறார்கள்” என்று கூறினார்கள்.

இந்நிகழ்ச்சிக்குப் பிறகு,

(நபியே! ஹுதைபிய்யாவின் சமாதான உடன்படிக்கையின் மூலம்) நிச்சயமாக நாம் உங்களுக்கு (மிகப்பெரிய) தெளிவானதொரு வெற்றியைத் தந்தோம். (அதற்காக நீங்கள் உங்களது இறைவனுக்கு நன்றி செலுத்துவீராக!) (அல்குர்ஆன் 48: 1,2)

என்ற வசனம் அருளப்பட்டது. உடன் நபியவர்கள் ஒருவரை அனுப்பி அவ்வசனத்தை உமர் (ரழி) அவர்களிடம் ஓதிக்காட்டும்படி கூறினார்கள். அதைக் கேட்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்த உமர் (ரழி) "அல்லாஹ்வின் தூதரே! இது வெற்றியான விஷயமா?" என்று கேட்டார்கள். நபியவர்கள் "ஆம்!" என்றவுடன் உமர் (ரழி) மனமகிழ்ச்சியுடன் திரும்பிச் சென்றார்.

பின்பு, தான் செய்த காரியத்தை எண்ணி உமர் (ரழி) மிகவும் கவலையடைந்தார்கள். இதைப் பற்றி உமரே இவ்வாறு கூறினார்கள்: "நான் எனது செயலை எண்ணி வருந்தி அதற்கு பரிகாரமாக பல நற்செயல்களைச் செய்தேன் அன்றைய தினம் நான் நபி (ஸல்) அவர்களிடம் நடந்து கொண்ட விதத்திற்காக எப்போதும் தர்மம் செய்து வந்தேன் நோன்பு வைத்து வந்தேன் தொழுது வந்தேன் அடிமைகளை உரிமையிட்டு வந்தேன் நான் நபி (ஸல்) அவர்களிடம் பேசிய பேச்சை எண்ணி பயந்து பல நன்மைகளைச் செய்தேன், நான் பேசிய பேச்சு நன்மையாக மாற வேண்டும் என்பதே என் ஆதரவாக இருந்தது." (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், இப்னு ஹிஷாம்)

**ஒடுக்கப்பட்டோர் துயர் தீர்ந்தது**

நபி (ஸல்) அவர்கள் மதீனா திரும்பிச் சென்று விட்டார்கள். சில நாட்களுக்குப் பின் மக்காவில் வேதனை அனுபவித்துக் கொண்டிருந்த முஸ்லிம்களில் ஒருவரான அபூ பஸீர் (ரழி) என்பவர் காஃபிர்களிடமிருந்து தப்பித்து மதீனா வந்து சேர்ந்தார். இவர் குறைஷிகளின் தோழர்களான ஸகீப் கிளையைச் சேர்ந்தவர். இவரைப் பிடித்து வர குறைஷிகள் இருவரை மதீனாவிற்கு அனுப்பி வைத்தனர். அவ்விருவரும் நபி (ஸல்) அவர்களிடம் வந்து "நீங்கள் எங்களுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றுங்கள்" என்றனர். நபியவர்கள் அபூபஸீரை அவ்விருவரிடமும் ஒப்படைத்து விட்டார்கள். அவ்விருவரும் அபூபஸீரை அழைத்துக் கொண்டு துல்ஹுலைஃபா வந்து சேர்ந்தனர். தங்களது வாகனத்தை விட்டு இறங்கி தங்களுடன் கொண்டு வந்திருந்த பேரீத்தம் பழங்களைச் சாப்பிட ஆரம்பித்தனர். அப்போது அபூபஸீர் (ரழி) அவ்விருவல் ஒருவரிடம் "உனது வாள் மிக நன்றாக உள்ளதே!" என்றார். அதைக் கேட்ட அவன் அவ்வாளை உருவி "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இது மிகச் சிறந்த வாள். இதை நான் பலமுறை சோதித்துப் பார்த்திருக்கின்றேன்" என்றான். அதற்கு அபூ பஸீர் (ரழி) "நான் அதைப் பார்க்க வேண்டும். காண்பி!" என்றார். அவன் அவரிடம் அந்த வாளைக் கொடுக்கவே அதை வாங்கி ஒரே வெட்டில் அவனது கதையை அவர் முடித்துவிட்டார்.

இதைப் பார்த்த மற்றவன் வெருண்டோடி மதீனா வந்து சேர்ந்தான். பயந்த நிலையில் பள்ளிக்குள் நுழைந்தான். அவனைப் பார்த்து நபியவர்கள் இவன் ஏதோ ஒரு திடுக்கமான காட்சியைப் பார்த்து விட்டான் என்று கூறினார்கள். நபியவர்களுக்கருகில் வந்த அவன் "எனது நண்பன் கொலை செய்யப்பட்டு விட்டான். நானும் கொலை செய்யப்பட்டு விடுவேன்" என்று பதறினான். அந்நேரத்தில் அபூபஸீரும் அங்கு வந்து சேர்ந்தார். அவர் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து "அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக அல்லாஹ் உங்களது பொறுப்பை நிறைவேற்றி விட்டான். நீங்கள் என்னை அவர்களிடம் அனுப்பி விட்டீர்கள். பின்பு அல்லாஹ்தான் அவர்களிடமிருந்து என்னைப் பாதுகாத்தான்" என்று கூறினார். அதைக் கேட்ட நபியவர்கள், "இவரது தாய்க்கு ஏற்பட்ட நாசமே! இவர் போரை மூட்டி விடுவார் போலிருக்கிறதே! இவரை யாராவது பிடிக்க வேண்டுமே" என்றார்கள். நபியவர்களின் இப்பேச்சை கேட்டு அவர்கள் தன்னை மீண்டும் காஃபிர்களிடம் கொடுத்து விடுவார்கள் என்று அறிந்து கொண்ட அபூபஸீர் அங்கிருந்து வெளியேறி கடற்கரை ஓரமாக வந்து தங்கிக் கொண்டார்.

சில நாட்களுக்குப் பின் மக்காவில் இவரைப் போல் துன்பம் அனுபவித்து வந்த அபூஜந்தல் இப்னு சுஹைல் (ரழி) மக்காவிலிருந்து தப்பித்து இவருடன் வந்து சேர்ந்து

கொண்டார். இவ்வாறே மக்காவில் முஸ்லிமானவர் ஒவ்வொருவராக பலர் அபூபஸீர் (ரழி) அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டனர். இவர்கள் ஷாம் நாட்டை நோக்கிச் செல்லும் குறைஷிகளின் வியாபாரக் கூட்டம் அவ்வழியாக வருவதைத் தெரிந்து கொண்டால் உடனடியாக அதைத் தாக்கி, பொருட்களைக் கொள்ளையிட்டு அதில் உள்ளவர்களைக் கொலை செய்து விடுவார்கள். இதனால் பெரும் துன்பத்திற்குள்ளான குறைஷிகள் நபி (ஸல்) அவர்களிடம் தூதனுப்பி அல்லாஹ்விற்காகவும் இரத்த உறவுக்காகவும் நாங்கள் உங்களிடம் கேட்கிறோம். யார் இஸ்லாமை ஏற்று உங்களிடம் வந்து விட்டார்களோ அவர் அபயம் பெற்றவராவார். (அவரைத் திரும்ப கேட்க மாட்டோம்) என்று கூறினர். அவர்களின் இக்கோரிக்கைக்கிணங்க நபியவர்கள் அந்த முஸ்லிம்களை மதீனாவிற்கு வரவழைத்தார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

**குறைஷி மாவீரர்கள் இஸ்லாமைத் தழுவுதல்**

இந்த ஒப்பந்தத்திற்குப் பின் ஹிஜ்ரி 7ஆம் ஆண்டு குறைஷிகளின் முக்கிய வீரர்களும் பிரமுகர்களுமான அம்ர் இப்னு ஆஸ், காலித் இப்னு வலீத், உஸ்மான் இப்னு தல்ஹா போன்றவர்கள் இஸ்லாமைத் தழுவினர். இவர்கள் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தபோது "மக்கா தனது ஈரக் குலைகளை நம்மிடம் ஒப்படைத்து விட்டது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புதிய சகாப்தம்**

ஹுதைபிய்யாவின் சமாதான ஒப்பந்தம் இஸ்லாம் மற்றும் முஸ்லிம்களின் வாழ்க்கையில் ஒரு புதிய சகாப்தம் உருவாவதற்குக் காரணமாக அமைந்தது.

இஸ்லாமிற்குக் குறைஷிகள்தான் முதல் எதிரி மட்டுமின்றி. அதற்குப் பெரும் தொல்லை தந்து வந்த வம்பர்களாகவும் இருந்தனர். இவர்கள் முஸ்லிம்களுடன் போர் புரிவதிலிருந்து விலகி சமாதானம் மற்றும் அமைதியின் பக்கம் திரும்பி விட்டதால் இஸ்லாமின் மாபெரும் மூன்று எதிரிக் கூட்டங்களின் வலிமை வாய்ந்த ஒரு பகுதி ஒடிந்து விட்டது.

அதாவது குறைஷிகள், கத்ஃபான் கிளையினர், யூதர்கள் ஆகிய இம்மூன்று கூட்டத்தினர் அரேபிய தீபகற்பத்தில் சிலை வழிபாட்டுக்கும், அதில் ஈடுபடுபவர்களுக்கும் தலைவர்களாகவும் அவர்களை வழிநடத்துபவர்களாகவும் இருந்தனர். எனவே, குறைஷிகள் பணிந்து விட்டதால் அரேபிய தீபகற்பத்திலுள்ள சிலை வணங்குபவர்களின் உணர்ச்சிகளும் எதிர்ப்புகளும் பெருமளவு மழுங்கி விட்டன. ஆகவேதான், இந்த ஒப்பந்தத்திற்குப் பின் கத்ஃபான் கிளையினர் பெரிய அளவிற்கு சண்டையில் ஈடுபடவில்லை. யூதர்களின் தூண்டதலினால்தான் அவர்கள் சில சண்டை சச்சரவுகளில் ஈடுபட்டார்களே தவிர தாங்களாகவே அதில் ஈடுபட்டதில்லை.

மதீனாவிலிருந்து வெளியேற்றப்பட்ட பின் யூத விஷமிகள் தங்களின் சதித்திட்டங்களைத் தீட்டுவதற்கும், அதை செயல்படுத்துவதற்கும் கைபரைக் கேந்திரமாக ஆக்கிக் கொண்டு தங்களின் நாசவேலைகளைத் தொடர்ந்து கொண்டிருந்தனர். மதீனாவைச் சுற்றி பல இடங்களில் பரவியிருந்த கிராம அரபிகளை முஸ்லிம்களுக்கு எதிராக தூண்டிவிட்டுக் கொண்டிருந்தனர். நபி (ஸல்) அவர்களையும் முஸ்லிம்களையும் அழிப்பதற்காக அல்லது அவர்களுக்குச் சேதம் உண்டாக்கு வதற்காக பல இரகசிய சதித்திட்டங்களைத் தீட்டினர். இதனால் இந்த ஒப்பந்தத்திற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் எடுத்த முதல் கட்ட நடவடிக்கை, இந்த யூதக் கேந்திரங்களின் மீது தீர்க்கமான போரைத் தொடுப்பதாகும்.

இந்தச் சமாதான ஒப்பந்தத்திற்குப் பின் தொடங்கிய இக்காலகட்டத்தின் ஆரம்பத்தில் இஸ்லாமிய அழைப்புப் பணியை பரப்புவதற்கும், அதை மக்கள் முன் வைப்பதற்கும் முஸ்லிம்களுக்கு பெருமளவில் வாய்ப்பு ஏற்பட்டது. பெரும் முயற்சி செய்து போருக்குக்

காட்டிய ஆர்வத்தை விட பல மடங்கு ஆர்வத்தை இப்பணியில் ஆர்வம் காட்டினர். ஆகவே, இக்காலக் கட்டத்தை நாம் இரண்டு வகையாக பிரிக்கின்றோம்.

1) அழைப்புப் பணியில் ஆர்வம் காட்டுதல் - அரசர்கள், கவர்னர்களுக்கு கடிதங்கள் எழுதுதல்.

2) போர் நடவடிக்கைகள் மேற்கொள்ளுதல்.

அரசர்கள், கவர்னர்களுடன் நபியவர்கள் கொண்ட கடிதத் தொடர்பைப் பற்றி முதலில் கூற விரும்புகிறோம். ஏனெனில், இஸ்லாமிய அழைப்புப் பணிதான் அனைத்திலும் முக்கியமான அடிப்படை நோக்கமாகும். முஸ்லிம்கள் இதுநாள் வரை அனுபவித்தத் துன்பங்கள், சோதனைகள், சந்தித்த போர்கள், கொடுமைகள் ஆகிய அனைத்திலும் இஸ்லாமிய அழைப்புப் பணி ஒன்று மட்டுமே அடிப்படை நோக்கமாக இருந்தது.

### அரசர்களுக்கும் ஆளுநர்களுக்கும் கடிதம் எழுதுதல்

நபி (ஸல்) அவர்கள் உடன்படிக்கையை முடித்து ஹுதைபிய்யாவிலிருந்து திரும்பிய பின் ஹிஜ்ரி 6ஆம் ஆண்டின் இறுதியில் பல அரசர்களுக்குக் கடிதம் எழுதி இஸ்லாமின் பக்கம் அவர்களை அழைத்தார்கள்.

நபியவர்கள் அரசர்களுக்குக் கடிதம் எழுத முற்பட்டபோது "முத்திரை இல்லாத கடிதங்களை அரசர்கள் படிக்க மாட்டார்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டது. ஆகவே, நபியவர்கள் வெள்ளியினாலான மோதிரம் ஒன்றைத் தயார் செய்தார்கள். அதில் 'முஹம்மது ரஸூலுல்லாஹ்' என்று பதித்தார்கள். அது மூன்று வரிகளாக இருந்தது. முஹம்மது என்று முதல் வரியிலும், ரஸூல் என்று ஒரு வரியிலும், அல்லாஹ் என்று ஒரு வரியிலும் இந்த அமைப்பில் எழுதப்பட்டிருந்தது. (ஸஹீஹுல் புகாரி)

நபியவர்கள் இப்பணிக்காக தங்களது தோழர்களில் நன்கு அனுபவம் வாய்ந்தவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களைத் தூதுவர்களாக அரசர்களிடம் அனுப்பினார்கள். ஹிஜ்ரி 7ஆம் ஆண்டு, முஹர்ரம் மாதம் தொடக்கத்தில், அதாவது கைபர் தாக்குதலுக்குச் சற்று முன்பு இந்தத் தூதுர்களை நபி (ஸல்) அனுப்பினார்கள் என பேராசிரியர் மன்சூர்பூ (ரஹ்) திட்டவட்டமாக தெரிவிக்கிறார்.

நபியவர்கள் எழுதிய கடிதங்களின் விவரங்கள் பின்வருமாறு:

#### 1) ஹபஷா மன்னர் நஜ்ஜாஷிக்குக் கடிதம்

இந்த நஜ்ஜாஷியின் பெயர் 'அஸ்ஹமா இப்னு அல்அப்ஜர்' ஆகும். ஹிஜ்ரி 6ன் கடைசியில் அல்லது ஹிஜ்ரி 7. முஹர்ரம் மாதத்தில் அம்ர் இப்னு உமய்யா ழம் (ரழி) மூலம் இவருக்காக கடிதமொன்றை எழுதி அனுப்பினார்கள். இமாம் தப் அக்கடிதத்தில் எழுதப்பட்ட வாசகங்கள் பற்றி கூறியிருக்கிறார்கள். அந்த வாசகங்களை ஆழமாக நாம் ஆராய்ந்து பார்க்கும் போது அக்கடிதம் ஹுதைபிய்யா ஒப்பந்தத்திற்குப் பின் நபி (ஸல்) எழுதிய கடிதமாக இருக்காது. மாறாக, மக்காவிலிருக்கும் போது, ஜஅஃபரும் மற்ற தோழர்களும் ஹபஷாவிற்கு ஹிஜ்ரா செய்தபோது அவர்களுடன் கொடுத்தனுப்பிய கடிதமாக இருக்கும் என்பது தெரிய வருகிறது. ஏனெனில், அக்கடிதத்தின் இறுதியில் வரும் வாசகத்தில் "நான் உங்களிடம் எனது தந்தையின் சகோதரன் மகன் ஜஅஃபரை அனுப்பி இருக்கிறேன். அவருடன் முஸ்லிம்களில் ஒரு குழுவும் வருகிறது. அவர் உங்களிடம் வந்தால் அவரையும் அக்குழுவையும் விருந்தாளியாக கவனித்துக் கொள்ளுங்கள். அநியாயம் செய்வதை விட்டுவிடுங்கள்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதிலிருந்து இக்கடிதம் மக்காவில் இருக்கும் போது எழுதப்பட்டது என்று விளங்க முடிகிறது.

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) வாயிலாக இமாம் பைஹகி (ரஹ்) அறிவிக்கிறார்கள்: நபியவர்கள் நஜ்ஜாஷிக்கு எழுதிய கடிதத்தின் வாசகமாவது:

“அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் ஆரம்பம் செய்கின்றேன். அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து ஹபஷாவின் மன்னர் ‘அஸ்ஹம்’ என்ற நஜ்ஜாஷிக்கு எழுதப்படும் கடிதமாகும் இது. நேர்வழியைப் பின்பற்றி அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிக்கை கொண்டு, வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன் அவனுக்கு இணை துணை யாருமில்லை அவன் தனக்கென எவரையும் மனைவியாகவோ அல்லது பிள்ளையாகவோ எடுத்துக் கொள்ளவில்லை நிச்சயமாக முஹம்மது அவனது அடிமையாகவும் தூதராகவும் இருக்கிறார்கள் என்று சாட்சி கூறுவோருக்கு ஈடேற்றம் உண்டாகுக!

நான் உமக்கு இஸ்லாமிய அழைப்பை விடுக்கிறேன். நிச்சயமாக நான் இஸ்லாமியத் தூதராவேன். நீ இஸ்லாமை ஏற்றுக்கொள், ஈடேற்றம் பெறுவாய்.

“வேதமுடையவர்களே! அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் வணங்க மாட்டோம். அவனுக்கு யாதொன்றையும் இணைவைக்க மாட்டோம். அல்லாஹ்வை விடுத்து நம்மில் சிலர் சிலரைக் கடவுளாக ஆக்கிக் கொள்ளக் கூடாது என்ற நீங்களும் நாமும் ஒத்துக் கொண்ட விஷயத்திற்கு நீங்கள் வந்துவிடுங்கள். நீங்கள் இதைப் புறக்கணித்தால் நாங்கள் ‘முஸ்லிம்கள்’ என்பதற்கு நீங்கள் சாட்சியாக இருந்துவிடுங்கள்.” (அல்குர்ஆன் 3:64)

நீ (இஸ்லாமிய அழைப்பை ஏற்றுக் கொள்ள) மறுத்துவிட்டால் உனது சமுதாயத்தில் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளாத கிறிஸ்துவர்களின் குற்றமும் உம்மையே சாரும். (தலாயிலுந்நுபுவ்வா, முஸ்தத்ரகுல் ஹாகிம்)

மாபெரும் ஆராய்ச்சியாளர் டாக்டர் ஹமீதுல்லாஹ்விற்கு சில காலத்திற்கு முன் ஒரு கடிதம் கிடைத்தது. அக்கடிதம் இமாம் இப்னு கய்” (ரஹ்) குறிப்பிட்டிருக்கும் கடிதத்திற்கு முற்றிலும் ஒப்பாக இருக்கிறது. ஆனால். ஒரே ஒரு வார்த்தைதான் வித்தியாசமாக இருந்தது. மேலும், டாக்டர் ஹமீதுல்லாஹ் அவர்கள் அக்கடித்தை ஆராய்ச்சி செய்வதில் தனது பெரும் முயற்சியை செலவழித்ததுடன், அதிலுள்ள விஷயங்களைக் கண்டுபிடிப்பதற்கு பல அதிநவீன கருவிகளையும் பயன்படுத்தினார். அக்கடிதத்தைப் பற்றி தனது புத்தகத்தில் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார். அதாவது:

“அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் எழுதுகிறேன். அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து ஹபஷாவின் மன்னர் நஜ்ஜாஷிக்கு எழுதும் கடிதம். நேர்வழியை பின்பற்றுவோருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும். நிச்சயமாக நான் உமக்கு முன்பாக அல்லாஹ்வைப் புகழ்கிறேன். அவனைத் தவிர வணக்கத்திற் குரியவன் வேறு யாருமில்லை. அவன்தான் அரசன் அவன் மிகத் தூய்மையானவன் ஈடேற்றம் வழங்குபவன் பாதுகாவலன் கண்காணிப்பவன். நிச்சயமாக மர்யமின் மகன் ஈஸா (அலை) அல்லாஹ்வினால் படைக்கப்பட்ட உயிரும், அவனது வார்த்தையுமாக இருக்கிறார். அவன்தான் அவ்வார்த்தையைப் பரிசுத்தமான பத்தினி மர்யமுக்கு அனுப்பினான். அவர் அல்லாஹ்வினால் படைக்கப்பட்ட உயிரிலிருந்தும், அவனுடைய ஊதுதலில் இருந்தும் உண்டான ஈஸாவை தனது கர்ப்பத்தில் சுமந்தார். எவ்வாறு அல்லாஹ் ஆதமை தனது கையினால் விஷேசமாக படைத்தானோ அவ்வாறே ஈஸாவையும் படைத்தான்.

தனித்தவனான துணையற்ற அல்லாஹ்வின் பக்கம் உன்னை அழைக்கிறேன். அவனுக்கு வழிப்படுவதிலும் வணங்குவதிலும் நீ எனக்கு இசைந்து என்னை நீ பின்பற்ற வேண்டும் என்று நான் உன்னை அழைக்கிறேன். நிச்சயமாக நான் அல்லாஹ்வின் தூதராவேன். மேலும், உம்மையும் உமது படையினரையும் அல்லாஹ்வின் பக்கம் அழைக்கிறேன். நான்

நிச்சயமாக எடுத்துரைத்து விட்டேன். உனக்கு உபதேசம் செய்து விட்டேன். எனது அறிவுரையை ஏற்றுக் கொள். நேர்வழியைப் பின்பற்றியவர்களுக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்.''

(ஜாதுல் மஆது, ''ரஸூலே அக்ரம் கீ ஸியாஸி ஜிந்தகி - டாக்டர் ஹமீதுல்லாஹ்'')

இக்கடிதத்தை டாக்டர் அவர்கள் குறிப்பிட்டதற்குப் பின் இதுதான் ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின் நஜ்ஜாஷி மன்னருக்கு நபி (ஸல்) எழுதியனுப்பிய வாசகம் என்று உறுதியுடன் கூறுகிறார்கள். ஆனால், நாம் கூறுவது என்னவெனில், ஆதாரங்களை ஆராய்ந்த பின் இது நபி (ஸல்) அவர்களின் கடிதம்தான் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், இது ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின்புதான் எழுதப்பட்டது என்பதற்கு எவ்வித ஆதாரமுமில்லை. மாறாக, இப்னு இஸ்ஹாக் (ரஹ்) மூலமாக இமாம் பைஹகி அறிவிக்கும் கடிதமே ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின் நபி (ஸல்) கிறிஸ்தவ அரசர்களுக்கும், கவர்னர்களுக்கும் எழுதியனுப்பிய கடிதங்களுக்கு ஒப்பாக இருக்கிறது. ஏனெனில், பொதுவாக கிறிஸ்தவர்களுக்கு நபி (ஸல்) எழுதும் கடிதத்தில் ''வேதத்தை உடையவர்களே! நமக்கும் உங்களுக்கும் ஒரு சமத்துவமான விஷயத்தின் பக்கம் வருவீர்களாக!... (அல்குர்ஆன் 3:64)

என்ற வசனத்தை குறிப்பிடுவார்கள். அந்த வசனம் இமாம் பைஹகி (ரஹ்) அறிவிக்கும் கடிதத்தில்தான் இடம்பெற்றுள்ளது. மேலும், அக்கடிதத்தில் நஜ்ஜாஷி மன்னன் பெயர் 'அஸ்ஹமா' என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது. டாக்டர் ஹமீதுல்லாஹ் குறிப்பிட்ட கடிதத்தைப் பற்றி ஆராயும் போது, அஸ்ஹமாவின் மரணத்திற்குப் பின் அவருடைய பிரதிநிதியாக பதவியேற்றவருக்கு நபி (ஸல்) எழுதியனுப்பிய கடிதமாக இருக்கலாம் என்பது எனது கருத்து. எனவேதான், நபியவர்கள் இக்கடிதத்தில் பெயரைக் குறிப்பிடவில்லை.

இவ்வாறு நான் விமர்சிப்பதற்கு வெளிப்படையான, உறுதியான ஆதாரம் ஏதும் என்னிடம் இல்லை. என்றாலும் இக்கடிதங்களையும் அதன் கருத்துகளையும் ஆராயும் போது நான் கூறும் இவ்விஷயத்தைத் தெரிந்து கொள்ளலாம். இதில் ஓர் ஆச்சரியம் என்னவெனில், டாக்டர் ஹமீதுல்லாஹ் ''இப்னு இஸ்ஹாக் (ரஹ்) மூலமாக இமாம் பைஹகி (ரஹ்) அறிவிக்கும் அறிவிப்பில் இடம்பெற்றுள்ள கடிதத்தை நபியவர்கள் நஜ்ஜாஷி மன்னர் அஸ்ஹமா மரணித்த பின் அவரது பிரதிநிதிக்கு எழுதினார்கள்'' என்று கூறுகிறார். ஆனால், இக்கடிதத்தில் அஸ்ஹமாவின் பெயர் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இவரிடமுள்ள கடிதத்திலோ அப்பெயர் கூறப்படவில்லை. அல்லாஹ்தான் உண்மையாக நன்கறிந்தவன்.

நபி (ஸல்) அவர்களின் கடிதத்தை அம்ரு இப்னு உமைய்யா, நஜ்ஜாஷியிடம் ஒப்படைத்தார். அதை நஜ்ஜாஷி பெற்று, தனது கண்ணில் ஒத்திக் கொண்டார். தனது சிம்மாசனத்தை விட்டும் கீழே இறங்கி, பூமியில் உட்கார்ந்து, ஜஅஃபர் இப்னு அபூதாலிபின் கையில் இஸ்லாமைத் தழுவினார். பின்பு நபியவர்களுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார். அதன் வாசகமாவது:

''அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் ஆரம்பிக்கிறேன். அல்லாஹ்வின் தூதர் முஹம்மதுக்கு அஸ்ஹமா நஜ்ஜாஷி எழுதுவது. அல்லாஹ்வின் நபியே! அல்லாஹ்வின் புறத்திலிருந்து உங்களுக்கு ஈடேற்றமும், அவனது கருணையும், அருள்களும் உண்டாகட்டும். அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாருமில்லை.

அல்லாஹ்வின் தூதரே! ஈஸாவைக் குறித்து தாங்கள் வரைந்த தங்களின் மடல் எனக்குக் கிடைத்தது. வானம், பூமியின் இறைவன் மீது சத்தியமாக! ஈஸாவும் நீங்கள் கூறியதைவிட பேரீத்தம் பழத்தின் நார் அளவுகூட அதிகமாகத் தன்னைப் பற்றிக் கூறியதில்லை.

நிச்சயமாக ஈஸா நீங்கள் கூறியவாறுதான் (அல்லாஹ்வின் வார்த்தையால் படைக்கப்பட்டவர்). நீங்கள் எங்களுக்கு அனுப்பிய விஷயங்களை நாங்கள் அறிந்து கொண்டோம். உங்கள் தந்தையின் சகோதரன் மகனுக்கும், உங்களது தோழர்களுக்கும் விருந்தோம்பல் செய்தோம். நிச்சயமாக நீங்கள் உண்மையானவர் உண்மைப்படுத்தப்பட்டவர் நீங்கள் அல்லாஹ்வின் தூதர் என்று சாட்சி கூறுகிறேன் நான் உங்களிடமும் உங்களது தந்தையின் சகோதரன் மகனிடமும் சத்திய வாக்குறுதி செய்து கொள்கிறேன் அகிலத்தார்களின் இறைவனுக்கு அடிபணிந்து இஸ்லாமை ஏற்றுக் கொள்கிறேன் என்று அவரிடம் வாக்குப் பிரமாணம் செய்து கொடுக்கிறேன்.''

ஜஅஃபர் (ரழி) அவர்களையும் அவர்களுடன் இருக்கும் முஹாஜிர்களையும் தன்னிடம் திரும்ப அனுப்புமாறு நபி (ஸல்) நஜ்ஜாஷியிடம் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அவர் அம்ர் இப்னு உமய்யா ழம்யுடன் அவர்கள் அனைவரையும் இரு கப்பல்களில் அனுப்பி வைத்தார். அம்ர், அவர்களை அழைத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்து சேர்ந்தார்கள். அப்போது நபி (ஸல்) கைபரில் இருந்தார்கள். (இப்னு ஹிஷாம்)

தபூக் போர் நடைபெற்ற பின் ஹிஜ்ரி 9, ரஜப் மாதத்தில் இந்த நஜ்ஜாஷி மன்னர் இறந்தார். அவர் இறந்த தினத்திலேயே அவன் மரணச் செய்தியை நபி (ஸல்) மக்களுக்கு அறிவித்தார்கள். அவருக்கு ஜனாஸா தொழுகை நடத்தினார்கள். அவருக்குப் பின் மற்றொரு அரசர் அவரது அரியணையில் அமர்ந்தார். அவருக்கும் நபி (ஸல்) மற்றொரு கடிதம் எழுதினார்கள். ஆனால், அவர் இஸ்லாமைத் தழுவினாரா? இல்லையா? என்பது சரிவரத் தெரியவில்லை. (ஸஹீஹ் முஸ்லிம்)

**2) மிஸ்ரு நாட்டு மன்னருக்குக் கடிதம்**

மிஸ்ரு (எகிப்து) மற்றும் இஸ்கந்தய்யா (அலெக்ஸாண்டியா)வின் மன்னரான 'முகவ்கிஸ்' என்றழைக்கப்படும் ஜுரைஜ் இப்னு மத்தாவிற்கு நபி (ஸல்) கடிதம் அனுப்பினார்கள்.

(ரஹ்மத்துல் லில் ஆலமீன்)

அக்கடிதத்தில்:

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் எழுதுகிறேன். அல்லாஹ்வின் அடிமையும், அவனது தூதருமான முஹம்மது, கிப்திகளின் மன்னருக்கு எழுதுவது. நேர்வழியைப் பின்பற்றுவோருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்.

நான் உங்களுக்கு இஸ்லாமிய அழைப்பை விடுக்கிறேன். இஸ்லாமை ஏற்றுக்கொள்க. ஈடேற்றம் அடைவீர். இஸ்லாமை ஏற்றுக்கொள்க. அல்லாஹ் உங்களுக்கு இருமுறை நற்கூலி வழங்குவான். நீங்கள் புறக்கணித்து விட்டால் கிப்தி இனத்தவர்களின் குற்றமும் உங்களையே சாரும்.

("வேதத்தை உடையவர்களே! நமக்கும் உங்களுக்கும் ஒரு சமத்துவமான விஷயத்தின் பக்கம் வருவீர்களாக! (அதாவது) நாம் அல்லாஹ்வைத் தவிர வேறொன்றையும் வணங்க மாட்டோம். நாம் அவனுக்கு யாதொன்றையும் இணையாக்க மாட்டோம். நம்மில் ஒருவரும் அல்லாஹ்வையன்றி எவரையும் இறைவனாக எடுத்துக் கொள்ள மாட்டோம்'' (என்று கூறுங்கள். நம்பிக்கையாளர்களே! இதனையும்) அவர்கள் புறக்கணித்தால் (அவர்களை நோக்கி) "நிச்சயமாக நாங்கள் (அவன் ஒருவனுக்கே) வழிப்பட்டவர்கள் என்று நீங்கள் சாட்சி கூறுங்கள்!'' என்று நீங்கள் கூறிவிடுங்கள்.) (அல்குர்ஆன் 3:64) (ஜாதுல் மஆது)

இந்தக் கடிதத்தை எடுத்துச் செல்வதற்கு நபியவர்கள் ஹாதிப் இப்னு அபூ பல்தஆவை தேர்வு செய்தார்கள். ஹாதிப் (ரழி) அங்கு சென்றவுடன் அம்மன்னரைப் பார்த்து இவ்வாறு கூறினார்: "நிச்சயமாக உமக்கு முன் தன்னை மிக உயர்ந்த இறைவன் என்று சொல்லி வந்த

ஒருவன் இங்கு இருந்தான். அல்லாஹ் அவனை நிரந்தரத் தண்டனையைக் கொண்டு தண்டித்தான். அல்லாஹ் அவனைக் கொண்டு பிறரையும், பின்பு அவனையும் தண்டித்தான். எனவே, நீ பிறரைக் கொண்டு படிப்பினை பெற்றுக் கொள். பிறர் உன்னைக் கொண்டு படிப்பினை பெறும்படி நடந்து கொள்ளாதே!''

இதைக் கேட்ட முகவ்கிஸ் "நிச்சயமாக எங்களுக்கென்று ஒரு மார்க்கம் இருக்கிறது. நாங்கள் அம்மார்க்கத்தை விடமாட்டோம். ஆனால், அதைவிட சிறந்த ஒரு மார்க்கம் கிடைத்தால் விட்டு விடுவோம்'' என்று கூறினார். அப்போது ஹாதிப் (ரழி) அதற்கு பின்வரும் பதிலை கூறினார்:

நாங்கள் உம்மை இஸ்லாமிய மார்க்கத்தின் பக்கம் அழைக்கிறோம். இதைத் தவிர மற்ற மார்க்கங்களின் தேவை இனி அறவே இருக்காது. இதுவே அனைத்திற்கும் போதுமான, பரிபூரணமான மார்க்கமாகும். நிச்சயமாக இந்த நபி மக்களுக்கு அழைப்பு கொடுத்தார்கள். அம்மக்களில் குறைஷிகள் அவருடன் மிகக் கடுமையாக நடந்து கொண்டனர். யூதர்கள் அவரைப் பகைத்தனர். கிறிஸ்துவர்கள் அவருடன் நட்பு கொண்டனர்.

சத்தியமிட்டுக் கூறுகிறேன்! நபி ஈஸா (அலை) அவர்களைப் பற்றி நபி மூஸா (அலை) அவர்கள் நற்செய்தி அறிவித்தார்கள். அவ்வாறே நபி முஹம்மது (ஸல்) அவர்களைப் பற்றி நபி ஈஸா (அலை) அவர்கள் நற்செய்தி அறிவித்தார்கள். உம்மை நாங்கள் குர்ஆனின் பக்கம் அழைப்பது நீங்கள் தவ்றாத் வேதமுடையவர்களை இன்ஜீலின் பக்கம் அழைப்பதைப் போன்றுதான். ஒவ்வொரு நபி அனுப்பப்படும் போதும் அவரது காலத்திலுள்ள மக்களெல்லாம் அந்த நபியின் சமுதாயமாகக் கருதப்படுவார்கள். எனவே, அம்மக்கள் அந்த நபிக்கு கீழ்ப்படிந்து நடப்பது கடமையாகும். நீங்கள் இந்த நபி அனுப்பப்பட்ட காலத்தைச் சேர்ந்தவர்கள். (எனவே நீர் அவரை பின்பற்றியாக வேண்டும்) ஈஸாவின் மார்க்கத்தைப் பின்பற்றுவதிலிருந்து நாங்கள் உம்மைத் தடுக்கவில்லை. மாறாக, நாங்களும் உமக்கு அதைத்தான் ஏவுகிறோம்.''

இந்தப் பதிலைக் கேட்ட முகவ்கிஸ், "இந்த நபியின் விஷயத்தில் நான் சிந்தித்து விட்டேன். அவர் வெறுப்பானவற்றை ஏவவில்லை, அல்லது விருப்பமான ஒன்றை தடுக்கவுமில்லை. வழிகெட்ட சூனியக்காரராகவோ, பொய் சொல்லும் குறிகாரராகவோ நான் அவரைக் கருதவில்லை. மறைவாக பேசப்படும் இரகசியங்களை வெளிப்படுத்தும் நபித்துவத்தின் அடையாளம் அவரிடம் இருக்கக் கண்டேன். இருந்தாலும் நான் மேலும் யோசித்துக் கொள்கிறேன்'' என்று ஹாத்திபுக்கு பதில் கூறினார். பின்பு, நபி (ஸல்) அவர்களின் கடிதத்தை யானை தந்தத்தில் வைத்து மூடி முத்திரையிட்டு தனது அடிமை பெண்களிடம் கொடுத்து பாதுகாத்து வைக்கச் சொன்னார். பின்பு அரபியில் எழுதும் தனது எழுத்தாளரை அழைத்து நபியவர்களுக்கு கடிதம் ஒன்று எழுதுமாறு கூறினார்.

"அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் எழுதுகிறேன். அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மதுக்கு கிப்திகளின் அரசர் முகவ்கிஸ் எழுதுவது. உங்களுக்கு ஈடேற்றம் உண்டாகட்டுமாக! நான் உங்களது கடிதத்தைப் படித்தேன். அதில் நீங்கள் கூறியிருப்பதையும், நீங்கள் எதன் பக்கம் அழைக்கிறீரோ அதையும் நான் புரிந்து கொண்டேன். ஒரு நபி மீதமிருக்கிறார் என்பது எனக்கு நன்கு தெரியும். அவர் ஷாம் தேசத்திலிருந்து வருவார் என்றுதான் எண்ணியிருந்தேன். நான் உங்களது தூதரைக் கண்ணியப்படுத்தினேன். மதிப்பும் மரியாதையுமிக்க இரண்டு அடிமைப் பெண்களையும் சில ஆடைகளையும் நான் உங்களுக்கு அனுப்பியுள்ளேன். நீங்கள் வாகனிப்பதற்காக ஒரு கோவேறு கழுதையையும் அன்பளிப்பாக அளிக்கிறேன். உங்களுக்கு ஈடேற்றம் உண்டாகுக.''

இக்கடிதத்தில் இவர் வேறு எதையும் குறிப்பிடவில்லை. இஸ்லாமை ஏற்றுக் கொள்ளவும் இல்லை. இரண்டு அடிமைப் பெண்களில் ஒருவர் 'மாயா'', மற்றொருவர் 'சீரீன்''. கோவேறு

கழுதையின் பெயர் 'துல்துல்' ஆகும். பிற்காலத்தில் வந்த மன்னர் முஆவியா (ரழி) அவர்களின் காலம் வரை துல்துல் உயிருடனிருந்தது. (ஜாதுல் மஆது)

மாயாவை நபி (ஸல்) தனக்காக வைத்துக் கொண்டார்கள். இவர் மூலம் நபியவர்களுக்கு 'இப்றாஹீம்' என்ற குழந்தை பிறந்தது. சீரீனை நபி (ஸல்) ஹஸ்ஸான் இப்னு ஸாபித் (ரழி) என்ற அன்சாரி தோழருக்கு வழங்கினார்கள்.

### 3) பாரசீக மன்னருக்குக் கடிதம்

நபி (ஸல்) அவர்கள் பாரசீக மன்னர் 'கிஸ்ரா''விற்கும் கடிதம் எழுதினார்கள். அந்த கடிதமாவது:

''அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்... அல்லாஹ்வின் தூதர் முஹம்மது, பாரசீகர்களின் மன்னர் கிஸ்ராவிற்கு எழுதும் கடிதம். நேர்வழியைப் பின்பற்றி, அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிக்கை கொண்டு, வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை அவன் தனித்தவன் அவனுக்கு இணை துணை யாருமில்லை அவன் தனக்கென எவரையும் மனைவியாகவோ பிள்ளையாகவோ எடுத்துக் கொள்ளவில்லை நிச்சயமாக முஹம்மது அவனது அடிமையாகவும் தூதராகவும் இருக்கிறார்கள் என்று சாட்சி கூறுவோருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்!

நான் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அனைத்து மக்களுக்கும் அனுப்பப்பட்ட தூதராவேன். உயிருள்ளவர்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக, இறைநிராகரிப் பாளர்களுக்கு அவனது தண்டனையின் வாக்கு உறுதி ஆவதற்காக என்னை அவன் தூதராக அனுப்பியிருக்கிறான். நீங்கள் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளுங்கள் ஈடேற்றம் பெறுவீர்கள் நீங்கள் மறுத்துவிட்டால் மஜூஸிகளின் (நெருப்பை வணங்குபவர்களின்) குற்றமெல்லாம் உங்களையே சாரும்.''

இக்கடிதத்தை எடுத்துச் செல்வதற்கு 'அப்துல்லாஹ் இப்னு ஹுதாஃபா அஸ்ஸஹ்மி' என்ற தோழரைத் தேர்வு செய்தார்கள். இவர் பஹ்ரைன் நாட்டு மன்னரிடம் இந்தக் கடிதத்தைக் கொடுத்து, அவர் அக்கடிதத்தை தனது ஆள் மூலமாக கிஸ்ராவிடம் அனுப்பினாரா அல்லது அப்துல்லாஹ்வே நேரடியாக கிஸ்ராவிடம் கொடுத்தாரா என்ற விபரம் அறியப்படவில்லை. எதுவாக இருப்பினும், முடிவில் அக்கடிதம் கிஸ்ராவிடம் சென்று அதை அவன் படித்து விட்டு கிழித்தெறிந்தான். பின்பு பெருமையுடன் ''எனது குடிமக்களில் ஒரு கேவலமான அடிமை எனது பெயருக்கு முன் அவரது பெயரை எழுதுவதா?'' என்று கூறினான்.

இந்தச் செய்தி நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிந்த போது ''அல்லாஹ் அவனது ஆட்சியை கிழித்தெறியட்டும்'' என்று கூறினார்கள். அவ்வாறே நடக்கவும் செய்தது. இதற்குப் பின் கிஸ்ரா யமன் தேசத்திலுள்ள தனது கவர்னருக்குக் கடிதம் எழுதினான். அதில் ''ஜாஸில் உள்ள இவரிடம் நல்ல துணிச்சலான இரு வீரர்களை அனுப்பி வை. அவர்கள் அவரை என்னிடம் கொண்டு வரட்டும்'' என்று குறிப்பிட்டான். இக்கடிதம் கிடைத்தவுடன் கவர்னர் பாதான் தன்னிடமுள்ள வீரர்களிலிருந்து இருவரைத் தேர்ந்தெடுத்து நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தான். மேலும் அவ்விருவரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். அதில் ''இக்கடிதம் கிடைத்தவுடன் நபியவர்கள் இந்த இருவருடன் உடனே புறப்பட்டு கிஸ்ராவிடம் செல்ல வேண்டும்'' என்று குறிப்பிட்டிருந்தான்.

வந்த இருவரில் ஒருவன் பெயர் கஹ்ர்மானா பானவய். இவன் கணக்கு மற்றும் ஃபார்சி மொழியை அறிந்தவன். இரண்டாமவன் பெயர் குர்குஸ்ரு.

இவ்விருவரும் மதீனா வந்து நபியவர்களைச் சந்தித்தார்கள். அவ்விருவல் ஒருவன் நபியவர்களிடம் ''அரசர்களுக்கெல்லாம் அரசரான கிஸ்ரா தனது கவர்னர் பாதானுக்கு

கடிதம் எழுதினார். அதில் உம்மை அழைத்து வருவதற்காக ஆட்களை உம்மிடம் அனுப்பும்படி ஆணையிட, பாதான் என்னை உம்மிடம் அனுப்பியுள்ளார். நீர் என்னுடன் புறப்பட வேண்டும்'' என்று கூறியதுடன் நபியவர்களை எச்சரிக்கும்படி பல வார்த்தைகளையும் கூறினான். நபி (ஸல்) அவற்றைப் பொறுமையாக கேட்டு விட்டு, தன்னை நாளை சந்திக்குமாறு அவ்விருவரிடமும் கூறினார்கள்.

இக்காலக் கட்டத்தில் மன்னர் கைசன் படையுடன் சண்டையிட்டுக் கொண்டிருந்த கிஸ்ராவின் படையினர் கடும் தோல்வியடைந்தனர். இதற்குப் பின் கிஸ்ராவுக்கு எதிராக அவனது குடும்பத்திலிருந்தே பெரும் கிளர்ச்சி ஏற்பட்டது. கிஸ்ராவின் மகன் ஷீர்வை தகப்பனைக் கொன்று ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். இச்சம்பவம் ஹிஜ்ரி 7, ஜுமாதா அல் ஊலா பிறை 10, செவ்வாய் இரவு நடந்தது. அச்சம்பவம் நடந்த அதே நேரத்தில் அதை வஹியின் வாயிலாக நபி (ஸல்) அறிந்து கொண்டார்கள். (ஃபத்ஹுல் பாரி, தாக் இப்னு கல்தூன்)

மறுநாள் இரு தூதர்களும் வந்தபோது நபி (ஸல்) அச்செய்தியை அவர்களுக்குக் கூறினார்கள். அதற்கு அவ்விருவரும் "நீர் என்ன பேசுகிறாய் என்று தெரிந்துதான் பேசுகிறாயா? இதற்கு முன் மிக இலகுவான தண்டனையைத்தான் நாம் உம்மிடம் கூறியுள்ளோம். நீர் சொன்ன இச்செய்தியை நாங்கள் எழுதி கவர்னருக்கு அனுப்பலாமா?'' என்று கூறினர். அதற்கு நபியவர்கள் "ஆம்! அவருக்கு இச்செய்தியை என் சார்பாக அனுப்பி வையுங்கள்.'' என்றும் "எனது மார்க்கமும், ஆட்சியும் கிஸ்ராவின் ஆட்சி எதுவரை இருக்கிறதோ அதுவரை வந்தடையும். எதுவரை குதிரையும் ஒட்டகமும் செல்ல முடியுமோ அதுவரை சென்றடையும். அவர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் அவரது கட்டுப்பாட்டில் உள்ளதை அவருக்கே சொந்தமாக்கி விடுவேன், அவரது இனத்தைச் சேர்ந்தவர்களுக்கு அவரையே அரசனாக்கி விடுவேன்'' என்றும் சொல்லுங்கள் என்றார்கள்.

அந்த இருவரும் நபி (ஸல்) அவர்களிடமிருந்து புறப்பட்டு தங்களது கவர்னர் பாதானிடம் வந்தனர். பிறகு நபி (ஸல்) கூறி அனுப்பிய செய்தியைக் கூறினார்கள். சிறிது நேரத்திற்குள் ஷீர்வையின் கடிதம் ஒன்று அவரிடம் வந்தது. அதில்: "நான் எனது தந்தையைக் கொன்று விட்டேன். எனது தந்தை தனது கடிதத்தில் குறிப்பிட்ட மனிதர் விஷயத்தில் சற்று பொறு. எனது அடுத்த கட்டளை வரும் வரை அவரை பழித்துப் பேசிவிடாதே'' என்று எழுதப்பட்டிருந்தது. (தாரீகுல் உமமில் இஸ்லாமிய்யா, ஃபத்ஹுல் பாரி)

### 4) ரோம் நாட்டு மன்னருக்குக் கடிதம்

நபியவர்கள் ரோமின் மன்னர் (ஹெர்குலஸ்) 'ர்கலுக்கு' எழுதிய கடிதத்தின் வாசகத்தை இமாம் புகாரி (ரஹ்) ஒரு நீண்ட ஹதீஸுக்கு இடையில் குறிப்பிடுகிறார்கள். அது,

"அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்,.. அல்லாஹ்வின் அடிமையும், அவனது தூதருமான முஹம்மது, ரோமின் மன்னர் ர்கலுக்கு எழுதுவது: நேர்வழியை பின்பற்றியவருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்! இஸ்லாமை ஏற்றுக்கொள் ஈடேற்றம் அடைவாய் இஸ்லாமை ஏற்றுக்கொள் அல்லாஹ் உனக்கு கூலியை இருமுறை வழங்குவான் நீ புறக்கணித்து விட்டால் உமது கூட்டத்தினர் அனைவரின் குற்றமும் உன்னையே சாரும்.

வேதத்தை உடையவர்களே! நமக்கும் உங்களுக்கும் ஒரு சமத்துவமான விஷயத்தின் பக்கம் வருவீர்களாக! (அதாவது) நாம் அல்லாஹ்வைத் தவிர வேறொன்றையும் வணங்க மாட்டோம். நாம் அவனுக்கு யாதொன்றையும் இணையாக்க மாட்டோம். நம்மில் ஒருவரும் அல்லாஹ்வையன்றி எவரையும் இறைவனாக எடுத்துக் கொள்ள மாட்டோம்'' (என்று கூறுங்கள். நம்பிக்கையாளர்களே! இதனையும்) அவர்கள் புறக்கணித்தால் (அவர்களை

நோக்கி) “நிச்சயமாக நாங்கள் (அவன் ஒருவனுக்கே) வழிப்பட்டவர்கள் என்று நீங்கள் சாட்சி கூறுங்கள்!” என்று நீங்கள் கூறிவிடுங்கள். (அல்குர்ஆன் 3:64)

இக்கடிதத்தை எடுத்துச் செல்ல திஹ்யா இப்னு கலீஃபா அல்கல்பி என்ற தோழரைத் தேர்வு செய்தார்கள். அவரிடம் “நீங்கள் இதை புஸ்ராவின் கவர்னரிடம் கொடுங்கள், கவர்னர் அக்கடிதத்தை மன்னர் கைஸரிடம் கொடுக்கட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

இது தொடர்பாக இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் நீண்ட அறிவிப்பை இங்கு பார்ப்போம்:

அது, அபூ ஸுஃப்யான் மற்றும் குறைஷி காஃபிர்களுடன் நபி (ஸல்) அவர்கள் ஹுதைபிய்யாவில் ஒப்பந்தம் செய்திருந்த காலம். அக்காலத்தில் அபூ ஸுஃப்யானும் குறைஷி காஃபிர்களும், வணிகர்களாக ஷாம் (சிரியா) சென்றிருந்தார்கள். அபூ ஸுஃப்யான் தனது சக தோழர்களுடன் இருக்கும் போது அவரிடம் ஹெர்குலிஸ் (ஹிர்கல்) மன்னன், ஒரு தூதுவனை அனுப்பி ரோம் நகரப் பெருந்தலைவர்கள் கூடியிருக்கும் மஸ்ஜிதுல் அக்ஸாவில் தனது அவைக்கு வரும்படி அழைப்பு விடுத்தார். (ஹிர்கல் ரோமிலிருந்து அங்கு அப்போது வந்திருந்தார்.)

அபூ ஸுஃப்யான் தனது குழுவுடன் அங்கு வரவே அவர்களை ஹிர்கல் வரவேற்று அமரவைத்தார். பிறகு தனது மொழிபெயர்ப்பாளரையும் அவைக்கு வரவழைத்தார். இதற்குப் பின் நாம் நேரடியாக அபூ ஸுஃப்யான் கூறுவதைக் கேட்போம்.

மன்னர்: தன்னை நபி என்று கூறும் அந்த மனிதருக்கு உங்களில் மிக நெருங்கிய உறவினர் யார்?

அபூஸுஃப்யான்: அவர்களுக்கு மிக நெருங்கிய உறவினன் நான்தான்.

மன்னர்: அவரை என்னருகே கொண்டு வாருங்கள் அவருடைய தோழர்களை அவருக்கு பின் பக்கம் இருக்க வையுங்கள்.

(தனது மொழிபெயர்ப்பாளரிடம்) தன்னை நபியெனக் கூறும் அந்த மனிதரை (நபியை)ப் பற்றி இவ (அபூஸுஃப்யானி)ரிடம் நான் கேட்பேன். இவர் என்னிடம் பொய்யுரைத்தால் (அபூ ஸுஃப்யான் தோழர்களான) நீங்கள் இவர் பொய் கூறுகிறார் என்று தெரிவிக்கவும். இதனை மொழிபெயர்த்து இவர்களிடம் கூறு.

அபூஸுஃப்யான் (மனதிற்குள்): நான் பொய் கூறுவதாக என் நண்பர்கள் சொல்லி விடுவார்களோ என்ற வெட்கம் மட்டும் எனக்கு இல்லாவிட்டால் அல்லாஹ்வின் மீதாணையாக! நபியவர்களைப் பற்றி நான் பொய் சொல்லியிருப்பேன்.

மன்னர்: உங்களில் அவரது குடும்பம் எப்படிப்பட்டது?

அபூஸுஃப்யான்: அவர் எங்களில் நல்ல குடும்பத்தைச் சார்ந்தவர்.

மன்னர்: இதற்கு முன்பு (இறைவன் ஒருவன். நான் அவனது தூதன் என்ற) இச்சொல்லை உங்களில் யாராவது சொல்லியிருக்கின்றனரா?

அபூஸுஃப்யான்: இல்லை.

மன்னர்: “இவரது முன்னோர்களில் யாராவது அரசராக இருந்தாரா?”.

அபூஸுஃப்யான்: இல்லை.

மன்னர்: அவரை பின்பற்றுபவர்கள் மக்களில் சிறந்தவர்களா அல்லது எளியவர்களா?

அபூஸுஃப்யான்: எளியவர்களே பின்பற்றுகிறார்கள்.

மன்னர்: அவர்கள் அதிகரிக்கின்றனரா? குறைகின்றனரா?

அபூஸுஃப்யான்: இல்லை! அதிகரிக்கின்றனர்.

மன்னர்: அவரது மார்க்கத்தில் இணைந்த பின் யாராவது அம்மார்க்கத்தின் மீது வெறுப்பு கொண்டு மதம் மாறுகின்றனரா?

அபூஸுஃப்யான்: இல்லை.

மன்னர்: இச்சொல்லைச் சொல்வதற்கு முன்பு அவர் பொய் பேசுவார் என சந்தேகப் பட்டதுண்டா?

அபூஸுஃப்யான்: இல்லை.

மன்னர்: அவர் மோசடி செய்ததுண்டா?

அபூஸுஃப்யான்: இல்லை. நாங்கள் அவரிடம் தற்போது ஓர் உடன்படிக்கை செய்திருக் கிறோம். அதன்படி அவர் செயல்படுவாரா அல்லது மாட்டாரா என்பது எங்களுக்குத் தெரியாது. (நபியைப் பற்றி குறை கூற இந்த வாக்கியத்தைத் தவிர வேறு வாக்கியத்தை என் பேச்சின் இடையே சேர்க்க எனக்கு வாய்ப்பு கிடைக்கவில்லை.)

மன்னர்: அவருடன் போர் செய்துள்ளீர்களா?

அபூஸுஃப்யான்: ஆம்!

மன்னர்: அவருடன் நீங்கள் புரிந்த போர் முடிவு எவ்வாறு இருந்தது?

அபூஸுஃப்யான்: அவருக்கும் நமக்கும் இடையே போர் ஏற்றம் இறக்கமாக, அதாவது சில நேரம் அவர் எங்களை வெல்வார் சிலநேரம் நாங்கள் அவரை வெல்வோம்.

மன்னர்: அவர் உங்களுக்கு என்ன கட்டளையிடுகிறார்?

அபூஸுஃப்யான்: அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணை ஆக்காதீர்கள். உங்கள் முன்னோர் கூறியதை விட்டுவிடுங்கள் என்று கூறி தொழுகை, வாய்மை, கற்பொழுக்கம், உறவைப் பேணுதல் போன்ற நற்பண்புகளைக் கட்டளையிடுகிறார்.

அனைத்தையும் ஆழ்ந்து கேட்ட மன்னர் தனது மொழிபெயர்ப்பாளடம் தான் இனி பேசுவதை மொழிபெயர்த்துக் கூறச் சொன்னார். அதாவது:

உன்னிடம் அவரது குடும்பம் பற்றிக் கேட்டேன். "அவர் உங்களில் நல்ல குடும்பத்தைச் சார்ந்தவர்" என்றாய். இவ்வாறுதான் இறைத்தூதர்கள், சமுதாயத்தில் நல்ல குடும்பத்தில் அனுப்பப்படுவார். அடுத்து, உன்னிடம் "இதற்கு முன்பு (இறைவன் ஒருவன். நான் அவனது தூதன் என்ற) இச்சொல்லை உங்களில் யாராவது சொல்லியிருக்கின்றனரா?" எனக் கேட்டேன், "இல்லை" என்றாய். இச்சொல்லை இதற்கு முன்பு யாராவது சொல்லியிருந்தால் அவரைப் பின்பற்றி இவரும் கேள்விப்பட்டதை கூறுகிறார் என்று சொல்லியிருப்பேன்.

அடுத்து உன்னிடம் "இவரது முன்னோர்களில் யாராவது அரசராக இருந்தாரா?" எனக் கேட்டேன். நீ "இல்லை" என்றாய். அங்ஙனம் இவரது முன்னோர்களில் யாராவது மன்னராக இருந்திருந்தால் அவருடைய முன்னோன் அரசாட்சியை ஆசைப்படுகிறார் என்றிருப்பேன். அடுத்து உன்னிடம் "(இறைவன் ஒருவன். நான் அவனது தூதன் என்ற) இச்சொல்லைச் சொல்வதற்கு முன்பு அவர் பொய்யுரைப்பார் என சந்தேகப்பட்டதுண்டா?" எனக் கேட்டேன். நீ "இல்லை" என்றாய். மக்களிடம் பொய்யுரைக்கத் துணியாதவர் நிச்சயம்

அல்லாஹ்வின் மீது பொய்யுரைக்க மாட்டார் என்பதை நன்கு புரிந்துகொண்டேன். அடுத்து அவரை பின்பற்றுபவர்கள் மக்களில் சிறந்தவர்களா அல்லது எளியவர்களா''? என்று உன்னிடம் கேட்டேன் ''அவரை சாதாரண எளிய மக்கள்தான் பின்பற்றுகிறார்கள்'' என்று கூறினாய். (பெரும்பாலும் ஆரம்பத்தில்) அத்தகைய மக்கள்தான் இறைத்தூதர்களைப் பின்பற்றுவார்கள்.

அடுத்து உன்னிடம் ''அவரைப் பின்பற்றுபவர்கள் அதிகரிக்கின்றனரா குறைகின்றனரா'' என்று கேட்டேன். ''அதிகரிக்கின்றனர்'' என்றாய் நீ. அவ்வாறே இறை நம்பிக்கை முழுமை அடையும்வரை அது வளர்ந்து கொண்டே இருக்கும். அடுத்து உன்னிடம் ''அவரது மார்க்கத்தில் இணைந்த பின் யாராவது அம்மார்க்கத்தின் மீது வெறுப்பு கொண்டு மதம் மாறி இருக்கின்றனரா'' என்று கேட்டேன். நீ ''இல்லை'' என்றாய். ஆம்! இறை நம்பிக்கையின் நிலை அவ்வாறுதான் இருக்கும். அதன் தெளிவு உள்ளத்துடன் ஒன்றோடு ஒன்றாக கலந்துவிட்டால் எவரும் அதைவிட்டு வெளியேற மாட்டார்கள். அடுத்து உன்னிடம் ''அவர் மோசடி செய்ததுண்டா''? என்று கேட்டேன். நீ ''இல்லை'' என்றாய். அவ்வாறே இறைத்தூதர்கள் மோசடி செய்ய மாட்டார்கள்.

அடுத்து உன்னிடம் அவர் உங்களுக்கு என்ன கட்டளையிடுகிறார்? என்று கேட்டேன். ''அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள் என்று கட்டளையிட்டு, சிலை வணக்கத்தை விட்டு உங்களைத் தடுக்கிறார். மேலும் தொழுகை, வாய்மை, கற்பொழுக்கம், உறவைப் பேணுதல் போன்ற நற்பண்புகளை ஏவுகிறார்'' என்று கூறினாய். ''நீ கூறியவை அனைத்தும் உண்மையாக இருந்தால் என்னிரு கால்களுக்குக் கீழுள்ள இவ்விடங்களை அவரே அரசாள்வார். நிச்சயம் அவர் தோன்றுவார் என்பது எனக்குத் தெரியும். ஆனால், உறுதியாக அவர் உங்களிலிருந்து வருவார் என நான் நினைத்துக் கூட பார்க்கவில்லை. அவரைச் சென்றடையும் வழி எனக்குத் தெரிந்திருப்பின் சிரமம் பாராது அவரை சந்திப்பேன். நான் அவரருகில் இருந்தால் அவருடைய கால்களைக் கழுவுவேன்'' என்றார். பின்பு புஸ்ராவின் ஆளுநர் வாயிலாக தனக்காக திஹ்யாவிடம் நபி (ஸல்) கொடுத்தனுப்பிய கடிதத்தைத் தன்னிடம் கொடுக்க வேண்டினார். ஆளுநர் அதனை மன்னனிடம் தந்தார். முன்னாள் நாம் கண்ட அக்கடிதத்தை மன்னர் படித்து முடித்தபோது அங்கே மக்களின் சப்தங்கள் உயர்ந்தன. கூச்சல்கள் அதிகமாயின.

அபூ ஸுஃப்யான் கூறுகிறார்: ''எங்களை வெளியேற்றும்படி கூற நாங்கள் வெளியேற்றப் பட்டோம். நாங்கள் வெளியேறும் போது நான் என் தோழர்களிடம் கூறினேன்: ரோமர்களின் மன்னன்கூட அவரைக் கண்டு அஞ்சும் அளவுக்கு அபூ கபிஷாவின்'' பேரனுடைய காரியம் உறுதியாகி விட்டது'' என்று அபூஸுஃப்யான் கூறினார்.

அப்போதே அல்லாஹ்வின் தூதர் விஷயத்தில் நிச்சயம் அவர்கள் வெற்றி பெறுவார்கள் என நான் நம்பிக்கையுடன் இருந்தேன். முடிவில் அல்லாஹ் எனக்கு இஸ்லாமை ஏற்க அருள் செய்தான் என்று அபூஸுஃப்யான் கூறினார். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்களின் கடிதம் கைஸர் மன்னரிடம் எப்படிப்பட்ட பிரதிபலிப்பை ஏற்படுத்தியது என்பதை அபூஸுஃப்யான் நேரில் பார்த்து புரிந்து கொண்டதையே இவ்வாறு கூறினார்.

மேலும், நபி (ஸல்) அவர்களின் தூதுவர் திஹ்யாவிற்கு மன்னர் கைஸர் பெரும் செல்வத்தையும் உயர்ந்த ஆடைகளையும் கொடுத்து கௌரவித்தார். அந்தளவுக்கு நபி (ஸல்) அவர்களின் கடிதம் அவரிடம் மாறுதலை ஏற்படுத்தியது. திஹ்யா (ரழி) திரும்ப மதீனா நோக்கி பயணித்துக் கொண்டிருக்கும் வழியில் 'ஸ்மா' என்ற இடத்தில் ஜுதாம் கிளையைச் சேர்ந்த சிலர் அவன் பொருட்கள் அனைத்தையும் வழிப்பறி செய்து கொண்டனர். பின்பு மதீனா வந்து சேர்ந்த திஹ்யா (தனது இல்லம் செல்வதற்கு முன்) நேராக நபி (ஸல்)

அவர்களைச் சந்தித்து நடந்ததைக் கூறினார். உடனே நபியவர்கள் 500 வீரர்களை ஜைது இப்னு ஹாஸாவின் தலைமையில் ஹிஸ்மாவை நோக்கி அனுப்பினார்கள். இந்த 'ஸ்மா' என்பது வாதில் குர்ராவை அடுத்துள்ள ஊராகும். அங்கு சென்ற ஜைது (ரழி) அவர்கள் ஜுதாம் கிளையினரைத் தாக்கி அதிகமானவர்களைக் கொன்றார்கள். பின்பு அக்கிளையினரின் கால்நடைகளையும் பெண்களையும் அழைத்துக் கொண்டு மதீனா வந்து சேர்ந்தார்கள். அதில் 1000 ஒட்டகங்களும், 5000 ஆடுகளும், கைதிகளில் பெண்கள் சிறுவர்களென 100 பேர்களும் இருந்தனர்.

ஏற்கனவே ஜுதாம் கிளையினர் நபி (ஸல்) அவர்களிடம் ஒப்பந்தம் செய்திருந்தனர். எனவே, இக்கிளையினரின் முக்கியப் பிரமுகர்களில் ஒருவரான ஜைது இப்னு ஃபாஆ நபி (ஸல்) அவர்களிடம் இவ்வழக்கைக் கொண்டு வந்தார். இவரும், இவன் கிளையைச் சேர்ந்த மற்றும் சிலரும் இதற்கு முன்பே இஸ்லாமைத் தழுவியிருந்தனர். இவர்கள் தங்களது ஜுதாம் கிளையினர் திஹ்யாவை வழிப்பறி செய்த போது தங்களால் முடிந்தளவு திஹ்யாவைப் பாதுகாத்தனர். எனவே, நபியவர்கள் இவர்களின் கோரிக்கையை ஏற்று ஜைது இப்னு ஹாஸா கொண்டு வந்திருந்த பொருட்களையும் கைதிகளையும் திரும்பக் கொடுத்து விட்டார்கள்.

போர்களைப் பற்றிக் குறிப்பிடும் வரலாற்று ஆசிரியர்களில் பெரும்பாலானவர்கள் இந்நிகழ்ச்சியை ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு முன் நடந்ததாகக் குறிப்பிடுகின்றனர். ஆனால், அது தவறாகும். ஏனெனில், நபியவர்கள் கைஸர் மன்னருக்கு ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின்தான் கடிதம் அனுப்பினார்கள். எனவே, ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின்தான் இச்சம்பவம் நடந்தது என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை என்று இப்னுல் கய்'' (ரஹ்) குறிப்பிடுகிறார்கள்.

### 5) பஹ்ரைன் நாட்டு ஆளுநருக்குக் கடிதம்

பஹ்ரைன் நாட்டு ஆளுநர் 'அல்முன்திர் இப்னு ஸாவி' என்பவருக்கு இஸ்லாமின் பக்கம் அழைப்புக் கொடுத்து நபி (ஸல்) கடிதம் எழுதினார்கள். அக்கடிதத்தை அலா இப்னு ஹள்ரமி என்ற தோழர் மூலம் அனுப்பினார்கள். நபி (ஸல்) அவர்களின் கடிதத்தைப் படித்துப் பார்த்த பின்பு அவர் நபியவர்களுக்குப் பதில் எழுதினார். ''அல்லாஹ்வின் தூதரே! உங்களது கடிதத்தை பஹ்ரைன் நாட்டு மக்களுக்கு முன் நான் படித்துக் காட்டினேன். அவர்களில் சிலர் இஸ்லாமால் கவரப்பட்டு அதை விரும்பி ஏற்றுக் கொண்டனர். எனது நாட்டில் மஜூஸிகளும் யூதர்களும் இருக்கின்றனர். எனவே, நான் என்ன செய்ய வேண்டும்? எவ்வாறு நடக்க வேண்டும்? என எனக்குக் கட்டளை பிறப்பியுங்கள்'' என்று அதில் குறிப்பிட்டிருந்தார்.

அதற்கு நபி (ஸல்) அவர்களும் பின்வரும் பதில் எழுதியனுப்பினார்கள்.

''அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

அல்லாஹ்வின் தூதர் முஹம்மது, முன்திர் இப்னு ஸாவிக்கு எழுதிக் கொள்வது. உங்களுக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்! உங்களுக்கு முன் நான் அல்லாஹ்வைப் புகழ்கிறேன். அவனைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாருமில்லை. முஹம்மது அவனது அடிமையும் அவனது தூதருமாயிருக்கின்றார் என்று நான் சாட்சி கூறுகிறேன். இதற்குப் பின் உங்களுக்கு நான் அல்லாஹ்வை நினைவூட்டுகிறேன். யாரொருவர் நன்மையை நாடுகிறாரோ அந்த நன்மையின் கூலி அவரையே சாரும். யார் நான் அனுப்பும் தூதர்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்து, அவர்கள் கூறும் விஷயங்களைப் பின்பற்றுகிறாரோ அவர் எனக்குக் கீழ்ப்படிந்து நடந்தவராவார். யார் அவர்களுக்கு நன்மை செய்கிறாரோ அவர் எனக்கு நன்மை செய்தவராவார். நான் அனுப்பிய தூதர்கள் உங்களைப் பற்றி நல்லதையே கூறினார்கள். நீங்கள் உங்களது கூட்டத்தினருக்குச் செய்த பரிந்துரையை நான் ஏற்றுக் கொள்கிறேன். இஸ்லாமை ஏற்றுக் கொண்டவர்களுக்கு அவர்கள் முஸ்லிமாக மாறும்

போது அவர்களுக்குரிய அனைத்து உரிமைகளையும் அப்படியே கொடுத்து விடுங்கள். அவர்களில் குற்றமிழைத்திருந்தவர்களை நான் மன்னித்து விட்டேன். எனவே, நீங்களும் அவர்களை மன்னித்து ஏற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் சீர்திருத்தம் செய்து கொண்டிருக்கும் காலமெல்லாம் நாம் உங்களை உங்களது பதவியிலிருந்து அகற்ற மாட்டோம். யார் தனது யூத அல்லது மஜூஸி மதத்தில் நிலையாக இருந்து விடுகிறாரோ அவர் ஜிஸ்யா (வரி) செலுத்த வேண்டும்.'' இவ்வாறு அதில் குறிப்பிட்டார்கள்.

### 6) யமாமா நாட்டு அரசருக்குக் கடிதம்

இவர் பெயர் 'ஹவ்தா இப்னு அலீ' ஆகும். நபி (ஸல்) அவர்கள் இவருக்கு எழுதிய கடிதத்தின் வாசகமாவது:

''அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்...

அல்லாஹ்வின் தூதர் முஹம்மது, ஹவ்தா இப்னு அலீக்கு எழுதிக் கொள்வது. நேர் வழியைப் பின்பற்றுவோருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும். குதிரையும் ஒட்டகமும் எதுவரை செல்ல முடியுமோ அதுவரை எனது மார்க்கம் வெற்றி பெறும். இஸ்லாமை ஏற்றுக் கொள்ளுங்கள். ஈடேற்றம் பெறுவீர்கள். உங்களுக்குக் கீழ் உள்ள பகுதிகளையெல்லாம் உங்களுக்கே தந்துவிடுகிறேன்.''

இக்கடிதத்தை அனுப்புவதற்கு நபி (ஸல்) ஸலீத் இப்னு அம்ர் அல் ஆமி (ரழி) அவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். ஸலீத் (ரழி) இந்த முத்திரையிட்ட கடிதத்தை எடுத்துக் கொண்டு ஹவ்தாவிடம் வந்தபோது, அவர் ஸலீதை வரவேற்று தனது விருந்தினராகத் தங்க வைத்தார். ஸலீத் (ரழி) அவருக்கு அக்கடிதத்தைப் படித்துக் காட்டினார். அவர் அதற்குச் சிறிய அளவில் மறுப்பு தெரிவித்து விட்டு பதில் ஒன்றை எழுதினார். அதில், ''நீர் அழைக்கும் விஷயம் எவ்வளவு அழகானது, அற்புதமானது - பொதுவாக அரபிகள் எனக்குப் பயந்து நடக்கிறார்கள். உமது அதிகாரத்தில் எனக்கும் சில பங்கைக் கொடுத்தால் நான் உம்மைப் பின்பற்றுகிறேன்'' என்று கூறினார்.

இக்கடிதத்துடன் ஸலீத்துக்கு வெகுமதிகளையும் அன்பளிப்புகளையும் கொடுத்து 'ஹஜர்' என்ற இடத்தில் நெய்யப்பட்ட உயர்ந்த ஆடைகளையும் அவருக்கு அணிவித்தார்.

இவையனைத்தையும் எடுத்துக் கொண்டு ஸலீத் (ரழி) நபி (ஸல்) அவர்களிடம் வந்து நடந்த செய்தியைக் கூறினார். நபி (ஸல்) அக்கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு ''அவன் பூமியில் சிறுபகுதியைக் கேட்டாலும் கொடுக்க மாட்டேன். அவனும் நாசமாகி விட்டான். அவனது அதிகாரத்திற்கு உட்பட்டதும் நாசமாகி விட்டது'' என்றார்கள். நபியவர்கள் மக்காவை வெற்றி கொண்டு திரும்பிய போது 'ஹவ்தா' இறந்துவிட்ட செய்தியை ஜிப்ரீல் (அலை) கூறினார்கள். அப்போது நபி (ஸல்), ''நிச்சயமாக யமாமாவில் தன்னை நபி என்று கூறும் ஒருவன் உருவாகுவான். அவன் எனது மரணத்துக்குப் பின் கொல்லப்படுவான்'' என்றார்கள். ஒருவர் ''அல்லாஹ்வின் தூதரே! அவனை யார் கொல்வார்? என்று கேட்டார். அதற்கு நபியவர்கள் ''நீரும் உமது தோழர்களும்'' என்றார்கள். பின்னாளில் நபி (ஸல்) கூறியவாறே நடந்தது.

### 7) ஸிரியா நாட்டு மன்னருக்குக் கடிதம்

இவர் பெயர் 'ஹாரிஸ் இப்னு அபூ ஷமீர் அல்கஸ்ஸானி' ஆகும். நபி (ஸல்) இவருக்கு எழுதிய கடிதமாவது:

''அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்...

அல்லாஹ்வின் தூதர் முஹம்மது, ஹாரிஸ் இப்னு அபூ ஷமீருக்கு எழுதியது. நேர் வழியைப் பின்பற்றி, அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டு, அவனை உண்மையாக ஏற்றுக் கொண்டவருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்! தனக்கு இணை துணை இல்லாத ஏகனான அல்லாஹ் ஒருவனையே நீர் நம்பிக்கை கொள்ள வேண்டும் என்று நான் உங்களை அழைக்கிறேன். அப்படி செய்தால் உங்கள் ஆட்சி உங்களிடமே நிலைத்திருக்கும்.''

அஸத் இப்னு குஸைமா கிளையைச் சேர்ந்த ஷுஜா இப்னு வஹப் இக்கடிதத்தை எடுத்துச் சென்றார். இவர் ஹாரிஸிடம் கடிதத்தை ஒப்படைத்த போது, அதைத் தூக்கி எறிந்துவிட்டு ''என்னிடமிருந்து எனது ஆட்சியை யாரால் பிடுங்க முடியும். இதோ நான் அவரிடம் புறப்படுகிறேன்'' என்று கர்ஜித்தான். இவன் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளவில்லை. கடுங்கோபம் கொண்ட அவன் கைஸர் மன்னரிடம் நபியவர்கள் மீது போர் தொடுக்க அனுமதி கேட்டான். ஆனால், கைஸர் அவனைத் தடுத்து விட்டார். இதற்குப் பின் கடிதம் கொண்டு வந்த ஷுஜாஃ இப்னு வஹபுக்கு அன்பளிப்பாக ஆடைகளையும் வழிசெலவுகளையும் கொடுத்து அழகிய முறையில் ஹாரிஸ் அனுப்பி வைத்தான்.

### 8) ஓமன் நாட்டு அரசருக்குக் கடிதம்

நபியவர்கள் ஓமன் நாட்டு அரசர் 'ஜைஃபர்' மற்றும் அவரது சகோதரர் 'அப்து''க்குக் கடிதம் அனுப்பினார்கள். அதன் வாசகமாவது:

''அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

அல்லாஹ்வின் தூதர் முஹம்மது, அல் ஜுலந்தாவின் மகன்களான ஜைஃபர் மற்றும் அப்துக்கு எழுதுவது. நேர்வழியை பின்பற்றுபவருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்! நான் உங்களிருவருக்கும் இஸ்லாமிய அழைப்பு விடுக்கின்றேன். நீங்கள் இருவரும் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளுங்கள் ஈடேற்றம் பெறுவீர்கள். நான் மக்கள் அனைவருக்கும் அனுப்பப் பட்ட அல்லாஹ்வின் தூதராவேன். உயிருடன் இருப்பவர்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்கும், அல்லாஹ்வை நிராகரிப்பவர்களுக்கு நிச்சயம் வேதனை உண்டு என்பதை அறிவிப்பதற்கும் அல்லாஹ் என்னைத் தூதராக அனுப்பியிருக்கின்றான். நீங்கள் இருவரும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் உங்களையே நான் ஆட்சியாளர்களாக ஆக்கி விடுவேன். நீங்கள் இருவரும் இஸ்லாமை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால் நிச்சயம் உங்களின் ஆட்சி கவிழ்ந்துவிடும் என்பதில் சந்தேகமேயில்லை. எனது வீரர்கள் உங்களது நாட்டிற்கு வெகு விரைவில் வந்திறங்குவார்கள். எனது நபித்துவம் உங்களது ஆட்சியை வெல்லும்.''

இக்கடிதத்தை அம்ர் இப்னு ஆஸ் (ரழி) கொண்டு சென்றார். இப்போது நாம் இந்த நிகழ்ச்சியை குறித்து அம்ர் (ரழி) கூறுவதைக் கேட்போம்.

''நான் ஓமன் சென்று முதலில் அப்தை சந்தித்தேன். ஏனெனில், அப்துதான் இருவரில் சாந்த குணமும் புத்திசாலித்தனமும் உடையவர். நான் அவரிடம் சென்று, நான் அல்லாஹ்வின் தூதரால் உமக்கும் உமது சகோதரருக்கும் அனுப்பப்பட்ட தூதுவனாவேன்'' என்று என்னை அறிமுகப் படுத்திக் கொண்டேன். அதற்கவர் ''எனது சகோதரர்தான் வயதிலும் ஆட்சியிலும் என்னைவிட முந்தியவர். எனவே, நான் உன்னை அவரிடம் அனுப்பி வைக்கிறேன். முதலில் அவர் உன் கடிதத்தை படிக்கட்டும் என்று கூறிவிட்டு ''நீ எதன் பக்கம் அழைக்கிறாய்?'' என்றார்.

அம்ர்: நான் உன்னை அல்லாஹ்வின் பக்கம் அழைக்கிறேன். அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவர் யாருமில்லை. அவனைத் தவிர வணங்கப்படும் அனைத்தையும் விட்டு நீர் விலகிக் கொள்ள வேண்டும். நிச்சயமாக முஹம்மது, அல்லாஹ்வின் அடிமை, அவனது தூதர் என்று நீர் சாட்சி கூறவேண்டும்.

அப்து: அம்ரே! நிச்சயமாக நீர் உனது கூட்டத்தினரின் தலைவருடைய மகன். உனது தந்தை என்ன செய்தார்? அவர் நாங்கள் பின்பற்றுவதற்குத் தகுதியானவர்தான்.

அம்ர்: முஹம்மதை ஏற்றுக் கொள்ளாமல் அவர் மரணித்து விட்டார். அவர் இஸ்லாமை ஏற்று நபி (ஸல்) அவர்களை உண்மைப்படுத்தியிருக்க வேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். (ஆனால் நடக்கவில்லை) நானும் எனது தந்தையின் கொள்கையில்தான் இருந்தேன். இறுதியாக அல்லாஹ் எனக்கு இஸ்லாமிய நேர்வழியைக் காட்டினான்.

அப்து: நீர் எப்போது அவரைப் பின்பற்ற ஆரம்பித்தாய்?

அம்ர்: சமீபத்தில் தான்.

அப்து: நீர் எங்கிருக்கும் போது இஸ்லாமை ஏற்றுக் கொண்டாய்?

அம்ர்: நான் நஜ்ஜாஷியிடமிருக்கும் போது இஸ்லாமை ஏற்றுக் கொண்டேன். அவரும் இஸ்லாமை ஏற்றுக்கொண்டு விட்டார்.

அப்து: அப்போது அவரது கூட்டத்தினர் அவன் ஆட்சிக்கு என்ன செய்தனர்?

அம்ர்: அவரது ஆட்சியை ஏற்று அவரைப் பின்பற்றியே நடந்தனர்.

அப்து: அவைத் தலைவர்களும் பாதிரிகளுமா அவரைப் பின்பற்றினார்கள்?

அம்ர்: ஆம்!

அப்து: அம்ரே! நீர் சொல்வதை நன்கு யோசித்துச் சொல். ஏனெனில் பொய்யை விட ஒருவனை கேவலப்படுத்தக் கூடிய குணம் எதுவும் இருக்க முடியாது.

அம்ர்: நான் பொய் கூறவுமில்லை. அதை எங்களின் மார்க்கம் ஆகுமானதாக கருதவுமில்லை.

அப்து: அநேகமாக ஹிர்கலுக்கு நஜ்ஜாஷி இஸ்லாமானது தெரிந்திருக்காது.

அம்ர்: இல்லை. ஹிர்கலுக்குத் தெரியும்.

அப்து: அது ஹிர்கலுக்கு தெரியுமென்பதை நீர் எவ்வாறு அறிந்து கொண்டீர்?

அம்ர்: அதாவது, நஜ்ஜாஷி இதற்கு முன் ஹிர்கலுக்குக் கப்பம் கட்டி வந்தார். ஆனால், அவர் எப்போது இஸ்லாமை ஏற்று முஹம்மதை உண்மைப்படுத்தினாரோ அப்போது "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஹிர்கல் என்னிடம் ஒரு திர்ஹமைக் கேட்டாலும் நான் அதைக் கொடுக்க மாட்டேன்" என்று கூறிவிட்டார். இவ்வார்த்தை ஹிர்கலுக்கு எட்டியபோது அவருடன் இருந்த அவரது சகோதரர் 'யன்னாக்' என்பவன் "உமது அடிமை உமக்குக் கப்பம் கட்டாமல் உமது மார்க்கத்தை விட்டு விட்டு வேறொருவரின் புதிய மார்க்கத்தை ஏற்றுக் கொள்வதற்கு நீ விட்டு விடுகிறாயா?" என்று கேட்டான். அதற்கு ஹிர்கல் "ஒருவர் ஒரு மார்க்கத்தை விரும்பி ஏற்றுக் கொள்ளும்போது அவரை நான் என்ன செய்ய முடியும்? அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எனது ஆட்சியின் மீது எனக்குப் பிரியமில்லையெனில் அவர் செய்தது போன்றுதான் நானும் செய்திருப்பேன்" என்றார்.

அப்து: அம்ரே! நீர் என்ன சொல்கிறாய் என்பதை நன்கு யோசித்துக் கொள்!

அம்ர்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உம்மிடம் உண்மைதான் சொல்கிறேன்.

அப்து: அவர் எதை செய்யும்படி ஏவுகிறார்? எதை செய்வதிலிருந்து தடுக்கிறார்?

அம்ர்: அல்லாஹ்வுக்கு வழிபடவேண்டுமென ஏவுகிறார். அவனுக்கு மாறு செய்வதிலிருந்து தடுக்கிறார். (பெற்றோருக்கு) உபகாரம் செய்யவும், உறவினர்களைச் சேர்த்து வாழவும் சொல்கிறார். அநியாயம் செய்வது, அத்துமீறுவது, விபசாரம் செய்வது, மது அருந்துவது, கற்கள், சிலைகள், சிலுவைகள் ஆகியவற்றை வணங்குவது போன்ற அனைத்திலிருந்தும் தடுக்கிறார்.

அப்து: ஆஹா! அவர் அழைக்கும் விஷயம் எவ்வளவு நல்லதாக இருக்கிறது. எனது சகோதரர் இவர் விஷயத்தில் எனது பேச்சை ஏற்றுக் கொண்டால் நாங்கள் இருவரும் நேரடியாக முஹம்மதிடம் வந்து அவரை நம்பிக்கை கொண்டு அவரை உண்மைப்படுத்துவோம். ஆனால், எனது சகோதரர் தனது பதவி மீது ஆசை கொண்டவர். அதை அவர் பிறருக்கு விட்டுக் கொடுத்து விட்டு அவருக்கு (கட்டுப்பட்டு) வாலாக இருப்பதை விரும்ப மாட்டார்.

அம்ர்: நிச்சயமாக உமது சகோதரர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் அல்லாஹ்வின் தூதர் அவரையே அவரது கூட்டத்தினருக்கு அரசராக நியமித்து விடுவார்கள். மேலும், அந்தக் கூட்டத்தினரின் செல்வந்தர்களிடமிருந்து தர்மத்தைப் பெற்று அக்கூட்டத்தினரின் ஏழைகளுக்கே திரும்ப கொடுத்து விடுவார்கள்.

அப்து: இது மிக அழகிய பண்பாடாயிற்றே. தர்மம் என்றால் என்ன?

அம்ரு: நபியவர்கள் பொருட்களில் இன்னின்னவற்றில் ஏழைவரி கொடுக்க வேண்டுமென கடமையாக்கி இருக்கிறார்கள். அதுபோல் ஆடு, மாடு, ஒட்டகங்களிலும்.

அப்து: அம்ரே! இலைதழைகளைத் தின்று தண்ணீரைக் குடித்து வாழும் எங்களது கால்நடைகளிலுமா (தர்மம்) ஏழைவரி வசூலிக்கப்படும்?

அம்ர்: ஆம்! அவ்வாறுதான்.

அப்து: எனது கூட்டத்தினர் உங்களை விட்டும் தூரமாக இருக்கிறார்கள். அவர்களிடம் படைபலமும் அதிகமாக உள்ளது. எனவே, அவர்கள் இதற்குக் கட்டுப்படுவார்கள் என்று நான் எண்ணவில்லை.

அம்ர் (ரழி) கூறுகிறார்கள்: நான் அப்துடைய வீட்டில் இவ்வாறு பல நாட்கள் தங்கியிருந்தேன். ஒவ்வொரு நாளும் அவர் தனது சகோதரரிடம் சென்று என்னிடம் கேட்ட செய்தியைக் கூறுவார். பின்பு ஒரு நாள் அப்தின் சகோதரர் என்னை அழைக்க நான் அவரிடம் சென்றேன். அவரது பணியாட்கள் எனது புஜத்தைப் பிடித்தவர்களாக நின்றனர். “அவரை விட்டு விடுங்கள்” என்று அவர் கூற, அவர்கள் என்னை விட்டு விட்டனர். அங்கிருந்த இருக்கையில் அமரச் சென்ற போது அந்தப் பணியாட்கள் என்னை உட்கார விடாமல் தடுத்தனர். சரிஎன, நான் அப்தை நோக்கினேன். அவர் என்னிடம் “உமது தேவை என்னவென்று சொல்” என்றார்.

நான் அப்தின் சகோதரரிடம் முத்திரையிடப்பட்ட கடிதத்தைக் கொடுத்தேன். அதை வாங்கி முத்திரையைப் பிரித்து இறுதி வரை படித்தார். பின்பு தனது சகோதரரிடம் கொடுக்கவே அவரும் அவ்வாறே படித்துப் பார்த்தார். ஆனால், அவரை விட அவன் சகோதரர் அப்துதான் மிகவும் இரக்கமுள்ளவராக இருந்தார்.

பின்பு அப்தின் சகோதரர் என்னிடம் “குறைஷிகள் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்று என்னிடம் சொல்ல மாட்டாயா?” என்றார். அதற்கு நான் “குறைஷிகள் அவரைப் பின்பற்றி விட்டனர். மார்க்கத்தில் ஆசையுடன் சிலர் அவரை ஏற்றுக் கொண்டனர். எதிர்த்தவர்கள் வாளினால் அடக்கப்பட்டனர்” என்றேன். அதற்கவர் “அவருடன் யார் இருக்கிறார்கள்?” என்றார். அப்போது நான் மக்களெல்லாம் இஸ்லாமை விரும்பியே ஏற்றிருக்கின்றனர்.

அல்லாஹ் அவர்களுக்குக் கொடுத்த நேர்வழியாலும், பகுத்தறிவாலுமே இதுவரை தாங்கள் வழிகேட்டில்தான் இருந்து வந்ததை அறிந்து கொண்டனர்.

“இப்போதுள்ள இந்தச் சிரமமான நிலையில் உன்னைத் தவிர வேறு யாரும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நீர் இன்று இஸ்லாமை ஏற்று அவரைப் பின்பற்றவில்லை என்றால் நபி (ஸல்) அவர்களின் வீரர்கள் நாளை ஒரு நாள் உன்னிடம் வந்து சேருவார்கள். உமது ஆட்சியெல்லாம் அழியத்தான் போகிறது. எனவே, நீ இஸ்லாமை ஏற்றுக் கொள்! ஈடேற்றம் அடைவாய்! நபி (ஸல்) உனது கூட்டத்தினருக்கு உன்னையே ஆளுநராக நியமிப்பார்கள். குதிரைகளும் வீரர்களும் உம்மிடம் வரமாட்டார்கள்” என்று கூறினேன். அப்போது அவர் “என்னை இன்று விட்டுவிடு நாளை என்னிடம் திரும்ப வா” என்றார்.

இதற்குப் பின் நான் அப்திடம் சென்றேன். அவர் “அம்ரே! எனது சகோதரருக்கு ஆட்சி மோகம் இல்லையென்றால் அவர் இஸ்லாமை ஏற்றுக் கொள்வார் என்று நான் ஆதரவு வைக்கிறேன்” என்று கூறினார். மறுநாள் நான் அப்தின் சகோதரரிடம் சென்றேன். ஆனால், அவர் எனக்கு அனுமதியளிக்க மறுத்து விட்டார். எனவே, நான் திரும்ப அப்திடம் வந்து “என்னால் உனது சகோதரரிடம் செல்ல முடியவில்லை” என்றேன். அவர் என்னை அவன் சகோதரரிடம் நேரடியாக அனுப்பி வைத்தார்.

அவர் என்னிடம் “நீ எனக்குக் கொடுத்த அழைப்பு விஷயமாக யோசித்துப் பார்த்தேன். எனது கையிலுள்ள ஆட்சியை வேறு எவருக்கேனும் நான் கொடுத்து விட்டால் அரபிகளில் மிக பலவீனனாக கருதப்படுவேன். மேலும், அவரது வீரர்கள் இங்கு வரை வந்து சேரவும் முடியாது. அப்படி வந்தாலும் இதுவரை அவர்கள் சந்தித்திராத போரைச் சந்திக்க நேரிடும்” என்று கூறினான். இதனைக் கேட்டு “சரி! நாளை நான் இங்கிருந்து புறப்படுகிறேன்” என்றேன். நான் நாளை நிச்சயமாக புறப்பட்டு விடுவேன் என்பதை தெரிந்து கொண்டவுடன், அப்து தனது சகோதரரிடம் சென்று “நம்மால் அவரை வெல்ல முடியாது. அவர் யாருக்கெல்லாம் தூதனுப்பினாரோ அவர்கள் அனைவரும் அழைப்பை ஏற்றுக் கொண்டார்கள். எனவே, நாமும் அவரை ஏற்றுக் கொள்வதுதான் நமக்கு நல்லது” என்று கூறினார்.

மறுநாள் விடிந்தபோது அப்தின் சகோதரர் என்னை வரவழைத்து அவரும் அவரது சகோதரரும் இஸ்லாமை ஏற்றுக்கொண்டு, நபி (ஸல்) அவர்களை உண்மையாளராக ஏற்றுக் கொண்டார்கள். அங்கு ஜகாத் (ஏழை வரி) வசூலிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தனர். என்னை எதிர்த்தவர்களை அடக்க எனக்கு உதவியும் செய்தார்கள்.

இந்நிகழ்ச்சியின் முன் பின் தொடர்களை நாம் ஆராயும் போது இதுதான் இறுதியாக நபி (ஸல்) அனுப்பிய கடிதமாக இருக்க வேண்டும் என்று தெரிகிறது. அநேகமாக மக்காவை வெற்றிக் கொண்ட பிறகு இக்கடிதம் அனுப்பப்பட்டிருக்க வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் பல அண்டை நாட்டு மன்னர்களுக்கு இக்கடிதங்களின் மூலம் இஸ்லாமிய அழைப்பை எடுத்து வைத்தார்கள். அவர்களில் சிலர் நம்பிக்கை கொண்டனர் சிலர் மறுத்து விட்டனர். என்றாலும் நிராகரித்தவர்கள் எப்போதும் நபியவர்களைப் பற்றிய சிந்தனையிலேயே இருந்தனர். நபியவர்களின் பெயரும் மார்க்கமும் அவர்களுக்கு நன்கு அறிமுகமாகி விட்டது.

## ஹுதைபிய்யா ஒப்பந்தத்திற்குப் பின் நிகழ்ந்த போர் நடவடிக்கைகள்

தூகரத் (அ) காபா போர்

நபி (ஸல்) அவர்களின் சினையுள்ள ஒட்டகங்களை ஃபஸாரா கிளையினர் கொள்ளை அடித்துச் சென்றனர். அவர்களை விரட்டிப் பிடிப்பதற்காக நபி (ஸல்) புறப்பட்டார்கள்.

ஹிஜ்ரி 6 ஆம் ஆண்டு நடந்த ஹுதைபிய்யா ஒப்பந்தம், மேலும் ஹிஜ்ரி 7 ஆம் ஆண்டு நடந்த கைபர் போர் ஆகிய இரண்டிற்குமிடையில் நடந்த சம்பவம்தான் இந்த 'தூகரத்' என்பது. இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் இப்போரைப் பற்றிக் குறிப்பிடும் போது "கைபர் போருக்கு மூன்று மாதங்களுக்கு முன் இது நடைபெற்றது" என்று குறிப்பிடுகிறார்கள். இமாம் முஸ்லிமும் (ரஹ்) 'ஸலமா இப்னு அக்வா"வின் மூலம் அறிவிக்கும் ஹதீஸின் ஆதாரத்துடன் இவ்வாறே குறிப்பிடுகிறார்கள். ஆனால், அதிகமான வரலாற்றாசிரியர்கள், "இந்தப் போர் ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு முன் நடந்தது" என்று குறிப்பிடுகிறார்கள். அது சரியல்ல! மாறாக, இமாம் புகாரியும் இமாம் முஸ்லிமும் கூறியிருப்பதுதான் மிகவும் ஆதாரப்பூர்வமானது.

இப்போரின் முக்கிய வீரரான ஸலமா இப்னு அக்வா (ரழி) அவர்கள் இப்போரைப் பற்றி கூறுவதாவது: நபி (ஸல்) அவர்கள் தங்களுக்குச் சொந்தமான சினை ஒட்டகங்களை மேய்ப்பதற்காக அதன் மேய்ப்பாளருடன் தனது அடிமை ரபாஹாவையும் அனுப்பி வைத்தார்கள். அபூ தல்ஹாவின் குதிரையில் நானும் ரபாஹாவுடன் சென்றேன். மறுநாள் காலையில் ஃபஸாரா கிளையைச் சேர்ந்த அப்துர் ரஹ்மான் என்பவன் அனைத்து ஒட்டகங்களையும் கொள்ளையடித்துக் கொண்டதுடன், அதனை மேய்த்துக் கொண்டிருந்தவரையும் கொன்று விட்டான்.

இதைப் பார்த்த நான் உடனே, "இந்தக் குதிரையை அபூ தல்ஹாவிடம் கொடுத்து விட்டு, நபி (ஸல்) அவர்களுக்கு இந்தச் செய்தியை அறிவித்து விடு" என்று ரபாஹாவிற்கு கூறினேன். பிறகு அங்கிருந்த ஒரு குன்றின் மீது ஏறி, மதீனாவை நோக்கி 'யா ஸபாஹா"" என்று மூன்று முறை சப்தமிட்டேன். அதற்குப் பின் அங்கிருந்து கொள்ளையர்களை அம்பால் எறிந்து கொண்டே பின்தொடர்ந்தேன்.

"இந்தா வாங்கிக்கொள்! நான் அக்வயின் மைந்தன்.
இன்று தாய்ப் பால் குடித்தோர் நாள்
அல்லது அற்பர்கள் ஓடும் நாள்."

என்ற பாடியவாறே அவர்களை நான் தாக்கினேன்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் அம்பெறிந்து கொண்டே அவர்களை தப்பித்து முன்னேறுவதிலிருந்து தடுத்துக் கொண்டிருந்தேன். அவர்களில் ஒரு வீரன் என்னை நோக்கி திரும்பி வந்ததால் நான் ஒரு மரத்திற்குப் பின்னால் மறைந்து கொண்டு அம்பெய்து அவனைக் காயப்படுத்துவேன். இதே நிலையில் அவர்கள் மலைகளுக்கிடையில் உள்ள ஒரு நெருக்கமான பாதையில் சென்றார்கள். நான் மலையின் மீது ஏறி அவர்களைக் கற்களால் எறிந்தேன். ஒட்டகங்களை ஒவ்வொன்றாக அனைத்தையும் அவர்கள் விட்டுவிட்டார்கள். மேலும், நான் அவர்களைக் கற்களால் எறிந்து கொண்டே பின்தொடர்ந்தேன். தங்களது சுமைகளின் பலுவை குறைப்பதற்காக முப்பதிற்கும் அதிகமான போர்வைகளையும் ஈட்டிகளையும் கீழே போட்டு விட்டு ஓடினார்கள்.

நான் அவர்கள் விட்டுச் சென்ற பொருட்களை ஒன்று சேர்த்து அவற்றின் மீது சில கற்களை வைத்தேன். பிறகு, நபியவர்களும் நபித்தோழர்களும் தெரிந்து கொள்வதற்காக அதில் அடையாளமிட்டு விட்டு, எதிரிகளைப் பின்தொடர்ந்து சென்றேன். அவர்கள் ஒரு மலைக் கணவாயின் குறுகலான இடத்திற்குச் சென்று மதிய உணவு சாப்பிட அமர்ந்தனர். நான் ஒரு மலை உச்சியில் ஏறி நின்று அவர்களைக் கவனித்துக் கொண்டிருக்கையில் அவர்கள் என்னைப் பார்த்து விட்டார்கள்.

அவர்களிலிருந்து நான்கு நபர்கள் என்னைப் பிடிக்க மலை மீதேறி வந்தார்கள். நான் அவர்களைப் பார்த்து "உங்களுக்கு நான் யாரென்று தெரியுமா? நான்தான் ஸலமா இப்னு அக்வா. நான் உங்களில் ஒருவரைக் கொல்ல நாடினால் நிச்சயம் கொன்றே தீருவேன்.

ஆனால், உங்களில் எவராலும் என்னைக் கொல்ல முடியாது'' என்று கர்ஜித்தவுடன் அவர்கள் என்னருகே வர துணிவின்றி திரும்பி விட்டனர். இந்நிலையில் உதவிக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்து நபி (ஸல்) அவர்களின் குதிரை வீரர்கள் தோட்டங்களுக்கிடையே பாய்ந்து வருவதை நான் மலையில் இருந்து பார்த்தேன். அவர்களில் முதலாவதாக அக்ரம், அவரைத் தொடர்ந்து அபூ கதாதா, அவரைத் தொடர்ந்து மிக்தாத் இப்னு அஸ்வத் (ரழி) ஆகியோர் வந்து சேர்ந்தனர்.

முதலில் வந்த அக்ரமுக்கும், எதிரி அப்துர் ரஹ்மானுக்கும் சண்டை மூண்டது. அப்துர் ரஹ்மான் அக்ரமை ஈட்டியால் குத்திக் கொன்று விட்டான். அதிவிரைவில் அங்கு வந்து சேர்ந்த அபூ கதாதா (ரழி), அப்துர் ரஹ்மானை ஈட்டியால் குத்திக் கொலை செய்தார்.

சில வினாடிகளில் நடந்து முடிந்த இக்காட்சியைப் பார்த்து பயந்துபோன எதிரிகள் புறமுதுகுக் காட்டி ஓடினர். நான் அவர்களைப் பின்தொடர்ந்து ஓடலானேன். இறுதியில் சூரியன் மறைவதற்கு சற்று முன் 'தூகரத்' என்ற தண்ணீருள்ள பள்ளத்தாக்கை நோக்கி தண்ணீர் குடிக்கச் சென்றனர். அவர்கள் மிக தாகித்தவர்களாக இருந்தனர். ஆனால், ஒரு சொட்டுத் தண்ணீர் கூட குடிக்க விடாமல் நான் அங்கிருந்தும் அவர்களை விரட்டினேன்.

இந்நிலையில் நபியவர்களும், அவர்களது படையும் இஷா நேரத்தில் என்னை வந்தடைந்தனர். நான் ''அல்லாஹ்வின் தூதரே! இக்கூட்டத்தினர் மிகுந்த தாகித்தவர்களாக இருக்கின்றனர். என்னுடன் 100 வீரர்களை அனுப்புங்கள். நான் அவர்களிடம் இருக்கும் குதிரைகள் அனைத்தையும் அவற்றின் கடிவாளங்களுடன் பறித்துக் கொண்டு, அவர்களையும் கழுத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து உங்களிடம் நிறுத்துகிறேன்'' என்றேன். அதற்கு நபி (ஸல்), ''அக்வாவின் மகனே! நீ நமது உடைமைகளைப் பெற்றுக் கொண்டாய். எனவே, சற்று கருணைக் காட்டு'' என்று கூறிவிட்டு ''இப்போது அக்கூட்டத்தினர் கத்ஃபான் கிளையினரிடம் விருந்து சாப்பிடுகின்றனர்'' என்று கூறினார்கள்.

நபியவர்கள் இந்நிகழ்ச்சியைப் பற்றி விமர்சிக்கும் போது ''இன்றைய நமது குதிரை வீரர்களில் மிகச் சிறந்தவர் அபூ கதாதா, நமது காலாட்படைகளில் மிகச் சிறந்தவர் ஸலாமா'' என்று கூறினார்கள்.

நபியவர்கள் அக்கூட்டத்தனரிடமிருந்து கிடைத்ததைப் பங்கிடும்போது அதிலிருந்து காலாட்படையைச் சேர்ந்தவருக்குக் கொடுக்கும் பங்கு, குதிரைப் படையைச் சேர்ந்தவருக்கு கொடுக்கும் பங்கு என இரண்டு பங்குகளை எனக்குக் கொடுத்தார்கள். நபி (ஸல்) மதீனாவிற்குத் திரும்பிச் செல்லும் போது தனது ஒட்டகை அழ்பா மீது தன்னுடன் என்னையும் அமரவைத்துக் கொண்டார்கள்.

நபி (ஸல்) மதீனாவிலிருந்து புறப்படும் முன், அப்துல்லாஹ் இப்னு மக்தூம் (ரழி) அவர்களைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். இப்போரின் கொடியை மிக்தாத் இப்னு அம்ர் (ரழி) அவர்களிடம் கொடுத்தார்கள்.

### கைபர் போர் (ஹிஜ்ரி 7, முஹர்ரம்)

''கைபர்' என்ற ஊர் மதீனாவிலிருந்து வடக்கில் 80 மைல் தொலைவில் கோட்டைகளும் விவசாய நிலங்களும் அதிகம் உள்ள பெரும் நகரமாக முற்காலத்தில் விளங்கியது. ஆனால், இன்று அது ஒரு கிராமமாக உள்ளது. அங்குள்ள காற்றும், நீரும் உடல் நலத்திற்குச் சற்றும் ஒவ்வாததாக உள்ளது.

போருக்கான காரணம்

மூன்று பெரிய எதிரிகளில் மிகப் பெரிய மற்றும் அதிகப் பலம் வாய்ந்த எதிரியான குறைஷிகள் விஷயத்தில் ஹுதைபிய்யாவின் சமாதான உடன்படிக்கைக்குப் பின் நபியவர்கள் நிம்மதி அடைந்து விட்டார்கள். எனவே, மற்ற இரண்டு எதிரிகளின் கணக்கைத் தீர்க்க நாடினார்கள். அப்போதுதான் அப்பகுதியில் அமைதியும், சாந்தியும், சமாதானமும் முழுமையாக நிலவ முடியும். அத்துடன் இரத்தம் சிந்தும் போர்களிலிருந்து முஸ்லிம்கள் ஓய்வு பெற்று இஸ்லாமிய அழைப்புப் பணியைத் தொடங்க முடியும்.

சதித்திட்டங்கள் தீட்டுவதற்கும் முஸ்லிம்களுக்கு எதிரான தாக்குதல்களை நடத்துவதற்கும் கைபர் நகரம் ஒரு மையமாக விளங்கியதால், நபி (ஸல்) அவர்கள் தங்களது கவனத்தை முதலாவதாக இதன் பக்கம் செலுத்தினார்கள்.

இந்நகரவாசிகள் மேற்கூறிய தன்மையுடையவர்கள் என்பதற்கு சில சான்றுகள்: (1) இவர்கள்தான் முஸ்லிம்களுக்கு எதிராகக் குறைஷிகளையும் மற்ற அரபிகளையும் ஒன்று திரட்டி அகழ் போர் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தவர்கள். (2) முஸ்லிம்களுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை மீறும்படி குரைளா யூதர்களை தூண்டி விட்டவர்கள். (3) இஸ்லாமியச் சமூகத்திற்குள் தன்னை மறைத்து வாழும் புல்லுருவிகளான நயவஞ்சகர்களுடன் தொடர்பு கொண்டு குழப்பங்களை ஏற்படுத்தியவர்கள். (4) முஸ்லிம்களின் மூன்றாவது எதிரியான கத்ஃபான் மற்றும் கிராம அரபிகளுடன் தொடர்பு கொண்டு முஸ்லிம்களுக்கு எதிராக அவர்களைத் தூண்டி விடுபவர்கள். (5) அவர்களும் முஸ்லிம்களுடன் போர் புரிவதற்கான பல தயாரிப்புகள் செய்து வந்தனர். (இவ்வாறு பல வழிகளில் முஸ்லிம்களைத் தொடர் சிரமங்களுக்கு ஆளாக்கியதுடன்) (6) நபியைக் கொலை செய்வதற்கு ஒரு திட்டத்தையும் தீட்டினர்.

ஆக, இவற்றைச் சமாளிப்பதற்கு நபியவர்கள் பல படைகளை அனுப்ப வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாகினர்கள்.

மேலும், இந்தச் சதிகாரர்களுக்கு தலையாக விளங்கும் ஸலாம் இப்னு அபுல் ஹுகைக், உஸைர் இப்னு ஜாம் ஆகியோரைக் கொல்வதும் நிர்பந்தமான ஒன்றாயிற்று.

ஆனால், இவை அனைத்தையும் விட பெரிய அளவில் யூதர்களைக் கவனிக்க வேண்டியது கட்டாயமாக இருந்தது. எனினும், அதை உடனடியாக நிறைவேற்ற முடியாமல் போனதற்குக் காரணம் யூதர்களை விட பலமும் பிடிவாதமும், வம்பும் விஷமமும் கொண்ட குறைஷிகள் முஸ்லிம்களை எதிர்த்து வந்தனர். தற்போது சமாதான உடன்படிக்கையால் குறைஷிகளின் எதிர்ப்பும், தாக்குதலும் முடிவுக்கு வந்துவிடவே, யூதர்களின் கணக்கைப் பார்ப்பதற்கான சரியான நேரம் முஸ்லிம்களுக்கு அமைந்தது.

கைபரை நோக்கி...

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: “நபி (ஸல்) அவர்கள் ஹுதைபிய்யா ஒப்பந்தம் முடித்துத் திரும்பிய பின், மதீனாவில் துல்ஹஜ் மாதம் முழுதும், முஹர்ரம் மாதத்தில் சில நாட்களும் தங்கி விட்டு கைபரை நோக்கிப் புறப்பட்டார்கள்.”

திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள் கூறுகின்றனர்: “பின்வரும் இறைவசனத்தின் மூலம் அல்லாஹ் வாக்களித்த ஒன்றுதான் கைபர் போர்.

ஏராளமான பொருட்களை (போரில்) நீங்கள் கைப்பற்றுவீர்கள் என்று அல்லாஹ் உங்களுக்கு வாக்களித்திருந்தான். இதனை உங்களுக்கு அதி சீக்கிரத்திலும் கொடுத்து விட்டான். (அல்குர்ஆன் 48:20)

இதில் கூறப்பட்டுள்ள ‘இதனை’ என்பது ஹுதைபிய்யா ஒப்பந்தத்தையும் ‘ஏராளமான பொருட்களை’ என்பது கைபரையும் குறிக்கிறது.

**இஸ்லாமியப் படையின் எண்ணிக்கை**

நயவஞ்சகர்களும் உறுதி குலைந்த நம்பிக்கையாளர்களும் ஹுதைபிய்யாவில் கலந்து கொள்ளாமல் பின்தங்கி விட்டதால் அவர்கள் விஷயமாக அல்லாஹ் நபிக்கு பின்வருமாறு கட்டளை பிறப்பித்தான்.

(நபியே! முன்னர் போருக்கு உங்களுடன் வராது) பின் தங்கிவிட்டவர்கள், போரில் கிடைத்த பொருட்களை எடுத்துக் கொள்ள நீங்கள் செல்லும் சமயத்தில் (உங்களை நோக்கி) “நாங்களும் உங்களைப் பின்பற்றி வர எங்களை (அனுமதித்து) விடுங்கள்” என்று கூறுவார்கள். இவர்கள் அல்லாஹ்வுடைய கட்டளையை மாற்றி விடவே கருதுகின்றார்கள். ஆகவே, நீங்கள் அவர்களை நோக்கி “நீங்கள் எங்களைப் பின்பற்றி வரவேண்டாம். இதற்கு முன்னரே அல்லாஹ் இவ்வாறு கூறிவிட்டான்” என்றும் கூறுங்கள்! அதற்கவர்கள், (ம்அல்லாஹ் ஒன்றும் கூறவில்லை“) நீங்கள்தான் நம்மீது பொறாமை கொண்டு (இவ்வாறு கூறுகின்றீர்கள்) என்று கூறுவார்கள். அன்றி, அவர்களில் சிலரைத் தவிர (மற்றெவரும் இதன் கருத்தை) உணர்ந்து கொள்ள மாட்டார்கள். (அல்குர்ஆன் 48:15)

ஆகவே, நபி (ஸல்) அவர்கள் கைபருக்குப் புறப்பட்ட போது “போர் புரிய ஆசையுள்ளவர்கள் மட்டும் புறப்பட வேண்டும்” என அறிவித்தார்கள். ஆகவே, ஹுதைபிய்யா உடன்படிக்கையில் கலந்த 1400 தோழர்கள் மட்டும் இப்போருக்காகப் புறப்பட்டனர்.

நபி (ஸல்) மதீனாவில் ‘சிபா இப்னு உருஃபுதா அல்கிஃபா’ (ரழி) என்ற தோழரைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். ஆனால், “நுமைலா இப்னு அப்துல்லாஹ் அல்லைஸி (ரழி) என்பவரை நபி (ஸல்) பிரதிநிதியாக நியமித்தார்கள்” என்று இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார். எனினும் ஆய்வாளர்கள், முந்திய கூற்றையே மிகச் சரியானது என்கின்றனர்.

நபியவர்கள் மதீனாவிலிருந்து புறப்பட்ட பின் அபூஹுரைரா (ரழி) இஸ்லாமை ஏற்று மதீனா வந்தார். சிபா உடன் ஸுப்ஹ் தொழுதுவிட்டு (இருவரும் நிலைமைகளை பரிமாறிக் கொண்டவுடன்) போருக்குச் செல்வதற்கான சாதனங்களை அபூ ஹுரைராவுக்கு சிபா (ரழி) தயார் செய்து கொடுத்தார்கள். அதற்குப் பின் அபூஹுரைரா (ரழி) அங்கிருந்து புறப்பட்டு நபியவர்களிடம் வந்து சேர்ந்தார்கள். அப்போது கைபர் போர் முடிவுற்றிருந்தது. நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களுடன் ஆலோசித்து அபூஹுரைராவிற்கும் அவருடன் வந்த தோழர்களுக்கும் கனீமத்தில் பங்கு கொடுத்தார்கள்.

**நயவஞ்சகர்கள் யூதர்களுடன் தொடர்பு கொள்ளுதல்**

மதீனாவிலிருந்த நயவஞ்சகர்கள் யூதர்களுக்குச் சாதகமாகச் செயல்பட்டனர். நயவஞ்சகர் களின் தலைவன் இப்னு உபை கைபரில் உள்ள யூதர்களுக்குப் பின்வரும் செய்தியை அனுப்பினான். “முஹம்மது உங்களை நோக்கி வருகிறார் உங்களைத் தற்காத்துக் கொள்ள தயாராக இருங்கள் முஹம்மதைக் கண்டு நீங்கள் பயப்பட வேண்டாம் உங்களது எண்ணிக்கையும் ஆயுதங்களும் அதிகமாக இருக்கின்றன முஹம்மதின் கூட்டத்தினரோ மிக சொற்பமாக இருக்கின்றனர் அவர்களிடம் குறைவாகவே ஆயுதங்கள் உள்ளன.”

இந்தச் செய்தியைத் தெரிந்து கொண்ட கைபர்வாசிகள் கினானா இப்னு அபுல் ஹுகைக், ஹவ்தா இப்னு கைஸ் ஆகிய இருவரையும் கத்ஃபான் கிளையினரிடம் உதவி கேட்டு அனுப்பினர். இந்த கத்ஃபான் கிளையினர் கைபரிலுள்ள யூதர்களின் ஒப்பந்தத் தோழர்களாகவும் முஸ்லிம்களுக்கு எதிராக அவர்களுக்கு உதவி செய்பவர்களாகவும் இருந்தனர். மேலும் “நாங்கள் முஸ்லிம்களை வெற்றி கொண்டால் கைபரின்

விளைச்சல்களில் சரிபாதியைத் தருகிறோம்’’ என்று யூதர்கள் கத்ஃபானியர்களுக்கு வாக்குறுதி அளித்தனர்.

**கைபரின் வழியில்...**

நபியவர்கள் ‘இஸ்ர்’ என்ற மலை வழியாக ‘சஹ்பா’ சென்று அங்கிருந்து ‘ரஜீஃ’ பள்ளத்தாக்கைச் சென்றடைந்தார்கள். அங்கிருந்து கத்ஃபான் கிளையினர் வசிக்குமிடம் ஒரு நாள் பயண தூரத்திலிருந்தது. அப்போது கத்ஃபான் கிளையினர் யூதர்களுக்கு உதவிட ஆயத்தமாகி சென்று கொண்டிருந்தனர். வழியில் அவர்கள் போய்க் கொண்டிருக்கும் போது தங்களது ஊரில் பெரும் ஆரவாரத்தை உணர்ந்தனர். முஸ்லிம்கள்தான் தங்களது குடும்பத்தினர் மீது தாக்குதல் நடத்துகின்றனர் என்று எண்ணி தங்களது ஊருக்குத் திரும்பி விட்டனர். அதற்குப் பிறகு அவர்கள் கைபருக்கு வரவில்லை.

படைக்கு வழிகாட்டிச் சென்று கொண்டிருந்த இரு வழிகாட்டிகளையும் அழைத்து வடக்குப் பக்கமாக கைபருக்குள் நுழைவதற்கு மிகப் பொருத்தமானப் பாதையைக் காட்டுமாறு நபி (ஸல்) கூறினார்கள். அப்போதுதான் ஷாம் தேசத்திற்குத் தப்பித்துச் செல்லாமல் யூதர்களைத் தடுக்க முடியும், கத்ஃபான் கிளையினர் யூதர்களுக்கு உதவிட வருவதையும் தடுக்க முடியும்.

வழிகாட்டிகளில் ஹுஸைல் என்ற பெயருடையவர் ‘‘அல்லாஹ்வின் தூதரே! நான் உங்களுக்கு அந்தச் சரியான வழியைக் காட்டுகிறேன்’’ என்றுக் கூறி நபியவர்களை அழைத்துச் சென்றார். இறுதியாக பல பாதைகள் பிரியும் ஓடத்தை அடைந்தவுடன் ‘‘அல்லாஹ்வின் தூதரே! இந்த எல்லா வழிகளின் மூலமாகவும் நாம் கைபருக்குச் சென்றடையலாம். எந்த வழியில் நான் உங்களை அழைத்துச் செல்ல’’ என்று கேட்டார். நபியவர்கள் ‘‘ஒவ்வொரு பாதையின் பெயரையும் எனக்குக் கூறு’’ என்றார்கள்.

அதற்கவர் ஒரு பாதையைக் குறிப்பிட்டு அதன் பெயர் ‘ஹஜன்’ (சிரமமானது) என்றார். நபியவர்கள் ‘‘அது வேண்டாம்’’ என்று மறுத்து விட்டார்கள். அடுத்த பாதையை சுட்டிக்காட்டி அதன் பெயர் ‘ஷாஸ்’ (பிரிந்தது) என்றார். அதையும் வேண்டாமென்று மறுத்து விட்டார்கள். மூன்றாவதாக, ஒரு பாதையைக் காண்பித்து, அதன் பெயர் ‘ஹாதிப்’ (விறகு பொறுக்குபவர்) என்றார். அதையும் நபி (ஸல்) புறக்கணித்து விட்டார்கள். நான்காவதாக, ‘‘அல்லாஹ்வின் தூதரே! இப்போது நாம் செல்வதற்கு ஒரு வழிதான் மீதம் இருக்கிறது’’ என்று ஹுஸைல் கூறினார். நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் இருந்து அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்த உமர் (ரழி) அவர்கள் ‘‘அந்த வழியின் பெயரென்ன’’ என்று வினவ, அவர் ‘மர்ஹப்’ (சந்தோஷமானது, வரவேற்கத்தக்கது) என்றார். உடனே நபியவர்கள் அப்பாதையில் அழைத்துச் செல்லும்படி கூறினார்கள்.

**வழியில் நடந்த சில நிகழ்ச்சிகள்**

1) ஸலமா இப்னு அக்வா (ரழி) அறிவிக்கிறார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் சென்று கொண்டிருந்தோம். ஓர் இரவில் எனது சகோதரர் ஆமிரிடம் ‘‘எங்களுக்கு உமது கவிதைகளை பாடிக் காட்டலாமே’’ என்று ஒருவர் கேட்டார். ஆமிர் நல்ல திறமையான கவிஞராக இருந்தார். உடனே அவர் தனது வாகனத்திலிருந்து கீழிறங்கி கூட்டத்தினரின் வாகனங்களை,

‘‘அல்லாஹ்வே! நீ இன்றி நாம் நேர்வழி பெறோம்.
தர்மம் செய்திலோம் தொழுதிறோம்.
எங்கள் மீது மன அமைதி இறக்குவாயாக!
எதிர்கொள்ளும் போது பாதங்களை நிலைநிறுத்துவாயாக!
இவர்கள் எமக்கு அநீதமிழைக்கின்றார்கள்.

அவர்கள் குழப்ப நினைத்தால் அதற்கு நாம்
அனுமதியோம் அனுமதியோம்''

நபி (ஸல்) ''வாகனங்களை அழைத்துச் செல்லும் இவர் யார்?'' என்று கேட்டார்கள். அதற்கு ''ஆமிர் இப்னு அக்வா'' என்று மக்கள் கூறினர். ''அல்லாஹ் அவருக்குக் கருணை காட்டட்டும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். ஒருவர் ''அல்லாஹ்வின் தூதரே! உங்களின் பிரார்த்தனையால் அவருக்கு வீரமரணம் (ஷஹாதத்) கடமையாகி விட்டதே. அவர் இன்னும் சிறிது காலம் வாழ்ந்தால் எங்களுக்குப் பலனாக இருக்குமே!'' என்று கூறினார். அதாவது நபியவர்கள் போரின்போது யாருக்காவது குறிப்பிட்டு பிரார்த்தனை செய்தால் அவர் அப்போரில் கொல்லப்படுவார் என்பதை மக்கள் அறிந்திருந்தார்கள். அவ்வாறே கைபர் போரிலும் நடந்தது.

2) கைபருக்கு அருகிலுள்ள 'ஸஹ்பா' என்ற இடத்தில் அஸ்ர் தொழுகை நடத்தினார்கள். தொழுத பிறகு, மக்களிடம் அவர்கள் வைத்திருக்கும் உணவுகளைக் கொண்டுவரச் சொன்னார்கள். மக்களிடம் சத்துமாவைத் தவிர வேறெதுவும் இருக்கவில்லை. அந்தச் சத்துமாவை விரிப்பில் பரப்பி வைத்து நபியவர்களும் தோழர்களும் சாப்பிட்டனர். பின்பு மஃரிப் தொழுகைக்காக நபி (ஸல்) தயாரானார்கள். புதிதாக ஒழுச் செய்யாமல் வாய் மட்டும் கொப்பளித்து விட்டு நபி (ஸல்) அவர்களும் மக்களும் மஃரிப் தொழுகையில் ஈடுபட்டனர். பின்பு அந்த இடத்திலேயே இஷா தொழுகையையும் நிறைவேற்றினார்கள்.

3) கைபருக்கு அருகில் சென்றவுடன் தங்களது படையை நிறுத்தி நபி (ஸல்) அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள்:

''அல்லாஹ்வே! ஏழு வானங்கள் மற்றும் அதற்குக் கீழ் உள்ளவற்றின் இறைவனே! ஏழு பூமிகள் மற்றும் அவற்றுக்கு மேலுள்ளவற்றின் இறைவனே! ஷைத்தான்கள் மற்றும் அவை வழி கெடுத்தவற்றின் இறைவனே! காற்றுகள் மற்றும் அவை வீசி எறிந்தவற்றின் இறைவனே! நிச்சயமாக நாங்கள் இந்த ஊரிலுள்ள நன்மையையும், இந்த ஊரில் வசிப்பவர்களில் உள்ள நன்மையையும், இந்த ஊரில் இருப்பவற்றில் உள்ள நன்மையையும் உன்னிடம் கேட்கிறோம். நிச்சயமாக இந்த ஊரிலுள்ள தீங்கை விட்டும், இந்த ஊரில் வசிப்பவர்களில் உள்ள தீங்கை விட்டும், இந்த ஊரில் இருப்பவற்றில் உள்ள தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறோம். பிஸ்மில்லாஹ் (அல்லாஹ்வின் பெயரால்) இந்த ஊருக்குள் நுழைகிறோம்'' என்று கூறினார்கள்.

**கைபரின் எல்லையில் இஸ்லாமியப் படை**

போருக்கு முந்திய இரவு கைபருக்கு மிக அருகாமையிலேயே முஸ்லிம்கள் இரவைக் கழித்தார்கள். எனினும், யூதர்களால் முஸ்லிம்களின் வருகையைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. பொதுவாக, நபியவர்கள் படையை அழைத்துச் செல்வது இரவு நேரமாக இருந்தால் காலை வரை காத்திருந்து அதிகாலையில் அக்கூட்டத்தினரைத் தாக்குவார்கள். அன்றிரவு ஸுப்ஹு தொழுகையை அதன் நேரம் வந்தவுடன் நல்ல இருட்டாக இருக்கும் போதே நிறைவேற்றிவிட்டு பயணத்தைத் தொடர்ந்தார்கள். கைபர்வாசிகள் விவசாயச் சாதனங்களை எடுத்துக் கொண்டு தங்களின் வயல்களுக்குப் புறப்பட்டனர். இஸ்லாமியப் படைகள் வருவது அவர்களுக்குத் தெரியாது. கொஞ்ச தூரம் வந்தவுடன் இஸ்லாமியப் படையை அவர்கள் பார்த்து அதிர்ச்சி அடைந்தனர். ''ஆ! முஹம்மது வந்துவிட்டார். அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மதும் அவரது படையும் வந்துவிட்டது'' என்று கூறிக்கொண்டே ஊருக்குள் ஓடினர்.

நபியவர்கள் ''அல்லாஹு அக்பர்! கைபர் நாசமாகி விட்டது. அல்லாஹு அக்பர்! கைபர் நாசமாகிவிட்டது. நாம் ஒரு கூட்டத்தினரின் ஊருக்குச் சென்றால் அச்சமூட்டி எச்சரிக்கை

செய்யப்பட்ட அக்கூட்டத்தினரின் அந்தப் பொழுது மிகக் கெட்டதாகவே அமையும்'' என்று கூறினார்கள்.

**கைபரின் கோட்டைகள்**

கைபர் இரண்டு பகுதிகளாக இருந்தது. ஒரு பகுதியில் ஐந்து கோட்டைகள் இருந்தன. மற்றொரு பகுதியில் மூன்று கோட்டைகள் இருந்தன. முதல் ஐந்து கோட்டைகளாவன. 1) நா'', 2) ஸஅப் இப்னு முஆது, 3) ஜுபைர், 4) உபை, 5) நிஸார். இந்த ஐந்தில் முதல் மூன்று கோட்டைகள் 'நிதா' என்ற இடத்தில் இருக்கின்றன. மற்ற இரண்டு கோட்டைகள் 'ஷக்' என்ற இடத்தில் இருக்கின்றன. கைபரின் மற்றொரு பகுதிக்கு 'கதீபா' என்று கூறப்படும். அதில் மற்ற மூன்று கோட்டைகளும் இருந்தன. அவை: 1) கமூஸ், 2) வத்தீஹ், 3) சுலாளிம். மேலும் கைபரில் இவையல்லாத பல கோட்டைகளும் இருந்தன. ஆனால், அவைகள் மிகச் சிறியவையே. மேற்கூறப்பட்ட எட்டு கோட்டைகளைப் போன்று அவை மிக பலம் வாய்ந்ததுமில்லை உறுதிமிக்கதுமில்லை.

கைபரின் இரண்டு பகுதிகளில் முந்திய பகுதியில்தான் மிகக் கடுமையான போர் நடந்தது. மூன்று கோட்டைகளைக் கொண்ட இரண்டாவது பகுதியில் போர் வீரர்கள் அதிகமாக இருந்தும் சண்டையின்றியே அவை முஸ்லிம்கள் வசம் வந்தன.

**இஸ்லாமியப் படை முகாமிடுதல்**

நபி (ஸல்) அவர்கள் படைக்கு முன் சென்று அப்படை முகாமிடுவதற்காக ஓர் இடத்தைத் தேர்வு செய்தார்கள். ஆனால் 'ஹுபாப் இப்னு அல்முன்திர்' (ரழி) என்ற தோழர், ''அல்லாஹ்வின் தூதரே! இந்த இடம் அல்லாஹ் உங்களைத் தங்க வைத்த இடமா? அல்லது உங்கள் யோசனைக்கிணங்க தங்கியுள்ளீர்களா?'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) ''இல்லை! இது எனது யோசனையே'' என்றார்கள்.

அவர் ''அல்லாஹ்வின் தூதரே! நாம் தங்கியிருக்கும் இந்த இடம் 'நத்தா' என்ற கோட்டைக்கு மிக அருகில் உள்ளது. கைபரின் போர் வீரர்கள் அனைவரும் அதில்தான் இருக்கின்றனர். அவர்கள் நமது செயல் திட்டங்களைத் தெரிந்து கொள்வார்கள். நம்மால் அவர்களது நடவடிக்கைகளை அறிந்து கொள்ள முடியாது. போரின்போது அவர்களது அம்புகள் நாம் இருக்கும் இடம் வரை வரும். ஆனால், நமது அம்புகள் அவர்களைச் சென்றடையாது. இரவிலும் அவர்கள் நம்மைத் தாக்கக்கூடும். மேலும், இந்த இடம் பேரீச்சம் மரங்களின் மத்தியிலும், தாழ்வாகவும், சதுப்பு நிலமாகவும் உள்ளது. எனவே, எந்தவித இடையூறும் இல்லாத நல்ல இடத்தை நாம் முகாமிடுவதற்கு தேர்ந்தெடுத்தால் நன்றாக இருக்கும்'' என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) ''நீங்கள் நல்ல ஆலோசனை கூறினீர்கள்'' என்று கூறிவிட்டு வேறோர் இடத்திற்கு தங்கள் முகாமை மாற்றிக் கொண்டார்கள்.

**போருக்குத் தயாராகுதல், வெற்றிக்கான நற்செய்தி கூறுதல்**

கைபருக்குள் நுழையுமுன் அன்றிரவு தங்கிய இடத்தில் ''நிச்சயமாக நான் அல்லாஹ்வையும் ரஸூலையும் நேசிக்கும் ஒருவரிடம் நாளை கொடியைக் கொடுப்பேன். அவரை அல்லாஹ்வும் அவனது தூதரும் விரும்புகிறார்கள். அல்லாஹ் அவரது கையால் வெற்றியளிப்பான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்களெல்லாம் காலை விடிந்தவுடன் நபியவர்களிடம் ஒன்று கூடினர். ஒவ்வொருவரும் அந்தக் கொடி தனக்கே கொடுக்கப்பட வேண்டுமென விரும்பினர். ஆனால் நபியவர்கள், ''அலீ இப்னு அபீதாலிப்'' எங்கே என்று கேட்டார்கள்.

மக்கள் ''அல்லாஹ்வின் தூதரே! அவருக்குக் கண் வலியாக இருக்கிறது'' என்றனர். நபி (ஸல்) ''அவரை என்னிடம் அழைத்து வாருங்கள்'' என்றார்கள். அலீ (ரழி) அழைத்து வரப்பட்ட போது அவன் கண்ணில் தனது உமிழ் நீரைத் தடவி அவருக்காக

அல்லாஹ்விடம் வேண்டினார்கள். அல்லாஹ்வின் அருளால் முற்றிலும் அவர் குணமடைந்து விட்டார். அவரிடம் கொடியைக் கொடுத்த போது அவர் “அல்லாஹ்வின் தூதரே! அவர்களும் நம்மைப் போன்று ஆகும் வரை நான் போர் புரியட்டுமா?” என்று கேட்டார். அதற்கு நபியவர்கள் “நீ நிதானத்துடன் சென்று அவர்களது முற்றத்தில் இறங்கு. பின்பு அவர்களுக்கு இஸ்லாமிய அழைப்புக் கொடு. அவர்கள் அல்லாஹ்வுக்கு செய்ய வேண்டிய கடமையைப் பற்றி எடுத்துச் சொல். அல்லாஹ்வின் மீதாணையாக! உன் மூலமாக அல்லாஹ் ஒருவருக்கு நேர்வழி காட்டுவது உமக்குச் சிவந்த ஒட்டகங்கள் கிடைப்பதை விட மேலானதாகும்” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

**போர் தொடங்குதல், நாயிம் கோட்டையை வெற்றி கொள்ளுதல்**

யூதர்கள் முஸ்லிம்களின் படையைப் பார்த்து விட்டு தங்களது நகரத்துக்குள் ஓடி, கோட்டைக்குள் ஒளிந்து கொண்டனர். எதிரிகளைக் கண்டவுடன் தடுப்பு நடவடிக்கையிலும், போருக்கான ஆயத்தங்களிலும் ஈடுபடுவது இயற்கையே. முஸ்லிம்கள் தாக்குதல் நடத்திய முதல் கோட்டை ‘நாயிம்’ என்ற கோட்டையாகும். இது ‘மர்ஹப்’ என்ற வீரமிக்க யூத மன்னனின் கோட்டை. “மர்ஹப் 1000 நபர்களுக்குச் சமமானவன்” என்று கூறப்பட்டு வந்தது. மேலும் இக்கோட்டையில் ராணுவத்தினர் அதிகமாக இருந்தனர். இது இஸ்லாமியப் படையை எதிர்ப்பதற்கு வசதியானதாக, உறுதியானதாக இருந்தது. எனவே, பல வகையிலும் ஏற்றமானதாக விளங்கிய இவ்விடத்தில் இருந்துகொண்டு தாக்குதல் நடத்த யூதர்கள் முதலில் திட்டமிட்டனர்.

இக்கோட்டைக்கருகில் அலீ (ரழி) முஸ்லிம்களுடன் சென்று யூதர்களை இஸ்லாமின் பக்கம் அழைத்தார்கள். ஆனால், முஸ்லிம்களின் அழைப்பை யூதர்கள் நிராகரித்துவிட்டு, தங்களது மன்னர் மர்ஹபுடன் சேர்ந்து முஸ்லிம்களை எதிர்க்கப் புறப்பட்டனர். அவன் போர் மைதானத்திற்கு வந்தவுடன் “தன்னுடன் தனியாக சண்டையிட யாராவது தயாரா?” என்று கொக்கத்தான்.

ஸலமா இப்னு அக்வா (ரழி) கூறுகிறார்கள்: “நாங்கள் கைபர் வந்த போது யூதர்களின் அரசன் தனது வாளை ஏந்தியவனாக

நானே மர்ஹப். இது கைபருக்குத் தெரியும்.
போர் உக்கிரமானால் நான் ஆயுதம் ஏந்திய வீர தீரன்.

என்று பாடிக்கொண்டு படைக்கு முன் வந்தான். அப்போது அவனை எதிர்த்துப் போரிட எனது தந்தையின் சகோதரர் ஆமிர் (ரழி),

நான் ஆமிர். கைபருக்குத் தெரியும்!
நான் ஆயுதம் ஏந்திய அஞ்சாநெஞ்சன்.

என்று பாடிக்கொண்டு முன்வந்தார். இருவரும் சண்டையிட்டதில் மர்ஹபின் வாள் ஆமிரின் கேடயத்தில் ஆழப்பதிந்து விட்டது. அப்போது ஆமிர் (ரழி) கேடயத்திற்குக் கீழிருந்து அவனை வெட்டுவதற்காக முயன்ற போது அவரது வாள் குட்டையாக இருந்ததால் மர்ஹபின் காலில் வெட்டுவதற்குப் பதிலாக இவரது காலில் வெட்டிவிட்டது. பின்பு அதே காயத்திலேயே அவர் மரணித்து விட்டார். இவரைப் பற்றி நபி (ஸல்) “தனது இரு விரல்களையும் ஒன்று சேர்த்தவர்களாக இவருக்கு இரு கூலிகள் உண்டு. நிச்சயமாக இவர் உயிரைப் பொருட்படுத்தாத வீரமிக்க தியாகியாவார். இவரைப் போன்ற வீரமிக்கவர் அரபியர்களில் மிகக் குறைவானவரே” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

இதற்குப் பின் மர்ஹப் மீண்டும் தன்னுடன் சண்டையிட தனது கவியைப் பாடிக்கொண்டே முஸ்லிம்களை அழைத்தான். அப்போது அவனுடன் சண்டையிட,

“என் அன்னை எனக்கு சிங்கமென பெயர் சூட்டினாள்!

காண அஞ்சும் கானகத்தில் சீறும் சிங்கத்தைப் போன்றவன் நான்!

இன்று மரக்காலுக்குப் பதிலாக ஈட்டியால்

அவர்களுக்கு அளந்து கொடுப்பேன்!”

என்ற பாடியவராக அலீ (ரழி) முன் வந்தார்கள். மர்ஹப் அலீயுடன் மோத, அலீ (ரழி) அவனது தலையைத் துண்டாக்கி விட்டார்கள். பின்பு அவன் மூலமாகவே அல்லாஹ் முஸ்லிம்களுக்கு வெற்றியை வழங்கினான்.

அலீ (ரழி) அவர்கள் யூதர்களின் கோட்டைக்கு மிக அருகில் சென்றுவிட்ட போது கோட்டையின் மேலிருந்து ஒருவன் “நீ யார்?” என்றான். அதற்கு “நான் அலீ இப்னு அபீதாலிப்” என்று பதில் கூறினார்கள். அப்போது அந்த யஹூதி “மூஸாவிற்கு இறக்கப்பட்ட வேதத்தின் மீது சத்தியமாக! நீங்கள் வெற்றி கொள்வீர்கள்” என்றான்.

இதற்குப் பின் மர்ஹபின் சகோதரன் யாசிர் “என்னுடன் சண்டை செய்பவன் யார்?” என்று கொக்கரித்தவனாக படைக்கு முன் வந்தான். ஜுபைர் (ரழி) அவனை எதிர்க்கத் தயாரானார். அதைப் பார்த்த அன்னாரின் தாயார் ஸஃபியா (ரழி) “அல்லாஹ்வின் தூதரே! அவன் எனது மகனைக் கொன்று விடுவானே” என்று கலங்கினார். அதற்கு நபி (ஸல்) “இல்லை உமது மகன் தான் அவனைக் கொல்வார்” என்று கூறினார்கள். அவ்வாறே ஜுபைர் (ரழி) அவனைக் கொன்றார்கள். இவ்வாறு அன்று முழுவதும் நாயிம் கோட்டையைச் சுற்றிக் கடுமையான போர் நடந்து கொண்டிருந்தது. யூதர்களின் பல தலைவர்கள் கொல்லப்பட்டதால் அவர்களின் வீரம் குறைந்து துவண்டு விட்டனர். எனினும், போர் மிகக் கடுமையாக பல நாட்கள் நீடித்தது. இறுதியில் முஸ்லிம்களை எதிர்க்க முடியாது என்பதை உறுதியாக அறிந்து கொண்ட யூதர்கள் அந்தக் கோட்டையிலிருந்து இரகசியமாக வெளியேறி ‘ஸஅப்’ என்ற கோட்டையில் நுழைந்து கொண்டனர். இறுதியாக, முஸ்லிம்கள் நாயிம் கோட்டையைத் தங்களது கட்டுப்பாட்டுக்குக் கீழ் கொண்டு வந்தார்கள்.

**ஸஅப் கோட்டையை வெற்றி கொள்ளுதல்**

நாயிம் கோட்டைக்கு அடுத்து இக்கோட்டை மிகவும் பலமுள்ளதாக, வலிமை மிக்கதாக இருந்தது. அல் ஹுபாப் இப்னு அல் முன்திர் அல் அன்ஸா (ரழி) அவர்களின் தலைமையின் கீழ் இக்கோட்டையை முஸ்லிம்கள் மூன்று நாட்கள் முற்றுகையிட்டனர். மூன்றாவது நாள் இக்கோட்டையை வெற்றி கொள்வதற்காக நபி (ஸல்) தனிப்பட்ட முறையில் பிரார்த்தனை செய்தார்கள்.

இதைப் பற்றி இப்னு இஸ்ஹாக் (ரஹ்) விவரிக்கிறார்:

அஸ்லம் கோத்திரத்தைச் சேர்ந்த ஸஹ்ம் கிளையினர் நபியவர்களிடம் “அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் மிகச் சிரமத்திற்குள்ளாகி விட்டோம். எங்களது கையில் ஒன்றுமே இல்லை” என்று முறையிட்டார்கள். அதாவது, தங்களது இயலாமையையும், பசியையும் இவ்வாறு நபியவர் களிடம் வெளிப்படுத்தினார்கள். இந்த கிளையினர்தான் கோட்டையை வெற்றி கொள்வதற்காக அனுப்பப்பட்ட படைகளில் முக்கியப் பங்காற்றினார்கள். அவர்களின் இந்த கோரிக்கைக்கிணங்க “அல்லாஹ்வே! நிச்சயமாக இவர்களின் நிலைமையை நீ நன்கு அறிந்திருக்கிறாய். அவர்களிடம் எவ்வித ஆற்றலும் இல்லையென்பதையும், அவர்களுக்குக் கொடுப்பதற்கு என்னிடம் ஒன்றும் இல்லை

என்பதையும் நீ நன்கறிந்திருக்கிறாய். எனவே, கைபரின் கோட்டைகளில் அதிக செல்வமும் உணவுப் பொருட்களும் நிறைந்த கோட்டையை வெற்றி கொள்ள இவர்களுக்கு உதவுவாயாக'' என நபி (ஸல்) பிரார்த்தனை புரிந்தார்கள். நபியவர்களின் இப்பிரார்த்தனைக்குப் பின்பு முஸ்லிம்கள் அக்கோட்டையை நோக்கிப் புறப்பட்டனர். கைபரிலுள்ள கோட்டைகளில் 'ஸஅப்' கோட்டையில்தான் அதிகச் செல்வங்களும் உணவுகளும் இருந்தன.

நபி (ஸல்) இக்கோட்டையின் மீது தாக்குதல் நடத்த முஸ்லிம்களுக்கு ஆர்வமூட்டி அழைத்துச் சென்றார்கள். இதில் அஸ்லம் கிளையினர், படைக்கு முதல் வரிசையில் இருந்தனர். கோட்டைக்கு வெளியில் யூதர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் கடுமையான தாக்குதல் மாலை வரை நீடித்தது. இறுதியாக, சூரியன் மறைவதற்கு சற்று முன் அக்கோட்டையை முஸ்லிம்கள் வெற்றி கொண்டனர். அக்கோட்டையில் இருந்த மின்ஜனீக்'' கருவிகளையும், இக்கால பீரங்கி போன்ற கருவிகளையும் முஸ்லிம்கள் கைப்பற்றினர். இப்போரில் ஏற்பட்ட கடுமையான பசியின் காரணமாக படையில் இருந்த சில வீரர்கள் கழுதையை அறுத்து சமைப்பதற்கு அடுப்பை மூட்டினர். இதை அறிந்த நபி (ஸல்) "நாட்டுக் கழுதைகளை அறுக்க வேண்டாம்'' என தடை விதித்தார்கள்.

### ஜுபைர் கோட்டையை வெற்றி கொள்ளுதல்

நாயிம், ஸஅப் ஆகிய கோட்டைகளை வெற்றி கொண்டதற்குப் பின் நதா பகுதியிலிருந்து யூதர்கள் வெளியேறி ஜுபைர் கோட்டைக்குள் புகுந்து கொண்டனர். இக்கோட்டை ஒரு மலை உச்சியில் அமைந்திருந்ததுடன், மிக வலிமை மிக்கதாகவும் இருந்தது. அம்மலை மீது குதிரை வீரர்களோ காலாட் படையினரோ ஏறிச் செல்வது சிரமமாக இருந்தது. எனவே, நபி (ஸல்) அவர்கள் அக்கோட்டையை முற்றுகையிடுவதில் ஈடுபட்டார்கள். இந்த முற்றுகை மூன்று நாட்கள் நீடித்தது.

அப்போது யூதர்களில் ஒருவன் நபியவர்களிடம் வந்து "ஓ அபுல் காசிமே! நீங்கள் இவ்வாறு ஒரு மாத காலம் இவர்களை முற்றுகையிட்டாலும் இவர்கள் அதைப் பொருட்படுத்த மாட்டார்கள். ஏனெனில், இப்பூமிக்கு கீழ் அவர்கள் குடிப்பதற்குத் தேவையான நீர் ஊற்றுகள் இருக்கின்றன. அவர்கள் இரவில் கோட்டையிலிருந்து வெளியேறி தேவையான நீரை எடுத்துக் கொண்டு மீண்டும் கோட்டைக்குள் சென்று விடுகின்றனர். எனவே, இவர்கள் தண்ணீர் பிடிக்க வருவதை தடுத்தால் தான் மைதானத்தில் உங்களுடன் போர் செய்ய இறங்குவார்கள்'' என்று ஆலோசனைக் கூறினார். அவன் யோசனைக்கிணங்க நபியவர்கள் தண்ணீர் எடுக்க வருவதைத் தடுத்து விட்டார்கள். இதனால் யூதர்கள் கோட்டையிலிருந்து வெளியேறி, முஸ்லிம்களுடன் கடுமையான யுத்தம் புரிந்தார்கள். போரில் சில முஸ்லிம்கள் கொல்லப்பட்டதுடன் சுமார் பத்து யூதர்களும் கொல்லப் பட்டனர். இறுதியாக, முஸ்லிம்கள் கோட்டையை வெற்றி கொண்டனர்.

### உபை கோட்டையை வெற்றி கொள்ளுதல்

ஜுபைர் கோட்டையை முஸ்லிம்கள் வெற்றி கொண்ட பின் அங்கிருந்து யூதர்கள் வெளியேறி உபை கோட்டைக்குள் புகுந்து கொண்டனர். முஸ்லிம்கள் அக்கோட்டையை முற்றுகையிட்டனர். இரண்டு யூதர்கள் ஒருவர்பின் ஒருவராக "தன்னிடம் சண்டை செய்பவர்கள் யார்?'' என்று மைதானத்தில் இறங்கினர். அவ்விருவரையும் முஸ்லிம் வீரர்கள் வெட்டிச் சாய்த்தனர். அதில் இரண்டாவதாக வந்த யஹூதியைச் சிவப்பு தலைப்பாகை உடைய அபூதுஜானா ஸிமாக் இப்னு கரஷா (ரழி) என்ற வீரத்தில் பிரசித்தி பெற்ற நபித்தோழர் வெட்டி வீழ்த்தினார். இரண்டாவது வீரனை வெட்டிய பின் அபூதுஜானா (ரழி) கோட்டைக்குள் நுழையும் முயற்சியில் ஈடுபட்டார். அவருடன் முஸ்லிம் வீரர்களும் அதற்காக முயற்சித்தனர். அந்நேரத்தில் கடுமையான போர் நடைபெற்றது. பின்பு

அங்கிருந்து யூதர்கள் தப்பித்து ‘நஜார்’ கோட்டைக்குச் சென்றனர். பிறகு இந்த உபை கோட்டையும் முஸ்லிம்கள் வசமானது.

**நஜார் கோட்டையை வெற்றி கொள்ளுதல்**

நத்தா பகுதியிலிருந்த கோட்டைகளில் மிக வலிமையானது இக்கோட்டையே ஆகும். எவ்வளவு முயற்சி செய்தாலும், உயிர் தியாகம் செய்தாலும் முஸ்லிம்களால் இக்கோட்டையை வெற்றி கொள்ள முடியாது என்று யூதர்கள் உறுதியாக நம்பியிருந்தனர். எனவேதான் இக்கோட்டையில் தங்களது மனைவி மக்களை தங்க வைத்திருந்தனர். மேற்கூறிய நான்கு கோட்டைகள் எதிலும் தங்களது மனைவி மக்களைத் தங்க வைக்கவில்லை.

இக்கோட்டையைச் சுற்றி முஸ்லிம்கள் முற்றுகையிட்டு யூதர்களுக்கு மிகக் கடுமையான நெருக்கடியை ஏற்படுத்தினார்கள். இக்கோட்டை உயரமான மலை மீது இருந்ததால் முஸ்லிம்களால் அதற்குள் நுழைய முடியவில்லை. யூதர்கள் கோட்டையிலிருந்து வெளியேறி முஸ்லிம்களுடன் நேருக்கு நேர் மோதுவதற்குத் துணிவு இல்லாமல் கோட்டையை விட்டு வெளியே வராமலிருந்தனர். கோட்டைக்குள் இருந்தவாறே முஸ்லிம்கள் மீது அம்புகளாலும் கற்களாலும் தாக்குதல் நடத்திக் கொண்டிருந்தனர்.

இக்கோட்டையை வெற்றி கொள்வது முஸ்லிம்களுக்குச் சிரமமாகி விடவே, மின்ஜனிக் கருவிகளைப் பயன்படுத்தி கற்களை எறிந்து, கோட்டை மதில்களைத் தகர்க்குமாறு நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். முஸ்லிம் படையினரும் அவ்வாறே செய்தனர். கோட்டை மதில்களில் ஓட்டைகள் ஏற்பட்டதும் முஸ்லிம்கள் அதன் வழியாக கோட்டைக்குள் நுழைந்து யூதர்களுடன் கடும் போர் புரிந்தார்கள். இதில் யூதர்கள் பெரும் தோல்வியைத் தழுவினார்கள். மற்ற கோட்டைகளிலிருந்து தப்பித்துச் சென்றது போன்று இக்கோட்டையிலிருந்து அவர்களால் தப்பிக்க முடியவில்லை. தங்களது மனைவி மக்களை விட்டுவிட்டு கோட்டையை விட்டு வெருண்டோடினர். இக்கோட்டையும் முஸ்லிம்களின் கட்டுப்பாட்டிற்குள் வந்தது. கைபரின் முதல் பகுதியிலுள்ள அனைத்து பெரிய கோட்டைகளும் இத்துடன் முழுமையாக முஸ்லிம்களுடைய கட்டுப்பாட்டின் கீழ் வந்தன. மற்ற சிறிய கோட்டைகளுக்குள் இருந்த யூதர்களும் அவற்றைக் காலி செய்துவிட்டு ஊரின் இரண்டாவது பகுதிக்கு வெருண்டோடினர்.

**இரண்டாவது பகுதியை வெற்றி கொள்ளுதல்**

நபியவர்கள் ‘நத்தா’ பகுதியிலுள்ள கோட்டைகளை முழுமையாக வெற்றி கொண்டபின் இரண்டாவது பகுதியான ‘கத்தீபா‘‘விற்கு தங்களது படையுடன் வந்தார்கள். அங்கு யூதர்களின் கமூஸ், அபூ ஹுகைக் குடும்பத்தினர் கோட்டை, வத்தீஹ் சுலாலிம் ஆகிய மூன்று கோட்டைகள் இருந்தன. நத்தா பகுதியில் தோல்வியுற்று ஓடிய யூதர்களெல்லாம் இக்கோட்டைகளுக்குள் புகுந்து கொண்டனர்.

நபி (ஸல்) அவர்கள் செய்த போர்களைப் பற்றி குறிப்பிடும் வரலாற்று ஆசிரியர்கள் இம்மூன்று கோட்டைகளை வெற்றி கொள்வதில் சண்டை ஏதும் நடந்ததா? இல்லையா? என்பதில் பல கருத்துகள் கூறுகிறார்கள். இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுவதிலிருந்து ‘கமூஸ்’ கோட்டையை மட்டும் பேச்சுவார்த்தையின்றி முழுமையாக சண்டையைக் கொண்டே வெற்றி கொள்ளப்பட்டது என்று தெரியவருகிறது.

‘‘அல்வாகிதி’ (ரஹ்) என்ற வரலாற்று ஆசிரியர் கூறுவதாவது: இம்மூன்று கோட்டைகளும் பேச்சுவார்த்தைக்குப் பின்தான் முஸ்லிம்களின் கட்டுப்பாட்டுக்குள் வந்தன. ‘கமூஸ்’ கோட்டையைத் தவிர மற்ற இரண்டு கோட்டைகளும் எவ்வித சண்டையுமின்றி பேச்சுவார்த்தையைக் கொண்டே முஸ்லிம்களிடம் சரணடைந்தன. கமூஸ் கோட்டைக்கு

மட்டும் முதலில் சண்டை நடந்தது. அதற்குப் பிறகு பேச்சுவார்த்தை நடந்து கைவசமாகி இருக்கலாம்.

ஆக, கருத்து எதுவாக இருப்பினும் நபி (ஸல்) இப்பகுதியை சுற்றி மட்டும் பதினான்கு நாட்கள் முற்றுகையிட்டிருந்தார்கள். யூதர்கள் கோட்டையை விட்டு வெளியேறவில்லை. இறுதியாக, நபி (ஸல்) அவர்கள் மின்ஜனிக் கருவிகளை நிறுவி தாக்குதல் நடத்தத் திட்டமிட்டார்கள். இதையறிந்த யூதர்கள் நிச்சயமாக நாம் அழிந்தே தீருவோம் என்பதை அறிந்துகொண்ட பின்புதான் ஒப்பந்தம் செய்து கொள்ள முன்வந்தார்கள்.

**பேச்சுவார்த்தை**

இப்னு அபூஹுகைக் என்ற யூதர் "நீங்கள் வாருங்கள் நான் உங்களிடம் பேசுகிறேன்" என்று நபியவர்களிடம் தூதனுப்பவே, அவர்களும் பேச்சு வார்த்தைக்கு ஒப்புக் கொண்டார்கள்.

"கோட்டைக்குள் உள்ள வீரர்களின் உயிர் பாதுகாக்கப்பட வேண்டும் அவர்களது குடும்பத்தார்களை அவர்களுடன் விட்டுவிட வேண்டும் அந்த வீரர்கள் தங்களின் மனைவி மக்களுடன் கைபர் பூமியிலிருந்து வெளியேறி விடுவார்கள் கைபர் பூமியும் அதிலுள்ள செல்வங்களும், பொருட்களும், தங்கங்களும், வெள்ளிகளும், ஆயுதங்களும், கால்நடைகளும் முஸ்லிம்களுக்குச் சொந்தமாகும் தேவையான துணிமணிகளை மட்டும் எடுத்துக் கொள்ள அனுமதிக்க வேண்டும்" என்று ஒப்பந்தம் செய்து கொண்டனர். நபி (ஸல்) அவர்கள் அனைத்து அம்சங்களையும் ஒப்புக் கொண்டார்கள்.

"ஒப்பந்தம் செய்து கொடுத்த பின் நீங்கள் ஏதாவதொரு பொருளை மறைத்தால் அல்லாஹ்வும் அவனது தூதரும் கொடுத்த இந்தப் பொறுப்பு நீங்கிவிடும்" என்று கூறினார்கள். இந்த ஒப்பந்தத்திற்குப் பின் கோட்டைகள் முஸ்லிம்கள் வசம் ஒப்படைக்கப்பட்டன.

**அபூ ஹுகைகின் மகன்களைக் கொல்லுதல்**

மேற்படி ஒப்பந்தத்திற்குப் பிறகும் அபுல் ஹுகைகின் இரண்டு மகன்களும் அதிகமான செல்வங்களை மறைத்து விட்டனர். ஒரு தோல் பையில் நிறைய பொருட்களையும், ஹையிப் இப்னு அக்தப்பிற்கு சொந்தமான நகைகளையும் மறைத்து வைத்திருந்தனர். இந்த 'ஹை' என்பவர் நளீர் வமிச யூதர்களின் தலைவராவார். நபி (ஸல்) இவரை மதீனாவிலிருந்து நாடு கடத்திய போது அந்த நகைகளுடன் இங்கு வந்து தங்கியிருந்தார்.

இந்நிகழ்ச்சியைப் பற்றி இப்னு இஸ்ஹாக் (ரஹ்) குறிப்பிடுவதாவது: நபியவர்களிடம் 'கினானா அர்ரபீ' என்பவன் அழைத்து வரப்பட்டான். அவனிடம்தான் நளீர் வமிச யூதர்களுக்குச் சொந்தமான பொக்கிஷங்கள் இருந்தன. நபி (ஸல்) அவனிடம் அதைப் பற்றி விசாரிக்கவே, அவன் "அந்தப் பொக்கிஷம் உள்ள இடம் எனக்குத் தெரியாது" என்று பொய்யுரைத்தான். அப்போது மற்றொரு யூதன் நபியவர்களிடம் வந்து "கினானா ஒவ்வொரு நாள் காலையிலும் இந்த பாழடைந்த வீட்டிற்கு வந்து போவதை நான் பார்த்திருக்கிறேன்" என்று கூறினான். உடனே நபி (ஸல்) அவர்கள் கினானாவிடம் "அவர் கூறுவது போன்று அப்பொருள் உம்மிடம் இருந்தால் நான் உன்னை கொன்று விடட்டுமா?" என்று கேட்க அவன் "சரி!" என்றான். நபியவர்களின் கட்டளைக்கிணங்க அந்த பாழடைந்த வீடு தோண்டப்பட்டு அதில் பொக்கிஷங்களின் ஒரு பகுதி கண்டெடுக்கப்பட்டது. நபி (ஸல்) "மீதமுள்ள பொக்கிஷங்கள் எங்கே?" என்று கேட்க, அவன் அதைக் கொடுப்பதற்கு மறுத்து விட்டான். அவனை நபியவர்கள் ஜுபைடம் கொடுத்து "இவனிடமுள்ள அனைத்தையும் வாங்கும் வரை இவனை வேதனை செய்யுங்கள்" என்று கூறினார்கள். ஜுபைர் (ரழி) அம்பின் கூரிய பகுதியால் அவனது நெஞ்சில் குத்தினார்கள். அவனது உயிர் போகும்

தருவாயில் அவனை முஹம்மது இப்னு மஸ்லமாவிடம் ஜுபைர் கொடுத்து விட்டார்கள். முஹம்மது இப்னு மஸ்லமாவின் சகோதரர் மஹ்மூத், நா'' கோட்டையின் சுவல் நிழலுக்காக அமர்ந்திருந்த போது கோட்டையின் மேலிருந்து திருகைக் கல்லைத் தள்ளிவிட்டு யூதர்களால் கொல்லப்பட்டார். எனவே, முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) இவனைக் கொலை செய்தார்.

அபுல் ஹுகைகின் இரண்டு மகன்களும் பொருட்களை மறைத்து வைத்திருந்ததால் அவர்களை கொல்லும்படி நபியவர்கள் கட்டளையிட்டார்கள்.

புதுமணப் பெண்ணாக இருந்த ஹையின் மகள் ஸஃபிய்யாவை நபியவர்கள் சிறை பிடித்தார்கள். இவரைக் 'கினானா இப்னு அபூ ஹுகைக்' மணந்திருந்தான்.

**கனீமத்தை பங்கு வைக்கப்படுதல்**

நபி (ஸல்) யூதர்களைக் கைபரிலிருந்து வெளியேற்றி நாடு கடத்தத் திட்டமிட்டார்கள். ஆனால் அவர்கள், ''முஹம்மதே எங்களை இப்பூமியில் தங்கவிடுங்கள் நாங்கள் இப்பூமியை சீர்படுத்துகிறோம் உங்களைவிட இந்த பூமியைப் பற்றி நாங்கள் நன்கு அறிந்து வைத்திருக்கிறோம்.'' என்று கூறினார்கள். நபியவர்களுக்கும், அவர்களது தோழர்களுக்கும் இப்பூமியைச் சீர்செய்வதற்கு அடிமைகள் யாரும் இல்லை. சீர் செய்வதற்கு ஓய்வோ அவகாசமோ இவர்களுக்கும் இல்லை. எனவே, விவசாயத்திலும் தோட்டங்களிலும் மகசூலில் ஒரு பகுதியைத் தர வேண்டும் என்ற நிபந்தனையிலும், நபி (ஸல்) கூறும் காலம் மட்டுமே இங்கு தங்கவேண்டும் என்ற நிபந்தனையிலும் கைபர் பூமியை நபி (ஸல்) யூதர்களிடம் கொடுத்தார்கள். அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) கைபருடைய விளைச்சல்களின் கண்காணிப்பாளராக இருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கைபர் பூமியை 36 பங்காகப் பிரித்தார்கள். பின்பு ஒவ்வொரு பங்கையும் 100 பங்காகப் பிரித்தார்கள். ஆக மொத்தம் 3600 பங்குகளாயின. அதிலிருந்து சமப்பாதி பங்கு நபி (ஸல்) அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் உரியதாகும். அதாவது 1800 பங்குககளில் மற்ற முஸ்லிம்களுக்குக் கிடைப்பதைப் போன்றே நபியவர்களுக்கும் ஒரு பங்கு என்று முடிவானது. மீதமுண்டான 1800 பங்குகளைப் பொதுவாக முஸ்லிம்களுக்கு ஏற்படும் பிரச்சனைகளுக்காகவும், தேவைகளுக்காகவும் நபி (ஸல்) தனியாக ஒதுக்கி விட்டார்கள். நபி (ஸல்) இதை 1800 பங்குகளாக ஆக்கியிருந்ததற்குக் காரணம்: இந்த கைபரின் வெற்றி அல்லாஹ்வின் புறத்திலிருந்து ஹுதைபிய்யாவில் கலந்து கொண்டவர்களுக்காக வழங்கப்பட்டதாகும். அவர்கள் இங்கு இருப்பினும் சரி, இல்லை என்றாலும் சரி. ஹுதைபிய்யாவில் கலந்து கொண்டவர்கள் மொத்தம் 1400 நபர்களாவர். இவர்களில் 200 பேர் குதிரை வீரர்கள். ஒவ்வொரு குதிரைக்கும் இரண்டு பங்குகள், குதிரை வீரருக்கு ஒரு பங்கு என மொத்தம் மூன்று பங்குகள் கொடுக்கப்பட்டன. அதாவது 600 பங்குகள் 200 குதிரை வீரர்களுக்கும், 1200 பங்குகள் 1200 காலாட்படை வீரர்களுக்கும் வழங்கப்பட்டன. (ஜாதுல் மஆது)

ஸஹீஹுல் புகாரியில் இடம் பெற்றுள்ள இப்னு உமரின் அறிவிப்பின் மூலம் கைபரில் அதிகம் கனீமத்து பொருட்கள் கிடைக்கப் பெற்றன என்று தெரிய வருகிறது.

இப்னு உமர் (ரழி) கூறினார்கள்: ''கைபரை வெற்றி கொள்ளும் வரை நாங்கள் வயிறார உண்டதில்லை. கைபர் வெற்றி கொள்ளப்பட்டதற்கு பிறகுதான் நாங்கள் வயிறார பேரீத்தம் பழம் சாப்பிடுகிறோம்.'' (ஸஹீஹுல் புகாரி)

முஹாஜிர்களுக்குக் கைபரில் பேரீத்த மரங்களும், சொத்துகளும் கிடைத்துவிட்டதால் மதீனா திரும்பியவுடன் அன்சாரிகள், முஹாஜிர்களுக்குக் கொடுத்திருந்த பேரீத்த

மரங்களையெல்லாம் அவர்களிடமே நபியவர்கள் திரும்பக் கொடுத்தார்கள். (ஸஹீஹ் முஸ்லிம், ஜாதுல் மஆது)

**ஜஅஃபர் மற்றும் அஷ்அரி கிளையினர் வருகை**

இப்போர் முடிந்த பின்னர் ஜஅஃபர் (ரழி) அவர்களும், அபூமூஸா அல்அஷ்அரி (ரழி) அவர்களும் தங்கள் தோழர்களுடன் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள்.

இதைப் பற்றி அபூமூஸா (ரழி) கூறுகிறார்கள்: "நாங்கள் யமனில் வசித்து வந்தோம். முஹம்மது (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் கிடைத்த செய்தியை நாங்கள் அறிந்தோம். நானும் எனது சகோதரர்களும், 50க்கும் மேற்பட்ட எங்களது கூட்டத்தினரும் நபியவர்களைச் சந்திக்கப் புறப்பட்டோம். ஆனால், எங்களது கப்பல் திசைமாறி 'ஹபஷா' சென்று விட்டது. அங்கு நஜ்ஜாஷியிடம் ஜஅஃபர் (ரழி) அவர்களும் அவரது தோழர்களும் இருக்கக் கண்டோம். அவர் எங்களை இங்கு தங்குமாறு "நபி (ஸல்) அனுப்பி இருக்கிறார்கள். எனவே, நீங்களும் எங்களுடன் தங்குங்கள்" என்று கூறினார். நாங்களும் அவருடன் தங்கியிருந்தோம்.

பிறகு அவர் நபியவர்களை சந்திக்கப் புறப்பட்டபோது நாங்களும் அவருடன் புறப்பட்டோம். நாங்கள் நபியவர்களை சந்திக்க மதீனா வந்தபோது அவர்கள் மதீனாவிலிருந்து கைபருக்கு புறப்பட்டு விட்டார்கள். நாங்களும் கைபர் சென்றோம். கைபர் போரில் கலந்து கொள்ளாத எவருக்கும் கைபரில் கிடைத்த கனீமத்தில் பங்கு கொடுக்கவில்லை. ஆனால், எங்களுக்கும் ஜஅஃபர் மற்றும் அவரது தோழர்களுக்கும் நபி (ஸல்) கைபரின் கனீமத்தில் பங்கு கொடுத்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ஜஅஃபர் (ரழி) வந்தபோது அவரை வரவேற்று அவரது இரு கண்களுக்கிடையில் நபி (ஸல்) அவர்கள் முத்தமிட்டார்கள். பின்பு "எனது அதிக மகிழ்ச்சிக்கு என்ன காரணம்? கைபரின் வெற்றியா? ஜஅஃபன் வருகையா? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அறியேன்" என்று கூறினார்கள். (முஃஜமுத் தப்ரானி, ஜாதுல் மஆது)

குறிப்பு: நபி (ஸல்) அவர்கள் அம்ர் இப்னு உமைய்யா ழம் (ரழி) அவர்களை நஜ்ஜாஷியிடம் அனுப்பி ஜஅஃபரையும் அவரது தோழர்களையும் அழைத்து வருமாறு கூறினார்கள். நஜ்ஜாஷி அவர்களை நபியவர்களிடம் அனுப்பி வைத்தார். அந்நேரத்தில் அவர்கள் மொத்தம் 16 நபர்கள் இருந்தனர். மற்றவர்களெல்லாம் இதற்கு முன்னதாகவே மதீனா வந்து விட்டனர். இந்த சமயத்தில் தான் அபூ மூஸாவும் ஜஅஃபருடன் வந்தார்.

**ஸஃபிய்யாவுடன் திருமணம்**

இவர் கணவர் கினானா இப்னு அபூ ஹுகைக் மோசடி செய்த குற்றத்தால் கொல்லப்பட்டார். ஆகவே, இவர் கைதியானார். கைதிகள் ஓரிடத்தில் ஒன்று சேர்க்கப்பட்டனர். திஹ்யா இப்னு கலீஃபா (ரழி) என்ற தோழர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! கைதிகளில் இருந்து எனக்கு ஒரு பெண்ணைத் தாருங்கள்" என்று கேட்டார். அதற்கு நபியவர்கள் "உனக்கு விருப்பமான ஒரு பெண்ணை அழைத்துச் செல்!" என்று கூறினார்கள். அவர் கைதிகளிலிருந்த ஸஃபிய்யா பின்த் ஹையை அழைத்துச் சென்றார்.

அதைப் பார்த்த மற்றொரு தோழர் நபியவர்களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! குரைளா, நளீர் ஆகிய இரண்டு கிளையினருக்கும் தலைவியான ஸஃபிய்யாவை நீங்கள் திஹ்யாவிற்கு கொடுத்தீர்களா? அப்பெண் உங்களைத் தவிர வேறு யாருக்கும் தகுதியானவரல்ல" என்று கூறினார். அதற்கு நபியவர்கள் "அவரை ஸஃபிய்யாவுடன் அழைத்து வாருங்கள்" என்றார்கள். திஹ்யா ஸஃபிய்யாவுடன் வரவே நபி (ஸல்) ஸஃபிய்யாவைப் பார்த்தார்கள். பின்பு திஹ்யாவிடம் "கைதிகளில் வேறொரு பெண்ணை நீங்கள் அழைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். அதற்குப் பின் ஸஃபிய்யாவுக்கு

இஸ்லாமைப் பற்றி எடுத்துக் கூற, அவரும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார். நபியவர்கள் ஸஃபிய்யா (ரழி) அவர்களை உரிமைவிட்டு திருமணம் செய்து கொண்டார்கள். அவரை உரிமைவிட்டதையே அவருக்குரிய மஹராக'' ஆக்கினார்கள்.

நபி (ஸல்) மதீனா திரும்பும் வழியில் 'ஸத்துஸ்ஸஹ்பா' என்ற இடத்தில் ஸஃபிய்யா (ரழி) துடக்கிலிருந்து தூய்மையடைந்தார்கள். உம்மு ஸுலைம் (ரழி) ஸஃபிய்யாவை அலங்கரித்து இரவில் நபியவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். மறுநாள் பேரீத்தம் பழம், நெய், மற்றும் சத்துமாவினால் செய்யப்பட்ட ஒருவகை பாயாசத்தைக் கொண்டு நபி (ஸல்) வலிமா'' விருந்து அளித்தார்கள். மூன்று நாட்கள் ஸஃபிய்யா (ரழி) அவர்களுடன் நபி (ஸல்) தங்கினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஜாதுல் மஆது)

நபி (ஸல்) அவர்கள் ஸஃபிய்யாவுடைய கன்னத்தில் அடியின் வடுவைப் பார்த்து ''இது என்ன?'' என்று கேட்டார்கள். அதற்கு அவர், ''அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் எங்கள் ஊர் வருவதற்கு முன் முழுநிலா தனது இடத்திலிருந்து விலகி எனது மடியில் விழுவதாகக் கனவு கண்டேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களைப் பற்றிய எவ்விஷயத்தையும் நான் நினைக்கவில்லை. இக்கனவை எனது கணவனிடம் கூறியபோது எனது கன்னத்தில் வேகமாக அறைந்து, மதீனாவில் இருக்கும் அரசரையா நீ ஆசைப்படுகிறாய்? என்றார். அதன் காரணமாக ஏற்பட்ட வடுதான் இது'' என்று கூறினார். (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

**நஞ்சு கலந்த உணவு**

கைபரை முழுமையாக வெற்றி கொண்டு நபி (ஸல்) அவர்கள் முழு நிம்மதி அடைந்தார்கள். அப்போது ஸல்லாம் இப்னு மிஷ்கம் என்பவனின் மனைவி 'ஜைனப் பின்த் ஹாரிஸ்' என்பவள், நபி (ஸல்) அவர்களுக்கு விருந்து ஒன்று ஏற்பாடு செய்தாள். விருந்தில் ஓர் ஆட்டை விஷத்துடன் சமைத்தாள். குறிப்பாக, நபி (ஸல்) அவர்கள் விரும்பி உண்ணும் பகுதி முன் சப்பை என்பதை தெரிந்து அதிலே அதிக விஷத்தை ஏற்றினாள்.

நபியவர்கள் அதிலிருந்து ஒரு துண்டை எடுத்துக் கடித்தார்கள். ஆனால் அதை விழுங்காமல் துப்பிவிட்டார்கள். ''இந்த எலும்பு தன்னில் விஷமேற்றப்பட்டுள்ளது என்று என்னிடம் கூறுகிறது'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். பின்பு அப்பெண்ணை அழைத்து விசாரிக்கவே அவள் உண்மையை ஒப்புக் கொண்டாள். ''இவ்வாறு செய்ததற்கான காரணம் என்ன?'' என்று நபி (ஸல்) விசாரித்தார்கள். அதற்கு அவள், ''நீங்கள் அரசராக இருந்தால் உங்களைக் கொல்வதில் எங்களுக்கு நிம்மதி கிடைக்கலாம். நீங்கள் தூதராக இருந்தால் உண்மை உங்களுக்கு தெரிந்து விடும். அதனால்தான் அவ்வாறு செய்தேன்'' என்று கூறினாள். நபியவர்கள் அவளை மன்னித்து விட்டு விட்டார்கள்.

நபி (ஸல்) அவர்களுடன் பிஷ்ர் இப்னு பரா (ரழி) என்ற தோழரும் சாப்பிட்டார். அவர் அந்த ஆட்டிலிருந்து ஒரு துண்டை முழுமையாகச் சாப்பிட்டதால் அந்த விஷம் அவரது உடலில் கலந்து மரணித்து விட்டார்.

அப்பெண் முற்றிலும் மன்னிக்கப்பட்டாளா? அல்லது கொல்லப்பட்டாளா? என்பதைப் பற்றி பல மாறுபட்ட அறிவிப்புகள் வந்துள்ளன.

இதைப் பற்றி அறிஞர்கள் கூறுவதாவது: நபியவர்கள் ஆரம்பத்தில் அப்பெண்ணை மன்னித்து விட்டார்கள். அடுத்து, அவள் தந்த விஷத்தால் பிஷ்ர் (ரழி) இறந்துவிடவே அவளைக் கொல்லும்படி கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

**கைபர் போரில் இரு தரப்பிலும் கொல்லப்பட்டவர்கள்**

இப்போரில் முஸ்லிம்களில் பதினாறு நபர்கள் கொல்லப்பட்டார்கள். அதில் நான்கு நபர்கள் குறைஷிகள். ஒருவர் அஷ்ஜாஃ கிளையைச் சேர்ந்தவர் மற்றும் ஒருவர் அஸ்லம் கிளையைச் சேர்ந்தவர், மற்றொருவர் கைபரைச் சேர்ந்தவர். மீதமுள்ள 9 பேர்கள் அன்சாரிகளாவர். சிலர் முஸ்லிம்களில் கொல்லப்பட்டவர்கள் பதினேழு பேர்கள் என்றும் கூறுகின்றனர்.

அறிஞர் மன்சூர்ஃபூ (ரஹ்) கூறுவதாவது: ‘‘ஷஹீதானவர்கள் மொத்தம் பத்தொன்பது நபர்களே. நான் பல மூல நூல்களை ஆராய்ச்சி செய்து பார்த்த போது இப்போரில் கொல்லப்பட்டவர்களின் 23 பெயர்களைப் பார்த்தேன். அதாவது, அந்த 23 பெயர்களில் ஒரு பெயர் ‘தப்ரி‘‘யில் மட்டும் இடம் பெற்றுள்ளது. இன்னும் ஒரு பெயர் ‘வாகிதி‘‘யில் மட்டும் இடம் பெற்றுள்ளது. மற்றொருவர் சமைக்கப்பட்ட ஆட்டை சாப்பிட்டு மரணித்தவராவார். மற்றொருவர் பத்ரில் கொல்லப்பட்டாரா? அல்லது கைபரில் கொல்லப்பட்டாரா? என்பது பற்றி இரு கருத்துகள் உள்ளன. ஆனால், அதில் சரியானது அவர் பத்ரில் கொல்லப்பட்டார் என்பதுதான். ஆகவே, முஸ்லிம்களில் 19 நபர்கள் கொல்லப்பட்டார்கள் என்பதுவே ஏற்றமானது. யூதர்களில் 93 பேர்கள் கொல்லப்பட்டார்கள்.’’ (ரஹ்மத்துல் லில் ஆலமீன்)

**ஃபதக்**

நபி (ஸல்) கைபருக்கு வந்தபோது முஹய்ம்ஸா இப்னு மஸ்ஊது (ரழி) என்பவரை ‘ஃபதக்’ என்ற இடத்திலுள்ள யூதர்களிடம் அனுப்பி, இஸ்லாமை ஏற்குமாறு அழைத்தார்கள். ஆனால், அவர்கள் இஸ்லாமை ஏற்றுக் கொள்வதில் தாமதம் காட்டினர். நபியவர்களின் கைபர் வெற்றியைப் பார்த்த இவர்களின் உள்ளத்தில் அல்லாஹ் பயத்தை ஏற்படுத்தினான். இதனால் ‘ஃபதக்’ யூதர்கள் நபியவர்களிடம் தூது அனுப்பி கைபர்வாசிகளிடம் ஒப்பந்தம் செய்தவாறு தங்களிடமும் ஒப்பந்தம் செய்து கொள்ளுமாறு வேண்டினர். அதாவது ஃபதக்கின் விளைச்சலில் சரிபாதியைத் தர அவர்கள் ஒப்புக் கொண்டனர். அதை நபியவர்களும் ஏற்றுக் கொண்டார்கள். ஃபதக் சண்டையின்றி வெற்றி கொள்ளப்பட்டதால் அதன் விளைச்சல் அனைத்தும் நபியவர்களுக்கு மட்டும் சொந்தமாயிற்று. (இப்னு ஹிஷாம்)

**வாதில் குரா**

நபி (ஸல்) அவர்கள் கைபர் போரை முடித்து அங்கிருந்து ‘வாதில் குரா’ என்ற இடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். அங்கு யூதர்களின் ஒரு கூட்டமும், அரபுகளின் ஒரு கூட்டமும் சேர்ந்து கொண்டனர். நபியவர்கள் முஸ்லிம்களுடன் அங்கு சென்ற போது அங்கிருந்த யூதர்கள் முன்னெச்சரிக்கையுடன் இருந்ததால் முஸ்லிம்களை நோக்கி அம்பெறிந்து தாக்குதல் நடத்தினர். இதில் நபியவர்களின் ‘மித்அம்’ என்ற அடிமை கொல்லப்பட்டார். அவருக்கு சொர்க்கம் உண்டென மக்கள் நற்செய்தி கூறினர். ஆனால் நபி (ஸல்) ‘‘ஒருக்காலும் அவ்வாறு இல்லை. எனது உயிர் யார் கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! கைபர் போரின் கனீமத்து பொருட்களை பங்கு வைப்பதற்கு முன் அவர் எடுத்துக்கொண்ட போர்வை இப்போது அவர் மீது நெருப்பாக எரிந்து கொண்டு இருக்கிறது’’ என்று கூறினார்கள். நபியவர்களின் இந்த எச்சரிக்கையை கேள்விப் பட்ட மக்கள், தாங்கள் அற்பமாக நினைத்து எடுத்து வைத்திருந்த பொருட்களையெல்லாம் கொண்டு வந்து கொடுத்தனர். ஒருவர் செருப்பிற்குரிய ஒன்று (அல்லது) இரண்டு வார்களை நபியவர்களிடம் கொண்டு வந்து கொடுத்தார். அதற்கு நபியவர்கள் ‘‘இது நரக நெருப்பின் ஒரு வாராக இருக்கும் அல்லது இரண்டு வாராக இருக்கும்’’ என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

யூதர்களின் எதிர்பாராத இந்தத் தாக்குதலால் நபியவர்கள் உடனடியாக தங்களது தோழர்களைப் போருக்கு தயார்படுத்தி அணிவகுப்பை நடத்தினார்கள். மேலும், முழு படைக்குள்ள பெரிய கொடியை ஸஅது இப்னு உபாதாவிடம் கொடுத்தார்கள். அதற்குப் பின் மற்ற சிறிய கொடிகளில் ஒன்றை ஹுபாப் இப்னு முன்திடமும், மற்றொரு கொடியை ஸஹ்ல் இப்னு ஹுனைஃபிடமும், மற்றொரு கொடியை அப்பாத் இப்னு பிஷ்ர் இடமும் கொடுத்தார்கள்.

இதையெடுத்து இஸ்லாமை ஏற்க நபி (ஸல்) யூதர்களை அழைத்தார்கள். ஆனால், அவர்கள் ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டனர். அவர்களிலிருந்து ஒருவன் வெளியேறி சண்டைக்கு வந்தான். அவனை ஜுபைர் இப்னு அவ்வாம் (ரழி) கொன்றார். பின்பு மற்றொருவன் சண்டையிட வந்தான். அவனையும் ஜுபைர் (ரழி) கொன்றார். பின்பு மற்றொருவன் வந்தான். அவனை அலீ இப்னு அபீதாலிப் (ரழி) கொன்றார். இவ்வாறு அவர்களில் பதினொரு நபர்கள் கொல்லப்பட்டனர். அவர்களில் ஒவ்வொருவர் கொல்லப்பட்ட பின்பும் நபியவர்கள் மீதமுள்ளவர்களை இஸ்லாமின் பக்கம் அழைத்தார்கள்.

இந்நிலையில் தொழுகையுடைய நேரம் வரும்போதெல்லாம் தங்களது தோழர்களுடன் தொழுகையை நிறைவேற்றிவிட்டு, மீண்டும் யூதர்களிடம் வந்து அவர்களுக்கு இஸ்லாமிய மார்க்கத்தை எடுத்துக் கூறி அல்லாஹ்வின் பக்கம் அழைத்தார்கள். இவ்வாறு மாலை வரை சண்டை தொடர்ந்தது. மறுநாள் காலை நபியவர்கள், அவர்களிடம் சென்ற போது சூரியன் உதயமாகி சற்று நேரத்திற்குள்ளாகவே யூதர்கள் ஆயுதங்களைப் போட்டுவிட்டு சரணடைந்தார்கள். நபியவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஏராளமான பொருட்களை அல்லாஹ் வழங்கினான்.

இங்கு நபி (ஸல்) நான்கு நாட்கள் தங்கியிருந்து கிடைத்த பொருட்களை தோழர்களுக்குப் பங்கு வைத்துக் கொடுத்தார்கள். ஆனால், மற்ற நிலங்களையும் பேரீத்தம் தோட்டங்களையும் யூதர்களிடமே கொடுத்து கைபர் யூதர்களிடம் செய்து கொண்டதைப் போன்று ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். (ஜாதுல் மஆது)

**தைமா**

கைபர், ஃபதக், வாதில் குரா ஆகிய இடங்களிலிருந்த யூதர்களெல்லாம் பணிந்து விட்டனர் என்ற செய்தி தைமாவிலுள்ள யூதர்களுக்குக் கிடைத்தது. அவர்கள் முஸ்லிம்களுக்கு எதிராக எந்த போர் நடவடிக்கைகளிலும் ஈடுபடவில்லை. மாறாக, அவர்களே முன் வந்து சமாதானம் செய்து கொள்வதற்கு நபி (ஸல்) அவர்களிடம் தூது அனுப்பினார்கள். நபியவர்களும் அதை ஏற்றுக் கொண்டு அவர்களது சொத்துகளை அவர்களிடமே கொடுத்து விட்டார்கள். (ஜாதுல் மஆது)

நபி (ஸல்) ஓர் உடன்படிக்கை பத்திரத்தையும் அவர்களுக்கு எழுதிக் கொடுத்தார்கள். அக்கடிதத்தில் எழுதப்பட்டிருந்ததாவது:

“அல்லாஹ்வின் தூதர் முஹம்மது, பனூ ஆதியா என்ற யூதர்களுக்கு எழுதிக் கொடுக்கும் ஒப்பந்தம். இவர்களுக்கு முற்றிலும் பாதுகாப்பு அளிக்கப்படும். இவர்களுக்கு வரி விதிக்கப்படும். இவர்கள் மீது அநீதி இழைக்கப்பட மாட்டாது. இவர்களை நாடு கடத்தப்பட மாட்டாது. இது நிரந்தரமான ஒப்பந்தமாகும்.”

இதை காலித் இப்னு ஸஈது (ரழி) எழுதினார். (இப்னு ஸஅத்)

**மதீனாவிற்குத் திரும்புதல்**

இதற்குப் பின் நபியவர்கள் மதீனா திரும்பினார்கள். திரும்பும் வழியில் ஒரு பள்ளத்தாக்கை கடந்து சென்ற போது மக்கள் சப்தமிட்டு “அல்லாஹு அக்பர், அல்லாஹு

அக்பர், லாஇலாஹஇல்லல்லாஹ்'' என்று கூறினார்கள். அதைக் கேட்ட நபி (ஸல்) ''நீங்கள் நிதானத்தைக் கையாளுங்கள். நீங்கள் செவிடனையோ அல்லது மறைவாக இருப்பவனையோ அழைக்கவில்லை. நீங்கள் நன்கு கேட்கும் ஆற்றல் உள்ளவனையும், சமீபத்தில் இருப்பவனையுமே அழைக்கின்றீர்கள்'' என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

மதீனா திரும்பும் வழியில் ஓர் இரவு முற்பகுதியில் பயணித்து விட்டு பிற்பகுதியில் ஓய்வெடுத்தார்கள். ஓய்வெடுப்பதற்கு முன் பிலாலிடம் ''இன்றிரவு தூங்காமல் எங்களுக்கு பாதுகாப்பாய் இருங்கள்'' என்று கூறினார்கள். ஆனால், வாகனத்தில் சாய்ந்தவராக அமர்ந்திருந்த பிலாலுக்குத் தூக்கம் மிகைத்து விட்டது. சூரியன் உதயமாகும் வரை யாரும் விழிக்கவில்லை. முதன்முதலாக நபியவர்களே விழித்தார்கள். அங்கிருந்து புறப்பட்டு வேறோர் இடத்திற்கு வந்து ஃபஜ்ர் தொழுதார்கள். சிலர் இச்சம்பவம் வேறொரு சந்தர்ப்பத்தில் ஏற்பட்டது என்றும் கூறுகின்றனர். (ஜாதுல் மஆது)

கைபர் போரின் பல நிகழ்வுகளைக் கவனித்துப் பார்க்கும்போது நபி (ஸல்) அவர்கள் ஸஃபர் மாதம் இறுதி அல்லது ரபீஉல் அவ்வல் ஆரம்பத்தில் மதீனாவை நோக்கித் திரும்பியிருக்க வேண்டும் என்றே தெரிய வருகிறது.

### அபான் இப்னு ஸஈத் படைப்பிரிவு

சங்கைமிக்க மாதங்கள் முடிந்ததற்குப் பின், வீரர்கள் யாருமின்றி மதீனாவைக் காலியாக வைப்பது முறையல்ல என்பதை ஒரு ராணுவத் தலைவர் அறிந்து வைத்திருப்பதை விட நபி (ஸல்) நன்றாகவே அறிந்திருந்தார்கள். ஏனெனில், மதீனாவைச் சுற்றியிருந்த கிராம அரபிகள், முஸ்லிம்கள் எப்பொழுது அயர்வார்கள் என்று எதிர்பார்த்திருந்தனர். எனவேதான் கைபருக்கு போய்க் கொண்டிருக்கும் வழியிலேயே அபான் இப்னு ஸஈதின் தலைமையின் கீழ் நஜ்தில் உள்ள கிராம அரபிகளை அச்சுறுத்துவதற்காக ஒரு படையை நபி (ஸல்) அனுப்பி விட்டார்கள். நபியவர்கள் கொடுத்த கடமையை நிறைவேற்றிவிட்டு கைபர் நோக்கி அபான் இப்னு ஸஈத் (ரழி) திரும்பினார். அதற்குள் நபியவர்கள் கைபரை வெற்றி கொண்டு விட்டார்கள்.

அநேகமாக இப்படையை ஹிஜ்ரி 7, ஸஃபர் மாதத்தில் அனுப்பியிருக்க வேண்டும். இப்போரைப் பற்றிய சில குறிப்புகள் புகாரியில் இடம் பெற்றுள்ளது. ஆனால், புகாரியின் விரிவுரையாளர் இப்னு ஹஜர் (ரஹ்) ''இப்போரைப் பற்றிய சரியான தகவல் தனக்குத் தெரியவில்லை'' என்பதாக குறிப்பிட்டுள்ளார்கள்.(ஸஹீஹுல் புகாரி, ஃபத்ஹுல் பாரி)

## அடுத்தக்கட்ட போர்களும் படைப் பிரிவுகளும் (ஹிஜ்ரி 7)

### தாதுர் ரிகா

இஸ்லாமிற்கு எதிரான மூன்று மாபெரும் ராணுவங்களில் பலம் வாய்ந்த இரண்டு ராணுவங்களை முற்றிலும் முறியடித்ததற்குப் பின் மூன்றாவது எதிரியின் பக்கம் தங்களது கவனத்தை முழுமையாகத் திருப்பினார்கள். நஜ்தின் கிராமப்புறங்களில் பரவியிருந்த நாடோடி வம்பர்களான அரபிகளே அந்த மூன்றாவது எதிரிகள். அந்த அரபிகள் சந்தர்ப்பங்களையும் அவகாசங்களையும் எதிர்பார்த்திருந்து அவ்வப்போது மதீனாவின் மீது தாக்குதல் நடத்தி கொள்ளையடிப்பது, வழிப்பறி செய்வது, திருடுவது போன்ற குற்றச் செயல்களில் ஈடுபட்டு வந்தனர்.

இந்த நாடோடிகள் ஒரு குறிப்பிட்ட ஊரிலோ நகரத்திலோ வசிக்கவில்லை. இவர்களது இல்லங்கள் பெரும் கோட்டைகளோ அரண்களோ இல்லை. மாறாக, முகவரியின்றி, பாலை வனங்களிலும் பள்ளத்தாக்குகளிலும் வசித்து வந்த காரணத்தால் இவர்களை அடக்குவதோ, இவர்களின் அட்டூழியத்தை அணைப்பதோ, முந்திய இரு எதிரிகளை அடக்கியதைவிட சற்றுச் சிரமமாகவே இருந்தது. ஆகவே, அவர்களை அச்சுறுத்தும் படி தாக்குதல்கள்

நடத்துவது அவசியமாயிற்று. அதைத் தவிர வேறு நடவடிக்கை ஏதும் அவர்களுக்குப் பலனளிப்பதாக இல்லை. அதனால் முஸ்லிம்கள் அவர்கள் மீது பலமுறை திடீர் திடீரென தாக்குதல் நடத்தினார்கள்.

இந்த அரபிகளுக்கு பாடம் கற்பிப்பதற்காக நபியவர்கள் எடுத்த ஒரு போர் நடவடிக்கைக்கு “தாதுர் ரிகா” என்று சொல்லப்படுகிறது.

பெரும்பாலான வரலாற்று ஆசிரியர்கள் இப்போர் நான்காம் ஆண்டு நடந்தது என்று கூறுகின்றனர். ஆனால், இப்போரில் அபூ மூஸா அஷ்அரி (ரழி) மற்றும் அபூஹுரைரா (ரழி) கலந்து கொண்டதிலிருந்து இப்போர் கைபர் போருக்கு பின்னர்தான் நடந்தது என்று உறுதியாக சொல்ல முடிகிறது. ஆகவே, ஹிஜ்ரி 7, ரபீஉல் அவ்வல் மாதத்தில்தான் இது நடந்திருக்க வேண்டும்.

இப்போர் குறித்து வரலாற்று ஆசிரியர்கள் கூறுவதின் சுருக்கமாவது: கத்ஃபான் கோத்திரத்தைச் சேர்ந்த அன்மார், ஸஅலபா மற்றும் முஹாப் ஆகிய இம்மூன்று கிளையினரும் ஒன்று சேர்ந்து முஸ்லிம்களைத் தாக்கத் தயாராகின்றனர் என்று நபியவர்களுக்குத் தெரிந்தவுடன் 400 அல்லது 700 தோழர்களை அழைத்துக் கொண்டு விரைந்தார்கள். மதீனாவில் அபூதர் அல்லது உஸ்மானைப் பிரதிநிதியாக நியமித்தார்கள். தங்களது படையுடன் அவர்களது ஊர்களுக்குள் நீண்ட தூரம் வரை நபி (ஸல்) ஊடுருவிச் சென்றார்கள். மதீனாவிலிருந்து இரண்டு நாட்கள் பிரயாண தூரமுள்ள ‘நக்ல்’ என்ற இடத்தை அடைந்தார்கள். அங்குக் கத்ஃபான் கிளையினரின் ஒரு கூட்டத்தினரைச் சந்தித்து ஒருவருக்கொருவர் மிக நெருக்கமாக ஆகி, ஒருவர் மற்றவரை அச்சுறுத்திக் கொண்டனர். ஆனால், சண்டை ஏதும் நடைபெறவில்லை. எனினும், நபி (ஸல்) அன்றைய பொழுது ‘ஸலாத்துல் கவ்ஃப்“” முறைப்படி அனைத்து தொழுகைகளையும் தொழ வைத்தார்கள்.

ஸஹீஹுல் புகாரியில் வருவதாவது: (படை இரண்டாக பிரிக்கப்பட்டது) தொழுகைக்கு இகாமத் சொல்லப்படவே நபி (ஸல்) அவர்கள் ஒரு பிரிவினருக்கு இரண்டு ரக்அத் தொழுகை நடத்தினார்கள். இரண்டு ரக்அத்துகளை முடித்துக் கொண்டு அப்பிரிவினர் பாதுகாப்பிற்குச் சென்றுவிட, மற்றொரு பிரிவினர் பிந்திய இரண்டு ரக்அத்தில் நபியுடன் சேர்ந்து தொழுதனர். ஆக, நபி (ஸல்) நான்கு ரக்அத்தும், மற்ற இரண்டு பிரிவினரும் இரண்டு இரண்டு ரக்அத்துகள் தொழுதனர் (ஸஹீஹுல் புகாரி)

அபூ மூஸா அஷ்அ (ரழி) அறிவிக்கின்றார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இப்போருக்காக புறப்பட்டோம். ஓர் ஒட்டகத்தில் ஆறு நபர்கள் வீதம் மாறி மாறி சவாரி செய்தோம். இதனால் எங்களது கால்கள் வெடித்து விட்டன. எனது கால்களிலும் வெடிப்பு ஏற்பட்டு நகங்கள் எல்லாம் பெயர்ந்து விட்டன. அதனால் துண்டுத் துணிகளை எடுத்து எங்களது கால்களைச் சுற்றிக் கொண்டோம். எனவேதான் இப்போருக்குப் பெயர் ‘தாதுர் கா’ (துண்டுத் துணிகள் உடையது) என்று அழைக்கப்பட்டது. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ‘தாத்துர் கா’ போருக்கு சென்றிருந்தோம். ஓர் அடர்த்தியான நிழல் தரும் மரத்தருகில் வந்த போது அதில் நபி (ஸல்) ஓய்வு எடுப்பதற்காக ஏற்பாடு செய்தோம். மக்கள் பிரிந்து சென்று ஆங்காங்கிருந்த மற்ற மர நிழல்களில் ஓய்வெடுக்க, நபி (ஸல்) அவர்கள் ஒரு மரநிழலில் தங்கினார்கள். அம்மரத்தில் தனது வாளைத் தொங்க விட்டுவிட்டு அதன் நிழலில் தூங்கினார்கள். நாங்களும் சிறிது தூங்கினோம். ஒரு முஷ்ரிக் அங்கு வந்து நபியின் வாளை உருவிக் கொண்டார். நபி (ஸல்) கண் விழித்து பார்த்தபோது “நீ எனக்குப் பயப்படுகிறாயா?” என்று அவர் கேட்டார். நபி (ஸல்) “இல்லை” என்றார்கள். அவர் “யார் உன்னை என்னிடமிருந்து

பாதுகாக்க முடியும்!'' என்றார். நபியவர்கள் ''அல்லாஹ்'' என்றார்கள். இதற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் எங்களை அழைத்தார்கள். நாங்கள் நபியவர்களிடம் சென்ற போது அங்கு கிராமவாசி ஒருவர் உட்கார்ந்திருந்தார். நபியவர்கள் ''நான் தூங்கிக் கொண்டிருந்த போது எனது வாளை இவர் எடுத்துக் கொண்டார். நான் விழித்துப் பார்த்தபோது அது அவரது கையில் உருவப்பட்ட நிலையில் இருந்தது. இவர் ''உன்னை என்னிடமிருந்து யார் பாதுகாப்பார்?'' என்று கேட்டார். ''அல்லாஹ்'' என்று நான் கூறினேன். இதோ... அவர் உட்கார்ந்து இருக்கிறார் என்று நபி (ஸல்) கூறினார்கள். அவரைத் தண்டிக்காமல் விட்டுவிட்டார்கள். (முக்தஸர் ஸீரத்திர்ரஸூல்)

இச்சம்பவத்தைப் பற்றி வரும் மற்றொரு அறிவிப்பில் வருவதாவது, ''அல்லாஹ்'' என்று நபி (ஸல்) பதில் கூறியவுடன் அவரது கையிலிருந்து வாள் வீழ்ந்துவிட்டது. அதை நபி (ஸல்) எடுத்துக் கொண்டு ''என்னிடமிருந்து உன்னை யார் பாதுகாப்பார்?'' என்று கேட்டார்கள். அவர் ''வாளை எடுத்தவர்களில் சிறந்தவராக நீங்கள் இருங்கள்'' என்றார். ''வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை நான் அல்லாஹ்வின் தூதர் என்று நீ சான்று கூறுவாயா?'' என்று நபி (ஸல்) அவரிடம் கேட்டார்கள். அவர் ''நான் உங்களிடம் போர் செய்யவோ, உங்களிடம் போர் புரியும் கூட்டத்தினருடன் சேரவோ மாட்டேன் என்று நான் உங்களிடம் ஒப்பந்தம் செய்கிறேன்'' எனக் கூறினார். நபி (ஸல்) அவரை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டார்கள். அவர் தனது கூட்டத்தனரிடம் சென்று ''நான் மக்களில் சிறந்தவரிடமிருந்து உங்களிடம் வந்துள்ளேன்'' என்று கூறினார். (ஃபத்ஹுல் பாரி, முக்தஸர் ஸீரத்திர்ரஸூல்)

''இந்த கிராமவாசியின் பெயர் கவ்ரஸ் இப்னு ஹாரிஸ்'' என்று ஸஹீஹுல் புகாரியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அறிஞர் வாகிதியின் நூலில் ''இந்த கிராமவாசியின் பெயர் துஃஸூர் இவர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார்'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்தக் கருத்து வேற்றுமைக்கு ஸஹீஹுல் புகாரியின் விரிவுரையாளர் இப்னு ஹஜர் ''இரண்டும் வெவ்வேறு நிகழ்ச்சிகளாக இருக்கலாம்'' என்று விளக்கம் அளிக்கிறார். அல்லாஹ்வே மிக அறிந்தவன். (ஃபத்ஹுல் பாரி)

இப்போரிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த வழியில் இணைவைப்பாளர் ஒருவன் மனைவியை முஸ்லிம்கள் சிறை பிடித்தனர். அவளது கணவன் ''அதற்குப் பகரமாக ஒரு நபித்தோழரைக் கொல்வேன்'' என்று நேர்ச்சை செய்து கொண்டு, இரவில் முஸ்லிம்கள் இருந்த இடம் நோக்கி வந்தான். நபி (ஸல்) முஸ்லிம்களைப் பாதுகாப்பதற்காகவும் எதிரிகளைக் கண்காணிப்பதற்காகவும் அப்பாது இப்னு பிஷ்ர், அம்மார் இப்னு யாஸிர் (ரழி) ஆகிய இரு வீரர்களை நியமித்தார்கள். அப்பாது (ரழி) தொழுகையில் ஈடுபட்டார்கள். (அம்மார் (ரழி) தூங்கி விட்டார்) அப்போது அவன் அப்பாத் (ரழி) அவர்களை நோக்கி அம்பெறிந்தான். அவர் அதை பிடுங்கி எறிந்துவிட்டு தொழுகையை முறிக்காமல் தொடர்ந்தார்கள். இவ்வாறு மூன்று அம்புகள் எறிந்தும் தொழுகையை முறிக்கவில்லை. இறுதியாக ஸலாம் கொடுத்த பின்னர் தனது தோழரை எழுப்பினார். அவர் ''ஸுப்ஹானல்லாஹ்! என்னை நீங்கள் எழுப்பியிருக்கலாமே?'' என்றார். அதற்கு அவர் ''நான் ஒரு சூராவை ஓதிக்கொண்டு இருந்தேன். அதை உடனே முறிப்பதை விரும்பவில்லை'' என்றார். (ஃபத்ஹுல் பாரி, ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

வம்பர்களாக இருந்து வந்த கிராமப்புற அரபுகளின் உள்ளங்களில் இப்போர் பெரும் அச்சத்தையும், பயத்தையும் ஏற்படுத்தியது. இப்போருக்குப் பின் நபி (ஸல்) அனுப்பிய படையெடுப்புகளின் விவரங்களை நாம் அலசிப்பார்க்கும் போது இப்போருக்குப் பின் கத்ஃபான் கிளையினர் முற்றிலும் துணிவை இழந்து, சிறிது சிறிதாகப் பணிந்து, இறுதியில்

இஸ்லாமை ஏற்றுக் கொண்டு விட்டனர் என்பது நமக்குத் தெரியவருகிறது. மேலும், இந்தக் கிராமவாசிகளில் பல குடும்பத்தினர், நபி (ஸல்) அவர்களுடன் மக்காவை வெற்றி கொள்ள வந்தனர். அதற்குப் பிறகு ஹுனைன் போரிலும் கலந்து கொண்டனர். அதன் கனீமத்தும் இவர்களுக்குக் கிடைத்தது. மக்கா வெற்றிக்குப் பின் இவர்களிடம் ஜகாத் வசூல் செய்ய நபி (ஸல்) தங்களது ஆட்களை அனுப்பினார்கள். அவர்களும் ஜகாத்தை நிறைவேற்றினார்கள் என்பதையும் நாம் பார்க்கிறோம்.

ஆகவே, இதன் மூலம் அகழ் போரில் கலந்து கொண்ட மூன்று எதிரி ராணுவங்களையும் நபி (ஸல்) தோற்கடித்து விட்டார்கள். மதீனாவிலும், சுற்றுப்புறங்களிலும் அமைதியும் பாதுகாப்பும் நிலவியது. இதற்குப் பின் சில பகுதிகளில் கோத்திரங்கள் சிலவற்றால் ஏற்பட்டிருந்த பிரச்சனைகளைத் தீர்க்க முஸ்லிம்கள் ஆற்றல் பெற்றனர். உள்ளுக்குள் பிரச்சனைகள் முடிவடைந்து, நிலைமைகள் இஸ்லாமுக்கும் முஸ்லிம்களுக்கும் சாதகமாக மாறுமளவு முன்னேறிவிட்டதால் இப்போருக்குப் பின் பல பெரிய நாடுகளையும், நகரங்களையும் வெற்றி கொள்வதற்கான முன்னேற்பாடுகளில் முஸ்லிம்கள் ஈடுபட்டனர்.

இப்போரிலிருந்து திரும்பிய பின் மதீனாவில் நபி (ஸல்) ஹிஜ்ரி 7, ஷவ்வால் வரை தங்கி இருந்தார்கள். அக்காலக் கட்டத்தில் பல படைப் பிரிவுகளை நபி (ஸல்) பல இடங்களுக்கு அனுப்பினார்கள். அதன் விவரங்கள் பின்வருமாறு:

**1) காலிப் இப்னு அப்துல்லாஹ் படைப் பிரிவு**

ம்குதைத்' என்ற இடத்தில் வசிக்கும் 'முலவ்விஹ்' என்ற கூட்டத்தார், பஷீர் இப்னு சுவைத் (ரழி) எனும் நபித்தோழன் அன்பர்களைக் கொன்று விட்டனர். அக்கூட்டத்தாரைப் பழி தீர்க்க ஹிஜ்ரி 7, ஸஃபர் அல்லது ரபிஊல் அவ்வல் மாதத்தில் காலிப் இப்னு அப்துல்லாஹ் (ரழி) தலைமையில் குதைத் நோக்கி ஒரு படையை நபி (ஸல்) அனுப்பினார்கள்.

இப்படை இரவு நேரத்தில் சென்று அங்குள்ளவர்கள் மீது தாக்குதல் நடத்தி, பலரைக் கொன்றுவிட்டு கால்நடைகளை ஓட்டி வந்தனர். விழித்துக் கொண்ட எதிரிகள் பெரும் படையை திரட்டிக் கொண்டு முஸ்லிம்களைத் தாக்கப் பின்தொடர்ந்தனர். மிகச் சமீபத்தில் எதிரிகள் வந்துவிட்ட பொழுது கடுமையான மழை ஒன்றை அல்லாஹ் இறக்கினான். சிறிது நேரத்தில் பயங்கர வெள்ளப் பெருக்கு ஏற்பட்டதும் எதிரிகளிடமிருந்து முஸ்லிம்கள் தப்பித்து மதீனா வந்து சேர்ந்தனர்.

**2)ஹிஸ்மா படைப் பிரிவு**

ஹிஜ்ரி 7, ஜுமாதல் ஆகிராவில் இப்படை அனுப்பப்பட்டது. "அரசர்களுக்கும் ஆளுநர்களுக்கும் கடிதம் எழுதுதல்" என்ற தலைப்பின் கீழ் இப்படையெடுப்பின் விவரங்கள் கூறப்பட்டு விட்டன.

**3) உமர் இப்னு கத்தாப் படைப் பிரிவு**

ஹிஜ்ரி 7, ஸஅபான் மாதத்தில் முப்பது நபர்களுடன் உமர் (ரழி) அவர்களை 'துர்பா' என்ற இடத்துக்கு நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இப்படை இரவில் பயணிப்பதும் பகலில் மறைந்திருப்பதுமாக தங்கள் பயணத்தைத் தொடர்ந்தது. துர்பாவில் வசித்து வந்த ஹவாஸின் கிளையினருக்கு இச்செய்தி எட்டியவுடன் இடங்களைக் காலி செய்து தப்பித்து ஓடிவிட்டனர். உமர் (ரழி) தங்கள் படையுடன் அங்கு சென்று பார்த்த பொழுது யாரும் இல்லாததால் மீண்டும் மதீனாவிற்குத் திரும்பி விட்டார்கள்.

**4) பஷீர் இப்னு ஸஅது படைப் பிரிவு**

ஹஜ் 7, ஷஅபான் மாதத்தில் பஷீர் (ரழி) அவர்களை முப்பது வீரர்களுடன் நபி (ஸல்) 'ஃபதக்' மாநிலத்தின் ஓர் எல்லையில் வசிக்கும் முர்ரா கிளையினர் மீது தாக்குதல் நடத்துவதற்கு அனுப்பி வைத்தார்கள். இப்படை அங்கு சென்று தாக்குதல் நடத்தி, அவர்களின் கால்நடைகளை எல்லாம் ஓட்டிக் கொண்டு திரும்பினர். இரவு நேரத்தில் எதிரிகள் படையாக வந்து இவர்களுடன் போர் புரிந்தனர். பஷீர் (ரழி) அவர்களும் அவருடைய தோழர்களும் எதிரிகளை அம்பால் எறிந்து தாக்கினர். இவர்களின் அம்புகள் அனைத்தும் தீர்ந்து விட்டன. இறுதியாக நடந்த வாள் சண்டையில் பஷீரைத் தவிர அனைவரும் கொல்லப்பட்டு விட்டனர். பஷீர் (ரழி) தனக்கு ஏற்பட்ட காயங்களுடன் அங்கிருந்து ஃபதக்குக்குச் சென்றார். காயங்கள் குணமாகும் வரை யூதர்களிடம் தங்கியிருந்து விட்டு மதீனா வந்து சேர்ந்தார்.

**5) காலிபு இப்னு அப்துல்லாஹ் படைப் பிரிவு**

ஹிஜ்ரி 7, ரமழான் மாதத்தில் 130 வீரர்களுடன் 'மைஃபஆ' என்ற இடத்திலுள்ள உவால், அப்து இப்னு ஸஅலபா ஆகியோர் மீது தாக்குதல் நடத்த காலிப் இப்னு அப்துல்லாஹ்வுடன் ஒரு படையை நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். அந்தப் படை எதிரிகள் மீது தாக்குதல் நடத்தி எதிர்த்தவர்களைக் கொன்றுவிட்டு கால்நடைகளை ஓட்டி வந்தனர். இப்படையெடுப்பின் போதுதான் 'நஹ்க் இப்னு மிர்தாஸ்' என்பவர் கலிமாவை மொழிந்தும் உஸாமா இப்னு ஸைது (ரழி) என்ற நபித்தோழரால் கொல்லப்பட்டு விட்டார். படை மதீனா வந்தடைந்ததும் அச்செய்தி நபியவர்களுக்குத் தெரிய வரவே "லாயிலாஹஇல்லல்லாஹ் என்று கூறிய பின்னரா நீ அவரைக் கொலை செய்தாய்?" எனக் கோபத்துடன் கேட்டார்கள். அதற்கு, "தன்னை பாதுகாத்துக் கொள்வதற்காகத்தான் அதைக் கூறினார்" என்று உஸாமா (ரழி) பதிலளிக்க, "அவர் உண்மையாளரா? பொய்யரா? என நீ அறிய அவரது உள்ளத்தை பிளந்து பார்த்தாயா?" என்று நபி (ஸல்) வன்மையாகக் கண்டித்தார்கள்.

**6) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா படைப் பிரிவு**

அஸீர் இப்னு ஜாம் அல்லது பஷீர் இப்னு ஜாம் என்பவர் முஸ்லிம்களின் மீது தாக்குதல் நடத்த சில கத்ஃபானியரை ஒன்று சேர்க்கிறார் என்ற தகவல் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. இதனால் நபி (ஸல்) ஹிஜ்ரி 7, ஷவ்வால் மாதத்தில் 30 வீரர்களை அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) தலைமையில் கைபரை நோக்கி அனுப்பி வைத்தார்கள். இப்படை அஸீடம் வந்து எங்களுடன் "நீர் உமது தோழர்களுடன் வாரும் நபி (ஸல்) உம்மையே கைபருக்கு ஆளுநராக ஆக்கி விடுவார்கள் என்று ஆசை வார்த்தைக் கூறினர். அவரும் தயாராகவே, அஸீரையும் அவரது 30 தோழர்களையும் அழைத்துக் கொண்டு அப்துல்லாஹ் மதீனா நோக்கிப் புறப்பட்டார். வழியில் 'கர்கறா நியார்' என்ற இடத்தில் தங்கியிருந்தபோது இரு கூட்டத்தினருக்குமிடையில் பிரச்சனை வரவே, அஸீரையும் அவரது 30 தோழர்களையும் முஸ்லிம்கள் கொன்று விட்டனர். வரலாற்று ஆசிரியரான வாக்கிதி, "ஹிஜ்ரி 6, ஷவ்வால் மாதம் கைபர் போர் நடப்பதற்கு சில மாதங்கள் முன்னதாக இச்சம்பவம் நடந்தது" என்று குறிப்பிட்டுள்ளார்.

**7) பஷீர் இப்னு ஸஅத் படைப் பிரிவு**

300 வீரர்களுடன் பஷீர் இப்னு ஸஅதை யமன், ஜபார் என்ற இடங்களுக்கு நபி (ஸல்) அனுப்பினார்கள். இவை கத்ஃபான் கிளையினருக்குச் சொந்தமான இடங்களாகும். சிலர் இந்த இடம் பஜாரா மற்றும் உத்ரா கிளையினருக்குச் சொந்தமான இடம் என்றும் கூறுகின்றனர். பல இடங்களிலிருந்து வந்து ஒன்றுகூடி மதீனாவைத் தாக்க இருந்தவர்களை எதிர்ப்பதற்காக இப்படை புறப்பட்டது. இரவில் பயணித்தும் பகலில் மறைந்திருந்தும்

இவர்கள் தங்களது பயணத்தைத் தொடர்ந்தனர். பஷீன் வருகையை அறிந்த எதிரிகள், இடங்களைக் காலிசெய்து கொண்டு ஓட்டம் பிடித்தனர். பஷீர் (ரழி) அங்கு சென்று எதிரிகளின் ஏராளமான கால்நடைகளை ஓட்டிக் கொண்டு இருவரையும் கைது செய்து மதீனா திரும்பினார். கைதிகள் இருவரும் மதீனா வந்ததும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டனர்.

### 8) அபூ ஹத்ரத் படைப் பிரிவு

"ஜுஸம் இப்னு முஆவியா கிளையைச் சேர்ந்த ஒருவன் பெரும் கூட்டத்தை அழைத்துக் கொண்டு 'காபா' என்ற இடத்திற்கு வந்திருக்கிறான், அங்கிருக்கும் கைஸ் கிளையினருடன் சேர்ந்து முஸ்லிம்களின் மீது போர் தொடுக்க உள்ளான்'' என்ற தகவல் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. அதை விசாரித்து உறுதியான செய்தியை அறிந்து வர, அபூ ஹத்ரதையும் (ரழி) அவருடன் இரண்டு தோழர்களையும் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். அபூ ஹத்ரத் (ரழி) சூரியன் மறையும் நேரத்தில் காபா வந்து சேர்ந்தார். அவர் ஊரின் ஓர் ஓரத்தில் மறைந்து கொண்டு மற்ற இரு தோழர்களை மற்றொரு புறத்தில் மறைந்து கொள்ளும்படிக் கூறினார். அன்று கால்நடைகளை மேய்ப்பதற்காக சென்றிருந்த அக்கூட்டத்தினரின் இடையர் வருவதற்கு தாமதமானது. நன்கு இருட்டிய பின்பு அந்த இடையரைத் தேடி அக்கூட்டத்தின் தலைவர் தனியாகப் புறப்பட்டார். அத்தலைவர் அருகில் வந்த போது அபூ ஹத்ரத் (ரழி) அவரது நெஞ்சை குறிவைத்து அம்பெறிந்தார். அம்பு குறி தவறாது நெஞ்சைத் துளைக்கவே, அவர் எந்தவித சப்தமுமின்றி இறந்து விட்டார்.

அவன் தலையைக் கொய்து, அக்கூட்டத்தினர் தங்கியிருந்த ராணுவ முகாம் அருகே அபூ ஹத்ரத் (ரழி) கட்டித் தொங்க விட்டார். பின்பு பெரும் சப்தத்துடன் தக்பீர் முழங்கினார். அவன் சப்தத்தைக் கேட்ட மற்ற இரு தோழர்களும் உரத்த குரலில் தக்பீர் முழங்கினர். இதனைச் செவிமடுத்து, தொங்கும் தலையையும் பார்த்தவுடன் கூட்டத்தினர் தலை தெறிக்க ஓடினர். இந்த மூன்று முஸ்லிம்கள் அதிகமான ஒட்டகங்களையும் ஆடுகளையும் ஓட்டிக் கொண்டு மதீனா வந்து சேர்ந்தனர். இப்படையெடுப்பு அடுத்துக் கூறப்பட உள்ள "உம்ரத்துல் கழா''வுக்கு முன்பதாக நடந்தது என்று இப்னுல் கைய்'' (ரஹ்) குறிப்பிடுகின்றார். (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

### உம்ராவை நிறைவேற்றப் புறப்படுதல் (உம்ரத்துல் கழா)

அறிஞர் ஹாகிம் (ரஹ்) கூறுகிறார்: துல்கஅதா பிறை உதயமானதும், "சென்ற ஆண்டு (ஹுதைபிய்யாவில்) தவறிப்போன உம்ராவை நிறைவேற்ற வேண்டியிருப்பதால், இடைப்பட்ட காலங்களில் (ஷஹீத்) வீரமரணம் அடைந்தவர்களைத் தவிர ஹுதைபிய்யாவில் கலந்து கொண்ட (ஒருவர்கூட பின்தங்கி விடாமல்) அனைவரும் புறப்பட வேண்டும்'' என நபி (ஸல்) அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள்.

நபியவர்களின் கட்டளைக்கிணங்க ஹுதைபிய்யாவில் கலந்து கொண்ட தோழர்கள் அனைவரும் உம்ராவை நிறைவேற்ற புறப்பட்டனர். இவர்களுடன் உம்ராவில் ஆர்வம் கொண்ட மற்றும் பலரும் புறப்பட்டனர். இவர்களில் பெண்கள், சிறுவர்கள் தவிர ஆண்கள் மட்டும் மொத்தம் இரண்டாயிரம் பேர் இருந்தனர்.'' (ஃபத்ஹுல் பாரி)

மதீனாவில் உவைஃப் இப்னு அழ்பத் அத்தய்லி அல்லது அபூ ருஹ்மும் அல்கிஃபாயை பிரதிநிதியாக நியமித்துவிட்டு குர்பானிக்காக அறுபது ஒட்டகங்களை ஓட்டிக்கொண்டு நபி (ஸல்) புறப்பட்டார்கள். இந்த ஒட்டகங்களுக்குப் பொறுப்பாளராக நாஜியா இப்னு ஜுன்துப் அஸ்லமியை நியமித்தார்கள். துல்ஹுலைபா வந்தவுடன் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்து கொண்டு தல்பியா கூறினார்கள். முஸ்லிம்களும் நபியவர்களைப் பின்பற்றி தல்பியா கூறலானார்கள். குறைஷிகள் மோசடி செய்யலாம் அல்லது ஒப்பந்தத்தை மீறலாம் என்ற அச்சத்தில் போர் வீரர்கள், ஆயுதங்கள் சகிதம் எதற்கும் ஆயத்தமாகவே நபி (ஸல்)

புறப்பட்டார்கள். ‘யஃஜுஜ்’ என்ற இடத்தை அடைந்தவுடன் தங்களிடமிருந்த ஈட்டிகள், அம்புகள், கேடயங்கள் அனைத்தையும் அங்கு வைத்துவிட்டு, அவற்றிற்கு அவ்ஸ் இப்னு கவ்லி அன்சாரியை 200 வீரர்களுடன் அதன் பாதுகாப்புக்கு நியமித்தார்கள். ஒரு பயணி வைத்திருக்கும் ஆயுதத்தை மட்டும் அதாவது, உறையிலிடப்பட்ட வாட்களை மட்டும் எடுத்துக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டார்கள். (ஃபத்ஹுல் பாரி, ஜாதுல் மஆது)

நபி (ஸல்) தனது கஸ்வா ஒட்டகத்தில் வாகனிக்க, முஸ்லிம்கள் நபியவர்களை சுற்றி படை சூழ வாளேந்தியவர்களாக தல்பியாவையும் முழங்கிக் கொண்டு மக்காவிற்குள் நுழைந்தார்கள். இணைவைப்பாளர்கள் கஅபாவின் வடப் பகுதியில் இருந்த ‘குஐகிஆன்’ என்ற மலையின் மீது ஏறி நின்று முஸ்லிம்களை வேடிக்கை பார்க்கலானார்கள். மதீனாவின் காய்ச்சலால் பாதிப்படைந்த ஒரு குழுவினர் இப்போது நம்மிடம் வர இருக்கின்றனர் என்று கிண்டலாக தங்களுக்குள் பேசிக் கொண்டனர். இதனைக் கேள்விப்பட்ட நபி (ஸல்) அவர்கள் தங்களது தோழர்களிடம் “வலது தோள்பட்டை வெளியில் தெரியும்படி இஹ்ராமுடைய ஆடையை அணிந்து கொள்ளுங்கள் தவாஃபுடைய முதல் மூன்று சுற்றுகளில் மட்டும் குதித்து ஓடுங்கள் ஆனால், இரண்டு ருகூன்களுக்கு மத்தியில் சாதாரணமாக நடந்துச் சுற்றுங்கள் மீதமுள்ள நான்கு சுற்றுகள் முழுவதும் சாதாரணமாக நடந்தே சுற்றுங்கள்!” எனக் கட்டளையிட்டார்கள். தங்களது தோழர்கள் மீதுள்ள கருணையினால் ஏழு சுற்றுகளிலும் தோள்களை உயர்த்தி ஓட வேண்டுமென்று நபி (ஸல்) கூறவில்லை. இணைவைப்பாளர்களுக்குத் தங்களது பலத்தைக் காட்டுவதற்காகவே நபி (ஸல்) இவ்வாறு கட்டளையிட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

ஹஜுனுக்கு அருகிலுள்ள மலைக் கணவாயின் வழியாக நபி (ஸல்) மக்காவுக்குள் நுழைந்தார்கள். இணைவைப்பாளர்கள் வரிசையாக நின்று கொண்டு நபியவர்களை வேடிக்கை பார்த்தனர். நபி (ஸல்) தல்பியா கூறிக்கொண்டே பள்ளிக்குள் நுழைந்து தனது தடியால் ஹஜ்ருல் அஸ்வத்தைத் தொட்டுவிட்டு தவாஃபைத் தொடங்க, முஸ்லிம்களும் தங்களது தவாஃபைத் தொடங்கினார்கள். அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) பின்வரும் கவிகளைப் பாடிக்கொண்டு வாளேந்தியவர்களாக நபியவர்களுக்கு முன் சென்று கொண்டிருந்தார்கள்.

“இறைமறுப்போரின் பிள்ளைகளே!அகன்றுபோய் வழிவிடுங்கள்!
இறைத்தூதரிடத்தில் நன்மைகள் அனைத்தும் இருக்கின்றன.
வழிவிடுங்கள்! திட்டவட்டமாக ரஹ்மான் அவன் தன் திருமறையில்...
தனது தூதருக்கு ஓதிக்காட்டப்படும் ஏடுகளில் இறக்கினான்.
இறைவா! அவர் கூற்றை ஏற்கிறேன்.
அவரை ஏற்பதில் உண்மைதனை நிச்சயம் நான் பார்க்கிறேன்.
வெட்டுவதில் சிறந்த வெட்டு இறைப்பாதையில் நிகழ்வதுதான்
இறைமறை கட்டளை, இன்று உங்களை வெட்டுவோம்
அது தலை தனி, முண்டம் தனி ஆக்கிடும் வெட்டு
அது நண்பனை விட்டு நண்பனைப் பிரித்திடும் வெட்டு.

உமர் (ரழி), “ஏ! ரவாஹாவின் மகனே! அல்லாஹ்வின் தூதருக்கு முன், அதுவும் அல்லாஹ்வின் புனிதப் பள்ளிக்குள் நீ கவிதை பாடுகிறாயா?” என்று அதட்டினார்கள். அதற்கு நபியவர்கள் “உமரே! அவரை விட்டுவிடுங்கள். அம்பால் எறிவதைவிட இந்தக் கவிதை குறைஷிகளுக்கு மிக விரைவாக ரோஷத்தை ஊட்டக் கூடியது” என்று கூறினார்கள். (ஜாமிவுத் திர்மிதி)

நபி (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் முதல் மூன்று சுற்றுகளை (முன் கூறியவாறு) ரமல் செய்தவர்களாகச் சுற்றினார்கள். இதை பார்த்து ஆச்சரியமடைந்த இணைவைப்பாளர்கள் “என்ன! மதீனாவின் காய்ச்சல் இவர்களை மிகப் பலவீனப்படுத்தி விட்டது என்றல்லவா

எண்ணியிருந்தோம். ஆனால், இவர்களோ இவ்வளவு வீரமுள்ளவர்களாக இருக்கிறார்களே'' என்று தங்களுக்குள் பேசிக் கொண்டனர். (ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்கள் முதலில் தவாஃபை முடித்தார்கள். அதற்குப் பின் 'ஸஃபா, மர்வா' என்ற இரு மலைகளுக்கு மத்தியில் 'ஸயீ“'' செய்தார்கள். அதற்குப் பின் மர்வா மலைக்கு வந்தார்கள். அங்குதான் நபியவர்களின் ஒட்டகங்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. நபியவர்கள் ''இந்த இடத்திலும் குர்பானி பிராணியை அறுக்கலாம். மக்காவின் அனைத்து தெருக்களிலும் குர்பானி பிராணியை அறுக்கலாம்'' என்று அனுமதி வழங்கிவிட்டு, தங்களது குர்பானியை மர்வாவில் வைத்து அறுத்தார்கள். அதற்குப் பின் தங்களது தலைமுடியை சிரைத்து (மொட்டை அடித்து)க் கொண்டார்கள். நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றி முஸ்லிம்களும் அவ்வாறே செய்தார்கள். உம்ராவை முடித்த தோழர்களில் சிலரை ஆயுதங்களை வைத்துவிட்டு வந்த 'யஃஜுஜ்' என்ற இடத்திற்கு அனுப்பிவிட்டு, அங்கிருந்தவர்களை மக்கா வந்து உம்ராவை நிறைவேற்ற அழைத்தார்கள். நபியவர்களின் சொல்லுக்கிணங்க இக்கூட்டத்தினர் அங்குச் சென்று ஆயுதங்களைப் பாதுகாப்பதில் ஈடுபட, அங்கிருந்தவர்கள் மக்கா வந்து உம்ரா செய்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மக்காவில் மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். குறைஷிகள் நான்காவது நாள் காலையில் அலீயிடம் வந்து, ''தவணை முடிந்துவிட்டது. உமது தோழரை வெளியேறும்படி சொல்'' என்று கூறினர். நபியவர்கள் மக்காவிலிருந்து வெளியேறி 'ஸஃப்' என்ற இடத்தில் தங்கினார்கள்.

நபியவர்கள் மக்காவிலிருந்து வெளியேறிய போது ஹம்ஜா (ரழி) அவர்களின் மகளார், ''எனது சிறிய தந்தையே! எனது சிறிய தந்தையே!'' என கூவிக்கொண்டு நபியவர்களை நோக்கி ஓடிவந்தார்கள். அவரை அலீ (ரழி) தூக்கி அணைத்துக் கொண்டார்கள். அவரை வளர்ப்பதற்காக அலீ, ஜஅஃபர், ஸைது (ரழி) மூவரும் தங்களுக்குள் போட்டியிட்டுக் கொண்டனர். ஆனால், நபியவர்கள் அச்சிறுமியை வளர்க்கும் உரிமையை ஜஅஃபருக்குக் கொடுத்தார்கள். காரணம், இச்சிறுமியின் தாயின் சகோதரியைத்தான் ஜஅஃபர் (ரழி) மணம் முடித்திருந்தார்கள்.

இப்பயணத்தில் நபியவர்கள் மைமூனா பின்த் அல்ஹாரிஸ் அல்ஆமிரியாவைத் திருமணம் செய்தார்கள். நபியவர்கள் மக்கா நுழையும் முன்பே இது விஷயமாக ஜஅஃபர் இப்னு அபூதாலிபை மைமூனாவிடம் அனுப்பி வைத்தார்கள். மைமூனா (ரழி) இந்த உரிமையைத் தனது சகோதரியின் (உம்முல் ஃபழ்லின்) கணவர் அப்பாஸ் (ரழி) அவர்களிடம் ஒப்படைத்தார்கள்.

அப்பாஸ் (ரழி) நபியவர்களின் விருப்பத்தை ஏற்று அவர்களுக்கு மைமூனாவை மணம் முடித்து வைத்தார்கள். நபியவர்கள் உம்ராவை முடித்துவிட்டு மக்காவிலிருந்து வெளியேறியபோது மைமூனாவை அழைத்து வருவதற்காக அபூராஃபியை விட்டு வந்தார்கள். நபி (ஸல்) ஸஃபில் தங்கியிருந்தபோது அபூராபிஃ, மைமூனாவை அழைத்துக் கொண்டு அங்கு வந்து சேர்ந்தார்கள். (ஜாதுல் மஆது)

இந்த உம்ராவிற்கு 'உம்ரத்துல் கழா' என்று கூறப்படுவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று, சென்ற ஆண்டு உம்ராவை நிறைவேற்ற முடியாமல் போனதற்குப் பகரமாக இந்த ஆண்டு நிறைவேற்றப்பட்டதால் இப்பெயர் வந்தது. இரண்டாவது, ஹுதைபிய்யாவின் போது செய்யப்பட்ட ஒப்பந்தத்திற்கு ஏற்ப இந்த உம்ரா அமைந்திருந்ததால் இந்தப் பெயர் வந்தது.

மார்க்க அறிஞர்கள் இரண்டாவது காரணமே மிக ஏற்றமானது எனக் கூறுகின்றனர். (ஜாதுல் மஆது, ஃபத்ஹுல் பாரி)

இந்த உம்ராவிற்கு வரலாற்றில் நான்கு பெயர்கள் கூறப்படுகின்றன. 1) உம்ரத்துல் கழா, 2) உம்ரத்துல் கழிய்யா, 3) உம்ரத்துல் கிஸாஸ், 4) உம்ரத்துல் சுல்ஹ். (ஜாதுல் மஆது, ஃபத்ஹுல் பாரி)

இந்த உம்ராவிலிருந்து மதீனாவிற்குத் திரும்பியதற்குப் பின் நபி (ஸல்) பல சிறிய படைகளை அனுப்பி வைத்தார்கள். அதன் விவரங்கள் வருமாறு:

1) இப்னு அபுல் அவ்ஜா படைப் பிரிவு: ஹிஜ்ரி 7, துல்ஹஜ் மாதத்தில் 50 வீரர்களுடன் இவரை இஸ்லாமிய அழைப்பு விடுப்பதற்காக சுலைம் கிளையினரிடம் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இவர்கள் சுலைமனரிடம் சென்று, அவர்களை இஸ்லாமின் பக்கம் அழைத்தபோது "உங்களது அழைப்பை ஏற்றுக் கொள்ள வேண்டிய எந்தத் தேவையும் எங்களுக்கு இல்லை" என்று அவர்கள் மறுத்து விட்டனர். அதனால், இரு சாராருக்குமிடையில் கடுமையான சண்டை நடைபெற்றது. அதில் அபூஅவ்ஜா (ரழி) காயமடைந்தார். இரண்டு எதிரிகள் முஸ்லிம்களால் சிறைபிடிக்கப்பட்டனர்.

2) காலிபு இப்னு அப்துல்லாஹ் படைப் பிரிவு: 'ஃபதக்' என்ற இடத்திற்கு அனுப்பப்பட்ட பஷீர் இப்னு ஸஅது அன்சாரியின் தோழர்கள் கொல்லப்பட்டனர் அல்லவா, அதற்குப் பழிக்குப் பழி வாங்குவதற்காக 200 வீரர்களை காலிபு இப்னு அப்துல்லாஹ் (ரழி) தலைமையில் ஹிஜ்ரி 8, ஸஃபர் மாதத்தில் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இவர்கள் அங்கு சென்று ஏராளமானவர்களை கொன்றுவிட்டு அதிகமான கால்நடைகளை ஓட்டி வந்தனர்.

3) கஅபு இப்னு உமைர் அன்சாரி படைப் பிரிவு: ஹிஜ்ரி 7, ரபீஉல் அவ்வல் மாதத்தில் இப்படை அனுப்பப்பட்டது. குழாஆ கிளையினர் முஸ்லிம்கள் மீது தாக்குதல் நடத்த பெருமளவில் கூட்டங்களைச் சேர்க்கின்றனர் என்ற தகவல் நபி (ஸல்) அவர்களுக்குக் கிடைத்தது. அதனால் கஅபு இப்னு உமைர் அல்அன்சாரியின் தலைமையில் பதினைந்து தோழர்களை நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இவர்கள் எதிரிகளைச் சந்தித்து அவர்களை இஸ்லாமின் பக்கம் அழைத்தனர். ஆனால், அவர்கள் ஏற்க மறுத்து முஸ்லிம்களை நோக்கி அம்பெறிந்தனர். இதில் அனைத்து முஸ்லிம்களும் கொல்லப்பட்டு விட்டனர். ஒருவர் மட்டும் பலத்த காயங்களுடன் உயிர் தப்பினார். (ரஹ்மத்துல் லில் ஆலமீன்)

4) ஷுஜா இப்னு வஹபு அல்அசதி படைப் பிரிவு: 'ஹவாஸின்' என்ற கிளையினர் முஸ்லிம்களின் எதிரிகளுக்குப் பலமுறை உதவி செய்து வந்தனர். இதனால் அவர்களைக் கண்டிப்பதற்காக ஹிஜ்ரி 8, ரபீஉல் அவ்வல் மாதம், 25 வீரர்களுடன் ஷுஜா இப்னு வஹப் என்ற தோழரை 'தாத் இர்க்' என்ற இடத்திற்கு நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். முஸ்லிம்கள் எதிரிகளின் ஏராளமான கால்நடைகளை ஓட்டிக் கொண்டு மதீனா வந்து சேர்ந்தனர். அங்கு சண்டை ஏதும் நடக்கவில்லை. (ரஹ்மத்துல்லில் ஆலமீன்)

## முஃதா யுத்தம்

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் முஸ்லிம்கள் சந்தித்த மிகப் பயங்கரமான போர் இதுவேயாகும். கிறிஸ்துவ நாடுகளையும் நகரங்களையும் முஸ்லிம்கள் வெற்றி கொள்ள இது ஒரு தொடக்கமாக அமைந்தது. இப்போர் ஹிஜ்ரி 8, ஜுமாதா அல்ஊலா, கி.பி. 629 ஆகஸ்ட் அல்லது செப்டம்பரில் நடைபெற்றது.

"முஃதா' என்பது ஷாம் நாட்டின் பல்கா மாநிலத்தின் கீழ் பகுதியிலுள்ள ஓர் ஊர். இங்கிருந்து பைத்துல் முகத்தஸ், இரண்டு நாட்கள் நடக்கும் தொலைதூரத்தில் உள்ளது.

**யுத்தத்திற்கான காரணம்**

நபி (ஸல்) அவர்கள் புஸ்ராவின் மன்னருக்குக் கடிதம் ஒன்றை எழுதி அல்ஹாரிஸ் இப்னு உமைர் அல்அஸ்தி (ரழி) அவர்களிடம் கொடுத்தனுப்பினார்கள். ஆனால், போகும் வழியில் பல்கா மாநிலத்தின் கவர்னராக இருந்த ஷுரஹ்பீல் இப்னு அம்ரு அல்கஸ்ஸானி என்பவன் அவரைக் கைது செய்து கொன்று விட்டான்.

தூதர்களைக் கொலை செய்வது அரசியல் குற்றங்களில் மிகக் கடுமையானதாகும். பகிரங்க மாகப் போருக்கு அழைப்பு விடுப்பதைவிட தூதரைக் கொலை செய்வது மிகக் கொடிய ஒன்றாக கருதப்பட்டது. தனது தூதர் கொல்லப்பட்ட செய்தியை அறிந்தவுடன் நபி (ஸல்) பெரும் கவலைக் குள்ளானார்கள். 3000 வீரர்கள் கொண்ட பெரும் படை ஒன்றைத் தயார் செய்து அவர்களிடம் சண்டையிட அனுப்பி வைத்தார்கள். (ஜாதுல் மஆது, ஃபத்ஹுல் பாரி)

அஹ்ஸாப் போரைத் தவிர வேறு எந்தப் போரிலும் முஸ்லிம் வீரர்களின் எண்ணிக்கை இந்தளவு அதிகம் இருந்ததில்லை.

**படைத் தளபதிகள்**

நபி (ஸல்) அவர்கள் இப்படைக்கு முதலாவதாக ஜைது இப்னு ஹாஸாவை (ரழி) தளபதியாக ஆக்கிவிட்டு "ஜைது கொல்லப்பட்டால் ஜஅஃபர் தளபதியாக இருப்பார் ஜாஃபரும் கொல்லப் பட்டால் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா தளபதியாக இருப்பார்" என்று கூறி வெள்ளை நிறக் கொடியை ஜைது இப்னு ஹாஸா (ரழி) கையில் கொடுத்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

**நபியவர்களின் அறிவுரை**

பின்பு நபி (ஸல்) அவர்கள் தோழர்களுக்கு வழங்கிய அறிவுரையாவது: நீங்கள் அல்ஹாரிஸ் இப்னு உமைர் கொல்லப்பட்ட இடத்திற்குச் சென்று அங்குள்ளவர்களை இஸ்லாமின் பக்கம் அழையுங்கள். அவர்கள் ஏற்றுக் கொண்டால் நல்லது. ஏற்காவிட்டால் அவர்களுக்கெதிராக அல்லாஹ்விடம் உதவி தேடி அவர்களுடன் போர் செய்யுங்கள். அல்லாஹ்வின் பாதையில் அல்லாஹ்வின் பெயர் கூறி அல்லாஹ்வை நிராகரித்தவர்களுடன் நீங்கள் போர் புரியுங்கள். மோசடி செய்யாதீர்கள், பதுக்காதீர்கள், குழந்தை, பெண், வயது முதிர்ந்தவர், சர்ச்சுகளில் இருக்கும் சன்னியாசிகள் ஆகியோரைக் கொல்லாதீர்கள். பேரீத்த மரங்கள் மட்டுமல்ல, வேறு எந்த மரங்களையும் வெட்டாதீர்கள் கட்டடங்களை இடிக்காதீர்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸுனன் அபூதாவூது, ஸுனனத் திர்மிதி, இப்னு மாஜா)

**படையை வழியனுப்புதல், அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) அழுதல்**

இஸ்லாமியப் படை புறப்படத் தயாரானபோது அவர்களை வழியனுப்புவதற்காக மக்களெல்லாம் ஒன்று கூடினர். படைக்கும் அதன் தளபதிகளுக்கும் பிரியா விடை கொடுத்து ஸலாம் கூறினர். தளபதிகளில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) அழலானார். "மக்கள் ஏன் அழுகிறீர்?" என்று கேட்க, "எனக்கு உலகத்தின் மீதுள்ள ஆசையினாலோ அல்லது உங்கள் மீதுள்ள பாசத்தினாலோ நான் அழவில்லை. எனினும், நரகத்தைப் பற்றி அல்லாஹ் குறிப்பிடும் ஒரு குர்ஆன் வசனத்தை நபி (ஸல்) ஓத, நான் கேட்டிருக்கின்றேன். அந்த வசனமாவது:

அதனைக் கடக்காது உங்களில் எவருமே தப்பிவிட முடியாது. இது உங்களது இறைவனிடம் முடிவு கட்டப்பட்ட மாற்ற முடியாத தீர்மானமாகும். (அல்குர்ஆன் 19:71)

அந்தப் பாலத்தை கடக்கும் போது எனது நிலைமை என்னவாகுமோ என்று எனக்குத் தெரியவில்லையே!'' என்று அப்துல்லாஹ் (ரழி) பதில் கூறினார். ''அல்லாஹ் உங்களைப் பாதுகாப்பானாக! அல்லாஹ் அவனது அருளுடன் உங்களுக்குத் துணையாவானாக! வெற்றி பெற்று நல்ல நிலையில் அல்லாஹ் உங்களை எங்களிடம் திரும்பக் கொண்டு வருவானாக!'' என்று வாழ்த்துகள் கூறி மக்கள் அவர்களை வழி அனுப்பி வைத்தார்கள். அதற்கு அப்துல்லாஹ் (ரழி) கூறிய பதிலாவது:

மன்னிப்பு,நுரை தள்ளும் பலத்த அடி
அல்லது இரத்தவெறி கொண்ட
ஒருத்தனின் கையால் குடல்களையும் ஈரலையும்
ஊடுருவிச் செல்லும் குறு ஈட்டியால்
நான் குத்தப்பட ரஹ்மானிடம் கேட்கிறேன்.
என் மண்ணறையருகே நடப்போர்,
''அல்லாஹ் நேர்வழி காட்டிய வீரரே!
நேர்வழி பெற்றவரே!' என்று சொல்ல வேண்டும்.

பின்பு நபியவர்களும் மக்களும் 'ஸனியத்துல் விதா' என்ற இடம்வரை சென்று படையை வழியனுப்பி விட்டு இல்லம் திரும்பினார்கள். (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**இஸ்லாமியப் படை புறப்படுதலும் திடுக்கமான சூழ்நிலையும்**

ஜாஸின் வடப்புறமாக ஷாம் நாட்டை நோக்கி இஸ்லாமியப் படை புறப்பட்டு 'மஆன்' என்ற இடத்தை அடைந்தது. ''பல்கா மாநிலத்தின் 'மாப்' என்ற இடத்தில் ஹிர்கல் ஒரு லட்சம் ரோம் நாட்டு வீரர்களுடன் வந்திருக்கின்றான் லக்ம், ஜுதாம், பல்கய்ன், பஹ்ரா, பலிய் ஆகிய கோத்திரத்தாலிருந்து மேலும் ஒரு லட்சம் வீரர்கள் ரோமர்களுடன் இணைந்து கொண்டார்கள் என்ற ஓர் அதிர்ச்சி தரும் செய்தியை இஸ்லாமியப் படையின் ஒற்றர்கள் அறிந்து வந்தனர்.

**ஆலோசனை சபை**

இதுபோன்ற பெரும் படையைச் சந்திக்க நேரிடும் என்று முஸ்லிம்கள் ஒருக்காலும் எண்ணவில்லை. 3000 பேர் கொண்ட ஒரு படை இரண்டு இலட்சம் வீரர்கள் கொண்ட படையை எதிர்ப்பது என்பது சாதாரண விஷயமா? முஸ்லிம்கள் திகைத்து பயணத்தைத் தொடரலாமா? வேண்டாமா? என்று எண்ணி நின்றுவிட்டனர். இப்போது என்ன செய்யலாம்? நபி (ஸல்) அவர்களுக்கு கடிதம் எழுதுவோம் நமது எதிரிகளின் எண்ணிக்கையைப் பற்றி அவர்களுக்கு அறிவிப்போம் அவர்கள் நமக்கு உதவ மேலும் பல வீரர்களை அனுப்பலாம் அல்லது வேறு யோசனைக் கூறலாம் நாம் அதற்கேற்ப நடந்து கொள்ளலாம் என்று ஆலோசனை செய்தனர். இதே நிலைமையில் இரண்டு நாட்கள் கடந்தன.

ஆனால், அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) இந்த யோசனைக்கு மறுப்புத் தெரிவித்து மக்களுக்கு வீரமூட்டி உரையாற்றினார்: ''எனது கூட்டத்தினரே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் இப்போது வெறுக்கும் வீரமரணத்தைத் தேடித்தானே மதீனாவிலிருந்து புறப்பட்டீர்கள். நாம் எதிரிகளிடம் போரிடுகிறோம். நமது ஆயுதங்களைக் கொண்டா? அல்லது ஆற்றலைக் கொண்டா? அல்லது எண்ணிக்கையைக் கொண்டா? இவற்றில் எதுவுமில்லை. பின்னர் ஏன் எண்ணிக்கையை வைத்து யோசிக்க வேண்டும். அல்லாஹ் நமக்கு எந்த மார்க்கத்தின் மூலம் கண்ணியம் வழங்கியிருக்கின்றானோ அந்த மார்க்கத்திற்காகவே நாம் அவர்களிடம் போர் புரிகின்றோம். எனவே, தயக்கம் வேண்டாம் புறப்படுங்கள்! இரண்டு பாக்கியங்களில் ஒன்று நிச்சயம் உண்டு. ஒன்று வெற்றி அல்லது வீரமரணம்.''

இப்னு ரவாஹாவின் இந்த வீர உரையை கேட்ட மக்கள் ரோமர்களை எதிர்த்து போரிட முடிவு செய்தனர்.

**எதிரியைக் களம் காண இஸ்லாமியப் படை புறப்படுகிறது**

'மஆன்' என்ற இடத்தில் இரண்டு நாட்கள் கழித்த பின் முஸ்லிம்கள் எதிரிகளின் நாட்டை நோக்கிப் புறப்பட்டனர். இறுதியாக, பல்காவின் கிராமங்களில் ஒன்றான 'மஷாஃப்' என்ற இடத்தில் இரு படைகளும் சந்தித்தன. எதிரிகள் நெருங்கி வர முஸ்லிம்கள் சற்று பின்வாங்கி 'முஃதா' என்ற இடம் வந்து அங்கு தங்களது முகாம்களை அமைத்துக் கொண்டனர். அங்கிருந்து போருக்கான தயாரிப்புகளை செய்யத் தொடங்கினர். முஸ்லிம்கள், படையின் வலப்பக்கத்திற்கு குத்பா இப்னு கதாதாவை தளபதியாகவும், இடப்பக்கத்திற்கு உபாதா இப்னு மாலிக்கை தளபதியாகவும் ஆக்கினர்.

**யுத்தத்தின் ஆரம்பம்**

'முஃதா' என்ற இடத்தில் இரு படைகளும் சண்டையிட்டன. மூவாயிரம் பேர் இரண்டு லட்சம் வீரர்களுக்குச் சமமாக சண்டையில் ஈடுபட்டனர். என்ன ஆச்சரியம்! உலகமே திகைப்புடன் பார்க்க ஆரம்பித்தது. ஆம்! ஈமானியப் புயல் வீச ஆரம்பித்தால் இப்படித்தான் ஆச்சரியங்கள் நடக்கும்.

நபியவர்களின் விருப்பத்திற்குரிய தோழரான ஜைது (ரழி) முதலில் கொடியை ஏந்தி கடுமையான யுத்தம் புரிந்தார். அவர் அன்று காட்டிய வீரத்திற்கு என்ன உதாரணம் சொல்ல முடியும்! அவரைப் போன்ற இஸ்லாமிய வீரனிடமே தவிர வேறு எங்கும் அந்த வீரதீரத்தைப் பார்க்க முடியாது. இறுதியில் எதிரிகளின் ஈட்டிக்கு இரையாகி வீரமரணம் எய்தினார்.

அடுத்து இஸ்லாமியப் படையின் கொடியை ஜஅஃபர் (ரழி) கையில் எடுத்துக் கொண்டு மின்னலாகப் போர் புரிந்தார். போர் உச்சக்கட்டத்தை அடைந்தவுடன் தனது 'ஷக்ரா' என்ற குதிரையிலிருந்து கீழே இறங்கி, அதை வெட்டி வீழ்த்திவிட்டு, படைக்குள் புகுந்து எதிரிகளின் தலைகளை வாளால் சீவலானார். அவரது வலது கை வெட்டப்பட்டு விட்டது. கொடியை இடது கையில் பிடித்தார். இடது கையும் வெட்டப்படவே புஜத்தால் பிடித்தார். பின்பு எதிரி ஒருவனால் கொல்லப்பட்டு வீரமரணம் எய்தினார். அவரை ரோமைச் சேர்ந்த எதிரி ஒருவன் இரண்டாக பிளந்து விட்டான் என்று வரலாற்றில் கூறப்படுகிறது.

அல்லாஹ் அவர்களுக்கு வெட்டப்பட்ட இரு கரங்களுக்குப் பகரமாக சுவனத்தில் இரண்டு இறக்கைகளை வழங்கினான். அதன் மூலமாக அவர்கள் தாங்கள் நாடிய இடமெல்லாம் சுற்றித் திரிகிறார்கள். இதனை முன்னிட்டே இவர்களுக்கு 'ஜஅஃபர் அத்தய்யார்' (பறக்கும் ஜஅஃபர்), 'ஜஅஃபர் துல்ஜனாஹைன்' (இரு இறக்கைகளை உடைய ஜஅஃபர்) என்றும் கூறப்படுகிறது.

இப்னு உமர் (ரழி) அறிவிக்கிறார்கள்: "வெட்டப்பட்டுக் கிடந்த ஜஅஃபரை நான் பார்த்தேன். அவரது உடம்பில் ஈட்டி மற்றும் வாளின் 50 காயங்கள் இருக்கக் கண்டேன். அதில் எந்தக் காயமும் உடம்பின் பிற்பகுதியில் இல்லை." (ஸஹீஹுல் புகாரி)

மற்றொரு அறிவிப்பில் இப்னு உமர் (ரழி) கூறியதாக வருவதாவது: "நானும் 'முஃதா' போரில் கலந்து கொண்டேன். போர் முடிந்த பிறகு ஜஅஃபர் இப்னு அபீதாலிப் (ரழி) அவர்களின் உடலைத் தேடினோம். அப்போது கொல்லப்பட்டவர்களில் இருந்த அவர் உடலில் 90க்கும் மேற்பட்ட அம்பு மற்றும் ஈட்டிகளின் காயங்கள் இருந்தன." மற்றொரு வழியாக வரும் இதே அறிவிப்பில் "அந்த அனைத்துக் காயங்களும் அவரது உடலின் முன்பகுதியில்தான் இருந்தன" என்று வந்துள்ளது. (ஸஹீஹுல் புகாரி)

இவ்வளவு வீரமாக போர் புரிந்து இறுதியில் ஜஅஃபர் (ரழி) வீர மரணமடைந்த பின்னர் கொடியை அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) ஏந்தினார். தனது குதிரையின் மீதிருந்து போர்க் களத்தை நோக்கி முன்னேறிய அவர் சிறிது தாமதிக்கலானார். அதற்குப் பின்,

“சத்தியமாக என் உயிரே! விருப்போ வெறுப்போ
போரில் நீ குதித்தே ஆக வேண்டும்!
மக்கள் போருக்கு ஆயத்தமாகி ஈட்டிகளை
ஏந்தி நிற்கும் போது சுவனத்தை நீ வெறுப்பவனாக
உன்னை நான் காணுவதேன்?”

இக்கவிதையை பாடிவிட்டு குதிரையிலிருந்து கீழிறங்கி, போர்க்களத்தை நோக்கி ஓடிய போது அவரது ஒன்றுவிட்ட சகோதரர் ஓர் இறைச்சித் துண்டை கொண்டு வந்து, “இதன்மூலம் உங்களது முதுகிற்கு வலுசேர்த்துக் கொள்ளுங்கள் இந்நாட்களில் நீங்கள் மிகுந்த சிரமத்திற்கு ஆளாகி விட்டீர்” என்று கூறினார். அவரது கையிலிருந்த இறைச்சித் துண்டை வாங்கி ஒரு கடி கடித்துவிட்டு மீதமுள்ளதை வீசி எறிந்து விட்டார். பின்பு தனது வாளை உருவிக் கொண்டு போர்க்களத்தில் குதித்தவர் இறுதிவரை போரிட்டு வீரமரணமடைந்தார்.

**அல்லாஹ்வின் வாள் கொடியை ஏந்தியது**

அப்துல்லாஹ் (ரழி) வீரமரணமடைந்து கீழே விழும் நேரத்தில் அஜ்லான் கிளையைச் சேர்ந்த ஸாபித் இப்னு அக்ரம் (ரழி) என்ற வீரர் கொடியை ஏந்திக் கொண்டு “முஸ்லிம்களே! உங்களில் ஒருவரை உடனே தலைவராகத் தேர்ந்தெடுங்கள்” என்று கூறினார். மக்கள் “நீர்தான் அவர்” என்று கூறினர். அதற்கவர் “அது என்னால் முடியாது” என்று கூறிவிட்டார். மக்கள் காலித் இப்னு வலீத் (ரழி) அவர்களைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். கொடியைக் கையில் எடுத்த காலித் (ரழி) காஃபிர்களுக்கு எதிராகக் கடுமையானப் போரை நிகழ்த்தினார்.

காலித் (ரழி) கூறுகிறார்: “முஃதா போரின் போது எனது கையால் ஒன்பது வாட்கள் உடைந்தன. யமன் நாட்டில் செய்யப்பட்ட ஒரு பட்டை வாள் மட்டும் எனது கையில் நிலைத்திருந்தது. (ஸஹீஹுல் புகாரி)

முஃதா போர்க்களச் செய்திகளை அல்லாஹ் வஹியின் மூலமாக நபியவர்களுக்கு உடனுக்குடன் தெரிவித்தான். போரின் போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “முதலில் கொடியை ஜைது ஏந்தினார் அவர் கொல்லப்பட்டார் இரண்டாவதாக ஜஅஃபர் ஏந்தினார் அவரும் கொல்லப்பட்டார் மூன்றாவதாக அப்துல்லாஹ் இப்னு ரவாஹா ஏந்தினார் அவரும் கொல்லப்பட்டார் -இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கும் போது நபியவர்களின் கண்களிலிருந்து நீர் வழிந்தோடியது- இதற்குப் பின் கொடியை அல்லாஹ்வின் வாள்களில் ஒரு வாள் ஏந்தியது அல்லாஹ் அவர் மூலமாக முஸ்லிம்களுக்கு வெற்றியளித்தான்.” (ஸஹீஹுல் புகாரி)

**சண்டை ஓய்கிறது**

முஸ்லிம் வீரர்கள் தங்களது முழு வீரத்தையும், திறமையையும், துணிவையும் வெளிக் கொணர்ந்தாலும் கடல் போன்ற மிகப் பயங்கரமான எதிரிப் படைகளைச் சமாளிப்பது மிகச் சிரமமாகவே இருந்தது. இதையறிந்த காலித் இப்னு அல்வலீது (ரழி) முஸ்லிம்களை ஆபத்திலிருந்து தந்திரமாகப் பாதுகாக்க சரியான திட்டம் ஒன்றைத் தீட்டினார்.

போரின் முடிவைப் பற்றி பலவிதமான கருத்துகள் கூறப்படுகின்றன. அந்த அனைத்து அறிவிப்புகளையும் ஒன்று திரட்டி நாம் ஆய்வு செய்யும்போது நமக்குப் புலப்படுவதாவது: கொடியை ஏந்திய அன்றைய தினம் மாலை வரை ரோம் நாட்டுப் படைக்கு முன்பாக மிகத்

துணிச்சலாக காலித் (ரழி) எதிர்த்து நின்றார். முஸ்லிம்களைப் பாதுகாப்பதற்கு ஒரு போர் தந்திரத்தைக் கையாண்டார். அது ரோமர்களின் உள்ளங்களில் கடுமையான பயத்தை உண்டு பண்ணியது. அதாவது, முஸ்லிம்கள் பின்னோக்கிச் செல்லும்பொழுது ரோமர்கள் விரட்ட ஆரம்பித்தால் அவர்களிடமிருந்து தப்பிப்பதென்பது மிகக் கடினமே என காலித் (ரழி) நன்கு விளங்கியிருந்தார்.

எனவே, மறுநாள் படைக்கு முற்றிலும் ஒரு புதிய தோற்றத்தை உருவாக்கினார். படையின் முற்பகுதியை பிற்பகுதியாகவும், வலப்பக்கத்தில் உள்ளவர்களை இடப்பக்கத்திலும் மாற்றி அமைத்தார். மறுநாள் காலை போர் தொடங்கியபோது முஸ்லிம்களின் புதிய அமைப்பைப் பார்த்த எதிரிகள் தங்களுக்கு முன் நேற்று இல்லாத புதிய படை இருப்பதைப் பார்த்தவுடன் இவர்களுக்கு உதவிப்படை வந்திருக்கின்றது என்று கூற ஆரம்பித்தனர். சிறுகச் சிறுக அவர்களது உள்ளத்தை அச்சம் ஆட்கொண்டது.

சிறிது நேரம் இரு தரப்பினரும் சண்டையிட்டு கொண்டிருக்கும் போதே தனது படையில் எவ்வித மாற்றமும் ஏற்படாத அளவிற்கு முற்றிலும் பாதுகாப்புடன் படையை பின்னோக்கி அழைத்துச் சென்றார். முஸ்லிம்கள் ஏதோ சதி செய்ய நாடுகின்றனர் என்று எண்ணிய ரோம் வீரர்கள் முஸ்லிம்களைப் பின்தொடர்வதை விட்டுவிட்டு அவர்களும் பின்வாங்கினர். இவ்வாறு முஸ்லிம்களை விரட்டும் எண்ணத்தை கைவிட்டுவிட்டு தங்களது நாடுகளுக்கு எதிரிகள் திரும்பி விட்டனர். இவ்வாறு முஸ்லிம்கள் எவ்வித ஆபத்துமின்றி மதீனா வந்து சேர்ந்தனர். (ஃபத்ஹுல் பாரி, ஜாதுல் மஆது)

### இரு தரப்பிலும் கொல்லப்பட்டவர்கள்

12 முஸ்லிம்கள் இப்போரில் வீரமரணம் அடைந்தனர். ரோமர்களில் எத்தனை நபர்கள் கொல்லப்பட்டனர் என்ற விவரம் சரிவரத் தெரியவில்லை. இருந்தாலும் போரின் முழு விவரங்களை ஆய்வு செய்து பார்க்கும்போது அதிகமானவர்கள் கொல்லப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிகிறது.

### யுத்தத்தின் தாக்கம்

எந்தப் பழிவாங்கும் நோக்கத்துக்காக முஸ்லிம்கள் இவ்வளவு பெரிய சிரமங்களைச் சகித்தார்களோ! அந்த நோக்கத்தை முஸ்லிம்கள் இப்போரில் அடைந்து கொள்ளவில்லை என்றாலும், இப்போர் முஸ்லிம்களுக்குப் பெரும் புகழைத் தேடித் தந்தது. அரபியர்களின் உள்ளங்களில் முஸ்லிம்களைப் பற்றிய பெரும் அச்சத்தை ஏற்படுத்தியதுடன், அவர்களை வியப்பிலும் ஆழ்த்தியது. ரோமர்கள் அக்காலத்தில் பேராற்றல் மிக்கவர்களாக இருந்தனர். அவர்களை எதிர்ப்பது தற்கொலைக்குச் சமமானது என அரபிகள் எண்ணியிருந்தனர். 3000 பேர்கள் கொண்ட ஒரு சிறிய படை இரண்டு லட்சம் வீரர்கள் கொண்ட பெரும் படையுடன் மோதுவதும், பின்பு எந்த பெரிய சேதமும் இன்றி நாட்டுக்குத் திரும்புவதென்பதும் மகா ஆச்சரியமான விஷயமாக இருந்தது.

முஸ்லிம்கள் இதுவரை அரபியர்கள் பார்த்திராத ஓர் அமைப்பில் இருக்கின்றனர் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அவர்களுக்கு உதவி வழங்கப்படுகிறது அவர்களது தலைவர் உண்மையில் அல்லாஹ்வின் தூதரே என்பதற்கு இச்சம்பவம் மிகப்பெரிய சான்றாக அமைந்தது. எனவேதான், எப்போதும் முஸ்லிம்களுடன் வம்பு செய்து வந்த பெரும்பாலான அரபு கோத்திரத்தினர், இப்போருக்குப் பின் பணிந்து இஸ்லாமை ஏற்றுக் கொள்ள ஆரம்பித்தனர். சுலைம், அஷ்ஜஃ, கத்ஃபான், துப்யான், ஃபஜாரா ஆகிய கோத்திரங்களெல்லாம் இஸ்லாமைத் தழுவினர்.

பிற்காலத்தில் ரோமர்களுடன் முஸ்லிம்கள் செய்த போர்களின் தொடக்கமாக இப்போர் இருந்தது. முஸ்லிம்கள் ரோமர்களின் நகரங்களையும் தூரமான நாடுகளையும் வெற்றி கொள்வதற்கு முன்மாதிரியாக இப்போர் அமைந்தது.

**தாதுஸ்ஸலாசில் படைப் பிரிவு**

ஷாம் நாட்டின் மேற்புறங்களில் வசிக்கும் அரபியர்களின் நிலைப்பாட்டை நபி (ஸல்) அவர்கள் இப்போர் வாயிலாக நன்கு விளங்கிக் கொண்டார்கள். ஏனெனில், இவர்களெல்லாம் ரோமர்களுடன் சேர்ந்து கொண்டு இப்போரில் முஸ்லிம்களைத் தாக்கினர். எனவே, ரோமர்களை விட்டு இவர்களைப் பிரித்து முஸ்லிம்களோடு இணக்கமாக்க வேண்டும். அப்போதுதான் மற்றொரு முறை நம்மை எதிர்ப்பதற்கு இது போன்ற பெருங்கூட்டம் ஒன்று திரளாது என்று நபி (ஸல்) முடிவு செய்தார்கள்.

இத்திட்டத்தை நிறைவேற்றுவதற்கு நபி (ஸல்) அம்ரு இப்னு ஆஸைத் தேர்வு செய்தார்கள். ஏனெனில், இவரது தந்தையின் தாய் அப்பகுதியில் வசிக்கும் ‘பலிய்’ கிளையினரைச் சேர்ந்தவராவார். எனவே, அவர்களுடன் நட்பை ஏற்படுத்திக் கொள்ள இவரைத் தேர்ந்தெடுத்து முஃதா போர் முடிந்தவுடனேயே ஹிஜ்ரி 8, ஜுமாதல் ஆகிராவில் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இப்படை அனுப்பப்பட்டதற்கு மற்றொரு காரணமும் சொல்லப்படுகிறது. அதாவது: ‘குழாஆ’ கிளையினர் முஸ்லிம்களின் மீது தாக்குதல் நடத்த ஒன்று திரள்கின்றனர் என்ற செய்தி ஒற்றர்கள் மூலம் நபியவர்களுக்குத் தெரிய வர, அவர்களை எதிர்ப்பதற்காக இப்படையை நபி (ஸல்) அனுப்பினார்கள். ஒரு வேலை இரண்டு காரணங்களை முன்னிட்டும் நபியவர்கள் இப்படையை அனுப்பி இருக்கலாம்.

அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அவர்களுக்கு நபி (ஸல்) வெள்ளை நிறத்தில் ஒரு பெரிய கொடியையும், கருப்பு நிறத்தில் ஒரு சிறிய கொடியையும் வழங்கி 300 முக்கிய வீரர்களுடன் அனுப்பினார்கள். இரவில் பயணிப்பதும் பகலில் பதுங்குவதுமாக அப்படையினர் சென்றனர். எதிரி கூட்டத்தினர் தங்கியிருக்கும் இடத்தை நெருங்கிய போது, அங்கு மிக அதிகமான எண்ணிக்கையில் எதிரிகள் இருக்கிறார்கள் என்ற செய்தி அம்ருக்கு தெரிய வந்தது. உடனே அவர் ராஃபி இப்னு மக்கீஸ் என்பவரை நபியவர்களிடம் உதவி கேட்டு அனுப்பி வைத்தார். நபி (ஸல்) அபூ உபைதாவுக்கு ஒரு கொடியைக் கொடுத்து 200 தோழர்களுடன் அனுப்பினார்கள். இத்தோழர்களில் அபூபக்ர், உமர் (ரழி) மற்றும் முஹாஜிர், அன்சாரிகளில் கீர்த்திமிக்க தோழர்கள் இடம் பெற்றிருந்தனர். அம்ர் (ரழி) அவர்களுடன் அபூ உபைதா (ரழி) வந்து சேர்ந்து கொண்டார்கள். தொழுகை நேரம் வந்த போது அபூ உபைதா (ரழி) மக்களுக்குத் தொழ வைக்க நாடினார். “நான்தான் அமீர் (படைத் தலைவன். நானே தொழவைப்பேன்) நீர் எங்களுக்கு உதவிக்காகத்தான் வந்திருக்கின்றீர்” என்று அம்ரு (ரழி) கூற, இதை அபூ உபைதா (ரழி) ஏற்றுக் கொண்டார்கள். அதற்குப் பின் அம்ருதான் மக்களுக்குத் தொழுகை நடத்தி வந்தார்கள். அம்ரு (ரழி) படையை அழைத்துக் கொண்டு ‘குழாஆ’ கோத்திரத்தினர் வசிக்கும் பகுதி அனைத்தையும் சுற்றினார்கள்.

இறுதியில், முஸ்லிம்களை எதிர்க்கத் தயாராக இருந்த எதிரிகளின் ஒரு கூட்டத்தினரைக் கண்ட போது அவர்கள் மீது தாக்குதல் நடத்தி நாலாபுறமும் அவர்களைச் சிதறடித்தனர்.

எடுத்துக் கொண்ட பணியை வெற்றிகரமாக முடித்து திரும்பிக் கொண்டிருக்கிறோம் என்ற மகிழ்ச்சியான செய்தியையும் மற்றும் போர்க்கள தகவல்களையும் நபி (ஸல்) அவர்களிடம் கூறும்படி அவ்ஃப் இப்னு மாலிக் அஷ்ஜம்யை அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அனுப்பினார்கள்.

‘தாத்துஸ் ஸலாசில்’ என்பது ‘வாதில் குரா’ என்ற பகுதிக்குப் பின்னுள்ள இடமாகும். அதற்கும் மதீனாவுக்கும் மத்தியில் பத்து நாட்கள் நடை தூரம் உள்ளது.

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுவதாவது: ஜூதாம் கோத்திரத்தினர் வசிக்கும் இடத்திலுள்ள ஒரு கிணற்றருகில் முஸ்லிம்கள் தங்கினர். அக்கிணற்றின் பெயர் ‘ஸல்ஸல்’ என்பதால் இப்படைக்கு பெயர் ‘தாத்துஸ் ஸலாசில்’ என வந்தது. (இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது)

**அபூகதாதா படைப் பிரிவு**

கத்ஃபான் கிளையினர் ‘கழீரா’ என்ற இடத்தில் ஒன்றுகூடி மதீனாவின் மீது தாக்குதல் நடத்துவதற்காக திட்டமிடுகின்றனர் என்ற தகவல் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. ‘கழீரா’ என்பது நஜ்து மாநிலத்தில் ‘முஹாப்’ கோத்திரத்தினர் வசிக்கும் இடம். எனவே, நபி (ஸல்) அவர்கள் 15 வீரர்களுடன் அபூ கதாதாவை அனுப்பி வைத்தார்கள். அங்கு சென்ற அபூகதாதா (ரழி) பல எதிரிகளைக் கொன்று விட்டு சிலரைச் சிறைபிடித்து, கனீமா பொருட்களுடன் மதீனா திரும்பினார்கள். மொத்தம் 15 நாட்கள் இவர்கள் மதீனாவை விட்டு வெளியே இருந்தனர். (தல்கீஹ்)

## மக்காவை வெற்றி கொள்வது

அறிஞர் இப்னுல் கைய்” (ரஹ்) கூறுகிறார்: மக்காவின் வெற்றிதான் மிக மகத்தான வெற்றி. இதன் மூலம் அல்லாஹ் அவனது மார்க்கத்திற்கும், தூதருக்கும், நம்பிக்கைக்குரிய அவனது கூட்டத்தினருக்கும், படையினருக்கும் கண்ணியத்தை வழங்கினான். மேலும், தனது ஊரையும் மக்களின் நேர்வழிக்குக் காரணமாகிய தன் வீட்டையும் முஷ்ரிக்குகள் மற்றும் காஃபிர்களின் கையிலிருந்தும் காப்பாற்றினான். இவ்வெற்றியினால் வானத்தில் உள்ளவர்களும் மகிழ்ச்சி அடைந்தனர். அதுமட்டுமா? மக்களெல்லாம் கூட்டம் கூட்டமாக அல்லாஹ்வின் மார்க்கத்தில் இணைந்தனர். பூமியாவும் இவ்வெற்றியால் பிரகாசமடைந்தது. (ஜாதுல் மஆது)

**உடன்படிக்கையை மீறுதல்**

ஹுதைபிய்யாவில் நடைபெற்ற ஒப்பந்தங்களில் ஒன்று: “நபியவர்களுடன் சேர விரும்பியவர்கள் நபியவர்களுடன் சேர்ந்து கொள்ளலாம் குறைஷிகளுடன் சேர விரும்பியவர்கள் குறைஷிகளுடன் சேர்ந்து கொள்ளலாம். யார் எந்த கூட்டத்தினருடன் சேருகிறார்களோ, அவர் அந்தக் கூட்டத்தினல் ஒருவராகக் கணிக்கப்படுவார். அவர் மீது யாராவது அத்துமீறினால் அது அந்தக் கூட்டத்தினர் மீதே அத்துமீறியதாகும்.” இந்த விவரத்தை இதற்கு முன்பே நாம் கூறியிருக்கிறோம்.

இந்த ஒப்பந்தத்திற்கு ஏற்ப குஜாஆ கோத்திரத்தினர் நபியவர்களுடன் சேர்ந்து கொண்டனர். பக்ர் கோத்திரத்தினர் குறைஷிகளுடன் சேர்ந்து கொண்டனர். அறியாமைக் காலத்திலிருந்தே பரம்பரை பரம்பரையாக இவ்விரு கோத்திரத்தினரும் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். இஸ்லாம் வந்து, இந்த உடன்படிக்கை ஏற்பட்டதற்குப் பின் இரு சாராரும் தங்களுக்குள் சண்டையிடுவதை நிறுத்திக் கொண்டனர்.

சில காலங்கள் இவ்வாறு கழிய, இந்தச் சந்தர்ப்பத்தைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்ட பக்ர் கிளையினர் குஜாஆ கோத்திரத்தாரிடமிருந்து தங்களது பழைய பகைமைக்குப் பழி தீர்த்துக் கொள்ள விரும்பினர்.

ஹிஜ்ரி 8, ஷஅபான் மாதம் பக்ர் கோத்திரத்தினரின் ஒரு கூட்டத்தினரை அழைத்துக் கொண்டு ‘நவ்ஃபல் இப்னு முஆவியா அத்தியலி’ என்பவன் புறப்பட்டான். அன்று குஜாஆ கிளையினர் ‘அல்வத்தீர்’ என்ற கிணற்றுக்கருகில் ஒன்றுகூடியிருந்தனர். நவ்ஃபல், தான் அழைத்து வந்தவர்களைச் சேர்த்துக் கொண்டு குஜாஆவினரைத் தாக்கினான். குஜாஆ கிளையினரில் சிலர் கொல்லப்பட்டனர். எஞ்சியுள்ளவர்களுடன் கடுமையான சண்டை நடந்தது. குறைஷிகள் பக்ரு கிளையினருக்கு ஆயுதங்கள் கொடுத்து உதவியதுடன்,

அவர்களில் சிலரும் இரவின் இருளை பயன்படுத்திக் கொண்டு குஜாஆவினரைத் தாக்கினர்.

சண்டைசெய்து கொண்டே குஜாஆ கோத்திரத்தினர் ஹரம் எல்லைக்குள் நுழைந்து விட்டனர். அப்போது பக்ர் கிளையினர் “நவ்ஃபலே! நாம் நிறுத்திக் கொள்வோம். நாம் ஹரம் எல்லைக்குள் நுழைந்து விட்டோம். உமது இறைவனைப் பயந்துகொள்! உமது இறைவனை பயந்துகொள்!” என்று கூறினர். ஆனால், சதிகாரன் நவ்ஃபல் மிகக் கடுமையான வார்த்தையைக் கூறினான். “பக்ர் இனத்தாரே! இன்றைய தினம் எந்த இறைவனும் இல்லை. உங்களது பழியைத் தீர்த்துக் கொள்ளுங்கள். என்மீது சத்தியமாக! ஹரம் எல்லையில் திருடும் நீங்கள் அதில் ஏன் கொலை செய்யக் கூடாது?” என்றான். குஜாஆவினர் புதைல் இப்னு வரகா மற்றும் ராபிஃ என்ற தங்களது நண்பர்கள் வீட்டில் சென்று அடைக்கலம் தேடினர்.

குஜாஆவைச் சேர்ந்த அம்ரு இப்னு ஸாலிம் மக்காவிலிருந்து மதீனாவிற்கு விரைந்தார். அங்கிருந்து நபியவர்களின் பள்ளிவாயிலை நோக்கி நடந்த அவர், பள்ளிக்குள் நுழைந்ததும் நபியவர்கள் முன்னிலையில் நின்று கொண்டார். நபியவர்கள் மக்களுக்கு மத்தியில் அமர்ந்திருந்தார்கள். அம்ரு நடந்த துக்கத்தை கவிதைகளில் பாடிக் காட்டினார்.

இறைவா! நான் முஹம்மதிடம் எங்களின் ஒப்பந்தத்தையும்
அவர் தந்தையின் பழமையான ஒப்பந்தத்தையும்
கேட்டு வந்திருக்கின்றேன். நீங்கள் பிள்ளைகள்
நாங்கள் பெற்றோர்கள் பின்பு நாம் முஸ்லிமானோம்
பின்வாங்கவில்லை முழுமையாக உதவுங்கள்
அல்லாஹ் உமக்கு வழிகாட்டுவான்.
அல்லாஹ்வின் அடியார்களை அழை
உதவிக்கு அவர்களும் வருவார்கள்
அவர்களில் ஆயுதம் ஏந்திய அல்லாஹ்வின்
தூதரும் இருக்கின்றார். அவர் வானில் நீந்தும்
முழு நிலா போல் அழகுள்ளவர்.
அவருக்கு அநீதமிழைத்தால் முகம் மாறிவிடுவார்.
நுரை தள்ளும் கடல்போன்ற படையுடன் வருவார்
குறைஷிகள் உன் வாக்கு மாறினர்.
உன் வலுவான ஒப்பந்தத்தை முறித்து விட்டனர்.
கதாவில் எனக்குப் பதுங்கு குழி வைத்துள்ளனர்.
ஒருவரையும் உதவிக்கு அழையேன்
என நினைத்துக் கொண்டனர். அவர்கள் அற்பர்கள்
சிறுபான்மையினர் வதீல் இரவு எங்களைத் தாக்கினர்.
நாங்கள் இறைவனை… பணிந்து குனிந்து வணங்கிய போது
எங்களை அவர்கள் வெட்டினர்.

அவன் கவிதைகளைக் கேட்ட நபி (ஸல்) “உனக்கு உதவி செய்யப்படும்” என்று ஆறுதல் கூறினார்கள். அந்நேரத்தில் வானத்திலிருந்து ஒரு மேகம் அங்கு வந்தது. நபி (ஸல்) அவர்கள் “இம்மேகம் குஜாஆ கிளையினர் உதவி பெற்று விட்டனர் என்பதற்கு முன் அறிவிப்பு” என்றார்கள்.

பிறகு ஃபுதைல் இப்னு வரகா அல்குஸாம் தனது கோத்திரத்தினர் சிலரை அழைத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களது சமூகம் வந்து, தங்களில் பலர் கொல்லப்பட்டதையும், குறைஷிகள் பலர் தங்களுக்கு எதிராக பக்ரு குலத்தவருக்கு உதவி செய்ததையும் கூறிவிட்டு மக்கா திரும்பினார்.

## அபூ ஸுஃப்யான் ஓடி வருகிறார்

குறைஷிகளும், அவர்களது தோழர்களும் செய்தது ஒப்பந்தத்தை முறிக்கும் செயலாகும் மிகப்பெரிய மோசடியாகும். எவ்விதத்திலும் இச்செயலை நியாயப்படுத்த முடியாது என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. தங்களின் இத்தீய செயலுக்குப் பின் அதன் விபரீதத்தை அறிந்து கொண்ட குறைஷிகள் உடனடியாக அவசர ஆலோசனை சபையைக் கூட்டினர். ஒப்பந்தத்தை புதுப்பிப்பதற்குத் தங்களின் தளபதி அபூஸுஃப்யானை மதீனாவுக்கு அனுப்ப வேண்டுமென்று அதில் முடிவெடுத்தனர்.

“தங்களின் மோசடி செயலுக்குப் பின் குறைஷிகள் என்ன செய்வார்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் தங்களது தோழர்களுக்கு முன்கூட்டியே அறிவித்தார்கள். அநேகமாக ஒப்பந்தத்தை உறுதிசெய்து, அவகாசத்தை நீட்டித் தருவதற்காக அபூ ஸுஃப்யான் உங்களிடம் வருவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

குறைஷிகள் முடிவு செய்தவாறே அபூ ஸுஃப்யான் மக்காவிலிருந்து புறப்பட்டார். வழியில் மதீனாவிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த புதைல் இப்னு வரகாவை ‘உஸ்ஃபான்’ என்ற இடத்தில் சந்தித்து “புதைலே எங்கு போய் வருகிறீர்?” என்றார். அவர், “நான் எனது கோத்திரத்தாருடன் இந்த கடற்கரை மற்றும் இந்தப் பள்ளத்தாக்கை சுற்றிப் பார்க்க வந்தேன்” என்று கூறினார். அபூ ஸுஃப்யான் “நீ முஹம்மதிடம் சென்று வரவில்லையா?” என்று கேட்டார். அவர் “இல்லையென்று” கூறிவிட்டார். புதைல் அந்த இடத்தை விட்டு மக்கா நோக்கிப் புறப்பட்டு போன பின்னர் அபூ ஸுஃப்யான், “புதைல் மதீனாவுக்குச் சென்றிருந்தால் அங்கு தனது ஒட்டகங்களுக்கு தின்பதற்கு பேரீத்தம் கொட்டைகளைக் கொடுத்திருக்க வேண்டும்” என்று கூறிவிட்டு அவரது ஒட்டகம் படுத்திருந்த இடத்திற்கு வந்து, அதன் சாணத்தைக் கிளறினார். அதில் பேரீத்தங்கொட்டைகளை பார்த்தவுடன், “நான் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறுகிறேன்! புதைல் முஹம்மதிடம்தான் சென்று வந்திருக்கிறார்” என்று கூறினார்.

அபூ ஸுஃப்யான் மதீனா வந்தடைந்து தனது மகள் உம்மு ஹபீபாவின் வீட்டிற்குச் சென்றார். அங்கிருந்த விரிப்பில் அவர் உட்கார நாடிய போது சட்டென உம்மு ஹபீபா (ரழி) அதைச் சுருட்டி விட்டார். “என் அருமை மகளே! இந்த விரிப்பில் நான் உட்காருவதற்குத் தகுதி அற்றவனா? அல்லது இந்த விரிப்பு எனக்குத் தகுதியற்றதா?” எனக் கேட்டார். “இல்லை! இது நபி (ஸல்) அவர்களின் விரிப்பு நீர் அல்லாஹ்விற்கு இணைவைக்கும் அசுத்தமானவர்” என்று உம்மு ஹபீபா (ரழி) பதில் கூறினார்கள். இதைக் கேட்ட அவர் “என்னிடமிருந்து வந்ததற்குப் பின் உனக்கு ஏதோ தீங்கு நேர்ந்து விட்டது” எனக் கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டார்.

நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து, தான் வந்த நோக்கத்தைப் பற்றிப் பேசினார். ஆனால் நபி (ஸல்) அவருக்கு எந்த பதிலும் கூறாததால், அங்கிருந்து எழுந்து அபூபக்ரிடம் வந்து நபியவர்களிடம் தன் விஷயமாகப் பேசுமாறு கூறினார். அதற்கு அபூபக்ர், (ரழி) “அது என்னால் முடியாது” எனக் கூறிவிட்டார்கள். பின்பு அங்கிருந்து உமரிடம் சென்று நபியவர்களிடம் பேசுமாறு கூறினார். அதற்கு உமர் (ரழி) “நானா உங்களுக்காக நபியவர்களிடம் சிபாரிசு செய்வேன்? அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்னிடம் ஒரு சிறு குச்சியைத் தவிர வேறெதுவும் இல்லை என்றாலும் அதைக் கொண்டே உங்களிடம் போர் பு ரிவேன்” என்று கூறினார்கள். பின்பு அவர் அலீ (ரழி) இடம் வந்தார். அங்கு அவருடன் ஃபாத்திமாவும் இருந்தார்கள். அவ்விருவருக்கும் முன்பாக சிறுபிள்ளையாக இருந்த ஹஸன் (ரழி) தவழ்ந்து கொண்டிருந்தார். அவர் “அலீயே! நீ எனக்கு உறவில் மிக நெருக்கமானவர். ஒரு தேவைக்காக உம்மிடம் வந்திருக்கின்றேன். நான் தோல்வியுற்றவனாக இங்கிருந்து செல்லக் கூடாது. எனவே, எனக்காக முஹம்மதிடம் சிபாரிசு செய்” என்று கூறினார். அலீ (ரழி) “உனக்கு நாசம் உண்டாகட்டும்! நபியவர்கள் தீர்க்கமாக முடிவு செய்து விட்டார்கள்.

அது விஷயமாக நாங்கள் அவர்களுடன் பேச முடியாது'' என்று கூறிவிட்டார்கள். அவர் ஃபாத்திமாவின் பக்கம் திரும்பி "நீ உனது மகனிடம் சொல்! அவர் மக்களுக்கு மத்தியில் கார்மானமும் பாதுகாப்பும் நிலவ வேண்டுமென்று அறிவிப்புச் செய்யட்டும்! இதனால் காலமெல்லாம் அவர் அரபியர்களின் தலைவராக விளங்குவார்'' என்று கூறினார். ஃபாத்திமா (ரழி), "அந்தத் தகுதியை எனது மகன் இன்னும் அடையவில்லை நபியவர்கள் இருக்க வேறு எவரும் பாதுகாப்பும் அடைக்கலமும் கொடுக்க முடியாது.'' என்று கூறிவிட்டார்கள்.

இந்தப் பதில்களையெல்லாம் கேட்ட அபூ ஸுஃப்யானின் கண்களுக்கு முன் உலகமே இருண்டு விட்டது. அவர் அலீ (ரழி) அவர்களிடம் அச்சத்துடனும் நடுக்கத்துடனும் கவலை தோய்ந்த தொனியிலும் "அபுல் ஹஸனே! நிலைமை மோசமாகிவிட்டது. எனக்கு ஏதாவது நல்ல யோசனை கூறுங்கள்'' என்றார். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உனக்கு பயன் தரும் எந்த விஷயத்தையும் நான் அறியமாட்டேன். எனினும், நீ கினானா கிளையினரின் தலைவனாக இருக்கிறாய். நீ எழுந்து சென்று "மக்களுக்கு மத்தியில் பாதுகாப்பும் அச்சமற்றத் தன்மையும் நிலவவேண்டும்'' என்று அறிவிப்பு செய்! பிறகு, உனது ஊருக்கு சென்றுவிடு!'' என்று கூறினார்கள். இதைக் கேட்ட அவர் "இதனால் எனக்கு ஏதேனும் பயனிருக்கிறதா?'' என்று கேட்டார். அதற்கு அலீ (ரழி), "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அது பயன் தரும் என்று நான் எண்ணவில்லை என்றாலும் என்னிடம் உனக்காக அதைத் தவிர வேறு யோசனை எதுவுமில்லை'' என்று கூறினார். அபூ ஸுஃப்யான் அங்கிருந்து எழுந்து பள்ளிக்குச் சென்று "மக்களே! நான் மக்களுக்கு மத்தியில் பாதுகாப்பு நிலவவேண்டும் என்று அறிவிப்பு செய்கிறேன்'' என்று கூறிவிட்டு, தனது ஒட்டகத்தில் ஏறி மக்கா சென்றுவிட்டார்.

அபூ ஸுஃப்யான் குறைஷிகளிடம் வந்து சேர்ந்த போது "என்ன செய்தியை பெற்று வந்திருக்கிறீர்?'' என்று அவர்கள் கேட்டனர். "நான் முஹம்மதிடம் சென்று பேசினேன். அவர் எந்த பதிலும் எனக்குக் கூறவில்லை. பின்பு அபூபக்ரிடம் சென்று பேசினேன். அவருடன் பேசியதில் எப்பயனுமில்லை. பின்பு உமரிடம் பேசினேன். அவர் நமக்கு மிகப்பெரிய எதிரியாக விளங்குகிறார். பின்பு அலீயிடம் சென்றேன். அவர் மிக மென்மையுடன் நடந்து கொண்டார். எனக்கு ஓர் ஆலோசனைக் கூறினார். அதன்படி நானும் செய்துவிட்டு வந்துள்ளேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அந்த ஆலோசனை எனக்கு பயனளிக்குமா? அளிக்காதா? என்பது எனக்குத் தெரியாது'' என்றார். "அவர் உனக்கு என்ன ஆலோசனை கூறினார்?'' என்று குறைஷிகள் கேட்டனர்.

"மக்களுக்கு மத்தியில் நான் பாதுகாப்புத் தருகிறேன். (குறைஷிகளால் உங்களுக்கு இனி எந்த இடையூறும் ஏற்படாது)'' என்று முஸ்லிம்களுக்கு மத்தியில் அறிவிப்புச் செய்யும்படி எனக்குக் கூறினார். நானும் அவ்வாறே செய்தேன். "அதை முஹம்மது ஏற்றுக் கொண்டாரா?'' என்று குறைஷியர் கேட்டனர். "இல்லை'' என்று அபூ ஸுஃப்யான் கூறினார். "உனக்கு நாசம் உண்டாகட்டுமாக! அந்த ஆள் (அலீ) உன்னுடன் நன்றாக விளையாடி விட்டார்'' என்று குறைஷிகள் கூறினர். அதற்கு அபூ ஸுஃப்யான், "இல்லை! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் கூறியதைத் தவிர வேறு வழி தெரியவில்லை'' என்று கூறினார்.

### மறைமுகமாகப் போருக்கு ஆயத்தம்

அறிஞர் தப்ரானியின் அறிவிப்பிலிருந்து நமக்குத் தெரிய வருவதாவது: குறைஷிகள் ஒப்பந்தத்தை மீறிவிட்டனர் என்ற செய்தி தனக்குக் கிடைப்பதற்கு மூன்று நாட்கள் முன்னதாகவே போருக்கான சாதனங்களைத் தயார் செய்யும்படி நபி (ஸல்) அவர்கள் ஆயிஷாவிற்கு உத்தர விட்டிருந்தார்கள். இதைப் பற்றி யாருக்கும் தெரியாது. ஒரு தடவை அபூபக்ர் (ரழி), ஆயிஷா (ரழி) வீட்டிற்கு வந்த போது "எனதருமை மகளே! இது என்ன

தயாரிப்பு?'' என்று கேட்டார்கள். ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எனக்கு அதுபற்றி எதுவும் தெரியாது'' என்று ஆயிஷா (ரழி) கூறினார்கள். ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது குறைஷிகளிடம் போர் புரிவதற்கான காலமுமில்லையே! நபி (ஸல்) அவர்கள் எங்குதான் செல்லப் போகிறார்கள்?'' என்று அபூபக்ர் (ரழி) கேட்டதற்கு ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அதுபற்றி எனக்கு எந்த அறிவுமில்லை'' என்று ஆயிஷா (ரழி) கூறிவிட்டார்கள். மூன்றாவது நாள் காலையில் 'குஜாஆ' கோத்திரத்தைச் சேர்ந்த அம்ர் இப்னு சாலிம் என்பவர் நாற்பது நபர்களுடன் நபி (ஸல்) அவர்களின் சமூகத்திற்கு வருகை தந்து, முன்னால் கூறப்பட்ட அந்தக் கவிகளைப் பாடினார். அப்போதுதான் உடன்படிக்கை மீறப்பட்டு விட்டது என்பதை முஸ்லிம்கள் அறிந்து கொண்டனர்.

அம்ர் வந்து சென்றதற்குப் பின் புதைல் சில தோழர்களுடன் நபியவர்களிடம் வந்து, நடந்த நிகழ்ச்சியைப் பற்றி விவரித்தார். புதைல் சென்றதற்குப் பின் அபூ ஸுஃப்யான் மதீனா வந்ததைப் பார்த்த முஸ்லிம்கள் தாங்கள் கேள்விப்பட்ட செய்தி உண்மை என்பதை அறிந்து கொண்டனர். இந்நிகழ்ச்சிக்குப் பின் நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களைப் போருக்குத் தயாராகும்படி கட்டளையிட்டதுடன், நாம் மக்காவிற்கு செல்ல இருக்கிறோம் என்றும் அறிவித்தார்கள். மேலும் ''அல்லாஹ்வே! நான் குறைஷிகளின் ஊருக்கு அவர்களுக்குத் தெரியாமல் திடீரென நுழையும் வரை எந்தச் செய்தியும் அவர்களுக்குச் சேராமலும், ஒற்றர்கள் அவர்களைச் சென்றடையாமலும் நீ பாதுகாப்பாயாக'' என்று அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தார்கள்.

மேலும், தங்களின் படையைப் பற்றிய செய்தியை முழுமையாக மறைப்பதற்காக வேறொரு திசையில் சிறிய படையொன்றை நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். ஹிஜ்ரி 8, ரமழான் மாதம் தொடக்கத்தில் மதீனாவிலிருந்து மூன்று பரீதும் தொலைவிலுள்ள தூகஷப், துல்மர்வா என்ற இடங்களுக்கு மத்தியிலுள்ள 'இழம்' என்ற இடத்திற்கு அபூ கதாதா இப்னு ப்இ (ரழி) அவர்களின் தலைமையில் 8 வீரர்கள் கொண்ட ஒரு படைப் பிரிவை நபி (ஸல்) அனுப்பினார்கள். நபியவர்களும் 'இழம்' என்ற இடத்திற்குத்தான் செல்ல இருக்கிறார்கள் என்று மக்கள் எண்ண வேண்டும் இதே செய்தி பரவ வேண்டும் என்பதற்காக நபி (ஸல்) இவ்வாறு செய்தார்கள். இப்படை தனது பயணத்தைத் தொடர்ந்து நபி (ஸல்) கூறிய இடத்தை சென்று அடைந்த போது நபியவர்கள் மக்கா நோக்கி பயணமாகி விட்டார்கள் என்ற செய்தி அப்படைக்குக் கிடைத்தது. உடன் அவர்களும் நபியவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டார்கள். (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

நபியவர்கள் மக்கா வருகிறார்கள் என்ற செய்தியைத் தெரிவிப்பதற்காக ஹாதிப் இப்னு அபூ பல்தஆ என்ற நபித்தோழர் கடிதம் ஒன்றை எழுதி ஒரு பெண் மூலம் அனுப்பினார். அதற்குக் கூலியும் கொடுத்தார். அப்பெண் அதைத் தலைமுடி சடைக்குள் வைத்துக் கொண்டு புறப்பட்டாள். ஆனால், ஹாதிபின் இச்செயலை அல்லாஹ் வஹியின் மூலம் நபி (ஸல்) அவர்களுக்கு அறிவித்து விட்டான். உடனே நபியவர்கள் அலீ, மிக்தாத், ஜுபைர், அபூமர்ஸத் கனவி (ரழி) ஆகியோரை அழைத்து ''நீங்கள் 'காக்' என்ற தோட்டத்திற்குச் செல்லுங்கள் அங்கு ஒரு பெண் பயணி இருப்பாள் அவளிடம் குறைஷிகளுக்கு அனுப்பப்பட்ட கடிதம் ஒன்று இருக்கிறது. அதைக் கைப்பற்றுங்கள்!'' என்று கூறினார்கள்.

அவர்கள் விரைந்து சென்று அவ்விடத்தை அடைந்தார்கள். அங்கு நபி (ஸல்) கூறியபடி அப்பெண் இருக்க, அவளை வாகனத்திலிருந்து இறங்குமாறு கூறி அவளிடம் ''உன்னிடமுள்ள கடிதம் எங்கே? என்று கேட்டார்கள். அவள் ''என்னிடம் எக்கடிதமும் இல்லை'' என்றாள். அவர்கள் அவளது பயணச் சாமான்கள் அனைத்தையும் தேடினர். ஆனால், அதில் ஏதும் கிடைக்கவில்லை.

''அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறுகிறேன். அல்லாஹ்வின் தூதர் பொய் கூற மாட்டார்கள், நாங்களும் பொய் கூறமாட்டோம். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீயாக

அக்கடிதத்தை கொடுத்து விடு அல்லது உனது ஆடையை களைந்து நாங்கள் தேடுவோம்'' என்று அலீ (ரழி) கூறினார்கள். அலீயின் பிடிவாதத்தைப் பார்த்த அப்பெண் ''விலகிக் கொள்'' என்று கூற அலீ (ரழி) விலகிக் கொண்டார்கள். தனது சடையை அவிழ்த்து அதிலிருந்த கடிதத்தை எடுத்து அவர்களிடம் கொடுத்தாள். அவர்கள் அதை நபியவர்களிடம் ஒப்படைத்தார்கள்.

அந்த கடிதத்தில்: ''ஹாதிப் இப்னு அபூ பல்தஆ குறைஷிகளுக்கு எழுதுவது: நபி (ஸல்) உங்களை நோக்கி புறப்பட்டு விட்டார்கள்'' என்று எழுதப்பட்டிருந்தது. நபி (ஸல்) ஹாதிபை அழைத்தார்கள். ''ஹாதிபே! இது என்ன?'' என்று கேட்டார்கள். ''அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிக்கை கொள்கின்றேன். நான் மதம் மாறவுமில்லை. அதை மாற்றிக் கொள்ளவுமில்லை. நான் குறைஷிகளுடன் சேர்ந்துதான் வாழ்ந்தேனே தவிர நான் குறைஷியல்ல. எனது குடும்பத்தினர்களும், உறவினர்களும் அங்கு இருக்கின்றனர். அவர்களைப் பாதுகாப்பதற்கு அங்கு எனக்கு எந்தக் குறைஷி உறவினரும் இல்லை. உங்களுடன் இருக்கும் மற்றவர்களின் குடும்பங்களைப் பாதுகாப்பதற்கு அங்கு அவரது மற்ற உறவினர்கள் இருக்கின்றார்கள். நான் குறைஷிகளுக்கு இந்த உதவியைச் செய்தால், அதனால் அவர்கள் எனது குடும்பத்தைப் பாதுகாப்பார்கள். அதற்காகவே நான் அவர்களுக்கு இந்த உதவியைச் செய்ய ஆசைப்பட்டேன்'' என்று ஹாதிப் (ரழி) பதில் கூறினார். இந்தப் பதிலை கேட்டுக் கொண்டிருந்த உமர் (ரழி), ''அல்லாஹ்வின் தூதரே! அவரது கழுத்தைச் சீவ எனக்கு அனுமதி தாருங்கள். அவர் நிச்சயமாக அல்லாஹ்விற்கும் அவனது தூதருக்கும் மாறு செய்துவிட்டார். அவர் நயவஞ்சகராகி விட்டார்'' என்று கூறினார்கள். அதற்கு நபியவர்கள், ''அல்லாஹ் பத்ரில் கலந்து கொண்டவர்களைப் பார்த்து நீங்கள் விரும்பியதை செய்யுங்கள். நான் உங்களின் பாவங்களை நிச்சயமாக மன்னித்து விட்டேன்'' என்று கூறியிருக்கிறான். உமரே! இவர் பத்ரில் கலந்து கொண்டவர் என்பது உனக்குத் தெரியுமா?'' என்று கூறினார்கள். நபியவர்களின் இந்தப் பதிலால் உமரின் கண்களிலிருந்து கண்ணீர் மல்கியது. ''அல்லாஹ்வும் அவனது தூதரும் மிக அறிந்தவர்கள்'' என உமர் (ரழி) கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இவ்வாறு ஒற்றர்கள் வழியாக செய்தி கடத்தப்படுவதையும் அல்லாஹ் தடுத்து விட்டான். முஸ்லிம்கள் போருக்குத் தயாராகி வருகிறார்கள் என்ற எந்தவித செய்தியும் குறைஷிகளுக்குக் கிடைக்கவில்லை.

**மக்காவை நோக்கி இஸ்லாமியப் படை**

ஹிஜ்ரி 8, ரமழான் மாதம் பிறை 10ல் நபி (ஸல்) 10,000 தோழர்களுடன் மதீனாவிலிருந்து மக்காவை நோக்கிப் புறப்பட்டார்கள். மதீனாவில் அபூ ருஹ்ம் கிஃபா (ரழி) என்ற தோழரை நபி (ஸல்) தனக்குப் பிரதிநிதியாக நியமித்தார்கள்.

நபியவர்கள் 'ஜுஹ்ஃபா' என்ற இடத்தில் அல்லது அதைத் தாண்டி ஓரிடத்தில் சென்று கொண்டிருந்த போது, நபியவர்களின் சிறிய தந்தை அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபு (ரழி) தனது குடும்பத்தினருடன் அவர்களைச் சந்தித்தார்கள். இவர்கள் இஸ்லாமை ஏற்று நபியவர்களைச் சந்திக்க தனது குடும்பத்தார்களுடன் மக்காவிலிருந்து ஹிஜ்ரா செய்து மதீனா நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். பிறகு நபி (ஸல்) 'அப்வா' என்ற இடத்தில் தங்கியிருந்த போது, நபியவர்களது பெரிய தந்தையின் மகன் அபூ ஸுஃப்யான் இப்னு ஹாரிஸ் என்பவரும், மாமி மகன் அப்துல்லாஹ் இப்னு அபூ உமையா ஆகிய இருவரும் வந்தனர்.

ஆனால், இவ்விருவரும் நபி (ஸல்) அவர்களை எப்போதும் இகழ்ந்து கொண்டிருந்ததாலும், அதிகம் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்ததாலும் அவர்களைச் சந்திக்க, அவர்களுடன்

பேச நபியவர்கள் மறுத்து விட்டார்கள். நபியவர்களின் மனைவி உம்மு ஸலமா (ரழி) "அல்லாஹ்வின் தூதரே! உங்களது பெரிய தந்தையின் மகனும், மாமி மகனும் உங்களின் புறக்கணிப்பால் நற்பேறு அற்றவர்களாக ஆகிவிட வேண்டாம். அவர்களை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறினார். மேலும் அலீ (ரழி), "நீ நபியவர்களின் முன்பக்கமாக சென்று நபி யூஸுஃப் (அலை) அவர்களின் சகோதரர்கள் யூஸுஃபிடம் கூறியதைப் போன்று (கீழ்காணும் வசனங்களை) நீயும் கூறு, நபி (ஸல்) அவர்கள் பிறரைவிட தான் அதிக நற்பண்புள்ளவராக இருப்பதையே அதிகம் விரும்புவார்கள். (அதாவது, தனக்கு தீங்கிழைத்த தனது சகோதரர்களை நபி யூஸுஃப் (அலை) மன்னித்து விட்டார்கள் அப்படியிருக்க நபி (ஸல்) அவர்களும் நிச்சயம் மன்னிப்பார்கள்") என்று அபூ ஸுஃப்யானிடம் கூறினார். அவ்வாறே அபூ ஸுஃப்யானும் செய்தார்.

நபி யூஸுஃப் (அலை) அவர்களின் சகோதரர்கள் கூறியதாவது:

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் (உங்களுக்குப் பெரும்) தீங்கிழைத்தோம். ஆயினும், நிச்சயமாக அல்லாஹ் எங்களைவிட உங்களை மேன்மையாக்கி வைத்திருக்கிறான். (எங்களுக்கு நன்மை செய்ய அல்லாஹ் உங்களுக்குச் சந்தர்ப்பமும் அளித்திருக்கிறான்.)" (அல்குர்ஆன் 12:91)

அதற்கு நபி (ஸல்) அவர்கள்,

"இன்றைய தினம் (நான்) உங்கள் மீது எந்த குற்றமும் (சுமத்துவது) இல்லை. அல்லாஹ்(வும்) உங்கள் குற்றங்களை மன்னித்து விடுவானாக! அவன் கருணையாளர்களிலெல்லாம் மகா கருணையாளன்." (அல்குர்ஆன் 12:92)

என்ற வசனங்களைக் கூறினார்கள். அதன் பிறகு அபூ ஸுஃப்யான் இப்னு ஹாரிஸ்,

"இது சத்தியம்! லாத்துடைய வீரர்கள்
முஹம்மதின் வீரர்களை" வீழ்த்த வேண்டும் என்பதற்காக,
நான் போர்க்கொடி சுமந்த போது
இருளில் சிக்கித் தவிக்கும் திக்கற்ற பயணிபோல் இருந்தேன்
இது எனக்கு சிறந்த நேரம்
நான் நேர்வழிக்கு அழைக்கப்படுகிறேன்
அதை ஏற்று நானும் நேர்வழி பெறுகிறேன்
என் நேர்வழிக்கு நான் காரணமல்லன்.
நான் ஒவ்வொரு இடத்திலும் விரட்டியடித்தேனே
அவர்தான் எனக்கு நேர்வழி காட்டி
அல்லாஹ்வை காட்டித் தந்தார்."

என்ற கவிதைகளைப் பாடிக்காட்டினார்.

அதற்கு நபியவர்கள், அவரது நெஞ்சில் அடித்து "நீதான் என்னை ஒவ்வொரு இடங்களிலும் துரத்திக் கொண்டிருந்தாய்" என்று கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

**மர்ருள் ளஹ்ரானில் இஸ்லாமியப் படை**

ரமழான் மாதமாக இருந்ததால் நபி (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் நோன்பு வைத்திருந்தார்கள். 'உஸ்ஃபான்' என்ற இடத்திற்கு அருகிலுள்ள 'குதைத்' என்ற கிணற்றுக்கருகில் இறங்கி அனைவரும் நோன்பு திறந்தனர். (முஸ்னது அஹ்மது, பைஹகி, இப்னு ஹிஷாம்)

அதற்குப் பின் தொடர்ந்து பயணித்து ‘ஃபாத்திமா பள்ளத்தாக்கு’ என்று கூறப்படும் ‘மர்ருள் ளஹ்ரான்’ என்ற இடத்தில் இறங்கினார்கள். அங்கு நெருப்பு மூட்டும்படி நபி (ஸல்) கட்டளையிட, ஒவ்வொரு நபித்தோழரும் நெருப்பு மூட்டினார். மொத்தம் பத்தாயிரம் நெருப்புக் குண்டங்கள் அங்கு மூட்டப்பட்டன. இரவில் படையின் பாதுகாப்புக்கு உமர் இப்னு கத்தாபை நபி (ஸல்) தலைமை தாங்க வைத்தார்கள்.

**நபியவர்களுக்கு முன் அபூஸுஃப்யான்**

முஸ்லிம்கள் மர்ருள் ளஹ்ரானில் தங்கியதற்குப் பின் நபியவர்களின் வெள்ளைக் கோவேறு கழுதையில் அப்பாஸ் (ரழி) ஏறி, அங்கிருந்து புறப்பட்டார். விறகு சேகரிக்க வருபவர்கள் அல்லது வேறு யாராவது கிடைப்பார்களா என்று தேடினார். நபி (ஸல்) மக்கா வரும் செய்தியைக் குறைஷிகளுக்கு சொல்லி அனுப்பினால் நபி (ஸல்) மக்காவுக்குள் நுழைவதற்கு முன்பதாக நபியவர்களிடம் வந்து தங்களுக்குரிய பாதுகாப்பை அவர்கள் பெற்றுக் கொள்வார்கள் என்பதே அப்பாஸின் நோக்கமாக இருந்தது..

அல்லாஹ் எந்த வகையிலும் குறைஷிகளுக்கு நபியவர்களின் நடவடிக்கை தெரியாமல் மறைத்து விட்டான். அவர்கள் பயத்துடனும், எந்நேரத்திலும் தாங்கள் தாக்கப்படுவோம் என்றும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். மக்காவில் அபூ ஸுஃப்யான் வருவோர் போவோரிடமெல்லாம் நபியவர்களின் செய்தியைப் பற்றி துருவித் துருவி விசாரித்துக் கொண்டிருந்தார். ஒரு நாள் இரவில் அபூ ஸுஃப்யானும், ஹக்கீம் இப்னு ஸாமும், புதைல் இப்னு வரக்காவும் நிலவரங்களை அறிந்து கொள்வதற்காக விசாரித்துக் கொண்டே மக்காவை விட்டு வெளியேறினார்கள். அன்றிரவுதான் நபியவர்கள் மர்ருள் ளஹ்ரானில் படையுடன் தங்கியிருந்தார்கள்.

அந்த நிகழ்ச்சியைப் பற்றி அப்பாஸ் (ரழி) கூறுவதைக் கேட்போம்:

“நான் நபியவர்களது கோவேறு கழுதையின் மீது இரவின் இருளில் சென்று கொண்டிருந்தேன். அபூஸுஃப்யான் மற்றும் புதைல் ஆகிய இருவரும் பேசிக் கொண்டது காதில் கேட்டது. “இன்றைய இரவில் எரியும் நெருப்பைப் போன்றும், இங்குக் கூடியிருக்கும் படையைப் போன்றும் நான் வேறு எப்போதும் பார்த்ததில்லை” என்று அபூஸுஃயான் புதைலிடம் கூறினார். அதற்கு புதைல் “இங்கு வந்திருப்பது குஜாஆவின் படையாக இருக்கலாம். போர்தான் இவர்களைத் தீயாக ஆக்கிவிட்டது. நம்மீது போர்தொடுக்க கிளம்பிய இவர்கள் இவ்வாறு நெருப்பு மூட்டியிருக்கின்றனர்” என்றார். “இல்லை குஜாஆவின் எண்ணிக்கை மிகக் குறைவு அவர்கள் வீரமில்லாதவர்கள் இது அவர்களின் நெருப்பாகவோ படையாகவோ இருக்க முடியாது” என்று அபூஸுஃப்யான் கூறினார்.

நான் அபூஸுஃப்யானின் குரலைப் புரிந்து கொண்டு “ஹன்ளலாவின் தந்தையே!” என்று அழைத்தேன். (இது அவரது புனைப் பெயராகும்) அவரும் எனது குரலைப் புரிந்துகொண்டு “ஃபழ்லின் தந்தையே!” (இது அப்பாஸின் புனைப் பெயராகும்) என்று அழைத்தார். நான் ‘ஆம்! நான்தான்’ என்று கூறினேன். அதற்கவர் (என்ன! இந்நேரத்தில் இங்கு வந்திருக்கிறீர் எனும் பொருளில்) “உங்களுக்கு என்னவாயிற்று. எனது தாயும் தந்தையும் அர்ப்பணமாகட்டும்” என்று கூறினார். “இதோ அல்லாஹ்வின் தூதர் மக்களுடன் வந்திருக்கிறார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! குறைஷிகள் அழிந்தே விட்டனர்” என்று நான் கூறினேன்.

“தப்பிப்பதற்கு வழி என்ன? எனது தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்” என்று அபூ ஸுஃப்யான் கேட்டார். அதற்கு நான் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபியவர்களிடம் நீ சிக்கினால் உன்னை அவர்கள் கொலை செய்து விடுவார்கள். இந்தக் கோவேறு கழுதையில் என் பின்னே ஏறிக்கொள். நான் உன்னை நபியவர்களிடம் அழைத்துச் சென்று உனக்காக நபி (ஸல்) அவர்களிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்” என்று

கூறினேன். அவரும் எனக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டார். மற்ற அவரது இரு நண்பர்களும் அங்கிருந்து திரும்பிச் சென்றுவிட்டனர்.

நான் அவரை அழைத்து வந்து கொண்டிருந்த போது அங்கிருந்த ஒவ்வொரு நெருப்புக்கு அருகிலும் செல்லும்போதெல்லாம் ‘‘இவன் யார்?’’ என விசாரித்துக் கொண்டே வந்தனர். முஸ்லிம்களும் நபியின் கோவேறு கழுதையின் மீது நான் வாகனிப்பதைப் பார்த்து, ‘‘இதோ... இவர்தான் நபியுடைய தந்தையின் சகோதரர் ஆவார். இது நபியின் கோவேறு கழுதையாகும்’’ என்று பேசிக் கொண்டார்கள். இவ்வாறே நான் உமர் இப்னு கத்தாப் (ரழி) மூட்டியிருந்த நெருப்புக்கருகில் சென்றபோது ‘‘அவர் இது யாரென்று கேட்டுக் கொண்டே என்னை நோக்கி எழுந்து வந்தார்.’’ வாகனத்தின் பின்னால் அபூஸுஃப்யானைப் பார்த்தவுடன் ‘‘இவர்தான் அல்லாஹ்வின் எதிரி அபூ ஸுஃப்யான். அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! எவ்வித ஒப்பந்தமும் நமக்கு மத்தியில் இல்லாமல் இருக்கும் இவ்வேளையில் அல்லாஹ் உன்னை என்னிடம் சிக்க வைத்து விட்டான்’’ என்று கூறிக்கொண்டே கொல்வதற்கு அனுமதி வேண்டி நபியிடம் விரைந்தார்.

நான் சுதாரித்துக் கொண்டு கழுதையை உதைத்து வேகமாக ஓட்டிக் கொண்டு நபியிடம் சென்றடைந்தேன். கழுதையிலிருந்து இறங்கி நபியின் கூடாரத்திற்குள் செல்லும் போதே உமரும் கூடாரத்திற்குள் நுழைந்து விட்டார். அவர் ‘‘அல்லாஹ்வின் தூதரே! இதோ அபூ ஸுஃப்யான்! எனக்கு அனுமதி தாருங்கள். நான் அவனைக் கொன்று விடுகிறேன்’’ என்று கூறினார். ‘‘அல்லாஹ்வின் தூதரே! நான் இவருக்கு அடைக்கலம் கொடுத்து விட்டேன்’’ என்று கூறி நபிக்கருகில் அமர்ந்து கொண்டு அவர்களது தலையை எனது நெஞ்சுடன் அணைத்துக் கொண்டேன். மேலும் ‘‘இன்றிரவு என்னைத் தவிர வேறு யாரும் நபியிடம் பேச அனுமதிக்க மாட்டேன்’’ என்று கூறினேன். ஆனால் உமர் (ரழி) அபூ ஸுஃப்யான் விஷயத்தில் மிகப் பிடிவாதமாக இருந்தார்கள்.

நான் ‘‘உமரே! சற்று பொறுங்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உமது ‘அதீ’ கிளையைச் சேர்ந்தவராக இவர் இருந்திருந்தால் நீ இவ்வாறு கூறமாட்டாய்’’ என்று கூறினேன். அதற்கவர் ‘‘அப்பாஸே! நீங்கள் சற்றுப் பொறுங்கள். எனது தந்தை இஸ்லாமை ஏற்றுக் கொள்வதை விட நீங்கள் இஸ்லாமை ஏற்றுக் கொள்வதுதான் எனக்கு மிக விருப்பமானதாகும். அதாவது என் தந்தை முஸ்லிமாகுவதை விட நீங்கள் முஸ்லிமாகுவதுதான் எனக்கு அதிக விருப்பமானதாகும், ஏனெனில், என் தந்தை முஸ்லிமானால் நபிக்கு ஏற்படும் மகிழ்ச்சியை விட நீங்கள் முஸ்லிமானால் நபிக்கு அதிகம் மகிழ்ச்சி ஏற்படும்’’ என்று கூறினார்.

நபி (ஸல்) அவர்கள் ‘‘அப்பாஸே! நீர் இவரை அழைத்துச் சென்று உமது கூடாரத்தில் தங்க வைத்து காலையில் அழைத்து வாருங்கள்’’ என்று கூறினார்கள். காலையில் நான் அவரை அழைத்துக் கொண்டு நபியிடம் சென்றேன். அவரைப் பார்த்த நபி (ஸல்) அவர்கள் ‘‘அபூ ஸுஃப்யானே! உனக்கு என்ன கேடு நேர்ந்தது. அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை என்று நீ இன்னமும் தெரிந்து கொள்ளவில்லையா?’’ எனக் கேட்டார்கள். ‘‘எனது தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும். நீங்கள் எவ்வளவு பெரிய பொறுமைசாலி நீங்கள் மிக கண்ணியமிக்கவர்கள் உறவுகளை அதிகம் பேணுகிறீர்கள் அல்லாஹ்வுடன் வேறொரு இறைவன் இருந்திருந்தால் அவர் இன்று எனக்கு ஏதாவது நிச்சயம் பயனளித்திருப்பார்’’ என அபூஸுஃப்யான் கூறினார்.

அதற்கு நபியவர்கள் ‘‘அபூ ஸுஃப்யானே! உமக்கு என்ன கேடு நேர்ந்தது. நான் அல்லாஹ்வின் தூதர் என்று நீ தெரிந்து கொள்வதற்கு இன்னுமா உனக்கு நேரம் வரவில்லை?’’ என்றார்கள். ‘‘எனது தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும். நீங்கள் எவ்வளவு பெரிய பொறுமைசாலி. நீங்கள் மிக கண்ணியமிக்கவர்கள் உறவுகளை

அதிகம் பேணுகிறீர்கள், ஆனால் இந்த விஷயத்தில் எனக்கு சற்று சந்தேகம் இருக்கத்தான் செய்கிறது'' என்று அபூ ஸுஃபயான் கூறினார். இதைக் கேட்ட அப்பாஸ் (ரழி) ''உனக்கென்ன கேடு! நீ கொல்லப்படுவதற்கு முன் இஸ்லாமை ஏற்றுக்கொள். லாயிலாஹஇல்லல்லாஹ் முஹம்மதுர்ரஸுலுல்லாஹ் என்று சாட்சி சொல்லிவிடு!'' என்று கூறினார். அவரும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டு ஏகத்துவ சாட்சியும் மொழிந்தார்.

**மக்கா நோக்கி இஸ்லாமியப் படை**

அன்றைய காலைப் பொழுதில், அதாவது ஹிஜ்ரி 8, ரமழான் மாதம் பிறை 17 செவ்வாய்க் கிழமை காலையில் நபி (ஸல்) மர்ருள் ளஹ்ரானிலிருந்து மக்கா நோக்கிப் புறப்படலானார்கள். வழி குறுகலாக உள்ள 'கத்முல் ஜபல்' என்ற இடத்தில் அபூஸுஃப்யானை நிறுத்தி வை. அல்லாஹ்வின் படை அவரைக் கடந்து செல்வதைப் பார்க்கட்டும் என்று நபி (ஸல்) அப்பாஸுக்கு ஆணை பிறப்பித்தார்கள். அப்பாஸும் அவ்வாறே செய்தார். தங்களிடமுள்ள கொடிகளுடன் ஒவ்வொரு கோத்திரத்தாரும் அபூஸுஃப்யானைக் கடந்து சென்றபோதெல்லாம் இவர்கள் யாரென்று அப்பாஸிடம் விசாரிப்பார். அப்பாஸ் (ரழி) (உதாரணமாக) ''சுலைம்'' என்று கூறுவார். அதற்கு அபூஸுஃப்யான் ''எனக்கும் சுலைம் கோத்திரத்தாருக்கும் என்ன உறவு இருக்கிறது?'' என்று கூறுவார். இவ்வாறே ஒவ்வொரு கோத்திரத்தாரையும் அபூஸுஃப்யான் விசாரிக்க அதற்கு அப்பாஸ் (ரழி) பதில் கூறிக்கொண்டிருந்தார்கள்.

இறுதியாக நபியவர்கள் தனது அடர்ந்த படையில் முஹாஜிர் அன்சாரிகளுடன் சென்றார்கள். நபி (ஸல்) மத்திம்லிருக்க தோழர்கள் நபியைச் சுற்றி ஆயுதமேந்தியிருந்தார்கள். அக்கூட்டத்தில் ஆயுதங்களைத் தவிர வேறொன்றும் கண்ணுக்குத் தெரியவில்லை. இக்காட்சியைப் பார்த்த அபூஸுஃப்யான் ஆச்சரியமடைந்து ''ஸுப்ஹானல்லாஹ்! அப்பாஸே! இவர்கள் யார்?'' என்று கேட்டார். ''இக்குழுவில் அல்லாஹ்வின் தூதர் தனது முஹாஜிர் மற்றும் அன்சாரி தோழர்களுடன் செல்கிறார்கள்'' என்று அப்பாஸ் (ரழி) பதிலளித்தார். இதைக் கேட்ட அபூஸுஃப்யான் ''நிச்சயமாக இவர்களை யாராலும் எதிர்க்க முடியாது. ஓ அபுல் ஃபழ்லே! உமது சகோதரர் உடைய மகனின் ஆட்சி இன்று கொடி கட்டிப் பறக்கிறதே!'' என்று கூறினார். அதற்கு அப்பாஸ் (ரழி) ''அபூ ஸுஃப்யானே! இதுதான் நபித்துவமாகும் (சாதாரண அரசாங்கமல்ல)'' என்று கூறினார். ''ஆம்! சரிதான்'' என்று அபூஸுஃப்யான் (ரழி) கூறினார்.

ஸஅது இப்னு உபாதா (ரழி) அன்சாரிகளின் கொடியை ஏந்தியிருந்தார். அவர் அபூ ஸுஃப்யானுக்கு அருகில் வந்தபோது ''இன்றைய தினம் கடுமையான போராட்ட நாளாகும் இன்றைய தினம் மானமரியாதை எடுக்கப்படும் இன்றைய தினம் அல்லாஹ் குறைஷிகளைக் கேவலப்படுத்தி விட்டான்'' என்று கூறினார். இந்த வார்த்தை அபூஸுஃப்யானுக்குப் பெரும் பயத்தை ஏற்படுத்தியது. அபூஸுஃப்யானுக்கு அருகில் நபி (ஸல்) வந்தபோது ''அல்லாஹ்வின் தூதரே! ஸஅது என்ன கூறினார் என்பதைப் பற்றி நீங்கள் கேள்விப்பட வில்லையா?'' என்று கேட்டார். ''அவர் என்ன கூறினார்?'' என்று நபி (ஸல்) கேட்க, ''இன்னின்னதை அவர் பேசினார்'' என அபூ ஸுஃப்யான் (ரழி) விளக்கினார்.

நபியுடன் இருந்த உஸ்மான் மற்றும் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) ஆகிய இருவரும் ''அல்லாஹ்வின் தூதரே! மேலும், அவர் குறைஷிகளைக் கொன்று குவித்து விடுவார் என நாங்கள் அஞ்சுகிறோம்'' என்றனர். அதற்கு நபி (ஸல்) அவ்வாறு நடக்காது. இன்றைய தினம் கஅபாவை மகிமைப்படுத்தும் தினமாகும். இன்றைய தினம் அல்லாஹ் குறைஷிகளுக்குக் கண்ணியமளித்த தினமாகும்'' என்று கூறிவிட்டு ஒருவரை ஸஅதிடம் அனுப்பி அவரிடமுள்ள கொடியை வாங்கி அவரது மகன் கைசிடம் கொடுத்து விட்டார்கள். அதாவது, கொடி ஸஅதிடம்தான் இருக்கிறது என்று பொருளாகும். ஆனால் சிலர், அந்தக் கொடியை ஜுபைடம் நபி (ஸல்) கொடுத்தார்கள் என்கின்றனர்.

### குறைஷிகளின் அதிர்ச்சி

நபி (ஸல்) அபூஸுஃப்யானைக் கடந்து சென்றவுடன் அப்பாஸ் (ரழி) அபூஸுஃப்யானிடம் "உடனடியாக நீ உன் கூட்டத்தனரிடம் சென்று அவர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அறிவிப்புச் செய்!" எனக் கூறினார். அபூஸுஃப்யான் (ரழி) மக்கா நோக்கி விரைந்து சென்று மக்காவாசிகளிடம் மிக உரக்க சப்தமிட்டு 'குறைஷிகளே! இதோ... முஹம்மது வந்துவிட்டார். அவர்களை உங்களால் எதிர்க்க முடியாது. எனவே, பாதுகாப்புத் தேடி எனது வீட்டிற்குள் நுழைந்து விடுங்கள். என் வீட்டில் நுழைந்தவர்கள் எல்லாம் பாதுகாப்புப் பெறுவர்' என்று முழக்கமிட்டார். அபூஸுஃப்யானின் இந்நிலையைக் கண்ட அவரது மனைவி அவரது மீசையை பிடித்திழுத்து "கெண்டைக்கால் கொழுத்த இந்த திமிர் பிடித்தவனைக் கொன்று விடுங்கள்! கூட்டத்திற்குத் தலைவனாக இருப்பதற்கு இவன் தகுதியற்றவன்' என்று கூறினார்.

ஆனால், அதற்கெல்லாம் அசைந்து கொடுக்காத அபூஸுஃப்யான் (ரழி) "மக்களே! உங்களுக்கென்ன கேடு நேர்ந்தது! எனது பேச்சைக் கேளுங்கள்! இவளது பேச்சை கேட்டு நீங்கள் ஏமாந்து விடாதீர்கள். உங்களால் அறவே எதிர்க்க முடியாத படையைக் கொண்டு முஹம்மது உங்களிடம் வந்திருக்கிறார். எனது வீட்டுக்குள் வந்துவிடுங்கள். என் வீட்டில் நுழைந்தவர்கள் பாதுகாப்புப் பெறுவர்" என்று கூறினார். அதற்கு "அல்லாஹ் உன்னை நாசமாக்குவானாக! எங்களுக்கெல்லாம் உமது ஒரு வீடு எப்படி போதுமாகும்?" என்று மக்கள் கேட்டனர். "யார் தனது வீட்டுக்குள் சென்று கதவைத் தாழிட்டு கொள்கிறாரோ அவரும் பாதுகாப்புப் பெறுவார் யார் மஸ்ஜிதுல் ஹராமிற்குள் செல்வாரோ அவரும் பாதுகாப்பு பெறுவார்" என்று அபூஸுஃப்யான் கூறினார். இதைக் கேட்ட மக்கள் அனைவரும் தங்களது வீடுகளையும், பள்ளிகளையும் நோக்கி ஓடினர்.

ஆனால், அதே சமயத்தில் குறைஷிகள் ஒவ்வொரு கோத்திரத்திலிருந்தும் ஒரு சிலரை ஒன்று சேர்த்து, அவர்களை முஹம்மதுடன் சண்டை செய்ய நாம் அனுப்புவோம். சண்டையில் நமக்கு வெற்றி கிடைத்தால் அதுதான் நமது நோக்கம். சண்டையில் நமக்கு தோல்வி ஏற்பட்டால் இந்த வாலிபர்களின் இழப்புக்காக அவர்களின் குடும்பத்தினர் நம்மிடம் எதைக் கேட்கிறார்களோ அதைக் கொடுத்து விடுவோம் என்று முடிவு செய்தனர்.

இதற்கேற்ப பல கோத்திரத்திலிருந்தும் சில குறைஷி அறிவீனர்கள் இக்மா இப்னு அபூ ஜஹ்ல், ஸஃப்வான் இப்னு உமையா, ஸுஹ்ல் இப்னு அம்ர் ஆகியோருடன் 'கந்தமா' என்ற இடத்தில் ஒன்று சேர்ந்து கொண்டு முஸ்லிம்களை எதிர்க்க ஆயத்தமானார்கள். அப்படையில் மாஷ் இப்னு கைஸ் என்பவனும் இருந்தான். இதற்கு முன் இவன் தனது வீட்டில் எப்போதும் ஆயுதங்களைத் தயார்படுத்திக் கொண்டே இருந்தான். ஒருநாள் அவனது மனைவி அவனிடம் "எதற்காக நீ இவ்வாறு தயார் செய்கிறாய்" என்று கேட்டாள். அதற்கவன் "முஹம்மது மற்றும் அவரது தோழர்களுடன் நான் சண்டை செய்ய இதைத் தயார் செய்கிறேன்" என்று கூறினான். "முஹம்மது மற்றும் அவரது தோழர்கள் முன் எதுவும் தாக்குப்பிடிக்காது (அவர்களை எவராலும் எதிர்க்க முடியாது). அவர்களை யாராலும் எதுவும் செய்ய முடியாது" என்று மனைவி கூறினாள். ஆனால் அவன் "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்களின் சிலரைச் சிறைபிடித்து வந்து உனக்கு பணியாளர்களாக நான் அமர்த்துவேன்" என்று கூறிவிட்டு தன்னைப் பற்றி பெருமையாக கவிதை பாடினான்,

அவர்கள் இன்று முன்வந்தால் நான் எங்ஙனம் விலகுவது
என்னிடம் முழு போராயுதமும் சிறு ஈட்டியும்
குத்தி குலை எடுக்கும் இருபுறம் கூரான வாளும் உள்ளன.

**இஸ்லாமியப் படை ‘தூதுவா’வை அடைகிறது**

நபி (ஸல்) அவர்கள் படைக்குப் பின்னால் சென்று கொண்டிருந்தார்கள். ‘தூதுவா’ என்ற இடம் வந்தவுடன் அல்லாஹ் தனக்களித்த இவ்வெற்றியை எண்ணி அவனுக்குப் பணிந்தவர்களாக தலையைத் தாழ்த்தியும் நுழைந்தார்கள். அவர்களது தாடியின் முடி அவர்கள் அமர்ந்திருந்த கஜவா பெட்டியின் கம்பை தொட்டுக் கொண்டிருந்தது. நபி (ஸல்) அவர்கள் இவ்விடத்தை அடைந்தவுடன் தங்களது படையை நிறுத்தி அதைப் பல பிரிவுகளாக அமைத்தார்கள். அதாவது, வலப்பக்கம் உள்ள படைக்கு காலிது இப்னு வலீதை (ரழி) தளபதியாக்கினார்கள். இப்படையில் அஸ்லம், சுலைம், கிஃபார், முஸைனா, ஜுஹைனா மற்றும் பல அரபி கோத்திரங்கள் இருந்தனர். உங்களுடன் குறைஷிகளில் எவராவது போர் புரிய வந்தால் அவரை வெட்டி வீசிவிடுங்கள். மக்காவின் கீழ்ப்புறமாகச் சென்று எனது வருகைக்காக ஸஃபா மலையில் எதிர்பார்த்திருங்கள் என்று நபி (ஸல்) கூறியனுப்பினார்கள்.

இடப்பக்கம் உள்ள படைக்கு ஜுபைர் இப்னு அவ்வாமை (ரழி) தளபதியாக்கி அவருக்கு ஒரு கொடியை வழங்கினார்கள். மக்காவின் மேல்புறமுள்ள ‘கதா’ என்ற இடத்தின் வழியாக மக்காவுக்குள் நுழைந்து ‘ஹுஜ்ன்’ என்ற இடத்தில் கொடியை நாட்டி தங்கள் வருகைக்காக காத்திருக்க வேண்டும் என்று அவருக்கு ஆணையிட்டார்கள்.

கால்நடையாக வந்த வீரர்களுக்கும் ஆயுதமின்றி வந்த வீரர்களுக்கும் அபூ உபைதாவை (ரழி) தளபதியாக்கி ‘பத்னுல் வாதி’ வழியாக மக்காவுக்குள் நுழையுமாறு அவருக்கு ஆணையிட்டார்கள்.

**இஸ்லாமியப் படை மக்காவுக்குள் நுழைகிறது**

நபி (ஸல்) கூறிய வழியில் இஸ்லாமியப் படையின் ஒவ்வொரு பிரிவும் புறப்பட ஆரம்பித்தது. காலித் (ரழி) மற்றும் அவரது படையினரும் தங்களை எதிர்த்த முஷ்ரிக்குகளை வெட்டி வீழ்த்தினர். காலிதின் படையிலிருந்த குர்ஸ் இப்னு ஜாபிர் ஃபிஹ், குனைஸ் இப்னு காலித் இப்னு ரபிஆ (ரழி) ஆகிய இருவரும் படையை விட்டு வழிதவறி வேறொரு வழியில் சென்றனர். இவ்விருவரையும் குறைஷிகள் கொன்று விட்டனர். ‘கன்தமா’ என்ற இடத்தில் ஒன்று சேர்ந்திருந்த குறைஷி வீணர்கள் காலிதின் படையை எதிர்த்தனர். ஆனால், முஸ்லிம் வீரர்கள் எதிர்த்துத் தாக்கியதில் பன்னிரெண்டு முஷ்ரிக்குகள் கொல்லப்பட்டனர். இதைப் பார்த்து கதிகலங்கிய முஷ்ரிக்குகள் உயிர் பிழைக்க தப்பித்து ஓடலானார்கள். இவ்வாறு புறமுதுகுக் காட்டி ஓடியவர்களில் முஸ்லிம்களுடன் சண்டை செய்வதற்காக நீண்ட காலமாக ஆயுதத்தைத் தயார் செய்து வைத்திருந்த மாஸ் இப்னு கைஸும் ஒருவனாவான். தப்பித்து ஓடிய இவன் தனது வீட்டினுள் ஒளிந்து கொண்டு “விரைவாகக் கதவை தாழிட்டுக் கொள்!” என்று கத்தினான். அவனைப் பார்த்த அவனது மனைவி “என்னென்னவோ பேசிக் கொண்டிருந்தாயே! அந்த வீராப்பெல்லாம் இப்போது எங்கே போய்விட்டது?” என்று கேட்டார். அதற்கு அவன் பாடிய கவிதைகளாவது:

“ஃகன்தமா போர்க்கள நாளை நீ கண்டிருந்தால்....
நீ என்னைப் பழித்து ஒரு சொல் கூட உதிர்க்க மாட்டாய்.
ஸஃப்வான் ஓட் இக்மாவும் ஓட ஓட,
உருவிய வாள்கள் எங்களை வரவேற்றன
முன் கைகளையும் தலைகளையும் வெட்டி அவை சாய்த்தன
அங்கு வீரர்களின் முழக்கங்கள், கர்ஜனைகள்,
முக்கல் முனகல் இதைத் தவிர வேறெதையும் கேட்க முடியவில்லை......”

காலித் (ரழி) இவ்வாறு மக்காவுக்குள் நுழைந்து ஸஃபா மலையில் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தார்.

இது ஒருபுறமிருக்க ஜுபைர் (ரழி), இன்றைய 'ஃபத்ஹ்' பள்ளிவாசலுக்கருகில் உள்ள 'ஹஜுன்' என்ற இடத்தில் நபி (ஸல்) தன்னிடம் கொடுத்த கொடியை நட்டுவிட்டு அவ்விடத்தில் ஒரு கூடாரம் அமைத்தார்கள். பிறகு நபி (ஸல்) அவர்களின் வருகைக்காக அங்கேயே காத்திருந்தார்கள்.

**நபியவர்கள் சங்கைமிகு பள்ளிக்குள் நுழைகிறார்கள் சிலைகளை அகற்றுகிறார்கள்**

நபி (ஸல்) அங்கிருந்து புறப்பட்டார்கள். அவர்களைச் சுற்றி முன்னும் பின்னும் முஹாஜிர்களும் அன்சாரிகளும் புடைசூழ அணிவகுத்துச் சென்றனர். இந்நிலையில் பள்ளிக்குள் நுழைந்து ஹஜ்ருல் அஸ்வதை நெருங்கிச் சென்று, அதைத் தங்களது கையால் தொட்டு முத்தமிட்டு கஅபாவைத் தவாஃப் செய்தார்கள். தங்களது கையில் இருந்த வில்லால் கஅபாவைச் சுற்றி இருந்த 360 சிலைகளை

''சத்தியம் வந்தது அசத்தியம் மறைந்தது. நிச்சயமாக அசத்தியம் அழிந்தே தீரும்'' (அல்குர்ஆன் 17:81)

என்ற வசனத்தை ஓதியவர்களாகக் குத்திக் கீழே தள்ளினார்கள். சிலைகளெல்லாம் முகம் குப்புற கீழே விழுந்தன. நபியவர்கள் வாகனத்தின் மீது இருந்து கொண்டே தவாஃப் செய்தார்கள். இஹ்ராம் அணியாமல் இருந்ததால் தவாஃப் மட்டுமே செய்தார்கள். தவாஃப முடித்தவுடன் உஸ்மான் இப்னு தல்ஹா (ரழி) அவர்களை அழைத்து அவரிடம் இருந்து கஅபாவின் சாவியைப் பெற்று அதைத் திறக்கக் கூறினார்கள். நபி (ஸல்) உள்ளே நுழைந்து வரையப்பட்ட பல படங்களைப் பார்த்தார்கள். அப்படங்களில் நபி இப்றாஹீம், நபி இஸ்மாயீல் (அலை) ஆகிய இருவரும் அம்புகளைக் கொண்டு குறி பார்க்கும் வகையில் வரையப்பட்ட படமும் இருந்தது. இதனைக் கண்ட நபி (ஸல்) ''அல்லாஹ் இவ்வாறு வரைந்தவர்களை நாசமாக்குவானாக! இவ்விருவரும் ஒரு காலமும் அம்புகளைக் கொண்டு குறி பார்த்ததே கிடையாது'' என்றார்கள். மேலும், கஅபாவுக்குள் மரத்தால் செய்யப்பட்ட ஒரு பெண் புறாவின் உருவம் இருந்தது. அதையும் நபி (ஸல்) தங்களது கைகளால் உடைத்தார்கள். நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்கிணங்க அங்கு வரையப்பட்டிருந்த மற்ற உருவப் படங்களும் அழிக்கப்பட்டன.

நபியவர்கள் கஅபாவில் தொழுகிறார்கள் குறைஷிகளிடம் உரையாற்றுகிறார்கள்!

நபி (ஸல்) கஅபாவுக்குள் நுழைந்து கதவைத் தாழிட்டுக் கொண்டார்கள். நபியுடன் உஸாமா, பிலால் (ரழி) ஆகிய இருவரும் உள்ளே உடனிருந்தனர். கஅபாவின் வாயிலுக்கு நேர் திசையிலுள்ள சுவரை நோக்கி வந்து மூன்று முழங்கள் சுவருக்கும் தனக்குமிடையே இடைவெளி விட்டு நின்று கொண்டார்கள்.

கஅபா அப்போது ஆறு தூண்கள் மீது அமைக்கப்பட்டிருந்தது. நபி (ஸல்) தனது இடப்புறத்தில் இரண்டு தூண்கள், வலப்புறத்தில் ஒரு தூண் தனக்குப் பின் மூன்று தூண்கள் இருக்குமாறு அமைத்து (நின்று) கொண்டு தொழுதார்கள். தொழுத பின் கஅபாவுக்குள் சுற்றி வந்து ஒவ்வொரு மூலையிலும் (லாஇலாஹஇல்லல்லாஹ், அல்லாஹு அக்பர்) இறைவனை புகழ்ந்து, மேன்மைப் படுத்தினார்கள். பின்னர் கதவைத் திறந்தார்கள். குறைஷிகள் அனைவரும் பள்ளிக்குள் திரண்டு வரிசையாக நின்று கொண்டு நபி (ஸல்) என்ன செய்யப் போகிறார்கள் என எதிர்பார்த்திருந்தனர்.

நபி (ஸல்) கஅபா வாசலுடைய நிலைப்படியை பிடித்துக் கொண்டு நின்றார்கள். கீழே பள்ளியில் எதிர்பார்த்துக் காத்து நிற்கும் குறைஷிகளை நோக்கி பின்வருமாறு உரை நிகழ்த்தினார்கள். ''வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு எவ்விதத் துணையுமில்லை. அவன் தனது வாக்கை நிலைநாட்டினான். தன் அடியாருக்கு உதவி செய்தான். அவனே ராணுவங்கள்

அனைத்தையும் தனியாகத் தோற்கடித்தான். இதுவரை நடைமுறையில் இருந்து வந்த அல்லாஹ்வின் இந்த இல்லத்தை பராமரிப்பது, ஹாஜிகளுக்குத் தண்ணீர் புகட்டுவது ஆகிய இவ்விரண்டைத் தவிர ஏனைய அனைத்து சிறப்புகளையும் மற்ற பொருள் அல்லது உயிர் சம்பந்தப்பட்ட அனைத்து சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் எனது இவ்விரண்டு கால்களுக்குக் கீழ் புதைத்து விட்டேன் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

தவறாகக் கொலை செய்து விடுதல் என்பது 'ஷிப்ஹுல் அம்தை''ப் போன்றுதான். (சாட்டை அல்லது கைத்தடி போன்ற கொலை செய்யப் பயன்படாத ஆயுதங்களால் தாக்கும் போது ஏற்படும் எதிர்பாராத கொலைக்கு 'ஷிபஹுல் அம்து' எனப்படும்.) இதற்குக் கடுமையான குற்றப் பரிகாரம் கொடுக்கப்பட வேண்டும். (அதாவது, 100 பெண் ஒட்டகங்கள் கொடுக்க வேண்டும். அதில் 40 சினை ஒட்டகங்களாக இருக்க வேண்டும்.) குறைஷிக் கூட்டமே! அறியாமைக் காலத்தில் நீங்கள் கடைப்பிடித்த மூடத்தனமான பழக்க வழக்கங்களையும் முன்னோர்களைக் கொண்டு பெருமையடித்து வந்ததையும் இப்பொழுது உங்களை விட்டு அல்லாஹ் போக்கி விட்டான் மக்கள் அனைவரும் ஆதமிடமிருந்து வந்தவர்கள் ஆதம் மண்ணால் படைக்கப்பட்டவர். பின்பு அடுத்து வரும் திருவசனத்தை ஓதிக் காட்டினார்கள்:

மனிதர்களே! உங்கள் அனைவரையும் நிச்சயமாக நாம் ஒரே ஆண், ஒரே பெண்ணிலிருந்துதான் படைத்தோம். பின்னர், ஒருவர் மற்றவரை அறிந்து கொள்ளும் பொருட்டு, உங்களைக் கிளைகளாகவும் கோத்திரங்களாகவும் ஆக்கினோம். (ஆதலால், உங்களில் ஒருவர் மற்றவரைவிட மேலென்று பெருமை பாராட்டிக் கொள்வதற்கில்லை.) எனினும், உங்களில் எவர் இறையச்சம் உடையவராக இருக்கின்றாரோ, அவர்தான் அல்லாஹ்விடத்தில் நிச்சயமாக மிகக் கண்ணியமானவர். நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும்) நன்கறிந்தவனாகவும் நன்கு தெரிந்தவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 49:13)

**உங்களை எவ்விதத்திலும் பழிக்கப்படாது**

மேற்கூறிய திருவசனத்தை ஓதிக் காட்டிய பின்பு "குறைஷிக் கூட்டத்தினரே! நான் உங்களிடம் எவ்விதம் நடந்து கொள்வேன் எனக் கருதுகிறீர்கள்?" என நபி (ஸல்) கேட்க, "நல்லமுறையில் நடந்து கொள்வீர்கள். நீங்கள் எங்களுக்குச் சிறந்த சகோதரராகவும், எங்களில் சிறந்த சகோதரன் மகனாகவும் இருக்கின்றீர்கள்" என பதில் கூறினர். நபி (ஸல்) "நான் உங்களுக்கு யூஸுஃப் நபி தனது சகோதரருக்குக் கூறியதைப் போன்றுதான் கூறுவேன். உங்களை எவ்விதத்திலும் பழிக்கப்படாது. நீங்கள் மன்னிக்கப்பட்டவர்கள். நீங்கள் செல்லலாம்" என்று கூறினார்கள்.

**கஅபாவின் சாவியை உரியவரிடம் வழங்குதல்**

உரைக்குப் பின்பு நபி (ஸல்) கீழிறங்கி வந்து பள்ளியில் அமர்ந்தார்கள். உஸ்மான் இப்னு தல்ஹாவிடமிருந்து கஅபாவின் சாவியை அலீ (ரழி) வாங்கியிருந்தார். அச்சாவியை எடுத்துக் கொண்டு அலீ (ரழி) நபி (ஸல்) அவர்களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! ஹாஜிகளுக்கு நீர் புகட்டும் பொறுப்பு எங்களுக்கு இருப்பதுடன் கஅபாவைப் பராமரிக்கும் பொறுப்பையும் எங்களுக்கு வழங்குங்கள். அல்லாஹ் உங்களுக்கு அருள் புரியட்டும்!" என்றார்கள். இவ்விஷயத்தைக் கூறியவர் அப்பாஸ் (ரழி) என்றும் ஓர் அறிவிப்பில் வந்துள்ளது. நபி (ஸல்) "உஸ்மான் இப்னு தல்ஹா எங்கே?" என்று கேட்டு அவரை அழைத்து வரக் கூறி "உஸ்மானே! இதோ உனது சாவியைப் பெற்றுக் கொள். இன்றைய தினம் நன்மை மற்றும் நேர்மையின் தினமாகும்" என்று கூறினார்கள்.

'தபகாத்' என்ற நூலில் இப்னு ஸஅத் (ரழி) குறிப்பிடுகிறார்: நபி (ஸல்) உஸ்மானிடம் சாவியை வழங்கும்போது, "இதை நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கள். இது உங்களிடம் காலம் காலமாக இருந்து வரட்டும். அநியாயக்காரனைத் தவிர வேறெவரும் உங்களிடமிருந்து

இதனைப் பறிக்க மாட்டான். உஸ்மானே! நிச்சயமாக அல்லாஹ் உங்களை தனது வீட்டிற்கு நம்பிக்கைக்குரிய பொறுப்பாளியாக நியமித்திருக்கின்றான். இந்த கஅபாவின் மூலம் நல்வழியில் உங்களுக்குக் கிடைக்கும் பொருட்களை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.

## கஅபாவின் மேல் பிலால் அதான் கூறுகிறார்

தொழுகை நேரம் வந்ததும் பிலாலுக்கு (பாங்கு) அதான் ஒலிக்கும்படி நபி (ஸல்) கட்டளை இட்டார்கள். கஅபாவின் முற்றத்தில் அபூஸுஃப்யான் இப்னு ஹர்ஃப், அத்தாபு இப்னு உஸைது, ஹாரிஸ் இப்னு ஹிஷாம் ஆகிய பெருந்தலைவர்கள் வீற்றிருந்தனர். அதனைக் கேட்ட அத்தாபு ''திண்ணமாக அல்லாஹ் எனது தந்தை உஸைதைக் கண்ணியப்படுத்தி காப்பாற்றி விட்டான். இதுபோன்ற சப்தத்தை அவர் கேட்கவில்லை. அப்படிக் கேட்டிருந்தால் அவர் கடுங்கோபம் கொண்டிருப்பார்'' எனக் கூறினார். அதற்கு ஹாரிஸ், ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இந்த அதானில் சொல்லப்படும் விஷயம் உண்மை என்று நான் அறிந்திருந்தால் அதனைப் பின்பற்றி இருப்பேன்.'' இதனையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அபூஸுஃப்யான் ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இது விஷயமாக நான் ஏதும் பேசமாட்டேன். அப்படி ஏதேனும் நான் பேசிவிட்டால் இந்தப் பொடிக் கற்கள் கூட என்னைப் பற்றிய செய்தியைத் தெரிவித்து விடும்.'' இவர்களின் இவ்வுரையாடலுக்குப் பின் அவர்களிடம் சென்ற நபி (ஸல்) ''நீங்கள் பேசியது எனக்கு நன்கு தெரியும்'' என்று கூறிவிட்டு, அவர்கள் பேசியவற்றை அவர்களிடமே விவரமாகக் கூறினார்கள்.

இதனைக் கேட்ட ஹாரிஸும் அத்தாபும் (ரழி) ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! எங்களுடன் இருந்த வேறு யாருக்கும் இவ்விஷயம் தெரியவே தெரியாது. அவ்வாறிருக்க யாராவது உங்களுக்கு இதனைப் பற்றி சொல்லியிருக்கலாம் என்று எங்ஙனம் நாங்கள் கூற இயலும்? எனவே நீங்கள் அல்லாஹ்வின் தூதர்தான் என சாட்சிக் கூறுகிறோம்'' என்றனர்.

## 'ஸலாத்துல் ஃபத்ஹ்' அல்லது 'ஸலாத்துஷ் ஷுக்ர்''

அன்றைய தினம் நபி (ஸல்) உம்மு ஹானி பின்த் அபூதாலிப் (ரழி) அவர்களின் வீட்டிற்குச் சென்று குளித்துவிட்டு எட்டு ரகஅத்துகள் தொழுதார்கள். அல்லாஹ் அவர்களுக்களித்த வெற்றியை முன்னிட்டு நன்றி செலுத்தும் பொருட்டு தொழுத தொழுகை என்பதால் இந்தத் தொழுகையை 'ஸலாத்துல் ஃபத்ஹ்' (வெற்றிக்கான தொழுகை) அல்லது 'ஸலாத்துஷ் ஷுக்ர்' (நன்றி தொழுகை) என்று கூறலாம். ஆனால் சிலர், நபி (ஸல்) இத்தொழுகையைத் தொழுத நேரம் 'ழுஹா' (முற்பகல்) நேரமாக இருந்ததால் இதனை 'ஸலாத்துழ் ழுஹா' என எண்ணிக் கொள்கின்றனர்.

உம்மு ஹானி (ரழி) தனது கணவன் இரண்டு சகோதரர்களுக்கும் அடைக்கலம் கொடுத்து பாதுகாப்பு வழங்கியிருந்தார். இவ்விருவரையும் கொன்றுவிட அலீ (ரழி) விரும்பினார்கள். ஆனால், இவ்விருவரையும் வீட்டிற்குள் வைத்துக் கொண்டே உம்மு ஹானி (ரழி) வீட்டைத் தாழிட்டு விட்டார்கள். நபி (ஸல்) வீடு வந்தவுடன் அவ்விருவருக்காக பாதுகாப்புக் கோரினார்கள். அதற்கு நபி (ஸல்) ''உம்மு ஹானியே! நீங்கள் பாதுகாப்புத் தந்தவர்களுக்கு நாமும் பாதுகாப்பை வழங்குகிறோம்'' என்று கூறினார்கள்.

## பெருங்குற்றவாளிகளைக் கொல்ல கட்டளையிடுதல்

நபி (ஸல்) இன்றைய தினம் ஒன்பது கொடுங்காஃபிர்களை அவர்கள் கஅபாவின் திரைக்குள் நுழைந்தாலும் கொல்லப்பட வேண்டும் எனக் கட்டளையிட்டார்கள். அவர்களின் பெயர்கள்: 1) அப்துல் உஜ்ஜா இப்னு கதல், 2) அப்துல்லாஹ் இப்னு ஸஅத் இப்னு அபூ சரஹ், 3) இக்மா இப்னு அபூஜஹ்ல், 4) ஹாரிஸ் இப்னு நுஃபைசல் இப்னு துஹப், 5) மகீஸ் இப்னு சுபாபஹ், 6) ஹபார் இப்னு அல் அஸ்வத், 7, 8) இப்னு கத்தலின் இரண்டு

அடிமைப் பாடகிகள், 9) அப்துல் முத்தலிப் வம்சத்திற்குச் சொந்தமான ‘சாரா’ எனும் அடிமை. இப்பெண்ணிடம்தான் ஹாதிப் அனுப்பிய ராணுவ இரகசிய கடிதம் பறிமுதல் செய்யப்பட்டது. இவர்களைப் பற்றியுள்ள குறிப்புகள் அடுத்து வருகின்றன.

அப்துல்லாஹ் இப்னு ஸஅதை உஸ்மான் (ரழி) அழைத்து வந்து சிபாரிசு செய்ய நபி (ஸல்) ஏற்றுக் கொண்டார்கள். எனவே, அவர் உயிர் பாதுகாக்கப்பட்டது. இவர் இதற்கு முன் ஒருமுறை இஸ்லாமை ஏற்று ஹிஜ்ரத் செய்து மதீனா வந்திருந்தார். சில காலங்கள் அங்கு தங்கிய பின் இஸ்லாமை விட்டு வெளியேறி மக்கா வந்துவிட்டார். இவர் நபியின் அவையில் தான் இப்போது முஸ்லிமாகி விடுவதாக அறிவித்தார். ஆனால், தங்களது தோழர்களில் யாராவது ஒருவர் அவரை கொன்றுவிட வேண்டும் என்ற எண்ணத்தில் நபி (ஸல்) இருந்ததால் அவரது இஸ்லாமை ஏற்க தயக்கம் காட்டினார்கள். பின்பு சிறிது நேரம் கழித்து அவரது இஸ்லாமை நபி (ஸல்) ஏற்றுக் கொண்டார்கள். அப்துல் உஜ்ஜா இப்னு கத்தல் கஅபாவின் திரையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டான். நபித்தோழர் ஒருவர் நபியிடம் வந்து “என்ன செய்வது?” என்று கேட்டார். “அவனைக் கொன்று விடவேண்டியதுதான்” என நபி (ஸல்) அவர்கள் கூறியவுடன் அவர் அவனைக் கொன்று விட்டார்.

மகீஸ் இப்னு சபாபா- இவன் ஏற்கனவே முஸ்லிமாக இருந்தான். ஓர் அன்சாரித் தோழரை கொன்றுவிட்டு மதம் மாறி முஷ்ரிக்குகளுடன் சேர்ந்து கொண்டான். இவனை நுபைலா இப்னு அப்துல்லாஹ் (ரழி) என்பவர் கொன்றொழித்தார்.

ஹாரிஸ் இப்னு நுஃபைல்- இவன் மக்காவில் நபியவர்களை அதிகம் துன்புறுத்திக் கொண்டிருந்தான். இவனை அலீ (ரழி) கொன்றார்கள்.

ஹப்பார் இப்னு அஸ்வத்- இவர்தான் நபி (ஸல்) அவர்களின் மகள் ஜைனப் (ரழி) ஹிஜ்ரத் செய்து மதீனா சென்றபோது வழிமறித்து தனது ஈட்டியால் குத்தினார் இதனால் அவர்கள் அமர்ந்திருந்த (கஜாவா) ஒட்டகத் தொட்டியிலிருந்து கீழே விழுந்தார்கள் அவர்களது வயிற்றில் காயமேற்பட்டு கரு கலைந்துவிட்டது. இவர் மக்கா வெற்றியின் போது அங்கிருந்து தப்பி ஓடினார் பின்பு சில காலம் கழித்து இஸ்லாமை ஏற்றார்.

மற்ற இப்னு கத்லுடைய இரு அடிமைப் பாடகிகளில் ஒருத்தி கொலையுண்டாள். மற்றவள் முஸ்லிம் ஒருவரால் அடைக்கலம் தரப்பட்டு பின்னர் இஸ்லாமை ஏற்றார். அவ்வாறே ‘சாரா’ என்ற அடிமைப் பெண்ணும் அடைக்கலமாகி இஸ்லாமைத் தழுவினார்.

அறிஞர் இப்னு ஹஜர் (ரஹ்) கூறுகிறார்: ஹாரிஸ் இப்னு துலாத்தில் அல்குஸாயீ என்பவனையும் கொல்லும்படி நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். எனவே, அவனை அலீ (ரழி) கொன்றொழித்தார்கள் என அபூ மஃஷக் (ரழி) கூறுகிறார்.

பிரபல கவிஞர் கஅப் இப்னு ஜுஹைரையும் கொல்லும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள். ஆனால், இவர் நபி (ஸல்) அவர்கள் சமூகம் வந்து இஸ்லாமை ஏற்று தண்டனையிலிருந்து தப்பித்துக் கொண்டார். இவரைப் பற்றிய விரிவான செய்தி பின்னால் வரவிருக்கின்றது.

இவ்வாறே ஹம்ஜா (ரழி) அவர்களைக் கொலை செய்த வஹ்ஷியையும் கொன்றுவிட கட்டளையிடப்பட்டது. பின்னர் இஸ்லாமைத் தழுவியதால் மன்னிக்கப்பட்டது. அபூஸுஃப்யானின் மனைவி ஹிந்த் பின்த் உத்பாவும் கொலைப் பட்டியலில் இருந்தார். அவரும் இஸ்லாமை ஏற்றதால் மன்னிக்கப்பட்டார். இப்னு கதலின் அடிமைப் பெண் அர்னப் என்பவளும் கொலையுண்டாள் என இமாம் ஹாகிம் (ரஹ்) குறிப்பிடுகின்றார். கொலையுண்டவர்களில் உம்மு ஸஅத் என்பவரும் உண்டு என இப்னு இஸ்ஹாக் (ரஹ்) குறிப்பிடுகின்றார். இந்த கணக்கின்படி எட்டு ஆண்களும் ஆறு பெண்களும்

இப்பட்டியலில் இடம் பெற்றிருந்தனர். ஆனால், இங்கு கூறப்பட்ட அர்னப், உம்மு ஸஅத் இருவரும் இப்னு கத்தலின் இரண்டு பாடகிகளாக இருக்கலாம். அவ்விருவருடைய பெயர்கள் அல்லது புனைப் பெயர்களில் ஏற்பட்ட கருத்து வேற்றுமையால் தனித் தனியாகக் கூறப்பட்டிருக்கலாம். (இப்னு ஹஜர் (ரஹ்) கூற்று முடிவுற்றது.) (ஃபத்ஹுல் பாரி)

**ஸஃப்வான் இப்னு உமய்யா, ஃபழாலா இப்னு உமைய்யா இஸ்லாமைத் தழுவுதல்**

ஸஃப்வான் குறைஷிகளின் பெருந்தலைவர்களில் ஒருவராக இருந்தும் அவரைக் கொல்ல வேண்டுமென்று நபி (ஸல்) கட்டளையிடவில்லை. இருப்பினும் அவர் பயந்து மக்காவிலிருந்து ஓட்டம் பிடித்தார். அவருடைய முன்னாள் நண்பர் உமைர் இப்னு வஹப் அல் ஜுமஹீ நபியிடம் அவருக்காக (பாதுகாப்பு) அபயம் தேடினார். நபி (ஸல்) அதனை ஏற்று மக்காவுக்குள் வரும் போது தாம் அணிந்திருந்த தலைப்பாகையைக் கொடுத்தனுப்பினார்கள். உமைர் (ரழி) அதனை பெற்றுக் கொண்டு ஸஃப்வானைத் தேடிப் புறப்பட்டார். ‘ஜுத்தா’ எனும் கடற்கரையில் யமன் நோக்கிய பயணத்திற்கு ஸஃப்வான் ஆயத்தமான போது உமைர் (ரழி) அவரைச் சந்தித்து நபி (ஸல்) அவர்களிடம் அழைத்து வந்தார். ஸஃப்வான் நபியிடம் தனக்கு இரண்டு மாத கால அவகாசம் வேண்டுமெனக் கோரினார். அதற்கு நபி (ஸல்) நான்கு மாத கால அவகாசம் தருவதாக மொழிந்தார்கள். சில நாட்களுக்கு பின் ஸஃப்வான் இஸ்லாமைத் தழுவினார். இவருடைய மனைவியோ இவருக்கு முன்பே இஸ்லாமை ஏற்றிருந்தார். நபி (ஸல்) இருவரையும் பழைய திருமண உறவைக் கொண்டே சேர்த்து வைத்தார்கள்.

ஃபழாலா- இவர் மிக்க துணிச்சலானவர். நபி (ஸல்) அவர்களைக் கொல்வதற்காகக் கிளம்பினார். நபியவர்களின் அருகில் வந்தவுடன் இவர் என்ன எண்ணத்தில் வந்துள்ளார் என்பதை வெளிச்சமாக்கிக் காட்டினார்கள். இதைச் செவிமடுத்த ஃபழாலா இவர் உண்மையான திருத்தூதர்தான் என விளங்கி இஸ்லாமை ஏற்றார்.

**நபியவர்களின் சொற்பொழிவு**

மக்கா வெற்றி கொண்ட இரண்டாம் நாள் மக்களுக்கு நபி (ஸல்) சொற்பொழிவாற்றினார்கள். அல்லாஹ்வை அவனுக்குரிய சிறப்புகள், தன்மைகள் ஆகியவற்றால் புகழ்ந்து மேன்மைப்படுத்திய பின் உரை நிகழ்த்தத் தொடங்கினார்கள். “மக்களே! நிச்சயமாக அல்லாஹ் வானங்கள், பூமியை படைத்த அன்றே மக்காவுக்கு அளப்பெரும் கண்ணியம் வழங்கியிருப்பதால் மறுமை நாள் வரை கண்ணியம் பொருந்தியதாகவே கருதப்பட வேண்டும். அல்லாஹ்வையும் மறுமையையும் நம்பிக்கை கொண்டுள்ள யாரும் அங்குக் கொலை புரிவதோ, மரம் செடி கொடிகளை அகற்றுவதோ கூடாது. நபி இங்கு போர் புரிந்தார்கள் என்று முன்னுதாரணம் காட்டினால் நீங்கள் அவருக்குச் சொல்லுங்கள், நிச்சயமாக அல்லாஹ் அவனது தூதருக்குத்தான் இந்த சிறப்புத் தகுதியை வழங்கியிருக்கின்றான் உங்களுக்கு அந்த உரிமையோ தகுதியோ அவன் வழங்கவில்லை மேலும் எனக்குப் பகல்பொழுதின் ஒரு குறிப்பிட்ட குறுகிய நேரத்திற்குத்தான் அனுமதிக்கப்பட்டது. அதன்பின் அதற்கு அல்லாஹ் வழங்கிய கண்ணியம் நேற்று அதற்குரிய கண்ணியத்தைப் போன்றே இன்று முதல் மீண்டும் திரும்பிவிட்டது. இங்குள்ளவர்கள் இங்கு வராதவர்களுக்குத் தெரிவித்து விடட்டும்”.

நபி (ஸல்) அவர்களின் உரையைப் பற்றி வரும் மற்றொரு அறிவிப்பில் பின்வரும் அம்சங்களும் இடம் பெற்றுள்ளன.

“அங்குள்ள முட்களை ஒடிக்கவோ, அங்குள்ள வேட்டைப் பிராணிகளை அங்கிருந்து விரட்டவோ, அங்கு கீழே கிடக்கும் பொருட்களை எடுக்கவோ கூடாது. ஆயினும், அதை உரியவரிடம் சேர்த்து வைக்கவும் மக்களிடம் தெரிவிக்கவும் எடுக்க அனுமதி உண்டு. இங்குள்ள புற்களைக்களையக் கூடாது.” அப்பொழுது அப்பாஸ் (ரழி) அவர்கள் ‘இத்கிர்’

என்ற செடியை களைந்து கொள்ள அனுமதி தாருங்கள். இது எங்கள் கொல்லர்களுக்கும் மற்ற வீட்டு உபயோகத்திற்கும் பயன்படுத்தப்படுகிறது'' எனக் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) இத்கிர் செடியை எடுத்து பயன்படுத்த அனுமதி அளித்தார்கள்.

குஜாஆ கிளையினர் மக்கா வெற்றியின் போது லைஸ் கிளையைச் சேர்ந்த ஒருவரைக் கொன்று விட்டனர். இதற்கு முன் அறியாமைக் காலத்தில் லைஸ் கிளையினர் குஜாஆ கிளையினரில் ஒருவரைக் கொன்றிருக்கின்றனர். அதற்குப் பழிவாங்கும் முகமாக இச்சந்தர்ப் பத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். இது தொடர்பாக நபி (ஸல்) இவ்வுரையில் குறிப்பிட்டுக் கூறினார்கள்:

''குஜாஆ சமூகத்தினரே! கொலை புரிதலைக் கைவிடுங்கள். கொலை புரிவது பயன்தக்கதாக இருந்தால் இதற்கு முன்னர் புரிந்த கொலைகளே உங்களுக்குப் போதும். இதற்குப் பிறகு அந்த மாபாதகச் செயலை செய்யாதீர்கள். நீங்கள் கொன்று விட்டவர்களுக்குரிய தியத்தை (கொலைக்கான நஷ்டஈட்டை) இன்று நான் நிறைவேற்றுகிறேன். இதற்குப் பின் யாராவது கொலை செய்யப்பட்டால் கொலையுண்டவன் உறவினர் இரண்டு வாய்ப்புகளில் ஒரு வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஒன்று, கொலையாளியைப் பழிக்குப் பழி கொல்வது அல்லது அவரிடமிருந்து தியத் வசூல் செய்து கொள்வது.'' யமன் வாசியான 'அபூ ஷாஹ்' என்பவர் ''அல்லாஹ்வின் தூதரே! இதனை எனக்கு எழுதிக் கொடுங்கள்'' என்றார். ''இதனை இவருக்கு எழுதி வழங்குங்கள்'' என நபி (ஸல்) தோழர்களுக்குக் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், ஸுனன் அபூதாவூது, இப்னு ஹிஷாம்)

### நபியவர்களைப் பற்றி அன்சாரிகள் அஞ்சுதல்

அல்லாஹ், நபி (ஸல்) அவர்களுக்கு மக்காவில் வெற்றி அளித்தான். இப்புனித நகரம் அவர்களது சொந்த ஊர் அவர்கள் பிறந்த ஊர் அவர்களுக்கு பிடித்தமான ஊர் என்பது தெரிந்ததே! நபியவர்கள் ஸஃபா மலையில் தங்களது கைகளை உயர்த்தி துஆச் செய்து கொண்டிருந்தார்கள். அந்நேரத்தில் அல்லாஹ் தனது இந்த ஊரை நபியவர்களுக்கு கைவசப் படுத்தித் தந்தான். எனவே, அவர்கள் இங்கேயே தங்கி விடுவார்களோ? என அன்சாரிகள் தங்களுக்குள் பேசிக் கொண்டனர்.

தங்களது பிரார்த்தனையை முடித்த பின்பு ''நீங்கள் என்ன பேசிக் கொண்டிருந்தீர்கள்?'' என நபி (ஸல்) அன்சாரிகளிடம் வினவினார்கள். ''அல்லாஹ்வின் தூதரே! ஒன்றுமில்லை'' என அவர்கள் கூறினர். நபி (ஸல்) மீண்டும் மீண்டும் கேட்கவே இறுதியில் தங்களிடையே என்ன பேசினோம் என்பதை தெரிவித்தனர். அதற்கு நபி (ஸல்) ''அல்லாஹ் காப்பாற்றுவானாக! நான் வாழ்ந்தால் உங்களுடன் வாழ்வேன். மரணித்தால் உங்களுடனே மரணிப்பேன்'' என்று கூறினார்கள்.

### பைஆ வாங்குதல்

அல்லாஹ் இஸ்லாமை ஓங்கச் செய்து, நபியும் முஸ்லிம்களும் மக்காவை வெற்றி கொள்ளும்படி செய்தான். இதைப் பார்த்த மக்காவாசிகள் இஸ்லாமே உண்மை மார்க்கம். வெற்றி பெற இஸ்லாமைத் தவிர வேறு வழியில்லை என்பதை மிகத் தெளிவாக புரிந்து கொண்டனர். எனவே, இஸ்லாமை ஏற்று நபி (ஸல்) அவர்களிடம் இஸ்லாமிய ஒப்பந்தம் (பைஆ) செய்வதற்கு ஒன்று கூடினர். நபி (ஸல்) ஸஃபா மலைக் குன்றுக்கு மேல் அமர்ந்து கொண்டு இதற்காக தயாரானார்கள். கீழே உமர் (ரழி) அமர்ந்து கொண்டார்கள். நபியவர்கள் மக்களிடமிருந்து இஸ்லாமிய ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்டிருந்தார்கள். தங்களால் இயன்ற அளவு செவிமடுப்போம் கட்டுப்படுவோம் என மக்கள் பைஆ செய்தனர்.

'அல்மதாக்' என்ற நூலில் வருவதாவது: நபி (ஸல்) அவர்கள் ஆண்களிடம் பைஆ பெற்ற பின்பு பெண்களிடம் வாங்கினார்கள். அப்போது நபி (ஸல்) ஸஃபாவின் மீதும், அதற்குக்

கீழே உமரும் அமர்ந்திருந்தனர். நபி (ஸல்) ஒவ்வொரு விஷயமாகக் கூற அதனை உமர் (ரழி) அவர்கள் மக்களுக்கு எடுத்துரைத்துக் கொண்டிருந்தார்கள். இந்நேரத்தில் அபூஸுஃப்யானின் மனைவி ஹிந்த் பின்த் உத்பா நபியவர்களிடம் வந்தார். உஹுத் போரில் வீரமரணம் எய்திய ஹம்ஜாவுடைய உடலைச் சின்னாபின்னமாக்கிய தனது செயலுக்கு நபி (ஸல்) என்ன செய்வார்களோ என்று அஞ்சியதால் தன்னை முழுதும் மறைத்துக் கொண்டு வந்தார். நபி (ஸல்) “நீங்கள் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்க மாட்டீர்கள் என்று எனக்கு வாக்குத் தர வேண்டும்” என்று கூற, உமர் (ரழி) பெண்களுக்கு அதை எடுத்துரைத்தார்கள். அடுத்து, “நீங்கள் திருடக் கூடாது” என்றார்கள். அதற்கு, “அபூஸுஃப்யான் ஒரு கஞ்சன். நான் அவருடைய பொருளில் கொஞ்சம் எடுத்துக் கொள்ளலாமா?” என ஹிந்த் வினவினார். “நீ எதனை எடுத்துக் கொண்டாயோ அது உனக்கு ஆகுமானதே” என்று அபூஸுஃப்யான் கூறினார்.

நபி (ஸல்) இவர்களின் உரையாடலைக் கேட்டு புன்னகை புரிந்து “கண்டிப்பாக நீ ஹிந்த் தானே” என்றார்கள். அதற்கவர் “ஆம்! நான் ஹிந்த்தான். சென்று போன என்னுடைய பிழைகளைப் பொறுத்துக் கொள்ளுங்கள்! அல்லாஹ்வும் தங்களை பொறுத்தருள்வான்!!” என்று கூறினார்.

“நீங்கள் விபசாரம் செய்யக் கூடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள். “ஒரு சுதந்திரமானவள் விபச்சாரம் புரிவாளா?” என ஹிந்த் ஆச்சரியப்பட்டார்.

“உங்களின் பிள்ளைகளை நீங்கள் கொல்லக் கூடாது” என நபி (ஸல்) கூறினார்கள். அதற்கு ஹிந்து, “நாங்கள் எங்கள் பிள்ளைகளை நன்றாக வளர்த்தோம் அவர்கள் பெரியவர்களானதும் நீங்கள் அவர்களைக் கொன்று குவித்தீர்களே! என்ன நடந்தது என்று உங்களுக்கும் அவர்களுக்கும்தான் தெரியும்” என்று கூறினார். உமர் (ரழி) சிரிப்பை அடக்க முடியாமல் சிரித்து சிரித்து மல்லாந்து விழுந்தார். அதைக் கண்டு நபி (ஸல்) புன்னகைத்தார்கள். ஹிந்த் இவ்வாறு கூறக் காரணம்: பத்ரு படைக்களத்தில் அவருடைய மகன் ஹன்ளலா இப்னு அபூ ஸுஃப்யான் கொல்லப்பட்டிருந்தார். அடுத்து, “நீங்கள் அவதூறு கூறலாகாது” என நபி (ஸல்) கூறவே, “அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவதூறு கூறுதல் மிகக் கெட்ட பண்பாகும். நீங்கள் நல்லவற்றையும், நற்குணங்களையுமே எங்களுக்கு கூறுகிறீர்கள்!” என ஹிந்த் பதிலுரைத்தார்.

“நீங்கள் நல்ல விஷயங்களில் எனக்கு மாறு செய்யக் கூடாது” என நபி (ஸல்) கூறவே, “அல்லாஹ்வின் மீது ஆணையாக! தங்களுக்கு மாறுபுரியும் எண்ணத்தில் நாங்கள் இங்கு அமர்ந்திருக்கவில்லை” என்று ஹிந்த் கூறினார்.

இந்நிகழ்ச்சிக்குப் பின் வீடு திரும்பிய ஹிந்த் வீட்டினுள் வைத்திருந்த சிலைகளைப் பார்த்து “நாங்கள் இதுவரை உங்களால் ஏமாற்றப்பட்டிருந்தோம்” எனக் கூறியவாறு அவற்றை உடைத்தெறிந்தார். (மதாக்குத் தன்ஜீல்)

ஹிந்த்தை பற்றி ஸஹீஹுல் புகாரியிலும் ஒரு நிகழ்ச்சி பதியப்பட்டுள்ளது. “ஹிந்த் நபியவர்களிடம் வந்து “அல்லாஹ்வின் தூதரே! இவ்வுலகில் யாருமே பெற்றிராத கேவலத்தை உங்களைச் சார்ந்தவர்கள் பெற வேண்டும் என நான் ஒரு காலத்தில் பிரியப்பட்டேன். இன்று, இவ்வுலகில் யாருமே கண்டிராத கண்ணியத்தை தாங்கள் அடைய வேண்டும் என மிக ஆசைப்படுகிறேன்” என்று கூறினார். “அல்லாஹ்வின் மீது ஆணையாக! இன்னும் என்ன சொல்லப் போகிறாய்?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். அவர் “அல்லாஹ்வின் தூதரே! அபூ ஸுஃப்யான் கஞ்சராக உள்ளார். அவருடைய செல்வத்திலிருந்து என் பிள்ளைகளுக்கு உணவளித்தல் குற்றமாகுமா?” என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) “அதனை நன்மையாகவே கருதுகிறேன்” என்று கூறினார்கள்.

### மக்காவில் நபியவர்களின் செயல்பாடுகள்

நபி (ஸல்) மக்காவில் 19 நாட்கள் தங்கியிருந்தார்கள். அக்காலக் கட்டத்தில் இஸ்லாமை எடுத்துரைத்தார்கள் அதன் சட்டதிட்டங்களை விவரித்தார்கள் மக்களுக்கு நேர்வழி மற்றும் இறை அச்சத்தை போதித்தார்கள் ஹரமின் எல்லைகளில் அடையாளக் கம்பங்களை புதுபிக்கும் பணியை குஜாஆ வமிசத்தவரான அபூஉஸைதுக்கு வழங்கினார்கள் அவர் நபி (ஸல்) கட்டளைப்படி அவற்றை செய்து முடித்தார். மேலும், இஸ்லாமிய அழைப்புப் பணிக்காகவும், சுற்றியுள்ள பகுதிகளில் இருந்த சிலைகளை உடைத்தெறிவதற்காகவும் தோழர்களின் குழுக்களை அனுப்பினார்கள் அவை அனைத்தும் உடைத்து நொறுக்கப்பட்டன. நபியவர்களின் அறிவிப்பாளர், “அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர்கள் தங்கள் வீடுகளிலுள்ள சிலைகளை உடைத்தெறிய வேண்டும்” என்று அறிவித்துக் கொண்டிருந்தார்.

### படைப் பிரிவுகளும் குழுக்களும்

1) ‘நக்லா’ என்ற இடத்தில் ‘உஜ்ஜா’ என்ற சிலை இருந்தது. இதுவே குறைஷிகளுடைய சிலைகளில் மகத்துவம் மிக்கதாக இருந்தது. ஷைபான் கிளையினர் அந்தச் சிலையின் பூசாரிகளாக இருந்தனர். மக்காவில் வெற்றிப் பணிகள் முடிந்து முழு அமைதி நிலவிய பின்பு (ஹிஜ்ரி 8) ரமழான் மாதம் முடிய ஐந்து நாட்கள் மீதமிருக்கும், நபி (ஸல்) காலித் இப்னு வலீதை முப்பது வீரர்களுடன் அந்தச் சிலையை உடைத்தெறிய அனுப்பினார்கள். அதை உடைத்து வந்த காலிதிடம் “ஏதாவது அங்கு கண்டீர்களா?” என்று நபி (ஸல்) கேட்க, அவர் “நான் எதையும் காணவில்லை” என்றார். “அப்படியானால் நீ அதனைச் சரியாக உடைக்கவில்லை. திரும்பச் சென்று அதனை உடைத்து வா!” என்று அனுப்பி வைத்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் இப்பேச்சைக் கேட்டு வெகுண்டெழுந்த காலித் (ரழி) வாளை உருவியவாறு தனது தோழர்களுடன் உஜ்ஜாவை நோக்கி பறந்தார். அச்சிலையருகே சென்றவுடன் தலைவிரி கோலமாக நிர்வாண நிலையில் கருத்த பெண் உருவம் ஒன்று காலிதை நோக்கி வந்தது. அங்குள்ள பூசாரி உஜ்ஜாவின் பெயரைக் கூறி சப்தமிட்டு அழைத்தான். காலித் (ரழி) தன் முன் தோன்றிய அவ்வுருவத்தை இரண்டாகப் பிளந்தார். பின்பு நபியவர்களிடம் திரும்பி வந்து நடந்த நிகழ்ச்சியை விவரித்தார். “ஆம்! அதுதான் உஜ்ஜா. இனி, உங்கள் ஊர்களில் யாரும் அதனை வணங்குவதிருந்து நிராசையடைந்து விட்டது” என நபி (ஸல்) நவின்றார்கள்.

2) மக்காவின் வட கிழக்கே 150 கி.மீ. தொலைவில் ‘ருஹாத்’ என்னுமிடத்தில் ஹுதைல் கிளையினர் வணங்கும் ‘சுவா’ என்ற சிலை இருந்தது. அதனை உடைக்கும்படி இதே ரமழான் மாதத்தில் அம்ர் இப்னு ஆஸை நபி (ஸல்) அனுப்பினார்கள். அம்ரு சிலையருகே வந்தவுடன் அதன் பூசாரி “நீ எதற்கு வந்துள்ளாய்?” என வினவினான். “இச்சிலையை உடைத்து வர நபி (ஸல்) கட்டளையிட்டுள்ளார்கள்” என அம்ர் பதில் தந்தார். பூசாரி, “உன்னால் அது முடியாது” என்று வீராப்பு பேசினான். அம்ரு (ரழி) “ஏன் முடியாது?” என்றார். “உன்னால் அதனை நெருங்கவே முடியாது” என்றான். “இன்னுமாடா வழிகேட்டில் வீழ்ந்து கிடக்கிறாய்? உனக்கென்ன கேடு? அது கேட்குமா? அதனால் பார்க்கத்தான் முடியுமா?” என்று கூறியவாறு சிலையருகே வந்து அதனை அம்ருப்னு ஆஸ் (ரழி) உடைத்துத் தள்ளினார். அந்தக் கோயிலையும் அங்குள்ள உண்டியலையும் உடைத்து பார்க்கும்படி தோழர்களுக்குக் கட்டளையிட்டார். ஆயினும் எதுவுமே கிட்டவில்லை. “இப்பொழுது உன் கருத்து என்ன?” என பூசாரியிடம் அம்ரு (ரழி) வினவ “நான் அல்லாஹ்விடம் சரணடைந்தேன். இஸ்லாமை ஏற்றுக் கொண்டேன்” என பூசாரி கூறினார்.

3) ‘குதைத்’ என்ற ஊரருகே ‘முஷல்லல்’ என்ற இடத்தில் ‘மனாத்’ எனும் சிலை இருந்தது. அதனை ‘அவ்ஸ்‘‘, ‘கஸ்ரஜ்‘‘, ‘கஸ்ஸான்’ மற்றும் சில குலத்தவர் வணங்கிக் கொண்டிருந்தனர். அதனை இடித்து வர ஸஅத் இப்னு ஜைத் அஷ்ஹலி (ரழி) என்பவன் தலைமையில் இருபது பேர் கொண்ட படையை இதே மாதத்தில் நபி (ஸல்) அனுப்பினார்கள். ஸஅது (ரழி) அங்கு சென்றபோது அங்குள்ள பூசாரி ‘‘நீ எந்த நோக்கத்தில் வந்திருக்கின்றாய்?’’ என்று வினவ ‘‘மனாத்தை உடைக்க வந்துள்ளேன்’’ என்று பதிலளித்தார். ‘‘நீ விரும்பியதைச் செய்து கொள்’’ என பூசாரி மறுமொழி கூறினார். ஸஅது அச்சிலையருகே வந்தபோது கருநிற பெண்ணொருத்தி தலைவிரி கோலமாக மார்பில் அடித்துக் கொண்டு வெளியேறி வந்தாள். அதைக் கண்ட பூசாரி ‘‘மனாத்தே! நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்! இதோ உனது எதிரிகள் உன்னை ஒழித்துக் கட்ட வந்து விட்டனர்’’ எனக் கூக்குரலிட, ஸஅது (ரழி) அச்சிலையை வெட்டிச் சாய்த்தார். அங்கும் உண்டியல்களில் எதுவும் காணப்படவில்லை.

4) உஜ்ஜா சிலையை உடைத்துவிட்டுத் திரும்பிய காலித் (ரழி) அவர்களுக்கு ஜுதைமா சமூகத்தாரை இஸ்லாமிய மார்க்கத்தின் பக்கம் அழைக்கும் மற்றொரு பணியை நபி (ஸல்) வழங்கினார்கள். அதே ஆண்டு ஷவ்வால் மாதம் 350 தோழர்களுடன் புறப்பட்ட அப்படையில் முஹாஜிர்களும், அன்சாரிகளும், ஸுலைம் கூட்டத்தினரும் கலந்திருந்தனர். ஜுதைமா கூட்டத்தாரை அணுகி இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றுக் கொள்ளும்படி கூறியதும் அம்மக்கள் இஸ்லாமை ஏற்று ‘‘முஸ்லிமாக மாறினோம்’’ என்று கூறத் தெரியாமல், ‘‘மதம் மாறினோம்’’ என்று கூறினர். இதனை தவறாகப் புரிந்து கொண்ட காலித் (ரழி) அவர்களில் சிலரைக் கொன்றுவிட்டு மற்றும் சிலரைச் சிறைபிடித்து ஒவ்வொரு கைதிகளையும் படை வீரர்களிடம் ஒப்படைத்தார்கள். அங்கு தங்கியிருக்கும்போது ஒரு நாள் ‘‘ஒவ்வொரு படைவீரரும் தங்களுடைய கைதிகளைக் கொன்று விடுக’’ என காலித் (ரழி) கட்டளை பிறப்பித்தார்கள். அப்படையில் பங்கு கொண்ட மூத்த நபித்தோழர்களான இப்னு உமர் (ரழி) போன்றோர் அங்ஙனம் கொலை புரிவதற்கு மறுத்து விட்டனர். இவ்விஷயம் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. ‘‘அல்லாஹ்வே! காலித் செய்துவிட்ட இக்காரியத்திலிருந்து நான் விலகிக் கொள்கிறேன்’’ என இருமுறை வருத்தமாகக் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

படையில் கலந்திருந்த ஸுலைம் கூட்டத்தார் மட்டும் தளபதி காலிதின் ஆணைக்கிணங்கி கைதிகளைக் கொன்று விட்டனர். கொல்லப்பட்டவர்களின் சொந்தங்களுக்கு தியத் வழங்குவதற்காக நபி (ஸல்) அலீயை அனுப்பி வைத்தார்கள்.

இப்பிரச்சனையில் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபுக்கும் காலிதுக்கும் பேச்சு முற்றிப்போய் வாக்குவாதம் ஏற்பட்டது. இதனை அறிந்த நபி (ஸல்), ‘‘காலிதே! கொஞ்சம் பொறுங்கள்! எனது தோழர்களை விட்டுவிடுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! உஹுத் மலை தங்கமாக மாறி அதனை முழுவதும் அல்லாஹ்வுடைய பாதையில் நீ செலவு செய்தாலும், அவர்கள் ஒரு காலை அல்லது ஒரு மாலை அல்லாஹ்வின் பாதையில் சென்ற நன்மையை உம்மால் அடைய முடியாது’’ என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இதுவே மக்கா வெற்றியின் சுருக்கமான வரலாறு. இப்போர் முஸ்லிம்களுக்கு நிரந்தர வெற்றியை நிர்ணயித்தது மட்டுமல்ல இம்மாபெரும் போராட்டம் இறைநிராகரிப்புடைய கோட்டையை சுவடு தெரியாமல் நிர்மூலமாக்கியது. அரபு தீபகற்பத்தில் இறைநிராகரிப்பின் வாடையே வீசாமல் அழித்தொழித்து விட்டது. முழு அரபுலகமே முஸ்லிம்களுக்கும் முஷ்ரிக்குகளுக்கும் இடையே நடைபெற்று வந்த போர்களின் முடிவை ஆவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்தது. ஏனெனில், ஹரமை நிச்சயமாக சத்தியவாதிகள் (உண்மையாளர்கள்) மட்டுமே கைப்பற்ற முடியும் என்பதை நன்றாக அறிந்திருந்தனர். கஅபாவை அழிப்பதற்கு யானைப் படையுடன் வந்த அப்ரஹாவும் அவனது படையினரும் அடையாளம் தெரியாது சின்னா பின்னமாகி தின்னப்பட்ட வைக்கோல் போன்று ஆன

அவர்களின் வீழ்ச்சி வரலாறு, சத்தியத்தில் உள்ளவர் மட்டுமே கஅபாவை வெற்றி கொள்ள முடியும் என்ற உறுதியான நம்பிக்கையை கடந்த ஐம்பது ஆண்டு காலமாக அவர்களின் உள்ளத்தில் வேரூன்றச் செய்திருந்தது.

இது மட்டுமல்ல! இதற்கு முன் ஏற்பட்ட ஹுதைபிய்யா சமாதான ஒப்பந்தம் மகத்தான மக்கா வெற்றியின் தொடக்கமாக அமைந்தது. இந்த ஒப்பந்தத்திற்குப் பின் மக்கள் நிம்மதியாக வாழ்ந்து பழைய உறவுகளைப் புதுப்பித்து மெருகேற்றிக் கொண்டனர். இஸ்லாமிய மார்க்கத்தை மற்றவருக்கும் எடுத்து விளக்கிக் கூறினர். அதனைப் பற்றி தங்களிடையேயும் கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டனர். இந்நாள் வரை மக்காவில் திரைமறைவில் இஸ்லாமிய நெறியைக் கடைபிடித்து வாழ்ந்த முஸ்லிம்கள், இஸ்லாமை ஏற்றுக் கொண்டதை ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்திக் கொண்டதுடன் மற்றவர்களையும் மார்க்கத்தின் பக்கம் அழைக்க, பெரும் பாலானவர்கள் இஸ்லாமியப் பூங்காவிற்குள் இன்முகத்துடன் நுழைந்தனர். இதுவரை நடந்த போர்களில் முஸ்லிம் படையினர் எண்ணிக்கை மூவாயிரம், நான்காயிரத்தைத் தாண்டாத நிலை. ஆனால், ஹுதைபிய்யா ஒப்பந்தத்திற்குப் பின் நடந்த மக்கா போரிலோ பத்தாயிரம் வீரர்கள் கலந்து கொண்டனர். இப்போர் மக்களின் அறிவுக் கண்களைத் திறந்தது. இஸ்லாமை ஏற்பதற்கு குறுக்கிட்ட தடைக் கல்லைத் தகர்த்தெறிந்தது.

அரபு தீபகற்பத்தில் முழு அளவில் அரபுலகத்தை அரசியல் மற்றும் மார்க்க ரீதியாக தங்களது கட்டுப்பாட்டில் முஸ்லிம்கள் கொண்டு வந்தனர். ஹுதைபிய்யா ஒப்பந்தத்திற்குப் பின் ஏற்பட்ட முஸ்லிம்களுக்கு சாதாகமான சூழ்நிலை இம்மகத்தான வெற்றியால் முழுமை பெற்றது. இதன்பின் ஏற்பட்ட கால நிலைமைகள் அனைத்தும் முஸ்லிம்களுக்கே சாதகமாக அமைந்தன. அங்கு அனைத்தையும் முஸ்லிம்கள் தங்களது முழுக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தனர். முஸ்லிம்களின் நற்பண்புகளால் கவரப்பட்ட ஏனைய அரபு வமிசத்தினர், இஸ்லாமில் இணைய ஆர்வம் காட்டினர். அதிலிருந்து தடுத்து வந்த தீய சக்திகளும் அழிந்துவிட்டதால் இஸ்லாமை ஏற்றுக் கொள்வது அவர்களுக்கு இலகுவானது. அவர்களும் நபித்தோழர்களுடன் சேர்ந்து இஸ்லாமைப் பரப்புவதற்காக புறப்பட்டனர். இந்த அழைப்புப் பணிக்காக வரும் ஈராண்டுகளில் அவர்களுக்கு முறையான பயிற்சி அளிக்கப்பட்டது.

**மூன்றாம் கட்டம்**

இது நபி (ஸல்) அவர்களுடைய வாழ்வின் கடைசிக் கட்டம். இஸ்லாமிய அழைப்புப் பணி ஏறக் குறைய இருபதாண்டு காலமாகச் சந்தித்த சிரமங்கள், இன்னல்கள், துன்பங்கள், மோதல்கள், போர்கள் ஆகிய அனைத்திற்குப் பின் ஏற்பட்ட அழகிய பின்விளைவுகள்தான் இக்காலக் கட்டத்தின் முக்கிய அம்சங்கள். இந்த மக்கா வெற்றிக்குப் பின் அரபுலகமே முற்றிலும் மாற்றம் கண்டது. அரபிய தீபகற்பத்தின் எதிர்காலமே தெளிவான வெளிச்சத்தை நோக்கி வெற்றி நடைபோட்டது. ‘மக்கா வெற்றிக்கு முன்’‘, ‘மக்கா வெற்றிக்குப் பின்’ என்று ‘மக்கா வெற்றி’ ஒரு வரலாற்று அடித்தளமாக மாறியது. குறைஷிகள்தான் அரபு மக்களுக்கு மார்க்க வழிகாட்டிகளாக விளங்கினர். சிலைகளைப் புறந்தள்ளி விட்டு, இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றுக் கொண்டது அரபியத் தீபகற்பத்தில் சிலை வணக்கம் வேரோடும் வேரடி மண்ணோடும் ஒழிந்தது என்பதற்கு மாபெரும் சான்றாகும்.

இக்காலக் கட்டத்தை நாம் இரண்டாகப் பிரிக்கலாம்

1) தியாகங்களும், போர்களும்.

2) பல குடும்பத்தினர், கிளையினர் கூட்டம் கூட்டமாக இஸ்லாமிய மார்க்கத்தில் இணைதல்.

இவ்விரண்டும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்ததாக இருந்தாலும் இவற்றை வேறுபடுத்திக் காட்ட முதன் முதலாக போர்களைப் பற்றி பேச இருக்கிறோம். ஏனெனில், இதற்கு முன்னால் போரைப் பற்றியே நாம் அதிகம் அலசியிருக்கிறோம். அதனால், தொடர்ந்து போரைப் பற்றி பேசுவதே பொருத்தமானதாக இருக்கும்.

## ஹுனைன் யுத்தம்

மக்கா வெற்றி அரபிகள் யாரும் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சியாகும். இதனைக் கண்ணுற்ற அக்கம் பக்கத்திலுள்ளோர் திடுக்கிட்டனர். அவர்களால் அதனைத் தடுத்து நிறுத்த முடியாததால் பெரும்பாலான மக்கள் பணிந்து இஸ்லாமை ஏற்றுக் கொண்டனர். எனினும், கர்வமும் வம்பும் முரட்டுக் குணமும் கொண்ட சமூகத்தவர்கள் அடிபணிய மறுத்தனர்.

இவர்களில் ஹவாஜின், ஸகீஃப் கோத்திரத்தினர் முன்னிலை வகித்தனர். இவர்களுடன் கைஸ், அய்லான் கோத்திரத்தைச் சார்ந்த நஸ்ர், ஜுஷம், ஸஅது இப்னு பக்ர் ஆகிய குடும்பத்தினரும் ஹிலால் குடும்பத்தைச் சேர்ந்த சிலரும் சேர்ந்து கொண்டனர். முஸ்லிம்களின் வெற்றியை ஏற்பது இந்தக் கோஷ்டிகளுக்கு மானப் பிரச்சனையாகவும், கண்ணியக் குறைவாகவும் தென்படவே முஸ்லிம்கள் மீது தாக்குதல் தொடுக்க மாலிக் இப்னு அவ்ஃப் நஸ் என்பவனின் தலைமையில் ஒன்று சேர்ந்தனர்.

### அவ்தாஸில் எதிரிகள்

முஸ்லிம்களிடம் சண்டையிடுவதற்குப் படை வீரர்களை மாலிக் இப்னு அவ்ஸ் ஒன்று திரட்டினார். அவன் படை வீரர்கள் அனைவரும் பொருட்கள், செல்வங்கள், மனைவி மக்கள் அனைத்துடனும் போர்க்களத்திற்கு வந்து வீரதீரமாகப் போரிட வேண்டும் என ஆணையிட்டார். அவ்வாறே அனைவரும் அவ்தாஸுக்கு வந்தனர். ‘அவ்தாஸ்’ என்பது ஹுனைன் அருகில் ஹவாஜின் கிளையார் வசிப்பிடத்திற்கு அருகாமையிலுள்ள ஒரு பள்ளத்தாக்காகும். ஹுனைன் என்பது ‘தில் மஜாஸ்’ என்ற ஊரின் அண்மையில் உள்ள பள்ளத்தாக்காகும். இங்கிருந்து அரஃபா வழியாக ஏறக்குறைய பத்து மைல் தொலைவில் தான் மக்கா இருக்கிறது. எனவே, ஹுனைன் வேறு, அவ்தாஸ் வேறு. (ஃபத்ஹுல் பாரி)

### போர்த் தளபதியின் முடிவுக்கு போர்க்கள நிபுணர் எதிர்ப்பு

மக்கள் அவ்தாஸை அடைந்தவுடன் தங்கள் தளபதியிடம் ஒன்று கூடினர். அவர்களில் துரைத் என்ற பெயருடைய போரில் நல்ல அனுபவமுள்ள ஒருவன் இருந்தான். அவன் வாலிபத்தில் வலிமை மிக்க போர் வீரனாக விளங்கியவன். தற்போது போர் பற்றிய ஆலோசனை வழங்குவதற்காக படையுடன் வந்திருந்தான். அவனுக்கு கண் பார்வை குன்றியிருந்தது. அவன் மக்களிடம் “தற்போது எந்தப் பள்ளத்தாக்கிற்கு வந்திருக்கிறோம்” என்று வினவினான். “அவ்தாஸ் வந்துள்ளோம்” என மக்கள் கூறினர். “இது குதிரைகள் பறந்து போரிட ஏதுவான இடம் கரடு முரடான உயர்ந்த மலைப் பகுதியுமல்ல மிகவும் மிருதுவான தாழ்ந்த தரைப்பகுதியுமல்ல ஆகவே, இது பொருத்தமான இடமே. ஆயினும், நான் குழந்தைகளின் அழுகுரலையும், ஆடு, மாடு கழுதை போன்றவற்றின் சப்தங்களையும் கேட்கிறேன். அவை இங்கு ஏன் வந்தன?” எனக் கேட்டான். “தளபதி மாலிக் இப்னு அவ்ஃப்தான் போர் வீரர்கள் அனைவரும் தங்களது மனைவி, மக்கள், கால்நடைகள், செல்வங்கள் அனைத்துடன் போர்க்களம் வரும்படி கட்டளையிட்டிருந்தார்” என மக்கள் தெரிவித்தனர்.

துரைத் மாலிக்கை வரவழைத்து, “ஏன் இவ்வாறு செய்தாய்?” என்று விளக்கம் கேட்க “ஒவ்வொரு படை வீரன் பின்னணியிலும் இவர்கள் இருந்தால்தான் குடும்பத்தையும் பொருளையும் பாதுகாக்க தீவிரமாகப் போர் செய்வார்கள்” என்றான் தளபதி மாலிக். அதற்குத் துரைத், “ஆட்டு இடையனே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஒருவன் தோற்று

புறமுதுகிட்டு ஓட ஆரம்பித்தால் எதுதான் அவனைத் தடுத்து, திரும்ப போர்க்களத்திற்கு கொண்டு வரும்? சரி! இப்போல் உனக்கு வெற்றி கிடைத்தால் அதில் ஒரு வீரனின் ஈட்டி மற்றும் வாளால்தான் கிடைக்க முடியும். உனக்குத் தோல்வி ஏற்பட்டால் அதில் உன் குடும்பத்தினர் முன்னே இழிவடைவதாகும். உனது செல்வங்களையெல்லாம் இழந்து நிர்க்கதியாகி விடுவாய்'' என எச்சரித்து விட்டு சில குடும்பத்தினரையும் தலைவர்களையும் குறிப்பாக விசாரித்தார்.

அதன் பின் மாலிக்கிடம் ''ஹவாஜின் கிளையினரின் குழந்தைகளைப் போர் மைதானத்தில் நேரடியாக பங்கு கொள்ள வைப்பது முறையான செயலல்ல பயன்தரத் தக்கதுமல்ல. குடும்பங்களைப் பாதுகாப்பான உயரமான இடங்களில் இருக்க வை. அதன்பின் குதிரை மீது அமர்ந்து மதம் மாறிய இந்த எதிரிகளிடம் போரிடு. உனக்கு வெற்றி கிட்டினால் குடும்பத்தினர் உன்னிடம் வந்து சேர்ந்து விடுவார்கள். நீ தோல்வியைத் தழுவினால் அது உன்னோடு முடிந்துவிடும். உனது குடும்பமும் பொருளும் எதிரிகளிடமிருந்து காப்பாற்றப்படும்'' என்றார்.

ஆனால், துரைதுடைய இந்த ஆலோசனையைத் தளபதியான மாலிக் நிராகரித்து விட்டான். மேலும் ''நீ சொல்வது போல் அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஒருபோதும் செய்ய முடியாது. நீயும் கிழடாகி விட்டாய். உனது அறிவுக்கும் வயசாகி விட்டது. அல்லாஹ்வின் மீது ஆணையாக! இந்த ஹவாஜின் கிளையினர் எனக்குக் கீழ்ப்படிய வேண்டும் அவ்வாறு செய்யாவிட்டால் இந்தக் கூர்மையான வாளின் மீது வீழ்வேன் அது என் முதுகிலிருந்து வெளியேறட்டும்'' என்றான். இப்போல் துரைதுக்கு பேரும் புகழும் கிடைத்து விடுவதை வெறுத்ததன் காரணமாகவே அவன் இவ்வாறு சொன்னான். இதனைக் கேட்ட ஹவாஜின் சமூகத்தார் ''நாம் உனக்கு கட்டுப்படுகிறோம் கீழ்ப்படிகிறோம்'' என்றனர். துரைத் கவலையுடன் ''இந்த நாளைப் பற்றி நான் என்ன சொல்ல முடியும்? இதில் நான் கலந்து கொள்ளவுமில்லை விலகிப் போகவுமில்லை'' என்றான்.

மாலிக் முஸ்லிம்களின் பலத்தை அறிய ஒற்றர்களை அனுப்பியிருந்தான். அவர்களோ முஸ்லிம்களின் நிலைகளை அறிந்து முகம் சிவந்து, நரம்புகள் புடைக்க, முகம் இருள் கவ்வ திரும்பி வந்தனர். மாலிக் பதறிப்போய், ''உங்களுக்கு என்ன கேடு! உங்களுக்கு என்ன நிகழ்ந்தது?'' என்றான் ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! கருப்பும் வெண்மையும் கலந்த குதிரைகள் மீது வெண்மை நிற வீரர்களைக் கண்டோம். அதனைக் கண்ட எங்கள் உடலில் ஏற்பட்ட மாற்றங்களை எங்களால் கட்டுப்படுத்த இயலவில்லை'' என்றனர்.

**நபியவர்களின் உளவாளி**

எதிரிகள் புறப்பட்டு விட்ட செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. அபூ ஹத்ரத் அஸ்லமி (ரழி) என்பவரிடம் ''நீ எதிரிகளுடன் கலந்து அங்குள்ள நிலைமைகளை முழுவதுமாக அறிந்து வந்து என்னிடம் தெரிவிக்கவும்'' என்று நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். அவ்வாறே அவரும் சென்று வந்தார்.

**மக்காவிலிருந்து ஹுனைனை நோக்கி**

ஹிஜ்ரி 8, ஷவ்வால் மாதம், சனிக்கிழமை பிறை 6, நபி (ஸல்) அவர்கள் பன்னிரெண்டாயிரம் வீரர்களுடன் மக்காவிலிருந்து ஹுனைனை நோக்கிப் புறப்பட்டார்கள். இதில் பத்தாயிரம் வீரர்கள் மதீனாவிலிருந்து வந்தவர்கள். மீதம் இரண்டாயிரம் வீரர்கள் மக்காவாசிகள். இவர்களில் பெரும்பாலோர் புதிதாக இஸ்லாமை ஏற்றவர்கள். மேலும், ஸஃப்வான் இப்னு உமய்யாவிடமிருந்து நூறு கவச ஆடைகளை இரவலாக நபி (ஸல்) எடுத்துக் கொண்டார்கள். மக்காவில் அத்தாப் இப்னு உஸைத் (ரழி) என்பவரைத் தனது பிரதிநிதியாக நியமித்தார்கள். மக்காவிற்குள் வந்து சரியாக 19வது நாள் நபி (ஸல்) ஹுனைன் நோக்கிப் புறப்படுகிறார்கள். அன்று மாலை குதிரை வீரர் ஒருவர் வந்து ''நான்

மலைமீது ஏறிப் பார்த்தேன். அப்போது ஹவாஜின் கிளையினர் தங்களது குடும்பங்கள், செல்வங்களுடன் ஹுனைனில் குழுமி இருக்கின்றார்கள்'' என்று கூறினார். இதனைச் செவியேற்ற நபி (ஸல்) அவர்கள் ''இன்ஷா அல்லாஹ்! நாளை அவை முஸ்லிம்களின் கனீமா பொருளாகிவிடும்'' என புன்னகை ததும்பக் கூறினார்கள். அன்றிரவு படையின் பாதுகாப்புக்கு அனஸ் இப்னு அபூ மர்சத் கனவீ (ரழி) பொறுப்பேற்றார். (ஸுனன் அபூதாவூது)

ஹுனைனை நோக்கிச் செல்லும் வழியில் முஸ்லிம்கள் பசுமையான மிகப்பெரிய இலந்தை மரம் ஒன்றைக் கண்டார்கள். அம்மரத்தை 'தாத் அன்வாத்' என்று அரபிகள் அழைத்தனர். அக்காலத்தில் அதில் தங்களது வாட்களை தொங்க விடுவர். அங்கு தங்கி பிராணிகளைப் பலியிடுவர். தங்களின் சிலை வழிபாடுகளுக்கு அதை பாக்கியம் பொருந்திய ஒன்றாகக் கருதி வந்தனர். அம்மரத்தைப் பார்த்தவுடன் படையிலிருந்த சிலர் ''அல்லாஹ்வின் தூதரே! முஷ்ரிக்குகளுக்கு 'தாத் அன்வாத்' இருப்பதைப் போன்று எங்களுக்கும் ஒரு 'தாத் அன்வாத்' ஏற்படுத்தித் தாருங்கள்'' என்றனர். நபி (ஸல்) ''அல்லாஹு அக்பர்! முஹம்மதின் ஆத்மா எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக! 'அவர்களுக்கு கடவுள்கள் இருப்பது போன்று எங்களுக்கும் ஒரு கடவுளை ஏற்படுத்தித் தாருங்கள்' என்று மூஸாவின் கூட்டத்தினர் கேட்டது போலல்லவா கேட்கிறீர்கள்! நிச்சயமாக நீங்கள் அறியாத கூட்டத்தினர். இதுதான் சென்று போனவர்களின் வழிமுறையாகும். உங்களுக்கு முன் சென்றவர்களின் வழிமுறைகளையே நிச்சயமாக நீங்களும் பின்பற்றுவீர்கள்'' என்று எச்சரித்தார்கள். (முஸ்னது அஹ்மது, ஜாமிவுத் திர்மிதி)

மற்றும் படையிலுள்ள சிலர் படையின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதைப் பார்த்து ''இன்றைய தினம் நம்மை யாராலும் வெல்ல முடியாது'' என்று கூறினர். சிலரின் இந்தக் கூற்று நபி (ஸல்) அவர்களுக்கு மிகுந்த வருத்தத்தை அளித்தது.

**முஸ்லிம்கள் திடீரெனத் தாக்கப்படுதல்**

ஷவ்வால் மாதம், பிறை 10, செவ்வாய் மாலை புதன் இரவு இஸ்லாமியப் படை ஹுனைன் வந்தடைந்தது. முஸ்லிம்களுக்கு முன்னதாகவே மாலிக் இப்னு அவ்ஃப் தனது படையுடன் அங்கு வந்து, ஹுனைன் பள்ளத்தாக்கு முழுவதும் நிறுத்தி வைத்துவிட்டான்.

மேலும், நன்கு அம்பெறிவதில் தேர்ச்சி பெற்ற வீரர்களைப் பதுங்குக் குழிகளிலும், நெருக்கமான வளைவுகளிலும், முக்கிய நுழைவிடங்களிலும், பாதைகளின் ஓரங்களிலும் தங்க வைத்து விட்டான். முஸ்லிம்கள் தங்களுக்கு எதில் வந்தவுடன் முதலில் அம்புகளால் அவர்களைத் தாக்க வேண்டும் பின்பு அவர்கள் மீது பாய்ந்து நேருக்கு நேராகத் தாக்க வேண்டும் என்று கட்டளையிட்டான்.

அதிகாலை நேரத்தில் நபி (ஸல்) தங்களது படையைத் தயார் செய்து அவற்றுக்குரிய சிறிய பெரிய கொடிகளை வீரர்களுக்கு வழங்கினார்கள். அதிகாலையில் சற்று மங்கலான நேரத்தில் முஸ்லிம்கள் ஹுனைன் பள்ளத்தாக்கினுள் நுழைய ஆரம்பித்தார்கள். ஹுனைன் பள்ளத்தாக்கில் எதிரிகள் மறைந்திருப்பதை முஸ்லிம்கள் அறவே அறிந்திருக்கவில்லை. திடீரென எதிரிகள் அவர்களை நோக்கி அம்புகளை எறிந்தனர். பின்பு எதிரிகள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரே பாய்ச்சலாக பாய்ந்து முஸ்லிம்களைத் தாக்கினர். இந்தத் திடீர் தாக்குதலை எதிர்பார்த்திராத முஸ்லிம்கள் சமாளிக்க முடியாமல் அங்கும் இங்குமாக ஓடினர். இது மிகப்பெரிய தோல்வியாக அமைந்தது. புதிதாக இஸ்லாமை ஏற்றிருந்த அபூஸுஃப்யான் இப்னு ஹர்ஃப் இக்காட்சியைப் பார்த்து ''இவர்கள் செங்கடல் வரை ஓடிக்கொண்டே இருப்பார்கள் போல் தெரிகிறதே!'' என்றார். மேலும், ஜபலா இப்னு ஹன்பல் அல்லது கலதா இப்னு ஹன்பல் என்பவன் ''பாருங்கள்! இன்று சூனியம் பொய்யாகி விட்டது'' என்று ஓலமிட்டான்.

நபி (ஸல்) பள்ளத்தாக்கின் வலப்புறமாக ஒதுங்கிக் கொண்டு “மக்களே! என் பக்கம் வாருங்கள். நான் அல்லாஹ்வின் தூதர். நான்தான் முஹம்மது இப்னு அப்துல்லாஹ்” என்று அழைத்தார்கள். இந்த இக்கட்டான நிலையில் முஹாஜிர் மற்றும் அன்சாரிகளில் வெகு குறைவானவர்களே நபி (ஸல்) அவர்களுடன் இருந்தார்கள். இவர்கள் ஒன்பது நபர்கள் என இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார். இமாம் நவவீ (ரஹ்) பன்னிரெண்டு நபர்கள் எனக் கூறுகிறார்கள். ஆனால், கீழ்க்காணும் அஹ்மது மற்றும் முஸ்தத்ரக் ஹாகிமில் இடம் பெற்றிருக்கும் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரழி) அவர்களின் அறிவிப்பில் வந்திருக்கும் எண்ணிக்கையே சரியானது:

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரழி) கூறுகிறார்கள்: ஹுனைன் போலே நானும் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தேன். நபி (ஸல்) அவர்களை விட்டு மக்கள் ஓடிவிட்ட நிலையில், முஹாஜிர் மற்றும் அன்சாரிகளைச் சேர்ந்த எண்பது நபர்கள் மட்டும் நபியவர்களுடன் உறுதியாக நின்றனர். புறமுதுகுக் காட்டி ஓடவில்லை. (முஸ்தத்தரகுல் ஹாகிம், முஸ்னது அஹ்மது)

மேலும், இப்னு உமர் (ரழி) கூறுகிறார்கள். ஹுனைன் சண்டையின் போது மக்களெல்லாம் புறமுதுகுக் காட்டி ஓடிவிட்டனர். அன்றைய தினத்தில் ஏறக்குறைய நாங்கள் நூறு நபர்களுக்குக் குறைவானவர்களே நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். (ஜாமிவுத் திர்மிதி)

அந்நேரத்தில் நபி (ஸல்) அவர்களின் நிகரற்ற வீரம் வெளிப்பட்டது. “நானே நபியாவேன் அதில் எந்தப் பொய்யுமில்லை நான் அப்துல் முத்தலிபின் மகனாவேன்.” என்று கூறிக் கொண்டே தங்களது கோவேறுக் கழுதையை எதிரிகள் நோக்கி ஓட்டினார்கள். எனினும், நபி (ஸல்) அவர்கள் விரைந்து முன்னேறி விடாமலிருக்க அபூ ஸுஃப்யான் இப்னு ஹாரிஸ் (ரழி) கோவேறுக் கழுதையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டார். அப்பாஸ் (ரழி) அதன் இருக்கையைப் பிடித்துக் கொண்டார். இதற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் கோவேறுக் கழுதையிலிருந்து கீழே இறங்கி, “அல்லாஹ்வே! உனது உதவியை இறக்குவாயாக!” என்று பிரார்த்தித்தார்கள்.

**முஸ்லிம்கள் களம் திரும்புதல், போர் உக்கிரமாகுதல்**

மக்களை சப்தமிட்டு அழைக்கும்படி நபி (ஸல்) அவர்கள் அப்பாஸை பணித்தார்கள். அவர் உரத்த குரலுடையவராக இருந்தார். இதைப் பற்றி அப்பாஸ் (ரழி) கூறுகிறார்கள்: நான் மிக உயர்ந்த சப்தத்தில் ‘அய்ன அஸ்ஹாபுஸ் ஸமுரா’ (ம்ஸமுரா’ மரத் தோழர்கள் எங்கே?) என்று அழைத்தேன். எனது சப்தத்தைக் கேட்டவுடன் மாடு தனது கன்றை நோக்கி ஓடி வருவது போல் தோழர்கள் ஓடி வந்தனர். எனது அழைப்புக்கு ‘யா லப்பைக், யா லப்பைக்’ (ஆஜராகி விட்டோம்) என்று பதிலளித்தனர். (ஸஹீஹ் முஸ்லிம்)

சிலர், வேகமாக ஓடிக் கொண்டிருந்த தனது ஒட்டகத்தைத் திருப்ப முயன்று அது முடியாமல் ஆனபோது அதிலிருந்த தங்களது ஆயுதங்களை எடுத்துக் கொண்டு கீழே குதித்து சப்தம் வந்த திசையை நோக்கி ஓடி வந்தனர். இவ்வாறு புதிதாக நூறு நபர்கள் நபி (ஸல்) அவர்களிடம் ஒன்று சேர்ந்தவுடன் எதிரியை நோக்கி முன்னேறிச் சண்டையிட்டனர்.

பின்பு அன்சாரிகளை ‘ஏ… அன்சாரிகளே! ஏ… அன்சாரிகளே!’ என்று கூவி அழைக்கப்பட்டது. குறிப்பாக, ஹாரிஸ் இப்னு கஸ்ரஜ் கிளையினரைக் கூவி அழைக்கப்பட்டது. இவ்வாறு ஒன்றன் பின் ஒன்றாக முஸ்லிம்களை அழைக்க, எல்லோரும் மைதானத்தில் ஒன்று சேர்ந்து விட்டனர். இரு தரப்பினருக்குமிடையில் கடுமையான சண்டை நிகழ்ந்தது. நபி (ஸல்) ‘இப்போதுதான் போர் சூடுபிடித்திருக்கிறது’ என்று கூறி, பூமியிலிருந்து ஒரு பிடி மண்ணை எடுத்து ‘முகங்களெல்லாம் நாசமாகட்டும்’ என்று கூறி எதிரிகளை நோக்கி வீசி எறிந்தார்கள். அங்கிருந்த எதிரிகள் அனைவரின் கண்களிலும்

அல்லாஹ் இந்த மண்ணைப் பரப்பி விட்டான். எதிரிகளின் வேகம் தணிந்து போரில் பின்வாங்க ஆரம்பித்தனர்.

### எதிரிகள் தோல்வி அடைகின்றனர்

நபி (ஸல்) கைப்பிடி மண்ணை வீசிய சில நிமிடங்களிலேயே எதிரிகள் மிகப்பெரிய தோல்வியைச் சந்தித்தனர். முஸ்லிம்களின் எதிர் தாக்குதலால் ஸகீஃப் கிளையினரில் மட்டும் எழுபது நபர்கள் கொல்லப்பட்டனர். எதிரிகள் தாங்கள் கொண்டு வந்த உடமைகளையெல்லாம் விட்டுவிட்டு போர் மைதானத்திலிருந்து ஓட்டம் பிடித்தனர். அவர்கள் கொண்டு வந்திருந்த ஆயுதங்கள், பொருட்கள் அனைத்தையும் முஸ்லிம்கள் ஒன்று சேர்த்தனர். முஸ்லிம்களுக்குக் கிடைத்த இந்த வெற்றியைப் பற்றித்தான் அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகின்றான்:

பல (போர்க்) களங்களில் (உங்கள் தொகைக் குறைவாயிருந்தும்) நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்திருக்கின்றான். எனினும், ஹுனைன் போர் அன்று உங்களைப் பெருமையில் ஆழ்த்திக் கொண்டிருந்த உங்களுடைய அதிகமான (மக்கள்) தொகை உங்களுக்கு எந்தப் பலனும் அளிக்கவில்லை. பூமி இவ்வளவு விசாலமாக இருந்தும் (அதுசமயம் அது) உங்களுக்கு மிக நெருக்கமாகி விட்டது. அன்றி, நீங்கள் புறங்காட்டி ஓடவும் தலைப்பட்டீர்கள். (இதன்) பின்னர், அல்லாஹ் தன்னுடைய தூதர் மீதும், நம்பிக்கையாளர்கள் மீதும் தன்னுடைய அமைதியை அளித்து அருள்புரிந்தான். உங்கள் கண்ணுக்குத் தெரியாத ஒரு படையையும் (உங்களுக்கு உதவியாக) இறக்கி வைத்து நிராகரிப்பவர்களை வேதனை செய்தான். இதுதான் நிராகரிப்பவர்களுக்குரிய கூலியாகும். (அல்குர்ஆன் 9:25, 26)

### எதிரிகளை விரட்டுதல்

போல் தோல்வி கண்ட எதிரிகள் பல பக்கங்களிலும் சிதறி ஓடினர். ஒரு பிரிவினர் ‘தாம்ஃபை’ நோக்கி ஓடினர். வேறொரு பிரிவினர் ‘நக்லா’ என்ற ஊரை நோக்கி ஓடினர். மற்றும் ஒரு பிரிவினர் ‘அவ்தாஸை’ நோக்கி ஓடினர். இதைத் தொடர்ந்து நபி (ஸல்) எதிரிகளை விரட்டிப் பிடிப்பதற்கு முதலில் ‘அவ்தாஸை’ நோக்கி ஒரு படையை அனுப்பினார்கள். அதற்கு அபூ ஆமிர் அஷ்அ (ரழி) தலைமை ஏற்றார். அங்கு இரு தரப்பினருக்குமிடையில் சிறு மோதல் ஏற்பட்டது. அதிலும் எதிரிகள் தோல்வியடைந்து ஓடிவிட்டனர். இந்த மோதலில் தலைவராயிருந்த அபூ ஆமிர் அஷ்அ (ரழி) கொல்லப்பட்டார்.

முஸ்லிம்களின் குதிரை வீரர்களில் ஒரு பிரிவினர் நக்லாவை நோக்கி ஓடிய முஷ்ரிக்குகளை விரட்டிச் சென்றனர். அவர்களுக்கிடையிலும் சிறு மோதல் ஏற்பட்டது. இச்சண்டையில் துரைத் இப்னு ஸிம்மாவை ரபிஆ இப்னு ருஃபை (ரழி) கொன்றார்.

இப்போல் தோற்ற பெரும்பாலான முஷ்ரிக்குகள் தாம்ஃபை நோக்கித்தான் ஓடினர். எனவே, கனீமத்துப் பொருட்களை ஒழுங்குபடுத்தி ஒன்று சேர்த்து வைத்துவிட்டு தாம்ஃபை நோக்கி நபி (ஸல்) படையுடன் பயணமானார்கள்.

### கனீமா பொருட்கள்

இப்போல் முஸ்லிம்களுக்கு ஏராளமான கனீமத்துப் பொருட்கள் கிடைத்தன. ஆறாயிரம் அடிமைகள், இருபத்தி நான்காயிரம் ஒட்டகங்கள், நாற்பதாயிரத்திற்கும் அதிகமான ஆடுகள், நான்காயிரம் ‘ஊக்கியா’ வெள்ளிகள் ஆகியவை கனீமத்தாக (வெற்றிப் பொருளாகக்) கிடைத்தன. நபி (ஸல்) இவற்றை ஒன்று சேர்த்து ‘ஜிஃரானா’ என்ற இடத்தில் வைத்து அதற்கு ‘மஸ்வூது இப்னு அம்ர் கிஃபாயை’ பாதுகாவலராக நியமித்தார்கள். தாயிஃப் சென்று திரும்பிய பிறகுதான் இவற்றை நபி (ஸல்) பங்கிட்டார்கள்.

சிறைப் பிடிக்கப்பட்டவர்களில் ‘ஷீமா பின்த் ஹாரிஸ் அல் ஸஃதியா’ என்ற பெண்ணும் இருந்தார். இவர் நபி (ஸல்) அவர்களின் பால்குடி சகோதயாவார். இவரை நபி (ஸல்) அவர்களிடம் அழைத்து வரப்பட்டது. அப்பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். நபி (ஸல்) ஓர் அடையாளத்தைக் கொண்டு அப்பெண்மணி இன்னார்தான் என்பதை அறிந்து கொண்டார்கள். அவரை சங்கை செய்து, தனது போர்வையை விரித்து அமர வைத்தார்கள். அவருக்கு உதவி செய்து அவரது கூட்டத்தார்களிடமே அனுப்பி வைத்தார்கள்.

### தாயிஃப் போர்

இப்போர், உண்மையில் ஹுனைன் போரின் ஒரு தொடராகும். ‘ஹவாஜின், ஸகீப்’ கிளையினரில் தோல்வியடைந்த அதிகமானவர்கள் தங்களின் தளபதி ‘மாலிக் இப்னு அவ்ஃப் நஸ‘‘யுடன் தாம்ஃபில் அடைக்கலம் புகுந்தனர். முதலில் ஆயிரம் வீரர்களுடன் காலித் இப்னு வலீதை நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். பின்பு நக்லா அல்யமானியா, கர்னுல் மனாஜில், லிய்யா வழியாக தாம்ஃபிற்குப் பயணமானார்கள். ‘லிய்யா’ என்ற இடத்தில் மாலிக் இப்னு அவ்ஃபிற்குச் சொந்தமான பெரும் கோட்டை ஒன்று இருந்தது. நபி (ஸல்) அதை உடைக்கும்படி கட்டளையிட்டார்கள். தாம்ஃபின் கோட்டையில் எதிரிகள் அடைக்கலம் புகுந்திருந்தனர். நபி (ஸல்) அக்கோட்டையைச் சுற்றி முற்றுகையிட்டார்கள்.

இம்முற்றுகை பல நாட்கள் அதாவது, நாற்பது நாட்களாக நீடித்தது என்று ஸஹீஹ் முஸ்லிமில் வரும் ஓர் அறிவிப்பிலிருந்து தெரிய வருகிறது. ஆனால், வரலாற்று ஆசிரியர்கள் இதற்கு மாற்றமாக கூறுகின்றனர். சிலர் இருபது நாட்கள் என்றும், சிலர் பத்துக்கும் மேற்பட்ட நாட்கள் என்றும், சிலர் பதினெட்டு நாட்கள் என்றும், சிலர் பதினைந்து நாட்கள் என்றும் கூறுகின்றனர். (ஃபத்ஹுல் பாரி)

இக்காலக் கட்டத்தில் இருதரப்பிலிருந்தும் அம்பு, ஈட்டி, கற்கள் ஆகியவற்றால் தாக்குதல்கள் நடந்தன. முதலில் எதிரிகளிடமிருந்து அம்புகளால் கடுமையான தாக்குதல் நடந்தது. முஸ்லிம்களில் பலருக்கு இதில் பலத்த காயமேற்பட்டது. 12 முஸ்லிம்கள் கொல்லப்பட்டனர். இதனால் முஸ்லிம்கள் தங்களது முகாம்களை மாற்றி உயரமான இடத்திற்குச் சென்று விட்டனர். அதாவது, இன்று தாம்ஃபின் பெரிய பள்ளிவாசல் இருக்குமிடத்தில் தங்களது முகாம்களை அமைத்துக் கொண்டனர்.

நபி (ஸல்) மின்ஜனீக் கருவிகள் மூலமாகக் கற்களை எறிந்து கோட்டைச் சுவரில் பெரும் ஓட்டையை ஏற்படுத்தினார்கள்.

முஸ்லிம்கள் மரப் பலகைகளால் செய்யப்பட்ட பீரங்கி போன்ற குழாய்களில் புகுந்து கொண்டு கோட்டைச் சுவரை நோக்கி நெருங்கினர். எதிரிகள் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புக் கொக்கிகளைக் கொண்டு மேலிருந்து முஸ்லிம்களைத் தாக்கினர். இதனால் மரக் குழாய்களிலிருந்து முஸ்லிம்கள் வெளியேறினர். அப்போது எதிரிகள் முஸ்லிம்களை நோக்கி அம்புகளை எறிந்தனர். அதில் முஸ்லிம்கள் பலர் கொல்லப்பட்டனர்.

இதைத் தொடர்ந்து எதிரிகளைப் பணிய வைப்பதற்காக போர்த் தந்திரம் என்ற முறையில் மற்றொரு வழியையும் நபி (ஸல்) கையாண்டார்கள். அங்கிருந்த திராட்சைக் கொடிகளையெல்லாம் வெட்டி வீழ்த்துமாறு கட்டளையிட்டார்கள். முஸ்லிம்களும் அவ்வாறே செய்தனர். இதைப் பார்த்த ஸகீஃப் கிளையினர் தூதனுப்பி அல்லாஹ்வுக்காகவும், உறவுக்காகவும் அவ்வாறு செய்ய வேண்டாம் என்று வேண்டினர். நபியவர்களும் அதை விட்டுவிட்டார்கள்.

‘‘யார் கோட்டையிலிருந்து வெளியேறி எங்களிடம் வந்து சேர்ந்து விடுவாரோ அவர் அடிமைப்படுத்தப் படமாட்டார்’’ என்று அறிவிக்கும்படி நபி (ஸல்) கட்டளையிட்டார்கள்.

இந்த அறிவிப்பைக் கேட்டு எதிரிகளில் இருபத்து மூன்று வீரர்கள் சரணடைந்தனர். (ஸஹீஹுல் புகாரி)

அதில் பிரசித்திப் பெற்ற ‘அபூபக்ரா‘‘வும் ஒருவர். இவர் நீர் இரைக்கும் கப்பியின் மூலமாக கயிற்றில் கீழே இறங்கி வந்தார். இதற்கு அரபியில் ‘பக்ரா’ என்று சொல்லப்படும். இதனால் நபி (ஸல்) அவருக்கு ‘அபூபக்ரா’ என்று புனைப் பெரியட்டார்கள். வந்தவர்கள் அனைவரையும் உரிமைவிட்டார்கள். அவர்களில் ஒவ்வொருவரையும் முஸ்லிம்களில் ஒருவர் பொறுப்பேற்கும்படி செய்தார்கள். இச்சம்பவங்களைக் கண்ட எதிரிகள் மனச் சங்கடத்திற்கு உள்ளானார்கள்.

இவ்வாறு முற்றுகையின் காலம் நீண்டு கொண்டே சென்றது. கோட்டையை வெல்வதும் மிகச் சிரமமாக இருந்தது, எதிரிகளின் அம்பு மற்றும் இரும்புக் கொக்கிகளுடைய தாக்குதலால் முஸ்லிம்களுக்குப் பெருத்தச் சேதமும் ஏற்பட்டது. ஓர் ஆண்டுக்கு முற்றுகையை தாக்குப் பிடிக்குமளவிற்கு கோட்டை வாசிகள் முழு தயாரிப்புகளுடன் இருந்தனர். இதனால் நபி (ஸல்) நவ்ஃபல் இப்னு முஆவியாவிடம் ஆலோசனை செய்தார்கள். அவர் கூறிய கருத்தாவது:

இவர்கள் பொந்திலுள்ள நயைப் போன்றவர்கள். நீங்கள் அதைப் பிடிக்க வேண்டுமென்று நிலையாக நின்றால் பிடித்து விடலாம். அதை விட்டுச் செல்வதால் உங்களுக்கு எந்தத் தொந்தரவும் கொடுக்காது.

நவ்ஃபலின் இந்த ஆலோசனையைக் கேட்ட நபி (ஸல்) திரும்பி சென்று விடலாம் என்று முடிவு செய்தார்கள். உமரை அழைத்து ‘‘இன்ஷா அல்லாஹ்! நாளை நாம் திரும்ப இருக்கிறோம்’’ என்று மக்களுக்கு அறிவிக்கும்படி கூறினார்கள். ‘‘கோட்டையை வெற்றி கொள்ளாமல் நாம் எப்படி திரும்புவது?’’ என்று முஸ்லிம்கள் கேட்டனர். இப்பேச்சு நபி (ஸல்) அவர்களின் காதுக்கு எட்டியவுடன் ‘‘சரி! நாளைக்கும் போரிடுங்கள்’’ என்று கூறினார்கள். மக்கள் மறுநாள் போருக்குச் சென்றபோது கடினமான காயம் அவர்களுக்கு ஏற்பட்டது. அன்று மாலையில் ‘‘நாளை நாம் திரும்பிச் சென்று விடலாம்’’ என அறிவிப்புச் செய்தார்கள். மக்கள் அதைக் கேட்டு சந்தோஷமடைந்து புறப்படுவதற்குத் தயாரானார்கள். இதைப் பார்த்து நபி (ஸல்) சிரித்தார்கள்.

மக்கள் பயணமானவுடன் பின்வரும் துஆவை ஓதும்படி நபி (ஸல்) கூறினார்கள். ‘‘திரும்புகிறோம் பாவமீட்சி கோருகிறோம் இறைவணக்கம் செய்கிறோம் எங்கள் இறைவனையே புகழ்கிறோம்.’’

சிலர் ‘‘அல்லாஹ்வின் தூதரே! இந்த ஸகீஃப் கிளையினருக்கு எதிராகப் பிரார்த்தியுங்கள்’’ என்று கூறினார்கள். ஆனால் நபி (ஸல்) ‘‘அல்லாஹ்வே! ஸகீஃப் கிளையினருக்கு நேர்வழி காட்டுவாயாக! அவர்களை என்னிடம் வரச் செய்வாயாக!’’ என்று பிரார்த்தித்தார்கள்.

**ஜிஃரானாவில் கனீமாவைப் பங்கு வைத்தல்**

தாம்ஃபில் முற்றுகையை முடித்துக் கொண்டு நபி (ஸல்) ஜிஃரானா திரும்பி அங்கு பத்து நாட்களுக்கு மேலாக தங்கியிருந்தார்கள். ஆனால், கனீமத்தைப் பங்கிடவில்லை. இவ்வாறு நபி (ஸல்) தாமதப்படுத்தியதற்குக் காரணம், ‘ஹவாஜின் கிளையினர் மன்னிப்புக்கோரி தங்களிடம் வந்தால் அவர்களது பொருட்களை திரும்பக் கொடுத்து விடலாம்’ என்பதற்கே! பத்து நாட்களுக்கு மேலாகியும் அவர்கள் திரும்ப வராததால் கனீமா பொருட்களை நபி (ஸல்) பங்கிட்டார்கள். கோத்திரங்களின் தலைவர்களும், மக்காவின் முக்கியப் பிரமுகர்களும் தங்களின் பங்கை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். புதிதாக இஸ்லாமை ஏற்றிருந்த இவர்களுக்கு கனீமா முதலாவதாகவும் அதிகமாகவும் கொடுக்கப்பட்டது.

அபூ ஸுஃப்யானுக்கு நாற்பது ஊக்கியா வெள்ளியும், நூறு ஒட்டகைகளும் நபி (ஸல்) வழங்கினார்கள். அவர் “எனது மகன் எஜீதுக்கு?” என்று கேட்டார். நபி (ஸல்) எஜீதுக்கும் அதே அளவு வழங்கினார்கள். பின்பு “எனது மகன் முஆவியாவுக்கு?” என்று கேட்டார். அவருக்கும் அதே அளவு வழங்கினார்கள். ஹக்கீம் இப்னு ஸாமுக்கு 100 ஒட்டங்கள் வழங்கினார்கள். பின்பு ஸஃப்வான் இப்னு உமைய்யாவுக்கு மூன்று தடவை நூறு நூறாக முன்னூறு ஒட்டகங்கள் கொடுத்தார்கள். இவ்வாறே பல குறைஷித் தலைவர்களுக்கும் ஏனைய கோத்திரத்தாரின் தலைவர்களுக்கும் நூறு நூறு ஒட்டகங்கள் நபி (ஸல்) வழங்கினார்கள். (அஷ்ஷிஃபா)

மற்றவர்களுக்குகெல்லாம் ஐம்பது, நாற்பது என வழங்கினார்கள். நபி (ஸல்) அவர்களின் இந்தக் கொடைத் தன்மையை கண்ட மக்கள், முஹம்மது வறுமையைக் கண்டு அஞ்சாமல் வாரி வழங்குகிறார் என்று பேசினார்கள். கிராம அரபிகளும் இந்தச் செய்தியை கேட்டு பொருட்களைப் பெறுவதற்காக நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். நபியவர்களை நிர்ப்பந்தமாக தள்ளிச் சென்று, ஒரு மரத்தில் சாய்த்தனர். அவர்களை போர்வையால் இறுக்கி “அதில் எங்களுக்கும் கொடுங்கள்” என்று விடாப்பிடியாக கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) “மக்களே! எனது போர்வையை என்னிடம் கொடுத்து விடுங்கள். ‘திஹாமா’ மாநிலத்துடைய மரங்களின் எண்ணிக்கை அளவு கால்நடைகள் இருந்தால் அதையும் உங்களுக்கே பங்கிட்டுக் கொடுத்து விடுவேன். பின்பு நான் கஞ்சனாகவோ, கோழையாகவோ, பொய்யனாகவோ இல்லையென்பதை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள்.”

பிறகு தனது ஒட்டகத்திற்கு அருகில் சென்று அதன் திமிலில் இருந்து சில முடிகளைப் பிடுங்கி மக்களை நோக்கி உயர்த்திக் காண்பித்து “மக்களே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களுடைய கனீமா பொருட்களிலிருந்து ஐந்தில் ஒன்றைத் (1ழூழூ5) தவிர அதிகமாக இந்த முடியின் அளவு கூட நான் எனக்காக வைத்துக் கொள்ளவில்லை. நான் பெற்றுக் கொண்ட ஐந்தில் ஒன்றும் உங்களுக்கே திருப்பி வழங்கப்பட்டுவிட்டது” என்று கூறினார்கள்.

மற்ற கனீமா பொருட்கள் அனைத்தையும் கொண்டு வரும்படி ஜைது இப்னு ஸாபித்துக்கு நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். மக்கள் அனைவரும் அங்கு வரவழைக்கப்பட்டனர். மீதமிருந்த பொருட்களை எல்லாம் நபி (ஸல்) மக்களுக்கு பங்கிட்டார்கள். காலாட்படை வீரர்களுக்கு நான்கு ஒட்டகங்கள் அல்லது நாற்பது ஆடுகள் வழங்கப்பட்டன. குதிரை வீரருக்கு 12 ஒட்டகங்கள் அல்லது 120 ஆடுகள் வழங்கப்பட்டன.

**நபியவர்கள் மீது அன்சாரிகளின் வருத்தம்**

புதிதாக இஸ்லாமைத் தழுவிய குறைஷித் தலைவர்களுக்கும் ஏனைய குறைஷிகளுக்கும் நபி (ஸல்) மிக அதிகமாக வாரி வழங்கினார்கள். ஆனால், இஸ்லாமுக்காக நீண்ட காலம் தியாகம் செய்து வந்த தனது உற்ற தோழர்களுக்கு அந்தளவு வழங்கவில்லை. ஒரு பெரிய அரசியல் காரணத்தை முன்னிட்டு நபி (ஸல்) இவ்வாறு செய்தார்கள். பொதுவாக மக்கள் அந்த நுட்பத்தை விளங்கிக் கொள்ளாமல் பலவாறு பேசினார்கள். இதைப் பற்றி அபூஸயீது அல்குத் (ரழி) வாயிலாக இப்னு இஸ்ஹாக் (ரஹ்) அறிவிப்பதை பார்ப்போம்.

அபூஸயீது அல்குத்ரீ (ரழி) கூறுகிறார்கள்: குறைஷிகளுக்கும் ஏனைய அரபு கோத்திரங்களுக்கும் நபி (ஸல்) கனீமத்தை வாரி வழங்கினார்கள். ஆனால், அன்சாரிகளுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. இதனால் அன்சாரிகளில் ஒரு குறிப்பிட்ட கிளையினர் மன வருத்தமடைந்து பலவாறாகப் பேசினர். அவர்களில் சிலர் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நபி (ஸல்) தனது கூட்டத்தினருக்கே வாரி வழங்குகின்றார்கள்” என்று பேசினார்கள். ஸஅது இப்னு உபாதா (ரழி) நபி (ஸல்) அவர்களிடம் வந்து, “அல்லாஹ்வின் தூதரே! அன்சாரிகளில் இந்தக் கூட்டத்தினர் உங்கள் மீது வருத்தமாக உள்ளனர்.

உங்களுக்குக் கிடைக்கப்பட்ட இந்த கனீமா பொருட்களில் உங்கள் கூட்டத்தாருக்கும் ஏனைய கோத்திரங்களுக்கும் வாரி வழங்கினீர்கள். ஆனால் அன்சாரிகளுக்கு எதுவும் கிடைக்கவில்லை. இதுதான் அவர்களின் வருத்தத்திற்குக் காரணம்'' என்றார். ''ஸஅதே! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். ''நான் எனது கூட்டத்தால் ஒருவன்தானே!'' என்று கூறினார். நபி (ஸல்) ''சரி! உங்கள் கூட்டத்தார்களை இந்தத் தடாகத்திற்கு அருகில் ஒன்று சேருங்கள்'' என்று கூறினார்கள்.

ஸஅது (ரழி), நபியவர்களிடமிருந்து வெளியேறி தனது கூட்டத்தாரிடம் சென்று அவர்களை அந்தத் தடாகத்திற்கருகில் ஒன்று சேர்த்தார். அங்கே சில முஹாஜிர்களும் வந்தார்கள். அவர்களுக்கு ஸஅது (ரழி) அனுமதி வழங்கவே அவர்களும் அக்கூட்டத்தில் கலந்து கொண்டார்கள். மேலும் சில முஹாஜிர்கள் அங்கே வந்தனர். ஆனால், அவர்களுக்கு அனுமதி வழங்கப்படவில்லை. அனைவரும் ஒன்று சேர்ந்தவுடன் ஸஅது (ரழி) நபி (ஸல்) அவர்களிடம் சென்று ''அனைவரும் ஒன்று சேர்ந்து விட்டனர். வாருங்கள்!'' என நபியவர்களை அழைத்தார்கள். நபி (ஸல்) அங்கு வந்து அல்லாஹ்வை புகழ்ந்துவிட்டு பேசினார்கள். ''அன்சாரி கூட்டத்தினரே! உங்களைப் பற்றி எனக்கு எட்டிய செய்தி என்ன? என்மீது நீங்கள் கோபமடைந்துள்ளீர்களா? நீங்கள் வழிகேட்டில் இருக்கும் போது நான் உங்களிடம் வரவில்லையா? அல்லாஹ் உங்களுக்கு (நான் வந்த பின்) நேர்வழி காட்டினான். நீங்கள் ஏழைகளாக இருந்தீர்கள். அல்லாஹ் உங்களை செல்வந்தர்களாக்கினான். நீங்கள் ஒருவருக்கொருவர் எதிரிகளாக இருந்தீர்கள். அல்லாஹ் உங்களை ஒன்று சேர்த்தான்.'' இவ்வாறு நபி (ஸல்) கூறி முடித்தார்கள். ''அல்லாஹ்வின் தூதரே! ஆம்! நீங்கள் கூறியது உண்மைதான். அல்லாஹ்வும் அவனது தூதரும் எங்கள் மீது பெரும் கருணையுடைவர்கள், பேருபகாரம் உள்ளவர்கள்'' என்று அன்சாரிகள் கூறினார்கள்.

''அன்சாரிகளே! நீங்கள் எனக்குப் பதிலளிக்க மாட்டீர்களா?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். ''அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் உங்களிடம் என்ன கூறுவது? அனைத்து உபகாரமும் கிருபையும் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்குமே உரித்தானது'' என்று அன்சாரிகள் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) கூறியதாவது: ''அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! பொய்ப்பிக்கப் பட்டவராக நீங்கள் எங்களிடம் வந்தீர்கள் நாங்கள் உங்களை உண்மைப்படுத்தினோம். மக்களால் கைவிடப்பட்டவர்களாக எங்களிடம் வந்தீர்கள் நாங்கள்தான் உங்களுக்கு உதவி செய்தோம். மக்களால் விரட்டப்பட்ட நிலையில் வந்தீர்கள் நாங்கள் உங்களுக்கு அடைக்கலம் கொடுத்தோம். நீங்கள் சிரமத்துடன் வந்தீர்கள் நாங்கள் உங்களுக்கு ஆதரவளித்தோம் என்று நீங்கள் பதில் கூறலாம்.

அப்படி நீங்கள் கூறினால் அது உண்மைதான். நாமும் அதை உண்மை என்றே ஏற்றுக் கொள்கிறோம். அன்சாரிகளே! இவ்வுலகின் அற்பப் பொருள் விஷயத்திலா கோபமடைந்தீர்கள்? மக்களில் சிலர் பரிபூரண முஸ்லிமாவதற்காக நான் அதை அவர்களுக்குக் கொடுத்தேன். உங்களை உங்களது இஸ்லாமிய மார்க்கத்திடமே ஒப்படைத்து விட்டேன் (உங்களது இஸ்லாம் மிக உறுதிமிக்கது). அன்சாரிகளே! மக்களெல்லாம் ஆடுகளையும் ஒட்டகங்களையும் அழைத்துச் செல்லும் போது நீங்கள் உங்கள் இல்லங்களுக்கு அல்லாஹ்வின் தூதரை அழைத்துச் செல்வது உங்களுக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லையா? முஹம்மதின் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக! ஹிஜ்ரத் என்ற சிறப்பு மட்டும் இல்லையெனில் நான் அன்சாரிகளில் ஒருவனாகவே இருந்திருப்பேன். மக்களெல்லாம் ஒரு வழியில் சென்று அன்சாரிகள் மட்டும் வேறொரு வழியில் சென்றால் நான் அன்சாரிகளின் வழியில்தான் சென்றிருப்பேன். அல்லாஹ்வே! அன்சாரிகளுக்கும், அவர்களின் பிள்ளைகளுக்கும், அவர்களின் பிள்ளைகளின் பிள்ளைகளுக்கும் கருணை காட்டுவாயாக!'' என்று கூறி தங்களது உரையை முடித்தார்கள்.

கேட்டுக் கொண்டிருந்த அன்சாரிகளெல்லாம் தாடி நனையுமளவிற்கு அழுதார்கள். “அல்லாஹ்வின் தூதரே! எங்களது பங்கைத் திருப்தி கொண்டோம். நீங்கள் எங்களுக்குக் கொடுத்த பங்கைப் பொருந்திக் கொண்டோம்” என்று கூறியவர்களாகக் கலைந்து சென்றனர். (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம்)

ஹவாஜின் குழுவினன் வருகை

இந்நிகழ்ச்சிக்குப் பின் ஜுஹைர் இப்னு ஸுர்தின் தலைமையில் பதிநான்கு நபர்கள் கொண்ட ஹவாஜின் குழுவினர் இஸ்லாமை ஏற்று நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். அதில் நபி (ஸல்) அவர்களுடைய பால்குடி தந்தையின் சகோதரர் அபூ ஃபுர்கானும் இருந்தார். நபியவர்களிடம் அவர்கள் பைஅத் செய்த பின் “அல்லாஹ்வின் தூதரே! உங்களிடம் கைதிகளாக இருப்பவர்களில் தாய்மார்களும், சகோதரிகளும், மாமிமார்களும், தாயின் சகோதரிகளும் இருக்கின்றனர். அவர்களுக்கு தீங்கு ஏற்படுவது சமுதாயத்திற்கு கேவலமாகும்.” என்று கூறிய பின்,

“இறைத்தூதரே! தயாளத்தன்மையுடன் உதவி புரியுங்கள்
உங்களை நாம் ஆதரவு வைத்திருக்கின்றோம்
உதவியை எதிர்பார்க்கிறோம்
நீங்கள் பால் குடித்த தாய்மார்களுக்கு உதவுங்கள்
கலப்பற்ற முத்தான பாலால் உங்கள் வாய் நிரம்பியுள்ளது!”

என்ற கவிகளைப் பாடினர். இதைக் கேட்ட நபி (ஸல்) “என்னுடன் இருப்பவர்களை நீங்கள் பார்க்கிறீர்கள். பேச்சுகளில் எனக்கு மிகப் பிடித்தமானது உண்மையான பேச்சுதான். உங்களது பெண்களும், பிள்ளைகளும் உங்களுக்குப் பிரியமானவர்களா? அல்லது உங்களது செல்வங்களா?” என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் “அல்லாஹ்வின் தூதரே! செல்வங்கள் எங்களுக்கு வேண்டாம் எங்களது குடும்பங்களே எங்களுக்கு வேண்டும் எங்கள் குடும்பக் கௌரவத்திற்கு நிகராக எதையும் நாங்கள் மதிப்பதில்லை” என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) ளுஹ்ர் தொழுகைக்குப் பின் என்னிடம் வந்து சபையில் எழுந்து நின்று, “நாங்கள் அல்லாஹ்வுடைய தூதரின் பரிந்துரையால் முஃமின்களிடமும், முஃமின்களின் பரிந்துரையால் அல்லாஹ்வுடைய தூதரிடமும் எங்கள் கைதிகளை திரும்ப கொடுக்கும்படி கோருகிறோம்” என்று கூறுங்கள்.

ஹவாஜின் கிளையினர் ளுஹ்ர் தொழுகைக்குப் பின் வந்து நபி (ஸல்) அவர்கள் கூறியவாறே கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) “எனக்கும் அப்துல் முத்தலிப் குடும்பத்தாருக்கும் சொந்தமான கைதிகளை நான் உங்களுக்கு வழங்கி விடுகிறேன். மேலும், உங்களுக்காக மக்களிடமும் கேட்கிறேன்” என்று கூறினார்கள். அதைக் கேட்ட முஹாஜிர்களும், அன்சாரிகளும் “அல்லாஹ்வின் தூதரே! எங்களுக்குச் சொந்தமானது உங்களுக்கு சொந்தமானதுதான்” என்று கூறினார்கள். ஆனால், அக்ரா இப்னு ஹாபிஸ் “நானும் தமீம் கிளையினரும் அதனை ஏற்றுக் கொள்ள மாட்டோம்” என்று கூறிவிட்டார். உயய்னா இப்னு ஹிஸ்ன் “நானும் ஃபஸாரா கிளையினரும் இதை ஏற்றுக் கொள்ள மாட்டோம்” என்று கூறிவிட்டார். இவ்வாறே அப்பாஸ் இப்னு மிர்தாஸ் என்பவரும் எழுந்து “நானும் ஸுலைம் கோத்திரத்தாரும் இதை ஏற்றுக் கொள்ள மாட்டோம்” என்று கூறினார். ஆனால், ஸுலைம் கூட்டத்தார் எழுந்து “அல்லாஹ்வின் தூதரே! எங்களுக்குரியதை உங்களுக்குத் தந்துவிடுகிறோம்” என்று கூறி தங்கள் தலைவன் பேச்சை மறுத்து விட்டனர். அதற்கு அப்பாஸ் இப்னு மிர்தாஸ் (ரழி) “என்னை இவ்வாறு பலவீனப்படுத்தி விட்டீர்களே!” என்று வருந்தினார்.

அதைத் தொடர்ந்து நபி (ஸல்) “இந்தக் கூட்டத்தினர் இஸ்லாமை ஏற்று நம்மிடம் வந்திருக்கிறார்கள். இவர்களின் வருகையை எதிர்பார்த்துதான் கனீமா பங்கீடு செய்வதில்

தாமதம் காட்டினேன். நான் இவர்களிடம் பொருள் வேண்டுமா? கைதிகள் வேண்டுமா?'' என்று கேட்டேன். அதற்கவர்கள் ''எங்களின் குடும்பம்தான் வேண்டும்'' என்று கூறிவிட்டனர். அதற்கு ஈடாக அவர்கள் எதையும் மதிக்கவில்லை. எனவே, ''யாரிடம் கைதிகள் இருக்கிறார்களோ அவர்களை எந்தவிதப் பகரமும் எதிர்பார்க்காமல் விட்டுவிடவும் அல்லது விரும்பினால் அதற்குரிய பகரத்தைப் பிற்காலத்தில் அல்லாஹ் நமக்கு வழங்கும் கனீமாவிலிருந்து அவருடைய ஒரு பங்கிற்குப் பகரமாக ஆறு பங்குகள் கொடுக்கப்படும்'' என்று கூறினார்கள். அதற்கு நபித்தோழர்கள் ''அல்லாஹ்வின் தூதரே! எந்தப் பகரமும் இல்லாமல் நாங்கள் இந்தக் கைதிகளை உரிமை விட்டுவிடுகிறோம்'' என்று கூறினர். ஆனால் அதற்கு நபி (ஸல்) அவர்கள் ''உங்களில் முழுமையான திருப்தியுடன் இதைச் செய்பவர் யார்? அல்லது திருப்தியின்றி செய்பவர் யார்? என்று எனக்குத் தெரியாது. எனவே, நீங்கள் சென்று ஆலோசித்துக் கொள்ளுங்கள். உங்களது தலைவர்கள் உங்கள் முடிவை எனக்குத் தெரிவிக்கட்டும்!'' என்று கூறினார்கள். இறுதியில் மக்கள் தங்களிடமிருந்த கைதிகள் அனைவரையும் நபி (ஸல்) அவர்களிடம் திருப்பிக் கொடுத்து விட்டார்கள். உயய்னா இப்னு ஹிஸ்ன் மட்டும் தனக்குக் கிடைத்த வயதான மூதாட்டியைத் திரும்பத்தர அந்நேரத்தில் மறுத்து விட்டார்கள். பிறகு சிறிது நாட்கள் கழித்து திரும்பக் கொடுத்து விட்டார்கள். கைதிகளுக்கு நபி (ஸல்) கிப்தி ஆடையை அணிவித்து மகிழ்ந்தார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஃபத்ஹுல் பாரி)

### உம்ராவை நிறைவேற்றி மதீனா திரும்புதல்

இந்நிகழ்ச்சிக்குப் பின் நபி (ஸல்) ஜிஃரானாவில் இஹ்ராம் அணிந்து உம்ராவை நிறைவேற்றினார்கள். மக்காவில் அத்தாப் இப்னு உஸைப் (ரழி) என்ற தோழரை ஆளுநராக நியமித்துவிட்டு மதீனா நோக்கிப் பயணமானார்கள். ஹிஜ்ரி 8, துல்கஅதா மாதம் முடிய ஆறு நாட்கள் இருக்கும் போது மதீனா வந்தடைந்தார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், ஜாதுல் மஆது, தாரீக் இப்னு கல்தூன்)

### மக்கா வெற்றிக்குப் பின் அனுப்பப்பட்ட படைப் பிரிவுகளும் குழுக்களும்

இந்த நீண்ட வெற்றிமிக்க பயணத்திலிருந்து நபி (ஸல்) மதீனா திரும்பிய பின், பல பாகங்களிலிருந்து மக்கள் கூட்டங்களும், குழுக்களும் வந்தன. மேலும், நபி (ஸல்) தங்களது தோழர்களை பல இடங்களுக்கு ஆளுநர்களாக அனுப்பினார்கள் இஸ்லாமியப் பிரச்சாரப் பணிக்காகவும் பல அழைப்பாளர்களை பல பகுதிகளுக்கு அனுப்பி வைத்தார்கள். இவை ஒரு புறமிருக்க, இஸ்லாமை ஏற்றுக் கொள்ளாமல் அல்லது அரபுலகம் கண் கூடாகப் பார்த்துக் கொண்ட உண்மைக்கு அடிபணியாமல் அகம்பாவம் பிடித்து, வம்புத்தனம் செய்து வந்த கோத்திரங்களை அடக்குவதற்குண்டான நடவடிக்கைகளையும் நபி (ஸல்) எடுத்தார்கள். இது தொடர்பான சிறு விளக்கங்களைப் பார்ப்போம்:

### ஜகாத் வசூலிக்க அனுப்பப்பட்டவர்கள்

ஹிஜ்ரி 8 ஆம் ஆண்டின் கடைசி நாட்களில் நபி (ஸல்) மதீனாவுக்குத் திரும்பி வந்தார்கள் என்பதை இதற்கு முன் நாம் அறிந்தோம். ஆக, சில நாட்களிலேயே ஹிஜ்ரி 9, முஹர்ரம் மாதம் இஸ்லாமியப் புத்தாண்டு தொடங்கிற்று. சென்ற ஆண்டிற்கான ஜகாத்தை வசூலிக்க நபி (ஸல்) தங்களது தோழர்களை பல கோத்திரத்தாரிடம் அனுப்பி வைத்தார்கள். அதன் விவரமாவது:

ஜகாத் வசூலிக்க அனுப்பப்பட்டவர்கள் மற்றும் அவர்கள் அனுப்பப்பட்ட கோத்திரத்தாரின் பெயர்கள்:

1. உயைனா இப்னு ஹிஸ்ன் (ரழி) - பனூ தமீம்

2. யஜீது இப்னு அல் ஹுஸைன் (ரழி) - அஸ்லம், கிஃபார்

3. அப்பாது இப்னு பஷீர் அஷ்ஹலி (ரழி) - சுலைம், முஜைனா

4. ராஃபி இப்னு மக்கீஸ் (ரழி) - ஜுஹைனா

5. அம்ரு இப்னு ஆஸ் (ரழி) - பனூ ஃபஜாரா

6. ழஹ்ஹாக் இப்னு ஸுஃப்யான் (ரழி) - பனூ கிளாப்

7. பஷீர் இப்னு ஸுஃப்யான் (ரழி) - பனூ கஅப்

8. இப்னு லுத்பிய்யா அஜ்தி (ரழி) - பனூ துப்யான்

9. முஹாஜிர் இப்னு அபூ உமைய்யா (ரழி) - ஸன்ஆ நகரம் (இவர்கள் ஸன்ஆவிற்கு அனுப்பப்பட்ட காலத்தில் தான் தன்னை நபி என்று வாதிட்ட அஸ்வது அனஸி அங்குத் தோன்றினான்)

10. ஜியாது இப்னு லபீது (ரழி) - ஹழர மவுத் (யமன் நாட்டிலுள்ள ஓர் ஊர்)

11. அதீ இப்னு ஹாத்தம் (ரழி) - தை மற்றும் பனூ அஸத்

12. மாலிக் இப்னு நுவைரா (ரழி) - பனூ ஹன்ளலா

13. ஜிப்கான் இப்னு பத்ர் (ரழி) - பனூ ஸஅதின் ஒரு பிரிவினருக்கு

14. கைஸ் இப்னு ஆஸிம் (ரழி) - பனூ ஸஅதின் மற்றொரு பிரிவினருக்கு

15. அலா இப்னு ஹழ்ரமி (ரழி) - பஹ்ரைன் தீவு

16. அலீ இப்னு அபூதாலிப் (ரழி) - நஜ்ரான் பிரதேசம் (ஜகாத் மற்றும் ஜிஸ்யா வசூலிப்பதற்காக அனுப்பப்பட்டவர்கள்.)

நபி (ஸல்) அந்த ஆண்டு முஹர்ரம் மாதத்திலேயே மேற்கூறப்பட்ட அனைத்து குழுக்களையும் அனுப்பிவிடவில்லை. அவர்களில் சில கோத்திரத்தார்கள் தாமதமாக இஸ்லாமை ஏற்றுக் கொண்டதால், அற்குப் பிறகே நபி (ஸல்) தோழர்களை அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். ஆனால், இந்த அளவுக்கு முக்கியத்துவம் கொடுத்து நபி (ஸல்) தங்களது தோழர்களை அனுப்பி வைத்தது ஹிஜ்ரி 9, முஹர்ரம் மாதத்தில்தான் ஆரம்பமானது. இதிலிருந்து ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின் இஸ்லாமிய அழைப்புப் பணி எந்தளவு வெற்றி அடைந்துள்ளது என்பது தெளிவாகிறது. அவ்வாறே, மக்கா வெற்றி கொள்ளப்பட்ட பின் மக்கள் அல்லாஹ்வின் மார்க்கத்தில் கூட்டம் கூட்டமாக நுழைந்தனர்.

### படைப் பிரிவுகள்

ஜகாத் வசூல் செய்வதற்குப் பல கோத்திரத்தாரிடம் தங்களது தோழர்களை அனுப்பியவாறே சில படைகளையும் பல பகுதிகளுக்கு நபி (ஸல்) அனுப்பினார்கள். அரேபியத் தீபகற்பம் முழுவதிலும் முழு அமைதியை நிலை நாட்டுவதே அதன் நோக்கமாகும். அவ்வாறு அனுப்பப்பட்ட படைகளின் விவரம் வருமாறு:

1) உயைனா இப்னு ஹிஸ்ன் படைப் பிரிவு: தமீம் கிளையினர் முஸ்லிம்களுக்கு எதிராக ஏனைய கிளையினரைத் தூண்டி வந்ததுடன், முஸ்லிம்களுக்குச் செலுத்த வேண்டிய ஜிஸ்யா வரியையும் கொடுக்க விடாமல் தடுத்து வந்தனர். எனவே, உயைனா இப்னு ஹிஸ்ன் அல்பஸாயின் தலைமையில் ஐம்பது குதிரை வீரர்களை ஹிஜ்ரி 9, முஹர்ரம் மாதத்தில் பனூ தமீம் கிளையினரிடம் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இப்படையில்

முஹாஜிர் மற்றும் அன்சாரிகளில் எவரும் இருக்கவில்லை. அனுப்பப்பட்ட அனைவரும் புதிதாக இஸ்லாமை ஏற்றவர்களே.

உயைனா தனது படையுடன் இரவில் பயணிப்பதும் பகலில் மறைவதுமாக தமீமினரை நோக்கிச் சென்றார். ஒரு பாலைவனத்தில் ஒன்று கூடியிருந்த அந்த தமீம் கிளையினர் மீது திடீரென தாக்குதல் நடத்தினார். முஸ்லிம்களின் படையைச் சமாளிக்க முடியாமல் அக்கூட்டத்தினர் அங்குமிங்கும் ஓடினர். பதினொரு ஆண்கள், இருபத்தொரு பெண்கள், முப்பது சிறுவர்களைக் கைதிகளாக்கி உயைனா மதீனா அழைத்து வந்தார். அவர்கள் அனைவரும் ரம்லா பின்த் அல்ஹாரிஸின் இல்லத்தில் தங்க வைக்கப்பட்டனர்.

தமீமினன் தலைவர்களில் பத்து முக்கிய நபர்கள் தங்களின் கைதிகளை விடுவிப்பதற்காக மதீனா வந்தனர். அங்கு நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க அவர்களின் இல்லம் வந்து ‘‘முஹம்மதே! எங்களிடம் வாருங்கள்’’ என்று கூவி அழைத்தனர். நபி (ஸல்) வந்தவுடன் அவர்கள் நபியவர்களை பற்றிக் கொண்டனர். நபி (ஸல்) சிறிது நேரம் பேசிவிட்டு ளுஹ்ர் தொழுகைக்காகச் சென்று விட்டார்கள். தொழுகை முடித்து பள்ளியின் முற்றத்தில் அமர்ந்தபோது அக்குழுவினர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து ‘‘வாருங்கள் ஒவ்வொருவரும் தத்தமது பெருமையைப் பற்றி விவாதிப்போம்’’ என்று கூறினர்.

அவர்களில் புகழ்பெற்ற பேச்சாளரான உத்தாத் இப்னு ஹாரிஸ் என்பவரை அவர்கள் முன்னிறுத்தினர். அவர் உரையாற்றியவுடன் இஸ்லாமியப் பேச்சாளரான கைஸ் இப்னு ஷம்மாஸுக்கு நபி (ஸல்) கட்டளையிட, அவர் எழுந்து உத்தாதிற்கு பதிலளித்தார். பின்பு தங்களின் புகழ்பெற்ற கவிஞர் ஜுப்ருகான் இப்னு பத்ரை அவர்கள் நிறுத்தினர். அவர் தங்களின் பெருமையைக் கவிதையாகப் பாடினார். நபி (ஸல்) அவர்கள் ஹஸ்ஸான் இப்னு ஸாபித்திடம் பதில் கூறும்படி கூறினார்கள். ஹஸ்ஸான் உடனடியாக வாயடைக்கும் பதிலைத் தனது கவிதையில் வழங்கினார்.

இப்போட்டி முடிந்தவுடன் தமீம் குழுவில் இடம் பெற்றிருந்த நடுவர் அக்ரா இப்னு ஹாபிஸ் கூறி தீர்ப்பாவது: நபி (ஸல்) அவர்களின் பேச்சாளர் நமது பேச்சாளரை விட மிகத் திறமையானவர் நபி (ஸல்) அவர்களின் கவிஞர் நமது கவிஞரைவிட மிகத் திறமையானவர் அவர்களுடைய குரல் நமது குரலைவிட மிக உயர்ந்தது அவர்களது சொற்கள் நமது சொற்களை விட மிக உயர்ந்தது. அவன் இத்தீர்ப்புக்குப் பின் அனைவரும் இஸ்லாமைத் தழுவினர். நபி (ஸல்) அவர்களுக்கு வெகுமதிகளை அளித்ததுடன் கைதிகளையும் அவர்களிடம் திரும்ப ஒப்படைத்தார்கள்.

2) குத்பா இப்னு ஆமிர் படைப் பிரிவு: ஹிஜ்ரி 9, ஸஃபர் மாதம் ‘துரபா’ என்ற நகருக்கருகிலுள்ள ‘தபாலா’ என்ற பகுதியில் வசிக்கும் கஸ்அம் கபீலாவைச் சேர்ந்த ஒரு கிளையினரிடம் குத்பா இப்னு ஆமிர் என்பவரை இருபது வீரர்களுடன் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இவர்கள் பத்து ஒட்டகங்களில் ஒருவர் பின் ஒருவராக மாறி மாறி பயணம் செய்தனர். அங்குச் சென்று எதிரிகளுடன் கடுமையான சண்டை செய்தனர். இரு தரப்பிலும் அதிகமான சேதங்கள் ஏற்பட்டன. இதில் தளபதியாக இருந்த குத்பாவும் கொல்லப்பட்டார். ஆனால், இறுதியில் வெற்றி முஸ்லிம்களுக்கே கிடைத்தது. எதிரிகளின் கால்நடைகளையும் பெண்களையும் முஸ்லிம்கள் மதீனாவுக்குக் கொண்டு வந்தனர்.

3) ழஹ்ஹாக் இப்னு ஸுஃப்யான் படைப் பிரிவு: ஹிஜ்ரி 9, ரபீஉல் அவ்வல் மாதத்தில் ‘ழஹ்ஹாக் இப்னு ஸுஃப்யான் கிலாபி’ என்பவன் தலைமையில் கிளாப் கிளையினரை இஸ்லாமின் பக்கம் அழைப்பதற்காக நபி (ஸல்) ஒரு படைப் பிரிவை அனுப்பி வைத்தார்கள். முஸ்லிம்களின் அழைப்பை அவர்கள் ஏற்க மறுத்துப் போருக்குத் தயாரானார்கள். போரில் முஸ்லிம்கள் வெற்றி பெற்றார்கள். எதிரிகளில் ஒருவன் மட்டும் கொல்லப்பட்டான்.

4) அல்கமா படைப் பிரிவு: ஹிஜ்ரி 9, ரபீஉல் ஆகிர் மாதம் 'ஜூத்தா' கடற்கரையை நோக்கி 'அல்கமா இப்னு முஜஸ்ஸிர்' என்பவன் தலைமையின் கீழ் 300 வீரர்களை நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இதற்குக் காரணம், ஹபஷாவைச் சேர்ந்த சிலர் மக்காவில் கொள்ளையடிப்பதற்காக ஜூத்தா கடற்கரையில் ஒன்று கூடியிருக்கின்றனர் என்ற தகவல் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. அல்கமா தனது படையுடன் கடற்கரைப் பகுதிகள் முழுவதும் ரோந்து சுற்றினார். அங்குள்ள ஒரு தீவு வரை சென்று தேடினார். முஸ்லிம்கள் வருகிறார்கள் என்ற செய்தியை அறிந்த ஹபஷிகள் தப்பி ஓடிவிட்டதால் சண்டை ஏதும் நடக்கவில்லை. (ஃபத்ஹுல் பாரி)

5) அலீ படைப் பிரிவு: தை கூட்டத்தினருக்கென்று பிரசித்திப்பெற்ற சிலை ஒன்றிருந்தது. அதை அம்மக்கள் 'ஃபுல்ஸ்' என்றழைத்தனர். அதை இடிப்பதற்ககாக அலீ இப்னு அபூ தாலிபை 150 வீரர்களுடன் ஹிஜ்ரி 9, ரபீஉல் அவ்வல் மாதத்தில் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். இவர்கள் நூறு ஒட்டகைகள், ஐம்பது குதிரைகளில் பயணம் செய்தனர். இவர்களிடம் கருப்பு நிறத்தில் பெரிய கொடி ஒன்றும், வெள்ளை நிறத்தில் சிறிய கொடி ஒன்றும் இருந்தது. வந்து சேர வேண்டிய இடத்தை அடைந்தவுடன், ஃபுல்ஸ் சிலையைத் தகர்த்தெறிந்து விட்டு அங்கிருந்த கஜானாவையும் கைப்பற்றினர். அதில் மூன்று வாட்களும், மூன்று கவச ஆடைகளும் இருந்தன.

அங்கு வசித்த 'ஹாத்திம்' குடும்பத்தனரிடம் சண்டையிட்டு நிறைய கால்நடைகளைக் கைப்பற்றி அவர்களில் பலரைக் கைது செய்தனர். அங்கு தய்ம் கிளையினரின் தலைவராக இருந்த அதீ இப்னு ஹாதிம் தப்பித்து ஷாம் நாட்டை (சிரியா) நோக்கி ஓட்டம் பிடித்தார். கைதியாக்கப்பட்டவர்களில் இவன் சகோதரியும் இருந்தார். மதீனா வரும் வழியில் நபி (ஸல்) அவர்களுக்காக வெற்றிப் பொருளில் ஐந்தில் ஒரு பகுதியை ஒதுக்கி விட்டு மீதியை வீரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டது. ஆனால், கைதிகளில் ஹாத்திம் குடும்பத்தாரை மட்டும் பங்கிடாமல் நபி (ஸல்) அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. அதீயின் சகோதரி நபி (ஸல்) அவர்களிடம் தன் மீது இரக்கம் காட்டுமாறு கேட்டுக் கொண்டார். "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு உதவி செய்பவரும் ஓடிவிட்டார் தந்தையும் இறந்துவிட்டார் நானோ வயதான மூதாட்டி. எனக்குப் பணிவிடை செய்வதற்கும் யாருமில்லை. எனக்கு உதவி செய்யுங்கள். அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்வான்" என்று அப்பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் கூறினார். அதற்கு நபி (ஸல்) "உமக்கு உதவி செய்பவர் யார்?" என்று கேட்க, "அதீ இப்னு ஹாத்திம்" என்று பதிலளித்தார். "அல்லாஹ்விடமிருந்தும், அவனது தூதரிடமிருந்தும் விரண்டோடிய அவரா?" என்று கேட்டுவிட்டு வேறெதுவும் பேசாமல் சென்று விட்டார்கள்.

மறுநாளும் இதுபோன்றே நபி (ஸல்) அவர்களிடம் அப்பெண்மணி உரையாடினார். முந்தைய நாள் கூறியது போன்றே கூறிவிட்டு சென்று விட்டார்கள். மூன்றாம் நாளும் நபி (ஸல்) அவர்களிடம் வந்து முன்பு கூறியது போன்றே கேட்டுக் கொண்டார். நபி (ஸல்) அவர் மீது இரக்கம் காட்டி அவரை விடுதலை செய்தார்கள்.

அப்போது நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் ஒருவர் இருந்தார். அநேகமாக அவர் அலீயாக இருக்குமென்று அப்பெண் கூறுகிறார். அவர் "வாகனிப்பதற்காக வாகனத்தையும் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டு பெற்றுக் கொள்!" என்று யோசனைக் கூறினார். அப்பெண்மணியும் நபி (ஸல்) அவர்களிடம் வாகனம் கேட்கவே நபி (ஸல்) அவர்களும் அதற்கு ஏற்பாடு செய்தார்கள். நபி (ஸல்) அவர்களிடமிருந்து திரும்பிய அப்பெண்மணி தனது சகோதரரைத் தேடி ஷாம் நாட்டிற்குப் பயணமானார். அங்கு தனது சகோதரரைச் சந்தித்து நபி (ஸல்) அவர்களின் பெருந்தன்மை குறித்து விவரித்துவிட்டு "உமது தந்தை செய்திராத நற்செயல்களை எல்லாம் அவர் செய்கிறார். எனவே, விரும்பியோ விரும்பாமலோ நீ அவரைச் சந்தித்தே ஆக வேண்டும்" என்று அறிவுரைக் கூறினார்.

தனது சகோதரியின் இந்த யோசனைக்குப் பின் தனக்கு எந்தவித பாதுகாப்பும் இல்லையென்றாலும் துணிவுடன் நபியவர்களை சந்திக்க அவர் பயணமானார்.

நபி (ஸல்) அவர்களின் இல்லம் வந்து அவர்களுக்கருகில் அமர்ந்தவுடன், அவர் யார் என்பதை அறிந்து கொண்டு அவரிடம் நபி (ஸல்) பேசினார்கள். அல்லாஹ்வை புகழ்ந்ததற்கு பின் ''நீ இஸ்லாமை ஏற்றுக் கொள்ளாமல் ஓடுவதற்குரிய காரணம் என்ன? 'லாஇலாஹஇல்லல்லாஹ்' என்று கூறுவதற்கு பயந்தா நீ ஓடுகிறாய்? அல்லாஹ்வை தவிர வேறொர் இறைவன் இருக்கிறான் என்று உன் அறிவுக்கு எட்டுகிறதா?'' என்று அவரிடம் வினவினார்கள். அதற்கு அவர் ''அப்படி ஒன்றுமில்லை'' என்றார். மேலும் சிறிது நேரம் பேசிவிட்டு ''அல்லாஹு அக்பர் என்று சொல்வதற்குப் பயந்தா நீ ஓடுகிறாய்? அல்லாஹ்வை விட மிகப்பெரியவன் ஒருவன் இருக்கிறான் என்று உன் அறிவுக்கு எட்டுகிறதா?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். அதற்கவர் ''அவ்வாறு இல்லை'' என்று பதிலளித்தார்.

யூதர்கள் அல்லாஹ்வின் கோபத்திற்குரியவர்கள், கிறிஸ்தவர்கள் வழிதவறியவர்கள் என்று நபி (ஸல்) கூறினார்கள். இதனைக் கேட்ட அதிய் ''நான் இணைவைப்பிலிருந்து முற்றிலும் விலகிய முஸ்லிமாக இருக்கிறேன்'' என்று கூறினார். அவன் இப்பேச்சைக் கேட்ட நபி (ஸல்) முகம் மலர்ந்தவர்களாக அன்சாரி ஒருவன் வீட்டில் விருந்தாளியாக, அவரைத் தங்க வைத்தார்கள். அவர் அங்கு தங்கி ஒவ்வொரு நாள் காலையிலும் மாலையிலும் இருமுறை நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து வந்தார். (ஜாதுல் மஆது)

தான் முஸ்லிமானதைப் பற்றி அதிய் கூறியதை இப்னு இஸ்ஹாக் (ரஹ்)அறிவிக்கிறார்: ''என்னை நபி (ஸல்) தங்கள் இல்லத்தில் அவர்களுக்கு முன்பாக அமர வைத்தார்கள். நபி (ஸல்) என்னிடம் ''ஹாத்திமின் மகன் அதியே! நீ 'ரகூஸி''யாக இருந்தாய் அல்லவா?'' (ம்ரகூஸி' என்பது கிறிஸ்துவம் மற்றும் நட்சத்திரங்களை வணங்குபவர்.)

அதிய்: ஆம்! அப்படித்தான்.

நபி (ஸல்): உமது கூட்டத்தினருக்குச் சொந்தமான கனீமா பொருட்களின் 1ழூழூ4 பங்கை அனுபவித்து வந்தாயல்லவா?

அதிய்: ஆம்! அவ்வாறுதான் செய்தேன்.

நபி (ஸல்): அது உமது மார்க்கத்தில் ஆகுமான செயலாக இல்லையே?

அதிய்: ஆம்! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் சொல்வது சரிதான்.

மக்களுக்கு தெரியாதவை அவருக்குத் தெரிகிறது. எனவே, நிச்சயமாக அவர் அல்லாஹ்வின் தூதர்தான் என்று அறிந்து கொண்டேன்.) (இப்னு ஹிஷாம்)

அதிய் தொடர்பாக முஸ்னது அஹ்மதில் மற்றொரு அறிவிப்பு வந்துள்ளது.

நபி (ஸல்): அதிய்யே! நீ இஸ்லாமை ஏற்றுக் கொள்! ஈடேற்றமடைவாய்!

அதிய்: நானும் ஒரு மார்க்கத்தைப் பின்பற்றுபவன்தானே?

நபி (ஸல்): நான் உம்மைவிட உமது மார்க்கத்தை நன்கறிவேன்.

அதிய்: அது எப்படி என் மார்க்கத்தை என்னைவிட நீங்கள் நன்கறிவீர்கள்?

நபி (ஸல்): நீர் ரகூஸியா கூட்டத்தை சேர்ந்தவர்தானே? உமது கூட்டத்தில் கனீமத்தில் 1ழூழூ4 பங்கை அனுபவித்து வந்தீரே?

அதிய்: நீங்கள் கூறுவது உண்மைதான்.

நபி (ஸல்): நிச்சயமாக உமது இந்தச் செயல் உமது மார்க்கத்தில் ஆகுமானதல்லவே.

அதிய் (ரழி) கூறுகிறார்: நபி (ஸல்) அவர்களின் இந்தப் பேச்சுக்கு முன் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. உடனே நான் இஸ்லாமை ஏற்றுக் கொண்டேன். (முஸ்னது அஹ்மது)

ஸஹீஹ் புகாரியில் அதிய்யின் மூலமாக மற்றும் ஒரு நிகழ்ச்சி பதிவாகியுள்ளது: நான் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கும் போது ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தனது வறுமையை முறையிட்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு மற்றொருவர் தனது பொருட்களை எல்லாம் கொள்ளையர்கள் வழியில் கொள்ளையடித்து விட்டதாக முறையிட்டார். நபி (ஸல்) என்னைப் பார்த்து “அதிய்யே! ஹீரா தேசம் எங்கிருக்கிறது என்று உனக்குத் தெரியுமா? உனக்கு ஆயுள் நீளமாக இருந்தால் ஒரு பெண் தனியாக ஹீராவிலிருந்து புறப்பட்டு கஅபாவிற்கு வந்து தவாஃப் செய்வாள். அவளுக்கு அல்லாஹ்வை தவிர வேறு எந்த பயமும் இருக்காது என்பதை நீ பார்க்கத்தான் போகிறாய். மேலும், உனக்கு ஆயுள் நீளமாக இருந்தால் கிஸ்ராவின் பொக்கிஷங்களை நீ வெற்றி கொள்வாய். மேலும், உனக்கு வயது நீளமாக இருந்தால் ஒருவர் கை நிறைய தங்கம் அல்லது வெள்ளியை அள்ளிக்கொண்டு தர்மம் செய்ய வெளியேறி அதைப் பெறுவோர் யாரும் உண்டா? என்று தேடி அலைவார். ஆனால், அதைப் பெறுவதற்கு யாரும் அவருக்குக் கிடைக்க மாட்டார்கள்.

சற்று நீளமாக வரும் ஹதீஸின் இறுதியில்: “ஹீராவிலிருந்து பயணம் செய்து கஅபாவிற்கு வந்து தவாஃப் செய்து திரும்பும் பெண்ணைப் பார்த்தேன். அவளுக்கு அல்லாஹ்வை தவிர வேறு எந்த அச்சமுமில்லை. மேலும், கிஸ்ரா இப்னு ஹுர்முஜின் கஜானாக்களை வெற்றி கொண்டவர்களில் நானும் இருந்தேன். உங்களுக்கு வாழ்க்கை நீளமாக இருந்தால் நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பான கை நிறைய தங்கம், வெள்ளியை எடுத்துக் கொண்டு தர்மம் செய்ய அலைபவர்களையும் நீங்கள் பார்ப்பீர்கள்” என்று அதிய் கூறுகினார். (ஸஹீஹுல் புகாரி)

### தபூக் போர் (ஹிஜ்ரி 9, ரஜப்)

இதற்கு முன் நிகழ்ந்த மக்கா போர் சத்தியம் எது? அசத்தியம் எது? என்பதைப் பிரித்தறிவித்து விட்டது. முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் தூதர்தான் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை என்பதைப் புரிய வைத்துவிட்டது. எனவே, காலநிலை முற்றிலும் மாறி மக்கள் கூட்டம் கூட்டமாக இஸ்லாமில் வரத் தொடங்கினர் என்பதை இதற்குப் பின் “குழுக்கள்” என்ற தலைப்பில் வரும் விவரங்களிலிருந்தும், நபி (ஸல்) அவர்களின் இறுதி ஹஜ்ஜில் கலந்து கொண்ட முஸ்லிம்களின் எண்ணிக்கையிலிருந்தும் இதை நன்கு அறிந்து கொள்ளலாம். ஆக, மக்கா வெற்றி கொள்ளப்பட்ட பின் முஸ்லிம்களின் உள்நாட்டுப் பிரச்சனைகளும் சிரமங்களும் முற்றிலுமாக முடிவுற்றது. அல்லாஹ்வின் மார்க்கச் சட்டங்களைக் கற்றுக் கொள்வதற்கும், கற்றுக் கொடுப்பதற்கும் இஸ்லாமிய மார்க்கத்தின் பக்கம் மக்களை அழைப்பதற்கும் முஸ்லிம்களுக்கு முழுமையான அவகாசம் கிடைத்தது.

#### போருக்கான காரணம்

எனினும், ஒரே ஒரு சக்தி மட்டும் எவ்விதக் காரணமுமின்றி முஸ்லிம்களுக்குத் தொந்தரவு கொடுத்து வந்தது. அதுதான் ரோமானியப் பேரரசு. ரோமர்கள் அக்காலத்தில் உலகத்தில் மிகப் பெரிய வல்லரசாகத் திகழ்ந்தார்கள். இதற்கு முன் ஒரு சம்பவத்தை நாம் பார்த்திருக்கிறோம். நபி (ஸல்) அவர்கள் புஸ்ரா மன்னருக்கு அனுப்பிய கடிதத்தை எடுத்துச் சென்றிருந்த ‘ஹாரிஸ் இப்னு உமைர் அஸ்தி’ என்ற தூதரைப் புஸ்ராவின் கவர்னராக இருந்த ‘ஷுரஹ்பீல் இப்னு அம்ர் கஸ்ஸானி’ என்பவன் வழிமறித்துக் கொன்று

விட்டான். அதற்குப் பழிவாங்குவதற்காக நபி (ஸல்) ஜைது இப்னு ஹாஸாவின் தலைமையில் படை ஒன்றை அனுப்பினார்கள். இவர்கள் 'முஃதா' என்ற இடத்தில் ரோமர்களுடன் கடுமையாகச் சண்டையிட்டனர். முழுமையாக அந்த அநியாயக்காரர்களைப் பழிவாங்க முடியவில்லை. இருப்பினும் முஸ்லிம்களின் ஒரு சிறு படை ஒரு மாபெரும் வல்லரசை எதிர்த்துச் சண்டையிட்டது. அரபியர்களின் உள்ளத்தில் முஸ்லிம்களைப் பற்றிய பெரும் அச்சத்தை ஏற்படுத்தியது. முஃதாவின் அருகிலுள்ள அரபியர்களுக்கு மட்டுமல்லாமல் வெகு தொலைவில் உள்ளவர்களுக்கும் கூட முஸ்லிம்களைப் பற்றிய அதே பாதிப்பை இது ஏற்படுத்தியது.

இப்போரினால் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட நன்மையையும் இதற்குப் பின் தன் கட்டுப்பாட்டுக்குள் இருந்த அரபுக் கோத்திரங்கள், தன் கட்டுப்பாட்டை விட்டு விலகி, முஸ்லிம்களுடன் சேர்ந்து கொள்வதையும் கைஸர் மன்னனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. இதைத் தனது எல்லையை நெருங்கி வரும் ஆபத்தாக உணர்ந்தான். அரபியர்களுக்கு அருகிலிருக்கும் தனது ஷாம் நாட்டுக் கோட்டைகளை ஆட்டம் காண வைக்கும் ஒரு செயலாகக் கருதினான். முஸ்லிம்களின் இந்த எழுச்சி அழிக்க முடியாத அளவுக்கு வலிமைப் பெறுவதற்கு முன்னதாகவே அடக்கி அழித்துவிட வேண்டும் ரோம் நாட்டை சுற்றியிருக்கும் அரபு பகுதிகளில் முஸ்லிம்கள் கிளர்ச்சியை உண்டாக்குவதற்கு முன்னதாகவே அவர்களை ஒன்றுமில்லாமல் செய்துவிட வேண்டும் என அவன் எண்ணினான்.

முஃதா போர் முடிந்து ஒரு வருடம் ஆவதற்குள் தனது இந்த வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக பெரும் படையொன்றைத் திரட்டி, அதில் ரோமர்களையும் ரோமர்களின் ஆதிக்கத்தில் இருந்த கஸ்ஸான் கிளையைச் சேர்ந்த அரபியர்களையும் சேர்த்துக் கொண்டு தீர்க்கமான ஒரு போருக்குத் தயாரானான்.

**ரோமர்களும், கஸ்ஸானியர்களும் போருக்கு வருகின்றனர்**

முஸ்லிம்களைத் தாக்குவதற்கு மாபெரும் போருக்குரிய முனைப்புடன் ரோமர்கள் வருகிறார்கள் எனும் செய்தி மதீனாவில் பரவலாகப் பேசப்பட்டது. இதனால் மதீனாவாசிகள் அச்சத்திலும் திடுக்கத்திலும் காலத்தைக் கழித்தனர். வழக்கத்திற்கு மாற்றமான ஏதாவது இரைச்சலைக் கேட்டுவிட்டால் ரோம் நாட்டுப் படை மதீனாவிற்குள் நுழைந்து விட்டதோ என எண்ணினர். உமர் இப்னு கத்தாப் (ரழி) தங்களைப் பற்றி கூறுவதிலிருந்து இதை மிகத் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

நபி (ஸல்) தங்கள் மனைவிகளிடம் ஒரு மாதத்திற்குச் சேரமாட்டேன் என்று அந்த ஆண்டு சத்தியம் செய்து விலகி தங்கள் வீட்டுப் பரணியில் தங்கிக் கொண்டார்கள். உண்மை நிலவரத்தை அறியாத நபித்தோழர்கள் நபி (ஸல்) தங்கள் மனைவியரைத் தலாக் சொல்லி விட்டார்கள் என்பதாக விளங்கிக் கொண்டார்கள். இது நபித்தோழர்களுக்குப் பெரும் துக்கத்தையும், மன வருத்தத்தையும் ஏற்படுத்தியது.

இந்நிகழ்ச்சியைப் பற்றி உமர் (ரழி) கூறுகிறார்கள்:

"எனக்கு அன்சாரி நண்பர் ஒருவர் இருந்தார். நான் எங்காவது சென்று விட்டால் அன்று நடந்த செய்திகளை என்னிடம் வந்து கூறுவார். அவர் எங்காவது சென்றிருந்தால் நான் அவருக்கு விவரிப்பேன். நாங்கள் இருவரும் மதீனாவின் மேற்புறத்தில் வசித்து வந்தோம். நாங்கள் முறைவைத்து மாறி மாறி நபி (ஸல்) அவர்களின் அவையில் கலந்து கொள்வோம். கஸ்ஸான் நாட்டு மன்னன் எங்களைத் தாக்குவதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறான் என்ற செய்தி பரவியிருந்ததால் எப்போதும் நாங்கள் பயத்தில் ஆழ்ந்திருந்தோம். ஒருநாள் திடீரென அன்சாரி தோழர் எனது வீட்டிற்கு ஓடிவந்து "திற! திற!" எனக் கூறிக் கொண்டு கதவை வேகமாகத் தட்டினார். நான் கதவைத் திறந்து "என்ன கஸ்ஸானிய மன்னனா வந்து

விட்டான்?'' எனக் கேட்டேன். அதற்கவர் ''இல்லை! அதைவிட மிக ஆபத்தான ஒன்று நடந்து விட்டது நபி (ஸல்) தங்கள் மனைவியரை விட்டு விலகி விட்டார்கள்'' என்று கூறினார். (ஸஹீஹுல் புகாரி)

மற்றும் ஓர் அறிவிப்பில் வருவதாவது, உமர் (ரழி) கூறுகிறார்கள்: கஸ்ஸான் கிளையினர் எங்களிடம் போர் புரிவதற்குப் படையை ஒன்று திரட்டுகின்றார் என்ற செய்தி எங்களுக்குக் கிடைத்ததிலிருந்து அதைப் பற்றியே நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். ஒரு நாள் எனது அன்சாரி நண்பர் நபி (ஸல்) அவர்களின் அவையில் கலந்து கொண்ட பின், இஷா நேரத்தில் என் வீட்டு வாசல் கதவைப் பலமாகத் தட்டி ''என்ன அவர் தூங்குகிறாரா?'' என்று கேட்டார். நான் திடுக்கிட்டு எழுந்து அவரிடம் வந்தபோது அவர் ''மிகப்பெரிய விஷயம் ஒன்று நிகழ்ந்து விட்டது'' என்று கூறினார். அதற்கு நான் ''என்ன? கஸ்ஸானின் படை வந்துவிட்டதா?'' என வினவினேன். அதற்கவர் ''அதைவிடப் பெரிய விஷயம் ஒன்று நடந்து விட்டது. நபி (ஸல்) தங்கள் மனைவியரைத் தலாக் சொல்லி விட்டார்கள்'' என்று கூறினார். (ஸஹீஹுல் புகாரி)

மேற்கண்ட அறிவிப்புகளிலிருந்து ரோமர்களின் படையெடுப்பைப் பற்றி முஸ்லிம்கள் மத்தியில் எந்தளவு அச்சம் நிலவியிருந்தது என்பதை அறிந்து கொள்ளலாம். ரோமர்கள் மதீனாவைத் தாக்கப் புறப்படுகின்றனர் என்ற செய்தி கிடைத்ததிலிருந்து மதீனாவில் இருந்த நயவஞ்சகர்கள் பல சதித்திட்டங்களில் ஈடுபட்டனர். எல்லாப் போர்களிலும் நபி (ஸல்) அவர்களே வெற்றியடைகிறார்கள். அவர்கள் உலகில் எந்த சக்தியையும், அரசர்களையும் பயப்படுவதில்லை. மாறாக, நபியவர்களின் வழியில் குறுக்கிடும் தடைகள் அனைத்தும் ஒன்றுமில்லாமல் ஆகிவிடுகின்றன என்பதை இந்த நயவஞ்சகர்கள் நன்றாக விளங்கியிருந்தும் இஸ்லாமுக்கும் முஸ்லிம்களுக்கும் எதிராக தங்கள் உள்ளத்தில் மறைத்து வைத்திருந்த கெட்ட எண்ணங்கள் நிறைவேற வேண்டுமென்று ஆசைப்பட்டனர்.

''தங்களுடைய சதித்திட்டங்களைத் தீட்டுவதற்குத் தகுந்த இடமாக ஒரு பள்ளிவாசலையும் அமைத்துக் கொண்டனர். முஸ்லிம்களுக்குக் கெடுதல் செய்வதற்காகவும், அவர்களுக்கு மத்தியில் பிரிவினை உண்டாக்குவதற்காகவும், அல்லாஹ்வையும் அவனது தூதரையும் எதிர்ப்பவர்களுக்குப் பதுங்குமிடமாகவும் அமைய இப்பள்ளியை ஏற்படுத்தினர்'' என்று இந்தப் பள்ளியைப் பற்றி குர்ஆனிலேயே அல்லாஹ் குறிப்பிடுகின்றான். இப்பள்ளியைக் கட்டிய பின் நபி (ஸல்) அதில் தொழுகை நடத்த வரவேண்டுமென கோரினர். அவர்களது நோக்கமெல்லாம் ''முஸ்லிம்களை ஏமாற்ற வேண்டும் இப்பள்ளியில் தாங்கள் செய்யும் சதிகளைப் பற்றி முஸ்லிம்கள் தெரிந்து கொள்ளக் கூடாது தங்களுக்கும் வெளியிலுள்ள முஸ்லிம்களின் எதிரிகளான தங்களின் நண்பர்களுக்கும் பாதுகாப்பு அரணாக இது அமைய வேண்டும்'' என்பதே.

அவர்கள் பலமுறை நபி (ஸல்) அவர்களிடம் வந்து அந்தப் பள்ளியில் தொழுகை நடத்த வருமாறு கேட்டுக் கொண்டும், நபி (ஸல்) அதைத் தவிர்த்து வந்தார்கள். இறுதியில் 'தபூக் போர்' முடிந்து திரும்பும் போது இப்பள்ளியின் நோக்கத்தைப் பற்றிய முழுச் செய்தியையும் அல்லாஹ் தன் நபியவர்களுக்கு அறிவித்து, அந்த நயவஞ்சகர்களைக் கேவலப்படுத்தி விட்டான். எனவே, போரிலிருந்து திரும்பிய பின் அப்பள்ளியை இடித்துத் தகர்க்குமாறு கட்டளையிட்டார்கள்.

நிலைமை இவ்வாறு இருக்க, ஷாம் தேசத்திலிருந்து மதீனாவுக்கு ஜைத்தூன் எண்ணெய் விற்பனைக்காக வந்திருந்த நிஃப்த்திகள் ''ர்கல் நாற்பதாயிரம் வீரர்கள் கொண்ட பெரும் படையை தயார் செய்து விட்டான். தனது ஆளுநர்களில் ஒருவரை அப்படைக்குத் தலைமை ஏற்கச் செய்து, அரபியர்களில் கிறிஸ்தவர்களாக மாறியிருந்த லக்கும், ஜுதாம் ஆகிய இரு கோத்திரங்களையும் அப்படையில் இணைத்திருக்கிறான். இப்படையின் முற்பகுதி தற்போது பல்கா வந்தடைந்து இருக்கிறது'' என்ற அதிர்ச்சி தரும் செய்தியை

முஸ்லிம்களின் காதுகளில் போட்டனர். மிகப் பெரிய ஆபத்து வந்துவிட்டதை முஸ்லிம்கள் நன்கு உணர்ந்து கொண்டனர்.

**நிலைமை மேலும் மோசமாகுதல்**

மேற்கூறியது ஒருபுறமிருக்க, அக்காலம் கடுமையான வெய்யில் காலமாக இருந்தது. மக்களும் மிகுந்த சிரமத்திலும், பஞ்சத்திலும், வாகனப் பற்றாக்குறையிலும் இருந்தனர். மேலும், அது பேரீத்தம் பழங்களின் அறுவடை காலமாகவும் இருந்தது. தங்களின் அறுவடையில் ஈடுபடுவதும், மதீனா நிழலில் இளைப்பாறுவதும் அவர்களுக்கு மிக விருப்பமாக இருந்தது. அதுமட்டுமின்றி செல்ல வேண்டிய இடமும் மிகத் தொலைவில் இருந்ததுடன், அந்தப் பாதையும் கரடுமுரடானதாக இருந்தது. மேற்கண்ட காரணங்களால் போருக்குப் புறப்படுவது முஸ்லிம்களுக்கு மிகச் சிரமமானதாகவே இருந்தது.

**நபியவர்களின் எதிர் நடவடிக்கை!**

இந்த எல்லா நிலைமைகளையும் நபி (ஸல்) உன்னிப்பாகக் கவனித்து வந்தார்கள். இந்த இக்கட்டான சந்தர்ப்பத்தில் ரோமர்களுடன் போர் செய்யாமலிருப்பதோ அல்லது முஸ்லிம்களின் எல்லைக்குள் அவர்களை நுழைய விடுவதோ இஸ்லாமிய அழைப்புப் பணிக்கும் முஸ்லிம் இராணுவத்தின் கௌரவத்திற்கும் மிகப் பெரிய பின்னடைவையும் களங்கத்தையும் ஏற்படுத்திவிடும். ஹுனைன் யுத்தத்தில் படுதோல்வி கண்டபின் தனது இறுதி மூச்சை எண்ணிக் கொண்டிருக்கும் முஷ்ரிக்குகள் மீண்டும் உயிர்பெற்றெழுவார்கள். முஸ்லிம்களுக்குச் சோதனைகளும், ஆபத்துகளும் நிகழ வேண்டுமென்று எதிர்பார்த்திருக்கும் நயவஞ்சகர்கள் பாவி அபூ ஆமின் உதவியுடன் ரோம் நாட்டு மன்னனுடன் தொடர்பு வைத்திருந்தனர். முஸ்லிம்கள் மீது ரோமர்கள் தாக்குதல் நடத்தினால் இந்த நயவஞ்சகர்கள் முஸ்லிம்களின் முதுகுக்குப் பின்னாலிருந்து தாக்கி அழிப்பார்கள். இதனால் இஸ்லாமைப் பரப்புவதற்காக நபி (ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் இதுநாள் வரை செய்து வந்த அனைத்து முயற்சிகளும் வீணாகிவிடும். பல போர்களையும் படையெடுப்புகளையும் சந்தித்து, உம்ராலும் பொருளாலும் பல தியாகங்களைச் செய்ததின் மூலமாக கிடைத்த பயன்கள் எல்லாம் வீணாகிவிடும். இதையெல்லாம் நன்கு உணர்ந்திருந்த நபி (ஸல்) “எவ்வளவுதான் சிரமம் ஏற்பட்டாலும் ரோமர்களது எல்லைக்கும் செல்லக் கூடாது அதே சமயம் இஸ்லாமிய எல்லையில் அவர்கள் படையுடன் நுழைய வாய்ப்பும் அளிக்கக் கூடாது” என்று திட்டவட்டமான முடிவெடுத்தார்கள்.

**ரோமர்களிடம் போர் புரிய தயாராகும்படி அறிவிப்பு**

நபி (ஸல்) தங்களின் நிலைமையை அறிந்து தெளிவாக முடிவெடுத்த பின் போருக்குத் தயாராகுங்கள் என தங்களது தோழர்களுக்கு அறிவித்தார்கள். அருகிலுள்ள அரபு கோத்திரத்தாருக்கும், மக்கா வாசிகளுக்கும் தங்களது தோழர்களின் குழுக்களை அனுப்பி போருக்குத் தயாராகும்படி கட்டளையிட்டார்கள். நபி (ஸல்) ஒரு போருக்காகச் செல்லும் போது, தான் செல்ல வேண்டிய இடத்தை குறிப்பிடாமல் அதற்கு மாற்றமாக வேறோர் இடத்திற்குச் செல்கிறோம் என்று குறிப்பிடுவது அவர்களின் வழக்கமாக இருந்தது. ஆனால், இப்போது நிலைமை பெரும் ஆபத்திற்குரியதாக இருப்பதாலும், மிகக் கடுமையான வறுமை நிலைமையில் இருப்பதாலும் தங்களின் நோக்கத்தை நபி (ஸல்) வெளிப்படையாகக் கூறினார்கள். “நாம் ரோமர்களை சந்திக்க இருக்கிறோம் என்று மக்களுக்கு தெளிவுபடுத்தி, அதற்குத் தேவையான முழு தயாரிப்புகளையும் செய்து கொள்ளுங்கள்” என்று அறிவுறுத்தி, அல்லாஹ்வின் பாதையில் போர் புரிவதற்கு ஆர்வமூட்டினார்கள். அல்லாஹ் அத்தியாயம் பராஆவின் ஒரு பகுதியை இறக்கிவைத்தான். துணிவுடன் எதிரிகளை எதிர்க்க வேண்டும் என்றும், அல்லாஹ்வின் பாதையில் போர் புரிவதால் ஏற்படும் நன்மைகளை விளக்கியும்,

இந்த வசனங்களின் மூலம் அல்லாஹ் அவர்களைப் போருக்கு ஆயத்தமாக்கினான். நபி (ஸல்) அவர்களும் தர்மம் செய்வதின் சிறப்புகளையும், அல்லாஹ்வின் பாதையில் தங்களின் உயர்வான பொருட்களைச் செலவு செய்வதின் சிறப்புகளையும் கூறி தங்களின் தோழர்களுக்கு ஆர்வமூட்டினார்கள்.

**முஸ்லிம்கள் போட்டி போட்டுக்கொண்டு போருக்குத் தயாராகுகின்றனர்**

ரோமர்களிடம் போர் புரிய வேண்டும் என்ற நபி (ஸல்) அவர்களின் அழைப்பைக் கேட்டதுதான் தாமதம், முஸ்லிம்கள் நபியவர்களின் கட்டளைக்கிணங்க வெகு விரைவாக போருக்குத் தயாராகினர். மக்காவைச் சுற்றியுள்ள அரபி கோத்திரத்தார்கள் எல்லாம் பல வழிகளில் மதீனா வந்து குழுமினர். உள்ளத்தில் நயவஞ்சகத் தன்மையுள்ளவர்களைத் தவிர போரில் கலந்து கொள்ளாமலிருப்பதை மற்றெவரும் அறவே விரும்பவில்லை. ஆம்! நபி (ஸல்) அவர்களின் அந்த நெருக்கமான மூன்று தோழர்களைத் தவிர. இவர்கள் போரில் கலந்து கொள்ளவில்லை. மற்றும் தங்களின் போருக்கான செலவுகளைச் செய்ய இயலாத வறுமையில் உள்ள நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து “அல்லாஹ்வின் தூதரே! நாங்களும் ரோமர்களுடன் போர் புரிய உங்களுடன் வருகிறோம். எங்களுக்கு வாகன வசதி செய்து தாருங்கள்” என்று கேட்டனர். நபி (ஸல்) மிக்க கவலையுடன் “உங்களுக்குக் கொடுப்பதற்கு என்னிடம் வாகனம் ஒன்றுமில்லையே” என்றார்கள். அந்தப் பதிலை கேட்ட தோழர்கள் “அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்ய எங்களிடம் வசதி இல்லையே!” என்று அழுதவர்களாக சபையிலிருந்து திரும்பிச் சென்றனர்.

(போருக்குரிய) வாகனத்தை நீங்கள் தருவீர்கள் என உங்களிடம் வந்தவர்களுக்கு “உங்களை ஏற்றிச் செல்லக் கூடிய வாகனம் என்னிடம் இல்லையே” என்று நீங்கள் கூறிய சமயத்தில், தங்களிடமும் செலவுக்குரிய பொருள் இல்லாது போன துக்கத்தினால் எவர்கள் தங்கள் கண்களிலிருந்து தாரை தாரையாக கண்ணீர் வடித்தவர்களாக (தம் இருப்பிடம்) திரும்பிச் சென்றார்களோ அவர்கள் மீதும் (போருக்குச் செல்லாததைப் பற்றி யாதொரு குற்றமுமில்லை.) (அல்குர்ஆன் 9:92)

முஸ்லிம்கள் அனைவரும் தங்களால் முடிந்தளவு அல்லாஹ்வின் பாதையில் பொருட்களைச் செலவு செய்வதிலும், இயலாதவர்களுக்குக் கொடுத்து உதவுவதிலும் ஒருவரை ஒருவர் போட்டி போட்டுக் கொண்டனர். நபி (ஸல்) அவர்களின் உற்ற தோழர் உஸ்மான் (ரழி) ஷாம் நாட்டு வியாபாரத்திற்கு அனுப்புவதற்காக ஒரு குழுவை தயார் செய்து வைத்திருந்தார்கள். அதில் இருநூறு ஒட்டகைகள், அதற்குரிய முழு சாதனங்களுடன் இருந்தன. மேலும், இருநூறு ஊக்கியா வெள்ளிகளும் இருந்தன. அந்தப் பயணத்தை நிறுத்திவிட்டு அவை அனைத்தையும் அல்லாஹ்வின் பாதையில் தர்மமாக வழங்கினார்கள். பின்பு ஒரு நாட்கள் கழித்து முழு சாதனங்களுடன் உள்ள நூறு ஒட்டகைகளை தர்மமாக வழங்கிவிட்டு ஆயிரம் தங்க காசுகளை நபி (ஸல்) அவர்களின் மடியில் பரப்பினார்கள். அதை நபி (ஸல்) புரட்டியவர்களாக “இன்றைய தினத்திற்குப் பின் உஸ்மான் எது செய்தாலும் அது அவருக்கு இடையூறளிக்காது” எனக் கூறினார்கள். (ஜாமிவுத் திர்மிதி)

இந்தளவுடன் நிறுத்திக் கொள்ளாமல் உஸ்மான் (ரழி) மேன்மேலும் அல்லாஹ்வின் பாதையில் வாரி வழங்கினார்கள். இப்போருக்காக மொத்தத்தில் தொள்ளாயிரம் ஒட்டகைகளையும், நூறு குதிரைகளையும் வழங்கினார்கள். இதுமட்டுமின்றி ஏராளமானத் தங்க வெள்ளி காசுகளையும் வாரி வழங்கினார்கள்.

இப்போருக்காக அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) இருநூறு ஊக்கியா வெள்ளிகளை வழங்கினார்கள். அபூபக்ர் (ரழி) தனது செல்வம் அனைத்தையும் வழங்கினார்கள். தனது குடும்பத்தினருக்காக அல்லாஹ்வையும் அவனது தூதரையும் தவிர வேறெதையும் விட்டு வைக்கவில்லை. இப்போருக்காக முதன் முதலில் தனது பொருளை வழங்கியவர் அவர்தான்.

அவர் நபி (ஸல்) அவர்களிடம் வழங்கியது மொத்தம் நான்காயிரம் திர்ஹமாகும். உமர் (ரழி) அவர்கள் தனது செல்வத்தில் பாதியை, அப்பாஸ் (ரழி) பெரும் செல்வத்தை, தல்ஹா, ஸஅது இப்னு உபாதா, முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) ஆகியோரும் தங்களின் பெரும்பகுதி செல்வத்தை வழங்கினார்கள். ஆஸிம் இப்னு அதி (ரழி) தொண்ணூறு வஸ்க் பேரீத்தம் பழங்களை வழங்கினார்கள். இவ்வாறு குறைவாகவோ அதிகமாகவோ தங்களால் முடிந்ததை எவ்விதக் கஞ்சத்தனமுமின்றி மக்கள் அல்லாஹ்வின் பாதையில் வழங்கினார்கள். ஒரு சிலர், ஒன்று அல்லது இரண்டு 'முத்''கள் (ம்முத்' என்பது ஓர் அளவாகும்.) தானியங்களை வழங்கினர். அதைத் தவிர அவர்களிடம் வேறெதுவும் இருக்கவில்லை. பெண்கள் தங்களிடமிருந்த வளையல்கள், கால், காது அணிகலன்கள், மோதிரங்கள் அனைத்தையும் கொடுத்து விட்டார்கள். உள்ளத்தில் நயவஞ்சகத் தன்மை உள்ளவர்களே அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்யாமல் கருமித்தனம் செய்தனர்.

இவர்கள் எத்தகையவர்கள் என்றால், நம்பிக்கையாளர்களில் உள்ள செல்வந்தர்கள் (தங்கள் பொருட்களை) நல்வழியில் (தாராளமாக) தானம் செய்வது பற்றி குற்றம் கூறுகின்றனர். (அதிலும் குறிப்பாக) கூலி வேலை செய்து சம்பாதிப்போர் (தங்கள் பொருளை இவ்வாறு தானம் செய்வது) பற்றியும் அவர்கள் பரிகசிக்கின்றனர். அல்லாஹ் (நம்பிக்கையாளர்களைப் பரிகசிக்கும்) அவர்களைப் பரிகசிக்கின்றான். அன்றி (மறுமையில்) துன்புறுத்தும் வேதனையும் அவர்களுக்கு உண்டு. (அல்குர்ஆன் 9:79)

**தபூக்கை நோக்கி இஸ்லாமியப் படை...**

இவ்வாறு முடிந்தளவு முன்னேற்பாடுகளுடன் இஸ்லாமியப் படை மதீனாவிலிருந்து புறப்பட்டது. மதீனாவில் நபி (ஸல்) அவர்களின் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டவர் முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) என்றும், சிலர் ஸபா இப்னு உர்ஃபுதா (ரழி) என்றும் கூறுகின்றனர். நபி (ஸல்) தங்களது குடும்பத்திற்கு அலீ இப்னு அபூதாலிபை (ரழி) பிரதிநிதியாக நியமித்தார்கள். படை புறப்பட்ட பின் இதைப் பற்றி நயவஞ்சகர்கள் குத்தலாகப் பேசவே, அலீ (ரழி) மதீனாவில் இருந்து புறப்பட்டு நபி (ஸல்) அவர்களைச் சென்றடைந்தார்கள். ''மூஸா (அலை) அவர்களுக்கு ஹாரூன் (அலை) இருந்ததைப் போன்று நீ எனக்கு இருக்க விரும்பவில்லையா? ஆனால், எனக்குப் பின் எந்தவொரு நபியும் இல்லை'' என்று கூறி, அலீயை மதீனாவிற்கு திரும்ப அனுப்பி விட்டார்கள்.

படை மதீனாவிலிருந்து வியாழக்கிழமை தபூக்கை நோக்கிப் புறப்பட்டது. படையின் தயாரிப்புக்காக எவ்வளவுதான் செலவு செய்த போதிலும் இதற்கு முன்பில்லாத அளவுக்கு வீரர்களின் எண்ணிக்கை முப்பதாயிரமாக இருந்ததால், வீரர்களின் எண்ணிக்கை அளவுக்கு வாகன வசதியும், உணவும் இல்லாமலிருந்தது. ஒரே ஓர் ஒட்டகத்தில் முறை வைத்து பதினெட்டு நபர்கள் வாகனித்தனர். உணவுப் பற்றாக்குறையால் இலை தழைகளைச் சாப்பிட்டதால் வாயெல்லாம் புண்ணாகி விட்டன. தண்ணீருக்காக ஒட்டகங்களை அறுத்து அதன் இரப்பையில் இருக்கும் நீரை அருந்தும் அளவிற்கு நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இக்காரணத்தால் இப்படைக்கு 'ஜய்ஷுல் உஸ்ரா (வறுமைப் படை) என்று பெயர் வந்தது.

தபூக்கை நோக்கிச் செல்லும் வழியில் 'ஹிஜ்ர்' என்னும் ஊர் வந்தது. 'வாதில் குரா' என்ற பள்ளத்தாக்கில் மலைகளைக் குடைந்து வாழ்ந்த ஸமூது கூட்டத்தாரின் வீடுகள் இங்குதான் இருந்தன. தாகம் மிகுதியால் அங்குள்ள கிணற்றிலிருந்து தங்களது பாத்திரங்களிலும் துருத்திகளிலும் தண்ணீரை நிரப்பிக் கொண்டார்கள். ஆனால், ''அந்தத் தண்ணீரைக் குடிக்காதீர்கள் அதில் உழுவும் செய்யாதீர்கள் அதிலிருந்து குழைத்த மாவை ஒட்டகங்களுக்குக் கொடுத்து விடுங்கள் நீங்கள் அதிலிருந்து எதையும் சாப்பிடாதீர்கள் அதை அடுத்துள்ள ஸாலிஹ் (அலை) அவர்களின் ஒட்டகம் தண்ணீர் குடித்த கிணற்றிலிருந்து நீரை சேமித்துக் கொள்ளுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

இப்னு உமர் (ரழி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) ஹிஜ்ர் பகுதிக்கு வந்த போது "தங்களுக்குத் தாங்களே அநியாயம் செய்தவர்களின் இடங்களை நீங்கள் கடந்துச் செல்லும் போது அழுதவர்களாக செல்லுங்கள். அவர்களுக்கு ஏற்பட்ட வேதனை உங்களுக்கும் ஏற்படலாம் என பயந்து கொள்ளுங்கள்" என்று கூறி தங்களது தலையை மறைத்துக் கொண்டு அந்தப் பள்ளத்தாக்கை விரைவாகக் கடந்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

வழியில் படைக்குத் தண்ணீரின் தேவை அதிகமாகவே, நபியவர்களிடம் வந்து முறையிட்டார்கள். நபி (ஸல்) அல்லாஹ்விடம் தண்ணீர் புகட்டக் கோரி இறைஞ்சினார்கள். அல்லாஹ் தாகத்தைப் போக்க மேகத்தை அனுப்பி மழை பொழியச் செய்தான். மக்கள் தாகம் தணிந்து பாத்திரங்களிலும் மழை நீரைச் சேமித்துக் கொண்டார்கள்.

"தபூக்கிற்கு மிக நெருக்கமாக வந்தவுடன் நாளை நீங்கள் தபூக் நகரின் ஊற்றை சென்றடைவீர்கள். முற்பகல் வருவதற்குள் அங்கு செல்ல வேண்டாம். அங்கு சென்றவுடன் நான் வரும் வரை அந்த ஊற்றை யாரும் நெருங்கவும் வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

"நாங்கள் தபூக் வந்தபோது எங்களில் இருவர் முந்திக் கொண்டு அந்த ஊற்றுக்குச் சென்று விட்டனர். அந்த ஊற்றிலிருந்து தண்ணீர் சிறுகச் சிறுக வெளியேறிக் கொண்டிருந்தது. நபி (ஸல்) அவ்விருவரிடம் "நீங்கள் அந்தத் தண்ணீரைத் தொட்டீர்களா?" என்று கேட்க அவர்கள் "ஆம்!" என்றனர். அவ்விருவருக்கும் அல்லாஹ் நாடியவாறு சிலவற்றைக் கூறிய நபி (ஸல்) அவ்வூற்றுக் கண்ணிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக தண்ணீர் அள்ளி ஒரு பாத்திரத்தில் நிரப்பி, பின்பு அதில் தங்களது முகத்தையும் கைகளையும் கழுவிவிட்டு அந்தத் தண்ணீரை மீண்டும் அந்த ஊற்றில் கொட்டினார்கள். அங்கிருந்து தண்ணீர் பீறிட்டு வழிந்தோடியது. மக்களெல்லாம் நீர் பருகிக் கொண்டார்கள். பின்பு "முஆதே உனது வாழ்க்கை நீண்டதாக இருந்தால் வெகு விரைவில் இந்த இடங்கள் தோட்டங்களாக மாறுவதைப் பார்ப்பாய்" என்றார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

தபூக் செல்லும் வழியில் அல்லது சென்றடைந்த பிறகு (இரு விதமாகவும் சொல்லப்படுகின்றது) "இன்றிரவு உங்கள் மீது கடுமையான காற்று வீசும். யாரும் எழுந்திருக்க வேண்டாம். ஒட்டகம் உள்ளவர்கள் அதைக் கட்டி வைக்கவும்" என நபி (ஸல்) கூறினார்கள். அவ்வாறே அன்றிரவு கடுமையான காற்று வீசியது. படையில் ஒருவர் எழுந்து நின்றுவிட்டார். அவர் காற்றில் தூக்கிச் செல்லப்பட்டு 'தை' மலையில் வீசப்பட்டார். (ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) பயணத்தில் ளுஹ்ரை அஸருடன் அல்லது அஸ்ரை ளுஹ்ருடன், மஃரிபை இஷாவுடன் அல்லது இஷாவை மஃரிபுடன் சேர்த்து தொழுது வந்தார்கள்.

**தபூக்கில் இஸ்லாமியப் படை**

இஸ்லாமியப் படை தபூக் வந்தடைந்து தனது ராணுவ முகாம்களை அமைத்துக் கொண்டு எதிரிகளைச் சந்திப்பதற்கு எந்நேரமும் ஆயத்தமாக இருந்தது. நபி (ஸல்) எழுந்து நின்று வீரத்திற்கு உரமூட்டும் பேருரை நிகழ்த்தினார்கள். ஈருலக நன்மையை அடைந்து கொள்வதற்கு ஆர்வப்படுத்தியதுடன், அச்சமூட்டி எச்சரிக்கையும் செய்தார்கள். ஆன்மாக்களுக்கு வலிமை ஊட்டினார்கள். பொருளாதாரத்தாலும் தயாரிப்புகளாலும் பின்தங்கியுள்ளோம் என எண்ணியிருந்த முஸ்லிம்களிடமிருந்து தாழ்வு மனப்பான்மையையும் சோர்வையும் இந்தப் பிரச்சாரத்தின் மூலமாக அகற்றினார்கள்.

மற்றொருபுறம் நபி (ஸல்) படையெடுத்துப் போருக்கு ஆயத்தமாக வந்து விட்டார்கள் என்ற செய்தியை ரோமர்களும் அவர்களது நண்பர்களும் கேட்டவுடன் திடுக்கமடைந்தார்கள். அவர்கள் தங்களது பயணத்தைத் தொடர்வதற்கும் இஸ்லாமியப் படையைச் சந்திப்பதற்கும்

துணிவின்றி தங்களது நாட்டுக்குள் பல திசைகளிலும் சிதறி ஓடிவிட்டனர். இஸ்லாமியப் படைக்கு அஞ்சி ரோமர்கள் ஓடிவிட்ட செய்தி முஸ்லிம்களுக்கு மேன்மேலும் புகழ் சேர்த்தது, அரபியத் தீபகற்பத்திலும், அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் முஸ்லிம்களின் ராணுவ வலிமையை உயர்த்தியது. இதனால் அரசியல் ரீதியாக முஸ்லிம்களுக்குப் பெரும் பயன்களும் கிடைத்தன. ஒருக்கால் ரோமர்கள் வந்து போர் நடந்திருந்தால் கூட, இந்தளவு நன்மைகள் கிடைத்திருக்குமா? என்று சொல்ல முடியாது.

தபூக்கிற்கு அருகிலிருந்த அய்லா பகுதியின் தலைவர் யுஹன்னா இப்னு ரூஃபா தானாக முன்வந்து ஒப்பந்தம் செய்து கொடுத்ததுடன் ஜிஸ்யாவையும் நிறைவேற்றினார். மேலும், 'ஜர்பா' பகுதியினரும் 'அத்ருஹ்' பகுதியினரும் ஒப்பந்தம் செய்து ஜிஸ்யாவையும் வழங்கினர். நபி (ஸல்) ஒப்பந்தப் பத்திரத்தை அவர்களுக்கு எழுதிக் கொடுத்தார்கள். இவ்வாறே மீனா பகுதி மக்களும் தங்கள் பகுதியில் விளையும் கனிவர்க்கங்களில் 1ழுழு4 பங்கை வழங்கி விடுவதாக சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டனர்.

அய்லாவின் தலைவருக்கு நபி (ஸல்) எழுதிக் கொடுத்த ஒப்பந்தமாவது:

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்... அல்லாஹ்வின் புறத்திலிருந்தும் அல்லாஹ்வின் தூதர் முஹம்மதின் புறத்திலிருந்தும் யுஹன்னா இப்னு ரூஃபாவுக்கும் அய்லாவாசிகளுக்கும் வழங்கும் பாதுகாப்பு ஒப்பந்தமாகும் இது. கடலில் செல்லும் இவர்களது கப்பல்களுக்கும், பூமியில் செல்லும் இவர்களது பயணக் கூட்டங்களுக்கும் அல்லாஹ்வுடைய பாதுகாப்பும் முஹம்மதுடைய பாதுகாப்பும் உண்டு. மேலும், ஷாம் நாட்டிலும் இவர்களது கடல் பகுதியை சுற்றி வாழும் மக்களுக்கும் இந்தப் பாதுகாப்பு உண்டு. ஆனால், இவர்களில் யாராவது குழப்பம், கலகம் செய்தால் அவரது உயிர், பொருள் பாதுகாக்கப்படாது. அவரை அடக்குபவருக்கு அவரது பொருள் சொந்தமாகிவிடும். இவர்கள் தண்ணீருக்காக செல்லும் போது யாரும் தடுக்கக் கூடாது கடலிலோ தரையிலோ பயணிக்கும் போது யாரும் குறுக்கிடக் கூடாது.''

அடுத்து, இருபத்து நான்கு குதிரை வீரர்களுடன் தூமதுல் ஜந்தலின் தலைவர் உகைதிர் என்பவரை பிடித்து வருவதற்காக காலித் பின் வலீதை நபி (ஸல்) அனுப்பினார்கள். மேலும், ''நீ அவரை சந்திக்கும் போது அவர் ஒரு மாட்டை வேட்டையாடிக் கொண்டிருப்பார்'' என்றும் நபி (ஸல்) காலிதிடம் கூறினார்கள். காலித் (ரழி) உகைதின் கோட்டைக்கு அருகில் சென்று தாமதித்தார். அப்போது ஒரு மாடு பக்கத்திலிருந்த காட்டிலிருந்து வெளியேறி உகைதின் கோட்டைக் கதவை கொம்புகளால் உராய்ந்து கொண்டிருந்தது. உகைதிர் அதை வேட்டையாடி பிடிப்பதற்காகக் கோட்டைக்கு வெளியே வந்தார். அன்று பௌர்ணமி இரவாக இருந்தது. காலித் தனது படையுடன் சென்று உகைதிரை பிடித்து வந்து நபி (ஸல்) அவர்களிடம் ஒப்படைத்தார். உகைதிர் தனது உயிரைப் பாதுகாப்பதற்காக இரண்டாயிரம் ஒட்டகங்கள், நானூறு கவச ஆடைகள், நானூறு ஈட்டிகள், எண்ணூறு அடிமைகள் தருவதாக ஒப்பந்தம் செய்து கொண்டார். மேலும், ஒவ்வோர் ஆண்டும் ஜிஸ்யா தருவதாகவும் ஒப்புக் கொண்டார். முன் சென்றவர்களுடன் ஒப்பந்தம் செய்தது போன்று நபி (ஸல்) இவருடனும் செய்து கொண்டார்கள்.

ரோமர்களை நம்பி வாழ்ந்த கோத்திரங்கள் எல்லாம் ''இனி நம்முடைய பழைய தலைவர்களை நம்புவதில் பலனில்லை அந்தக் காலம் மலையேறி விட்டது இனி முஸ்லிம்களுக்குத்தான் நாம் பணிய நேரிடும்'' என நன்கு புரிந்திருந்தனர். இவ்வாறே இஸ்லாம் நாளுக்கு நாள் வளர்ந்து விரிவாகி ரோம ராஜ்ஜியத்தைத் தொட்டது. பெரும்பாலான அரபு பகுதியிலுள்ள ரோம ஆளுநர்களின் ஆட்சி அதிகாரம் முடிவுக்கு வந்தது.

**மதீனாவிற்குத் திரும்புதல்**

தபூக்கிலிருந்து இஸ்லாமிய ராணுவம் சண்டையின்றி வெற்றி வாகை சூடி மதீனா வந்தது. சண்டைகளிலிருந்து இறைநம்பிக்கையாளர்களை அல்லாஹ் பாதுகாத்தான். வழியில் ஒரு கணவாயை அடையும்போது நபி (ஸல்) அவர்களைக் கொன்றுவிட வேண்டுமென பன்னிரெண்டு நயவஞ்சகர்கள் சதித்திட்டம் தீட்டினர். நபி (ஸல்) அவர்களின் ஒட்டகத்தை முன் பக்கத்தில் இருந்து அம்மார் இழுத்துச் செல்ல, ஹுதைஃபா (ரழி) ஒட்டகத்தைப் பின்னாலிருந்து ஓட்டிச் சென்றார். திடீரென ஒரு கூட்டம் முகங்களை மறைத்தவர்களாக இம்மூவரையும் சூழ்ந்து கொண்டனர். ஹுதைஃபா (ரழி) தன்னிடமிருந்த வளைந்த கைத்தடியால் சூழ்ச்சிக்காரர்களுடைய வாகனங்களின் முகத்தை நோக்கி சுழற்றி அடித்தார். நபித்தோழர்கள் உஷாராக இருப்பதைக் கண்ட அந்தக் கும்பலின் உள்ளத்தில் பயம் கவ்வியதும் தப்பி ஓடி, முஸ்லிம்களின் கூட்டத்தோடு கூட்டமாக கலந்து விட்டனர். அந்தக் கும்பலில் வந்தவர்கள் யார்? அவர்களது நோக்கம் என்ன? என்பதை நபி (ஸல்) விவரித்துக் கூறினார்கள். இதனால்தான் ஹுதைஃபாவுக்கு ‘‘நபியின் அந்தரங்கத் தோழர்’’ என்ற புனைப் பெயரும் உண்டு.

இந்நிகழ்ச்சி குறித்து அல்லாஹ் குறிப்பிடுகிறான்:

(உங்களுக்குத் தீங்கிழைக்கக் கருதி அவர்கள்) தங்களால் சாத்தியப்படாமல் போனதொரு காரியத்தைச் செய்யவும் முயற்சித்தனர். (அல்குர்ஆன் 9:74)

வெகு தூரத்தில் மதீனாவின் கட்டடங்கள் தெரியவே ‘‘இது தாபா (இது சிறந்த ஊர்). இதோ உஹுது மலை. இது நம்மை நேசிக்கிறது நாமும் இதனை நேசிக்கிறோம்’’ என நபி (ஸல்) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் வருகையை கேள்விப்பட்ட முஸ்லிம்களில் பெண்கள், சிறுவர், சிறுமியர், குழந்தைகள் அனைவரும் மதீனாவுக்கு வெளியே வந்து மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்று,

‘‘நம் எதிரே முழு நிலா தோன்றியது

வழியனுப்பும் பாறைகளிலிருந்து.

நன்றி கூறல் நம்மீது கடமை

அல்லாஹ்வை அழைப்பவர் அழைக்கும் வரை.’’

என்று பாடினர்.

ஹிஜ்ரி 9, ரஜப் மாதத்தில் தபூக்கிலிருந்து நபி (ஸல்) மதீனா வந்தடைந்தார்கள். இப்போருக்காக ஐம்பது நாட்கள் செலவாயின. அதாவது, இருபது நாட்கள் தபூக்கில் தங்கினார்கள். மீதம் முப்பது நாட்கள் இதற்கான பயணத்தில் கழிந்தன. இதுவே நபி (ஸல்) கலந்து கொண்ட இறுதிப் போராகும்.

**பின்தங்கியவர்கள்**

இப்போர் அதன் விசேஷ நிலைமைகளைப் பொறுத்து அல்லாஹ்வின் மிகப்பெரும் சோதனையாக அமைந்திருந்தது. உண்மை முஸ்லிம் யார் என இப்போர் இனங்காட்டிவிட்டது. ஆம்! இதுபோன்ற நிலைமையில் அல்லாஹ்வின் நடைமுறை அவ்வாறே அமைந்திருந்தது. இதையே அல்லாஹ் சுட்டிக்காட்டுகிறான்.

(நயவஞ்சகர்களே!) நீங்கள் இருக்கும் இந்த நிலைமையில் நல்லவர்கள் இன்னாரென்றும் தீயவர்கள் இன்னாரென்றும் பிரித்தறிவிக்கும் வரையில் (உங்களுடன் கலந்திருக்க) அல்லாஹ் (நம்பிக்கையாளர்களை) விட்டுவைக்க மாட்டான். (அல்குர்ஆன் 3:179)

அல்லாஹ்வையும் நபி (ஸல்) அவர்களையும் முழுமையாக ஏற்று நடந்த நம்பிக்கையாளர்கள் அனைவரும் இப்போரில் கலந்து கொள்ள புறப்பட்டனர். இதில் கலந்து கொள்ளாதவர்களை உள்ளத்தில் நயவஞ்சகம் உள்ளவர்கள் என அடையாளம் காணப்பட்டது. ஒரு நபர் போருக்குச் செல்லாது பின்தங்கி விட்டார் என நபி (ஸல்) அவர்களிடம் கூறப்பட்டால் “அவரைப் பற்றி எதுவும் பேசாதீர்கள் அவரிடம் ஏதேனும் நன்மை இருக்குமாயின் அல்லாஹ் நம்முடன் அவரை இணைத்து வைப்பான். அவ்வாறு இல்லாவிட்டால் நம்மை அவரை விட்டு காப்பாற்றி நிம்மதியைத் தருவான்” என்று ஆறுதல் கூறுவார்கள். உண்மையில் தகுந்த காரணமுள்ளவர்கள் அல்லது நயவஞ்சகர்கள் இவர்களைத் தவிர அனைவரும் போரில் கலந்து கொண்டனர். சில நயவஞ்சகர்கள் பொய்க் காரணங்களைக் கூறியும், சில நயவஞ்சகர்கள் காரணம் ஏதும் கூறாமலேயே போரைப் புறக்கணித்தனர். ஆம்! உண்மையான நம்பிக்கையாளரில் மூவர் தகுந்த காரணமின்றியே போரில் கலந்து கொள்ளவில்லை. அதனால் அவர்களை அல்லாஹ் சோதித்தான். பிறகு அவர்கள் மனம் வருந்தி அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டதால் அவர்களை மன்னித்து விட்டான்.

மதீனாவிற்கு வருகை தந்த நபி (ஸல்) பள்ளியில் இரண்டு ரகஅத் தொழுதுவிட்டு மக்களைச் சந்திப்பதற்காகக் காத்திருந்தார்கள். எண்பதுக்கும் அதிகமான நயவஞ்சகர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து பல காரணங்களைக் கூறி, தாங்கள் கலந்து கொள்ள முடியாமைக்கு வருத்தம் தெரிவித்தனர். தாங்கள் உண்மையே உரைப்பதாகக் கூறி தங்களது சொல்லுக்கு வலிமை சேர்ப்பதற்காக பொய் சத்தியமும் செய்தனர். நபி (ஸல்) அந்தரங்கக் காரணங்களைத் தோண்டித் துருவாமல் வெளிப்படையான அவர்களது காரணங்களை ஏற்று, வாக்குறுதி வாங்கிக் கொண்டு, அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோரி, அவர்களது அந்தரங்க விஷயத்தை அல்லாஹ்விடமே ஒப்படைத்து விட்டார்கள்.

உண்மை விசுவாசிகளில் பின்தங்கிய கஅப் இப்னு மாலிக், முராரா இப்னு ரபீ, ஹிலால் இப்னு உமையா (ரழி) ஆகிய மூவரும் பொய்க் காரணங்களைக் கூறாமல் தங்களது உண்மை நிலைமையைத் தெரிவித்து விட்டனர். நபி (ஸல்) இம்மூவரின் விஷயத்தில் “அல்லாஹ்வின் தீர்ப்பு வரும்வரை யாரும் இவர்களிடம் பேச வேண்டாம்” என தோழர்களுக்குக் கட்டளையிட்டு விட்டார்கள். நபியவர்களும் தோழர்களும் அவர்களிடம் பேசாமல் புறக்கணித்து ஒதுக்கி வைத்த காரணத்தால் அம்மூவருக்கும் பெரும் நெருக்கடி ஏற்பட்டது. இதே நிலையில் நாற்பது நாட்கள் கழிந்த பின்பு மூவரும் அவரவர் மனைவியை விட்டு விலகியிருக்க வேண்டும் என உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. இவ்வாறு ஐம்பது நாட்கள் கழிந்தன. இந்நாட்களில் அவர்களின் மனநிலையை அல்லாஹ்வே அறிவான். பிறகு அல்லாஹ் அவர்களை மன்னித்து விட்டான்.

(அல்லாஹ்வின் உத்தரவை எதிர்பார்த்துத் தீர்ப்புக் கூறாது) விட்டு வைக்கப்பட்டிருக்கும் மூவரையும் (அல்லாஹ் மன்னித்து விட்டான்.) பூமி இவ்வளவு விசாலமாக இருந்தும் (அது) அவர்களுக்கு மிக்க நெருக்கமாகி அவர்கள் உயிர் வாழ்வதும் மிக்க கஷ்டமாகி விட்டது. அல்லாஹ்வையன்றி அவனை விட்டுத் தப்புமிடம் அவர்களுக்கு இல்லவே இல்லை என்பதையும் அவர்கள் நிச்சயமாக அறிந்து கொண்டனர். ஆதலால், அவர்கள் (பாவத்தில் இருந்து) விலகிக் கொள்வதற்காக அவர்(களுடைய குற்றங்)களை மன்னித்(து அவர்களுக்கு அருள் புரிந்)தான். நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும் கிருபையுடையவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 9:118)

இவ்வசனம் இறக்கப்பட்டதும் மூவர் மட்டுமின்றி முஸ்லிம்களும் மட்டிலா மகிழ்ச்சி அடைந்தனர். அல்லாஹ் தங்களை மன்னித்த ஆனந்தத்தால் ஏராளமான தான தர்மங்களை

வாரி வழங்கினர். இந்நாளை தங்களது வாழ்வின் பாக்கியமான நாளாகக் கருதினர். போரில் தக்க காரணங்களால் கலந்து கொள்ள இயலாதவர்களைப் பற்றி அல்லாஹ் கூறுவதாவது:

பலவீனர்களும், நோயாளிகளும், போருக்குச் செலவு செய்யும் பொருளை அடையாதவர்களும் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கலப்பற்ற நம்பிக்கையாளர்களாக இருந்தால் (அதுவே போதுமானது. அவர்கள் போருக்குச் செல்லாவிட்டாலும் அதனைப் பற்றி அவர்கள் மீது எந்த குற்றமுமில்லை.) இத்தகைய நல்லவர்கள் மீது (குற்றம் கூற) எந்த வழியும் இல்லை. அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும், நிகரற்ற அன்புடையவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 9:91)

மதீனாவுக்கு அருகில் வந்த போது “மதீனாவில் சிலர் இருக்கின்றனர். நீங்கள் பயணித்த இடங்களிலெல்லாம் அவர்களும் உங்களுடன் இருந்தனர் தகுந்த காரணம் ஒன்றே அவர்களைப் போரில் கலக்க விடாமல் செய்து விட்டது.” என்று நபி (ஸல்) மேற்கூறப்பட்டவர்களை குறித்து கூறினார்கள். “அவர்கள் மதீனாவில் இருந்து கொண்டேவா!” (நம்முடன் வந்த நன்மையைப் பெறுகிறார்கள்!) என ஆச்சரியத்துடன் தோழர்கள் வினவினர். “ஆம்! மதீனாவில் இருந்து கொண்டே! (நன்மையைப் பெறுகிறார்கள்)” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**போரின் தாக்கங்கள்**

இப்போரினால் முஸ்லிம்களின் கை அரபிய தீபகற்பத்தில் ஓங்கியது. அரபிய தீபகற்பத்தில் இஸ்லாமைத் தவிர இனி வேறெந்த சக்தியும் வாழ முடியாது என்பதை அனைவரும் நன்றாக அறிந்தனர். எஞ்சியிருந்த சில மடையர்கள் மற்றும் முஸ்லிம்களின் சிரமங்களை எதிர்பார்க்கும் நயவஞ்சகர்கள் ஆகியோரின் உள்ளத்தில் மிச்ச மீதமிருந்த சில கெட்ட ஆசைகளும் அடியோடு அழிந்தன. இவர்கள் ரோமர்களின் உதவியோடு முஸ்லிம்களை வீழ்த்திவிடலாம் என்று இறுமாந்தது நாசமாகி விடவே, முற்றிலும் முஸ்லிம்களிடம் பணிந்து வாழத் தலைப்பட்டனர்.

முஸ்லிம்கள் இனி நயவஞ்சகர்களிடம் நளினமாகவும் மிருதுவாகவும் இருக்க வேண்டுமென்ற தேவை இல்லாது போனது. அல்லாஹ்வும் இந்த நயவஞ்சகர்களுடன் கடுமையாக நடந்து கொள்ள வேண்டுமென சட்டங்களை இறக்கி வைத்தான். இவர்களின் தர்மங்களை ஏற்பதோ, இவர்களுக்காக ஜனாஸா தொழுவதோ, அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருவதோ, இவர்களின் அடக்கத்தலங்களுக்குச் செல்வதோ கூடாது என தடை செய்து விட்டான். பள்ளி என்ற பெயரில் சூழ்ச்சிகள் செய்யவும், அதனைச் செயல்படுத்தவும் அவர்கள் பயன்படுத்திய இடங்களைத் தகர்த்தெரியுமாறு கட்டளையிட்டான். மேலும், அவர்களின் தீய பண்புகளை விவரித்து பல வசனங்களையும் இறக்கி வைத்த காரணத்தால் அவர்கள் மிகுந்த இழிவுக்குள்ளானார்கள். இந்த வசனங்கள் நயவஞ்சகர்கள் யார் எனத் தெளிவாக மதீனாவாசிகளுக்குச் சுட்டிக்காட்டுவது போல அமைந்திருந்தது. முதலாவதாக. ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின் இஸ்லாமை ஏற்கவும் அறியவும் மக்கள் அலை அலையாய் மதீனா நோக்கி வந்தனர். இரண்டாம் கட்டமான மக்கா வெற்றிக்குப் பின்போ இது பன்மடங்காகப் பெருகியது. மூன்றாம் கட்டமான தபூக் போருக்குப் பின் இவற்றையெல்லாம் மிகைக்கும் வகையில் எண்ணிலடங்கா மக்கள் கூட்டங்கூட்டமாக மதீனா வந்தனர்.

(இப்போரின் விவரங்கள் “ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம், ஃபத்ஹுல் பாரி” ஆகிய நூற்களிலிருந்து எடுக்கப்பட்டன.)

### இப்போர் குறித்து குர்ஆன்...

இப்போர் குறித்து பல திருவசனங்கள் அத்தியாயம் (பராஆ) தவ்பாவில் அருளப்பட்டன. அவற்றில், சில நபி (ஸல்) போருக்குப் புறப்படும் முன்பும், சில பயணத்தின் இடையிலும், சில போர் முடிந்து மதீனா திரும்பிய பின்பும் அருளப்பட்டன. அவற்றில் போரின் நிலவரங்கள், நயவஞ்சகர்களின் தீய குணங்கள், போரில் கலந்து கொண்ட தியாகிகள் மற்றும் உண்மை முஸ்லிம்களின் சிறப்புகள், போரில் கலந்து கொண்ட உண்மை முஃமின்கள், கலந்து கொள்ளாத உண்மை முஃமின்களின் பிழை பொறுத்தல் ஆகிய அனைத்தும் இடம்பெற்றன.

### இந்த ஆண்டில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள்

வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்த பல நிகழ்ச்சிகள் இந்த ஆண்டில் நடந்தன:

1) நபி (ஸல்) தபூக்கிலிருந்து திரும்பிய பின்பு உவைமிர் அஜ்லானிக்கும், அவருடைய மனைவிக்குமிடையில் 'லிஆன்' (பழி சுமத்தி ஒருவரையொருவர் சபித்தல்) நடந்தது.

2) "தவறு செய்து விட்டேன். என்னை தூய்மையாக்குங்கள்" என நபியவர்களிடம் வந்த காமிதிய்யா பெண்மணி மீது 'ரஜ்ம்' தண்டனை நிறைவேற்றப்பட்டது.

3) ஹபஷா மன்னர் அஸ்ஹமா ரஜபு மாதத்தில் மரணமானார். அவருக்காக நபி (ஸல்) மதீனாவில் ஜனாஸா தொழுகை நடத்தினார்கள்.

4) நபி (ஸல்) அவர்களின் மகள் உம்மு குல்தூம் (ரழி) ஷஅபான் மாதத்தில் மரணமானார்கள். நபி (ஸல்) இதனால் மிகுந்த கவலையடைந்தார்கள். எனக்கு மூன்றாவதாக ஒரு மகள் இருந்தால், அவரையும் உங்களுக்கே மணமுடித்துத் தந்திருப்பேன் என உஸ்மான் (ரழி) அவர்களிடம் கூறினார்கள்.

5) தபூக்கிலிருந்து நபி (ஸல்) மதீனா வந்த பின்பு நயவஞ்சகர்களின் தலைவன் அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு சலூல் இறந்து போனான். உமர் (ரழி) அவர்கள் தடுத்தும் நபி (ஸல்) அவர்கள் அவனுக்குத் தொழுகை நடத்தி இறைவனிடம் பாவமன்னிப்புத் தேடினார்கள். இது தொடர்பாக உமர் (ரழி) அவர்கள் கூறிய ஆலோசனையே ஏற்றமானது என குர்ஆன் வசனம் இறங்கியது.

### அபூபக்ர் ஹஜ்ஜுக்கு புறப்படுதல்

ஒன்பதாவது ஆண்டு துல்ஹஜ் அல்லது துல்கஅதா மாதத்தில் முஸ்லிம்களுக்கு ஹஜ்ஜை தலைமையேற்று நடத்தும்படி நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரழி) அவர்களை மக்கா அனுப்பினார்கள்.

மதீனாவிலிருந்து அபூபக்ர் (ரழி) புறப்பட்ட பின்பு அத்தியாயம் தவ்பாவின் முதல் வசனங்கள் இறக்கப்பட்டன. அதில் முஷ்ரிக்குகளுடன் இருந்த உடன்படிக்கைகளை முறித்துவிட வேண்டும் என அல்லாஹ் ஆணையிட்டான். தன் சார்பாக இதனை மக்களிடம் தெரிவிக்க மதீனாவிலிருந்து அலீ இப்னு அபூதாலிபை நபி (ஸல்) மக்கா அனுப்பி வைத்தார்கள். புறப்பட்ட அலீ (ரழி) 'அர்ஜ் அல்லது ழஜ்னான்' என்ற இடத்தில் அபூபக்ரை சந்திக்கிறார்கள். "தாங்கள் (அமீர்) தலைவராக வந்தீர்களா? அல்லது தலைவன் கீழ் செயல்பட வந்தீர்களா?" என்று அபூபக்ர் (ரழி) கேட்க, அதற்கு "நான் தங்களுடைய தலைமையில் பணியாற்றவே வந்திருக்கிறேன்" என்று அலீ (ரழி) கூறினார்கள். பிறகு இருவரும் ஒன்றாக மக்கா சென்றனர்.

அபூபக்ர் (ரழி) மக்களுக்கு ஹஜ் கடமைகளை நிறைவேற்றித் தந்தார்கள். ஹஜ் பிறை 10ல் ஜம்ரா அருகில் நின்று கொண்டு, மக்களுக்கு நபி (ஸல்) கூறியவற்றைச் சொல்லி

“ஒப்பந்தங்கள் அனைத்தும் இன்றுடன் முடிந்து விட்டன” என்று அறிவித்தார்கள். மேலும், அவர்களுக்கு நான்கு மாதங்கள் தவணையளித்தார்கள். ஒப்பந்தமில்லாதவர்களுக்கும் நான்கு மாதத் தவணைக் கொடுத்தார்கள். உடன்படிக்கை செய்தவர்கள் அதனை மீறாமலும் முஸ்லிம்களுக்கு எதிராகப் பிறருக்கு உதவி செய்யாமலும் இருந்தால் அவர்களது ஒப்பந்தக் காலம் முடியும் வரை தவணையளிக்கப்படும் என்றும் அறிவித்தார்கள்.

அபூபக்ர் (ரழி) தங்களது ஆட்களை அனுப்பி “இந்த ஆண்டிற்குப் பிறகு முஷ்ரிக்குகள் யாரும் மக்கா வரக்கூடாது. நிர்வாணமாக கஅபாவை யாரும் வலம் வரக்கூடாது” என்று அறிவிப்புச் செய்தார்கள். இது “அரபுலகம் முழுவதும் சிலை வணக்கம் ஒழிந்தது இனி அது தலைதூக்க முடியாது” என்று அறிவிப்பதற்குச் சமமாக இருந்தது. (ஸஹீஹுல் புகாரி, ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

## போர்கள் - ஒரு கண்ணோட்டம்

நபி (ஸல்) கலந்து கொண்ட போர்கள், நபி (ஸல்) அனுப்பி வைத்த படைப் பிரிவுகள் மற்றும் குழுக்கள் ஆகியவற்றின் நிலைமைகள், பின்விளைவுகள், மாற்றங்கள் பற்றி நாம் ஆய்வு மேற்கொண்டாலும் அல்லது வேறு யார் ஆய்வு செய்தாலும் கீழ்க்கண்ட முடிவுக்கே வர வேண்டும்.

நபி (ஸல்) இறைத்தூதர்களில் தலைசிறந்து விளங்கியது போன்றே அனுபவம் வாய்ந்த ஒரு ராஜதந்திரியாகவும், நிபுணத்துவம் நிறைந்த தலைசிறந்த தளபதியாகவும் விளங்கினார்கள். போரில் பல அனுபவம் பெற்ற தளபதிகளையும் தனது நுண்ணறிவால் மிஞ்சியிருந்தார்கள். தான் கலந்து கொண்ட எல்லா போர்க் களங்களிலும் அவர்களின் போர் திறனிலோ, ராணுவ முகாம்களைச் சரியான உறுதிமிக்க முக்கிய இடங்களில் அமைத்து போர் புரிவதிலோ ஒருக்காலும் தவறு நிகழ்ந்ததில்லை. இவை அனைத்திலும் எக்காலத்திலும் எந்தப் போர் தளபதிகளிடமும் இருந்திராத அரிய நிபுணத்துவத்தை வெளிப்படுத்தியுள்ளார்கள்.

உஹுத், ஹுனைன் ஆகிய போர்களில் படையினரின் தவறான முடிவுகளாலும், நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்கு மாறு செய்ததாலும்தான் பின்னடைவு ஏற்பட்டது. இவ்விரண்டு போர்களில் முஸ்லிம்கள் தோற்று பின்னடைந்த போதிலும், நபி (ஸல்) புறமுதுகுக் காட்டாமல் எதிரிகளை முன்னோக்கிச் சென்று தங்களது துணிவையும் வீரத்தையும் நிலைநாட்டினார்கள். இதற்கு உஹுதுப் போர் ஓர் எடுத்துக்காட்டாகும். போரில் ஏற்பட்ட தோல்வியை வெற்றியாக மாற்றினார்கள். இதற்கு ஹுனைன் போரை எடுத்துக்காட்டாகக் கூறலாம். இதுபோன்ற உக்கிரமான போர்களில் படையினர் புறமுதுகிட்டுத் தோற்று திரும்பி ஓடும்போது தளபதிகள் தங்களைக் காப்பாற்றிக் கொண்டு தப்பிப்பதிலேயே குறியாய் இருப்பார்கள். ஆனால், நபி (ஸல்) அவ்வாறு செய்யாமல், எதிரிகளை நோக்கியே முன்னேறினார்கள். இதுவரை நாம் கூறியது நபியவர்களின் போர் நிபுணத்துவம் பற்றிய கண்ணோட்டமாகும்.

மேலும், இப்போர்களினால் அரபுலகம் முழுவதும் பாதுகாப்புப் பெற்றது அங்கு நிம்மதி நிலவியது குழப்பத் தீ அணைந்தது இஸ்லாமிற்கும் சிலை வழிபாட்டிற்குமிடையே நடந்த போர்களில் எதிரிகளின் வலிமைக் குன்றியது அவர்கள் சமாதானத்திற்கு அடிபணிந்தனர் இஸ்லாமிய அழைப்புப் பணி பரவுவதற்குண்டான தடைகளும் அகன்றன. இவையாவும் நபி (ஸல்) அவர்கள் நடத்திய அறப்போர்களினால் ஏற்பட்டவை என்பது ஆய்வில் நமக்குத் தெரிய வரும் உண்மை. மேலும், இப்போர்களில் தன்னுடன் இருப்பவர்களில் உண்மையான தோழர் யார்? உள்ளத்தில் நயவஞ்சகத்தை மறைத்து மோசடி செய்யத் துடிக்கும் முனாஃபிக்குகள் யார்? என்பதை நபி (ஸல்) அவர்களால் பிரித்தறிய முடிந்தது.

இதுமட்டுமின்றி போரைத் தலைமையேற்று நடத்தும் மிகச் சிறந்த தளபதிகளையும் நபி (ஸல்) உருவாக்கினார்கள். இந்தத் தளபதிகள் இராக், ஷாம் போன்ற பகுதிகளில் பாரசீகர்களுடனும், ரோமர்களுடனும் போர் புரிந்தனர். நீண்ட காலம் வல்லரசுகளாக விளங்கிய ரோமானியர்களையும் பாரசீகர்களையும் விட மிகத் திறமையாக படையை வழி நடத்தி, தோட்டந்துரவுகளிலும் கோட்டை கொத்தளங்களிலும், மிக ஏகபோக அடக்குமுறையுடன் அராஜக வாழ்க்கை நடத்திய எதிரிகளை அவர்களது வீடு, வாசல், நாடுகளை விட்டு வெளியேற்றி வெற்றி கண்டனர்.

இதுபோன்றே போர்களினால் முஸ்லிம்களுக்குத் தேவையான குடியிருப்பு, விவசாய நிலங்கள், தொழில்துறை போன்றவற்றை நபி (ஸல்) வளப்படுத்தினார்கள். வீடுவாசலின்றி அகதிகளாக வந்த மக்களின் துயர் துடைத்தார்கள். இஸ்லாமிய அரசுக்குத் தேவையான ஆயுதங்கள், படை பலங்கள், வாகனங்கள், செலவீனங்கள் அனைத்தையும் ஆயத்தமாக வைத்திருந்தார்கள். இவ்வனைத்து ஏற்பாடுகளையும் அல்லாஹ்வின் அடியார்கள் மீது வரம்புமீறல், அட்டூழியம் செய்தல் ஆகிய ஏதுமின்றியே செய்து வந்தார்கள். மேலும், இதுநாள் வரை அறியாமைக் காலத்தில் எந்த அடிப்படைக்காகவும், நோக்கங்களுக்காகவும் போர்த் தீ மூட்டப்பட்டு வந்ததோ அவை அனைத்தையும் அணைத்து முற்றிலும் மாற்றி அமைத்தார்கள்.

கொள்ளை, சூறையாடல், அநியாயம், அத்துமீறல், எளியோரை வாட்டுதல், கட்டடங்களை இடித்தல், பெண்களின் கண்ணியத்தைக் குலைத்தல், சிறுவர்கள், குழந்தைகள் போன்றவர்களுடன் கடின சித்தத்துடன் நடந்து கொள்ளுதல், விவசாயப் பம்ர் நிலங்களைப் பாழ்படுத்துதல், அல்லாஹ்வின் பூமியில் குழப்பம், கலகம் விளைவித்தல் போன்ற கொடுஞ்செயல்கள் நிறைந்ததாகவே போர்கள் அக்காலத்தில் இருந்தன. ஆனால், நபி (ஸல்) உயர்ந்த இலட்சியங்களையும், சிறந்த நோக்கங்களையும், அழகிய முடிவுகளையும் கொண்டு வருவதற்குச் செய்யப்படும் ஒரு தியாகமாக விடுதலைக் காற்றை சுவாசிக்கத் துடிக்கும் ஒரு சுதந்திரப் போராட்டமாகப் போரை மாற்றினார்கள். மனித சமுதாயத்திற்கு கண்ணியம் அளிப்பது அநியாயத்தின் பிடியிலிருந்து விடுவிப்பது நீதத்திற்குக் கட்டுப்படுவது ஆகியவற்றையே போரின் நோக்கமாக்கினார்கள். பலமானவர், பலமில்லாதவரை சுரண்டி வாழும் தீய அமைப்பிலிருந்து விலக்கி, பலமில்லாதவரை பலமுள்ளவராக்கி தனது நியாயத்தை அடைந்து கொள்ளும் நல்லமைப்பிற்கு மனித சமுதாயத்தைக் கொண்டு வருவதையே போரின் இலட்சியமாக்கினார்கள். இதைத்தான் ஒடுக்கப்பட்டவர்களை, பலவீனமானவர்களை விடுவிப்பதற்காக போர் புரியுங்கள் என்று அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்.

பலவீனமான ஆண்களையும், பெண்களையும், சிறு குழந்தைகளையும் பாதுகாப்பதற்காக அல்லாஹ்வுடைய பாதையில் நீங்கள் போர் புரியாதிருக்க நேர்ந்த காரணம் என்ன? அவர்களோ (இறைவனை நோக்கி) ‘‘எங்கள் இறைவனே! அநியாயக்காரர்கள் வசிக்கும் இவ்வூரிலிருந்து எங்களை வெளியேற்றுவாயாக! நீ எங்களுக்கு உன்னிடமிருந்து பாதுகாவலரையும் ஏற்படுத்துவாயாக! நீ எங்களுக்கு உன்னிடமிருந்து உதவி செய்பவரையும் ஏற்படுத்துவாயாக!’’ என்று பிரார்த்தனை செய்த வண்ணமாய் இருக்கின்றனர். (அல்குர்ஆன் 4:75)

ஆகவே மோசடி, அநியாயம், அழிச்சாட்டியம், பாவங்கள், அத்துமீறல் ஆகிய அனைத்தில் இருந்தும் அல்லாஹ்வின் பூமியைச் சுத்தப்படுத்தி அதில் அமைதி, பாதுகாப்பு, அன்பு, மனித நேயம் ஆகியவற்றை பரப்புவதும் நிலைநாட்டுவதும்தான் ஜிஹாதின் நோக்கமாகும். மேலும், போருக்கென மிக உயர்ந்த சட்ட ஒழுங்குகளை வரையறுத்து, அவற்றைத் தனது தளபதிகளும் படைகளும் பின்பற்ற வேண்டுமென கட்டாயமாக்கினார்கள். எவ்விதத்திலும் இச்சட்டங்கள் மீறப்படுவதை நபி (ஸல்) அனுமதிக்கவில்லை.

சுலைமான் இப்னு புரைதா (ரழி) தனது தந்தையின் வாயிலாக அறிவிக்கின்றார்: நபி (ஸல்) பெரிய அல்லது சிறிய படைக்குத் தளபதியை நியமித்தால் “நீங்கள் அல்லாஹ்வை அஞ்சுங்கள் உங்களது படையினரிடத்தில் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள்” என தளபதிக்கு விசேஷமாக வலியுறுத்தி உபதேசம் புரிந்துவிட்டு, அவருக்கும் படையினருக்கும் சேர்த்து கீழ்காணும் உபதேசம் செய்வார்கள்.

“அல்லாஹ்வின் பாதையில் அல்லாஹ்வின் பெயரால் போரிடுங்கள் அல்லாஹ்வை நிராகரிப்போருடன் போர் செய்யுங்கள் போரிடுங்கள்! களவாடாதீர்கள்! மோசடி செய்யாதீர்கள்! உறுப்புகளைச் சிதைக்காதீர்கள்! குழந்தைகளைக் கொல்லாதீர்கள்!”

மேலும், நீங்கள் எளிதாக்குங்கள் சிரமமாக்காதீர்கள் அமைதியை நிலைநாட்டுங்கள் வெறுப்படையச் செய்யாதீர்கள்! (ஸஹீஹ் முஸ்லிம், முஃஜமுத் தப்ரானி)

நபி (ஸல்) ஒரு கூட்டத்தார் மீது தாக்குதல் தொடுக்கச் செல்கையில், இரவு நேரமாக இருப்பின் காலை வரை பொறுத்திருப்பார்கள். உயிர்களை நெருப்பிலிட்டு பொசுக்குவதை நபி (ஸல்) வன்மையாகத் தடுத்தார்கள். சரணடைந்தவர்களைக் கொல்லக் கூடாது பெண்களை கொல்வதோ அடிப்பதோ கூடாது கொள்ளையடிக்கக் கூடாது கொள்ளையடிக்கப்பட்ட பொருளை உண்பது, செத்த பிணத்தை உண்பதை விட கேவலமானது, விவசாய நிலம் மற்றும் மரங்களை அழிக்கக் கூடாது, ஆனால், எதிரியை அடக்குவதற்கு இதைத் தவிர வேறு வழி ஏதும் தென்படாவிட்டால் நிர்ப்பந்த சூழ்நிலையில் நிலம் மற்றும் மரங்களை அழிக்கலாம். இவ்வாறு போரில் கடைபிடிக்க வேண்டிய முறைகளை நபி (ஸல்) தமது தோழர்களுக்குக் கற்றுக் கொடுத்தார்கள்.

மேலும், மக்கா வெற்றியின் போது “காயம்பட்டோரை தாக்காதீர்கள்! புறமுதுகுக் காட்டி ஓடுபவரைத் துரத்தாதீர்கள்! கைதிகளைக் கொல்லாதீர்கள்” என ஆணை பிறப்பித்தார்கள்.

ஒப்பந்தம், உடன்படிக்கை செய்து கொண்டவர்கள் கொல்லப்படுவதை மிக வன்மையாகக் கண்டித்து “யார் ஒருவர் உடன்படிக்கை செய்து கொண்டவரைக் கொன்று விட்டாரோ அவர் சுவன வாடையை நுகர மாட்டார். சுவன வாடையை நாற்பது ஆண்டுகள் தூரமாக இருந்தாலும் நுகரலாம்” என நபி (ஸல்) எச்சரித்தார்கள்.

இன்னும் பல உயர்வான அடிப்படைகளை உருவாக்கியதன் மூலம் அறியாமைக் கால அசுத்தத்தை விட்டு போர்களைச் சுத்தமாக்கி அவற்றைப் புனிதப் போராக, மனிதநேயமிக்க ஜிஹாதாக மாற்றினார்கள். (ஜாதுல் மஆது)

### மக்கள் அலை அலையாய் அல்லாஹ்வின் மார்க்கத்தைத் தழுவுகின்றனர்

முஸ்லிம்களுக்கு மக்காவில் கிடைத்த வெற்றி, மூளையை மழுங்கச் செய்த சிலை வணக்க கலாச்சாரத்தை வேரோடு கலைந்து விட்டது. இவ்வெற்றியால் பொய்யிலிருந்து மெய்யை, அசத்தியத்திலிருந்து சத்தியத்தை மக்கள் பிரித்து அறிந்து கொண்டனர். அவர்களின் சந்தேகங்கள் நீங்கின. எனவே, இஸ்லாமை ஏற்றுக் கொள்ள விரைந்தனர். இவ்விஷயத்தை உறுதி செய்யும் ஒரு நிகழ்ச்சியைக் காண்போம். அம்ர் இப்னு ஸலமா (ரழி) கூறுகிறார்:

மக்கள் பயணிக்கும் பாதையை ஒட்டி உள்ள கிணற்றின் அருகில் நாங்கள் வசித்துக் கொண்டிருந்தோம். எங்களைக் கடந்து பயணிகள் செல்லும் போது அந்த மக்களின் செய்தி என்ன? இந்த மக்களின் செய்தி என்ன? அந்த மனிதன் யார்? (நபியென்று கூறும் அந்த ஆள் யார்?) என்று அவர்களிடம் விசாரிப்போம். அல்லாஹ் தன்னைத் தூதராக அனுப்பியிருக்கின்றான் என தன்னைப் பற்றி அவர் சொல்லிக் கொண்டிருப்பதாக மக்கள் பதில் கூறுவர். அவர்கள் கூறும் கூற்றை என் அடிமனதில் பதிய வைத்து விடுவேன். அது நன்றாகப் படிந்து விடும். அரபி மக்கள் தாங்கள் முஸ்லிமாவதற்கு மக்கா வெற்றியடைய வேண்டும் என எதிர்பார்த்திருந்தனர்.

அவர்களின் கூற்று என்னவெனில், "இம்மனிதரையும் அவரது கூட்டத்தினரையும் அவரது போக்கில் விட்டு விடுங்கள். இவர் தமது கூட்டத்தாரை வெற்றி கண்டால் உண்மை நபியாவார். இவ்வாறு எண்ணம் கொண்டிருந்த அம்மக்கள், நபி (ஸல்) மக்காவை வெற்றி கொண்டவுடன் இஸ்லாமை ஏற்றுக் கொள்ள விரைந்தனர். எனது தந்தை தனது சமுதாயத்திற்கு முன்னரே இஸ்லாமை ஏற்றுக் கொண்டார். பின்பு எங்களிடம் வந்து, "இந்த நேரத்தில் இந்தத் தொழுகையை நிறைவேற்றுங்கள். இந்த நேரத்தில் இந்தத் தொழுகையைத் தொழுங்கள். நேரம் வந்துவிட்டால் உங்களில் ஒருவர் அதான் கூறட்டும். உங்களில் அதிகமாகக் குர்ஆனை மனனம் செய்தவர் இமாமாக நின்று தொழுகை நடத்தட்டும்" என்று கூறினார். (ஸஹீஹுல் புகாரி)

மக்காவின் வெற்றி பல மாற்றங்களை நிகழ்த்தியது. இஸ்லாமுக்கு கண்ணியம் வழங்கி அரபியர்களை அதற்குப் பணிய வைத்தது என்பதை மேற்கூறிய நிகழ்ச்சி நமக்குத் தெளிவாக விளக்குகிறது. தபூக் போருக்குப் பின் இந்நிலை மேலும் முன்னேறியது. ஆகவேதான் ஹிஜ்ரி 9, 10 ஆகிய ஆண்டுகளில் மதீனாவை நோக்கி ஒன்றன் பின் ஒன்றாக குழுக்கள் வரத் தொடங்கின. மக்கள் அல்லாஹ்வின் மார்க்கத்தில் கூட்டம் கூட்டமாக நுழைந்தனர். மக்காவை மீட்கச் சென்றபோது நபி (ஸல்) அவர்களுடன் பத்தாயிரம் வீரர்கள் இருந்தனர். ஆனால், மக்கா வெற்றிக்குப் பின் தபூக் போருக்கு சென்ற போது நபி (ஸல்) அவர்களுடன் முப்பதாயிரம் வீரர்கள் இருந்தனர். தபூக் போர் முடிந்து நபி (ஸல்) ஹஜ்ஜுக்காக மக்கா பயணமான போது முஸ்லிம்களின் ஒரு கடலே அவர்களுடன் இருந்தது. அதாவது தஸ்பீஹ், தக்பீர், தஹ்லீல் முழக்கங்கள் விண்ணை முட்ட ஒரு இலட்சம் அல்லது ஒரு இலட்சத்து நாற்பதாயிரம் நபித்தோழர்கள் நபி (ஸல்) அவர்களை புடை சூழ சென்றனர்.

**குழுக்கள்**

வரலாற்று ஆசிரியர்கள் எழுபதுக்கும் மேற்பட்ட குழுக்கள் இக்கால கட்டத்தில் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தன என குறிப்பிட்டுள்ளனர். எனினும், அவை அனைத்தையும் முழுவதுமாக இங்குக் குறிப்பிடுவது முடியாத காரியம். அதனை விரிவாகக் கூறுவதில் பெரிய பலன் ஏதுமில்லை என்பதால் அவற்றில் முக்கியமான குழுக்களின் விவரங்களைச் சுருக்கமாகக் காண்போம். பெரும்பாலான சமூகத்தார் மக்கா வெற்றிக்குப் பின்புதான் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தனர். என்றாலும், மக்கா வெற்றிக்கு முன்பும் குழுக்கள் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்துள்ளனர் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

1) அப்துல் கைஸ் குழு

இக்குழுவினர் இரு பிரிவினராக நபி (ஸல்) அவர்களைச் சந்தித்துள்ளனர். ஒரு பிரிவினர் ஹிஜ்ரி 5 அல்லது அதற்கு முன்பு மதீனா வந்தனர். இவர்களில் முன்கித் இப்னு ஹய்யான் என்பவர் வியாபார நிமித்தமாக மதீனா வந்து போய் கொண்டிருந்தார். நபி (ஸல்) மக்காவிலிருந்த மதீனா ஹிஜ்ரா செய்த பின்பு வியாபார வேலையாக மதீனா வந்த முன்கித் நபி (ஸல்) வருகையை அறிந்து அவர்களிடம் சென்று இஸ்லாமைத் தழுவினார். பின்னர் தமது சமூகத்தாருக்காக நபி (ஸல்) தந்த கடிதத்தை எடுத்துச் சென்று தன் சமூகத்தாரிடம் கொடுக்கவே, அவர்களும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டனர். பதிமூன்று அல்லது பதிநான்கு பேர் கொண்ட ஒரு குழுவுடன் மகத்துவமிக்க மாதங்களின் ஒரு மாதத்தில் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். அப்பொழுது ஈமான் மற்றும் குடிபானங்கள் பற்றிய விவரங்களை அறிந்து கொண்டு சென்றனர். இக்கூட்டத்தில் வயது முதிர்ந்த 'அஷஜ் அஸ்ரீ' என்பவரைப் பார்த்து "உங்களிடம் இரண்டு பண்புகள் இருக்கின்றன. அவற்றை அல்லாஹ் விரும்புகின்றான். 1) சகிப்புத் தன்மை, 2) நிதானம்" என நபி (ஸல்) கூறினார்கள்.

இரண்டாவது குழு இக்காலக் கட்டத்தில் வந்தது. இதில் நாற்பது பேர்கள் இருந்தனர். ஜாரூத் இப்னு அலா அப்தீ என்ற கிறிஸ்தவரும் இருந்தார். இவரும் இஸ்லாமை ஏற்று சிறந்த முஸ்லிமாகத் திகழ்ந்தார். (ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம், ஃபத்ஹுல் பாரி)

2) தவ்ஸ் குழுவினர்

இவர்கள் ஹிஜ்ரி 7 ஆம் ஆண்டு தொடக்கத்தில் மதீனா வந்த நேரத்தில் நபி (ஸல்) கைபர் போருக்குச் சென்றிருந்தார்கள். நபி (ஸல்) மக்காவில் இருந்த போதே தவ்ஸ் சமூகத்தைச் சார்ந்த ‘துஃபைல் இப்னு அம்ர்’ என்பவர் இஸ்லாமை ஏற்ற சம்பவத்தை முன்னரே கூறியிருக்கிறோம். இவர் மக்காவிலிருந்து சென்ற போது தனது சமூகத்தாரை இஸ்லாமிய மார்க்கத்தின் பக்கம் அழைத்தார். அவர்கள் ஏற்கத் தயங்கினர். இதனால் கோபத்துடன் நபி (ஸல்) அவர்களிடம் திரும்பி வந்த இவர் “அல்லாஹ்வின் தூதரே! தவ்ஸ் சமூகத்தாரைச் சபித்து விடுங்கள்” என்று கூறினார். நபி (ஸல்) “அல்லாஹ்வே! தவ்ஸ் சமூகத்தாருக்கு நேர்வழி காட்டு” என துஆச் செய்தார்கள். தனது சமூகத்தாரிடம் திரும்பி வந்து மீண்டும் இஸ்லாமைப் பற்றி எடுத்துக் கூறவே அவர்களில் பெரும்பாலோர் இஸ்லாமைத் தழுவினர். அதன் பின் அவர் எழுபது, எண்பது குடும்பங்களை அழைத்துக் கொண்டு மதீனா வந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து கைபர் சென்றிருந்தார்கள். எனவே, நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க இவரும் கைபர் சென்று விட்டார்.

3) ஃபர்வா இப்னு அம்ருடைய தூதர்

ம்ஃபர்வா’ மிகச் சிறந்த போர் தளபதியாக விளங்கினார். அவர் ரோம் நாட்டைச் சுற்றியுள்ள பகுதிகளில் வசித்த அரபியர்களுக்கு ஆளுநராக இருந்தார். அவரது முக்கியத் தலம் ‘மஆன்’ மற்றும் அதனைச் சுற்றியுள்ள ஷாம் நாட்டுப் பகுதிகளாகும். ஹிஜ்ரி 8, முஃதா போரில் முஸ்லிம்கள் ரோமர்களை எதிர்த்துத் துணிவுடன் போராடினர். முஸ்லிம்களின் இந்த வீர தீரத்தையும் மன உறுதியையும் பார்த்து ஆச்சரியமடைந்து இஸ்லாமால் அவர் கவரப்பட்டார். தான் முஸ்லிமானதைத் தெரிவிப்பதற்காக ஒரு தூதரை அனுப்பினார். நபி (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக ஒரு கோவேறு கழுதையையும் அனுப்பி வைத்தார். இவர் முஸ்லிமான செய்தி கேட்ட ரோமர்கள் அவரைச் சிறையிலடைத்து துன்புறுத்தி, “மார்க்கமா? அல்லது மரணமா? இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்!” என்றனர். அவரோ மார்க்கத்தை தேர்ந்தெடுத்தார். ஃபலஸ்தீனில் ‘அஃபரா’ என்ற கிணற்றுக்கருகே ரோமர்கள் அவரைச் சிலுவையில் அறைந்து தலையைக் கொய்தனர். (ஜாதுல் மஆது)

4) சுதா குழுவினர்

ஹிஜ்ரி 8ல் ஜிஃரானாவிலிருந்து (ஹுனைன் போர் முடிந்து) நபி (ஸல்) மதீனா திரும்பிய பின் இக்குழுவினர் வந்தனர். இதன் விவரமாவது: யமன் தேசத்தில் சுதா கிளையினர் வசிக்கும் பகுதிக்குச் செல்லுமாறு நபி (ஸல்) நானூறு வீரர்களை அனுப்பினார்கள். இவர்கள் ‘கனாத்’ பள்ளத்தாக்குடைய முற்பகுதியில் தங்கினர். முஸ்லிம்களின் வருகையை அறிந்த சுதா சமூகத்தைச் சார்ந்த ஜியாத் இப்னு ஹாரிஸ் என்பவர், நபி (ஸல்) அவர்களிடம் விரைந்து வந்து “அல்லாஹ்வின் தூதரே! நான் எனக்குப் பின்னால் இருக்கும் எனது சமூகத்தார் சார்பாக வந்துள்ளேன். நான் எம் சமூகத்தாருக்கு பொறுப்பேற்றுக் கொள்கிறேன். தங்களுடைய படையைத் திரும்ப அழைத்துக் கொள்ளுங்கள்” என்று கூறினார்.

நபி (ஸல்) தங்களது படையை திரும்ப அழைத்துக் கொண்டார்கள். ஜியாத் தமது சமூகத்தாரிடம் வந்து நபி (ஸல்) அவர்களைச் சந்திப்பதற்கு ஆர்வமூட்டினார். அவர்களில் பதினைந்து நபர்கள் தயாராகி நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க மதீனா வந்தனர். நபி (ஸல்) அம்மக்களுக்கு இஸ்லாமை எடுத்துக் கூற, அவர்கள் முஸ்லிம்களாயினர். அதன் பின்

தமது சமூகத்தாரிடம் வந்து இஸ்லாமிய அழைப்புப் பணி மேற்கொண்டதால் அம்மக்களில் பலர் முஸ்லிம்களாயினர். நபி (ஸல்) இறுதி ஹஜ்ஜுக்காக வந்த போது அவர்களில் நூறு பேர்கள் நபி (ஸல்) அவர்களுடன் கலந்து கொண்டனர்.

5) கஅப் இப்னு ஜுஹைர் வருகை

அரபியரின் பிரபலமான கவிக் குடும்பத்தில் பிறந்தவரான இவரும் புகழ்பெற்ற கவிஞராகத் திகழ்ந்தார். இவர் நபி (ஸல்) அவர்களைத் தன் கவிகள் மூலம் காயப்படுத்திக் கொண்டிருந்தார். நபி (ஸல்) ஹிஜ்ரி 8ல், தாயிஃப் போர் முடிந்து மதீனா திரும்பிய பின் கஅப் இப்னு ஜுஹைருக்கு அவரது சகோதரர் ஃபுஜைர் இப்னு ஜுஹைர் கடிதம் ஒன்று எழுதினார். அதில், ‘‘தன்னை இகழ்ந்து கவிபாடி நோவினை தந்த பலரை மக்காவில் நபி (ஸல்) கொன்று விட்டார்கள். நபியவர்களை இகழ்ந்து வந்த குறைஷிகளில் பலர், தப்பித்தோம்! பிழைத்தோம்! என பல இடங்களுக்கு வெருண்டோடினர். உனக்கு உயிர் மேல் ஆசையிருந்தால் நபி (ஸல்) அவர்களிடம் உடனே செல்! மன்னிப்புக் கோரி வருபவரை நபி (ஸல்) கொல்ல மாட்டார்கள். அவ்வாறில்லையெனில் நீ பாதுகாப்பான இடத்திற்குச் சென்றுவிடு!’’ என்று குறிப்பிட்டிருந்தார்.

இதற்கு கஅப் பதில் எழுத, அதற்கு அவரது சகோதரர் பதில் தர இவ்வாறு கடிதத் தொடர்பு இருந்து கொண்டிருந்தது. கஅப் தனது சகோதரன் கடிதங்களால் நெருக்கடியை உணர்ந்தார். அவருக்கு உயிர் மீது பயம் வந்தது. உடனே மதீனா சென்று ஜுஹைனா கிளையிலுள்ள ஒருவரிடம் விருந்தாளியாகத் தங்கினார். அவருடன் சென்று ஸுப்ஹ் தொழுகையை நிறைவேற்றிய பின் அவரது ஆலோசனைக்கிணங்க நபி (ஸல்) அவர்களிடம் சென்றமர்ந்து தனது கரத்தை நபி (ஸல்) அவர்களின் கரத்துடன் வைத்துப் பேசினார்.

நபி (ஸல்) அவர்களுக்கு இவர் யார் என்பது தெரியாது. ‘‘அல்லாஹ்வின் தூதரே! கஅப் இப்னு ஜுபைர் உங்களிடம் பாதுகாப்புத் தேடி வந்துள்ளார். அவர் தனது தவறுகளுக்காக வருந்தி மன்னிப்புக்கோரி இஸ்லாமையும் ஏற்றுக் கொண்டு விட்டார். நான் அவரை அழைத்து வந்தால் தாங்கள் ஏற்றுக் கொள்வீர்களா?’’ என்று கேட்டார். நபி (ஸல்) ‘‘ஆம்! தாராளமாக ஏற்றுக் கொள்வேன்’’ என்றார்கள் ‘‘அல்லாஹ்வின் தூதரே! நான்தான் அந்த கஅப்’’ என்று கூறினார். கூறியதுதான் தாமதம். அவர்மீது வேகமாகப் பாய்ந்து அவரைப் பிடித்துக் கொண்டு ‘‘அல்லாஹ்வின் தூதரே! ஆணையிடுங்கள். இவன் தலையைக் கொய்து விடுகிறேன்’’ என்று அன்சாரிகளில் ஒருவர் கூறினார். ஆனால் நபி (ஸல்), ‘‘நீங்கள் அவ்வாறு செய்ய வேண்டாம். அவரை விட்டு விடுங்கள். அவர் திருந்தி, தான் செய்த தவறுக்கு மன்னிப்புக் கேட்டு வந்துள்ளார்’’ எனக் கூறினார்கள். அதனால் மனங்குளிர்ந்த கஅப் நபி (ஸல்) அவர்களுக்கு முன் சில கவிதைகளைப் படித்தார்.

சுஆது பிரிந்து விட்டாள்.
இன்னும் என்னுள்ளம் நிலை குலைந்து
சுய நினைவிழந்து கைதியாய் அவள் பின் அலைகிறது.
இதைக் காப்பாற்ற முடியவில்லையே!

என்று ஆரம்பித்து,

அல்லாஹ்வின் தூதர் என்னை எச்சரித்தார்கள் என
எனக்குத் தகவல் வந்தது. அல்லாஹ்வின் தூதரிடம்
மன்னிப்பை நான் விரும்புகிறேன்.
சற்று நில்லுங்கள்! நல்லுரைகளும் விளக்கங்களும்
நிறைந்த குர்ஆன் எனும் வெகுமதியை வழங்கியவன்
உங்களுக்கு நல்வழி காட்டியுள்ளான்.

கோள் மூட்டுவோர் பேச்சால் என்னை நீங்கள்
தண்டித்து விடாதீர்கள். என்னைப் பற்றி பலவாறு
பேச்சுகள் இருப்பினும் நான் எக்குற்றமும் புரியவில்லை.
நான் இருக்கும் இவ்விடத்தில் யானை இருந்து
நான் பார்ப்பதையும் கேட்பதையும் அது கேட்டால் நடுநடுங்கிவிடும்.
ஆனால் அல்லாஹ்வின் தூதர் அதற்கு அனுமதி அருளினாலேயன்றி...
பழிவாங்கும் ஆற்றலுள்ளவன் கையில்
என் கையை வைத்து விட்டேன்.
இனி நான் அவரிடம் சண்டையிடேன்.
அவர் கூற்றை முழுமையாக ஏற்பேன்

‘உன்னைப் பற்றி பல தகவல்கள் வந்துள்ளன,
நீ விசாரணைக்குரியவன்’ எனக் கூறக் கேட்டேன்.
பல சிங்கக் காடுகளை அடுத்துள்ள ‘அஸ்ஸர்‘‘
என்ற பள்ளத்தாக்கின் அடர்ந்த காடுகளில்
குகை கொண்ட சிங்கத்தை அஞ்சுவதை விட
நான் நபியுடன் பேசும் போது அவரை அஞ்சுகிறேன்.
நிச்சயம் நபி ஒளிமயமானவரே!
அவரால் நாமும் ஒளி பெறலாம்.
அல்லாஹ்வின் வாட்களிலே
உருவப்பட்ட இந்திய வாட்களைப் போல் நபி மிளிர்கிறார்கள்.

தனது கவியில் முஹாஜிர்களையும் கஅப் புகழ்ந்தார். ஏனெனில், குறைஷிகளில் அனைவரும் கஅபைப் பற்றி நல்லதையே கூறி வந்தனர். தன்னைக் கொல்ல வந்த அன்சாரிகளைப் பற்றி சற்று குத்தலாகக் கவி படித்தார். அன்சாரிகளைப் பற்றி அவர் கூறியதாவது:

ஈட்டிகள் காவலுடன் அழகு.
ஆண் ஒட்டகங்கள் நடப்பது போல்
(குறைஷிகள்) நடைபோடுகின்றனர்.
கருங்குட்டையர்களோ பயந்து விரண்டோடினர்.
(இது மதீனாவாசிகளைக் குறித்து கேலி செய்தது.)

ஆனால், இஸ்லாமைத் தழுவி மார்க்கத்தில் உறுதியானவுடன் அன்சாரிகளின் சிறப்புகளையும் உயர்வுகளையும் தெரிந்து கொண்டு, தான் செய்த தவறுக்காக வருந்தினார். தான் அவர்களை இகழ்ந்து படித்ததை நிவர்த்தி செய்வதற்காக அவர்களைப் புகழ்ந்து கவிதை கூறினார்.

‘‘சிறந்த வாழ்க்கையை விரும்புவோர் என்றும்
நல்லோர் அன்சாரிகளுடன் சேரட்டும்!
அவர்கள் வாழையடி வாழையாக
நற்பண்புகளுக்கு வாரிசுகள்
சான்றோர்கள் யாரெனில்
சான்றோர்களின் மைந்தர்களே!’’

6) உத்ரா குழுவினர்

இச்சமூகத்தைச் சார்ந்த 12 பேர்கள் ஹிஜ்ரி 9, ஸஃபர் மாதம் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். ஹம்ஜா இப்னு நுஃமான் என்பவரும் அவர்களில் ஒருவர். தாங்கள் யார் என அவர்களிடம் கேட்கப்பட்ட போது, ‘‘நாங்கள் உத்ரா சமூகத்தவர். குஸையின் தாய்வழிச்

சகோதரர்கள். குஜாஆ மற்றும் பக்கர் வமிசத்தாரை மக்காவிலிருந்து வெளியேற்றுவதில் குஸைக்கு உதவி செய்தவர்கள். எங்களுக்கு உங்களுடன் உறவும் ரத்தபந்தமும் இருக்கின்றன'' என பதில் கூறினர். மிக்க கண்ணியத்துடன் அவர்களை நபி (ஸல்) அவர்கள் வரவேற்று அதிவிரைவில் ஷாம் நாடு வெற்றி கொள்ளப்படும் என்ற நற்செய்தியையும், குறிகேட்கக் கூடாது அறியாமைக் கால வழக்கப்படி அறுத்துப் பலியிடக் கூடாது என்றும் கூறினார்கள். அவர்களும் இஸ்லாமை மனமுவந்து ஏற்று பல நாட்கள் தங்கியிருந்து பின்னர் தங்களது ஊர்களுக்குத் திரும்பினர்.

7) பலிய் குழுவினர்

இக்குழுவினர் ஹிஜ்ரி 9ல், ரபீஉல் அவ்வல் மாதம் மதீனா வந்து மூன்று நாட்கள் தங்கியிருந்தனர். இவர்களின் தலைவர் அபூ ழுபைப் நபி (ஸல்) அவர்களிடம் ''விருந்தோம்பல் செய்வதற்கு (நன்மை) நற்கூலி கிடைக்குமா?'' என வினவினார். ''ஆம்! செல்வந்தர்களாயினும் அல்லது ஏழைகளாயினும் சரியே! நீங்கள் புரியும் ஒவ்வொரு நற்காரியங்களும் நன்மை தரக் கூடியதே'' என பதிலளித்தார்கள். ''விருந்தோம்பலின் கால அளவு எவ்வளவு?'' என அபூழுபைப் கேட்ட போது ''மூன்று நாட்கள்'' என நபி (ஸல்) பதில் கூறினார்கள். அவர் ''வழிதவறி வந்துவிட்ட ஆடுகளைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்?'' என்று கேட்டார். ''அது உமக்கு அல்லது உனது சகோதரருக்கு அல்லது ஓநாய்க்கு'' என பதில் கூறினார்கள். வழிதவறிய ஒட்டகங்களைப் பற்றி கேட்க ''அதைப் பற்றி உனக்கென்ன கவலை. அது அவருடைய எஜமானனைத் தேடிச் சென்று விடும் அல்லது அதன் சொந்தக்காரர் அதனை தேடிக் கொள்வார்'' என நபி (ஸல்) பதில் கூறினார்கள்.

8) ஸகீஃப் குழுவினர்

இவர்கள் ஹிஜ்ரி 9, ரமழான் மாதம் வந்தனர். ஹிஜ்ரி 8ல், துல்கஅதா மாதம் நபி (ஸல்) தாயிஃப் போர் முடிந்து மதீனா திரும்பும் வழியில் இவர்களின் தலைவர் உர்வா இப்னு மஸ்வூத் ஸகஃபி நபி (ஸல்) அவர்களிடம் வந்து இஸ்லாமைத் தழுவினார். தான் தலைவர் என்பதாலும், தனது பேச்சை மக்கள் கேட்டு நடக்கின்றனர் என்பதாலும், தன்னை மக்கள் தங்கள் வீட்டு கன்னிப் பெண்களை விட அதிகம் நேசிக்கிறார்கள் என்பதாலும், தான் இஸ்லாமிய மார்க்கத்திற்கு அவர்களை அழைத்தால் அதை ஏற்றுக் கொள்வார்கள் என்றெண்ணி தனது சமூகத்தாரை இஸ்லாமிற்கு அழைத்தார். ஆனால், அம்மக்களோ அவன் எண்ணத்திற்கு நேர் மாற்றமாக நடந்தனர். நாலாத் திசைகளிலிருந்தும் அவரை அம்பெறிந்துக் கொன்றே விட்டனர்.

சில மாதங்கள் கழிந்து அவர்கள் ஒன்றுகூடி ''நம்மைச் சுற்றியுள்ள பெரும்பாலான அரபிகள் இஸ்லாமை ஏற்றுக் கொண்டு விட்டனர். அவர்களை எதிர்க்கும் ஆற்றல் நம்மிடமில்லை. நாம் என்ன செய்யலாம்?'' என்று ஆலோசனை செய்தனர். இறுதியில், அப்து யாலீல் இப்னு அம்ரு என்பவரைத் தேர்ந்தெடுத்து நபி (ஸல்) அவர்களிடம் அனுப்ப முடிவு செய்து, அது தொடர்பாக அவரிடம் பேசினர்.

இஸ்லாமைக் கற்று, அதனை ஏற்றுத், திரும்ப மக்களிடம் வந்து கூறும் போது உர்வாவுக்கு ஏற்பட்ட கதி நமக்கும் ஏற்படுமோ என அஞ்சி அவர்களது கோரிக்கையை ஏற்க மறுத்து விட்டார். என்னுடன் உங்களது ஆட்கள் சிலரையும் அனுப்பி வைத்தால் சென்று வருகிறேன் என்ற ஒரு மாற்று ஆலோசனையை முன் வைத்தார். அவர்கள் அதனை ஏற்று மாலிக் குடும்பத்தைச் சேர்ந்த மூவரையும், தங்களது நட்புக் கோத்திரங்களிலிருந்து இருவரையும் அவருடன் அனுப்ப ஒப்புக் கொண்டனர். ஆக மொத்தம், ஆறு நபர்கள் மதீனா நோக்கி பயணமானார்கள்.

அவர்களில் உஸ்மான் இப்னு அபுல் ஆஸ் ஸஃகபீ என்பவரும் இருந்தார். அவர்தான் அவர்களில் மிகச் சிறிய வயதுடையவர். அவர்கள் மதீனா வந்தவுடன் பள்ளியின் ஓரத்தில் அவர்கள் தங்குவதற்காகக் கூடாரம் ஒன்றை நபி (ஸல்) அமைத்துத் தந்தார்கள். குர்ஆன் ஓதுவதை கேட்கவும், மக்கள் தொழுவதைப் பார்த்து கற்றுக் கொள்ளவும் அவர்களை பள்ளியிலேயே தங்க வைத்தார்கள். இவர்கள் நபி (ஸல்) அவர்களிடமும் அவ்வப்போது வந்து போய் கொண்டிருந்தார்கள். இக்குழுத் தலைவர், நபியவர்களிடம் “உங்களுக்கும் எங்களுக்குமிடையே ஓர் ஒப்பந்தப் பத்திரம் எழுதித் தர வேண்டும். அதில், விபச்சாரம், மது, வட்டி ஆகியவற்றுக்கு அனுமதி வழங்க வேண்டும். எங்களின் பெரிய சிலையான லாத்தை உடைக்கக் கூடாது. தொழுகையை எங்களுக்கு விதிவிலக்கு ஆக்க வேண்டும். எங்களின் மற்ற சிலைகளை நாங்கள் உடைக்க மாட்டோம். இந்த அம்சங்கள் எல்லாம் அந்த ஒப்பந்தத்தில் இடம் பெற வேண்டும்” என்று கூறினார்.

இவர்களின் எந்த ஒப்பந்தத்தையும் நபி (ஸல்) ஏற்க மறுத்து விட்டார்கள். இவர்கள் அனைவரும் சபையை விட்டு அகன்று தனியாக ஆலோசனை செய்தனர். பணிந்து விடுவதைத் தவிர வேறு வழி இல்லாததால், நபியவர்களிடம் வந்து லாத் சிலையை நாங்கள் உடைக்க மாட்டோம். நீங்கள்தான் உடைக்க வேண்டும் என்ற நிபந்தனையுடன் இஸ்லாமை ஏற்றுக் கொண்டனர். நபி (ஸல்) அவர்களும் அதனை ஒத்துக் கொண்டார்கள். இந்த அடிப்படையில் அவர்களுக்கு நபி (ஸல்) ஒப்பந்தம் செய்து கொடுத்தார்கள்.

அவர்களுக்கு வயதில் குறைந்த உஸ்மான் இப்னு அபுல் ஆஸையே தலைவராக நியமித்தார்கள். ஏனெனில், அவர் மார்க்கத்தை அறிவதிலும் குர்ஆனை ஓதுவதிலும் மிக்க ஆர்வத்துடன் விளங்கினார். அந்தக் குழுவினர் காலையில் நபி (ஸல்) அவர்களிடம் வரும்போது தங்களது பொருட்களை பாதுகாப்பதற்கு உஸ்மானை கூடாரத்தில் விட்டுவிட்டு வந்து விடுவார்கள். மதிய நேரத்தில் குழுவினர் ஓய்வெடுக்கக் கூடாரத்திற்கு வந்த பின்பு, இவர் நபியவர்களிடம் சென்று குர்ஆனையும் மார்க்கத்தையும் கற்றுக் கொள்வார்.

அந்நேரம் நபி (ஸல்) அவர்களும் உறங்கிக் கொண்டிருந்தால் அபூபக்ரிடம் சென்று கற்பார். (அவர் தமது கூட்டத்தினருக்கு மிகுந்த நன்மைக்குரியவராக விளங்கினார். நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின் மக்களில் பலர் இஸ்லாமை விட்டு வெளியேறிய போது ஸகீஃப் வமிசத்தவரும் இஸ்லாமை விட்டு வெளியேறத் துடித்தனர். அப்போது “ஸகீஃப் வமிசத்தாரே! மக்களில் நீங்கள் இறுதியாகவே இஸ்லாமைத் தழுவினீர்கள். அதனை விட்டு முதலாவதாக நீங்கள் விலகி விடாதீர்!” என்று எச்சரித்தார். அவன் இந்த அறிவுரையை ஏற்று இஸ்லாமில் உறுதியாகி விட்டனர்.)

நாம் இப்போது வரலாற்றைப் பார்ப்போம்.

வந்தவர்கள் தாம்ஃபுக்குத் திரும்பி தமது சமூகத்தாரைச் சந்தித்தனர். நடந்த நிகழ்வுகளை மறைத்து விட்டு நபி (ஸல்) உங்கள் மீது போர் தொடுக்க முனைகிறார்கள் என எச்சரித்து விட்டு அதற்காக தாங்கள் கவலை, கைசேதத்துடன் இருப்பதாகக் காட்டிக் கொண்டனர். மேலும், இஸ்லாமை ஏற்க வேண்டும் விபச்சாரம், மது, வட்டி மற்றும் அனைத்து தீமையான காரியங்களில் இருந்தும் விலகியிருக்க வேண்டும் அவ்வாறு செய்யாவிடின் போரைத் தவிர வேறு கதி கிடையாது என்று நபி (ஸல்) கூறியதாக அக்குழுவினர் கூறினார்கள். இதனைக் கேட்ட ஸகீஃப் கிளையினருக்கும் சினம் தலைக்கேறியது. நாமும் போருக்குத் தயாராவோம் என்று கூறி இரண்டு மூன்று நாட்களாக போருக்கான ஆயத்தம் செய்தனர்.

இந்நிலையில் அவர்களின் உள்ளங்களில் அல்லாஹ் பயத்தை ஏற்படுத்தினான். அவர்களோ தூதுக் குழுவினரை அழைத்து “நீங்கள் திரும்பவும் அவரிடம் (நபியிடம்) செல்லுங்கள். அவர் கூறும் அனைத்தையும் ஏற்றுக் கொள்ளுங்கள்” என்றனர். அக்குழுவினர் அப்போது

உண்மை நிலையை விவரித்தனர். அதனைக் கேட்டு ஸகீஃப் கூட்டத்தார் மிக சந்தோஷமாக இஸ்லாமில் இணைந்தனர்.

லாத்தை உடைப்பதற்காக நபி (ஸல்) தங்களின் தோழர்கள் பலரைக் காலித் இப்னு வலீது (ரழி) தலைமையில் அனுப்பினார்கள். இக்குழுவில் இடம்பெற்ற முகீரா இப்னு ஷுஃபா (ரழி) ஒரு கோடரியை எடுத்துக் கொண்டு "நான் இப்பொழுது ஸகீஃப் கிளையினரால் உங்களை சிரிப்பில் ஆழ்த்துகிறேன் பாருங்கள்" என்று கூறி லாத் சிலை இருந்த பீடத்தை இடித்து விட்டுத் தானாக வேண்டுமென்றே கீழே வீழ்ந்தார். அதைக் கண்ட கூட்டத்தார் "அல்லாஹ் முகீராவை நாசமாக்கி விட்டான். எங்களது (பெண் கடவுள்) இறைவி முகீராவைக் கொன்று விட்டது" என்று துடியாய் துடித்தனர். அதனைக் கேட்ட முகீரா வெகுண்டெழுந்து "அல்லாஹ் உங்களை நாசமாக்குவானாக! இது என்ன? கல்லும் மண்ணும் சேர்ந்த கலவைதானே?" என்று எள்ளி நகையாடி லாத்தை உடைத்தெறிந்து அதன் மதில் மேல் ஏறினார். அவரைத் தொடர்ந்து முஸ்லிம்களும் பாய்ந்து ஏறி இடித்துத் தள்ளினர். பீடங்களைத் தோண்டி, அங்கிருந்த செல்வங்களை அள்ளிக் கொண்டு காலித் (ரழி) தலைமையில் முஸ்லிம்கள் நபி (ஸல்) அவர்களிடம் திரும்பி வந்தனர். இந்நிகழ்ச்சி ஸகீஃப் கிளையினருக்கு பெரும் திகைப்பை ஏற்படுத்தியது. இவ்வெற்றிக்காக நபி (ஸல்) அல்லாஹ்வை புகழ்ந்து துதி செய்தார்கள். பின்னர் தோழர்கள் கொணர்ந்த கனீமா பொருட்களை அவர்களுக்கே பங்கு வைத்துக் கொடுத்தார்கள். (ஜாதுல் மஆது, இப்னு ஹிஷாம்)

9) யமன் நாட்டு அரசர்களின் கடிதங்கள்

நபி (ஸல்) தபூக் போரிலிருந்து மதீனா வந்த பின் யமன் நாட்டு ஹிம்யர் பகுதி அரசர்களின் கடிதம் நபி (ஸல்) அவர்களுக்கு வந்தது. அந்த அரசர்களின் பெயர்கள் வருமாறு:

1) அல்ஹாரிஸ் இப்னு அப்து குலால், 2) நுஅய்ம் இப்னு அப்து குலால், 3) நுஃமான், 4) கைலு தீருஅய்ன், 5) ஹம்தான், 6) முஆஃபிர்.

இவர்கள் மாலிக் இப்னு முர்ரா ரஹாவியை நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி நாங்கள் இணைவைத்தலையும் இணைவைப்பவர்களையும் விட்டு விலகி இஸ்லாமை ஏற்றோம் என்று தெரிவித்தனர்.

நபி (ஸல்) அந்த அரசர்களின் இஸ்லாமிய வருகையை ஏற்றுக் கொண்டு அவர்களுக்கு கடிதம் எழுதினார்கள். அதில் முஸ்லிம்களின் சலுகைகள், அவர்களின் கடமைகள் முதலியவற்றை விவரித்தார்கள். ஒப்பந்தக்காரர்கள் ஜிஸ்யா வரியை முறையாக செலுத்தும் வரை அல்லாஹ் உடைய, அவனது தூதருடைய பாதுகாவல் உண்டு என்றும் அதில் குறிப்பிட்டிருந்தார்கள். மேலும், முஆத் இப்னு ஜபல் (ரழி) தலைமையில் தம் தோழர்களை மார்க்கக் கல்விப் பணிக்காக அம்மக்களிடம் நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள். மேலும், யமனின் மேற்புறத்தில் உள்ள 'அத்ன்' பகுதியிலுள்ள சுகூன், சகாஸிக் என்ற இரு ஊர்களுக்கு இடையிலுள்ள இடங்களுக்கும் பொறுப்பாளியாக்கினார்கள். முஆத் அவர்கள் நீதிபதியாகவும், தலைமை ராணுவ அதிகாரியாகவும், ஜகாத், ஜிஸ்யா ஆகியவற்றை வசூல் செய்யும் அதிகாரியாகவும், மக்களுக்குத் தொழுகை நடத்தும் இமாமாகவும் தலைசிறந்து விளங்கினார்கள்.

அபூமூஸா அஷ்அரியை யமனின் கீழ்புறத்தில் உள்ள ஜுபைத், மஃரப், ஜமா, ஸால் ஆகிய பகுதிகளுக்கு பொறுப்பாளியாக்கினார்கள். "நீங்கள் இருவரும் எளிமையாக்குங்கள் கடினமாக்காதீர்கள். நற்செய்தி நவிலுங்கள் வெறுப்பூட்டாதீர்கள். இணக்கமாக இருங்கள் பிணங்கிக் கொள்ளாதீர்கள்" என நபி (ஸல்) அழகிய அறிவுரை கூறியனுப்பினார்கள். நபி

(ஸல்) மரணிக்கும் வரை முஆத் (ரழி) யமனிலேயே தங்கிவிட்டார்கள். அபூமூஸா அஷ்அ (ரழி) நபியவர்களுடன் இறுதி ஹஜ்ஜில் கலந்து கொண்டார்கள்.

10) ஹம்தான் குழுவினர்

நபி (ஸல்) தபூக் போரிலிருந்து திரும்பிய பின்பு இக்குழுவினர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். இவர்கள் கேட்டதை நபி (ஸல்) அவர்கள் எழுதிக் கொடுத்தார்கள். அவர்களுக்கு மாலிக் இப்னு நமத் (ரழி) என்பவரைத் தலைவராக்கினார்கள். மேலும், ஹம்தான் கிளையினரில் யாரெல்லாம் முஸ்லிமாவார்களோ அவர்களுக்கும் இவரையே பொறுப்பாளியாக்கினார்கள். ஹம்தான் கிளையில் முஸ்லிமாகாதவர்களுக்கு இஸ்லாமிய அழைப்புப் பணி செய்வதற்காக நபி (ஸல்) காலித் பின் வலீதை (ரழி) அனுப்பி வைத்தார்கள். அவருடைய ஆறு மாத உழைப்பில் ஒருவர் கூட முஸ்லிமாகவில்லை.

இதையறிந்த நபி (ஸல்) அலீ இப்னு அபூதாலிபை அப்பணிக்காக அனுப்பி, காலிதை திரும்ப அழைத்துக் கொண்டார்கள். மேலும், ஹம்தான் கிளையாருக்குப் படித்து காண்பிப்பதற்காக கடிதம் ஒன்றைக் கொடுத்தனுப்பினார்கள். அலீ (ரழி) அக்கடிதத்தை அவர்கள் முன்னிலையில் படித்துக்காட்டியே இஸ்லாமிய அழைப்புப் பணி செய்தார்கள். அல்லாஹ்வின் அருளால் அம்மக்கள் அனைவரும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார்கள். இந்த நற்செய்தியை நபி (ஸல்) அவர்களுக்கு அலீ (ரழி) கடிதம் மூலம் தெரியப்படுத்தினார்கள். நபி (ஸல்) இச்செய்தியை செவியேற்று ஸஜ்தா செய்து, பிறகு தலையை உயர்த்தி, (ஸலாமுன் அலாஹம்தான்) “ஹம்தான் கிளையினருக்கு ஈடேற்றம் உண்டாகுக!” என இருமுறைக் வேண்டினார்கள்.

11) ஃபஜாரா குழுவினர்

நபி (ஸல்) தபூக்கிலிருந்து திரும்பிய பின் ஹிஜ்ரி 9ல் இவர்கள் வந்தனர். இக்குழுவில் பத்து பேர்கள் இடம் பெற்றிருந்தனர். அனைவரும் இஸ்லாமை ஏற்றே நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். இவர்கள் “தங்கள் ஊர் வறுமையால் வாடுகிறது பஞ்சத்தால் நாங்கள் அவதிப்படுகிறோம்” என்று நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டனர். அவர்கள் மீது மனமிரங்கி மிம்பரில் ஏறி இரு கரங்களையும் ஏந்தி மழைக்காக துஆச் செய்தார்கள்: “அல்லாஹ்வே! நீ படைத்த ஊர்களுக்கும், கால்நடைகளுக்கும் நீர் புகட்டுவாயாக! உன் கருணையை அவர்களுக்கு அருள்வாயாக! வாடிப் போயிருக்கும் நீ படைத்த ஊரை உயிர்பிப்பாயாக! அல்லாஹ்வே! எங்களைக் காப்பாற்றும் வளமிக்க, செழுமை மிக்க, விசாலமான, அடர்த்தியான, தாமதமின்றி, உடனடியான, இடையூறின்றி பலன்தரக்கூடிய மழையை எங்களுக்கு இறக்கியருள்வாயாக! அல்லாஹ்வே! அது கருணை பொழியும் மழையாக இருக்க வேண்டும் வேதனை தரக்கூடியதாக, தகர்க்கக் கூடியதாக, மூழ்கடிக்கக் கூடியதாக, அழிக்கக் கூடியதாக இருக்க வேண்டாம். அல்லாஹ்வே! மழையை இறக்குவாயாக! எதிரிகளுக்கு எதிராக எங்களுக்கு உதவி செய்வாயாக!” (ஜாதுல் மஆது)

12) நஜ்ரான் குழுவினர்

‘நஜ்ரான்’ யமன் தேசத்துக்கருகே உள்ள நகரம். இது மக்காவிலிருந்து ஏழு நாட்கள் தொலைவில் உள்ளது. (ஃபத்ஹுல் பாரி)

இந்நகரத்திற்குக் கீழ் எழுபத்து மூன்று கிராமங்கள் உள்ளன. இதில் ஒரு இலட்சத்திற்கும் மேற்பட்ட ராணுவ வீரர்கள் இருந்தனர். இவர்கள் அனைவரும் கிறிஸ்தவர்கள்.

நஜ்ரானிலிருந்து ஹிஜ்ரி 9ல், அறுபது பேர்கள் கொண்ட குழு மதீனா வந்தது. இவர்களில் இருபத்து நான்கு பேர்கள் (உயர்மட்டத் தலைவர்கள்) முக்கியமானவர்கள். அவர்களில் மூவர் நஜ்ரான் மக்களுக்கு பிரதிநிதிகளாக இருந்தனர்.

1) அப்துல் மஸீஹ் - இவர் அம்மக்களின் ஆட்சியாளராகவும், தீர்ப்பளிப்பவராகவும் இருப்பவர். இவரை மக்கள் ‘ஆகிப்’ என அழைத்தனர்.

2) அய்ஹம் அல்லது ஷுரஹ்பீல் - இவர் அரசியல் மற்றும் கலாச்சார காரியங்களை நிறைவேற்றி வந்தார். இவரை மக்கள் ‘ஸைம்த்’ என அழைத்தனர்.

3) அபூஹாஸா இப்னு அல்கமா - இவர் மதரீதியான, ஆன்மீக ரீதியான காரியங்களை கவனித்துக் கொண்டிருந்தார். இவரை மக்கள் ‘அஸ்கஃப்’ என அழைத்தனர்.

இவர்கள் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து பேச்சுவார்த்தை நடத்தினர். அந்நேரத்தில் நபி (ஸல்) குர்ஆனை ஓதிக் காண்பித்து இஸ்லாமின் பக்கம் அழைத்தார்கள். ஆனால், இம்மக்கள் ஏற்றுக் கொள்ளாமல் ஈஸா (அலை) பற்றி விசாரித்தார்கள். அன்றைய தினம் நபி (ஸல்) பதில் கூறாமல் அல்லாஹ்வின் வஹீயை எதிர்பார்த்து தாமதித்தார்கள். அல்லாஹ் அவர்களுக்கு பின்வரும் வசனத்தை இறக்கினான்.

(நபியே!) உங்களுக்கு உண்மையான விவரம் கிடைத்த பின்னரும், உங்களிடம் எவரும் இதைப் பற்றி தர்க்கித்தால் “வாருங்கள் எங்களுடைய பிள்ளைகளையும், உங்களுடைய பிள்ளைகளையும், எங்களுடைய பெண்களையும், உங்களுடைய பெண்களையும், எங்களையும், உங்களையும் அழைத்து (ஒன்று சேர்த்து) வைத்துக் கொண்டு (ஒவ்வொருவரும் நாம் கூறுவதுதான் உண்மையென) சத்தியம் செய்து (இதற்கு மாறாகக் கூறும்) பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக! என பிரார்த்திப்போம்” என்று நீங்கள் கூறுங்கள். (அல்குர்ஆன் 3:61)

மறுநாள் காலை அம்மக்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். அல்லாஹ் தனக்கு இறக்கிய வசனங்களின் வெளிச்சத்தில் ஈஸாவைப் பற்றித் தெளிவாக விளக்கினார்கள். இன்றைய தினம் நன்றாக யோசித்துக் கொள்ள அனுமதி வழங்கினார்கள். ஆனால், அம்மக்கள் ஈஸா (அலை) விஷயத்தில் நபி (ஸல்) கூறுவதை ஏற்க மறுத்து விட்டனர்.

மறுநாள் காலை நபியவர்களை சந்திக்க வந்த இவர்களை நபி (ஸல்) “வாருங்கள் அசத்தியத்தில் இருப்பவரை அல்லாஹ் அழித்துவிட பிரார்த்திப்போம்” என்று அழைத்தார்கள். நபி (ஸல்) ஒரு போர்வையில் ஹசன், ஹுஸைன் (ரழி) இருவரையும் சேர்த்துக் கொண்டார்கள். ஃபாத்திமா (ரழி) நபி (ஸல்) அவர்களுடைய முதுகுக்குப் பின்னால் நடந்து வந்தார்கள். நபி (ஸல்) உறுதியாக இருப்பதைக் கண்ட அவர்கள் தனியே தங்களுக்குள் ஆலோசனை செய்தனர். அப்போது ஆகிப், சய்யிது இருவரும் ஒருவர் மற்றவரிடம் “இவ்வாறு செய்யாதே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! உண்மையில் நபியாக இருந்து நாம் சாபத்திற்குச் சென்றால் ஒருக்காலும் நாம் வெற்றியடைய முடியாது. நமக்குப் பின் எவரும் மிஞ்சவும் மாட்டார். நமது இன மக்கள் ஒருவர் கூட இல்லாமல் அழிந்து விடுவார்கள்” என்று கூறினார்.

இதற்குப் பின் அனைவரும் ஒன்றுகூடி, “நபி (ஸல்) அவர்களை நடுவராக்கிக் கொண்டு அவர் கூறும் ஆலோசனையை ஏற்றுக் கொள்வோம்” என ஒருமித்துக் கூறினார். பின்னர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து “நீங்கள் கேட்பதை நாங்கள் தந்து விடுகிறோம். ஒவ்வோர் ஆண்டிலும் ரஜப் மாதம் ஆயிரம் ஆடைகளும், ஸஃபர் மாதம் ஆயிரம் ஆடைகளும் தந்து ஒவ்வொரு ஆடையுடன் ஓர் ஊக்கியா வெள்ளியையும் தந்து விடுகிறோம்” என சமாதானம் பேசினார்கள். நபியவர்களும் அதனை ஒத்துக்கொண்டு அவர்களுக்கு அல்லாஹ்வுடைய பாதுகாப்பையும் நபியவர்களுடைய பாதுகாப்பையும் வழங்கினார்கள். அவர்களுடைய மத விஷயங்களில் முழு சுதந்திரம் வழங்கினார்கள். இதுகுறித்த ஒப்பந்தத்தையும் அவர்களுக்கு எழுதித் தந்தார்கள். அம்மக்கள் ஒப்பந்தப் பொருளை வழங்குவதற்காக நம்பிக்கைக்குரிய ஓர் ஆளை தங்களுடன் அனுப்பும்படி வேண்டினர்.

அதன்படி இச்சமுதாயத்தில் மிகுந்த நம்பிக்கைக்குரியவர் என சிறப்புப் பெயர் கொண்ட அபூ உபைதாவை அவர்களுடன் அனுப்பி வைத்தார்கள்.

சில காலத்திற்குப் பின் அந்தச் சமூகத்தில் இஸ்லாம் பரவ ஆரம்பித்தது. ஸம்து, ஆகிப் (ரழி) இருவரும் நஜ்ரான் சென்ற பிறகு இஸ்லாமை ஏற்றனர் என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். நபி (ஸல்) ஜகாத் மற்றும் ஜிஸ்யாவை வசூலிக்க நஜ்ரானுக்கு அலீயை அனுப்பி இருக்கின்றார்கள். ஜகாத் முஸ்லிம்களிடம் மட்டுமே வசூலிக்கப்படும் என்பதால் நஜ்ரானில் இஸ்லாம் பரவியுள்ளது என்பதை அறிய முடிகிறது. (ஃபத்ஹுல் பாரி, ஜாதுல் மஆது)

13) பனூ ஹனீஃபா குழுவினர்

இக்கிளையைச் சார்ந்த பதினேழு நபர்கள் ஹிஜ்ரி 9ம் ஆண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். இவர்களில் பொய்யன் முஸைலமாவும் ஒருவன். இவனது முழுப்பெயர் முஸைலமா இப்னு ஸுமாமா இப்னு கபீர் இப்னு ஹபீப் இப்னு ஹாரிஸ் என்பதாகும். (ஃபத்ஹுல் பாரி)

இக்குழுவினர் அன்சாரி ஒருவர் வீட்டில் தங்கி, அங்கிருந்து நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க வந்தனர் அனைவரும் இஸ்லாமைத் தழுவினர். ஆனால், முஸைலமா நபியை ஏற்று நம்பிக்கை கொண்டானா? இல்லையா? என்பதைப் பற்றி மட்டும் பலவிதமான கருத்துகள் உள்ளன. இவற்றை ஆராய்ந்தால் கீழ்காணும் முடிவுக்கு வரலாம்:

இவனிடம் பதவி மோகமும் அகம்பாவமும் இருந்ததால், குழுவுடன் வந்து நபி (ஸல்) அவர்களைச் சந்திக்காமல் தனியாக சந்தித்தான். இவனைத் தங்களது நேசனாக மாற்ற நபி (ஸல்) சொல்லாலும் செயலாலும் அழகிய முறையில் நடந்து கொண்டார்கள். அது எவ்விதப் பலனையும் தராததால் அவனிடம் கடுமையாக நடந்து கொண்டார்கள்.

இந்நிகழ்ச்சிக்கு முன்பு நபி (ஸல்) ஒரு கனவு கண்டிருந்தார்கள். அதில் பூமியில் உள்ள பொக்கிஷங்கள் எல்லாம் கொண்டு வரப்பட்டு, அதிலிருந்து தங்கக் காப்புகள் இரண்டு தங்களது கைக்குள் வருவதாக பார்த்தார்கள். இது அவர்களுக்கு மனவருத்தத்தை அளித்தது. மறைவில் இருந்து ‘‘அவ்விரண்டையும் ஊதி விடுங்கள்’’ என அறிவிக்கப்படவே நபி (ஸல்) ஊதிவிட்டார்கள். அது காணாமல் போய்விட்டது. தனக்குப் பின் இரண்டு பொய்யர்கள் வருவார்கள் என இக்கனவுக்கு விளக்கம் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களிடம் முஸைலமா கண்ணியக்குறைவாக நடந்து கொண்டு, ‘‘முஹம்மது தனக்குப் பின் அதிகாரத்தை எனக்கு வழங்கினால் அவரை ஏற்றுக் கொள்வேன்’’ என்று கூறி வந்தான். நபி (ஸல்) கரத்தில் ஒரு பேரீத்த மர மட்டையுடன், ‘‘அவன் இருந்த இடத்திற்குச் சென்றார்கள். ஸாபித் இப்னு கைஸ் இப்னு ஷம்மாஸ் என்பவரும் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தார். நபி (ஸல்) முஸைலமாவிடம் சிறிது நேரம் உரையாடினார்கள். அப்போது அவன் ‘‘நீங்கள் விரும்பினால் இப்போது அதிகாரங்களை தங்களுக்கு விட்டுத் தருகிறோம். உங்களுக்குப் பிறகு எல்லா அதிகாரங்களையும் எங்களுக்கு நீங்கள் வழங்கிட வேண்டும்’’ என்றான். ‘‘சின்ன மட்டைத் துண்டைக் கூட நீ கேட்டால் நான் தரமாட்டேன். உன் விஷயத்தில் அல்லாஹ்வின் கட்டளையை நீ மீறிவிட முடியாது. இதே நிலையில் நீ திரும்பினால் அல்லாஹ் உன்னைக் கொன்று விடுவான். எனக்குக் கனவில் காட்டப்பட்டது நிச்சயமாக நீதான் என்று சத்தியமாக எண்ணுகிறேன். இதோ! ஸாபித் என் சார்பாக உனக்கு பதில் தருவார்’’ எனக் கூறிவிட்டு நபி (ஸல்) திரும்பி விட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஃபத்ஹுல் பாரி)

இறுதியாக, நபி (ஸல்) எதிர்பார்த்ததே நடந்தது. முஸைலமா யமாமா திரும்பிய பின் ‘‘தன்னையும் நபி (ஸல்) தூதுத்துவத்தில் கூட்டாக்கிக் கொண்டார்கள்’’ என்று கூறி தனது வாதங்களை அடுக்கு மொழிகளினாலும் வசனங்களினாலும் மக்கள் மத்தியில் பரப்பினான்.

தம் கூட்டத்தாருக்கு மது அருந்துவது, விபச்சாரம் புரிவது இரண்டையும் ஆகுமானதாக்கினான். இவ்வாறான நிலையில் முஹம்மதை நபியாகவும் ஏற்றிருந்தான். அவனது கூட்டத்தினர் அவனையே பின்பற்றினர். அவன் மக்களிடம் மிகப் பிரபலமானான். மக்கள் அவனை ''ரஹ்மானுல் யமாமா'' (யமாமாவின் இறைவன்) என்று பெயர் சூட்டி அழைத்தனர்.

நானும் உங்களுடன் அதிகாரத்தில் கூட்டாக இருக்கிறேன். அதிகாரம் எங்களுக்குப் பாதி, குறைஷிகளுக்குப் பாதி என்று நபி (ஸல்) அவர்களுக்குக் கடிதம் எழுதினான். அதற்கு ''நிச்சயமாக இந்தப் பூமி அல்லாஹ்வுக்குச் சொந்தமானது அவனது அடியார்களில் நாடியவர்களை அதற்கு வாரிசாக்குகிறான். நல்ல முடிவு இறையச்சமுள்ளவர்களுக்குத்தான்'' என்று நபி (ஸல்) அவர்கள் மறுப்புக் கடிதம் எழுதினார்கள். (ஜாதுல் மஆது)

இந்நிகழ்ச்சிக்குப்பின் நடந்ததை இப்னு மஸ்வூத் (ரழி) விவரிக்கிறார்கள்: இப்னு நவ்வாஹா, இப்னு உஸால் என்ற முஸைலமாவின் இரண்டு தூதர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். ''நான் அல்லாஹ்வின் தூதர் என்று உள்ளத்தால் உறுதி கொண்டு நாவால் மொழிகிறீர்களா?'' என நபி (ஸல்) கேட்க, நாங்கள் ''முஸைலமாவையே அல்லாஹ்வின் தூதர் என்று ஏற்றுக் கொள்கிறோம்'' என அவ்விருவரும் கூறினர். ''நான் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்புகிறேன். தூதுவர்களை கொல்லும் வழக்கம் எனக்கு இருந்தால் உங்களிருவரையும் கொன்றிருப்பேன்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். (முஸ்னது அஹ்மது, மிஷ்காத்)

இவன் ஹிஜ்ரி 10ஆம் ஆண்டு தன்னை நபியென்று வாதிட்டான். நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின்பு அபூபக்ர் (ரழி) அவர்கள் இவனையும் இவனது தோழர்களையும் ஒழிப்பதற்காக யமாமா நோக்கி ஒரு படையை அனுப்பினார்கள். அப்படையில் ஹம்ஜா (ரழி) அவர்களைக் கொன்ற வஹ்ஷி (ரழி) இடம் பெற்றிருந்தார். அவர்தான் பொய்யன் முஸைலமாவைக் கொன்றொழித்தார்.

நபியென்று தன்னை வாதிட்ட மற்றொருவன் 'அஸ்வத் அனஸி''. இவனும் யமன் வாசியே! இவனைக் கொல்வதற்காக நபி (ஸல்) 'ஃபைரோஸ்' (ரழி) என்ற தனது தோழர் ஒருவரை அனுப்பினார்கள். அவனது தலையை அவர் கொய்து எடுத்துக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டார். இந்நிகழ்ச்சி நபி (ஸல்) மரணத்திற்கு ஒருநாள் முன்பு நடைபெற்றது. அல்லாஹ் இச்செய்தியை வஹி மூலமாக நபி (ஸல்) அவர்களுக்கு அறிவித்துத் தந்துவிட்டான். நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின் அபூபக்ர் (ரழி) கலீஃபாவான போது ஃபைரோஸ் (ரழி) மதீனா வந்தடைந்தார். (ஃபத்ஹுல் பாரி)

14) பனூ ஆமிர் இப்னு சஃஃசஆ குழுவினர்

இக்குழுவினல் அல்லாஹ்வின் எதிரி ஆமிர் இப்னு துஃபைல் என்பவனும் லபீதின் தாய்வழிச் சகோதரன் அர்பத் இப்னு கைஸ், காலித் இப்னு ஜஅஃபர், ஜப்பார் இப்னு அஸ்லம் ஆகியோரும் இருந்தனர். இவர்கள் இக்கூட்டத்தின் தலைவர்களாகவும், அதே சமயம் விஷமிகளாகவும் இருந்தனர். இதிலுள்ள ஆமிர் என்பவன்தான் நபித்தோழர்களை மோசடி செய்து (பிஃர்) 'மஊனா' என்ற கிணற்றருகே கொலை செய்தவன்.

இக்குழுவினர் மதீனா வரும் வழியில் அவர்களில் ஆமிரும் அர்பதும் நபி (ஸல்) அவர்களைக் கொல்வதற்குச் சதித்திட்டம் தீட்டினர். இக்குழுவினர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். ஆமிர் பேச்சுக் கொடுத்தான். அர்பத் நபி (ஸல்) அவர்களைக் கொல்வதற்குப் பின்புறமாகச் சென்றான். ஒரு சாண் அளவு அவன் வாளை உருவுவதற்குள் அல்லாஹ் அவனது கையை தடுத்து விட்டான். அவனால் அடுத்து வாளை உருவ முடியவில்லை. அல்லாஹ் தனது நபியவர்களை பாதுகாத்துக் கொண்டான்.

இவ்விருவரின் சதித்திட்டம் தெரிந்த நபி (ஸல்) அவர்கள் அவ்விருவருக்கும் எதிராக துஆச் செய்தார்கள். இவ்விருவரும் செல்லும் வழியில் ஓர் இடியை அல்லாஹ் ஏவினான். அது அர்பதையும் அவனது ஒட்டகத்தையும் எரித்து நாசமாக்கியது. நண்பன் அர்பத் செத்தபின்பு ஆமிர், சலூலியாப் பெண்ணுடன் இரவு தங்கினான். அவனது கழுத்தில் ஒரு கொப்புளத்தை அல்லாஹ் ஏற்படுத்தினான் அதுவே அவனது மரணத்திற்குக் காரணமானது. "ஒட்டகக் கொப்புளமா? சலூலியா வீட்டில் மரணமா?" என ஓலமிட்டவனாக, "வேண்டாம் வேண்டாம். என்னை இங்கிருந்து கிளப்புங்கள். எனது குதிரையைக் கொண்டு வாருங்கள்" என்றான். மதீனாவிலிருந்து தனது ஊருக்கு குதிரையில் போய்க் கொண்டிருக்கும் போதே செத்து வீழ்ந்தான்.

இந்நிகழ்ச்சி பற்றி ஸஹீஹுல் புகாரியில் வருவதாவது: ஆமிர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து மூன்று விஷயங்களில் ஒன்றை நீங்கள் தேர்வு செய்து கொள்ளுங்கள். "குடிசை வீடுகளில் உள்ளவர்கள் உங்களுக்கு, மாடி வீடுகளில் உள்ளவர்கள் எனக்கு. அதாவது, ஏழைகளை நீங்கள் ஆதிக்கம் செலுத்தலாம், பணக்காரர்களை நான் ஆதிக்கம் செலுத்துவேன். அல்லது உங்களுக்குப் பின் நானே ஆளுநராக இருப்பேன். அல்லது ஆயிரம் ஆண் குதிரை, ஆயிரம் பெண் குதிரைகளில் கத்ஃபான் கிளையினரை அழைத்து வந்து உன்னிடம் போர் புவேன்." அவன் இவ்வாறு கூறிவிட்டு திரும்பும் வழியில் ஒரு பெண்ணின் வீட்டில் தங்கியிருந்த போது அம்மை நோயால் தாக்கப்பட்டு "ஒட்டக கொப்பளமா? இன்னவள் வீட்டில் மரணமா?" என்று அலறினான். பிறகு தனது குதிரையை வரவழைத்து அதில் ஏறி வாகனித்துச் செல்லும் போது செத்து மடிந்தான்.

15) துஜீப் குழுவினர்

இக்குழுவினர் ஜகாத் பொருட்களை தங்களிலுள்ள ஏழை எளியோருக்குப் பங்கிட்டு வழங்கிய பின்பு மீதமானதை எடுத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். நபி (ஸல்) அவர்களிடம் தங்கி குர்ஆனையும் மார்க்கக் கல்வியையும் கற்றனர். மேலும், பல விஷயங்கள் குறித்து கேட்டனர். நபி (ஸல்) அவற்றை அவர்களுக்கு எழுதிக் கொடுக்கும்படி தோழர்களிடம் சொன்னார்கள். நீண்ட நாட்கள் தங்கியிருக்க முடியாமல் திரும்பிச் செல்ல அனுமதி கேட்டனர். அவர்கள் புறப்படும் போது அவர்களிலுள்ள அடிமை நபி (ஸல்) அவர்களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் என்னை மன்னித்து என் மீது கருணை காட்டி உள்ளத்தால் சீமானாக்க வேண்டும் என்று எனக்காக அல்லாஹ்விடம் நீங்கள் துஆக் கேட்குமாறு கோருவதற்காகவே நான் இங்கு வந்தேன்" என்றார். நபி (ஸல்) அவர்களும் அவ்வாறே அவருக்கு துஆச் செய்தார்கள்.

அல்லாஹ் தனது தூதரின் துஆவை அப்படியே ஏற்றுக் கொண்டான். நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின் குழப்பங்கள் அதிகமாகி மக்கள் மார்க்கத்தை விட்டு மதம் மாறும் அபாயம் ஏற்பட்ட போது இவரும் இஸ்லாமில் உறுதியாக இருந்து, தமது கூட்டத்தாருக்கு இவர் வழங்கிய அறிவுரையால் அவர்களும் இஸ்லாமில் நிலையாக இருந்தனர். இவர் தனது கூட்டத்தாரிலேயே மிக அதிகமாக போதுமென்ற குணம் கொண்டிருந்தார். இக்குழுவினர் ஹஜ்ஜத்துல் விதாவில் (ஹிஜ்ரி பத்து) நபியவர்களின் இறுதி ஹஜ்ஜில் இரண்டாம் முறையாக நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தனர்.

16) தய் குழுவினர்

இக்குழுவில் ஜைது அல்கைல் என்பவரும் இருந்தார். இக்குழுவினர் வந்த போது நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமிய மார்க்கத்தை அழகிய முறையில் எடுத்துக் கூற, அனைவரும் முஸ்லிமானார்கள். "ஒருவரைப் பற்றி என்னிடம் உயர்வாகப் பேசப்படும். ஆனால், அவர் என்னை நேரடியாகக் காணும் போது பேசப்பட்டதை விட குறைவாகவே அவரைப் பார்த்திருக்கிறேன். எனினும், ஜைதைப் பற்றி என்னிடம் உயர்வாகப் பேசப்பட்டது.

என்றாலும் ஜைதை நேரடியாகக் காணும் போது அவரைப் பற்றி கூறப்பட்டது எனக்குக் குறைவாகவே பட்டது. எனவே, ‘‘ஜைது அல் கைர் - சிறந்த ஜைது என நான் பெயரிடுகிறேன்’’ என்று நபி (ஸல்) கூறினார்கள்.

இவ்வாறு பல குழுக்கள் மதீனா வந்து நபி (ஸல்) அவர்களைச் சந்தித்துச் சென்றுள்ளனர். வரலாற்றாசிரியர்கள் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்த பல குழுக்களை குறிப்பிட்டுள்ளனர். அக்குழுக்களின் பெயர்களை மட்டும் இங்குக் குறிப்பிடுவோம்.

1) யமன் நாட்டு குழுக்கள், 2) அஜ்து, 3) பனூ ஸஅத் ஹுதைம், 4) பனூ ஆமிர், 5) பனூ அஸத், 6) பஹ்ரா, 7) கவ்லான், 8) முஹாப், 9) பனூ ஹாரிஸ் இப்னு கஅப், 10) காமித் 11) பனூல் முன்தஃபிக், 12) சலாமான், 13) பனூ அப்ஸ், 14) முஜைனா, 15) முராத், 16) ஜுபைத், 17) கிந்தா, 18) தூ முர்ரா, 19) கஸ்ஸான், 20) பனூ ஈஷ், 21) நகஃ. இந்த குழுவினர் ஜி 11ல் முஹர்ரம் மாதம் நடுவில் வந்தனர். இக்குழுவில் 200 நபர்கள் இருந்தனர். இதுவே நபி (ஸல்) அவர்களைச் சந்தித்த குழுக்களில் இறுதியானக் குழுவாகும்.

மேற்கூறிய குழுக்களில் பெரும்பாலானவை ஹிஜ்ரி 9,10-ல் வந்தவை. சில குழுக்கள் மட்டும் 11ல் வந்தன. இவ்வாறு பல குழுக்கள் அதிகமதிகம் மதீனா நோக்கி வருகை தந்தது, இஸ்லாமிய அழைப்புப் பணி பெற்ற வெற்றியையும் இஸ்லாம் அரபியத் தீப கற்பத்தில் முழுமையான முறையில் வேரூன்றி விட்டதையும் அரபிகள் மதீனாவை உயர்ந்த பார்வையில் பார்த்தனர் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. இஸ்லாமுக்கு முன் பணிந்து போவதைத் தவிர வேறு வழி இல்லை என்று அவர்கள் அறிந்து கொண்டனர். சுருக்கமாகச் சொன்னால் முழு அரபியத் தீபகற்பத்திற்கும் மதீனாவே தலைநகராக மாறியது. அதனைப் புறக்கணிக்க முடியாத சூழ்நிலை உண்டானது. இவ்வாறெல்லாம் இருந்தும் புதிதாக இஸ்லாமை ஏற்ற அனைவரின் உள்ளங்களிலும் மார்க்கம் உறுதி பெற்றிருந்தது என நாம் கூற முடியாது. காரணம், புதிதாக இஸ்லாமைத் தழுவியவர்களில் பெரும்பாலோர் முரட்டுக் குணங்கொண்ட கிராமவாசிகளாக இருந்தனர். இவர்கள் இஸ்லாமை ஏற்றது தங்களது தலைவர்கள் முஸ்லிமாகி விட்டார்கள் என்ற காரணத்தினால்தான். இவர்கள் முஸ்லிமாக மாறிய பின்பும் கொள்ளையடிப்பது போன்ற குற்றச் செயல்களிலிருந்து முழுமையாக விடுபடவில்லை. இஸ்லாமிய அறிவுரைகள் மூலம் சீராக வேண்டிய அளவு அவர்கள் தங்களைச் சீர்செய்து கொள்ளவில்லை.

எனவே, இவர்களில் சிலரைப் பற்றி அல்லாஹ் கூறுகிறான்:

நிராகரிப்பிலும் வஞ்சகத்திலும் கிராமத்து அரபிகள் மிகக் கொடியவர்கள். அன்றி அல்லாஹ் தன் தூதர் மீது அருளியிருக்கும் (வேத) வரம்புகளை அறிந்து கொள்ளவும் வசதியற்றவர்கள். அல்லாஹ் (அனைத்தையும்) நன்கறிந்தவனாகவும், மிக்க ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.

(கல்வி ஞானமற்ற) கிராமத்து அரபிகளில் பலர் இருக்கின்றனர். அவர்கள் (தர்மத் திற்காகச்) செய்யும் செலவை நஷ்டம் என்று கருதி, நீங்கள் (காலச்) சக்கரத்தில் சிக்கி (கஷ்டத்திற்குள்ளாகி) விடுவதை எதிர்பார்க்கின்றனர். எனினும், அவர்கள் (தலை) மீதுதான் வேதனையின் சக்கரம் சுற்றிக் கொண்டு இருக்கிறது. அல்லாஹ் செவியுறுபவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 9:97, 98)

மற்றும் சிலரை அல்லாஹ் புகழவும் செய்கிறான்:

அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பிக்கை கொண்ட (நாட்டுப் புறத்து) அரபிகளில் பலர் இருக்கின்றனர். அவர்கள், தாங்கள் செய்யும் தானங்களை அல்லாஹ்விடம் தங்களை நெருக்கமாக்கி வைக்கும் வணக்கங்களாகவும், (அவனுடைய) தூதரின் பிரார்த்தனைகளுக்கு வழியாகவும் எடுத்துக் கொள்கின்றனர். நிச்சயமாக அது அவர்களை (அல்லாஹ்வுக்கு)ச்

சமீபமாக்கும் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள். அல்லாஹ் அவர்களை அதிசீக்கிரத்தில் தன் அன்பிலும் புகுத்துவான். நிச்சயமாக அல்லாஹ் பிழை பொறுத்துக் கிருபை செய்பவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் 9:99)

மறுபுறம் மக்காவாசிகள், மதீனாவாசிகள், ஸகீஃப் கிளையினர், யமன், பஹ்ரைனில் இருந்த பெரும்பாலானவர்கள் மார்க்கத்தில் உறுதி வாய்ந்தவர்களாகத் திகழ்ந்தனர். மூத்த நபித்தோழர்களும், சிறந்த முஸ்லிம்களும் இதில் உள்ளவர்களே! (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது, ஃபத்ஹுல் பாரி)

## அழைப்புப் பணியின் வெற்றிகளும் அதன் தாக்கங்களும்

நபி (ஸல்) அவர்களின் இறுதி காலக் கட்டத்தைப் பற்றி நாம் அறிவதற்கு முன் இதுநாள் வரை அவர்கள் புரிந்த செயல்பாடுகள், ஆற்றிய பணிகள் பற்றி சுருக்கமாகக் கூறுவது நல்லது. அதற்குக் காரணம், இச்செயல்பாடுகள்தான் நபி (ஸல்) வாழ்க்கையின் இதயப் பகுதியாகும். இதனால்தான் ஏனைய இறைத்தூதர்களிலிருந்து நமது நபி (ஸல்) தனிச் சிறப்புற்று விளங்குகிறார்கள். அல்லாஹ் அவர்களுக்கு “முன்னோர்கள் மற்றும் பின்னோர்களின் தலைவர்” என்று மகுடம் சூட்டியிருப்பதற்கும் காரணம் இதுதான்.

(நபியே!) போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே! இரவில் நீங்கள் (தொழுகைக் காக எழுந்து) நில்லுங்கள். (முழு இரவிலுமல்ல அதிலொரு) சொற்ப பாகம். (அல்குர்ஆன் 73:1, 2)

(வஹியின் அதிர்ச்சியால்) போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே! நீங்கள் எழுந்து நின்று (மனிதர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுங்கள் (அல்குர்ஆன் 74:1, 2)

என்று அல்லாஹ் கூறியதுதான் தாமதம்.

நபி (ஸல்) எழுந்தார்கள், நின்றார்கள்... இருபது ஆண்டுகளுக்கு மேலாக நின்றார்கள். இப்புவியில் மாபெரும் அமானிதச் சுமையை... தங்களது தோளில் சுமந்தவர்களாக நின்றார்கள்... முழு மனித சமுதாயச் சுமையை... கொள்கைச் சுமையை... பல துறைகளில் போராட்டச் சுமையை... சுமந்து நின்றார்கள்... மடமை இருள்களிலும் வழிகேடுகளிலும் மூழ்கிப்போன மனித இதயத்தை... மீட்க எழுந்து நின்றார்கள்... அற்ப ஆசைகளின் பிடியிலும், மன இச்சை சிறைகளிலும், சிக்குண்டிருக்கும் உள்ளங்களை மீட்கும் போராட்டங்களுக்காக நின்றார்கள்... ஆம்! ஒரு நேரத்தில் தங்களுக்கென உன்னதத் தோழர்களை வார்த்தெடுத்தார்கள்... அறியாமை அழுக்குகளிலிருந்தும் அற்ப உலக ஆசைகளில் இருந்தும் அவர்களின் உள்ளங்களை புடம் போட்டத் தங்கமாக மாற்றினார்கள்.

அடுத்து சில சோதனைகள்... போர்கள்... ஒன்றா?... இரண்டா?... தொடர்ந்த சங்கிலிகளைப் போன்று போர்களே போர்கள்! அல்லாஹ்வின் எதிரிகளுடன்... எதிரிகளா அவர்கள்?... கல் நெஞ்சம் கொண்ட அநியாயக்காரர்கள்... இஸ்லாமிய அழைப்புப் பணியை அழிக்க... இறை நேசர்களை ஒழிக்க... இஸ்லாமிய இளஞ்செடி பூமியில் வேரூன்றி... வானளாவ அதன் கிளைகள் உயர்ந்து... அதன் நிழல்கள் உலகை வியாபிப்பதற்கு முன்பாக... அதைக் கிள்ளி எறிய நப்பாசைக் கொண்டவர்கள்! எதிரிகளுடன் ஓயாத ஒழியாத போர் ஒருபுறம்! உள்ளத்துடன் உக்கிரமான போர் மறுபுறம்! உள்ளத்துடன் போர் நிரந்தரம்!... என்றுமே அது ஷைத்தானுடன் நடைபெறும்!... உள்ளத்தின் ஆழங்களில் ஊசலாட்டத்தை ஊடுருவச் செய்து மனிதனை வழிகெடுக்க வேண்டும்! அவனது நேர்வழிப் பயணத்தைத் திசை திருப்ப வேண்டும் என்பதற்காக ஒரு கணமும் ஷைத்தான் அயர்வதில்லை... உள்ளத்தின் போர் என்பது அவனுடன் செய்யும் போரே!

இந்த இடுபாடுகள் நிறைந்த எல்லா சூழ்நிலைகளிலும் அல்லாஹ்வின் அழைப்பை எட்டச் செய்வதற்காக நபி (ஸல்) நின்றார்கள். தொடர்ந்தாற்போல் ஒன்றன்பின் ஒன்றாய்...

கோணங்கள் மாறுபட்ட பல போர்களை எதிர்கொள்ள நபி (ஸல்) நின்றார்கள். தங்களை நோக்கி வந்த உலகைக் கடைக் கண்ணாலும் பாராமல் சிரமத்திலும் துன்பத்திலும், நெருக்கடியான நிலையிலும் நிலைகுலையாது நின்றார்கள்… நின்ற நபியின் நிழலிலே… விசுவாசிகள் சுகத்தையும் நிம்மதியையும் சுவாசித்தார்கள்… முடிவுபெறா சிரமங்கள் தொடர்ந்தாலும்… அழகிய பொறுமையுடன் இரவில் நின்று… ஏக இறைவனை வணங்குவதுடன்… அருள்மறை குர்ஆனை ஓதுவதுடன்… அல்லாஹ் ஒருவனையே சார்ந்திருந்து… இறை ஆணையை நிறைவேற்ற நின்றார்கள்… (ழிலாலுல் குர்ஆன்)

இருபது ஆண்டுகளுக்கு மேலாக இறைப் பணியில் கவனம் சிதறாமல் தொடர் போராட்டத்தில் எதிர் நீச்சல் போட்டு, இஸ்லாமிய அழைப்புப் பணிக்கு வெற்றி தேடித் தந்தார்கள்… அந்த வெற்றிக்கு அரபுலகம் பணிந்தது! அறியாமை இருள் அகன்றது! பிணிகொண்ட அறிவுகள் சீர்பெற்றன! இதனால் சிலைகளை விட்டு விலகியது மட்டுமல்ல அதனை உடைத்து தவிடு பொடியாக்கினார்கள். அவர்களின் ஏகத்துவ முழக்கம் விண்ணுலகை எட்டியது. இறை வணக்கத்திற்கான பாங்கொலி விண்ணின் செவிகளைப் பிளந்தன. புதிய நம்பிக்கையால் உயிர்பெற்று எழுந்த அழைப்புப் பணி (ஏகத்துவ முழக்கம்) வறண்ட பாலைவனங்களை ஊடுருவிச் சென்றன.

நாலாத் திசைகளிலும் குர்ஆனை கற்றுத் தேர்ந்த அறிஞர்கள் பரவிச் சென்று இறைவேதத்தை ஓதிக் காண்பித்து, அவனது சட்டங்களை நிலை நிறுத்தினார்கள். பிரிந்து கிடந்த வம்சங்களும் சமூகங்களும் ஒன்றாயின. மனிதன் மனிதனை வணங்குவதிலிருந்து விடுபட்டு… அல்லாஹ்வை வணங்க முற்பட்டான். அநியாயக்காரன்-அநீதியிழைக்கப்பட்டவன், அரசன்-ஆண்டி, எஜமான்-அடிமை என்ற பாகுபாடுகள் நீங்கின. மக்கள் அனைவரும் அல்லாஹ்வின் அடிமைகளே அனைவரும் தங்களுக்குள் சகோதரர்கள் ஒருவருக்கொருவர் நேசித்துக் கொள்ள வேண்டும் இறைக் கட்டளைக்கு ஒவ்வொருவரும் அடிபணிய வேண்டும் என்ற சூழ்நிலை உருவானது. அறியாமைக் கால கர்வம், முன்னோர்களைக் கூறி பெருமையடிப்பது, இனவெறி கொள்வது அனைத்தையும் விட்டு அல்லாஹ் இவர்களை தூரமாக்கினான்.

இறையச்சத்தைத் தவிர வேறெந்த வகைளிலும் ஓர் அரபியருக்கு அரபியல்லாதவரை விட, ஓர் அரபியல்லாதவருக்கு அரபியரை விட, ஒரு வெள்ளையருக்கு கருப்பரை விட, ஒரு கருப்பருக்கு வெள்ளையரை விட எவ்விதச் சிறப்பும் மேன்மையும் இல்லாமல் போனது. மக்கள் எல்லோரும் ஆதமின் மக்களே! ஆதமோ மண்ணால் படைக்கப்பட்டவர் என்ற உண்மை உள்ளத்தில் பதிய வைக்கப்பட்டது. இறுதியாக இந்த அழைப்புப் பணியின் சிறப்பால் முழு மனித சமுதாயம், சமூகம் அரசியல் என அனைத்தாலும் ஒன்றுபட்டது. இம்மை மறுமை பிரச்சனைகளில் மானுடம் ஈடேற்றம் கண்டது. காலங்கள் மாறி புதிய உலகம் தோன்றிது. புதிய வரலாறு உருவானது. புதிய சிந்தனை எழுந்தது.

இஸ்லாமிய அழைப்புப் பணி தோன்றுவதற்கு முன்னதாக உலகை அறியாமை ஆட்சி செய்தது. மனித உள்ளங்கள் சீர்கெட்டு பண்பாடின்றி இருந்தன. நன்மை தீமைகளின் அளவு கோல்கள் கோளாறாயிருந்தன. அநியாயம் புரிதலும் அடிமைபடுத்துதலும் சமுதாயத்தில் பரவி இருந்தன. ஒருபுறம் சிலர் வரம்பு மீறிய செல்வத்தில் கொழிக்க, மறுபுறம் ஏழைகள் வறுமையில் வாடினர்.

எத்தனையோ முந்திய மார்க்கங்கள் இருந்தன. ஆனால், அவற்றில் குளறுபடிகளும், குழப்பங்களும், பலவீனங்களும் வேரூன்றி விட்டதால், மனித இதயங்களை அவை ஆட்சி செலுத்த முடியவில்லை. அவை உயிரற்ற, உணர்ச்சியற்ற, இறுகிப்போன சடங்குகளாகவே மாறிவிட்டன. இதனால் மனிதர்களை இறைநிராகரிப்பும் வழிகேடுகளும் சூழ்ந்திருந்தன. இஸ்லாமிய அழைப்புப் பணி, மனித சமுதாயத்திற்குச் செய்ய வேண்டிய பணிகளைச் சிறப்பாக செவ்வனே செய்தது கற்பனை, வீண் குழப்பங்கள், பிறருக்கு அடிமையாகுதல்,

விஷமம், கலகம், கெட்ட குணங்கள், ஒழுக்கக் கேடுகள் ஆகியவற்றிலிருந்து மனித உயிரை தூய்மைப்படுத்தியது.

அநியாயம், அட்டூழியம், அத்துமீறல், பிரிந்து சிதறி ஒற்றுமையின்றி வாழுதல், நிற, இன பேதங்கள் பாராட்டுதல், அதிகாரிகளின் அடக்குமுறைக்கு ஆளாகுதல், குறிகாரர்கள், ஜோசியர்களால் இழிவடைதல் ஆகிய அனைத்திலிருந்தும் இஸ்லாமிய அழைப்புப் பணி மனித சமுதாயத்தைக் காப்பாற்றியது. ஒழுக்கம், கட்டுப்பாடு, அக, புற தூய்மை, முழு சுதந்திரம், புதுமை, கல்வியறிவு, தெளிவு, உறுதி, பிடிப்பு, இறை நம்பிக்கை, மனித நேயம், வாழ்க்கையை வளப்படுத்த, மேம்படுத்த, உயர்வாக்கத் தொடர்ந்து முயற்சித்தல், அவரவர் உரிமையைக் கொடுத்தல் என்ற உறுதிமிக்க அஸ்திவாரத் தூண்களின் மீது மனித சமுதாயக் கட்டடத்தை இஸ்லாம் நிறுவியது. இதுவரை கண்டிராத வளமிக்க எழுச்சிகளையும், மாற்றங்களையும் இந்த அழைப்புப் பணியின் முன்னேற்றத்தால் அரபுலகம் அடைந்தது. தனது வாழ்க்கை வரலாற்றில் என்றுமே கண்டிராத ஒளி வெள்ளத்தை இந்நாட்களில் அரபுலகம் கண்டது.

## ஹஜ்ஜத்துல் விதா

அழைப்புப் பணிகள் நிறைவுற்றன. இறைத்தூது உலகின் முன் வைக்கப்பட்டது. ‘‘லாஇலாஹஇல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் - வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை, முஹம்மது நபி (ஸல்) அல்லாஹ்வுடைய தூதராக இருக்கின்றார்கள்’’ என்ற அஸ்திவாரத்தின் மீது புதிய சமூகம் செம்மையாக அமைந்தது. இத்தருணத்தில் நபி (ஸல்) அவர்களின் உள்மனம், தாம் உலகில் இருக்கும் காலங்கள் சொற்பமே என்ற மெல்லிய ஒலிக்கீற்றை ஒலித்துக் கொண்டிருந்தது. ஆம்! அவ்வாறுதான், நபி (ஸல்) ஹிஜ்ரி 10ம் ஆண்டு யமன் தேசத்துக்கு முஆத் (ரழி) அவர்களை அனுப்பும் போது கூறிய பொன்மொழிகள் ஞாபகம் இருக்கலாம்.

‘‘அநேகமாக இந்த ஆண்டிற்குப் பின் என்னை சந்திக்கமாட்டாய் முஆதே! இந்த பள்ளிக்கும் எனது மண்ணறைக்கும் அருகில்தான் நீ செல்வாய்.’’ நபி (ஸல்) அவர்களின் இந்த சொற்களால் நபி (ஸல்) அவர்களை நாம் பிரியப் போகிறோம் என்ற வருத்தத்தால் முஆது (ரழி) கண் கலங்கினார்கள். அல்லாஹ் தனது தூதருக்கு அவர்கள் செய்த அழைப்புப் பணியின் பலன்களை காட்ட நாடினான். இந்த அழைப்புப் பணிக்காகவே இருபது ஆண்டுகளுக்கு மேலாக பலவகை சிரமங்களைச் சகித்தார்கள்.

மக்காவிலும் அதன் ஓரங்களிலும் வாழ்கின்ற அரபிய வமிசங்களும், அதன் முக்கிய பிரமுகர்களும் ஒன்று சேர்ந்து இஸ்லாமிய மார்க்கச் சட்டத் திட்டங்களை நபி (ஸல்) அவர்களிடம் இருந்து கற்றுக் கொள்ள வேண்டும் என்றும் நபி (ஸல்) அமானிதத்தை நிறைவேற்றினார்கள் தூதுத்துவத்தை முழுமையாக எத்திவைத்தார்கள் சமுதாயத்திற்கு நன்மையை விரும்பினார்கள் என்ற வாக்கை மக்களிடமிருந்து நபி (ஸல்) வாங்க வேண்டும் என்றும் அல்லாஹ் விரும்பினான். அல்லாஹ்வின் இந்த விருப்பத்திற்கேற்பவே கண்ணியமிக்க ஹஜ்ஜை நிறைவேற்ற மக்கா செல்லவிருக்கிறேன் என நபி (ஸல்) அறிவித்தார்கள். இதனைக் கேட்ட மக்கள் பல திசைகளில் இருந்தும் மதீனா வந்தனர். துல் கஅதா முடிய ஐந்து நாட்கள் இருக்கும் போது சனிக்கிழமை நபி (ஸல்) பயணம் மேற்கொண்டார்கள். (ஸஹீஹ் முஸ்லிம், ஃபத்ஹுல் பாரி)

தலையில் எண்ணெய் தடவி தலைவாரி, கீழாடையாக கைலியையும், மேலாடையாக போர்வையையும் அணிந்து கொண்டு, தனது ஒட்டகப் பிராணிக்கு மாலை அணிவித்தார்கள். ளுஹ்ர் தொழுகைக்குப் பிறகு புறப்பட்டு அஸ்ர் தொழுகைக்கு முன்பாக ‘துல் ஹுலைஃபா’ வந்தார்கள். அங்கு அஸ்ரை இரண்டு ரக்அத்தாக தொழுதுவிட்டு அங்கே அன்று முழுதும் தங்கி, மறுநாள் காலை ஸுப்ஹ் தொழுத பின்பு, தமது தோழர்களைப் பார்த்து, ‘‘அந்த

பரக்கத் (அருள் வளம்) பொருந்திய பள்ளத்தாக்கில் தொழுது, ‘‘ஹஜ்ஜுடன் சேர்த்து உம்ரா எனக் கூறுங்கள்’’ என என்னுடைய இறைவனிடமிருந்து வந்த ஒருவர் இன்றிரவு கூறிவிட்டுச் சென்றார் என்று அறிவித்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ளுஹ்ர் தொழுகைக்கு முன்பாக நபி (ஸல்) இஹ்ராமுக்காகக் குளித்துக் கொண்டார்கள். ஆயிஷா (ரழி) அவர்கள் தங்கள் கரங்களால் கஸ்தூரி கலந்த ஒரு நறுமணத்தையும் ‘தரீரா’ என்ற நறுமணத்தையும் நபி (ஸல்) அவர்களின் உடலிலும் தலையிலும் தடவினார்கள். அந்த நறுமணத்தின் மினுமினுப்பு நபி (ஸல்) அவர்களின் தலை வகிடுகளிலும் தாடியிலும் காணப்பட்டது. அந்த நறுமணத்தை அவர்கள் அகற்றவில்லை. பின்னர் வேறொரு கைலியையும் போர்வையினையும் அணிந்து கொண்டு ளுஹ்ரை இரண்டு ரக்அத்தாக தொழுதார்கள். தொழுத இடத்திலிருந்தே ஹஜ் உம்ரா இரண்டையும் சேர்த்து நிறைவேற்றுவதாக நிய்யத் செய்து கொண்டு ‘தல்பியா’ கூறினார்கள். தொழுகையை முடித்து வெளியேறி, கஸ்வா ஒட்டகத்தின் மீதேறி, மீண்டும் தல்பியா கூறினார்கள். பாலைவனங்களில் செல்லும் இடமெல்லாம் தல்பியா கூறினார்கள். இவ்வாறு கடந்து வந்து, மக்கா அருகில் ‘தூத்துவா’ என்ற இடத்தில் தங்கினார்கள். அங்கு ஸுப்ஹ் தொழுகையை முடித்துக் கொண்டு குளித்துவிட்டு மக்கா நோக்கி புறப்பட்டார்கள். அது ஹிஜ்ரி 10, துல்ஹஜ் பிறை 4, ஞாயிறு காலை நேரமாகும். ஆக, பயணத்தில் நபி (ஸல்) எட்டு நாட்கள் கழித்தார்கள். சங்கைமிக்க கஅபா வந்தபோது தவாஃப் செய்துவிட்டு ஸஃபா மர்வாவில் ஸயீ செய்தார்கள். ஆனால், இஹ்ராமைக் களையவில்லை. ஏனெனில், நபி (ஸல்) உம்ராவையும் ஹஜ்ஜையும் சேர்த்து நிறைவேற்றுவதற்காக தங்களுடன் குர்பானி பிராணியையும் அழைத்து வந்திருந்தார்கள். தவாஃபையும் ஸயீயையும் முடித்துக் கொண்டு கஅபாவிலிருந்து புறப்பட்டு மக்காவின் மேட்டுப் பகுதியிலுள்ள ‘ஹஜூன்’ என்ற இடத்தில் தங்கினார்கள். தவாப் செய்வதற்காக மீண்டும் நபி (ஸல்) அவர்கள் கஅபா வரவில்லை. பிறை 8 வரை அங்கேயே தங்கிவிட்டார்கள்.

தன்னுடன் குர்பானி பிராணியைக் கொண்டுவராத தோழர்களை உம்ரா முடித்துக் கொண்டு இஹ்ராமிலிருந்து வெளியேறும்படி உத்தரவிட்டார்கள். அதற்குத் தோழர்கள் தயங்கினர். அதைப் பார்த்து நபி (ஸல்) ‘‘நான் மீண்டும் ஒருமுறை இதுபோன்ற பயணத்தை நாடினால் என்னுடன் குர்பானி பிராணியைக் கொண்டு வரமாட்டேன். என்னுடன் இப்போது குர்பானி பிராணி இல்லை என்றால் நானும் இஹ்ராமைக் களைந்திருப்பேன்.’’ என்று கூறினார்கள்.

‘தர்வியா’ என்றழைக்கப்படும் துல்ஹஜ் பிறை 8ல் நபி (ஸல்) மினா நோக்கிப் புறப்பட்டார்கள். மினாவில் ளுஹ்ர், அஸ்ர், மஃரிப், இஷா, ஃபஜ்ர் என ஐந்து நேரத் தொழுகைகளைத் தொழுதார்கள். ஃபஜர் தொழுகைக்குப் பின் சூரியன் உதயமாகி சிறிது நேரத்திற்குப் பின் அரஃபா நோக்கி பயணமானார்கள். அரஃபாவில் ‘நமிரா’ என்ற இடத்தில் அவர்களுக்காக கூடாரம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அக்கூடாரத்தில் சூரியன் நடுப்பகலை தாண்டும் வரை தாமதித்திருந்தார்கள். நடுப்பகல் நேரம் தாண்டியவுடன் தனது கஸ்வா ஒட்டகத்தைத் தயார்படுத்தச் செய்து அதில் வாகனித்து ‘பத்னுல் வாதி’ என்ற இடத்திற்கு வந்தார்கள். அங்கு நபி (ஸல்) அவர்களைச் சுற்றி ஒரு இலட்சத்து இருபத்து நான்காயிரம் (1,24,000) அல்லது ஒரு இலட்சத்து நாற்பத்தி நான்காயிரம் (1,44,000) முஸ்லிம்கள் ஒன்று கூடியிருந்தனர். அவர்களுக்கு மத்தியில் நின்று கொண்டு நபி (ஸல்) உரையாற்றினார்கள்.

மக்களே! மிகக் கவனமாகக் கேளுங்கள். ஏனெனில், இந்த ஆண்டுக்குப் பிறகு இந்த இடத்தில் உங்களை நான் சந்திப்பேனா! என்று எனக்குத் தெரியாது.

மக்களே! இந்த (துல்ஹஜ்) மாதத்தையும், இந்த (பிறை 9ஆம்) நாளையும், இந்த (மக்கா) நகரையும் புனிதமாகக் கருதுவதுபோல் உங்களில் ஒருவர் மற்றவரின் உயிரையும் பொருளையும் மானத்தையும் புனிதமாகக் கருதுங்கள். ஒருவர் குற்றம் செய்தால் அக்குற்றத்தின் தண்டனை அவருக்கே வழங்கப்படும் அவரது உறவினருக்கு அல்ல. தந்தை தன் பிள்ளைக்கு அநியாயம் செய்ய வேண்டாம் பிள்ளையும் தன் தந்தைக்கு அநியாயம் செய்ய வேண்டாம். தந்தையின் குற்றத்திற்காகப் பிள்ளையை அல்லது பிள்ளையின் குற்றத்திற்காகத் தந்தையை தண்டிக்கப்பட மாட்டாது.

அறிந்துகொள்ளுங்கள்! அறியாமைக் காலத்தின் அனைத்து செயல்களையும் நான் எனது கால்களுக்குக் கீழ் புதைத்து அழித்து விட்டேன். அறியாமைக் காலக் கொலைகளுக்குப் பழி வாங்குவதை விட்டுவிட வேண்டும். முதலாவதாக, எங்கள் குடும்பத்தில் கொலை செய்யப்பட்ட ரபீஆ இப்னு ஹாரிஸின் மகனுக்காகப் பழிவாங்குவதை நான் விட்டு விடுகிறேன். அறியாமைக் கால வட்டியும் தள்ளுபடி செய்யப்பட்டது. முதலாவதாக நான் என் குடும்பத்தாரின் வட்டியிலிருந்து அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபுக்கு உரித்தான வட்டியை முழுமையாக தள்ளுபடி செய்கிறேன்.

பெண்கள் குறித்து அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். அல்லாஹ்வின் அமானிதமாக அவர்களை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். அவனது நாட்டப்படி அவர்களை நீங்கள் மனைவியராக ஏற்றிருக்கிறீர்கள். அவர்கள் உங்களுக்குச் செய்ய வேண்டிய கடமையாவது நீங்கள் விரும்பாதவர்களை உங்கள் இல்லத்துக்குள் அவர்கள் அனுமதிக்கக் கூடாது. மீறி அனுமதித்தால் காயம் ஏற்படாத வகையில் அடியுங்கள். நீங்கள் அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையாதெனில் நல்ல முறையில் அவர்களுக்கு உணவும் ஆடையும் அளிக்க வேண்டும்.

நான் உங்களிடம் விட்டுச் செல்வதை நீங்கள் உறுதியாகப் பின்பற்றினால் ஒருபோதும் வழி தவறமாட்டீர்கள். அதுதான் அல்லாஹ்வின் வேதமாகும்.

மக்களே! எனக்குப் பின் எந்தவொரு நபியும் (இறைத்தூதரும்) இல்லை. உங்களுக்குப் பின் எந்தவொரு சமுதாயமும் இல்லை. உங்களைப் படைத்துக் காப்பவனான அல்லாஹ்வையே வணங்குங்கள். உங்களுக்கு விதிக்கப்பட்ட ஐவேளைத் தொழுகையை நிறைவேற்றுங்கள். ரமழான் மாதத்தில் நோன்பு வையுங்கள். மனமுவந்து உங்கள் செல்வத்துக்கான ஜகாத்தை நிறைவேற்றுங்கள். உங்கள் இறைவனின் இல்லத்தை ஹஜ் செய்யுங்கள். உங்கள் தலைவர்களுக்குக் கட்டுப்படுங்கள். (மேற்கூறிய நற்செயல்களால்) இறைவன் உங்களுக்காகப் படைத்துள்ள சுவனத்தில் நுழைவீர்கள்.

உங்கள் இறைவனை அதிவிரைவில் நீங்கள் சந்திப்பீர்கள். அவன் உங்கள் செயல்களைப் பற்றி உங்களிடம் விசாரணை செய்வான். எனக்குப் பிறகு நீங்கள் உங்களுக்குள் கொலை குற்றம் புரிந்து வழிகேடர்களாக மாறிட வேண்டாம். அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக ஷைத்தான் உங்களது இந்த பூமியில் அவனை நீங்கள் வணங்குவதிலிருந்து முற்றிலும் நிராசையடைந்து விட்டான். எனினும், நீங்கள் மிக எளிதாகக் கருதும் செயல்களில் அல்லாஹ்வுக்கு மாறு செய்து ஷைத்தானுக்கு வழிப்படுவீர்கள். அதனால் அவனோ மகிழ்ச்சியடைவான்.

மக்களே! அறிந்து கொள்ளுங்கள். உங்கள் இறைவன் ஒருவனே. உங்கள் தந்தையும் ஒருவரே. இறையச்சத்தைத் தவிர வேறெந்த வகையிலும் ஓர் அரபியருக்கு அரபி

அல்லாதவரை விட, ஓர் அரபி அல்லாதவருக்கு அரபியரை விட, ஒரு வெள்ளையருக்கு கருப்பரை விட, ஒரு கருப்பருக்கு வெள்ளையரை விட எவ்விதச் சிறப்பும் மேன்மையும் இல்லை.

“மறுமையில் என்னைப் பற்றி உங்களிடம் விசாரிக்கும் போது நீங்கள் என்ன பதில் கூறுவீர்கள்?” என்று கேட்டார்கள்.

கூடியிருந்தோர் “நிச்சயமாக நீங்கள் எடுத்துரைத்தீர்கள் நிறைவேற்றினீர்கள் நன்மையையே நாடினீர்கள் என நாங்கள் சாட்சி கூறுவோம்” என்றார்கள்.

நபியவர்கள் தங்களது ஆட்காட்டி விரலை வானை நோக்கி உயர்த்தி, பின்பு மக்களை நோக்கித் திருப்பி “அல்லாஹ்! இதற்கு நீயே சாட்சி!” என்று மூன்று முறை கூறினார்கள். இங்கு வந்திருப்பவர்கள் அனைவரும் இங்கு வராத மற்றவர்களுக்கும் எடுத்துக் கூறுங்கள். ஏனெனில், செய்தியை கேள்விப்படுபவர்களில் சிலர் நேரடியாகக் கேட்பவர்களைவிட நன்கு விளக்கமுடையவர்களாக இருப்பார்கள். (ஸஹீஹ் முஸ்லிம், ஸுனனுத் திர்மிதி, முஸ்னது அஹ்மது, இப்னு ஜரீர், இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) ஒவ்வொன்றாகக் கூறியபோது அதை ரபிஆ இப்னு உமையா இப்னு கலஃப் (ரழி) மக்களுக்குச் சப்தமிட்டு எடுத்துரைத்தார்கள். (இப்னு ஹிஷாம்)

நபி (ஸல்) தங்களது உரையை முழுமையாக முடித்தபோது,

இன்றைய தினம் நாம் உங்களுக்கு உங்களுடைய மார்க்கத்தை முழுமையாக்கி வைத்து என்னுடைய அருளையும் உங்கள் மீது முழுமையாக்கி வைத்து விட்டோம். (அல்குர்ஆன் 5:3)

என்ற வசனம் இறங்கியது.

இந்த வசனத்தைக் கேட்ட உமர் (ரழி) கண் கலங்கினார்கள். நபி (ஸல்) “உமரே! நீங்கள் அழுவதற்கு காரணமென்ன?” என வினவினார்கள். “அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் ஒவ்வொரு நாளும் மார்க்கத்தை அதிகம் அதிகம் தெரிந்து கொண்டே வந்தோம். இப்போது மார்க்கம் முழுமையாக்கப்பட்டு விட்டது. முழுமையான ஒன்று மீண்டும் குறைய ஆரம்பித்து விடுமே என எண்ணி நான் அழுகிறேன்” என உமர் (ரழி) கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) “நீங்கள் உண்மைதான் கூறினீர்கள்” என்றார்கள். (இப்னு கஸீர், இப்னு ஜரீர், இப்னு அபீ ஷய்பா)

நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்கிணங்க பிலால் (ரழி) பாங்கு கூறி, பிறகு இகாமத் கூறினார்கள். நபி (ஸல்) மக்களுக்கு முதலில் ளுஹ்ரை தொழ வைத்தார்கள். பின்பு பிலால் (ரழி) இகாமத் கூற, நபி (ஸல்) அஸ்ர் தொழுகையைத் தொழ வைத்தார்கள். இவ்விரண்டிற்கும் இடையில் நபி (ஸல்) எந்தத் தொழுகையையும் தொழவில்லை. பின்பு தங்களது வாகனத்தில் ஏறி, தான் தங்கியிருந்த இடத்திற்கு வந்தார்கள். அங்கு தங்களது ஒட்டகத்தின் வயிற்றுப் பகுதியை ஜபலுர் ரஹ்மாவை நோக்கிய பாறைகளின் பக்கமாக ஆக்கிக் கொண்டு, நடந்து செல்லும் மக்களை தனக்கு முன்பக்கமாக ஆக்கிக் கொண்டு கிப்லாவை முன்னோக்கியவர்களாக சூரியன் மறையும் வரை ஒட்டகத்தின் மேல் அதே இடத்தில் இருந்தார்கள்.

சூரிய வட்டம் மறைந்தவுடன் உஸாமாவை தங்களது வாகனத்தின் பின்பக்கத்தில் வைத்துக் கொண்டு முஜ்தலிபாவுக்குச் சென்றார்கள். அங்கு மஃரிப், இஷா இரண்டையும் ஒரு அதான் (பாங்கு) இரண்டு இகாமத் கூறி தொழுதார்கள். இரண்டு தொழுகைகளுக்கு மத்தியில் எந்த தஸ்பீஹும் செய்யவில்லை. பிறகு காலை வரை ஓய்வெடுத்தார்கள். ஃபஜ்ர் நேரமானவுடன் பாங்கு இகாமத் கூறி காலைத் தொழுகையை நிறைவேற்றினார்கள். பின்பு மஷ்அருல்

ஹரமுக்கு ஒட்டகத்தில் வந்து சேர்ந்தார்கள். அங்கு கிப்லாவை முன்னோக்கி நின்று கொண்டு தக்பீர், தஹ்லீல், தஸ்பீஹ், துஆ போன்றவற்றில் ஈடுபட்டிருந்தார்கள். சூரியன் உதயத்திற்கு முன் அங்கிருந்து புறப்பட்டு மினா வந்தடைந்தார்கள். அப்போது ஃபழ்லு இப்னு அப்பாஸை தங்களுக்குப் பின் அமர்த்தியிருந்தார்கள். 'பத்ரின் முஹஸ்ஸிர்' என்ற இடம் வந்தபோது சற்று விரைவாகச் சென்றார்கள். அங்கிருந்து நடுபாதையில் சென்று முதல் ஜம்ராவை அடைந்தார்கள். அக்காலத்தில் முதல் ஜம்ரா அருகே ஒரு மரம் இருந்தது. அந்த ஜம்ராவுக்கு 'ஜம்ரத்துல் அகபா, ஜம்ரத்துல் ஊலா' என இரு பெயர்கள் உள்ளன.

பொடிக் கற்களை எடுத்து பத்னுல் வாதியிலிருந்து ஜம்ராவை நோக்கி எறிந்தார்கள். பிறகு குர்பானி கொடுக்குமிடம் வந்து தங்களது கரத்தால் 63 ஒட்டகங்களை அறுத்தார்கள். பிறகு கத்தியை அலீ (ரழி) அவர்களிடம் கொடுக்க, மீதமுள்ள முப்பத்து ஏழு ஒட்டகங்களை அலீ (ரழி) அறுத்தார்கள். நபி (ஸல்) அலீயை தங்களது குர்பானியில் கூட்டாக்கியிருந்தார்கள். ஒவ்வொரு ஒட்டகையிலிருந்து ஒரு சதைத் துண்டு வீதம் எடுத்து சமைத்து, தானும் அலீயும் சாப்பிட்டார்கள். ஆணத்தையும் (சால்னா) குடித்தார்கள்.

பிறகு அங்கிருந்து வாகனம் மூலம் கஅபத்துல்லாஹ் வந்தார்கள். அங்கு ளுஹ்ர் தொழுது விட்டு ஜம்ஜம் கிணற்றருகே வந்தார்கள். அங்கு முத்தலிப் கிளையினர் ஜம்ஜம் கிணற்றில் இருந்து நீறைத்து மக்களுக்கு வழங்கினார்கள். அவர்களைப் பார்த்து "முத்தலிப் கிளையினரே! நன்றாக நீரை இறைத்து வழங்குங்கள். உங்களுடன் போட்டியிட்டு மக்களும் தண்ணீரை இறைக்க ஆரம்பித்து விட்டால் நீங்கள் பின்னுக்கு தள்ளப்பட்டு விடுவீர்கள் என்ற அச்சம் மட்டும் எனக்கு இல்லாதிருந்தால் நானும் உங்களுடன் சேர்ந்து தண்ணீர் இறைப்பதில் பங்கு பெறுவேன்" என்றார்கள்.

முத்தலிப் கிளையார் ஒரு வாளி தண்ணீரை இறைத்து கொடுக்க, நபி (ஸல்) அதிலிருந்து குடித்தார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

அன்றும் நபி (ஸல்) முற்பகலில் மக்களுக்கு உரையாற்றினார்கள். அப்போது நபி (ஸல்) கோவேறுக் கழுதை மீது இருந்தார்கள். அலீ (ரழி) நபி (ஸல்) அவர்களின் உரையை எடுத்துரைத்து கொண்டிருக்க, மக்கள் நின்றுகொண்டும் அமர்ந்துகொண்டும் செவிமடுத்தனர். தங்களது இன்றைய உரையில் நேற்று கூறிய சிலவற்றையும் சேர்த்துக் கூறினார்கள். (ஸுனன் அபூதாவூது)

அபூபக்ரா (ரழி) வாயிலாக இமாம் புகாரி, இமாம் முஸ்லிம் (ரஹ்) அறிவிக்கிறார்கள்:

பிறை 10ல் நபி (ஸல்) எங்களுக்கு உரையாற்றினார்கள். "காலம், அல்லாஹ் வானங்கள் பூமியைப் படைத்த தினத்தின் அமைப்பை போன்றே இருக்கிறது. ஆண்டு 12 மாதங்கள் கொண்டது. அவற்றில் நான்கு கண்ணியமிக்கது. துல்கஅதா, துல்ஹஜ், முஹர்ரம் என்று தொடர்ந்து வரும் மூன்று மாதங்களும் ஜுமாதா அஸ்ஸானியா, ஷஅபான் ஆகிய இரண்டிற்கு மத்தியிலுள்ள ரஜப் மாதமும் ஆகும். பிறகு "இது எந்த மாதம்?" என்று நபி (ஸல்) கேட்க "அல்லாஹ்வும் அவனது தூதரும் நன்கு அறிந்தவர்கள்" என்று கூறிவிட்டோம். நபி (ஸல்) சற்று நேரம் அமைதியாக இருந்ததும் நபி (ஸல்) இதற்கு வேறு பெயர் கூறப்போகிறார்கள் என்று எண்ணினோம். "இது துல்ஹஜ் மாதமில்லையா?" என்று கேட்க, "ஆம்! துல்ஹஜ் மாதம்தான்" என்றோம். "இது எந்த ஊர்?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். "அல்லாஹ்வும் அவனது தூதரும் நன்கறிந்தவர்கள்" என்றோம். நபி (ஸல்) அமைதி காத்தபோது இதற்கு வேறு பெயர் கூறுவார்கள் என எண்ணினோம். "இது அந்த ஊர் இல்லையா?" என்று கேட்க, "நாங்கள் ஆம்! அந்த ஊர்தான்" என்று கூறினோம். பின்பு "இன்றைய தினம் என்ன நாள்?" என்று கேட்டார்கள். "அல்லாஹ்வும் அவனது தூதரும் அறிவார்கள் என்றோம்". பிறகு நபி (ஸல்) "இது அறுத்து பலியிடும் 10வது தினம்தானே என்றார்கள்." நாங்கள் "ஆம்! 10வது நாள்தான்" என்றோம்.

உங்களது உயிரும் பொருளும் கண்ணியமும் உங்களது இந்த மாதம், இந்த ஊர், இந்த தினத்தைப் போன்று கண்ணியம் பெற்றதாகும். உங்களுடைய இறைவனை சந்திப்பீர்கள். உங்களது செயல்களைப் பற்றி உங்களிடம் விசாரணை செய்வான். எனக்குப் பின் நீங்கள் ஒருவருக்கொருவர் வெட்டிக் கொண்டு வழி தவறிவிடாதீர்கள். "நான் உங்களுக்கு எடுத்துரைத்து விட்டேனா?'' என்று கேட்க, குழுமி இருந்தோர் "ஆம்!'' என்றனர். "யா அல்லாஹ்! நீயே இதற்கு சாட்சி, செய்தியைக் கேள்விப்படுபவர்களில் சிலர், நேரடியாக கேட்பவர்களை விட விளக்கமுள்ளவராக இருக்கலாம்.''என்று கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம், ஸுனனுத் திர்மிதி, இப்னு ஹிஷாம், இப்னு ஜரீர்)

மேலும் இப்பிரசங்கத்தில் நபி (ஸல்) கூறினார்கள்: "ஒருவர் குற்றம் செய்தால் அக்குற்றத்தின் தண்டனை அவருக்கே வழங்கப்படும் அவரது உறவினர்களுக்கல்ல. எந்தத் தந்தையும் தன் பிள்ளைக்கு அநியாயம் செய்ய வேண்டாம் எந்த பிள்ளையும் தன் தந்தைக்கு அநியாயம் செய்ய வேண்டாம். தந்தையின் குற்றத்திற்காக பிள்ளையையோ அல்லது பிள்ளையின் குற்றத்திற்காக தந்தையையோ தண்டிக்கப்பட மாட்டாது.

நிச்சயமாக ஷைத்தான் உங்களது இந்தப் பூமியில் அவனை நீங்கள் வணங்குவதிலிருந்து முற்றிலும் நிராசையடைந்து விட்டான். எனினும், நீங்கள் அற்பமாகக் கருதுபவற்றில் அவனுக்கு வழிப்படுவீர்கள். அதனால் அவன் மகிழ்ச்சி அடைவான். (ஜாமிவுத் திர்மிதி, இப்னு மாஜா)

நபி (ஸல்) அவர்கள் பிறை 11, 12, 13 ஆகிய நாட்கள் மினாவில் தங்கி ஹஜ் கடமைகளை நிறைவேற்றிக் கொண்டும், மார்க்கச் சட்டத் திட்டங்களை மக்களுக்கு கற்றுக் கொடுத்து கொண்டும் இருந்தார்கள். இப்றாஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தின்படி நேரிய வழிமுறைகளை நிலை நிறுத்தி இணைவைப்புடைய அடையாளங்களையும் அடிச்சுவடுகளையும் அடியோடு அழித்தார்கள்.

இந்த மூன்றில் சில நாட்களிலும் நபி (ஸல்) உரை நிகழ்த்தி இருக்கிறார்கள். 'ஸர்ரா பின்த் நப்ஹான்' என்ற பெண்மணி வாயிலாக ஓர் அறிவிப்பு இடம்பெற்றுள்ளது. நபி (ஸல்) எங்களுக்கு பிறை 12ல் உரை நிகழ்த்தினார்கள். அவ்வுரையில் "தஷ்ரீக் (பிறை 11, 12, 13) நாட்களில் இது நடுநாள் அல்லவா?'' என்று வினவினார்கள். தொடர்ந்து பிறை 10ல் ஆற்றியது போன்றே இன்றும் உரை நிகழ்த்தினார்கள். (ஸுனன் அபூதாவூது)

நபி (ஸல்) அவர்களின் இவ்வுரை,

(நபியே! உங்களுக்கு) அல்லாஹ்வுடைய உதவியும், (மக்காவின்) வெற்றியும் கிடைத்து, அல்லாஹ்வுடைய மார்க்கத்தில் மக்கள் கூட்டம் கூட்டமாக நுழைவதையும் நீங்கள் கண்டால், (அதற்கு நன்றி செலுத்தும் பொருட்டு) உங்களது இறைவனைப் புகழ்ந்து துதி செய்து, அவனுடைய (அருளையும்) மன்னிப்பையும் கோருவீர்களாக! நிச்சயமாக அவன் (பிரார்த்தனைகளை அங்கீகரித்து) மன்னிப்புக் கோருதலையும் அங்கீகரிப்பவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் 110:1-4)

என்ற அத்தியாயம் நஸ்ர் இறங்கியதற்கு பின் நடைபெற்றது.

துல்ஹஜ் பிறை 13ல் நபி (ஸல்) மினாவில் இருந்து புறப்பட்டு 'அப்தஹ்' என்ற இடத்திலுள்ள கினானா என்ற கிளையினரின் இடத்தில் அன்று பகலும் இரவும் தங்கியிருந்தார்கள். அங்குதான் ளுஹ்ர், அஸர், மஃரிப், இஷா தொழுதார்கள். இஷாவுக்குப் பிறகு சிறிது தூங்கிவிட்டு கஅபாவிற்கு வந்து 'தவாஃபுல் விதா' நிறைவேற்றினார்கள். மக்களையும் அதை நிறைவேற்ற பணித்தார்கள்.

ஹஜ் கடமைகளை நிறைவேற்றிய பின்பு, மதீனா முனவ்வரா நோக்கிப் புறப்படுமாறு தங்களுடன் வந்தவர்களைக்கு கூறினார்கள். அவர்கள் சற்று ஓய்வு எடுப்பதற்கும் அவகாசம்

அளிக்கவில்லை. அல்லாஹ்வின் பாதையில் அடுத்தகட்ட நடவடிக்கைகளையும், தியாகங்களையும் புரிவதற்காக உடனடியாக புறப்படும்படி அழைப்பு விடுத்தார்கள்.

குறிப்பு: நபியவர்களின் இந்த இறுதி ஹஜ்ஜை பற்றிய விவரங்கள் ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், இப்னு ஹிஷாம், ஜாதுல் மஆது, ஃபத்ஹுல் பாரி ஆகிய நூற்களிலிருந்து எடுக்கப்பட்டன.

## இறுதிப் படை

தற்பெருமையும் அகம்பாவமும் கொண்ட ரோமானியர்கள், அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிக்கை கொண்டவர்களின் வாழ்க்கைக்கு நெருக்கடி கொடுத்து வந்தனர். தங்களுக்கு கீழுள்ளவர்கள் யாராவது இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் அவரைக் கொன்றனர். ரோமர்களின் ஆளுநராக மஆன் பகுதியிலுள்ள ஃபர்வா இப்னு அம்ர் ஜுதாமி இஸ்லாமை ஏற்றபோது அவரைக் கொடுமைப்படுத்திக் கொன்ற நிகழ்ச்சியை முன்னர் விவரித்துள்ளோம்.

ரோமர்களின் இந்த அடக்குமுறைகளையும் அத்துமீறலையும் முடிவுக்கு கொண்டுவர பெரும் படை ஒன்றை ஹிஜ்ரி 11ல் நபி (ஸல்) தயார்படுத்தினார்கள். ரோமன் கட்டுப்பாட்டிலுள்ள ஃபலஸ்தீன் பகுதியின் ‘பல்கா‘‘, ‘தாரூம்’ எல்லைகள் வரைச் சென்று எதிரிகளை எச்சரித்து வருமாறு அந்தப் படைக்கு ஆணையிட்டார்கள்.

எல்லைகளில் வசித்து வந்த அரபியர்களின் உள்ளங்களில் இஸ்லாம் மற்றும் முஸ்லிம்களின் மீது நம்பிக்கையை வரவைப்பதற்காகவும், கிறிஸ்துவ ஆலயங்களின் ஆதிக்கத்தை யாராலும் எதிர்க்க முடியாது என்ற நம்பிக்கையை தகர்ப்பதற்காகவும், இஸ்லாமை ஏற்றுக் கொள்வது ஆபத்துகளையும் மரணத்தையும் தேடித் தரும் என்று எவரும் எண்ணிவிடக் கூடாது என்பதற்காகவும் இப்படை அனுப்பப்பட்டது.

இப்படையின் தளபதி வயது குறைந்தவராக இருப்பதைக் குறித்து மக்கள் பலவாறாகப் பேசினர். அவருடன் புறப்படத் தயங்கினர். இதைக் கண்ட நபி (ஸல்) ‘‘அவரது தலைமையை இடித்துரைத்தீர்கள் என்றால் இதற்கு முன் அவரது தந்தையின் தலைமையையும் இடித்துரைத் திருப்பீர்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர் தலைமைக்கு ஏற்றவரே! தகுதியானவரே! மக்களில் எனக்கு மிக நேசமானவர்களில் அவரும் ஒருவரே. அவருக்குப் பின் நிச்சயமாக இவரும் எனக்கு நேசமானவர்களில் ஒருவரே. (ஸஹீஹுல் புகாரி)

நபி (ஸல்) அவர்களின் இந்த எச்சரிக்கைக்குப் பிறகு மக்களெல்லாம் உஸாமாவின் படையில் சேர்வதற்கு ஆர்வத்துடன் குழுமினர். உஸாமா (ரழி) படையை முழுமையாக ஒழுங்குபடுத்திக் கொண்டு மதீனாவிலிருந்து புறப்பட்டு 8 கி.மீ. தூரத்திலுள்ள ‘ஜுர்ஃப்’ என்ற இடத்தில் தங்கினார். இத்தருணத்தில் நபி (ஸல்) நோய்வாய்ப்பட்டார்கள் என்ற துக்கமான செய்தி கிடைத்தது. அல்லாஹ்வின் முடிவு என்ன என்று தெரிந்து கொள்வதற்காக சற்றுத் தாமதித்தார். இப்படை அபூபக்ர் (ரழி) ஆட்சியின் போது புறப்பட வேண்டிய முதல் ராணுவப்படையாக அமைய வேண்டும் என்பது இறைவனின் நாட்டமாக இருந்து விட்டது. (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம்)

# உயர்ந்தோனை நோக்கி...

## புறப்படுவதற்கான அறிகுறிகள்

அழைப்புப் பணி நிறைவுற்று, இஸ்லாம் நிலைமைகளை தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரும் போது இவ்வுலக வாழ்க்கையிலிருந்தும் அதில் வாழ்பவர்களிடமிருந்தும் விடைபெறும் அறிகுறிகள் நபி (ஸல்) அவர்களின் உணர்வுகளில் தோன்றின. அவர்களது சொல் செயல்களிலும் வெளிப்பட்டன.

ஹிஜ்ரி 10, ரமழான் மாதத்தில் நபி (ஸல்) இருபது நாட்கள் ‘இஃதிகாஃப்’ இருந்தார்கள். பொதுவாக 10 நாட்கள் இஃதிகாஃப் இருப்பதுதான் நபி (ஸல்) அவர்களின் வழக்கமாக இருந்தது. இம்முறை வானவர் ஜிப்ரயீல் நபியவர்களிடம் வந்து இருமுறை குர்ஆனைப் பரிமாறிக் கொண்டார்கள். இறுதி ஹஜ்ஜில் ‘இந்த ஆண்டிற்குப் பின் இந்த இடத்தில் உங்களை நான் சந்திக்க முடியாமல் போகலாம்’ என்று நபி (ஸல்) கூறியிருந்தார்கள். ஜம்ரத்துல் அகபாவில் நபி (ஸல்) நிற்கும் போது “உங்களது வணக்க வழிபாடுகளை, ஹஜ் கடமைகளை என்னிடம் கற்றுக் கொள்ளுங்கள். இந்த ஆண்டிற்குப் பிறகு நான் ஹஜ்ஜுக்கு வர முடியாமல் போகலாம்” என்றும் கூறியிருந்தார்கள். ஹஜ் பிறை 12ல் சூரத்துன் நஸ்ர் நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்டது. இவற்றிலிருந்து நபி (ஸல்) இவ்வுலகை விட்டு விடைபெறப் போகிறார்கள், அவர்களது மரணச் செய்தி அவர்களுக்கு வந்துவிட்டது என்பதைத் தெளிவாக உணரலாம்.

துல்ஹஜ் முடிந்து முஹர்ரமும் முடிந்தது. ஸஃபர் மாதம் பிறந்தது. ஹிஜ்ரி 11, ஸஃபர் மாத தொடக்கத்தில் நபி (ஸல்) உஹுதுக்குச் சென்றார்கள். அங்கு ஷஹீதானவர்களுக்காக அல்லாஹ்விடம் இறைஞ்சித் தொழுதார்கள். இருப்பவர்களுக்கும் இறந்தோருக்கும் விடை கூறுவது போல் நபி (ஸல்) அவர்களின் இச்செயல் அமைந்தது. பின்பு தங்களது பள்ளிக்கு வந்து மிம்பரில் ஏறி “நான் உங்களுக்கு முன் செல்கிறேன். நான் உங்களுக்கு சாட்சியாளன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் தற்போது எனது நீர் தடாகத்தைப் பார்க்கிறேன். எனக்கு பூமியிலுள்ள பொக்கிஷங்களின் சாவிகள் கொடுக்கப்பட்டன. அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனக்குப் பின் நீங்கள் இணை வைப்பவர்களாக மாறிவிடுவீர்கள் என்று நான் அஞ்சவில்லை. இவ்வுலகத்திற்காக நீங்கள் சண்டையிட்டுக் கொள்வீர்களோ என்றுதான் நான் அஞ்சுகிறேன்” என்றார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

ஒரு நாள் நடுநிசியில் ‘பகீஃ’ மண்ணறைக்கு சென்று அங்கு அடக்கம் செய்யப்பட்டவர்களுக்காக பாவ மன்னிப்புத் தேடினார்கள். மேலும் “மண்ணறைவாசிகளே! மக்கள் இருக்கும் நிலையைவிட உங்களது நிலை உங்களுக்கு இன்பம் பயக்கட்டும். இருள் சூழ்ந்த இரவுப் பகுதிகளைப் போன்று குழப்பங்கள் வரவிருக்கின்றன. ஒன்றன்பின் ஒன்றாக தொடராக வந்து கொண்டிருக்கும். பிந்தியது முந்தியதைவிட மோசமானதாக இருக்கும்” எனக் கூறிவிட்டு “நிச்சயமாக நாமும் உங்களிடம் வந்து சேருவோம்” என்ற நற்செய்தியையும் அவர்களுக்குக் கூறினார்கள்.

### நோயின் ஆரம்பம்

ஹிஜ்ரி 11, ஸஃபர் மாதம், திங்கட்கிழமை பிறை 28 அல்லது 29 ஜனாஸா ஒன்றில் கலந்து கொள்ள பகீஃ சென்றார்கள். நல்லடக்கம் செய்துவிட்டு திரும்பும் வழியில் நபி (ஸல்) அவர்களுக்குக் கடும் தலைவலி ஏற்பட்டது. உடல் சூடு அதிகமானது. தலைமேல் கட்டியிருந்த துணிக்கு மேல் புறத்திலும் அனலை உடனிருப்போர் உணர்ந்தனர். பதினொரு நாட்கள் நோய்வாய்ப்பட்ட நிலையிலேயே மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். 13 அல்லது 14 நாட்கள் கடினமான நோயில் கழித்தார்கள்.

### இறுதி வாரம்

நபி (ஸல்) அவர்களுக்கு நோய் கடுமையாகவே “நாளை நான் எங்கிருப்பேன்? நாளை நான் எங்கிருப்பேன்?” என துணைவியரிடம் விசாரிக்கத் தொடங்கினார்கள். நபி (ஸல்) அவர்களின் துணைவியர் நபி (ஸல்) விரும்பிய வீட்டில் தங்குவதற்கு அனுமதித்தனர். ஒருபுறம் ஃபழ்ல் இப்னு அப்பாஸ் (ரழி), மறுபுறம் அலீ இப்னு அபூதாலிப் (ரழி) தாங்கலாக, கால்கள் தரையில் உரசிக் கோடு போட்ட நிலையில் ஆயிஷா (ரழி) வீட்டிற்குச் சென்றார்கள். அவர்களின் தலை துணியால் கட்டப்பட்டிருந்தது. ஆயிஷா (ரழி)

வீட்டிலேயே தங்களது வாழ்வின் இறுதி வாரத்தை நபி (ஸல்) கழித்தார்கள். அன்னை ஆயிஷா (ரழி) சூரா ஃபலக், நாஸ் மற்றும் நபி (ஸல்) அவர்களிடம் தான் கற்ற துஆக்களை ஓதி ஊதி வந்தார்கள். பரக்கத்தை நாடி நபி (ஸல்) அவர்களின் கரத்தாலேயே அவர்களைத் தடவி விட்டார்கள்.

### மரணத்திற்கு ஐந்து நாட்கள் முன்பு

மரணத்திற்கு ஐந்து நாட்களுக்கு முன்பு புதன்கிழமை உடல் நெருப்பாய் கொதித்தது. வலியும் அதிகமானது. அவ்வப்போது நபி (ஸல்) அவர்களுக்கு மயக்கமும் ஏற்பட்டது. அப்போது "பல கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்து வந்து ஏழு துருத்திகள் என் மீது ஊற்றுங்கள். நான் மக்களிடம் சென்று ஒப்பந்தம் வாங்கப் போகிறேன்" என்று கூறினார்கள். தோழர்கள் நபி (ஸல்) அவர்களை ஒரு பெரியபாத்திரத்தில் அமர வைத்து நீர் ஊற்றினார்கள். நபி (ஸல்) "போதும்! போதும்!" என்று கூறினார்கள். அப்போதுதான் நபி (ஸல்) அவர்களின் சூடு தணியக் கண்டார்கள். தலையில் தடிப்பான துணியைக் கட்டிக் கொண்டு போர்வையைப் போர்த்தியவர்களாக மிம்பரில் வந்து அமர்ந்தார்கள். அதுதான் நபி (ஸல்) அவர்களின் கடைசி சபையாகும். அல்லாஹ்வை போற்றிப் புகழ்ந்துவிட்டு "மக்களே! என்னிடம் வாருங்கள்" என்று கூறியபோது மக்கள் நபி (ஸல்) அவர்களை நோக்கி விரைந்து வந்தனர். அப்போது நபி (ஸல்) கூறியவற்றில் இதுவும் ஒன்று. "யூத கிருஸ்தவர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் ஏற்படட்டும்! தங்களின் தூதர்களுடைய அடக்கத் தலங்களை வணக்கத்தலங்களாக மாற்றி விட்டனர்." மற்றொரு அறிவிப்பில்: "யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் அல்லாஹ் அழிப்பானாக! தங்களது தூதர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடங்களை வணங்கும் இடங்களாக மாற்றி விட்டனர். எனது கப்ரை வணங்கும் இடமாக ஆக்காதீர்கள்" என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, முவத்தா மாலிக்)

தன்னிடம் பழிதீர்த்துக் கொள்ள மக்களிடம் தன்னை ஒப்படைத்தார்கள். யாரையாவது நான் முதுகில் அடித்திருந்தால் இதோ எனது முதுகை தந்து விட்டேன். பழி தீர்க்கட்டும். யாரையாவது கண்ணியம் குலைய திட்டியிருந்தால் இதோ நான் முன் வந்துள்ளேன். அவர் பழிதீர்த்துக் கொள்ளட்டும். பின்பு மிம்பரிலிருந்து இறங்கி ளுஹ்ரைத் தொழ வைத்தார்கள். மீண்டும் மிம்பரில் ஏறி முன்னர் உரை நிகழ்த்தியவாறே பழி தீர்த்துக் கொள்ள வேண்டுவோர் பழி தீர்க்கக் கூறினார்கள். அப்போது ஒருவர் எழுந்து "எனக்கு நீங்கள் மூன்று திர்ஹம் தர வேண்டும்" என்று கூறவே, "ஃபழ்லே! நீங்கள் அதைக் கொடுத்து விடுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

பின்னர் அன்சாரிகளைப் பற்றி விசேஷமாக சிறப்பித்துக் கூறினார்கள்: "அன்சாரிகளைப் பற்றி நான் விசேஷமாக அறிவுரை கூறுகிறேன். அவர்கள் எனது ஈரலும் இதயமும் ஆவார்கள். அவர்கள் தங்களது கடமையை நிறைவேற்றி விட்டார்கள். அவர்களுடைய உரிமையும், சலுகையும் மீதமிருக்கிறது. அவர்களில் நல்லோர்களின் செயலை ஏற்றுக் கொள்ளுங்கள். அவர்களில் தவறிழைப்போரை மன்னியுங்கள்." மற்றொரு அறிவிப்பில், "மக்கள் அதிகமாகினர். ஆனால் அன்சாரிகள் குறைகின்றனர். இறுதியில் அவர்கள் உணவில் உள்ள உப்பைப் போன்று குறைந்து விடுவார்கள். உங்களில் ஒருவர் மற்றவருக்கு நன்மையோ, தீமையோ செய்யும் அளவு அதிகாரம் பெற்றால், அன்சாரிகளில் நல்லோரின் சொல்லை ஏற்கட்டும். அவர்களில் தவறிழைப்போரை மன்னிக்கட்டும். (ஸஹீஹுல் புகாரி)

இவ்வாறு உபதேசம் செய்த பின்பு "ஓர் அடியாருக்கு இவ்வுலகில் உள்ளவற்றை உங்களுக்கு வழங்கட்டுமா? அல்லது மறுமையில் என்னிடமுள்ளவற்றை உங்களுக்குத் தரட்டுமா? என்று அல்லாஹ் வினவ, அதற்கு அந்த அடியாரின் அல்லாஹ்விடமுள்ளதையே தேர்ந்தெடுத்துக் கொண்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். இந்த ஹதீஸை அறிவிக்கும் அபூ சயீத் அல் குத் (ரழி) கூறுவதாவது:

நபி (ஸல்) அவர்களின் இப்பேச்சைக் கேட்ட அபூபக்ர் (ரழி) அழ ஆரம்பித்து “எங்களது தந்தையரையும் தாய்மாரையும் உங்களுக்கு அர்ப்பணமாக்குகிறோம்” என்று கூறினார்கள். நாங்கள் அவரைக் கண்டு ஆச்சரியமுற்றோம். “இம்முதியவரைப் பாருங்கள்! அல்லாஹ் ஓர் அடியாருக்கு உலக வசதிகளை வழங்கட்டுமா? அல்லது தன்னிடம் மறுமையில் உள்ளதை வழங்கட்டுமா என வினவினான் என்றுதான் நபி (ஸல்) கூறினார்கள். அதற்குத் தந்தையரும் தாய்மாரும் அர்ப்பணம் என்று கூறுகிறாரே?” என்று மக்கள் பேசினர். அபூபக்ர் (ரழி) எங்களில் மிகுந்த அறிஞராக இருந்தார். எனவேதான் இவ்வாறு கேட்கப்பட்ட அடியார் இந்தத் தூதர்தான் என்பதை புரிந்து கொண்டார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்: “தனது நட்பாலும் பொருளாலும் எனக்கு மக்களில் அதிகமதிகம் உபகாரம் செய்தவர் அபூபக்ர் ஆவார். என் இறைவனே! உன்னைத் தவிர மற்றெவரையும் உற்ற நண்பனாக ஆக்கிக் கொள்வதாக இருந்தால் அபூபக்ரை உற்ற நண்பராக ஆக்கியிருப்பேன். என்றாலும் அவருடன் இஸ்லாமிய சகோதரத்துவமும் அதன் நேசமும் எனக்கு இருக்கிறது. பள்ளியிலுள்ள எல்லா வீட்டினுடைய வாசல் கதவுகளும் அடைக்கப்பட வேண்டும் அபூபக்ருடைய வீட்டு வாசலைத் தவிர!” (ஸஹீஹுல் புகாரி)

**நான்கு நாட்களுக்கு முன்பு**

மரணத்திற்கு நான்கு நாட்களுக்கு முன், வியாழக்கிழமை நபி (ஸல்) அவர்களுக்கு வலி கடுமையானது. மக்களை நோக்கி “வாருங்கள்! நான் உங்களுக்கு ஒன்றை எழுதித் தருகிறேன். அதன்பின் ஒருக்காலும் நீங்கள் வழி தவறமாட்டீர்கள்” என்று கூறினார்கள். அப்போது வீட்டில் இருந்த பலல் உமர் (ரழி) அவர்களும் ஒருவர். “நபி (ரழி) அவர்களுக்கு வலி அதிகமாகிவிட்டது. உங்களிடம் குர்ஆன் இருக்கிறது. அல்லாஹ்வின் வேதமே உங்களுக்குப் போதுமானது” என்று உமர் (ரழி) மக்களிடம் கூறினார்கள். இதனால் அங்கிருந்தவர்களுக்கிடையில் கருத்து வேற்றுமை நிலவியது. சிலர் “நபி (ஸல்) நமக்கு எழுதித் தரட்டும்” என்று கூற, மற்றும் சிலர் உமர் (ரழி) கூறியது போல கூறினார்கள். இரு சாரார்களிடையே கருத்து வேற்றுமை விவாதமாக மாறவே “நீங்கள் இப்போது என்னைவிட்டு எழுந்து செல்லுங்கள்” என நபி (ஸல்) கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அன்றைய தினம் நபி (ஸல்) மூன்று விஷயங்களைக் குறிப்பிட்டார்கள்:

1) யூதர்கள், கிறிஸ்தவர்கள், முஷ்ரிக்குகள் ஆகியோரை அரபிய தீபகற்பத்திலிருந்து வெளியேற்ற வேண்டும்.

2) இங்கு வருகை தரும் மக்களை நான் கவனித்து உபசரித்தவாறே நீங்களும் உபசரித்து விருந்தோம்பல் செய்ய வேண்டும்.

3) மூன்றாவது விஷயத்தை அறிவிப்பாளர் மறந்துவிட்டார். அது இம்மூன்றில் ஒன்றாக இருக்கலாம்: 1) அல்லாஹ்வின் வேதத்தையும் நபி வழியையும் நன்றாகப் பிடித்துக் கொள்ளுங்கள். 2) உஸாமாவின் படையை அனுப்பி விடுங்கள். 3) தொழுகையையும் நீங்கள் உரிமையாக்கிக் கொண்டவர்களையும் பேணுங்கள்.

தனக்கு நோய் கடினமாக இருந்தும் அன்றைய தினத்தின் (மரணத்திற்கு நான்கு நாட்களுக்கு முன் வியாழக்கிழமை) தொழுகை அனைத்தையும் நபி (ஸல்) அவர்களே தொழ வைத்தார்கள். அன்றைய தினத்தின் மஃரிபு தொழுகையில் ‘வல் முர்சலாத்தி உர்ஃபன்’ என்ற சூராவை ஓதித் தொழ வைத்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

அன்றைய தினம் இஷா நேரத்தில் மேலும் நோயின் வேகம் அதிகமானது. நபி (ஸல்) அவர்களால் பள்ளிக்கு வரமுடியவில்லை. இந்நிலையைப் பற்றி ஆயிஷா (ரழி) கூறுவதைக் கேட்போம். “மக்கள் தொழுதார்களா?” என நபி (ஸல்) கேட்டார்கள். “இல்லை இறைத்தூதரே! தங்களை எதிர்பார்க்கிறார்கள்” என்றோம். எனக்காக ஒரு பாத்திரத்தில்

தண்ணீர் வையுங்கள் எனக் கூற, நாங்கள் தண்ணீர் வைத்தோம். நபி (ஸல்) குளித்து விட்டு செல்வதற்கு முனைந்தார்கள். ஆனால், அவர்களை மயக்கம் ஆட்கொண்டது. சிறிது நேரத்திற்குப் பிறகு மயக்கம் தெளிந்து “மக்கள் தொழுதார்களா?” என்றார்கள். நாங்கள் முதலில் கூறியது போல் இம்முறையும் பதில் கூறினோம். மீண்டும் தண்ணீர் வரவழைத்து முன்னர் போல குளித்தார்கள். பிறகு, நபி (ஸல்) அபூபக்ரை தொழ வைக்கும்படி கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

அப்போதிலிருந்து பதினேழு நேர தொழுகைகளை நபி (ஸல்) நோயுடன் இருக்கும் போது அபூபக்ர் (ரழி) மக்களுக்குத் தொழ வைத்தார்கள். (வியாழன் இஷாவிலிருந்து திங்கட்கிழமை ஃபஜ்ரு தொழுகை வரை) “இந்நாள்களில் அபூபக்ர் (ரழி) அவர்களைத் தொழ வைக்க சொல்ல வேண்டாம், காரணம், மக்கள் அதைத் துர்குறியாக எடுத்துக் கொள்வர்” என ஆயிஷா (ரழி) மூன்று அல்லது நான்கு முறை நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். நபி (ஸல்) அதனை மறுத்து விட்டார்கள். “நீங்கள் தானே யூசுஃபுடைய அந்தத் தோழிகள். அபூபக்ரே மக்களுக்கு தொழ வைக்கட்டும்” என நபி (ஸல்) கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

### மூன்று நாட்களுக்கு முன்பு...

நபி (ஸல்) இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு கூற, தான் கேட்டதாக ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்கள்: “அறிந்து கொள்ளுங்கள்! உங்களில் எவரும் அல்லாஹ்வின் மீது நல்லெண்ணம் கொண்டவராகவே தவிர மரணிக்க வேண்டாம்.” (தபகாத் இப்னு ஸஅது, முஸ்னத் அபூதாவூது, முஸ்னத் அபூ யஃலா)

### இரண்டு அல்லது ஒரு நாளுக்கு முன்பு...

அது சனிக்கிழமை அல்லது ஞாயிற்றுக்கிழமை. நபி (ஸல்) உடல் நலனில் முன்னேற்றத்தை உணர்ந்தார்கள், இரண்டு பேர் உதவியுடன் தங்களது அறையிலிருந்து பள்ளிக்கு வந்தார்கள். அப்போது அபூபக்ர் (ரழி) ளுஹ்ர் தொழ வைத்துக் கொண்டிருந்தார்கள். நபியவர்களை அபூபக்ர் (ரழி) பார்த்தவுடன் நகர்ந்து கொள்ள முயன்றார்கள். ஆனால், அவ்வாறு செய்ய வேண்டாம் என சைகை செய்தார்கள். பிறகு, என்னை அபூபக்ர் அருகில் அமர வையுங்கள் என்று கூற, அவர்களை அபூபக்ரின் இடப்பக்கத்தில் உட்கார வைத்தார்கள். நபி (ஸல்) தொழ வைக்க அவர்களின் தொழுகையைப் பின்பற்றி அபூபக்ர் (ரழி) தொழுது கொண்டு, நபியவர்களின் தக்பீரை மக்களுக்கு கேட்கும்படி சப்தமிட்டுக் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

### ஒரு நாள் முன்பு...

நபி (ஸல்) மரணிப்பதற்கு ஒரு நாள் முன்பு, அதாவது ஞாயிற்றுக்கிழமை தங்களிடமுள்ள அடிமைகளை அனைத்தையும் உரிமையிட்டார்கள். மேலும், தங்களிடமுள்ள ஆறு அல்லது ஏழு தங்கக் காசுகளைத் தர்மம் செய்தார்கள். தங்களுடைய ஆயுதங்களையும் முஸ்லிம்களுக்கு அன்பளிப்பாக வழங்கினார்கள். அன்றிரவு நபி (ஸல்) அவர்களின் வீட்டிலுள்ள விளக்கில் எண்ணெய் தீர்ந்து போகவே அதை ஒரு பெண்ணிடம் கொடுத்தனுப்பி அண்டை வீட்டாரிடம் எண்ணெயிட்டுத் தரும்படி ஆயிஷா (ரழி) கூறினார்கள். நபி (ஸல்) அவர்களின் கவச ஆடை முப்பது ‘சாஃ’ கோதுமைக்காக ஒரு யூதனிடம் அடைமானமாக வைக்கப்பட்டிருந்தது. (ஸஹீஹுல் புகாரி, தபகாத் இப்னு ஸஅது, முஸ்னது அஹ்மது)

வாழ்வின் இறுதி நாள்

அனஸ் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கிறார்கள்: திங்கட்கிழமையன்று முஸ்லிம்கள் அபூபக்ர் (ரழி) அவர்களைப் பின்தொடர்ந்து ஃபஜ்ர் தொழுது கொண்டிருக்கும் போது திடீரென ஆயிஷாவுடைய அறையின் திரையை நபி (ஸல்) அவர்கள் நீக்கி மக்கள் அணி அணியாக தொழுகையில் நிற்பதைப் பார்த்து ஆனந்தமாகச் சிரித்தார்கள். தொழ வைப்பதற்கு நபி (ஸல்) வருகிறார்கள் என்று எண்ணி அபூபக்ர் (ரழி) அவர்கள், தொழ வைக்கும் இடத்திலிருந்து சற்று பின்னே வரிசையை நோக்கி நகர்ந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் வருகையைப் பார்த்த மகிழ்ச்சியினால் முஸ்லிம்கள் தொழுகையில் நிலை குலைய ஆரம்பித்தனர். நபி (ஸல்) அவர்கள் 'உங்களது தொழுகையை முழுமைப்படுத்திக் கொள்ளுங்கள்' என்று கூறிவிட்டு அறையில் நுழைந்து திரையிட்டுக் கொண்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இந்நிகழ்ச்சிக்குப் பின் இன்னொரு தொழுகை நேரம் நபி (ஸல்) அவர்களுக்குக் கிட்டவில்லை. முற்பகல் நேரம் வந்தவுடன் நபி (ஸல்) ஃபாத்திமாவை வரவழைத்து அவரிடம் சிலவற்றை இரகசியமாகப் பேசினார்கள். அதைக் கேட்டவுடன் ஃபாத்திமா (ரழி) அழலானார்கள். மீண்டும் அழைத்து சிலவற்றை இரகசியமாகக் கூறவே ஃபாத்திமா (ரழி) சிரித்தார்கள். இதைப் பற்றி ஆயிஷா (ரழி) கூறுவதாவது:

இந்நிகழ்ச்சி பற்றி பின்பு ஒரு நாள் ஃபாத்திமாவிடம் விசாரித்தோம். எனக்கு ஏற்பட்ட இதே வலியினாலே நான் இறந்து விடுவேன் என நபி (ஸல்) கூறியபோது நான் அழுதேன். அவர்களது குடும்பத்தாரில் நான்தான் முதலில் அவர்களை சென்றடைவேன் என்று நபி (ஸல்) கூறியபோது நான் சிரித்தேன்'' என்று ஃபாத்திமா (ரழி) பதில் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

மேலும், ''அகில உலக பெண்களின் தலைவி ஃபாத்திமா'' என்று நபி (ஸல்) நற்செய்தி கூறினார்கள். (ரஹ்மத்துல் லில் ஆலமீன்)

நபி (ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட கடுமையான நிலைமையைக் கண்ட ஃபாத்திமா (ரழி) ''எனது தந்தைக்கு ஏற்பட்ட கஷ்டமே!'' என்று வேதனைப்பட்டார்கள். உன் தந்தைக்கு இன்றைக்குப் பிறகு என்றுமே சிரமம் இருக்காது என்று நபி (ஸல்) ஆறுதல் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ஹசன், ஹுசைனை வரவழைத்து அவர்களை முத்தமிட்டு அவர்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டுமென அறிவுறுத்தினார்கள். மனைவிமார்களை அழைத்து அவர்களுக்கும் உபதேசமும் அறிவுரையும் நல்கினார்கள்.

முன்பை விட வேதனை அதிகமானது. கைபர் போரின் போது உட்கொண்ட உணவில் கலக்கப்பட்ட விஷத்தின் விளைவை நபி (ஸல்) உணர ஆரம்பித்தார்கள். ''ஆயிஷாவே! கைபர் தினத்தில் நான் உண்ட உணவின் வேதனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். இந்த நேரத்தில் அந்த விஷத்தினால் எனது நரம்புகள் துண்டாவதை நான் உணர்கிறேன்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

தங்கள் முகத்திலிருந்த போர்வையை நபி (ஸல்) தூக்கி எறிந்தார்கள். அவர்கள் மீது திரும்ப போர்த்தினால் முகத்தில் இருப்பதை மட்டும் அகற்றி விடுவார்கள். இந்நிலையில் சிலவற்றை நபி (ஸல்) கூறினார்கள். அதுவே அவர்களது கடைசி பேச்சாகும். அதாவது: அல்லாஹ்வின் சாபம் யூத, கிறிஸ்தவர்கள் மீது உண்டாகட்டும்! அவர்கள் தங்களது இறைத்தூதர்களின் அடக்கத்தலங்களை வணங்குமிடமாக மாற்றிக் கொண்டார்கள். அரபிகளின் பூமியில் இரண்டு மார்க்கங்கள் இருக்கக் கூடாது.'' (ஸஹீஹுல் புகாரி, தபகாத் இப்னு ஸஅத்)

தொழுகையையும் நீங்கள் உரிமையாக்கிக் கொண்டவர்களையும் (அடிமைகள்) பேணுங்கள் என்று பலமுறை அறிவுறுத்தினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

**மரணத் தருவாயில்...**

இறுதி நேரம் நெருங்கவே ஆயிஷா (ரழி) நபி (ஸல்) அவர்களைத் தனது நெஞ்சோடு அணைத்துக் கொண்டார்கள். இதைப் பற்றி ஆயிஷா (ரழி) கூறுவதாவது:

“நபி (ஸல்) என் அறையில் எனக்குரிய தினத்தில் எனது கழுத்துக்கும் நெஞ்சுக்குமிடையில் மரணமானார்கள். அவர்களது மரண நேரத்தில் எனது எச்சிலையும் அவர்களது எச்சிலையும் ஒன்று சேர்த்தேன். எனது சகோதரர் அப்துர் ரஹ்மான் அறைக்குள் வந்தார். அவரது கரத்தில் மிஸ்வாக் இருந்தது. நபி (ஸல்) அவர்களை எனது மடியில் கிடத்தியிருந்தேன். அப்துர் ரஹ்மான் கரத்திலுள்ள மிஸ்வாக்கை நபி (ஸல்) அவர்கள் பார்த்தார்கள். அவர்கள் மிஸ்வாக் செய்ய விரும்புகிறார்கள் என புரிந்து கொண்டேன். “நான் உங்களுக்கு அதனை வாங்கித் தரவா?” என்று கேட்டபோது, “ஆம்!” என தலை அசைத்தார்கள். அதனை வாங்கிக் கொடுத்தேன். அது அவர்களுடைய பற்களுக்கு சிரமமாக இருந்தது. “நான் அதனை மிருதுவாக்கி தரட்டுமா?” என்று கேட்டேன். தலை அசைத்து “ஆம்!” என்றார்கள். நான் அதனை மிருதுவாக்கிக் கொடுத்தேன்.”

இன்னொரு அறிவிப்பில் வருவதாவது: “நபி (ஸல்) மிக அழகிய முறையில் அக்குச்சியால் பல் துலக்கினார்கள். அவர்களுக்கருகில் நீர் நிரம்பிய குவளை இருந்தது. அதில் கைகளை விட்டு முகத்தில் தடவிக் கொண்டார்கள். “லாஇலாஹஇல்லல்லாஹ் இன்னலில் மவ்த்தி சகராத்- வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. மரணத்திற்குப் பல மயக்கங்கள் இருக்கின்றன” என்றார்கள். (ஸஹீஹுல் புகாரி)

பல் துலக்கிய பின்பு தங்களது கையை அல்லது விரலை உயர்த்தினார்கள். அவர்களது பார்வை முகட்டை நோக்கியது. அவர்களது உதடுகள் அசைந்தன. அவர்கள் என்ன கூறுகிறார்கள் என ஆயிஷா (ரழி) செவிதாழ்த்திக் கேட்டார்கள்.

நபி (ஸல்) அப்போது “இறைத்தூதர்கள், வாய்மையாளர்கள், இறைப்போர் தியாகிகள், நல்லோர்கள் ஆகிய நீ அருள் செய்தோருடன்...

அல்லாஹ்வே! என்னை மன்னிப்பாயாக! என்மீது கருணை காட்டுவாயாக! உயர்ந்த நண்பனுடன் என்னைச் சேர்த்து வைப்பாயாக! அல்லாஹ்வே! உயர்ந்த நண்பனை... (ஸஹீஹுல் புகாரி)

கடைசி வார்த்தையை மட்டும் மூன்று முறை நபி (ஸல்) கூறினார்கள். உயர்த்திய அவர்களுடைய கை சாய்ந்தது. உயர்ந்தோனிடம் சென்றார்கள். இன்னாலில்லா வ இன்னா இலை ராஜிஊன்.

ஹிஜ்ரி 11, ரபீஉல் அவ்வல் பிறை 12, திங்கட்கிழமை முற்பகல் முடியும் நேரத்தில் அவர்களுக்கு மரணம் ஏற்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்களுக்கு 63 வயது, 4 நாட்கள் ஆகியிருந்தன.

**கவலையில் நபித்தோழர்கள்**

நபி (ஸல்) அவர்களின் மரணச் செய்தி எங்கும் பரவியது. மதீனா இருண்டுபோனது. இதைப் பற்றி “நபி (ஸல்) எங்களிடம் வந்த தினத்தை விட மிக அழகிய, ஒளிமிகுந்த நாளை நான் கண்டதில்லை. நபி (ஸல்) மரணித்த தினத்தைவிட இருண்ட, வெறுப்பான நாளை நான் கண்டதில்லை” என அனஸ் (ரழி) கூறுகிறார்கள். (முஸ்னத் தாரமி, மிஷ்காத்)

ஃபாத்திமா (ரழி) ‘‘எனது தந்தையே! அழைத்த இறைவனுக்கு பதில் அளித்துவிட்டீரே! எனது தந்தையே! ஜன்னத்துல் ஃபிர்தவ்ஸ் தங்களின் தங்குமிடமாயிற்றே! எனது தந்தையே! உங்களின் மரணச் செய்தியை நாங்கள் ஜிப்ரயீலிடம் கூற வேண்டுமே’’ எனக் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

**உமரின் நிலை**

உமர் (ரழி) எழுந்து நின்று ‘‘சில நயவஞ்சகர்கள் நபி (ஸல்) இறந்துவிட்டார்கள் என்று நினைக்கின்றனர். நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் மரணிக்கவில்லை மூஸா இப்னு இம்ரான் (அலை) அல்லாஹ்வைச் சந்திக்கச் சென்று நாற்பது நாட்கள் தனது சமூகத்தாரை விட்டு மறைந்து இருந்த போது மக்கள் மூஸா மரணித்து விட்டார் என எண்ணினார்கள். ஆனால், மூஸா (அலை) திரும்பி வந்தார்கள். அவ்வாறே நபியவர்களும் தன் இறைவனைச் சந்திக்கச் சென்றுள்ளார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி (ஸல்) நிச்சயம் திரும்ப வருவார்கள். தான் மரணித்து விட்டதாகக் கூறியவர்களின் கைகளையும் கால்களையும் வெட்டுவார்கள்?’’ எனக் கூறினார்கள். (இப்னு ஹிஷாம்)

**அபூபக்ரின் நிலை**

அபூபக்ர் (ரழி) இந்நேரத்தில் மஸ்ஜிது நபவியிலிருந்து சற்று தொலைவிலுள்ள ‘சுன்ஹ்’ என்ற இடத்திலுள்ள வீட்டில் தங்கியிருந்தார்கள். இந்தத் துக்கமானச் செய்தியைக் கேட்டவுடன் தனது குதிரையில் ஏறி மஸ்ஜிது நபவிக்கு வந்து, யாரிடமும் பேசாமல் நபி (ஸல்) அவர்களைக் காண்பதற்காக ஆயிஷாவின் அறை நோக்கி நடந்தார்கள். நபி (ஸல்) ஹிபரா நாட்டு ஆடையால் போர்த்தப்பட்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் முகத்திலிருந்து போர்வையை அகற்றி முகத்தைக் கட்டிப்பிடித்து முத்தமிட்டு அழலானார்கள். ‘‘என் தாயும் தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். அல்லாஹ் தங்களுக்கு இரண்டு மரணத்தைத் தரமாட்டான். அல்லாஹ் உங்களுக்கு விதித்த முதல் மரணத்தையே நீங்கள் அடைந்து கொண்டீர்கள்’’ என்றும் கூறினார்கள்.

பின்பு அறையிலிருந்து வெளியேறி அபூபக்ர் (ரழி) மஸ்ஜிது நபவிக்கு வந்தார்கள். அங்கு உமர் (ரழி) மக்களிடம் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது அபூபக்ர் (ரழி) ‘‘உமரே! அமருங்கள்’’ என்றுரைத்தும் உமர் (ரழி) அமர மறுத்து விட்டார்கள். அபூபக்ர் (ரழி) மிம்பரில் ஏறி சப்தமிட்டு தஷஹ்ஹுத் முழங்கினார். மக்கள் உமர் (ரழி) அவர்களை விட்டு நீங்கி அபூபக்ர் (ரழி) அவர்களை நோக்கி விரைந்தனர். அப்போது அபூபக்ர் (ரழி) ‘‘உங்களில் யார் முஹம்மதை வணங்கிக் கொண்டிருந்தாரோ! நிச்சயம் முஹம்மது மரணித்தார் என்பதைத் தெரிந்து கொள்ளட்டும்! உங்களில் யார் அல்லாஹ்வை வணங்கினாரோ! நிச்சயமாக அல்லாஹ் என்றென்றும் உயிருடன் இருப்பவன் மரணிக்க மாட்டான். அல்லாஹ் கூறுகிறான்:

முஹம்மது (நபி) ஒரு தூதரேயன்றி (இறக்காமல் இருக்கக் கூடிய இறைவன்) அல்ல. அவருக்கு முன்னரும் (இவ்வாறே) பல தூதர்கள் சென்றிருக்கின்றனர். அவர் இறந்துவிட்டால் அல்லது வெட்டப்பட்டு விட்டால் நீங்கள் புறங்காட்டிச் சென்று விடுவீர்களோ? (அவ்வாறு) எவரேனும் புறங்காட்டிச் சென்று விட்டால் அதனால் அவன் அல்லாஹ்வுக்கு ஒன்றும் நஷ்டம் உண்டாக்கி விடமாட்டான். நன்றி அறிபவர்களுக்கு அல்லாஹ் அதிசீக்கிரத்தில் (நற்)கூலியைத் தருவான். (அல்குர்ஆன் 3:144)

என்று உரையாற்றினார்கள்.

இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்கள்: ‘‘அபூபக்ர் (ரழி) இந்த வசனத்தை ஓதிக் காட்டும் வரை அல்லாஹ் இதனை இறக்கி வைத்ததை மக்கள் அறியாதது போல் இருந்தனர். அபூபக்ரிடமிருந்து அதை செவியேற்ற மக்கள் அதனையே திரும்பத் திரும்ப ஓதினர்.’’

இப்னுல் முஸய்ம்ப் (ரழி) கூறுகிறார்: "அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபூபக்ர் (ரழி) அந்த வசனத்தை ஓதியவுடன் அவர்கள் கூறுவதுதான் உண்மை என நான் அறிந்து கொண்டேன். என்னுடைய கால்கள் சோர்ந்து என்னால் நிற்க இயலவில்லை. அப்படியே பூமியில் சாய்ந்து விட்டேன். நபி (ஸல்) இறந்து விட்டார்கள் என்பதையும் அறிந்து கொண்டேன்." (ஸஹீஹுல் புகாரி)

### அடக்கம் செய்ய ஏற்பாடுகள்

நபி (ஸல்) அவர்களை அடக்கம் செய்வதற்கு முன்னதாக முஸ்லிம்களின் காரியங்களை நிர்வகிக்கும் கலீஃபாவை நிர்ணயம் செய்வதில் மக்கள் ஈடுபட்டனர். பனூ சாம்தாவின் வீட்டு வராண்டாவில் இது தொடர்பாக நடந்த விவாதங்களுக்கும் கருத்து பரிமாற்றங்களுக்கும் பிறகு, முஹாஜிர்களும் அன்சாரிகளும் ஒரு மனதாக அபூபக்ரை கலீஃபாவாக நிர்ணயித்தனர். இந்த வேலையில் திங்கட்கிழமையின் பகல் முழுதும் முடிந்து இரவும் முழுமையாக முடிந்தது. அது வரை நபி (ஸல்) அவர்களின் புனித உடல் ஹிபரா போர்வையுடன் இருந்தது. நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்கள் அறையை மூடி வைத்திருந்தனர். செவ்வாய் பகல் அன்று நபி (ஸல்) அவர்களின் ஆடையைக் களையாமல் அப்படியே குளிப்பாட்டினர்.

இப்பணியில் அப்பாஸ், அலீ, ஃபழ்ல் இப்னு அப்பாஸ், குஸம் இப்னு அப்பாஸ், நபி (ஸல்) அவர்களின் முன்னாள் அடிமை ஷுக்ரான், உஸாமா இப்னு ஜைத், அவ்ஸ் இப்னு கவ்லீ (ரழி) ஆகியோர் ஈடுபட்டனர்.

அப்பாஸ், ஃபழ்ல், குஸம் (ரழி) ஆகியோர் நபி (ஸல்) அவர்களின் உடலைப் புரட்ட, உஸாமாவும் ஷுக்ரானும் நீர் ஊற்ற, அலீ (ரழி) குளிப்பாட்டினார்கள். அவ்ஸ் (ரழி) நபி (ஸல்) அவர்களை தனது நெஞ்சின் மீது சாய்த்திருந்தார்கள். (இப்னு மாஜா)

இவ்வாறே இலந்தை இலை கலந்த நீரால் மும்முறை குளிப்பாட்டினார்கள். நபி (ஸல்) அவர்களைக் குளிப்பாட்டுவதற்காக ஸஅதுப்னு கைஸமாவுக்குச் சொந்தமான 'கர்ஸ்' என்ற கிணற்றிலிருந்து நீர் கொண்டு வரப்பட்டது. இந்நீரையே நபி (ஸல்) வாழ்நாளில் அருந்தி வந்தார்கள். (தபகாத் இப்னு ஸஅத்)

நபி (ஸல்) அவர்களை வெள்ளை நிற யமன் நாட்டு பருத்தி ஆடையினால் (கஃபன்) போர்த்தினார்கள். அதில் தைக்கப்பட்ட சட்டையோ தலைப்பாகையோ ஏதுமில்லை. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

### அடக்கம் செய்வது

நபி (ஸல்) அவர்களை எங்கு அடக்கம் செய்வது என்று கேள்வி எழுந்தது. அப்போது அபூபக்ர் (ரழி) "இறைத்தூதர்களின் உயிர் எங்கு பிரிகிறதோ அங்குதான் அவர்கள் அடக்கம் செய்யப்படுவார்கள்" என்று நபி (ஸல்) கூற, நான் கேட்டிருக்கிறேன் என்றார்கள். உடனடியாக நபி (ஸல்) மரணித்த இடத்திலுள்ள விரிப்பை அகற்றி அங்கேயே அபூ தல்ஹா (ரழி) குழி தோண்டி அதில் பக்கவாட்டில் ஒரு குழி அமைத்தார்கள். மக்கள் பத்து பத்து பேர் கொண்ட கூட்டம், கூட்டமாக நபி (ஸல்) அவர்களின் அறைக்குள் சென்று தனித்தனியாக தொழுதார்கள்.

முதலில் நெருங்கிய குடும்பத்தார்களும், பின்பு முஹாஜிர்களும், அடுத்து அன்சாரிகளும், தொடர்ந்து சிறுவர்களும், பின்னர் பெண்களும் தொழுதனர். சிலர், "பெண்கள் முதலிலும் அடுத்து சிறுவர்களும் தொழுததாக அறிவிக்கின்றனர். (முவத்தா மாலிக், தபகாத் இப்னு ஸஅத்)

இதே நிலையில் செவ்வாயும் முழுமையாக கழிந்து புதன் இரவின் பெரும் பகுதி கழிந்தது. இதைப் பற்றி ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்:

“இரவின் நடுநிசியில் மண்வெட்டிகளின் சப்தத்தை வைத்தே நபி (ஸல்) அடக்கம் செய்யப்பட்டதை அறிந்து கொண்டோம்.”

இரவின் கடைசிப் பகுதியில் நல்லடக்கம் நடைபெற்றதாகவும் ஓர் அறிவிப்பு உள்ளது. (முஸ்னது அஹ்மது)

## நபியவர்களின் குடும்பம்

1) ஹிஜ்ரத்துக்கு முன்பு நபி (ஸல்) அவர்களின் வீடு மக்காவில் இருந்தது. அதில் நபி (ஸல்), அவர்களின் மனைவி கதீஜா பின்த் குவைலிது (ரழி) இருந்தார்கள். நபி (ஸல்) தங்களது 25வது வயதில் 40 வயது நிரம்பிய கதீஜா (ரழி) அவர்களை மணமுடித்தார்கள். அவர்கள் உயிருடன் இருக்கும் வரை நபி (ஸல்) வேறு யாரையும் மணமுடிக்கவில்லை. கதீஜா (ரழி) அவர்களின் மூலமாக நபி (ஸல்) அவர்களுக்குப் பல ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் பிறந்தனர். ஆண் குழந்தைகள் யாரும் உயிருடன் இல்லை. பெண் பிள்ளைகள் ஜைனப், ருகய்யா, உம்மு குல்சூம், ஃபாத்திமா (ரழி) ஆகியோராகும்.

ஹிஜ்ரத்துக்கு முன்பாக அபுல் ஆஸ் இப்னு ரபீஆவுக்கு ஜைனபை நபி (ஸல்) மணமுடித்து வைத்தார்கள். இவர் ஜைனபுடைய சிறிய தாயாரின் மகனாவார். ருகையா, உம்மு குல்சூம் ஆகிய இருவரையும் ஒருவர் பின் ஒருவராக உஸ்மானுக்கு மணமுடித்து வைத்தார்கள். பத்ரு, உஹுதுப் போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் ஃபாத்திமாவை அலீக்கு மணமுடித்துத் தந்தார்கள். ஃபாத்திமாவுக்கு ஹசன், ஹுசைன், ஜைனப், உம்மு குல்சூம் என்ற நான்கு பிள்ளைகள் இருந்தனர்.

மற்ற முஃமின்களை விட நபி (ஸல்) அவர்களுக்குப் பல காரணங்களை முன்னிட்டு நான்குக்கு மேற்பட்ட திருமணங்கள் செய்வது ஆகுமானதாக இருந்தது. நபி (ஸல்) பதிமூன்று திருமணங்கள் செய்திருந்தார்கள். அதில் கதீஜாவும், ‘ஏழைகளின் தாய்’ என புகழப்பட்ட ஜைனப் பின்த் குஸைமாவும் நபி (ஸல்) உயிருடன் வாழ்ந்த காலத்திலேயே மரணித்து விட்டார்கள். ஏனைய ஒன்பது மனைவிகள் உயிருடன் இருக்கும்போது நபி (ஸல்) மரணமானார்கள். மற்ற இரண்டு பெண்களை மணமுடித்து, பிறகு பிரிந்து விட்டார்கள்.

2) ஸவ்தா பின்த் ஜம்ஆ (ரழி) - கதீஜா (ரழி) அவர்கள் இறந்து ஒரு மாதத்திற்குப் பின் நபித்துவத்துடைய பத்தாம் ஆண்டு ஷவ்வால் மாதத்தில் இவர்களை மணமுடித்தார்கள். ஒன்றுவிட்ட சகோதரன் மகன் சக்ரான் இப்னு அம்ருக்கு இவரை மணமுடித்து தரப்பட்டிருந்தது. அவன் மரணத்திற்குப் பின் நபி (ஸல்) ஸவ்தாவை மணமுடித்தார்கள். இவர்கள் ஹிஜ்ரி 54, ஷவ்வால் மாதம் மதீனாவில் மரணமடைந்தார்கள்.

3) ஆயிஷா பின்த் அபூபக்ர் (ரழி) - ஸவ்தா (ரழி) அவர்களை மணமுடித்து ஓராண்டுக்குப் பின் நபித்துவத்துடைய 11 ஆம் ஆண்டு ஷவ்வால் மாதத்தில், ஹிஜ்ரத்துக்கு இரண்டாண்டுகள், ஐந்து மாதங்களுக்கு முன் ஆயிஷாவை அவரது 6 வது வயதில் மணமுடித்தார்கள். ஹிஜ்ரத் செய்து மதீனா வந்த பின் ஏழு மாதங்கள் கழித்து ஆயிஷாவின் 9 வது வயதில் அவருடன் வாழ்க்கையைத் தொடங்கினார்கள். ஆயிஷா (ரழி) மட்டுமே நபி (ஸல்) அவர்களின் மனைவியரில் கன்னிப் பெண்ணாக இருந்தார்கள். நபி (ஸல்) அவர்களை மிக அதிகம் நேசித்தார்கள். இச்சமுதாயப் பெண்களில் அவர்களே அதிக மார்க்க ஞானமுள்ளவர்களாகத் திகழ்ந்தார்கள்.

ஏனைய உணவுகளை விட ‘ஸரீத்’ என்ற உணவுக்குரிய சிறப்பைப் போன்று ஏனைய பெண்களை விட ஆயிஷா (ரழி) மிகச் சிறப்புப் பெற்றிருந்தார்கள். ஹிஜ்ரி 57 அல்லது 58

ஆம் ஆண்டு ரமழான் பிறை 17ல் மரணமானார்கள். பகீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

4) ஹஃப்ஸா பின்த் உமர் (ரழி) - இவரது கணவர் குனைஸ் இப்னு ஹுதாஃபா சஹ்மி (ரழி). பத்ர்-உஹுதுக்கு இடைப்பட்ட காலத்தில் மரணமாகிவிடவே, இவர் விதவையானார். இத்தா முடிந்து, ஹிஜ்ரி 3, ஷஅபான் மாதத்தில் இவரை நபி (ஸல்) மணமுடித்துக் கொண்டார்கள். ஹஃப்ஸா (ரழி) ஹிஜ்ரி 45ல், ஷஅபான் மாதம் தமது 60வது வயதில் மரணமானார்கள். இவர்களையும் பகீஃயில் அடக்கம் செய்யப்பட்டது.

5) ஜைனப் பின்த் குஜைமா (ரழி) - இவர் ஹிலால் இப்னு ஆமிர் இப்னு ஸஃஸஆவின் குடும்பத்தைச் சார்ந்தவர். இவர் ஏழைகள் மீது அதிகம் இரக்கமும் கருணையும் உடையவராக இருந்ததால் (உம்முல் மஸாகீன்) 'ஏழைகளின் தாய்' எனச் சிறப்பித்துக் கூறப்பட்டார். இவர் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷின் மனைவியாக இருந்தார். கணவர் உஹுத் போல் ஷஹீதான பின்பு அவரை நபி (ஸல்) ஹிஜ்ரி 4ல் மணமுடித்தார்கள். மணமுடித்து ஏறக்குறைய 3 மாதங்கள் கழித்து ரபீஉல் அவ்வல் மாதத்தில் மரணமடைந்தார். நபி (ஸல்) அவருக்குத் தொழ வைத்து பகீஃயில் அடக்கம் செய்தார்கள்.

6) உம்மு ஸலமா ஹிந்த் பின்த் அபூ உமையா (ரழி) - இவர் அபூ ஸலமாவின் மனைவியாக இருந்தார். அந்தத் தம்பதியருக்கு நிறைய பிள்ளைகள் இருந்தனர். ஹிஜ்ரி 4, ஜுமாதா அல்ஆகிராவில் அபூ ஸலமா (ரழி) மரணமானார். அதே ஆண்டு ஷவ்வால் மாதக் கடைசியில் நபி (ஸல்) உம்மு ஸலமாவை மணமுடித்தார்கள். இவர் மார்க்க ஞானமும் நுண்ணறிவும் கொண்ட பெண்ணாகத் திகழ்ந்தார்கள். இவர்கள் ஹிஜ்ரி 59 (சிலரின் கூற்றுப்படி ஹிஜ்ரி 62) தமது 84வது வயதில் மரணமடைந்தார்கள். இவரையும் பகீஃயில் அடக்கம் செய்யப்பட்டது.

7) ஜைனப் பின்த் ஜஹ்ஷ் இப்னு ருபாப் (ரழி) - இவர் அஸத் இப்னு குஜைமாவின் குடும்பத்தைச் சார்ந்தவர். நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகனான ஜைத் இப்னு ஹாஸாவின் மனைவியாக இருந்தார். ஜைத் (ரழி) தலாக் கொடுத்து, இத்தா காலம் முடிந்தவுடன் நபி (ஸல்) அவர்களுக்கு அவரை அல்லாஹ் மணமுடித்து வைத்ததாக பின்வரும் வசனத்தில் கூறுகிறான்.

'ஜைது' (என்பவர் மனம் மாறி, தன் மனைவியைத்) தலாக் கூறிவிட்ட பின்னர் நாம் அப்பெண்ணை உங்களுக்கு திருமணம் செய்து வைத்தோம். (அல்குர்ஆன் 33:37)

வளர்ப்பு மகன் தொடர்பான சட்டங்கள் அத்தியாயம் அஹ்ஜாபில் இறக்கப்பட்டன. அதனை அடுத்துப் பார்ப்போம். ஹிஜ்ரி 5 (சிலரின் கூற்றுப்படி ஹிஜ்ரி 4, துல்கஅதா மாதம் நபி (ஸல்) ஜைனப் (ரழி) அவர்களைத் திருமணம் செய்தார்கள். இவர் அதிகம் தர்மம் செய்பவராகவும் அதிகம் வணக்கம் புரிபவராகவும் விளங்கினார். தங்களது 53வது வயதில் ஹிஜ்ரி 20ல் மரணமெய்தினார்கள். நபி (ஸல்) அவர்களின் மனைவியரில் நபியை அடுத்து மரணமெய்தியவர்களில் இவரே முதலாமவர். இவருக்கு உமர் (ரழி) தொழுகை நடத்தி பகீஃயில் அடக்கம் செய்தார்கள்.

8) ஜுவைய்யா பின்த் அல்ஹாரிஸ் (ரழி) - இவன் தந்தை ஹாரிஸ், குஜாஆ கோத்திரத்தைச் சேர்ந்த முஸ்தலக் கிளையினரின் தலைவராவார். நபி (ஸல்) பனூ முஸ்தலக் மீது படையெடுத்த போது கைதியான இவர், ஸாபித் இப்னு கைஸ் இப்னு சம்மாஸ் (ரழி) என்ற நபித்தோழருக்கு (கனீமா) வெற்றிப் பொருளில் பங்காகக் கிடைத்தார். இவரைச் சில தொகைகள் பெற்றுக் கொண்டு உரிமையிட ஸாபித் முடிவு செய்தார். அத்தொகையை நபி (ஸல்) செலுத்தி விட்டு ஹிஜ்ரி 6, (சிலரின் கூற்றுப்படி ஹிஜ்ரி 5) ஷஅபானில் மணமுடித்துக் கொண்டார்கள். இத்திருமணத்தால் நபி (ஸல்) அவர்களின் மனைவியின் உறவினர்களை எங்ஙனம் அடிமையாக வைத்திருப்பது என்று எண்ணி முஸ்லிம்கள்

தங்களிடம் அடிமைகளாக இருந்த நூறு பனூ முஸ்தலக் குடும்பத்தார்கள் அனைவரையும் விடுதலை செய்து விட்டனர். எனவே, தனது சமூகத்தாருக்கு அல்லாஹ்வின் அருள் பொருந்தியப் பெண்ணாக இவர் விளங்கினார். தனது 65வது வயதில் ஹிஜ்ரி 56 (சிலரின் கூற்றுப்படி ஹிஜ்ரி 55) ரபீஉல் அவ்வல் மாதத்தில் மரணமடைந்தார்.

9) உம்மு ஹபீபா ரம்லா பின்த் அபூஸுஃப்யான் (ரழி) - இவர் உபைதுல்லாஹ் இப்னு ஜஹ்ஷின் மனைவியாக இருந்தார். அவர் மூலம் ஹபீபா என்ற பெண் குழந்தை பிறந்ததால் உம்மு ஹபீபா என்றழைக்கப்பட்டார். இவர் தனது கணவருடன் ஹபஷாவுக்கு ஹிஜ்ரத் செய்து சென்றார். அங்கு உபைதுல்லாஹ் கிறிஸ்துவராக மாறினார். சில காலத்திற்குப் பின் அங்கேயே இறந்து போனார். உம்மு ஹபீபா (ரழி) இஸ்லாமில் நிலையாக இருந்தார். ஹிஜ்ரி 7, முஹர்ரம் மாதத்தில் அம்ர் இப்னு உமைய்யா ழம்ரீ என்ற தோழரை மன்னர் நஜ்ஜாஷியிடம் அனுப்பி, அங்குள்ள முஸ்லிம்களை அழைத்து வரச் சொன்ன போது உம்மு ஹபீபாவை மணமுடிக்கும் விஷயமாகவும் நஜ்ஜாஷியிடம் கொடுக்கப்பட்ட கடிதத்தில் நபி (ஸல்) குறிப்பிட்டிருந்தார்கள். அவர் நபி (ஸல்) சார்பாக நானூறு திர்ஹங்கள் மஹர் கொடுத்து உம்மு ஹபீபாவை நபி (ஸல்) அவர்களுக்கு மணமுடித்து வைத்து ‘ஷுரஹ்பீல் இப்னு ஹஸ்னா’ என்ற தோழருடன் அனுப்பி வைத்தார். இக்குழுவினர் நபி (ஸல்) கைபர் போரில் ஈடுபட்டிருந்த போது அங்கு வந்தனர். போரிலிருந்து திரும்பிய பின் நபி (ஸல்) இவருடன் வாழ்க்கையைத் தொடங்கினார்கள். ஹிஜ்ரி 42ல் இவர் மரணமெய்தினார். சிலர் ஹிஜ்ரி 44 என்றும், சிலர் 50 என்றும் கூறுகின்றனர்.

10) ஸஃபிய்யா பின்து ஹய் (ரழி) - இஸ்ரவேலர்களின் பனூ நழீர் கூட்டத்தாருடைய தலைவன் மகள். கைபர் போரில் கைதியானார். இவரை நபி (ஸல்) தனக்காக எடுத்துக் கொண்டு இஸ்லாமுக்கு வரும்படி அழைத்தார்கள். அவர் அதை ஏற்றுக் கொள்ளவே நபி (ஸல்) அவரை உரிமைவிட்டு கைபரிலிருந்து திரும்பும் போது ஹிஜ்ரி 7ல் மணமுடித்துக் கொண்டார்கள். மதீனாவுக்குச் செல்லும் வழியில் கைபரிலிருந்து 12 மைல் தொலைவிலுள்ள ‘சத்துஸ் ஸஹ்பா’ எனுமிடத்தில் இவருடன் நபி (ஸல்) வாழ்க்கையைத் தொடங்கினார்கள்.

11) மைமூனா பின்த் ஹாரிஸ் (ரழி) - இவர் உம்முல் ஃபழ்ல் லுபாபா பின்த் ஹாரிஸின் சகோதரியாவார். நபி (ஸல்) உம்ரத்துல் கழாவை முடித்துத் திரும்பும் போது ஹிஜ்ரி 7, துல்கஅதாவில் இவரை மணமுடித்தார்கள். மக்காவிலிருந்து 9 மைல் தொலைவிலுள்ள ‘சஃப்’ என்ற இடத்தில் இவருடன் நபி (ஸல்) இல்லற வாழ்வைத் தொடங்கினார்கள். ஹிஜ்ரி 61ல் இதே சஃப் என்ற இடத்திலேயே இவர் மரணமடைந்தார் அங்கேயே அடக்கம் செய்யப்பட்டார். மரணமடைந்த ஆண்டு சிலர் ஹிஜ்ரி 38 என்றும், சிலர் 63 என்றும் கூறுகிறார்கள்.

ஆக, மேற்கூறிய 11 பெண்களை நபி (ஸல்) மணமுடித்து வாழ்க்கை நடத்தினார்கள். இவர்களில் கதீஜா, ஜைனப் பின்த் குஜைமா (ரழி) ஆகிய இருவரும் நபி (ஸல்) வாழும்போதே மரணமானார்கள். மற்ற மனைவிமார்கள் அனைவரும் வாழும்போது நபி (ஸல்) மரணமானார்கள். இவர்களைத் தவிர, கிலாஃப் குடும்பத்தாரைச் சேர்ந்த ஒரு பெண்ணையும், கிந்தா குடும்பத்தைச் சேர்ந்த ஜூவைனிய்யா என்ற பெண்ணையும் நபி (ஸல்) மணமுடித்தார்கள். ஆனால், அவர்களுடன் வாழ்க்கை நடத்தவில்லை. இது தொடர்பான பல மாறுபட்ட கருத்துகள் உள்ளன. அவற்றை இங்கு விவரிக்க இயலாது.

நபி (ஸல்) அவர்களுக்கு இரு அடிமைப் பெண்கள் இருந்தனர். ஒன்று: மன்னர் முகவ்கிஸ் வழங்கிய மாயா கிஃப்திய்யா. நபி (ஸல்) அவர்கள் மூலம் இவருக்கு ‘இப்றாஹீம்’ என்ற ஆண் மகவு பிறந்து பாலப்பருவத்திலேயே (ஹிஜ்ரி 10, ஷவ்வால் பிறை 28 அல்லது 29, (கி.பி. 632 ஜனவரி 27ல்) இறந்து விட்டது.

இரண்டாவது அடிமை: ரைஹானா பின்த் ஜைது. இவர் பனூ நளீர் அல்லது பனூ குறைளா சமூகத்தைச் சேர்ந்தவர். பனூ குறைளாவுடன் போரில் கைது செய்யப்பட்ட இப்பெண்ணை நபி (ஸல்) தனது பங்கில் எடுத்துக் கொண்டார்கள். இவரை உரிமையிட்ட பிறகு நபி (ஸல்) மணமுடித்தார்கள், எனவே, இவர் நபி (ஸல்) அவர்களின் மனைவியாகி விடுகிறார் என்று வேறு சிலர் கூறுகின்றனர். அறிஞர் இப்னுல் கய்'' (ர) 'முந்திய கூற்றே ஏற்றமானது' என்கின்றார். அபூ உபைதா (ரஹ்) என்ற அறிஞர் "மேலும் இரண்டு அடிமைப் பெண்கள் நபி (ஸல்) அவர்களிடம் இருந்தார்கள் ஒருவர் ஜமீலா, இவர் போர்க் கைதியாக கிடைத்தவர். மற்றொருவர் பெயர் தெரியவில்லை, அவரை ஜைனப் பின்த் ஜஹ்ஷ் நபியவர்களுக்கு அன்பளிப்பாக வழங்கினார்கள்'' என்கின்றார். (ஜாதுல் மஆது)

### பலதார மணம் புரிந்தது ஏன்?

நபி (ஸல்) நல்ல உடல் வலிமையும் திடகாத்திரமும் கொண்ட வாலிபக் காலத்தில் தன்னை விட 15 வயது அதிகமான கதீஜா (ரழி) அவர்களுடனே ஏறக்குறைய முப்பது ஆண்டுகள் வாழ்ந்தார்கள். கதீஜா (ரழி) மரணமான பின்பே ஸவ்தாவை மணமுடித்தார்கள். இவரும் வயதில் நபி (ஸல்) அவர்களை விட மூத்தவராக இருந்தார். அதற்குப் பின் தனது வயோதிக காலத்தில்தான் பல திருமணங்களைச் செய்தார்கள். இதை நன்கு சிந்திப்பவர் "நபி (ஸல்) பல திருமணங்களை செய்தது, அதிக ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்காகத்தான்'' என்று அறவே கூற முடியாது. மாறாக, அதற்குப் பல உயர்ந்த உன்னத நோக்கங்கள் இருந்திருக்க வேண்டும் என அறியலாம்.

அபூபக்ர் (ரழி) அவர்களின் மகள் ஆயிஷாவையும், உமர் (ரழி) அவர்களின் மகள் ஹஃப்ஸாவையும் நபி (ஸல்) மணமுடித்து அபூபக்ர் (ரழி), உமர் (ரழி) ஆகிய இருவருடனும் உறவை பலப்படுத்திக் கொண்டார்கள். இவ்வாறு அலீ (ரழி) அவர்களுக்குத் தனது மகள் ஃபாத்திமாவையும், உஸ்மான் (ரழி) அவர்களுக்குத் தங்களது மகள்கள் ருகைய்யா பின்னர் உம்மு குல்சூமையும் மணமுடித்துக் கொடுத்து உறவை செம்மைப்படுத்திக் கொண்டார்கள். இந்த நால்வரும் இஸ்லாமுடைய வளர்ச்சிக்காக பல இக்கட்டான நேரங்களில் உடல், பொருள் தியாகங்கள் புரிந்து இஸ்லாமுக்கு வெற்றியைத் தேடித் தந்தவர்கள். எனவே, இந்த நால்வருடன் மக்கள் அனைவரும் நல்லுறவுகளை உறுதிபடுத்திக் கொள்ள வேண்டும் என்று இத்திருமணங்கள் மூலம் நபி (ஸல்) முஸ்லிம்களுக்குச் சுட்டிக்காட்டுகிறார்கள்.

அரபியர்கள் பண்டைக் கால வழக்கப்படி மாமனார் வீட்டு உறவைப் பெரிதும் மதித்தனர். இவ்வுறவு பல மாறுபட்ட குடும்பங்களுக்கிடையில் நெருக்கத்தை உண்டு பண்ணுவதற்குரிய வழிகளில் ஒன்றாக இருந்தது. மாமனார் வீட்டு உறவுகளுடன் சண்டையிடுவதையும், போர் புரிவதையும் தங்களுக்கு மகா கேவலமாகவும் இழுக்காகவும் கருதினர். பல மாறுபட்ட வமிசங்களிலிருந்து நபி (ஸல்) தங்களது திருமணங்களைச் செய்து அந்த வமிசங்களுக்கிடையே உள்ள பகைமையையும் கோபத்தையும் தணிக்க முயற்சித்தார்கள்.

எடுத்துக்காட்டாக, உம்மு ஸலமா (ரழி) - இவர் மக்ஜூம் கிளையைச் சேர்ந்தவர். அபூ ஜஹ்லும், காலித் இப்னு வலீதும் இதே கிளையைச் சேர்ந்தவர்கள்தான். (அபூஜஹ்ல் பத்ரு போரில் கொல்லப்பட்டான்) நபி (ஸல்) அவர்களைப் பல போர்களில் எதிர்த்து வந்த காலித் இப்னு வலீத் (ரழி) தனது கிளையைச் சேர்ந்த ஒரு பெண்ணை நபி (ஸல்) மணமுடித்துக் கொண்டதால் தனது எதிர்ப்பைக் கைவிட்டு குறுகிய காலத்திற்குள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து இஸ்லாமை ஏற்றார்.

இவ்வாறே உம்மு ஹபீபா (ரழி) அவர்களைத் திருமணம் செய்தார்கள். இவர் அபூ ஸுஃப்யானின் மகளாவார். அபூ ஸுஃப்யான் இஸ்லாமுக்கும் முஸ்லிம்களுக்கும் செய்த கொடுமைகள் அனைவரும் அறிந்ததே. உம்மு ஹபீபாவை நபி (ஸல்) திருமணம் செய்தபின் அபூஸுஃப்யான் தனது தீய செயல்களிலிருந்து சற்றே பின்வாங்கினார்.

அதுபோலவே, பனூ நழீர் மற்றும் பனூ முஸ்தலக் ஆகிய இரு யூத வமிசங்களிலிருந்து ஸஃபிய்யா மற்றும் ஜுவைரியாவை மணமுடித்தார்கள். இதனால் இவ்விரு குலத்தாரும் நபி (ஸல்) அவர்களிடம் பகைமை காட்டிவந்ததை நிறுத்திக் கொண்டனர். அதுமட்டுமின்றி ஜுவைய்யா (ரழி) அவர்களினால் அவர்களது சமூதாயத்திற்குப் பெரும் நன்மைகளும் பலன்களும் கிடைத்தன. நபி (ஸல்) பெண்ணெடுத்த சமூகத்தார்களை அடிமையாக்கி வைப்பதா? என்று கைதிகளாக இருந்த அவர்களது சமூகத்தின் நூறு குடும்பத்தார்களை நபித்தோழர்கள் உரிமையிட்டார்கள். உள்ளங்களில் இந்த உதவி எவ்வளவு பெரியமாற்றத்தை ஏற்படுத்தியது என்பதை யாரும் சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

இந்த பலன்களுக்கிடையில் மேலான மற்றும் ஒரு பலன் இத்திருமணங்களால் ஏற்படுகின்றது. அதன் விளக்கமாவது:

நபி (ஸல்) அவர்களுடைய சமுதாயத்தினர் ஒழுக்கம், பண்பாடு, கலாச்சாரம் மற்றும் சமூகத்தை அமைப்பதற்குத் தேவையான பண்புகளை அறியாதவர்களாக இருந்தனர். இத்தகைய சமுதாயத்தைப் பண்படுத்தவும், சீர்திருத்தவும் வேண்டும் என நபி (ஸல்) அவர்கள் பணிக்கப்பட்டார்கள்.

இஸ்லாமிய சமூகத்தின் அடிப்படை, ஓர் ஆண் அந்நியப் பெண்ணுடன் கலப்பதற்கு அனுமதி அளிக்கவில்லை. எனவே, ஆண்களால் பெண்களை முழுமையாக சீர்திருத்துவதென்பது இச்சட்டத்தைக் கவனித்து முடியாத ஒன்று. ஆனால், பெண்களையும் சீர்திருத்த வேண்டும் என்ற அவசியம் ஆண்களைச் சீர்திருத்த வேண்டும் என்ற அவசியத்தை விட சற்றும் குறைவானதல்ல மாறாக, அதைவிட மிக அதிகமானதே.

ஆகவே, மகத்தான இச்சீர்திருத்தப் பணியை நிறைவேற்ற அதற்குத் தகுதிவாய்ந்த மாறுபட்ட வயதும் திறமையும் கொண்ட பெண்களை தனக்குத் துணையாக தேர்ந்தெடுத்துக் கொள்வதைத் தவிர நபி (ஸல்) அவர்களுக்கு வேறு வழி கிடையாது. அப்போதுதான் வீட்டுப் பெண்களுக்கு ஒழுக்கப் பண்புகளையும் மார்க்கச் சட்டங்களையும் வழங்கலாம். அதன்மூலம் அவர்களை மற்ற கிராம, நகர, வாலிப, வயோதிகப் பெண்களுக்கு மார்க்கப் பயிற்சி தரும் ஆசிரியைகளாக உருவாக்க முடியும். அப்பெண்மணிகள் நபி (ஸல்) அவர்களின் சார்பாக பெண்ணினத்திற்கு மார்க்கத்தை எடுத்துரைக்கும் பொறுப்பையும் நிறைவேற்றுவார்கள்.

நபி (ஸல்) அவர்களின் மனைவிகளான முஃமின்களின் தாய்மார்கள், நபி (ஸல்) தங்கள் வீடுகளில் எப்படி இல்லற வாழ்க்கையை நடத்தினார்கள் என்ற செய்திகளை நமக்குத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்கள். இதில் அவர்களது பங்கு மகத்தானது. குறிப்பாக, நபி (ஸல்) அவர்களுடன் நீண்ட நாட்கள் வாழ்ந்த ஆயிஷா (ரழி) போன்ற துணைவியர் நபி (ஸல்) அவர்களின் சொல், செயல்களின் பெரும்பாலானவற்றை சமுதாயத்திற்குத் தெரிவித்துள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்களின் திருமணங்களில் ஒன்று ஊறிப்போன அறியாமைக் கால வழக்கத்தை தகர்ப்பதற்காக நடத்தப்பட்டது. அதாவது, அரபியர்களிடம் வளர்ப்பு மகனை பெற்ற மகனாக கருதும் வழக்கம் இருந்தது. பெற்ற மகனுக்குக் கொடுக்கும் உரிமைகளையும், கடமைகளையும் வளர்ப்பு மகனுக்கும் வழங்கினர். இவ்வழக்கம் அரபியர்களிடம் ஆழமாக வேரூன்றி இருந்தது. இதைக் களைவது இலகுவானதல்ல. திருமணம், விவாகரத்து, சொத்துரிமை போன்றவற்றில் இஸ்லாமின் சட்டங்களுக்கும் அடிப்படைகளுக்கும் இக்கொள்கை முரணாக இருக்கிறது.

மேலும், சமூகத்திலிருந்து எந்த மானக்கேடான அருவருக்கத்தக்க பழக்க வழக்கங்களை அழிப்பதற்காக இஸ்லாம் இந்த உலகத்தில் உதித்ததோ, அவை அனைத்தையும் இக்கொள்கை சமுதாயத்திற்குள் இழுத்து வருகிறது. இந்த சட்டத்தை நபி (ஸல்) அவர்களின்

கரத்தால் நபி (ஸல்) அவர்களின் சொந்த வாழ்க்கை மூலமாகவே உடைக்க வேண்டுமென அல்லாஹ் நாடினான். நபி (ஸல்) அவர்களின் மாமி மகள் ஜைனப் பின்த் ஜஹ்ஷை ஜைதுப்னு ஹாஸா (ரழி) மணமுடித்திருந்தார். ஜைதை சிறு வயது முதலே நபி (ஸல்) வளர்த்து வந்ததால் இவரை ஜைத் இப்னு முஹம்மது (முஹம்மதின் மகன் ஜைது) என்றே மக்கள் அழைத்தனர். ஆனால், இத்தம்பதியடையே சுமுகமான உறவு நிகழவில்லை. இதனால் ஜைது (ரழி) தனது மனைவியை விவாகரத்து செய்துவிட எண்ணி நபி (ஸல்) அவர்களிடம் ஆலோசித்தார்.

ஜைது (ரழி) தனது மனைவியை விவாகரத்து செய்து விட்டால் அவரை, தானே மணக்க நேரிடும் என அல்லாஹ்வின் அறிவிப்பு மூலம் நபி (ஸல்) அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆனால், இத்திருமணம் நடந்தால் இணைவைப்பவர்கள் நபி (ஸல்) அவர்களையும் முஸ்லிம்களையும் பழிப்பார்கள். நயவஞ்சகர்களும் யூதர்களும் முஷ்ரிக்குகளும் நபி (ஸல்) அவர்களுக்கு எதிராக குழப்பங்களையும் தவறானக் குற்றச்சாட்டுகளையும் பரப்புவார்கள். அதனால், பலவீனமான நம்பிக்கையுடைய முஸ்லிம்களின் உள்ளத்தில் கெட்ட எண்ணங்கள் ஏற்படலாம். ஆகவே, ஜைது (ரழி) தலாக் விஷயமாக பேசிய போது தலாக் விடவேண்டாம் என நபி (ஸல்) அவருக்கு அறிவுரை கூறினார்கள்.

நபி (ஸல்) உணர்ந்த இந்த அச்சமும் தடுமாற்றமும் அல்லாஹ்வுக்கு பிடிக்கவில்லை. எனவே, நபியவர்களை கண்டித்து அடுத்துவரும் வசனத்தை அருளினான்.

(நபியே!) அல்லாஹ்வும், நீங்களும் எவருக்கு அருள் புரிந்திருந்தீர்களோ அவரை நோக்கி ‘‘நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து உங்களுடைய மனைவியை (நீக்காது) உங்களிடமே நிறுத்திக் கொள்ளுங்கள்’’ என்று கூறிய சமயத்தில், நீங்கள் மனிதர்களுக்குப் பயந்து அல்லாஹ் வெளியாக்க இருப்பதை உங்கள் மனதில் மறைத்தீர்கள். நீங்கள் பயப்படத் தகுதி உடையவன் அல்லாஹ்தான் (மனிதர்கள் அல்ல.) (அல்குர்ஆன் 33:37)

ஆனால், நடக்க வேண்டியது நடந்து விட்டது. ஜைது (ரழி) தன் மனைவியை தலாக் கொடுத்து விட்டார், நபி (ஸல்) பனூ குறைளா யூதர்களை முற்றுகையிட்ட காலக்கட்டத்தில் ஜைனப் (ரழி) அவர்களுடைய இத்தா முடிந்தவுடன் நபி (ஸல்) அவரைத் திருமணம் செய்து கொண்டார்கள். இதனை நபியவர்களின் விருப்பத்திற்கு விடாமல் தானே மணமுடித்து வைத்ததாக அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகிறான்.

‘ஜைது’ (என்பவர் மனம் மாறி, தன் மனைவியைத்) தலாக் கூறிவிட்ட பின்னர் நாம் அப்பெண்ணை உங்களுக்கு திருமணம் செய்து வைத்தோம். ஏனென்றால், நம்பிக்கையாளர்களால் (தத்தெடுத்து) வளர்க்கப்பட்டவர்கள் தங்கள் மனைவிகளைத் தலாக் கூறிவிட்டால், அவர்களை வளர்த்தவர்கள் அப்பெண்களைத் திருமணம் செய்து கொள்வதில் எந்தத் தடையும் இருக்கக்கூடாது என்பதற்காக, இது நடைபெற்றே தீரவேண்டிய அல்லாஹ்வுடைய கட்டளை ஆகும். (அல்குர்ஆன் 33:37)

இவ்வாறு அல்லாஹ் செய்ததற்குக் காரணம்:

ஆகவே, நீங்கள் (வளர்த்த) எவர்களையும் அவர்களுடைய (உண்மையான) தந்தைகளின் பெயர்களைக் கூறி (அன்னாரின் மகன் என்றே) அழையுங்கள். அதுதான் அல்லாஹ்விடத்தில் நீதமாக இருக்கின்றது. (அல்குர்ஆன்33:5)

மற்றும்,

(நம்பிக்கையாளர்களே!) உங்களிலுள்ள ஆண்களில் ஒருவருக்கும் முஹம்மது (நபி அவர்கள்) தந்தையாக இருக்கவில்லை. எனினும், அவர் அல்லாஹ்வுடைய தூதராகவும், நபிமார்களுக்கு (இறுதி) முத்திரையாகவும் (இறுதி நபியாகவும்) இருக்கிறார். அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் 33:40)

ஆகிய வசனங்களால் இந்தத் தவறான நடைமுறையை சொல்லால் உடைத்தது போல் செயலாலும் அதனை உடைக்க விரும்பினான்.

ஊறிப்போன எத்தனையோ பழக்க வழக்கங்களைத் தகர்ப்பது என்பது சொல்லால் மட்டும் முடியாது. அதனை மாற்ற நினைக்கும் சத்திய அழைப்பாளர்கள் தனது செயலாலும் அதனை நிரூபித்துக் காட்ட வேண்டும். இதற்கு ஹுதைபிய்யா, உம்ராவில் நடந்த நிகழ்ச்சியை அழகிய எடுத்துக்காட்டாகக் கூறலாம். நபித்தோழர்கள் நபி (ஸல்) அவர்களின் மீது வைத்திருந்த அன்பு, பாசம் பற்றி உர்வா இப்னு மஸ்வூத் (ரழி) கூறிய ஹதீஸிலிருந்து நாம் தெரிந்திருக்கலாம்.

“உஸ்மான் (ரழி) கொல்லப்பட்ட செய்தி உண்மையாயின் வெற்றி அல்லது மரணம் ஏற்படும் வரை போர் புரிய வேண்டும் பின் வாங்கக் கூடாது” என்று நபி (ஸல்) தங்களது தோழர்களிடம் மரத்தின் கீழே சத்தியவாக்குறுதி வாங்கினார்கள். அந்நேரத்தில் நபியவர்களிடம் போட்டி போட்டுக் கொண்டு தோழர்கள் சத்திய வாக்குறுதி தந்தார்கள். மேலும், அதில் அபூபக்ர், உமர் (ரழி) போன்ற நெருக்கமான தோழர்களும் இருந்தனர். நபி (ஸல்) அவர்களுக்காக தன்னையே அர்ப்பணித்துக் கொள்ளும் அந்தத் தோழர்களுக்குச் சமாதான உடன்படிக்கை நிறைவேறிய பின், தங்களின் குர்பானி பிராணிகளை அறுக்கும்படி நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். ஆனால், நபியவர்களின் இக்கட்டளையை நிறைவேற்றுவதற்கு தோழர்களில் எவரும் முன்வரவில்லை. இது நபி (ஸல்) அவர்களுக்கு பெரும் வருத்தத்தை ஏற்படுத்தியது. இதை உணர்ந்த உம்மு ஸலமா (ரழி) “அல்லாஹ்வின் தூதரே! தாங்களே முதலில் எழுந்து சென்று குர்பானியை நிறைவேற்றுங்கள் யாரிடமும் பேசாதீர்கள்” என்று ஆலோசனை வழங்கினார்கள். அதற்கிணங்க நபி (ஸல்) அவர்களும் அவ்வாறு செய்ய, தோழர்கள் ஒருவருக்கொருவர் முந்திக் கொண்டு குர்பானியை நிறைவேற்றினார்கள். ஆகவே, காலங்காலமாக ஊறிப்போன பழக்கத்தைத் தகர்த்தெறிவதில் சொல்லால் திருத்துவது அல்லது செயலால் திருத்துவது ஆகிய இரண்டிற்குமிடையில் மலைக்கும் மடுவுக்கும் இடையிலுள்ள வேறுபாடு இருப்பதை உணரலாம்.

ஜைனபை நபி (ஸல்) திருமணம் செய்த பின்பு இத்திருமணம் குறித்து நயவஞ்சகர்கள் பல தவறான பொய்ப் பிரச்சாரங்களை மக்களுக்கிடையில் பரப்பினர். இறைநம்பிக்கையில் உறுதியற்ற முஸ்லிம்களின் இதயங்களில் தீய எண்ணங்கள் உண்டாயின.

இத்திருமணத்தால் இரண்டு விதமான குழப்பங்களை நயவஞ்சகர்கள் உண்டாக்கினர். 1) நபி (ஸல்) அவர்களுக்கு இது ஐந்தாவது திருமணமாக இருந்தது. (நான்கிற்கு மேல் திருமணம் முடிப்பது அனுமதியில்லை என முஸ்லிம்கள் அறிந்திருந்தனர்.) 2) ஜைது (ரழி) நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகன். அவர் நபி (ஸல்) அவர்களின் மகனாகவே கருதப்பட்டு வந்தார். இதைச் சொந்த மகனின் மனைவியைச் சொந்தத் தந்தை மணமுடிப்பதைப் போன்று மானக்கேடான செயலாகக் கருதினர். அல்லாஹு தஆலா இவ்விரண்டையும் குறித்து தெள்ளத் தெளிவான பதிலை சூரா அஹ்ஜாபில் இறக்கி வைத்தான். அதன் மூலம் ‘ஒருவரை வளர்ப்பு மகனாக ஆக்குவது மார்க்க சட்டத்தில் எந்தவித விளைவையும் ஏற்படுத்தாது’ என்றும் ‘நபி (ஸல்) அவர்களுக்கு பல உன்னத நோக்கங்களுக்காக ஏனைய முஸ்லிம்களைவிட திருமண விஷயத்தில் சிறப்புச் சலுகையை அல்லாஹ் வழங்கியிருக்கின்றான்’ என்றும் முஸ்லிம்கள் புரிந்துகொண்டனர்.

நபி (ஸல்) தங்களது மனைவிமார்களுடன் மிக அழகிய முறையில் உயர்ந்த பண்புகளுடனும் சிறந்த குணங்களுடனும் வாழ்க்கை நடத்தினார்கள். நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்களும் அவ்வாறே உயர்ந்த குணங்களும் சிறந்த பண்புகளும் பெற்றிருந்தனர். பொது மனிதர்களால் தாங்கிக் கொள்ள முடியாத அளவுக்கு வறுமையில் வாழ்ந்தும், நபி (ஸல்) அவர்களுக்குப் பணிந்து, பணிவிடை செய்து நல்ல மனைவியர்களாகத் திகழ்ந்தார்கள்.

இதைப் பற்றி அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அல்லாஹ்விடம் சென்றடையும் வரை மெல்லிய ரொட்டியை அவர்கள் பார்த்ததாக எனக்குத் தெரியாது. பொறித்த ஆட்டுக் கறியை நபி (ஸல்) சுவைத்ததே இல்லை. (ஸஹீஹுல் புகாரி)

ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: “நாங்கள் இரண்டு மாதங்களில் மூன்று பிறைகளைப் பார்த்து விட்டோம். நபி (ஸல்) அவர்களின் வீடுகளில் எதுவும் சமைக்கப்படவில்லை.” உர்வா, “நீங்கள் எப்படி வாழ்ந்தீர்கள்? என்று ஆயிஷாவிடம் கேட்டார். அதற்கு, “பேரீத்தம் பழங்களையும் தண்ணீரையும் உண்டு வாழ்ந்தோம்” என ஆயிஷா (ரழி) அவர்கள் கூறினார்கள். இதுபோன்ற அநேக சம்பவங்கள் ஹதீஸ் நூற்களில் பதிவாகியுள்ளன. (ஸஹீஹுல் புகாரி)

வறுமையிலும் நெருக்கடியிலும் வாழ்ந்த போதிலும் நபி (ஸல்) அவர்களின் துணைவியர்கள் முகம் சுளித்ததோ, மனம் வருந்தியதோ, முறையீடு செய்ததோ இல்லை. ஆம்! அவர்களும் மனிதர்கள் தானே. இவ்வாறு ஒரே ஒரு முறை நிகழ்ந்தது. அதை அல்லாஹ் கண்டித்து ஒரு வசனத்தை இறக்கினான்:

நபியே! உங்களுடைய மனைவிகளை நோக்கி நீங்கள் கூறுங்கள்: “நீங்கள் இவ்வுலக வாழ்க்கையையும் அதன் அலங்காரத்தையும் மட்டுமே விரும்புவீர்களாயின் வாருங்கள்! உங்களுக்கு ஏதும் கொடுத்து நல்ல முறையில் (தலாக் கொடுத்து) உங்களை நீக்கி விடுகிறேன். அன்றி, நீங்கள் அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும், மறுமை வாழ்க்கையையும் விரும்புவீர்களாயின் நிச்சயமாக அல்லாஹ் உங்களிலுள்ள இத்தகைய நன்மையைக் கருதுபவர்களுக்கு மகத்தான (நற்)கூலியை தயார்படுத்தி வைத்திருக்கின்றான். (அல்குர்ஆன் 33:28, 29)

நபி (ஸல்) அவர்களின் துணைவியர் அனைவரும் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் தேர்ந்தெடுத்து, தங்களது உயர்ந்த பண்புகளையும் சிறந்த குணங்களையும் நிலைநாட்டினர். அவர்களில் எவரும் உலகத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லை. நபி (ஸல்) அவர்களின் துணைவியர்களுக்கிடையில் அவர்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தும் பொதுவாக சக்களத்திகள் மத்தியில் இருக்கும் சண்டை சச்சரவுகள் ஏற்படவில்லை. அவர்களும் மனிதர்கள் என்ற அடிப்படையில் ஒரு சில நிகழ்வுகள்தான் நடந்தன. அதையும் அல்லாஹ் கண்டித்து விட்டான். அத்தியாயம் தஹ்ரீமின் துவக்கத்திலிருந்து ஐந்து வசனங்கள் வரை இதுபற்றியே அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.

இறுதியில்........

பலதார மணங்களின் அடிப்படையைப் பற்றி ஆழமாக நாம் ஆராய்ச்சி செய்ய வேண்டிய அவசியமே இல்லை. இந்த பலதார மணங்களைக் கடுமையாக விமர்சிக்கும் ஐரோப்பியர்களின் வாழ்க்கையையும், அவர்கள் படும் சிரமங்களையும், துன்பங்களையும், அவர்கள் புரியும் குற்றங்களையும், செய்யும் அசிங்கங்களையும் இந்த நேரிய அடிப்படையிலிருந்து விலகியதால், அவர்கள் அனுபவிக்கும் மன உளைச்சல்களையும், துயரங்களையும் ஆழிய கண்ணோட்டத்துடன் ஆராய்ந்து பார்த்தால் பலதார மணம் மிக அவசியமானதும், இன்றியமையாததும், மிகச் சரியான தீர்வு எனவும் விளங்கிக் கொள்ளலாம். அறிவுடையோருக்கு இதில் நல்லதோர் படிப்பினை உண்டு.

### பண்புகளும் நற்குணங்களும்

வார்த்தைகளால் வருணிக்க முடியாத வகையில் அழகிய பண்புகளையும், சிறந்த குணங்களையும் கொண்டவர்களாக நபி (ஸல்) திகழ்கிறார்கள். மக்களுடைய உள்ளங்களின் ஆழத்தில் அவர்களது கண்ணியம் வேரூன்றி இருந்தது. நபியவர்களை பாதுகாக்க மக்கள் தங்களையே அர்ப்பணித்துக் கொண்டார்கள். இதுபோன்றதொரு மரியாதையையும்

மதிப்பையும் வேறு எவரிடமும் இவ்வுலகம் கண்டதில்லை. அவர்களோடு வாழ்ந்தவர்கள் அவர்களை ஆழமாக நேசித்தனர். தங்களின் கழுத்துகள் வெட்டப்படுவதைக் கூட பொருட்படுத்த மாட்டார்கள். ஆனால், நபியவர்களின் நகத்துக்கு ஓர் இடையூறு ஏற்படுவதை கூட பொறுத்துக் கொள்ள மாட்டார்கள். சிறந்த பண்புகளும் அழகிய குணங்களும் நபி (ஸல்) அவர்களிடம் இருந்ததுதான் தோழர்களின் இந்த நேசத்திற்குரிய காரணமாகும். நபியவர்களின் குணங்களையும் பண்புகளையும் முழுமையாக நம்மால் விவரிக்க முடியாது என்ற இயலாமையை ஏற்றுக் கொள்வதுடன் அடுத்து வரும் பக்கங்களில் அவற்றைப் பற்றிய அறிவிப்புகளை முடிந்தளவு சுருக்கமாகக் கூறுகிறோம்.

### பேரழகு உடையவர்

நபி (ஸல்) ஹிஜ்ரா செய்து மதீனா செல்லும் வழியில் குஜாம்ய்யா கிளையைச் சார்ந்த 'உம்மு மஅபத்' என்ற பெண்ணின் கூடாரத்தைக் கடந்துச் சென்றார்கள். இந்நிகழ்ச்சியைப் பற்றி ஹிஜ்ரா பாடத்தில் முன்னர் கூறியிருக்கிறோம். வீடு திரும்பிய தனது கணவர் விசாரித்த போது நபியவர்களைப் பற்றி உம்மு மஅபத் விவரித்தது யாதெனில்:

பிரகாசமான முகம் உடையவர் அழகிய குணம் பெற்றவர் வயிறோ தலையோ பெருத்தவர் அல்லர் தலை சிறுத்தவரும் அல்லர் கவர்ச்சிமிக்கவர் பேரழகு உடையவர் கருத்த புருவம் கொண்டவர் நீண்ட இமைமுடி பெற்றவர் கம்பீரக் குரல் வளம் கொண்டவர் உயர்ந்த கழுத்துள்ளவர் கருவிழி கொண்டவர் மை தீட்டியது போன்ற கண்ணுள்ளவர் வில் புருவம் கொண்டவர் கூட்டுப் புருவம் கொண்டவர் கருண்ட தலைமுடி கொண்டவர் அவரது அமைதி கம்பீரத்தைத் தரும் ஒளி இலங்கும் பேச்சுடையவர் தூரமாகப் பார்த்தால் அழகும் வனப்பும் பெற்றவராய்த் திகழ்வார் அருகில் சென்றால் பழக இனிமையானவர் நற்பண்பாளர் நாவலர் தெளிந்த நடையுடைய பேச்சாளர் நீளமாகவோ சுருக்கமாகவோ இல்லாமல் நடுத்தரமான சொல்லாற்றல் பெற்றவர் அவருடைய மொழிதல் மணிமாலை உதிர்வது போல் இருக்கும் நடுத்தர உயரமுடையவர் பார்வைக்கு நெட்டையாகவோ குட்டையாகவோ இருக்க மாட்டார் இரண்டு கிளைகளுக்கு இடையிலுள்ள ஒரு கிளையைப் போன்றவர் மூவர் குழுவில் பளிச்செனத் தெரிபவர் சிறந்த கண்ணியம் வாய்ந்தவர் நண்பர்கள் புடை சூழ இருப்பவர் அவர் உரைத்தால் யாவரும் செவிமடுக்கின்றனர் அவர் ஆணையிட்டால் நிறைவேற்ற விரைகின்றனர் பணிவிடைக்குரியவர் மக்கள் கூட்டம் பெற்றவர் கடுகடுப்பானவருமல்லர் பிறரைக் குறைவாக மதிப்பவரும் அல்லர். (ஜாதுல் மஆது)

அலீ இப்னு அபீதாலிப் (ரழி) நபி (ஸல்) அவர்களை வருணித்துக் கூறுகிறார்கள்:

நபி (ஸல்) மிக நெட்டையோ மிகக் குட்டையோ இல்லை கூட்டத்தில் பார்ப்பதற்கு நடுத்தரமானவர் அடர்த்தியான சுருட்டை முடி உடையவருமல்லர் கோரைமுடி கொண்டவருமல்லர் சுருட்டை, கோரை இரண்டிற்கும் நடுத்தரமான முடி கொண்டவர் பெருத்த உடம்பில்லை முழுதும் வட்ட வடிவ முகமுமல்ல நேரான கத்தி (ஒடுக்கமான) முகமுமல்ல சிவந்த வெண்மை நிறமானவர் கருவிழி உடையவர் நீண்ட இமை முடி பெற்றவர் புஜமும் மூட்டு எலும்புகளும் தடிப்பானவர் நெஞ்சிலிருந்து தொப்புள் வரை கொடி போன்ற முடி உள்ளவர்கள் உடம்பில் முடி இருக்காது உள்ளங்காலும் கையும் தடித்தவர்கள் அவர்கள் நடந்தால் பள்ளத்தில் நடப்பது போன்று பிடிப்போடு நடப்பார்கள் திரும்பிப் பார்த்தால் முழுமையாகத் திரும்பிப் பார்ப்பார்கள் இரண்டு புஜங்களுக்கு இடையில் நபித்துவ முத்திரை இருக்கும் தூதர்களில் இறுதியானவர் மக்களில் மிக அதிகம் வழங்கும் கை உள்ளவர் துணிவுடைய உள்ளம் கொண்டவர் மக்களில் மிக அதிகம் உண்மை பேசுபவர் மக்களில் பொறுப்புகளை மிக அதிகம் நிறைவேற்றுபவர் மிக மிருதுவானவர் பழக மிகக் கண்ணியமிக்கவர் திடீரெனப் பார்த்தால் அச்சம் தரும் வடிவம் அறிமுகமானவர் அவரை விரும்புவர் அவர்களை யார் வருணித்தாலும் 'அவர்களுக்கு முன்னும்

அவர்களுக்கு பின்னும் அவர்களைப் போன்று யாரையும் பார்த்ததில்லை' என்றே கூறுவர். (இப்னு ஹிஷாம்)

அலீ (ரழி) கூறுவதாக மற்றொரு அறிவிப்பில் வருகிறது: நபி (ஸல்) கனத்த தலையுள்ளவர் மொத்தமான மூட்டுகளைக் கொண்டவர் நெஞ்சிலிருந்து தொப்புள் வரை கோடு போன்ற முடிகளைக் கொண்டவர் நடந்தால் பள்ளத்தில் நடப்பது போல் நடப்பார். (ஜாமிவுத் திர்மிதி)

ஜாபிர் இப்னு சமுரா (ரழி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அகலமான வாய் உடையவர் அகல விழி கொண்டவர் சதை குறைந்த கெண்டைக்கால் பெற்றவர். (ஸஹீஹ் முஸ்லிம்)

அபூ துஃபைல் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) வெண்மை நிறமுடையவர் அழகிய முகமுடையவர் நடுத்தர உடம்பும், உயரமும் கொண்டவர். (ஸஹீஹ் முஸ்லிம்)

அனஸ் இப்னு மாலிக் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அகலமான கரமுடையவர்கள் முற்றிலும் சிவந்த நிறம் கொண்டவர் அல்லர். அவர் உயிர் பிரியும் போது தாடியிலும் தலையிலும் சேர்த்து இருபது வெள்ளை முடிகள் கூட இல்லை. நரை இரு பொட்டுப் பகுதியில் (கிருதாப் பகுதியில்) மட்டும் இருந்தது. தலையிலும் மிகக் கொஞ்சமாக நரைமுடி இருந்தது. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

அபூ ஜுஹைஃபா (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களின் கீழ் உதட்டுக்கு கீழே கொஞ்சம் முடி வெண்மையாக இருந்தது. (ஸஹீஹுல் புகாரி)

அப்துல்லாஹ் இப்னு புஸ்ர் (ரழி) கூறுவதாவது: நபி (ஸல்) அவர்களின் கீழ் உதட்டு முடிகளில் சிறிது வெண்மை இருந்தது. (ஸஹீஹுல் புகாரி)

பராஃ (ரழி) கூறுகிறார்: நபி (ஸல்) நடுத்தர உயரமுள்ளவர்கள். அகன்ற புஜம் உடையவர்கள். அவர்களது தலைமுடி காது சோனை வரை இருக்கும். ஒரு நாள் நபி (ஸல்) அவர்களைச் சிவப்பு ஆடையில் பார்த்தேன். அவர்களை விட அழகான எதையும் பார்க்கவில்லை. வேதமுடையவர்களை ஒத்திருக்க வேண்டும் என்ற பிரியத்தில் நபி (ஸல்) தங்களது முடியை வகிடு எடுக்காமல் நேராக சீவிக் கொண்டிருந்தார்கள். பின்பு தங்களது தலைக்கு வகிடு எடுத்து சீவினார்கள். நபி (ஸல்) மக்களில் மிக அழகிய முகமும் குணமும் கொண்டவர்கள். அவர்களிடம் "நபியின் முகம் கத்தியைப் போன்று இருந்ததா?" எனக் கேட்க "சந்திரனைப் போல், அதாவது சற்று வட்ட வடிவ முகம் உடையவர்களாக இருந்தார்கள்" என்று பதிலளித்தார். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

ருபய்யி பின்த் முஅவ்வித் (ரழி) கூறுகிறார்: நபி (ஸல்) அவர்களை நீ பார்த்தால் அவர்கள் உதிக்கும் அதிகாலை சூரியனைப் போல் இலங்குவார்கள். (முஸ்னத் தாரமி, மிஷ்காத்)

ஜாபிர் இப்னு சமுரா (ரழி) அறிவிக்கிறார்கள்: ஒரு நாள் சந்திர இரவில் நபி (ஸல்) அவர்களைப் பார்த்தேன். நபி (ஸல்) சிவப்பு ஆடை அணிந்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்களையும் சந்திரனையும் மாறி மாறிப் பார்த்தேன். நபி (ஸல்) அவர்களே எனக்கு மிக அழகாக தென்பட்டார்கள். (ஷமாயிலுத் திர்மிதி, மிஷ்காத்)

அபூ ஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்களை விட மிக அழகான எதையும் நான் பார்த்ததில்லை. அவர்களது வதனத்தில் சூரியன் இலங்கியது. அவர்களை விட வேகமாக நடப்பவர்களை நான் கண்டதில்லை. பூமி அவர்களுக்கு சுருட்டப்பட்டது போல் இருக்கும். நாங்கள் சிரமத்துடன் நடப்போம். நபி (ஸல்) அவர்களோ சிரமம் தெரியாமல் நடப்பார்கள். (ஜாமிவுத் திர்மிதி, மிஷ்காத்)

கஅப் இப்னு மாலிக் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் சிரித்தால் அவர்களது முகம் மிக ஒளி பொருந்தியதாக, பார்ப்பவர்களுக்கு சந்திரனைப் போன்று இருக்கும். (ஸஹீஹுல் புகாரி)

ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் தமது வீட்டில் செருப்பு தைத்துக் கொண்டிருக்க, ஆயிஷா (ரழி) ஓர் ஆடையை நெய்து கொண்டிருந்தார்கள். அப்போது நபி (ஸல்) உடலில் இருந்து வியர்வை வந்தது. நபி (ஸல்) அவர்களின் முக ரேகைகள் ஒளியால் இலங்கிக் கொண்டிருந்தன. இதைக் கண்ட ஆயிஷா (ரழி) திடுக்கிட்டார்கள். “அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபூ கபீர் ஹுதலி தங்களைப் பார்த்தால் தமது

“அவரது முக ரேகைகளை நீங்கள் பார்த்தால் மின்னும் நட்சத்திரத்தைப் போன்று இலங்குவதைப் பார்க்கலாம்.” (தஹ்தீப் தாரீக் திமஷ்க்)

என்ற கவிகளுக்கு பிறரை விட நீங்களே பொருத்தமானவர்” என்று கூறுவார்.

நபி (ஸல்) அவர்களைப் பார்த்தால் அபூபக்ர் (ரழி),

நம்பிக்கைக்குரியவர் தெரிவு செய்யப்பட்டவர்
நன்மைக்கு அழைப்பவர் இருள் நீங்கிய சந்திரனைப் போன்றவர். (குலாஸத்துஸ் ஸியர்)

என்ற கவிதையைக் கூறுவார்கள்.

ஜுஹைர் என்ற கவிஞர் ஹரீம் இப்னு சினானுக்கு படித்த கவிதையை நபி (ஸல்) அவர்களுக்கு உமர் (ரழி) கூறுவார்கள்.

“நீ மனிதனல்லாத வேறு படைப்பாக இருந்திருந்தால், பவுர்ணமி இரவின் நிலவாக இருந்திருப்பாய்.”

இக்கவிதையைப் பாடிவிட்டு உண்மையில் நபி (ஸல்) அப்படித்தான் இருந்தார்கள் என்று கூறுவார்கள். (குலாஸத்துஸ் ஸியர்)

நபியவர்கள் கோபித்தால் முகம் சிவந்துவிடும். மாதுளம் பழ முத்துக்களை முகத்தில் தூவப்பட்டது போன்றிருக்கும். (ஸுனனுத் திர்மிதி, மிஷ்காத்)

ஜாபிர் இப்னு சமுரா (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் மெல்லிய கெண்டைக்கால் உடையவர்கள். அவர்களது சிரிப்பு புன்முறுவலாகத்தான் இருக்கும். அவர்களைப் பார்த்தால் கண்ணில் ‘சுர்மா’ இட்டதைப் போல் இருக்கும். ஆனால், சுர்மா இட்டவரில்லை. (ஜாமிவுத் திர்மிதி)

உமர் இப்னு கத்தாப் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் அழகிய பற்களைக் கொண்டவர்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் அகன்ற முன் பற்கள் உடையவர்கள் அவர்கள் பேசினால் பற்களின் இடைவெளியிலிருந்து பிரகாசம் வெளியேறுவது போன்றிருக்கும் அவர்களது கழுத்து தூய்மையான வெள்ளிச் சிலையின் கழுத்தைப் போல் இருக்கும் அவர்களது இமை முடி நீளமாக இருக்கும். தாடி அடர்த்தியாக, நெற்றி விசாலமாக இருக்கும் புருவம் அடர்ந்து வில் வடிவம் பெற்றிருக்கும் நீண்ட மெல்லிய மூக்குடையவர். மிருதுவான மெல்லிய கன்னமுடையவர். நெஞ்சிலிருந்து தொப்புள் வரை குச்சிப் போல முடி இருக்கும். வயிற்றிலோ நெஞ்சிலோ அதைத் தவிர முடி இருக்காது. குடங்கையிலும் தோள் புஜத்திலும் முடி இருக்கும். மார்பும் வயிறும் சமமானவர். அகன்ற மார்பும், நீளமான மணிக்கட்டும், விசாலமான உள்ளங்கையும் உள்ளவர் நீளமான முன் கையும், கெண்டைக்காலும் உள்ளவர் உள்ளங்கால் நன்கு குவிந்தவர்கள் விரல்கள்

நீளமாக இருக்கும் அவர்கள் நடந்தால் கால்களை எடுத்து வைப்பவரைப் போல் பணிவுடனும் முன் பக்கம் சாய்ந்தவராகவும் நடப்பார்கள். (குலாஸத்துஸ் ஸீரா, தாரமி, மிஷ்காத்)

அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களின் கையைவிட மென்மையான பட்டாடையை நான் தொட்டதில்லை. அவர்களிடமிருந்து வரும் நறுமணத்தைப் போன்று வேறு எந்த நறுமணத்தையும் நான் நுகர்ந்ததில்லை.

மற்றொரு அறிவிப்பில்: நபி (ஸல்) அவர்களிடமிருந்து வரக்கூடிய நறுமணத்தைவிட வேறு நறுமணத்தை அம்பரிலோ அல்லது கஸ்தூரியிலோ நான் நுகர்ந்ததில்லை. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

அபூ ஜுஹைஃபா (ரழி) கூறுகிறார்கள்: ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் கரத்தை எடுத்து என் கன்னத்தில் வைத்தேன். அது பனிக் கட்டியை விட குளிர்ச்சியாக, கஸ்தூரியை விட மணமிக்கதாக இருந்தது. (ஸஹீஹுல் புகாரி)

ஜாபிர் இப்னு சமுரா (ரழி) கூறுகிறார்கள்: நான் சிறுவனாக இருந்த போது எனது கன்னத்தை நபி (ஸல்) அவர்கள் தடவினார்கள். அவர்களது கை மிகக் குளிர்ச்சியாகவும், அத்தர் பாட்டிலிருந்து கையை எடுத்தது போன்று மிக்க நறுமணமாகவும் இருந்தது. (ஸஹீஹ் முஸ்லிம்)

அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களின் வியர்வை, முத்துகள் போல் இருக்கும். (ஸஹீஹ் முஸ்லிம்)

உம்மு சுலைம் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களின் வியர்வை மிக உயர்ந்த நறுமணமாக இருக்கும்.

ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) ஒரு பாதையில் சென்றிருக்க அதே பாதையில் மற்றொருவர் செல்கிறார் என்றால் அவர் அவ்வழியில் நபி (ஸல்) சென்றுள்ளார்கள் என்பதை அவர்களது வாடையின் மூலம் அறிந்து கொள்ளலாம். (மிஷ்காத், முஸ்னத் தாரமி)

நபி (ஸல்) அவர்களின் இரண்டு புஜங்களுக்கு மத்தியில் புறாவின் முட்டையைப் போல் மேனி நிறத்திலேயே நபித்துவ முத்திரை இருந்தது. அது இடது புஜத்திற்கு மேல் மிருதுவான தசைக்கு அருகில் மச்சம் போன்று இருந்தது. (ஸஹீஹ் முஸ்லிம்)

**உயர் பண்பாளர்**

நபி (ஸல்) அவர்கள் தெள்ளத் தெளிவாக இலக்கிய நயத்துடன் மொழிபவர்களாக இருந்தார்கள். இதனால் மக்களில் மிக உயர்ந்த அந்தஸ்தில் இருந்தார்கள். மக்களில் யாரும் அவர்களை அறியாமல் இருக்க முடியாது. நல்லியல்பு பெற்றவர்கள். அவர்களுடைய பேச்சு சரளமாகவும், சொல் தெளிவாகவும், கருத்து சரியானதாகவும் இருக்கும். ஆனால், அதற்காக சிரமம் எடுத்துக் கொள்ள மாட்டார்கள். அவர்களது சொல்லாக்கம் முழுமை பெற்றதாக இருக்கும். நூதனமான நுட்பங்களால் சிறப்பிக்கப்பட்டவர்கள். அரபிய மொழிகளின் பல வகைகளைத் தெரிந்திருந்தார்கள். ஒவ்வொரு இனத்தாரிடம் அவரவர் பாணியில் அவரவர் தொனியில் உரையாற்றுவார்கள். நகரவாசிகளைப் போல் இலக்கியமாகவும், கிராமவாசிகளைப் போல் எளிய முறையிலும் அவரவர் நடைக்கேற்ப பேசுவார்கள். இது மட்டுமின்றி வஹியினால் இறை உதவியைப் பெற்றிருந்தார்கள்.

சகித்துக் கொள்வதும், பொறுத்துப் போவதும், சக்தியிருந்து மன்னிப்பதும், சிரமங்களைத் தாங்கிக் கொள்வதும் அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கிய இயற்கைப்

பண்புகளாகும். எத்தனையோ அறிவாளிகள், மேதாவிகள் சமயத்தில் சருக்கலாம். பொறுமைசாலிக்கும் சமயத்தில் கோபம் தலைக்கேறலாம். இடையூறு அதிகமான போது நபி (ஸல்) அவர்களின் சகிப்புத் தன்மை அதிகரித்தது. மூடனின் வரம்பு மீறல் நபி (ஸல்) அவர்களுக்குப் பொறுமையைத்தான் தந்தது.

ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: இரண்டு வாய்ப்புகள் கொடுக்கப்பட்டால் நபி (ஸல்) அவர்கள் அதில் மிக எளிதானவற்றையே எடுத்துக் கொள்வார்கள். ஆனால், அது பாவமாக இருக்கக் கூடாது. அது பாவமானதாக இருந்தால் அதை விட்டு வெகு தூரம் சென்று விடுவார்கள். நபி (ஸல்) அவர்கள் தங்களுக்காகப் பழிவாங்கியதில்லை. எனினும், அல்லாஹ்வின் கண்ணியம் பாழாக்கப்பட்டால் அல்லாஹ்வுக்காக பழிவாங்குவார்கள். மெதுவாக கோபம் வரும். விரைவாக மகிழ்ச்சி அடைவார்கள். கணக்கிட முடியாத அளவு தான தர்மங்களை வழங்கி வந்தார்கள். வறுமைக்கு அஞ்சாமல் ஏழை எளியோருக்கு தேவையுடையோருக்கு செலவு செய்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் மக்களில் மிகக் கொடைத் தன்மையுடையவர்களாக விளங்கினார்கள். வானவர் ஜிப்ரீல், நபி (ஸல்) அவர்களை ரமழான் மாதத்தில் சந்திக்கும் நாட்களில் மிக அதிகம் நபி (ஸல்) கொடையளிப்பார்கள். ஜிப்ரீல் ரமழானுடைய ஒவ்வொரு இரவிலும் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து குர்ஆனை பரிமாறிக் கொள்வார்கள். அக்காலங்களில் விரைந்து வீசும் காற்றின் வேகத்தை விட செல்வங்களை வாரி வழங்குவார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ஜாபிர் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களிடம் ஏதாவதொன்று கேட்கப்பட்டு, அவர்கள் அதை இல்லை என்று சொன்னதில்லை. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்களின் வீரமும் துணிவும் யாரும் அறியாத ஒன்றல்ல. நபி (ஸல்) அவர்கள் மக்களில் மிகுந்த துணிச்சல் கொண்டவர்களாக விளங்கினார்கள். எத்தனையோ அபாயமான நிலைகளைச் சந்தித்துள்ளார்கள். தங்களிடமுள்ள வாள் வீச்சு வீரர்களும், அம்பெறியும் வீரர்களும் அவர்களைத் தனிமையில் பலமுறை விட்டுவிட்டு சென்றுவிட்ட போதிலும் நிலைகுலையாமல், தடுமாற்றமில்லாமல், புறுமுதுகுக் காட்டாமல், எதிரிகளை எதிர்த்து நின்றார்கள். எத்தனையோ வீரர்கள் ஒரு சில நேரங்களில் புறமுதுகு காட்டி ஓடி இருக்கின்றார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள் ஒருபோதும் அவ்வாறு செய்ததில்லை.

அலீ (ரழி) கூறுகிறார்கள்: போர் சூடுபிடித்து கண்கள் சிவந்து விடும்போது நாங்கள் நபி (ஸல்) அவர்களுக்கருகே சென்று எங்களைப் பாதுகாத்துக் கொள்வோம். எதிரிகளுக்கு அருகில் நபி (ஸல்) அவர்களைத் தவிர எங்களில் எவரும் நெருக்கமாக இருந்ததில்லை. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், ஸுனன் அபூதாவூது, ஸுனனுத் திர்மிதி)

அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: மதீனாவாசிகள் ஒரு நாள் இரவு சப்தத்தைக் கேட்டு பயந்து விட்டனர். சப்தம் வந்த திசையை நோக்கி மக்கள் விரைந்து செல்கையில் அதற்கு முன்பே நபி (ஸல்) அவர்கள் சென்று விவரத்தை அறிந்து திரும்பிக் கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் கழுத்தில் வாளை தொங்கவிட்டுக் கொண்டு அபூ தல்ஹாவுக்குரிய குதிரையில் எவ்வித சேனம் கடிவாளம் ஏதுமின்றி சென்று வந்தார்கள். மக்களைப் பார்த்து “நீங்கள் அஞ்ச வேண்டியதில்லை பயப்பட வேண்டியதில்லை” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்கள் மிகக் கூச்சச் சுபாவமுள்ளவராக இருந்தார்கள்.

அபூ சயீத் குத் (ரழி) கூறுகிறார்கள்: திரை மறைவிலுள்ள கன்னிப் பெண்களை விட அதிக நாணமுள்ளவர்களாக நபி (ஸல்) அவர்கள் இருந்தார்கள். ஏதாவது பிடிக்காவிட்டால் அதை அவர்களது முகத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். எவரது முகத்தையும் ஆழமாக உற்று

நோக்கியதில்லை. பார்வையைக் கீழ்நோக்கி வைத்திருப்பார்கள். நபி (ஸல்) அவர்கள் மேல் நோக்கி பார்ப்பதை விட கீழ்நோக்கி பார்ப்பதே அதிகம். பெரும்பாலும் கடைக்கண்ணால் பார்ப்பார்கள். வெட்கத்தினாலும் உயர்ந்த பண்பின் காரணத்தாலும் யாரையும் வெறுப்பூட்டும்படி பேச மாட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ஒருவரைப் பற்றி விரும்பாத செய்தி தங்களுக்குக் கிடைத்தால் அப்போது நபி (ஸல்) அவர்கள் “சிலர் ஏன் இவ்வாறு செய்கிறார்கள்?” என்பார்கள். அவருடைய பெயரைக் குறிப்பிட்டு சங்கடப்படுத்த மாட்டார்கள்.

“நாணத்தால் பார்வையைத் தாழ்த்துகிறார்!
அவர் மீது பயத்தால் பார்வை குனிகிறது.
அவர் புன் முறுவல் பூத்தால்தான் அவருடன் பேச முடியும்.”

என்ற ஃபரஸ்தக்கின் கவிக்கு நபி (ஸல்) அவர்களே மிகத் தகுதியுள்ளவர்கள்.

நபி (ஸல்) அவர்கள் மக்களில் “மிக்க நீதவானாக, ஒழுக்க சீலராக, உண்மையாளராக, நம்பிக்கையாளராகத் திகழ்ந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் இப்பண்புகளை உடன் இருந்தவர்கள் மட்டுமல்ல எதிரிகள் கூட நன்கு அறிந்து வைத்திருந்தனர். நபித்துவம் கிடைக்கும் முன்பே அவர்களை ‘நம்பிக்கைக்குரியவர் (அல்அமீன்)’ என்று மக்கள் அழைத்தனர். இஸ்லாம் வருவதற்கு முன்பே அறியாமைக் காலத்தில் கூட மக்கள் தங்களின் பிரச்சனைகளுக்குத் தீர்வு நாடி அவர்களிடம் வருவார்கள்.

அலீ (ரழி) கூறுகிறார்கள்: ஒருமுறை நபியவர்களை பார்த்த அபூஜஹ்ல் “நாங்கள் உங்களை பொய்ப்பிக்கவில்லை. நீங்கள் சொல்கின்ற மார்க்கத்தைத் தான் பொய்ப்பிக்கிறோம்” என்றான். இது விஷயமாக அல்லாஹ் கூறுகிறான்:

(நபியே! உங்களைப் பொய்யரென) அவர்கள் கூறுவது, நிச்சயமாக உங்களுக்குக் கவலையைத் தருகின்றது என்பதை உறுதியாக நாம் அறிவோம். நிச்சயமாக அவர்கள் உங்களைப் பொய்யாக்கவில்லை. ஆனால், இந்த அநியாயக்காரர்கள் அல்லாஹ்வின் வசனங்களையே (பொய்யாக்கி) நிராகரிக்கின்றனர். (அல்குர்ஆன் 6:33) (மிஷ்காத், ஸுனனுத் திர்மிதி)

அன்றொரு நாள் மன்னன் ஹிர்கல் (ஹெர்குலிஸ்) அவையிலே அபூ ஸுஃப்யான் எதிரியாக இருந்தும் நபியவர்களைப் பற்றிக் கூறிய உரையாடல் நினைவுகூரத் தக்கது. “அவர் (நபி) இஸ்லாமைப் பற்றிக் கூறுவதற்கு முன்பு, பொய் பேசியுள்ளார் என்று அவர் மீது நீங்கள் பழி சுமத்தி இருக்கிறீர்களா?” என்று மன்னன் கேட்க, அதற்கு அபூ ஸுஃப்யான், “அவ்வாறு அவர் ஒருபோதும் பொய் பேசியதில்லை” என்று கூறினார்.

நபி (ஸல்) மற்றவர்களை விட அதிகம் பணிவுடையவர்களாகவும், பெருமை கொள்வதை விட்டு விலகியவர்களாகவும் இருந்தார்கள். மக்கள் அரசர் முன்பு எழுந்து நிற்பது போன்று தன் முன் எழுந்து நிற்பதைத் தடை செய்தார்கள். நலிந்தோர்களையும், நோயாளிகளையும் நலம் விசாரிப்பார்கள். ஏழைகளுடன் சேர்ந்திருப்பார்கள். அடிமை விருந்துக்கு அழைத்தாலும் இன் முகத்துடன் ஏற்றுக் கொள்வார்கள். தங்களுடைய தோழர்களுடன் அவர்களில் ஒருவராக அமர்ந்திருப்பார்கள்.

ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) தங்களது காலணிகளையும், தங்களது ஆடைகளையும் தாங்களே தைத்துக் கொள்வார்கள். உங்களில் ஒருவர் வீட்டில் வேலை செய்வது போன்றே நபியவர்களும் தங்களுடைய வீட்டில் வேலை செய்வார்கள். மனிதர்களில் ஒருவராகவே இருந்தார்கள். தங்களது ஆடைகளைத் தானே சுத்தம் செய்வார்கள். தனது ஆட்டில் தானே பாலைக் கறப்பார்கள். தங்களது வேலைகளைத் தானே செய்து கொள்வார்கள். (மிஷ்காத்)

மற்றெவரையும் விட அதிகம் நபி (ஸல்) வாக்குகளை நிறைவேற்றுபவர்களாக இருந்தார்கள். உறவினர்களுடன் சேர்ந்து நெருக்கமாக வாழ்ந்தார்கள். மக்கள் மீது மிக்க அன்பும் பாசமும் கருணையும் கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்களுடன் மிக அழகிய முறையில் ஒழுக்கத்துடன் நடந்து கொண்டார்கள். மக்களில் மிக உன்னதமான குணம் பெற்றிருந்தார்கள். அவர்களிடம் எந்தக் கெட்ட குணமும் இருந்ததில்லை. அருவருப்பான சொல், செயல் ஏதும் அவர்களிடம் இருந்ததில்லை. சபிக்கும் வழக்கமோ, கடைத் தெருக்களில் கூச்சல் போடும் பேதைமையோ கிடையாது. கெட்டதைக் கெட்டதை கொண்டு நிவர்த்தி செய்ய மாட்டார்கள். மாறாக, அதனை மன்னித்து மறந்து விடுவார்கள். எவரையும் தனக்குப் பின்னால் நடக்க அனுமதிக்க மாட்டார்கள். உடையிலோ ஆடையிலோ தங்களுடைய அடிமைகளைக் காட்டிலும் தம்மை உயர்வாக காட்டிக் கொள்ள மாட்டார்கள். தங்களுக்கு பணிவிடை செய்தவர்களுக்குப் பணிவிடை செய்வார்கள். தங்களதுப் பணியாளரை 'சீ' என்று கூட கூறியதில்லை. ஒரு செயலை செய்ததற்காகவோ, செய்யாமல் போனதற்காகவோ யாரையும் கண்டித்ததில்லை.

நபி (ஸல்) தோழர்களை அதிகம் நேசித்து, அவர்களுடன் அதிகம் பழகுவார்கள். அவர்களுடைய ஜனாஸாக்களிலும் கலந்து கொள்வார்கள். ஏழையை அவரது இல்லாமையினால் இளக்காரமாகப் பார்க்க மாட்டார்கள்.

ஒரு பயணத்தின் போது ஆடு ஒன்றை அறுத்து சமைக்கும்படி கூறினார்கள். ஒருவர் நான் அறுக்கிறேன் என்றார் ஒருவர் உரிக்கிறேன் என்றார் ஒருவர் சமைக்கிறேன் என்றார் நபி (ஸல்) ''அதற்காக நான் விறகுகளை சேர்த்து வருவேன்'' என்றார்கள். அதற்கு தோழர்கள் ''அல்லாஹ்வின் தூதரே! உங்களுக்கு ஏன் சிரமம்! நாங்கள் இதைச் செய்து கொள்கிறோம்'' என்றனர். அப்போது நபி (ஸல்) ''உங்களால் செய்ய முடியும் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் உங்களில் என்னைத் தனியே உயர்த்திக் காட்ட விரும்பவில்லை. ஏனெனில், ஒருவர் தனது தோழர்களில் தனியாக வேறுபடுத்திக் காட்டுவதை அல்லாஹ் வெறுக்கிறான்'' என்று கூறி விறகுகளைச் சேகரிக்கச் சென்றார்கள். (குலாஸத்துஸ் ஸியர்)

நபியவர்களை ந்து வருணிப்பதை நாம் கேட்போம்: ''நபி (ஸல்) தொடர் கவலைக் கொண்டவர்கள் நிரந்தரச் சிந்தனையுடையவர்கள் அவர்களுக்கு ஓய்வு கிடையாது தேவையின்றி பேசமாட்டார்கள் நீண்ட நேரம் அமைதியாக இருப்பார்கள் பேசினால் வாய் நிரம்பப் பேசுவார்கள் பேச்சை முடிக்கும் போது முழுமையான வார்த்தைகளைக் கொண்டு முடிப்பார்கள். கருத்தாழமுள்ள வாக்கியங்களால் உரையாற்றுவார்கள் தெளிவாகப் பேசுவார்கள் அது தேவையை விட குறைவாகவோ அதிகமாகவோ இருக்காது. முரட்டுக் குணம் கொண்டவரும் இல்லை அற்பமானவரும் இல்லை அல்லாஹ்வின் அருட்கொடை குறைவாக இருந்தாலும் அதை நிறைவாக மதிப்பார்கள் எதையும் இகழமாட்டார்கள் உணவுகளைப் புகழவோ குறைகூறவோ மாட்டார்கள்.

சத்தியத்திற்கு பங்கம் விளைவித்தால் அவர்களுடைய கோபத்திற்கு முன் யாரும் நிற்க முடியாது பழிவாங்கியே தீருவார்கள். தங்களுக்காக கோபப்படவோ, பழிவாங்கவோ மாட்டார்கள் சந்தோஷம் மிகுந்தால் தங்களது பார்வையைத் தாழ்த்திக் கொள்வார்கள் பெரும்பாலும் புன்முறுவலாகவே சிரிப்பார்கள் சிரிக்கும் போது பற்கள் பனிக்கட்டிகளைப் போல் காட்சியளிக்கும் தேவையற்றதைப் பேசாமல் தங்களது நாவைப் பாதுகாத்துக் கொண்டு தேவையானவற்றையே பேசுவார்கள் தங்களது தோழர்களிடையே நட்பை ஏற்படுத்துவார்கள் பிரிக்க மாட்டார்கள் ஒவ்வொரு சமுதாயத்தின் சிறப்புக்குரியோர்களைத் தானும் கண்ணியப்படுத்திச் சிறப்பிப்பார்கள் அவரையே அவர்களின் நிர்வாகியாக நியமிப்பார்கள் ஒருவருடைய தீங்கினால் அவரிடமிருந்து பாதுகாப்பாக இருப்பார்கள், முற்றிலும் அவரை விட்டு முகத்தைத் திருப்பிக் கொள்ள மாட்டார்கள் காணாத தங்களின் தோழர்களைப் பற்றி அக்கரையாக விசாரிப்பார்கள் மக்களிடம் அவர்களின் நிலவரங்களைப் பற்றிக் கேட்டுத்

தெரிந்து கொள்வார்கள் நல்லதை நல்லது என்றும் சரியானதென்றும் கூறுவார்கள் கெட்டதைக் கெட்டதென்று உரைத்து அதனைப் புறக்கணித்து விடுவார்கள்.

நடுநிலையாளர்கள் முரண்பட மாட்டார்கள் மக்கள் மறந்து விடுவார்கள் என்பதால் அவர்கள் எதையும் மறவாமல் இருப்பார்கள் எல்லா நிலைகளிலும் ஆயத்தமாக இருப்பார்கள் சத்தியத்தில் குறைவு செய்யவோ அதை மீறவோ மாட்டார்கள் மக்களில் சிறந்தவர்தான் நபியவர்களுடன் இருப்பர். நபியவர்களிடம் மிகச் சிறப்பிற்குரியவர்கள் யாரெனில், மக்களுக்கு அதிகம் நன்மையை நாடுபவர்கள்தான் அதிகம் மக்களுக்கு உதவி உபகாரம் புரிபவர்கள்தான் நபியிடம் மிக்க கண்ணியத்திற்குரியவராக இருப்பர் அமர்ந்தாலும் எழுந்தாலும் அல்லாஹ்வையே நினைவு கூர்வார்கள் சபைகளில் தனக்காக இடத்தைத் தெரிவு செய்து கொள்ள மாட்டார்கள் சபைக்குச் சென்றால் சபையின் இறுதியிலேயே அமர்ந்து கொள்வார்கள் அவ்வாறே பிறரையும் பணிப்பார்கள் தன்னுடன் அமர்ந்திருக்கும் ஒவ்வொருவருடனும் உரையாடுவார்கள் தன்னைவிட யாரும் நபியவர்களிடம் உயர்ந்தவர் இல்லை, தானே நபியவர்களிடம் நெருக்கமானவர் என்று ஒவ்வொருவரும் எண்ணுமளவுக்கு நடந்து கொள்வார்கள்.

ஒருவர் ஏதாவது தேவைக்காக வந்தால் அவராகச் செல்லும் வரை அவருடன் நபி (ஸல்) இருப்பார்கள் தேவையை கேட்கும் போது அதனை நிறைவேற்றித் தருவார்கள் அல்லது அழகிய பதிலைக் கூறுவார்கள் நபி (ஸல்) தங்களது தயாளத் தன்மையையும் நற்குணங்களையும் அனைத்து மக்களுக்கும் விசாலப்படுத்தியிருந்தார்கள். எனவே, மக்களுக்கு ஒரு தந்தையைப் போல் திகழ்ந்தார்கள். உரிமையில் அவர்களிடம் அனைவரும் ஒருவருக்கொருவர் நெருக்கமாக இருந்தார்கள். இறையச்சத்தைக் கொண்டே மக்களுடைய சிறப்புகள் நிர்ணயிக்கப்பட்டன. கல்வி, கண்ணியம், பொறுமை, சகிப்புத் தன்மை, வெட்கம், நம்பிக்கை அனைத்தும் நிறைந்ததாக அவர்களது சபை இருந்தது. அங்கு உரத்த குரல்கள் ஒலிக்காது கண்ணியம் குலைக்கப்படாது தவறுகள் நிகழாது இறையச்சத்தால் ஒருவருக்கொருவர் பிரியத்துடன் நடந்துகொள்வர் பெரியவருக்கு கண்ணியமும் சிறியவர்களுக்கு இரக்கமும் காட்டுவார்கள் தேவையுடையோருக்கு உதவி செய்வார்கள் புதியவர்களுடன் நட்புடன் நடந்து கொள்வார்கள்.

எப்பொழுதும் மலர்ந்த முகமும், இளகிய குணமும், நளினமும் பெற்று இருப்பார்கள் கடுகடுப்பானவரோ, முரட்டுக் குணம் கொண்டவரோ, கூச்சலிடுபவரோ, அருவருப்பாகப் பேசுபவரோ, அதட்டுபவரோ, அதிகம் புகழ்பவரோ அல்லர் விருப்பமற்றதைக் கண்டுகொள்ள மாட்டார்கள் நிராசையாகவும் மாட்டார்கள்.

மூன்று குணங்களை விட்டு தங்களைப் பாதுகாத்துக் கொண்டார்கள்:

1) முகஸ்துதி, 2) அதிகம் பேசுவது, 3) தேவையற்றவற்றில் ஈடுபடுவது.

மக்களைப் பற்றி மூன்று காரியங்களைத் தவிர்த்துக் கொண்டார்கள்:

1) பிறரைப் பழிக்க மாட்டார்கள், 2) பிறரைக் குறைகூற மாட்டார்கள், 3) பிறரின் குறையைத் தேடமாட்டார்கள்.

நன்மையானவற்றைத் தவிர வேறெதுவும் பேசமாட்டார்கள் அவர்கள் பேசினால் சபையோர்கள் அமைதி காப்பர்கள் தங்களின் தலைமீது பறவை அமர்ந்திருப்பது போல் அசையாமல் இருப்பார்கள் நபி (ஸல்) அமைதியானால் தோழர்கள் பேசுவார்கள் நபியின் முன் பேசும்போது தோழர்கள் போட்டியிட்டுக் கொள்ள மாட்டார்கள். யாராவது பேசத் தொடங்கினால் அவர் முடிக்கும் வரை அவருக்காக அமைதி காப்பார்கள் முதலில் பேசியவன் பேச்சை ஏற்பார்கள் மக்கள் சிரிப்பதைக் கண்டு தானும் சிரிப்பார்கள் மக்கள் ஆச்சரியப்படுபவற்றைக் கண்டு தானும் ஆச்சரியப்படுவார்கள் புதியவன் முரட்டுப் பேச்சை

சகித்துக் கொள்வார்கள் தேவையுடையோரை நீங்கள் பார்த்தால் அவர்களின் தேவையை நிறைவேற்றுங்கள் என்பார்கள் உதவி உபகாரம் பெற்றவர் நன்றி கூறினால் மட்டும் ஏற்றுக் கொள்வார்கள். (ஷமாயிலுத் திர்மிதி, அஷ்ஷிஃபா)

காஜா இப்னு ஜைத் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) சபையினில் கண்ணியத்திற்குரியவர்களாக தோற்றம் அளிப்பார்கள் தங்களது உடல் உறுப்புகளில் எதையும் வெளிக்காட்ட மாட்டார்கள் அதிகம் மௌனம் காப்பார்கள். தேவையற்றதைப் பேசமாட்டார்கள் அழகிய முறையில் உரையாடாத வரை புறக்கணித்து விடுவார்கள் அவர்கள் புன்முறுவலாகவே சிரிப்பார்கள் அவர்களின் பேச்சு தெளிவாக இருக்கும் தேவையை விட அதிகமாகவோ குறைவாகவோ இருக்காது நபியவர்களின் கண்ணியத்தை முன்னிட்டும் அவர்களைப் பின்பற்ற வேண்டும் என்பதற்காகவும் அவர்களுக்கு முன் தோழர்கள் புன்முறுவலாகவே சிரிப்பார்கள். (அஷ்ஷிஃபா)

சுருங்கக் கூறின் நபி (ஸல்) முழுமை பெற்ற தன்மைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தார்கள். நற்பண்புகளில் அவர்களுக்கு நிகர் கிடையாது. அல்லாஹ் நபியவர்களுக்கு மிக அழகிய முறையில் ஒழுக்கங்களைக் கற்றுக் கொடுத்தான்.

“நிச்சயமாக நீங்கள் நற்குணமுடையவராகவே இருக்கின்றீர்கள்.” (அல்குர்ஆன் 68:4)

என்று அவர்களைப் புகழ்ந்து கூறியிருக்கிறான்.

இந்த நற்பண்புகள் நபியவர்கள் மீது மக்களுக்கு விருப்பத்தையும் நெருக்கத்தையும் ஏற்படுத்தியது. இப்பண்புகள் அவர்களை உள்ளங்கவர் தலைவராகத் திகழச் செய்தது. முரண்டு பிடித்த அவரது சமுதாய உள்ளங்களைப் பணிய வைத்தது. மக்களைக் கூட்டம் கூட்டமாக அல்லாஹ்வின் மார்க்கத்தில் சேர்த்தது.

இதுவரை நாம் நபி (ஸல்) அவர்களைப் பற்றிக் கூறிய நற்பண்புகள் அவர்களது மகத்தான தன்மைகளின் சிறு கோடுகளே. அவர்களிடமிருந்த உயர்ந்த பண்புகளின் உண்மை நிலைமையையும் அதன் ஆழத்தையும் எவராலும் அறிந்து கொள்ள முடியாது. தனது இறைவனின் பிரகாசத்தால் ஒளிபெற்று, குர்ஆனை தனது பண்புகளாகக் கொண்டு, மேன்மையின் உச்சக்கட்டத்தை அடைந்த, மனித சமுதாயத்திலேயே மிக மகத்தானவன் உண்மையை அறிந்து கொள்ள யாரால்தான் முடியும்?

அல்லாஹ்வே! முஹம்மதின் மீதும், முஹம்மதின் கிளையார்கள் மீதும் உனது தனிப்பட்ட கருணையை அருள்வாயாக! இப்றாஹீமின் மீதும் இப்றாஹீமின் கிளையார்கள் மீதும் உனது தனிப்பட்ட கருணையை அருளியது போன்று நிச்சயமாக நீயே புகழுக்குரியவன் கண்ணித்திற்குரியவன். அல்லாஹ்வே! முஹம்மதின் மீதும் முஹம்மதின் கிளையார்கள் மீதும் அருள் வளங்களை அருள்வாயாக! இப்றாஹீமின் மீதும் இப்றாஹீமின் கிளையார்கள் மீதும் அருள் வளங்களை நீ அருள் செய்தது போன்று நிச்சயமாக நீயே புகழுக்குரியவன் கண்ணியத்திற்குரியவன்.

## கலைச் சொல் அகராதி

**அல்லாஹ்**

அகிலங்கள் அனைத்தையும் மற்றும் அதிலுள்ளவை அனைத்தையும் படைத்து பரிபாலிப்பவனாகவும் வணங்குவதற்கும் வழிபடுவதற்கும் தகுதியானவனாகவும் இருக்கும் ஒரே இறைவனைக் குறிக்கும் சொல்.

**அன்சாரி**

மக்காவைத் துறந்து மதீனாவில் குடியேறிய முஸ்லிம்களை ஆதரித்து எல்லா விதத்திலும் உதவி ஒத்தாசை புரிந்த மதீனா முஸ்லிம்கள்.

**அலை**

'அலைஹிஸ்ஸலாம்' என்பதன் சுருக்கம், அவருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்!

**அர்ஷ்**

ஏழு வானங்களுக்கு மேல் அல்லாஹ் தனக்கென படைத்த மாபெரும் இருக்கைக்கு 'அர்ஷ்' என்று சொல்லப்படும். இதை மனித அறிவால் யூகிக்கவும் முடியாது அறிந்து கொள்ளவும் முடியாது.

**அமானிதம்**

மக்காவில் தங்களது பொருள்களை மக்கள் நபியவர்களிடம் பத்திரப்படுத்தி வைப்பர். இதையே 'அமானிதம்' என்று சொல்லப்படுகிறது.

**அல் பைத்துல் முகத்தஸ்**

ஃபலஸ்தீனத்தில் குதுஸ் எனும் நகரில் உள்ள பள்ளிவாசலை 'அல்மஸ்ஜிதுல் அக்ஸா' அல்லது 'அல்பைத்துல் முகத்தஸ்' என்று சொல்லப்படும்.

**அத்தர்**

வாசனை திராவியம்.

**அபூ**

தந்தை.

**அதான்**

ஐங்காலத் தொழுகைக்காக அழைக்கப்படும் அழைப்பு.

**இஹ்ராம்**

ஹஜ் மற்றும் உம்ரா செய்வதற்காக தயாராகும் நிலையும் அப்போது அணியப்படும் தைக்கப்படாத ஆடையும்.

**இப்னு**

மகன்.

**இப்லீஸ்**

‘இப்லீஸ்’ ஷைத்தான்களின் தலைவன்.

**இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிவூன்**

நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்காகவே இருக்கின்றோம், நிச்சயமாக நாம் அவனிடமே மீளுவோம்.

**ஈமான்**

அல்லாஹ்வையும் அவன் கூறிய அனைத்தையும் நம்பிக்கை கொள்வது.

**உம்ரா**

உபரியாக கஅபாவை தரிசனம் செய்யும் ஓர் செயல்.

**ஊகியா**

சுமார் 38.5 கிராம்எடையுள்ள ஓர் அளவு.

**கஅபா**

அல்லாஹ்வை வணங்குவதற்காக முதன் முதலில் மக்காவில் கட்டப்பட்ட இல்லம்.

**கனீமத்**

போரில் கிடைக்கும் வெற்றிப் பொருள்.

**கபீலா**

கோத்திரம்.

**கலீஃபா**

இஸ்லாமிய ஆட்சித் தலைவர்.

**கப்ர்**

இறந்தவரை அடக்கம் செய்யப்படும் குழிக்கு ‘கப்ர்’ என்று சொல்லப்படும்.

**காஃபிர்**

அல்லாஹ்வை மறுப்பவன்.

**கிப்லா**

கஅபா உள்ள திசை.

**குர்பானி**

அல்லாஹ்வின் பெயரால் அறுக்கப்படும் பிராணி.

**சூரா**

சூரா என்பதற்கு அத்தியாயம் என்று பொருள். குர்ஆனின் அத்தியாயங்களை இப்படி குறிப்பிடுவர்.

**தக்பீர்**

'அல்லாஹு அக்பர்' அல்லாஹ் மிகப் பெரியவன் என்று கூறுவது.

**தவாஃப்**

'கஅபா'வை ஏழுமுறை சுற்றுவது.

**தல்பியா**

ஹஜ் அல்லது உம்ரா செல்பவர்கள் இஹ்ராம் அணிந்த பின் கூறும் விசேஷமான பிரார்த்தனைக்கு 'தல்பியா' என்று கூறப்படும்.

**தஸ்பீஹ்**

'சுப்ஹானல்லாஹ்' அல்லாஹ் மிகத்தூய்மையானவன்.

**தஹ்லீல்**

'லாஇலாஹஇல்லல்லாஹ்' அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை.

**தஷஹ்ஹுத்**

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று சாட்சி கூறுவது.

**திர்ஹம்**

'திர்ஹம்' என்பது 3.62 கிராம் அளவுள்ள தங்க நாணயம்.

**தியத்**

'தியத்' என்றால் கொலை குற்றத்திற்காக கொலை செய்யப்பட்டவரின் வாரிசுகளுக்கு வழங்கப்படும் தொகைக்கு சொல்லப்படும்.

**துஆ**

பிரார்த்தனை.

**மஹர்**

மணமகன் மணமகளுக்கு கொடுக்க வேண்டிய திருமணக் கொடை.

**மிஃராஜ்**

'மிஃராஜ்' என்பது நபி (ஸல்) அவர்கள் சென்ற வானுலகப் பயணத்தைக் குறிக்கும்.

**மின்ஜனீக்**

'மின்ஜனீக்' என்பது அக்காலத்திய போர் கருவி.

**முஸ்லிம்**

அல்லாஹ்விற்கும் அவனது மார்க்கத்திற்கு மட்டும் கட்டுப்பட்டவர்.

**முஃமின்**

அல்லாஹ்வையும் அவன் கூறிய அனைத்தையும் முழுமையாக நம்பிக்கை கொண்டவர்.

**முஷ்ரிக்**

அல்லாஹ்விற்கு இணை வைப்பவர்.

**முனாஃபிக்**

உள்ளத்தில் இறைநிராகரிப்பை வைத்துக்கொண்டு இறை நம்பிக்கையை வெளிப்படுத்துபவர்.

**முத்** மதீனாவில் வழக்கத்தில் இருந்து வந்தசுமார் 796 கிராம் 68 மில்லி கிராம் எடை கொண்ட ஓர் அளவு.

**பனூ**

ஒருவரின் குடும்பத்தார்கள், வழி வந்தவர்கள்.

**ஃபித்யா**

'ஃபித்யா' என்றால் கைதியை விடுவிப்பதற்காக வழங்கப்படும் தொகை.

**பைத்துல் மஃமூர்**

இது ஏழாவது வானத்தில் மலக்குகள் அல்லாஹ்வை வணங்குவதற்காக அல்லாஹ்வால் ஏற்படுத்தப்பட்ட இறை இல்லமாகும்.

**பைஅத்**

இஸ்லாமிய உடன்படிக்கையும் ஒப்பந்தமும்.

**ரழி**

'ரழியல்லாஹு அன்ஹு' (அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொள்வானாக!.)

**ரஹ்**

'ரஹ்மத்துல்லாஹி அலைஹி' (அல்லாஹ்வின் அருள் அவர்கள்மீது உண்டாகட்டும்!)

**ரம்ல்**

கஅபாவை தவாஃப் செய்யும்போது முதல் மூன்று சுற்றில் ராணுவ அணிவகுப்பைப் போன்று செல்வது.

**ரசூல்**

தூதர்.

**ரஜ்ம்**

திருமணம் செய்த ஆண் அல்லது பெண் விபசாரம் செய்துவிட்டால் அவர்களை கல் எறிந்து கொல்வது.

**நபி**

அல்லாஹ்வால் தேர்ந்தெடுக்கப்பட்ட தூதர்.

**நிய்யத்**

ஒரு செயலைச் செய்வதற்கு உறுதி வைத்தல்.

**நுபுவ்வத்**

‘நபித்துவம்’ இறைத்தூதராக்கப்படுத்தல்.

**வஹ்யி**

‘இறைச்செய்தி’ அல்லாஹ் அவனது தூதர்களுக்கு அறிவிப்பது.

**வலிமா**

‘வலிமா’ என்பது திருமணமாகி கணவனும் மனைவியும் இணைந்த பிறகு கொடுக்கும் விருந்திற்குப் பெயராகும்.

**ஷஹீத்**

இஸ்லாமியப் போரில் அல்லாஹ்விற்காக உயிர் நீத்தவர்.

**ஷஹாதத்**

இஸ்லாமியப் போரில் மரணமடைதல்.

**ஸஹாபி**

நபியவர்களின் முன்னிலையில் இஸ்லாமை ஏற்று முஸ்லிமான நிலையிலேயே மரணித்தவர்.

**ஸல்**

‘ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்’ அல்லாஹ் அவருக்கு விசேஷ அருளையும் ஈடேற்றத்தையும் வழங்குவானாக!

**ஸலாம்**

‘அஸ்ஸலாமு அலைக்கும்’ உங்களுக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்! என்று முகமன் கூறுவது.

**ஸயீ**

ஸஃபா, மர்வா இரு மலைகளுக்கு இடையில் ஏழுமுறை ஓடுவதற்கு ‘ஸயீ’ என்று சொல்லப்படும்.

**ஸலாத்துல் கவ்ஃப்**

அச்சம் மிகுந்த நேரத்தில் சுருக்கித் தொழுவதற்கு ‘ஸலாத்துல் கவ்ஃப்’ என்று சொல்லப்படும்.

**ஸுப்ஹ், ளுஹ்ர், அஸ்ர், மஃரிப், இஷா**

முஸ்லிம்கள் கட்டாயம் நிறைவேற்ற வேண்டிய ஐங்காலத் தொழுகை.

**ஹரம்**

புனித கஅபாவை சுற்றியுள்ள குறிப்பிட்ட பகுதி.

**ஹஜ்**

கஅபாவை தரிசிப்பதும் மற்றுமுள்ள செயல்களும். (இது உடற்சுகமும் பொருள் வசதியுமுள்ள முஸ்லிம்களுக்கு வாழ்க்கையில் ஒரு முறை கடமையாகும்.)

**ஹதீஸ்**

நபி (ஸல்) அவர்களின் சொல், செயல், அங்கீகாரம்.

**ஹலால்**

அல்லாஹ் அனுமதித்தவற்றிற்கு 'ஹலால்' என்று சொல்லப்படும்.

**ஹராம்**

அல்லாஹ்வால் தடை செய்யப்பட்டவற்றிற்கு 'ஹராம்' என்று சொல்லப்படும்.

**ஹர்ரா**

'ஹர்ரா' என்றால் விவசாயக் களம் அங்கு தான் மதீனாவில் வாழும் முஸ்லிம்கள் தங்களது அறுவடைகளைக் காய வைப்பார்கள்.

**ஹஜருல் அஸ்வத்**

'ஹஜருல் அஸ்வத்' என்பது ஒரு கல். இது சொர்க்கத்திலிருந்து வரவழைக்கப்பட்டதாய் நபிமொழிகள் கூறகின்றன.

**ஹிஜ்ரா**

இஸ்லாமிய மார்க்கத்தைப் பின்பற்ற முடியாத ஊரிலிருந்து வெளியேறி அதற்கு ஏற்றமான ஊரில் குடியேறுவது.

**ஜனாஸா**

மரணித்தவரின் உடல்.

**ஜகாத்**

முஸ்லிம் செல்வந்தர்கள் மீது விதிக்கப்பட்ட மார்க்க வரி.

**ஜின்**

'ஜின்கள்' என்பவை மனிதக் கண்களுக்குப் புலப்படாத, இறைவனின் படைப்புகளில் ஒன்று. மனிதனுக்கு இருப்பதைப் போன்றே அவற்றுக்கும் சுய தேர்வுரிமை உள்ளது. அவற்றுள்ளும் முஸ்லிம், காஃபிர் என்ற வாழ்க்கை முறைகள் உள்ளன.

**ஜிஸ்யா**

இஸ்லாமிய நாட்டில் முஸ்லிமல்லாதவருடைய உயிர், பொருள், கண்ணியம் பாதுகாக்கப்படுவதற்கு அவர் செலுத்தவேண்டிய வரி.

**ஜிஹாத்**

இறை திருப்தியைப் பெறுகின்ற ஒரே நோக்கத்துடன் சத்தியத்தை நிலைநாட்டி அசத்தியத்தை எதிர்த்து, அல்லாஹ்வின் வரம்புகளுக்கு உட்பட்டுப் போர் புரிதல். சொல்லாலும் செயலாலும் உண்மை முஸ்லிமாக வாழ முயற்சித்தல்.

**ஜும்ஆ**

வெள்ளிக்கிழமை மதியம் தொழும் தொழுகையை 'ஜும்ஆ' என்று சொல்லப்படும்.

## ஆதார நூல்கள்


1) அல்குர்ஆன்

2) இத்ஹாஃபுல் வரா - உமர் இப்னு முஹம்மது (இறப்பு 885)

3) அல்இஹ்ஸான் பி தர்தீபீ ஸஹீஹ் அபூ ஹாதம் இப்னு ஹிப்பான் ( 270 - 354) - இப்னு ஹிப்பான்

4) இக்பாருல் கிராம் பி அக்பால் மஸ்ஜிதில் ஹராம் - அஹ்மது இப்னு முஹம்மது (இறப்பு 1066)

5) அல் அதபுல் முஃப்ரத் - இமாம் புகாரி ( 194 - 256)

6) அல் இஸ்தீஆப் - யூஸுஃப் இப்னு அப்துல் பர் ( 368 - 463)

7) அஸதுல் காபா - இஜ்ஜுத்தீன் இப்னு அல் அஸீர் ( 555 - 630)

8) அல் இஸாபா - இப்னு ஹஜர் ( 773 - 852)

9) அல் அஸ்னாம் -அபுல் முன்திர் ஷாம் (இறப்பு 204)

10) அன்ஸாபுல் அஷ்ராஃப் - அஹ்மது இப்னு யஹ்யா (இறப்பு 279)

11) அல்பிதாயா வந்நிஹாயா - இப்னு கஸீர் (இறப்பு 774)

12) தாரீக் அர்ழுல் குர்ஆன் (உருது) - ஸய்ம்த் ஸுலைமான் நத்வி (இறப்பு 1373)

13) தாரீகுல் உமம் வல் முலூக் - முஹம்மது இப்னு ஜரீர் தபரி ( 224 - 310)

14) தாரீக் இப்னு கல்தூன் - அப்துர் ரஹ்மான் இப்னு முஹம்மது (இறப்பு 808)

15) அத்தாரீகுஸ்ஸகீர் - இமாம் புகாரி ( 194 - 256)

16) தாரீக் உமர் இப்னு அல்கத்தாப் - இப்னு அல் ஜவ்ஜி (இறப்பு 597)

17) தாரீக் அல் யஃகூபி - அஹ்மது இப்னு அபூ யஃகூப் (இறப்பு 292)

18) துஹ்ஃபதுல் அஹ்வதி - அப்துர் ரஹ்மான் முபாரக்பூர் (இறப்பு 1353)

19) தஃப்ஸீர் அத்தபரீ - இப்னு ஜரீர் தபரி ( 224 - 310)

20) தஃப்ஸீர் அல்குர்துபி - முஹம்மது இப்னு அஹ்மது (இறப்பு 671)

21) தஃப்ஸீர் இப்னு கஸீர் - இஸ்மாயீல் இப்னு உமர் (இறப்பு 774)

22) தல்கீஹ் ஃபுஹூமி அஹ்லில் அஸர் - இப்னுல் ஜவ்ஜீ (இறப்பு 597)

23) தஹ்தீப் - இப்னு அஸாகிர் (மரணம் 571)

24) ஜாமிஃ அத்திர்மிதி - அபூ ஈஸா முஹம்மது ( 209 - 279)

25) ஜம்ஹரது அன்ஸாபில் அரப் - இப்னு ஹஜ்ம் ( 384 - 456)

26) ஜம்ஹரதுந்நஸப் - அபுல் முன்திர் ஷாம் (இறப்பு 204)

27) குலாஸதுஸ் ஸியர் - அஹ்மது தபரி (இறப்பு 674)

28) திராஸாத் ஃபி தாரீகில் அரப் - கலாநிதி அப்துல் அஜீஸ் ஸாலிம்

29) அத்துர்ருல் மன்ஸூர் - ஜலாலுத்தீன் ஸுயூதி (இறப்பு 911)

30) தலாயிலுந் நுபுவ்வஹ் - இஸ்மாயீல் இப்னு முஹம்மது ( 457 - 535)

31) தலாயிலுந் நுபுவ்வஹ் - அபூ நயீம் ( 336 - 430)

32) தலாயிலுந் நுபுவ்வஹ் - பைஹகி ( 384 - 458)

33) ரஹ்மதுல் லில்ஆலமீன் - முஹம்மது ஸுலைமான் மன்சூர்பூர் (1930)

34) ரஸூலே அக்ரம் கி ஸயாஸி ஜின்தகி (உருது) - கலாநிதி முஹம்மது ஹமீதுல்லாஹ் பேஸ்

35) அர்ரவ்ழ் - அபுல் காஸிம் அப்துர்ரஹ்மான் ( 508 - 581)

36) ஜாதுல் மஆது - இப்னுல் கய்'' ( 691 - 751)

37) ஸபாயிக் அத்தஹப் - முஹம்மது அமீன் (இறப்பு 1346)

38) ஸிஃப்ர் அத்தக்வீன் - (யூத வேதத்தின் ஒரு பகுதி)

39) ஸுனன் அபூதாவூத் ஸுலைமான் ஸிஜஸ்தானி ( 202 - 275)

40) அஸ்ஸுனனுல் - குப்ரா பைஹகி ( 384 - 458)

41) ஸுனன் இப்னு மாஜா - முஹம்மது இப்னு யஜீத் கஜ்வீனி ( 209 - 273)

42) ஸுனன் அந்நஸாயீ - அஹ்மது இப்னு ஷுஐப் ( 215 - 303)

43) அஸ்ஸீரா அல்ஹல்பிய்யா - அலீ இப்னு புர்ஹானுத்தீன் ( 975 - 1044)

44) அஸ்ஸீரத்துந் நபவிய்யா - அபூ ஹாதிம் இப்னு ப்பான் (இறப்பு 354)

45) அஸ்ஸீரத்துந் நபவிய்யா - அபூ முஹம்மது அப்துல் மலிக் (இறப்பு 213)

46) ஷர்ஹுஸ்ஸுன்னா - ஹுஸைன் அல்பகவி ( 436 - 516)

47) ஷர்ஹ் ஸஹீஹ் முஸ்லிம் - நவவி (இறப்பு 676)

48) ஷர்ஹுல் மவாஹிப் - முஹம்மது இப்னு அப்துல் பாகி (இறப்பு 1122)

49) அஷ்ஷிஃபா - காழி இயாழ் ( 446 - 546)

50) ஷமாயில் அத்திர்மிதி - அபூ ஈஸா முஹம்மது ( 209 - 279)

51) ஸஹீஹுல் புகாரி - இமாம் புகாரி ( 194 - 256)

52) ஸஹீஹ் முஸ்லிம் - முஸ்லிம் இப்னு அல் ஹஜ்ஜாஜ் ( 206 - 261)

53) ஸஹீஃபது ஹப்கூக் - யூத வேதத்தின் ஒரு பகுதி)

54) அத்தபகாத் அல் குப்ரா - முஹம்மது இப்னு ஸஅத் ( 168 - 230)

55) அல்மக்துல் ஃபரீத் - அஹ்மது உந்த்லுஸி ( 246 - 328)

56) அவ்னுல் மஃபூத் ஷர்ஹ் ஸுனன் அபூதாவூத் - ஷம்ஸுல் ஹக் ( 1274 - 1329)

57) ஃபத்ஹுல் பாரி - இப்னு ஹஜர் ( 773 - 852)

58) ஃபத்ஹுல் கதீர் - அஷ்ஷவ்கானி (இறப்பு 1250)

59) கலாம்துல் ஜுமான் - அஹ்மது இப்னு அலீ (இறப்பு 821)

60) கல்பு ஜஜீரதில் அரப் - ஃபுஆத் ஹம்ஜா (இறப்பு 1352)

61) அல்காமில் ஃபி அத்தாரீக் - இஜ்ஜுத்தீன் இப்னு அல் அஸீர் ( 555 - 630)

62) கன்ஜுல் உம்மால் - அலாவுத்தீன் (இறப்பு 975)

63) அல்லிஸான் - இப்னு மன்ளூர் அல் அன்ஸா ( 630 - 711)

64) மஜ்மஃ அல் ஜவாயித் அல் ஹைஸமி (இறப்பு 807)

65) முஹாழராத் தாரீக் அல் உமமுல் இஸ்லாமிய்யா - முஹம்மது இப்னு ஹஃபீஃபி ( 1289 - 1345)

66) முக்தஸர் ஸீரதிர் ரஸூல் - அப்துல்லாஹ் இப்னு முஹம்மது (இறப்பு 1242)

67) மதாக் அத்தன்ஜீல் - அப்துல்லாஹ் நஸஃபி (இறப்பு 701)

68) முரூஜ் அல் தஹப் - அலி இப்னு ஹுஸைன் மஸ்வூதி (இறப்பு 346)

69) அல் முஸ்தத்ரகுல் - முஹம்மது இப்னு அப்துல்லாஹ் ஹாகிம் ( 321 - 405)

70) முஸ்னத் அஹ்மத் - அஹ்மது இப்னு முஹம்மது இப்னு ஹம்பல் ( 164 - 241)

71) முஸ்னத் அல் பஜ்ஜார் - அபூபக்ர் அஹ்மது அல் பஜ்ஜார் (இறப்பு 292)

72) முஸ்னத் கலீஃபா - கலீஃபா இப்னு கய்யாத் (இறப்பு 240)

73) முஸ்னத் அத்தாரமி - அபூ முஹம்மது அப்துல்லாஹ் ( 181 - 255)

74) முஸ்னத் அபூதாவூத் அத்தயாலிஸி - அபூதாவூத் ஸுலைமான் இப்னு தாவூத் (இறப்பு 204)

75) முஸ்னத் அபூ யஃலா - அபூ யஃலா அஹ்மது இப்னு அலீ ( 210 - 307)

76) மிஷ்காதுல் மஸாபீஹ் - வலியுத்தீன் முஹம்மது இப்னு அப்துல்லாஹ் ( 700களில்)

77) முஸன்னஃப் இப்னு அபீ ஷய்பா - அபூபக்ர் அப்துல்லாஹ் இப்னு முஹம்மது (இறப்பு 235)

78) முஸன்னஃப் அப்துர் ரஜ்ஜாக் - அபூபக்ர் அப்துர்ரஜ்ஜாக் ( 126 - 211)

79) அல் மஆஃப் - இப்னு குதைபா ( 213 - 276)

80) அல் முஃஜம் அல் அவ்ஸத் - ஸுலைமான் தபரானி ( 260 - 360)

81) அல் முஃஜம் அஸ்ஸகீர் - ஸுலைமான் தபரானி ( 260 - 360)

82) முஃஜம் அல் புல்தான் - யாகூத் ஹமவி (இறப்பு 626)

83) மகாஜீ அல் வாகிதி - முஹம்மது இப்னு உமர் இப்னு வாகித் (இறப்பு 207)

84) அல் முனம்மக் ஃபி அக்பாரில் குறைஷ் - முஹம்மது ஹபீப் (இறப்பு 245)

85) அல் மவாப் அல் லதுன்னிய்யா - ஷிஹாபுத்தீன் அஹ்மது கஸ்தலானி (இறப்பு 923)

86) முவத்தா மாலிக் - மாலிக் இப்னு அனஸ் ( 93 - 169)

87) நதாயிஜுல் அஃப்ஹாம் மஹ்மூது பாஷா

88) நஸபு குறைஷ் - அபூ அப்தில்லாஹ் அல் முஸ்அப் ( 156 - 236)

89) நஸபு மஅத் வல் யமன் அல் கபீர் - அபுல் முன்திர் ஷாம் (இறப்பு 204)

90) நிஹாயதுல் அரிப் - அபுல் அப்பாஸ் அஹ்மது (இறப்பு 821)

91) வஃபாவுல் வஃபா - நூருத்தீன் அலீ இப்னு அஹ்மது ( 844 - 911)

92) அல் யமன் இபரத்தாரீக் - அஹ்மது ஹுஸைன் ஷரஃபுத்தீன்

# முற்றும்.